17.2

உ

கணபதிதுணை.

# மகாபாரதம்.

நல்லாப்பிள்ளையவர்களியற்றியது.

இஃது

திரிசிரபுரம்.

அமிர்தம்பிள்ளைகுமாரராகிய

எஸ். பி. ஜி. காலேஜ்தமிழ்பண்டிதர்

அ. சுந்தரநாதபிள்ளை அவர்களால்

பரிசோதித்து.

மதுரைஜில்லா சிவகங்கை ஸப்டிவிஷன்

சிறுவயல்ஜமீன்தாரவர்களாகிய

முத்துராமலிங்கத்தேவர்

அவர்களால் அச்சிட்டதை

ஷை யார்பௌத்திரர் மைனர்

ஸ்ரீமான் முத்துராமலிங்கதேவரவர்கள்

கார்டியன்

பிரமஸ்ரீ கோபாலையரவர்கள் உத்திரவின்படி

சென்னை பிடாரித்தாங்கல்

நாராயணசாமிமுதலியார்குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

வித்தியாரத்நாகரஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகனசகாப்தம்-௧௮௩௩-ல்-நிகழும்

விரோதிகிருதுஸு மிதுனரவி.

1911.

இதன் விலை ரூபா-9.

Registered Copy-right.

முதலாவது.

உ

# புத்தகப் பிரகடனம்.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| நல்லாப்பிள்ளை பாரதம் கவி வாலியம் 2-க்கு | 9 | 0 | 0 |
| இராமாயணம் சப்தகாண்டம் கவி வாலியம் 2-க்கு | 6 | 0 | 0 |
| வில்லிபுத்தூராழ்வார் பாரதம் கவி. | 3 | 0 | 0 |
| திருவிளையாடற்பாட்டு. | 2 | 0 | 0 |
| பாகவதப்பாட்டு முதற்பாகம். | 1 | 12 | 0 |
| ஷை இரண்டாம்பாகம். | 3 | 8 | 0 |
| ஆரியப்பபுலவர் பாகவதம் கவி. | 3 | 0 | 0 |
| பெரியபுராணம் பாட்டு. | 4 | 0 | 0 |
| கந்தபுராணம் பாட்டு. | 7 | 0 | 0 |
| விநாயகபுராணம் உபாசனாகாண்டம். | 2 | 0 | 0 |
| நாலாயிரப்பிரபந்தம் இராகதாளமமைந்தது. | 2 | 0 | 0 |
| அடங்கன்முறை சுத்தபதிப்பு. | 3 | 8 | 0 |
| இராமலிங்கப்பிள்ளை திருவருட்பா ஆறுதிருமுறை அடங்கியது. | 3 | 8 | 0 |
| பிரபுலிங்கலீலை மூலம் அரும்பத-உரையுடன். | 0 | 8 | 0 |
| அகத்தியர் தேவாரத்திரட்டு சுத்தபதிப்பு. | 1 | 8 | 0 |
| தாயுமானவர் நயப்பதிப்பு. | 0 | 12 | 0 |
| திருவாசகம் நயம்பதிப்பு. | 0 | 8 | 0 |
| இராமாயணம் பாலகாண்டம் மூலமும்-உரையும். | 3 | 8 | 0 |
| ஷை சுந்தரகாண்டம் மூலமும்-உரையும். | 2 | 8 | 0 |
| ஷை ஆரண்யகாண்டம் மூலமும்-உரையும். | 3 | 8 | 0 |
| ஷை அயோத்தியாகாண்டம் மூலமும் உரையும். | 3 | 8 | 0 |
| தனிப்பாடற்றிரட்டு மூலமும்-உரையும் 1-ம் பாகம். | 1 | 8 | 0 |
| ஷை 2-ம் பாகம் மூலமும்-உரையும். | 1 | 8 | 0 |
| அரிச்சந்திர புராணம் மூலமும்-உரையும் சுத்தபதிப்பு. | 1 | 4 | 0 |
| நைடதமூலமும் விருத்தி-உரையும். | 2 | 0 | 0 |
| ஞானவாசிட்டம் மூலமும்உரையும் சுத்தபதிப்புகிளோஸ். | 5 | 0 | 0 |
| ஷை மட்டம் ரப்பு கடிதம். | 2 | 8 | 0 |
| அருணாசலபுராணம் சுத்தபதிப்பு படத்துடன். | 1 | 0 | 0 |
| தாயுமானவர் உரை சுத்தபதிப்பு. | 3 | 8 | 0 |
| சூடாமணிநிகண்டு பத்துத்தொகுதி. | 1 | 0 | 0 |
| சூடாமணிநிகண்டு பதினொராவது பன்னிரண்டாவது தொகுதிகள். | 0 | 8 | 0 |
| சூடாமணிநிகண்டு 12-தொகுதியும். | 1 | 4 | 0 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பழநித்தலபுராணம் மூலமும்-உரையும் சுத்தபதிப்பு. | 0 | 12 | 0 |
| சைவபூஷண சந்திரிகை. | 0 | 8 | 0 |
| சுப்பிரமணிய பராக்கிரமம். | 1 | 4 | 0 |
| யாழ்ப்பாணத்து தமிழ்ப்பெயரகராதி. | 3 | 8 | 0 |
| பாரதவசனம் திக்கு படத்துடன். | 12 | 0 | 0 |
| ஷை தின் கடிதம். (நான்குவாலியம்) | 4 | 0 | 0 |
| இராமாயண வசனம் 2-வாலியம் சுத்தபதிப்பு படத்துட | 4 | 0 | 0 |
| ஷை தின்கடிதம் படத்துடன். | 1 | 8 | 0 |
| திருவிளையாடற்புராண வசனம் சுத்தபதிப்பு படத்துடன் கிளேஸ். | 2 | 8 | 0 |
| மேற்படி தின்காயிதம் படத்துடன். | 1 | 8 | 0 |
| பெரியபுராண வசனம் சுத்தபதிப்பு கிளேஸ் படத்துட | 2 | 8 | 0 |
| மேற்படி தின்காயிதம் படத்துடன். | 1 | 8 | 0 |
| கந்தபுராண வசனம் சுத்தபதிப்பு படத்துடன் கிளேஸ். | 4 | 0 | 0 |
| மேற்படி தின்காயிதம் படத்துடன். | 1 | 8 | 0 |
| ஏகாதசி புராணம் குறிப்புரையுடன். | 0 | 4 | 0 |
| சிவக்ஷேத்திராலய மகோற்சவ உண்மைவிளக்கம். | 0 | 6 | 0 |

தபால் கூலி பிரத்தியேகம். இன்னும் பலவிதமான புத்தகங்கள் விற்கப்படும். அரை அணாத் தபால் ஸ்டாம்பு அனுப்பினால் புத்தக விளம்பரம் அனுப்புவோம்.

**பி. நா. சிதம்பர முதலியார்.**
வித்தியாரத்நாகரம் பிரஸ்.
பிரம்பூர் பாரக்ஸ் போஸ்டு.
சென்னை.

உ

சென்னைத்துரைத்தன கல்விச்சாலைத் தமிழ்ப்புலமை

சமரசவேதசன்மார்க்கசங்கம்

# தொழுவூர்-வேலாயுதமுதலியாரவர்கள்

## இயற்றிய ஆசிரியப்பா.

---

எண்குணத்தொருவன் பண்கொளப்பழுத்த
மறைப்பழம்பனுவலுண் முறைப்படத்தொகுத்த
நாற்பொருட்பெரும்பய னயனுறவிளக்கிய
வாதராயணன் மரபுளிவகுத்த
பாரதஞ்செந்தமிழ்ப் பயுனுகுறுபாக்
ஔவையெம்மன்னை யணிசெயக்கிடந்த
பல்பெருஞ்சீர்த்திப் பாலிநன்னாட்டு
வருந்தொழுகுலத்துப் பெருந்தேவர்கிளந்த
முதீற்பாச்சிதல்கெழீஇப் புதல்படர்ந்தற்றான்
மல்லற்பெண்ணை மலிநடுநாட்டு
வில்லிபுத்தூரன் விருத்தப்பாட்டறச்
சொல்லுமத்தோவிய லெல்லைபற்றாமை
யிலம்படுபுலீவிற் கெண்டைசேர்நாடு
நலம்படமாசுகழீஇ ஞாலங்கடன்
மலையிற்பெரிது வழங்குமங்நாட்டுத்
தலைசால்சிறப்பின் றவம்விளைந்தென்னக்
கல்லாப்பிள்ளைமை கழலத்தோற்றிய
நல்லாப்பிள்ளை நவின்றவப்பாரத
மெழுத்துஞ்சொல்லு மயங்குறுப்பேட்டின்
வழுக்களைந்தியார்க்கும் வகையுளிவழங்குறப்
பொருண்மெய்ந்நிலைஇயின னச்சுப்பொறித்தாங்
கருண்மலர்தலைப்பூ வந்தணனுதலி
ஞாரியன்றன்பெய ரரிறபப்புனைந்த
வறங்கரைநாவிற் சிதம்பரதலத்துச்
சாமிநாதனு நாமநூலோன்
சகரர்தந்தாவறப் புகுதருபகீரதன்
றவகங்கைபோலாத சிவகங்கைபோலும்
சிவகங்கையணைந்த சிறுவயலூரன்
முத்திராமலிங்கன் முனம்புயந்திருமலி
முத்திராம்லிங்கன் முற்றுபேரருளான்
வாழியோபெரிதே வாழியோபெரிதே
யாழிசூழ்வரைப்பில் வாழியோபெரிதே
யேழுயர்பொழிலின் கோடுயர்வடவரை
வேங்கடம்போல வோங்கிநீடூழி
வாழியோபெரிதே வாழியோபெரிதே.

---

# முகவுரை.

மகாபாரதம் என்பது. இம்மை மறுமை வீடு பேறடைந்த பரதனென்னும் அரசன் வம்மிசத்திற்பிறந்த அரசர்களுடைய சரித்திரம். அது ஆறாம் வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய் இந்நூலுக்குக் காரணக்குறியாயிற்று. அது பரதவம்மிசத்தாரது சரித்திரத்தைக் கூறும் நூலென விரியும். மகத் என்பது. பயன்பற்றிவந்த விசேடணம்; மகத் பாரதம் மகாபாரதமென்றாயிற்று. இது வடமொழிப்புணர்ச்சி. இந்நூலுக்கு ஐந்தாம்வேதமென்றும், இதிகாசமென்றும் இரண்டுபெயருள்ளன. அவற்றுள் ஐந்தாம்வேதமென்றது - பரமபதியாகிய எம்பெருமானது திருமுகங்களிற்றோன்றிய நான்குவேதங்களோடு பயனாலும் சரித்திரத்தாலும் ஒற்றுமையுடையதாதலின். என்னை? வேதம் கிரியாகாண்டம், ஞானகாண்டம் என்னும் இரண்டு விபாகமுடையதாய், எல்லாக்கலைகட்கும் எல்லா மந்திரங்கட்கும் பிறப்பிடமாய், புருஷார்த்தங்களை யறிதற்குக்கருவியாய் பரமபதியின் ஸ்வரூப இலக்கணங்களைத்தெரிவிப்பது. அவ்வாறே பாரதம் கிரியாஞானமென்னும் இரண்டு விபாகங்களையும், எல்லாக்கலைகளின் சாரங்களையும், ஒவ்வொரு மந்திரங்களுக்குமுரிய தேவர்களையும், புருஷார்த்தம் நான்கினையும், பதியிலக்கணங்களையும் சரித்திரமுகமாக விரித்துக்கூறுவது. அன்றியும், வேதத்திற்கூறிய தேவாசுரர்களே பாரதத்திற்கூறிய பாரதவீரர்களாதலாலும், வேதம் ஓதுவார்க்கு ஓதியமாத்திரத்தே பயன்றருமாறுபோல, பாரதம் படிப்பார்க்கும் கேட்பார்க்கும் பயன்றருமாதலாலும் ஐந்தாம்வேதமெனப்பட்டது.

இதிகாசம் என்பது பழையசரித்திரங்களை விரித்துக்கூறுவது. அற்றேல், பழைய சரித்திரங்களைக்கூறும் புராணங்களு மிதிகாசமெனப்படுமேயெனின் படாது. என்னை? புராணம் சிருட்டி, புனர்ச்சிருட்டி, மநுவந்தரம் வம்சாவளி பழையசரித்திரம். இவற்றைத்தவராது நுதலிவருவதாம். இவ்வைந்துள் ஒன்று குறையினும் புராணமாகாது. பாரதம் அற்றன்று. பழைய சரித்திரமொழிந்த நான்கையுங் கூறவேண்டுவது இன்றியமையாததாயின், கூறுமேயன்றி கூறவேண்டுமென்கிற நியதியின்று; ஆதலால் பாரதம் இதிகாசமெனப்பட்டது. அன்றியும், பரந்தாமனும் மற்றைத் தேவர்களும் துவாபரயுகத்தில் மநிதர்களாக அவதரித்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து அறம்வளர்த்த சரித்திரத்தைக் கூறுவதெனினுமாம். இந்நூல்வடமொழியில் நூற்றிருபத்தையாயிரங் கிரந்தமுடையது.

கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த நாற்பத்தொன்பதின்மருள் ஒருவராகிய பெருந்தேவனார் வடமொழியிலிருந்த மகாபாரதத்தைத் தெய்வீகம்விளங்கும் தென்மொழியினால் வேதாகமப்பொருள் மிகவெடுத்து விரித்து, தொல்காப்பியவியல் சொற்றொறுந்துலக்கி - பல்காப்பியநடை பதந்தொறுங்காட்டி - நானிலச்சிறப்பு நன்றுப்பகுத்து - இருதிணைப்பொருளும் பெரிது மிகவிளக்கிக் கருமஞானமுறைகளை வரிசைவரிசையாக வகுத்துப் பதினெட்டுப் பருவங்களையும் உரையிடையிட்ட முதற்பாவினாலியற்றி அருளினர். அந்நூல் பிற்காலத்தரசாண்ட குறுநிலமன்னராலும், மதமற்சரத்தையுடையோராலும் சிதைவுற்று முற்றும் கிடையாதாயிற்று. பிறகு வில்லிபுத்தூரர், அருந்தவக்கொள்கை பெருந்தேவநாயனார் இயற்றிய பாரதம் முற்றுங்கிடையாதாக, தன்னைவைத்து ரக்ஷித்த சிற்றரசன் வேண்டுகோளின்மீது அவன் ஆணை தலைக்கொண்டு பத்துப்பருவம்வரையில் சரித்திரங்களை மிகச் சுருக்கி விருத்தப்பாவினாலியற்றினர். பிறகு இந்நூலாசிரியர்

தம்மை வேண்டிக்கொண்ட வீரராகவரெட்டியாரவர்கள் விருப்பத்தின்படி புருஷார்த்தங்களைத் தெரிவிக்கும் இந்நூல் சுருங்கியும் முற்றுப்பெறு திருத்தலைக்கண்டு, தாம்மொழிபெயர்க்கவிரும்பி வடநூலின்படி சரித்திரங்களை விரித்து உலகோபகாரமாக முற்றும்மொழிபெயர்த்துத்தந்தனர். இந்நூலாசிரியர் வில்லிபுத்தூரார் பத்துப்பருவம்வரையில்கூறிய செய்யுட்களில் விரித்துக்கூற இடந்தந்துகிடந்த செய்யுட்களைத்தழீஇக்கொண்டு கூறினாராகலின், அச்செய்யுளின்னதென்பதுதோன்ற * அடையாளம் செய்துள்ளனன்.

சௌப்திகமுதல் அநுசாசனிக மிறுதியாகிய நான்குபருவங்களி னிறுதியிற்கூறிய செய்யுட்களாலும், நூலாசிரியர் சரித்திரத்தாலும் நூலாசிரியரோடு ஒருங்குகற்றுடனிருந்த முருகப்பிள்ளை யென்பவர் பெருங்காப்பியமாகிய இந்நூலில் தாமும் சிற்சிலசெய்யுட்கள் செய்ய வேண்டினராக, அவ்வேண்டுகோளுக்கிசைந்து நூலாசிரியர் அநுமதிகொடுக்க, மேற்குறித்த மூன்றுபருவங்களிலும் சிற்சில செய்யுட்கள் கூறியதாகத் தெரிகின்றது; அச்செய்யுட்களின்னதெனக் குறிப்பிட்டுக்காட்டுகிறதற்கு நூலாசிரியர் வாக்கோடு ஒப்பிந்து நிற்றலானும், புத்தகங்களில் குறிப்பிடப்படாமையானும் குறிப்பிடவில்லை. அற்றேல் வில்லிபுத்தூரார், நல்லாப்பிள்ளை, முருகப்பிள்ளை என்னும் மூவரால் இந்நூல் முடிவுபெற்றிருக்க, மூவரால் செய்யப்பட்டதென்றுது நல்லாப்பிள்ளையவர்களால் செய்ததெனக் கூறலாமோவெனின் கூறலாம். என்னை? ஒருநூலை மூன்றுபேர் செய்யப்புகின், அந்நூலிலடங்கிய சருக்கங்களைப் பகுத்துக்கொண்டு ஒருவர்பாடிய சருக்கங்களை ஒருவர் பாடாமல் தனித்தனி பாடி முடிப்பதாம். இந்நூலப்படி முடிந்ததன்று. வில்லிபுத்தூரார் சரித்திரங்களை மிகச்சுருக்கிப் பத்துப்பருவம்வரையில் மொழிபெயர்த்து பூர்த்திசெய்யாது விடுத்தனர். முருகப்பிள்ளை யென்பவர் பிள்ளையவர்களோடு கலந்து இடையிலுள்ள நான்கு பருவங்களில் சிற்சில செய்யுட்கள் கூறினரேயன்றி ஒருபருவத்தையேனுந் தனியாகப் பாடிமுடித்திலர். நல்லாப்பிள்ளையென்பவர் பாயிரந்தொடங்கி சுவர்க்காரோகணம்வரையில் முற்றும்பாடி முடித்தனர். ஆகலால் இந்நூலாசிரியர் நல்லாப்பிள்ளையே எனப்பட்டது.

இந்நூல் சம்சாரக்கடலைக் கடத்துவிக்கும் தெப்பமாயும், வருணாச்சிரம கருமங்களைத் தெரிவிக்கும் மணிவிளக்காயும், அறம்பொருளின்பத்தையுணர்த்தும் பேராசிரியனாயும், வீட்டிற்குச்செலுத்தும் கண்ணேணியாயுமுள்ளது. சிறுவயல்-ஜமீன்தாரவர்களாகிய ஸ்ரீமான் முத்துராமலிங்கத்தேவரவர்கள் தற்காலத்தில் ஆரியசமயப்பயிரை புறப்புறச்சமயக்காடுமண்டிமூட எழுவதைக்கண்டு, அதனால் ஆரியர்க்குவரும் ஏதத்திற்கஞ்சி, இத்துணைப்பெரிய இதிகாசத்தை வெளிப்படுத்தின், வேதங்களிற்கூறிய தத்துவங்களைஇலேசாகத்தெரிந்து உண்மை கடைப்பிடித்து நிக்ருஷ்டமத வஞ்சத்திலகப்படாதுய்வரெனக்கருதி கருணைகொண்டு வேண்டும்பொருடந்து அச்சிடுதற்கு ஆணைதந்தருளினர். அவர்களாணைவழிநிற்கும் யான் அவ்வாணை மேற்கொண்டு, எனது புல்லறிவிற்கெட்டிய அளவு பரிசோதித்துச் செந்தமிழ்ப் பரமாசாரியன் திருவருட்டுணையால் அச்சிட்டு முடித்தனன்.

பலதேசத்திலிருந்து கிடைத்த எல்லா ஏட்டுப்பிரதிகளிலும், பருவப்பெயர் சருக்கப்பெயர்களு் ஒரேவிதமாக எழுதப்பட்டிருந்தமையால், அவற்றைத் தமிழ்வழக்கின்படி திருத்த அஞ்சி இருந்தபடியே அச்சிட்டனன்.

---

☞ இப்புத்தகம் அச்சிட்டு வெளிவந்தகாலம் 1888ஆம்.

# முகவுரை.

மகாபாரதம் என்பது. இம்மை மறுமை வீடு பேறடைந்த பரதனென்னும் அரசன் வம்மிசத்திற்பிறந்த அரசர்களுடைய சரித்திரம். அது ஆறும் வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய் இந்நூலுக்குக் காரணக்குறியாயிற்று. அது பரதவம்மிசத்தாரது சரித்திரத்தைக் கூறும் நூலென விரியும். மகத் என்பது. பயன்பற்றிவந்த விசேடணம்; மகத் பாரதம் மகாபாரதமென்றாயிற்று. இது வடமொழிப்புணர்ச்சி. இந்நூலுக்கு ஐந்தாம்வேதமென்றும், இதிகாசமென்றும் இரண்டுபெயருள்ளன. அவற்றுள் ஐந்தாம்வேதமென்றது - பரமபதியாகிய எம்பெருமானது திருமுகங்களிற்றோன்றிய நான்குவேதங்களோடு பயனாலும் சரித்திரத்தாலும் ஒற்றுமையுடையதாதலின். என்னை? வேதம் கிரியாகாண்டம், ஞானகாண்டம் என்னும் இரண்டு விபாகமுடையதாய், எல்லாக்கலைகட்கும் எல்லா மந்திரங்கட்கும் பிறப்பிடமாய், புருஷார்த்தங்களை யறிதற்குக்கருவியாய் பரமபதியின் ஸ்வரூப இலக்கணங்களைத்தெரிவிப்பது. அவ்வாறே பாரதம் கிரியாஞானமென்னும் இரண்டு விபாகங்களையும், எல்லாக்கலைகளின் சாரங்களையும், ஒவ்வொரு மந்திரங்களுக்குமுரிய தேவர்களையும், புருஷார்த்தம் நான்கினையும், பதியிலக்கணங்களையும் சரித்திரமுகமாக விரித்துக்கூறுவது. அன்றியும், வேதத்திற்கூறிய தேவாசுரர்களே பாரதத்திற்கூறிய பாரதவீரர்களாதலாலும், வேதம் ஓதுவார்க்கு ஓதியமாத்திரத்தே பயன்றருமாறுபோல, பாரதம் படிப்பார்க்கும் கேட்பார்க்கும் பயன்றருமாதலாலும் ஐந்தாம்வேதமெனப்பட்டது.

இதிகாசம் என்பது பழையசரித்திரங்களை விரித்துக்கூறுவது. அற்றேல், பழைய சரித்திரங்களைக்கூறும் புராணங்களு மிதிகாசமெனப்படுமேயெனின் படாது. என்னை? புராணம் சிருட்டி, புனர்ச்சிருட்டி, மநுவந்தரம் வம்சாவளி பழையசரித்திரம். இவற்றைத்தவறாது நுதலிவருவதாம். இவ்வைந்துள் ஒன்று குறையினும் புராணமாகாது. பாரதம் அற்றன்று. பழைய சரித்திரமொழிந்த நான்கையுங் கூறவேண்டுவது இன்றியமையாததாயின், கூறுமேயன்றி கூறவேண்டுமென்கிற நியதியின்று; ஆதலால் பாரதம் இதிகாசமெனப்பட்டது. அன்றியும், பரந்தாமனும் மற்றைத் தேவர்களும் துவாபரயுகத்தில் மநிதர்களாக அவதரித்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து அறம்வளர்த்த சரித்திரத்தைக் கூறுவதெனினுமாம். இந்நூல்வடமொழியில் நூற்றிருபத்தையாயிரங் கிரந்தமுடையது.

கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த நாற்பத்தொன்பதின்மருள் ஒருவராகிய பெருந்தேவநாயனார் வடமொழியிலிருந்த மகாபாரதத்தைத் தெய்வீகம்விளங்கும் தென்மொழியினால் வேதாகமப்பொருள் மிகவெடுத்து விரித்து, தொல்காப்பியவியல் சொற்றொறுந்துலக்கி - பல்காப்பியநடை பதந்தொறுங்காட்டி - நானிலச்சிறப்பு நன்குறப்பகுத்து - இருதிணைப்பொருளும் பெரிது மிகவிளக்கிக் கருமஞானமுறைகளை வரிசைவரிசையாக வகுத்துப் பதினெட்டுப் பருவங்களையும் உரையிடையிட்ட முதற்பாவினாலியற்றி அருளினர். அந்நூல் பிற்காலத்தரசாண்ட குறுநிலமன்னராலும், மதமற்சரத்தையுடையோராலும் சிதைவுற்று முற்றும் கிடையாதாயிற்று. பிறகு வில்லிபுத்தூரர், அருந்தவக்கொள்கை பெருந்தேவநாயனார் இயற்றிய பாரதம் முற்றுங்கிடையாதாக, தன்னைவைத்து ரக்ஷித்த சிற்றரசன் வேண்டுகோளின்மீது அவன் ஆணை தலைக்கொண்டு பத்துப்பருவம்வரையில் சரித்திரங்களை மிகச் சுருக்கி விருத்தப்பாவினாலியற்றினர். பிறகு இந்நூலாசிரியர்

தம்மை வேண்டிக்கொண்ட வீரராகவரெட்டியாரவர்கள் விருப்பத்தின்படி புருஷார்த்தங்களைத் தெரிவிக்கும் இந்நூல் சுருங்கியும் முற்றுப்பெறாதிருத்தலைக்கண்டு, தாம்மொழிபெயர்க்கவிரும்பி வடநூலின்படி சரித்திரங்களை விரித்து உலகோபகாரமாக முற்றும்மொழிபெயர்த்துத்தந்தனர். இந்நூலாசிரியர் வில்லிபுத்தூரர் பத்துப்பருவம்வரையில்கூறிய செய்யுட்களில் விரித்துக் கூற இடந்தந்துகிடந்த செய்யுட்களைத்தழீஇக்கொண்டு கூறினாராகலின், அச்செய்யுளின்னதென்பதுதோன்ற * அடையாளம் செய்துள்ளனன்.

சௌப்திகமுதல் அநுசாசனிக மிறுதியாகிய நான்குபருவங்களி னிறுதியிற்கூறிய செய்யுட்களாலும், நூலாசிரியர் சரித்திரத்தாலும் நூலாசிரியரோடு ஒருங்குகற்றுடனிருந்த முருகப்பிள்ளை யென்பவர் பெருங்காப்பியமாகிய இந்நூலில் தாமும் சிற்சிலசெய்யுட்கள் செய்ய வேண்டினராக, அவ்வேண்டுகோளுக்கிசைந்து நூலாசிரியர் அநுமதிகொடுக்க, மேற்குறித்த மூன்றுபருவங்களிலும் சிற்சில செய்யுட்கள் கூறியதாகத் தெரிகின்றது; அச்செய்யுட்களின்னதெனக் குறிப்பிட்டுக்காட்டுகிறதற்கு நூலாசிரியர் வாக்கோடு ஒப்பிருந்து நிற்றலானும், புத்தகங்களில் குறியீடப்படாமையானும் குறியிடவில்லை. அற்றேல் வில்லிபுத்தூரர், நல்லாப்பிள்ளை, முருகப்பிள்ளை என்னும் மூவரால் இந்நூல் முடிவுபெற்றிருக்க, மூவரால் செய்யப்பட்டதென்னாது நல்லாப்பிள்ளையவர்களால் செய்ததெனக் கூறலாமோவெனின் கூறலாம். என்னை? ஒருநூலை மூன்றுபேர் செய்யப்புகின், அந்நூலிலடங்கிய சருக்கங்களைப் பகுத்துக்கொண்டு ஒருவர்பாடிய சருக்கங்களை ஒருவர் பாடாமல் தனித்தனி பாடிமுடிப்பதாம். இந்நூலப்படி முடிந்ததன்று. வில்லிபுத்தூரர் சரித்திரங்களை மிகச்சுருக்கிப் பத்துப்பருவம்வரையில் மொழிபெயர்த்து பூர்த்திசெய்யாது விடுத்தனர். முருகப்பிள்ளை யென்பவர் பிள்ளையவர்களோடு கலந்து இடையிலுள்ள நான்கு பருவங்களில் சிற்சில செய்யுட்கள் கூறினரேயன்றி ஒருபருவத்தையேனுந் தனியாகப் பாடிமுடித்திலர். நல்லாப்பிள்ளையென்பவர் பாயிரந்தொடங்கி சுவர்க்காரோகணம்வரையில் முற்றும்பாடி முடித்தனர். ஆகலால் இந்நூலாசிரியர் நல்லாப்பிள்ளையே எனப்பட்டது.

இந்நூல் சம்சாரக்கடலைக் கடத்துவிக்கும் தெப்பமாயும், வருணாச்சிரம கருமங்களைத் தெரிவிக்கும் மணிவிளக்காயும், அறம்பொருளின்பத்தையுணர்த்தும் பேராசிரியனாயும், வீட்டிற்குச்செலுத்தும் கண்ணேணியாயுமுள்ளது. சிறுவயல்-ஜமீன்தா ரவர்களாகிய ஸ்ரீமான் முத்துராமலிங்கத்தேவரவர்கள் தற்காலத்தில் ஆரியசமயப்பயிரை புறப்புறச்சமயக்காடுமண்டிமூட எழுவதைக்கண்டு, அதனால் ஆரியர்க்குவரும் ஏதத்திற்கஞ்சி, இத்துணைப்பெரிய இதிகாசத்தை வெளிப்படுத்தின், வேதங்களிற்கூறிய தத்துவங்களை இலேசாகத் தெரிந்து உண்மை கடைப்பிடித்து நிக்ருஷ்டமத வஞ்சத்திலகப்படாதுய்வரெனக்கருதி கருணைகொண்டு வேண்டும்பொருடந்து அச்சிடுதற்கு ஆணைதந்தருளினர். அவர்களாணைவழிநிற்கும் யான் அவ்வாணை மேற்கொண்டு, எனது புல்லறிவிற்கெட்டிய அளவு பரிசோதித்துச் செந்தமிழ்ப் பரமாசாரியன் திருவருட்டுணையால் அச்சிட்டு முடித்தனன்.

பலதேசத்திலிருந்து கிடைத்த எல்லா ஏட்டுப்பிரதிகளிலும், பருவப்பெயர் சருக்கப்பெயர்கள் ஒரேவிதமாக எழுதப்பட்டிருந்தமையால், அவற்றைத் தமிழ்வழக்கின்படி திருத்த அஞ்சி இருந்தபடியே அச்சிட்டனன்.

---

இப்புத்தகம் அச்சிட்டு வெளிவந்தகாலம் 1888௵.

# நூலாசிரியர் வரலாறு.

தொண்டை மண்டலத்திலே, முதலம்பேடென்னுஞ் சிற்றூரிலே, கருணீககுலத்திலே உற்பவித்த நல்லாப்பிள்ளையென்பவரொருவரிருந்தார். அவர் இலக்கிய இலக்கணங்களில் வல்லுநராய், சரச்சுவதி உபாசகராய், மகாகவிதாவாய் முருகக்கடவுள் தோற்றம் முதல் தெய்வயானைத் திருமணம்வரையில் தேவசேனைபுராணம் எனப்பெயர்வைத்து ஒருநூலியற்றிப்பெரும்புகழ்பூண்டு வாழ்ந்திருந்தனர். அக்காலத்திலே தொண்டைமண்டலத்திலே திருவக்கரையென்னுஞ் சிவக்ஷேத்திரத்திற்குத் தெக்ஷிணபாகமாயும், நடுநாட்டிலுள்ள புறவார்பனங்காட்டூரென்னும் சிவக்ஷேத்திரத்திற்கு நான்குமயில் கீழ்த்திசையாயுமுள்ள செங்காடென்னுங் கிராமத்தில் சுமார் நூற்றறுபதுவருடங்களுக்கு முன்னே செல்வத்திலும் தெய்வபக்தியிலும் சிறந்த பண்டகுல-வீரராகவ ரெட்டியாரென்பவரொருவரிருந்தார். அவர் தென்மொழியில் பாரதமுற்றுமின்மையால், தக்க புலவர்களைக் கொண்டு பொருளுதவிபுரிந்து வடமொழியின்படி உலகோபகாரத்தின் பொருட்டு மொழிபெயர்க்க விரும்பி நல்லாப்பிள்ளையவர்களை முற்றும் பாடித்தர வேண்டிக்கொண்டனர். அவ்வேண்டுகோளுக்கிசைந்த பிள்ளையவர்கள் பாயிரந்தொடங்கிப் பாடிவரும்பொழுது ஆழ்வார் கூறிய செய்யுட்களில் சரித்திரஞ் சுருங்காதுள்ள செய்யுட்களைத் தழீஇக்கொண்டு சுருங்கியதை விரித்து முற்றும் மொழிபெயர்த்துவந்தனர்.

அதைக்கேட்டு பாண்டிநாட்டில் முல்லையூரில் வேளாளகுலத்தில் பிறந்தவராயும், இலக்கிய விலக்கணங்களை நல்லாப்பிள்ளையவர்களோடு ஒருங்கு கற்றவராயுமுள்ள முருகப்பவுபாத்தியாயர் பிள்ளையவர்களிடத்திற்கு வந்து தங்களோடு ஒருங்குகற்ற வுரிமைவிளங்க, யானும் சிலபருவங்களையேனும் வடநூலின்படி தங்களோடுசேர்ந்து மொழிபெயர்க்க, அநுமதிதரவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அவ்வாறே யாகுகவென நூலாசிரியர் அனுமதி கொடுத்தனர். அப்பொழுது சௌப்திகபருவம் முதல் அநுசாசனிகம்வரையில் பிள்ளையவர்களோடு சேர்ந்து தாமும் சிற்சில சுலோகங்களை மொழிபெயர்த்து வந்தனர். பிள்ளையவர்கள் அச்செய்யுளையுந் தழீஇக்கொண்டு எஞ்சிய பருவங்களையும் மொழிபெயர்த்து நூலை முடித்துப் பொருளுதவிசெய்து வேண்டிக்கொண்ட ரெட்டியாரவர்களோடும் சகபாடியாகிய முருகப்ப உபாத்தியாயரோடும் காஞ்சீபுரத்தில் வரதராஜப்பெருமாள் சந்நிதியில் அரங்கேற்றி உலகோபகாரமாகத்தந்தனர். அக்காலத்து அரங்கேற்றிய சபையிலிருந்த வித்வான்கள் சொல்லிய செய்யுட்கள்—

இத்தகையபாரதமுன் றமிழ்வெண்பாவாலெடுத்துரைத்தார்பெருந்தேவரிதனைவில்லி, புத்தூர்வேதியன்விருத்தமாக்கவுன்னிப்புகன்றனன்மூவாயிரமேற்சிலதுசெய்யு, ளத்தகையகாப்பியத்தைமறைவியாதனருளான்முற்றுமவரிசைத்தவண்ண, முத்தமமாம்வடமொழியைத்தென்சொலாகவுரைத்தனன்முத்தமிழ்ப்புலவருவகையோங்க.

வடமொழியுந்தென்மொழியும்வல்லோர்நீதிவகுத்தநூறருமநூலிரண்டுந்தேர்ந்தோ, னிடாறுதொல்காப்பியமேமுதலாவுள்ளவிலக்கணமுமிலக்கியமுமெல்லாமாய்ந்தோன், கடனிகராமுதலையூராளிநல்லகவிராசனுவளர்வெண்கமலமங்கை, புடவியுளஞானமெலாந்தழைத்துமென்மேல்பொலியமகாபாரதத்தைப்புகன்றான்மாதோ.

சீர்பெறுநற்கலைமகடன்னருளாற்செவ்விசெகம்புகழ்பாரதம்வடசொற்றமிழாற்செப்பக், கார்பிணைநாவருமுல்லையுடையானென்னுங்கருதுபெயர்முருகயனுங்கவியுளானை, நாமர்நல்லாயன்றெளிவினயஞ்சல்லாபாடத்தியிதிற்சிலதொடைகணவில்வதாக்கி, யேர்பெறச்செய்கவிதைகளுமுடனேகூட்டியியம்பினன்முழுதுமெனவிளம்புவாமே.

# சருக்க அட்டவணை.

உ

கடவுள்துணை.

# மகாபாரதம்.

## கடவுள்வாழ்த்து.

* நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநா
ளேடாகமாமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ. (க)

* முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரு
மொருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம். (உ)

### வேறு.

உலகமாக்கலுங்காக்கலுமுண்மையா
லிலகநீக்கலுமென்றுந்தவிர்கலார்
சலசவாண்மலர்த்தாள்களெந்நெஞ்சினும்
நிலவுசென்னியினும்நிலையாமரோ. (ங)

பச்சைமேனியும்பால்வளைமேனியு
மெச்சுநற்றுகிர்மேனியுங்கொண்டவ
ரிச்சையாடலியற்றியநங்கைமார்
செச்சைமாமலர்த்தாள்கள்சிரங்கொள்வாம். (ச)

வந்தவல்வினைநீக்கிமனத்திருந்
துந்துஞானமுதவுங்கருணையா
னைந்துவாண்முகமைந்திருசெங்கைசேர்
தந்திமாமலர்த்தாள்கள்வணங்குவாம். (ரு)

வந்தவேளையெரித்தமலர்க்கணன்
றந்தவேளைத்தயித்தியர்காலனை
யெந்தவேளையுமெம்முளநீங்கலாக்
கந்தவேளைக்கருத்திலிருத்துவாம். (சா)

உ

கடவுள்துணை.

# மகாபாரதம்.

## கடவுள்வாழ்த்து.

* நீடாழியுலகத்துமறைநாலொடைந்தென்றுநிலைநிற்கவே
வாடாததவவாய்மைமுனிராசன்மாபாரதஞ்சொன்னநா
ளேடாகமாமேருவெற்பாகவங்கூரெழுத்தாணிதன்
கோடாகவெழுதும்பிரானைப்பணிந்தன்புகூர்வாமரோ. (க)

* முருகார்மலர்த்தாமமுடியோனையடியார்முயற்சித்திறந்
திருகாமல்விளைவிக்குமதயானைவதனச்செழுங்குன்றினைப்
புருகூதன்முதலாயமுப்பத்துமுக்கோடிபுத்தேளிரு
மொருகோடிபூதேவருங்கைதொழுங்கோவையுறவுன்னுவாம். (உ)

### வேறு.

உலகமாக்கலுங்காக்கலுமுண்மையா
லிலகநீக்கலுமென்றுந்தவிர்கலார்
சலசவாண்மலர்த்தாள்களெந்நெஞ்சினும்
நிலவுசென்னியினும்நிலையாமரோ. (௩)

பச்சைமேனியும்பால்வளைமேனியு
மெச்சுநற்றுகிர்மேனியுங்கொண்டவ
ரிச்சையாடலியற்றியநங்கைமார்
செச்சைமாமலர்த்தாள்கள்சிரங்கொள்வாம். (௪)

வந்தவல்வினைநீக்கிமனத்திருந்
துந்துஞானமுதவுங்கருணையா
னைந்துவாண்முகமைந்திருசெங்கைசேர்
தந்திமாமலர்த்தாள்கள்வணங்குவாம். (௫)

வந்தவேலையெரித்தமலர்க்கணன்
றந்தவேலைத்தயித்தியர்காலனை
யெந்தவேலையுமெம்முளநீங்கலாக்
கந்தவேலைக்கருத்திலிருத்துவாம். (௬)

கையிலாழியெடுத்தருள்கண்ணனை
மையுலாமழைவண்ணனைப்பாண்டவ
ருய்யவந்துதயஞ்செய்தபாநுவை
வையமுண்டசெவ்வாயனைவாழ்த்துவாம். (எ)

சுருதியாதியுமந்தமுஞ்சொல்வதுங்
கருதினோர்கடங்கட்கமுதாவதும்
பருதிவெம்படைபற்றியபண்ணவன்
மருதிடந்தமதுமலர்த்தாள்களே. (அ)

மண்ணிலிம்மைநல்வாழ்வினையீவதும்
விண்ணிலின்பமும்வீடுந்தருவதுந்
தண்ணிலாவிரிசங்குறுசெங்கையெம்
மண்ணலார்தமதாயிரநாமமே. (கூ)

வேறு.

ஆரணனையாரணத்துட்பொருளையண்டமளந்தானையளக்கரியவாடலானைக், காரணனைக்காரணங்கள்கடந்தோன்றன்னைக் கண்மணியைக்கண்மணிக்குளொளியாய்நின்ற, பூரணனைப்பூரணப்பொற்கலசக்கொங்கைப் பூமாதுநாயகனைப் பொருவில்செங்கை, வாரணனைவாரணமுன்வந்துதோன்று மாதவனைக்காதலுடன்வணங்கிவாழ்வாம். (க0)

வேறு.

சிரத்திடைமுடியுஞ்செவிகளிற்குழையுஞ்செங்கணிற்கருணையுந்திகழ்ந்த
கரத்திலைம்படையுமுரத்திடையிருந்தகமலையுங்கவுத்துவமணியுந்
திரத்தினின்மருங்கிற்செறித்தபட்டாடைச்சிறப்புநற்சிவந்ததாளொளியும்
வரத்துறுமனந்தன்மீதுகண்வளர்ந்தவளமுமென்னுளத்தினீங்காவே. (கக)

அங்கையினேமிசங்குவாடண்டோடமர்செய்வில்லினந்தரித்தருள்வோன்
ஈங்கையின்மறைகளாயிரங்களுமேசாற்றுதற்கரியதத்துவத்தோன்
கங்கையினறலுங்காளிமைப்பிழம்பும்வானவர்முடியுமேகமழும்
பங்கயப்பதத்தாளிரவுநன்பகலும்பணிந்துபாடுதுமவன்புகழே. (கஉ)

வேறு.

கார்பூத்தகருங்குழலும்வெண்ணகையுஞ்செவ்வாயுங்கமலத்தாளும்
வார்பூத்தெழுந்தனமுமாரருளுங்கதிர்ப்பூணும்வயங்கத்தோற்றி
யேர்பூத்தவெனதிதயகமலமிசைநிரந்தரமுமிருந்தாடன்னைப்
பார்பூத்ததிருவுந்திப்பாமகளையாருலகிற்பரவாதாரே. (கங)

* பொருப்பிலேபிறந்துதென்னன்புகழிலேகிடந்துசங்கத்
திருப்பிலேயிருந்துவைகையேட்டிலேதவழ்ந்தபேதை
நெருப்பிலேநின்றுகற்றோர்நினைவிலேநடந்தோரேன
மருப்பிலேபயின்றபாவைமருங்கிலேவளருகின்றாள். (கச)

வே று.

வேதமாதிவிளங்கிய நூலெலா
மோதியாருமுளங்தெளிவெய்திடப்
போதியாநின்றபுங்கவனன்புடை
வாதராயணன்றன்னைவழுத்துவாம். (௧௫)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

ஆ செய்யுள் - ௧௫.

---

# அவையடக்கம்.

---

* கன்னபாகமெய்களிப்பதோராளப்பிறெல்கதைமுன்
சொன்னபாவலன்றுகளறுசுகன்றிருத்தாதை
யன்னபாரதந்தன்னையோரறிவிலேனுரைப்ப
தென்ன * பாவமற்றென்னையின்றென்சொலாதுலகே. (௧)

* மண்ணிலாரணநிகரெனவியாதனூர்வகுத்த
வெண்ணிலாவெடுங்காதையையானறிந்தியம்பல்
விண்ணிலாதவன்விளங்குநீடெல்லையையூமன்
கண்ணிலாதவன்கேட்டலுங்காண்டலுங்கடுக்கும். (௨)

* முன்சொலாகியசொல்லெலாமுழுதுணர்முனிவன்
றன்சொலாகியமாப்பெருங்காப்பியந்தன்னைத்
தென்சொலாலுரைசெய்தலிற்செழுஞ்சுவையில்லாப்
புன்சொலாயினும்பொறுத்தருள்புரிவரேபுலவோர். (௩)

அவையடக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - ௧௮.

---

# பாயிரம்.

---

திருவிருந்தொளிரைவருந்திறங்கொணூற்றுவரும்
வருவிருந்தினர்தம்மொடுமெதிர்ந்தமர்மலைந்த
பொருவரும்பெரும்பாரதம்புனிதமாலருளாற்
கருதரும்புவியோர்செவிகளித்திடப்புகல்வாம். (௧)

---

* பாவம் - அபிப்பிராயம்.

முன்னர்நாடனிற்குரவனாந்திருமுனிமொழியை
மன்னுநற்பெருந்தேவர்வெண்பாவினால்வகுத்த
ரன்னகாதையைச்சுருக்கியேவிருத்தமாயமைத்து
நன்னிலந்தனிலறைகுதுநன்மைவந்துறவே. (௨)

* முன்னுமாமறைமுனிவருந்தேவரும்பிறரும்
பன்னுமாமொழிப்பாரதப்பெருமையும்பாரேன்
மன்னுமாதவன்சரிதமுமிடையிடைவழங்கு
மென்னுமாசையால்யானுமீதியம்புதற்கிசைந்தேன். (௩)

சூதமாமுனிநைமிசாரணியத்தின்சூழல்
வேதபுங்கவரிருந்துழிமேவியபோதிற்
கோதிலாரெதிர்கொண்டுபூசனைபுரிந்திருத்தி
யேதமீர்வுறயாவருமிருந்திதுபுகன்றார். (௪)

பெற்றபேரருட்புராணமீரொன்பதும்பெரிதாச்
சொற்றுளாயஃதுவுணர்ந்தனந்தூயமாதவனே
கொற்றமோங்கியபாரதங்குறித்திலையதுவு
மிற்றைவைகலினுரைத்திடல்வேண்டுமென்றிசைத்தார். (௫)

அன்னமாமுனியன்னவர்க்கன்னநற்கதையை
மனனுதீவினைதீர்தரவழங்குவானுன்னி
யின்னகாதையைநற்சனமேசயனென்போன்
முன்னர்க்கேட்டனன்முன்வினையூரவையுந்தொலைத்தான். (௬)

அனையகாதையிங்குமக்களித்திடுதுமென்றறைய
முனிவரக்கதைகேட்டவனெவன்முறைவழாமற்
புனையுமாமுனிவரரெவர்புகன்றவரென்றார்
வினையுமின்பதுன்பங்களுநீத்துளமேலோர். (௭)

மன்னனாடுநன்னகரியும்வளனுடைநதியும்
பன்னுமாண்மையும்பாரதங்கேட்டுளபடியுஞ்
சொன்னவாதராயணமுனிசீடனார்தொன்னா
ளின்னவாறெலாமிசைத்ததும்புகலுவானெடுத்தான். (௮)

பாயிரமுற்றிற்று.

ஆக செய்யுள் - ௨௬.

# ஆற்றுச்சருக்கம்.

---

பாற்பெருங்கடல்விண்மிசைப்பரவியவாபோ
லார்ப்புடன்வருவெண்முகிலலைகடன்முகந்து
கார்ப்பெருங்கடற்றன்னிறங்கலந்தறக்கறுத்து
நாற்பெருந்திசையெங்கணும்பரந்ததானண்ணி. (க)

குருகுலத்தவர்முரசொலியாமெனக்குமுறி
மருவுமக்குலமன்னவர்வாளெனமின்னித்
தருகுலத்தினர்தானமீவதுவெனச்சார்ந்தே
யொருகுலக்கிரியிமயமேற்சொரிந்ததாலுறைகள். (உ)

மண்ணெலாம்புகழ்வாரிநீரொருவர்பால்வழங்கு
மெண்ணிலாமைகண்டெளியவர்மிடிகளுக்கிரங்கி
விண்ணெலாம்புகுந்தருஞ்சமர்புரிந்தந்தவேலைத்
தண்ணெலாங்கொணர்ந்துதவிய்தன்மையொத்ததுவே. (ங)

அடுத்தமாதலன்சீகரவாரியியாடை
யுடுத்தபாரெலாமோரடியளந்தநாளுயர
வெடுத்ததாளின்மேல்வேதியனாட்டுநீரென்ன
விடுத்ததாரைகளிமயநற்சிமயமேன்மேகம். (ச)

தரைக்குநாயகன்பகீரதன்றவந்தனைவியந்து
நரைக்குநாயகன்சடைமிசைகரந்தவானதிநீர்
வரைக்குநாயகன்மிசைப்பொழிதாரையைமான
விரைக்குநாயகப்பெரும்புயல்பெய்ததாலெய்தி. (ரு)

விதித்தவாரணத்துதிக்கைபோல்விழும்பலகோடி
கதித்ததாரைகளருவியாப்புரள்வதுகருதிற்
பதித்தநல்விராட்புருடன்வெண்படாங்கொளுந்தீகந்
துதித்தவாகமேற்றுயல்வருமாறுபோற்றோன்றும். (சா)

வேறு.

பூழைமணிநீர்ச்சுனைவிளக்கும்பொருகுட்டநளினங்களைச்சிதைத்துத்
தாழையிளநீர்க்குலையறுத்தகர்த்தாசினிவேர்ச்சுளைபீறி
வாழைமுறித்துத்தேக்கெறிந்துமாழையகிற்சந்தனமுருட்டி
யேழைமறவர்குலமாதரிரியப்புகுந்ததிசைநீத்தம். (எ)

மணிகள்வரன்றிப்பொன்கொழித்துமதமாமருப்பும்படைக்கலமும்
பணிகளுடனெட்டுறப்புரட்டிப்பல்வல்விலங்குமுழையோட்டிக்

கணிகளிலவங்கத்தோடுகமழ்குங்குமப்பூந்தருவீட்டி
யணிகொள்குறிஞ்சியழித் * திளையோனடியைப்பூசித்தகன்றதுவே. (௮)

தந்தமணிகள்சந்தனங்கடகவின்றேறன்முதற்பொருள்கள்
விந்தைபெறவேயளித்தவடான்மீட்டுமளித்தபரிசிலெனச்
சிந்துபவளக்குலையீந்துதிகழ்வெட்பாலையகிலினொடு
முந்திக்கவர்ந்துசெம்மணிகண்முனைந்துவாரிமீண்டனவால். (௯)

பாலைகலக்கிமீண்டபுனல்படுங்காலசைக்கும்பசும்புறவ
மாலைகலக்கியானினங்களருங்கன்றினத்தைநினைந்தோட
மாலைமுடித்தகுழற்பொதுவர்மடவார்கரங்கள்குலைத்துடுத்த
சேலைநெடுமுட்டேறீர்ப்பச்சிறுரைத்தமுவிச்செலவெற்றி. (௧௦)

வெண்பாற்றதிகளளைகவர்ந்துவிளங்குமாயருரழித்துத்
தண்பாற்கடலில்விழிதுயின்மாதவனுக்கினியகரங்கூப்பி
விண்பாற்பறவைதுதைந்தொலிப்பமேதியினங்கடிகைத்தோடப்
பண்பாற்புறவத்துயர்முல்லைபடுத்திமருதங்கலந்ததுவே. (௧௧)

வேறு.

வாவியூமடுக்களும்வனமுமேரியுங்
காவியுங்கமலமுங்கடிப்பொதும்பருந்
தாவியகன்னல்செஞ்சாலியோடையு
மேவியவிடனெலாம்வெள்ளம்போர்த்ததே. (௧௨)

அரும்பினுமலரினுமாலையாடிய
கரும்பினுமுதிர்சுவைக்கதலித்தாறினும்
விரும்பியபலவினும்விண்கொண்மாவினுஞ்
சுரும்பினுமுலாயதாற்றெனிகொணீத்தமே. (௧௩)

வழியெலாமடுக்களாமடுக்கண்மேடதாக்
குழியெலாங்குளனதாக்குளங்களாறதாத்
தொழியலாடிப்பெயர்சொல்லமுற்றிய
பழியெலாம்புனைந்ததாற்பரந்தநீத்தமே. (௧௪)

பாலையைக்குறிஞ்சியாப்படுத்திமுல்லையைப்
பாலையாத்திகழ்ந்திடும்பரிசுகாட்டியே
மாலையார்கடைசியர்மருதவைப்பினை
மாலையார்முல்லையின்வனஞ்செய்திட்டதே. (௧௫)

கதமிகுபகடுகள்கலிப்பமள்ளர்கண்
மதமிகுந்துயிர்த்திடவயங்கொடங்கில
மிதமிகப்புரந்தருளிமையவர்க்கிறை
சததளமலரடிதாழ்ந்துமீண்டதே. (௧௬)

* இளையோன் - முருகக்கடவுள்.

மாயகப்புவிவருமன்பதைக்கெலாம்
போயகத்துடீபவம்புனிதமாகவே
தாயகத்தொப்புடைச்சானவிப்பெயர்
நாயகத்திருநதிகடந்தவெள்ளமே. (௧௭)

கறந்தவான்பாலினைக்கடுத்தநன்னிறஞ்
சிறந்தமாநதிப்புனல்செல்லுமோதையா
லறிந்தவாதெம்பிரான்பதத்திலன்றுநீர்
பிறந்தநாள்பெருகியபெருக்கைமானுமே. (௧௮)

கதித்தவானவரொடுகடலைக்கார்வணன்
மதித்தநாடோற்றியவமுதிம்மாநிலத்
துதித்துளார்பிறவிகளொழிப்பதுன்னியோர்
நதிப்புனலாச்செலுநலமும்போன்றதே. (௧௯)

மடுத்திருகரையினுமரங்கள்வேரறப்
படுத்ததிரொலியுடன்பாயுந்தூயநீர்
தடுத்தகார்வரையைமால்சக்கரத்தினாற்
கெடுத்தநாளோடியகேண்மைமானுமே. (௨0)

காலனுக்கொருபெருங்கிலன்பங்குமை
பாலனுக்கிளமுலைப்பாலருத்துநாள்
ஞாலமுட்கிடவிடைநழுவிவீழ்ந்தபால்
போலவக்கங்கைநீர்புனிதத்தோடிற்றே. (௨௧)

தாமரைவதனமுந்தரங்கக்கைகளு
மேமுறுகோங்கரும்பிளங்குயங்களும்
வாமநற்பாசடைக்கலையும்வாய்த்தலாற்
காமருகங்கைமெய்காட்டலொத்ததே. (௨௨)

புடைசெறிமணிகளுந்தெய்வப்பூண்களு
முடனுறலவைமறிந்துயர்ந்துதாழுத
லடலுறப்பணிந்தவர்க்கஞ்சலென்றுபொற்
கிடகமிட்டவிர்கரங்கவித்தல்போலுமே. (௨௩)

திங்களாவலம்புரிசிவந்தமெல்லிதழ்ப்
பங்கயமிரவியாப்பலமலர்க்குழா
மங்குளிகோள்கண்மீனுதியாநதி
புங்கமாரந்தரம்போலொளிர்ந்ததே. (௨௪)

குருநிறமணிகளுங்குவிந்தநீலமு
மிருணிறமரகதமென்னுங்கற்களும்
வருநிறநீரலைகொழிப்பமாநதிக்
கிருபுறமிந்திரசாபமேய்க்குமே. (௨௫)

சிலைகளுங்கணைகளுஞ்சேமவாள்களுந்
தலைகளின்மகரமுங்கரமுந்தாங்கியே
நிலைதெரிவருநதிநீரின்முந்துற
லலைகடற்பொரவருமனீகமொத்ததே. (உசு)

நிருதரிம்மாநதிநீரின்மூழ்கிடிற்
கருதியபேறெளாமளிக்குங்கங்கையென்
றருமறையந்தணராற்றுமாமக
மிருபுறமெடுத்ததீயிஞ்சிபோலுமே. (உஎ)

ஆயிரங்கால்களுமமரர்கைதொழு
மாயிரமுகங்களுமவிருமாநதி
வாயுவைவென்றெழில்வருணன்மேல்வரு
மாயிருமாசுணமன்னையொத்ததே. (உஅ)

கருங்கடலகடுகீண்டோடிக்கப்பலும்
வரும்படகாதியும்விசையின்மாட்டியே
பொரும்படிவெண்டிரைபோர்த்தமாநதி
விரும்பிராமன்கவிவெள்ளமொத்ததே. (உகூ)

வேறு.

தருக்குமூக்கமும்புனிதமுந்தாழ்வுறுவளநீர்ப்
பெருக்குமாரருட்பெருமையுமகிமையுந்தேசு
முருக்கியுட்பவமகற்றுறுமுண்மையுமுணர்ந்தே
யிருக்குமோதருங்கங்கையாறெனுந்திருநதியே. (௩0)

காசியாதியாந்தலங்களையிருபுறங்கலந்து
தேசுலாவியசீகரத்திவலைகள்வாரி
வீசுதன்மையால்விண்ணவர்மெய்விடாயகற்றி
மாசுதீர்வுறவந்தமந்தாகினியாறே. (௩க)

ஆற்றுச்சருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள் - ௩௭.

---

# நாட்டுச்சருக்கம்.

வேறு.

ஈன்றதாய்தனையெதிர்ந்தநற்சிறாரெனவந்த
சரன்றவித்தடவெள்ளத்தாற்றருக்கியேதவங்க
ளான்றநாட்டவரார்த்தருந்துழனியோடடைந்தார்
தோன்றுமற்றவர்தொழிற்செயலினிச்சிலசொல்வாம். (க)

யாம்புதிரைப்பார்பெருங்குதிரைப்பாச்சல்கொடுப்பார்சேறுடித்
தூம்புபுதைப்பார்கரைமடுப்பார்தூய்நீர்தடுப்பார்மடையடைப்பார்
தாம்புபிணித்துமராமரங்கடனைத்தோள்சுமப்பாரிடைவிடுப்பார்
கூம்புங்குவளைவருன்மருதக்குருநாடிருந்தகுலமள்ளர். (உ)

செந்தாமரையுங்காவிகளுஞ்சேலும்வால்வெண்சங்கினமு
நந்தாதொளிரும்வெண்டாளநனிவெங்குழுவுந்தெரியாமற்
கொந்தார்கங்கைப்புனறேக்கிக்கோடிவரம்புசிறப்பித்து
வந்தேபொன்னேர்பலபூட்டியுழுதார்மருதநிலமாக்கள். (ங)

வேறு.

சஞ்சலஞ்சலந்தானுணராதவர்
விஞ்சலஞ்சலம்விட்டுழுமோதையோ
டஞ்சலஞ்சலமார்ப்பொலிகூடலான்
மஞ்சலஞ்சலம்வந்துமயங்குமே. (ச)

வேறு.

தாறுபட்டிலாப்பகடுகளுடன்படத்தடுத்திட்
டாறுபட்டுளபுனல்வயலுழுமொலியடக்கிச்
சேறுபட்டமெய்மள்ளர்கள்சேவினங்களுக்குக்
காறுபட்டதென்றிசைப்பொலிகலிப்பனகழனி. (ரு)

வேறு.

செந்நெல்விதைகழிடளித்தபுனற்செருவின்முளைக்குமுருந்தனைத்து
மன்னுங்ககனத்துவினத்தைமானவிளங்கிவளர்நாற்றை
முன்னங்களைந்துமுடிபுனைந்துமுதிராமடவார்நாட்டிடந்தோ
றன்னம்பயிலாதெதிராகவரவிந்தங்களலராவே. (சு)

நாறுநடுவார்வளையொலியுநனியேருழுவாருரப்பொலியுஞ்
சேறுபடுமிப்பிகளொலியுஞ்செந்தாமரையிற்சுரும்பொலியுங்
கூறுசிறையார்வண்டானக்குழுவின்னொலியுங்குருகொலியும்
வீறிபுனலின்பேரொலியுமிகுந்தபழனத்தலந்தோறும். (எ)

ஆற்றுக்காலாட்டியர்முகத்துக்கழிந்தகமலங்களைமள்ளர்
பேற்றுக்களைந்துகுவித்திடலாற்பெயிராயிரங்கொண்டருள்கதிரோன்
றேற்றுத்தனக்குவஞ்சயளித்ததுயராற்காய்ந்துபொடியாக்கி
மாற்றிச்சென்றானெனிலந்தோமடவார்வனப்புக்கெவர்நிகரே. (அ)

வேறு.

துட்டமாமதன்கணையெனுநீலத்தின்றுணைவேர்
கட்டமங்கையர்தாமரையடிகளிற்கவின
விட்டபாதசாலங்களினோசைகேட்டயற்று
நட்டமங்கையர்சிலம்பொலிசாலநாணினவே. (கூ)

போர்த்தசந்தனத்தேய்வைகள்புணர்முலைக்களபம்
வேர்த்தழிந்ததால்விளைபுலங்களைபறிமின்னார்
பேர்த்துலாவியபாங்கெலாந்தொய்யில்கள்பெருகி
யார்த்தவாடவர்தேருருள்புதைத்துளதன்றே. (கO)

செருத்தன்மேதிகள்சொரிந்தபால்பாறைமேற்றிரட்டிப்
பெருத்தவாழைமாவருக்கையின்கனிகளும்பெருந்தே
னிருத்துநற்கலசங்களுமீந்தடைந்தவர்மெய்
வருத்தந்தீர்ந்தபின்றுய்ப்பரால்வயல்வினைமாக்கள். (கக)

குடாவடிக்கருமென்பிணைக்கூறுசெய்கோட்டுக்
கடாவடித்தசெங்கரும்பினும்வளையினுங்கரடம்
விடாமதப்புகர்வேழத்தின்வெண்மருப்பிடத்து
மடாமதித்தரளங்களேமடைகடேர்ப்பதுவே. (கஉ)

கவசநல்வினையாமெனத்தளிர்ந்தருட்கண்ணோ
ரவசவாதுலர்க்கருளுவானெடுத்தனவனந்தந்
துவசம்வானுலகலைத்தலாற்றுளித்தகற்பகத்தேன்
றிவசமும்வபனிறைவுறத்தழைப்பசெஞ்சாலி. (கரு)

ஈன்றநற்கதிர்றுங்குடன்சாமையுந்திலமு
மான்றபல்வகைமுதிரையுமரியகோதுமையுந்
தோன்றிவானளவுயர்ந்தசூற்சாலியுமிரத
மேன்றபண்டமும்மொளிர்வனகழனிகளெங்கும். (கச)

கூனிரும்புகொண்டருங்கதிர்குறைப்பவர்குவளைக்
கானரும்பியநறவினைநுகர்ந்துடல்களித்தே
யூனரும்புசூல்வால்வளைமுதுகுறத்தீட்டி
மீனரும்புகண்ணாருமுகநோக்கியேவிழைவார். (கரு)

வேறு.

கோங்கரும்புங்குரும்பையுந்தாழ்வுற
வாங்கரும்புமுலைச்சியரஞ்சொலிற்
றுங்கரும்புவியோர்க்கிரதந்தருந்
தீங்கரும்புவளர்ந்தனசெய்யெலாம். (கசு)

பாசிகீண்டுபழம்புனலாடியு
வாரிகண்டமடந்தையர்வாண்முக
மூசிவண்டுமுளரியென்றெய்தியே
நாசிகண்டுநடுங்கியகன்றதால். (கஎ)

வழக்கினும்பலலர்த்திமதுப்புர
ளிழுக்கினுவிடைந்தேங்குமளியின
முழக்கியேரியுடைத்தவ்வுருட்டினல்
விழிக்குமாந்தர்குழாத்தின்விளங்கிற்றே. (கஅ)

துய்யகன்றைநினைத்துத்துளித்தபா
லுய்யுமேதிகனல்கியுலாவுதல்
வையமெங்குமகிழ்ந்திடமாமழை
பெய்யுமேகம்பெயர்ந்தனமானுமே. (கசு)

பங்கயங்கள்விலாழியிற்பாய்புனல்
பங்கயங்கள்படுந்துறைபாய்வன
அங்கயங்காடுத்துாவாமெறலாம்
அங்கயங்களளிக்குமதங்களே. (உ0)

ஓம்புஞாலமுணர்த்துமுதயனிற்
காம்புமேலுறுகண்ணகன்றண்ணிறல்
சேம்புகால்பொரச்சிந்துதன்மால்வரைப்
பாம்புஞான்றபரிசினைமானுமே. (உக)

மலையிறங்கிவருங்கரும்பாந்தள்போன்
முலையிறங்குமுரோமமுயற்சியார்
கலையிறங்குகவானினைநோக்கியே
தலையிறங்குவதண்கதலிக்குழாம். (உஉ)

வேறு.

நலன்செய்தாதுராகங்களுநானம்விண்டுதிர்ந்த
வலன்செய்பூழியுமகம்பயிலடலைவான்பொடியுங்
குலன்செய்மங்கையர்கொழித்தசுண்ணச்செழும்பொடியும்
பொலன்செய்காலைசைபோதெலாமீதெழும்பொடிகள். (உங)

சமைத்தசோலையுஞ்சாலையுமடங்களுந்தாம
மமைத்தசித்திரமண்டபத்தொகுதியுமடைந்தோர்
நிமைக்குமுன்பசிநீக்குசத்திரங்களுநிறைந்தே
யிமைப்பிலாதவர்விழைவுறத்திகழ்வதாலெங்கும். (உச)

விண்படாமணிமனைகளும்வெஞ்சமரிடத்திற்
புண்படாவயவீரரும்புலவர்கண்மொழிபோற்
பண்படாவயற்றலங்களும்பாட்டளிதுதைந்து
கண்படாமலர்வாவியுங்காணரிதன்றே. (உரு)

பொய்யரில்லையாலுண்மையிற்பொருந்திணேரில்லை
வெய்யரில்லையான்மேம்படுகுணத்தருமில்லை
நொய்யரில்லையாலுனிக்கரும்புகழினேரில்லை
மையினேற்பவரில்லையால்வழங்குவோரிலையே. (உசு)

வேறு.

துட்டமாமதன்கணையெனுநீலத்தின்றுணைவேர்
கட்டமங்கையர்தாமரையடிகளிற்கவின
விட்டபாதசாலங்களினோசைகேட்டியற்று
நட்டமங்கையர்சிலம்பொலிசாலநாணினவே. (கூ)

போர்த்துசந்தனத்தேய்வைகள்புணர்முலைக்களபம்
வேர்த்தழிந்ததால்வினைபுலங்களைபறிமின்னார்
பேர்த்துலாவியபாங்கெலாந்தொய்யில்கள்பெருகி
யார்த்தவாடவர்தேருருள்புதைத்துளதன்றே. (க0)

செருத்தன்மேதிகள்சொரிந்தபால்பாறைமேற்றிரட்டிப்
பெருத்தவாளைமாவருக்கையின்கனிகளும்பெருந்தே
னிருத்துநற்கலசங்களுமீந்தடைந்தவர்மெய்
வருத்தந்தீர்ந்தபின்றுய்ப்பரால்வயல்வினைமாக்கள். (கக)

குடாவடிக்கருமென்பிணைக்கூறுசெய்கோட்டுக்
கடாவடித்தசெங்கரும்பினும்வளையினுங்கரடம்
விடாமதப்புகர்வேழத்தின்வெண்மருப்பிடத்து
மடாமதித்தரளங்களேமடைகளேர்ப்பதுவே. (கஉ)

கவசநல்வினையாமெனத்திகளிந்தருட்கண்ணோ
ரவசவர்துலர்க்கருளுவாளெடுத்தன்வனந்தந்
துவசம்வானுலகலைத்தலாற்றுளித்தகற்பகத்தேன்
றிவசமும்வயனிறைவுறத்தழைப்பசெஞ்சாலி. (கங)

ஈன்றநற்கதிரிறுங்குடன்சாமையுந்திலமு
மான்றபல்வகைமுதிரையுமரியகோதுமையுந்
தோன்றிவானளவுயர்ந்தசூற்சாலியுமிரத
மேன்றபண்டமும்மொளிர்வனகழனிகளெங்கும். (கச)

கூனிரும்புகொண்டருங்கதிர்குறைப்பவர்குவளைக்
கானரும்பியநறவினைநுகர்ந்துடல்களித்தே
யூனரும்புசூல்வால்வளைமுதுகுறத்தீட்டி
மீனரும்புகண்ணார்முகநோக்கியேவிழைவார். (கரு)

வேறு.

கோங்கரும்புங்குரும்பையுந்தாழ்வுற
வாங்கரும்புமுலைச்சியரஞ்சொலிற்
றுங்கரும்புவியோர்க்கிரதந்தருந்
தீங்கரும்புவளர்ந்தனசெய்யெலாம். (சுகூ)

பாசிகீண்டுபழம்புனலாடியு
வாசிகண்டமடந்தையர்வாண்முக
மூசிவண்டுமுளரியென்றெய்தியே
நாசிகண்டுநடுங்கியகன்றதால். (கஎ)

வழக்கினும்புலலர்த்திமதுப்புர
ளிழுக்கினுஙிடைந்தேங்குமளியின
முழக்கியேரியுடைத்தவ்வுருட்டினல்
விழிக்குமாந்தர்குழாத்தின்விளங்கிற்றே. (கஅ)

துய்யகன்றைநினைத்துத்துளித்தபா
லுய்யுமேதிகணால்கியுலாவுதல்
வையமெங்குமகிழ்ந்திடமாமழை
பெய்யுமேகம்பெயர்ந்தனமானுமே. (கக)

பங்கயங்கள்விலாழியிற்பாய்புனல்
பங்கயங்கள்படுந்துறைபாய்வன
அங்கயங்காடுத்தாவாறெலாம்
அங்கயங்களளிக்குமதங்களே. (உ0)

ஓம்புஞாலமுணர்த்துமுதயனிற்
காம்புமேலுறுகண்ணகன்றண்ணிருல்
சேம்புகால்பொரச்சிந்துதன்மால்வரைப்
பாம்புஞான்றபரிசினைமானுமே. (உக)

மலையிறங்கிவருங்கரும்பாந்தள்போன்
முலையிறங்குமுரோமமுயற்சியார்
கலையிறங்குகவானினைநோக்கியே
தலையிறங்குவதண்கதலிக்குழாம். (உஉ)

வேறு.

நலன்செய்தாதுராகங்களுநானம்விண்டுதிர்ந்த்
வலன்செய்பூழியுமகம்பயிலடலைவான்பொடியுங்
குலன்செய்மங்கையர்கொழித்தசுண்ணச்செழும்பொடியும்
பொலன்செய்காலசைபோதெலாமீதெழும்பொடிகள். (உஙு)

சமைத்தசோலையுஞ்சாலையுமடங்களுந்தாம
மமைத்தசித்திரமண்டபத்தொகுதியுமடைந்தோர்
நிமைக்குமுன்பசிநீக்குசத்திரங்களுநிறைந்தே
யிமைப்பிலாதவர்விழைவுறத்திகழ்வதாலெங்கும். (உச)

விண்படாமணிமனைகளும்வெஞ்சமரிடத்திற்
புண்படாவபவீரரும்புல்வர்கண்மொழிபோற்
பண்படாவயற்றலங்களும்பாட்டளிதுதைந்து
கண்படாமலர்வாவியுங்காணரிதன்றே. (உரு)

பொய்யரில்லையாலுண்மையிற்பொருந்திஞேரில்லை
வெய்யரில்லையான்மேம்படுகுணத்தருமில்லை
நொய்யரில்லையானனிக்கரும்புகழிலேரில்லை
மையினேற்பவரில்லையால்வழங்குவோரிலையே. (உசா)

மதத்தவானரமிருகமஞ்ஞூன்மந்திவயிற்றிற்
கொதித்தவெம்பசிகண்டருங்கோடுவிட்டிறங்கிப்
பதத்தினாற்புவியிடந்துவேர்ப்பலாச்சுளைகாட்டி
விதத்தினான்முசிப்பகற்றிடும்விரைகமழ்சோலை. (உஎ)

வேறு.

மன்றல்கமழும்பொனரிமாலைகளுந்தென்றற்
கன்றுமணிவேதிகைகளுங்கவினுறச்செய்
குன்றுமடமங்கையர்குழாமுமிளையோருந்
துன்றுமதனும்பயில்வசோலையிடமெல்லாம். (உஅ)

பாரின்வருமின்னனையபண்ணைமடமாதர்
நீரின்விளையாடவதினின்றுகள்வரால்போய்க்
காரினடியுண்டுகமுகின்படல்கலைத்தே
யேரினடையுங்கமலவாவியிடமெங்கும். (உகூ)

ஊதைகொள்குரும்பைமிசைசங்கினுலையேற்றி
வாதையறுநித்திலமடுத்தரிசிபெய்தே
போதினரக்காம்பல்கள்புதுக்கனன்மடுத்துப்
பேதையர்கள்சிற்றில்விளையாடல்பெரிதெங்கும். (௩0)

வென்றிதருபாப்பமளிவிண்டுவெனவேழங்
குன்றுலவுகாந்தண்மலரிற்றுயில்குறிஞ்சித்
துன்றெறியினர்வேலன்வெறிசொற்றுழனியாலே
கன்றுதுயிலும்பொதுவர்கார்மனைகடோறும். (௩க)

வேறு.

வேய்படுமரிசிகொண்டுவிளைந்துளமதுவினாறற்
றேய்படுகமடவள்ளந்துலக்கியாங்கதனிற்றுய்த்தே
கூய்படுதொண்டகங்கள்குமுறிடக்குறவர்மாதர்
வாய்படுமொலியேயந்தமறவர்சீறூர்கடோறும். (௩உ)

விரைகமழ்மறத்திமார்கண்மென்குழன்முடிக்குந்தோறும்
வரைபடுமகிலின்றூபம்வகுத்ததூமத்தைநோக்கி
யரவெனுமல்குன்மின்னார்சாயல்கண்டழுங்குமஞ்ஞை
பரவியபுயலென்றுன்னிநடித்திடும்பழுவந்தோறும். (௩௩)

மாலையம்பொழுதினாயர்மறுவிலான்குழுவினோடு
மேலையம்பதியினெய்தும்வேலையிற்கலிக்குமுல்லைக்
கோலநல்லிசையுமேறுதழுவலுங்குழக்கன்றார்ப்பும்
வாலியவெயிற்றிமார்கள்வாண்முகமலர்த்துமன்றே. (௩ச)

செவ்வழிபாடக்கேட்டுநுளைச்சிபருறக்கந்தீர்ந்தே
மைவிழியரிகள்சாலவாரிதிதரங்கம்வீசு
மவ்வழியிருந்துபுன்னையணிமலர்குவித்துமுத்திற்
கைவழிக்கழங்குமாடிக்களிப்பரானெய்தற்கண்ணார். (௩ரு)

மாலையிற்பொதுவர்முல்லைவரைக்குழலோசைகிட்டிச்
சோலையினிடங்கடோறுந்துன்னுவபறவையீட்டங்
காலையினரிகள்பூவிற்கலித்தபண்ணோசைகேட்டே
வேலையில்வினைவன்மாக்கள்விழிதுயிலுணர்வர்மாதோ. (௩௬)

வேறு.

வாவிகடருவனவலையொடுபவளந்
தாவிகடருவனகமழ்நறைபிரச
நாவிகடருவனநானநரந்த
மாவிகடருவனவமரர்களுலகம். (௩௭)
கும்பிகடருவனகுறையறுமதநீ
ரம்பிகடருவனவரதனநிதியந்
தும்பிகடருவனசுரர்மகிழிசைவா
லிம்பிகடருவனவிளையறுதரளம். (௩௮)
அடிபடுவனவரிவையர்கந்துகமே
மிடிபடுவனவவர்மிளிர்கொடியிடையே
கடிபடுவனவவர்கனிநிகரிதழே
பிடிபடுவனவவர்பெரிதிளமுலையே. (௩௯)
சிறைபடுவனவிறல்கெழுதெளிபுனலே
குறைபடுவனமதிகுளிர்தருகலையே
கறைபடுவனவமர்கருதுநர்படையே
முறைபடுவனகடிமுரசொடுமுழவே. (௪௰)
எறிபடுவனகதிரெறிநவமணியே
முறிபடுவனமுகிலளவியகழையே
வெறிபடுவனகடமிகுமதகரியே
பறிபடுவனபலபலநறைமலரே. (௪௧)

வேறு.

பூவெலாஞ்சுரும்பினோசையேபொய்கைப்புனலெலாமோதிமக்குழுவே
காவெலாங்குயிலின்கூக்குரலொலியேகடலெலாநிதிதருகலமே
தாவெலாங்கலாபமஞ்ஞையினடமேதடமெலாந்தந்திகணெருக்கே
நாவெலாமறையோராரணவொலியேநற்குருநாட்டினுளம்மா. (௪௨)
ஆகையாலறிவாலன்பினாலருளாலருங்கலையுணர்வினானெறியால்
வாகையாற்புகழாலறத்தினால்வலியால்வண்மையாலுண்மையாலீரப்போர்க்
கீகையால்வனப்பால்வாழ்வினால்வளத்தாலிசையினாலசைவிலாமனத்தா
லோகையானிகரற்றம்புவிக்கெல்லாமுயர்வளனணிகுருநாடே. (௪௩)
வாட்டிறலுடையமன்னவர்புரக்கும்வளனுடைநாடெலாமிதைப்போற்
காட்டியபடிவமாதலாலிதனைக்கமழ்குருநாடெனப்புகன்றார்
மீட்டினியணிவேறுரைப்பதென்னென்றுன்னியாதனுமாதலால்விடுத்துச்
சேட்டிளம்பரிதிபோலொளிர்நகரச்சிறப்பையுஞ்சிலவெடுத்துரைப்பாம். (௪௪)

நாட்டுச்சருக்கம் முற்றிற்று.

ஆ செய்யுள்-௧௦௧.

# நகரச்சருக்கம்.

கேசவனகரோவளகையோவேமகிரணகற்பகத்தருவிருந்த
வாசவன்பதியோநாகராலயமோமண்மகண்மங்கலநாணோ
தேசுறப்புவிக்குப்பேரொளிவிளக்குஞ்செம்மணித்தீபமோசெகத்தின்
மாசறுநகராமுடிக்கண்முன்னிரவிவளரொளியெனத்திகழ்நகரம். (௧)

விதிவழியமரர்வேந்தரெண்ணிறந்தோர்மீண்டுமீண்டெய்தியஞான்றுங்
கதிவழியினியபுலோமசையென்பாள்காதலியாகியவாபோன்
மதிவழியரசர்தமக்கெலாமிடனாய்மாறிலாநகரமாய்வனப்பிற்
பதிவழுவிலதாய்வானவர்வியக்கும்பண்புடைத்தாயதப்பதியே. (௨)

கனகமாமயமாத்திகழ்தலாலமரர்ககனமென்றுளந்திடுக்கிடுவார்
புனிதமாமணிகடயங்கலாலுகர்புயங்கநாடெனமனமருள்வா
ரினிதருஞ்செல்வநோக்கியேயளகையிதுகொலென்றியக்கர்கடிகைப்பார்
தனதணிபுலவருரைக்கலாந்தகையோதவ்த்திறற்படைத்தமாநகரம். (௩)

குருகினமன்னப்பெடைகள்வண்டானங்குழுமியேகுவளையுநறைக்கள்
பெருகியகமலமலர்களுநெருங்கிப்பெட்புறுமகரமுங்கராவும்
வெருவுறத்துதைந்தேநேமிமால்வரையைவேலைசுற்றியபடிவிளக்கித்
திருவுறுபளிங்கின்விளிம்புடுத்தொலியிற்றிகழ்வதப்புரிசைசூழகழி. (௪)

மாமுகிலினங்களகழிநீரதனைவாரிதிநீரெனமாந்தி
யேமநல்லிஞ்சியடித்தலமதனையிமயமென்றெழுந்துகாலூன்றி
வாமநன்னகரைநாவலந்தீவாம்வளனுடைப்புவியதாமதித்துக்
காமருமுறைகள்சிதறிடுமிருமுக்காலமுங்காலையினம்மா. (௫)

மந்தரமமிர்தவாரிதியிடையின்மல்கியவாறுபோலகலு
மந்தணீர்க்கிடங்கினுப்பணிலுயர்ந்தேயம்பரத்தளவெலாங்கடந்து
சந்திரனுணராச்சிகரிகளனந்தந்தாங்கிநற்றமணியநிறமு
மிந்திரநீலகிரணமுமொளிர்ந்தேயிருந்ததவ்வகழிசூழ்புரிசை. (௬)

உயர்வுகண்ணரியவாற்றினற்பரமனுக்குநற்காப்பினுற்றிருமா
லியலினைப்புரையுநாற்றிசைசிகரியியங்கலிற்பிரமனையேய்க்குங்
கயல்விழியரம்பைமாதர்மீதுலவிக்ககனவீதிகள்புகும்புரிசை
செயிருமுள்ளசைவுமின்றியபடியாற்செழுந்தவமுனிவரர்ச்சிவனும். (௭)

அப்பெரும்புரிசையடித்தலமதனிலணிகொள்பர்தலமுமாங்கிடையிற்
செப்பியபுவியுஞ்சிகரியின்கொழுந்திற்றேவர்பொன்னுலகமுமுறலான்
முப்புவனங்கண்முன்றவழாவண்ணமுளைத்தெழுமாடக்பொருப்பைச்
செப்புவதல்லாவேறுமோருவமைசெப்பலாந்தகைமைமற்றெவனோ. (௮)

இந்திரதனுவுமின்னுடைப்புயலுமிரவியுமதியுமற்றுளவு
மந்தியும்பகலுஞ்சூழ்ந்துசூழ்ந்தின்னுமறிந்திலவதனிலையென்னிற்
கந்தமாமலரோன்வரத்தினேகுலத்திற்காவலர்தவத்தினைபடைத்த
விந்தநற்புரிசைக்காழிமால்வரையையேற்குமென்பதினிழிவிலேயே. (கூ)

வேறு.

ஓடிவந்துசிலைவளைத்துருத்துவாளிசொரியுமே
நேடியெண்ணலார்கள்சேனைநீறுசெய்துமீளுமே
சாடியேதிகொண்டெழுந்துதலைதடிந்துவீசுமே
யோடிவெங்கொடுத்துளாரையுயிர்கொளாதகற்றுமே. (கo)

வானமீதுதாவிமேவுவானுளோரைமோதுமே
மானமேறிவந்துளாரைமானநீக்கியோட்டுமே
மோனவெம்மைமன்னர்தானைமுன்னரெய்துகிப்புரித்
தானயானைமண்ணின்மெய்தளர்ந்துவீழவெற்றுமே. (கக)

குந்தம்வேல்கணிச்சிதண்டுகொடியசூலமழுவெழுத்
தந்தசக்கரங்கவண்டரித்துவந்துமலையுமே
வந்தளித்தருந்தவர்க்குமறுவில்பூசைபுரியுமே
தொந்திதொட்டிரந்தவர்க்குநிதிகள்கொண்டுசொரியுமே. (கஉ)

மதிகுலத்துதித்தமன்னர்பெயரெலாம்வகுக்குமே
பதிவியப்பவேகுறிஞ்சிபாடியாழ்ப்படிக்குமே
கதிமிகுத்தபாவலோர்களிப்பவாடைநல்குமே
துதிமிகுத்தபுரிசைஞாயிறெறுழுமுலாயபொறிகளே. (கங)

பண்ணளந்தகதிரினுதபத்தின்வெம்மைதீர்வுறத்
தண்ணளிந்தவானதித்தரங்கமொண்டுவீசல்போன்
மண்ணளந்தமாதவர்க்குமாறுகொண்டலங்கமேல்
விண்ணளந்தொளிர்ந்தசைந்தவெற்றியந்துகிற்கொடி. (கச)

ஆடகத்தின்மணிசெறித்தளாவுகோபுரங்களின்
மாடகத்தினென்றும்வெற்றிவாழ்வுதந்தவிந்தையார்
கேடகத்திருப்பவீரகேசரிக்குலங்கள்போற்
கோடகத்தின்முடிபுனைந்தகுமரர்துன்னும்வாயிலே. (கரு)

வேறு.

மாடங்கண்மணித்தோரணமதியந்தவழ்குடுமிக்
கூடங்கண்முகப்புப்பரிகுவிகோபுரநிலையம்
வீடங்கணமணிமாளிகைமிகுசாளரமுயர்விண்
ணீடுங்கணுமொலிசெய்திடுகவின்மாமறுகெங்கும். (கசு)

மணியொன்பதுமணியுந்திருமனையெங்கணுமொளியுற்
றிணையும்பகலொடுகங்குலுமில்லாநகரென்பார்
தணியும்புலனறுமாதவர்தனிவானவர்மகவான்
பணியும்பதமலர்மல்கியபரமேட்டியைமுதலோர். (கஎ)

# நகரச்சருக்கம்.

---

கேசவனகரோவளகையோவேமகிரணகற்பகத்தருவிருந்த
வாசவன்பதியோநாகராலயமோமண்மகண்மங்கலநாணோ
தேசுறப்புவிக்குப்பேரொளிவிளக்குஞ்செம்மணித்தீபமோசெகத்தின்
மாசறுநகராமுடிக்கண்முன்னிரவிவளரொளியெனத்திகழ்நகரம். (௧)

விதிவழியமரர்வேந்தரெண்ணிறந்தோர்மீண்டுமீண்டெய்தியஞான்றுங்
கதிவழியினியபுலோமசையென்பாள்காதலியாகியவாபோன்
முதிவழியரசர்தமக்கெலாமிடனாய்மாறிலாநகரமாய்வனப்பிற்
பதிவழுவிலதாய்வானவர்வியக்கும்பண்புடைத்தாயதப்பதியே. (௨)

கனகமாமயமாத்திகழ்தலாலமரர்ககனமென்றுளந்திடுக்கிடுவார்
புனிதமாமணிகடயங்கலானாகர்புயங்கநாடெனமனமருள்வா
ரினிதிருஞ்செல்வநோக்கியேயளகையிதுகொலென்றியக்கர்கடிகைப்பார்
தனதணிபுலவருரைக்கலாந்தகையோதவத்திறனாற்படைத்தமாநகரம். (௩)

குருகினமன்னப்பெடைகள்வண்டானங்குழுமியேகுவளையுநறைகள்
பெருகியகமலமலர்களுநெருங்கிப்பெட்புறுமகரமுங்கராவும்
வெருவுறத்துதைந்தேநேமிமால்வரையைவேலைசுற்றியபடிவிளக்கித்
திருவுறுபளிங்கின்விளிம்புடுத்தொலியிற்றிகழ்வதப்புரிசைசூழகழி. (௪)

மாமுகிலினங்களகழிநீரதனைவாரிதிநீரெனமாந்தி
யேமநல்விஞ்சியடித்தலமதனையிமயமென்றெழுந்துகாலூன்றி
வாமநன்னகரைநாவலந்தீவாம்வளனுடைப்புவியதாமதித்துக்
காமருமுறைகள்சிதறிடுமிருமுக்காலமுங்காலையினம்மா. (௫)

மந்தரமமிர்தவாரிதியிடையின்மல்கியவாறுபோலகலு
மந்தணீர்க்கிடங்கினாப்பணிலுயர்ந்தேயம்பரத்தளவெலாங்கடந்து
சந்திரனுணராச்சிகரிகளனந்தந்தாங்கிநற்றமணியநிறமு
மிந்திரநீலகிரணமுமொளிர்ந்தேயிருந்ததவ்வகழிசூழ்புரிசை. (௬)

உயர்வுகாணரியவாற்றினாற்பரமனுக்குநற்காப்பினாற்றிருமா
லியலினைப்புரையுநாற்றிசைசிகரியியங்கலிற்பிரமனையேய்க்குங்
கயல்விழியரம்பைமாதர்மீதுலவிக்ககனவீதிகள்புகும்புரிசை
செயிருமுள்ளசைவுமின்றியபடியாற்செழுந்தவமுனிவரர்ச்சிவனும். (௭)

அப்பெரும்புரிசையடித்தலமதனிலணிகொள்பார்தலமாங்கிடையிற்
செப்பியபுவியுஞ்சிகரியின்கொழுந்திற்றேவர்பொன்னுலகமுமுறலான்
முப்புவனங்கண்முன்றவழாவண்ணமுளைத்தெழுமாடப்பொருப்பைச்
செப்புவதல்லால்வேறுமோருவமைசெப்பலாந்தகைமைமற்றெவனோ. (௮)

இந்திரதனுவுமின்னுடைப்பரிய லுமிரவியுமதியுமற்றுளவு
மந்தியும்பக லுஞ்சூழ்ந்துசூழ்ந்தின்னுமறிந்திலவதனிலையென்னிற்
கந்தமாமலரோன்வரத்தினேகுலத்திற்காவலர்தவத்தினேபடைத்த
விந்நகர்ப்புரிசைக்காழிமால்வரையையேற்குமென்பதினிழிவிலையே. (கூ)

வேறு.

ஓடிவந்துசிலைவளைத்துருத்துவாளிசொரியுமே
நேடியெண்ணலார்கள்சேனைநீறுசெய்துமீளுமே
சாடியேதிகொண்டெழுந்துதலைதடிந்துவீசுமே
யோடிவெங்கொடுத்துளாரையுயிர்கொளாதகற்றுமே. (க0)

வானமீதுதாவிமேவுவானுளோரைமோதுமே
மானமேறிவந்துளாரைமானநீக்கியோட்டுமே
மோனவெம்மைமன்னர்தானைமுன்னரெய்துகிப்புரித்
தானயானைமண்ணின்மெய்தளர்ந்துவீழவெற்றுமே. (கக)

குந்தம்வேல்கணிச்சிதண்டுகொடியசூலமழுவெழுத்
தந்தசக்கரங்கவண்டரித்துவந்துமலையுமே
வந்தளித்தருந்தவர்க்குமறுவில்பூசைபுரியுமே
தொந்திதொட்டிரந்தவர்க்குநிதிகள்கொண்டுசொரியுமே. (கஉ)

மதிகுலத்துதித்தமன்னர்பெயரெலாம்வகுக்குமே
பதிவியப்பவேகுறிஞ்சிபாடியாழ்ப்படிக்குமே
கதிமிகுத்தபாவலோர்களிப்பவாடைநல்குமே
துதிமிகுத்தபுரிசைஞாயிறெறுழ்முலாயபொறிகளே. (கங)

பண்ணளந்தகதிரிறுதபத்தின்வெம்மைதீர்வுறத்
தண்ணளிந்தவானதித்தரங்கமொண்டுவீசல்போன்
மண்ணளந்தமாதவர்க்குமாறுகொண்டலங்கமேல்
விண்ணளந்தொளிர்ந்தசைந்தவெற்றியந்துகிற்கொடி. (கச)

ஆடகத்தின்மணிசெறித்தளாவுகோபுரங்களின்
மாடகத்தினென்றும்வெற்றிவாழ்வுதந்தவிந்தையார்
கேடகத்திருப்பவீரகேசரிக்குலங்கள்போற்
கோடகத்தின்முடிபுனைந்தகுமரர்துன்னும்வாயிலே. (கரு)

வேறு.

மாடங்கண்மணித்தோரணமதியந்தவழ்குடுமிக்
கூடங்கண்முகப்புப்பரிகுவிகோபுரநிலையம்
வீடங்கணமணிமாளிகைமிகுசாளரமுயர்விண்
காரெடுங்கணுமொலிசெய்திடுகவின்மாமறுகெங்கும். (கசு)

மணியொன்பதுமணியுந்திருமனையெங்கணுமொளியுற்
றிணையும்பகலொடுகங்குலுமில்லாநகரென்பார்
தணியும்புலனறுமாதவர்தனிவானவர்மகவான்
பணியும்பதமலர்மல்கியபரமேட்டியைமுதலோர். (கஎ)

கீதத்தொலிவிரைதேரொலிகிளர்வேதியர்சுருதி
வேதத்தொலிமதமாவொலிவிறனுடகமின்னார்
பாதத்தொலிபரியார்ப்பொலிபலமன்னவர்சிங்க
நாதத்தொலிமுரசார்ப்பொலிநனிவிஞ்சியநகரம். (கஅ)

மதனொப்பவர்வடிவில்லவர்மதிமிக்குளபுலமைப்
புதனொப்பவரறிவில்லவர்பொருமுக்கிரமுனிவன்
சுதனொப்பவர்மறமில்லவர்தோளாண்மையிலாரங்
கதனொப்புவர்விறன்மாருதிகாலொப்பவரம்மா. (ககூ)

தட்பாற்கடலிடைவந்தவளொடுசாலியுமிமையா
விட்பாற்பயிலயிராணியுமிவர்மேனிவனப்பும்
பெட்பாகியகற்பும்பெருமிதபோகமுநோக்கி
நட்பாகுவரிவ்வூர்மடநல்லாருடன்மாதோ. (உ0)

வேயிற்பொலிசிலையுங்கதிர்வேலுங்கொலைவாளுஞ்
சேயிற்படுகணைதூணியுஞ்செங்கட்செறிபொறியு
மாயிற்கழலொலியுந்தவிரணியாடவரிலையாற்
றூயிற்பொலியருள்விஞ்சியதனிமாநகரிடையில். (உக)

வேறு.

ஆடகத்தணிசுவரமைத்துநித்திலங்
கூடகத்தலந்தொறுங்குறிக்கும்பாணர்கள்
வேடகவிளரியினிசைவிளக்கிய
மாடகமுறுக்கியாழ்வழங்குபாட்லே. (உஉ)

பவழமும்வயிரமும்பதுமராகமுந்
தவளவெண்டரளமுஞ்சந்திரகாந்தமுந்
திவளுறுபச்சையுஞ்செறித்தமேடைகள்
குவலயத்துறுநவக்கோள்களொத்தவே. (உங)

மாமணியொன்பதும்வயங்கநாற்றியே
யேமுறுபளிங்கினிலியற்றுமன்றில்கள்
வாமநீலங்குள்செவ்வல்லிகாவிக
டாமரையலர்ந்தபூந்தடத்தையேய்க்குமே. (உச)

கரகதயானையங்காவல்வேந்தர்கள்
புரகதமனைகளிற்பொறித்திலங்கிய
மரகதம்வில்லிடவானிலாதவன்
றுரகதஞ்சிவந்தநாச்சுலவிநீட்டுமே. (உரு)

மனைதொறுஞ்சிகரிமேலெடுத்தவான்கொடி
நினைவருககனமேனிமிர்ந்துவீசலாற்
புனைமதிக்குரவனைப்புகுந்தவேடைக
ளினிதுறநீக்கியவியற்கைமானுமே. (உசு)

நீளரமங்கையரனையநீர்மையர்
சாளரந்தொறுந்தொறும்வதனஞ்சாய்த்தலாற்
கேளிரென்றொளிமதிகிடப்பத்துய்த்திட
வாளரவெதிர்ந்திடின்மயங்கிநாணுமே. (உஎ)

பூசுசெஞ்சாந்துமேற்புனைந்ததும்பையுந்
தேசுறுமகுடமுஞ்சிவந்தகச்சுமாய்
மாசறுவில்லுடன்மைந்தர்தோற்றுத
லாசில்வேளெண்ணிலரடுத்ததொக்குமே. (உஅ)

காளையர்பலருழைக்கலந்தகாலையில்
வேளையவ்விரதியும்வியந்துதேர்ந்திலள்
வாளைவெல்விழியினார்மருங்கினெய்தில்வேய்த்
தோளியைத்தெளிந்திலன்றுணைவயந்தனே. (உகூ)

விருதணிமாமணிவிளக்குமண்டப
மருகணிபளிக்கிடையகத்திற்றோன்றுதல்
குருமதிமுதலியகோள்கள்பொய்கைவாய்க்
கருதுநீர்நிழலுட்காண்டல்பேர்லுமே. (௩0)

கார்படுதலந்தொறுங்கவின்செய்கோபுரத்
தேர்படுபுடைகளிலிரவிபாய்பரித்
தேர்படவுதிர்மணிசேர்தல்செங்கதிர்
பார்படுகிரணவிம்பங்கண்மானுமே. (௩க)

அற்றுநில்பாவையுங்கழங்குமம்மனை
சிற்றிலுமூசலுஞ்செறித்தமாமணி
முற்றிலுமினியசெய்குன்றுமொய்த்தடச்
சிற்றிடைப்பெதும்பையர்திகழ்வர்காவெலாம். (௩உ)

மடம்வளர்மங்கையர்மாலைப்போதினி
லடல்வளர்தலங்கடோறணிசெய்முல்லையா
ழிடவுளரிசைகடஞ்செவியினேற்றபின்
கடவுளரந்தியங்கடன்கழிப்பரே. (௩௩)

வீசுமாடகங்களுமணியும்வேய்ந்துசீ
ரீசன்மாலாதியர்க்கெடுத்தவாலய
மாசறுகயிலையும்வளர்வைகுந்தமு
மேசறுபுவியில்வந்திருந்ததொக்குமே. (௩௪)

பண்ணும்வேலாயிரம்பற்றிவீசினும்
புண்ணுறுதிறுத்தமர்புரியுமாடவர்
நுண்ணிடையினர்பொதுநோக்கந்தங்கிய
கண்ணிணைநுதிகொள்வேற்கடந்திலார்களே. (௩ரு)

பாடலுமருதயாழ்ப்டித்தலும்நட
மாடலுங்கேள்வரையணைந்துமாசையா
லூடலுமதன்கலையுணரும்பூவையர்
கூடலும்பற்றறுகுளிர்ந்தகாவெலாம். (௩௬)

ஊனளைகுருதிவேலுழவர்வீதியின்
வானளவுயர்மணிமகரதோரணங்
கானளைதுணைவரையிடையிற்காட்சியாற்
றூனளவிந்திரதனுவைநேருமே. (௩௭)

நிலப்பொருள்வனப்பொருணீள்வரைப்பொருள்
சலப்பொருள்கடற்பொருடக்கவானவர்
குலப்பொருண்முதலியகொண்டுநிச்சலும்
விலைப்படுமாவணவீதிதோறுமே. (௩௮)

அரியையுமரியையுமடுத்தலாக்குவார்
வரியையும்வரியையுமாறுகாட்டுவார்
கரியையுங்கரியையுங்காதன்மூட்டுவார்
பரியையும்பரியையும்படையயிற்றுவார். (௩௯)

காரணிசிவல்கவுதாரிகுக்குடம்
போரணிபோக்கியேபொழுதுபோக்குவார்
தோரணவீதியிற்சுடர்செய்மேனியர்
வாரணமிசைவலம்வந்துலாவுவார். (௪௦)

வேறு.

சாலைமண்டபக்கோயில்களணிமதிற்சமைத்திடப்பணிப்பாருங்
கோலமாமணியாலயந்தொறுமுயர்கோபுரமெடுப்பாருங்
காலையந்தியுமுச்சியுமறைவழாக்கடன்முறைபுரிவாரு
மாலையானபின்விளக்கொடுவீதியின்மாமிசைவருவாரும். (௪௧)

சொற்படாந்தருபாவலருண்மகிழ்துன்னிடமணியாரம்
பொற்படாங்களியானைகடந்தடிபோற்றியேவிடுப்பாரும்
வெற்படாமணிவாலொளிநாற்றிசைமின்னெனச்சுடர்கால
வற்படாமணித்தேர்மிசைசிவிகைமேலகன்றுமீண்டடைவாரும். (௪௨)

முரசுபேரிகைகுட்முழாந்துந்துமிமுழங்கிடவிசையோடும்
வரிசையாகியகடவுளர்வேள்வியுமன்றலும்புரிவாரும்
விரைசெய்தார்புனைதிவவுயாழ்வைதவருவிரலிசைதீந்தேறற்
கரைசெயற்கருங்காதலாச்செவிகளிற்களித்தருந்திடுவாரும். (௪௩)

விருந்தினோர்களுக்கருண்முகமலர்ந்தவர்விழைவுறவமுதுண்டி
யருந்துமாறளித்தின்னமும்வறுபவர்க்காதரித்தெதிர்வாரு
முருந்துவாணகைமங்கையர்தனிநடமுகப்பிடைபலரோடு
மிருந்துநோக்கியும்பலகலைபடித்துநல்லிராப்பகல்கழிப்பாரும். (௪௪)

சோங்குகப்பல்கடுன்னியபல்பொருள்சொரிந்திடவீடமின்றி
யாங்குநின்றவரனுதுலாபெறும்படியளித்தகம்புகுவாரும்
வீங்குதோளினர்பலவகைப்பண்டமும்வெங்கனலிடைப்பெய்தே
தாங்குவானவர்க்கவிதருவோர்களுந்தனிநகர்ச்சனரம்மா. (௬௫)

## வேறு.

நிரந்தராதியுமங்கலவோசைகணிரம்பி
திரந்தராதிபர்திங்கண்மாமரபினோர்செங்கோற்
குரந்தராநிற்குமொளிநகருலப்பிலாமையினற்
புரந்தராதிபர்புகழ்ந்திடுமத்தினபுரமே. (௬௬)

௨ நகரச்சருக்க முற்றிற்று.

ஆகு செய்யுள்-௱௬௭.

---

கடவுள் துணை.

முதலாவது,

# ஆதிபருவம்.

## அரசியற்சருக்கம்.

அந்தமாநகர்புரப்பவனரசருக்கரசன்
சந்திரன்வழித்தோன்றல்செந்தாமரைமுகத்தோன்
வந்தமாற்றலர்நிணங்கமழ்கதிர்வடிவேலோன்
விந்தைதங்கியவலங்கரும்விலங்கலம்புயத்தோன். (க)

ஆழிமால்வரையுளவுந்தன்னாணையைநிறுவிப்
பாழிவேந்தர்கடிறையிடப்பார்புரந்திடுவோன்
வீழிவாயிளமங்கையரின்பமாம்வேலை
யேழுநீந்தினோனேழுயரிராசகுஞ்சரத்தோன். (உ)

கற்றவர்க்கெலாங்காரெனநிதிசொரிகரத்தா
னுற்றவர்க்கெலாமுடற்புனைகவசமாவுறுவான்
அற்றவர்க்கெலாமரியநல்வினையெனலாவா
னற்றவப்பரிச்சித்துமுன்னளித்தநற்புதல்வன். (ங)

ஆறிலொன்றலாற்கடமைமற்றதிகமொன்றுவவான்
வீறினோன்னலர்மேலலால்விழிமலர்சிவவான்
றேறிநின்றமாதவர்க்கலாற்றிருமுடிவளையான்
பேறின்மாமறைபிசகினுந்தன்மொழிபிசகான். (ச)

தழையுமாருயிர்தனக்கெலாந்தாயினுஞ்சிறந்தோன்
விழையுமாமகமுளவெலாம்பயிற்றியமேலோன்
கழையுமாமலர்க்கணைகளுங்கைப்பிடித்துளனேற்
பழையமாமதவேளனும்படிவநன்னலத்தோன். (ரு)

உலகினுள்ளவாருயிரெலாமுறையுடம்பாகு
னிலகுமாமறைநூன்முறைவழுவிலாவிசையான்
விலகுவெள்ளமும்வேசியர்தெளிவிலாவறிவு
மலகிறந்திடாதொருவழிநடத்துமாணையினான். (சு)

வாரிலார்ந்தடங்காமுலைவபுட்டைதன்கொழுநன்
காரிலார்வுறுகடிமுரசொலிகடைத்தலையான்
போரில்வானவரென்னினும்பொருள்செயாமன்றா
னேரிலாச்சேனமேசெயனெனும்பெயர்நிருபன். (எ)

அனையமன்னவனுலகெலாமாழியையுருட்டிப்
புனையும்வெங்கலிகடிந்ததன் றந்தைபோற்புவன
மினையவும்வயிற்றிட்டமாமுகில்வணனேபோற்
கனையும்வெங்கழல்கலித்திடப்புரந்திடுநாளில். (அ)

சத்திரப்பெயர்மாமகந்தான்புரிந்திடுவான்
வித்தகத்தனிச்சாலையின்மேவுறுமிடையிற்
பத்திமிக்குளசரமையென்பவண்முதற்பயந்த
புத்திரர்க்குளோர்சிறுவனச்சாலையிற்புகுந்தான். (௯)

கண்டுவேந்தனுக்கிளையகாவலரடித்தோட்ட
மண்டுசீற்றமோடன்னைபால்வந்துரைசெயலும்
பண்டைவேந்தனையடைந்துநின்பால்வருமெனது
திண்டிறற்சிறுவனையருந்தண்டனைசெய்து. (க0)

ஒறுத்தகற்றுதற்காவதேயேழையர்க்குதவு
மிறுத்தகூற்றங்களிலைகொலோவெனவுரைத்திளகிப்
பொறுத்தமங்கைதன்னுருக்கரந்தேகினாள்புவன
நிறுத்துமாணையானெஞ்சழன்றற்புதமடைந்தான். (கக)

யாகமுற்றுவித்தத்தியம்புரந்தனிடைப்போய்
வாகுறும்படிசிலபகல்வைகியபின்னர்
மாகமோங்கியசரமைதன்வாய்மையைநினைந்து
சோகமோடருங்கானிடைசென்றனன்றுணிவால். (கஉ)

மங்கலங்கொள்சோமாசிரவசுவெனுமறையோன்
பங்கயப்பதந்தொழுதுதேசிகனெனப்படைத்தே
தங்குசாந்தியாமகம்புரிந்திமையவர்தமக்குத்
துங்கநல்லவியளித்தனன்மேவதியர்சூழ. (கங)

மறையவர்க்கெல்லாந்தக்கணைநிறைவுறவழங்கிக்
குறையகற்றியேதன்புரமீளவுங்குறுகி
யிறைமையிற்பொலிமாதவனிலக்குமியுடனே
முறைமையிற்சிறந்தென்னவாழ்வுற்றனன்முதல்வன். (கச)

அரசியற்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள் - ௱சுக.

---

# உதங்கச்சருக்கம்.

பதங்கனையனையஞானப்பயிலவரென்னுநாமற்
கிதங்கியசீடனன்பாலிணையிலாமறைக்குலத்தோன்
கதங்களைநீக்கியாசான்களித்திடவழிபட்டானு
லுதங்கனென்றுரைக்கும்பேரோன்கலையெலாமுணர்வான்வேண்டி. (௧)

அருமறையனைத்துமற்றநூல்களுமருளாற்றேர்ந்த
திருமுனியுதங்கனந்தத்தேசிகன்மலர்த்தாள்போற்றிப்
பொருவறவடியேனுய்யப்புகன்றதக்கணையேதேனுந்
தருமுறைபகர்வாயென்றானம்முனிதருக்கிச்சொல்வான். (௨)

நின்னுடையன்பவ்வண்ணநிறைந்துளதென்னினின்றாய்
பன்னியபடிசெய்யென்றான்பரிந்தவடிருத்தாள்போற்றி
யன்னைநின்றனக்கிசைந்ததளிக்குவனுரைத்தியென்ன
முன்னியவுமையோடொப்பாண்மைந்தனுக்குரைப்பதானாள். (௩)

வரிசையிற்செங்கோலோச்சுமன்னனும்பவுடியந்த
னுரியவள்காதினூசலுறுகுழைகொணர்ந்தீவாயேல்
வரைகொடக்கணையமென்றாண்மாதவன்றவணைகூறிக்
கரைசெயற்கரியவாசான்கருணைகொண்டேகினானே. (௪)

நெறியிடையிவற்குநேராய்நீண்டசீரிடபமேறி
வெறிகமழ்மேனியோடும்விண்ணவனொருவன்றோற்றிக்
குறுமுனியனையாயேநீயின்கோமயந்துய்த்தியென்றான்
மறுவுரைபுகலாதந்தவண்ணஞ்செய்தகன்றுபோனான். (௫)

பொருப்பினைநிகர்த்ததோளான்புகழ்பவுடியந்தன்சார்போ
யருக்கியமுதலாம்பூசையவன்றரக்கைக்கொண்டாங்குத்
திருப்புரையுனதுதேவிதிருக்குழைகுருவின்பன்னி
விருப்புளதானணேரில்வேந்தனேயளித்தியென்றான். (௬)

மாதவனுரைத்தசொல்லான்மன்னவன்மனமிரங்கிக்
காதலிதன்பாற்சென்றென்கட்டுரைமொழிந்துவாழ்த்திச்
சோதியங்குழைகொளென்றுசொற்றனன்மனமகிழ்ந்து
பூதலம்புகழுதங்கன்புனையிழையகத்துட்சார்ந்தான். (௭)

அந்தமாதுருவந்தோற்றாதந்தணன்றேடிமீண்டு
வந்துநின்மனையாடன்னைமனையிடைக்காணேனென்னப்
பைந்தொடியாசூசத்திற்படர்ந்தவர்க்கெதிர்தோற்றாண்மற்
றெந்தைநீபுனிதனிவ்வாறெய்தியதேதோவென்றான். (௮)

வேந்தனவ்வண்ணங்கூறவேதியன்றெளிந்துமெய்ம்மை
வாய்ந்தவென்னிடத்திருசம்வந்ததுண்டென்றுபோந்து
தோய்ந்துநீர்கரம்வாய்பூசிச்சுத்தாசமானஞ்செய்து
சேர்ந்துமன்னவன்றன்றேவிதிருமுன்னர்நண்ணினனே. (க)

கற்பினுக்கொருத்தியந்தக்கலைமுனிக்கெதிர்வந்தெய்திப்
பொற்பமர்குழைகனல்கிப்புகலுவாள்பொருவிலானே
யற்புணராத்திியோனரியதக்ககனென்றேறுது
முற்படுபெயரானிந்தக்குழைதன்மேன்முயற்சியுள்ளான். (க0)

சென்றுநீகுழைகொண்டேகிற்செங்கரநெகிழ்த்துவாயேல்
வன்றிறற்கொடியோனின்னைவஞ்சித்துக்கவர்தறிண்ண
மென்றுரைத்தளித்தாளின்றென்றிருகைகொண்டேந்திமீண்டு
வென்றிவேலரசையெய்திவிடைதரவேண்டுமென்றான். (கக)

மற்றவன்மகிழ்ந்துநீயென்மனையிடையடிசிறுய்த்துக்
கொற்றமோடேகவென்றுகூறலுமொருப்பட்டேகிப்
பற்றிலானடிசினல்கப்பருகிடுமமையந்தன்னி
லிற்றவோர்கேசங்கண்டேயிருந்தவன்முனிவுகூர்ந்தான். (கஉ)

நலமறக்கேசம்வீழ்ந்தநல்லமுதளித்தியோவென்
றலையிடுகனல்போனட்டமொளிகெடச்சவித்தான்வேந்தைக்
குலநரபதியுஞ்சீறிக்குற்றமோர்சிறிதையுன்னி
மலர்விழிதெரியாவண்ணஞ்சபிப்பதுமருங்கதாமோ. (கங)

வேறு.

ஓதலானீமனையவளையன்றியே
மேதினிதிரிந்திடவெனச்சபித்தனன்
கோதறுமன்னவன்குறைந்துமாமுனி
யோதியருளெனக்குறுதுசெய்யென்றான். (கச)

கேட்டமன்னவன்சிறுநகைகிளர்த்தியே
காட்டியேசபித்தலுங்கசிந்துமீட்டலு
மூட்டியதழலினர்முறைமைமன்னவர்
மாட்டிதின்றன்றலான்மற்றென்றில்லையே. (கரு)

நீங்குமேனீயிடுசாபநீக்கென
வாங்கரசுரைத்தலுமந்தணனும்
தாங்குமன்னவன்விழிச்சாபநீக்கியே
பாங்குறவிடைகொடுபடருங்காலையில். (கசு)

காதலிற்குழைகளைக்கவர்ந்துமீண்டுள
வேதியற்காத்தபம்வெம்மையென்றுகொல்
பூதலக்கரமேலாஞ்சுருக்கிப்பூங்கதிர்
தீதறமேல்கடல்சென்றொளித்ததே. (களஎ)

ஒருபெருங்கயத்திடைக்கடனுளுற்றுவான்
வருகுழையொருவயின்வைத்தகாலையி
னரிவைசொற்றுளபடியாங்குத்தக்ககன்
கருதிவந்தக்குழைகவர்ந்துபோயினான். (கஅ)

மாதவன்பின்றொடர்ந்தோடமற்றவன்
பாதலம்புகுந்தனன்பரமவேதனு
மேதமிலவனுடனெய்திநோக்கினு
ளுதிசேடனைமுதலரவினத்தையே. (க௯)

ஒருவருமிவனெதிருற்றிடாவகை
கரவுசெய்தனனழற்கணுலுங்கண்ணினன்
றிருமுனியையமுந்தெளிவுமோங்கிட
வருநகர்முழுவதும்வலம்வந்தானரோ. (௨0)

இரவிபோலொளிர்வதுமிருளைத்தீர்ப்பதும்
பரவியநல்லொளிபரப்பிநிற்பது
மரதனமணிகளேயமரர்மாதரித்
திருவுறைமடநலார்திகழிடத்தொலாம். (௨க)

மாமணிவேதிகைமறுகுமேடைகள்
காமருசோலைகள்கயங்கள்காவிக
டாமரைமுதன்மலர்தமனியத்தல
மாமெனவொளிர்ந்ததாருகாலயம். (௨௨)

தவளவெண்ணகைகளுந்தடித்தகொங்கையாற்
றுவளுறுமிடைகளுந்தோன்றுமின்னனார்
பவளமென்விரல்களிற்பற்றிமாற்றிய
திவளுறுமிரண்டிழைச்சிறப்புநோக்கினான். (௨௩)

கறுத்தலுஞ்சிவத்தலுங்காட்டுமந்தநாற்
புறத்துறவிளக்குறும்பொலிவுநோக்கினான்
றறித்தபன்னிரண்டிதழ்ச்சக்கரத்தின்மே
விறுத்துளகுமரர்மூவிருவர்நோக்கினான். (௨௪)

பின்னருஞ்சிறப்பெலாம்பெருந்தவத்தினே
னுன்னருமகிழ்வுடனுற்றுநோக்கியே
தன்னகத்தடைந்தபின்றயங்குமாசுண
மன்னரையாற்றவும்வழுத்தலாயினான். (௨௫)

நச்சயின்றவன்சிலைநாணும்பூணுமாய்ப்
பச்சைமாறுயின்றிடுபாயலாயினீ
ரிச்சையேழுலகுமோர்சிரத்தினேந்தினீர்
மெச்சுபேராற்றலில்விளங்குமாறுளீர். (௨௬)

மாசறுகாசிபன்மைந்தராயினீ
ராசறவமுதளித்தண்டங்காத்துளீர்
தேசிகன்கருமம்யான்றிறம்பிடாவகை
வீசுறுகுழைகடந்தளிக்கவேண்டுமே. (௨௭)

என்றிவனேத்திநுனெங்குங்கூயினு
னின்றவர்யாவருமருள்கொண்டாரிலர்
வென்றிகொண்மாதவன்வீட்டுவானுயிர்
நின்றனனவ்விடைநிகழ்ந்ததோதுவாம். (௨௮)

வாயுவின்கதிதலைவளைக்குமாமிசை
தேயுவின்மேனியான்சிறந்தவானவன்
றூயமாமுனியெதிர்தோன்றினுனிவ
னேயநல்வினையெலாமெதிர்ந்ததென்னவே. (௨௯)

காண்டலுமுனிவரன்களிசிறந்திடப்
பூண்டவன்பொன்னடிபோற்றிநின்றுதன்
ணுண்டகைக்கருமமாயடைந்தவாறெலா
மாண்டகுசெவியுறவழங்கினனரோ. (௩௦)

அன்னவனருள்புரிந்தயத்தின்காதிடை
முன்னநீயூதெனமுனிவனூதினன்
சொன்னநற்கடையுகந்தோற்றுமூழிபோற்
பன்னகாடெலாஞ்செவுடுபட்டதே. (௩௧)

வானவன்கொய்புளைவான்செவிக்கெதி
ரானவன்செய்தபேரரவமாமலர்த்
தேனவன்சங்கொலிசெய்யபாதலத்
தானவர்தம்பெருந்தானைபோன்றதே. (௩௨)

ஓடினூர்யாவருமுகாந்தமின்றென
வாடினூர்முனிவனல்வந்ததாமென
நேடினூர்தக்ககனீண்மனைக்கிடை
கூடினூர்மாசுணக்குரவரன்பினல். (௩௩)

செய்திறனன்றிதேசிறிதுதாழ்த்திடி
னுய்திறனில்லைநீயோடியிக்குழை
வைதிகமுனிபெறவழங்குவாயென
வெய்திமாதவற்களித்திறைஞ்சினனரோ. (௩௪)

கொண்டனன்குழைகளைக்குருவின்காரிய
முண்டினிமீண்டுநானுறுவலெத்தவண்
மண்டலத்தென்றிவன்மாழ்கவானவன்
கண்டுதன்பரிதனைக்கசிவினல்கினன். (௩௫)

துரகமீதேறினன்றேற்றுமோர்கணத்
தரியநற்குருவினுசிறமத்தாயிடை
விரைவுறக்கொணர்ந்ததால்வேதவேதியன்
பரிவுறவிழிந்தபின்பரிமறைந்ததே. (௩௬)

வேறு.

வேதந்தனிலாரும்வியக்குமுனி
போதந்திகழ்தாயுழைபுக்கியபின்
னேதந்தவிர்நற்குழையீந்தவடன்
பாதங்களின்மீதுபணிந்தனனே. (௩௭)

மைந்தன்றனைவாழ்த்திமடக்கொடியு
முந்துங்குழைகொண்டுமுசிப்பறவே
யுந்துஞ்செவியூடணியுற்றனளா
லந்தங்கொடுமாமுனியாணையினல். (௩௮)

வேறு.

தேசிகன்பொன்னடிசேர்ந்துதங்கனு
மாசரப்பணிந்தனன்வ்யங்கநோக்கியே
யாசறுநின்னிகரன்பரின்றென,
வோசையாற்றழுவியாங்குயிர்த்துக்கூறுவான். (௩௯)

கற்றவர்தம்மினுங்கடந்துளாரினு
நற்றவர்தம்மினுநனிமிகுந்தனை
யுற்றநற்குழைகொணர்ந்துதவச்சென்றநீ
யிற்றைநாடாழ்த்ததெனியம்பவென்றனன். (௪௰)

அரசனுந்தேவியுமரியநற்குழை
பரசியேயளித்ததும்பாவிதக்ககன்
புரைசெய்துகவர்ந்ததும்புயங்கநாடுபோய்
வரிசையான்மீண்டுளவாறுமோதினன். (௪௧)

நெறியிடையான்செலநிமிர்ந்தவேற்றின்மேற்
செறிவிலோர்வானவன்சேர்ந்துகூறினன்
மறுவில்கோமயந்தனைவாங்கித்துய்த்திடென்
றுறுதியென்றவ்வணந்துய்த்துவந்தனன். (௪௨)

நாகர்நாட்டிடையிருநங்கைமார்கடாம்
வேகமாய்நூலிருவிரலின்மாற்றினு
ரேகமாயாறிரண்டிதழின்வட்டமும்
பாகமார்குமரர்மூவிருவர்பற்றினர். (௪௩)

பின்னரோர்துறங்கமேற்பிரகாசமேனியான்
முன்னர்வந்தணுகினன்முதலபெற்றிக
ளின்னதென்றறிகிலேனென்றுபின்னருஞ்
சொன்னவன்றெளிவுறக்குருவுஞ்சொல்வனல். (௪௪)

சிறாத்தவர் தீமைகள்செய்வதேற்பதே
பொறுத்தனைன்றிதேபோந்ததன்னெறி
மறுத்தவனிந்திரனிடபம்வாரண
மிறுத்தகோமயமமுதென்னவுண்ணுவாய். (சரு)

புயங்கநாட்டிருந்தவப்பூவைமார்கடாந்
தயங்கியதாதைவிதாதையென்பவ
ரியங்குகைத்தலத்திணுலிரவுமுச்சியுந்
தயங்குபன்னிரண்டிதழ்தாணுமாதமே. (சசு)

அறுவர்மைந்தருமிருதாறுமாகுமா
லுறுதியிற்றுரங்கநல்லுதாசனப்பிரான்
மறுவறுபுருடன்மால்வருணன்றேசிகன்
பெறுபெருங்காரியம்பிடித்தபண்பினால். (சஎ)

அமரரேநின்னைவந்தளித்துக்காத்தனர்
குமரனேநீகுருகுமாரனாயினாய்
விமலமாய்நின்செயல்விளம்பவல்லரா
ரமருதிதவத்திலென்றருள்செய்தானரோ. (சஅ)

தேசிகன்விடைதரச்சீடன்மீண்டுபோ
யாசிரமத்திடையநேகநாள்வரை
மாசறுதவத்தினின்மருவித்தக்ககன்
பேசருங்கொடுமையைநினைந்துபின்னரும். (சகூ)

எனக்குபகாரமங்கியற்றுவன்கணன்
றனக்கபகாரமொன்றியற்றறக்கதென்
றுனற்கருங்குருகுலமுய்யவந்தனன்
மனச்செனமேசெயன்மருங்கிலேகினான். (ருo)

உதங்கச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள் - உகக.

உ

# பிருகுவம்மிசச்சருக்கம்.

மன்னவனெதிர்ந்துமறையின்றிறன்வழாமற்
சொன்னகடனல்கியொர்சுடர்த்தவிசளித்தான்
முன்னவனிருந்தரசன்மொய்ம்பினைவியந்து
பன்னரியவாசிகள்பகர்ந்திதுபுகன்றான். (௧)

மேதினிதனிற்புகழுமேன்மையும்விளக்குஞ்
சோதிமுடியோயெனதுசொற்குருவினுக்கே
யாதரவினாலுதவவன்பொடுகொணர்ந்த
வோதரியநற்குழைகவர்ந்தனனொருத்தன். (௨)

அன்னவனியாரெனிலரும்பணியினத்தின்
மன்னனொருதக்ககனெனும்பெயர்வலத்தோ
னின்னிலைமையாணைநெறிநீதிபிழைசெய்தா
னென்னலனருங்குலமொறுக்கில்வசையன்றே. (௩)

உற்றொருவனன்மையொடுதீவினையுஞ்ற்றின்
மற்றவனருங்குலரைவந்தடையுமாபோ
லிற்றவனியற்றியவிடர்க்கிவர்குலத்தோர்
முற்றுமறவோர்மகமுயன்றிடுதியென்றான். (௪)

மன்னனதுகேட்டுமறைமன்னவனைநோக்கி
யென்னதுநிகழ்ந்ததெனயாவையுமிசைத்தான்
மின்னொளிருநன்முடிதுளக்கிவடிவேலோன்
சொன்னபடிசெய்வனெனவொன்றினிநுசொல்வான். (௫)

அறிவிலியொருத்தனபராதமதையுன்னிக்
கறுவியவர்தங்கிளைகடிந்திடுதனன்றே
மறைமுழுதுணர்ந்ததவமாமுனிவவென்றான்
சிறுநகைபுரிந்துமுனியோர்கதைதெரிப்பான். (௬)

பிருகுவெனுமோர்முனிபுலோமையொடுபெற்றி
மருவியவன்வாழ்பொழுதின்மங்கைகருவாரு
வொருதினமுதாசனர்கடன்செய்கெனவோதித்
திருமுனியகன்றனனரும்புனரிளைப்பான். (௭)

சிற்றிடையொசிந்திருசெழுந்தனமிலங்கச்
சுற்றுமணியாரமலர்மாலைகடுளங்கக்
குற்றமறவந்துவழிபாடதுகொடுத்தாண்
மற்றவணரக்கனொருவன்கணனெதிர்ந்தான். (௮)

அங்கிமுகநோக்கியிவளாருரைசெய்யென்ன
விங்கிவனுமுள்ளபடியின்புறவுரைத்தான்
மங்கையிவளென்மனைவிமுன்புறவரித்தேன்
றுங்கமுனிவன்கரவிறாய்மணமிசைந்தான். (௯)

இன்றளவுமன்றுமுதலியானிவளைநாடிச்
சென்றுதிசையெங்குந்திரிந்தனனிருந்தா
ளென்றுரைசெய்தன்னவளையேந்திரனிபோனான்
குன்றனையகொங்கையினள்கூயினள்கலங்கி. (௧௦)

அத்தகையகாலைதனிலக்கொடியகட்டிற்
புத்திரனுதித்தனன்வரத்திறல்பொருந்திக்
குத்திரனைவெந்தழல்கொளுந்திடவிழித்தான்
கத்துமடலைப்பொடியெனப்புடைகழிந்தான். (௧௧)

வந்தநிருதன்படலுமங்கையுமகிழ்ந்தே
தந்தமகனோடிவடனாதுமனைசார்ந்தாண்
முந்துமுனியாசிரமமெய்திமுறையாலே
மைந்தனையெதிர்ந்தவகைவாரிதிபடிந்தான். (௧௨)

வெங்கொடுமரக்கனெதிர்மேவியவளைக்கொண்
டங்கனமகன்றதுமரும்புதல்வனக்கா
துங்கமுறவந்துவிழிதோற்றுமனலாலே
யங்கவனையட்டதுமடுத்ததுமுரைத்தாள். (௧௩)

கேட்டபெரியோனிதுகிளத்தினனரக்கன்
காட்டுபொழுதன்றியுனையெவ்வகையிற்காண்பான்
வீட்டினுளநின்னையுணர்வித்தவராரென்றான்
றாட்டுணையணிந்தவடழற்கடவுளென்றாள். (௧௪)

வேறு.

அம்முறையுரைத்தலோடுமாரணன்கனலைச்சீறி
வெம்மைநீயுரைத்தவண்மைமேலதேமேலதென்னாக்
கொம்மைவாண்முலையைக்காட்டிக்கொடுத்தனைய தனாலெல்லா
மிம்மையிற்புசிப்பைநீயென்றிட்டனன்சாபமன்றே. (௧௫)

வாடினன்கனலுமந்தமறையவன்முகத்தைநோக்கித்
தேடினனரக்கன்கண்டின்றேவியையிவளாரென்றான்
பீடினலொருவர்கேட்பவுணர்ந்தவைபேசாவென்னிற்
கூடினனரகவாழ்வென்றுணர்ந்துண்மைகூறினேனால். (௧௬)

உலகமுன்றதுவுமேலோருதவுநல்வினைமற்றியாவு
மிலகுறக்கண்டுநிற்குஞ்சான்றுநானிவுளுக்காக
விலகிவேற்றவளென்றேனன்றதோவிருப்பிலோர்ந்தே
நலனுறவுண்மைசொற்றேனன்றுகொல்சாபமீதல். (௧௭)

அமரர்மாமுனிவர்முன்னோராகியகுரவரியாருந்
தமதுளமகிழ்வதெல்லாந்தமுன்முகத்தவியாலன்றே
விமலமாமென்னைநீயும்விசாரியாதுரைத்தாய்சாப
மமலவேதியனியானுயாகையாற்பொறைசெய்தேனுல். (௧௮)

வேதியர்வைதபோதும்விரைந்துவந்தடித்தபோதுங்
கோதுரைபுகலார்நல்லோர்கொள்கைகண்டிதுபொறுத்தேன்
மீதினிப்பிரதிசாபம்விளம்பிலேனென்றெழுந்து
சோதியங்கனல்கரந்தோர்சூழல்போய்ச்சார்ந்திருந்தான். (௧௯)

அவனிகடோறுமுள்ளவருங்கனன்முறைசுருட்டிக்
கவலையோடொளித்திருந்தகாலையிலமரரோடிப்
புவனியின்மகங்கள்பூசைபுசிப்புடன்றீபமோம
நவமுறப்பொய்த்தவென்றேநான்முகற்கறியச்செய்தார். (௨0)

அன்னவன்கனன்முன்னெய்தியவன்மனக்கவலைநீக்கி
முன்னவன்சாபநீரின்முறைப்படியெல்லாந்துய்த்துப்
பொன்னுலகமுதின்மிக்கபுனிதநீயாகவென்றான்
றன்னுளமகிழ்ந்துமுன்போற்றருக்கினன்றழலின்பேரோன். (௨௧)

அரக்கன்வந்தெடுத்தகாலத்தரிவைகண்ணருவியாங்கோர்
பெருக்குறுநதியாய்நன்னீர்பெருகினவல்லின்மேலான்
வரத்தினுலதற்குநாமம்வதுசரையென்றுசொற்றான்
புரக்கவந்துதித்தமைந்தன்சவுநகனெனும்பேர்பூண்டான். (௨௨)

அத்தனிக்குமரன்வேந்தனருண்மகள்சுகன்னியென்பாண்
முத்துறழ்மூரலாளைமுயங்கியோர்மகவையீன்றான்
சித்தசனிகரானென்னுந்திறலுடைச்சநகப்பேரோ
னித்தனுமுரூருவென்னுநிறைமதிமகனைத்தந்தான். (௨௩)

வந்தநன்மகனும்விசுவாவசுமகள்வனப்பான்மிக்க
பைந்தொடிதனைக்கண்டன்பிற்பாரியாவரைந்திருந்தான்
விந்தைசேர்பிரமதைப்பேர்மென்கொடியவளையோர்நாள்
செந்தழனுகந்தீண்டிச்சேயிழையுயிர்துறந்தாள். (௨௪)

பொற்பினுற்குணத்தான்மிக்கபொறையினுற்புலமைதன்னுற்
கற்பினுனிகரிலாதாள்கணத்தின்முன்னிறத்தல்கேட்டுச்
சிற்பரனனையானுங்குச்சென்றுயிர்தரிக்கலானுச்
சொற்பலவிதங்கள்கூறிப்புவியிடைசோர்ந்துவீழ்ந்தான். (௨௫)

அம்முனிதுயரங்கண்டேயசரீரிசொல்வதானுள்
வெம்மைதீர்ந்தின்றநுயுள்விளங்கிழைக்கருத்தமீந்தாற்
செம்மையோடெழுவொன்னத்திருமுனிதேறிமாதுக்
கிம்மொழிப்படியேதந்தானிவளுயிர்பெற்றெழுந்தாள். (௨௬)

மற்றவடனைவரைந் துவாழ்ந்தபின்மறையோன்முன்னாள்
பொற்றொடிதனக்கபாயம்புரிந்தவப்புயங்கமெல்லாஞ்
செற்றிடவுளத்தினுன்னிச்செங்கையிற்றண்டொன்றேந்தி
நற்றவன்பணிகடம்மைகளிந்துயிர்தொலைக்குநாளில். (௨௭)

புற்றிடைப்பாந்தளொன்றுபுறப்படமுனிவனோடி
யெற்றுவான்சுதைதகைக்கொண்டேயிசைத்தனன்புயங்கநோக்கி
யற்றகொலுயிரென்றஞ்சியரிகரியெனலுநின்றே
மற்றிதேனுரைத்தாயென்னமாசுணமிதனைக்கூறும். (௨௮)

பிழையொன்றுஞ்செய்திலேனைப்பெருங்கதையொன்றுற்கொல்லும்
விழைவென்கொலுரைத்தியென்னவேதியனிதனைச்சொல்வான்
கழையன்னதோளினாளென்காதலிதனைமுன்கவ்வும்
பழிகண்டுகுலத்தைமுற்றும்பாழ்படக்களைவேனென்றான். (௨௯)

ஒருவரோர்தீமைசெய்தாலனைவரையுபாதிகாட்டல்
குரவர்கடொழிலோவென்னக்குலமுனிமீட்டுஞ்சொல்வான்
வருபெரும்புகழுந்தீங்குமொருவரான்மன்னிற்றேனுங்
கருதருங்குலத்திற்கெல்லாங்காட்டலேதருமமாமால். (௩0)

ஆதலாலுன்னையென்றனருங்கதைக்கிரைசெய்வேனென்
றோதிவான்கதையெடுத்தானுற்றமாசுணமறைந்து
மாதவனுருவதாகிவந்துமுன்னிற்றல்கண்டே
யேதுனதியற்கையென்றுனிவற்கவன்மொழிவதானான். (௩௧)

ஆயிரபாதனென்பேராங்கொருமுனிபாலெய்தி
நேயமாத்துரும்பையோச்சிநீண்டபன்னகமென்றேன்
மாயிருமுனிவன்சீறிமாசுணமாகவென்றான்
றூயனேயெனதுசாபந்தொலையுநாளுரைத்தியென்றேன். (௩௨)

உளந்திகழுருருவென்னுமொருமுனிபார்வைதாங்கில்
வளந்திகழ்நினதுசாபமாறுமென்றுரைத்துப்போனா
னளந்தறிவுடையநின்னாலகன்றதென்சாபமென்றே
களங்கறவுரைத்துப்பின்னுங்கலைமுனிபகர்வதானான். (௩௩)

ஆரணங்கலைகள்கேள்வியரும்பொறைசாந்தம்பண்பு
காரணஞானநீதிகல்வியேமுதலயாவு
மேரணிமுனிவரோடிருந்துதித்திடுவதென்னிற்
சீரணிபெருமநீயிச்சிறுசெயல்புரிதனன்றே. (௩௪)

வேந்தரேமுதலோர்க்கன்றிவேதியர்க்கிந்தவண்ணஞ்
சேர்ந்துயிர்சிதைத்தறீமைசெற்றநீவிடுதிமேலோ
யாய்ந்துணர்செனமேசெயனகிமகத்தவியவென்றே
யேந்துதாய்சபித்தலுண்டாங்கிவரெலாமடிதறிண்ணம். (௩௫)

பழியுனக்கேதுக்கென்றேபகரலுமுரூருகேட்டு
விழியனலடக்கிநின்சொல்விழுமிதென்றுளம்வியந்து
வழிபடுமுனியையேவிமற்றவன்விரதநீக்கிக்
கழிபுனல்விபினஞ்சேர்ந்தேகாதலியுடன்வாழ்ந்தானே. (௧௬)

ஆதலாலொருவன்றீமையவன்குலத்தனைவர்க்கெல்லா
நோதல்கள்புரியுமென்றுநொடித்தமாதவனைநோக்கி
வேதியரரசேயீன்றுள்விருப்பொழிந்துரைத்தசாப
மேதுகாரணத்தாலென்றுனிராசன்மாதவனிசைப்பான். (௧௭)

பிருகுவம்மிசச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - ௨௪௮.

---

## காருடச்சருக்கம்.

---

கருதற்கரியமரீசிதருங்கலைவன்முனிவன்காசிபனூர்
திருவிற்பொலிதேவியர்விநதைதிகழ்கத்துருவையெனும்பேரா
ரிருவர்மகப்பெற்றெடுத்திடுவாரிருந்தேதவத்தையிழைத்திடலுஞ்
சுருவத்துடன்வந்தவர்கணவன்றேற்றிநின்றுன்றுயர்தீர. (௧)

மாதரோடியடிதொழுதார்வருமாமுனியுமருள்புரிந்து
காதன்மடவீர்வேண்டுவனகழறிலளித்துமெனப்பணித்தான்
வேதமுனியேயிருபுதல்வர்விலக்கற்கருமாற்றலராகிச்
சார்தமுறச்செய்தளியென்றுடவஞ்சேர்விநதையெனுந்தக்காள். (௨)

கருதற்கரியவெழிலுடையகமழ்கத்துருவையெனும்பெயராள்
பொருவற்றவராய்நூற்றைந்துபுதல்வர்பெறவேண்டினளென்று
ளிருவர்க்குளத்தினபிமதங்களிசைக்கும்படியேகருத்தான
மருளித்தவத்தின்சூழலிடையடைந்தானருமாமறையோனே. (௩)

காலம்பலவுங்கருச்சுமந்துகனிவாய்மடவாரிருவோரும்
பாலருதிக்குந்திறனன்றிப்பயிலுங்காலையோர்தினத்தி
லேலுமொருத்திநூற்றைந்துமேனையவளோரிரண்டுமெழிற்
சாலுநிறத்தவண்டங்கடம்மையளித்தார்தவமிக்கார். (௪)

வந்தவண்டந்தனைப்பரித்துவைத்தேபயிலுஞ்சிலநாளிற்
கந்தங்கமழ்கத்துருவைதருங்கமஞ்சூலண்டமுகையவிழ்ந்து
சூழ்ந்துசேடன்றிறலனந்தன்முதற்றக்ககன்வாசுகிமுதலா
மைந்தர்நூற்றுநால்வருமோர்மகளுமுதித்தார்மனங்குளிர. (௫)

ஒருவர்க்கொருவர்கலைதள்பயின்றுவந்தாரணங்கண்முழுதோர்ந்து
திருவிற்சிறந்துபயின்றிடுநாட்டெரிவைவிநதைபொறுத்திலளாய்க்
கருதிக்கருதிமனநொந்துகவர்ந்தோரண்டந்தனைப்புடைத்தாண்
முருகிற்சிறந்ததிருமேனிமுடவனொருவனுதித்தானே. (௬)

தாயைநோக்கியுடன்முழுதுந்தான்வந்தெய்தாமுன்னுக
நீயிவ்வண்டம்பிதிர்த்தனையானின்றன்முடவனயினமாற்
சாயுமுனதுதங்கையர்க்கேதாதியாகித்தொழில்புரியென்
றேயவீன்றுடனேச்சபித்தானிருதாளின்றியெழுந்தோனே. (௭)

நடுங்கிநடுங்கியுயிர்த்துயிர்த்துநாணுந்துயருந்தனையலைப்ப
வொடுங்கிச்சோருந்தனிப்பாவையுணர்வையுணர்ந்தாங்கருளெய்தி
நுடங்குமிடையாடனக்கேவனெய்திறைற்றியினியெய்துங்
கடுங்கட்காளையாற்சாபங்கடத்தியெனவுங்கரைத்தானே. (௮)

அச்சமதனல்வேறொன்றுமறையாதிருந்தாளக்குமரன்
கொச்சையுடலானருணனெனக்கொண்டபெயரான்றினகரற்குப்
பச்சைப்புரவித்தேர்தூண்டப்பாகனுகிப்படர்ந்தபின்னர்ப்
பொய்ச்சவிடையாடணியண்டம்புரந்தேயிருக்குமமையத்தில். (௯)

## வேறு.

தமரவேலையைக்கடைவதுதரித்திமையவர்கள்
கமலன்மான்முதலோருடன்கரைத்தவப்பொழுதிற்
சிமயமந்தரங்கொணர்ந்திடிற்செய்துமுற்றுதுமென்
றமலனேதினனமரர்நெட்டுயிர்ப்புடனிருந்தார். (௧௦)

அன்னவாறுகேட்டனந்தனுமாயிரம்பதினென்
றென்னுமோசனையுயர்ச்சியுமகலமுமென்றே
பன்னுமந்தரம்வேருடன்பறித்துடற்பரித்தான்
மன்னியாவருமகிழ்ந்தனர்புயவலிமதித்தே. (௧௧)

மந்தரங்கொணர்ந்திளமதிவருந்தநிநாட்டி
முந்துவாசுகியிறெனப்பிணித்தனர்முறையாற்
சுந்தரஞ்செறிதானவர்வானவர்தொல்லைச்
சிந்துவாரிதிகடைந்தனர்சென்றதுசிலநாள். (௧௨)

வாசுகிப்பெயர்ப்பாந்தளுந்தன்னுடல்வருந்தி
யாசுறும்படிவெவ்விடமுமிழ்ந்ததாலதனாற்
பூசுரன்முதற்கடவுளர்புராரியைநினைந்தா
ரீசன்வந்தருங்காளமுண்டேகினனிப்பால். (௧௩)

ஓடுந்தேவர்கண்மனமகிழ்ந்துவகையாலணைந்து
நாடும்பாற்கடன்மீளவுங்கடைந்தனர்நவைதீர்
பீடுறும்பெருங்கபிலையுநிதிகளும்பிறவு
நீடுமாமலர்மங்கையுநேசமங்கையரும். (௧௪)

பதுமராகமாமணியுமோர்பரியுமைந்தருவும்
விதுவைநேர்முகவிரதியுமேதகுபொருளுங்
கதுவியெய்தியபின்னரின்னமுதமுங்கண்டார்
புதுமணங்கமழ்துழாயவனுதியாம்புலவோர். (கரு)

இரதிமாரனுக்கீந்தனன்கபிலையுமானுந்
துரகமைந்தருநிதிமணிமுதலியசுரர்க
ளரசனுக்களித்தலர்மடக்கொடிகவுத்துவந்தன்
னுரலில்வைத்தனனுரகமீதறிதுயிலுறுவோன். (கசு)

ஏனையோர்களுக்கேனையமங்கையர்பிறவுந்
தானளித்தபின்றண்ணமுதத்தினைநோக்கி
வானவர்க்களித்தவுணரைவஞ்சனைசெய்வான்
றேறென்ஞ்லித்திடபடலையந்துழாயவன்றேர்ந்து. (கஎ)

மாயமோகினியுருக்கொடுமாயவன்டைந்து
தீயவானவர்தங்களைமயக்கியேசிறந்த
தூயவானவர்தமக்கமுதளித்தனன்றொல்லைத்
தேயுநேர்விடவிராகுவுங்கேதுவுஞ்சேர்ந்தே. (கஅ)

அரக்கர்மற்றவர்வானவருருவினோடடைந்து
நிரைத்தநல்லமுதேந்தியேதுய்த்திடநெடியோன்
கரைத்தமாமதிகதிரவன்வாய்மையாற்கண்டு
சிரத்தைநீக்கினன்செங்கையிற்சட்டுவஞ்செலுத்தி. (கசு)

அமுதந்தொட்டபேராற்றலாலருந்தவமியற்றி
விமலனல்வரம்பெற்றனர்விதுவொடுகதிரை
யுமிழுமுண்ணுமென்றுரைப்பதிவ்வியற்கையாலும்பர்
தமதவாவறப்பருகினர்தண்ணமுதம்மாறு. (உ0)

வளந்திகழ்ந்திடுகடவுளர்மாமகிழ்வோடும்
விளங்குபொற்குடநிரப்பியவேலைநல்லமுதைக்
களங்கறக்ககனத்திடைகாவல்செய்துலக
மளந்தவிண்ணவனுடனிவராங்குறுமளவில். (உக)

ஏஞ்சித்தானவரமுதமுண்டிலர்துயரெய்தி
வஞ்சித்தான்றிருமாலெனப்பெருஞ்சமர்மலைந்தார்
கஞ்சத்தேமலர்க்கடவுளுங்கண்ணனுங்கனன்று
பஞ்சிற்றுனெரிபடுவதொத்தவர்கெடப்படுத்தார். (உஉ)

இறந்ததானவரன்றிமற்றிருந்தவர்பிலத்தி
னுறைந்துவாடியாங்குயிர்த்துயிர்த்திருந்தன்றிப்பாற்
சிறந்தவானவர்மான்முதலாதியோர்திரண்டு
மறைந்துதத்தமதிருக்கைபோயடைந்தனர்மன்னே. (உ௩)

மெச்சயிச்சுவரியமுளவேள்விநாயகற்குப்
பச்சையிச்சவரிப்பெயர்ப்பன்னவனளித்த
நச்சரிச்சுளநற்கடன்மருங்கிடைநவஞ்செய்
யுச்சயிச்சிரவம்பயில்வுற்றதாலொருநாள். (உ௪)

பச்சையங்கொடேர்ப்பாகனையீன்றபைங்கொடியு
நச்சணிந்தநாகங்களைநல்கியமாது
மிச்சைகொண்டுவாரிதிமருங்கெய்தியஞான்று
மச்சைபொன்றிலாப்பரிதனைநோக்கியேவகுப்பார். (உ௫)

வினதைகசத்தமெய்வெண்பரியீதெனவிளம்ப
வனிதைமற்றவள்வாற்புறங்கறுத்துளதென்று
ளினிதிற்றேற்றவட்டாதியாய்வென்றவட்கேவற்
றனியியற்றுதற்குமெனச்சூளுரைசாற்றி. (உ௬)

காண்டும்வாவெனச்சென்றனர்கத்துருப்பெயரான்
மீண்டுநாளையேநோக்குதுமீள்கெனமொழிய
மாண்டமங்கையவ்விரகினையுணர்ந்திலண்மடங்கி
நீண்டுயர்ந்ததம்மிருக்கைபோயிருந்தனர்நெறியால். (உ௭)

தனதுமைந்தரைவரவழைத்திவையெலாஞ்சாற்றி
வினதைதோற்றியான்வென்றிடவெண்பரிநுனிவாற்
புனிதநீக்கிமையுறுத்துவீர்புதல்வர்காளென்றுண்
மனதுதுன்னெனமைந்தர்களுரைத்திடலானார். (உ௮)

இழைத்ததீவினையாரைவிட்டுளதினிநீதி
பிழைத்திழைக்கலாப்பிழைபுரிந்துய்யுமாறுளதோ
பழிக்குடம்படோம்படுகினும்பயந்ததாய்மாட்டோ
வழக்கலாதியற்றிடுவதென்றொருசொலான்மறுத்தார். (உ௯)

நகத்தைநேரிணையிளமுலைந்தனருரைகேட்
டகத்தில்வெஞ்சினமருந்துயர்தருமெனவறியாள்
செகத்தையாள்சனமேசெயன்செய்திடுசெந்தீ
மகத்தின்மாய்கநீரென்றுதன்மைந்தரைச்சபித்தாள். (௩௰)

அன்னைசாபத்துக்கஞ்சியேயருங்கருநாக
முன்னியொன்றுபோய்வெம்பரிவாலுளைமுனையின்
மன்னிநின்றதுமற்றைநாள்விநதையைவென்று
சொன்னசொற்படித்தாதியாய்த்தொழில்செயக்கொண்டாள். (௩௧)

வேறு.

சொற்பழுதுறுதவங்கைதோகைதொழில்செய்தா
ணற்பருவமைந்துசதநாளளவுகாறு
மற்புருவமின்னையளித்ததனியண்ட
முற்பவமணைந்துமகனுண்மையினுதித்தான். (௩௨)

அஞ்சிறையுமெஃகணரியவாற்றலுமுடைத்தே
செஞ்சுடரெனத்தகையசெம்மல்வெளிவந்தான்
வஞ்சகவரக்கனெதிர்வண்டறிபுனூடே
யஞ்சிடவுதித்தநரசிங்கமெனலானான். (௩௩)

வானளவுயர்ந்துசிறைவீசிமகிழ்வோடு
மானிலமடைந்துதனையீன்றமடமங்கை
தேனுலவுமாமலர்செய்சீறடிபணிந்தான்
மானனைமனத்தின்மகிழ்வாரினிவகுப்போர். (௩௪)

கண்களினடங்கரியகாத்திரவனப்பும்
விண்களியுறும்புயவிலங்கலையுநோக்கி
மண்களியருந்ததியைமானுநிறைநீராள்
பெண்களினுரைக்கரியபெற்றியையடைந்தாள். (௩௫)

தாதிதருமைந்தனுயர்தன்றனையருக்குப்
போதுதருமேவல்கள்புரிந்திடுகவென்றே
மாதுமதிகத்துருவைசொல்லவயமைந்த
னீதிவழுவான்வரிசைத்தொழினேர்ந்தான். (௩௬)

நாட்பலகழிந்தபினர்நம்பிதனையீன்று
டாட்கமலமேத்தியிவர்தங்கள்வயமாய்நா
மாட்படுமியற்கைமுறையன்னையுரையென்றான்
வாட்கண்முதனுண்முறையனைத்தையும்வகுத்தாள். (௩௭)

கேட்டுளமழன்றுவிரகிக்குவருமைந்தர்
நாட்டுசிலரைச்சிறகினண்புடனிருத்தி
வாட்டமுறவெம்பரிதிமண்டலமடைந்தான்
காட்டுமரவங்கள்கதறிக்கனலில்வேவ. (௩௮)

அயர்ந்திவர்பெரும்புவியடைந்திடலுமன்னை
யுயர்ந்தவருணன்பதமுளந்தனினினைந்தே
நயந்துசெபமாயினனலந்தருதண்மாரி
வியந்தவன்வழங்கமெலிவற்றவரெழுந்தார். (௩௯)

அத்தகையபோதுமவளச்சமிலளாகி
யுத்தமனையேவல்கொளவோர்தினமிருந்தே
கத்துருவைமைந்தரொடுநற்கலுழனென்னும்
வித்தகநெறிக்குமரனோர்விரகுரைத்தான். (௪௦)

எதுபொருள்வேண்டினுமிமைப்பளவினும்பாற்
றோதறவுரைத்தபடிகொண்டுதவுகின்றேன்
றூதியெனவேவல்புரிதாயிடர்தவிர்க்க
வாதரவினீர்மனதிலன்புறுமினென்றான். (௪௧)

கத்துருவைதன்சிறுவர்சிந்தைகள்களித்தே
சுத்தமுறுபீத்தமுதுதுய்க்கவருள்வாயே
வித்தினமகற்றுதமுமேவலெனவோத
வித்தகனிசைந்துவிநதைக்கருகுவந்தான். (௪௨)

## வேறு.

தந்தையெங்குளான்றனக்கினியுண்டியேதுரைத்தி
யிந்திரன்பதிக்கெய்திநல்லமுதெடுத்தீந்து
முந்துநின்குறைமுடிப்பனென்றுரைத்தலுமுருகார்
கந்தமாமலர்க்குழலினாள்கருணைபூத்தனளே. (௪௩)

கந்தமாதனவிலங்கலினுந்தையார்கசிவான்
முந்துநற்றவமாற்றினன்வாரிதிமுனையிற்
பந்தவேடரெண்ணிறந்தவர்பயிலுவர்பருகி
யந்தநல்லமுதேந்திவாவெனவருளளித்தே. (௪௪)

பின்னுமோதுவாண்மைந்தநீபெரும்பசியதனு
லுன்னுந்தீயரையுண்பையேன்மறையவருளரேற்
பன்னிநீக்கெனப்பணித்தனடெரிவதெப்படியென்
றுன்னநெஞ்சிடையமுறருமுணர்ந்தகற்றென்றாள். (௪௫)

கேட்டுமைந்தனுந்தாயருள்கொண்டவண்கிட்டி
நீட்டுதீயரைவிழுங்கினனெஞ்சிடைப்புழுக்கங்
காட்டுவேதியனொருவனைக்கண்டுநீகடிதின்
மீட்டுவாவெனமீண்டனன்விளங்கிழையோடும். (௪௬)

ஏனையோர்களைவிழுங்கியும்பசிதணிந்திலதாற்
போனமைந்தனும்புணரியிளோர்புடையிருந்த
ஞானவேதியர்நற்றவமிறைத்தினிதிருக்குந்
தானமாகியகந்தமாதனந்தனிற்சார்ந்தான். (௪௭)

காருடச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௨௪௫.

---

௨

# கந்தமாதனச்சருக்கம்.

கட்படுகாந்தளுங்கணியுமாழையும்
விட்படுகோங்குமந்தாரம்வேயகிற்
புட்படுவருக்கைதேக்காரம்பூவையா
ருட்படுதருக்கண்மாலொத்தசைந்தவே. (௧)

கொன்றையுமரவமுங்கூவிளங்களுந்
துன்றுநீடருவியஞ்சனைகொள்கங்கையு
நின்றசைந்திடுதலானிமிருமால்வரை
மன்றலஞ்செஞ்சடையரனைமானுமே. (௨)

அந்தமால்வரைபிடித்தழகுவிஞ்சுறுங்
கந்தநீலோற்பலச்சுனையின்காட்சிகண்
முந்துவானவர்க்கெல்லாமுதன்மைமிக்குய
ரிந்திரன்விழிகளாயிரமுமேற்குமே. (௩)

கரிகளும்பிடிகளுங்கன்றும்வெஞ்சின
வரிகளுமரிகளுமவிரும்பாங்கெலா
நரிகளுமான்களுநன்முயற்களும்
பரிகளுமான்களும்பயின்றுலாவுமே. (௪)

குஞ்சரக்கன்றுகண்முழக்கிற்கோளரி
யஞ்சிநன்முழைவிடுத்தகன்றிடாதசம்
விஞ்சொலிசெவிப்படவெய்யவேங்கைக
டுஞ்சிடாதிரவெலாந்துணுக்குற்றேங்குமே. (௫)

மயிலிளஞ்சாயலஞ்சுகங்கள்வாய்மொழி
குயிலுடைவண்சுரங்குறிஞ்சிதங்கிய
வெயிலுமிழ்பூண்மினார்வெறுப்பதாவது
முயன்மதிக்கேயவர்முறுவல்பூப்பதே. (௬)

மஞ்சுண்டக்கணங்களுமாசுணங்களுஞ்
சஞ்சரித்துறங்கிடாச்சாரலில்லையா
னஞ்சணிவிழியிணைமறவர்நங்கைமார்
பஞ்சடிச்சுவடிலாப்பாறையில்லையே. (௭)

காமமுங்கோபமுங்களிப்பும்வாட்டமு
மேமமுங்காண்பரிதெனினுநாடொறு
மோமமும்வேள்வியுமுயருமாகுதித்
தூமமுமாதவர்சூழலெங்குமே. (௮)

வாரணவோசையும்வயங்குபொன்கெரீழி
நீரணிவோசையுநெறிபுலப்படு
மாரணவோசையுமதிர்ந்தொலித்ததாற்
காரணமுனிவர்வாழ்கந்தமாதனம். (௯)

ஆங்கிவனணுகியேயந்தமால்வரைப்
பாங்கெலாமுணர்ந்தபின்பயந்ததந்தையார்
தாங்கியபெருந்தவச்சாலையெய்தியே
பூங்கழல்பணிந்தனன்பொருவின்மைந்தனே. (௧௦)

வருகைபின்முன்னரேமைந்தன்றன்வலி
பெருகிடுமாறெலாம்பெயர்ந்தறிந்தவ
னிருகையாற்றழுவியாங்கினியவாசிசொற்
றுருகினான்சிந்தையுமுடலுமாமுனி. (௧௧)

வந்தவாறனைத்துமம்மாமுனிக்கிவன்
சிந்தையார்ந்திடும்படிசெப்பிநீற்றலு
மந்தணன்வாழ்த்திநல்லமுதவவ்வியே
யுந்திமீண்டிடவரமுதவினானரோ. (௧௨)

மைந்தநீபோதியென்றுரைப்பமற்றவன்
றொந்தியிற்சுடும்பசிதுரப்பவேண்டுமென்
றந்திவானத்திணையாக்கைதாங்கிய
வெந்திறற்றுக்கியன்விளம்பிப்போற்றினான். (௧௩)

## வேறு.

அந்தமைந்தனுக்கருண்முனிபுகலுவானையா
வந்தமால்புரம்வாழ்விசுவாவசுப்பெயரோ
னந்தணாளனுண்டருநிதியளப்பறப்படைத்தே
சிந்தைதான்களிகூர்ந்திடத்திருவினிற்சிறந்தான். (௧௪)

அனையவன்றனக்கிளவலெட்டாந்திசையானைத்
தனதுபேரினைத்தாங்கினோன்றம்முனைவணங்கி
யெனதுபாகமின்றளித்தியுள்ளனவெலாமென்னக்
கனலினுஞ்சுடுகண்ணினான்கனிட்டனைமுனிந்தான். (௧௫)

அரியொலித்திடுமதச்சுவட்டானையாய்ப்புவியிற்
றிரிகவென்றிளையோன்றனைச்சபித்தலுஞ்சீறிப்
பெரியகூருமமாகிநீபெயருதியென்றே
புரியுந்தம்முனைச்சபித்தனன்புவியெலாமுணர. (௧௬)

ஆறியோசனையகலமற்றிரட்டியாங்குயர்ச்சி
வீறியானையாய்ப்படர்ந்தனன்பின்னவன்வேதங்
கூறுமுன்னவன்கூருமநல்லுருத்தாங்கி
யாறுமுன்றுமாமியோசனையளவையினமர்ந்தான். (௧௭)

இருவர்வேறுருவெய்தியும்வயிரம்விட்டிலராய்ப்
பொருதுநின்றனர்புணரியினுப்பணிலதனுன்
மருவுயிர்த்தொகையாவதும்வருந்தியகண்டாய்
வெருவல்சென்றிநீவிழுங்கவர்தமையெனப்பணித்தான். (கஅ)

சொன்னவாசகங்கேட்டனன்மகிழ்ந்தனன்றெழுதான்
பன்னகாசனவயிரியாகாயமேற்படர்ந்தான்
மன்னுவாரிதியிடையிருவல்லுயிர்தனைக்கண்
டுன்னுமுன்னரிற்கானகத்தறைந்துகொண்டுயர்ந்தான். (க௯)

விண்ணளாவுமோர்வடதருச்சினைமிசைமேவி
யண்ணறங்கலும்பெருஞ்சாகைதாங்கிலதாய்ப்
பண்ணைமைந்தநூறியோசனைப்பரப்புடன்முறிந்து
மண்ணில்வீழ்தல்கண்டஞ்சினன்மாமுனிமைந்தன். (௨௦)

அங்குலங்களினளவுடைவாலகில்லியர்க
டங்கியேதவம்பயிற்றியதன்மைகண்டானே
மங்குமாருயிர்த்தொகையெனமனம்வலித்தானே
பங்கயப்பதத்தறைந்தனன்பணையையும்பதறி. (௨க)

வலத்தயானையும்வைகியகூருமந்தனையு
நிலத்தினீங்கிடாதறைந்துகொண்டொருபுடைநிமிர்ந்து
குலத்தின்மாமுனிசொற்படிகோட்டினைவிடுவா
னலத்தகந்தமாதனமெனும்விலங்கலைநண்ணி. (௨௨)

தந்தைதன்னிருதாள்களிற்றன்சிரமுறுத்தி
யிந்தவான்சினைநீக்குவதெவ்வணமிதில்வாழ்
வுந்துவேதியர்நீங்குவதெவ்வணமுரைத்த
முந்துநல்லுயிரெவ்விடத்திருந்துனுமுறையே. (௨௩)

அடுத்தபாங்கரினுகர்ந்திடலாருயிர்த்தொகைகள்
கெடுத்ததீவினைகிட்டுமென்றடைந்தனன்கேண்மை
யடுத்ததந்தைநீயருளுதியென்னலுமாசை
விடுத்தமாதவர்குழுமியேவயினனைவியந்தார். (௨௪)

என்றுரைத்துளமைந்தனுக்கிருடியுமிரங்கி
வென்றிமிக்குள்வாலகில்லியர்சினைவிடுத்துச்
சென்றிடத்திருவுளங்கொடுசெங்கரமுகிழ்த்தா
னன்றுமற்றவர்மைந்தனைவாழ்த்திவிட்டகன்றார். (௨௫)

நானிலத்திடைபனிக்கிரிக்கொருபுடைநணிநிர்
மானிடக்கிரியுளதவண்வடச்சினைவிடுத்து
ஞானநற்கிரியிமையமேலிருந்திந்தவண்மைப்
போனகத்தினைப்புசித்திநீயென்றனன்புனிதன். (௨௬)

வேறு.

அன்னதுசெய்வனென்னுவருந்திறல்வயினதேயன்
மன்னுநிர்மானிடத்தின்மருங்கினிற்சினையைநீக்கிப்
பொன்னவிரிமயச்சாரற்புகுந்திரண்டுயிருநுங்கித்
தன்னெதிரொருவரின்றிப்பசியெலாந்தணிந்துமீண்டான். (உஎ)

கந்தமாதனச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள் - ௩௨௨.

---

# அமுதங்கொணர்ந்தசருக்கம்.

மதத்தமாவினையுமாற்றன்மாற்றருமியற்கைபூண்ட
கதத்தொருகமடமென்னுங்காத்திரவரையுந்துய்த்து
விதத்துறுதாதையோடுவினதையைநினைந்துவிண்ணோர்
பதத்திடைப்புகுவதுன்னிப்பறந்தனன்பறவைவேந்தன். (க)

பன்னகவயிரியந்தப்பதியிடையணுகாமுன்னந்
துன்னிமித்தங்கள்கண்டேசுரர்பதிவெருவியாங்குப்
பொன்னெனும்பெரியோன்றன்னைப்புகழ்ந்திருகரங்கள்கூப்பி
யென்னிதுபுகறியென்றானிதுவெலாமுணர்ந்துரைப்பான். (உ)

கேட்டிநீமகத்தின்வேந்தேகேடில்காசிபனார்தந்த
தாட்டுணைவயினதேயன்றாய்க்குறையகற்றுமாறு
நீட்டுபேராற்றலோடுநிமிர்ந்திருசிறகுவீசி
நாட்டிடையடைந்தானின்றுனலியலாந்தகையனன்றால். (௩)

புத்தமுதெடுத்துமீண்டுபுகுந்துகத்துருவைக்கீந்து
வித்தகத்தாய்தன்னைவல்விலக்குவான்மேவுகின்றா
னெத்தகையோர்க்குங்கூடாவிபத்தொடுமலைந்தகூரு
மத்தையுமயின்றான்மேருவரையையுமதிக்கலாதான். (௪)

மறந்தனையையநீமுன்மாமுனிகாசிபற்கே
யறந்தருபுதல்வன்வேண்டியருமகம்புரியுநாளிற்
சிறந்தநெய்சமிதையோடுசிலபொருடந்துபாங்க
ருறைந்தனையயனையாதியும்பரும்யானுமுற்றோம். (ரு)

அன்னகாலையினங்குட்டத்தாக்கையர் வாலகில்லியர்
மன்னுதம்முடலுக்கேற்றசமிதைபமற்றுங்கொண்டு
துன்னினரதனைநோக்கிநகைத்தனை துனிபொறும
வின்னமாமுனிவர்கண்டெசிறியொன்றெடுத்துரைத்தார். (சு)

காசிபன்றனக்குத்தோற்றுங்கான்முளைகடவுளோர்கட்
கேசறவிளங்கிரண்டாமிந்திரனுகவென்றே
பேசிநல்லவிகடந்தபெற்றிகண்டவரையேத்தி
வாசவமறுகிநின்றேமாற்றுமென்பிழையையென்ருய். (எ)

மாதவர்மனமிரங்கிவந்திடுமகவுமேலா
யேதறீர்பறவைக்கெல்லாமிந்திரனுகவென்றே
யோதினரன்னபான்மைக்குதித்தவனிவனேகண்டாய்
கோதிலான்வருதறன்னுற்கொடுஞ்சமர்விளைதறிண்ணம். (அ)

தடுத்தமர்புரிந்தபோதுந்தண்ணமுதினைநஞ்செங்கை
விடுத்திடல்சரதமிந்தவிம்மிதமதற்கேயென்று
னடுத்தநல்வியாழனென்னுமாரியனமரர்வேந்தன்
கடுத்தவூண்முகத்தனுகிக்காண்குவன்கவர்தலென்றுன். (கூ)

நல்லபுத்தமுதுகாக்குநலனுடைக்காவலாளர்
வல்லவர்தம்மைக்கூவிவருவனதெரியக்கூறி
யொல்லையிற்காவலாக்கியும்பருமியக்கர்தாமுஞ்
செல்லுதவுருமுபோலத்தெழித்திடவிருந்தானன்றே. (க0)

வேறு.

மாமுகிற்குலமியங்குதலொழிந்துமுக மாறியட்டதிசையுஞ்சிதறிநொந்துகுணக, நாமநற்பிலமடைந்தன திசைக்கரட நாகமெட்டுமயர்கின்றனபெருந்திற்ல்கொ, ளேமவெற்புடையருங்குவடொடிந்துகிட லேழினுக்குமயலின்புடைவிழுந்தன்தண், வாமநற்புணரிபொங்கியலைசென்றமரர் மாதர்பொற்றுகிலனைந்திடவெறிந்துளதரோ. (கக)

பூழிபட்டதிசையெங்கணுநெடுங்கிரிகள் பூளைபட்டபடியம்புவிமறைந்தவளை, யாழிபட்டபெயர்வண்கிரிகுலைந்துரகராகுலச்சலதிகண்டிடவியங்கியொளிர், மாழைபட்டபுவியெங்கணுநடுங்கியுயர் மாமறைப்பிரமனுங்கடையுகஞ்செய்பெரு, மூழிபட்டதுகொலென்றுதளரும்படியி னேதைமிக்ககலுழன்சிறகசைந்தபொழுதே. (கஉ)

வாயுவுட்கவருசெங்கதிருமஞ்சவட வானலக்கனலவிந்திடவடுஞ்சமனு, மேயவெற்றிமதியுந்தலையிறைஞ்சவுபரேசிலுற்கைகளுதிர்ந்திடவெதிர்ந்தமரர், நாயகக்குரிசில்வைகுபதிசென்றளவி லுகருட்கியடல் வெஞ்சினமிகுந்துமுனி, சேயிலைப்புடை வனைந்துருமினும்பெரிது சீறிநற்சமர்புரிந்தனரருந்திறல்கொடே. (கங)

வேறு.

மழுவினாற்சிலர்வன்கதையாற்சில
ரெழுவினாற்சிலரீட்டிகளாற்சிலர்
கொழுவினாற்சிலர்கூர்ங்கணைமாரிகள்
பொழிவினாற்சிலர்போர்புரிந்தாரரோ. (கச)

மாகர்வந்துவளைந்திடவேமன
வேகமென்னும்வியன்கதியாளனும்
பாகவான்சிறைவானிற்பரப்பியே
மேகமென்னவிரைந்தெதிராயினான். (கரு)

தொட்டவான்கணைசூலங்கடோமரம்
பட்டுதிர்ந்துபடும்பொடியானவா
லட்டதிக்கினதிபரிரிந்தனர்
மட்டிலாவவன்வன்சிறைக்காற்றினால். (கசு)

தென்றிசைக்கணிற்றேவருமேற்றிசை
நின்றதிக்கினிருபருங்கீழ்புறம்
வென்றியெண்மர்விபாகரராதியோர்
சென்றுவீழச்சிறகசைத்தானரோ. (கஎ)

ஒருவர்போமிடமொருவருணர்ந்திலர்
செருவினின்றவர்சிந்தியபின்னரின்
மருவுநல்லமுதந்திகழும்வயிற்
பொருவிறந்தவன்போய்ப்புகுந்தானரோ. (கஅ)

அந்தநல்லமுதத்தையளித்திடுஞ்
செந்தழற்பிழம்பொன்றுசெறிந்ததால்
வந்தவேதியன்மைந்தனுணர்ந்துபோ
யிந்தவானதிநீர்கவர்ந்தெய்தினான். (கக)

விடுத்தபோதினில்வேலைகளேழினு
லடுத்தவூழியனலையவித்தல்போன்
மடுத்தசெந்தழன்மாறினமீளவுந்
தடுத்ததாங்கொருசக்கரமென்பவே. (உ0)

சேமரூபஞ்செறிந்துளதெள்ளமு
தேமரூபக்கலசத்திடைப்புக
வாமரூபமொடுக்கிவயங்கணுக்
காமரூபிற்கடந்தனனாழியை. (உக)

வெற்றியோடமுதத்திடைமேவனு
முற்றதாலிரண்டுத்தமவாளராச்
சுற்றிநின்றருகெய்தருந்தொன்மையைக்
கற்றவன்கண்டுகண்சிவந்தானரோ. (உஉ)

உரகமங்கிரண்டுந்தலைவாலுற
விரகிற்காலின்மிதித்துக்கிழித்தபின்
சரதமிக்குளதாமரைமாலையான்
கரதலத்தமுதேந்திக்களித்தனன். (௨௩)

மீண்டுவானின்மிளிர்ந்தவனேகலும்
பூண்டவிந்திரனெய்திப்பொறுத்திலன்
றூண்டினன்வயிரந்தனைத்தோன்றலைத்
தீண்டியோர்பொற்சிறைமயிரட்டதே. (௨௪)

அனையகாலையிலண்ணலுக்கோதுவா
னினைவிலாதெனைநீவந்தடர்ந்தனை
முனைவனத்தியுமுன்னவனேவலு
மனதிலுன்னியளித்தனனோர்மயிர். (௨௫)

அன்றுநின்படையாற்றலுக்கீந்திலேன்
சென்றுவைகுதிமீண்டெனச்செப்பியே
குன்றுபோல்பவன்கொற்றமொடேகினா
னின்றுபோகிநினைந்தனன்மாலையே. (௨௬)

வேறு

செறிந்தபசுந்துகிறிகழமகுடமோங்கச்செங்கையொளிரைம்படையுந்தேசுகாட்ட, நிறைத்தபடலையந்துளவுகமழக்காதி னிகரற்றகுண்டலங்கள்சுடர்களெய்ப்ப, வெறித்தகவுத்துவமணிமார்பொழிலிலோங்க விமையவருமுனிவரருமிறைஞ்சியேத்தக், குறித்தகருடனுக்கெதிர்வந்துதித்துநின்றான் குவலையமோர்பதத்தளந்தகொண்டல்வண்ணன். (௨௭)

கைத்தலமாமலர்குவித்துவணங்கிவாழ்த்திக் கருடனெதிர்நின்றளவிற் கரியமேனி, முத்தனிதுமொழிகின்றானருளாலன்பான் முறைமைநெறிவலிவேகமுந்தன்மைதன்னா, லுத்தமநின்னிகரொருவரிலையென்றுன்னி யுனைநோக்கவந்தெழுந்தோமுனக்குவேண்டுஞ், சுத்தமுறுவரங்கேட்கிற்றருதுமென்னத் தூயனுந்திறல்வயினதேயன்சொல்வான். (௨௮)

நிலமதனினெறிமுறைமைதவறேனாகி நினதன்புமறவாமனெடுநாள்வாழக், குலமுகிலேயளித்தியெனவளித்தேனென்று கூறியொருமொழிபுகல்வான்குமரநீயிங், கிலகுநமதூர்தியுமாய்க்கொடியுநீயா யிருத்தியுனக்கெதிரொருவரில்லையென்றான், சிலைமதனனிகர்வனப்பான்மகிழ்ந்தவ்வாய்மைச் சிரங்கொண்டானிந்திரனுஞ்சேர்ந்துசொல்வான். (௨௯)

அதிதிதருமகனானீவிநதைமைந்த னத்தனிருவருக்கொருவனாகுமேலெம், பதியனாகியிமையவர்களுயிர்கொண்டேகும் பரிசென்னவமுதேந்திப்படர்தனன்றோ, மதியுடையையறனுடையைநெறிவழாத வளனுடையைநீயுணராவகையொன்றுண்டோ, புதியவமுதெமக்கன்றிப்பிறர்பானேரிற் பொருளாமோவெமக்குதவிப்புகழ்கொளென்றான். (௩0)

வாசவன்சொற்செவிபுகலுங்கருணைமேவிமலர்க்கரங்கள்குவித்தரியமகத்தின்வேந்தே, பேசுமெனதன்னைகுறை தவிருமாறுபின்னவள்கத்துருவைமுதற்பெற்றதொல்லை, மாசுணாற்குழுவினருக்கமுதமீவான்வந்தனனென்வாய்மைபிழைவரினுநன்றே, வீசுபுகழ்பெறவின்றோலவாற்றிவெறுத்திருப்பதமிமதிமோவிளம்பாயென்றான். (௩க)

பருப்பதங்கள்பிரசண்டவேகக்காற்றூற்பறக்கின்றபூளையெனப்படுத்துமாற்றற், பெருப்பனையவிருபுயத்தானுறைத்தமாற்றம்புரந்தரன்கேட்டோருறுதிபுகறலானன், விருப்புறுமீயமுதவருக்களித்துன்வாய்மைவிளக்கினைதன்னையொடுமீண்டபின்னர்த், திருப்பியமுதினைக்கவர்வனவர்க்கெய்தாமற்றேவர்கட்காவிவ்வாறுசெய்கவென்றான். (௩உ)

அதற்கிசைந்தேபன்னகவயிரிநன்றென்றருள்புரிந்தான்வாசவனுமகமகிழ்ந்தே, மதுத்தொடையாய்நின்றுணைவனனதன்றிமற்றுமெனக்கினிநண்புமவ்வியுநீயே, கதித்தவரம்வேண்டுவதுகழறிலீவன்கட்டுரைத்தியெனமொழிந்தான்கலுழன்கேட்டே, விதிக்கதிறற்கத்துருவையளித்தமைந்தர்விரைந்தெனக்கேயுணவாகவிளம்பாயென்றான். (௩௩)

அவ்வண்ணம்வரமுதவியாசிகூறியமரரெலாமிகமகிழ்ந்தாரரியுமீண்டான், மைவண்ணமகவானுமருவமாகிவரவயினன்புவிசார்ந்தேயமுதங்காட்டி, யிவ்வண்ணத்தாயேவலகற்றியாங்களுறுதருப்பைமிசையமுதமுய்த்துநீவிர், மெய்வண்ணஞ்சுசியாய்வந்தருந்துமென்றேவிளம்பியிவனன்னையுடன்மீண்டுபோனான், ()

மற்றவனுங்ககன்றிடலுஞ்சேடனாதிமாசுணங்கணீராடிவருவான்போனார், கற்றமகபதியணைந்தேயமுதந்தன்னைக் கவர்ந்தகன்றுககனத்திற்காவலாக்கிக், குற்றமறவினிதிருந்தான்பின்னர்மீண்டகுமரரமுதினைக்காணார்குறைந்துவாடியுற்றதருப்பையைநாவான்மேவிநீவவுரகங்கட்கிருநாவென்றுற்றதம்மா. (௩௫)

அசும்பிருந்தபுத்தமுதுநாங்கலாலேயரும்புனிதந்தருப்பையுமன்றுயதேயால், விசும்பளவுமுயர்ந்தமுடியுரகராரும்விம்மிதராய்மனம்புழுங்கிவெறுத்திருந்தார், பசுந்திருமால்பதாகையுநற்பரியுமாகிப்பாப்பசனஞ்செய்துமறைபனனுநிற்கும், கசிந்தகடன்முறையியற்றிக்கலுழன்வாழ்ந்தான்காதைபடித்தவர்வீடுகண்டோர்தாமே. (௩௬)

அமுதங்கொணர்ந்தசருக்க முற்றிற்று

ஆ செய்யுள்-௩௫அ.

# சலற்காரச்சருக்கம்.

---

இன்னவாறுலாமிருந்துநோக்கியே
மன்னுசேடனுமாசிலாதவன்
சொன்னதீயர்தந்துணையைநீங்கியே
பொன்னின்மால்வரைப்புறத்தின்மேவினான். (க)

எண்ணிறந்தநாளிருந்தவத்திடை
நண்ணுமொல்லையினான்முகத்தவன்
பண்ணிமனைத்தியேபரிந்துசெம்மனின்
னெண்ணமேதுகொலீதுமென்றனன். (உ)

வட்டவார்கழல்வணங்கியென்னுடன்
றுட்டர்தோன்றியேதூயதாயுடன்
மட்டிலாவலிவயினதேயனை
யிட்டமின்றியேயிடர்படுத்தினார். (ங)

ஆதலாலவரன்பைநீக்கியே
காதலாற்றவங்கருதிவைகினே
னீதலாற்பிறிதெண்ணமில்லையென்
றோதலாற்களித்துரைப்பன்வேதனே. (ச)

வேறு.

நன்றுநினதுண்மைநெறிஞானமுணர்வுற்றோ
மின்றுமுதலன்னவரிலெண்ணல்கடனன்றால்
வென்றியுலகேழுமிறற்புயமிசைக்கொண்
டொன்றுறநிலைக்கொடொழிலுன்வயினளித்தேம். (ரு)

பாதலமணைந்துலகுபாரமதுதாங்கி
மீதுமறையாதிகலையாவையும்விளக்கி
நீதியொடுவாழ்திவலிநீடுமுவணற்கே
யோதுபகைநின்வயினுறாதெனவிசைத்தான். (சு)

அன்னவனுநீயிமனமொன்றியருணண்பாய்
மன்னுதிரெனப்பலவரங்களுமளித்தே
யுன்னரியபொற்சிறைகொளோதிமமுகைத்துத்
தன்னுலகடைந்தனன்விதாதவெனுநாமன். (எ)

மாசறுபணாமணிவயந்தருசிரங்க
ளாசகல்வாயிரமடுத்தவனுமங்கண்
வீசுமலர்வள்ளநீருமாறுலகமெல்லா
மோசைமொருசென்னியினிருத்தியவனுற்றான். (அ)

சேடனகலக்கொடியதிவிடமிடற்றோர்
பாடமைகொள்வாசுகிமுதற்பலருமுன்னி
நீடுதமர்தன்னைமுதனேர்ந்துடையசாப
மோடும்வகைசிந்தனைசெய்துற்றனர்களோர்நாள். (௯)

## வேறு.

சிவத்தினுன்மிகுந்தவன் றகுதிவாய்மையான்
பவத்தினைநீக்கியபரமமூர்த்தியான்
சிவத்தினைமறந்திலாச்செல்வம்வேண்டினேன்
கவித்துளபெயர்சலற்காரவேதனே. (௧௦)

அன்னவன்பிரமசாரியத்தினன்பின்றற்
றன்னியற்கடனெலாந்தாங்கிவைகுநாள்
முன்னவன்குரவர்மூவெழுவர்தங்களை
யந்நிலைநரகிடையமிழ்த்தவேண்டியே. (௧௧)

அறப்பெருங்கடவுடானறிந்துதள்ளலாற்
சிறப்பிலோர்வடகருச்சினைவிடுத்தனன்
மறுக்குறப்பற்றியேவாவல்போலவே
குறிப்பருநிரயத்திற்கெதிர்குலாவினார். (௧௨)

மாதவமிகுசலற்காரமாமுனி
பாதபத்தருகினிற்படர்ந்துநோக்கலு
மேதிவரித்தவமிழைத்தலென்றுணர்ந்
தோதுவானவர்களுக்குயர்கைகூப்பியே. (௧௩)

வட்டத்துடைவிழுதுறவாவல்போன்மிடைந்
துடற்றியவித்தவத்துறுதிதேர்கிலன்
றிடப்படவுரைத்திரேற்செய்துமித்தவங்
கடைப்பிடிமுனிவர்காள்கழறுவீரென்றான். (௧௪)

வாசகங்கேட்டலுமகிழ்ந்துமற்றவர்
பேசியதவமிதுவன்றுபெற்றிகொ
ளீசனையனையவனெமதுகால்வழி
மாசிலாக்குமரனிப்புவியில்வாய்த்துளான். (௧௫)

அன்னவன்பெயர்சலற்காரனுகுமான்
மன்னுமில்லறத்துடைமாண்புதாங்கிலன்
சொன்னவன்குரவரேந்தொலைவின்மாநர
கின்னிடைதள்ளினரிதனைப்பற்றினேம். (௧௬)

கருப்பையொன்றிச்சினைகறித்துநின்றதால்
விருப்புடன்றுணிந்தினிநிரயம்வீழ்குவோ
மிருப்பதாமெஞ்செயலென்றுகூறினார்
பொருப்புறைபவனிகர்புனிதன்கூறுவான். (௧௭)

ஐயநூங்குலத்தினேனடியனுருமால்
வெய்யதென்றில்லறம்விருப்பமுற்றிலேன்
றையலைவேட்டுநூந்தாழ்வுநீக்குவன்
செய்யுமாறொருவரஞ்சிறந்தளித்திரால். (கஅ)

என்பெயர்தன்பெயரேகநாமமாம்
வன்புயர்கற்பணிமங்கையுண்டெனி
லன்புடன்மணமுடித்தருள்வனல்வர
மின்புறவருள்செய்வீரென்றுபோற்றினன். (ககூ)

அன்னவரகமகிழ்ந்தனையபேருடை
மின்னினையெய்துநீவேட்டுவாழ்கெனச்
சொன்னலமுறவுரைத்தினிதிற்றாண்டினூர்
பின்னவர்துயர்தவிர்ந்துலகம்பெற்றனர். (உ0)

மாமுனிதன்பெயர்மங்கைநாடியே
பூமிசையெய்துநாள்புயங்கநாயகர்
தாமிருந்துசாவியதல்த்தையண்மினன்
கோமுனிதனைப்பணிந்துளங்குளிர்ந்தனர். (உக)

அன்னவருடன்வருமணங்கனுடிறன்
மன்னியவிறற்சலற்காரைமங்கையா
மின்னனையாள்வடமீனையொப்பவள்
பொன்னடிதொழுதந்தமுனியைப்போற்றினாள். (உஉ)

ஆரிவளாறைருவீரறியவென்னலு
நேரிலாவாசுகிநின்றுகூறுவான்
சீரினூலெம்முடன்சிறப்பிற்றோற்றிய
பேரியலுடைச்சலற்காரைப்பெண்கொடி. (உந)

என்னலுந்திருமுனியிரங்கியன்புடன்
பன்னருங்கற்புடன்பண்புநோக்கியே
கன்னியாமோவெனக்களிப்பினுமெனத்
தன்னுளமகிழ்ந்திதுசாற்றன்மேயினன். (உச)

தென்புலத்தோர்துயர்தீர்க்கவேண்டியா
னென்பெயர்க்கன்னியையிசையும்வேட்கையாற்
புன்புலத்திடையெலாம்புகுந்துதேடினேன்
வன்புறத்தினிலிவள்வைகல்காண்கிலேன். (உரு)

கூடியபொழுதலாற்குறித்தியற்கையா
ஞடியவளவினினயந்துசேருமோ
தேடியதீதுவெனச்செப்பவன்னவர்
வாடியதிருவுளமகிழ்ந்துசாவினூர். (உசு)

வானவர் பூவயன்மருங்குநண்ணியே
தேனமர்குழலிமுன்செய்தசாபத்தா
லீனமாயரவெலாமிறந்திடாவகை
தானினியோர்வரந்தாவென்றேத்தினர். (௨எ)

அன்னவனோதுவானவருடன்வருங்
கன்னியையவள்பெயர்கவினுமாதவன்
பன்னியாயளிக்கிலோர்பாலன்றோற்றியே
துன்னிவர்சாபமுந்துடைப்பன்போமினே. (௨அ)

என்றுமுன்பிதாமகனிசைத்துளானென
வன்றொருசொற்கனவதனிற்கேட்டுளே
னின்றிவற்கப்பெயரேகமீவதே
நன்றெனவோர்பெருநாகங்கூறிற்றே. (௨கூ)

ஆதரவுடன்பணியரசரவ்விடை
மாதவனடிமலர்வணங்கியேத்தியே
பேதையையளித்தனர்பெயர்கொண்மாமுனி
காதலியெனக்கொடுகானினண்ணினன். (௩0)

சூழலிற்சென்றுதன்றுணைவியாளுடன்
வாழுநாளெனதுசொன்மறுத்தவக்கணந்
தாழுறநினைவிடுத்தகல்வன்றுங்கென
வேழையோடுரைத்தினிதிருக்குநாடனில். (௩௧)

அனலியென்றுயிரெலாம்வணங்குமாரியன்
றனியறுமத்தவெற்பதனிற்சார்வுழிப்
புனலிடையருக்கியமளிக்கப்போயினு
ரினிதுடனுறுமறையோரியாருமே. (௩௨)

வாசுகிதங்கையைமணந்தகோமுனி
நேசமாந்துயிலிடைநிகழும்வேலைகண்
டாசறுதேவிவந்தருகுசார்ந்தனள்
பேசிலன்முனிவரன்பின்னொன்றெண்ணினள். (௩௩)

மெய்தருபாற்கரன்வேலைமூழ்குவா
னெய்தினன்மேல்புறத்தெழுந்திலான்முனி
செய்திறன்றெறிகிலனுணர்த்திற்சீறுமோ
பெய்துணர்த்தாவிடிற்பிழையென்றோதுமோ. (௩௪)

எனமனந்தளர்ந்தனளிரவிநீங்கிடிற்
புனிதனுயகன்றவம்பொய்க்கும்போலுமாற்
றுனிவுறினும்வினைசூழினும்நல
னெனநினைந்தடிகளையேந்திப்பற்றினள். (௩௫)

விழித்தனன்மாமுனிவெருவிநின்றிடு
மொழிக்கிளிவணங்கலுமுனிவுகூர்ந்தனன்
பழிப்பறுகற்பினாய்பயனென்றின்றியே
விழித்துயின்மாற்றியமாற்றமேதென்றான். (௩௬)

பாற்கரன்மேற்றிசைப்பரவைமூழ்குவான்
றீர்க்கமாயடைந்தனன்றேவநின்னுழை
யேற்பவரருக்கியமீயவேகினார்
நாற்றிசைத்தொறுந்தொறுநயந்தபுள்ளினம். (௩௭)

ஆதலாற்றுயிலுணர்த்தாமல்வைகிடின்
மாதவநினக்கினிமறஞ்செனிக்குமென்
றேதமென்றறிகிலேனெழுப்பினேனெனக்
காதலிதனக்கிதுகழறலாயினான். (௩௮)

பேதைநீயுணர்கிலைபெட்பிலென்றுயில்
போதரவுணர்ந்தியான்புனலளித்தலா
லாதவனேகுமோவறிவுசிந்தினாய்
மீதுரைப்படிவனம்விரைந்துசெல்வனால். (௩௯)

என்றுரைதந்தணனெழுந்துசேறலு
மன்றவளயர்ந்தவனடியிற்றாழ்ந்தெனக்
கொன்றியகடைப்பிடியுரைத்தியென்னலு
நின்றுளமுருகியேநினைந்துகூறுவான். (௪௰)

வாரணமருப்பெனவளர்செழுந்தனத்
தேரணியல்குலாய்கேட்டிசீரியோன்
காரணமூர்த்தியையனையகாட்சியான்
சீரணிதிருமகனுதரஞ்சேர்ந்துளான். (௪௧)

அன்னவனின்றனையளிப்பனவ்வள
வுன்னுநின்றுயகமுற்றிருத்தியென்
றின்னவான்முறையெலாமெடுத்தியம்பியே
சொன்னநன்முனிதவச்சூழலேகினான். (௪௨)

பாட்டளிதுதைந்தெழுபதுமமாலைசேர்
நீட்டியகருங்குழல்சூழனீங்கியே
பூட்டியதுணைவர்பாற்புகுந்திவ்வாறெலாங்
காட்டியாங்கன்னைபாற்கசிந்திருந்தனள். (௪௩)

கருவளர்ந்தொருபெருங்கரும்பின்மணி
வருமியலெனவொருமைந்தன்றோன்றினான்
றிருவளர்முத்தலந்திகழ்வுளார்க்கெலாம்
பெருமிதமெய்தியபெற்றிபோன்றதே. (௪௪)

வந்தமைந்தனையெடுத்துவந்துமாதுலர்
சிந்தைக்களிப்புறக்கடன்செலுத்தியே
கந்தனென்றமரர்கண்களிப்பமாமறை
தந்துவுந்தரித்தனர்சமயநோக்கியே. (சரு)

மாதவர்யாவரும்வந்துகூடியே
வேதனத்திகனெனும்பெயர்விளம்பினு
ரோதினன்மறையெலாமுயர்வில்வைகினுன்
மேதினிக்கிளநிலாவிம்பமென்னவே. (சசா)

அப்பெருங்குமரனைலன்னைசாபமிங்
கிப்புடைதவிருமென்றெண்ணிவைகினுர்
செப்பியபிணிக்குலவரசர்செம்மனி
யிப்பொழுதம்மகமியற்றவேண்டுமால். (சஎ)

என்னவேயுதங்கனுமிருடிகூறலுஞ்
சொன்னசொற்கேட்டிறைதுணிவிற்கூறுவான்
மன்னுமென்மாட்டொருகுற்றம்வைத்திலார்
தன்னையெவ்வணங்கொலைசமைத்தலென்றனன். (சஅ)

பிழையவர்செய்துளார்மறந்துபேசினு
யிழுதெனுமனமுடையிறைவனும்பிதாக்
கழிவிலாவாருயிர்கவர்ந்ததீயர்தம்
பழிதவிராதுறிற்பண்பிற்ருகுமோ. (சகூ)

கேட்டிநீமன்னமுன்கிளர்ந்தநின்பிதா
வீட்டுறுகாதையைவிளம்பக்கேளெனச்
சேட்டிளம்பரிதிபோற்சிவந்தசிந்துரந்
தீட்டியநுதலினுன்செப்பன்மேயினுன். (ருo)

சலற்காரச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - சாஅ.

---

உ

# பரீட்சித்துச்சருக்கம்.

---

குருகுலத்தரசர்கோமான்குரைகழற்காலேயொன்னூர்
மருமலர்ப்பதத்திற்றூழுமறமுடைக்கூர்வைவேலான்
திருவளர்பரீட்சித்துந்தைசெகமெலாம்புரக்குநாளிற்
பெருவலித்தானேயோடுங்கானகம்பெயர்ந்துசென்றான். (௧)

கரியரிகேழலெண்குகடமைமான்விலங்கின்கூட்ட
முரிபடக்கணைகளோச்சிமுயற்சியாலுலவுங்காலை
வரிநெடுந்தூரமோடமன்னனுந்தொடர்ந்துசென்றான்
கிரிமுழுதுருவியோடிமறைந்ததுகெடாதவேங்கை. (௨)

முயற்சியால்விட்டுநீங்கான்மன்னவன்றேடும்போதிற்
பயிற்சியான்சமீகனென்னும்பாவனன்றவத்தில்வைக
வியற்கையால்வணங்கியேத்தியிவ்வொருவிருகம்வந்த
தயற்செல்க்கண்டதுண்டேலறைகவென்றரசன்கேட்டான். (௩)

உரைத்திடாவிரதங்கொண்டோனூமனுத்திருந்தபோதில்
விரைப்புதுமன்றன்மார்பன்வெகுளியாலொருசார்வீழ்ந்த
திரைத்தனியுரகங்கண்டேசிலேமுனேதன்னிலேந்தி
வரைப்புயன்களத்திற்சுற்றிமன்னவனகன்றுபோனான். (௪)

போனவன்விருகங்காணன்பொள்ளெனவிரைந்துமீண்டு
தானணிசேனேயோடுந்தன்பெரும்புரத்தைச்சார்ந்தான்
கானிடையிருந்தகொற்றக்கலேமுனிகாணுனென்றும்
வானுயர்தவத்தினுற்றுன்மாசுணமாலேயோடும். (௫)

அன்னவனளித்தமைந்தனருந்தவச்சிருங்கியென்போன்
பின்னொருசூழற்றங்கிப்பிரமனேமனதுட்கொண்டு
மன்னூநற்றவஞ்செய்வான்பான்மாதவனொருவனெய்தி
யின்னதுபுகன்றுன்மைந்தனியம்பருஞ்சீற்றங்கொண்டான். (௬)

தந்தையர்க்கின்னல்செய்ததராபதிநாளோரேழின்
முந்துதக்ககன்வாய்ப்பட்டுமுடிந்திடவெனச்சபித்தே
யந்தணரோடுந்தந்தையருகடைந்தரவைநீக்கி
யுந்தனேபுரிந்துசாபம்வழங்கியதனேத்துஞ்சொற்றான். (௭)

அத்தனுந்துணக்கென்றேங்கியலகிலாவுலகங்காக்குஞ்
சத்தியவாய்மைமிக்கதண்மதிக்குலத்துவேந்தை
பித்தகனெனவுன்னுமல்வெறுப்பரோவேட்டம்போந்தோர்
மெத்துடையவரின்றேமாமறையுணர்ந்திலாயோ. (௮)

பொறையினுமறிவுசார்ந்தபுலமையென்பதினுநோரா
யிறையவோர்வேந்தருண்டோவையநீயறிவிலாமற்
சிறுமறுவறிவினாலேசெம்மலைச்சபித்தாய்மீட்டி
நிறைவுறுமுலகமோங்கிநீதியுமுளதாமென்றான். (௯)

ஆரணமுனியேநின்னையவமானமியற்றினனென்
றேரண்மனம்பொறுமலிசைத்தனன்சாபமீதே
தாரணிதனின்மீட்டென்பாற்றவிர்த்திடுமாறுகூடா
காரணமிருந்தாலன்றிக்கறுக்குமோசிந்தையென்றான். (௧௦)

அவ்வுரைகேட்டதந்தையடியவர்சிலரைக்கூவி
வெவ்வழற்கதுவுங்காலவேலினன்பக்கமெய்தி
யிவ்வுரையனைத்துமோதியின்றுதொட்டேழுநாளுஞ்
செவ்வையினிருந்துபாந்தள்சேர்ந்துதீண்டாதவண்ணம். (௧௧)

காத்திடவென்றுகூறிக்கசிந்துமீண்டடையவென்னப்
பார்த்திபனருகுசார்ந்துபகர்ந்தனர்நடந்தவெல்லாம்
வேத்தவைநடுவண்வைகும்வேந்தனும்வியந்துசூழு
மாத்தவர்குழாத்தினோடும்வயம்பெறவுசாவினானே. (௧௨)

விதிதனைக்கடக்கலாற்றுதென்றுளத்தெண்ணிமீண்டு
மதிவலாருரைத்தவண்ணம்வாரிதிநடுவண்வண்மைப்
பதிகொளுந்தறியொன்றுற்செய்பன்மணிமாடநாப்பண்
டுதிதரவாறுநாளுமிருந்தனன்றோன்றன்மாதோ. (௧௩)

ஏழெனுந்தினம்வந்தெய்தவிணையறுதக்ககப்பேர்ப்
பேழைகொள்பாந்தள்வேந்தன்பெருந்தவன்சாபமோர்ந்தே
வாழுமன்னவனைத்தீண்டவல்விரைந்தேகும்போது
தாழைவானளவுநீடுந்தண்ணிழற்றங்கிநின்றான். (௧௪)

காசிபனென்றோர்வேதன்கலைவலான்வறுமைபூண்டோன்
பெசுமிவ்வுரைகள்கேட்டுப்பெரும்பணிதீண்டிற்றேனு
மாசறவிடத்தைநீக்கிவரும்புகழ்தருமமத்த
நேசமாய்ப்படைப்பனென்றேநிருபன்பால்வருவதானான். (௧௫)

மறையவன்வரவுதன்னைவாசுகிக்கிளவலோர்ந்தே
நிறைவுறவிருத்தவேடநீதிமாமுனிவனேபோ
லுறுதனதுருவந்தாங்கியொருவனையெதிர்ந்துநீயிங்
கிறையுழைவருவதென்னேவியம்புதியெனலுஞ்சொல்வான். (௧௬)

விடங்களையரிக்குமீசன்விளம்புமந்திரங்கற்றுள்ளேன்
படந்திகழ்நாகங்கவ்விப்பார்த்திபனிறப்பதோர்ந்தே
யிடந்தனிலடைந்துநீக்கியிருந்தனங்கொள்வான்செல்வேன்
றடந்தனிலடைந்தேனென்றான்றக்ககன்சாற்றலுற்றான். (௧௭)

ஈசனாங்கொருவனன்றியெம்முடைவிடந்தீர்ப்பாரார்
வாசுகிக்கிளையோனானமாசுணம்யானேகண்டாய்
வீசிவானளவுயர்ந்தவிருக்கநுண்பொடியதாகப்
பேசியான்றீண்டிவீழ்ப்பன்பெருஞ்சினைவடத்தைமன்னோ. (௧௮)

முன்புபோன்மரனுண்டாக்கிமுயற்சியினிறுவுவாயேல்
வன்புடைநினதுவாய்மைமாசுறுதென்றுகொள்வ
னின்புடையுளதோவிந்தநீர்மைக்குவிடயமென்றான்
பொன்பெறுமுனிவனவ்வாறியற்றுதிபொருந்தியென்றான். (௧௯)

வேதியனுருவநீங்கிவெவ்விடநாகமாகிப்
பாதபந்தன்னைத்தீண்டப்பரந்ததொன்மரஞ்சுருண்டே
மாதவன்முன்னர்நீறாய்மாய்ந்ததுமுனிவனோக்கி
யோதுமந்திரஞ்சஞ்சீவித்துயர்மரமுன்போற்செய்தான். (௨௦)

இலைதளிர்கனிகாய்முன்போலிடருறாதெழுந்துநிற்பக்
கலைமுனிதனைவியந்துகடியமாசுணமொன்றோது
நிலையுளாய்நின்னாலாகாநெறியிலையெனினும்வேதா
தலைமிசைபொறித்ததார்க்குந்தவறுமோதவத்தின்மிக்கோய். (௨௧)

முனிவரனிட்டசாபமொழிபழுதெய்தில்வேத
மினியொருநெறியுஞ்சீருமியம்புதறக்கதாமோ
குனிசிரத்தவனாய்மீடல்குரவர்கட்குயர்வதன்றே
வினியுனதிருக்கைசேறியிறையிறந்திடுதறிண்ணம். (௨௨)

ஆதலாலுனக்குவேண்டுமரும்பொருடருவன்மீண்டு
போதுதிவேதவென்றேபுகுந்தபன்னாகங்கூறக்
காதலாலிசைந்துமீண்டுகனகங்கொண்டவனூர்புக்கான்
பாதபநிழறீர்ந்தாழிபரந்ததுபாந்தண்மன்னோ. (௨௩)

அப்பெருந்தருவின்மீதினந்தணரடைகெர்ய்துற்றோர்
செப்பரும்விடத்தான்மாய்ந்துசெழும்பொடியானார்மீள
முப்புரிநூலான்றன்னான்முன்புபோற்றோன்றிமீண்டு
செப்பினாருலகினென்றேதிருமுனிபின்னுஞ்சொல்வான். (௨௪)

வேறு.

வந்தகொடியவிடநாகமறையோனுருவாய்ச்சம்பீரந்
தந்தகனியொன்றினைத்தாங்கித்தளத்தினரசற்களித்திடலு
மிந்தவிரகையுணராமலிறைவனேந்திமோந்திடலான்
முந்தப்படிவம்புனைந்தவன்றன்முகத்திற்றீண்டிமறைந்ததுவே. (௨௫)

நீங்குமரவந்தீண்டுதலானிருபனயர்ந்திவ்வுலகனைத்தும்
ாங்கினல்றவுயிர்துறந்துபரமபதத்திற்குறியானான்
வீங்குதுயராலமைச்சர்குழாம்விளங்குகடன்கண்முடித்தபின
ராங்குன்றனையேயிறையெனக்கொண்டமர்ந்தார்நடந்ததிதுவென்றான். (௨௬)

சொற்றமுறையாற்றக்ககன்செய்தன்பமுணார்ந்தாயவன்கிளைஞர்
முற்றவவனோடுடன்மடியமுடிக்கிமகத்தைவிரைந்தென்றே
கற்றமுனிவனெடுத்திசைப்பக்கமுத்தபணியின்குலமுழுது
மிற்றுத்தனலிற்பொடிபடுப்பானிருந்தோர்வாய்மையிசைக்கின்றான். (௨௭)

பரிட்சித்துச்சருக்க முற்றிற்று.

ஆ௲ செய்யுள் - ௪௱௩௫.

---

## சர்ப்பயாகச்சருக்கம்.

---

புயங்கவானோர்குலமுழுதும்புனிதமகத்திற்பொடியாக
வியந்துபுரியுந்தனிவேள்விவிதிகளனைத்தும்விளம்புமென
வயங்கொளரசன்மறையோரைவணங்கிக்கேட்பமற்றவரு
மியங்கும்விதிகளுள்ளவெலாமிறைவற்கெடுத்துப்புகன்றாரே. (௧)

அவ்வாறிருந்துமகம்பயில்வானரியவபுட்டையெனுமாணாள்
செவ்வேல்விழியாளுடன்விரததீக்கைகுறித்துச்சிறந்ததனி
மைவார்கடல்போன்மகச்சாலைமணியாலமைத்தாங்குறுகலப்பை
வெவ்வேறமைத்துமாமறையோர்வேலைசூழமகந்தொடுத்தான். (௨)

வைசம்பாயர்சயமுனிவர்மறுவில்பரதர்வசிட்டரொடு
மெய்செய்வாதராயணராம்வேதமுனியைமுதலானோர்
செய்சவிருத்திவிசாசதராய்ச்செப்புங்குரவரெனக்கொண்டே
பெய்சமிதையோடிழுதுகுத்துப்பெருகுங்கனலைவளர்த்தானே. (௩)

மறையோர்பலர்மாமறைகூறமண்ணிற்றிரியுமரவெல்லா
மிறையோன்வளர்க்கும்பெருங்கனலினெய்திவீழ்ந்துமடிந்தனவாற்
குறையொன்றில்லாக்கத்துருவைகுமரர்வழியிற்சனித்தெழுந்த
முறைகொளரவினினங்களெல்லாமூழ்கித்தழலின்மாய்ந்தனவே. (௪)

கடைந்தவடிவேற்புரைகண்ணாள்கமழ்கத்துருவைதருமரவின்
மிடைந்தகொடியநெடுநாகவீரராருமாய்ந்தவிந்தா
ரடைந்துபோற்றுந்திறல்வல்லோரனந்தன்சேடன்வாசுகிநல்
லிடஞ்சேர்தக்ககனைமுதலாமிருநான்குரகமிருந்ததுவே. (௫)

அன்னவரையுமரும்மறைசென்றழைக்கும்போதுமனங்கலங்கி
யுன்னும்பாந்தடக்ககனுங்கொருவனிமையோரிறைபாற்போய்
மின்னுங்கதிர்மாமணிமுடியோய்வேந்தன்புரியும்வேள்வியினாற்
சின்னமுறுதவனைகாத்துச்செய்வேளாண்மையெனப்பணிந்தான். (௬)

உருகியிமையோர்பெருமாளுமுயிரேயெனினுஞ்சரணடைந்தோர்க்
கருளுமாறுமறைநெறியேயாமென்றபயமளித்தெடுத்து
வெருவலரசன்வேள்வியினால்விளியாவண்ணநினைக்காப்பன்
பொருவிலாதோய்வைகவெனப்புகன்றானவனுமிருந்தானே. (௭)

இரண்டாயிரம்யோசனையுயர்ந்தவெழில்மந்தரத்தையடிதொடங்கி
யிரண்டாயிரஞ்சுற்றுற்சூழ்ந்தேயிமையோரசுரர்குலத்துள்ளோ
ரிரண்டாயிருபாற்பிடித்தீர்க்கவெழில்சேர்தலையுநனிவாலு
மிரண்டாய்வளர்ந்தேயமுதீந்தோனிதனைநோக்கிச்சிந்தித்தான். (௮)

தாயானவண்முன்றுணிந்துரைத்தசாபக்கனலும்வினைக்காற்றுந்
தேயாத்தவத்தினரசனுடைச்சீற்றவிழுதுந்திறன்முனிவன்
றேயாப்பகையாஞ்சமிதைகளுந்தொடர்ந்தோர்மகமாய்வளர்ந்தெழுந்தான்
மாயாதுரகங்களினிவரேவாழ்வாரென்றேமனநொந்தான். (௯)

என்னேயிதனுக்கினிச்செய்கையெனவேநினைந்துதன்னிளைஞன்
முன்னாளுரைத்தசொன்னினைந்துமுதலீன்றவடன்னிடங்குறுகி
யன்னாயிதற்கேதுரையென்னவவளும்வெதும்பிவிழிகலுழ்ந்தாள்
பின்னேயுதித்தசலற்காரைபெருகுதுயரோடெதிர்நின்றாள். (௧௦)

வருந்தேலம்மநீயென்றேமடவாள்கலுழிதனைமாற்றி
யிருந்தேயிளையாடனக்கொன்றையிசைப்பானுனதுதிருமைந்தன்
பெருந்தேனிறைக்கும்வரைநாடன்பிறழுங்கொடியமகத்தெல்லை
திருந்தாமரைப்பூவடிநோவச்சென்றுற்றீருந்துயரென்றான். (௧௧)

விரைந்துபோந்துமகனோடுமீண்டுதுணைவனிருந்தேங்கு
மரந்தைமிகுமாளிகையடைந்தாளருமாதுலனுமவ்வளவிற்
சுரந்தவருணன்மருகனுக்குத்தொடர்ந்தசெயலின்முறையெல்லாங்
கரைந்தேதெரியவுரைத்தெம்மைக்காத்தியெனிலுங்கசிந்தானே. (௧௨)

முந்தக்கனலின்மடிந்தகன்றமுதல்வரன்றிமேலாக
விந்தப்புவியினினிமுதலாயிருந்தோர்க்கிடரொன்றெய்தாமற்
சிந்திக்கரியகுருகுலனுஞ்செனமேசெயன்பாற்சென்றிரந்தே
யந்தத்துயரமகற்றேனேலத்தன்றவமும்பொருளாமோ. (௧௩)

அஞ்சலிருமினெனக்கூறியருமாதவரெண்ணிலர்சூழ
முஞ்சிகாவிமரவுரிசீர்முந்நூலசையச்சடைதுளங்க
விஞ்சுதண்டுகமண்டலமும்விளங்குங்குரவரிருபாலு
மெஞ்சியடரமறைபொழியுமெழிலியனையான்விரைந்தானே. (௧௪)

வாசமலரினறுந்தொடையல்வரைமார்புடையமன்னவனூர்
தேசினியற்றும்பெருவேள்விசேர்ந்தான்றிறலத்திகனென்போன்
வீசுபுகழ்மாதவர்தமக்குவிரைந்துவணங்கிவேந்தனுக்கே
யாசிபுகன்றாங்கவன்பூசையதுகொண்டொன்றையறைவானால். (௧௫)

மறத்திற்புகழிற்றோள்வலியில்வாய்மைநிலையிற்றயாவதனி
லறத்தின்மகத்திற்றானத்திலரசினியலினருந்திருவிற்
சிறக்கும்வனப்பிற்பொறைசாந்தஞ்செம்மைமுதலாந்திறங்கடனிற்
குறிக்குநிகரில்பெரியோய்நின்குலத்தோர்தவமேதவமாமால். (௧௬)

தந்தைதனக்குப்பிழையிழைத்ததறுகணரவொன்றினுக்காக
விந்தவுலகினவனைத்துமெரியிற்கரியாய்விழச்செய்தாய்
சிந்தைகலங்கிச்சேடன்முதற்சிறந்தபெரியோர்திகைத்தயர்ந்தார்
முந்துனுளத்தின்படிமுடித்துமுடியாப்புகழ்கைக்கொண்டாயே. (௧௭)

தக்கபுகழ்சேர்பிதாமகனுந்தவஞ்சேர்கிரீடிசயிந்தவனை
யொக்கவுடன்சூழ்ந்துயிருண்பானுரைத்தோர்விரகான்முடித்திட்டான்
மிக்கமருமானீயவனில்விளங்கும்புகழ்கொண்டுரைத்தபடி
யிக்கோதலத்திற்செலுத்தினையாலிணையோவிசயனினியுனக்கே. (௧௮)

மாலேவந்தோருருவானமறைவல்வியாதமாமுனிநின்
பாலேயிருந்துமகமொன்றுபயிற்றினிசையாதுளதாமோ
வேலேயிலங்குகரதலத்தாய்வேதமுனிவரேனையர்சொல்
லாலேயழியுமீட்டெய்துமருள்சேருலகமொருமூன்றும். (௧௯)

அத்தன்மையராமகமியற்றுமரியவர்சர்கருத்தரெனி
லித்தன்மையவோவெதுமுடியாதிதுவோர்பொருளாக்கருதினையோ
முத்தன்மையருமிவணெய்தமுடிப்பதரிதோமூவுலகும்
வைத்தபிரமன்வாய்க்கடங்காவரம்பில்சீர்த்திபொருந்தினையே. (௨0)

ஆனபோதேயினிநின்மாட்டியானோர்கருமம்பெறவேண்டி
ஞானமுனிவருடனின்பானடந்தேனென்றானதுகேட்டு
மானவணியானுடனடுங்கிமற்றோன்றேசும்பேரறிவுந்
தானங்குரைத்தநல்லுரையுந்தன்னையுருக்கப்பணிந்துரைப்பான். (௨௧)

தவத்தரரசேநீயெனதுதனிநல்லுயிரைவிரும்பிடினு
முவப்பிலளிப்பனின்வாய்மைக்கொவ்வாதவருமுளர்கொல்லோ
நிவப்பிலுரைக்கவெனப்பணித்தநிருபன்றனக்குநெடுந்தூரஞ்
சிவக்கநடந்தபதத்துணையான்றிருவாய்மலர்ந்தேமொழிகின்றான். (௨௨)

வேறு.

தொல்லைவாளரவெலாந்தொலைந்துதீர்ந்ததா
லொல்லையிலிருந்தவர்க்குயிரையீவதே
சொல்லுமென்வரமிதுதொலைவினாளெலா
மெல்லைதீர்புகழினாயீதல்வேண்டுமால். (௨௩)

என்றிருகரங்கள்கொண்டிரந்துவேண்டலும்
குன்றுறழ்புயத்தினான்குழுவதாகிய
வென்றிவேதியர்தமைவியந்துநோக்கினா
னன்றெனவிசைந்தவர்நவிறன்மேயினார். (௨௪)

மூவரும்புகழ்ந்திடும்தன்மைவிஞ்சினேன்
ருவருந்தவச்சலற்காரன்றந்தவன்
றேவரும்புகழுமத்திகனென்றோதிய
பாவகனவன்மொழிபழுதுண்டாகுமோ. (உ௫)

சொன்னசொன்மறுக்கிலையையதூயவன்
மன்னுநின்பால்வரமாதவங்கணீ
முன்னமென்செய்தனைமுனிமொழிப்படி
தன்னிகராருமகந்தவிர்தியென்றனர். (உசு)

ஆங்கவரெண்ணமுமரியமாமுனி
பாங்குடைச்சிந்தையிற்பரிவுநோக்கியே
நீங்கினேன்மகமெனநிருபனோதினன்
றீங்கறுமுனிவரன்செருக்குற்றனரோ. (உஎ)

முன்னரிற்றூயவர்முடுகுந்தீயிடைப்
பன்னருமிழுதுகுத்தெடுத்துப்பற்பலர்
சொன்னமந்திரங்கடக்ககனைச்சூழ்ந்ததா
லன்னவன்வெருவிநாவுலர்ந்தழுங்கியே. (உஅ)

அச்சமோடவனமரேசரண்ணறன்
பச்சைமாமணித்தவிசதனைப்பற்றனு
மிச்சைநீத்தவர்களிவ்வியற்கையுன்னியே
பொச்சதோமறையெனச்சீற்றம்பொங்கியே. (உகூ)

வலிமையுமகந்தையுமாற்றியீர்க்கவென்
றலகறுமறைகளையிறையுமேல்வையி
னலனுறுதவிசையுநாகந்தன்னையு
மிலகுமிந்திரனையுமீர்த்துவந்ததே. (௩௦)

வானிடைசுழன்றெதிர்வந்துநிற்றலு
ஞானமாமுனிவரர்நலிதல்வேண்டிலர்
வானமீதவர்தமைவைகுமாறுசெய்
தேனையவிதிகளிலிருக்குமொல்லையில். (௩௧)

அத்திகனருளினலரசன்மாமகம்
பத்தியாய்விடுத்தலும்பயந்துறந்தவன்
சித்திரத்தவிசொடுந்தெக்ககப்பெயர்
குத்திரனெடும்புருகூதன்போயினன். (௩௨)

அரசனும்பூரணகுதியுமேனைய
விரைசெறிவிதிகளுமுடித்துவேதியர்க்
கிரசதங்கனகமுமிருக்கிலீந்தவர்
வரிசையினசிகள்வழங்கவைகினன். (௩௩)

மன்னனைவாழ்த்தியேமாதவத்தினற்
றன்னிகரற்றவன்றனையனுங்கவன்
முன்னுறத்தவிசிடையிருந்துமுதுணர்
பொன்னிகரத்திகன்புகறலாயினன். (௩௪)

வேறு.

மான்பெற்றகரதலத்தோன்புரிநூல்பெற்றான்மரகதம்போனிறம்பெற்றோன்சயனம்பெற்று, னான்பெற்றவயின்மகவானுயிரேபெற்றானுயர்ந்தசதுமுகத்திறைவாக்குயர்ச்சிபெற்றான், வான்பெற்றோரமுதளிக்குந்தாம்புபெற்றார்மண்பெற்றோர்தங்களுக்காதாரம்பெற்றார், யான்பெற்றவரமொன்றேயெனக்கின்றீந்தவிறைவநீபெற்றபுகழார்பெற்றாரே. (௩௫)

வேறு.

என்னவான்மொழிகளாலிறைமகிழ்ந்திவன்
பொன்னடிதொழத்தொழப்புனிதன்மீண்டுபோய்
மன்னுமாதுலருடைவருத்தநீக்கித்தன்
றன்னருமருந்தவச்சூழல்சார்ந்தனன். (௩௬)

ஆதலாலன்றுதொட்டத்திகன்பெய
ரோதினுமுரகமுற்றவரைத்தீண்டுறா
தீதலால்வெவ்விடமேறிற்றென்னினு
மீதிவன்பெயர்சொலமீண்டுநீங்குமே. (௩௭)

வாசுகியாதியோர்மகிழ்ந்துவைகினர்
பேசருமவர்கிளைபெருகிப்பின்னரு
மாசறநீடியததன்பின்மன்னனு
மோசைசேரவைப்புறத்திருக்குமோல்லையில். (௩௮)

சர்ப்பயாகச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-சஎ௩.

---

# சிறப்புப்பாயிரச்சருக்கம்.

அந்தணர்களாதுலர்களாருமகிழ்வெய்த
முந்துநெறிமன்னன்முறையாலினியபூசை
தந்தவர்விரும்பியதனங்கணினியீந்தே
வந்தனைபுரிந்தருள்வழங்கினன்விடுத்தான். (௧)

யாவருமகன்றபினாரின்னல்கெடவந்த
பாவலர்கள்சூழவுயர்பார்த்திபனிருந்தே
தேவர்முனிவோர்களொடுதென்புலவரின்ப
மேவுகடனாற்றியவன்வீறுபெறுநாளில். (௨)

நேயமுளசீடரொடுநீதிவலவாத
ராயணனடைந்திடவிராசனெதிர்கொண்டே
தூயவனடித்துணைதுதித்துறவணங்கி
யேயகடனீந்துதவிசின்புடையிருத்தி. (௩)

வந்தமறைமன்னரையும்வந்தனைபுரிந்தே
முந்துதவிசீந்தவர்முயற்சியருள்கைக்கொண்
டந்தணரிருந்தபினராரணமுரைத்த
சுந்தரமுனிக்கிவைதொடுத்தறைவதானான். (௪)

பாண்டவர்களும்புகழ்சுயோதனர்களும்பண்
டாண்டபுவியிற்கிளைஞராருமடிவெய்த
மூண்டமர்செய்தார்முடிவுமுற்றுமுணர்வோய்நீ
வேண்டிலைவிலக்கிலைவிரும்பினையரும்போர். (௫)

நின்றனதுசிந்தைதனினேயமிலதாகி
வன்றிறல்கொண்மைந்தர்கண்மடிந்திடலுணர்ந்து
மொன்றுமுரையாதவகையுற்றனைவிலக்கிற்
சென்றுமுடிவாரிலரிருந்தரசுசெய்வார். (௬)

வித்தகர்நிலத்தினைவிரும்பியவர்மாறாய்
மத்தரின்மயங்கிவசைவந்திடவெதிர்ந்தார்
முத்தனினீயுமொழியாதுறைதனன்றோ
வத்தகையதீமைநினதாமெனவெறுத்தான். (௭)

ஐயனுநகைத்தொருவர்தன்னறிவுகொண்டே
வெய்யவினைவிண்டவர்கண்மேதினியிலுண்டோ
மையலறவேறொருவர்வந்துறைசெய்தாலு
முய்யுநெறியின்றியவருய்குவர்கொன்மைந்தா. (௮)

விரும்பியதுமேவுதலுமேவுதல்விலக்கிற்
றிரும்பியதுமில்லையினிதேர்தியெனவோதச்
சுரும்பிமிர்நறுந்தொடையறன்னுதிருமார்பன்
பெரும்பயனடைந்தமுனிதன்னொடிதுபேசும். (௯)

அன்னர்தவர்முன்னர்வினையாமியல்களெல்லா
மின்னவெனயானுணரவின்னருள்செய்யென்ன
மன்னனுரைமுன்னியதைமாமுனியறிந்தே
தன்னினியசீடனொடுசாற்றெனமொழிந்தான். (௧0)

வேறு.

நண்பொடுவேதநான்குடனைந்தாய்நவில்காதை
பண்பொடுவைசம்பாயனரின்னேபகர்கின்றார்
திண்புயமன்னாகேளெனவோதித்திருமாலென்
றெண்படுசீரான்சூழலடைந்தானியலோடும். (௧௧)

வேந்தினும்வைசம்பாயனர்தன்னைவியந்தேத்திச்
சேர்ந்தவரோடும்பாண்டவர்காதைச்செயலெல்லா
மாய்ந்தவனோதக்கேட்டனன்முன்னாளாமென்றே
போந்துளவேதச்சூதர்புகன்றார்பொருவில்லார். (௧௨)

வேறு.

அன்னவான்கதையைநமக்கியான்புகல்வனரசனிக்கருண்முனியெடுத்துச்
சொன்னசொற்படியென்றோதவுமிருந்ததூயவர்தமதுளமகிழ்ந்தே
மன்னியசூதமுனிவனைப்போற்றிவருத்தியென்றன்பினாற்கேட்ப
நன்னலந்திகழுமாதவர்தமக்குநவின்றிடத்திருமுனியெடுத்தான். (௧௩)

ஆரணமுனியைத்தவிசிடையிருத்தியரசனுமுழையருஞ்சுசியிற்
சீரணியாடைபுனைந்துகைகுவித்துத்தெய்வதம்போற்றியோர்மனதாய்ப்
பூரணமுலையாள்வபுட்டையோடிருந்துபுரவலன்வினவலுமந்தக்
காரணங்கடந்தோன்றிருவடிநினைந்துகலைமுனிபகர்ந்திடலானான். (௧௪)

வேறு.

மறையுணர்ந்தோர்மறையென்னவுபநிடத்தோருபநிடத்தின்வருக்கமென்ன
வறைதருமநூலாய்ந்தோர்தருமசாத்திரமென்னவவ்விமீதி
னிறைவுறுகாமம்பயின்றோர்மதனசாத்திரமென்னநிலையான்மிக்கோர்
துறைபடுவேதாந்தமென்த்தொகுத்தெடுத்தோரிதிகாசஞ்சொற்றான்றூயோன்

படித்தீவர்கள்பவந்தொலைக்கும்பன்னினவர்முத்திதடப்படியதாகும்
வடித்திதனையுன்னினவர்கேட்டவர்தம்மிருவினையாம்வரையைச்சாடுங்
கடிக்கமழ்தார்வேந்தருக்குமனுநீதிநூலாகிக்கவலைதீர்க்கு
மடுத்துரியவறிவெல்லாந்தருமைந்தாமாரணமென்றறிவைமன்னே. (௧௫)

அக்காதைதனிலிருக்குமியலெல்லாநீயறியவறைவன்கேண்மோ
மிக்காரும்பருவங்கள்பதினெட்டாய்க்கதையனந்தம்விளங்கிமற்றுந்
தக்கோர்கள்பொரும்போரும்பதினெட்டாய்ப்பொருதிறந்ததானைதானு [ய்.
முக்குழ்ரோணியுடைத்தொகையும்பதினெட்டாய்விளங்குறுமென்றறிதிமிக்கோ

ஆதிசபையாரணியம்விராடமுத்தியோகம்வீடுமந்துரோண
நீதிதருகன்னஞ்சல்லியஞ்சுழுத்திசீர்சாந்திநெறிகொள்பர்வ
மோதும்நுசாசநிகம்பரிமேதமாசிரமமுசலத்தோடே
யேதறவிர்மகப்பிரத்தானிகஞ்சொற்காரோகணத்தோடிரொன்பானே. (௧௮)

ஆதிபஞ்சகமைர்துமுயித்தியப்ஞ்சகமைந்துமருளாற்சாந்தி
யோர்துபஞ்சகமைந்துமுணர்வருஞ்சொற்கத்திரியமுரைத்தமூன்றுங்
காதலினுன்கினமென்றேற்கருதியுரைப்பவருமுளர்கமழ்சுலோகந்
தீதறவோரிலக்கமதாச்செப்பினுன்சுருதியெலாஞ்செப்பினேனே. (௧௯)

இத்தகையபெருங்கதையினீரொன்பதெனுஞ்சமரினியலேதென்னிற்
பத்துடைநாட்காங்கேய்னேந்துபகலாசிரியன்பகரிரண்டு
சுத்ததினமிரவிசுதன்ரேற்றியவுச்சியினளவுந்தொலைவிலாற்றன்
மத்திரபூபதிதனெடுசுயோதனன்சேனுபதியாய்வயங்கினுரே. (௨0)

அக்குரோணியினலகுதேரொன்றுகரியொன்றச்சுவங்கண்மூன்று
மிக்கபதாதிகளைந்துமேவிலொருபந்தியிந்தவிதமூன்றுமேற்
றெுக்கியசேனுமுகமாமத்தொகைமூன்றினிற்குன்மந்தொகைமூன்றுகிற்
புக்குயருங்கணமவைதாமூன்றுகில்வாகினியாப்புகல்வர்மன்னே. (௨௧)

வாகினிகளொருமூன்றுபுலுதமதாமப்புலுதவகைமூன்றுகி
லோகைதருஞ்சமுவெனபரச்சமுவோர்மூன்றுகிலுயர்சமாக்கியஞ்
சோகறுசமாக்கியமோர்பத்தாமேலக்குரோணித்தொகையதாமான்
மாகர்புகழ்நலுந்தெரியன்மணிமார்போயிதன்றெகையும்வகுப்பன்கேட்டி. ()

இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபதிய்ற்றேர்களியானையஃதே
பொருவற்றபரிகளறுபத்தையாயிரத்தறுநூற்றெருபான்போர்செய்
திருமிக்கோரிலக்கமுடனென்பதினுயிரத்துமுந்நூற்றைம்பான்சேர
நிருமித்தவகைநான்குமக்குரோணியென்றெருபேர்நிகழுமன்றே. (௨௩)

இவ்வகையாமக்குரோணிபதினென்றுமேழுமெதிர்ந்திகலின்மாளச்
செவ்வியுறுநற்குணராஞ்செழுந்தருமன்முதலானேர்செகங்கைக்கொண்டார்
வெவ்வழல்சேர்கதிர்வேலாயறமுருவமெடுத்ததொத்தமேலோனை
தெய்வமுனியிடைவிலக்கிற்றீருமோவிதிச்செயல்கடெளிவின்மிக்கோய். (௨௪)

அமலமுனிவாதராயணர்புவியிலானதுவுமமரரோடுஞ்
சமரமிகுமிராக்கதருந்தரணிதனிலுதித்ததுவுந்தயங்குசோம
விமலமுறுதிருமரபினிருமரபினியற்கைகளுநெறியான்மிக்க
கமலமுகச்சந்தனுவாங்காவலன்வானதியுடனேகலந்தவாறும். (௨௫)

வீறுடும்வீடுமனைப்பயந்ததுஞ்சத்தியவதியைமீட்டுந்தோய்ந்து
மாறுடுசமர்வல்லமைந்தரிருவரைத்தந்துமன்னன்வானிற்
பேறுகியடைந்ததுவும்பின்னிளைஞரிறந்ததுவும்பெயர்ந்துநோக்கித்
தேறுதிமாமுனிவனருந்தருமசந்தானஞ்செய்தவாறும். (௨௬)

திரிதராட்டிரனேடுபாண்டுவுநல்விதுரனுமாச்சேனித்தவாறும்
பிரிதராத்தம்பியர்கண்முன்னவற்கேமுடிசூட்டிப்பெருமைஞால
மிரிதராப்படிகாத்தபாண்டுவினுக்கைவர்சுதரெய்துமாறும்
புரிதராபதிதனக்குப்புதல்வரொருநூற்றுவர்கள்புகுந்தவாறும். (௨௭)

அக்காலங்காட்டகத்திற்பாண்டுவிறந்திடவைவரரீயதாதை
மிக்கானூரடைந்ததுவும்வேந்தனுந்தன்னுளமகிழ்ந்துவேறொன்றின்றி
யெக்காலுமுளமொன்றாயிருந்திறத்துமைந்தரையுமினிதிற்போற்றித்
துக்கோர்கள்புகழ்சிலையாசாரியன்பால்விஞ்சையெலாந்தணித்தவாறும். (௨௮)

சென்றுகுருதக்கணைக்குத்திறல்விசையனருந்துருபதேயன்றன்னை
வென்றதுவு நூற்றுவர்க்கும்வேந்தானோன்கன்னனுடன்வியந்துநண்பாய்
நன்றிகெடவீமனையேநலிந்திடுவான்புகுந்ததுவுநவையிலாம
லொன்றினுமாங்கவனுய்ந்ததுணர்ந்திவன்வேறொருவிரகையுன்னுமாறும். ()

வாரணவாசியினரக்கான்மாளிகைசெய்திவரிருந்துவாழ்கவென்றே
தாரணியும்புயவேந்தன்றனைக்கொண்டுபுகலவித்துந்தனதுநண்பன்
சீரணியுமொருவனைச்செந்தீயிடவென்றேவுதலுஞ்செய்ததோது
காரணமங்கிலாமையினுற்கடந்தைவர்தாயுடன்கானகஞ்செல்வாறும். (௩௦)

கடும்பவனகுமரனெதிர்கலந்தார்க்கும்வலிநிருதர்காவலாள
னிடும்பனைவென்றதுவுமவனிளையவளாமிடும்பிமணமிசைந்தோர்மைந்தன்
றொடுங்கழலான்றனையளித்துப்பூசுரரூர்வைகியதுந்தொலைவிலாற்ற
லடும்பகனைவென்றதுவுமங்காரபரணனைவென்றகன்றவாறும். (௩௧)

பாஞ்சாலன்பதியடைந்துபன்றியுடன்மீன்றுணியப்பகழிகோத்து
நீஞ்சாநற்கடலனையநிருபரெதிர்துரோபதையைநெறியாலைவர்
தாஞ்சார்பிற்றிருமணஞ்செய்தவனூரிலோர்வருடந்தங்குமாறு
மூஞ்சேதலென்வஞ்சியரசனழைத்தருத்தமரசளித்தவாறும். (௩௨)

இந்திரப்பிரத்தந்தனிலேயிருந்தைவரரசுரிமையியற்றுமாறு
முந்துதனஞ்சயன்றீர்த்தயாத்திரைபோய்மூவர்மண்முடித்தவாறு
மைந்தரொருமூவரவர்வயினளித்தவாறுமகபதிபூங்காவைச்
செந்தழலுக்கிரையாக்கிச்சிலையீரதமுதலளிப்பத்திகழ்ந்தவாறும். (௩௩)

அன்னவமயந்தனிலேமயனளித்தபேரவையொன்றமைந்தவாறு
மன்னுசராசந்தன்வதையானபினர்மகமொன்றுவகுத்தவாறுந்
துன்னுசுயோதனன்றனக்குத்துரோபதையாலவமானந்தோன்றுமாறும்
பன்னரியசூதிழைத்துப்பாண்டவர்நாடனைத்துமவன்பறித்தவாறும். (௩௪)

மாதுதனைத்துகிலுரிந்துவனவாசமீராறுவருடமென்று
மோதுமொருவருடமக்கியாதமெனவும்புகன்றேயோட்டுமாறுங்
கோதறுவேற்கண்ணுளுமைவரும்போய்க்கடுங்கானிற்குடியாமாறு
மீதுறுகிம்மீரவதைவீமன்முடித்ததுமேனைவிதங்கள்யாவும். (௩௫)

முக்குணந்தீர்முனிமொழியான்மூவர்முதல்வனைப்போற்றிமுனைகொள்வாளி
பற்குனன்பெற்றதுமமரருலகடைந்தேயசுரகுலப்பரவையெல்லா
மொக்கவொருகணைபோக்கிமுடித்ததுவுமீண்டிவர்பாலுற்றவாறு
மிக்கதாயுதனியக்கர்மாநகர்போய்மலர்வாங்கிமீண்டவாறும். (௩௬)

மாசுணமங்கருஞ்சாபமகன்றதுவுங்கொடுங்கோலான்வனத்தினெய்தத்
தேசுறுகந்திருவரிறைசித்திரசேனன்வளைந்துசெருச்செய்வாறும்
பேசரியபேராற்றலொடுங்கியவன்கைப்புகுந்தபெற்றிகேட்டு
வீசுபுகழ்பாண்டுசுதர்மீட்டதுவுமவனூரின்மேவுமாறும். (௩௭)

நயந்திகழும்பாஞ்சாலன்றருமடந்தைதனைநோக்கிநயந்துதீயச்
சயிந்தவன்வந்தெடுத்ததுவுஞ்சார்ந்தவனைப்பொருதழித்துத்தலைமைமிக்க
வயந்தருமாதினைமீட்டவாறுமருண்மார்க்கண்டர்வந்துமுன்னர்
வியந்தபலகதைகளெல்லாம்வேந்தனுக்குமனமுருகவிளம்புமாறும். (௩௮)

மகமொன்றுபுரிந்திறைவன்மனங்களித்துவாழ்வனவுமற்றுந்தீயோ
னகமொன்றுதுருவாதமாமுனியையிவர்பக்கலாக்குமாறுஞ்
சுகமொன்றுகனிபொருந்தவவரவர்தமனத்தியற்கைசொற்றவாறு
நகமொன்றுபெரும்பூதநவியாமலுய்ந்தைவர்நயந்தவாறும். (௩௯)

ஈராறுவருடமுஞ்சென்றொருவருடம்விராடபுரத்திருந்தவாறு
மீராதமல்லனொடுங்கீசகனைத்திறல்வீமனட்டவாறு
பாராளுஞ்சுயோதனன்வந்தருநிரைகள்கொண்டதுவும்பாண்டுமைந்தர்
நேராகிமீட்டதுவுமபிமனுக்குத்தரையைமணநேர்ந்தவாறும். (௪௦)

புரசையுறுகளியானைப்புரவலரைவருமேவப்புரத்தினேகி
வரிசைபெறுமுலூகமுனிமன்னனுடன்றூதுரைத்துவந்தவாறு
மரசனிவர்பாற்சிறிதுவிரகுரைகைகள்புகன்றருஞ்சஞ்சயனையேவ
முரசுயர்த்தோன்மறுத்துரைத்துமுகுந்தனையேதூதாகமுயன்றவாறும். (௪௧)

அரவுயர்த்தோனுடன்றிருமாலமர்க்கிசைவுற்றமராரிறையவனுற்கன்னன்
றிரமிகுத்தகவசமொடுகுண்டலமுந்துறக்கும்வகைசெய்துகுந்தி
வரமிக்கபெருங்கருமமன்னவனுங்கன்னன்மகிழ்ந்தளிக்குமாறுஞ்
சுரர்துதிக்கும்விதுரனைவிற்றுணித்திடவும்புரிந்தடைந்தேசொற்றவாறும். ()

கறுத்தமழைவண்ணத்தன்கட்டுரையாற்பொறையைவர்கறுத்தொன்னுரைச்
செறுத்துலகம்புரப்பலெனத்திசைதோறுந்தமதுதிருமுகங்கடேண்டி
மறுத்தவிரேழக்குரோணிவாகினிசேர்த்ததுமரவின்பதாகைமன்னன்
சிறுத்தவர்புன்மதியாலேகாதசவக்குரோணிபடைசேர்த்தவாறும். (௪௩)

அரவமாக்கொடிகுமரனைங்கணைவேளொத்தவனையைவராங்குப்
பரவுகளப்பலிதந்துபடையெடுத்துப்பெரும்பூசல்பயிலுமாறும்
விரவுமொருபதுநாளில்வீடுமனும்பன்னிரண்டில்விறலான்மிக்க
கரிவல்பகதத்தன்மடிந்தபிமனையும்பதின்மூன்றிற்காதுமாறும். (௪௪)

சயிந்தவனீரேழதனிலாசிரியன்பதினைந்திற்றரணிமைந்தன்
புயந்திகழ்துச்சாதனனும்பதினேழிற்சல்லியன்வண்புகழான்மிக்க
விய[illegible]சகுனிப்பெயரான்வேந்தனுடன்பதினெட்டில்விளிந்துமாசான்
பயந்தமகன்றனியிரவிலேனையமன்னரைத்தொலையப்படுத்துமாறும். (௪௫)

மறுநாளிலருச்சுனனும்பொருதவன்றன்சிரத்தின்மணிவாங்குமாறு
முறுப்பரிட்சித்துதித்ததுவுங்கண்ணிழந்தோனிவையனைத்துமுரைப்பக்கேட்டுக்
கறுவுசினக்காந்தாரியுடன்வரப்போய்க்களமதனைக்கண்டவாறு
மறுவறுசிரடலைவர்வந்தவரைவணங்கியுடன்படுத்துமாறும். (சசு)

தாதைமனப்பெருங்கவலைதனையொழித்துக்கங்கையிடைத்தருமனெய்தி
வேதியர்சொற்படிகடன்கள்விறலுடன்செய்தருள்செறிவீடுமனைத்தாழ்ந்து
சோதிமணிமுடிசூட்டிமீண்டுதமதருங்குலத்திற்றோன்றுந்தூய
மூதறிவோனரசுரிமைமுறையுரைப்பக்கேட்டுவந்தேமுயங்குமாறும். (சஎ)

பரிமேதமொன்றளிப்பானினைந்ததுவுந்தம்பிபரிகொணர்ந்தவாறுந்
திரமானபடையரசர்முதலினரெண்ணிறந்தோரைச்செயித்தவாறுங்
குரவோர்கள்சொற்படியேகோதின்மகமுற்றியதுங்கொண்டன்மேனி
யரிமீளத்துவரைபுகவைவரிருந்தரசுரிமையாக்குமாறும். (சஅ)

வேதமுனிதிருவாக்கால்விழிப்புலனில்பெருமானும்விளங்கில்லாளு
மோதுதவக்குந்தியும்போயாசிரமவாசமதாயுறையுமாறும்
பூதலமெலாம்புரந்தயாதவர்தங்குலத்தெவரும்போரின்மாண்ட
தீதுரைகேட்டுயர்விசயன்சென்றுதுவரைகையினிடைசேர்ந்தவாறும். (சகூ)

பன்மடவார்குலமனைத்தும்பரவையெனக்கொண்டுநரன்பதியிற்செல்வான்
றன்வலியாலடைந்திடுநாண்மறவரிடைதகைந்துகொண்டுசாருமாறு
முன்வலிகொண்டருஞ்சமரின்முனைகொடுத்தவில்வலையாமுறைமைநோக்கி
மன்குலமாநகரடைந்துமுன்னவற்கிவ்வாறனைத்தும்வகுத்தவாறும். (ருo)

மற்றுமிடையுள்ளமுறையுமன்னுகலிவந்ததுவுமன்னரைவர்
குற்றமினியிருக்கிலெனமாதினுடன்புவிதுறந்தேகுமரன்றந்த
சுற்றமுயர்பரிட்சித்திவ்வுலகிறைவனுயிருப்பத்தொலைவிலாத
வெற்றிமுடிபுனைந்திருத்திமானுரையால்வைகுந்தமேவுமாறும். (ருக)

இன்னபலவகையனைத்துமறைகளினுமினிதென்றேயெவருமேத்தச்
சொன்னதிருமுறையுனக்குச்சொற்றிடுவெனென்றுரைப்பச்சுடர்செய்மௌலி
மன்னவனுங்கதிசயித்துவாதராயணன்புவியில்வந்தபான்மை
முன்னியம்பவேண்டுமெனமுனிமகிழ்ந்துமுகநோக்கிமொழிவதானான். (ருஉ)

சிறப்புப்பாயிரச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள் - ருஉரு.

---

உ

# வியாசருற்பவச்சருக்கம்.

---

நீர்க்கயன்மங்கைமார்கணீள்விழியினமென்றெய்த
வார்க்குடமுலையார்சோதிவாண்முகங்கமலம்பூப்ப
வேர்ப்பலாக்கனியையுண்டுவியன்மந்திமுழவங்கொட்டச்
சீர்க்கெலாமிடங்கொண்டோங்குந்திருவளர்சேதிநாடே. (௧)

அன்னநன்னாட்டையாள்வோனருந்திறலரசர்கோமான்
மன்னவர்திறைகணல்கிவணங்கியபதத்தான்வாயின்
முன்னுறமுரசொலிக்கும்மதக்களிநல்யானை
துன்னியவசுவென்றோதுந்தூயனத்தேயவேந்தன். (௨)

மின்னெனவாள்விதிர்த்தேவேந்தர்பல்லோர்கள்சூழ
மன்னுநாற்றானையோடுமன்னவன்வேட்டம்போந்தான்
றுன்னருமுனிவர்வாழுஞ்சூழலொன்றதனைநோக்கி
யென்னிதென்றுணர்வான்சென்றானிருந்தமாதவரைக்கண்டான். (௩)

மறைகளினொலியும்பூண்டமாசறுதவமுநீதி
நெறிவழாமுறையுநோக்கிநிகரிலையிதற்கென்றெண்ணிக்
குறைவிலாவமைச்சர்தம்பாற்குவலையமீந்துநீத்தே
யிறையருந்தவத்தினாற்றானிருடியருள்கொண்டாங்கு. (௪)

மாதவம்பலநாள்வைகிமன்னவனியற்றுநாளின்
மீதலம்புரக்கும்வெற்றிவிண்ணவர்பெருமானெய்திச்
சோதிசேர்விமானந்தண்டந்துகளறுகமலமாலை
போதுநற்கனகமேனிப்பொலிவுதந்தொன்றுசொல்வான். (௫)

தவத்தினாற்பெரியைவிண்ணிற்சார்ந்திடமீண்டுமெய்த
நிவப்புறவளித்தேநின்பானேயத்தானண்புமானே
னவத்திறலுலகமுன்போனண்ணிநீகாவல்பூண்டே
பவத்துயர்தவிர்த்தியிந்தப்பாருளோர்க்கென்றுபோனான். (௬)

ஆயநல்வரங்கள்பெற்றேயரசனும்பதியைநண்ணி
மாயிருமுடிபுனைந்துமனுநெறிவழுவுறாம
லேயநல்லுலகங்காத்தானிந்திரற்காண்டுதோறு
நேயமாய்விழாநடத்திநிமலனாயிருந்துவாழ்ந்தான். (௭)

மகபதிதனக்குமன்னன்வருவிழாநடத்தலாலே
யகமதிற்குறைவிலாதாயருண்மழைதிங்கடோறு
முகிலினமுதவவாழ்வுமுயற்சியாற்பெருகமைந்தர்
செகமுளோரெவர்க்குமுண்டாய்ச்சிறப்புற்றதெங்குமன்னோ. (௮)

அன்னவன் றன்னைநோக்கியகலிடத்தரசரெல்லா
மன்னுவாசவய்காண்டாண்டுமகிழ்விழாநடத்தலானார்
சொன்னதீர்க்காயுச்செல்வந்துலங்கியவிளைவுமாரி
நன்னலங்குறைவுறாமனடந்தனஞாலமெல்லாம். (கூ)

மன்னவன்விமானமீதுவானுலகடைந்துமீள்வன்
றன்னுபச்சரனென்றோர்பேர்தோன்றலுக்கடைந்ததிப்பாற்
பின்னவற்கைவர்மைந்தர்பெருந்திறலோர்கடோற்றி
மின்னணியினர்வெவ்வேறுமேதினிகாத்திருந்தார். (கo)

மாதவத்தொருவனானவசுநகர்மருங்கினோர்சார்
சீதளமுயர்ந்தசுத்திமதியெனுஞ்செழும்பேர்கொண்டு
போதுறுநதியின்பாங்கர்புரவலன்பயிலும்போதின்
மீதுறவுயர்ந்தகோலாகலமெனும்விலங்கல்கண்டான். (கக)

மஞ்சுறவுயர்ந்தகொற்றமால்வரைதனைப்பதத்தி
னெஞ்சவேமடுத்தெரிந்தானிருநதிதன்னில்வீழ்ந்த
தஞ்சொலார்வசுபதத்தனெனும்பெயரானுநேரில்
வஞ்சிநற்கிரிகையென்னுமாதுமவ்விடத்துதித்தார். (கஉ)

பொருப்புமாநதியுமொன்றாய்ப்பொருந்தியபோதிற்றேவர்
விருப்புறச்சிறுவனோடுமெல்லியறோன்றக்கண்டே
மருப்பிளமுலைசேர்சுத்திமதியெனுநதிவளர்த்தே
திருக்கிளர்தேவராரும்வியந்திடத்திகழுநாளில். (கங)

பாலமுதளித்துநாளும்பண்புடன்வளர்த்தநாளிற்
சீலமார்மதனுநேராச்சிறுவனுமலையுதித்த
கோலநற்றிருவையொத்தகொடுங்கணாள்கிரிகைமாதுஞ்
சாலவேவனப்பிலாழ்ந்துதாயருகிருக்குநாளில். (கச)

வசுவெனுமரசனந்தமாநதியடைந்துமீளக்
கசிவுறுகிரிகையென்னுங்கன்னியைக்கண்டபோதி
லொசிவுறுமிடையுநீலவொண்கணுமுயர்ந்தசைந்தே
யிசைவுறுதனமுங்கண்டேயார்கொலோவெனவயிர்த்தான். (கரு)

மதியமோவதனமென்பான்வானமோமருங்குலென்பா
னிதியமோவுடலமென்பானீள்விழிகணையோவென்பான்
புதியமோகனமின்னெங்குப்புகுந்ததோவென்பான்மன்ன
னதியமோர்புறத்திருந்தேமதன்கணைநலியநொந்தான். (கசு)

வாகுறுமுழையரந்தமன்னவன்றுயரங்கண்டே
யேகியக்கன்னிதன்னோடிசைவுறமொழிகள்கூறிச்
சேகுறுநதியளித்தசெல்வியென்றுணர்ந்துரைத்தார்
போகியேயனையானுங்குப்புகுந்துமாநதிக்குரைப்பான். (கஎ)

அன்னையாயுலகங்காக்குமணங்கனையருளாலின்னே
நின்னுடைச்சிறுவிதன்னைநேர்வையோவடியேற்கென்ன
பொன்னனைதனையுமந்தப்புகழ்ச்சிறுவனையுமீந்து
முன்னவர்வரவுங்கூறிவிடுத்தனன்முதன்மைநோக்கி. (௧௮)

வேந்தனுநகர்வந்தெய்திவிளங்கிழைதனைமணந்து
தோய்ந்தவடனங்கண்மார்பிற்றளைந்திடவின்பமுற்றி
யீந்தநற்குமரன்சேனைக்கிறைவனாயிருக்கநல்கி
மாந்தளிர்மேனியாளைப்பிரிகலன்வாழுநாளில். (௧௯)

பஞ்சடிப்பருமவல்குற்பணைமுலைக்கனிவாய்த்தீஞ்சொற்
செஞ்சுடர்த்திலதவின்பத்திருநுதற்கருங்கண்வல்லி
விஞ்சுடைக்காமமென்னும்வேலையிற்றுளையுநாளி
லுஞ்சிடக்கருப்பந்தாங்கியுற்றனள்கிரிகையென்பாள். (௨௦)

விலங்குடையூன்கொணர்ந்துவிளங்கிழைக்கருத்தவென்றே
குலங்களிற்குரவரெய்திக்கூறலால்வேட்டம்போந்தே
கலங்கிடவிருகமோட்டிக்கடுங்கணைதூண்டிக்காதி
யலங்குறுவனத்திருந்தானலரிவாரிதியிலாழ்ந்தான். (௨௧)

மங்கையாங்கிரிகைநீலவார்குழற்புரைந்திருண்ட
கங்குல்வந்தெங்குமூடக்காதலிமுகத்தைநேராந்
திங்கள்வந்துதிப்பநோக்கித்தேனுறுந்தொடையன்மார்ப
னங்கொருபுடையின்வைகியலர்க்கணைக்கிலக்கதானான். (௨௨)

வாடுமோமாரன்போரான்மயங்குமோமருண்டின்றென்னைத்
தேடுமோநோமோசிந்தைதியங்குமோசேர்ந்தநாளி
லூடுமோமகிழுமோவென்றுயிர்த்துரியாளையுன்னி
நீடுசேக்கையின்மேல்வேந்தனெட்டுயிர்த்தயர்ந்தான்மாதோ. (௨௩)

மனதிடையிருந்தகாமவல்லிதன்பயோதரங்கள்
கனவிடைமார்பிலாழக்கலந்தவனாகிவேந்தன்
புனிதவிந்துவைக்கைவிட்டபோதினிற்புவிவிழாமற்
றுனிவறத்துகிலினேற்றேதூயவனுணர்ந்தெழுந்தான். (௨௪)

மரனிடைவைத்திருந்தவல்லூறுதனையழைத்தே
விரவுமிந்திரியநல்கிவிளங்கிழைக்களித்தியென்ன
விரவிடைச்செலுத்தினான்மற்றிதுவுந்தன்னலகிற்கவ்வி
விரைவினிற்படர்ந்ததாங்கோர்விகங்கம்வந்தடுத்ததாலோ. (௨௫)

உணவினையலகிற்கவ்வியுற்றதென்றுன்னியோடி
நிண்முறுமூக்காற்கொத்திநின்றமர்புரிதலாலே
துணைவில்வீரியத்தைத்தன்வாய்தவறுறவிடுத்ததப்பான்
மணிசெறியமுனையாற்றின்வந்துவீழ்ந்தொளிர்ந்ததன்றே. (௨௬)

வாகைவல்லூறுமீண்டுமன்னனுக்குரைப்பவன்றன்
சோகமோடிருந்துகீழ்பாற்சூரியன்றோன்றுமுன்னர்
நாகமேழுதலவானநாற்பெரும்படையினோடு
ஏமகிமாநகரஞ்சார்ந்தேயில்லவளுடன்வாழ்ந்தானே. (௨௭)
ஈங்கொருகன்னிமுன்னுளியக்கரில்லகத்தில்வந்தாள்
பாங்குளபிரமனிட்டபகருஞ்சாபந்தாங்கி
வீங்குநீர்யமுனையூடுமீனமாயுழல்வாள்கண்டே
யாங்கவையிரண்டுகூறும்விந்துவையருந்தினாளே. (௨௮)
தரித்தனளுதரத்தூடுதகுதியோராண்டுநீங்கி
விரித்தநற்றினத்திலோர்நாண்மீன்படுப்பார்களெய்தித்
திரத்தினில்வலைகள்கட்டித்திண்புனற்றிவலைவானப்
பரப்பினிற்றெறிப்பவோட்டிப்பலசுமைகவர்ந்தபின்னர். (௨௯)
பிடித்தனரனையமீனம்பிளந்தனர்மகனும்பெண்ணு
மடுத்ததினிருத்தனோக்கியற்புதமடைந்துளாராய்
வடுத்தவிர்தாதராசனவையிடைவைத்துரைத்தா
ரெடுத்தவன்வளர்த்தான்சாபமிவளொழித்துலகஞ்சார்ந்தாள். (௩0)
அன்னவன்வளர்க்குநாளிலப்பெரும்புதல்வன்மச்ச
னன்னிலையவனிக்கெல்லாநாயகனாகிநின்றான்
றுன்னியமச்சகந்தியெனப்பெயர்சொற்றதோகை
பன்னியயமுனைக்கோடம்பணிப்பவளாயிருந்தாள். (௩௧)
சிலதுநாள்கழித்தபின்னர்திறன்முனிவசிட்டன்றந்த
குலமுனிசத்திமைந்தன்குளிர்பராசரனென்றோதுங்
கலைவலானவண்வந்தெய்திக்கன்னியைக்கண்டுசோர்ந்தே
நலனுடைமதனனம்புநலிந்திடத்துயருழந்தான். (௩௨)
வாட்டடங்கண்ணிநின்பாண்மையலிற்சிறந்தேனின்னே
தீட்டியதொய்யிருங்குஞ்செழுமுலைத்தடத்திற்சேர்க்க
நாட்டுவையெனலுமாதுநாணொடுசிரம்வளைத்தே
தோட்டுவார்குழலாளிச்சொற்றாயருக்கியலோவென்றாள். (௩௩)

வேறு.

கன்னியான்விரதத்திற்கசிந்தவ
ளன்னநீர்மையகற்றுதலேற்குமோ
பன்னுமேனிபுலால்கமழ்பான்மைகண்
டென்னைநீதொடவேற்குமதோவென்றாள். (௩௪)
கற்றமாமுனிகன்னியைநோக்கியே
யுற்றநின்விரதங்குறைவுற்றிடா
திற்றையேமுதற்கந்தமியங்குநின்
பெற்றியாருடலென்றுரைபேசினான். (௩௫)

வரமளிக்கமடந்தையுமவ்விடைக்
கருதுமோசனைகந்தியென்றுயினு
டிரமியற்றும்பனியிற்றிவாகரன்
கரமறைத்துக்கலந்தனன்கன்னியை. (௩௬)

அன்னகாலையிலாரணங்கன்னவண்
மன்னுமேமவயிற்றிலுதித்தனன்
சொன்னவேதவியாதன்றுகளற
வென்னவோதினன்பின்னுமியம்புவான். (௩௭)

வந்தமைந்தன்வணங்கித்தன்றுய்தனை
யெந்தவேளையிலுன்னினுமெய்துவன்
சிந்தைகொண்டுசிறப்புடன்வைகெனத்
தந்தையோடுவனந்தனிற்சார்ந்தனன். (௩௮)

வைகியாங்குவருந்தித்தவம்புரிந்
துய்கையாமறையோதிப்புராணங்கண்
மெய்கொள்பத்துடனெட்டும்விளம்பியே
செய்கையானபின்செப்பினன்பாரதம். (௩௯)

ஒற்றைவெண்மருப்போங்கன்முகத்தினு
னிற்றகோடுகொண்டேமப்பொருப்பிடை
முற்றுறத்தீட்டிமுடித்தனன்பாரதம்
கற்றுளோர்கதிகண்டிடக்காதலால். (௪0)

அன்ன தூய்மையுநன்மையுமாகவே
சொன்னபாரதந்தூய்மறையானதா
வின்னுமான்முதலாவிமையோரெலா
மன்னும்பூமிசைவந்துதித்தார்களே. (௪௧)

என்றுகூறவிராசவரோதய
னன்றுவானவர்ஞாலத்துதிப்பதென்
னின்றுகாரணமென்றனக்கோதுவாய்
வென்றியோயெனமீட்டும்விளம்புவாள். (௪௨)

வியாசருற்பவச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௫௬௭.

உ

3205
R65,8

## பிரபஞ்ச உற்பவச் சருக்கம்.

---

வருசமதங்கினேயமைந்தனும்பரசுராமன்
பொருவிருமரசர்தங்கள்புணரியையிருபானோடு
மொருமுறையமுடித்துச்சோருமுதிரத்தாற்றந்தைக்கன்பாற்
றருகடனியற்றுநாளிற்றவிர்ந்ததாலரசரீட்டம். (௧)

தரணியைத்தாங்குமன்னர்தங்குலநீங்கலாலே
வருணமுநெறியுஞ்சிந்திமாயுமென்றுள்ளங்கொண்டே
கருணையால்ரசமாதரிரந்திடக்கசிந்தவேதா
பருணிதருரைக்கும்வண்ணஞ்சந்தானம்பணித்திட்டானே. (௨)

உலகினிற்புதல்வர்தோற்றியுறுநெறிமுறைவழாமற்
றலமெலாங்காக்கலானார்சார்ந்துளபுதல்வரெல்லாங்
குலமுறையதனால்வேறோர்கொடுமைகண்டிலராய்க்காப்ப
விலகுயிர்த்தொகைகண்முற்றும்விருத்தியாய்ப்பரந்தவன்றே. (௩)

நீதிகடவிராவாற்றானெறிவல்வேதியரும்வேந்தர்
தீதறுகுலத்துளோருமிறந்திடார்சிறந்திருந்தார்
மேதினிவருந்திநொந்துசுமக்கொணாவிரகினாலே
யாதரம்பெருகவுன்னியவனிநாயகிசிந்தித்தாள். (௪)

ஈசனுமயனுமாலுமிருந்திடுமமையநாயப்
பூசனைபுரிந்துபோற்றிப்பொறுக்கிலேன்பாரமென்றாள்
வாசவரைவரோடும்வானவர்நிருதரோடுங்
கேசவனுடனுதித்துக்கிளர்ந்திரும்பரந்தவிர்த்தான். (௫)

ஆதலால்வானுளோருமசுரருமரியும்வந்து
மேதினியுதித்தாரென்பர்மேலந்தவிண்ணோர்முன்னங்
காதலானுதித்தவாறுங்கலைகள்வந்தவனிமாட்டுப்
போதுறவுதித்தநீரும்புகலுவன்கேட்டியென்றான். (௬)

உற்பவமுதல்வனானவோதிமப்பரியோன்மேனாள்
கற்பனைபுரியுமாறுகருதியகாலைதன்னி
லற்புதமைந்தர்வந்தாரத்திரிமரீசியோடு
சிற்புலத்தியனாங்கீரன்கிருதொடுபுலகன்சேர. (௭)

அறுவரையுடலினீந்தவயன்பின்னும்வலதுபாத
நிறுவுமங்குட்டந்தன்னிற்றக்கனுநிறையான்மிக்க
மறுவறுதரணியோடுதிருவும்வாமாங்குட்டத்து
நெறிமுறையளித்தான்முன்னர்நிலத்துயிர்தழைக்கவேண்டி. (௮)

அன்னநன்மைந்தர்தம்மின்மரீசியோனளித்தசெம்மல்
பன்னுகாசிபனுலிந்தப்பாரெலாமுதித்தவாமாற்
சொன்னதெவ்வகையினென்னிற்றோற்றியதக்கனந்த
நன்னுதன்மடவாரோடுநலம்பெற்றுமருவுநாளில். (௯)

ஆயிரமைந்தர்வந்தேயவதரித்தவர்களன்பாற்
போயினர்தவத்தையாற்றிப்புகுந்தனர்ஞானவாரி
சேயினர்தம்மைச்சீறிச்சிறுவியரைம்பானென்னு
மாயிருந்தொகையோர்தம்மையளித்தனன்மற்றுந்தக்கன். (௧0)

பதின்மரைத்தருமற்கீந்தான்பகருமூவொன்பான்மாதர்
மதிகொளச்சுவதியாதிவயங்கிரேவதியீறுனோர்
விதியன்மாமதியோற்கீந்தான்விறலுடையொருபான்மூவர்
துதிகொள்காசிபனுர்வேட்டுத்துணைவியரின்பந்துய்த்தான். (௧௧)

அதிதிநற்றிதிதநுவையநாயுவைகாலையோடு
துதிகொள்சிங்கிகைமநுவேசுரபியோடருணைமற்றும்
விதிதெரியநகைகுரோன்றவிநதைகத்துருவையென்பர்
பதினொன்றுமிரண்டுமாகிப்பாரினையளித்தோர்பேரே. (௧௨)

அன்னவர்தம்மின்முன்னுள்யாவரும்புகழுமாறு
துன்னியவதிதியென்பாள்சுடர்தருமேனிகொண்டு
மன்னுபன்னிருவரென்றேவழங்குமாதித்தர்தம்மை
யின்னிலஞ்செய்தவத்தாலீன்றனளென்பமாதோ. (௧௩)

திதியெனுமொருத்தியேதந்தீரிரணியனையீன்றுண்
முதுமைசேர்பிரகலாதன்முதலைவரவனளித்தான்
கதுவுமாங்கவரின்மூத்தகான்முளைபிரகலாதன்
றுதிபெறுபுரோசன்கும்பனிகும்பன்முச்சுதரைத்தந்தான். (௧௪)

அன்னவன்விரோசனற்கேயருள்கொண்மாவலிவந்துற்றான்
சொன்னமாவலிக்குவாணன்றோற்றினுன்றநுவென்பாட்குப்
பன்னியசமுசிவிப்பிரசித்தெனப்பகரும்பேரார்
துன்னினர்நாற்பதானதூயதானவர்களம்மா. (௧௫)

ஆதலானவீர்கட்கெல்லாமளவறுபுதல்வர்தோற்றி
மேதினிநிறைந்ததிப்பால்விளங்கநாயுவையென்பாட்குத்
தீதறுமசுரர்நால்வர்செனித்தனர்காலையென்பாட்
கோதியநிருதர்தானைம்பதின்மர்வந்துதித்தாரன்றே. (௧௬)

சிங்கிகையென்பாடானோரிராகுவாஞ்செம்மறந்தா
டங்கியமனுவென்பாள்கந்திருவர்சோடச்ரைத்தந்தா
டிங்கமார்சுரபியென்பாள்ரம்பையர்தமையுந்தொல்சீர்
பொங்குமான்கணமுந்தந்தாள்புகழ்பெறவுலகமெல்லாம். (௧௭)

அருணையென் றுரைக்கும்பேராளழகுடைச்சித்திரான
பொருவறுகுலத்தையீன்றாள்புகழநகைப்பேர்பூண்டாண்
மருவியக்கரையுங்குரோதைககணையும்வயங்கத்தந்தா
ரருணனோடுவனன் றன்னையளித்தனள்விநதையென்பாள். (கஅ)

அருணனென் றுரைக்கும்பேரானுற்றல்சாலருஞ்சம்பாதி
பொருவுறுசடாயுவாதிபுதல்வர்மூவரைப்பயந்தான்
வெருவில்கத்துருவையென்பாள்விடவராவினத்தையீன்றாள்
கருதியமரீசிதந்தகாசிபன்வருக்கமீதால். (கசு)

பின்னுமங்கிரனென்னும்பிரமனார் புதல்வனார்க்கு
மன்னியவியாழமாதிமைந்தர்களுதித்தார்வானோர்க்
குன்னுதேசிகன்றானாகியுயர்ந்தனன் * சீவனென்போன்
பன்னுமத்திரியென்பாற்குப்பலமுனிக்கணங்கள்வந்தார். (உ0)

புலத்தியனெனுங்கோமான் றன்புதல்வன்விச்சிரவாவென்போ
னலத்தியல்குபேரன் றன்னைநல்கினன்மீட்டுமெண்ணில்
வலத்துயரசுரர்தம்மைவருவித்தான்புலகனென்போ
னிலத்திற்கிம்புருடர்கின்னரேசரைநிறையத்தந்தான். (உக)

கிருதுவென் றுரைக்குமைந்தன்கேடின்மாமுனிவரான
சுருதிவல்லோரையீன்றான்றொல்லைநான்முகனளித்த
கருதுபைதாமகற்குக்கான்முளையாகவந்தோன்
பெருமைசேர்மைந்தின்மிக்கபிரசாபதியெனும்பேரானே. (உஉ)

தொடர்ந்ததூமிரையேபுத்தி துணிமனச்சுவிநிமெய்ப்பேர்
மடந்தைச்சுவசனையோடுமகிழ்கொள்சான்றீலையென்பாள்
கடந்தநற்பிரபாசலைப்பேர்க்கன்னியோடெழுவர்தம்மை
யுடந்தையில்வரைந்தானன்னார்க்குதித்தனர்மைந்தரம்மா. (உங)

தூமிரைவருணற்றந்தாடுருவனைப்புத்தியீன்றாள்
சோமனைச்சுவிநிபெற்றாடனிவுறுநகுடன் றன்னைத்
தோமறுசரதையீன்றாள்சுவசனையநிலற்றந்தாள்
காமர்சான்றீலையென்பாள்கனலினைமகிழ்வாலீன்றாள். (உச)

அறிவினன்மிகுந்ததூயபிரபாசலையன்பினாலே
நெறியுறுபிரத்தியூடனிரைபிரபாவசுவையீன்றாள்
குறைவிலாவசுக்களெண்மர்குழாமிதேவருணனார்க்குப்
பிறவீணனென்பான்வந்தான்பேசருந்தூய்மையோடும். (உரு)

துருவனார்காலற்றந்தான்சோமன்வற்சரனையாதி
மருவுமைந்தரையளித்தோர்மாதையுமினிதிலீந்தான்
திருவனைபிரதைதான்கந்திருவர்கள்பதின்மர்தந்தாள்
வருமியனகுடற்காங்கோர்சோதியாமகன்வந்துற்றான். (உசு)

* சீவன் — பிரகஸ்பதி.

அனிலனுஞ்சிவையுங்கூடியஞ்ஞானவதியினேடு
நனியுயர்புரோசனென்னுநற்புதல்வனையுமீன்றாா்
கனலெனும்வசுவுமாங்கோர்கான்முளைகுமரற்றந்தான்
றுனிவருபிரபாசலைப்பேர்தோகைதந்தவர்கடம்மில். (உஎ)

முன்வருபிரத்தியூடன்முதன்மைதேவலனையீன்றான்
பின்பிரபாவசுவினுக்கும்பிரகற்பதிக்கிளையாளான
மன்வஸியோகசித்திமாதுக்குமுதித்தெழுந்தான்
மின்புவிபொலிவுண்டாக்கும்விச்சுவகருமன்றானே. (உஅ)

உருத்திரன்மிருகவியாதனுயர்சர்வனிருதிகைகன்
வருத்தகிற்புதன்பினகிவாமனேச்சுரன்கபாலி
தருக்கியதாணுபௌமனெனுமேகாதசர்கடம்மை
யிருக்குணர்நுதலினீந்தானிரணியகருப்பன்றானே. (உகூ)

மற்றவன்றனதுதூயவலக்கரமதனினன்மை
முற்றியதருமனென்னுமுதன்மறுவுதித்தான்றக்கன்
பெற்றகோதையரைவேட்டுமூவர்நற்குமரர்ப்பெற்றா
னற்றவர்தம்மின்மூத்தோனுயுள்வேதியரையீன்றான். (௩௦)

பின்னரும்பிரமனூர்க்குப்பிருகுமாமுனிவனென்போன்
மன்னிதையத்தெழுந்தான்மற்றவன்கவியையீந்தான்
சொன்னநற்கவியுஞ்சீர்த்திச்சுக்கிரன்றனையளித்தா
னன்னவனசுரர்க்கெல்லாமாரியனுயினனே. (௩க)

அத்தகைப்பார்க்கவப்பேராரியற்கரியநான்கு
புத்திரர்வந்தரக்கர்புகழ்மகமுடிப்போரானார்
சுத்தனும்பிருகுபின்னுஞ்சவனனுஞ்சுதனையீன்றான்
வித்தகமறுவளித்தகோதையையவன்வேட்டானே. (௩உ)

அன்னவண்மைந்தரோர்நூறளித்தனளதின்முன்னேற்கு
மன்னுசமதக்கினியன்வந்தனன்மறுவிலாத
பன்னிரேணுகையைவேட்டுப்பயந்தனன்மைந்தர்நால்வர்
முன்னவன்பரசுராமன்முனிவரின்முதன்மைபெற்றான். (௩௩)

மீளவும்பிரமனூர்க்குவிதாதைநற்றாதையென்போர்
வாளுறவுதித்தார்மீண்டுமிலக்குமிமானும்வந்தாள்
கோளின்மானதத்திலெண்ணில்குமரரையவள்பயந்தா
டோளிணைவரையைநேருந்தூயனும்வருணனென்போன். (௩௪)

தனையர்களிருவரோடுசரச்சுவதியையளித்தா
னனையமைந்தரின்மூத்தோன்பாலருண்மைந்தர்மூவர்வந்தார்
புனையுமாங்கவீரளித்தபூவையர்காக்கைசேனை
வனைதிரிதராட்டிரைப்பெண்பாசினிசுகியாய்வைத்தோர். (௩௫)

காக்கையென்பவளேதந்தாள்காக்கையின்குழுவையெல்லா
மாக்கியகபோதமின்றுள்சேனையுமன்னநேமி
மீக்குயர்வாகஞ்சிர்சால்விச்சுளிதனையளித்தா
டேக்கியவறிவின்மிக்கதிரிதராட்டிரையென்பாளே. (௩௬)

பாசினிபருந்தோடாந்தைபறப்பலவுயிர்த்தாள்பின்ன
ரோஸ்சுகொள்சுகியென்பாளுஞ்சுகங்களையுயிர்த்தாண்முன்னர்
காசிபர்மறுவென்றேதுங்காதலிதன்பான்மீட்டுந்
தேசுடைமடவாரெண்மர்சனித்தனர்திறலின்மிக்கோர். (௩௭)

மிருகியேமிருகமந்தைபத்திரமந்தைமிக்க
தருநிகரரிமாதங்கிசார்த்தூலைசுவேதைதயோடு
திருவுயர்சுரையென்றேதுந்தேமொழிமடவாரந்த
வொருமுனியளித்தமாதர்க்குரைத்திடுநாமமாமே. (௩௮)

ஒருத்திபல்விருகமீந்தாளொருத்திபல் லுயிர்களீன்றாள்
வருத்தமிலொருத்தியயிராவதந்தனையீன்றெடுத்தா
ய்ருத்தகுமதன்பாற்றெய்வநாகங்கள்சிறந்துதித்த
வருத்திகொண்டொருத்தியீன்றாளரியவானரங்கண்மாதோ. (௩௯)

மற்றுமாங்கொருத்தியீன்றாண்மாதங்கப்பொம்மலெல்லாம்
பெற்றனளொருத்திசிங்கம்பெரும்புலிமுதலவெல்லா
முற்றவாங்கொருத்தியீன்றாளுறுதிசைக்கரிகடம்மைச்
சுற்றுமற்றரிவைமூன்றுதோகையர்தமைப்பயந்தாள். (௪௰)

உரோகணிபத்திராங்கியுரைத்தகந்திருவையென்போர்
விராவுமான்கணத்தையெல்லாமுரோகணிவிருப்பிலீந்தாள்
பராரையைந்தருக்கள்வல்லிபத்திராங்கினியளித்தாள்
சுராசுரர்மகிழுஞ்சீரச்சுவங்கள்கந்திருவைதந்தாள். (௪௧)

தழைத்துயிரனைத்துமிந்தத்தகுதியால்விருத்தியாகி
யிழைத்திடுவினையினாலேயிறந்துமீண்டுதித்துநின்ற
கழைக்கணின்முத்தஞ்சிந்துங்கங்கைசீர்நாடாவிந்தக்
குழைப்புறுகாதைகேட்டோர்கொடும்பவந்தொலைத்தோரென்றான். (௪௨)

ஆயினுமமராதியருந்திறலுயிர்களெல்லா
நேயமாவுதித்தெழுந்தநிலைமையைநினக்குச்சொற்று
மாயவன்புனிதனுடல்வல்லபத்தசுரர்வானோர்
தூயநற்றலத்தில்வந்துதோற்றியவாறுஞ்சொல்வாம். (௪௩)

பிரபஞ்சவுற்பவச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௬௪௰.

---

# பாரதவீரருற்பவச்சருக்கம்.

வரமுயர்ந்தயாதவர்தம்வங்கிசத்தில்வசுதேவன்மைந்தனாகித்
திரமிகுந்ததேவகிதன்வயிற்றுதித்தானுலகளந்ததிருமான்மற்றுங்
கரமுயர்ந்தவசுதேவனாரோகணியைக்கலந்திடவக்கமலைகேள்வன்
சுரரிறைஞ்சுபலதேவனெனும்பெயராலொருருவந்தோற்றினானே. (௧)

இலக்குமிதன்கலையாலேயுருக்குமணிமுதலானோரெண்மர்வந்தார்
கலக்கமறுமரம்பையர்கள்கோவியராமடமாதர்கணமாச்சூழ்ந்தார்
துலக்குசனக்குமரர்முதற்றொல்லோர்கள்பலமுனிவர்சுதர்களானார்
நிலத்தமரர்போசகுலயாதவராயெண்ணிறந்தோர்நிறைந்துதித்தார். (௨)

அட்டவசுக்களிலெட்டாம்வசுப்பிரபாசனர்கலைவந்தவனிமீது
மட்டில்வலிக்காங்கேயனெனவுதித்துப்படையின்றுமருவலானான்
கட்டழல்காலசுரர்குலத்தேசிகனும்பார்க்கவர்தங்கலைவந்தாங்கோர்
திட்டமுறுபெருங்கேள்விச்சிலைவலாசிரியனெனச்செனித்தான்மன்னோ. (௩)

சொல்லுயருங்காமமொடுகுரோதத்தின்கலைவந்தேதுரோணன்றந்த
மல்லுலவுபுயனிவுளித்தாமனெனப்பெயராகிமருவலானா
றொல்லையினேகாதசராமுருத்திரர்தங்கலைதிரண்டோர்கிருபனானான்
வெல்லும்விபாகரன்கலையாற்கன்னனுதித்தான்வறிஞர்வெம்மைதீர. (௪)

தகுதிபெறுதுவாபரமாமுகந்தனதுகலையாலேசகுனிவந்தான்
மிகுதிகொளுங்கந்திருவர்குலவேந்தனமீசனெனும்விறலோனிந்தச்
சகமதனிலுயர்சீர்த்தித்திரிதராட்டிரனென்னச்சனித்தெழுந்தான்
வகைகொள்வசுமதியென்னுந்தெய்வதங்காந்தாரியெனவந்துற்றாள். (௫)

இருவருக்குமின்பமுறக்கலியுடையகலையதனால்விராசராசன்
மருவுசுயோதனனுதித்தான்விச்சிரவாவுதவசுரர்வருக்கத்தோர்தம்
பொருவில்கலைகளினிளைஞர்புவிவந்தாரிதுவன்றிப்புகழான்மிக்க
வெருவிலிரணியகசிபன்சிசுபாலனெனும்பெயரான்மேவினானே. (௬)

பிரகலாதனனென்போன்மத்திரபூபதியானான்பின்னோன்வந்து
முறுகுவலித்துட்டகேதுப்பெயரானுதித்தெழுந்தான்முறைவழாத
துறுதசேனப்பெயராற்புகழ்மிகுந்தசிபிவந்துதோன்றினான்
மறுவறுபாட்கலனென்போன்பகதத்தனெனும்பெயரான்மல்கினானே. (௭)

விப்பிரசித்தெனுமரக்கன்சராசந்தனாயுதித்தான்விறலான்மிக்க
கப்பறுபத்திரசேனன்முதலைவர்தகுவர்களித்தரணிமீது
செப்பியகேகயதேயத்திறலரசரெனவுதித்தார்திரடோட்காளை
யொப்பறுகேதுவந்தனெனுமுரவோன்சுதரிசனனாயுதித்தான்மன்னோ. (௮)

சுவர்ப்பானுவெனும்பெயரோனுக்கிரசேனப்பெயராற்றோற்றஞ்செய்தா
னவத்தாழ்சங்கமனென்போன்சோமகனென்றுரைத்தபுதுநாமம்பெற்றான்
றவக்கிருதவன்மனெனும்பெயராலச்சுவபதிமண்டலத்திற்சேர்ந்தா
னிவப்பிலிடபப்பனுவன்றீர்க்கமுறுபிராக்கியனாய்நீடினானே. (௯)

செயனென்போன்சோதரனுசரனெழின்மல்லர்பதியெனவுஞ்சேர்ந்தா
ரயகண்டனுரோசனனுஞ்சுக்குமன்பிருகத்திருதுமாகிவந்தார்
மயமுறுநற்றுருவென்போன்சேநாவிந்துவுமேகவட்டப்பேரோ
னுயர்பிருதிவிந்தனுமாயுதித்தனர்கள்விருப்பாக்கனொருவன்வந்தே. (௧௦)

சித்திரவன்மப்பெயரிற்றிகழ்ந்தான்மற்றரனென்போன்கிருதனானான்
மத்தனுசந்திரவதனன்பூரிசிரவசுவென்னமல்கினானு
உத்தமமாநிகும்பனியற்றேவாபியுயர்சரபன்சோமதத்தன்
மெத்தியசந்திரனுருசிமயூரனிகல்விச்சுவனாய்விளங்கினாரே. (௧௧)

சுதனுவெனும்பெயராளன்குரோதகீர்த்திப்பெயராற்றோற்றஞ்செய்தான்
மதனனையசித்தார்த்திமுதலானோரெண்ணிறந்தமைந்தர்தம்மைக்
கதனமுறவவனளித்தான்களிப்புறுசந்திரவத்தனந்தனானான்
விதனமுறுதீர்க்கநாவினன்காசியரசாகிவிளங்கினானே. (௧௨)

விசரனெனும்பெயராளன்விறல்கொள்வசுமித்திரனாய்விளங்கலானான்
கசரதனுஞ்சைதனும்பூசிரோட்டனெனும்பெயர்கொண்டான்கருத்தின்மிக்க
வசரகணனெனும்பெயரோன்கசபுத்திரப்பேரின்மருவலானா
னசுரனவிப்பெயர்கொண்டோன்சிகண்டியெனவேபுவியிலவதரித்தான். (௧௩)

சுரர்குருவும்பிரகதகீர்த்திப்பெயராற்றோன்றினான்றொலைவிலாத
வரமுயருமருத்துவராற்பாஞ்சாலன்விராடனுயர்வரிவிற்றிண்டோட்
புரமேயசாத்தகியாம்புரவலர்மூவர்களுதித்தார்பொருவிலாத
திரகுணனுந்தென்றிசையோன்விதுரனெனும்பெயர்கொண்டுசேர்ந்துளானே.

குத்திரந்தீரியக்கர்பதிபாண்டுவெனுந்திருநாமங்குறிப்போனானான்
சித்தியொடுபுத்தியுமாந்தெய்வதமிப்பூவுலகிற்கவுந்தியோடு
மத்திரையுமாயுதித்துமற்றவற்கேதுணைக்குரியமாதரானார்
பத்தியுயர்யமன்கலையாலுதிட்டிரனென்றுலகேற்றும்பழையோன்வந்தான். ()

வாயுவுடையருங்கலையால்வலிக்கதாயுதனுதித்தான்மகத்தின்வேந்த
னேயமுறுகலையதனானெறிவிசையனுதித்தெழுந்தானீடுஞ்சீர்த்தி
யாயுள்வேதியர்கலையாலணிநகுலசாதேவராகினாராற்
றாயசீர்மூர்த்திகலையாகசேனிப்பெயரிற்றோன்றிற்றன்றே. (௧௬)

அங்கியுடைக்கலையாலேதிட்டத்துய்மப்பெயரோனவதரித்தா
னெங்குமிவர்பற்பலரையீன்றார்கள்வானவருமெழிலால்வண்மை
தங்குநிருதர்கள்குலமுஞ்சார்ந்தவனியிடமிலவாய்த்தருக்கிவாழ்ந்தா
ரிங்கிதுகேட்டவர்படித்தோர்க்கிகபரங்களுளவாமென்றெடுத்துரைத்தான். ()

முனியுரைத்தமொழிகேட்டுத்திறலரசன்புகல்கின்றான்முதல்வரானோர்
தனியுலகிலவதரித்தவாறுரைத்தாய்வருணசதுட்டயத்தோர்தங்க
ளனியுயரும்பிறப்புமெங்கண்மரபின்வருக்கமுமுரைத்திநாயேற்கென்னக்
கனிகமழ்வாய்திறந்துமுனிகட்டுரைப்பானுள்ளமெலாங்கருதித்தானே. (கஅ)

காசிபனார்திதிவயிற்பாற்கரனையுதவினனக்கமலநண்பன்
வாசிபெறுசாயைதிருவயிற்றிடைவைவச்சுதமாமநுவுங்கூற்றும்
பேசுசனியமுனையொடுதபதியும்வந்துதித்தனர்வண்பெயரான்மிக்க
மாசறுவைவச்சுதமாமநுவாலுல்வருணத்தோர்வந்துதித்தார். (கக)

நின்மரபினியற்கதையுநிருபர்முதலுதித்தனவுநிகழ்ந்தவெல்லாஞ்
சொன்முறைதேர்வியாதமுனிசொற்றபடிச்சொற்றிடுவன்றொலைவில்சீர்த்தி
மன்வலியபுயத்தரசேகேட்டியெனவெடுத்திதனைவகுக்கலானான்
றன்மனமும்வாக்குமுடன்றானுமொருமித்தவருந்தவத்தினானே. (உ0)

பாரதவீரருற்பவச்சருக்க முற்றிற்று.

ஆகசெய்யுள் - கூங0.

---

# சந்திரவம்சம்.

## யயாதிச்சருக்கம்.

---

இணையிலாதவனிறப்பொடுபிறப்பெனுங்கடற்கோர்
புணையுமானவன்புனிதர்கண்மனத்துறைபுனிதன்
பணைகொடிண்புயப்பாண்டவர்க்கிகத்தினும்பரத்துந்
துணையதானவன்றுணைப்பதநமக்கினித்துணையே. (க)

* பொருந்தவானுறைநாள்களைநாடொறும்புணர்வோ
னருந்தவானவர்க்காரமுதன்புடனளிப்போன்
றிருந்தவானவர்க்கரியுவன்செஞ்சடைமுடிமே
லிருந்தவானவன்பெருமையையார்கொலோவிசைப்பார். (உ)

* மண்டலம்பயிலுரகர்பேருயிர்ப்பினான்மயங்கி
மண்டலம்பொரவருந்தியபெருந்துயர்மாற
மண்டலந்தனைநிழலெனுமரபினாற்றனது
மண்டலம்பொழியமிழ்தின்மெய்குளிரவைவைத்தோன். (ங)

* பைம்பொன்மால்வரைமத்தினிற்பணிவடம்பிணித்திட்
டும்பரானவர்தானவருடன்கடைந்திடவே
தம்பமானதீமன்றியத்தழல்விடந்தணிய
வம்புராசியினாரமுதுடனவதரித்தோன். (ச)

* பத்திரட்டியிலீரிரண்டொழிந்தபல்கலையோன்
மித்திரற்கவைகொடுத்துமுன்மீளவுங்கவர்வோ
னத்திரிப்பெயரந்தணனம்பகந்தனிலுஞ்
சித்திரக்கனன்முகத்திலும்பிறந்தொளிசிறந்தோன். (௫)

* அந்தியாரணமந்திரத்தன்புடனிவனை
வந்தியாதவர்வானிலுமண்ணிலுமில்லைப்
புந்தியாலுயர்புதனெனும்புதல்வனைமகிழ்வாற்
றந்தியாவருங்களிப்புறவிருக்குநாடன்னில். (௬)

* வளைநெடுஞ்சிலைக்கரத்தினன்மறவருண்மைந்த
னுளையெழும்பரித்தேரினனுறவதொன்றுணரான்
விளையருந்தவவிபினமுற்றம்பிகைவிதியா
லிளையெனும்பெயர்மடவரலாயினனென்ப. (௭)

* மாரகாகளமெழுவதோர்மதுமலர்க்காவிற்
றாரகாபதிபுதல்வனத்தையலைக்காணா
வீரகாமபாணங்களின்மெலிவுறமயங்கித்
தீரகாமமுஞ்செவ்வியுமிகும்படித்திளைத்தான். (௮)

* புதனுமந்தமென்பூவையும்புரூரவாவினைத்தஞ்
சுதனெனும்படிதோற்றுவித்தனரவன்றோன்றி
யிதனலம்பெறுமழகினுந்திறலினுமிலங்கி
மதனனுங்கலைமுருகனுமெனும்படிவளர்ந்தான். (௯)

நிலமெலாமொருவெண்குடைநீழலிலடக்கிச்
சிலையின்வண்மையினிகரிலாத்திகிரிமன்னவனா
யுலகெலாம்புரந்துற்றவர்க்குறுதியாயொன்னார்க்
கலகிலாக்கொடுமிடும்பையாயரசுசெய்திருந்தான். (௧0)

* பொருப்பினைச்சிறகரிந்தவன்புரத்துமங்கையரு
ளுருப்பசிப்பெயரொண்டொடியுருவினிற்சிறந்தா
டருப்பொழிற்பயில்காலையிற்றானவர்காணா
விருப்புறக்கவர்ந்தேகினரவளுடன்விசும்பில். (௧௧)

* கொண்டுபோதலுமையையென்றுருப்பசிகூவ
வண்டர்யாவருமஞ்சினரவருடனடுபோர்
வண்டுசூழ்குழலணங்கையிம்மதிமகன்மகனுங்
கண்டுதேர்நனிகடவினனசுரர்மெய்கலங்க. (௧௨)

* நிறந்தருங்குழலரிவையைநிறுத்திவாளவுணர்
புறந்தரும்படிபுரிந்தபின்புரந்தரன்றாதான்
மறந்தருங்கழன்மன்னவன்மண்மிசையணைந்து
சிறந்தவன்பொடத்தெரிவையைநலம்பெறச்சேர்ந்தான். (௧௩)

* மாயனூருவின்வந்தருளந்தமான்வயிற்றி
லாயுவென்றொருசெம்மலையம்மகனளித்தான்
றேயுவும்பலதேவருமகிழமற்றிவனே
மேயவண்புகழ்வேந்தரின்மேன்மையான்மிக்கோன். (கச)

* முகுடமும்பெருஞ்சேனையுந்தரணியுமுற்றுஞ்
சகுடநீரெனச்சதமகம்புரியருந்தவத்தோ
னகுடனுமவேனராதிபனுகருக்கரசாய்
மகுடமேந்தியகுரிசிலாயுவின்றிருமைந்தன். (கரு)

* புரந்தரன்பதம்பெற்றபின்புலோமசைமுயக்கிற்
சிரந்தமற்றவனேவலின்யானமுற்றேறி
வரந்தருங்குறுமுனிமுனிவாய்மையான்மருண்டு
நிரந்தரம்பெரும்புயங்கமானவனுமந்நிருபன். (கசு)

* மற்றவன்றிருமைந்தனின்மைந்தினுலுயர்ந்த
கொற்றவன்றிறற்கொற்றவைக்கிருபுயங்கொடுத்தோன்
முற்றவன்பகைமுகங்கெடமுகந்தொறுந்திசையிற்
செற்றவன்பெருஞ்செற்றமில்குணங்களிற்சிறந்தோன். (கஎ)

* யயாதியென்றுகொண்டிவனேயேயெவரினுஞ்சிறக்க
வியாதனும்புகழ்ந்துரைத்ததுமற்றிவன்மேனுட்
புயாசலங்களுக்கிசையவேபுகரவன் $ புதல்விக்
குயாசலந்தழீஇயிருவர்வெங்குமரரைப்பயந்தான். (கஅ)

என்னவோதலுமரசனுமற்புதமெய்திச்
சொன்னமன்னவன்புகர்தருந்தோகையைச்சேர்ந்த
தென்னகாரணம்வரன்முறையிசைத்தருளென்றான்
றன்னதாதரம்பெருகிடமாமுனிசாற்றும். (கக)

இடபன்மினென்றொருதிறலிராக்கதர்கோமான்
புடவியாவதுங்காக்குநாட்புகரவனிடஞ்சேர்ந்
தடலில்வானவர்கீழ்ப்படவசுரர்மேம்படவே
யிடரில்சூட்சிகளியம்பியேயவனுழையிருந்தான். (உ0)

கண்டுவானவர்காவலனிருதர்மேற்கனன்று
மண்டுபேரமர்மலைந்தனன்றகுவர்கண்மண்ணிற்
றுண்டமாய்விழுந்தநேகர்மாய்ந்தனர்வந்துதோற்றிப்
பண்டுபோலெழுந்திடமறைபார்க்கவன்பகர்ந்தான். (உக)

கவியினுலவருய்ந்துபோர்புரிதரக்கண்டே
யவியினுலுளமகிழ்பவரச்சமோடிருந்தார்
செவியின்முன்னவன்செப்பியமிருதசஞ்சீவி
புவியின்மாய்ந்தவருயிர்தரும்புகர்வயினுளதால். (உஉ)

$ சுக்கிரன்மகன் தேவயானை.

அன்னமந்திரநம்பெருங்குரவனேவறியார்
மின்னுலாவுவேனிருதரைவெல்வதிங்கெளிதோ
வென்னவுன்னியேயிமையவர்தனிநகரடைந்து
மன்னுதேசிகன்மைந்தனுங்கயற்கிதுவகுப்பார். (உந)

பழிபடும்படிமாண்டவர்பண்பின்மீண்டெய்தி
விழிபடும்படிமிருதசஞ்சீவிகள்விளைப்பான்
கழிபடும்படிநிறைபுகழ்கவியருகெய்தி
வழிபடும்படிபுரிந்தந்தமந்திரங்கவர்வாய். (உச)

என்றுகூறலுமிருசெவிக்கமுதெனக்கேட்டு
வென்றிமைந்தனுங்கயனுமவ்வெள்ளிபால்வந்தா
னின்றுபோற்றியேநின்னடித்தொழும்புசெய்திடுவான்
வென்றியாயிவணடைந்தனன்வேண்டுமாலென்றான். (உரு)

கேட்டபார்க்கவனன்றெனத்திருவுளங்கிளர்ந்து
பாட்டினிற்கயன்வழிபடப்பரிவுகூர்ந்தொருதன்
ளுட்டில்வைகுறுநாடனினைகைமுகச்செல்வி
பூட்டுவார்முலைத்தெய்வயானைப்பெயர்புனைந்தாள். (உசு)

புகரளித்தவள்புந்தியின்மிகுத்தவள்பொற்பின்
றகைமைமிக்கவடந்தைபாலிருந்தனடவத்தா
லகநிறைத்துளவருமறையந்தணன்குமரன்
குகனிகர்த்தவன்கொம்பனாட்கினியனாயிருந்தான். (உஎ)

இனையபான்மையினாள்பலகழிந்திடவிருந்த
தனையன்சார்ந்ததற்கொருப்படார்தகுவர்கள்வெகுண்டு
நினையுமுன்னர்போய்நீள்வனத்தேகியகயன்றன்
வனைவுறுஞ்சிரமாற்றியேமண்ணிடைப்புதைத்தார். (உஅ)

இறந்துபோயினன்றேழனென்றறிகலாளேழை
கறங்குதந்தைபால்வந்திலன்கயனெனக்கரைப்பத்
திறங்கொடந்தையுந்தெரிந்துசஞ்சீவிமந்திரத்தா
னிறங்கொண்மைந்தனையுய்ந்தெழச்செய்தனனினைவில். (உகூ)

வந்துமைந்தனுமாமுனிமலரடிபணிந்தான்
சுந்தரந்திகழ்தோகையுந்தன்னுளமகிழ்ந்தா
ளந்தநாண்முதனெடிதுநாளளவுமாங்கிருப்ப
வுந்துதானவருணர்ந்தறமுனிவுகொண்டிற்றார். (௩௰)

வேறு.

மற்றுமோர்தினத்தினந்தவல்லரக்கர்நீள்வனத்
துற்றமைந்தனைச்சிதைத்தருத்தகள்ளினிற்கரைத்
தற்றைவைகறேசிகற்களித்துளாரறிந்திலான்
குற்றமற்றதேறலென்றுகுரவனுண்டபொழுதினே. (௩க)

பருதியத்தவரையடைந்துபாரெலாமிருண்டபின்
சுருதிகற்றதெய்வயானைதோழன்வந்திலாமைகண்
டுருகியத்தனுக்குரைத்துயிர்த்துயிர்ந்துவிம்மல்கண்
டுருகுறத்திகழ்ந்ததந்தையன்புகொண்டுகூறுவான். (௩௨)

சென்றமைந்தன்மீளவந்துசேருமுன்னர்மாதுநீ
யன்றிலென்னவிம்மிநின்றழுங்கல்போதுமோவெனு
வன்றுவந்தநாடொடங்கியன்பினோடிபங்கினோ
னின்றுநீங்கிலென்றனெஞ்சிரும்புகொல்பொருந்தவே. (௩௩)

என்னவோதிமுன்னர்நின்றிரங்குவானையஞ்சலென்
றன்னதூயதந்தைசிந்தையவனியிற்பரப்பினான்
சொன்னமைந்தனின்மைகண்டுதுன்னுதன்னகட்டினுட்
பின்னமாயதங்குணர்ந்துபின்னரொன்றுகருதினான். (௩௪)

அசுரர்செய்தவாறிதென்றறிந்துபார்க்கவப்பிரான்
விசிதமானமந்திரத்தின்மீளமைந்தனாகவே
யிசைவினோடுசெய்தபின்னரிந்தமைந்தன்வந்துறக்
கசிவினோடுசிந்தைகொண்டுகட்டுரைப்பதாயினான். (௩௫)

வெற்றிமைந்தனுக்குகந்துமிருதசீவிமந்திர
மற்றைறவைகறந்துதன்னையகடுபீறிவெளியில்வந்
துற்றபின்னர்மந்திரத்தினுய்யுமாறுசெய்கெனச்
சொற்றகாலைசொற்றவண்ணஞ்சுதனும்வந்துதோன்றினான். (௩௬)

வந்தபின்னர்முனியையந்தமந்திரத்தெழுப்பியே
கந்தமாலையைப்புனைந்துகழல்பணிந்துநின்றன
னந்தமைந்தனைத்தழீஇயமர்ந்தநாளணங்கனாள்
சிந்தையிற்சிறப்படைந்துதேறிவைகினாளரோ. (௩௭)

பின்னருஞ்சின்னாளிருந்துபெறவொணாதமந்திரந்
தன்னைமுற்றுணர்ந்துவெற்றிதங்குதாரைதந்தவன்
மன்னுசுக்கிரற்பணிந்துமற்றவன்விடுப்பவே
பொன்னுடைத்தலத்தினிற்புகுந்திடப்பொருந்தியே. (௩௮)

தேவயானைபக்கல்வந்துசெல்வனென்றன்மாநகர்
மேவுகின்றுநீவிடுப்பவேண்டுமென்றுகூறலு
மாவியன்னநண்பினானகன்றிருப்பதாற்றலாள்
பூவைதன்கருங்கணீர்பொழிந்திடத்தியங்கினாள். (௩௯)

வேறு.

போவதேனென்னைநீங்கிப்பொன்னுலகதனிற்சென்று
லாவதேன்வன்னிநீயுமியானருங்கன்னியாமா
லேவதேமெனதுதந்தையின்புறவரைவுமுற்றித்
தாவநீங்கிடநீங்காமற்றங்குதறக்கதென்றாள். (௪௦)

அன்னசொன்மைந்தன்கேட்டேயறனலாநெறிமேற்கொண்டு
சொன்னசொன்மேம்பாடாமோதூயமந்திரமெனக்குப்
பன்னினேன்றந்தையன்னான்பயந்தநன்மகனீநாயேற்
குன்னருந்தங்கைநீயின்றுரைக்கொணாவுரைசொற்றாயே. (௪௧)

என்றிவன்மறுத்துக்கூறவேந்திழைமிகவுஞ்சீறி
வென்றியோயெனதுவாய்மையிலக்கினையாதலாலே
யின்றுனக்கெந்தையீந்தவிருக்கின்மந்திரத்தினாலே
யொன்றியநன்மையென்றுமுதவுறாதெனச்சபித்தாள். (௪௨)

ஆரணங்குரைத்தசாபமாரணமுனிவன்கேட்டுக்
காரண்மின்றிச்சொற்றாய்கன்னிநீகரவினுள்ளத்
தேரணிமந்திரத்தினெனக்கினிப்பயனின்றென்பாற்
பூரணமுறக்கற்றோர்க்குப்பொருந்துதற்கையமின்றே. (௪௩)

அறம்வழாநிலையினின்றேனாதலாற்பழுதுறாதென்
றுறுதியினுரைகள்கூறியொண்டொடிஞாயநீத்து
மறுவுறச்சபித்தவாற்றான்மணஞ்செயார்மறையோர்நின்னை
யிறைசெய்மன்னவர்பாலாகென்றிசைத்தவன்புரத்திற்போனான். (௪௪)

வானவர்தமக்குக்கற்றமந்திரமொழிந்தெதிர்ந்த
தானவர்தமைமுடித்துத்தருக்கிவாழ்ந்திருந்தாரிப்பான்
மானனைதேவயானைமன்னவனிடபபன்மன்
றானழ்குறவளித்ததையல்சன்மிட்டையென்பாள். (௪௫)

தன்னுடன்கூடியெண்ணிறுதியர்குழாங்கள்சூழ
மன்னுநீர்த்தடத்தினெய்திமாசறுதுகில்கணீக்கி
யன்னநற்கறையினுய்த்தேயதிர்த்துநீர்திளைக்கும்போதிற்
பன்னரும்பவனன்சாய்ப்பத்துகிலெல்லாம்பராவிற்றாலோ. (௪௬)

காற்றினாற்றுகில்களெல்லாங்கலைந்தொன்றாய்க்குவியலாலே
மாற்றுதலொழிந்துமாதர்வயம்படுதுகிலைச்சுற்றி
நீற்றிலரிருந்தார்பின்னர்நிகரில்சன்மிட்டையென்பா
டோற்றியதெய்வயானைத்துகிலெடுத்திடைபுனைந்தாள். (௪௭)

மருத்திதழ்குழலாடெய்வயானைக்குமங்கைமார்கள்
பொருத்துசன்மிட்டைதாங்கும்பொற்றுகில்கொடுவந்தீந்தார்
திருத்தமார்கரத்தினாலுந்தீண்டிலள்வெறுத்தாள்செல்வி
யுருத்தனளவளைநோக்கியோருரைவகுக்கலானாள். (௪௮)

நினதுபுன்றுகில்யான்கொண்டுநினக்கெனதாடையீந்தான்
மனதிலாதிகழ்ந்ததென்னேயென்றனண்மன்னனீன்றாள்
புனிதமாமறையோர்தங்கள்குலக்கொடிபொற்பினல்லா
யினிதினின்மாசினுடையியீற்கையோபுனைவதென்றாள். (௪௯)

புற்றரவணையவல்குற்பொற்றொடிதேவயானை
முற்றிதுபுகலவந்தமாதுசன்மிட்டைசீறி
யுற்றவென்றந்தைபாங்கருன்பிதாதொழில்களாற்றிக்
கற்றதன்விஞ்சைகாட்டிக்களித்துவாழ்ந்திருத்தல்காணாய். (௫௦)

மன்னவன்மகள்யானென்றன்மாசறுகலையுனக்கு
மின்னனாயெய்துமாறோவெறுப்பதுமுறையாமென்றே
சொன்னசொற்றொலையாமுன்னந்தோழியர்பலருந்தானு
மன்னவடனையோர்கூவலதனிடைவீழ்த்திமீண்டார். (௫௧)

போயினரவர்களிந்தப்பொற்றொடிகூவலாழ்ந்து
மாயிருவல்லியொன்றைவயங்குறப்பற்றிமாழ்கிச்
சேயகண்கலுழிகாலச்செறித்தவெண்டுகிலினோடு
மாயவளிருந்தாள்வெற்றியயாதியவ்வனத்தடைந்தான். (௫௨)

பல்லியமுழங்கநீள்கைப்பகடுகளநேகஞ்சூழ
வில்லணியெயினரோடுவெம்பரிக்குழாங்கள்சார
மல்லுறுபுயத்தோனந்தவனந்தனில்வேட்டஞ்சார்ந்தே
நல்லநீர்நசையாலந்தக்கூவலைநயந்துகண்டான். (௫௩)

வாரிசமுகம்வியர்க்கவாயிதழ்புலரவைகு
நேரிழைதன்னைக்கண்டேநிருபனற்புதத்தனாகி
யாரினியுரைத்தியென்றானரசனென்றறிந்துதந்தைப்
பேரினையுரைத்தாளன்னான்பெண்கொடியானுமென்றாள். (௫௪)

கடைந்தவேல்விழியாரோடுகைகலந்தாடவிங்கே
யடைந்தனன்கூவல்காணாதாழ்ந்தனனவனிகாக்கு
மிடைந்தபுன்னாகமாலைவேந்தனேதுயர்தீர்த்தென்னை
யிடைந்திடாதெடுத்தியென்னவிறைவனெஞ்சுருகினானே. (௫௫)

கூவலினிறங்கியிந்தக்குவலயங்காக்கும்வேந்தன்
மேவுதன்வலக்கைநீட்டிவிளங்கிழைதன்னையேந்திப்
பூவுறைதிருவையன்னபூவையைப்புவிப்பாலாக்கி
மேவுதிநகரிலென்றேவேந்தன்மீண்டூர்புகுந்தான். (௫௬)

காவலன்போனபின்னர்கண்கணீர்ததும்பநின்று
தேவயானைப்பேர்கொண்டாள்சீற்றத்தோடிருக்கும்போதின்
மாவலானொருவனெய்தமாதிவணடந்தவெல்லா
மாவலாலவனுக்கோதியத்தனுக்குரைத்தியென்றாள். (௫௭)

அன்னவனெய்திக்கூறவளித்தவன்விரைந்துவந்து
மின்னனைதன்னைநோக்கிமிளிர்ந்தகட்புனலைமாற்றித்
தன்கிளையுணராமாத்தாமதகுணத்தாற்றக்கோ
யுன்னுழைத்தீங்குசெய்தாருறுதிநீபொறுமையாதல். (௫௮)

விரதங்கள்வழுவுறுமல்வேள்வியாயிரஞ்செய்வானிற்
சரதஞ்செய்பொறையுளானேதலைவனென்றுரைக்குநூல்க
ளிரதமார்மொழியாய்தோற்றுதேழைசெய்கொடுமைதன்னை
யரிதெனப்பொறுத்தியென்றானவளிதுபுகல்வதானாள். (௫௯)

வேறு.

புல்லோரிடத்திற்றனதருமைபோற்றாரிடத்திற்பயில்வதுவே
நல்லோர்தமக்குத்துயர்தந்நகரைவிடுத்துநீங்குவதே
யொல்லுமியற்கையெனமீண்டுமுரைத்துப்புலம்புந்திருமகளை
முல்லைமுறுவன்முகமோர்ந்துமுனியேலவ்வூர்புகேனென்றான். (௬௦)

தனையைறுயரந்தீர்தரவத்தவத்தான்மிகுந்தோனுங்குலவைப்
புனைசேர்வாசப்பொழுதும்பரிடைபுகுந்தேயிருக்குமமையத்தி
வினையபான்மைசன்மிட்டைக்கீன்றேன்கேட்டுநடுநடுங்கி
யனையோரிருந்தசூழலில்வந்தடைந்தேயிதனையறைகின்றான். (௬௧)

வானோர்பகையுமறநிறுவிமறையாகமங்கள்பயில்வித்து
மேனாண்முதலாவெனைக்காத்துவிறலும்வலியுந்தந்தாண்ட
ஞானாசிரியப்பெருமானேநண்பிற்பிழைத்திங்குய்வேனோ
வானவமுதேதவருதியெனவணங்கைநோக்கிப்புகல்கின்றான். (௬௨)

சீரார்சிறியள்புன்மதியாற்செய்ததீமைக்கவடனக்கு
நேராவியற்றுந்தண்டனைநின்னினைவின்படிதந்திடுவனெனப்
பாராதுரைக்குமணியிடபன்மன்றனக்குப்பகரரிய
கூரார்குழலாள்புகல்கின்றாள்கண்போற்சிந்தைகனல்கால. (௬௩)

மதவெங்களிற்றோயானுரைத்தவண்ணம்புரியவல்லாயேற்
சதுர்விஞ்சுனதுபெரும்புதல்விசன்மிட்டையுமோர்சகத்திரமா
முதிர்தன்மடவார்பெருங்குழுவுமுகிழ்த்தகரத்தோடநுதினமுந்
துதிகொண்டெனதுதொழிலாற்றத்துணிந்தீகுதியோசொல்லென்றாள். (௬௪)

அவ்வாறளிப்பனெனப்புதல்வியணங்கனுமடவாரு
மிவ்வாறிவடன்றொழிலாற்றவிசைந்தேயளித்தானிவர்மகிழ்ந்து
கைவேலரசனுடன்போந்துகருதுநகரிற்சிறந்திருந்தா
ரொவ்வாவன்னப்பெடைநடைச்சன்மிட்டையுகந்துபணிசெய்தாள். (௬௫)

மற்றோர்வைகற்றோழியருமடவாளினியசன்மிட்டை
நற்றுதியும்வந்தடிதாழநணிசேர்தேவயானையெனும்
பற்றுவிடையாணறவீசும்பழுவத்தடைந்துபயில்போதி
லுற்றாருடனேயயாதியெனுமுரவோன்பொதும்பர்நெறிவந்தான். (௬௬)

பூசுங்களபக்கடிநறையும்புனைந்தமுல்லைத்தொடைநறையும்
வாசஞ்செறிந்தகுழனறையும்வனமாந்தளிர்நேருடனறையும்
வீசுந்தென்றற்கவர்ந்துகதிர்வேலான்முகத்தினெறிந்திடலாற்
பேசுங்குரிசிலுயிர்த்தடைந்துபெண்ணாயகங்கடமைக்கண்டான். (௬௭)

கந்தமலராயிரவிதழுங்கமழும்வாசக்கருணிகையு
முந்தவிளங்கவீற்றிருக்குமுளரிச்செல்வியிவளென்னு
மிந்துவதனப்புகரளித்தவினியதேவயானையையும்
விந்தைமடவார்பலரையுஞ்சன்மிட்டைதனையுங்கண்ணுற்றான். (சுஅ)

அரசன்றனையாங்கவரறிந்தேயன்பாற்பூசைக்கடனியற்றி
வரிசைத்தவிசின்மிசையிருத்திவைகுமளவின்மதிவேந்தன்
கிரிசைக்கரியநெடும்பூசைகிளர்த்துந்தேவயானைமுன்
பரிசித்துணர்ந்துமுணரான்போற்பவளத்திருவாய்மலர்ந்துரைப்பான். (சுகூ)

வனப்பின்மிகுந்தகுலக்கொடியேமடவார்பலரோடிவ்வனத்திற்
பனிப்பான்மதிபோலொளிர்கின்றாய்பதியுங்குலமும்பகரென்றான்
மனத்திலிவனையுணர்ந்துணராமங்கைசிறியநகைகாட்டிப்
புனத்திற்பஞ்சவனக்கிள்ளைபோலப்புகல்வாள்புகர்தந்தாள். (எ0)

அறிவேனுன்னைக்குலவேந்தேயறியாய்கொல்லோநீயென்னை
மறுவார்கூவலிடைகிடந்துமறுகும்போதுவலக்கரந்தந்
துறுதிபயக்கவெடுத்தளித்தவுலகுக்கொருவனீயன்றோ
சிறியேன்புகர்தந்தருள்புதல்விதேவயானையென்பெயரே. (எக)

சந்தமுலையாளிடபன்மன்தந்தகொடியெண்ணிருகலைசே
ரிந்துமுகியாஞ்சன்மிட்டையெனக்குத்தாதியெனவந்தாள்
வந்தகொடிதன்றோழியராமற்றைமடவாரிவரோடு
முந்தன்புயங்கண்முயங்கிடுவானினைந்தேயுமையைத்தொழுகின்றேன். (எஉ)

பருவந்தனிலுங்கலைகளினும்பயில்விஞ்சையினும்பாரிடத்திற்
கருதும்பொழுதுநிகரில்லாக்கன்னியென்னைநீமுன்னளிற்
பெரிதும்வலதுகரநீட்டிப்பிடித்தாயன்றேபிரானீயா
மரிதுமென்னைநீவேட்டின்பமளித்தியென்றாளணங்கன்னாள். (எஙூ)

மன்னனவடன்மொழிகேளாமனதுகலங்கிமடவனமே
பன்னுமறையோரெக்குலத்தும்பாவைமாரைவேட்டிடுவர்
சொன்னமறையொர்குலத்துதித்ததோகைமாரைத்தாழ்குலத்தோர்
பன்னும்பியலாற்கரந்தொட்டுப்பயிலும்பெற்றியுணரேனே. (எச)

உலகோர்வருணசிரதருமமொருகாலத்தும்பிசகாமற்
பலகால்வினவிக்காத்தளிக்கும்பாருக்கிறைநான்பகர்கின்ற
நலனூர்சுருதிமுறைபிழைத்துநங்கைநின்னைத்தொடுவேனோ
குலமார்கொடிநீயறவிருத்தங்குறிப்பதழகோகூறென்றான். (எரு)

வடமால்வரைநேர்புயத்திறையேமலரோன்விதித்தபடிக்கன்றி
யிடனுய்வேறொருரைவாக்கினெய்துங்கொல்லோவென்றந்தை
யுடனுயுதகந்தந்தியுநீங்குவப்போவுரைத்திநீயென்றே
யடலார்கோதையியம்பிநலமரசனிதனையறைகின்றான். (எசு)

நிறையும்பொறையும்பலமறையுநீதிஞானத்தனிநெறியின்
முறையுமறியும்புகராயமுனியேசெய்யுங்கருமமெனிற்
பறையுஞ்சுருதிவிதியாகப்பாவைநினைக்கைப்பிடிப்பனென
விறையுமவடனிருசெவிகட்கின்சொலமுதமெனச்சொன்னான். (௭௭)

மாதுமொருபெண்டனையேவிவருவித்தத்தன்றனைப்பணிந்து
காதுங்கூர்வேலரசனையுங்காட்டித்தனதுகரந்தொட்ட
போதின்செய்லும்வேறொருவர்பொருந்தாமனமும்புகன்றிவனே
நீதின்மணவன்றனக்கென்றுடெய்வமுனிவன்மகிழ்ந்தானே. (௭௮)

அரசையடைந்துதொழுதேத்துமவனுக்காசிமறைவழங்கி
யுரைசெய்மகட்குமுனிசாபமுற்றவாற்றலுயர்மறையோர்
வரிசைவேள்விசெயலாகாமாதைநீயேவரைகவினி
யிறைசெய்தருமவிருத்தமிதற்கில்லையென்றுரைத்தானிணையில்லான். (௭௯)

அன்னானுறையேயருமறைநூலாகக்கொண்டுமணமுடித்துப்
பொன்னாரனையசன்மிட்டைபொருந்துமடவாராயிரவர்
தன்னோடெய்தப்புகரளித்ததனையையோடுந்தனிவேலான்
மின்னார்குடுமிமாநகர்போய்மேவிநலனில்விழைந்தானே. (௮௦)

அந்தப்புரத்திற்புகரளித்தவானையிருப்பவாங்கொருசார்
சந்தப்பொதும்பரிடைமாடந்தனிற்சன்மிட்டைமடவாரோ
டுந்தித்தினமுமிருந்திவள்பாலுற்றுத்தொழில்கண்முடித்தபினர்
வந்திப்பொதும்பரிடைசார்ந்துவாழச்சிறந்தான்வயமன்னன். (௮௧)

மதனுமிரதிமடமாதும்வயங்குங்காமந்திளைத்திடல்போற்
பிதிருமுலையாளுடனரசன்பெருக்கவின்பம்பெறுநாளிற்
புதனுநிகராப்பெருங்கல்விப்புதல்வரிருவர்தோற்றினரால்
விதிர்வாள்யதுதுர்வசுவென்னும்விறலோர்வியக்கும்பெயர்கொண்டோர். (௮௨)

வேறு.

வந்ததிறன்மைந்தரொடுமன்னன்வளனெய்தி
யிந்திரனெனும்படியியங்குமமையத்திற்
சந்துறுபொதும்பரிடைதண்ணிலவினூடே
யந்தவிறன்மன்னவனடைந்தனனுலாவ. (௮௩)

மாதவிவருக்கைவழைமாவரைகடம்பு
தாதகிகடுக்கைபுனைசண்பகமுதற்கோ
டேதமறுபாதபமியங்குபழுவத்து
ளோதுதிறன்மன்னவனுலாயவமையத்தின். (௮௪)

தானவர்குலத்திறைதவத்தினிலளித்த
மானனைவிறற்குரிசில்வந்ததுணர்வுற்றே
தானவனிருந்துழிதனித்தெதிரடைந்து
பானல்விழியாளிதுபகர்ந்தனள்பணிந்தே. (௮௫)

போதுமொருநாள்றிவுன்மைபடலாலே
தாதியெனவன்னவடனக்கெளியளானேன்
சீதரனுநாணுமிருதிண்புயவனப்போ
யோதுபொழுதென்னறிவினொப்பவரியாரே. (அசு)

மானைவிறல்கொண்டவிழிவார்கொண்முலைதேவ
யானையையணைந்தெனையகற்றலறமின்று
லேனையவடன்றொழிலியற்றினுமுனக்கே
யீனமறுகற்பின்மனையென்பதுபொய்யின்றே. (அஎ)

வளம்படுமவற்கினியவாழ்வுபெறவைத்த
லளந்தறிவுறுங்குரவர்தங்கள்கடனன்றாற்
றளந்தவர்தமைத்தலைமைதங்கிடமுடித்தே
விளங்குபுகழ்கைக்கொளில்விருத்தமிலைமன்னோ. (அஅ)

ஆதலினியானுமதனைங்கணையினொந்தே
காதல்கரைகண்டிலனுனைக்கடிதுகண்டேன்
றீதறவெனைத்தழுவல்செம்மையெனவோதி
டாதுதிறனாணினொடுமன்னனெதிர்நின்றாள். (அகூ)

வேறு.

தொண்டையங்கனிபோற்சிவந்தவாய்துடிப்பத்தூமமார்நறைக்குழறுளங்க
மூண்டகப்பதத்திற்சிலம்பொலிபுலம்பமுகிண்முலைப்பரம்பொறாதொல்கி
யுண்டிலையென்னுமிடைதுவண்டொசியவுடுத்தமேகலைகலகலன
வண்டிநின்றுரைக்குமணங்குரைகேட்டேயரசனுமனன்மெழுகானான். (கூ0)

தோரணவாழைத்துடையிரண்டுடையதோகையேதேவயானையைமுன்
னாரணநெறியான்மணம்புரிநாளிலாயிரருடனினைக்காட்டிச்
சீரணியாடையுண்டியேமுதலாஞ்சிறப்பெலாமளித்தியீங்கிவர்க்குப்
பூரணவின்பமறுத்தியென்றுரைத்தான்புகரெனும்புனிதமாமுனிவன். (கூக)

ஆதலாலவன்றன்வாய்மையையிகந்துன்னணிமுலைப்போகம்வேண்டுவனே
லேதமாமெனதுவாய்மைமாசடையுமென்றுரைத்தவனிபனிடைந்தான்
மாதுபின்மொழிவாண்மறையவர்பசுக்கண்மற்றுளோருயிர்கெடுமிடத்துங்
காதலினிசைந்துமணஞ்செயுமிடத்துங்கட்டுரைபிசகினுநன்றே. (கூஉ)

மடப்பிடையன்னநடையினுளந்தமாதவப்புகர்தருமடந்தை
திடப்படுமெனக்கேயாண்டகையெனினுஞ்செம்மனீசஞ்சலமின்றித் [ற்
தொடப்படுமுடையோர்தொழும்புசெய்பவர்க்குந்துக்கமுஞ்சுகமுமொன்றுமா
றடைப்படாக்கருப்பதானமென்றிரந்தேன்றள்ளுதற்குளதுகொறலைவ. (கூ௩)

விடக்கடன்மதியும்வேளுமென்மீதுவெகுண்டெழுந்தனரெனவெருவி
யிடத்தினின்சரண்வந்தடைந்தனனிகழ்வதியற்கைகொலரசருக்கென்றாள்
கட்க்கிலனவள்சொற்காமவேள்கணையாற்கலங்கியமாதுடன்கலந்து
பொடித்திடப்புளகப்புணரியாழ்ந்தரசன்புலரியிலிருந்தகம்புகுந்தான். (கூச)

அன்னதாண்முதற்கொண்டொருவருமுணராதவளுடன்புணர்ந்தகமகிழ்ந்து
மன்னவன்றருக்கிவாழுநாளந்தமங்கையோர்புதல்வனையளித்தாள்
கன்னலந்தீஞ்சொற்காரிகைதேவயானையக்காரணங்கேட்டு
மின்னனையுழைவந்தெவ்வணமளித்தாய்விளம்புதிமைந்தனையென்றாள். (கூரு)

மறையெலாமுணர்ந்தமாமுனியொருவன்வரத்தினாலளித்தனேனென்ன
நறைசெய்வார்குழலாளினியசன்மிட்டைநவிறலுநயந்தவண்மீண்டே
யுறையுள்போயடைந்தாண்மைந்தனுமாயுமுறைறந்தனரவ்வனத்திடையே
நிறைவினுங்கதற்பினிருவரைப்பயந்தாணிருபனைச்சேர்ந்தநேரிழையே. (கூசு)

அருளுடைப்புதல்வர்மூவருமந்தயயாதியைநிகர்வனப்பினராய்த்
தெருவிடைவரக்கண்டருகினிலழைத்துத்தேவயானைப்பெயர்புனைந்தாள்
கருதிநீர்யாவர்புதல்வர்களென்றாள்காவல்கூர்யயாதிதன்புதல்வர்
முருகுறுகுழற்சன்மிட்டைதாயென்றார்மொய்குழலன்றுணர்ந்தனளே. (கூஎ)

மாதுளமழன்றேயரசனைவெறுத்துவந்துதன்றந்தையர்க்குரைப்ப
வேதியனடைந்தேமருகனைநோக்கிவிளம்புவானென்னுரையிகந்தா
யாதலான்முதியவிருத்தனுய்ச்சரையாலயருதிநீயெனச்சபித்தான் [பான்.
மேதினிபுரக்குமன்னவன்றொழுதென் வினைப்பிழைபொறைசெய்யென்றுரைப்

கறுத்தவார்குழலாளியானிருந்துலவுங்காவணத்தெய்திநன்னிலவிற்
சிறுத்தசீறடிசேர்மழலைவாய்க்குழவிச்செல்வம்வேண்டினனெனவிரந்தாண்
மறுத்திடல்வழக்கன்றெனமனத்திரங்கிமகப்பெறுமாறளித்தனனீ
பொறுத்திடாதிருத்தல்போதுமோவென்றான்புங்கவன்றிருவுளமகிழ்ந்தான்.()

மீளவுங்கருணைக்குரியனுயந்தவேந்தனைநோக்கியேமொழிவான்
காளையாநினதுமைந்தரிலொருவன்கதித்தநின்மூப்பினைக்கவர்ந்து
வாளணிதனதெவ்வனந்தனைநினக்கேவழங்கிடச்சிலதுநாடினைத்துக்
கோளிலாய்மீளக்கொடுத்திநல்லரசுங்கொடுத்தநல்விளமையுமென்றான். (க௦௦)

தனதுமாமகடன்சிற்றமுநீக்கித்தரணிகாவலனுடனிருத்தி
யனையவர்விடுப்பப்புகரவன்மீண்டானரசனுக்கன்னவன்சாபக்
கனலெழுந்துடலைமுருக்கிடவெளிறிக்காத்திரம்பழுத்தறமுதிர்ந்து
புனைநரைசரையுமிருமலுமிகுந்துபுரவலன்றுயருழன்றனனே. (க௦க)

ஒருதினந்தனதுதேவயானைப்பேருயர்குலக்கொடிதருபுதல்வ
ரிருவரைநோக்கிமுதுமைகைக்கொண்டும்மிளமைதந்திடுதிரோவென்னப்
பருவரலுடனுங்கவர்மறுத்திடலாற்பார்த்திபன்வெகுண்டறமுணரா
வருவினைக்கிராதர்க்கிறைவராய்ச்செலவென்றரியசூளுரைத்தனன்மன்னே. ()

வேறு.

தானவர்குலத்தில்வந்ததையல்சன்மிட்டையென்பாண்
மீனுறழ்கண்ணிதந்தவிறற்சுதர்தம்மைநோக்கி
வானணிமுதுமைகொண்டுவாலிபந்தருகவென்று
னீனமில்பூருவென்னுமுன்னவனிசைந்திந்தானே. (க௦௩)

சுதனுடையிளமைகொண்டுதோன்றலுந்தருக்கிச்சின்னாண்
மதிநுதன்மாதர்போகமகிழ்ந்தனன்வெறுத்தபின்னர்
முதுமைகைக்கொண்டமைந்தன்முன்வரவழைத்துமீட்டுங்
கதிர்முடிக்குடையும்வாளுமிளமையுங்களிப்பினீந்தான். (க0௪)

மைந்தனைத்தவிசினேற்றிமாமணிமகுடஞ்சூட்டிப்
பைந்தொடிமாரைநீங்கிப்பார்த்திபன்றவத்திற்சார்ந்தே
கந்தமூலங்களோடுகாயிலைமிசைந்துநாளுஞ்
செந்தழனடுவணின்றுசீர்பெறத்தவமிழைத்தான். (க0௫)

ஒருபதத்தநேகங்காலமுதகத்திலநேகங்காலம்
இருகரஞ்சிரமேலேற்றியிருந்தவமநேகங்காலம்
வருபுனன்முதற்றொடாதுமாதவமநேகங்காலம்
பொருவறவிருந்துசெய்தான்புனிதர்கள்சிரந்துளக்க. (க0௬)

நான்முகன்வியந்தடைந்துநன்மணிவிமானநல்கி
வான்கிளருலகமெங்குமருவிடவரமுநல்கித்
தான்கிளர்பதமுநல்கித்தண்ணளிபுரிந்துபோனான்
றேன்றிகழ்தார்துறந்தோன்றேவரிற்சிறந்தோனானன். (க0௭)

சத்தியவுலகிலெண்ணிறந்தொளலாஞ்சரித்தபின்னர்
வித்தகவமரர்வேந்தன்விண்ணுலகதனைச்சார்ந்தான்
புத்தமுதசனவீந்தபுதுமணியாசனத்தி
லுத்தமனெடிதுகாலமிருந்தனனுயர்விநோடும். (க0௮)

வாசவனொருநாளந்தமன்னவனுடனிருந்து
பேசியபொழுதிற்றான்செய்பெருந்தவந்தனைவியந்து
மாசறுமியக்கர்சித்தர்முனிவரர்வானோர்தங்க
ளாசறுதவங்கடம்மையிகழ்ந்தனனரசர்கோமான். (க0௯)

மகிபதிசீறிமுன்னர்வான்றவநீங்கிற்றின்றே
செகமதிலடைகவென்னச்செம்மலுமனந்தியங்கி
யிகமதியதனுற்சொற்றேனென்பிழைபொறுத்துமண்ணிற்
புகுவதினந்தரத்திற்பொருந்தனன்றருள்செய்யென்றான். (கக0)

அந்தரந்தனில்வைகென்றுகண்டலனறையமன்னன்
வந்தவணிருந்துகூடமருவுவோர்தம்மைநோக்கி
யெந்தநாடுமதுதேயமெத்தவமிழைத்திங்குற்றீர்
முந்துநுங்குலமேதென்றான்முறைமையாலவர்கள்சொல்வார். (ககக)

கங்கைமாநதியின்சாரற்கவினுடைக்குருநாடென்னு
மங்கணுடைளிக்குந்திங்களருங்குலயயாதிதந்த
துங்கமார்தனயன்மைந்தர்தொல்புவிகாத்துவண்மை
தங்குநல்லறங்களாற்றிச்சார்ந்ததிக்கதியினென்றார். (ககஉ)

கேட்டமன்னவனுமானைகிளர்வுறத்தழுவியானே
காட்டியயயாதியென்றான்கருத்தினர்வியந்துசால
வாட்டமோடடைந்ததென்னேவகுத்தியென்றவர்கட்கேட்பப்
பூட்டியேபுகன்றான்முன்னர்கடந்துளபுலமையெல்லாம். (கக௩)

அன்னவர்வியந்துபோற்றியண்ணனீயெம்முனெய்த
வென்னமாதவஞ்செய்தோமென்றேற்றியபின்னர்மீண்டுந்
துன்னியமறைகளெல்லாந்தூய்மையாலுணர்ந்தோய்நின்மாட்
டின்னிலைபெறுமாறென்றுண்டென்றிதையிசைப்பதானார். (கக௪)

திருந்தியதருமம்பாவஞ்சேருநற்கதியினோடு
பொருந்துதுர்க்கதிச்சொரூபம்புகுந்துயிர்க்கருவுற்பத்தி
வருந்துமாசிரமநான்கின்வழிபடன்முதலவெல்லாந்
தெரிந்திடவுரைத்தியென்றார்தெளிந்தவன்புகல்வதானான். (கக௫)

வேறு.

இரங்குறும்பெருந்தயாவுடன்சரதமென்றிரண்டிற்
பரங்கொளும்பெருந்தருமமாம்பார்தனக்கிடுக்கண்
புரிந்திடாநெறியன்னவைபுரிவதேதகண்டீர்
விரிந்தபாதகந்தனிலெலாமேம்படும்பாவம். (கக௬)

ஆரணங்களின்விதிவழியாற்றுறுங்கருமம்
காரணங்குறித்தியற்றுவோர்கதிவழிநடந்தோர்
சீரணங்குமாமறைநெறிதிறம்பியதீயோர்
பாரணங்கிகழ்துர்க்கதிநெறிவயப்பட்டோர். (கக௭)

விருப்பின்மாதர்பூப்புதரசோணிதத்திடைவீழ்ந்த
வருப்பவீரியமுலவையாலைந்தெனுங்கிளையா
யுருப்புனைந்தவயவங்களோடுயிர்பெறவிளங்கிக்
கருப்பைதங்கிவந்துதித்திடுஞ்சிலதுநாட்கழிவில். (கக௮)

செவிகளாலருஞ்சத்தமுந்திருக்கினுலுருவுங்
கவைகொணுசிகளாலிருகந்தமுநாவாற்
றவிரிலாவிரதங்களும்பரிசமுந்தனுவா
லவிருமானதத்தாற்பிரபஞ்சமுமறிந்தே. (கக௯)

முன்னரிற்பிரார்த்தமாம்வினைவழிமுயங்கித்
துன்னுதுர்க்கிருதஞ்சுகிர்தங்களிற்றுளைவார்
மன்னுதீவினைவலிதெனிலறங்களைமறந்து
தன்னுணர்ச்சிகெட்டஃறிணைகளினுடறறிப்பார். (க௨௦)

மேலைநல்வினைவலிதெனிற்பவங்களைவீட்டிக்
கோலமானிடயோனியினுதித்துநற்குணராய்ச்
சாலுமுத்தமாசாரமுந்தத்துவவிதியுஞ்
சீலமும்பெறுங்கடவுளராய்க்கதிசேர்வார். (க௨க)

வன்னியாகியபிரமசாரியத்தொடுவானோர்
மன்னுமில்லறம்வயங்குவானப்பிரத்தத்தோ
டுன்னருமதியாசிரமங்களோர்நான்குந்
தன்னினேவழாதியற்றுதலுத்தமாசாரம். (கஉஉ)

சொன்னவாசிரமங்களிற்சுருதிகற்றுணர்தன்
முன்னர்தேசிகன்பணிவிடைமுறைவழாவோமம்
பன்னுநற்கமைதமையொடுசௌசமுட்பட்ட
தின்னதாமுதற்பிரமசாரியத்திருந்தியற்றல். (கஉங)

ஒல்லையிற்றருமங்களுக்குடந்தையாய்த்தீமைக்
கெல்லையற்றவச்சத்திறேடியன்மகம்புரித
றெல்லையேவிருந்தோம்புதல்பிறர்தனந்தொடாமை
யில்லறத்தினோர்செய்கையென்றருமறையிசைக்கும். (கஉச)

நிரைத்தவாசையும்பந்தமுநீக்கியோர்மனதாய்
விரைச்சிதேந்திரியத்தராய்விலக்குவவிடுத்தே
யுரைத்ததேவிசைந்துளகடன்முறைவனத்திருந்து
திரத்தினுற்றன்மூன்றுவதாச்சிரமத்தின்செய்கை. (கஉரு)

தினமுமோரிடம்வாசமாய்த்திகழுடனிறுத்தற்
கினிதினற்பமாமுண்டிகொண்டியற்றுமுன்கடன்க
டனையெலாமறந்தேடணைமூன்றையுந்தணந்து
மனமும்வாய்மையுமுடலுமொன்றாகியேவழங்கி. (கஉசு)

காடமாதிமுக்குற்றமுங்கடிந்துபட்டினத்திற்
றுமடைந்திடாதொருபெரும்பற்றினுஞ்சாரா
தேமமென்பதுமிரும்புமொன்றுவுணர்ந்திருந்தோர்
நாமநான்கெனுமாச்சிரமத்துறைநடப்போர். (கஉஎ)

ஆதலாலிந்தவாச்சிரமங்களின்முறையே
நீதிலாவகைசெலுத்துதலுத்தமாசார
மோதுமிவ்வழிநடந்தவன்முன்பின்னோருடனே
போதுமூவெழுதரத்தருஞ்சற்கதிபுகுவார். (கஉஅ)

என்றுகூறலுமிருந்தவத்தவுத்திரர்மகிழ்ந்து
வென்றியோயெமக்கெய்துமோமேற்கதியென்னச்
சென்றதூயவன்றெளிவினுற்சிலதுநாள்கழிந்தாற்
றுன்னுவீர்துறக்கத்திலென்றுரைத்தனன்றேற்றி. (கஉகூ)

இன்னபான்மைகேட்டவர்மகிழ்ந்திவனுடனிருந்தார்
சொன்னசொற்படிதுறக்கநாடிவற்குவந்தடுப்ப
முன்னவன்றனோடவர்துறக்கத்திடைமுடுகி
மன்னினுர்யயாதிப்பெயர்மன்னுளமகிழ்ந்தான். (கங0)

வேறு.

ஆதலானல்லோர்தம்மோடருஞ்சகவாசமுண்டேற்
கோதறநினைக்கும்பெற்றிகுறைவறமுடியாதுண்டோ
மேதினியரசேயென்றுவேதபுங்கவன்விளம்பச்
சோதிமாமுடியோன்கேட்டுத்தன்சிரந்துளக்கிச்சொல்வான். (கஙக)

யயாதிச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - எசுக.

# துட்டியந்தச் சருக்கம்.

மாதவத்தநீமொழிந்திடயயாதிதன்வளமை
பூதலத்திடையுணர்ந்தனன்பூருவின்செயலு
மீதுதித்தெழுமன்னவரியற்கையும்வினவக்
காதலுற்றனன்கட்டுரைத்திடவெனப்புகன்றான். (க)

அனையமன்னனுக்கம்முனிபகர்வனவ்யயாதி
தனையன்பூருவுந்தாரணிகுடைநிழற்றங்கி
மனையின்மாண்புடைக்கௌசலையெனுமடமானோ
டினிதினிற்புணர்ந்தொருபெருங்காளையையீன்றான். (உ)

திறல்கொளுஞ்சனமேசயனவன்பெயர்சிறந்த
நிறையினன்றிகழநந்தையைக்கடிமணநேர்ந்து
விறல்கொளும்பிராசினனையளித்தனன்விளங்கவ்
விறையுஞ்சத்தைபாலினிசையாதியையீன்றான். (ங)

அந்தமைந்தனும்பானுமாமதிப்பெயரணங்கை
யுந்தவேட்டருஞ்சார்வபூமன்றனையுயிர்த்தான்
வந்தகான்முளைசுநந்தையாங்கேகயன்மகளைப்
பந்தமாய்ப்புணர்ந்தேசயசேனனைப்பயந்தான். (ச)

அனையமன்னவன்சுபத்திரைவிதர்ப்பர்கோனளித்தாள்
புனைபுலன்கொடிகடிமணநயந்தொருபுதல்வ
னினையுறற்சுரவீடணனிருபனைத்தந்தா
னனையனும்மரியாதைபாற்பௌமனையளித்தான். (ரு)

மற்றவன்பிரியந்தருசேனையைமணந்து
கொற்றமார்நயுதானியன்றனையவன்கொடுத்தான்
சொற்றமைந்தனும்வசுமதிவசுதருஞ்சுதையை
யுற்றிடப்புணர்ந்தினியவக்குரோதனையுயிர்த்தான். (சு)

கரந்துவையெனுங்கன்னியைக்காவலன்றோய்ந்தே
யிரங்கும்வண்மைதேவாபியென்பவன்றனையீந்தான்
சுரந்தநல்லருட்டோன்றலுந்துதிமரியாதை
விரைந்தகன்னியைவேட்டுருசிகனைமீட்டளித்தான். (எ)
உருசிகன்விறற்றேவையைமணந்தொருபுதல்வ
னரிசகன்னெனும்பெயரினன்றனையவனளித்தான்
வரிசைமன்னனுஞ்சுவாலைதக்ககன்றருமகள்பால்
விரைசெய்நன்மதிவரன்றனைவியந்தளித்தனனே. (அ)
அன்னமன்னனுமருட்சரச்சுவதியாற்றணியின்
மன்னியேநெறிவிரதனுய்வருடமீருறும்
பன்னுசத்திரமாமகம்பயிற்றினன்பகரு
மின்னனுணதிமற்றிவன்மேன்மயலானுள். (க)
அணங்குபோலொருவடிவுகொண்டவனுடன்றோய்ந்து
மணங்கமழ்ந்ததார்மகனொருவன்றனையீந்தா
ளிணங்குறுந்திடனவன்பெயர்காளிந்தியென்னு
மணங்கைவேட்டவனீலனும்புதல்வனையளித்தான். (கO)
வந்தநீலனுமிரதந்தைமாதினைமணந்து
முந்துதுட்டியந்தன்றனைமுறையினலளித்தா
னந்தமன்னவன்விலக்கருமாற்றலினுழ்ந்து
முந்துவண்பெயர்விளக்கினன்மொழிகுதுங்கேண்மோ. (கக)
வலியின்மிக்கவன்மாநிலங்குடைநிழலடக்கி
யிலகுறப்பெருங்கிரிகளைக்கரத்தெடுத்தெறிந்து
பலரும்மற்புதமெய்திடப்பார்புரந்திடுநாள்
விலகியோர்தினம்வேட்டைமேல்விருப்பமாயெழுந்தான். (கஉ)
பேரிமத்தளம்வலம்புரியோசையிற்பெருங்கை
மூரியானைகள்கொய்யுளைமுதலியநெருங்க
வாரியாமெனவுழைஞரும்பதாதியின்வகையுஞ்
சீரினூற்புடைசூழ்வரக்கானிடைசென்றான். (கங)

வேறு.

அரிபடுத்திக்கலையினங்கடம்மைவாட்டி யாமாவுமரையினமுமதிரவோட்டிக், கரிசெறுத்துச்சிவன்முதலாம்பறவைகாதிக் கான்முழுதும்பொடியாக்கித்திரியுங்காலைப், பரிவிடுத்துத்துணைவருடன்பிணையின்பின்னர் பார்த்திபன்சென்றடர்த்திடுவான்படரும்போதில், வரிபரப்புங்குவிமுலையார் விழியினேக்கமைந்நர்மிசைபாய்வதிற்போயுருவிற்றம்மான். (கச)

உடனுருவியுடன்மெலியவியர்வுசார வுயிர்ப்பெழுந்துமேலிடச்சென் றுழையரோடு, மடவிதனினெடுந்தூரந்துருவிமன்ன னயர்ந்தாங்குமீண்டளவினலசிமேனி, விடவரியநீர்வேடைகொண்டுபொல்லா வெய்யபரற்கொடும்பாலைமேவிவெய்ய, படவரவினிழற்கெலிகளொதுங்காநிற்கும் பரிசுணர்ந்தான்பாங்கர்பகீரதியைக்கண்டான். (கரு)

வாடியகூழ்மழைகண்டவாறுமுற்றுமழலைமொழிப்பாலகர்தாய்கண்டவாறுந், தேடியவான்பொருளருகேயிருந்தவாறுஞ்சிறந்தந்தமாநதியிற்சேர்ந்தும் மன்னன், கோடியமாமுகங்குளிர்ந்துதெண்ணீர்மாந்திக்குளிர்திவலைத்துளியாலுந்தென்றலாலு, நீடியதன்னுடலணங்குநீக்கியாங்கோர்நிறைந்ததவச்சூழல்வழிநெறிக்கொண்டானே. (௧௬)

இளந்தளிர்களிலக்குமிதன்மேனிகாட்டவிடைப்பருவத்தடைவாணியெழிலைக்காட்ட, வள்ந்திகழுமுதிரிலைகளுமையாண்மேனிவயங்காட்டமதன்கணையைமலர்கள்காட்டத், துளங்குமுளையார்விழிபோற்காய்கள்காட்டத்தோகையர்சொன்மதுரமதைக்கனிகள்காட்டக், களங்கமறவானளவுமுயர்ந்தசூதக்காவொன்றுகண்டரசன்களித்துச்சார்ந்தான். (௧௭)

வட்டமிடும்புள்ளினங்கள்பந்தராகமகரதோரணங்கமுகின்பாளையாக, விட்டமிகுமளியோசைசயிராகமாகவிளங்குயிலின்கூக்குரலின்னிசைகளாக, நட்டமிடுங்கேகயங்களாடன்மாதர்நடமாகவிளங்குரும்பைநன்னீராக, வட்டதிசைபுரந்தவனைவேடைநீக்கியரும்பழுவமெதிர்கொண்டதாயதாலோ. (௧௮)

சென்றரசனவ்வனத்திற்சிலதரோடுஞ்சிறந்துலவியுடல்வருத்தந்தீர்ந்தபின்னர், வன்றிறல்சேர்கண்ணுவர்தம்விபினமென்றேறவந்தவர்சொற்றிடவுணர்ந்தேவணங்கிமீள்வ, னின்றிடுமினெனவுழைஞர்தம்மைநீங்கிநேயமுடன்றமியாகிமுனிவர்வைகும், வென்றிகொளாசிரமத்திற்சென்றுசார்ந்தான்மேதினியெலாம்புரக்கும்வேந்தர்கோமான். (௧௯)

கலைமணமுமறைமணமுமவிகணேருங்கடுந்தழலின்புகைமணமுங்கடியசிந்தை, நிலைமணமுந்தவமணமும்வழாதநீதிநெறிமணமுங்கொழுந்தோங்குநிமலன்சூழற், சிலைமணங்கொளிருபுயத்தான்சேர்ந்துமுன்னோர்திரண்டகுழுவிடத்தினெலாஞ்செங்கைகூப்பி, யிலைமணங்கள்கமழ்பழுவத்திடையின்வைகுமிருடியருந்தவக்கணுவரிருக்கைபுக்கான். (௨௦)

துத்திமணிப்பன்னகவல்குற்றேருந்துகளறுசீரிருமருப்புத்துதிக்கைமாவு, மத்தங்கொளிருபுருவச்சிலையினோடு மலர்விழிபோற்கடுங்கணையுமருங்குலென்னுந், தத்துமடங்கலுங்களத்தின்வளையுந்தாங்கித்தையலிரதியுமதன்மேற்சமருக்கெய்த, லொத்ததெனவொருமங்கையெதிர்வந்துற்றுளுலகாளும்வேந்தனுடலுருகினனே. (௨௧)

பெண்ணரசைப்பெண்ணமுதைப்பெண்மைக்கெல்லாம்பெருமானைப்பெருமானும்பெயர்ந்துநோக்கிக், கண்ணிரண்டினடங்காதவனப்புமாண்புங்கண்டிவளாராரெனவேகருதுமெல்லை, மண்ணகமுற்றையும்புரக்குந்துட்டியந்தமன்னவனேயிவனென்றுமங்கைநாணி, வண்ணமலர்த்தவிசுதவியினிமைகூறிமற்றொருதுணருகினிற்போய்மறைந்துநின்றாள். (௨௨)

காதல்வளர்ந்திடச்செவ்விமிகுந்தமாதைக்காவலன்கண்ணுறநோக்கிக்கருதற்கெட்டா, மாதவனெங்கேயென்னவனத்திற்சார்ந்தார்வருவரிருகடிகையிலென்றுரைத்தலோடுங், கோதறுநற்குணவதிநீயாவர்தந்தகொம்பனையோவுணர்வுறநீகுறிப்பாயென்றான், வேதியனுங்கண்ணுவர்தம்புதல்வியென்பேர்வியந்தசகுந்தலையென்றாள்வேந்தன்கேட்டான். (௨௩)

ஐயமுறுமனதினுடனபசனிந்த வணங்குமறையவர்கொடியேயாகிற்சிந்தை, வெய்யநினைவனுருறுமோதெளிதுமென்னமீட்டுமவண்முகநோக்கிவிளம்புகின்றான், செய்யமலர்ச்செழுந்திருவேதுறந்ததூயதேசிகனின்றனையின்றிசெய்கையாதோ, மையறுநின்பெயர்வந்தவரலாறென்னேமற்றுள்ளபடியெனக்குவகுப்பாயென்றான். (உச)

தொடுத்தமலர்ச்செழுந்தொடையல்கமழுமார்பன்சொன்னவினவுரைக்கிவளும்விடையஞ்சோரா, தெடுத்துரைப்பான்மதியரசேமுன்னோர்வேதனெந்தைதனைவினவவற்குரைத்தவண்ண, மடுத்தவெலாமுரைப்பனினியுணர்கவென்றேயாம்பன்முகையவிழ்த்துநறையதனைப்பாங்கர், தடுத்தலர்த்தும்வரியளிக்கேயுதவுமாபோற்றனைமறைத்துமுகங்காட்டச்சாற்றலுற்றாள். (உ௫)

வேறு.

அண்டரும்பிறரும்போற்றுமருந்தவன்கௌசிகப்பேர்
கொண்டவன்றவத்தையாற்றிக்கோதறுநலங்கைக்கொண்டே
விண்டுவினுயர்ந்தவோங்கல்வேந்தனுமிமயச்சார
லெண்டிசைபுகழமீட்டுமிருந்தருந்தவமிழைத்தான். (உ௬)

தவப்பெருங்கனலினாலேதரணியுமமரர்நாடு
நிவப்புறலன்றிநொந்துநெஞ்சகம்யுழுங்குங்காலை
துவர்க்கனியிதழாள்கொங்கைத்துணையுடைச்சசிதன்கேள்வன்
கவுசிகன்றவத்தைநீக்கக்கருதினன்கரவின்மன்னோ. (உ௭)

மேனகையென்பாடன்னைமேவிநீயவனைமையற்
றானுறவிய்ற்றியந்தத்தவத்தினையழித்தியென்ன
மானுளநடுங்கிநேரின்மாதவன்மலரோன்செய்த
ஞானநல்லுயிர்க்குமாறுநல்கினேன்முனிவுமிக்கோன். (உ௮)

வசிட்டனைமைந்தர்காதல்வாரியின்மூழ்கச்செய்த
விசிட்டனையானியற்றும்விரகுமொன்றுளதுகொல்லோ
கசட்டறிவதிவியானெய்திக்காண்குவனுள்ளமாமே
லசட்டையற்றொருழுகிமையலாக்குவனென்றுபோனாள். (உ௯)

தென்றலுமதனுமன்னன்செழும்படைத்திரளும்வாய்த்த
நன்றிகொள்வசந்தனென்னுமிருதுவுமுன்னர்நண்ணி
யன்றவன்றனைப்போதிக்கவரிவையுமிரதிநாணச்
சென்றொருதருவினீழற்சேர்ந்தனள்செய்யவாயாள். (௩0)

பூசியநறையுமெய்யிற்புனைந்துளநறையுமேனி
மாசறுநறையுமாடைமல்கியநறையுமோடி
வீசியதென்றலோடும்வேள்விடுகணைகளோடு
மாசறுதவஞ்செய்வானையடுத்துடல்வருத்திற்றலோ. (௩க)

தியங்கினன்முனிவனுள்ளஞ்செழுந்தவம்விடுத்தெழுந்தான்
மயங்கினனிந்தவாசம்வருவதேதென்றுதேடித்
தயங்கியவடிவேல்பாயுந்தடவிழியணங்கைநோக்கி
வயங்கியமையல்பூண்டம்மாதினைத்தழுவினானே. (௩உ)

தொடிக்கரங்கலசலென்னத்தோள்வளைதுலங்கிமின்ன
வெடித்திருமேனியெங்கும்வியர்வுறச்சிலம்புகொஞ்சக்
கடிக்கமழ்குழலாளந்தக்கருத்தனையருத்தியோடுந்
தடத்திளமுலைமேற்றோய்ந்துதன்வயமாக்கினாளே. (௩௩)

மாதவத்தொருவனானமாமுனியருளினாலே
காதலிற்சிறந்திருப்பக்காரிகைகருப்பந்தாங்கித்
தாதவிழரசர்கோவேதந்தனளென்னையன்றே
யோதியமுனிவனிவ்வாறுணர்ந்தகன்றேகினானே. (௩௪)

எடுத்தகாரியமுடிந்ததென்றுளமகிழ்ந்தணங்கு
விடுத்தெனைவிண்ணோர்கோமான்மேவியநகரஞ்சார்ந்தாள்.
வடுத்தவிர்முனிவன்செய்தமாதவப்பெருமையாலே
யடுத்தெனைக்காத்திருந்ததருஞ்சகுந்தலைகண்மன்னா. (௩௫)

அன்னகாலையிலநேகருமறைமுனிவர்சூழ
மன்னுகண்ணவர்தாமந்தவனத்தில்வந்தெய்திநோக்கி
யென்னையாங்கெடுத்துமீண்டுசூழல்வந்தெய்தினாற்
சொன்னபேரதனாற்றன்னைச்சகுந்தலையென்றான்றூயோன். (௩௬)

மதிக்குடையரசரேறேமாதருக்கின்றேன்வேறோர்
கதித்துயர்தவிர்த்தோனன்னங்களிப்புடனளித்துக்காத்தோன்
றுதிக்குமூவரும்பிதாவாஞ்சொற்றமூவருமிரண்டு
விதித்ததேசிகருமைந்தாம்புருடருக்கீன்றமேலோர். (௩௭)

ஆதலாற்றுயரைநீக்கியளித்தபான்மையினாலையன்
காதலிற்புதல்வியாகக்கருதினனென்றுமுன்னர்
மாதவன்றனக்குரைத்தவாறுகேட்டிருந்தேனென்று
பூதலம்புரக்குமன்னன்புளகெழப்புகன்றாள்பூவை. (௩௮)

வேறு.

கன்னனிகர்மொழிசொன்னவுரைதெரிகண்ணனிகர்புவிமன்னவன்
றன்னிலதிசயநண்ணியினியிவடன்னையணைவதுமுன்னியே
மன்னர்குலபதிதந்ததிருமகண்மன்னர்வயமுறனன்மையென்
றன்னநடையொருசெங்கைமலர்தனதங்கைமலரிடைகொண்டனன். (௩௯)

சந்தமுறுகுழலந்தநரபதிகஞ்சமலர்நிகர்செங்கைவாய்
வந்துகுலவிலணின்றுமொழிகுவள்வண்கொடந்தையுணர்ந்துநீர்
தந்தபினரெழிலின்பமுறுவதுதண்மையலவெனவங்ஙனஞ்
சிந்தைவெருவியயர்ந்துமகிபதிசெல்வியொடுபுகல்கின்றனன். (௪௦)

பிரமம்பிரசாபத்தியமேபெயராரிடந்தெய்வத்தோடு
வரமிந்தசுரமிராக்கதமேமகிழ்பைசாசங்காந்தருவம்
புரமாமென்னும்வரைவெட்டிற்பாரோர்விண்ணோர்பார்த்திபர்கள்
சரதமகிழுஞ்சிறப்புடைமைதகைகாந்தருவவழக்காமே. (௪௧)

எள்ளாதெனைநீபுணர்ந்திடுதலியல்பென்றவளையுடன்படுத்தத்
தள்ளாவிடையாடலைசாய்த்துத்தமியேன்றனக்கின்றுதிக்குமகன்
விள்ளாவுலகுக்கிறையாக்கும்விறநீமனதிற்கொள்வாயேற்
பொள்ளாதுனதுமொழிப்படியேபொருந்தறகவென்றனக்கென்றாள். (௪௨)

வட்டவிழியாளிவையுரைப்பமன்னனவட்கவ்வரநல்கி
யிட்டமுறவாங்கவளோடுமின்பநுகர்ந்தாங்கினிதிருந்து
மட்டிலெமதூர்போயுழையர்வரச்செய்துனையான்வருவிப்பன்
கட்டுந்தொடையாயிருத்தியெனக்கரைத்தேயரசனகன்றானே. (௪௩)

மன்னன்மீண்டுநெறியிடையில்வைகுந்துணைவருடன்கூடிச்
சொன்னநகரந்துட்டியந்தத்தோன்றல்சார்ந்தேயினிதிருந்தான்
பன்னுமந்தவிளம்பாவைபயத்தோடிருக்குமமயத்திற்
கன்னலிரண்டுகடப்பதன்முன்கருணைமுனிவந்தடைந்தானே. (௪௪)

வெளுத்தவிதழும்வியர்முகமும்விழியிற்சிவப்புநகக்குறியு
மளித்தவளகங்கலைந்தொளிருமார்வங்களுமாலிலைவயிற்றி
னொளித்தமகவுமுடலயர்வுமுடனேதோற்றநாண்டலைக்கொண்
டுளக்குங்கல்விப்பேரறிவோனடியிற்றாழ்ந்தாளவனுணர்ந்தான். (௪௫)

உலகம்புரக்குந்தனிச்சிறுவனுதரத்திருக்குமியலானு
மிலகுமரசன்மனையானவியற்கையானுமுனிவின்றிச்
சலசவதனத்தருந்ததியேசார்ந்தகருமமறையாமற்
பலருமுணரவுரையென்றான்பகர்ந்தாணடந்தபண்பெல்லாம். (௪௬)

கூசிமனதுமடமங்கைகுறித்தசரதமொழிகேட்டுத்
தேசுவிளக்குமறைமுனிவன்சிந்தைகளித்துச்செகம்புரக்கு
மாசிலிறைவன்மனையாகிவையங்காக்கமகன்றனையு
மோகையுடனீகருத்தரித்தாயுன்னிலினியோரெவருளரே. (௪௭)

மாதேயஞ்சனீயளிக்குமைந்தனதிகவலியுளனாய்
மீதேழுலகும்புரந்தளிக்கும்விறலோனாகக்கடவனெனத்
தீதேதொன்றுமுணராதோன்சிறந்தேவாழ்த்தித்திருவனையைத்
தாதேயனையானளித்திருப்பத்தடங்கண்மடவாண்மகிழ்ந்திருந்தாள். (௪௮)

வேறு.

திங்களுநிறைந்தவள்சிறுவனல்கினாள்
கங்குலினிடையிராக்கதிரைநேர்தர
மங்கலமறைமுறைவழாதியற்றியே
புங்கவன்வளர்த்தனன்பொருவிலானையே. (௪௯)

ப்ரதனென்றவன்பெயர்பகர்ந்துமற்றவற்
கரியநற்சவுளமதாதியாகிய
புரிதிறனுளவெலாம்புரிந்தையாண்டினிற்
கருதுமுந்நூலிடுங்கடனுமாற்றினான். (௫௰)

மறைமுதற்கலைகளுமற்றுமுள்ளன
குறைவறவோதியேகுமரனவ்வயிற்
றிறலுடைச்சிலைமறைதேர்ந்துவைகினா
னிறைபுரியரசரிலெவருமொப்பிலான். (௫௫)

மைந்தனற்றிறமையுமாதுகற்பையு
முந்தனனறிந்தரசழைத்திலாமைகண்
டுந்துதன்சீடரையுடன்செலும்படி
தந்துமாதினையிறைசார்பிற்போக்கினான். (௫௬)

புதுமதிநாணுறும்புனிதவாண்முக
மதுரிதழ்வல்லியுமகனும்வந்தணி
கதுவிய்வேந்தனைக்கண்டுகைதொழு
தெதிருறநின்றனரேம்பலோடுமே. (௫௭)

கண்டுமாலரசனுங்கமலையன்னதன்
றொண்டொடியிவடனக்குதித்தமைந்தனென்
றெண்டிசைபுரப்பவனெண்ணிமீளவுங்
கண்டிலான்போலிருந்தியலுங்காலையில். (௫௮)

தேய்ந்தசிற்றிடையினாள்சிறந்தமன்னவன்
வாய்ந்தவாண்முகந்தனைவயங்கநோக்கியே
சாந்தணிதோளினாய்தநயனீமுத
லீந்தவன்கருணைசெய்திடவென்றோதினாள். (௫௯)

அலீங்கனாயாவணீயாதுகாரிய
மிணங்கியிங்கடைதரவிவனையீன்றநற்
கணந்தருபிதாவெவன்கமல்மாமலர்
மணங்கமழ்மேனியாய்வகுத்தியென்றனன். (௬௦)

மறந்தனனுண்டகையென்றுமங்கையு
மிறந்தநாட்கண்ணுவரிருக்கையெய்திநீ
சிறந்தெனையணைந்துகந்தருவத்தொன்றியிவ்
வறந்தருபுதல்வனையளித்தநாடனில். (௬௧)

இல்லவணீநினக்கிறைவனானுனக்
கொல்லையில்வருமகனுலகநாயக
னல்லறீர்ந்திருத்தியானமைச்சர்த்தூண்டியே
வல்லிநின்றனைவருவிப்பன்மாநகர். (௬௨)

என்றெனக்கினிதுறவியம்பிமீண்டனை
யன்றுதொட்டின்றளவிருந்தறிந்தனன்
சென்றபத்தாவதுதிங்கணின்சுதன்
வென்றிவித்தெனவுதித்தெழுந்தவேலையில். (௬௩)

மாமுனிகண்ணுவஃமகிழ்ந்துமைந்தனுக்
காமியற்கடனெலாமாற்றிமீளவு
மேமுறுவடுகுசெய்திருக்குவேமுதற்
றேமறுநூலெலாஞ்சுதனுக்கோதியே. (சுO)

படைமுதற்பயிற்சிகள்பயிற்றிப்பாலனுக்
கடைவுறநேரிலாவாண்மையாக்கியுன்
னிடைசெலவென்னுடனேவினன்முனி
புடையுறுசிடரையுடன்பொருத்தியே. (சுக)

நின்மகன்றன்பெயர்பரதனேயமா
மென்பெயர்சகுந்தலையானும்பாலனு
நின்வயினடைந்தனநீமறந்தனை
முன்புபோலாளெனமொழிந்தகாலையில். (சுஉ)

அறைகழலரசனுமமைச்சர்மாமுகங்
குறைவறநோக்கியேகொம்பனாளிவ
ணிறைபுடனுரைத்தசொன்னீர்மைபொய்ம்மையே
துறைபுடமொழிவதுசூழ்ச்சியாகுமால். (சுங)

கண்டிலேனிவடனைக்கலந்ததில்லையாற்
பண்டைநாடொடங்கிவாழ்பாவைமாரினு
மொண்டொடியிருந்தநண்புடையளாகியே
விண்டிடர்மொழிவதுமேலிதாமென்றான். (சுச)

வேறு.

பூத்தவிளங்கொம்பனையபொற்கொடியாள்கன்னமுறப்
பார்த்திபனங்கோதுதலும்பாவைமுகங்கோடாமற்
றூத்திரியோர்பொய்யுரைத்தாற்றண்டனைசெய்வோனரசன்
வேத்தவனேபொய்ம்மைவிளம்பின்மிகையின்றே. (சுரு)

சொல்லொன்றாய்நெஞ்சினொடுதோற்றமறிவொன்றாகி
மல்லொன்றுந்திண்புயத்தாய்வந்தணைந்துநீங்கியபின்
கல்லொன்றுநெஞ்சுங்கரவுமிப்போகற்றதனைச்
செல்லொன்றியகையாய்சிறியேனறியேனால். (சுசு)

உயிருமுடலுமுருண்மணியுந்தேசுமெனச்
செயிர்தீர்கணவனுடன்சேயிழைமார்வாழ்வதலா
தயலாய்ப்பிரிவுற்றணங்குகூர்ந்தென்போலத்
துயராற்றொலைந்திருக்குந்தோகையருமுண்டேகொல். (சுஎ)

தன்கடவுளின்பந்தனதுவலிதேசனைத்தும்
வன்கணவனென்றேமதித்தமடமாதருக்குப்
புன்கண்புரிதல்புலமையோபொய்ம்மைமொழி
நின்கணுறுமேற்சரதநீதியெவர்பாலாமே. (சுஅ)

பெருமைபுகழின்பம்பெறும்பேறுவேள்வியுடன்
கருமமுறமற்றவெலாங்கற்பின்மனையாளுடையோற்
குரிமையெனவேதமுரைப்பதுணர்ந்தேயுமெனை
யருமைமகனோடுமவமதித்தறக்கதுவே. (௬௯)

வாழ்ந்தாலும்வீந்தாலும்வாழ்வன்றிநல்குரவிற்
றாழ்ந்தாலுமொக்கச்சமைந்தாண்மனநோவ
வீழ்ந்தாடிநீர்துளையும்வெம்பறவைபோன்றவர்பா
லாழ்ந்தாலெடுத்தாற்றியார்காக்கவல்லாரே. (எ0)

மைந்தனொருவன்வரவென்றுமாமகங்கள்
சந்ததமுஞ்செய்துதவந்தருமம்பூண்டொழுகி
முந்துவிரதமுறையாற்றித்தானளிப்பர்
சந்ததியைநோக்கிச்சலித்தவரைக்காணேனல். (எக)

தழலிற்றழலுந்தகுதிபெறுமாடிதனி
னிழலுற்றிடுமியலுநிச்சயிக்கின்றனன்றே
கழலிற்பொலிபதத்தாய்கான்முளையேதானென்று
பழமைச்சுருதிபறைவதுவும்பொய்யாமோ. (எ௨)

வாவியொருநூறுதனைமானுந்துரவொன்று
மேவுமதுநூறுகும்வெய்யதடமன்னதுநூ
றுவலிற்செய்பெற்றிமகமாமவைநூறொக்குமகன்
றுவுதிறன்மைந்தாசதந்தானுமோர்சத்தியமே. (எ௩)

மன்னவற்குவேண்டியதுமாசற்றவில்லாளும்
பன்னற்கருமகவும்பகர்வாய்மைநன்னிலையு
முன்னியிவைமூன்றுமுறைவந்தடுக்குமுனக்
கென்னைமகிழ்வாலிசைந்தாளிலென்றுரைத்தாள். (எ௪)

மன்னவர்களேறேமகன்வந்துதித்ததின
மின்னனையாள்வாணிவிதித்தாள்சதமகஞ்செய்
துன்னரியமாநிலங்களோர்குடையிலாள்வனென
வன்னதிறன்மகனையாரருள்செய்தாளென்றாள். (எ௫)

சொன்னமொழியனைத்துஞ்சோராமற்கேட்டரச
னன்னுதலேநின்னைமுதுனறிந்ததின்றுமாற்
பன்னுவதென்சேறிமுனம்பண்பினுறுநின்னுழையென்
றன்னநடைக்கோதியவனுங்கிருக்குங்காலைதனில். (எ௬)

வேறு.

தோகையாங்கதனையுன்னித்துன்பவாரிதியிலாழ்ந்து
வாகைவேலரசைநோக்கிமன்னநீமுன்னர்நாளி
னேகையோடணுகிவாய்மையொருநாளும்வழுவிடேனென்
றேகமாமறிவுகாட்டியில்லவளாகக்கொண்டாய். (எஎ)

ஆதலினினையகாலத்தவைமறந்துரைப்பவெல்லா
மீதுநின்குற்றமன்றென்வெம்மையென்றுட்கொண்டேனன்
மூதுணர்தந்தைதாய்மார்முன்னரேதுறந்தாரின்று
காதலன்றுறந்தானென்போற்றீயவர்காண்கிலேனே. (எஅ)

கவுசிகமுனிக்குதித்துக்ககனமேனகைபெண்ணாகித்
தவிசுறுமன்னர்மன்னன்றனக்குரியவளாய்நாளுந்
திவசஞ்செய்பருதிபோன்றசிறுவனையுயிர்த்துமென்றன்
வசமறுதுயரநீங்காதாயதாலியான்செய்பாவம். (எகூ)

புடவியிற்றீயோர்நல்லோர்பூவையர்புருடரியார்க்குங்
கடவுள்வேறொருவனுண்டேற்காத்தளித்திடுவனென்று
மடமகளுரைத்துக்காதன்மைந்தனைக்கரத்திற்பற்றித்
தடவிழியாலிசோரச்சகுந்தலைமீண்டாண்மாதோ. (அ0)

கடங்கலுழ்களிநல்யானைக்காவலனவையினுள்ளோ
ரடங்கலுமுணரவாங்கோரசரீரிமொழிவதானுள்
விடங்கலுழ்கண்ணுடன்னைவிரும்பியதுண்மையந்நா
ளிடங்கொளில்லவளாநீமுன்னீந்தவனினையமைந்தன். (அக)

கற்பினுக்கரசியாகுஞ்சகுந்தலைகலைவன்மைந்தன்
பொற்பினிற்புகழின்மிக்கோன்புதல்வனுமனையுமாக
மற்புயத்தரசேயன்னோர்தம்முடன்வாழ்தியென்னுஞ்
சொற்செவிபுகலுமாருந்துயரகன்றகமகிழ்ந்தார். (அ௨)

புரவலன்மகிழ்ந்தெழுந்துபுதல்வனைத்தழுவிமீட்டு
முரியவட்கின்சொற்கூறியுழையருக்காதிநாளிற்
சருவியமுறையுமின்றுதான்பழிக்கஞ்சுமாறும்
பரிவுறவெடுத்துக்கூறிப்பார்த்திபன்புளகம்போர்த்தான். (அ௩)

அவைப்புறத்திருந்துளோர்களற்புதத்தவர்களாகி
நிவப்புறுகற்பின்மாண்பினிலைமையைப்புகழலானார்
சுவைப்படுமொழிநல்லாளுஞ்சுதனுந்தன்னுடன்வந்தெய்த
நவப்பருமணிகள்வேய்ந்தநன்மனைபுகுந்தான்மன்னன். (அ௪)

வாழ்ந்தனன்மைந்தனோடுமாதொடுமநேககால
மாழ்ந்தபேரறிவின்மிக்கோனரசினைமைந்தற்கீந்து
சூழ்ந்தபாதகங்கடீர்க்குந்தூயமாதவர்கள்சூழற்
றாழ்ந்தருந்தவத்தினுற்றான்றநயன்மேதினிபுரந்தான். (அ௫)

அன்னவன்மகங்களாறுமாற்றிவானவர்கணிதி
மன்னுமாமுனிவரேன்னோர்மகிழ்ந்திடக்கடன்கழிக்கி
பின்னிவுமுழுதுங்காத்தானிறந்தவரெதிர்வோர்யார்க்குந்
தன்னுடைப்பெயர்விளக்கித்தலைமைகைக்கொண்டான்மன்னே. (அ௬)

அனையவன்மரபின்மன்னரருங்கதைதனக்குநாமம்
புனைகொள்பாரதமென்றாரும்புகல்குவர்புகழின்மிக்க
மனையவள்சுநந்தையென்பாள்கேகயமன்னன்பாவை
தனையிவன்வேட்டுப்பூமனெனுஞ்சுதன்றனைத்தந்தானே. (அஎ)

மற்றவன்றசானவர்த்தன்மன்மகள்விசையைதன்னை
முற்றியேமணஞ்சுகோத்திரமுதற்பெயர்மகனைத்தந்தான்
பற்றலர்பணியுமன்னோன்சுவர்ணையைப்பரிவிற்றோய்ந்து
தற்றவர்புகழுமத்திகன்றனையளித்தானன்றே. (அஅ)

அன்னவன்பெயரினாலேயரசர்வாழ்பதிக்குநாமம்
பொன்னணிதிகழுமத்திபுரமெனவிளங்கிற்றாமாற்
சொன்னவத்தோன்றன்மிக்கதூயநற்றிரிகத்தன்றந்த
மின்னனையசோதையாளைவேட்டொருமகப்பெற்றானே. (அகூ)

அப்பெரும்புதல்வன்றன்பேர்நிகும்பனாமவனுமன்பாற்
றப்பறுதசானவர்த்தன்றராபதிதந்தகொம்பு
செப்பருஞ்சுதேவையென்பாள்செழுந்தனக்குவடுதோய்ந்தே
யொப்பிலாவாசாமீளனெனுமுரவோனையீன்றான். (கூO)

மற்றவனுருக்கையோடுகௌசலைவிசாலைவண்மை
பெற்றமூவரைமணந்துபேரருள்விளங்குமைந்தர்
கொற்றமார்புயத்தோர்நூறுங்குறிக்குநாலாறுமாக
உற்றநற்புதல்வரீந்தேயுலகெலாம்புரக்குநாளில். (கூக)

ஒருவனேயவரில்வண்மையுயர்ந்தசவ்வருணனென்போன்
மருவுமிவ்வுலகங்காத்தேமார்த்தாண்டனளித்தபாவை
திருமிகுதபதிதன்னைச்சேர்ந்தொருமகனைத்தந்தான்
குருவவன்பெயரன்னோனாற்குருகுலமாயிற்றன்றே. (கூஉ)

குறித்தவனமர்செய்பாங்கர்கொடுங்குருக்கேத்திரத்தின்
விறற்பெயராயதன்னான்விளங்குமாகதன்றன்பாவை
சிறப்புடைச்சுபலைதன்னைச்சேர்ந்தொருகுமரனீந்தா
னறத்திணைவாற்பரிட்சித்தரும்பெயர்கொண்டோனாமால். (கூங)

காட்டுமப்புதல்வன்வண்மைக்கைகேயவேந்தன்பாவை
தோட்டுறுந்தெரியல்வேய்ந்தசுமித்திரையென்பாடன்னை
வேட்டொருபிரிதீபனென்னும்விறற்புதல்வனையளித்தான்
பூட்டுவில்வீமராசன்புதல்வியைப்பிரிதீபன்சேர்ந்தான். (கூச)

சுனந்தையாமவள்பேரந்தத்தோகையுங்கருப்பந்தாங்கி
யினந்திகழ்வுறுதேவாபிசந்தனுவென்போர்தம்மை
மனந்தணிவுறப்பயந்தாண்மற்றவர்களின்மூத்தோனே
வனந்தனிற்றவஞ்செய்துற்றான்மற்றிவன்புவிகாத்தானே. (கூரு)

சந்தனுவெனும்வேந்தற்குச்சாற்றரும்புகழ்பெற்றுள்ள
பைந்தொடிக்கங்கைதானேபன்னியாய்ச்சிலநாண்மன்னி
யுந்துவீடுமனைத்தந்தாளோசனைகந்திதன்பால்
வந்தனர்சித்திராங்கவிசித்திரவீரியராமைந்தர். (௯௬)

அன்னவர்தம்மிற்சித்திராங்கதனமரின்மாண்டான்
பின்னவன்சிலநாள்வைகிப்பேசருங்காசிராசன்
றன்னுடைச்சிறாரைவேட்டுச்சந்ததியிலாதிறந்தான்
மன்னியவியாதமூர்த்திமாதருக்கருள்செய்தானே. (௯௭)

கண்ணிலாதவனும்பாண்டுகாவலன்றானுமாண்மை
நண்ணியவிதுரனோடுநல்கினனவருக்கன்பி
லெண்ணறுமுன்னோன்மீட்டுமினியகாந்தாரிதன்பாற்
பண்ணமர்முனிவரத்தாற்படைத்தனன்சதமகாரை. (௯௮)

குந்திமாத்திரியையென்னுங்கோதையர்தம்மைவேட்ட
முந்துபாண்டுவினுக்கைவர்முறைமையாம்புதல்வர்வந்தார்
கந்தமாமலர்நிகர்க்குங்கண்ணினாள்கமழ்பாஞ்சாலி
வந்தவர்மனைவியானாண்மாநிலஞ்செய்தவத்தால். (௯௯)

பிறதிவிந்தன்சுருதிசன்மன்பெருஞ்சுதகீர்த்தியோடு
மறுவிலாச்சதானீகன்றான்வருஞ்சுதசேனனென்போர்
விறலுடைத்தருமனாதியைவர்க்கும்விளங்கிநிற்குஞ்
சிறுவர்வந்துதித்தார்யாகசேனைதன்றிருவயிற்றில். (௧௦௦)

மற்றுநல்லுதிட்டிரற்குமாளவதேயவேந்தன்
பொற்றொடிசுயமரத்திற்பொருந்துறமாலையிட்டு
வெற்றிவேதிகையென்பாளைவிழைவொடுமுயங்குநாளிற்
செற்றமொன்றிலாதவன்சாதேயனாஞ்சுதனுதித்தான். (௧௦௧)

வீமனும்வனப்பான்மிக்கவிறற்சலதரையைக்கூடிச்
சோமனுநிகரிலாதசுகுணனாம்புதல்வர்த்தந்தான்
மாமனுமிடும்பிதன்னைமணந்துயிர்ப்பளித்தோன்மீட்டுங்
காமனுநிகராவண்மைக்கடோர்க்கசன்றனைத்தந்தானே. (௧௦௨)

விளங்கருச்சுனனுமந்தமெல்லியல்சுபத்திரைப்பேர்
வளங்கொள்கன்னியைமணந்தேமகனபிமனையளித்தான்
களங்கறுநாகர்நாட்டிற்கன்னியைமீட்டுந்தோய்ந்து
துளங்கறுமரவானென்னுஞ்சுதன்றனைமகிழ்வாலீந்தான். (௧௦௩)

பரிவல்நகுலனென்னும்பார்த்திபன்சுயமரத்தில்
வரிவிழியிலகிரேணுமதியெனுமணங்கைவேட்டே
நிரவுமித்திரனையீந்தானெறிவழாவிளையகாளை
சரியில்கேத்திரனையீன்றான்றாரமாம்விசையைதன்பால். (௧௦௪)

ஆதலாலீராறுகுமைவருக்குதித்தமைந்த
நீதெலாமுணர்தியன்னரிடையபிமன்னுவென்போன்
ருதருவிராடன்றந்ததநயையுத்தரையைவேட்டுக்
கோதிலாப்பரிட்சித்தென்னுங்குமரனையளித்தானன்றே. (க0ரு)

மற்றவன்மாத்திரைப்பேர்வல்லியைமணந்துவாழ்வு
பெற்றுளசனமேசேயப்பெயரினய்நின்னையீன்றான்
குற்றமெள்ளளவிலாதவபுட்டையாங்கொடியைக்கூடி
யுற்றுளசதானீகப்பேரொருவனைநீயளித்தாய். (க0சு)

வைதேகியெனுமாதரைமற்றவனன்பிற்றேய்ந்து
மைதாழ்கையசுவமேதவந்தனையவனளித்தா
னுய்தாகவவனுக்கியாவருதிப்பரோமதியமாதி
மெய்தாவிங்கிவனீருகவிருத்தியாறேழதாமே. (க0எ)

ஆதலானரசரேறேயருண்மதிக்குலத்துதித்து
மேதினிகாத்தவேந்தர்விறலுடைச்சரிதமெல்லாங்
கோதறவுரைக்கவல்லாருளர்கொலோகுணத்தான்மிக்க
வேதியனருளாலீதுவிளம்பியதென்மொழிந்தான். (க0அ)

கேட்டமாலரசன்சிந்தைகிளர்ந்திருகரங்கள்கூப்பி
நாட்டநீர்சொரியவந்தஞானமாமுனியையேற்றிக்
காட்டியவாறனைத்துங்கசிந்துளங்கொண்டேனாயேன்
மீட்டுமொன்றுரைப்பன்சிந்தைவியந்தருள்செய்வாயென்றான். (க0கூ)

மல்லுறுபுயத்துவேந்தர்மதிமரபுதித்தோர்வண்மை
சொல்லியகாதைதன்னிற்றேன்றுசந்தனுவென்றேதும்
வில்லுடையரசர்கோமான்விண்ணதிதோய்ந்தவாறு
மெல்லைதீர்வலியான்மைந்தன்வீடுமனெய்துமாறும். (கக0)

மாமுனியருளினலேமன்னுமந்தகனும்பாண்டு
நாமவேலரசுந்தூயஞானியாம்விதுரன்றானுந்
தோமறவுதித்தவாறுஞ்சுதர்கணூற்றைறவர்வந்து
பூமிசைதோற்றுமாறும்புரையறப்புகல்வாயென்றான். (ககக)

நாயகனரசர்க்கெல்லாநவில்கின்றவாறுகேட்டு
நேயமுமகிழ்வுமுள்ளநிறைந்திடநிமலவைசம்
பாயனர்பகர்வார்வேந்தேபரிவில்சந்தனுவின்காதை
யேயநல்லகலமுற்றுமியம்புவன்கேட்டியென்றே. (ககஉ)

துட்டியந்தச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - அளஉ.

# சந்தனுசருக்கம்.

* அந்தணன்மரபினிலமுதவெண்டிரைச்
சிந்துவின்மிசைவருதிங்களாமெனச்
சந்தனுவெனும்பெயர்த்தரணிகாவலன்
வந்தனனவன்செயன்மகிழ்ந்துகேண்மினோ. (௧)

* வேனிலானிவனெனவிளங்குங்காலையிற்
கானகவேட்டைபோயிளைத்தகாவல
னானமென்குளிர்புனனசையினான்மணித்
தூனிறக்கங்கையாள்சூழலெய்தினான். (௨)

* மருவருங்குழல்விழிவதனம்வார்குழை
யிருதனந்தோள்கழுத்திதழொடின்னகை
புருவம்வண்புறவடிபொற்பப்பாவைய
ருருவுகொண்டனடனதுடைமைதோன்றவே. (௩)

* கங்கையின்வெள்ளமேற்கருத்துமாறியிம்
மங்கைதன்பேரொளிவனப்பின்வெள்ளமேற்
றங்கியசோகமுந்தாகமுங்கெடப்
பங்கயவிழிகளாற்பருகினானரோ. (௪)

* வையகமடந்தைகொல்வரைமடந்தைகொல்
செய்யபங்கயமலர்த்திருமடந்தைகொ
றுய்யவண்கலைவிதிச்சொன்மடந்தைகொ
லையமுற்றனனிவளார்கொலென்னவே. (௫)

* கண்ணிமைத்திருநிலங்காலுந்தோய்தலாற்
பெண்ணிவண்மானிடப்பிறப்பினாளென
வெண்ணமுற்றவளருகெய்தியாவர்செய்
புண்ணியநீயெனப்புகழ்ந்துபோற்றினான். (௬)

* போற்றியகுரிசின்மேற்புளகமெய்தவே
யேற்றியவிழியினளிளகுநெஞ்சினள்
சாற்றியமலரயன்சாபமிவ்வழித்
தோற்றியதெனவுறுதுயரநீங்கினாள். (௭)

* பொங்கியமதர்விழிப்புரிவுமாதரந்
தங்கியமுகிண்முலைத்தடமுநோக்கியே
யிங்கிதமுறைமைநன்றென்றுவேந்தனு
மங்கிதமுடனவட்கன்புகூரவே. (௮)

* கன்னியேயாமெனிற்கடிகொள்பான்மையை
யென்னின்மற்றுயர்ந்தவரில்லைமண்ணின்மே
லுன்னினைவுரையெனவுசாவினானிகன்
மின்னிலைவடிகொள்வேல்வேந்தர்வேந்தனே. (௯)

* நாணினளொதுங்கினனணிமடந்தையும்
பூணுற்றமுலைமுகம்பொருந்தநோக்கினள்
சேணுறைதனதுமெய்த்தேசுபோனகை
வாணிலவெழச்சிலவாய்மைகூறுவாள். (௧௦)

* இரிந்துமெய்ந்நடுங்கிடயாதுயாதுநான்
புரிந்ததுபொறுத்தியேற்புணர்வலுன்புயம்
பரிந்தெனைமறுத்தியேற்பரிவொடன்றனைப்
பிரிந்தகன்றிடுவனிப்பிறப்புமாற்றியே. (௧௧)

* மெய்தருவிதியினேன்விரதமற்றிவை
யெய்தரிதொருவராலெய்தவல்லையேற்
கைதருகெனப்பெருங்காதலாளனு
முய்தரிதெனவிசைந்துடன்படுத்தினான். (௧௨)

* எனதுயிரரசுவாழ்வென்பயாவையு
நினதுநின்னேவலினிற்பன்யானென
வனிதையைமருட்டினான்மன்றலெண்ணியே
தனதனுநிகரிலாத்தனமகீபனே. (௧௩)

* அருமறைமுறையினாலங்கிசான்றெனத்
திருமணம்புரிந்துளந்திகழ்வைகினா
னிரதியுமதனனுமல்லதில்லைமற்
றொருவருமுவமையென்றுலகுகூறவே. (௧௪)

* மருவுறச்சிலபகன்மணந்துமான்விழி
கருவுயிர்த்தனளெனக்களிகொள்காலையிற்
பருவமுற்றன்புடன்பயந்தமைந்தனைப்
பொருபுனற்புதைத்தனள்புவனங்காணவே. (௧௫)

* கண்டுளம்வெருவிமுன்கதித்தவாசகங்
கொண்டுரையெடுத்திலன்கொண்டகாதல
னொண்டொடியுடன்மணந்துருகிவைகினன்
பண்டையினெழுமடிபரிவுகூரவே. (௧௬)

* பின்னருமறுவரைப்பெற்றதாய்மன
முன்னரின்மும்மடிமுறண்டுமாய்க்கவே
மன்னவனவற்றினும்வாய்திறந்தில
னன்னகர்ச்சனமெலாநடுநடுங்கவே. (௧௭)

* வழுவறுகுருகுலமன்னன்மைந்தரோ
ரெழுவரைமுருக்கினளின்றதாயெனப்
பழுதறுமகப்பலபயந்தமங்கைய
ரழுதனர்கட்புனலாறுபாயவே. (கஅ)

* கங்கையென்றுலகெலாங்கைதொழத்தகு
மங்கையங்கனந்தரம்வயிறுவாய்த்துழி
வெங்கயகடகரிவேந்தன்மாமனப்
பங்கயந்துறந்ததுபழையவின்பமே. (கக)

* மதலையைப்பயந்தனண்மடந்தையென்றலுங்
கதுமெனச்சென்றுதாய்கைப்படாவகை
யிதமுறப்பரிவுடனெடுத்துமற்றவள்
பதயுகத்தாமரைபணிந்துபேசுவான். (உO)

* நிறுத்துகமரபினைநிலைபெறும்படி
வெறுத்தெனைமுனியினும்வேண்டுமாலிது
மறுத்தனன்யானெனமனஞ்செயாதினிப்
பொறுத்தருள்புரிகவிப்புதல்வன்றன்னையே. (உக)

* என்றுபற்பலமொழியிவனியம்பவே
நன்றுநன்றவனிபநவின்றவாசக
மின்றுநின்றிரங்கினையெழுவர்மைந்தரைக்
கொன்றவன்றென்செய்தாய்கொடியையென்னவே. (உஉ)

* அரசனுமுணர்ந்துநீயார்கொல்பாலரைத்
திரைசெறிபுனலிடைச்செற்றதென்கொலா
முறைசெயவேண்டுமென்றுரைப்பவஞ்சியும்
வரிசையினுயர்ந்ததன்வரவுகூறுவாள். (உங)

* வான்முகமதியமும்புதியமாலிகைக்
கான்முகவிதழியுங்கமழுங்கங்கையா
டேன்முகம்பொழிதருசெய்யதாமரை
நான்முகன்பேரவைநண்ணினளோ. (உச)

* இருங்கலையிமையவரெதிரிறைஞ்சுவாண்
மருங்கலைமதியினைமதிக்குமாறுபோ
லருங்கலையவனுறவதிர்ந்துவீசினன்
பொருங்கலையெனுமிகற்புரவிவீரனே. (உரு)

* திருத்தகுமவயவந்திகழ்ந்துதோன்றவே
கருத்துடனவைக்கணோர்கண்புதைக்கவு
மருத்தினைமனனுறமகிழ்ந்துகாதல்கூ
ருருத்தகுமரிமையோடுருவநோக்கினன். (உசு)

* நோக்கிட்வருணனை நவலுநான்மறை
யாக்கிய முனியுருத்தழன் றுபார்மகள்
பாக்கியமென்னவுற்பவிக்கநீயெனத்
தாக்கியவுருமெனச்சபித்தகாலையே. (உஎ)

* கோனிடநினைவொடுகுறுகிநீயுநன்
மானுடமடந்தையாய்மனந்துமீள்கென
வானிடைநதியையும்வழுவினலவ
டானிடருறும்வகைதந்தையேவினன். (உஅ)

* பாரினுநமக்கொருபதமுண்டென்றவ
ளீரமுற்றிழிதருமெல்லைவானகத்
தோரிடையுடன்விழுமுற்கைபோன்முக
வாரொளிமழுங்கினர்வசுக்கடோன்றினர். (உகூ)

* என்னையிங்கிழிந்தவாறெங்கண்மாநதி
யன்னையென்றவளடியவர்வணங்கலுந்
தன்னையந்தணனிடுசாபங்கூறினள்
பின்னையங்கவருந்தம்பெற்றிபேசுவார். (௩௰)

* உற்றுறையெங்களுளொருவன்றன்மனைப்
பொற்றொடிக்கழிந்தவள்புன்மைவாய்மையாற்
சற்றுமெய்யுணர்வரத்தகாதொன்றெண்ணினன்
மற்றெழுவருமவன்வசத்தராயினேம். (௩க)

* தூநகைமொழிப்படிசோரராகியே
வானவர்வணங்குதாள்வசிட்டன்வாழ்மனைத்
தேனுவையிரவினிற்சென்றுகைக்கொளா
மீனெறிகரந்தெனமீளவேகினேம். (௩உ)

* பசுக்கவர்ந்தனரெனப்பயிலுமாதவ
முசுக்குலமனையமெய்ம்முனிவர்கூறலுஞ்
சிசுக்களினறிவிலாச்சிந்தைசெய்தவர்
வசுக்களென்றருந்ததிமகிழ்நனெண்ணினன். (௩௩)

* உம்பதமிழந்துநீருததிமண்ணுளோர்
தம்பதம்பெறுகெனச்சாபங்கூறலு
மெம்பதம்பெறுவதென்றினியெனவவன்
செம்பதமெமதுபூஞ்சென்னியேந்தினேம். (௩ச)

* அன்புடைமுனிமுனிவர்றிமானுடப்
புன்பிறப்பெழுவரும்புரிந்துமீளுதிர்
மின்புரைதெரிவைசொல்விழைந்தநீயவ
ணின்பமற்றநேகநாளிருத்தியென்னவே. (௩ரு)

* விண்வருசெல்வமும்விழைவுமேன்மையு
மெண்மருமிழந்தனமென்செய்வேமென
மண்வருதையலைவணங்கத்தையனும்
பண்வருமொழிசிலபகர்ந்துதேற்றினாள். (௩௬)

* வலத்துயர்தடம்புயவருணனுங்குரு
குலத்தினிலயன்வரங்கொண்டுதோன்றுமா
னலத்துடனவன்மனைநண்ணுமெல்லையி
னிலத்திடையென்வயினீருந்தோன்றுவீர். (௩௭)

* அஞ்சன்மினும்மைநானவனிதோயுமுன்
னெஞ்சவிட்டிடுவனிவ்விறைவன்றன்னையு
நெஞ்சுறத்தந்தைபானிறுத்திநானுமவ்
வஞ்சகப்பிறப்பினைமாற்றுவேனென்றாள். (௩௮)

* நாலிருவசுக்களுநதிமடந்தைசொற்
பாலிருசெவிப்படப்படாதநற்றவஞ்
சாலிருநிலத்திழிதாயையன்புடன்
காலிருகரத்தினாற்கசிந்துபோற்றினார். (௩௯)

* சதையமீன்கடவுளுஞ்சசிகுலத்துநல்
விதையெனமேதினிமீதுதோன்றினான்
றுதைந்தளிசெறிகுழற்றோகையாகினா
ளிதையமுற்றுயர்நதியென்னுமின்னுமே. (௪௦)

* தவமுறக்குடதிசைத்தலைவன்றாரமா
மவள்வயிற்றுதித்தனரந்தவெண்மரு
முவகையிற்பெருமநீயுணர்ந்துகொள்கென
விவடிருக்கணவனுமின்னகூறுவான். (௪௧)

அறப்பயனென்னுமாறறிவிலாவெமைப்
பிறப்புணர்த்தினைமகப்பேறுசெய்துநீ
யிறப்பவரெழுவரோடேகலாவுயர்
சிறப்புடையினையவன்செய்வதென்னென்றான். (௪௨)

* முக்குலத்தரசினுமுதன்மையானுய
ரிக்குலத்திவனலாதில்லைமாமகா
ரக்குலத்தவமுனியருளினாலிவன்
மெய்க்குலத்தந்தையாம்விழைவுமில்லென்றான். (௪௩)

* மன்னவர்தொழுகழன்மன்னன்மைந்தனோ
டின்னமுமொருவனையினிதளித்துநாம்
பன்னகநெடுமுடிப்பார்களிக்கவே
பொன்னகரிருவரும்போதுமென்னவே. (௪௪)

* போயிருந்தென்பயன்போகம்பல்வகை
யாயிருந்தனவெலாமருந்தியின்னமு
மாயிருந்தரணியின்மன்னுசில்பக
னீயிருந்தரசியனிறுத்திமீளுவாய். (சரு)

* இப்புதல்வனுமினியென்ஞெடேகியே
மெய்ப்படுகாலையாம்பதத்துமீளநின்
கைப்படுத்துவலெனக்கணவனைத்தழீஇ
யப்பெரும்புதல்வனோடேவளுமேகினள். (சசு)

வேறு.

* அன்றுதொட்டிவனுமகன்றபூங்கொடியையழகுறவெழுதிமுன்வைத்து [து
மொன்றுபட்டுவனமைப்பொருள்களாற்கண்டுமுறைத்தவையெடுத்தெடுத்துறைத்
மன்றலிற்றலைநாள்விழைவொடுமணந்தமடந்தையர்வதனமுநோக்கா
னென்றினிக்கிடைப்பதென்றுளம்வருந்தியெண்ணுநாளெல்லையாண்டிருந்தான்

* பின்னொருதினத்திலமைச்சரும்பிறரும்பெரும்படைத்தலைவருஞ்சூழ
முன்னொருதினத்தின்வனத்துமாவேட்டை முன்னினன்முயன்றுபோய்முற்றி
மின்னொருவடிவுகொண்டெனச்சிறந்தமெல்லியன்மீண்டுறைமறையுந்
தன்னொருமதலையாக்கமுங்கருதிச்சானவித்தடங்கரையடைந்தான். (சஅ)

* பண்டுதானவளையெதிர்ப்படுகனகப்பைங்கொடிப்பந்தர்வானிழலும்
வண்டறுநறைப்பூஞ்சோலையுந்தடமுமருங்கலைமலயமாருதமும்
புண்டரீகமுஞ்செங்காவியுங்கமழும்புளினமும்புளினமென்றுறையுங்
கண்டுகாரிகையையிம்மையிலினுங்காண்குமோவெனமனங்கசிந்தான். (சகூ)

* பிரிந்தநாளெண்ணிப்பகீரதிப்பெருக்கைப்பேதுறுங்குறிப்பொடுநோக்கிக்
கரிந்தபாதபம்போனின்றவப்பொழுதிற்கால்பொரக்குனித்தகார்முகமுந்
தெரிந்துமேன்மேலுந்தொடுத்தசாயகமுஞ்சிலம்பெனத்திரண்டதோளிணையும்
விரிந்தநூன்மார்புமாகிமுன்னடந்தான்விழிகளித்திடவொருவீரன். (ருo)

* வியந்திடவருமக்குரிசிலையிவனேவிடையவன்குமரனென்றயிர்க்கும்
வயந்தனிலுலவுமதன்கொலோவென்னும்வாசவன்மதலையென்றெண்ணு
முயர்ந்தவரிவனின்வின்மையினில்லையொருவருமுலகின்மேலென்னும்
பயந்ததன்வடிவின்படியெனத்திகழும்பான்மையைநினைந்திலன்பயந்தோன். ()

* தந்தையென்றிவனையுணர்கிலாமதியாற்சராசனந்தழுவுறவளைத்து
மைந்தனுமொருபோர்மோகனக்கணையான்மறையுடன்மார்புறவெழுதி
யிந்திரதனுவோடிந்திரனெழிலியிடைமறைந்தனனெனப்புடையே
சிந்தியதிவலைச்சிந்துவின்மறைந்தானரசனுமகிதலஞ்சேர்ந்தான். (ருஉ)

* காதலனயர்வுந்திருமகன்புனலிற்கரந்ததுங்கண்டுளமுருகி
மேதகுவடிவுகொண்டுமற்றந்தவெஞ்சிலைவிநோதனுந்தானு
மோதவெண்டிரையின்மதியுடனுதித்தவொண்மலர்க்கொடியெனவோடித்
தூதுளங்கனிவாய்மலர்ந்தினிதழைத்துச்சூடகச்செங்கையாலெடுத்தாள். ()

* வாடியதருவின்மழைபொழிவதுபோன்மடவரல்கருணைநீர்பொழியக்
கூடியவுணர்வோடெழுந்தகாவலனைக்கொங்கைமார்புறத்தழீஇக்கொண்டு
நாடியகருமம்வாய்த்ததென்றுவகைநலம்பெறத்தந்தைபைங்கழற்கால்
சூடியமகவைக்கைக்கொடுத்திவனுந்தோன்றலோடிவையிவைசொன்னாள். ()

* வேந்தகேளிவனுன்மதலையேதேவவிரதனென்றிவன்பெயர்பல்லோ
ராய்ந்தநூல்வெள்ளங்கடந்தனன்கரைகண்டருந்ததிபதிதிருவருளாற்
பூந்துழாய்மாலைப்போர்மழுப்படையோன்பொன்னடிபொலிவுறவணங்கி
யேந்துநீள்சிலையும்பலகணைமறையுமேனையபடைகளும்பயின்றான். (ருடு)

* மகப்பெறுமவரிலொருவரும்பெறாதமகிழ்ச்சியும்வாழ்வுமெய்வலியு
மிகப்பெறுந்தவநீபுரிந்தனைநின்னைவேறினிவெல்லவல்லவரா
ருகப்புறவிவனோடவனியாளுகவென்றோரடிக்கோரடிபுரிந்து
தகப்பெறுமயிலுந்தலைவன்மேலுள்ளந்தகைவுறத்தடம்புனல்புகுந்தாள். (ருசு)

* மனைவியைக்கண்டுமீளவும்பிரிந்தவருத்தமெய்த்திருத்தகுகேள்வித்
தனயனைக்கண்டமகிழ்ச்சியாலருக்கன்றன்னெதிரிருளெனத்தணப்ப
நினைவினிற்சிறந்ததேர்மிசைப்புதனுநிறைகலைமதியுமேநிகர்ப்பப்
புனைமணிக்கழலானவனொடுந்தனதுபுரமெதிர்கைதொழப்புகுந்தான். (ருஎ)

* தானுமம்மகனுந்தரியலர்வணங்கத்தங்குநாடன்னிலங்கொருநா
டேனுறுந்தொடையலிளவரசினைத்தன்றிகழரியாசனத்திருத்திக்
கானுறுவிலங்கினுயிர்கவர்நசையாற்காற்றெனக்கூற்றெனநடந்து
பானுவின்மகனாங்காளிந்திநதியின்பாரமெய்தினன்விறற்படையோன். (ருஅ)

* பாசறைமுழுதுமொருபெருங்கடவுட்பரிமளமொல்லெனப்பரப்பி
யோசனையளவுங்கரையிருமருங்குமுயிர்க்குமெல்லுயிர்ப்பெதிரோடித்
தாசர்தங்குலத்துக்கதிபதியளித்ததையலைதரணிபர்க்கெல்லா
மீசனுமுருகிக்கண்டிளங்களியாவிலங்கிழையார்கொனீயென்றான். (ருகூ)

* நிருபனதுரைகேட்டஞ்சினளொதுங்கிநின்றுகைநினைவுறக்குவியா
விருதுறைநெறியில்வருநரைநாவாயேற்றுவலெந்தையேவலினென்
றுரைசெயுமளவில்வேட்கையாலுள்ளமுருகிமெய்ம்மெலிந்தொளிகருகி
யரிவையையளித்தோன்பக்கமதடைந்தானவனும்வந்தடிமலர்பணிந்தான். ()

* பாகனையரசன்குறிப்பினுலேவப்பாகனும்பரதவர்பதியை
யோகையோடிருத்திநின்னுழைவதுவையுலகுடைநாயகனயந்தான்
றோகைசெய்தவமோநின்பெருந்தவமோதொல்குலத்தவர்புரிதவமோ
வாகுமிவ்வாழ்வென்றுரைத்தனனவனுமாகுமாறவனுடனுரைப்பான். (சுக)

* பூருவின்மரபிற்பிறந்தகோமகனென்புன்குலமகள்குயம்பொருந்தன்
மேருவுமணுவுநிறுக்குமாறொக்குமேலினியிவைபுகன்றென்கொல்
பாருவகையினாலாளுதற்கிருந்தான்பகீரதிமகனிவள்பயந்த
சீருடைமகன்மற்றென்செய்வானிசைமின்செய்கைதான்றிருவுளங்குறித்தே.

* என்னமுன்னிறைஞ்சியிவன் மொழிகொடுஞ்சொல்லிறையவன்கேட்ட
லுமிரண்டு, கன்னமுமழற்கோல்வைத்ததொத்திதயங்கருகிவேறொன்றையுங்
கழறான், முன்னமுன்மதத்தான்முனியிடுசபதமுமுடிந்ததென்றுகுலமுற்றி, யன்
னமுங்குயிலும்பயிலுநீள்படப்பையத்தினாபுரியைமீண்டடைந்தான். (சு௩)

* கங்கையாளிடத்திலாதரமெலிந்தகாலையிற் ¶ களிந்தவெற்பளித்த
மங்கையாமென்னாநின்றபூங்கொடிமேல்வைத்தபேராதரமலியப்
பங்கையானனந்தான்முறைமுறைகுறையும்பான்மதியெனவழகழிந்த
சங்கையான்மைந்தன்வினவலுநிகழ்ந்ததன்மையைச்சாரதிபுகன்றான். (சு௪)

* கேட்டவக்கணத்திற்கடற்புறத்தரசைக்கேண்மையோடடைந்திளவரசும்
பாட்டனீயெனக்குப்பெற்றதாய்தானும்பகீரதியல்லணின்மகளே
நாட்டமின்றுனக்கியாததுநிலையிந்தஞாலமுமெம்பியர்ஞால
நீட்டமற்றின்றேதிருமணநேர்வாய்நீதிகூர்நிருபனுக்கென்றான். (சு௫)

* விரதமுற்றியவாறனைவருங்கேண்மின்மெய்புயிர்வீடுமன்றளவுஞ்
சரதமுற்றியமெய்த்தாதுவுமூலத்தழலுடன்மீதெழுந்தகைத்தே, யிரதமுற்றி
யசொன்மகப்பெறுதவருக்கில்லையென்றியம்புநற்கதியுஞ் [னான்.
சரதமுற்றியவென்றந்தைதன்பொருட்டாற் பெறுவலென்றின்னதுஞ்சொன்

* இவன்மொழிநயந்துகேட்டுழியவையினிருந்ததொன்மனிதரேயன்றித்
தவமுனிவரருந்தேவருங்ககனந்தங்குமாமங்கையர்பலரு
முவகையோடிவனுக்கேற்றபேருரைசெய்தொளிகெழுபூமழைபொழிந்தா
ரவனியினிருபர்வெருவருந்திறலானரியசொற்பொருணிலையறிந்தே. (சு௭)

* மெய்ம்மகிழ்கடவுட்பூமழையுடனே § வீடுமனெனும்பெயரெய்திக்
கைம்மகிழ்வரிவிற்றாசபூபதியுங்கன்னிகைகாளியுந்தானு
மொய்ம்மணங்கமழுமன்றல்வேனிலின்வாய்முனிவருங்கிளைஞருஞ்சூழச்
செய்ம்மகிழ்பழனக்குருநிலமுடையான்றிருமணவிழைவுடன்சேர்ந்தான். ()

* பரிமளவடிவப்பாவையையரசன்பாலளென்றொருபுடைநிறுத்தி
யிருபதந்தொழுதுநின்றமாமகனையிதயமோடிறுகுறத்தழுவித்
தருமணங்கமழுஞ்சென்னிமேல்வதனந்தாழ்ந்துமோந்துருகிமுன்றந்தைக்
குரியதன்னிளமைகொடுத்தகோமகனுமுனக்கெதிரல்லனென்றுரைத்தான்.()

* தந்தையர்க்குதவுமுதவியினெனக்குச்சதமடங்குதவினையுனக்கு
மைந்தருக்குதவுமுதவியிற்சிறிதுமாதவஞ்செய்திலேனுதவச்
சிந்தையிற்றுரக்கம்வேண்டுமென்றெண்ணிச்செல்லுமன்றல்லதுன்னுயிர்மேன்
முந்துறக்காலன்வரப்பெறானென்றேமுடிவிலாவொருவரமொழிந்தான். (எ0)

* அம்புவியரசன்மாமனுமரசனடிபணிந்தவயவத்தழகா [தா
லும்பரும்வியக்குங்கிளியைமுன்னிறுத்தி யொடுங்கினன்வாய்புதைத்துரைத்
னெம்பெருமானீகேட்டருளுனக்கேயிசைந்தமெய்த்தவம்புரியிவளை
வம்பவிழ்மலர்மாதென்பதேயன்றிவலைஞர்மாமகளெனக்கருதேல். (எக)

---

¶ களிந்தவெற்பளித்தமங்கை=காளிந்திநதி. § பீஷ்மன்=வீடுமன், பயங்கரமானவன், பயங்கரமான விரதமுண்டாயவன் என்பது கருத்து.

* வாசவனளித்தவிமானமீதோருவன்வசுவெனுஞ்சோதிமாமரபோன்
கேசரனெனப்போம்விசும்பிடைமனையாள் ❋ கிரிகையைநினைந்துடல்கெழுமி
நேசமோடிதயமுருகுமக்கணத்தினினைவறவிழுந்தவீரியமெய்த்
தேசவனளித்த ¶ நதியிடைத்தரளத்திரளெனச்சிந்தியதொருபால். (எ௨)

* ஒருமுனிமுனிவால்ரமகளொருத்திமீனமாயுறப்பவித்துழல்வா
ளிரையெனவதனைவிழுங்குமுன்கருக்கொண்டீன்முதிர்காலையிலதனைப்
பரதவர்வலையினகப்படுத்தரியபாலகனொருவனுமிவளு
மிருவருமிந்தமீன்வயிற்றிருந்தார்யமுனையும்யமனுநேரெனவே. (எ௩)

* மானவர்பதியாம்வசுவினுக்கிவரைமகிழ்வுறக்காட்டலுமகனை
மீனவனெனப்பேர்கொடுத்தனன்கொண்டுமெல்லியலிவளைமீண்டளித்நான்
யானுமின்றளவுமென்மகளென்னுமியற்கையாலினிமையின்வளர்த்தேன்
கானமென்குயில்போல்வந்துமீளவுந்தன்காவலர்குலத்திடைகலந்தாள். (எ௪)

வேறு.

* என்றுகூறிவிடுத்தனனேந்தலு
மன்றவைக்கணவன்மொழிகேட்டுவந்
தின்றுநற்றினமென்றிளந்தோகையை
மன்றலெய்தினன்மாநிலம்வாழ்த்தவே. (எ௫)

* காளிவந்துகலந்தனள்கங்கைவேய்த்
தோளியும்புயந்தோய்ந்தனண்முன்னமே
வாளிவெம்பரிமாநெடுந்தேருடை
மீளிதானும் § விடையவனுதலால். (எ௬)

* கங்கையின்கரைக்கண்ணுறுகாரிகை
கொங்கையின்பங்குலைந்தபின்மற்றவ
ளெங்கையென்னயமுனையின்பால்வரு
மங்கையின்பமகிழ்ந்தனன்மன்னனே. (எஎ)

* வீடுமன்கழல்வேந்தர்வணங்கிட
நாடுநன்னெறிநாளுநடத்திட
நீடுமன்னனுநேரிழைமேன்மலர்த்
தோடுமன்னுசுரும்பெனவீழவே. (எ௮)

* அன்னநாளிலருக்கனுந்திங்களு
மென்னமைந்தரிருவரையீன்றனண்
மன்னனுவிவடிவுகொண்டன்னமெய்க்
கன்னபூரங்கலந்தசெங்கண்ணியே. (எ௯)

* சித்திராங்கதன்செப்புநலனுடை
மெய்த்தசீர்த்திவிசித்திரவீரிய
னித்திறத்தரிருவருந்தம்முறை
லொத்தகல்வியராயினருண்மையே. (௮௦)

❋ கிரிகை=வசுராசன்மனைவி. ¶ சூரியன்பெற்றநதியமுனை=இது காளிந்தி யெனவும் படும். § விடையவன்=சிவன், வருணன், இடபக்குறி யுடைமையின் வருணன் விடையவனெனப்படுவன், அவனவதாரமாதலிற்சந்தனுவைவிடையவனென்றார்.

* மதிநெடுங்குலமன்னனைநண்பினால்
விதியனந்நரம்வின்னுலகேற்றினு
னதியின்மைந்தனுநம்புவிக்கெம்பியே
யதிபனென்றரியாசனத்தேற்றினன். (அக)

* எங்கணுமமிவன்கவர்ந்தானெனக்
கங்குல்வந்தொருகந்தருவாதிபன்
றுங்கன்மாமுடிசூடியவேந்தனை
யங்கையான்மலைந்தாருயிர்கொள்ளவே. (அஉ)

* எம்முனன்றியிறந்தனனென்றுதாய்
விம்முநெஞ்சின்மிகுதுனிமாறவே
தெம்முன்வல்லவிசித்திரவீரனைத்
தம்முன்மீளத்தனிமுடிசூட்டினான். (அங)

* சிற்பொருட்பரமானபொருட்கெதி
ருற்பவிக்குமுபாயமதென்னவே
விற்படைத்திறல்வீடுமன்வாய்மையாற்
பொற்புறப்புவிபூபதியாளுநாள். (அச)

* காசிமன்னவன்கன்னியர்மூவருந்
தேசின்மிக்கவர்ச்சேர்வதென்றுள்விட
மாசிறுல்குலமன்னவரீண்டினர்
மூசிவண்டினமொய்ப்பதுபோலவே. (அரு)

* வரித்தமன்னர்மறங்கெடவன்பினுற்
றிரித்துமெம்பியைச்சேர்த்துவல்யானெனத்
தரித்தவில்லொடுந்தன்னிளவேந்தொடும்
விரித்தவெண்குடைவீடுமனேகினன். (அசு)

* அரவமாநதியன்னையுந்தன்மகன்
வரவறிந்துவழியிளைப்பாற்றினுள்
பரவிவந்துபனிமலர்த்தென்றலாய்
விரவுதண்டுளிமீதெறியூதையால். (அஎ)

* கஞ்சவாவிகலைமதிகண்டென
நெஞ்சழிந்துநிருபர்குழாந்தொழ
வெஞ்சராசனவீரனுந்தம்பியு
மஞ்சமேறிமணித்தவிசேறினர். (அஅ)

* குருத்தலந்தனிற்கூறியவர்சக
மொருத்தரன்றறிவோருலகோர்பலர்
விருத்தன்வந்தனன்மேலினியேதிவன்
கருத்தெனுமனங்காளையர்கன்றினர். (அகூ)

* இருந்தமன்னவரிவரிவரென்றுளம்
பொருந்தமற்றவர்பொற்புடைத்தேசெலாந்
திருந்தநின்றுசெவிலியர்கூறவே
முருந்துவாணகைமூவருந்தோன்றினர். (கூ0)

* கையின்மாலையிவற்கெனக்கன்னியர்
வெய்யநெஞ்சொடுமின்னெனவந்தவர்
வையமன்னன்வயநிலைநோக்கியே
மையமுற்றனரன்புறுகாதலார். (கூக)

* ஏனைவேந்தரெதிரிவரைப்பெருந்
தானைசூழ்மணிச்சந்தனத்தேற்றியே
சோனைமாமதஞ்சோருங்கடாநட
யானையென்னவிளவலோடெய்தினன். (கூஉ)

* முறையினாலன்றிமொய்ம்பிற்கவர்வதெக்
குறையினாலென்றுகோகுலங்கூடிவந்
திறைவனோடெதிரேற்பவில்வீரரைப்
பிறைமுகக்கணையாற்பிளந்தோட்டினன். (கூங)

* முந்துறப்பெறுமூவரோடாடமர்
விந்தைதன்னையும்வேந்தர்கொடுத்தலாற்
சந்தனுப்பெயர்த்தார்முடிமன்னவன்
மைந்தர்தங்கள்வளநகர்மன்னினார். (கூச)

* சமரின்முந்தியசாலுவன்மேன்மன
மமரநின்றதறிந்துழியம்பையை
யெமர்களுக்கிதியற்கையன்றென்னவே
யமரழிந்தவவனுழைப்போக்கினன். (கூரு)

* அம்பிகைக்குமம்பாலிகைக்கும்பதி
யெம்பியேயெழிலானென்றிசைவுறத்
தம்பிதன்னைத்தனஞ்சயன்றன்னெதிர்
வம்பினான்மிகுமாமணஞ்சேர்த்தினான். (கூசா)

* சென்றவம்பையைத்தீமதிச்சாலுவன்
வென்றுதெவ்வர்கவர்ந்தநின்மெய்த்தொடே
னென்றிகப்பவிவனுழைமீளவு
மன்றல்வேண்டினண்மன்றலங்கோதையாள். (கூஎ)

* கங்கைமைந்தன்கடிமணங்காதல்கூர்
மங்கைதன்னைமறுத்தபின்மங்கையுஞ்
செங்கணீரெழச்சிந்தைசெந்தீயெழச்
சங்கையோடுதன்றாதையைநண்ணினள். (கூஅ)

வேறு.

* தாதைதாடனில்விழுந்தசந்தனுவின்மைந்தனின்னலுரைதந்ததுங்
கோதையாலுறவுகொண்டுகைதரல்குறித்தகோமகன்மறுத்ததும்
பேதைகூறமனநொந்திரங்கியவன்மிக்கநண்பினொடுபின்னையுந்
தூதையேவிமனமுற்றுணர்ந்தனன்விசும்புலாவுநதிசுதனையே. (கூகூ)

* போனதூதுவர்வணங்கியிம்மொழிபுகன்றபோதுமொழிபொய்யுறு
மீனகேதனனைவென்றுதன்கொடியவிரதமேபுரியுவீடுமன்
மானவேனிருபன்மகள்குறித்ததிருமன்றல்வன்பொடுமறுத்தலா
னனவர்தரவொடாதரம்பெருகுமம்பைதந்தைதனதருளினால். (க00)

* வரிசையாலுயரநேகமண்டலமகீபர்சொன்னசொன்மறுக்கினும்
பரசுராமனதுமொழிமறானவனதிருபதத்திடைபணிந்துநீ
முறைசெய்தாலவனுரைத்தசொல்லின்வழியொழுகிவந்தனதுவகையால்
விரைசெய்மாலைபுனையாதுமீளவுமறுத்துவீடுமன்விளம்புமேல். (க0க)

* பின்னையெண்ணியபெருந்தவம்புரிதியென்றமேதகுபிதாவையு
மன்னைதன்னையும்வணங்கிநீடு * சதுரந்தயானமிசையம்புயப்
பொன்னைவென்றொளிகொள்சாயலாளிருபுறத்துமங்கையர்கள்பொலிவுடன்
றன்னைவந்துபுடைசூழவேகியமதங்கிமைந்தனகர்சாரவே. (க0உ)

* காசிராசன்மகளென்றுவந்தனளொர்கன்னியென்றுகடைகாவலோர்
வாசநாறுதுளவோனுடன்புகலவருகவென்றபின்மடந்தைபோ
யாசிலுரைவகுத்துமுற்செயலினைத்துமண்ணலடிதொழுதபின்
பேசினனவனுமியாமுடிக்குவமிதென்றுமெய்ம்மையொடுபேசினான். (க0ங)

* வர்தன்வீரமழுவாலநேககுலமன்னர்வேரறமலைந்தகோ
னிரதமீதவளுடன்கணப்பொழுதினேறியையிருதினத்தினில்
விரதமாபரணமெனவணிந்ததிறல்வீடுமன்பதியின்மேவலுஞ்
சரதமாகவெதிர்கொண்டவன்சிரமிவன்பதத்தினிடைசாத்தினான். (க0ச)

* தனக்குவின்மைநிலையிட்டகோவையொருதபனியத்தவிசில்வைத்துநீ
யெனக்குநன்மைதரவந்தநற்றவமிருந்தவாவெனவிருந்தபின்
கனக்கும்வெண்டரளவடமுலைப்பெரியகரியகண்ணியிவள்காதலா
லுனக்குமன்றல்பெறவுரியளாகுகெனவுவகையோடவனுரைக்கவே. (க0ரு)

* இன்சொலாலவனிகொண்டவெங்கமுதலின்பமன்றலினிதெய்தநான்
வன்சொலாவிரதமணமுறேனெனமனத்தினால்விரதமன்னினே
னின்சொலியாவருமறாரெனக்கருதிநீயுரைப்பினுநிகழ்ந்தவிப்
புன்சொலானதினிமாதவத்தின்மிகுபுனிதவென்செவிபொறுக்குமோ. (க0சு)

* களம்புகுந்தவரைமீளவேகுதல்கொடாதகார்முகவிநோதகே
ளுளம்புகுந்தினிதிருக்குநற்கடவுளுன்னையன்றியிலதுண்மையே
வளம்புனைந்தவநுராகபோகமிகுமாதர்மங்கையர்பொருட்டினால்
விளம்புமிந்தமொழியொழியவென்றனுயிர்வேண்டுமெனினுமழங்குவேன்.

* சதுரந்தயானம் - சிவிகை.

* மறுத்திவன்புகல்வீரியன்புயமொராயிரந்துணிசெய்மழுவினான்
வெறுத்தனந்தரமொழிந்திருந்துகரைகழியும்வேலைநிகர்வெகுளியன்
கறுத்தநெஞ்சினன்வெளுத்தமேனிபனுறச்சிவந்தவிருகண்ணினன்
பொறுத்தவில்லினன்விரைந்துநேர்மிசைபுகுந்தனன்பெருதுபோர்செய்வான்.

* வெருவுடன்றெழுதுகங்கைமைந்தனடிவீழவுஞ்சினமிகுத்தலா
லுருவுடன்றனுவிருக்கநீள்விரதம்வழுவினானரகமுறுவதிற்
குருவுடன்பொருதுமடிதனன்றெனநினைந்துதாலமுயர்கொடியினன்
செருவுடன்றிடுதலுன்னியேறினனமைந்துநின்றதொருதேரின்மேல். (௧௦௯)

* இவ்விராமனுமறுத்தமன்னவனுமையிரண்டுதினமிகலுடன்
வெவ்விராவுமொழியாதுவெஞ்சமர்விளைத்தகாலையடல்வீடுமன்
கைவிராயசிலையோடுமெய்வலிகவர்ந்துமுன்றளர்வுகண்டுபோ
ரவ்விராமனிகரென்னுமாறிவனையஞ்சிநின்றெதிறடர்க்கவே. (௧௧௦)

* ஓடிமீளமழுமேவுபாணிதனதூர்புகுந்தனனுவந்துபல்
கோடிநேரரசர்துதியெடுக்கநதிகுமரனுந்தனகர்குறுகினா
னூடிமாலையிடவந்தகாசிபதிநல்குமொல்குமிடைநவ்வியும்
வாடிவாடியினியமையுமென்றுதவவனமடைந்தனண்மடங்கியே. (௧௧௧)

* வெம்பையாடரவமாயவென்றிடுவிகங்கராசனெனவீடுமன்
றம்பையாடமரின்மாளவெல்வதொருசூரனாகுவனியானெனா
வம்பைமோதுமுலைவம்பைவீசுகுழல்வம்பமைன்னுமெழில்வரிகொள்கூ
ரம்பைமானும்விழியம்பையம்பையெனவரியமாதவமியற்றினாள். (௧௧௨)

* தாளிரண்டினிலொர்தாண்மடக்கியொருதாளில்வைத்தமைசமைத்தபொற்
றோளிரண்டினையுமீதெடுத்துநனிதொழுதியக்கிதுணையடியிலே
வாளிரண்டனையவிழிமலர்த்திநிறைவாவிநீரினிடைவானுளோர்
நாளிரண்டதனொடையிரண்டுமொருநாளெனும்படிநடக்கவே. (௧௧௩)

* முயலிலாமதிமுகத்தினாளொருவர்முயலருந்தவமுயன்றபின்
புயலிலாதமினலொத்தமெய்யிலொளிபுரியியக்கிதனதருளினான்
மயிலினாடனதுவடிவகற்றியிகல்யாகசேனனதுவயினிடைச்
செயலிலாறுமுகனிகரெனத்தகுசிகண்டியாயினள்சிறக்கவே. (௧௧௪)

* மணிமுடிக்குரியநிருபனுங்கடிகொண்மாதர்தங்களைமகிழ்ச்சியால்
அணிபெறத்தழுவிபின்பவேலையினழுந்திநாள்பலகழிந்தபின்
பிணிகளுக்கரசெனும்பெரும்பிணிபிணித்துவாழ்வினிநணித்தெனப்
பணிமுடிப்புவியிரங்கவைகியொருபற்றிலாதநெறிபற்றினான். (௧௧௫)

சந்தனுசருக்கமுற்றிற்று.

ஆ செய்யுள்-௯௮௮.

---

உ

# சம்பவச் சருக்கம்.

---

* இறந்தமைந்தனுக்குரியதென்புலத்தவரியாவருங்களிகூரச்
சிறந்தநான்மறைவிதியினுலகியல்செய்தபின்செழுந்திங்கண்
மறைந்தயாமினிநிகரெனக்குருகுலமன்மயக்குறுமெல்லை
யிறந்தவாவகைதுறந்தவாளரசனுக்கன்னைமற்றிதுசொன்னாள். (௧)

* மைந்தகேண்மினுந்துணைவன்வானடைந்தபின்மதிமுதலெனத்தக்க
விந்துமாமரபரும்பனிப்பகைச்சிரத்தெழிலியொத்துமன்னோ
முந்தநான்மறைமுதலியநூல்களின்முறைமைநீயுணர்கிற்றி
யெந்தநீர்மையினுய்வதென்றறிகிலேனிடரினுக்கிருப்பானேன். (௨)

* ஈண்டுதேவரநீதியிற்கொழுந்தியரெழின்மகப்பெறநின்னால்
வேண்டுமாலிதுதாயர்சொற்புரிதலின்விரதமுங்கெடாதென்ன
மூண்டுவானுருமெறிந்தபேரரவெனமுரிந்திருசெவிபொத்தி
மீண்டுமானதிவயின்மிசைப்புரியினென்விரதமுந்தபவென்றான். (௩)

என்றுபின்னருமியம்புவானன்னைநீயிழியுரைபகர்ந்திட்டா
னன்றுதீதெனவிலக்குவாருண்டுகொனானினியிறந்தாலும்
வென்றிகூர்மொழிபழுதேறன்விரதநற்சுதனெய்த
வொன்றுகூறுவன்முன்னர்நாளியற்கையென்றொண்டொடிக்குரைத்தானால். ()

வேறு.

பவ்வியனெனுங்குரவனில்லவண்மிகுந்தருமபத்தினிதனைத்
திவ்வியகருப்பமுடன்வைகுமமதைப்பெயர்கொள்சேயிழைமுன்
செவ்வியமரர்க்கினியதேசிகன்விரும்பியொருதெய்வவிரகா
லொவ்வியபுணர்ச்சிசெயல்கண்டுதரமுற்றவனுருத்துரைசெய்வான். (௫)

நீதிதபநீயிதுநிகழ்த்தியதுநன்றுகொனெறிக்கொருவனும்
வேதியவெனப்புகலமேலவன்வெகுண்டவனைவெம்மையதனா
லோதியகனற்கொடியசூளுரைதனிற்பிறவியற்றதுமுதற்
சோதியுடலிற்றமமிகுந்தவனிருந்துதுயர்துன்னினனரோ. (௬)

தீர்க்கதமனென்றுபெயர்செப்புமுனிதன்னுடனியக்கமுடனும்
யார்க்குமரிதானமறைமுற்றுமுணர்வுற்றவனருத்தியுடனே
பார்க்குளுறைபோதிலொருபாவகனையொத்தவர்பயந்தகொடியை
யேர்க்குமெனநல்கினனிருங்கடிமணஞ்செய்திவணின்பமுறுநாள். (௭)

மைந்தர்பலர்வந்தனர்களந்தமடமங்கைதுயர்மல்குதலலாற்
சிந்தைமகிழ்கொண்டிலாறிந்திவனுமுள்ளதுரைசெய்கவெனலும்
வந்தமுதலின்றளவுநின்றொழில்புரிந்தயர்வுவந்ததினிநீ
தொந்தமறவெங்கடைதுறந்திடுதியென்றவடுணிந்துரைசெய்தாள். (௮)

* மறுத்திவன்புகல்வீரியன்புயமொராயிரந்துணிசெய்மழுவினான்
வெறுத்தனந்தரமொழிந்திருந்தகரைகழியும்வேலைநிகர்வெகுளியன்
கறுத்தநெஞ்சினன்வெளுத்தமேனியனுறச்சிவந்தவிருகண்ணினன்
பொறுத்தவில்லினன்விரைந்துநேர்மிசைபுகுந்தனன்பெருதுபோர்செய்வான்.

* வெருவுடன்றெழுதுகங்கைமைந்தனடிவீழவுஞ்சினமிகுத்தலா
லுருவுடன்றனுவிருக்கநீள்விரதம்வழுவினானரகமுறுவதிற்
குருவுடன்பொருதுமடிதனன்றெனநினைந்துதாலமுயர்கொடியினன்
செருவுடன்றிடுதலுன்னியேறினனமைந்துநின்றதொருதேரின்மேல். (க0௯)

* இவ்விராமனுமறுத்தமன்னவனுமையிரண்டுதினமிகலுடன்
வெவ்விராவுமொழியாதுவெஞ்சமர்விளைத்தகாலையடல்வீடுமன்
கைவிராயசிலையோடுமெய்வலிகவர்ந்துமுன்றளர்வுகண்டுபோ
ரவ்விராமனிகரென்னுமாறிவனையஞ்சிநின்றெதிறடர்க்கவே. (கக0)

* ஓடிமீளமழுமேவுபாணிதனதூர்புகுந்தனனுவந்துபல்
கோடிநேரரசர்துதியெடுக்கநிதிகுமரனுந்தனகர்குறுகினா
னுடிமாலையிடவந்தகாசிபதிநல்குமொல்குமிடைநவ்வியும்
வாடிவாடியினியமையுமென்றுதவவனமடைந்தனண்மடங்கியே. (ககக)

* வெம்மையாடரவமாயவென்றிடுவிகங்கராசனெனவீடுமன்
றம்மையாடமரின்மாளவெல்வதொருசூரனாகுவனியானென
வம்மைமோதுமுலைவம்பைவீசுகுழல்வம்பமைன்னுமெழில்வரிகொள்கூ
ரம்பைமானும்விழியம்பையம்பையெனவரியமாதவமியற்றினள். (ககஉ)

* தாளிரண்டினிலொர்தாண்மடக்கியொருதாளில்வைத்தமைசமைத்தபொற்
றோளிரண்டினையுமீதெடுத்துநனிதொழுதியக்கிதுணையடியிலே
வாளிரண்டனையவிழிமலர்த்திநிறைவாவிநீரினிடைவானுளோர்
நாளிரண்டதனொடையிரண்டுமொருநாளெனும்படிநடக்கவே. (ககங)

* முயலிலாமதிமுகத்தினாளொருவர்முயலருந்தவமுயன்றபின்
புயலிலாதமினலொத்தமெய்யிலொளிபுரியியக்கிதனதருளினான்
மயிலினுடனதுவடிவகற்றியிகல்யாகசேனனதுவயினிடைச்
செயலிலாறுமுகனிகரெனத்தகுசிகண்டியாயினள்சிறக்கவே. (ககச)

* மணிமுடிக்குரியநிருபனுங்கடிகொண்மாதர்தங்களைமகிழ்ச்சியால்
அணிபெறத்தழுவியின்பவேலையினழுந்திநாள்பலகழிந்தபின்
பிணிகளுக்கரசெனும்பெரும்பிணிபிணித்துவாழ்வினிநணித்தெனப்
பணிமுடிப்புவியிரங்கவைகியொருபற்றிலாதநெறிபற்றினான். (ககரு)

சந்தனுசருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள்-கஅஅ.

# சம்பவச் சருக்கம்.

* இறந்தமைந்தனுக்குரியதென்புலத்தவரியாவருங்களிகூரச்
சிறந்தநான்மறைவிதியினாலுலகியல்செய்தபின்செழுந்திங்கண்
மறைந்தயாமினிநிகரெனக்குருகுலமன்மயக்குறுமெல்லை
யிறந்தவாவகைதுறந்தவாளரசனுக்கன்னைமற்றிதுசொன்னாள். (க)

* மைந்தகேண்மினுந்துணைவன்வானடைந்தபின்மதிமுதலெனத்தக்க
விந்தமாமரபரும்பனிப்பகைச்சிரத்தெழிலியொத்ததுமன்னோ
முந்தநான்மறைமுதலியநூல்களின்முறைறமைநீயுணர்கிற்றி
யெந்தநீர்மையினுய்வதென்றறிகிலேனிடரினுக்கிருப்பானேன். (உ)

* ஈண்டுதேவரநீதியிற்கொழுந்தியரெழின்மகப்பெறநின்னால்
வேண்டுமாலிதுதாயர்சொற்புரிதலின்விரதமுங்கெடாதென்ன
மூண்டுவானுருமெறிந்தபேரரவெனமுரிந்திருசெவிபொத்தி
மீண்டுமானதிவயின்மிசைப்புரியினென்விரதமுந்தபவென்றான். (ங)

என்றுபின்னருமியம்புவானன்னைநீயிழியுரைபகர்ந்திட்டா
னன்றுதீதெனவிலக்குவாருண்டுகொனுனினியிறந்தாலும்
வென்றிகூர்மொழிபழுதுறேன்விரதந்ற்சுதனெய்த
வொன்றுகூறுவன்முன்னர்நாளியற்கையென்றெண்டொடிக்குரைத்தானல். ()

வேறு.

பவ்வியனெனுங்குரவனில்லவண்மிகுந்தருமபத்தினிதனைத்
திவ்வியகருப்பமுடன்வைகுமமதைப்பெயர்கொள்சேயிழையைமுன்
செவ்வியமரர்க்கினியதேசிகன்விரும்பியொருதெய்வவிரகா
லெவ்வியபுணர்ச்சிசெயல்கண்டுதரமுற்றவனுருத்துரைசெய்வான். (ரு)

நீதிதபநீயிதுநிகழ்த்தியதுநன்றுகொனெறிக்கொருவனும்
வேதியவெனப்புகலமேலவன்வெகுண்டவனைவெம்மையதனு
லோதியகனற்கொடியசூளுரைதனிற்பிறவியற்றதுமுதற்
சோதியுடலிற்றமமிகுந்தவனிருந்துதுயர்துன்னினனரோ. (சு)

தீர்க்கதமனென்றுபெயர்செப்புமுனிதன்னுடனியக்கமுடனும்
யார்க்குமரிதானமறைமுற்றுமுணர்வுற்றவனருத்தியுடனே
பார்க்குளுறைபோதிலொருபாவகனையொத்தவர்பயந்தகொடியை
யேர்க்குமெனநல்கினனிருங்கடிமணஞ்செய்திவனின்பமுறுநாள். (எ)

மைந்தர்பலர்வந்தனர்களந்தமடமங்கைதுயர்மல்குதலலாற்
சிந்தைமகிழ்கொண்டிலனிறிந்திவனுமுள்ளதுரைசெய்கவெனலும்
வந்தமுதலின்றளவுநின்றொழில்புரிந்தயர்வுவந்ததினிநீ
தொந்தமறவெங்கடைதுறந்திடுதியென்றவடுணிந்துரைசெய்தாள். (அ)

சொன்னமொழிவந்துசெவிதன்னலும்வெகுண்டுமுனிதோகையர்கள்பான்
மன்னுமளியின்றுகொலெலனும்படிநினைந்திதுவகுத்துரைசெய்தான்
பொன்னுமணியுங்குலமுநல்லிளமையுந்தனிபொருந்தியுறினு
முன்னுபதிசென்றளவின்மங்கிலியமங்கனொருவுங்கடமையே. (க)

வித்தகனுரைத்தவடவைக்கனனிகர்த்தமொழிவெற்பிணையைநே
ரொத்தமுலைபெற்றவள்செவிப்படவுருத்திவனைபுட்கவொருசார்
வைத்துவருகிற்றிரெனநற்சுதர்தமக்கறையமக்கள்விரைவிற்
கொத்தினர்கடெப்பமதுகட்டிநதியிட்டனர்குறித்தபடியே. (க0)

வேறு.

இரங்கத்தவத்தினினியோர்களிளைஞரிட்ட
துரங்கத்தினேறிவழுவாமறைசொற்றிருப்பச்
சிரங்கைத்தலங்கொண்டவன்வரத்தால்வருதெய்வநன்னீர்த்
தரங்கக்குடிஞைநெடுந்தூரங்கொண்டுசார்ந்ததுவே. (கக)

நிரைவந்தடுக்குமணிமீன்களுநீள்கராமுந்
திறைவந்தடுக்குந்திறனுத்துச்செறிந்துநீங்க
விரைவந்தடுக்குமிகுமாநதிவேகத்தோடிக்
கரைவந்தடுத்ததொருபாங்கர்க்கலந்ததெப்பம். (கஉ)

அக்காலைதனிற்பலியென்னுநல்லரசர்கோமான்
புக்கானதிநீர்துளையும்படிபுனிதனுண்டு
மிக்கான்சதுமாமறையோதியவிரகையுன்னித்
தக்கானிவனுமெனவந்தடிதாழ்ந்துநின்றான். (கங)

பூமன்னியபுங்கவனைத்துளபுனிதவேத
னுமென்னவுணர்ந்தனன்றன்னையுமறியுமாறு
மாமன்னவனுமியம்பித்திருமுனிவந்ததெல்லாஞ்
சேமன்னருளிற்சிறந்தோன்சொலத்தேறினனல். (கச)

மகந்தாங்கிடாத்தியுமீந்துநல்வாய்மைபெற்றுஞ்
செகந்தாங்கிடமைந்தரிலாமையிற்செய்வதென்னென்
றகந்தாங்கியடைந்தனனீயெதிராகிவந்தாய்
நகந்தாங்கியருந்தமுதீந்தருணாரணன்போல். (கரு)

வந்திக்கரியோய்தனதூரில்வருகவென்றே
முந்திக்கொடுபோய்முனிதன்னைமுசிப்பகற்றிக்
கந்தக்குழறன்மனையாஞ்சுதற்கணையைக்கலந்தே
சிந்தைக்கினியமகவாரருள்செய்கவென்றான். (கசு)

நன்றென்றிசைந்தேதவமாமுனிநல்கலாலே
குன்றென்றிசைந்துவளர்மோகனக்கொங்கைநல்லா
ளன்றென்றிசைக்கவறியாடன்றுதியையாரழகுக்
கொன்றென்றிசைக்கவுரியாடனையுய்த்துளாளே. (கஎ)



A. No............
(௧௮)


மறைமாமுனியன்னவடன்னேமகிழ்ந்துபுல்லிக்
குறைமாறிடவேபதிஞென்றெனுங்குமரரீந்தான்
றிறமாகியவெம்புயக்காவினர்சேர்தல்கண்டே
யிறைமாமனநொந்தனன்மாதவனீ துரைப்பான்.
வன்மைந்துடையாயிவர்தாதிவயிற்றுதித்தோர்
நின்மைந்தரின்றுமெனவோதலுநிருபனேர்ந்தே
நன்மைந்தனேவேறுதவென்றுதன்னுயகிக்குத்
தன்மைந்துறுதிபுகன்றேத்தலுஞ்சம்மதித்தாள். (௧௯)
கணவன்பகர்ந்தபடியாற்றுதல்காதலிக்கே
யணியுநெறியும்பெருங்கற்புமளிக்குமென்னு
மிணியின்வடங்கள்புரண்மாமுலேமங்கைசென்றே
தணியுமுனிவனிருந்தாற்றியசாலேசார்ந்தாள். (௨௦)
கண்டான்முனியுமவண்மேனிகரமிரண்டுங்
கொண்டேறநீவிப்பரிசித்தொருகுமரனின்பா
லுண்டாவனென்றுமறைந்தானவ்வண்ணமிவ்வொண்டொடியும்
பண்டோர்மகனேப்பயந்தாள்பருதியின்பான்மையென்ன. (௨௧)
அந்தக்குமரன்பெயரங்கராசனென்றுருமேத்த
வந்திக்கரியமறையுங்கலேகளின்வண்மையாது
முந்தக்கரைத்துமுடிசூட்டினன்மொய்ம்பின்மிக்க
தந்தைக்கிவனேதவமென்னத்தரணிகாத்தான். (௨௨)

வேறு.

* மழுவெனும்படையிராமனுன்மனுகுலமடிந்துழியவர்தத்தம
பழுதின்மங்கைடர்முனிவரருளிஞற்பயந்தனர்மகவென்ப
ரெழுதுநன்னெறிமுறைமையின்விளேப்பதேயியற்கையென்றிருகையாற்
றெழுதுசொன்னபின்மனந்தெளிந்தன்னேயுந்தோன்றலுக்குறைசெய்வாள். ()
* பருதிதந்தமாநதிமருங்கொருபகற்பராசரன்மகப்பேறு
கருதிவந்துகண்டென்னேயுமெனதுமெய்க்கமழ்புலவையுமாற்றிச்
சுருதிவாய்மையின்யோசனேப்பரப்பெழுசுகந்தமுமெனக்கீந்து
வருதிநீயெனப் * பனியிஞன்மறைத்தொருவண்டுறைக்குறைசேர்ந்தான். ()
* முரணிறைந்தமெய்க்கேள்வியோனருளிஞன்முஞ்சியும்புரிநூலு
மிரணியஞ்செழுங்கொழுந்துவிட்டனவெனவிலங்குவேணியுந்தானுந்
தரணியெங்கனும்வியாதனென்றுரைகெழுதபோதனமுனியப்போ
தரணியின்புறத்தனலெனவென்வயினவதரித்தனனம்மா. (௨௫)
* சென்னியாலிலேவணங்கியாதொருபகற்சிந்திநீசிந்திக்கு
முன்னியானருகுறுவலென்றுரைசெயமுனிமகன்முனிமீளக்
கன்னியாகெனவிதித்துடன்கரந்தனன்கையறுகனிட்டன்றன்
பன்னியானவரிடத்தினிலன்வரிற்பவித்திடுநினேவென்றே. (௨௬)

---

* பராசரமுனிவர் விபூதியைத்தூவிச் சூரியனேப் பனியிஞலே மறைத்துப் பகலே, இரவுபோலாக்கிக் கொண்டாரென்க.

* ஏனக்குமைந்தகேணினைவிதுன் றுணைவனென்னேவலுமருனிவ்வா
றுனக்குநெஞ்சுறவ்வருங்கொலோவறிகிலேனுண்மைநீயுரையென்ன
மனக்கிசைந்ததென்றவன்வியந்தேகலும்வழுவறமனஞ்செய்யக்
தனக்கருங்குழன்மகிழ்வுறமுதற்பெறுகாதன்மைந்தனும்வந்தான். (உஎ)

* தொழுதுநெற்றியில்விபூதியாலன்னைதன் றுணையடித்துகணீக்கி
விழுதுண்டத்தனியாலெனவிருந்ததொல்லியாதனைமுகநோக்கிப்
பழுதுபட்டதிக்குருகுலமீளநின்பார்வையாற்கடன்ஞால
முழுதுமுய்த்திடுமகவருளெனப்பெருமுனியுமக்குறைநேர்ந்தான். (உஅ)

* அழைத்தமாமகனப்பொழுதவருழையணுகுவமெனப்போகத்
தழைத்தநெஞ்சினளனந்தரமிழந்தபொற்றுலிமாதரைத்தேற்றி
யுழைத்ததுன்பமுமுன்னுளோர்பலருலகியற்கையுமுறக்காட்டி
யிழைத்தபாவையினிருந்தவர்க்கந்நினைவிசையுமாறிசைவித்தாள். (உகூ)

* கனையுநீடிருளணைமிசையிருவருங்கணவனைமறவாது
நினையுநெஞ்சினர்பயின்றுழிபுன்மணநிறைந்தொளிகுறைந்தொல்கப்
புனையுமெய்யொடும்பொழுதொடும்புரிதவன்போதலுமிகவஞ்சி
யனையகாலையிலம்பிகைமலர்ந்திலளம்பகமொருக்காலும். (௩0)

* பராசரன்றருமுனிநினைவொடுகருப்பதித்துமீளவுஞ்சென்று
நிராசைநெஞ்சினனவசரத்தவளிடைநிகழ்ந்தமெய்க்குறிதன்னாற்
கராசலம்பதினாயிரம்பெறுவலிக்காயமொன்றினிற்பொற்றே
னிராசகுஞ்சரம்பிறந்திடும்விழிப்புலனில்லைமற்றதற்கென்றான். (௩க)

* மீளவுந்தலைப்புதல்வனைநோக்கியேமிகமகிழ்வுறுவன்னை
தூளவண்சடைத்தோன்றலம்பாலிகைசுதனொருவனைநல்க
நாளபங்கயப்பதியெனமதியெனநலந்திகழ்கவிகைக்கீ
ழாளவம்புவியவனெனநினைந்தினியளிக்கவென்றருள்செய்தாள். (௩உ)

* கிளைத்திடுந்துகிர்க்கொடிநிகர்சடையவன்கேட்டுநுண்ணிடையேபோ
லிளைத்திடுங்கவின்மெய்யுடையவண்மனையெய்தலுமிவனைக்கண்
டுளைத்திடுங்கருத்துடன்வெரீஇவருபயனொன்றையுநினையாது
விளைத்திடுங்கருவிளையுமுன்மடவரன்மெய்யெலாம்விளர்த்திட்டாள். (௩௩)

* அருந்தபோநிதியவளிடத்திலுங்கருவருளியக்கணத்தேகி
யிருந்தவாறுதனன்னையோடினிதுரைத்திமையவனெனச்சென்றான்
பெருந்தராதலந்திறலினாலொருதனிபெறுமுறையவன்பெற்ற
முருந்தவாணகைமருட்சியால்விளர்த்திடுமுழுவதுமுடலென்றே. (௩௪)

* வேதபுங்கவனகன்றுழிவலியுடைவிழியின்மைந்தனும்யாரும்
பாதபங்கயந்தொழத்தகுந்திறலுடைப்பாண்டுவெஃபவன்றானும்
பூதலம்பெருங்களிப்புறக்குருகுலம்பொற்புறப்பொழுதுற்றுச்
சாதராயினரவ்விருமகவையுஞ்சத்தியவதிகண்டாள். (௩௫)

* கானலும்பெரிதுவகையற்றின்னமுங்கருதுதமேனவெண்ணச்
சேனடைந்தமாமுனிவரன்வருதலுஞ்சிந்தனையுறச்சொல்ல
வானலந்திகழம்பிகையிடத்திவனன்னவுமவளஞ்சிப்
பூணலம்பெறுதோழிமற்றொருத்தியைப்பூவணையணைவித்தாள். (௩௬)

வந்தகாலையின்மனங்கலந்தநங்கநான்மரபின்மெய்யுறத்தோய்ந்து
சந்தனுகருப்பூரிமனத்தனதடந்தயங்குமார்பினின்மூழ்க
விந்திராதிபர்போகமொத்திசைதலுமின்பமுற்றியபின்ன
ரந்தணாளனவ்விரவிடைமீளவந்தன்னையோடுரைசெய்வான். (௩௭)

* அம்பிகைக்கொடிதோழியைவிடுத்தனளவள்புரிதவந்தன்னு
லும்பரிற்பெறுவரத்தினுற்றருமன்வந்துதித்திடும்பதம்பெற்றாள்
வெம்படைத்தொழில்விதுரனென்றவன்பெயர்மேலினிமகவாசை
யெம்புணர்ப்பினுமொழிகெனவனநெறியேகினன்விடைகொண்டே. (௩௮)

* மருவருங்குழற்றாசிபெற்றெடுத்தவிம்மைந்தனுமுதற்பெற்ற
விருவருங்குருகுலப்பெருங்கிரிமிசையிலங்குமுக்குவடென்னப்
பொருவருந்திறற்படைகளுங்களிறுதேர்புரவியும்புவிவேந்தர்
வெருவரும்படிபலகலைவிதங்களும்வீடுமனிடங்கற்றார். (௩௯)

வேறு.

என்றுகூறிடமன்னவனிருகரமுகிழ்த்து
வென்றிகூர்தருமப்பெயர்மேலவன்விரைந்து
சென்றுதாதிதன்றிருவயிற்றுதித்ததேனென்ன
வன்றுமாமுனியருள்சுரந்தவன்றனக்கறைவான். (௪௦)

புவியுமாதவத்தோர்களும்புகழ்ந்திடுந்திறன்மாண்
டவியரென்றொருதிருமுனிநதியெலாமாடிக்
குவியுமோர்நகர்மருங்கினிற்சூழல்கோடித்துத்
திவியமோனமாயருந்தவஞ்செலுத்துநாடன்னில். (௪௧)

அந்தமாநகர்க்கரசனில்லகந்தனிற்சோரர்
வந்துவான்பொருள்கரவினிற்கரந்தந்தமறையோன்
முந்தவைகியசூழல்வாய்நெறிக்கொளமுதல்வன்
சிந்தைபோன்றுளகாவலர்தொடர்ந்துடன்சென்றார். (௪௨)

பற்றுவாரினியப்புறம்படர்ந்திடினென்றே
யற்றமாமுனிசூழலிற்றனத்துடனொளித்தார்
வெற்றிமிக்குளகாவலர்முனிவனைவேண்டி
மற்றுஞ்சோரரிங்கெய்தினரோவெனவகுத்தார். (௪௩)

மோனமாமுனிமோனியாய்வாய்திறவாமல்
வானளாவுறுதவம்புரிந்திருந்தனன்வந்தோர்
ஞானநாயகன்சூழலிற்புகுந்தெங்குநாடி
யீனராகியகரவினரிருந்திடக்கண்டார். (௪௪)

புரசைகொண்டவர்தங்களைப்புயமுறப்பிணித்து
வரிசைமாதவன்றன்னையுமவருடன்மதித்தே
யுரைசெய்முன்னரிற்றளைத்துடனுயர்நகர்கொடுபோ
யரசன்முன்னரினுக்கினர்தனத்தையுமளித்தார். (௪௫)

அனையமாநகர்மன்னனுமறிந்திலனாகி
யினையசோரரையுயிர்கொளுமென்றுரைத்தேவி
முனைவர்போல்வருமொருவனைச்சூலமேன்முறைபாற்
புனையுமீசனைப்போலிருத்துமினென்றுபுகன்றான். (௪௬)

கரவுசெய்தவர்தங்களைக்கந்தரந்தறித்து
விரவுவேதனைவேதனைச்சூலமேலிட்டார்
பரவுமாதவராரியன்பல்பகலிருந்து
குரவரேத்திடச்செழுந்தவங்குறித்தனனன்றே. (௪௭)

மாசிலாதவன்றனுடல்வருத்தமொன்றுணரான்
பேசிடாதவனருந்தவம்பிடித்துளபடியே
நேசமாய்முயன்றுற்றனனிமலவானவர்கண்
டாசிலாதவனயனுறவந்தினிதறைவார். (௪௮)

செறுத்தனைப்பெருந்தீமைசெய்தவர்செருக்குறவே
பொறுத்திருப்பதென்புனிதநீயென்னலும்புகல்வான்
மறுத்தெமக்குமுன்வருவினையிதுவெனமதித்தே
னொறுத்தியற்றினோரியாருமின்றுமெனவுரைத்தான். (௪௯)

அனையபான்மைகேட்டம்பரந்தவருளமகிழ்ந்து
நினையுமுன்னரினீங்கினரந்நகர்நிருபன்
புனைகொள்காவலர்புகன்றிடவுணர்ந்தடிபோற்றி
யினையதாகுமென்பெரும்பிழைபொறுத்தியென்றிரந்தான். (௫௰)

மன்னன்மீளவுமவனுடல்வருந்திடாவண்ண
மன்னசூலமுள்ளன்றியேபுறத்துளதகற்றிப்
பொன்னடித்துணைபூண்டனன்பொருவிலானவனை
பின்னுமூர்புகவிடுத்தருந்தவத்தினோன்மீண்டான். (௫௧)

உலகெலாந்தவமுளுற்றியேயெங்கணுமுலாவி
யலகிலாமுனிவரருடன்யமபுரத்தடைந்தே
யிலகுசீரறக்கடவுளையெதிர்ந்தியான்முன்னங்
குலவுதீவினைசெய்ததுகுறித்தருளென்றான். (௫௨)

சிறியகாலத்திற்றும்பியைச்சிக்கெனப்பற்றிப்
புறியலாற்றலகழுமுனைதன்னிலிட்டனையாற்
பிறியுமவ்வினைநின்னையப்பெற்றிகண்டதுவென்
றிறையுமோதினனிவன்யமராசனுக்கிசைப்பான். (௫௩)

வேதனுனன்றித்தவத்துடைவிரதனுமானே
ஞதலானிந்தவினைசிறிதானதையதுவு
மேதுமொன்றுணராதகாலத்தினிலியற்றுந்
தீதைநீயநுபவித்திடச்செய்தனல்லறனே. (ருச)

என்றுகூறலுந்தருமனுமிருவினையாவர்
சென்றியற்றினுமநுபவஞ்செறிவதுவிலங்கா
தன்றிமற்றுயிர்பலவுமொன்றுமதற்கிடுக்க
ணின்றியற்றுதலெளிதுகொன்மறையெலாமுணர்ந்தோய். (ருரு)

விரைந்தமாமலேமயிரினுற்றுங்கமேலிருந்து
புரைந்தபாதகம்புண்ணியம்புலப்படுத்துதலாங்
கரைந்தவாறதுகாண்டிநீகலேமுனியெனலும்
வரைந்தவெங்கனல்விழியுகமாதவனறைவான். (ருசு)

அறிவிலாதவர்செய்ததீவினையநுபவமாய்
மறுகுறச்செயனன்றுகொலியானிதுவகுத்தே
னிறுவுமேழிரண்டாண்டளவியற்றியநீர்மை
கறுவுதீவினையாற்றவுமுறுதுகாசினிக்கே. (ருஎ)

அன்னகாலத்தினுணர்வறச்செய்பவற்கலகி
லின்னலாலுளமழன்றவர்பாதகரினிநான்
சொன்னசொற்படிசோர்வறநடக்கவெந்நாளு
முன்னர்நீயெனேமுனிந்தகாரணத்தினன்முதல்வ. (ருஅ)

அந்தநீர்மையாலவனியிற்றுழ்ந்தகேத்திரத்தில்
வந்துநீயுடன்மன்னுகவெனச்சபித்தகன்றுன்
கந்தமாமலர்க்கடவுள்போல்யவனுரைப்படியே
யிந்தமான்வயின்விதுரனுய்த்தருமன்வந்தெழுந்தான். (ருகூ)

தெளிதிநீயெனச்செப்பலுஞ்செல்வனுமகிழ்ந்து
புளகமோங்கிடப்புதல்வர்கண்மூவரும்பொருந்த
விளகியோதினேமேன்முறைச்செயலெலாமியம்பென்
றளிகொண்மன்னவன்கேட்டலுமம்முனியறைவான். (கூ௦)

வேறு.

* ஆனதிக்கிருநாலும்வந்தடிதொழவம்பிகைமகன்றனே
வானதித்திருமகனெருதினத்தினின்மங்கலமுடிசூட்டிப்
பானிறப்பெறும்பாண்டுவேசேனேயின்பதிமுழுமதிமிக்க
ஆனிறத்தொடைவிதுரனேயமைச்சனிக்காவலற்கெனவைத்தான். (கூக)

* நதியளித்தவனேவலிற்றாதர்போய்நயந்துடன்காந்தாரப்
பதியளித்தமெய்க்கன்னியைத்தருகபூபதிக்கெனமணநேர்ந்தார்
மதியளித்ததொல்குலத்தவன்விழியிலாமகனெனத்தமர்சொல்ல
விதியளித்ததென்றுளமகிழ்ந்தனள்வடமீனெனத்தகுங்கற்பாள். (கூஉ)

* இமைத்தகண்ணிணைமலர்ந்தினிநோக்கிலேனியானொருவரையென்று
சமைத்தபட்டமொன்றினிற்பொதிபெதும்பையைத்தந்தையுந்தனையோரு
மமைத்தருங்குலமுனிவருமறைமுறையருங்கடிவிளைத்திட்டார்
சுமைத்தராபதிமதிவிவஞரோகணியென்னவேதொழத்தக்காள். (சுங)

* புந்தியாலருங்கலைமகள்பொற்பினற்பூந்திருப்புனைகற்பா
லந்திவாயருந்ததிபெரும்பொறையினலவனிமானிகரென்னக்
குந்திபோசரிற்சூரனென்பவன்மகள்குருகுலந்தழைத்தோங்க
குந்தியாவரும்பிரதையென்றடிதொழுமதியெனவளர்கின்றாள். (சுச)

* அந்தமாதிளமடமயிலெனவிளையாடுமெல்லையிலென்று
முந்தமாதவம்புரிதுருவாசமாமுனியுமவ்வுழிவந்தான்
வந்தமாதவனடிபணிந்திவனைநீவழிபடுகெனத்தந்தை
இந்தமாதவன்மொழிப்படிபுரிந்துகுற்றேவலின்வழிநின்றாள். (சுரு)

* கழங்குகந்துகமம்மனையாடலுங்கனகமென்கொடியூசல்
வழங்குதண்புனலாடலுந்துறைவரிவண்டலாடலுமாறி
முழங்குசங்கினந்தவழ்தருபனிநிலாமுன்றிலுஞ்செய்குன்றுந்
தழங்குசெஞ்சுரும்பெழுமலர்ச்சோலையுந்தனித்தனிமறந்திட்டாள். (சுசு)

* தொழுதுதாளிணைச்செய்யபஞ்செழுதினுந்தோளிணைச்செழுந்தொய்யி
லெழுதினும்பொருவிளமையண்முதுக்குறைந்தியாதியாதுரைசெய்தான்
முழுதுநெஞ்சுறுங்கோபமேமிகமிகுமுனிவரன்மகிழ்வெய்தப்
பழுதிலன்புடனியற்றினளொன்றுபோற்பன்னிருமதிசேர. (சுஎ)

* பிரதைதன்னையத்தபோநிதிவருகெனப்பெரிதுவந்தெனதேவ
லரிதெனதுநீயியற்றினைநெடுங்கடலவனிமேல்யார்வல்லார்
தெரிவைகேளெனச்செவிப்படுத்தொருமறைதேவரில்யார்யாரைக்
கருதிநீவரவழைத்தனையவரவர்கணத்தினின்கரஞ்சேர்வார். (சுஅ)

* தம்மையொப்பதோர்மகவையுந்தருகுவர்தவப்பயனெனப்பெற்ற
விம்மறைப்பயனிம்மையிலுனக்குவந்தெய்தியதெனக்கூறி
யம்முனிப்பெருங்கடவுளுந்தபோவனமடைந்தனனவளுந்தன்
செம்மனத்தொடுபயின்றரமகளெனச்செல்வமாமனைசேர்ந்தாள். (சுகூ)

* ததையும்வண்டிமிர்கருங்குழற்கன்னியத்தனிமறைப்பயன்காண்பான்
சுதைநிலாவெழுமாளிகைத்தலத்திடைதூநிலாவெழுமுன்றி
லிதையமாமலர்களிக்கநின்றன்பினேடியம்பலுமெதிரோடி
யுதையபானுவுமலர்மிசையளியெனவொருகணந்தனில்வந்தான். (எ௦)

* செம்பொனுடையுங்கவசகுண்டலங்களுந்திகழ்மணிமுடியாரம்
பைம்பொனங்கதம்புனையவயவங்களும்பவளமேனியுமாகி
வம்பறுதமெய்ப்பதுமினியெனச்செழுமறைநுவன்மடப்பாவை
யம்புயானனமலர்வுறக்கரங்களாலணைத்தனனழகெய்த. (எக)

* கன்னிகன்னியென்கைதொடேன்மடந்தையர்கற்புநீயறிகிற்றி
யென்னமெய்குலைந்தலமரநாணினளிதயமும்வேறாகி
யன்னமென்னடையஞ்சினளரற்றலுமருகுறன்விடப்போய்நின்
றுன்னியென்னைநீயழைத்ததென்பெறவெனவுருத்தனனுரைசெய்வான். (எஉ)

* உருக்கொள்சாயையுமுழையுமங்கறிவுறத்தொளித்தானவரவேநீ
வெருக்கொள்ளவெனைமறுத்தனையுனக்குமுன்மெய்ம்மறையுரைசெய்த
குருக்களென்படானென்படாதரிவைநின்குலமெனக்கொடித்திண்டே
ரருக்கன்மெய்யினுமனமிகக்கொதித்தனனுயிரமடங்காக. (எங)

* உனையளித்தவன்முனியுமென்றஞ்சனீயுடன்படுமுணர்வானல்
வினையளித்ததென்றணைதியேவின்பமும்விழைவுறம்படிதுய்த்தி
யெனையளித்ததொல்லதிதியினுனக்கிசையெய்துமாறிகன்மைந்தன்
றனையளித்திமற்றென்னினுமிருநிலந்தாடொழத்தக்கோனே. (எச)

* ஆயிரங்கரத்ததிபதிபுகழ்ந்துநூறுயிரமுகமாகப்
போயிருந்திவையுரைத்தபின்மதர்விழிப்புரிவுமூரலுநல்கி
வேயிருந்தடந்தோளிடந்துடித்திடமெல்லியன்மதன்வேதப்
பாயிரங்கொலென்றையுறவவனொடும்பனிமலரணைசேர்ந்தாள். (எரு)

* தினகரன்சுடர்வடிவமுமமிர்தெழுதிங்களின்வடிவாகத்
தனதடந்திருமார்புறத்தழீஇயபின்றையறன்னினைவெய்த
மனமகிழ்ந்ததும்வந்ததுமணந்ததும்வரங்கொடுத்ததுமெல்லாங்
கனவெனும்படிக்கரந்தனன்பெருந்தகைக்கன்னியுங்கருக்கொண்டாள். (எசு)

* அந்தியாரழலெனப்பரிதியினொளியடைந்தபினணிமாடக்
குந்திபோசன்மாமடமகளெழினலங்கொண்டகொள்கையளாகி
யிந்திராதியரவரவர்முகமலர்ந்திரந்தனதரத்தக்க
மைந்தனனவனொருவனைப்பயந்தனண்மாசிலாமணியென்ன. (எஎ)

* சூரன்மாமகள்சூரனதருளினாற்றுலங்குகன்னிகையாகி
வாரமாமணிக்கவசகுண்டலத்துடன்வருமகன்முகநோக்கிப்
பாரமாமரபினிற்பிறந்தவர்மொழிப்பழுதினுக்கழுதஞ்சிப்
பூரமாநதிப்பேடகத்திடைநனிபொதிந்தொழுக்கினண்மன்னோ. (எஅ)

* குஞ்சரத்திளங்கன்றெனச்சாபவெங்கோளரியெனப்பைம்பொற்
பஞ்சரத்திடைவருதிருமதலையைப்பகீரதியெனுமன்னை
சஞ்சரத்திரைக்கரங்களாலெடுத்தெடுத்தசையவேதாலாட்டி
வெஞ்சரச்சிலைச்சூதநாயகன்பதிமேவுவித்தனளன்றே. (எகூ)

* கோடகப்படவரும்புனல்விழைவினாற்குளிர்துறைமருங்குற்றோர்
பேடகத்திடையொழுகியதினபதிபெருங்குமரனைக்கண்டு
சூடகக்கையம்புயமலரிராதையுஞ்சூதபுங்கவன்றானு
மாடகக்குலமடைந்ததொத்தரும்பேறலாதரத்தொடுகொண்டார். (அ0)

* அதிரதன்றிருமனையினில்விழைவுடனரும்பியபனிக்கற்றை
மதியெனும்படிவளர்ந்துதிண்டிறல்புனைமழுவுடைவரராமன்
பதயுகந்தொழூஉவரிசிலைமுதலியபலபடைகளுங்கற்றுக்
கதிரவன்றருகன்னனென்றுலகெலாங்கைதொழுங்கவின்பெற்றான். (அக)

வேறு.

* கன்னற்பயந்தகதிர்வெம்முலைக்கன்னிதன்னை
முன்னர்ப்பயந்தோன்முகவோலையுவகையோடு
மன்னர்க்கெழுதமடப்பாவைவரிக்குமென்று
சென்னற்படைவேன்முடிமன்னவர்சென்றுசேர்ந்தார். (அஉ)

* உருவஞ்சிறந்துபலகோளுமுதிக்குமேனு
மருவுங்குமுதமதிகண்டுமலருமாபோற்
பருவஞ்செய்பைம்பொற்கொடியன்னவள்பாண்டுவென்னு
நிருபன்றனக்கேமணங்கூர்பெருநேயமுற்றாள். (அங)

* தானேயுவந்துதனித்தார்புனைதையல்வென்றி
யானேறனையானுயிர்க்காரமிழ்தானபின்னர்
யானேதருவமெனமத்திரராசனல்க
மானேயனையவிழியாளைவதுவைசெய்தான். (அச)

* எண்ணுற்றசூரனிகன்மத்திரராசனென்ன
மண்ணுற்றசீர்த்திவயமன்னர்மகளிரோடுங்
கண்ணுற்றகானில்விளையாடல்கருதியம்பொன்
விண்ணுற்றசாரலிமயப்புரமேவினானே. (அரு)

* கானத்திலுள்ளகலைமானினங்காட்சியாமா
வேனத்திரள்வெம்புலியெண்குடன்யாளிசிங்கந்
தானப்பகடுமுதலாயசனங்களெல்லா
மானச்சரத்தாற்கொலைசெய்தனன்வாகைவில்லான். (அசு)

* மெய்யிற்றெறித்தகுருதித்துளிமேருவில்லி
சையத்தலர்ந்தகமழ்குங்குமத்தாதுமான
கையிற்சிலையோடுலவுங்கழற்காளைகேதம்
பையத்தணித்தானிமனுகபவனனென்பான். (அஎ)

* பொன்னங்கழலானெதிரவ்விடைபோகம்வேட்டு
மன்னுங்கலையும்பிணைமானுமகிழ்ச்சிகூர
மின்னுங்கணையாலவனெய்துடன்வீழ்த்தபோதின்
முன்னின்றதந்தவுயிர்வந்தொர்முனிவனாகி. (அஅ)

* நாரிக்கொருகூறரனார்முதனல்கவெய்த
வேரிக்கணையான்மிகனொந்துழிவேடமாறிப்
பூரித்தகாமநலமெய்தும்பொழுதினைகைச்
சேரிக்கணையாலுறையுண்டுயிர்சோர்ந்துவீழ்ந்தேன். (அகூ)

* என்போலவின்பத்திடைநீயுமிறத்தியென்று
வன்போடிறந்தான்முதற்கிந்தமனானபேரோன்
றன்போன்மகிழ்நனுடனேசெந்தழலினெய்திப்
பின்போயினண்மென்பிணையானவப்பேதைதானும். (௯௦)

* நினைவற்றசாபநிலைபெற்றபின்னெஞ்சின்வேறு
றினைவற்றுநன்மையிதுவேயினியென்றுதேறி
மனைவைத்தகாதன்மடவாருடன்மன்றல்வேந்தன்
முனைவைத்தவாய்மைமுனிக்கானமுயன்றுசேர்ந்தான். (௯௧)

* காண்டற்கரியமணிப்பைம்பொற்கலனொடாடை
வேண்டற்கரியவிடையங்களின்வேடமாற்றித்
தீண்டற்கரியதிருமேனியன்றேவராலும்
பூண்டற்கரியபெருமாதவம்பூண்டுகொண்டான். (௯௨)

* உற்றுப்புறத்துப்பகையாடியுடன்றவெல்லாஞ்
செற்றுப்புவியிற்றனியாழிசெலுத்துநீரான்
பற்றற்றயோகப்படையாலுட்பகைகளாறு
முற்றத்துறந்துபெருஞானமுதல்வனானான். (௯௩)

* ஆரக்குழம்பிலளைந்தாரமணிந்துவிம்மும்
பாரக்குசங்கள்பலதைவரும்பான்மைநீங்கி
நாரக்கமலகரசோதிநகங்கண்மீள
வீரக்குசங்கள்கிழிக்குந்தொழிற்கேற்றவாலோ. (௯௪)

* நாமக்கலவிநலங்கூரநயந்துநாளுங்
காமக்கனலைவளர்க்கின்றகருத்துமாற்றித்
தாமக்குழலாரிருவோரொடுதானுமொன்றி
யோமக்கனலைவளர்த்தானுணர்வுண்மைகண்டான். (௯௫)

இவ்வாறரியதவநாடொருமேறுமெல்லைக்
கைவாளொழிந்துசமித்தேந்தியகாவன்மன்னன்
மைவாணெடுங்கண்மடவாரொடுமாதவங்கள்
செய்வார்மிகுந்ததனிமால்வடதிக்கடைந்தான். (௯௬)

விதானந்தமென்னுமெழுவேலையும்வீத்துநீத்த
நிதானந்தருஞ்சொன்முனிவோரொடுநேயமுற்றிச்
சதாநந்தனாரிலவரோடிவன்சார்தலுன்னிச்
சதாநந்தமற்றோர்க்கரிதென்றவர்சொற்றுயர்ந்தார். (௯௭)

* அவ்வாய்மைவந்துசெவியூடுறக்கோலினெய்தப்
பைவாளரவமசனிக்கயர்பான்மையென்ன
மைவாணெடுங்கண்வரச்சூரனன்மகளைநோக்கிச்
செவ்வாய்மலர்ந்தான்புவிமேலுறைதெய்வமன்னன். (௯௮)

* கல்லாமழலைக்கனியூறல்கலந்துகொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியழுதோடித்தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில்விளையாடுமகிழ்ச்சிமைந்த
ரில்லாதவர்க்குமனைவாழ்வினினிமையென்னும். (கூகூ)

* மெய்தானவண்மைவிரதந்தழல்வேள்விநாளுஞ்
செய்தாலுஞாலத்தவர்நற்கதிசென்றுசேரார்
மைதாழ்தடங்கண்மகவின்முகமன்னுபார்வை
யெய்தாதொழியிற்பெறுமின்பமிவணுமில்லை. (க00)

* மென்பாலகரைப்பயவாதவர்மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம்பசித்தீநனிதீர்க்கமாட்டா
ரென்பானிகழ்ந்தவினையாலிடரெய்தினின்றே
னின்பாலருளுண்டெனினுய்வனெடுங்கணல்லாய். (க0க)

* இல்வாழ்பவர்க்குமடவாரலதியாவரின்ப
நல்வாழ்வுதேசுபுகழ்யாவுநடத்துகிற்பார்
தொல்வானவரின்மறையோரிற்றுறக்கபூமிச்
செல்வார்பெறும்பேறினிநீயருள்செய்தியென்றான். (க0உ)

* பொற்பாவைகேள்வன்மொழிகேட்டலும்பொன்றநாணிச்
சொற்பாலவல்லாப்பழிகூருரைசொல்வதென்னே
வெற்பார்நதிகள்சிறுபுன்குழிமேவினன்றே
விற்பாலவற்குப்பிறர்மேன்மனமேற்பதென்றாள். (க0௩)

அம்மாதுரைத்தமொழிகேட்டிவட்கன்புகூரச்
செம்மாண்பரசனிதுகூறினன்றெளிந்தமுன்னோர்
தம்மாலளக்குந்தரமல்லவர்தங்களாலே
யிம்மாதிரத்தினியறேர்ந்தனனேழைகேண்மோ. (க0௪)

சீரிற்பொலிந்தவிறற்கேகயதேயவேந்தன்
பேரிற்சுரதன்சுதசேனைபெருங்கணில்லாள்
பாரிற்புதல்வர்தரவாற்றலன்பண்பின்மூவர்
போரிற்புலிகள்வரநன்மைபொருந்திலானே. (க0ரு)

ப்ருதிக்குலத்தில்வருகன்மிடபாதனென்போன்
கருதித்துணைவிமதயந்தியைக்கைப்படுத்திச்
சுருதிக்குருவினருள்கொண்டொருதோன்றனல்க
விருதுக்கொருவனெனநற்கதிமேவிலானே. (க0சு)

விண்பாற்பயிலுமதிநற்குலவேந்தனெந்தை
திண்பார்க்கொருவனுதவாதுயிர்தீர்ந்தகாலைப்
பண்பாற்குரவர்மொழிகொண்டுளபரமனன்ன
னண்பாற்றரவன்னையரெந்தமைநல்கிலாரோ. (க0எ)

பூந்தார்வியாதமுனிதாளிணைபோற்றியன்பு
கூர்ந்தார்வமுற்றியவன்பால்வரங்கோடலெய்திக்
காந்தாரிநூறுமகவாகுங்கருத்தரித்தாள்
வேந்தாதரிக்கவெங்ஙீயும்வியந்திலாயோ. (க0அ)

இயற்கைப்புதல்வன்பிறரான்மனையினெ்றடுத்தோ
னயற்கேத்திரத்தேதனக்குற்றவனளித்தநன்னீர்
செயற்கைப்புதல்வன்சரணுற்றவன்பொருளாற்சேர்ந்தோன்
வியக்கும்புதல்வரிவராறுவோரெனுமேன்மையன்றோ. (க0கூ)

* பின்னும்பலவுண்டெனவேபிறர்பெற்றிகாட்டி
மன்னன்புகலமடமாதுமறுக்கமாட்டாள்
கன்னன்பிறந்ததொழியச்செழுங்கன்னியாகி
முன்னம்பெறுமாமறைவண்மைமொழிந்திட்டாளே. (கக0)

பரதக்குலத்தினிறைநின்னருட்பன்னியேனோர்
சுரதத்தியைந்தமகப்பேறுதுணிதனன்றோ
வரதத்துயர்ந்ததனிவானவர்வந்துநின்றெ்றன்
விரதத்தளிக்கவினிநல்குவன்வேண்டிலென்றாள். (ககக)

* மருமாலைவல்லியுரைகேட்டுமகிழ்ச்சிகூரும்
பெருமாதவத்தோன்பணித்தேவியபின்னர்முன்னர்த்
தருமாதிபனைக்கருத்தான்மடத்தையனுன்னி
யருமாமறையாலழைத்தாண்மற்றவனும்வந்தான். (ககஉ)

* வந்தித்ததெய்வமெதிர்வந்துழிமன்னுகேள்வற்
சிந்தித்தசிந்தையினளாய்மலர்ச்சேக்கைசேர்ந்து
குந்தித்தெரிவைநிறைமாமதிக்கூட்டமுற்ற
வந்தித்தெரிவைநிகரென்னவழகின்மிக்காள். (ககங)

வேறு.

* சிவமுறமுகூர்த்தம்வாரந்தினந்திதிகரணம்யோக
நவமெனவழங்குகோளுநன்னிலைநின்றபோதி
லவனியையொருகோலோச்சியாளுமென்றறிவின்மிக்க
தவநெறிமுனிவர்கூறப்பிறந்தனன்றருமன்மைந்தன். (ககச)

* உதிட்டிரன்பிறந்தகாலையுலகினிலுயர்ந்தோர்யாரும்
வதிட்டனைமுதலாவெண்ணுமுனிவரும்வானுளோரு
நிதிப்பயன்பெற்றார்போலநேயமோடுவகைகூர்ந்தார்
மதித்தநன்னிமித்தம்யாவுமங்கலநிகழ்ந்தவன்றே. (ககரு)

* தண்பிறையெழுச்சிகண்டசலநிதியெனவேமைந்தன்
பண்புடைவதனநோக்கிப்பார்த்திவன்பாண்டுவென்பான்
கண்பனிதுளிப்பநெஞ்சங்கனிந்தினிதுருகமேனி
வண்புளகரும்பமேன்மேல்வரம்பிலாமகிழ்ச்சிகூர்ந்தான். (ககசூ)

* அற்றனடியரமெல்லாமருந்தவப்பயனுன்மைந்தற்
பெற்றனள்குந்தியென்னும்பேருரைகேட்டவன்றே
யுற்றனள்பொருமைக்கல்லாவுதரமுட்குழம்புமாறு
செற்றனடனதுகேடுமாக்கழுஞ்சிந்தியாதாள். (கக௭)

* மையறுசுபலன்கன்னிவயினிடைக்கருப்பஞ்சேரப்
பையொடுகுருதிபொங்கப்பார்மிசைவிழுந்ததாகச்
செய்யவன்விழுந்ததிக்கிற்செக்கர்வானெனனச்சென்று
மெய்யுடையரியகேள்விவேள்விகூர்வியாதன்கண்டான். (கக௮)

* சஞ்சலமானகோசத்தசையினைத்தாழிதோறு
மெஞ்சலவாகநூறுகூறுசெய்திழுதிலேற்றி
நெஞ்சலர்கருணையாளனின்றவக்குறையுஞ்சேர்த்தி
யஞ்சில்வார்குழலியாகென்றுங்கொருகடத்தில்வைத்தான். (ககக)

* கருவுறுதாயைநோக்கிக்கையறுமென்றுகன்றி
வெருவுறல்கற்பின்மிக்காய்வேறுசெய்தசைகள்யாவு
முருவுறநிரம்பித்தாமேயுற்பவிப்பளவுங்கையான்
மருவுறல்வழுவுறுதென்வரமெனவரதன்போனன். (க௨0)

* காம்பெனநிறத்ததோளாள்கருவயிற்றிருப்பதொப்பத்
தேம்பயினறுநெய்பெய்தகலங்களைச்சேமமாக
வாம்பரிவுடனேயாற்றியீற்றளையடைந்துவைகும்
பாம்பெனப்பருவநோக்கியிருந்தனள்பழுதிலாதாள். (க௨க)

* ஈண்டுறுநிகழ்ச்சிகேட்டேயாதவன்மகளைநோக்கிப்
பாண்டுமனிரந்துபல்காற்பணித்தலும்பவனன்றன்னை
மீண்டுமம்மறையாலுன்னியழைத்தனள்விரைவினோடி
யாண்டுவந்தவனும்பூத்தகொடியனுளாகந்தோய்ந்தான். (க௨௨)

* நெஞ்சுறமணந்துமீளநெடுங்கலைவாகனேக்ச்
செஞ்சுடருச்சியெய்திச்சிறந்ததோர்முகூர்த்தந்தன்னி
லஞ்சனையளித்தபொற்றேளனுமனேயுவமையென்ன
வெஞ்சினவீமன்றன்னைப்பயந்தனள்விரதமிக்காள். (க௨௩)

* தண்பரிமளமென்சாயற்றந்தையுந்திசைகடோறு
மெண்பெறுமுயிர்கட்கெல்லாமிதமுறப்பொலிவின்வீச
நண்புடையனலன்றூனுநலமிகுநண்புதோன்றப்
புண்புறவலம்வந்தோங்கிப்பரிவுடன்விளக்கஞ்செய்தான். (க௨௪)

* அன்னநாளனிலன்மைந்தன்பிறந்தனனுகவற்றை
முன்னநாளருக்கன்வேலைமுழுகியமுகூர்த்தந்தன்னி
லின்னுநாளுறுவமுற்றியெழில்பெறுமென்றுமுன்னோன்
சொன்னநாள்வழுவுறுமற்சுயோதனன்றேன்றினனே. (க௨௫)

* வாரியினதிர்ந்துவிம்முமங்கலமுழவமேன்மே
லோரியின்குரலாலோதையடங்கினவிடங்கடோறும்
பாரியகுலத்தோர்கண்ணினுவகைநீர்பனிக்குமுன்னே
சோரியந்தரத்துநின்றுஞ்சொரிந்ததுசோனைமேகம். (கஉசு)

* கோள்களினிலையாற்றிமைகொண்டனமுகூர்த்தந்தன்னிற்
றேள்குளி கொடியமற்றைறச்சிறுவருஞ்சேரவோரோர்
நாள்களிற்பிறந்தபின்னர்நங்கையுமொருத்திவந்தா
டோள்களிற்கழையைவென்றதுச்சலையென்னும்பேராள். (கஉஎ)

* பின்னியபுதல்வராலும்பிறந்தமென்புதல்வியாலுந்
துன்னியமகிழ்நறாலுந்துலங்கியசுபலன்பாவை
தன்னிகர்பரிதியாலுஞ்சதவிதழாலுஞ்செம்பொற்
கன்னிகையாலுஞ்சோதிகலந்தசெங்கமலம்போன்றாள். (கஉஅ)

* பான்மொழிக்குந்திமீண்டும்பாண்டுவினேவல்பெற்று
வான்மொழிமறையாலுன்னிவானவர்க்கரசைநோக்க
மேன்மொழிவதுமற்றென்கொல்விடுவனேவிரைவின்வந்தத்
தேன்மொழித்தெரிவைமெய்யுஞ்சிந்தையுங்களிக்கச்சேர்ந்தான். (கஉகூ)

* எங்குநன்னிமித்தஞ்சொல்லவிருநிலமகிழ்ச்சிகூரப்
பங்குனிநிறைந்ததிங்களாதபன்பயிலுநாளில்
வெங்குனிவரிவில்வாழ்க்கைவிசயனும்பிறந்தான்வென்றிப்
புங்குனனென்னுநாமம்பகுதியாற்படைத்திட்டானே. (கநo)

* கற்பகமலர்கள்சிந்திக்கடவுளர்கணங்களாட
வெற்பகமுனிவரீண்டிமங்கலவேதம்பாடப்
பொற்பகமுழவுவிம்மப்புரிவளைமுழங்கியார்ப்ப
நற்பகலிதுவென்றெல்லாவுலகமுநயந்தவன்றே. (கநக)

* இறைவனுமகிழ்ந்துபின்னும்யாதவிக்குரைப்பவந்த
மறையினைமுறையிற்பெற்றமத்திரராசன்கன்னி
குறைவறவிருவர்வேண்டுங்குமரரென்றுன்னிநின்று
ணிறையுடையிரவிமைந்தரிருவருநினைவின்வந்தார். (கநஉ)

* மருவருங்குழலியாயுமறையினால்வரிசைபெற்ற
விருவருமொருவர்போலவின்புறமணந்தபோதிற்
பருவரலியாதுமில்லாப்பாலகரிருவர்சேரக்
கருவிலைந்துதித்தார்யாருங்கண்ணெனக்காணுநீரார். (கநந)

* சசிகுலநகுலனென்றுந்தம்பிசகதேவனென்றும்
விசயனேடெண்ணும்வீமன்மேதகுதருமனென்று
மசைவறுசிங்கசாபமனையவரைவராலும்
வசையறுதவத்தின்மிக்கான்மகிழ்ச்சியால்வாழ்வுபெற்றான். (கநச)

* தாதியர்மருங்குந்தந்தைதடமணிமார்பும்பெற்ற
பேதையர்கரமுநீங்காப்பெற்றியின்வளர்ந்தபின்னர்ப்
போதகமடங்கல்புல்வாய்புலிமுதல்விலங்கொடோடி
வேதியர்முன்றிரேறும்விழைவிளையாடலுற்றார். (௧௩௫)

* செய்தவமுனிவர்தம்மாற்சிகையுடன்புரிநூல்சாத்திக்
கைதவமின்றியெண்ணெண்கலைக்கடற்கரையுங்கண்டு
மெய்தவம்விளங்கவேழவில்லியும்விரைந்துநோக்க
மைதவழ்சிகரியன்னவளர்ச்சியின்வனப்பின்மிக்கார். (௧௩௬)

* மார்பினுமகன்றகல்விவனப்பினுநிறைந்தசீர்த்தி
போர்வருதெரியன்மாலைப்புயத்தினுமுயர்ந்தகொற்றஞ்
சீர்தருவாய்மைமிக்ககண்ணினுஞ்செங்கைவண்மை
பார்வளஞ்சுரக்குஞ்செல்வப்பரப்பினும்பரந்தவன்றே. (௧௩௭)

* ஆரமுமாரச்சேறுமரும்பனிநீரும்பூவு
மீரவெண்மதிநிலாவுமிதம்பெறுதென்றற்காலு
மோருயிரிரண்டுமெய்யாயுருகுவாருருகும்வண்ண
மாரனைமகுடஞ்சூட்டவந்ததுவசந்தகாலம். (௧௩௮)

* விதுநலம்பெறுகாவெங்குமெய்சிவப்பேறவண்டு
புதுமையின்முரன்றுமொய்ப்பப்புதுமணம்பரந்துலாவக்
கதுமெனத்தலைநடுங்கக்காறடுமாறிற்றம்மா
மதுவயர்ந்தவரில்யாவர்மண்ணின்மேன்மயக்குறாதார். (௧௩௯)

* பைந்தடந்தாளான்முன்னம்பருகியபுனலைமீளச்
செந்தழலாக்கியந்தண்சினைதொறுங்காட்டுஞ்சீரான்
முந்தியவசோகுரூகமுதலியதருக்களெல்லா
மிந்திரசாலம்வல்லோரியற்கையினியற்றுமாலோ. (௧௪௦)

* பரந்தெழுசூதபுட்பராகநல்லிராகமிஞ்ச
முரண்படுசிலைவேள்விட்டமோகனச்சுண்ணம்போன்ற
புரிந்ததொல்யோகமாக்கள்புந்திநின்றுருகத்தொட்ட
வுருந்தழற்கணைகள்போலவலர்ந்தனவசோகசாலம். (௧௪௧)

* வேனிலின்விளைவினாலும்வேனிலான்விழவினாலு
மானலந்திகழுமூரன்மாத்திரிவனப்பினாலுந்
தானலமுறுதலெண்ணிச்சாபமுமறந்துமற்றப்
பானலங்கண்ணாளோடும்பாண்டுவும்பரிவுகூர்ந்தான். (௧௪௨)

* அருந்தளிர்நயந்துநல்கியலகுடன்லகுசேர்ப்
பொருந்துமுன்னவசமாகிப்போகமென்குயிலும்பேடு
மிருந்துமெய்யுருகுங்காவிலிரதியுமதனுமென்ன
வருந்தியகாதலோடுமாதவிப்பந்தர்சேர்ந்தார். (௧௪௩)

* பஞ்சின்மெல்லடியினாளுங்கணவனும்பழங்கணேட்ட
நெஞ்சினைநலியமேன்மேனையமுற்றுருகியாங்க
ணெஞ்சியகாலமெல்லாமென்செய்தோமென்றென்றெண்ணி
வெஞ்சிலையநங்கவேதமுறைமையான்மேவினாரே. (கசச)

* பூவியலமளிபொங்கப்புணர்முலைபுளகமேற
மேவியகலவியின்பமெய்யுறுமகிழ்ச்சிமுற்றிக்
காவியங்கண்ணிகேள்வன்கமழ்வரைமார்பினன்போ
போவியமெனவேயுள்ளமுருகினளயர்ந்துவீழ்ந்தாள். (கசரு)

* அரும்பியவிழியுந்தொண்டையமுதுறுபவளவாயும்
விரும்பியசுரதபோகமேவருகுறிப்புமாகிப்
பொரும்படைமதனனம்பாற்பொன்றினன்போலமன்றற்
சுரும்பினமிரங்கியார்ப்பத்தோன்றலுஞ்சோர்ந்துவீழ்ந்தான். (கசசு)

வேறு.

* கொஞ்சுகிளியன்னமொழிகுமுதவிதழமுதா
லெஞ்சினனராதிபதியீதெனவியப்போ
வஞ்சுதருதீவினையினாலமுதுநஞ்சா
நஞ்சுமமுதாமுரியநல்வினையின்மாதோ. (கசஎ)

* சித்திரைவசந்தன்வருசெவ்வியுடன்மகிழா
மத்திரியெனுங்கொடியவாட்கண்விடமன்னாண்
முத்திரையுணர்ந்திலண்முயக்கமுறுமின்ப
நித்திரைகொலாமெனநினைந்தருகிருந்தாள். (கசஅ)

* செயிர்த்தவரையாவிகவர்தீயுமிழும்வேலா
னுயிர்த்திலன்விழித்திலனுணர்ந்துமிலனென்றா
வயிர்த்தனளழைத்தனளரற்றினளிரங்கா
வயிர்த்தனணிலத்தினுயர்வானமினிதென்பாள். (கசகூ)

* புந்தியிலண்மன்றல்பெறுபூவைகுரல்கேளா
முந்தியகடும்பழிமுடிந்ததுகொலென்னாக்
குந்தியும்விரைந்துதன்குமாரரொடுபுக்கா
ளந்தியரவிந்தமெனவணிகுலைமுகத்தாள். (கரு0)

* உற்றதுமருங்கொழுநனுயிருறுநலத்தா
லிற்றதுமுணர்ந்திவளிரங்கியழுமெல்லைக்
குற்றமகனும்படிகுணங்களைநிறுத்து
நற்றவர்புகுந்தருகிளைந்துளநெகிழ்ந்தார். (கருக)

* அழுகுரல்விலக்கியபினைம்மகவையுங்கொண்
டெழுகடனிலத்தரசையீமவிதிசெய்யப்
புழுகுகமழ்மைக்குழலிபொற்புடைமுகத்தாண்
முழுகினளனற்புனலின்மொய்ம்பனைவிடாதாள். (கருஉ)

* தங்கையவள்வானுலகுதலைவனுடனெய்திக்
கங்கைவனமூழ்கியுயர்கற்பவனம்வைகப்
பங்கயநெடுந்துறைபடிந்துதன்மகாரான்
மங்கையிவளுங்கடன்முடித்தனள்வனத்தே. (கருங)

* காசிபன்முதற்கடவுள்வேதியர்கருத்தா
லாசிபெறும்புதல்வரைவரொடுமன்றே
யேசில்பிரதைக்கொடியையிறைநகரினுய்த்தார்
தேசிகரின்முற்றெழுதகுஞ்சதசிருங்கர். (கருச)

* இறந்ததுணைவற்குளமிரங்குநிலமன்னன்
சிறந்தசரணத்தில்விழுசிறுவரையெடுத்துப்
புறந்தழுவியப்பொழுதுபுண்ணியநலத்தாற்
பிறந்தபொழுதொத்துமகிழ்பெற்றியினனானன். (கருரு)

* வியனதிமகன்சிலைவல்விதுரன்முதலுள்ளோர்
பயனுடைவிசும்புபயில்பாண்டுவைநினைந்துஞ்
சயநிலைபெறுந்தகையதனையரையுகந்து
நயனமிருபைம்புனலுநல்கினர்நயந்தார். (கருசு)

* அனுசனிருபன்புதல்வரைவருமகீபன்
றனையரொருநூற்றுவருமன்பினொடுதழுவிக்
கனகுலமுகந்துபெய்கருங்கயநெருங்கும்
வனசமலருங்குமுதமலருமெனவளர்வார். (கருஎ)

வேறு.

* இன்னணம்வளருங்காலையெறிகடலுடுத்தவல்குன்
மின்னெனுமருங்குல்கொங்கைவெற்புடைவேய்கொண்மென்றோட்
பொன்னெனுநிறத்திறனோடும்பொற்பழியாக்குலத்தா
டன்னெணமுடிப்பான்வந்ததலைவனைத்தந்தகோமான். (கருஅ)

* குந்திபோசன்றன்றெய்வக்குலத்துளோர்களுமநேக
விந்திரவனிதன்னிலெய்தினராகுமென்னக்
கந்தவான்கொன்றைதோயுங்கங்கையாள்குமரன்வைகு
மந்தமில்சுவர்க்கமன்னவத்திருபுரிவந்துற்றார். (கருகூ)

* வெண்ணிறமதியமென்னவிடலையுங்கரியமேக
வண்ணனும்வள்ளறன்னைத்திருவயிற்றுயிர்த்தமாது
மெண்ணிலாவுவகையோடுங்குந்தியையெய்தியெல்லாப்
புண்ணியநலமுமெண்ணிப்பூமியாண்முறையுங்கோத்தார். (கசூ0)

* எம்பிரானாதிமூலமிந்திரன்முதலோர்க்கெல்லாந்
தம்பிரான்பாண்டுவீன்றதருமதேவதையைநோக்கி
யம்புராசிகளுடுட்டவவனிகளனைத்துநாமே
யிம்பரேயகற்றியெல்லாவெண்ணமுமுடித்துமென்றான். (கசூக)

* முகுரவானனனும்வேத்துமுனிவனுமனஞ்சொற்காயம்
பகிர்விலாவிதுரன்றானும்பார்த்தளேறுயர்த்தகோவு
நிகரிலாத்துணைவர்தாமுநீரொடுநீர்சேர்ந்தென்னத்
தகைவிலாவன்பினோடுந்தழுவினர்கெழுமினாரே. (கசுஉ)

* தன்பதிவந்தோர்தம்மைத்தாதைதன்றாதையான
முன்புலட்க்கங்கைமைந்தன்முதலியமுதல்வரெல்லா
மன்பொடுகண்டுகண்டுகண்களித்தார்வமிஞ்சி
மன்பதைமகிழ்ச்சிகூரவரம்பிலாவிருந்துசெய்தார். (கசுங)

* நூற்றுவரைவரென்னுநதியுடைச்சமரவைவேற்
கூற்றுவரனையோர்க்கியாருங்கொடுங்கடும்போரிலாற்றா
ராற்றுவரேனுமுங்களுதவியுண்டருளுமுண்டு
தோற்றமுமுண்டுநுங்கள்சுமையிவர்சுமையுமென்றார். (கசுச)

* இனிமையிற்பலவுமாற்றம்யாவர்க்குமியாவுஞ்சொல்லித்
தினகரற்றொழுதபின்னர்த்தேர்பரிகரிகடோறு
மனனுறத்தக்கசெல்வம்வகைதொறும்வழங்கியன்றே
தனதனைப்போல்வார்தம்மைத்தம்பதியடைவித்தாரே. (கசுரு)

வேறு.

* எயினலம்புனைகோபுரமாபுரத்தெழுதுமாளிகைதோறும்
வெயினிலாவுமிழ்கனகநீள்வீதியில்விலாசமுற்றிடுநாளிற்
பயினன்மேல்வருகல்லெனச்செறிந்தமெய்ப்பவனன்மைந்தனுமொத்தான்
வயினதேயனைக்காத்திரவேயரைமன்னன்மைந்தருமொத்தார். (கசுசு)

சம்பவச்சருக்கமுற்றிற்று.

ஆகூ செய்யுள்-ககருசு.

---

# வாரணாவதச் சருக்கம்.

* ஆங்கவரம்முறையயருமாயிடைத்
தீங்கொருவடிவமாந்திறற்சுயோதனன்
பாங்கிவனமக்கெனப்பரிதிமைந்தனை
வாங்குபுதழீஇயினன்வலிமைகூரவே. (க)

* ஒருபகனிலமகளுய்யமங்குலின்
வருபகீரதிநதிவாசநீர்படிந்
திருதிறப்புதல்வருமியைந்தகேண்மையாற்
கரையடைந்தனரிளங்கடவுளோரனார். (உ)

* தைவருநவமணிச்சைலமென்னவே
யைவகைநிறங்களுமமைத்தியற்றிய
தெய்வவாடகமனைச்செல்வப்போனகங்
கைவரநுகர்ந்தபின்கண்ணுந்துஞ்சினார். (௩)

* கண்படைக்கங்குலிற்கன்னசௌபல
ரெண்படக்குமரனோடெண்ணிப்பாவக
னண்பன்மெய்ப்புதல்வனைநார்கொள்வல்லியாற்
றிண்பதத்தொடுபுயஞ்சிக்கயாத்தபின். (௪)

* அரவினிற்பிணித்தெழுமரவம்பொங்கிட
வுரனுடைப்பொருப்பையன்றும்பர்நாயகன்
பரவையிற்செறித்தெனப்பயனில்செய்கையால்
விரவுமப்பொருநதியூடுவீழ்த்தினார். (௫)

* வீழ்ந்தவனனந்தரநிமிர்ந்துமெய்யுறச்
சூழ்ந்தனபிணிகளைத்துணிகளாக்கியே
யாழ்ந்திலனேறிமீண்டவசத்தோடவட்
டாழ்ந்திலனிராகவன்றம்பிபோன்றுளான். (௬)

* வாளிரவியையொளிமறைக்கும்வெஞ்சினக்
கோளரவினையனகொடியநெஞ்சின
னீளரவினங்களானித்திராலுவை
மீளவுங்கொல்லுவான்வீரனேவினான். (௭)

* கடித்தனபன்னகநகங்கொள்கைகளாற்
றுடித்திட * மற்குணத்தொகுதிபோற்பிசைந்
திடித்திடுமுகிலெனவெழுந்துமாநகர்
வடித்தவேற்றுணைவரோடெய்திமன்னினான். (௮)

* வேறொருபகற்கழுநிரைத்துவீமனோ
டாறுபாய்ந்திருவருமாடும்வேலையிற்
றேறலான்வஞ்சகந்தேறிவண்டினா
லேறினான்கடந்தரியேறுபோன்றுளான். (௯)

* பின்னருமொருபகற் ¶ பெற்றம்பெற்றவன்
றன்னையம்மகீபதிதனையனாதரித்
தின்னமுதருத்துவான்போலயாவையுந்
துன்னியவிடங்களாற்றுய்ப்பித்தானரோ. (௧௦)

* விடத்திலேயழிந்தறிவொழிந்தவீமனை
வடத்திலேபிணித்தனன்கங்கைவாரியி
னிடத்திலேயமிழ்த்தினனிதயமொத்தவர்
திடத்திலேமுதிர்ந்தகிங்கரர்திறங்களால். (௧௧)

---

* மற்குணம்=மூட்டைப்பூச்சி. ¶ பெற்றம்=வாயு.

* ஓதவான்கடலிடையொளித்தவெற்பெனப்
பாதலந்தனில்விழுபவனருணவை
வேதனைப்படுத்தினர்விடங்கொள்கூரெயிற்
றுதவப்பணமணியரவினஞ்சிறார். (கஉ)

* முற்படுகொடுவிடமுனையெயிற்றுரும்
பிற்படுவிடத்திறற்பெயர்ந்துபோதலின்
மற்படுபுயகிரிவடப்பிணிப்புமற்
றற்படிருள்புலரலரியாயினன். (கங)

* வாசுகிதனக்கிவன்வரவுணர்த்தலு
மாசுகன்முதலையென்றறிந்துமற்றவன்
றேசுறுபொற்குடந்தெரிந்துபத்தினை
லேசறுமமுதெலாமினிதிறூட்டினன். (கச)

* வெங்கனல்கொளுந்தலின்வெந்தவான்புல
மங்குல்பெய்மாரியால்வயங்குமாறுபோ
லங்கெரிவிடநுகர்ந்தழிந்தபேருட
லிங்கமுதருத்தலாலெழில்புரிந்ததே. (கரு)

* ஆயிரம்பதின்மடங்கரசுவாக்களின்
மாயிருந்திறல்வலிமலிந்தமேனியா
னேயிருந்தவப்பயனென்னவெண்பகன்
மேயிருந்தனன்பணிவேந்தன்கோயிலே. (கசு)

* இவனையங்கதியிடையிட்டபாவியுந்
தவனையுததியிற்சாய்த்தமாலைபோ
லவனிபனகரியினரசவெள்வளைத்
துவனிசெந்தழல்விளக்கெடுப்பத்துன்னவே. (கஎ)

* கண்டிலனுதிட்டிரன்கனிட்டற்கண்ணுற
வுண்டிலடரித்திலளோரிராவினுங்
கொண்டிலடயிலிளங்குமரர்தம்மொடும்
விண்டிலனுரையுளம்விம்முகுந்தியே. (கஅ)

* வீடினனுமெனத்துணைவர்வேறுவே
றோடினர்கானதியோடையெங்கணுந்
தேடினர்காண்கிலஞ்செய்வதென்னென
நாடினர்நடுங்கினர்நடுக்கில்சிந்தையார். (கக)

* கூற்றனசுயோதனன்குமரனேயிவ
ணுற்றலின்வெரீஇயழுக்கற்றசிந்தையா
னேற்றதையுணர்கிலமென்றுதந்தையாங்
காற்றினுமலமருங்கருத்தராயினர். (உ0)

* 'தைவருநவமணிச்சைலமென்னவே
யைவகைநிறங்களுமமைத்தியற்றிய
தெய்வவாடகமனைச்செல்வப்போனகங்
கைவரநுகர்ந்தபின்கண்ணுறுந்துஞ்சினார். (௩)

* கண்படைக்கங்குலிற்கன்னசௌபல
ரெண்படக்குமரனோடெண்ணிப்பாவக
னண்பன்மெய்ப்புதல்வனைநார்கொள்வல்லியாற்
றிண்பதத்தொடுபுயஞ்சிக்கயாத்தபின். (௪)

* அரவினிற்பிணித்தெழுமரவம்பொங்கிட
வுரனுடைப்பொருப்பையன்றும்பர்நாயகன்
பரவையிற்செறித்தெனப்பயனில்செய்கையால்
விரவுமப்பொருநதியூடுவீழ்த்தினார். (௫)

* வீழ்ந்தவனனந்தரநிமிர்ந்துமெய்யுறச்
சூழ்ந்தனபிணிகளைத்துணிகளாக்கியே
யாழ்ந்திலனேறிமீண்டவசத்தோடவட்
டாழ்ந்திலனிராகவன்றம்பிபோன்றுளான். (௬)

* வாளிரவியையொளிமறைக்கும்வெஞ்சினக்
கோளரவினையனகொடியநெஞ்சின
னீளரவினங்களானித்திராலுவை
மீளவுங்கொல்லுவான்வீரனேவினான். (௭)

* கடித்தனபன்னகநகங்கொள்கைகளாற்
றுடித்திட * மற்குணத்தொகுதிபோற்பிசைந்
திடித்திடுமுகிலெனவெழுந்துமாநகர்
வடித்தவேற்றுணைவரோடெய்திமன்னினான். (அ)

* வேறொருபகற்கழுநிரைத்துவீமனோ
டாறுபாய்ந்திருவருமாடும்வேலையிற்
றேறலான்வஞ்சகந்தெறிவண்டிறு
லேறினான்கடந்தரியேறுபோன்றுளான். (௯)

* பின்னருமொருபகற் ¶ பெற்றம்பெற்றவன்
றன்னையம்மகிபதிதனையனுதரித்
தின்னமுதருத்துவான்போலயாவையுந்
துன்னியவிடங்களாற்றுய்ப்பித்தானரோ. (௧0)

* விடத்திலேயழிந்தறிவொழிந்தவீமனை
வடத்திலேபிணித்தனன்கங்கைவாரியி
னிடத்திலேயமிழ்த்தினனிதயமொத்தவர்
திடத்திலேமுதிர்ந்தகிங்கரர்திறங்களால். (௧௧)

* மற்குணம்=மூட்டைப்பூச்சி. ¶ பெற்றம்=வாயு.

* ஓதவான்கடலிடையொளித்தவெற்பெனப்
பாதலந்தனில்விழுபவனகுஆவை
வேதனைப்படுத்தினர்விடங்கொள்கூரெயிற்
ருதவப்பணமணியரவினஞ்சிருர். (கஉ)

* முற்படுகொடுவிடமுனையெயிற்றுரும்
பிற்படுவிடத்திஞற்பெயர்ந்துபோதலின்
மற்படுபுயகிரிவடப்பிணிப்புமற்
றற்படுமிருள்புலரலரியாயினன். (கங)

* வாசுகிதனக்கிவன்வரவுணர்த்தலு
மாசுகன்மதலையென்றறிந்துமற்றவன்
றேசுறுபொற்குடங்கெரிந்துபத்திஞ
லேசறுமமுதெலாமினிதிஞட்டினன். (கச)

* வெங்கனல்கொளுந்தலின்வெந்தவான்புல
மங்குல்பெய்மாரியால்வயங்குமாறுபோ
லங்கெரிவிடநுகர்ந்தழிந்தபேருட
லிங்கமுதருத்தலாலெழில்புரிந்ததே. (கரு)

* ஆயிரம்பதின்மடங்கரசுவாக்களின்
மாயிருந்திறல்வலிமலிந்தமேனியா
னேயிருந்தவப்பயனென்னவெண்பகன்
மேயிருந்தனன்பணிவேந்தன்கோயிலே. (கசு)

* இவனையங்நதியிடையிட்டபாவியுந்
தவனையுததியிற்சாய்த்தமாலைபோ
லவனிபனகரியினரசவெள்வளைத்
துவனிசெந்தழல்விளக்கெடுப்பத்துன்னவே. (கஎ)

* கண்டிலனுதிட்டிரன்கனிட்டற்கண்ணுற
வுண்டிலடரித்திலளோரிராவினுங்
கொண்டிலடுயிலிளங்குமரர்தம்மொடும்
விண்டிலளுரையுளம்விம்முகுந்தியே. (கஅ)

* வீடினனமென்த்துணைவர்வேறுவே
ருேடினர்கானதியோடையெங்கணுந்
தேடினர்காண்கிலஞ்செய்வதென்னென
நாடினர்நடுங்கினர்நடுக்கில்சிந்தையார். (கக)

* கூற்றனசுயோதனன்குமரனேயிவ
ஞற்றலின்வெரீஇயழுக்கற்றசிந்தையா
னேற்றதையுணர்கிலமென்றுதந்தையாங்
காற்றினுமலமருங்கருத்தராயினர். (உ0)

* ஊதையில்பூதமொத்துள்ளம்வெம்பிய
தாதையில்சிறுவரைத்தாதைதாதைபாற்
கோதையில்குழலினாள்கொண்டுசேறலும்
வாதையின்றவற்கெனவருத்தமாற்றினான். (உக)

தருமமன்னனுநகர்ச்சனங்கள்யாவையுந்
தெருமரதேறற்றவுந்தெய்வங்கூறவும்
பெருமிதநிமித்தங்கள்பெற்றிபேசவும்
வரும்வருமெனமனமறுகிவைகினான். (உஉ)

* இருந்திலைப்பகன்றபினிவனைமற்றைநா
ளருந்திறற்போகிகளரசனேவலால்
வருந்தியுற்றெடுத்துமுன்வந்தநீர்வழிப்
பொருந்திறற்கங்கையின்கரையிற்போக்கவே. (உங)

* பாழியம்புயகிரிப்பாண்டவன்றனைச்
சூழிகற்பணிக்குலஞ்சுமக்கவல்லவோ
வாழியக்குலங்களின்மன்னனல்லனோ
வேழிருபுவனமுமினிதினேந்துவான். (உச)

* விதியினாலொளித்தலினுயங்கிமீளவு
நதியினால்வருதலினல்கொண்மேனியான்
பதியினால்விளங்குமென்பங்கயங்களு
மதியினாற்குளிர்நெடுவானுமாயினான். (உரு)

* வேதியர்குரவர்வில்விதுரன்வீடும
னாதியர்துணைவரந்நகருளார்களென்
றோதியசனங்களுக்குவகைநல்கினான்
ஞாதியர்கிளைக்கெலாநடுக்கநல்கியே. (உசு)

* குந்தியைமகிழுரைகூறிக்கற்பினா
லந்திமீனனையவளருளின்வாழ்த்தவே
செந்திருமகளுறைசெல்வமாநகர்
வந்திவன்முன்புபோல்வளருநாளிலே. (உஎ)

முன்னரிற்சந்தனுவென்னுமொய்ம்புடை
மன்னவன்வேட்டைபோய்மீளுமவ்வழித்
தன்னிகரறுசிலைமுனிவன்றன்றவ
மன்னினனவனொருவனமருங்கினில். (உஅ)

அப்பொழுதவன்றவமழித்திலுன்னியே
செப்பருமகபதிசீரினோர்கொடி
யைப்பணித்தேவலுமயர்ந்துவீரியம்
விப்பிரன்விடுத்தனன்விசிகத்தம்பைமேல். (உகூ)

தன்கணைப்புட்டிலுந்தனுவுமாங்குற
முன்கரந்தோரிடத்துறைந்துமுன்பயின்
மன்கொளும்பெருந்தவனோற்றுவைகினு
னன்குறுதனுமறையுணர்ந்தநாயகன். (௩௦)

துகளறுமொருசரத்துவந்தன்றன்பெய
ருவளுறுவீரியமுகுத்தபாங்கரோர்
மகளுடன்மகனுமாய்வரத்திற்றோன்றினர்
வகுளநன்மதியுநற்சசியுமானவே. (௩௧)

கண்டனனிவரையுங்கார்முகந்தனோ
டண்டரத்திரங்களாலமிழ்ந்ததூணியும்
பண்டையிற்றவமிவண்பலித்ததென்றிசை
கொண்டெடுத்தேகினன்குவவுத்தோளினன். (௩௨)

வினையறத்திகழ்தனுர்வேதம்வல்லமா
முனியளித்தவரெனமுயற்சியாலுணர்ந்
தினிதுறவளர்த்தனன்கிருபனிஞ்சொலிற்
புனையணிக்கிருபியென்றெவரும்போற்றவே. (௩௩)

இங்கிவர்வளர்தலினீந்தமாமுனி
யங்கடைந்தரசனுக்கறியக்கூறியே
மங்கையைத்துரோணனுக்களித்துமைந்தனுக்
கிங்கிதப்படையெலாம்பயிற்றியேகினன். (௩௪)

* கோதமன்மகன்மகன்குனிவிலாதியா
மேதகுபடைக்கலம்யாவும்வீறுடம்
மாதவன்வயிற்பயில்வரதன்வன்றிறற்
கேதமில்சிந்தையான்கிருபனென்றுளான். (௩௫)

* மற்றிவன்சந்தனுமைந்தனேவலாற்
கொற்றவரருள்குருகுலகுமாரரை
வெற்றிகொள்சிலையும்வெவ்வேலும்வாளமும்
பற்றலர்வெருவரும்படிபயிற்றினன். (௩௬)

* பரிவுடனிவன்படைபயிற்றப்பின்னருங்
குருபதிவேறொருகுருவைத்தேடினு
னிருளறமதிநிலவெறித்ததாயினும்
பரிதியைநயக்குமிப்பரவைஞாலமே. (௩௭)

வேறு.

* பரதநாதவேதபரத்துவாசனென்பான்
விரதவேள்விதன்னின்மேனகையாலான
சுரததாதுவீழ்ந்ததுரோணகும்பந்தன்னில்
வரதனொருவன்வந்தான்வசிட்டமுனியையொப்பான். (௩௮)

* ஈரேழ்விஞ்சைநிற்னுமீன்றோன்றன்பாலெய்தி
நீரேழென்னயாவுநிறைந்தகேள்விநெஞ்சன்
பாரேழெண்ணும்படைகள்பரசுராமன்றன்பா
லோரேழ்பகலினுலகுக்கொருவனென்னக்கற்றான். (௩௯)

திருபியென்றபைம்பூங்கிளியைவேட்டுநாளுஞ்
சுருபவல்லியின்பந்துய்த்துவாழுநாளிற்
பொருபதாகைவேந்தர்புனிதவின்னுளோரு
மொருபவானியென்னக்கற்பின்மிக்குயர்ந்தாள். (௪0)

அந்தமாதுகற்பையறியவேண்டியீசன்
வந்துமாதவத்தர்வடிவினுண்டிகேட்ப
விந்தமாதுமன்பாலிசைவுகொண்டளிப்பான்
வந்தனுதிசெய்யவரதனென்றுசொல்வான். (௪௧)

தூசிலாமல்வந்துதுய்க்கநல்குவாயே
லாசிலாயருந்தலன்றியுண்டிலோமென்
றேசிலானுரைப்பவிவளுமந்தவாறு
கூசிலாடைநீத்துக்குழன்மறைப்பவந்தாள். (௪௨)

காவியொத்தகண்ணாள்கற்புணர்ந்துகந்து
தேவியொத்தமங்கைசெங்கைகொண்டவள்ளத்
தாவியொத்தபெம்மானமுதுகுத்தகன்றான்
பாவியத்தையங்கோர்பரியின்முன்னர்வைத்தாள். (௪௩)

புரவியுண்டபோதிற்பொற்பின்மிக்கமைந்த
னரவினுண்டெறிக்குமறதனத்தைமான
விரயிபுண்டினித்தானில்லையென்னுரோன்
பரவவண்டரிந்தப்பார்துதிக்கவந்தான். (௪௪)

முனியுமந்தமாதுமுடிவிலின்பமெய்தித்
தனையனந்துரங்கத்தாமனென்னுநாமம்
புனையவந்தியாரும்புகழவைகுநாளி
லனையதன்மைகேட்டானரியகங்கைமைந்தன். (௪௫)

* வெற்பின்வலியதிண்டோள்வேந்தனேவுந்தூதா
லற்பின்மிக்கசிந்தையறஞ்சார்மொழியவ்வாசான்
கற்பின்பன்னியோடுங்கையின்மதலையோடும்
பொற்பினமராபதியேபோலுநகரிபுக்கான். (௪௬)

* வந்தான்வரதனென லுமந்தாகினியாண்மைந்தன்
பைந்தாரசையவெதிர்போய்ப்பணிந்துபூசைபண்ணிச்
சிந்தாசனத்தோடொக்குஞ்சிங்காசனத்தினேற்றி
யெந்தாய்வரவிங்கடியேனென்னதவத்தேனென்றான். (௪௭)

* மூசிவண்டுமொய்க்குமுருகார்செவ்விமாலை
வாசிமான்றேர்வெம்போர்மன்னர்மன்னன்றன்னை
யேசில்கடவுள்வாய்மையிருக்காலெண்ணில்கோடி
யாசியன்பாலோதியருள்செய்திருந்தபின்னர். (சஅ)

* வேதமுனிவனிருந்தவேத்துமுனியைநோக்கிப்
பூதந்தன்னில்நிகழ்ந்தபுன்மைமொழியொன்றுரைப்பா
னேதமெய்பெற்றனையயாகசேனனென்பான்
போதமில்லானென்பாற்பூட்டுநண்புபூண்டான். (சகூ)

* யானுமவனுமுறையாலினையோமானவெல்லைப்
பானுநிகர்தொல்லங்கிவேசன்பாதம்பணிந்து
வானுமண்ணும்வியக்கமறவெம்படைகள்கற்றுந்
தானும்வல்லனாகித்தன்போலென்னைவைத்தான். (டு0)

* பின்னையிரவும்பகலும்பிரியேமாகித்திரியத்
தன்னையடைந்தநண்பின்றகவான்மிகவாதரியா
வென்னைவானமெய்தியானேயிறைவனானா
லுன்னையாளவைப்பேனுலகிற்பாதியென்றான். (டுக)

* நன்றுநன்றுன்வாய்மைநன்றுநண்புக்கினியா
யென்றுபோந்துநானுமியன்றதவத்தினிருந்தேன்
வென்றுகொண்டபுவியைவேந்தன்மகவுக்களித்துச்
சென்றுவானம்புகுந்தான்சிறுவன்றலைவனானான். (டுஉ)

* தனத்திலாசையின்றித்தவமேதனமென்றெண்ணி
வனத்திலுண்டிகொண்டேமகிழ்வுற்றொருசார்வைகிச்
சனத்திலருளாலில்வாழ்தருமந்தவறாவண்ண
மினத்தின்மிக்ககிருபற்கிளையாளிவளைவேட்டேன். (டுங)

* கந்தமகவையீன்றகாளகண்டனருளால்
வந்தமகவிம்மகவும்வறுமைவளரவளர்ந்தா
னிந்தமகவுமையாண்டிளமையறியாதெனலாற்
றந்தமகவைநோக்கித்தாயும்பெருகத்தளர்ந்தாள். (டுச)

* மாவின்பாலேயன்றிமரபுக்குரியமைந்த
னாவின்பால்கண்டறியானதனால்வருந்தியந்தக்
கோவின்பாலேகுதலுங்கோமான்யார்நீயென்ன
நாவின்பாலானடுங்கிநானுன்னன்பனென்றேன். (டுடு)

* மன்னன்யானீமுனிவன்மரபாலுனக்குமெனக்கு
மென்னநண்புண்டென்னவேசிநகைசெய்திகழ்ந்தா
னன்னதுருபன்றன்னையவையிலரசர்கேட்பச்
சொன்னவாய்மைநீயேசோர்ந்தாயானேசோரேன். (டுசு)

* புகன்றபடிநீயாளும்புவியும்பாதிகொள்வே
னிகன்றசமரிலுன்னையிரதத்துடனேகவர்வே
னகன்றமெய்ம்மையுடையாயறிதியென்றேனென்று
சுகன்றன்ஞானம்பெற்றதுரோணன்சொல்லக்கேட்டான். (ருள)

* கேட்டவரசனைழைக்கக்கிருபனுடன்வந்திறைஞ்சும்
பூட்டுவரிவிற்றடக்கைப்புதல்வர்புதல்வர்தம்மைக்
காட்டிநீயேயிவரைக்கடிதிற்படைமைக்கல்வி
மூட்டிநின்வஞ்சினமுமுடித்தியென்றுமொழிந்தான். (ருஅ)

* முனிநீயையாவிதற்குமுன்னமின்றுமுதலா
வினியிவ்வுலகுக்கரசாயெம்மிலொருவனுகிக்
குனிவில்வலியாலமருங்கோடியென்றுகொடுத்தான்
பனிவெண்குடையுநிருபற்குரியவரிசைபலவும். (ருகூ)

வேறு.

* அன்றுமுதலாகவரிவெஞ்சிலைமுதற்படைகளானவையனைத்துமடைவே
தொன்றுபடுநான்முறையின்மறையினெடுதிட்டிரசுயோதனர்களாதியெவரு
மொன்றியதுரோணனருளாலும்வலியாலுமுயலுணர்வுடைமையாலுமுதலே
நின்றகுறையாலுமொருவர்க்கொருவர்கல்வியினிரம்பினர்வரம்பினிதியோர்.()

* வெஞ்சிலையினுலிவனிராகவனையொக்குமெனவிசயன்விசயத்தின்மிகவே
எஞ்சியகுமாரர்கள்பொறுமையின்மிகுத்தனர்களிரவியெதிர்மின்மினிகள்போ
லஞ்சொன்முனிதானுமிவன்மேலெவரினும்பெருகவன்புடையனுகியகலா
னெஞ்சுறவருங்கலைகள்கற்குமவர்தம்மளவினேயநிகழாதவர்கள்யார். (சுக)

* ஏகலைவனென்றொருகிராதன்முனியைத்தனியிறைஞ்சியிவனேவலின்வழா
னுகலையடைந்துமிகுப்த்தியுடனுடொறுமருச்சுனனையொத்துவருவான்
மேகலைநெடுங்கடல்வளைந்ததரணிக்கனொருவில்லியெனவின்மையுடையான்
மாகலைநிறைந்துகுருதக்கணைவலக்கையினில்வல்விரல்வழங்கியுளனல். (சுஉ)

* அங்குலிகமொன்றுபுனலாழ்தருகிணற்றில்விழவந்தமுனிதேடுமினெனப்
புங்கமொடுபுங்கமுறவெய்திவனெடுத்தமைபுகன்றருகுநின்றவனாநீ
ரிங்கிதனிலைத்தொகைகள்யாவுமுருவப்பகழியேவுமினெனுமுன்விசயன்
றுங்கவில்வளைத்தொருகணத்தினில்வடத்திலைதுளைத்தனனிலக்கிறைடையால்.

* முத்திமுனிதாளிணையைநீர்படிதடந்துறையின்முதலைகவர்வுற்றதெனலு
ஞ், சித்திரவில்வீரர்பலருந்தமவெறுங்கையொடுசென்றருகுநின்றுவிடவே, பத்
தியின்விரைந்துபொதுவேயிபமழைப்பவொருபறவைமிசைவந்தநெடுமால், கை
த்திகிரிபோல்கணையின்விசயனதனைப்பழையகார்முதலையிற்றுணிசெய்தான்.

* ஒருதனுவினுலிதயமகிழ்குருவினுக்குமிவனுயிருதவினுன்வயிர்மனக்
குருவுமிவனுக்குநிலையாலும்வலியாலுமிகுகூர்பகழியன்றுதவினு
னிருவருநயர்தருளும்வினையமுமிகுந்தனர்களின்னுயிருமனமுமென்மேன்
மருவிவருநல்வினைவயத்தின்வழிவந்தபயன்மற்றொருவருக்குவருமோ. (சுரு)

* சிலைக்குருவி றற்குருகுலக்குமாருக்குவரு * சிரமநிலைகாண்மினெனவே
யலைக்கிலைநிலாவெழு $ சரிற்புதல்வனுக்குநல்லறக்கடவுளுக்குமுறையா
னிலைப்படுவிசாலமணியணிதிகழரங்கின்மிசைநிகழ்பலிகொடுத்தரியுடன்
கலைப்புரவியூர்திருவையுந்தொழுதுபுக்கனனகத்துணர்வுமிக்ககலையோன். (சுரு)

* புரியிலறிவோர்சனபதத்திலறிவோர்புவிபுரக்குமவர்தம்மிலறிவோர்
வரிபடலியங்குகொடிமஞ்சவிதமெங்கணும்வனப்புறவிருந்தபொழுதிற்
றெரிவுறவிமானமனைதோறுமுறைதேவர்பலர்சித்தர்முதலோர்பரனொடுங்
கரியநெடுமால்பிரமனிந்திரன்முதற்பலர்கலந்தவகல்வானிகருமே. (சுஎ)

* ஆற்றின்வழுவாமனுமுறைத்தருமன்மைந்தன்முதலாகியகுமாரரடைவே
போற்றியடலாசிரியரிருவரையுமன்பினுயர்பூசைபலசெய்துபுரிநா
ணேற்றியசராசனம்வணக்கிவடிவாளியினிலக்கமிவைநாலும்வகையான்
மாற்றினர்பிளந்துபெருவண்மைசிறுநுண்மைசலநிச்சலமெனச்சொல்வகையே

* ஆயுதமநேகவிதமானவையெனப்பலவுமழகுறவியற்றியுமதம்
பாயுமிபமாவிரதம்வாசியொருவர்க்கொருவர்பல்கதிவரக்கடவியுஞ்
சேயுயருமாடநிலைதோறவையிருந்தவர்தெளிந்துளமகிழ்ந்துநவைதீர்
வாயுகதியல்லதுமனித்தர்கதியல்லவெனவல்லனபுரிந்தனரரோ. (சுகூ)

* ஒத்தவலியோர்வலியுமொத்ததிறலோர்திறலுமொத்தவினையோர்வினையமுஞ்
சித்தமனன்மூளமுகமம்புயமலர்ந்தரசன்மகனுமநிலன்சிறுவனுங்
கைத்தலமமைத்தகதைகொண்டெதிர்நடந்தனர்களிப்புடனிரண்டுதறுகண்
மத்தகயம்வேரொடுமராமரமெடுத்தமர்மலைந்தனயகோலமறவோர். (எ0)

* தண்டின்முனையொன்றினுடனொன்றுருமெறிந்தனையதன்மையினொடெற்றிவி
மண்டலவிதங்களும்வியப்புறநடந்தபின்மறத்தொடுசெயிர்த்துவயிரங் [லகு
கொண்டிருவரும்பொருதலுன்னுபொழுதற்றிவர்குறிப்பினையிமைப்பளவையிற்
கண்டுகுருவின்சிறுவன்பொடுவிலக்கினன்கல்விகரைகண்டபெரியோன். ()

* மீளிமகவான்மதலையாயுதபுரோகிதன்விலோசனமுணர்ந்தவன்மலர்த்
தாளின்முடிவைத்தெதிர்தரித்தனனிடங்கைவரிசாபகவசத்தின்னிபம்
யாளியரவங்கருடன்வன்னிசலிலந்திமிரமிரவியிவையேகடவுளாம்
வாளியின்விநோதமுறவெய்தனனிருந்தமுடிமன்னவர்மதிக்கும்வகையே.(எஉ)

வேறு.

* மங்குல்சூழ்விசாலமுன்றின்மஞ்சகோடிதிகழவே
யங்கண்வானமீனமானவவையிருந்தவரசர்முன்
சிங்கமென்னுமாறெழுந்துசிங்கநாதமுஞ்செய்தான்
பங்கசாதபரிமளங்கொள்பானுராசசூனுவே. (எங)

* சிந்தையன்புடன்பணிந்துதேசிகேசனருளினால்
வந்துவெஞ்சராசனம்வணக்கிவீரவாளியா
லிந்திரன்குமாரன்முன்னமெய்யாதுயாதியற்றினா
னந்தவந்தநிலையுமேவுமவனின்மிஞ்சலாயினான். (எச)

---

* சிரமம் = யுத்தப்பயிற்சி. $ சரித் = நதி.

* கணைகள்போயிலக்கடைந்தவுறுதிகண்டுகண்களித்
திணையில்வீரனென்றிதன்றிருந்தராசமண்டலம்
பிணையன்மாலைவிசயனண்ணல்பெற்றிபற்றிநாணினன்
றுணைவரோடும்வரிகழற்சுயோதனன்களிக்கவே. (௭௫)

* மருவநின்றருக்கன்மைந்தன்வானநாடன்மகனைநா
மிருவருந்தனுக்கள்போறியற்றவம்மினென்னலுங்
குருகுலந்தழைக்கவந்தகுமரனன்புகூரவே
யுருகினன்றெனத்தழீஇயுவந்துளந்தருக்கினன். (௭௬)

* அனந்தரம்பொரற்குநீகொலந்தரம்மெனக்கெனத்
தனஞ்சயன்செயிர்த்தல்கண்டுதபனன்மைந்தன்மீளவு
முனைந்தபோரின்முடிதுணித்துன்முகசரோருகத்திரும்
சினந்தணிந்தரங்கபூசைசெய்வனென்றுசீறினன். (௭௭)

* அதிருகின்றவெழிலிபோலருச்சுனன்றனைக்குறித்
தெதிருகின்றவின்மைகண்டியாவருந்திகைக்கவே
முதிருகின்றமெய்யனுகிமுன்னிருந்த * கௌதம
னுதிருகின்றவமிர்தவிந்துவொக்குமென்னவுரைசெய்வான். (௭௮)

* சூதன்மைந்தன்வேலையேழுசூழுமேதினிக்கெலா
நாதன்மைந்தனுடன்வெகுண்டுநவிலுதற்குநண்ணுமோ
வேதமுண்டுசாலவென்னராசராசனிகலியக்
கோதமன்றனக்குளங்கொதிக்குமாறுகூறுவான். (௭௯)

* கற்றவர்க்குநலனிறைந்தகன்னியர்க்கும்வண்மைகை
யுற்றவர்க்கும்வீரரென்றுயர்ந்தவர்க்கும்வாழ்வுடைக்
கொற்றவர்க்குமுண்மையானகோதின்ஞானசரிதரா
நற்றவர்க்குமொன்றுசாதிநன்மைதீமையில்லையால். (௮௦)

* அரிபிறந்ததன்றுதூணிலரனும்வேயிலாயினன்
பரவையுண்டமுனியுமிப்பரத்துவாசன்மைந்தனு
மொருவையின்கண்முற்பிறந்ததொண்சரத்திலல்லவோ
யரியவென்றிமுருகவேளுமடிகளும்பிறந்ததே. (௮௧)

* என்றுநல்லவுரையெடுத்தியம்பியேனையிழிவினோ
டொன்றினின்றவாடகத்தையோடவைக்குமாறுபோ
லன்றுசூதன்மதலைதன்னையங்கராசனாக்கினன்
மின்றயங்குமுடிகவித்துவேந்தெலாம்வியக்கவே. (௮௨)

* தானிருந்தவரிமுகன்செய்தாள்சுமந்ததவிசின்மே
லூனிருந்தபடையினனையுடனிருத்திவண்டுசூழ்
தேனிருந்தமாலைவாகுசிகரிமீதுதெண்டிரைக்
கானிருந்தமண்டலங்கருத்தினாலிருத்தினன். (௮௩)

---

* இங்கே கௌதமனென்றது, கௌதமனுடைய பௌத்திரனாகியகிருபனை.

* தவனன்மைந்தனுஞ்சுயோதனனுமிமைந்துதனதனுஞ்
சிவனுமென்னநண்புகொண்டுதிறனுடன்சிறந்துளார்
பவனனும்பர்நாயகன்பயந்தவீரரஞ்சவே
யவனியெங்குநமதெனக்கொள்பெருமிதத்தராயினார். (அச)

* ஆனகாலையொன்றுகின்றவாயுதங்கள்யாவையும்
யானைவாசியிரதமானயானமுள்ளயாவையுஞ்
சேனையோடுதெவ்வரைச்செருக்கவல்லவீரமு
மானவீரர்வல்லரென்றுமறைவலானுமகிழ்வுற. (அரு)

* வம்பினாதிகுருகுலங்கழைக்கவந்தமைந்தர்கா
டம்பினாலேயெமக்களிக்கநின்றதக்கிணை
யெம்பினானொருத்தன்வேறுயாகசேனனென்றுளா
னும்பினாடியவனையிம்பர்நோதல்செய்துகொணர்மினே. (அசு)

* என்றுதன்சிலைப்புரோகிதன்கனன்றியம்பவே
யன்றவன்பதம்பணிந்தளித்தசொற்றலைக்கொளா
வென்றிநீடுபடைகளோடும்விரவுமங்கநாலொடுஞ்
சென்றுதங்கணாடகன்றுதெவ்வர்நாடுகுறுகினார். (அஎ)

* ஆளிமொய்ம்பரம்முனைக்கணானபோதனீகினித்
தூளிகண்புதைத்ததென்றுசெவிபுதைத்ததுவனிபோ
யோளிகொண்டசெம்பொன்வெற்பினுடல்புதைத்தவெழிலிபோல்
வாளிகொண்டவிருதர்மாமதிற்புறம்புதைக்கவே. (அஅ)

* வளைத்தசேனையானைவானின்வானினின்றுகுமுறவே
யுளைத்தெழுந்துமுனையைவிட்டுடன்றெழுந்தவேறுபோற்
றிளைத்ததன்பதாதியோடுமோகயாகசேனனு
மிளைத்தநெஞ்சனன்றிநீடுபுரிசைவாயிலேயினான். (அகூ)

* சோமகற்குமுடுகுசேனைசூழவந்தகுருகுலக்
கோமகற்கும்வெஞ்சமர்விளைந்ததாண்மைகூரவே
பூமகற்குமிக்கமாமுனிக்கும்வாய்மைபொய்த்தவம்
மாமகற்கும்விசயனுக்குமன்னுபோர்வயங்கவே. (கூ0)

* தூறுகொண்டுகணைபொழிந்துசோமகேசர்பொருதலா
னூறுகொண்டகுமரர்தங்கணைகரிமீளநோக்கினார்
மாறுகொண்டுவிசயன்வீசும்வண்ணவாளிவலையினால்
வீறுகொண்டெதிர்ந்தமன்விலங்கரீடுபட்டதே. (கூக)

* தகப்படுஞ்சராசனத்தனஞ்சயன்கைவாள்வெரீஇ
யிகப்படுந்தராதிபன்றனிற்றவில்லினாணினான்
மிகப்படுந்தடங்கொடேர்மிசைப்பிணித்துவிசையுட
னகப்படுஞ்செயற்கைசெய்துகுருவின்முன்னர்நண்ணினான். (கூஉ)

* முறுவல்கொண்டுகண்டசாபமுனியுநாணவெம்மைநீ
யுறுவதொன்றுமுணர்கலாதுரைத்தபுன்சொலறிதியே
மறுவிலந்தணாளன்யானுமன்னநீயும்வாசவன்
சிறுவன்வென்றுனைப்பிணித்தசிறுமையென்னபெருமையோ. (கக)

* அன்றெனக்குநீயியைந்தவவனிபாதியமையுமற்
றின்றுனக்குநின்றபாதியான்விரைந்துதருகுவன்
குன்றெனக்குவிந்திலங்குகொற்றவாகுவீரனே
யுன்றனக்குவேண்டுமென்னவுயிரும்வாழ்வுமுதவினான். (கச)

வேறு.

* புயங்கம்பருகியுமிழ்மதியம்போல்வான்மீண்டும்பூசுரன்றன்
வயங்குஞ்சுருதிவாய்மையினுன்மன்னுங்குருக்கள்பதிநீங்கிற்
தயங்குஞ்சிலைக்கைவாள்விசயன்சயமும்பிறர்முன்றனகப்பட்
டுயங்குஞ்செயலுநினைந்துநினைந்துள்ளஞ்சுடப்போயூர்சேர்ந்தான். (கரு)

* மறுகிற்பணிநித்திலந்தவழும்வளநாடுடையானெதிர்வணங்கி
முறுகிப்புரிவெங்கலைக்கோட்டுமுனியேபோலுமுனிவரரைத்
தறுகட்குருவின்றலைதுணிக்கத்தகவோர்மகவுந்தனஞ்சயன்றே
ளுறுகைக்கொருபூங்கன்னியையும்பெறுவான்வேண்டியுற்றிரந்தான். (கசு)

* ஆறுமுகனைப்பயந்தநதியலையாற்குளிர்வதொருகானி
லீறிறவத்தோறுபையாசன்யாசனெனும்பேரிருவோருங்
கூறுமுறைமையிற்சடங்கியற்றிக்கோவின்வழக்கப்பெருவேள்வி
நூறுமகத்தோனிகரரசைநோன்மைக்கிசையப்புரிவித்தார். (கஎ)

* புரிந்தமகப்பெற்றழல்வேள்விப்பொன்றுவோமப்பொருண்மிச்சிற்
பரிந்துவிபுதரமுதேய்ப்பப்பைம்பொற்கலத்தினிமைத்தாங்குத்
தெரிந்தமணிப்பூணவன்றேவிக்களிக்கத்தீண்டாளாகியபின்
சொரிந்துகனலிலுபையாசனிமைப்பிற்சுதனைத்தோற்றுவித்தான். (கஅ)

* வலையம்பிறழமுடிதயங்கமணிக்குண்டலம்பேரழகெறிப்பச்
சிலையுங்கையுமெய்யும்வயந்திகழ்போர்வயிரக்கவசமுமாய்க்
கொலைசெய்சிங்கக்குருளைபொலங்குன்றிற்புறத்துக்குதிப்பதுபோற்
றலைவன்களிக்கத்தடந்தேர்மேற்றநயனொருவன்றலைப்பட்டான். (கசு)

* தேரோடருக்கனருணன்மணிச்சிமயத்துதிப்பச்செவ்வியுட
னீரோடையிற்செந்தாமறைகணிறம்பெற்றலர்ந்துநின்றனபோல்
வீரோதயன்வந்துதிப்பளவின்மேன்மேன்மகிழ்ந்துமெய்களித்துப்
பாரோர்கண்கள்களித்தனவாற்பார்க்குந்தோறும்பரிவுற்றே. (க00)

* சங்கச்சங்கிமிகமுழங்கச்சாந்தும்புழுகுமெறிந்தார்த்துத்
துங்கக்கொடியுந்தோரணமுந்தொடையும்பரப்பிச்சேர்மகநா
டங்கச்சயந்தனவதரித்தவமராபதிபோலார்வமெழத்
திங்கட்குழவியுற்பவித்ததிசைபோன்றனவெண்டிசையெல்லாம். (க0க)

* பின்னுங்கடவுளுபயாசன்பெருந்தீப்புறத்துச்சுருவையினான்
மன்னுங்கடலாரமுதென்னவயங்குஞ்சுருதிவயநலத்தான்
மின்னுங்கொடியைநிகர்மருங்குல்வேய்த்தோண்முல்லைவெண்முறுவற்
பொன்னும்பிறந்தாள்கோகனகப்பூமீதெழுந்தபொன்போல்வாள். (௧0௨)

* மண்மேலொருத்தியரக்கர்குலமாளப்பிறந்தாள்பரமனுகற்
கண்மேலின்றிவள்பிறந்தாள்கழற்காவலர்தங்குலமுடிப்பா
ளெண்மேலென்கொலினியென்றுங்கெவருங்கேட்பவொருவார்த்தை
விண்மேலெழுந்ததவன்புரிந்தவேள்விக்களத்தினிடையம்மா. (௧0௩)

* முற்றோன்றியதங்குலமுதலான்முரட்போர்முனிக்குமுடிவுமவன்
பிற்றோன்றியவக்கன்னிகையால்விசயன்றனக்குப்பெருநலமு
முற்றோர்ந்துள்ளமிகத்தருக்கியுகந்தாங்கமைந்தானுயர்மகத்தாற்
பெற்றோன்பெற்றபேறுமகப்பெற்றார்தம்மிற்பெற்றோர்யார். (௧0௪)

* கரணமறுவற்றிலங்குதிறற்கலைசொல்பவர்பாற்கனலீந்தோன்
சரணமலர்தன்றலைக்கொண்டுசாற்றுங்கலைகளாய்ந்தறிவுற்
றாணிவலிவிற்றனிமறைநூலாற்றவுணர்ந்தமாதவர்பாற்
புரணமுறவேதெளிந்திருந்தான்போரிற்சினவெம்புலிபோல்வான். (௧0௫)

இவ்வாறமைந்திங்கிவனிருப்பவீரைம்பதின்மருடனவர்
மைவான்மீனிற்பலகோடிமன்வந்திறைஞ்சவாழ்ந்திடுநா
ளுய்வான்வியாதமுனியடைந்தேயுறைக்குந்தனதுதாய்பதத்திற்
கைவான்மலருஞ்சிரமுமுறப்பணிந்தேயிதனைக்கட்டுரைத்தான். (௧0௬)

துன்னுந்திருதராட்டிரற்குத்தோற்றும்புதல்வர்நூற்றுவரு
மன்னும்பாண்டுபூபாலன்வரத்தினுதித்தோரைவர்களு
மின்னுங்கருதற்கரியசமரியற்றற்கிருந்தாரிதனாலே
பன்னுங்குரவர்முதலெவரும்பகரும்பரிசுபழுதாமோ. (௧0௭)

நீயிங்கிருத்தறகாறுனதுநெறிசேர்மருகியார்களொடும்
போயங்கருத்தித்தவப்பள்ளிபுகுதனலனென்றுரைப்பளவிற்
றேயுங்கவலைப்பேரறிவிற்றிகழ்வாடுணுக்குற்றரசரெலாங்
காயம்பதத்திற்படத்தொழப்போய்க்கடுங்கானகத்தினடைந்தாளே. (௧0௮)

நவத்தின்மடவார்மூவரும்போய்நனிமிக்குயர்ந்தபெருங்கல்வித்
தவத்திற்குரவரருள்பெற்றுத்தயங்கிச்சில்நாள்வைகியபி
னவத்திற்பிறந்தேயிறந்துழலுமரியசலதிக்கரையேறிச்
சிவத்தினிடையேபோயடைந்தார்திரும்பாவிரும்பிற்றிகழ்நீர்போல். (௧0௯)

வேறு.

* பூதிநலந்திகழ்பூருகுலத்திற்
காதிபஞகியநங்கனைவென்றோ
னீதியினாலுநிறைந்தனனுண்ணா
லோதியகேள்வியுதிட்டிரனென்ன. (௧௧0)

* மைந்தருடன்செயல்வழுவறவெண்ணிக்
குந்திபயந்தருள்குரிசிலையிவனே
யிந்தநிலக்கிவனிளவரசென்றுங்
கந்தண்மதிக்குடைமுடியொடளித்தான். (ககக)

* சந்தனுவின்றனிமரபுதயங்கச்
செந்திருமேவருசிறுவனுமப்போ
திந்துவொடாதபனிருவருமன்பால்
வந்துதழீஇமெய்மயங்கினனொத்தான். (ககஉ)

தருமமுருக்கொடராபதிதானே
வருமுலகுக்கிளமன்னவனானன்
பெருமிதமுற்றதுபேருலகென்னு
வொருமையின்மன்னரும்யாருமுவந்தார். (ககங)

எங்குளவானவர்மாதவர்யாருந்
தங்களினன்புதயங்கமகிழ்ந்தார்
திங்களின்மாரிசிறந்தனவொன்னார்
பங்கயம்வெண்கதிர்பார்த்ததுபோன்றார். (ககச)

தன்மதியானுறுதாரணியெங்கு
மன்மதிநன்றெனவண்மைமகிழ்ந்தார்
துன்மதியானசுயோதனன்மாழ்கிப்
புன்மதிகொண்டுபொறாமையனானன். (ககரு)

வேறு.

மன்னியசுபலன்மகன்றனதிளவன்மாமதிபுரைந்தவெண்குடையான்
கன்னனுமிருந்தோரிரவினிற்சூழ்ச்சிகருதினர்குந்திதன்காளை
யின்னிலமதனுக்கிளவரசென்னுவேற்றமீந்தனனமதிறைவ
னன்னதுநமக்கிங்கபிமதமாமோவறைகுவீர்துணைவர்நீரென்றான். (ககசு)

பொறிப்படநாகமுயர்த்தவன்கூறப்பொருவறுசௌபலனுரைப்பான்
வெறிப்படுகுணத்தோன்வெறியனேயானன்விதுரனுமவர்வயமானன்
குறிப்பருங்குலத்திற்குரவனுஞ்சாபக்குரவனுங்கொடுமையிற்படார்ந்தார்
நெறிப்படுமுலகமைவர்பாலன்றிநின்வயமாகுமோவென்றான். (ககஎ)

மந்தரபுயத்தோயொன்னலர்தமக்குவணங்கிநீயவர்வழிபாடு
தந்தபினெந்தவிழல்கொடுவெல்வாய்தகுதியோவிதற்குடன்படுதன்
முந்துமெய்வலியுமாக்கமுமறமுமுயற்சியுமேன்மையுமுறையும்
பந்தமுந்துணையும்வென்றியுமிருந்தென்பயன்படார்க்கினியெனப்பணித்தான்.

என்றருண்மாமன்சகுனியாங்குரைப்பவிருந்ததுச்சாதனனெழுந்து
மன்றன்மார்பசையக்கைத்தலங்குவித்துமன்னநீபுகன்றதுநலனே
வென்றிகூருலகமைவரேபுரக்கவேந்துவந்தளித்தனனாகி
லின்றியாமிருந்துசெய்வதெத்தொழிலோவிரக்கமற்றிசைத்தவாநன்றே. ()

ஈண்டொருகழலையுடற்படிநெறுத்தேயெறிந்திடல்குரவர்தங்கடனு
மாண்டருமைவர்வலிபெறுமளவுமாற்றிடாதிரக்கமுற்றிருந்தா
யாண்டகைநின்போலறிஞராரினிமேலாகினுமவர்தமைக்கரவிற்
பூண்டுயிர்செகுத்துப்புவிகொளறுணிவாம்பொருவறுதிறலினோர்க்கென்றான்.

தம்பியாங்குரைத்தசொற்செவிபுகலுந்தரணிதந்தருள்சுதாகரனும்
வெம்பிநெஞ்சழன்றேதுவரிதழ்படைதப்பவேந்தனைநோக்கியீதுரைப்பான்
றம்பியின்குலங்கட்கரிவெருவுறுமேற்கரவினிற்றொலைப்பதாமெனதோ
ரம்பினாலவருயிரையுங்கவர்வனலிவந்துதிக்குமுன்யானே. (கஉக)

பொருந்தியவரவின்மெவ்விடமுடலிற்புகுந்ததென்றுணர்ந்தவப்பொழுதே, மருந்தின்மந்திரத்தின்மாற்றுவரன்றேன் மாய்க்குமென்றுணர்ந்துமொன்னலரை, வருந்திநண்பதுகொண்டவருடையேவல்வயத்தனுமாறுநீதுணிந்தாய், பெருந்திறல்வலியுமுற்றமுமெனதுபெருமையுமனம்வலித்திலையே. (கஉஉ)

வருநிலத்தரசர்தங்களிலெவரேவண்மையுமுண்மையுந்துணிந்து
பொருநிலத்தெவரும் புகழ்ந்திடச்செலுத்தும் பொற்புடையாண்மையும்வல்
குருநிலத்தரசரிளைஞர்நூற்றுவரிற்குலவினோர்யாவரேயெதிர்ந்தார் [லோர்
செருநிலத்துனக்குநிகரெவரரசர்தேவர்மற்றியக்கரின்மன்னோ. (கஉங)

சூட்டியவரிவில்லுதிட்டிரனிந்தப்புவனிகாப்பவனென்னிலையா
மீட்டினையடைந்தவிளைஞரும்யானுமேலினிப்புரிவதென்புகலாய்
காட்டினிலெறித்தநிலவுமாநதியிற்கரைத்ததிந்திருணியின்கனியு
நாட்டியபடியேயாயதென்வின்மைநானினிப்புகலுமாறெவனோ. (கஉச)

மதிமரபியற்கையாண்டகைக்குதித்தமைந்தனேயிளவரசன்றி
விதிமரபுதித்தோர்தமக்குளதாமோவெவ்வலியவன்வயிற்கண்டோ
நதிமரபினனும்விதுரனுங்குறித்தநவையுரைமறுக்கொணாதன்றே
பதிமரபியலும்பரிவுநீத்தவன்பாற்பாரளித்ததுவெனத்தெழித்தான். (கஉரு)

பாட்டளிதுதைந்துமுருகுகொப்பளிக்கும்பங்கயமாலையம்புயத்தோன்
மூட்டியகனல்போற்பொங்கியீதுரைப்பமுனையுறுதடக்கைவேலண்ணல்
வாட்டமுந்துயருமுனிவையுமொருவிவந்திருகரங்களாற்றழுவிக்
கோட்டியசிலையாயுலகெலாமுனதுகுடைநிழற்பொருத்துவன்கொதியேல். ()

எந்தநற்குரவர்விலக்கினுமைவரெதிர்ந்தமர்புரிகினுமவர்பா
னந்தமதிறைவன்பரிவுகூர்ந்திடினுநாள்சிறிதகலுமுன்னாக
முந்துதிட்டிரன்றனிளவரசுரிமைமுறைமையின்மாற்றியிவ்வுலகந்
தந்துனதொருவெண்குடைநிழலிடுவன்றவராசரதமீதென்றான். (கஉஎ)

வலம்புரிமாலைத்தராபதிமைந்தன்வழங்கியவாய்மைகேட்டளவி
னலம்புரிவினையமாதுலனுரைப்பானம்பிநீயவ்வகைதுணிந்தாற்
குலம்புரியரசன்பரிவுளானவர்பாற்குரவர்சொன்மறுத்தனன்றாகா [தான்.
தலம்புரிசிலையோய் சூழ்ச்சியொன்றுளதாலறைகுவன் கேட்டியென்றுரைத்

பூரணாகுதிசெய்வேள்விகளனைத்தும்புரிந்தவனப்புறம்போந்து
காரணாதிகத்தாற்சிலமொழிபுகன்றுகரைத்தவன்மனந்தனைத்திருத்தித்
தோரணாதிகஞ்சேரத்தினபுரியைத்துறந்துபாண்டவர்களுந்தாயும்
வாரணாவதத்திற்புகும்படியாக்கின்மைந்தநீவயத்தனாகுவையால். (கஉக)

அன்னவரந்தமாநகர்புகுந்தாலவனிபர்யாவருநினையே
மன்னவனாகக்கொள்குவரினியுன்வாழ்வுமேம்பாடுளதாமாற்
சொன்னபாண்டவரைச்சூழ்ச்சியிற்றொலைத்தேதுகளறுதம்பியரோடுங்
கன்னவென்றுரைக்குமுயிர்த்துணையோடுங்காசினிபுரக்கலாமென்றான். ([illegible])

திருந்துகாந்தாரதேயநாட்டரசன்செப்பியசூழ்ச்சியைமகிழ்ந்து
பொருந்துநால்வருமங்கொருமனதாகிப்புனிதமண்டபமகன்றெழுந்தே
தருந்தமதிருக்கைசார்ந்தனர்சிலநாடவிர்ந்தபின்னொருதினந்தமைமைப்
பெருந்திறலரசன்றனதுழையடைந்துபிடித்தவேற்சுயோதனனுரைப்பான்.

கொற்றவரரசேகொடியவனெனினுங்குலமதிலுதித்தமாமகனைப்
பெற்றவரிகழார்தந்தையேகடவுள்பிறிதிலையெனமறையெல்லாங்
கற்றவருரைத்தாரிவையெலாமுணர்ந்தோய்காதலர்தமையிழிவாக்கிப்
பற்றலர்தமக்குன்பதமெலாமளித்தல்பண்பிதேயடிகளுக்கென்றான். (கஙஉ)

மைந்தனங்குரைத்தவாசகமுணர்ந்துமன்னவனிருசெவிபுதைத்து
நுந்தமதெண்ணமிதுகொலோவெவருநொடித்திடாவாய்மைநீகரைத்தாய்
முந்துறவுதித்தோனுலகுகாத்தளிப்பமுறைவழாதவனுடன்முயங்கிச்
சந்ததமரசுபுரிவதினுளதோதம்பியர்க்குறுதிமற்றென்றான். (கஙங)

இருவிழிப்புல்லனுமின்றியுற்பவித்தவென்றனைப்பெரும்பொருளாக்கி
வருவழிமுறையான்மகுடமும்புனைந்துமாநிலமென்வயமாக்கிப்
பொருவழிவெருவார்நீறுநீறாக்கிப்புயவலிகொண்டரசளித்தான்
செருவழியுயர்ந்தபாண்டுபூபதியாஞ்செம்மலித்திரமுணராயோ. (கஙச)

வல்லவன்றானுயளியவென்றனுக்குமறைமுறைதிறம்பிடாவண்ண
மல்லுடன்பகலுமேவல்செய்தாற்றியான்புகலருண்மொழிமறாணய்ச்
செல்லுமன்றளவுமரசுசெய்வித்தான்சிறுவனின்றிறற்சிறுதாதை
யொல்லுமவ்வண்ணமுதிட்டிரன்றனக்கேயுவந்துநீவழிபடல்விதியே. (கஙரு)

மரபினியற்கைபழுதுறாதுயர்ந்தவானவர்நகைதரார்நமது
குரவருமகிழ்வர்மாநிலமெல்லாங்குறைவறத்தழைத்துமல்குறுமால்
விரவியதருமனென்னிலுங்கருணைவிளங்குறவுலகெலாநினக்கே
பரிவினிலுதவியுடன்கொடுபடர்வன்பகையறவொழுகுமினென்றான். (கஙசு)

தந்தையாங்குரைத்தசொற்செவிபுகலுந்தாழ்வில்காந்தாரிதன்புதல்வன்
சிந்தையுமந்தக்கரணமும்வேறுய்ச்செப்புவான்குருகுலத்தரசே
முந்தநீயரசுபுரிந்தனையந்தமுறையில்யானிளவரசன்றி
வந்தபாண்டவருக்கறன்கொலோவிந்தமாநிலம்வழங்குதலென்றான். (கஙஎ)

பரதனைமுதலாநங்குலத்தரசர்பார்புரந்தவர்தமக்குரிய
சரதமைந்தருக்கேதந்தனரன்றித்தன்கிளைஞருக்கெவரளித்தார்
விரதபூடணனும்வில்லுடைக்குருவும்வெவ்வலிவிதுரனுமவர்பாற்
கருதரும்பக்கபாதமாக்கரைத்தார்கண்டிலையையநீவிரகே. (கருஅ)

தருமனுக்கேவல்புரிந்துணவுவந்துதரிப்பதுதன்னினும்வனத்திற்
கருமமற்றயுர்ந்தவிருடியரேவற்கருதிதானியற்றுதனலனே
பொருமணிமுடியுங்கவிகையுமணியும்பொற்புறுதுகிலுநல்லுணவுந்
தருமலர்ச்சடையுந்தண்டமுநூலுங்காவியுந்தவமுமேயென்றான். (கருக)

அன்னவனுரைத்தநீர்மைகேட்டரசனருளுளக்கருத்துவேறுகி
மின்னுறழ்படையாய்நின்னுளமிதுவென்றுணர்ந்திலேன்மேதினிதனக்கு
மன்னிளவரசாயுதிட்டிரன்றன்னைவைத்தனன்வாய்மைநான்வழுவே
னென்னினிப்புரிதலுரைத்திநீயென்றானிவனவனிதமுறமொழிவான். (கசo)

கொற்றவரெவரும்பகைஞருமிந்தக்குவலயத்தோர்களுங்குந்தி
பெற்றநற்சுதரும்வந்தெனைவணங்கப்பெருநிலம்புரந்திடவல்லேன்
கற்றவான்கலைதேர்சகுனியுமிகுபோர்க்கன்னனுஞ்சிலைக்குருமகனுஞ்
சுற்றமுமிளைஞர்பலருமென்றனக்குத்துணையுளரினித்துணைவேண்டேன். ()

ஆதலாலந்தவுதிட்டிரன்முதலாமைவருமவரையீன்றவளுங்
கோதிலாநமதுபதியிடையிருத்திற்கொற்றவரென்வயமாகார்
காதலானழைத்துநன்மொழிபுகன்றுகடன்முறைதந்தையர்க்காற்றப்
போதலாங்கென்றுவாரணாவதத்திற்புகும்படிசெய்கநீயென்றான். (கசஉ)

அரவவெங்கொடியாய்பாண்டவரவ்வூரடைந்திடிலருஞ்சிலைக்குருவுங்
குரவனுமினியகிருபனுமாசான்குமரனும்விதுரனுங்குறிக்கு
மரசர்கள்பலருமவருடனகல்வாரவரிலாதிவணரசாகா
விரவுமிங்கிதனுக்கென்செய்வேனென்றான்மீளவுஞ்சுயோதனனுரைப்பான். ()

விதுரனின்றனைவிட்டகன்றிடானந்தவீடுமனவருடன்செல்லான்
சதுமறைக்குறியோன்வீடுமனிருந்ததலத்தைவிட்டகன்றிடான்கிருபன்
மதுரவாசரியன்றனைவிடுத்தகலான்மறையவன்மகனெனைநீங்கான்
புதுமதிக்குடையோயைவரையயம்போக்கினிபோக்குகவென்றான். (கசச)

கருத்துறவுரைத்தமகன்மொழிப்படிக்கேகண்ணிலாவரசுளம்பொருந்தி
வருத்தமுந்துயருமொருவியிவ்வண்ணம்வழுவறப்புரிவனென்றமைந்தான்
றிருத்தகுமெண்ணமுடிந்ததென்றரசன்சிறுவனுமகிழ்ந்துதனந்தப்
புரத்திடைபுகுந்தானிவ்வயிற்சிலநாள்போயதுபுலப்படவம்மா. (கசரு)

வேறு.

கருதருமோர்தினங்கண்ணிலாதவன்
பொருவறுபேரவைப்புறத்திளெய்தியே
குருவொடுகுரவனுங்குறித்ததம்பியு
மருகுறவைவரையழைத்துக்கூறுவான். (கசசு)

மன்னுடைக்குலத்தினுமறைக்குலத்தினும்
பின்னுடைக்குலத்தினும்பிறந்துளார்களி
லென்னுடையருங்குலத்தெம்பிபோல்பவ
ரின்னிலக்குலத்துளோர்யாருமில்லையால். (கசஎ)

மற்றவனிருந்தெனைமன்னனுக்கினு
னிற்றவன்கடன்செயவுயிர்விடுத்திலேன்
செற்றனனவனெனச்செப்பும்வாய்மொழி
புற்றுறழென்செவிபொறுத்ததாங்கலோ. (கசஅ)

மதியினிற்றன்பமுமாசுமெய்தினும்
விதியினைத்தடுத்தவர்விளம்பவில்லையாற்
றுதியினிற்சிறந்தவன்றொலைவனோவெனக்
கதியினிற்கலுழிகள்கண்ணினீட்டினான். (கசகூ)

தேறினான்மீளவுந்தியங்குதுன்பமு
மாறினான்மைந்தரைவயங்கநோக்கினான்
வீறினானுந்தைதான்விளங்குநற்கதி
யேறினனென்பதற்கையமில்லையால். (கரு0)

தந்தவன்றனக்கினித்தநயனாற்றுதன்
முந்தியகடன்முறைவழாதியற்றலே
யந்தநல்லுரையினீரரியகங்கையாந்
தொந்தமாநதிக்கரைதோற்றுமோர்நகர். (கருக)

வேறு.

* ஆரணாதியராரும்புகழ்வது
நாரணாதியர்நண்ணுஞ்சிறப்பது
தோரணாதிதுலங்குபொற்கோபுர
வாரணாவதமாநகரங்கணே. (கருஉ)

அந்தமாநகர்வைகினுமன்னையோ
டுந்தையார்களியுய்த்திடவோமமுஞ்
சந்தியானந்தவந்தருமங்கடன்
முந்தியாற்றிமுறையிற்பயிலுவீர். (கருங)

அன்னபான்மையினாற்றிடின்மாமறை
சொன்னநீதிதொடுத்தவராகுவீ
ரின்னுமென்னுளமெய்துமகிழ்வென
மன்னனோதமகிழ்ந்தொருமித்தனர். (கருச)

தந்தைகூறுதறக்கதமக்கென்
மைந்தரோதியமன்னனும்வீடும
னந்தணாளரியாவருமாசிக
டந்துவாழ்த்தச்சரண்புனைந்தேகினான். (கருரு)

* புகன்றகேள்விப்புரோசனன்றன்னையிம்
மகன்றனக்கினிமந்திரியாக்கியே
யிகன்றவர்ச்செற்றினியோர்க்கினிமைசெய்
தகன்றஞாலமிவன்வழியாக்குவாய். (கருசு)

என்றுகூறிவிடுத்தனரிங்கிவ
ரன்றுதாயொடுமந்நகர்நீங்கியே
சென்றுளார்திரியோதனன்சேர்ந்தவண்
பொன்றுதியபுரோசனுக்கோதுவான். (கருஎ)

மற்றுநீசென்றுமன்னவர்நண்பனா
யுற்றரக்கினுயர்மனையொன்றுசெய்
திற்றுநீங்கவிவர்க்கிடர்முற்றிடிற்
கொற்றஞாலங்கொடுப்பனினக்கென்றான். (கருஅ)

நண்பிலுலவனன்றென்றிசைந்தெழீஇப்
பண்புகொண்டிவரோடுபடர்ந்திட
மண்புரந்துளர்வந்துவணங்கிடத்
தண்புரங்கடந்தேகினர்தக்கவர். (கருகூ)

விதுரன்வந்துவிளம்பினனேர்மொழி
சதுரின்விஞ்சுதராபதிமைந்தனாற்
பிதிருந்தீமைபிறப்பதுதிண்ணமா
மதிரும்வார்கழன்மைந்தரறிமினோ. (ககூ0)

என்றுகூறியிவன்பதிமீண்டனன்
வென்றியைவருடன்வருவேந்தரை
யன்றுநன்மொழிகூறியகற்றியே
சென்றபோதிற்றிருநகர்வைகுவோர். (ககூக)

கரியமாவிற்கருணைதழைத்தவர்
புரியைநீங்கிப்புகுஞ்செயனோக்கியே
பிரியுமாறுபெறுகிலர்வேந்தனை
யரியநெஞ்சிடைநொந்தனராருமே. (ககூஉ)

வஞ்சகங்கண்மலிந்தனவோவென்பார்
நெஞ்சகங்கொடியிர்ப்பினைநீட்டுவார்
கொஞ்சமன்றிதுகொற்றவன்மைந்தர்கள்
சஞ்சலத்திற்சமைத்தவிரகென்பார். (ககூஙு)

குந்திமைந்தர்குறித்திவண்மீண்டினி
யெந்தநாளிலெதிர்ப்படுவோமென்பார்
நந்தமாநகர்நாளுஞ்செய்தீவினை
யிந்தமைந்தரைநீக்கிற்றிதோவென்பார். (ககூச)

மன்னுடைக்குலத்தினுமறைக்குலத்தினும்
பின்னுடைக்குலத்தினும்பிறந்துளார்களி
லென்னுடையருங்குலத்தெம்பிபோல்பவ
ரின்னிலக்குலத்துளோர்யாருமில்லையால். (கசஎ)

மற்றவனிருந்தெனைமன்னனுக்கிணை
னிற்றவன்கடன்செயவுயிர்விடுத்திலேன்
செற்றனனவனெனச்செப்பும்வாய்மொழி
புற்றுறழெழன்செவிபொறுத்ததாங்கலோ. (கசஅ)

மதியினிற்றுன்பமுமாசுமெய்தினும்
விதியினைத்தடுத்தவர்விளம்பவில்லையாற்
றுதியினிற்சிறந்தவன்றொலைவனோவெனக்
கதியினிற்கலுழிகள்கண்ணினீட்டினான். (கசகூ)

தேறினான்மீளவுந்தியங்குதுன்பமு
மாறினான்மைந்தரைவயங்கநோக்கினான்
வீறினானுந்தைதான்விளங்குநற்கதி
யேறினானென்பதற்கையமில்லையால். (கரு0)

தந்தவன்றனக்கினித்தநயனாற்றுதன்
முந்தியகடன்முறைவழாதியற்றலே
யந்தநல்லுரையினீரரியகங்கையாந்
தொந்தமாநதிக்கரைதோற்றுமோர்நகர். (கருக)

வேறு.

* ஆரணாதியராரும்புகழ்வது
நாரணாதியர்நண்ணுஞ்சிறப்பது
தோரணாதிதுலங்குபொற்கோபுர
வாரணாவதமாநகரங்கணே. (கருஉ)

அந்தமாநகர்வைகினுமன்னையோ
டுந்தையார்களியுய்த்திடவோமமுஞ்
சந்தியானந்தவந்தருமங்கடன்
முந்தியாற்றிமுறையிற்பயிலுவீர். (கருங)

அன்னபான்மையினாற்றிடின்மாமறை
சொன்னநீதிதொடுத்தவராகுவீ
ரின்னுமென்னுளமெய்துமகிழ்வென
மன்னனேதமகிழ்ந்தொருமித்தனர். (கருச)

தந்தைகூறுதறக்கதமக்கென்
மைந்தரோதியமன்னனும்வீடும
னந்தணாளரியாவருமாசிக
டந்துவாழ்த்தச்சரண்புனைந்தேகினான். (கருரு)

* புகன்றகேள்விப்புரோசனன்றன்னையிம்
மகன்றனக்கினிமந்திரியாக்கியே
யிகன்றவர்ச்செற்றினியோர்க்கினிமைசெய்
தகன்றஞாலமிவன்வழியாக்குவாய். (கருசு)

என்றுகூறிவிடுத்தனரிங்கிவ
ரன்றுதாயொடுமந்நகர்நீங்கியே
சென்றுளார்திரியோதனன்சேர்ந்தவண்
பொன்றுதியபுரோசனுக்கோதுவான். (கருஎ)

மற்றுநீசென்றுமன்னவர்நண்பனா
யுற்றரக்கினுயர்மனையொன்றுசெய்
திற்றுநீங்கவிவர்க்கிடர்முற்றிடிற்
கொற்றஞாலங்கொடுப்பனினக்கென்றான். (கருஅ)

நண்பினாலவனன்றென்றிசைந்தெழீஇப்
பண்புகொண்டிவரோடுபடர்ந்திட
மண்புரந்துளர்வந்துவணங்கிடத்
தண்புரங்கடந்தேகினர்தக்கவர். (கருகூ)

விதுரன்வந்துவிளம்பினனோர்மொழி
சதுரின்விஞ்சுதராபதிமைந்தனாற்
பிதிருந்தீமைபிறப்பதுதிண்ணமா
மதிரும்வார்கழன்மைந்தரறிமினே. (கசுO)

என்றுகூறியிவன்பதிமீண்டனன்
வென்றியைவருடன்வருவேந்தரை
யன்றுநன்மொழிகூறியகற்றியே
சென்றபோதிற்றிருநகர்வைகுவோர். (கசுக)

கரியமாலிற்கருணைதழைத்தவர்
புரியைநீங்கிப்புகுஞ்செயனோக்கியே
பிரியுமாறுபெறுகிலர்வேந்தனை
யரியநெஞ்சிடைநொந்தனராருமே. (கசுஉ)

வஞ்சகங்கண்மலிந்தனவோவென்பார்
நெஞ்சகங்கொடுயிர்ப்பினைநீட்டுவார்
கொஞ்சமன்றிதுகொற்றவன்மைந்தர்கள்
சஞ்சலத்திற்சமைத்தவிரகென்பார். (கசுங)

குந்திமைந்தர்குறித்திவண்மீண்டினி
யெந்தநாளிலெதிர்ப்படுவோமென்பார்
நந்தமாநகர்நாளுஞ்செய்தீவினை
யிந்தமைந்தரைநீக்கிற்றிதோவென்பார். (கசுச)

உற்றமாநகருள்ளவரிவ்வணஞ்
சுற்றிநின்றுதுயர்க்கடல்சார்தல்கண்
டொற்றைவெண்குடையானன்மையோதியே
பெற்றனன்விடைபேரறன்மைந்தனே. (கசுரு)

* ஆரமார்புடையைவருங்குந்தியும்
பூரநாமப்புரோசனனுமனுஞ்
சேரவெண்பிறைச்செஞ்சடைவானவன்
வாரணாவதஞ்சென்றுவணங்கினர். (கசுசு)

தந்தைதீர்ந்தகல்போதிற்றருமனுக்
கைந்துமூன்றுடனொன்றெனுமாண்டதாம்
வந்ததம்பியரோரோர்வருடமே
பிந்தினரெனப்பேசுதலுண்மையே. (கசுஎ)

மன்னன்மாநகரிற்பதின்மூன்றெனச்
சொன்னவற்சரம்வைகித்தொலைத்தபி
னன்னபங்குனிப்பூருவத்தட்டமி
தன்னிலீசன்றனிநகர்ச்சார்ந்தனர். (கசுஅ)

* அங்கவன்றனருள்பெற்றன்மச்சனு
ரிங்கிதத்தோடியற்றியநீள்கொடி
மங்குலுறுயமணிமாளிகையெய்தினர்
சங்கம்விம்மமுரசந்தழங்கவே. (கசுகூ)

* ஆவியன்னவமைச்சன்மொழிப்படி
மேவியத்திசைவேந்தர்குலந்தொழக்
கோவினாணைநடக்கக்குவலயத்
தேவிமெய்களிக்கச்சிறந்தாரரோ. (கஎ0)

வேறு.

* மன்னரைவரும்வாரணாவதந்தனின்மருவித்
துன்னலார்தொழத்தொன்னிலம்புரந்திடுநாளிற்
பின்னநெஞ்சுடைபுரோசனன்பேதுறுமதியான்
முன்னமேயினிதமைத்திடுமனைச்செயன்முன்னா. (கஎக)

* மெழுகினானமக்காலயம்வகுத்ததும்விரகே
யொழுகுகின்றதனொழுக்கமும்வஞ்சனையொழுக்கே
யெழுகடற்படையாவையுமிவன்வழியனவே
தொழுதகையுளும்படையுளசூழ்ச்சியும்பெரிதால். (கஎஉ)

* சங்கையுண்டினியுண்டியுஞ்சாந்தமும்பூணும்
பொங்குநுண்ணிழைத்துகிலுமந்தாமமும்பூவு
மிங்கிவன்பரிந்தியற்றியகோடலமென்றார்
கங்கைநீர்தவழ்கழனிசூழ்பழனநாடுடையார். (கஎங)

* ஐயமுற்றிவரிருப்புழிமயனினுமதிகன்
சையமொத்ததோட்பலனுடைத்தபதியனொருவன்
வையமுற்றிடைவீமனையொருதனிவணங்கி
யைப்பட்டதையறிந்தருளாமுறையென்றான். (களச)

* நுந்தையேவலிற்கனமிகநூதனமாக
விந்தமாநகர்த்திருமனையியற்றிடுநாளில்
வந்தமந்திரிவஞ்சனையறிந் * தறன்வடிவாந்
தந்தையென்னையுமேவினன்றன்மையினுணர்ந்தே. (களடு)

* அடியனேனுமற்றவருடனரக்குமாளிகையிற்
படியினுலியற்றியதொழிற்பயனெலாங்குறித்து
நெடியகானகத்தளவுநீணிலவறைநெறிபோய்
முடியுமாறொருமண்டபங்கோட்டினேன்முழைபோல். (களசு)

வேறொருத்தருமறிவுறாவிரகினாலொருதூண்
மாறுபட்டுநீபறிக்கலாம்வழிவழிவகுத்தேன்
றேறுதற்கிதுதகுமெனத்திருவுளத்தடக்கி
யூறுபட்டபோதெழுந்தருள்கெனப்பணிந்துரைத்தான். (களஎ)

* தச்சரிற்பெருந்தலைவனுக்குரிமையிற்றுங்கள்
பிச்சரிற்கொடுத்தவன்விடைகொண்டதன்பின்ன
ரச்சமற்றிவனம்மனைக் § கம்மனைவழங்கி
நிச்சமின்றுகொலின்றுகொலெனநினைத்திருந்தான். (களஅ)

* விடவினன்சினைநெடுங்கொடிதழுவலின்மிடைந்த
வடவியெங்கணும்வேட்டையாற்றங்கள்பேராண்மை
நடவிநன்பகலிரவுகண்டுயிலறநடந்தார்
புடவிதங்கள்வெண்குடைநிழற்குளிருமாபுரப்போர். (களகூ)

* பாந்தளோடொருமனைவயிற்பயில்பவர்போல
வேந்தரைவருமந்திரவலியினான்மிக்கோர்
காந்துநெஞ்சுடையமைச்சனைக்கைவிடாரணுகித்
தாந்தமெய்யெனவுயிரெனத்தனித்தனிச்சார்ந்தார். (கஅ௦)

* ஆங்கொர்கங்குலிலழைத்துநீடரசியலுசாவி
யீங்குநீதுயில்வைகுதியெம்முடனென்னப்
பாங்கர்மெல்லணைப்பள்ளியும்பரிவுறவழங்கித்
தாங்களும்பொலஞ்சேக்கையிற்றங்கினர்மாதோ. (கஅக)

* உணர்வறத்துயிலுற்றபோதற்றமங்குணர்ந்த
துணைவரைத்திருத்தாய்பதந்தொழுகெனச்சொல்லி
யணிகொள்கோயிலைத்தாதைநண்பனுக்கிரையளித்தா
னிணையிலாவிரலூரகவான்பதியடைந்திருந்தோன். (கஅஉ)

---

* அறன்வடிவாந்தந்தையென்றது விதுரனை. § அம்மனை - அக்கினி கிருபீட யோனியென்னும் வடமொழியைநோக்கி இவ்வாறு கூறினர்.

* முடியுண்டந்நடங்கிரியினைமுளிக்கழைதொறுமுற்
றடிநிலத்துறச்சூழ்வருமாறுபோலழலோன்
கொடிநிரைத்தபொற்கோபுரப்புரிசைசூழ்கோவி
லிடியிடித்தெனவெடிபடச்சிரித்தெழுந்தெரித்தான். (கஅ௲)

* அக்கணத்தினிலன்னையிலனுகியாங்கவரைத்
தொக்கசித்திரத்தூணடித்துவாரமேவழியாப்
பொக்கனக்கொடுபோயகல்வனத்திடைபுகுந்தான்
முக்கணற்புதன்முனிந்தவூர்மூவரோடொப்பான். (கஅச)

* புரிந்ததீயினைக்கண்ணினீர்விட்டிடப்புகுந்து
பரிந்தநெஞ்சினைமீண்டுமெப்பாவகன்சுடவே
கரிந்தகோவிலிற்காரிருள்புலந்தபின்கண்டோ
ரெரிந்துவீழ்ந்தனரைவருமியாயுமீண்டென்றார். (கஅரு)

* விருந்தராய்விடையவராம்வேடருந்தாயு
மிருந்துதீமதியமைச்சனேடிறந்தமையுணராத்
திருந்துமாமதிப்பாண்டவர்செயலுமற்றறியார்
வருந்தினார்தமவுயிரிழந்தெனப்புவிமன்னர். (கஅசு)

* போதுபட்டிருள்புகுந்தபொன்வானகம்போல
மாதுபட்டபார்மடைந்தைதன்மதிமுகமழுங்கத்
தீதுபட்டனகுருகுலச்செல்வமென்றிரங்கி
யேதுபட்டனமுனிவரர்முதலினோரிதயம். (கஅஎ)

* கொற்பனற்சுடவிறந்தமைகேட்டலுங்குருக்க
¶ டட்பதத்துடனழுதிடுஞ்சுயோதனன்முதலோ
ருட்பனித்துமேல்வெயிலுறவெதும்புநீரொத்தார்
பெட்புறப்புவிமுழுவதும்பெருங்கருத்துடையோர். (கஅஅ)

* பொன்னலங்கொளமெழுகினாலாலயம்புனைந்து
துன்னருங்கதைப்படைமருச்சுதனையேசுடுவா
னென்னவாண்மைகொலெண்ணினனெண்ணினுஞ்சுடுமோ
வன்னிதன்பெயர்மருச்சுதனென்பதுமறந்தே. (கஅகூ)

வாரணவதச்சருக்க முற்றிற்று.

ஆ. செய்யுள் - கஙசரு.

---

¶ டட்பதம் - தீதாகிய வியாசம்.

# வேத்திரகீயச்சருக்கம்.

* தோள்கரம்புறந்தன்னிலனையுந்துணைவர்நால்வருந்தொக்குவைகவே
கோள்கரந்தபஃறலையராவெனக்கூனிநீணெறிக்கொண்டுபோனபின்
றாள்களின்கதித்தாள்பறிந்துவீழ்தருவனத்திலோர்சாரன்மன்னினான்
மூள்கொடுங்கடுஞ்சினவுகன்றமாமும்மதக்களிறனையமொய்ம்பினான். (க)

* அவ்வனத்தில்வாழரமடந்தையென்றையமெய்த்தவோரடலரக்கிவந்
திவ்வனத்திலிங்ஙனின்யாமநீயென்கொல்வந்தவாறிவர்கள்யாரெனச்
செவ்வனத்திதழ்க்கூரெயிற்றெழுந்தெண்ணிலாவினிற்றிமிரமாறவே
வெவ்வனற்சுடர்க்கொத்தவோதியாள்வீமசேனனோடுரைவிளம்பினாள். (உ)

யானும்வந்தவாறுரைசெய்கேனுனக்குரைசெய்நீயெனக்கியார்கொலென்னலுந்
தானுமன்னவன்றன்னொடோதினாடமுழுவுமாதரந்தங்குசிந்தையா
லூனுகர்ந்துதின்றிடுமிடும்பனென்றொருவனிங்கிராவணியையொத்துளான்
மானுடங்கொண்மெய்க்கந்தமூர்தலால்வரவறிந்தனன்வாளரக்கனே. (௩)

* எம்முனேவலால்யான்மலைந்திடற்கெய்தினேனினிக்கொன்றுமென்பய
னம்மவெற்பிரண்டனையபொற்புயத்தழகெறிக்குநீடார்வமார்பகேள்
கொம்மைமாமுலைத்தெரிவையர்க்குளங்கூசுமாசைநோய்கூறுகிற்பதென்
றெம்மனோர்களுஞ்சொல்வர்யானுனக்கெங்ஙனேகொலாமிறுதிகூறுவேன். (ச)

பெருஞ்சுழிப்படக்கரைபுரண்டெழப்பெருகுமாறுபின்பிறழ்கலங்கல்போ
யருஞ்சுவைப்படுந்தெளிவினோடுசென்றாழிவேலைவாயணையுமாறெனப் [விந்
பெருஞ்சினத்துடன் கொன்றுதின்றிடப் பொருதருந்தொழிற்பேதைநான்மெ
திருந்திசைச்சுரும்பிசைகொண்மாலையாயின்பமாலுழந்துன்னையெய்தினேன்.

* நீடியிங்குநானிற்கின்மாரனாநிருதனிற்கவந்நிருதன்வெம்மையோ
டோடிவந்தெனைக்கொல்லுமும்மையுமொருகணத்திலேயுயிர்செகுத்திடு
நாடியென்கொன்மற்றுய்ந்துபோகலாநம்பியென்னைநீநலனுறத்தழீஇக்
கோடியம்பரத்திடையெழுந்துனைக்கொண்டுபோவலோர்குன்றிலென்னவே. ()

* இரக்கமின்றியேதனிவனத்திலேயிளைஞரெம்முன்யாயிவரைவிட்டிடைமைப்
புரக்கவல்லனென்றொருமடந்தைபின்போவதாடவர்க்காண்மைபோதுமோ
வரைக்கண்வாழ்வுகூரெம்முனும்முனோன்மலையவெண்ணிமேல்வந்தபோதுபா
ரரக்கனாகிலென்னவுணனாகிலெனவனையோர்கணத்தாவிகொள்வனே. (எ)

* இடும்பிதன்மனங்கொண்டகாலையிங்கிவையியம்புமவ்வயினிடும்பனுங்
கொடும்பெருஞ்சினங்கதுவுகண்ணினன்குருதிநாறுபுன்கூரெயிற்றின
னுடம்புபெற்றதோரிருண்முகத்திலேயோரிரண்டுவெஞ்சுடருதிக்கவு
நெடும்பிறைக்கொழுந்தோரிரண்டுவானிலவெறிக்கவுநின்றநீர்மையான். (அ)

* முடியுண்டத்தடங்கிரியினைமுளிக்கழைதொறுமுற்
றடிநிலத்துறச்சூழ்வருமாறுபோலழலோன்
கொடிநிரைத்தபொற்கோபுரப்புரிசைசூழ்கோயி
லிடியிடித்தெனவெடிபடச்சிரித்தெழுந்தெரித்தான். (௧௮௩)

* அக்கணத்தினிலன்னையிலணுகியாங்கவரைத்
தொக்கசித்திரத்தூணடித்துவாரமேவழியாப்
பொக்கனக்கொடுபோயகல்வனத்திடைபுகுந்தான்
முக்கணற்புதன்முனிந்தவூர்மூவரோடொப்பான். (௧௮௪)

* புரிந்ததீயினைக்கண்ணினீர்விட்டிடப்புகுந்து
பரிந்தநெஞ்சினைமீண்டுமப்பாவகன்சுடவே
கரிந்தகோயிலிற்காரிருள்புலந்தபின்கண்டோ
ரெரிந்துவீழ்ந்தனரைவருமியாயுமீண்டென்றார். (௧௮௫)

* விருந்தராய்விடையைவராம்வேடருந்தாயு
மிருந்துதீமதியமைச்சனோடிறந்தமையுணராத்
திருந்துமாமதிப்பாண்டவர்செயலுமற்றறியார்
வருந்தினார்தமவுயிரிழந்தெனப்புவிமன்னர். (௧௮௬)

* போதுபட்டிருள்புகுந்தபொன்வானகம்போல
மாதுபட்டபார்மடைந்தைதன்மதிமுகமழுங்கத்
தீதுபட்டனகுருகுலச்செல்வமென்றிரங்கி
யேதுபட்டனமுனிவரர்முதலினோரிதயம். (௧௮௭)

* கொற்பனற்சுடவிறந்தமைகேட்டலுங்குருக்க
¶ டெட்பதத்துடனழுதிடுஞ்சுயோதனன்முதலோ
ருட்பனித்துமேல்வெயிலுறவெதும்புநீரொத்தார்
பெட்புறப்புவிமுழுவதும்பெருங்கருத்துடையோர். (௧௮௮)

* பொன்னலங்கொளமெழுகினாலாலயம்புனைந்து
துன்னருங்கதைப்படைமருச்சுதனையேசுடுவா
னென்னவாண்மைகொலெண்ணினனெண்ணினுஞ்சுடுமோ
வன்னிதன்பெயர்மருச்சுதனென்பதுமறந்தே. (௧௮௯)

வாரணாவதச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள் - ௧௱௪௫.

---

¶ துட்பதம் - தீதாகிய வியாசம்.

உ

# வேத்திரகீயச்சருக்கம்.

* தோள்கரம்புறந்தன்னிலனையுந்துணைவர்நால்வருந்தொக்குவைகவே
கோள்கரந்தபஃறலையராவெனக்கூனிநீணெறிக்கொண்டுபோனபின்
முள்களின்கதித்தாள்பறிந்துவீழ்தருவனத்திலோர்சாரன்மன்னினான்
மூள்கொடுங்கடுஞ்சினவுகன்றமாமும்மதக்களிறனையமொய்ம்பினான். (௧)

* அவ்வனத்தில்வாழரமடந்தையென்றையமெய்தவோரடலரக்கிவந்
திவ்வனத்திலிந்நளின்யாமநீயென்கொல்வந்தவாறிவர்கள்யாரெனச்
செவ்வனத்திதழ்க்கூரெயிற்றெழுந்தெண்ணிலாவினிற்றிமிரமாறவே
வெவ்வனற்சுடர்க்கொத்தவோதியாள்வீமசேனனோடுரைவிளம்பினாள். (௨)

யானும்வந்தவாறுரைசெய்கேனுனக்குரைசெய்நீயெனக்கியார்கொலென்னலுந்
தானுமன்னவன்றன்னொடோதினாடழுவுமாதரந்தங்குசிந்தையா
லூனுகந்துதின்றிடுமிடும்பனென்றொருவனிங்கிராவணியையொத்துளான்
மானுடங்கொண்மெய்க்கந்தமூர்தலால்வரவறிந்தனன்வாளரக்கனே. (௩)

* எம்முனேவலால்யான்மலைந்திடற்கெய்தினேனினிக்கொன்றுமென்பய
னம்மவெற்பிரண்டனையபொற்புயத்தழகெறிக்குநீடார்வமார்பகேள்
கொம்மைமாமுலைத்தெரிவையர்க்குளங்கூசுமாசைநோய்கூறுகிற்பதென்
றெம்மனோர்களுஞ்சொல்வர்யானுனக்கெங்ஙனேகொலாமிறுதிகூறுவேன். (௪)

பெருஞ்சுழிப்படக்கரைபுரண்டெழுப்பெருகுமாறுபின்பிறழ்கலங்கல்போ
யருஞ்சுவைப்படுந்தெளிவினோடுசென்றூழிவேலையணையுமாறெனப் [லிங்
பெருஞ்சினத்துடன் கொன்றுதின்றிடப் பொருதருந்தொழிற்பேதைநான்மெ
திருந்திசைச்சுரும்பிசைகொண்மாலையாயின்பமாலுழந்துன்னையெய்தினேன்.

* நீடியிங்குநானிற்கின்மாரனுநிருதனிற்கவந்நிருதன்வெம்மையோ
டோடிவந்தெனைக்கொல்லுமும்மையுமொருகணத்திலேயுயிர்செகுத்திடு
நாடியென்கொன்மற்றுய்ந்துபோகலாநம்பியென்னைநீநலனுறத்தழீஇக்
கோடியம்பரத்திடையெழுந்துனைக்கொண்டுபோவலோர்குன்றிலென்னவே. ()

* இரக்கமின்றியேதனிவனத்திலேயிளைஞரெம்முன்யாயிவரைவிட்டெமைப்
புரக்கவல்லளென்றொருமடந்தைபின்போவதாடவர்க்காண்மைபோதுமோ
வரைக்கண்வாழ்வுகூரெம்முனும்முனோன்மலையவெண்ணிமேல்வந்தபோதுபா
ரரக்கனாகிலென்னவுணனாகிலெனவனையோர்கணத்தாவிகொள்வனே. (௭)

* இடும்பிதன்மனங்கொண்டகாளையிங்கிவையியம்புமவ்வயினிடும்பனுங்
கொடும்பெருஞ்சினங்கதுவுகண்ணினன்குருதிநாறுபுன்கூரெயிற்றின
னுடம்புபெற்றதோரிருண்முகத்திலேயோரிரண்டுவெஞ்சுடருதிக்கவு
நெடும்பிறைக்கொழுந்தோரிரண்டுவானிலவெறிக்கவுநின்றநீர்மையான். (௮)

* இடிபடத்தெழுந்தெழிலிமின்னுமாறென்னநீடுகுன்றெதிரொலிக்கவே
வெடிபடச்சிரித்திருபுறத்துநாமிளிரவுட்புகைந்தொளிரும்வாயினு
னெடிபடுத்தவெங்கானமெங்கணுநிழல்படுத்திவானுறநிமிர்ந்துளான்
கொடிபடுத்தநுண்ணிடையிடும்பியைக்கூவியவ்விடைக்குறுகினனரோ. (க)

* உணவினசையிற்கொல்லவந்தநீயுவகையாசையாலுள்ளழிந்திவன்
கணவனுமெனக்காதலிப்பதேகங்குல்வாணர்தங்கடனிறப்பதே
யணவும்வெம்பசிக்கனலவிந்துபோயனங்கவெங்கனற்கொளுமடற்புலிப்
பிணவையன்பினிற்கலைநயப்பதேபேதைமானுடன்பேசுகிற்பதே. (கo)

* வாரடாவுனக்கியாதுதானர்தம்மகளடுக்குமோவானமாதர்தோள்
சேரடாமலைந்துயிரைமெய்யினைத்தின்றுதேவரூர்சேருவிப்பன்யான்
போரடாதுனேடாளியேறுமுன்பூசைதன்னுடன்பொரநினைக்குமோ
பாரடாவெனுண்மையையரக்கர்கட்பட்டபோரில்யார்பாரில்வைகினர். (கக)

* என்றுசீறிமற்றவனடுத்தல்கண்டிணையிலாவிறற்றுணைவர்நால்வரு
நின்றயாயுமற்றொருபுறத்திலேநிற்கமையல்கூர்நிருதர்வல்லியும்
வென்றிநல்குமாவந்தவிர்ந்தைபோல்விழிபரப்பமேல்வீமசேனனுஞ்
சென்றுதோள்களிற்பற்கணுவுடன்சிதறவாயினி.:சென்றுகுத்தினன். (கஉ)

* குத்தினனவன்குணபவல்கியக்கூரெனுங்கரங்கொண்டுவீமன்மேன்
மொத்தினன்முனைந்திருவரும்பொருமூராவுடன்சினமூளமூளவே
தத்தினர்பிடுங்கியமரங்களிற்சாடினர்புயச்சயிலமொன்றொடொன்
றொத்திரண்டம்புதங்கள்வானுருமெறிந்ததொத்தோதைமிஞ்சவே. (கங)

* வளர்ந்ததிண்கருங்குன்றுகாந்தளைமலர்வதென்னவேவானதம்படக்
கிளர்ந்தசெம்புனீர்பொசியுமெய்யினன்கேதநெஞ்சினன்கோதவாய்மையன்
றளர்ந்துவீழ்நிசாசரனுமாடகன்றன்னையொத்தனன்பின்னுமுன்னுறப்
பிளந்தளைந்தகோளரியையொத்தனன்பிரதையென்னுமின்பெற்றகாளையே. ()

வேறு.

* வன்றிறலிடும்பனைவடிவினாலுட
லொன்றிரண்டாகுமாறுடன்றமைந்தனை
யன்றுகண்டனளியாயரியின்பேடுதன்
கன்றுவெங்கரிபொரக்கண்டதென்னவே. (கடு)

* இளைஞருந்தம்முனுமிவனரும்பகை
களைகுவனினியெனக்கண்களித்தனர்
விளைவுறுகாதலான்மெலிந்தபாவைபு
முளைவுடனுவகையுமொருங்கினெய்தினள். (கசு)

* பெருந்திறனிசாசரப்பிணத்தையவ்வனத்
திருந்துளபறவைகட்கிருள்செய்கங்குலில்
விருந்திடக்கொளித்தியவிளக்கெனும்படி
யருந்திசைபொலிவுறவருக்கன்றோன்றினன். (கஎ)

* கரங்களானிசாசரவிருளைக்காய்ந்துகொண்
டிரங்கிரீள்வனத்திடையிரவின்மாழ்கிய
வரங்கொடாமரைமுகமலர்த்துநீர்மையா
லுரங்கொள்வீமனுக்கெதிருதயபானுவே. (௧௮)

* எண்டருகவர்மனத்திடும்பைமன்மதன்
மண்டெரிசுடுதலின்வாடுமேனியள்
கொண்டவெங்காதலின்குறிப்பையவ்வழி
கண்டனன்கானலற்செற்றகாளையே. (௧௯)

* மாய்ந்தவன்றுணைவிகேள்வதுவையின்னமு
மேய்ந்திலனெம்முனும்யாங்கண்மானுட
ராய்ந்துகொண்முறைமையாலரக்கர்பாவைநீ
காய்ந்தமையறிதிமுன்கணையிராமனே. (௨௦)

உரிமையினிரண்டெடற்குயிரொன்றாகினும்
பிரிவறநெடிதுநாட்பழகிப்பேசினுஞ்
சரிவராக்கம்புடைத்தலைமைகாண்கினு
மரிவைமார்மனதுகண்டறிந்துளார்களார். (௨௧)

வசையறுதசரதன்மதலைமுன்வரு
நிசிசரன்றங்கைபானேயமின்றியே
பசையறவாள்கொடுபடுத்தகாரண
மசிநிகர்விழியினையறிந்திலாய்கொனீ. (௨௨)

ஆயினுமறிஞரிலறிவுளேனென
மேயினுமெம்முனோன்வேள்விகாண்குமுன்
றூயநின்மேனியைத்தொடுவனோவெனப்
போயினன்வேறொருபுறத்தில்வீமனே. (௨௩)

அவ்வுரைசெவிப்புலனணுகிடாமுன
மொவ்வறுபிரதைதாளுவந்துபோற்றினு
னவ்விரோக்கியர்நிறைநாணுணர்ந்தநீ
யிவ்வுரைக்கெதிர்சொலாதிருத்தறக்கதே. (௨௪)

வானிடைநதியிடைவாரிநீரிடைக்
கானிடைச்சுரத்திடைக்கடக்கவேண்டினு
நானிடையிருந்திடினவையுறுவகைத்
தேனிடையின்சொலாய்கொண்டுசெல்வனால். (௨௫)

ஒருபொருளெவ்வுழையுறினும்வேண்டுமேற்
றருபொருளாகுவன்றவத்தினோரில்யா
னிருபொருளிறந்தவுநிகழ்வுமின்றிமேல்
வருபொருண்முறையுநான்வகுக்கவல்லனே. (௨௬)

இப்பிறப்பாவனவெவர்க்குமொக்குமேற்
சொற்பழுதுரைத்திடத்துணிவுபோதுமோ
வற்பநுண்மருங்குலாராருமொன்றெனிற்
கற்பெனும்பெரும்பயன்காணவல்லரோ. (உஎ)

வரிபுகுதுணைநயனிமாலைமார்பனைத்
தரிபுகுபதியெனவரித்துச்சார்ந்துளேன்
புரிபுகுமுனமெனைப்பொருந்திலானெனி
லெரிபுகுந்திறப்பனென்றிரங்கிக்கூறினாள். (உஅ)

பொற்பொடுநிறைகுணம்பொறைவழாதிவள்
கற்பொடுமிசைத்தகட்டுரைகள்காதுற
வற்புதநீரராயவனிகாவல்செய்
மற்புயவுதிட்டிரன்மகிழ்ந்துகூறுவான். (உகூ)

இற்றைநாண்மேல்வருமியற்கையோதெனக்
கொற்றவாவோர்வனங்குறுகியாங்குள
நற்றடாகப்புனலாைந்தநன்மையாற்
கற்றசீர்வியாதன்கண்காணமேவுவான். (௩0)

என்றலுமுளமகிழ்ந்திளைஞர்மூவரு
மன்றனீங்கியகுழலாயுமன்னனு
மொன்றுளமனத்தராயுவந்துவீமனை
யன்றருகுறவழைத்தறியக்கூறுவார். (௩க)

நிலத்திடைபொன்னுதித்தெழுந்தநீர்மைபோற்
சலத்திடைமிகுந்துளதகுவர்தீயவெங்
குலத்திடைதோன்றியகுறையொன்றேயலா
னலத்திடையருந்ததிநாணும்பெண்மையாள். (௩உ)

* மறுத்துரைப்பதுகடனன்றுமாந்தருக்
கறத்தியலார்கணுமமைதல்வேண்டுமா
லுறத்தகுமிவளைநீயும்முன்வாய்மையாற்
கறுத்தவருயிர்கவர்காளையென்னவே. (௩௩)

* அன்னையுந்தம்முனும்மறைந்தவாசக
முன்னையின்மறையெனமுடியிற்சூடினான்
மின்னையுமுடன்கொடுபோந்துமேவுநீர்
தன்னையுங்கண்டதிற்றுளைந்துதங்கினார். (௩௪)

* அத்தினத்தவர்வயினவலநீக்குவான்
மெய்த்தவப்பழமறைவியாதன்வந்தனன்
பத்தியிற்சிறுவரும்பணிந்துபோற்றினார்
முத்திபெற்றவரினுமுற்றுஞ்சிந்தையார். (௩ரு)

* தனிவனமிகந்துநீர்சாலிகோத்திர
முனிவனஞ்சிலபகல்வைகிமுந்துற
மனனுறப்பார்ப்பனமாக்களாகியே
யினிமையின்வேத்திரகீயமெய்துவீர். (௩௬)

* எனத்தமபடரொழித்திமையவன்செல
வனத்தைவிட்டவ்வனமருவிவைகினர்
வினைப்படுத்தியாழினோர்முறையின்வேள்விசெய்
கனக்குழற்கன்னிதன்காதலாளொடே. (௩௭)

* குந்தியையிரவுநன்பகலுங்கோதிலா
வந்தனைபுரிதலின்மகிழிடும்பியும்
வெந்திறல்வீமனும்விழைந்துவள்ளியுங்
கந்தனுமெனப்பெருங்காதல்கூரவே. (௩௮)

* மான்மதங்கமழ்கொடி * மந்திரந்தொறுங்
கான்மணங்கமழ்தடங்காவகந்தொறுந்
தேன்மிகுசுனைநெடுஞ்சிலம்பகந்தொறு
மேன்மணம்புணர்ந்தனர்வேட்கைமிஞ்சவே. (௩௯)

* நிறந்திகழிருட்பிழம்பென்னநீண்டறப்
புறந்தருமுரோமமும்பொருப்புத்தோள்களு
மறந்தருகனைகுரல்வாயுமாகவே
பிறந்தனன்கடோற்கசனென்னும்பேருளான். (௪0)

* காதியதிறனரகாசுரன்றனை
யாதிவெங்கோலமன்றளித்தவாறுபோன்
மேதினிமதித்தபோர்வீமனல்கிய
சோதியம்புதல்வனுந்தொழுதுசொல்லுவான். (௪௧)

* நிறையுடைத்தந்தைமார்நீர்நினைந்தபோ
துறைவிடத்தெய்தியாங்குரைத்தசெய்குவே
னிறைவவிப்படிவிடைதருகென்றேகினான்
பிறையெயிற்றியாயொடும்பெற்றபிள்ளையே. (௪௨)

* சாத்திரமறைதெரிமுனிவர்தன்மையிற்
காத்திரமாறியக்காவல்வேந்தருங்
கோத்திரஞ்சூத்திரங்குடியுரைத்துளார்
வேத்திரகீயமாநகரின்மேவினார். (௪௩)

* அந்தணரைவரும்யாயுமந்நகர்
வந்துழியதிதியர்வர்வுகாண்டலு
முந்துபுமுந்துபுமுகமன்கூறினார்
செந்தழல்வேள்விகூ ¶ ஆதிதேயரே. (௪௪)

* மந்திரம் - மறைவிடம். ¶ ஆதிதேயர் - விருந்தினரையுபசரிப்போர்.

* நன்மனைவாழ்க்கையினயந்தசிந்தையான்
மன்மனையனைய தன்மனையிலோர்முனி
தன்மனையம்மனைத் தம்பிமாரொடு
மென்மனைவருகெனவெதிர்கொண்டேகினான். (சரு)

* ஒருதினத்தமிழ்தெனவுள்ளநாளெலாம்
வருமுறைப்படிவிருந்தாகிவைகினா
ரருநெறிக்கடவுளர்க்கமுதமூட்டுத
லிருபிறப்பாளருக்கென்றுந்தன்மையே. (சசு)

* பொன்னகரணுகினர்போலநெஞ்சுறத்
தன்னகரெனும்படிதாயுமைந்தரு
மின்னகரநேகநாளிருந்தவெல்லையி
லன்னகர்புரிந்ததோராண்மைகூறுவாம். (சஎ)

வேறு.

* மறையுமுருவினொடரியகுருகுலமகிபர்நெடுவனசரிதரா
யுறையும்வளமனையுடையமடவர லுருகுபிரதைதனுயிரனாள்
குறைவில்பொலிவினள்விரதநெறியினள்குழுவுநிதியினள்கொடுமையா
விறையுமொழிவறவிருகணறல்வரவெரிகொள்கொடியெனவினையினாள். (சஅ)

* மறுகியழிவதென்மொழிகமுனிவரன்மனைவியெனவிவள்வினவலுங்
குறுகியவளுடனுரைசெய்தனளுறுகுறையையுளநனிகுறையவே
முறுகுசினவனல்பொழியும்விழியினன்முகனில்பகனெனுமுரனுடைத்
தறுகணிசிசரனுளனிவ்வளநகர்தழுவும்வனமுறைபதகுதியான். (சகூ)

* அருளிலிதயமுநெறியில்சரிதமுமழகிலுருவமுமதிர்குரற்
பொருளிலுரைகளுமுடையன்முழுதுடல்புலவுகமழ்தருபொறியினன்
மருளுநரியொடுகழுகுதொடர்தரவலியபிணநுகர்சுவையரு
திருளின்மிசையிருபிறைகளெனவளையெயிறுநிலவெழுமிதழினான். (ருo)

* அந்தகனுமிகவஞ்சிமுதுகிடுமந்தநிருதனுமிந்தவூர்
வந்துகுடியொடுகொன்றுபலரையுமன்றமறுகிடைதின்றநா
ளெந்தைமுதலியவந்தணருமவனிங்குவருதொழிலஞ்சியே
சிந்தைமெலிவுறநொந்துதலைமிசைசென்றுகுவிதருசெங்கையார். (ருக)

* ஒன்றுபடவெதிர்கொன்றுபலருயிருண்பதறநெறியன்றுநீ
யின்றுமுதலினியென்றுமுறைமுறையெங்கண்மனைதொறும்விஞ்சையோர்
குன்றமெனவொருபண்டியறுசுவைகொண்டவடிசிலுநங்குலந்
துன்றுநரபலியொன்றுமிவைதிறைகொண்டுபுரிகுவமென்றலும். (ருஉ)

* அன்றுமுதலடல்வஞ்சகனுமிறையன்பினொடும்பெறுவன்பினா
லென்றுநிலையெறவுண்டியுடன்மனையெங்குமிடுபலியெஞ்சுறத்
தின்றுதிரிகுவனின்றெறன்மனைமுறைசென்றுபணிகவர்திங்கள்போ
னின்றுதளர்வுறுகின்றதெனதுயிர்நெஞ்சமிலதொருதஞ்சமே. (ருங)

* கன்னியிவள்பிறர்பன்னியெனதிருகண்ணின்மணிநிகர்சன்மனு
மன்னுகுலமுதல்பின்னையொருவருமண்ணினுறுதுணையின்மையா
லின்னல்பெரிதுளதென்னைபுரிகுவதென்னவறிகிலனன்னைகேண்
முன்னைமனைநிகழ்தன்மமுனிவனைமுன்னிவிடர்நனிதுன்னுமால். (௫௪)

* ஏதமுறவுறவானமனைமகள்யாவுமுரைசெயயாதவன்
றீதில்குலமகளார்வமுடனவடேறவொருமொழிகூறினு
ளாதியனுமனொடோதுமுவமையனுடல்வலியுரையாண்மையான்
மோதியிடையிருள்யாமசரிதனைமூளையுகவுடல்கீளுமே. (௫௫)

* கொவ்வையிதழ்மடநவ்வியலமரல்குவ்வினனலினும்வெவ்வியோ
ரைவருளார்சுதர்கைவில்விறலினரௌவியமுமிலர்செவ்வியோ
ரிவ்வைவரிலெமையுய்வுகொளுமவனெவ்வெவ்வுலகையும்வவ்வுதிண்
பவ்வமெனநனிதெய்வமுனிவரர்பைதலறநெறிசெய்வனே. (௫௬)

* அவ்வையிடுபலியருளுகெனமொழியளவின்மறலியுமூளைவுறச்
சிவனைவழிபடுமகவையருளிய * செனகசெனனியர்நிகரெனத்
தவனின்முதிர்தருமுனியும்வழுவறுதனதிலறனுடைவனிதையுந்
துவனியறமனமகிழ்வொடினிதறுசுவைகொளமுதடுதொழிலராய். (௫௭)

குந்திதனதருண்மைந்தருடனிதுகொண்டுபுகலலுமந்தமா
றந்தபுயவலிவிஞ்சுதிறலுயர்தண்டதரன்மகிழ்கொண்டபின்
புந்தியலமரநொந்துகுருகுலபுங்கவனையவனுந்தநீ
வந்தியரினிசைவென்பதறைகெனவஞ்சமறுமுதன்மைந்தனே. (௫௮)

வெம்பிமொழிமகனின்பமுறமுதல்வென்றிபுகல்குவளன்பினின்
றம்பிவருமொருதிங்களிறுமுனர்தங்குதிறலரசன்றனே
டும்பர்குழவிகரங்கொடடைபொழுதென்கைவழுவிவிழுந்தநா
ணம்பியுடலநடுங்கிமதியுமயங்கியயர்வினலங்கினேன். (௫௯)

நின்றபடியொருகுன்றின்மிசைவிழுநின்றனிளவலசைந்தில
னன்றுகுவடுபிளந்துபொடிபடவஞ்சியிவன்வலிகண்டுளேன்
சென்றுபகனுயிருண்டுமறையவர்சிந்தைகளியுறவெண்ணெ
வென்றிதருமெனவுன்னியிசைவுளனென்னவிவனும்வியந்தனன். (௬௦)

* தண்டரளமலைவெண்கயிலைமலைசங்கமலையெனநங்கைமார்
மொண்டுசொரிதருகின்றவடிசிலுமுந்துகறிகளும்வெந்தடான்
மண்டுநறுநெய்யொடந்தவிடலையுமைந்தரனைவருமுண்டுதம்
பண்டிநிறைவுறுபின்புபிறிதொருபண்டிகெழுமியபண்டமே. (௬௧)

* வையமுழுதுடையையனிளவலும்வைகலுடன்மனைவைகுவோ
ருய்யும்வகைபுகலையுரையினையொய்யென்விரைவொடுகைகொளா
வெய்யபகனுடல்பெய்தகுருதியின்மெய்யையெழிலணிசெய்தனன்
செய்யமலர்கொடுசெய்யதுகில்கொடுசெய்யகலவையின்மொய்கொடே. (௬௨)

* செனகன் - தந்தை, செனனி - தாய்.

* துற்றபலகறிசெற்றியமலைசெய்துப்பொரிமகிரியொப்பெனச்
சற்றுமிடனறமொய்த்தசகடிருசக்கிரவுருளைகளுய்க்கவே
யுற்றநிரைநிரைபத்திபடவலியொத்தபகடுகள்கட்டினு
னெற்றிமிசையொருகொற்றவடலரிநிற்பதெனவொளிர்பொற்பினான். (சுங)

வேறு.

* மண்டலங்கொள்வடிவுடனடற்பரிதிமண்ணில்வந்ததெனமறுகினிற்
கண்டகண்டமுனிகுலமடங்கவிருகண்களிக்கவருகாட்சியான்
வெண்டரங்கமெனவீசுபேயிரதமிஞ்சுகானநெறிமீதுபோ
யண்டரண்டமுகடுறவளர்ந்தனனரக்கனின்றவுழியறியவே. (சுச)

* களிந்தவெற்புதவுநீலமாநதியடுத்தகுன்றிலொருகழிமுழைத்
தெளிந்தபற்களொடுநாவைமென்றுநனிதின்றுவெம்பசிகொடியினான்
முளிந்துமுற்றுமனம்வேவவேவநெடுமூச்செறிந்துபுகைமுகனுடன்
விளிந்ததொத்துவழிகுழியநின்றுசுழல்விழிநிரைத்துவரும்வெகுளியான். ()

* வெற்றெலும்பினுபராசனந்தனில்விகங்கரீழலிடைமேவரச்
சுற்றுநின்றுபலசம்புகங்கடுதிசொல்லவல்லன்மிகுதுன்முக
னுற்றுநின்றநிலைகண்டுகந்திவனையுயிரொழிந்திடவுடற்றினு
லிற்றையுண்டிகெடுமென்றுபண்டியினெடுத்தவல்சிறுகரிச்சையான். (சுசு)

அன்பினானுரகபதியளித்தநெடுவாரியாரமுதமுண்டகோ
முன்பினாகவுயர்சகடிருந்தெதிர்முகந்துகொண்டுவரைமுழையுளே
யன்பினாலடையுமன்னமென்னநிறையன்னமுற்றவுமருந்தினான்
பின்பினாகவிதுகண்டுவெம்பசிகொள்பகனுமெய்தியிவைபேசுவான். (சுஎ)

* புலிதனக்கிடுவிடக்கைநின்றதொருபூனைதின்னுமதுபோலநீ
பலியனைத்தையும்விழுங்கினாலிதுபலிக்குமோவெளிமைபாரெனா
வொலிபடக்கிரியினுருமெறிந்ததெனவோடிவந்துபிடரொடியவே
வலிபடப்பணைவிறற்படக்கைகொடுமாறிமாறிமுறைறசீறினான். (சுஅ)

* பக்கமும்பிடருமொக்கமுட்டிகள்படப்படக்கவளபாரமாய்
விக்கநின்றனவயிற்றிரண்டருகும்வீழவீழமுன்விழுங்கலும்
புக்கபண்டமுடனுன்னுடற்றசைபுசிப்பனெங்ஙனிவைபோவதென்
றக்கடுங்கையுமிளைத்துவெஞ்சினமுமாறிநின்றனனரக்கனே. (சுகூ)

* அச்சகட்டினிலொரெட்டுணைச்சுவடுமற்றபிற்சிறிதுமச்சமற்
றுச்சமுற்றவெயிலர்க்கனைத்திவனெடுத்தரித்துரைசெய்தோட்டினான்
மெச்சுமெச்சுமுலகத்தரக்கர்களில்விக்கிரமத்திறலின்மிக்கநீ
கச்சுகச்சுபலகத்தைவிட்டுனதுகட்டுரத்தினொடுகட்டுவாய். (எ0)

* சொல்லியென்பயனரக்கனீமனிதன்யானுனக்குரியதொழில்களா
மல்லினும்படைவிதத்தினுஞ்செருவில்வல்லன்வல்லனபுரிந்துபோர்
வெல்லநெஞ்சுமுளதாகில்வந்துபொருவிறலிடும்பனையும்வென்றுனைக்
கொல்லவந்தனனெனப்புகன்றிருகைகொட்டிமார்பின்மிசைகுத்தினான். (எக)

* பட்டவர்த்தனர்கள்பொற்சிரத்தின்மலர்பொற்புடைச்சரணபற்பனு
நெட்டிருட்சரனும்வெற்புவெற்பினொடுநிச்சயித்துடலநிற்பபோல்
வட்டம்வட்டம்வரவொட்டியொட்டியுறுமற்றொழிற்செருவின்மட்டியா
முட்டியுத்தநிலைகற்றகற்றவகைமுற்றமுற்றவெதிர்முட்டினார். (எ௨)

* கரங்கரத்தொடுபிறங்கவுந்தமதுகால்கள்கால்களொடுகட்டவுஞ்
சிரஞ்சிரத்தொடுதகர்க்கவுங்கொடியசிங்கவேறனையதிறலினு
ருரங்களிட்டும்வளர்தோள்களிட்டுமெதிரொத்திமற்சமருடன்றபின்
மரங்களிட்டுமுயர்கற்களிட்டுநெடுவாதினோடிகலிமோதினார். (எ௩)

* உலாவருந்தனதுதந்தையொத்தவலியுடையபகானைகழலுதையினால்
விலாவொடிந்துதடமார்பொடிந்துமிடல்வெரிநொடிந்துபடுவெம்பிணப்
புலாலனைந்தவிருகவுளொடிந்துபொருபுயமொடிந்துகடையொத்தவாய்
நிலாவெழுங்கொடியவெயிறொடிந்துசெயலின்றிவாணிருதனிற்கவே. (எச)

* உண்டியற்றரும்யாதுதானனடியுண்டுமெய்த்தளர்வொழிந்தபின்
மண்டியிட்டெதிர்விழுத்திமார்பினிபமத்தகத்திடைமடங்கலிற்
றிண்டிறற்பெருமிடற்றைவன்பினொடுதிருகிவீசியொருசெங்கையாற்
பண்டியிற்கடிதினிட்டுமாருதிபுகுந்தனன்பழையபதியிலே. (எ௫)

* ஏகசக்கிரவனத்திருந்ததிறல்யாதுதானனையிமைப்பினிற்
சாகமுட்டியினடர்த்துமாமுனிவர்தம்பதிப்புறனடுத்ததோர்
வேகரிக்கடுவனத்தினிட்டுமலரோடைமூழ்கவிறல்வீமனு
மோகரித்தவுணரைத்தடிந்துகடன்முளரிநாயகனுமூழ்கினன். (எ௬)

* வாசமாமணிவிளக்கெடுப்பவிவன்வந்துதாமுறையுமனைபுகுந்
தீசனோடுமையெனத்தவம்புரியுமிருவர்தாள்களுமிறைஞ்சியே
நேசமானவருளன்னையைத்தொழுதுதம்முனைத்தொழுதுநெஞ்சுரத்
தேசினோடிளைஞர்தொழமகிழ்ச்சியொடுதழுவினன்முறைமைதிகழவே. (எஎ)

* அகமலர்ந்துமுனியாசிசொற்றிடவுமன்னையாரவுரைகூறவு
முகமலர்ந்துரியதுணைவராண்மைநிலைமொழியவுஞ்சமரமொய்ம்பனைச்
சகமலர்ந்ததிருவுந்திமால்கொலிவனென்றுமற்றுளசெனங்களு
மிகமலர்ந்துபுனலோடையிற்குமுமிநனிவியந்திசைவிளம்பினார். (எ௮)

வேறு.

* இங்கிவரிவ்வாறிந்தவிருக்கையினிருக்குநாளி
லங்கண்மாஞாலமெங்குமரக்குமாளிகையின்வீந்தார்
பங்கமில்குணத்தான்மிக்கபாண்டவரென்றுமாழ்கத்
துங்கவேற்றுருபதேயன்சூழ்ந்ததுசொல்லலுற்றாம். (எ௯)

* வரத்தினாற்பிறந்தவாறும்வான்மொழிபுகன்றவாறுஞ்
சிரத்தினால்வணங்கிக்கேட்பத்தேசிகனுரைத்தவாறு
முரத்தினாற்கொடாதவாறுமுணர்ந்துதன்பேதையின்னுஞ்
சரத்தினாலுயர்ந்தவின்மைத்தனஞ்சயற்குரியளென்னா. (அ௦)

* தான்வரித்தவர்க்கேயெய்தவுரியளென் றநயையென்று
கான்வரிச்சுரும்புண்மாலைக்காவலர்க்கோலைபோக்க
மான்வரிக்கண்ணிக்கேற்றவதுவைநாண்மலர்ப்பூவொன்றைத்
தேன்வரித்தென்னவந்துதிரண்டதுகுமரர்சேனை. (அக)

ஆங்கதுநிகழ்ந்தமாற்றமந்தணனொருவன்வந்தோ
னீங்கிவரிருந்துநீங்காவிய லுடைநகரிசார்ந்தான்
பாங்குறுமைந்தரோடுபிரதையும்பணிந்துபோற்றித்
தாங்குபுநவிசினுய்த்தாரிருந்தபின்சாற்றலுற்றார். (அஉ)

எந்தநாடுமதுநன்னுடெப்பதியுறைவதிங்கே
வந்ததெனுள்ளவெல்லாம்வழுவறப்புகலவென்றே
குந்தியுமியலான்மிக்ககுமரரும்வினவலாலே
செந்தழலனையதூயதிருமுனிபகரலானான். (அங)

கடல்வளையுலகஞ்சூழ்ந்துகங்கைகடிளைத்துத்தெய்வ
மடலவிழ்வாசமாலைமன்னவர்பதிகணோக்கி
யடல்கெழுதுருபதேயனணிநகரடைந்துதங்கி
யுடலணங்ககற்றிமேல்பானேக்குதற்குற்றதென்றான். (அச)

மறைக்கெலாமொருவனனவாய்மைசான்முனியேமாறில்
விறற்றுருபதன்றன்னுட்டிலதிசயம்விளம்பவென்னத்
திறைக்குவைநிறைபாஞ்சாலன்செய்கனற்பிறந்தகோதை
நறைக்குழல்யாகசேனியெனுந்திருநாமம்பெற்றாள். (அரு)

வனப்பில்வேதியனுன்முற்றுவனப்பினுண்மதனவேளு
மினப்படவெழுதொணுதவெழிலுடைவடிவங்கொண்டா
னினைப்பினுமுருகுமுள்ளமெனிலினிநிகழ்த்துமாறென்
புனக்கிளிவனப்பையின்னும்புகல்குவன்கேண்மினென்றான். (அசு)

வேறு.

கந்தரமதனையந்தரத்தகற்றிக்கமுகினைவனங்களிற்றுறத்தி
முந்துறுமறலைநதிகளிற்படுத்திமுழைகளிற்கங்குலையொதுக்கிச்
சிந்துவிலமிழ்த்திச்சைவலமதனைத்தினகரனொளியினைச்செயிர்க்க
வந்தறத்திரண்டுமொய்த்தெழுமுழிமாலையிற்கறுத்தெழுங்குழலாள். (அஎ)

கருமுகிற்குலங்கணடுவணோர்மதியங்கலந்ததொத்திலகியதிலதத்
திருநுதற்புறத்தினனங்கவேளிரட்டைச்சிலையெனுமிருபுருவத்தாள்
பரவையைக்கயலைக்கணையைமென்பிணையைப்பழித்தரிபரந்துநீண்டகன்று
விரவியகுழையிற்குழைகிழித்தொளிர்ந்தவிமலநீலோற்பலவிழியாள். (அஅ)

அமைவுறுகுமிழமலருமெட்போதுமடிதொழவாண்மைகள்செலுத்திச்
சமைவுறுமேமந்தனிற்சிறுகருவிதயங்கியவடிவினைப்புரைந்து
கமைபெறுமிவடன்கட்கடலிரண்டுங்கலந்துறுதிடைதடுத்துயர்ந்து
சுமையுறவரவின்மணியணிபொருந்தித்துலங்கியவாசநாசியினாள். (அகூ)

வீழியின்கனியுங்கொவ்வையின்முதிர்ந்தவிறலுடைக்கனியுநன்முருக்கின்
வாழியமலருமினியமுள்ளிலவின்மலர்களும்வெளிதெனலாக்கித்
தாழியதாகவமரரும்பிறருஞ்சைலமத்தினிற்கடைதினத்தி
லாழியினரும்புமமுதனைப்பவளமாமெனச்சிவந்தவாயிதழாள். (கூ0)

வெண்டாளத்தைமுல்லையினரும்பைவிளங்கியமுருந்திணையாடற்
கொண்டபுன்முறுவலிளநிலாவரும்புங்கோதறுவாமவெள்ளெயிற்றாள்
பண்டையோருரைத்தவள்ளையைச்சிறிப்பலமணிக்குழைபுனைந்தழகு
கண்டவருள்ளமூசலாடியற்கைகாட்டுபொன்னூசலின்காதாள். (கூக)

செருவளரிரவிசென்றபின்முகிழ்க்குஞ்செய்கையுந்தேய்வுடன்கறையு
முருவளர்வதுவுமறைதலுமின்றியுரகமுண்ணுமையுமுளதாந்
திருவளர்செவ்விக்கமலமுநிறைந்ததிங்களுமுளதெனிலிந்த
மருவளர்குழலாடிருமுகமதனைமானுமென்றுரைப்பதுவழக்கே. (கூஉ)

புங்கவர்பணியுநெடியவன்கரத்திற்பொருந்தியசங்கமுநாணத்
தங்கியவரைகடாங்கிநல்லெழிலிற்றயங்கியவாமகந்தரத்தாள்
புங்கயமலருங்காந்தளுங்கரமாய்ப்பவளமென்கரணைகள்விரலா
விங்கிதச்சுகங்களுசிவள்ளுகிராவிசைப்பினுமிணையிலாக்கரத்தாள். (கூங)

மலையெனிற்புளகமரும்பிடாதிளநீர்வாசமென்கலவையினளையா
சலசமொட்டெனிலெண்சுணங்குருமணிப்பூண்டாங்கொணுநேமியம்பறவை
யிலகுகோங்கரும்புமுகங்கருமதவேளெழின்முடியிருகுணமமையா
நிலைபெறுமிணைதீர்ந்தழகுவாய்ந்திணங்கிநிதிதுதைந்துயரிளமுலையாள். (கூச)

வடத்திளந்தளிர்மேலுலகெலாமளந்தமாதவன்றுயில்பொருந்தியதோ
விடக்கருநாகந்தன்வரையிழிந்தேமெல்லியலுந்தியென்றுரைக்கு
மிடத்தடைந்தொளிப்பவெய்தியகொல்லோவீதெனத்தெளிகலமிந்த
மடக்கொடியதரத்திடைசெறிந்திருந்தவளமலிமயிரொழுங்கினையே. (கூரு)

கொடியெனநுடங்கிநூலினிற்சிறுத்துக்குவிமுலைப்பரம்பொறுதொல்கித்
துடியினையிகழ்ந்தசிற்றிடையென்றேதோகையர்க்குரைப்பரிங்கிவட்குப்
புடவியையளித்தோனவயவம்வகுத்துப்பொற்புணர்ந்துகந்துகண்ணெச்சி
லிடையகற்றியதோமறந்ததோவுளதோவில்லையோவறியொணுதிடையே. ()

கங்கையிற்சுழிக்குஞ்சுழியுநேராதக்கன்னிதன்னுந்தியங்கமல
மங்கசனிதியமொளித்தநல்லிடமோவாடகவிரதமோவரசர்
பங்கினுக்கெல்லாமொன்பதாமிடஞ்சேர்பாந்தளோதெரியொணுநிதம்பந்
துங்கநல்லரம்பைத்தண்டினுஞ்சிறந்ததுடையிரண்டுடையபூங்கொடிக்கே. ()

நீடியகவினுற்சினைவராலிரண்டுநீண்டவாள்விழிகளைக்கயலென்
ரூடிவாதாடிவெல்வனென்றுகளுமுவமையொத்துளமுழந்தாளா
ளாடவர்தமக்குமதனவேள்சரிதமறிவுறப்பொறித்தழகமைத்த
பீடமருபயபுத்தகமதுபோற்பிறங்கியவிருபதமலராள். (கூஅ)

மின்னலுநாணுமேனியினொளியால்வேலையுநாணுநல்லளியாற்
கன்னலுநாணுமொழிகளாற்சுரத்தாற்கருங்குயிலினங்களுநாணுமாற்
றன்னலமழியாச்சாயலாற்கலாபந்தயங்கியமஞ்ஞையுநடையா
லன்னமுநாணித்தலைவளைத்திடுமிவ்வாடமைத்தோளினுட்கம்மா. (கக)

கற்றநற்கலையின்சிறப்பினுங்கல்விநலத்தினுங்கலைமகளெனலாஞ்
சொற்றநல்லெழிலினிலக்கணம்வழாததூய்மையானிலக்குமியெனலா
முற்றுநல்லறத்தாற்பார்ப்பதியெனலாமுறைமைறைகொள்கற்பினும்பொறைகளினுங்
குற்றமொன்றில்லாவருந்ததியுடனேகுவலயமாதெனலாமே. (க00)

அழகினுக்கழகாயுதித்தவண்மருங்கினசைத்தமேகலைகளினொலியு
மிழைகளிற்சிறந்தபெருமிதவொலியுமிசைச்சுரும்பரற்றுபேரொலியுங்
குழைநிகரடியிற்பரிபுரவொலியுங்கோல்வளையொலியுமாமதவேள்
விழைவினாலன்றியொலித்திடாவனப்போர்மெய்படைத்தென்னவீற்றிருந்தா [ள்.

அந்தமாதினையுந்துரோணனுக்கெதிராவவதரித்தருள்புதல்வனையுஞ்
செந்தழன்முகத்திற்பெற்றவன்மகிழ்ந்துசெல்விபற்குனற்கெனவிருந்தான்
வந்தவருரைத்தகொடுமொழிகேட்டுமாதவருடனிருந்துசாவிப்
பைந்தொடிதனக்குவேள்விமுற்றுவன்போற்பாண்டவர்வரவுபார்த்திருந்தான்.

ஆங்கவன்குறித்ததினமடைந்திடுமுனவனிகாவலரும்வேதியரும்
பாங்குடனநேகரடைந்தனரந்தப்பார்த்திபன்றிருநகர்ப்புறத்திற்
பூங்குலமுனிவீரீதியானுணர்ந்தபுதுமையென்றவர்க்கறிவுறுத்தி
நீங்கியாங்கவர்களடிதொழுதேத்தநெறிக்கொடுபடர்ந்தனனெறியோன். (க0ங)

வேறு.

மந்திரமுனிவனீங்கமற்றிவருளங்கள்பூரித்
துந்துறுதுருபதேயனொளிநகரடைவதுன்னி
யந்தணர்வேள்விகாண்பானடைபவர்தங்களோடுங்
குந்திமாதுடனுஞ்சென்றார்குருகுலமணிகள்போல்வார். (க0ச)

சாரதந்திரத்தின்மிக்கதபோதனன்சதுர்வேதங்கள்
பாரதந்தன்னைடைந்தாம்படியினுற்பகர்ந்தமூர்த்தி
நாரதமுனியையொப்பானராதிபர்நடந்துசெல்லு
நீரதர்நெறியில்வாவிநிறைந்தநீரென்னநின்றான். (க0ரு)

வணங்கலும்வாழ்த்திமுந்தவந்துநீர்வாழ்வுசெய்தீ
ரிணங்கிநுங்கேண்மைகொள்வானிச்சையால்யாகசேன
னணங்கினையன்றுவேள்வியழலிடையளித்தானந்தச்
சுணங்கணிமுலையினாளைச்சூட்டுமேதொடையலென்றான். (க0சு)

இப்பகலிரவும்வைகாதேகியாங்கெய்துமென்று
மப்பகன்மன்றல்பெற்றுற்றேற்றுதலாண்மையென்றுஞ்
செப்பியேமுனிவன்போகச்சிறுவரும்பெரியகங்குன்
மைப்புறப்பார்த்தன்செங்கைமணிவிளக்காரப்போனார். (க0எ)

வேத்திரகீயச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-கசருஉ.

உ

# சித்திராங்கதச்சருக்கம்.

பொருந்தியசிகரம்புதியதென்றலால்
வருந்தியதுயரறவந்துமோதிய
பெருந்தடக்கங்கையின்பெருக்கினோர்கரை
திருந்துதாயுடனிவர்செல்லுமெல்லையில். (க)

கறுத்தறத்திரண்டெழுங்கங்குறன்னிடை
நிறத்திடையாமமாநேரமாதலிற்
குறித்தசித்திராங்கதனென்றுகொண்டபேர்
செறுத்தணியுலகெலாஞ்செயித்தகாளையே. (உ)

அன்னவன்மாதரோடந்தமாநதி
மன்னுநீராடலின்மனங்கொண்டெய்தியே
துன்னுமவ்விரவினீர்துளைந்துவைகினன்
மன்னவரவ்வழிமாதொடேகினர். (ங)

அறிந்தவன்சிறிவில்லதனைவாங்கியே
பறிந்திடனுணைவிபடுத்திக்கூறுவான்
செறிந்தகந்திருவர்கோன்சிலைக்குநேரிலே
னுறைந்தனனிவ்வயினுறுதறுன்பமே. (ச)

பகற்பொழுதின்நெறிபடர்தலற்புத
மகற்புதமனிதர்நீரிரவிலாவதோ
தகற்புறவுயிரிறச்சமைந்தவாறுகொ
லிகற்பெறுமாறுகொலேதும்முள்ளமே. (ரு)

என்றவனதிர்த்தலுமினியவாசவன்
வென்றிகொண்மைந்தனும்விசயன்கூறுவா
னன்றுநின்சேவகமனிதர்நாங்களே
யின்றுனதருஞ்சமர்நோக்கவெய்தினோம். (சா)

இரவினும்பகலினுமேற்றபோதெலா
மரிதுறுநெறிகளிலடைதுமாற்றலி
னொருவருநிகரிலாவுண்மையாலெமைப்
பொரவலாயெனிற்சமர்பொரவென்றேதினன். (எ)

திசையெலாம்புகழ்ந்திடச்சென்றுவென்றவன்
விசையன்வாய்மொழிக்கறவெகுண்டுவிற்குனித்
தசைவிலான்சாயகமளப்பிறாண்டனு
நசையவோர்கனற்கணைநரனுந்தூண்டினன். (அ)

பிளந்தவன்கணைகளைப்பெருத்தமேனியுங்
கொளுந்திடப்பெருந்திறல்குறைந்துசோர்ந்தனன்
றளர்ந்தனனிவனெனத்தனஞ்சயன்கையின்
வளந்திகழ்மயிர்பிடித்தீர்த்துவந்தனன். (௯)

தனக்குநேரிலாதவன்றருமன்றாளிடை
நினைக்குமுன்னுய்த்தெதிர்நின்றதம்பியை
மனக்களிதரும்படிமகிழ்ந்துநோக்கியே
கனக்குலநிகர்கையான்கருணையாயினான். (க0)

எம்பிநீவிடுதிமற்றிவனையென்றுதன்
றம்பியைவிலக்கியேதருமனேக்கலு
மம்புவியோர்களன்றமரரால்வரு
மிம்பரிற்பாண்டவரிவரென்றுன்னினான். (கக)

தருமனேயிவனிவன்சமீரணன்றரு
பெருமிதன்விசயன்மற்றிவன்பிடித்துள
கருமசாதகரிருகாளைமாரிவ
ரொருவருநிகரிலாவுரவுத்தோளினர். (கஉ)

எம்மளவன்றிவர்கடல்களேழையு
மம்மவோர்கணத்தின்முன்னடர்க்கவல்லரா
னிம்மையினிவருடன்பகைத்துளேனெனச்
செம்மையோனுன்னியேதெளிவிற்கூறுவான். (கங)

அண்ணலேபாண்டவரைவர்நீவிரென்
றெண்ணம்யானின்றிவந்தெதிர்த்ததாகுமாற்
கண்ணகல்புவியெலாங்கடக்குமாற்றலீர்
தண்ணளியாற்பிழைதவிர்க்கவேண்டுமால். (கச)

பரதநற்குலத்தினர்பண்புமூற்றமும்
வரதமுற்றியற்கையும்வகுத்துத்தீருமோ
கரதலத்தடைந்துளேன்காத்திரேலெனச்
சரதமுற்றியசொலாற்சரணடைந்தனன். (கரு)

மாண்டகுகேள்வியான்வகுத்தவாய்மையா
லாண்டகைமகிழ்ந்தவற்கபயநல்கினான்
பூண்டவார்சிலையுடைப்புரந்தரன்றரு
பாண்டவனின்புறப்பகர்தன்மேயினான். (கசு)

சத்திரநிழலிடையுலகந்தாங்கிய
கைத்தலமன்னர்வெங்கண்டகாளையான்
வித்தகவிசயநீவிடுத்தவெங்கன
லத்திரவலியெனதாற்றனீக்கிற்றால். (கஎ)

கற்றிலேனிக்கலைகடக்குமாறினி
யுற்றநீரைவருமுறுதிநண்பரே
மற்றினிப்புகல்வதென்மனமும்வாய்மையுஞ்
சுற்றமுந்துணையுநீரன்றிச்சொல்லுண்டோ. (கஅ)

கந்திருவத்தினோர்கடும்பரித்திரண்
மூந்தவைஞ்ஞூறுமக்களிப்பன்மொய்ம்புடை
யிந்திரன்மதலைநீயெனக்கனற்கணை
தந்திடவேண்டுமென்றினிதுசாற்றினான். (க௯)

நாயகனுமதமதனினன்பனுஞ்
சாயகமுதவினன்றனஞ்சயன்கனற்
றாயகனிவருடனினிதுசொற்றவர்க்
கேயநல்லுறுதியொன்றெடுத்தியம்பினான். (உ0)

மானிலங்காவல்செய்மன்னவர்க்கெலா
மேனிகழ்புரோகிதரிருத்தல்வேண்டுமா
லேனையமறையிலாமகத்தையேய்க்குமால்
ஞானமாதவரிலாவரசர்ஞாலமே. (உக)

முன்னர்நங்குலந்தனிலுதித்தமுன்னவன்
மன்னுசவ்வருணனும்வள்ளல்வேட்டமாய்ச்
சென்னியின்முடியொளிதிகழச்சேனையோ
டுன்னருங்கானகமுருவியேகினான். (உஉ)

தனித்தொருசாரலிற்றமியனேகலுங்
குனித்தவிற்சிறுநுதற்கொம்புபோலொரு
புனித்தமார்பைந்தொடிபூவைமாருடன்
வனத்திடையிருத்தல்கண்டரசன்மாழ்கினான். (உ௩)

பருப்பதமடந்தையோபாரின்மங்கையோ
வுருப்பசிமுதலினோர்க்குதித்தகன்னியோ
திருக்கொலோசசிகொலோதேவர்செய்தவ
வுருக்கொலோவெனவிவனுருகுங்காலையில். (உச)

ஒப்பிலாச்செவ்வியுமுயர்ந்ததோள்களுந்
தப்பறுமார்பிடைத்தயங்கலங்கலுஞ்
செப்பியமகுடமுஞ்சிவந்தகண்களுந்
துப்பின்வாயிதழுமத்தோகைநோக்கினாள். (உரு)

இயக்கனோசேவனோவிருநிலத்துறு
வயக்கதிர்மணிமுடிமன்னவன்கொலோ
புயக்கிரிபோன்றவிப்புருடனென்றவன்
மயக்கினாலுள்ளமுமுகமும்வாடினாள். (உசா)

பின்னருமங்கையர்பெருங்குழாத்திடை
யன்னமொன்றணிநடையழகுகாட்டல்போற்
முன்னிடநடந்தவளுடலந்தோற்றிடா
தன்னிலைமறைத்துவந்தரசைநோக்கினள். (உஎ)

வலித்தடம்புயங்கொள்சவ்வருணனேயிவன்
பலித்ததென்றவமெனப்பாவையுன்னியே
கலித்தமேகலையொடுகாலிற்பொற்சிலம்
பொலித்திடமேவியீதுரைப்பதாயினள். (உஅ)

கடந்தவேனிணங்கமழ்காவல்வேந்தனே
படந்திகழ்புவியெலாம்விளக்கும்பானுவின்
மடந்தைநான்றபதியென்னுமமற்றுநின்
வடந்திகழிருபுயம்வரைதல்வேண்டினேன். (உகூ)

ஆதலிற்றந்தையாரருளிலசமலே
காதலைத்தணிக்கொணுதினியகாட்சியா
லோதலினவனருளுறுதல்கூடுமே
லேதலற்றுனைவிழைந்திடுவனன்பினல். (௩0)

அவ்வகையியற்றியென்னரியகைத்தல
மிவ்வயிற்பற்றுதலேற்பதாமெனக்
கொவ்வைவாய்க்கொடியவனுருகக்கூறியே
நவ்விநேர்க்கியரொடுநாகத்தேகினள். (௩க)

மன்னவனாக்கமுமனதுந்தேசுமிக்
கன்னிபின்போயதாற்கசிந்துமீண்டுத
னன்னகர்ப்புகுந்தனனுளுந்தேய்ந்துயி
ரின்னலினமிழ்ந்தவனிருக்குநாளிலே. (௩உ)

வேறு.

தாதாமுதறந்ததனிக்குமரன்
மாதாநிகர்வண்கருணைக்குரியோன்
காதார்கணருந்ததிதன்கணவன்
வேதாமெனமன்னவைமேவினனே. (௩௩)

வரிசைத்திருமன்னன்மகிழ்ந்தெதிர்போ
யுரிசைக்கனியன்னவனுண்கழல்கள்
பரிசித்துவணங்கியரும்படிவந்
தெரிசித்தொருபூவணைசேர்த்தினனே. (௩௪)

குருவைத்தரவந்தகுடைக்குரிசிற்
குருவைத்தனிகொண்டுகுலாவுதலா
லுருவத்திடையூறுணர்வுற்றவனை
யுருவத்திடையொன்றுபடுத்துவனே. (௩௫)

என்றோதியகன்றருளிற்பெரியோன்
சென்றோதுதிவாகரவீதியுயர்ந்
தன்றேறகியவன்விசையிற்கடுகி
நின்றேறபலவாய்மைநிகழ்த்தியபின். (௩௬)

தவத்துக்கெதிரின்றியதாபதனாற்
பவத்துக்கொருமாற்றலன்பைங்கொடியைத்
திவத்திற்கடிமன்றல்செயும்படிசெய்
துவப்பிற்கடிதீர்ந்தனனுற்றனனே. (௩௭)

இபதிக்கிருநான்கினுமெண்ணரியா
டபதிப்பெயர்மாதொடுசார்ந்துமுனி
சுபதிச்சனர்வந்துதுதித்திடவே
நபதிக்கனிமன்றனடாத்தினனே. (௩௮)

பொன்னைப்பெறுமாதவனிற்புகழ்சேர்
மின்னைப்பெறுமன்னன்விழைந்தனனாற்
றன்னைத்துறவுற்றதயாநிதியு
முன்னைத்தவமெய்திமுயன்றனனே. (௩௯)

மருவந்தகுழற்குலமங்கையுடன்
றிருவந்தபுயத்தினன்சேர்ந்திடலாற்
கருவந்துகருத்தினர்கண்குளிரக்
குருவந்துளனென்றுகுதித்தனனே. (௪0)

திறனிற்பெறவேண்டியசெல்வமெலா
மறனிற்றருமந்தணராதரவான்
மறனிற்பெரியோயொருமாதவனை
நிறனிற்குருவாக்கொளனீதியரோ. (௪௧)

எனவோதியசொல்லமுதென்றரவோர்
மனமூடுமகிழ்ந்தனர்வாசவனார்
தனிமாமகன்மீளவுமத்தகையை
யினிதாயருளேத்தியிசைத்திடுவான். (௪௨)

வேறு.

முருகுகொப்பளிக்குமாலைமொய்ம்பினுய்வசிட்டனென்னுந்
திருமுனிச்சரிதமின்னுஞ்செவிப்படவிழைவுண்டாமாற்
பொருவறவுரைத்தியென்றேபோற்றியநிருபரைவ
ருருகிடமொழிவதானேனேர்திருக்கதையெடுத்தே. (௪௩)

சித்திராங்கதச்சருக்க முற்றிற்று.

ஆகூ செய்யுள்-கச௪௫.

---

உ

# கௌசிகச்சருக்கம்.

---

மறங்கொள்வேலரசர்கோமான்கௌசிகனென்னுமன்ன
னிறங்கிளர்புதல்வரோடுநிகரில்சாதுரங்கத்தோடு
மறங்கிளர்மைந்தரோடுமடவியில்வேட்டஞ்சார்ந்தே
திறங்கொண்மாமிருகசாலஞ்செறுத்தவன்றிரியுநாளில். (க)

கோடிரண்டுடையவெற்றிக்கொழுங்கலையொன்றைநோக்கி
மாடிரண்டினுநெருங்கிமைந்தரும்பிறருமொய்ப்பத்
தூடிரண்டம்பரத்திற்சூரியன்றனைமறைப்பக்
காடிரண்டகலுங்காறுந்துறந்தனன்காதிதந்தோன். (உ)

பருதிபொற்றேரிற்பூண்டபச்சைமாவேழும்விந்தை
பொருவினற்கலையும்வாயுகதியுந்தன்பொலிவுநீங்கக்
கருதருங்கதிகொண்டோடிக்கந்துகத்தெழுந்துபாய்ந்து
விருதுறக்கலைமானுங்குவிரைந்துபோய்மறைத்ததன்றே. (ங)

நீரினைப்பருகவேண்டுநேயத்தால்விரைந்துவண்பேய்த்
தேரினைத்தொடர்ந்துவாடித்தியங்கியமாந்தரேபோற்
பாரினைப்புரந்தோனின்றுபரிதாபமுழந்துமீள
வூரினைக்காண்பான்மீண்டான்றினபதியுச்சனானான். (ச)

தாரசைகோதைவாடித்தனதுநாவுலர்ந்துமைந்தர்
சீரசைமதாணியோடுகலைகளுஞ்செடிகளீர்ப்ப
வாரசைமுலையார்கண்ணுமேனியுமதனனம்புந்
தேரசைவதுபோற்காட்டுஞ்செறிநிழறேடிச்சென்றான். (ரு)

வாடியமன்னனுங்கோர்வளரிளவனங்கண்ணுற்றே
நாடிமுற்பிறப்பிற்செய்தநல்வினையுதவிற்றென்னக்
கோடியமுகங்குளிர்ந்துகுறைவறுபடைஞரோடு
நீடியபழுவந்தங்கிநின்றசைவாறினானே. (சு)

மலர்ந்ததாமரையோன்றந்தவசிட்டனாசிரமமென்றே
குலந்தருமுனிவர்கூறக்கொற்றவன்முனிபாலெய்தி
நலம்பெறத்தொழுதுநின்றானவையறப்புலனைவீட்டி
வலந்தருஞானநீதிவழிவருமுனிமகிழ்ந்தான். (எ)

வேட்டம்போந்தநிகத்தோடும்வெம்பசியுழன்றுவந்த
தோட்டுறுதெரியறங்குந்தோளினாய்துறவோர்துய்க்கும்
காட்டினுள்ளனவாமுண்டியுதவுதுங்கடன்களாற்றி
மீட்டிவணடைதியென்றான்வேந்தன்மற்றிதனைச்சொன்னான். (அ)

நிலம்படு தானைநான் குநேயருமைந்தர் தாமுஞ்
சலம்படுமெயினர்கூட்டந்தன்னொடுஞ்சார்ந்துளேனற்
குலம்படுமுனியேயுண்டிகொடுத்திடலெளியதன்று
னலம்படநகரினேகநயந்தருடருகவென்றான். (கூ)

வந்தவர்மிகுதியேனுந்தாழ்வுறுமன்னரேறே
முந்தநீரட்டுகந்தமூலமெம்மோடருந்தி
யுந்தனூரணுகவென்றேயுரைத்தனன்மாதவத்தோ
னந்தவிலரசன்கேட்டேநன்றெனவிசைந்துமீண்டான். (க0)

தூயநீராடிமாண்பிற்றெய்வதந்தொழுதுவந்தே
பேயநற்சூழலெங்குமிடமிலாதடர்ந்திருந்தார்
தாயனைடைந்துநின்றகபிலையைதன்கண்காட்டி
நேயமாவிட்டவுண்டிநேர்ந்திடென்றுரைத்துப்போனான். (கக)

வந்ததுசுரபியெண்ணின்மாதர்கள்வடிவந்தாங்கி
முந்துறவிருந்தோர்யார்க்குமுசிப்பறநறுநெய்தீம்பா
லுந்துதேன்கனிகளாறுசுவையுறமுண்டியோடுந்
தந்ததாங்கெவருமுண்டுதணிந்தனர்பசியைமாதோ. (கஉ)

விரும்பினோர்விரும்பும்வண்ணம்வேந்தனோடுடன்வந்தோர்க்கும்
பெரும்படைக்கரிகள்வாசிஞாளிகள்பேசுமாண்மை
தரும்புரவல்லூராதியஃறிணைதனக்குந்தக்க
வரும்பயனுணவுநல்கியாரருள்செய்ததாலோ. (கங)

யாவருந்துய்த்தபின்னரிருகரம்பூசநீரு
மோவலிற்பளிதந்தாமமுறுமடைக்காய்களாதி
தாவுறவளித்துப்பின்னர்தனதுருவனைத்துநீக்கி
மேவுமுன்கபிலையாகிவிபினம்போயடைந்ததன்றே. (கச)

கண்டனனரசனந்தவற்புதங்கருத்திலாசை
கொண்டனனுழையரோடுங்குறித்திலன்றனிச்சென்றந்த
முண்டகனனையான்பாதமுளரியிற்பணிந்தவெற்றி
யெண்டிசைபுரக்குங்காதியளித்தவனிதனைச்சொல்வான். (கரு)

சுரபியொன்றெண்ணிலர்க்குயரறவமுதந்தந்த
தரிதிதுநினக்கிவ்வானலாம்பரிசொன்றுகாணேன்
பெரிதுறம்புகழெம்போல்வார்தமதுழைபெறுதுமென்னிற்
றறுதும்பாலானிலக்கந்தந்திடப்பசுவையென்றான். (கசு)

கேட்டமாமுனியுஞ்சொல்வான்கேழ்கிளர்கூர்மைவாய்ந்த
தோட்டிபாய்களிநல்யானைத்தோன்றலேமகத்துவேந்த
ஞட்டின்வாழ்கபிலையென்னைல்கலாந்தகவுண்டாமோ
வீட்டுநீமையலென்றான்வேந்தனுமீண்டுஞ்சொல்வான். (கஎ)

நின்னுடைப்பாலானென்றேநெறிவழாதிருந்தேன்றேவர்
மன்னுடைச்சுரபியாமேல்வௌவுவன்வலிதினென்னாத்
தன்னுடையுணர்வுதீர்ந்தோன்சாற்றினனதனையுன்னி
யுன்னிடைப்படுமேலவ்வாறுஞற்றுதியுரவோயென்றான். (௧௮)

திரும்பினனரசனெண்ணில்சேனையுந்தானுஞ்சென்று
பரும்பிடிக்கோட்டினூடுபாசங்கள்வீசிப்பற்றி
விரும்பியகபிலைதன்னையீர்த்தனர்வெகுளியுள்ளத்
தரும்பிடக்கயிற்றினோடுமையன்பாலடைந்ததன்றே. (௧௯)

கவுசிகன்றன்பாற்செல்லக்கருணைசெய்தனையோவென்னத்
தவிசுறுமுனியைத்தேனுவினவமாதவனுஞ்சொல்வான்
புவிசுகம்பெறச்செய்வேந்தன்புயவலியதனாற்பற்றி
யவசமொன்றடையாதூர்போயணுகுவான்முயலலுற்றான். (௨௦)

மன்னுடையாண்மைகொண்டேவந்துனைக்கவர்ந்தகாலத்
துன்னுடையரண்மைகாட்டாதொளிப்பதோதகுதியென்றான்
பொன்னடிதொழுதுமீண்டுபுரவலன்சேனையாழி
தன்னிடையாலகாலஞ்சார்ந்தெனமுனிந்ததன்றே. (௨௧)

வேறு.

ஒருகோடிகோடிவயமள்ளர்செங்கையுருபாசமேணிநனிவா
லிருகோடுதோறுமடல்கொண்டடர்ப்பவெதிர்வந்ததேனுமுனிவிற்
சருகோடுபூளைதனிமாருதங்கடனிலேதமுற்றதகைபோ
லருகோடிமோதியுறுபாசபந்தமகல்வித்தெழுந்ததணிமேல். (௨௨)

கரையற்றசேனைவயமிக்கவாசிகளிறெப்பிறேர்கள்கடிகள்
விரைவுற்றசீயமுதலிட்டயாவும்விறல்பெற்றுரோமமுனையிற்
றிரையொத்தெழுந்துவளைவுற்றசேனைசிதறித்திகந்தமளவு
முரையற்றொடுங்கிமுனைகெட்டழுங்கவுரனிற்றடிந்தவொருசார். (௨௩)

வேல்கொண்டுசேமவாள்கொண்டுவெற்றிவிற்கொண்டுபற்றும்விறலான்
மால்கொண்டுவந்தவயமன்னர்சென்னிமகுடங்கண்மண்ணிலுருளக்
கால்கொண்டுகொம்பின்முனைகொண்டுகண்செய்கனல்கொண்டிரண்டுகமழ்பூ
வால்கொண்டுவென்றுவயமுங்கைகொண்டுமகிழ்வோடிருந்ததவனே. (௨௪)

ஓடிப்பரந்துதிசைகெட்டழிந்தவுரவோரலாதுபுவிமே
னீடிச்சிறந்துபடையோடிருக்குநெறியோரிலாதநிலைகண்
டோடித்திரும்பிமுனியைப்பணிந்தவ்வொருவன்குறித்தபடியே
நாடிச்சிறந்தவமரேசர்வாழுநகரத்தடைந்தசுரபி. (௨௫)

பொருவற்றசேனைமுடிவுற்றவாறுபுகர்க்கற்றகாவலரசன்
றிருவுற்றகாதலிளமைக்குமாரர்தெரிவுற்றெழுந்துசினமா
வொருமித்தசிந்தையுளநற்றவன்றனுரைபெற்றதன்மையிதுவென்
றருகுற்றுயர்ந்தசிலைபற்றியண்டமதிரக்கடுஞ்சொல்குறியா. (௨௬)

புற்றின்கணுகமெனவாளிநூறுபுகழ்மாதவன்றன்மிசையே
மற்றிந்தமன்னனருள்பாலரேவமதனம்புகண்டபரமன்
முற்றுஞ்செயற்கையெனவந்தஞானமுனிகண்விழித்தமுறையா
விற்றைறம்பதைம்பதெனுமைந்தர்பூளையெரிபுக்கதென்னவிறலும். (உஎ)

கண்டேதநெஞ்சுதுயரத்தழுந்துகலைவல்லமன்னன்மறமுட்
கொண்டேமுனிந்துமுனிமுன்னர்நின்றுகுறைவற்றவிற்கைகுனியத்
தண்டேனரும்புகமலத்தைபொத்ததலைவாளிநூறுவிடலும்
பண்டேயுணர்ந்துமுணராதிருந்தபவநாசனீதுபகர்வான். (உஅ)

தன்றண்டமொன்றுதனைமுன்னிருந்துதகுமன்னனேவுகணைகள்
வன்றண்டமோடுவாண்முசுண்டிவளையங்களாதிவரினுங்
கொன்கண்டகண்டமுறவேவிரைந்துகுறையென்றுகூறிமுனிவன்
றென்றண்டகண்டனெதிர்நின்றிலங்குசிவனென்னவைகுபொழுதே. (உகூ)

கடாகமீளிசிலையூடுநூறுகணைபோதமேருமுழைசேர்
விடாகமென்னமுனிதண்டினூடுவிறலோடடங்கியுளதா
விடனுகநின்றவுரவோனுணர்ந்தவிருள்கொண்டசிந்தையிளகி
மடனுனிரம்பவிசைகூறிநீடுவயமாதவத்தைவியவா. (௩௦)

வலிமிக்கசேனைதிறலுற்றமைந்தர்வயமற்றிறந்ததுளவா
விலகுற்றெதிர்ந்துசமர்முற்றினிந்தவிருடிக்கொர்துன்பமுறுமோ
புலனுக்கமுன்செய்தவமிக்கதென்றுபுதனுேத்தவன்கருதியே
சிலைவிட்டெறிந்துபுவியைத்துறந்துதிகழத்தவஞ்செய்தனனே. (௩க)

திசைநான்கினுஞ்செய்தவமேறவந்துதிசைமாமுகத்தன்முதலோர்
கசிவோடடைந்துபெயர்வேறுகந்துககனத்தடைந்துவிடையிற்
குசைகாவிதண்டமுதலாதல்கொண்டுகுலமார்வதிட்டனெதிர்போ
யசையாதிருந்ததிறல்கண்டுதந்தையனையாளுெரின்சொன்மொழிவான். (௩உ)

## வேறு.

மன்னனேநினதுநாடுவலியவோவவனிபாலர்
சொன்னசொல்வழுவுருமற்புரிவரோசொல்வாயென்றான்
மன்னுகாதேயன்கேட்டுவாள்விழிசிவந்துநன்றுன்
கொன்னுளவகந்தைதீர்ப்பனெனவுளங்கொதித்துமீண்டான். (௩௩)

கௌசிகச்சருக்க முற்றிற்று.

ஆகு செய்யுள்-கருஉஅ.

---

# வசிட்டர்புத்திரசோபச்சருக்கம்.

கன்னவிறேளான்வேந்தன்கன்மிடபாதன்வாழ்வு
துன்னிடவியனுநாளிலொருமுனியெதிரிற்றோற்றி
யுன்னிடைத்துய்க்கவேண்டியனுகினனுகந்துமேதை
தன்னுடனசனநல்கத்தயாவுசெய்கெனமொழிந்தான். (௧)

மன்னவனளிப்பனிந்தவாயிலினிருத்தியென்று
தன்னுடைமனையிற்சென்றான்றரணிமேலுததியாழ்ந்தான்
மின்னிகர்மருங்குலார்தமயக்கினால்வேந்தனந்த
முன்னவற்கசனநல்குமுறைமையைமறந்தான்மாதோ. (௨)

யாமமோரிரண்டுநீங்கவிறைவனுநினைந்துமாழ்கித்
தாமமார்சூபகாரர்தம்மையழைத்திதுகாலத்தில்
வாமமார்மேதையோடுமறையவர்க்கடிசினல்கித்
தோமுறுதளிக்கவென்றானவரிதுசொல்வதானார். (௩)

பொழுதலாப்பொழுதின்மேதைபொருதுநல்லடிசினல்கப்
பழுதிலாயுரைத்தாயுண்டிபடுப்பினுமேதைகிட்டா
தொழிகவாங்கதனையென்றாரிறைவனுமுரைத்தவாய்மை
நழுவுறாவண்ணநல்கிநலந்தரவெனவுரைத்தான். (௪)

தள்ளொணாமுறையான்மக்கடனதுடன்மேதைகொண்டு
தெள்ளமுதனையவுண்டிசெய்தந்தமுனிக்களித்தார்
நள்ளிருட்பொழுதினுண்டநான்மறையவனுணர்ந்து
கொள்ளொணாமனிதர்மேதைகொடுப்பதோவெனமுனிந்தான். (௫)

மானிடன்மேதையிந்தமன்னவனளித்தலாலே
தானிடரடைந்துமக்கடங்களூன்மிசையவென்றே
கோனிடருறவுரைத்துக்குலமுனிபோந்தான்வேந்தன்
றேனிடம்வைத்தான்செய்கையிதுவெனத்தெளிந்திருந்தான். (௬)

பின்னரிற்சிலதுநாளிற்பெருந்திறலரசனுங்கோர்
முன்னிருகானில்வேட்டமுயலுவானகலும்போதிற்
பன்னரும்வசிட்டன்மைந்தன்பார்புகழ்சத்தியென்போ
னன்னிலையிருத்தனோக்கியரசனோர்வாய்மைசொல்வான். (௭)

பாரெலாம்புரக்கும்வேந்தர்பணித்திடுபதத்தன்யார்க்குங்
காரெலாமுதவுமாண்பிற்கனகமுமணியுநல்கிச்
சீரெலாமுலகினெய்தச்செய்தகோலரசன்வந்தாற்
பேரலாகாதோவென்னத்தவமுனிபேசலுற்றான். (௮)

வேந்தனீமுனிவராகும்வியன்படுகுலத்தன்யானே
வாய்ந்தவிங்கிதனையின்றிமாதவம்பயிலாநின்றேன்
பூந்தடமார்போய்நீங்கிப்போவெனற்புகழோவென்றான்
சாந்தணிபுயத்தன்சீறித்தண்டங்கொண்டெறிந்தானன்றே. (௯)

தனையவமானித்தானைத்தானறவெகுண்டுதூயோன்
கனைகழுனிருதர்மாண்பிற்காரியம்புரிதலாலே
யினையநாண்முதலாவெற்றியிராக்கதனாகவென்றே
முனைவல்வேந்தனைச்சபித்தான்முனிவனும்வசிட்டனீன்றோன். (௧௦)

ஆடவர்திலதனானவயோத்திமாநகரவேந்தன்
வாடினன்வசிட்டன்றந்தமைந்தனென்றுணர்ந்துதாழ்ந்தான்
பீடுமாமுனியேயான்செய்பிழைபொறுத்தருள்கவென்றே
நாடிநின்றேத்திச்சாபநீங்குநாணவில்கவென்றான். (௧௧)

அன்னதோர்மையனோக்கியருளிலாக்கௌசிகப்பேர்
துன்னுமாமுனிவனாங்கோர்சூழ்ச்சியினடைந்தயோத்தி
மன்னனைக்கூவியன்னான்மனந்தனைவேறதாக்கி
முன்னுனைச்சபித்ததீயமுனிவனைக்கோறியென்றான். (௧௨)

கிங்கரவெனுமரக்கன்கேழ்கிளரணியினானை
யங்கவனுடலிலன்னானறிவுறாதுறுத்தியேவத்
துங்கமார்முனியைப்பற்றித்தொலைத்துயிருண்டுபின்னர்
தங்குலவிளைஞரானோராரையுந்தடிந்துதின்றான். (௧௩)

அருந்ததியளித்தமைந்தரைம்பதிற்றிரட்டியோர்கள்
பெருந்திறலழிந்திறந்தபெற்றியைத்தந்தைகேட்டே
வருந்தியேதுயரான்மாழ்கிமாழ்கியாற்றாமையாலே
திருந்துபுகடலிலாழ்ந்தான்செறுத்துயிர்விடத்துணிந்தே. (௧௪)

வளந்திகழ்வருணனஞ்சிவணங்கிமாமுனியையேந்தி
விளங்குறுகரையில்வைத்தான்மீட்டிவன்றரிக்கலானா
யளந்தறிவுடையான்வேறோரருவிதாழ்வரையினேறிப்
பிளந்திறவேண்டிவீழ்ந்தான்பெண்கொடியேந்தினாளே. (௧௫)

வடவையம்படலந்தன்னின்மாமுனிசென்றுவீழ்ந்தான்
றடமுறுபுனலில்வீழ்ந்ததன்மைபோலாயதாமால்
விடனுகர்ந்திதனாலேனும்விடுவன்றனுயிரையென்றா
ணடலுறுமமுதமொத்ததம்முனியருந்துநஞ்சம். (௧௬)

ஏதினுமுயிர்நீங்காதவியற்கைகண்டிருந்துநெஞ்சம்
போதுறப்புழுங்குங்காலைப்புதல்வரிற்சத்தியில்லா
ளேதறப்பன்னீராண்டாச்செழுங்கருத்தாங்கிநின்றாண்
மாதவனதையுணர்ந்தேமைந்தர்தஞ்சோபநீத்தான். (௧௭)

உ

# வசிட்டர்புத்திரசோபச்சருக்கம்.

கன்னவிறோளான்வேந்தன்கன்மிடபாதன்வாழ்வு
துன்னிடவியலுநாளிலொருமுனியெதிரிற்றோற்றி
யுன்னிடைத்துய்க்கவேண்டியணுகினனுகந்துமேதை
தன்னுடனசனநல்கத்தயாவுசெய்கெனமொழிந்தான். (க)

மன்னவனளிப்பனிந்தவாயிலினிருத்தியென்று
தன்னுடைமனையிற்சென்றான்றரணிமேலுததியாழ்ந்தான்
மின்னிகர்மருங்குலார்தமயக்கினால்வேந்தனந்த
முன்னவற்கசனநல்குமுறைமையைமறந்தான்மாதோ. (உ)

யாமமோரிரண்டுநீங்கவிறைவனுநினைந்துமாழ்கித்
தாமமார்சூபகாரர்தமையழைத்திதுகாலத்தில்
வாமமார்மேதையோடுமறையவர்க்கடிசினல்கித்
தோமுறாதளிக்கவென்றானவரிதுசொல்வதானார். (ங)

பொழுதலாப்பொழுதின்மேதைபொருதுநல்லடிசினல்கப்
பழுதிலாயுரைத்தாயுண்டிபடுப்பினுமேதைகிட்டா
தொழிகவாங்கதனையென்றானிறைவனுமுரைத்தவாய்மை
நழுவுறாவண்ணநல்கிநலந்தரவெனவுரைத்தான். (ச)

தள்ளொணாமுறையான்மக்கடனதுடன்மேதைகொண்டு
தெள்ளமுதனையவுண்டிசெய்தந்தமுனிக்களித்தார்
நள்ளிருட்பொழுதினுண்டநான்மறையவனுணர்ந்து
கொள்ளொணாமனிதர்மேதைகொடுப்பதோவெனமுனிந்தான். (ரு)

மானிடன்மேதையிந்தமன்னவனளித்தலாலே
தானிடரடைந்துமக்கடங்களூன்மிசையவென்றே
கோனிடருறவுரைத்துக்குலமுனிபோந்தான்வேந்தன்
றேனிடம்வைத்தான்செய்கையிதுவெனத்தெளிந்திருந்தான். (சு)

பின்னரிற்சிலதுநாளிற்பெருந்திறலரசனாங்கோர்
முன்னிருகானில்வேட்டமுயலுவானகலும்போதிற்
பன்னரும்வசிட்டன்மைந்தன்பார்புகழ்சத்தியென்போ
னன்னிலையிருத்தனோக்கியரசனோர்வாய்மைசொல்வான். (எ)

பாரெலாம்புரக்கும்வேந்தர்பணித்திடுபதத்தன்யார்க்குங்
காரெலாமுதவுமாண்பிற்கனகமுமணியுநல்கிச்
சீரெலாமுலகினெய்தச்செய்தகோலரசன்வந்தாற்
பேரலாகாதோவென்னத்தவமுனிபேசலுற்றான். (அ)

வேந்தனீமுனிவராகும்வியன்படுகுலத்தன்யானே
வாய்ந்தவிங்கிதனையின்றிமாதவம்பயிலாநின்றேன்
பூந்தடமார்போய்நீங்கிப்போவெனற்புகழோவென்றான்
சாந்தணிபுயத்தன்சிறித்தண்டங்கொண்டெறிந்தானன்றே. (௯)

தனையவமானித்தானைத்தானறவெகுண்டுதூயோன்
கனைகழனிருதர்மாண்பிற்காரியம்புரிதலாலே
யினையநான்முதலாவெற்றியிராக்கதனுகவென்றே
முனைவல்வேந்தனைச்சபித்தான்முனிவனும்வசிட்டனீன்றோன். (௧௦)

ஆடவர்திலதனனவயோத்திமாநகரவேந்தன்
வாடினன்வசிட்டன்றந்தமைந்தனென்றுணர்ந்துதாழ்ந்தான்
பீடுமாமுனியேயான்செய்பிழைபொறுத்தருள்கவென்றே
நாடிநின்றேத்திச்சாபநீங்குநாணவில்கவென்றான். (௧௧)

அன்னதோர்மையனோக்கியருளிலாக்கொளசிகப்பேர்
துன்னுமாமுனிவனங்கோர்சூழ்ச்சியினடைந்தயோத்தி
மன்னனைக்கூவியன்னான்மனந்தனைவேறதாக்கி
முன்னுனைச்சபித்ததீயமுனிவனைக்கோறியென்றான். (௧௨)

கிங்கரவெனுமரக்கன்கேழ்கிளரணியினானை
யங்கவனுடலிலன்னானறிவுறத்துறுத்தியேவத்
துங்கமார்முனியைப்பற்றித்தொலைத்துயிருண்டுபின்னர்
தங்குலவிளைஞரானோராரையுந்தடிந்துதின்றான். (௧௩)

அருந்ததியளித்தமைந்தரைம்பதிற்றிரட்டியோர்கள்
பெருந்திறலழிந்திறந்தபெற்றியைத்தந்தைகேட்டே
வருந்தியேதுயரான்மாழ்கிமாழ்கியாற்றாமையாலே
திருந்துபுகுடலிலாழ்ந்தான்செறுத்துயிர்விடத்துணிந்தே. (௧௪)

வளர்ந்திகழ்வருணனஞ்சிவணங்கிமாமுனியையேந்தி
விளங்குறுகரையில்வைத்தான்மீட்டிவன்றரிக்கலாறு
யளந்தறிவுடையான்வேறோரருவிதாழ்வரையினேறிப்
பிளந்திறவேண்டிவீழ்ந்தான்பெண்கொடியேந்திழனே. (௧௫)

வடவையம்படலந்தன்னின்மாமுனிசென்றுவீழ்ந்தான்
றடமுறுபுனலில்வீழ்ந்ததன்மைபோலாயதாமால்
விடனுகர்ந்திதனாலேனும்விடுவன்றனுயிரையென்று
னடலுறுமமுதமொத்ததம்முனியருந்துநஞ்சம். (௧௬)

ஏதினுமுயிர்நீங்காதவியற்கைகண்டிருந்துநெஞ்சம்
போதுறப்புழுங்குங்காலைப்புதல்வரிற்சத்தியில்லா
டீதறப்பன்னீராண்டாச்செழுங்கருத்தாங்கிநின்றாள்
மாதவனதையுணர்ந்தேமைந்தர்தஞ்சோபநீத்தான். (௧௭)

வந்துதன்சூழல்வைவகிவாகுறவிருந்தபோதி
லந்தநற்கருவைத்தாங்குமரிவையையரக்கனன
வெந்திரலரசன்கண்டேதுறத்திடவெருவிமாது
முந்துமாதுலன்பாலோடிமொழிந்தனண்முனியெதிர்ந்தான். (கஅ)

அன்னகாரணனைக்கண்டுமஞ்சுறுனார்க்குங்காலை
முன்னவன்கமண்டலத்தின்முறைறகொணீர்மீதுதூர்ப்ப
மன்னுகிங்கரனுந்தீயோன்மன்னனைவிடுத்துப்போனன்
றன்னுடையுருவாய்வேந்தன்றேசிகன்றளில்வீழ்ந்தான். (கக)

தாபத்தின்முனிவுகூர்ந்துதக்கமானிடர்கண்மேதை
சோபத்திற்றுய்ப்பாயென்றுசுருதியோன்சபித்தலாலே
தீபத்தையனையஞானச்சிறுவரைவதைத்தருந்திப்
பாபத்துக்கொருவனுனேன்பரிந்தெனைக்காத்தியென்றான். (௨௦)

கருணையிற்பெரியோனனகலைமுனியஞ்சலென்றே
பருணிதர்புகழும்வேந்தைப்பதியிடைமகுடஞ்சூட்டி
யருணனிற்சிறப்பின்மிக்கவருஞ்சுதனொருவன்மேவத்
தருமதயந்திதன்பாற்றந்துதன்சூழல்வந்தான். (௨க)

மற்றவன்மகன்றனில்லாள்வளர்ந்திடுகருப்பந்தாங்கி
யுற்றநாளிடையின்மைந்தனுதரத்தின்மறைறையையோத
முற்றுணர்முனிவன்கேட்டுமுகமலர்ந்திருக்குநாளிற்
பெற்றனளுததிமூன்றும்பிறைறயினையுயிர்த்தவாபோல். (௨௨)

வேறு.

சராசரங்களிதாங்கிடவெண்டிசைச்
சுராசுரேசர்துதிக்குந்துச்சந்தையாள்
கராசலம்பிடிகன்றுயிர்த்தாலெனப்
பராசரன்றனையீன்றனள்பண்பினல். (௨௩)

அருந்ததிப்பெயராண்முதன்மாதருந்
திருந்துசிந்தைவசிட்டனையாதியாப்
பொருந்துமாதவரும்வந்துபொற்பினுன்
மருந்தனைக்கண்டுள்ளமகிழ்ந்தனர். (௨௪)

பிறந்தநாண்முதலுள்ளபெருங்கட
னறந்தவாவகையாற்றியைந்தாண்டினிற்
சிறந்தநூலுரஞ்சேர்த்தினராய்ந்தனன்
மறந்துணர்ந்ததொத்தேமறைமாண்பெலாம். (௨௫)

கந்தனேவெனவான்கலைகற்றுவை
குந்தனேவெனவாருள்கொண்டவன்
மைந்தனேவெனமாதவமாற்றியா
னந்தனேவெனஞானம்பொருந்தினன். (௨௬)

வேதகாரணராரும்விளம்புமு
தாதைதானுந்தருக்கிற்சிறந்திட
மாதராதலஞ்செய்ததவத்தினாற்
கோதிலான்றவங்கொண்டிருந்தானரோ. (உ௭)

தந்தைமார்கடமைத்திறற்றானவன்
வந்துபற்றிவதைத்துயிருண்டதை
யந்தணாளரிசைப்பவறிந்தனன்
பந்தபாசமிலாதபராசரன். (உ௮)

மண்ணும்விண்டுடன்மால்வரையும்பொடி
பண்ணியாசுரர்பற்றறச்செய்வனென்
றெண்ணியோடியிறைஞ்சினன்மாதவ
ரண்ணலாளிலவன்பகர்வானரோ. (உ௯)

குமரநீயுங்குறித்ததுணர்ந்தனன்
றமரவேலைவளைந்துளதாரணி
சமரமாநிருதன்புரிதன்மைகண்
டமரரோடுமழிப்பதையுன்னினாய். (௩0)

அளிவிளங்கியவாரருண்மைந்தனை
தெளியவோர்கதைசெப்புவன்கேளெனக்
களிகொளுங்கமலாசனன்றந்தவன்
குளிரமைந்தன்மகற்கிதுகூறினான். (௩௧)

வசிட்டர்புத்திரசோபச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௧௫௫௧.

---

# பராசரச்சருக்கம்.

---

கிருதவீரியனென்றுரைத்துளகேழ்கிளர்ந்தபுயத்தினான்
பொருதுவென்றுளமதுகைமன்னவர்போற்றவாழ்வுறுநாளிலே
சுருதிகூறியதிருமுறைப்படிதுகளில்வேள்விகள்புரியவே
கருதிவந்தொருநதியினங்கரைகனகசாலைசமைத்தனன். (௧)

பிருகுமைந்தர்களனைவர்தம்மொடுபெரிதுவந்துளநண்பனா
யுருகியன்னவர்மறைகளின்படியுரியமாமகமாற்றிட
நிருபனெண்ணறுநாளவ்வண்ணநடாத்திநீணிதிநல்கியே
மருவுமாயுதொலைந்திறந்தனன்மைந்தர்நாடுபுரக்கவே. (௨)

இனத்தினைச்யுமேலுறுங்கதியேறுமாசையுமற்றவர்
தனத்தினைசையுபிடித்தருந்தவர்தங்களுக்கிவர்தந்தையார்
மனத்தினைசைதணிந்துறத்தருமாதனத்தைவிரும்பியே
தினத்தினைசைமிகுந்துவெளவுதல்சிந்தைகொண்டனர்சிறுவரே. (ரு)

மாதவத்தினர்தமையழைத்துமுன்மன்னனும்வயின்வைத்துள
பாதகத்தனமேனுமக்கதுபண்பின்மீளவளித்திரென்
றோதிடத்தவவேதியர்க்கிசையாதுமக்களியோமெனச்
சேதனப்படவேதுணித்தவர்சென்னிவான்பொருள்வெளவினர். (சு)

இறந்துநீங்கியபார்க்கவக்குலரில்லினோருமிறந்துபின்
சிறந்தநாட்பிருகென்னுமோர்முனிதேவிநற்கருவோடுளாண்
மறைந்துபோயிமயத்தினெய்திமகன்றனைத்தனதூருவிற்
றிறம்பெறும்படிதாங்கிவைகினள்சென்றதாஞ்சிலதிங்களே. (எ)

வருடநூறுசுமந்திருந்துளமைந்தனைக்கருமாமுகிற்
பெருகுமின்னலையுதவுமாறுபிறங்கவோர்தினநல்கின
டெருடருந்தவமுனிவர்வந்துதிரண்டருப்பகனிவனென
வருடரும்படிநாமமோதினரந்தமைந்தன்வளர்ந்தனன். (அ)

வேதமாதியநூலெலாந்தெரிமேலையோர்புரிநூலுட
னோதுகன்மமெலாநடாத்தினரோதிமைந்தனுணர்ந்தபின்
காதிமன்னர்குலத்தினோர்கனகங்கள்கொண்டதுணர்ந்துபோ
யேதமின்றியமாதவத்திடையெய்திவைகினனென்பவே. (எ)

அடுக்கினேழுலகங்களும்பொடியாகவென்றவனுன்னியே
வடுத்தவிர்ந்திடநின்றுரைக்கருமாதவம்பயில்போதிலே
யிடுக்கணெய்தினர்வானுளோர்களுமுலகமேழுமெரிந்ததா
னடுக்கமாயினர்கிருதவீரியநாமமன்குலமைந்தரே. (அ)

அன்னவேந்தர்கள்குலமடைந்தையரஞ்சியோடியருந்தவ
மன்னுகின்றவருப்பகப்பெயர்மைந்தனைத்தருமன்னையார்
துன்னிநின்றுளசூழலெய்திவணங்கிநின்றுதுதித்தனர்
சொன்னமாதுமுனிந்திலாள்வினைசூழுமாறுதுணிந்துகொல். (கூ)

அஞ்சனுங்குலமும்பெரும்புவியாவுமீறுறவுன்னியே
விஞ்சுமென்மகன்மாதவத்திடைமேவினனதனாலுல
கெஞ்சியெங்குமெரிந்ததுங்குலமீறுறும்படியாயதா
னஞ்சினுங்கொடியீரியற்றியநன்மைதீமைவிடுங்கொலோ. (க0)

இயலினீவிர்கடியர்பொறுமையினெனதுசிந்தைகரைந்ததால்
வயமிகுந்துளபுதல்வனுங்களைவதைபடாவகைசெய்வனென்
றுயர்தவன்பனியாதரித்தவளோதயாவரும்வைகினர்
துயரில்வானவர்நொந்தருப்பகர்தொல்லையோருழையெய்தினர். (கக)

றங்குலத்தொருமைந்தனம்புவிறண்பொடிக்குலமாகவென்
றங்குளத்தினினைந்திழைக்குமருந்தவத்தினெழுந்ததீ
யெங்குமுற்றதுநீவிர்போயவனியற்றுநற்றவநீக்கிடிற்
றங்களுக்குபகாரமென்றுதழீஇவருந்தவிணங்கினார். (கஉ)

குலத்துளோரெதிர்வந்துநின்றுகுறித்தருப்பகமுனிவனை
நலத்தின்வாழ்த்தியிருந்துநுங்குலநாதரென்றறிவித்தபி
னிலத்தின்மைந்தனெழுந்துதாழ்ந்துளநேசமாகியகாலைகண்
டலக்கணன்றியிருந்துரைத்தனரருளினான்முகநோக்கியே. (கங)

மைந்தனுசைமிகுந்துமேற்கதிவந்துசெந்திருமாறிலா
திந்தமேதினிவைகினோமுடலேதினல்விடலாமெனச்
சிந்தைகொண்டவர்பொருள்விழைந்துசெறுப்பவெம்முடறீர்ந்தபின்
மைந்தனேயளவற்றவின்பமகோததிக்கிடைமூழ்கினேம். (கச)

ஆதலானுடல்விட்டபெற்றியினன்றுதொட்டொருதாழ்விலைக்
காதலானெமைமுன்றடிந்தவர்கடவுளோரெனவுன்னினோம்
போதநீதவமுற்றியம்புவிபூழிசெய்யநினைப்பதென்
றீதகன்றதவத்தைவிட்டுயிர்சிந்திடாதருள்செய்கநீ. (கரு)

என்றுகூறவணங்கிமைந்தனிசைந்துளத்தினினைந்துசொற்
குன்றுறுதருமைத்தவத்துறுகொடியதீயுமவிந்துற்
வென்றியோடினியான்செயும்வகைவிளம்பவென்றிவனோதனு
நன்றுநன்றெனநெடிதுநேரநயந்துசாவினர்பகருவார். (கசு)

மதியின்மிக்குயர்புதல்வனீமனம்வைத்தநற்றவமுற்றதீ
நதிகளுக்கிறையானசாகரநாளும்வைகுறவோதுகென்
றெதிரிலுற்றவர்பகரமற்றவனிசைவுபட்டொருமனதனுய்
முதிர்ந்தவக்கனல்கடலினிட்டனன்முதிர்குலத்தினர்மொழியினல். (கஎ)

அந்தமாமுனிவெகுளியங்கனலாழியின்கணின்மேவியே
வந்துறும்புனலுண்டுதான்வடவாமுகப்பெயர்கொண்டதான்
முந்துதங்குலர்வந்திருந்தனர்முன்னர்தங்குமிடந்தனி
லிந்தமைந்தனுமீண்டுதாயுழையெய்திவைகினனென்பவே. (கஅ)

வேறு.

அன்னமாமுனியையொப்பவனீயேயகிலமுற்றுமழிவெய்திடுமாறு
நின்னுளத்தினிடைகொண்டதுணர்ந்துநீதியன்றெனமொழிந்திடலானேன்
பன்னுதற்கரியவேதமுணர்ந்தும்பாரொறுக்கின்மிகுபாதகமன்றோ
நன்னலத்துனதுதந்தையர்தம்மைநலிவுசெய்தவர்கடானவராமே. (ககூ)

அவர்குலத்தையிடர்செய்குதனீதியாகுமவ்வணமருந்தவமாற்றிக்
கவலையைத்தணவுசெய்யெனவோதிக்கற்றநன்முனிவசிட்டர்விடுப்ப

நவமுறத்திகழ்பராசரனெண்ணிஞொலாந்தவமியற்றலுநற்றீ
குவலயத்தையளவிற்றசுரேசர்குலநடுங்கியயனோடுகுறித்தார். (உ0)

சிரங்கனுன்குடையதேவனுமேனைத்தேவர்யாருமிவனேருறவெய்தி
யுரங்கொணின்குரவர்நற்கதிசேர்ந்தாருணர்விலாவசுரர்தீமைபொறுத்தே
வரங்கொளுந்தவம்விடுத்திடவென்றேவந்துவேண்டமறையோனைவணங்கித்
திரங்கொள்சத்திகுமரன்பகர்கின்றுன்செங்கைநன்மலர்குவிந்திடநின்றே. ()

குற்றமுன்புரியரக்கரடங்கக்கொலைபடும்படிநினைந்துதவஞ்செய்
துற்றகாலமதுமுற்றுமுனெவ்வாறுங்குறுங்கனலைநீக்குவதென்ன
மற்றுநான்முகனிினைந்தவண்மேல்பான்மால்வனத்தையிடமாகவமைத்தே
சுற்றுறுங்கனலையாங்கிடுகென்னத்தொலைவின்மாமுனியவ்வண்ணமமைத்தான்

உலகெலாம்பரவுசெந்தழலங்கணுற்றவோர்வனமருங்குறலாலே
பலருமக்கனறவாக்கினியென்றேபாரெலாம்புகலமேவியதாமாற்
சலசவாசியொடுதேவருமந்தத்தக்கமைந்தனைமகிழ்ந்துவிடுத்து
நலமுலாவுதமதூர்தொறுமுற்றூர்நன்மையுற்றவிறன்ஞாலமும்வானும். (உஙூ)

நிருதர்வந்தடிவணங்கவவர்க்கேநேயமோடருளளித்தொருமைந்தன்
தருபிதாமகனிடந்தனிலெய்தித்தாழ்ந்தெழுந்துடையதன்மையிசைத்தான்
பெரிதுவந்தவனைமார்பினணைத்துப்பேசருங்கருணைசெய்தவனோடு
மொருதனித்தமதுசூழலிலினையனுற்றுளானெனவுரைத்தனன்மேலோன். ()

வேறு.

ஆதலினரசரேறேயருந்தவவசிட்டன்வண்மை
போதுறவுரைக்கவல்லாருளர்கொலோவெனப்புகன்றே
தாதவிழ்மாலைமார்பனிருந்திடுந்தகைமைநோக்கி
மூதுணருதிட்டிரப்பேர்முன்னவன்மொழியலுற்றுன். (உடு)

அந்தணனொருவனில்லாவரசுமேம்படாதென்றைய
முந்துநீபுகன்றுயந்தமுறைறநெறிமுனிவராரோ
சிந்தையிலுன்னியோதிற்சேர்குதுமவரையென்ன
விந்திரனனையசெல்வத்தொருவனோர்ந்திதனைச்சொல்வான். (உசு)

உற்கயமென்னுந்தீர்த்தமுளதுமுன்ஞங்கண்வைகுந்
தற்பறனனையகேள்வித்தவுமியர்தமக்கொப்பின்று
லற்புடன்வணங்கியேத்திலவர்நமக்கருளளிப்பார்
பொற்புறவுடனேகொண்டுபோதுமென்றுரைசெய்தானே. (உஎ)

பின்னருமுமக்களித்தபெறலருமய்ங்களெல்லா
மன்னுடைநகரியெய்திமணிமுடிபுனைந்தபின்ன
ரன்னிலைநம்பாலெய்துமறிதிரென்றுரைத்தேயைவர்
பண்ணருமகிழ்விஞேங்கப்பகர்ந்தவன்விடைதந்தானே. (உஅ)

அங்கவன்விடுப்பவேகியடவிகடுருவியாங்குத்
தங்குமுற்கயத்தின்சாரற்றவுமியர்தனைவணங்கித்
துங்கமோடவனோடன்புதுளங்கிடவினிதிகூறிக்
கங்குலிலவன்றனோடுங்கடந்தனர்கருமமிக்கார். (௨௯)

பராசரச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-௧௫௮௮.

---

# திரௌபதிமாலையிட்டசருக்கம்.

---

படந்திகழரவுமாவும்பதைத்துநீர்நசையாற்றத்த
மிடந்தனிலணங்குகூருமியற்பெருஞ்சுரமுங்கானுங்
கடந்தணிபுகலவொண்ணுக்கமழ்கழுநீரின்வாசந்
தொடர்ந்துளபழனஞ்சூழ்ந்ததுருபதநாடுபுக்கார். (௧)

காரினுக்குவமைவாய்த்தகரதலவண்மைவீரர்
பேரினுக்கைந்தாம்பஞ்சபூதங்கள்பெயர்வதேபோற்
சீரினுக்கொருத்திவைகுந்திருநகருதிக்குமுன்னர்
பாரினுக்குயிரேயென்னபரிதிவந்துதித்ததன்றே. (௨)

* புலந்தனகங்குற்போதும்பொழிதருபனியுஞ்சேர
மலர்ந்தனமனமுங்கண்ணும்வயங்கினதிசையும்பாரு
மலர்ந்தனதடமுங்காவுமார்த்தனபுள்ளுமாவுங்
கலந்தனகுருகும்பேடுங்கலித்தனமுரசுஞ்சங்கும். (௩)

* குன்றமுங்கொடியகானுங்கூரிருட்கங்குனீங்கி
நன்றுநன்றுதவவந்தீர்நடந்துநீரிளைத்தீர்போலு
மென்றுகொண்டுவகையோடுமின்மலர்க்கழுநீர்வாச
மன்றலந்தென்றல்வீசிவழிவிடாய்தணித்ததன்றே. (௪)

* வெறிபடுமுளரிமொக்குள்விரிபதநோக்கிச்சுற்றும்
பொறிவரிவண்டினீட்டம்புறத்திருந்திரங்கவண்டொன்
றிறகரால்வீசியுள்புக்கின்மதுநுகர்தல்கண்டு
நெறியினனிமித்தமாகநெஞ்சினுணினைந்துசென்றார். (௫)

* வண்டுறைமருங்கினுங்கோர்மாங்கனிவீழ்தல்கண்டே
தண்டுறைமீன்களெல்லாந்தத்தமக்கிரையென்றெய்த
விண்டுறைகிழியவோடிவென்றொருவாளைதன்வாய்க்
கொண்டுறைவலிமைநோக்கிக்குறிப்பினுளுவகைகூர்ந்தார். (௬)

மாக்குரலளகவல்லிவதுவையினழகுகாணத்
தாக்குரலடிகொள்யானைத்தரணிபரெவரும்வந்தார்
வீக்குநன்மிளிர்பொற்பூணீர்விரைவுடன்வம்மினென்று
கூக்குரல்விளிப்பபோலுங்கோகிலக்குரலுங்கேட்டார். (எ)

* நீடுதலில்லையின்றேநிருபதிகன்னிமன்றல்
கூடுதலிவற்குண்டாகுங்கொற்றவர்குறைபொருதே
யோடுதலுண்மையென்றுந்தோகைகளோகையோடு
மாடுதனோக்கிநோக்கியகமகிழ்ந்தேகினாரே. (அ)

* பூவெலாஞ்சுரும்புமொய்ப்பப்புனலெலாம்புள்ளுவைக
மாவெலாந்துணையின்மேவமரனெலாம்வல்லிபுல்ல
வேலெலாம்பயின்றவிற்கையேற்றிளஞ்சிங்கம்போல்வார்
காவெலாமருங்குதோறுங்கண்டுகண்களித்துநின்றார். (கூ)

வாரணமாயைசூழ்ந்தமாயவன்றோற்றம்போலப்
பேரொளிபம்பியார்க்கும்பேசருஞ்சிறப்பிற்றாகிப்
பூரணகும்பம்பொற்கோபுரங்களாற்பொலிந்துதோன்று
மாரவமிகுந்தபல்புள்ளகழிசூழ்புரிசைகண்டார். (க0)

* மங்கலமுழவுவிம்மமன்னுபல்லியங்களார்ப்பச்
சங்கினமுழங்கவெல்லாத்தானையும்பரந்துசூழ
வெங்கணுநெருங்கிவைகுமிராசமண்டலங்களோடுந்
துங்கவேற்றுருபதன்றன்றொல்லைமாநகரிபுக்கார். (கக)

* தொடங்கியுந்தொடக்கந்தொட்டுத்துகளறவளர்ந்துமீள
மடங்கியுஞ்செல்லுகின்றமன்னுயிருலகமெல்லா
முடங்கியசார்ங்கச்செங்கைமுகுந்தன்வாய்ப்புகுந்தகாலத்
தடங்கியவுதரம்போன்றதந்தமாநகரியம்மா. (கஉ)

* குழைப்புறங்கடந்தசெங்கட்குறுநகைக்கொவ்வைச்செவ்வா
யிழைப்பொலிமுலையினாளுக்கிற்றைநாள்வதுவையென்று
மழைப்புறமாடமேறிவருநரைமலர்க்கைகாட்டி
யழைப்பனபோன்றவீதியணிகொடியாடையெல்லாம். (கங)

* விண்டலம்புதைத்தபைம்பொற்றுகிலிடுவிதானநீழன்
மண்டகிற்புகையின்மூழ்கியாவணமறுகிற்செல்வங்
கண்டுகண்டரியேறனின்கவினுடைநெடுந்தோல்போர்த்துக்
கொண்டனசெயலாராங்கோர்குலாலனதிருக்கைசேர்ந்தார். (கச)

* ஆங்கணற்றவத்தான்மிக்கவன்னையையிருத்திமைந்தர்
தாங்கண்முற்றுணையாய்வந்ததாபதர்தம்மோடெய்தித்
தூங்கணங்குரீஇயின்மஞ்சத்தலந்தொறுந்தூங்குகின்ற
தேங்கண்மாத்தெரியல்வேந்தர்சேர்ந்தபேரவையினானார். (கரு)

* ஆதியிற்குந்திமைந்தரைவர்க்குமுரியாளாமென்
றோதியவிதியினுனெஞ்சலப்புறுதுவகைகூர்வாள்
சோதிடம்பொய்யாதென்றுந்தோன்றுவருரியோரென்றுந்
தாதியர்தேற்றத்தேற்றத்தன்மனத்தளர்வுதீர்வாள். (கசு)

* சூட்டியதொடையன்மாலைத்தோழியர்வைகறோறுந்
தீட்டியபட்டங்களுந்தஞ்சிந்தையும்பொலிவுகொள்ளக்
கோட்டியசிலையினோடுங்கொடுமணித்தேரினோடுங்
காட்டியகோலமன்றிப்பிறிதொன்றுங்காண்கிலாதாள். (கஎ)

மறத்தினன்மிகுந்தவம்பிகேயனுமன்னன்றந்தோ
னறத்தினன்மிகுந்தோர்தங்களாருயிர்தொலைப்பதானுற்
றிறத்தினுற்கதிரிரண்டுமறைகளுஞ்செகமும்பொய்யாச்
சிறப்பெலாமகலாதிவ்வாறிருக்குமோதிகழுவென்பாள். (கஅ)

செய்தவத்தனலினூடுசெனித்தனனதனுல்வன்னி
யுய்திறத்தந்தையாயதுளந்தனிற்பரிவிலாமற்
கைதவத்தொருவனின்பங்கண்டிடமருகராக
மெய்தரித்தவரைவெம்மைவிளைக்குமோவிளம்பீரென்பாள். (கக)

ஊறிலாதிருந்தாரென்னினொருமடக்கொடிபொருட்டாற்
றேறினுமடைவதென்னேசிறியமுட்காடுமாறுந்
தூரினுலிலங்குசேய்மைத்தூர்ந்துளநெறியுமென்றே
வீறினுலிருந்தாரென்னின்வேள்வியென்படுமோவென்பாள். (உ0)

கடிமணநிகழ்ந்தன்மைகாசினியறிந்தபோதே
யிடராறுகௌந்திமைந்தருணர்வரென்றெண்ணினோமாற்
படியறவரையிற்கானிற்பயின்றிடினெவ்வாறென்றே
கொடியிடைவேழமுண்டகுறுங்கனிபோல்வதானாள். (உக)

* ஆண்டெரிப்பிறந்தபோதேயன்பினுலெந்தைநேர்ந்த
பூண்டெரிமார்பனின்றிப்பொன்னவைபொலியத்தோன்றி
யீண்டெரிமுன்னர்மன்னரிழிவுறவேட்டிலானேன்
மீண்டெரிபுகுவனென்னுமெண்ணமேவிழையுநீராள். (உஉ)

அன்னவளிவ்வாறுன்னியணங்களுள்யாகசேனி
தன்னுளந்துன்பங்கூறுந்தகைமைகண்டுயிரோடொப்பா
மின்னனூர்விசயனன்றிவிற்பனித்திடுவாருண்டோ
பொன்னனையவனேவந்துன்பொற்கரம்பிடித்தறிண்ணம். (உஙு)

கருத்தினிற்சிறந்தமன்னர்கருதலர்க்கடக்குமாறு
வுருத்தெரியாமலெய்தியிருப்பர்மற்றொருவற்கேனுந்
திருத்துமந்தரத்திற்செய்தசெழும்படந்திட்டிக்கெட்டா
வருத்தமற்றுந்தைமுன்னம்வரித்தவற்கன்றிமாதோ. (உச)

ஆதலிற்கற்பின்மாண்புக்கணிகலமனையாய்நின்றன்
காதலன்வரவுகாணுங்கடுந்தினமடைந்ததின்றே
யேதலன்றினியவேள்விக்கெய்திடுமாறுதூய்நீ
ரோதியமுறையினுடவெழுகவென்றுரைத்தகாலை. (உரு)

நன்னிமித்தங்கட்டானுநான்மறையவர்கள்கூறுந்
சொன்னிமித்தங்களோடுதோழியர்மொழிந்தவாறுந்
துன்னிமித்திரரைக்காண்பான்றனதிடந்துடிக்குமாறு
முன்னிமித்திரராமாதருரைத்தசொற்கொருப்பட்டாளே. (உசு)

வேறு.

நறுங்குழல்கலைத்துத்தூயநெய்வீசிநானமுமேனையபொருளுங்
குறுந்தொடிக்கரத்தார்பெய்துநீராட்டிகுளிர்புனற்றுகிலினான்மாற்றிச்
சிறந்தபாவாடைதரித்தொரேயிழைக்குத்திசையெலாம்விலைபெறுதாகி
நிறங்கிளர்தெய்வப்பூந்துகிறரித்தேநிறைமணித்தவிசின்மீதமைத்தார். (உஎ)

வாசமென்கலவையோசனைகமழுமலயசமுடனுறத்திமிர்ந்து
தேசுறத்திலதச்சிந்துரந்தீட்டித்திகழ்ந்தமான்மதம்புழுகளைந்து
பூசலிட்டரற்றுஞ்சுரும்புதாழலங்கற்புனைகலன்முதலியபொருத்தி
வீசுகாரளகமுடித்தனரிருளும்விதுவொடுகதிருமெய்விளங்க. (உஅ)

படவரவெழுந்துதிலதமாமதியைப்பருகநாநீட்டியதென்ன
மிடனுறச்சுடிகைநுதலிடைவீக்கிவிளங்குநாசியினணிபொருத்தி
புடைமணிக்குழைகளிருசெவியிடத்தும்புதுமதியிரவிபோற்செறித்துத்
தடமுலைதெரியாதணிகளுங்குளிர்வெண்டரளமால்வடங்களுநிரைத்தார். (உகூ)

பால்வளையணிந்துமரகதக்கடகம்பங்கயக்கரங்களிற்செறித்து
மேல்விரறனக்குமங்குலிபொருத்திவிரலுடைத்தோட்களினிலங்க
மால்வருதோளின்வலயமேமுதலாம்வளனெலாம்பொருந்துரச்செய்து
சேல்வருவிழியார்மேகலையுடனேபட்டிகைசெறித்தனரிடையில். (ஙo)

எய்துமின்பாண்டுநந்தனரகன்மினேனையவரசரென்றூர்க்கும்
வெய்துறுசிலம்புகண்டையுமுதலவிளங்கணிபதங்களினமைத்து
மைதிகழ்விழிகட்கஞ்சனந்தீட்டிமதனவேள்சாபமுங்கணையு
மெய்திகழ்தொய்யின்மறைந்திடாவண்ணம்விளங்குமுத்தரிகமும்புனைந்தார். ()

சின்னமென்மலருங்கன்னமாலிகையுஞ்சிறந்ததாமங்களும்பொருத்தி
மன்னுசெம்பஞ்சிதீட்டியபதங்கண்மண்மிசைதாங்குருவண்ண
முன்னருமலர்கணைறியெலாஞ்செறித்தேயோதியிற்சோதிசெய்தொளிர
மன்னுபொற்பொடிகளாட்டிவிட்டனரான்மலர்த்திருவனையபெண்கொடிக்கே. ()

பொன்னிதழ்கமலப்போதினுக்ககலாப்புதுமணம்பொருத்தியபடிபோற்
கன்னலந்தீஞ்சொற்கன்னியைக்கோலங்கவினுறக்காட்டியபின்னர்
மின்னுறுமணியுங்கனகமுமனந்தம்வேதியர்பெறும்படிவிரைத்துத்
துன்னுகண்ணேறுசூழ்ந்திடாவண்ணஞ்சுற்றிநீராஞ்சனமெடுத்தார். (ஙஙு)

மன்னவனருளாற்கன்னியரநேகர்மணிக்குடைதாங்கிமுன்செல்லத்
தன்னிருமருங்குஞ்சாமரையிரட்டத்தவளவெண்பணிலமுன்னார்ப்ப
வன்னமுமயிலுங்கிளிகளும்பந்துமம்மனைகழன்முதலெவையு
மின்னனார்மருங்கிற்சுமந்துடன்வரவோர்விதானநீழலினிடைநடந்தாள். (ரு௪)

பழிதருமிடைகளிளமுலைப்பாரம்பாரமென்றளியினமொலிப்ப
மொழியுமேகலைகளரசர்நீர்நகையாமுன்னர்போம்போமெனக்கலிப்ப
வழுவின்மாமதவேடன்றொழில்செலுத்தவந்தனளெனச்சினந்தெழிப்ப
விழிவலைவீசிவேந்தர்மீன்படுப்பாள்வேள்விசெய்சாலைவந்தடைந்தாள். (ருரு)

வேறு.

* வந்தனர்குமரரியாரும்வருகெனமகிழ்ந்துபோற்றிச்
சந்தணிமுலையினாளைத்தாயினும்பரிவுகூர்ந்தோர்
கந்தனுமுவமையாற்றுக்காவலர்காமத்தீயி
னிந்தனமிடுவதேய்ப்பவேத்தவையேற்றினாரே. (ருசா)

* வெங்கழற்படைக்கைவீரர்விழிகளால்விளங்குமேனிப்
பொங்கழற்பிறந்தபாவைப்பொற்பினைப்பொலியநோக்கிப்
பைங்கழைத்தநுவோன்செங்கைப்பகழியாற்பாவமெய்தி
யங்கழற்பட்டநெய்போலனைவருமுருகினாரே. (ருஎ)

* மங்குலின்மங்குன்மூடிவயங்கொளிமறைந்துதோன்றுச்
செங்கதிர்ச்செல்வன்போலச்சீர்கெழுவடிவமாறி
யங்கவரிருந்ததன்மையறிந்தேதாசெறிந்தபொய்கைப்
பங்கயம்போன்றதாலப்பரிவுறுபாவைபார்வை. (ருஅ)

* மனக்கடுங்காதல்விம்மமாலைதாழ்புயங்கள்வாட
வெனக்கெனக்கென்றெண்றேமாந்திருந்தகாவலரைநோக்கிச்
சினக்கடமொழுகுங்கன்னக்களிற்றினான்றிட்டத்துய்ம
னினைக்கவுமரியதொன்மைறநினைவினோடுரைசெய்வானே. (ருகூ)

* சிலையிதுசிலீமுகங்களிவைகடுந்திருகைவேகத்
திலைமுகத்துழலுகின்றவெந்திரத்திகிரிநாப்ப
ணிலையிலாவிலக்குமஃதேநெஞ்சுறயாவனெய்தான்
கலைவவீரவற்கேயந்தக்கன்னியுமுரியளென்றான். (சா௦)

வேறு.

* இச்சொற்பழனப்பாஞ்சாலர்க்கிறைவன்புதல்வனியம்புதல்கேட்
டச்சொற்றத்தஞ்செவிக்குருமேறுகக்கலங்குமரவனார்
கச்சைப்பொருதுபுடைபரந்துகதித்துப்பணைக்குங்கதிராரப்
பச்சைக்குரும்பையிளமுலைமேற்பரிவாநாணம்பிரிவுற்றார். (சாக)

* கண்போலம்புநுதல்போலுங்கடுங்கார்முகமுங்காண்டொறுமத்
திண்போர்வேந்தர்மனக்கலக்கஞ்செப்புந்தகைத்தன்றானாலும்
விண்போயுழன்றுசுழலிலக்கைமெய்யேயெய்துவீழ்த்திமலர்ப்
பெண்போல்வாளைக்கைப்பிடிக்கும்பேராசையினார்பேதுற்றார். (சாஉ)

* திருந்தார்மன் றற்குழலணங்கின்செவிவித்தாயர்கடல்கடைந்து
வருந்தாவமுதநிகர்வாளைமயில்போற்கொண்டுமென்னவைபுக்
கிருந்தாரிருந்தகாவலரையின்னோரின்னோரிவரென்று
முருந்தார்பவளத்துவரிதழ்வாய்முகிழ்வாணகைக்குமொழிகின்றார். (சங)

* மாற்றம்பிறிதொன்றுரையானிவ்வன்போர்வில்லின்வலிநோக்கிச்
சீற்றஞ்சிந்தைகொண்டழலப்பொய்யேமலர்ந்ததிருமுகத்தா
னேற்றந்தன்னில்வேறொருவரிப்பேருலகிலிலரென்னத்
தோற்றம்படைத்தோன்றனைக்காட்டித்துரியோதனன்மற்றிவனென்றார். (சச)

* மணியின்கிரணவெயிலெறிப்பமண்ணேழ்தாங்குநச்செயிற்றுப்
பணியின்முடிநாயகத்தலையின்பாங்கேநிரைத்தபஃறலைபோற்
றுணியுங்கொடுமைவகிரன்னதுணைவர்துச்சாதனன்முதலோ
ரணியுங்கழற்காற்சுயோதனனுக்கருகாசனத்தரிவரென்றார். (சரு)

* உலைவந்தயருஞ்மன்மந்திக்குருகாநிலங்கீண்டுதவுகுலக்
கலைவன்பலவின்சுளைகீறிக்களிப்போடளிக்குங்காந்தாரத்
தலைவன்சகுனியிவன்கண்டாய்தக்கோராடாச்சூதுக்கு
நிலைவஞ்சனைக்குந்தரணிபரில்யாரேயிவற்குநிகரென்றார். (சசு)

* பேசாதொடுங்குபேரறிவாற்பெரும்போர்வலியாற்பிறப்பான்மெய்த்
தேசாலியற்றும்பலபடையாற்றிண்டோள்வலியாற்செஞ்சிலைக்கை
யாசான்மைந்தனிவன்றனக்கிங்காரேயுவமையமரரிலு
மீசானனைமற்றொருசிறிதொப்பெனலாமலலதில்லென்றார். (சஎ)

* பெண்மைக்கிரதியெனவந்தபெண்ணாரமுதேபேருலகி
லுண்மைக்கிவனேவலிக்கிவனேயுறவுக்கிவனேயுரைக்கிவனே
திண்மைக்கிவனேநெறிக்கிவனேதேசுக்கிவனேசிலைக்கிவனே
வண்மைக்கிவனேகன்னனெனுமன்னன்கண்டாய்மற்றிவனே. (சஅ)

* அலத்தான்முன்னம்பிளந்தபகையடர்ப்பான்கருதிப்பிளப்புண்ட
சலத்தால்யமுனைபிணித்ததெனத்தயங்கும்படிசேர்தானையினான்
குலத்தாலுயர்ந்தவசுதேவன்குமரன்களபக்கொங்கையர்மென்
னலத்தான்மகிழுஞ்சிந்தையினானறுந்தாரிராமனிவனென்றார். (சகூ)

* இந்தக்குரிசில்யதுகுலத்துக்கெல்லாந்தலைவனெனுமாறு
வந்துற்பவித்துப்பொதுவருடன்வளருங்கள்ளமாமாயன்
முந்தக்கஞ்சமாமனுயிர்முடித்தானிவர்க்குமுகிலூர்தி
யந்தப்புரத்திலாராமமந்தப்புரத்துக்காராமம். (ருo)

* தண்ணந்துளவோன்றனக்கிளவலிவன்காண்பின்னேசாத்தகியென்
றெண்ணும்போசகுலத்தலைவனெவருஞ்சூழவிருக்கின்றான்
கண்ணன்றன்னையவமதித்துக்கழறும்புன்சொற்கார்முகத்தைத்
திண்ணென்கருத்தானிங்கிவன்காண்சேதிப்பெருமான்சிசுபாலன். (ருக)

* தார்வண்டிமிருந்தேனொழுகுந்தடந்தோள்வீரன்சராசந்தன்
போர்வஞ்சகத்தால்யாவரையும்புறங்கண்டன்றிப்போகாதான்
சீர்வண்மதுராபுரிவிட்டுத்துவராபுரியிற்சென்றொதுங்கக்
கார்வண்ணனையுநெடுங்காலம்வென்றோனிவன்காணென்றாரே. (ருஉ)

* பனைக்கைப்பிறைவெண்கோட்டயிராவதமேபோலும்பகட்டிவன்
வினைக்கட்புகுந்தாலெதிர்நின்றுவேறாரிவனைவெல்கிற்பார்
முனைக்கண்செங்கட்டேயுமிழுமுகத்தான்மாதேபகதத்தன்
றனக்குத்தானேநிகரென்னத்தருக்கோடண்டேயிருக்கின்றான். (ருங)

* இவன்சல்லியனென்றுரைசான்றவிகல்வேன்மன்னர்க்கேறனையா
னிவன்றன்பகைவர்யாவரையுமிமையோராக்குமெழினீல
னிவன்றண்டமிழ்தேரடல்வழுதியிவன்றேரிரவிகுலவளவ
னிவன்செந்தழலோன்மரபாகியீரேழுலகும்புகழ்சேரன். (ருச)

* வில்லாண்மையினால்வெங்கருப்புவில்லோன்றனக்கேயெதிரென்னப்
பல்லார்புகலும்பான்மையினாற்பதினெண்புவிக்கும்பதியான
வெல்லாவரசுநின்பொருட்டாலீண்டேதிரண்டவின்னமுதச்
சொல்லாய்நல்லாய்மென்பூவாய்தோகாய்பாவாய்திரௌபதியே. (ருரு)

* இவரிற்றனதுதோள்வலியாலரியேறென்னவெழுந்திருந்தத்
தவரிற்புரிநாணுறவேற்றித்தழல்கான்முனைவெஞ்சாயகத்தாற்
பவரிற்செறியநிரைத்துருளும்பல்வாய்த்திகிரிப்பயிலிலக்கைக்
கவரிற்செழுந்தார்புனைந்தவனைக்கைக்கொண்டிடுநீகடிதென்றார். (ருசு)

வே று.

* முத்தநகைப்பவளவிதழ்க்குளிர்வெண்டிங்கண் முகத்தாளைக்கைத்தாயர் மொழிந்தகாலைச், சித்திரமொத்துணர்வழிந்து தத்தம்பைம்பொற் றிகழரியாசனத்திருந்தார்சிற்சில்வேந்த, ரத்தநுவின்பெருமையையுமிலக்கத்துள்ளவருமையையுங்கருதாமலாண்மைகூறி, யெத்தனையெத்தனைவேந்தராசைகூரயான்யானென்றெழுந்திருந்தார்யானைபோல்வார். (ருஎ)

* தனுவெடுத்துநாண்பிணிப்பான் கிளராநின்ற தன்குலத்திலவனிபுரைத்தடுத்துவேதப், பனுவலுக்குந்தவத்தினுக்குமுரியவேள்விப்பார்ப்பனமாக்களினிடையேபாண்டுமைந்த, ரனுவுருக்கொண்டுருமாறியிருந்ததன்மையறிந்தருளியலாயுதனோடருளிச்செய்தான்; மனுமுறைக்குவரம்பாகிவருத்தம்வீடமாநிலமேலவதரித்தவாசுதேவன். (ருஅ)

* பலருமுடனகங்கரித்துமேருச்சாரும் பாரவரிசிலையினிலைபார்த்துமீண்டார், பலருமொருகையிற்பிடிக்கவடங்காவில்லின்பருமைதனைக்குறித்துமனம்பதைக்கப்போனார், பலருமலர்க்கைப்படுத்திப்பெயர்க்கமாட்டார்பணைத்தோளுஞ்தமையுமெனப்பயந்துநின்றார், பலருமெடுத்தணிமணிநாண்பூட்டவாராப்பரிசொடுமெற்றதன்வலிமைபகர்ந்தேவிட்டார். (ருகூ)

* வல்லியம்போனடந்துதநுவிருகையாலும் வாரியெடுத்தெதிர்நிறுத்திம ல்லல்வாகுச், சல்லியனுநாணேற்றமுடியாதந்தத் தநுவுடனேதன்றநுவுந்தகர வீழ்ந்தான், வில்லியரின்முன்னெண்ணத்தக்கவின்மை வேந்தடுபோர்ச்சராசந் தன்வில்வேதத்திற், சொல்லியவாறெடுத்தூன்றிமற்றைக்கையாற் றொல்வலி நாணியுமெடுத்துத்தோளுஞ்சோர்ந்தான். (௬0)

* பூகதனுகியவன்றே பகைவரெல்லாம் போற்றவளந்துலகாளப் புனைந்த மௌலி, மாகதனும்வில்லெடுத்துவரிநாண்வில்லின் மார்பளவும்போக்கினனவ ன்போர்நீலன், சாகதனென்றவைதுதிக்கநெடுநாண்கொற்றத் தநுவொருசா ணெனக்கொணர்ந்தான்சாணேயல்ல, வேகதனுநால்விரலென்றுரைக்கநாணி வீக்கினன்வலம்புரித்தார்வேந்தர்வேந்தே. (௬௧)

* கலைவருத்தமறக்கற்றகன்னனெனுங் கழற்காளையரனிருந்தகயிலையென் னு, மலைவருத்தமறவெடுத்தநிருதனென்ன மன்னவையில்வலியுடனேவந்து தோன்றி, நிலைவருத்தமறநின்றுபரியகோல நீள்வரிநாண்மயிர்க்கடைக்கீழ்நின் றதென்னச், சிலைவருத்தமறவளைத்துவளைந்தவண்ணச் சிலைக்காறன்முடித்தலை யைச்சிந்தவீழ்ந்தான். (௬௨)

* அரவநெடுங்கொடியுயர்த்தோன்முதலாயுள்ள வனைவருமங்கொருதநுவு க்காற்றாராகி, யுரவுமெலிந்தெழின்மாழ்கிச்செயல்வேறின்றி யுள்ளமழிந்தெர் ழிந்ததற்பினுருமேறென்னக், கரவுடனந்தணர்நாப்பணிருந்தகொற்றக் கருமு கில்வாகனன்புதல்வன்கரியமேனி, யிரவிகுலச்சிறுவனைப்போலெழுந்துமன்ற லிளங்கொடிதம்முனைநோக்கியியம்பினனே. (௬௩)

* மன்மரபிற்பிறந்திருதோள்வலியாலிந்தமண்ணுளுமவர்க்கன்றிமறைநூ ல்வாணர், தொன்மரபிற்பிறந்தவருமிலக்குவீழ்த்தாற் சூட்டுமோதொடையலி ளங்தோகையென்னத், தன்மரபுக்கணிதிலகமானவீரன் றகவன்றேமன்றலு க்குத்தாழ்வோவென்றான், வின்மரபிற்சிறந்தநெடுவில்லையீசன் மேருகிரியெடு த்ததெனவிரைவிற்கொண்டான். (௬௪)

* கிளர்மகுடவயவேந்தர் நாண்களெல்லாங் கீழாகத்தனிநெடுநாண்கிளர வேற்றித், தளர்வறுசாயகந்தொடுத்துக்கற்றோர்யாருந் தநுநூலுக்காசிரியன் றானேயென்ன, வுளர்திகிரிச்சுழலிலக்கையவையோர்தங்களுக்கமுடன்விழவெ ய்தானுரவுத்தோளான், வளருமருந்தவவேள்விமுனிவரார்த்தார் வாசநறுமலர் சொரிந்துவானோரார்த்தார். (௬௫)

* தாஞ்சாரற்கரியதநுவளைத்தானென்று தரணிபர்தம்முகங்கருகத்தநுவி னோடும், பூஞ்சாரன்மணிநீலகிரிபோனின்ற பூசுரனையிவனவனேபோலென் றெண்ணிப், பாஞ்சாலப்பதிக்கன்னியிருதன்செங்கட் பங்கயத்தாற்பாங்காகப் பரிந்துநோக்கித், தேஞ்சாரனறுங்கழுநீர்ச்செய்யதாமஞ் செம்மணிகாலருவி யெனச்சேர்த்தினளே. (௬௬)

* அந்தரதுந்துமிமுழங்கச்சங்கமார்ப்ப வானகதுந்துபிமுதல்வனுதியாக, வந்திருந்தபேரவையைமதியானுகி மாலையிடுபசுஞ்செம்பொன்மாலையோடுஞ், சந்திரனுமுரோகணியுமென்னமுன்னர்த் தானவளைத்தடஞ்சிலைகைத்தலத்தி லேந்தி, யிந்திரசூனுவுமெழுந்தாங்கேகலுற்று னிருபரமுந்துணைவர்வரவிணை யிலாதான். (சுஎ)

* பார்ப்பானன்வந்தொருகோடியரசைச்சேரப் பரிவித்துப்பாஞ்சாலன்பயந் ததெய்வச், சீர்ப்பாவைதனைவலியாற்கொண்டுபோகச் செயலின்றியிருந்தீரென் செய்தீரென்று, வேர்ப்பாடுநுதல்சிவந்தவிழியனாகி விழியிலான்மகன்கழறவெ குண்டுமேன்மே, லார்ப்பாகக்கொதித்தெழுந்ததுகாந்தகாலத் தார்க்குமகரால யம்போலரசரீட்டம். (சுஅ)

* முருத்தவர்ணகைத்துவர்வாய்முகத்தினாளை மூத்தோன்பின்னிருத்திய மர்முருக்குமாறு, மருத்துவான்றிருமகனுமருத்தின்செல்வ மைந்தனுமேபுரிந் திட்டார்மறையோருள்ளா, ருருத்துவாய்மடித்தெழுந்துகோகுதட்டிட்டுன்றிய தண்டெதிரோச்சியுடன்றவேந்தர், கருத்துவார்த்தகவெருக்கொண்டோடவோ டக்கையுரங்காட்டினர்வளர்த்தகனலேயன்னார். (சுகூ)

* மிகைத்தமுனிவரர்முனிந்தவுறுதிநோக்கி வென்றெடுத்தவிற்றடக்கை விசயன்சற்றே, நகைத்துநகைத்தவரவரைவிலக்கியென்முன் னமன்வரினும்பி ளப்பலெனநவிலாநின்றான், புகைத்தகனல்விழிக்கன்னன்றருக்காலெள்ளிப் பூ சுரனென்றவமதித்துப்புனைவில்வாங்கி, யுகைத்தபகழியுமுகைத்தோனுரனுந் தன்கையொருகணையாலுடல்பிளந்தானுருமேறொப்பான். (எ0)

* குன்றான்மெய்வகுத்தனையவீமன்றன்மேற் கொல்லியல்செய்சல்லியனை க்குத்திவீழ்த்திக், கன்றான்முன்விளவெறிந்தகண்ணனென்னக்கான்முடியொ டுறவளைத்துவான்மேல்வீசி, நின்றான்மற்றவனயலேதெறித்துவீழ்ந்து நெஞ் சொடிந்தானிருவருமுன்னில்லாராகி, வென்றலுந்தோற்றலும்வசையேவெம் போர்வேதியரோடேற்றலெனமீண்டுபோனார். (எக)

வேறு.

* வண்ணனுமுனிவரல்லர்மருத்துவான்மருத்துநல்கு
மண்ணலங்குமரராமென்றயிர்ப்புறுமரசர்யாருங்
கண்ணனால்விலக்கப்பட்டுக்கடிநகர்தோறுந்தங்க
ளெண்ணமும்பயனும்வேறுயெய்தினரென்பமன்னோ. (எ௨)

* அன்றிலக்கெய்தகோவுந்துணைவருமானவெம்போர்
வென்றுகொற்றவையோடொக்குமின்னிடைப்பொன்னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்கம்மிசெழுமனைமுன்றிலெய்தி
யின்றுபெற்றனமோரையமென்செய்வதினையென்றார். (எ௩)

* உள்ளிருந்தன்னைமைந்தருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள்சேரநீருந்துமென்னுப்
புள்ளினமொடுங்குமாலைப்பொழுதிவள்புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக்கரும்பெனவிரும்பிக்கண்டாள். (எ௪)

* என்னினைந்தென்சொன்னேன்மற்றென்செய்தேனென்றுசோரு
மன்னையைவணங்கிநின்சொலாரணப்படியதாகு
நின்னினைவன்றலெங்கணெஞ்சினுநினைவுண்டென்றான்
றன்னிகரிலாதகேள்விச்சான்றசீர்த்தருமனென்பான். (எ௫)

* பாரனைத்தினுந்தன்னுமம்பரப்பியபார்த்தனென்னும்
வீரனைப்பயந்தபாவைவிதிவழியிதுவென்றெண்ணி
மாரனுக்கரசுநல்குமங்கையுந்தானுமந்தக்
காரினைத்தொடுங்குலாலன்கடிமனையகத்திருந்தாள். (எ௬)

வேறு.

கலங்கிமன்னர்கழிந்திட
வலங்கொள்கையனொடருளுடை
நலங்கொடேவகிநந்தன
னிலங்குமவ்விடையெய்தினான். (எஎ)

சொன்னதந்தைபிற்றோற்றினான்
பொன்னடித்துணைபோற்றியே
தன்னின்முந்துதமீ இயினொ
ரன்னமைத்துனராரையும். (எஅ)

சிந்தையன்புசிறந்திட
வந்தணாளரினங்குறை
மைந்தர்மாதுலன்மைந்தரோ
டுந்துகாரியமுளதெலாம். (எ௯)

இனிமையோடுமியம்பினார்
தனிமையாழிதரித்தவன்
நனிமனந்தனிஞாடியே
முனிமைமுன்னவற்கோதுவான். ()

வாழ்வுதங்குமடக்கொடி
வேழ்விகண்டுவியப்புறத்
தாழ்வினன்னகர்சார்ந்துமீண்
டேழ்வரும்பகலெய்துவேன். (அ௧)

முற்றும்வேள்விமுடிந்தபின்
மற்றுமுள்ளனவாறெலா
முற்றமன்னவனோடிருந்
தற்றையெண்ணுதலாமென. (அ௨)

ஓதியைவரொருப்படக்
காதலன்புகரைத்தவர்
மீதுமன்பில்விடுத்திடச்
சோதிதன்பதிதுன்னினான். (அ௩)

கண்ணனுங்கலைமாமதி
வண்ணனும்புறம்வந்தபின்
மண்ணருந்தொழில்வல்லவன்
றண்ணகந்தனிற்றங்கினார். (அ௪)

வேறு.

மன்குலத்தவையிற்றோற்றிமதிக்குலக்குமரன்வெல்கத்
தன்குலக்குமரன்வேந்தன்றநயனுக்கிடைதல்கண்டே
மின்குலக்கரங்களெல்லாம்விளங்குறத்தொடுக்கிநாணி
யன்குலக்குடபாற்குன்றின்மறைந்ததொத்திரவிசென்றான். (அ௫)

விசையன்றன்வாளியொன்றால்விபாகரன்மைந்தன்மார்பந்
தசையறச்சிவந்ததேபோற்செக்கர்வான்றயங்கிற்றிப்பாற்
பசையறுமரவுயர்த்தபார்த்திபன்பாண்டுதந்த
விசையினரோவென்றுள்ளமிருண்டதொத்திருண்டதெங்கும். (அ௬)

கணஞ்செய்சஞ்சலைவேற்காளைக்கடுவரவுயர்த்தகோமான்
முனஞ்செய்கைதவத்தின்கங்குன்முகங்கெடமுனைவெல்வேந்த
ரினஞ்செய்தாரகைகளெல்லாமழுங்கிடவவையினெய்துந்
தனஞ்செயமதியமேபோற்சந்திரனுதயஞ்செய்தான். (அஎ)

அற்புடைத்துருபதேயனளித்தசெங்காந்தளங்கைக்
கற்புடைச்சாலியொவ்வாக்கன்னிகைப்பிடித்தகாலை
பொற்புறுபாண்டுதந்தபுத்திரர்நடுவனென்னுஞ்
சொற்புவிவிரிதலேபோற்றாய்நிலாவிரிந்ததெங்கும். (அஅ)

அவ்வயினரசர்போற்றுமருளுடைத்துருபதேயன்
வெவ்வலிமிகுந்தமைந்தன்விறற்றிட்டத்தூய்மன்றன்னைக்
கொவ்வைவாய்மாதினோடுகுறுகியமறையோர்தங்க
ளொவ்வறுசரிதந்தேறவுணர்ந்துமீள்கெனவிடுத்தான். (அக)

ஒருவருமுணராவண்ணமுயர்குலக்குமரனெய்திப்
பொருவறுகுலாலன்வாழ்வுபொருந்துமில்லகத்திற்சேர்ந்தே
திருவருமிவர்தங்கேண்மைச்செயலெலாந்தெரிந்துமீண்டே
மருவருமாலைமன்னன்வயினடைந்துரைக்கலுற்றான். (க௦)

கோதறுமாண்பின்மிக்ககுலக்கொடியுடன்குலால
னோதுமில்லகத்தினெய்தியுற்றவர்க்கன்னைதன்னை
வேதியர்வணங்கிவைகவிறலுடைத்துவரைமன்னன்
மாதவனடைந்துமீண்டுமாநகர்போந்தபின்னர். (கக)

வைகினரிரவுதோற்றிவயங்கியபின்னராங்கு
மெய்கிளரிலக்குவீழ்த்தவேதனுமுடன்போர்செய்த
கைகிளரொருவன்றானுங்கடிநகர்மறையோர்வாழு
மைகிளர்மனைகளெய்தியரும்பலிதந்தாரன்றே. (கஉ)

மற்றவர்கொணர்ந்தளித்தவான்பதமதனையாங்க
ணுற்றுதாயுரையின்வண்ணம்யாமெலாமுய்யவந்த
பொற்றொடியகிர்ந்தாள்பாதிபொருவறவொருவனுக்குஞ்
சொற்றுளநால்வருக்குமருத்தமுந்துய்க்கவென்றே. (கஙு)

சேடமுள்ளனவிரண்டுகூறுறச்செய்துமாமி
யாடகப்பதுமைபோன்றவணங்கினுக்கொருகூறீந்து
பீடமையொருகூறன்னோடுய்த்தபின்பெரிதுவந்தே
நீடியகரங்கள்பூசிநேயமோடிருந்தபின்னர். (கச)

மூப்புடையொருத்திவாய்மைமுறைவழாள்சீர்த்திகொண்டே
பார்ப்பனரைவராளோர்பரிவுடன்றுயில்பொருந்தக்
கோப்புடைச்சயனம்வேறுவேறுகொண்டமைத்துக்குன்றாத்
தாய்ப்பரிவுடையமாமிதனக்குமோர்சயனமீந்தாள். (கரு)

அன்னவளருகிற்றானுமருந்துயில்பொருந்துகின்றாண்
மின்னிகர்நினதுபாவையென்னலும்வேந்தன்கேட்டே
தன்னிகரிலாதவாழ்விற்படர்ந்தவள்பலிபோய்த்தந்த
வன்னந்துய்த்திடுபோதுள்ளந்துன்புண்டோவறைதியென்றான். (கசா)

பலிகொணர்ந்துய்த்தபோதும்பகிர்ந்தவர்க்கருத்தும்போதுங்
குலனுடைமாமிதந்தகூறுதானுகரும்போதும்
வலியுடைக்கனலில்வந்தாண்மகிழ்வுடனிருந்தாளன்றிச்
சொலவொருவெறுப்பிலென்றுன்மன்னவன்றுணிந்துசொல்வான். (கூஎ)

பாண்டுநந்தனரேயன்னூர்பயந்ததாயவளேயாகு
மீண்டுறுமணங்களுண்மேலெய்தரும்வாழ்வினுழ்வான்
பூண்டவிப்பலியினன்னம்புத்தமுதெனநுகர்ந்தான்
மீண்டினித்தெரிதுநாளையெனச்சொலிவிடுத்திருந்தான். (கூஅ)

வேறு.

தெரிந்தரியகாமத்தினலனுகருமாதருக்கோர்தியக்கங்காட்டிப்
பரிந்தரியகாதலனைப்படருமூழ்ப்போர்க்கேம்பலெனும்பயனைக்காட்டி
விரிந்தபுகழ்ப்பாஞ்சாலன்சஞ்சலவல்லிருடனக்கோர்விளக்கங்காட்டிப்
புரிந்தவுதயக்குவட்டிற்பொலிந்தெழுந்தான்பச்சையெழுபுரவித்தேரோன். ()

புரவலனுமவைப்புறத்தினினிதிருந்தேபுதனைநிகர்புலமைமிக்க
பரவரியமறைமுனியைமீளவிடுத்தனனவனும்பருவினெய்திக்
கரவுணராதவர்நீவிருள்ளபடிகுலங்குடிகள்கருதுநாம
முரியநகர்முதலவெலாமரசுணரவுரைத்திடுதலுறுதியென்றான். (க00)

தனதருமைத்திருமகளைத்தரும்போதுகுலங்குடிகடக்கபெற்றி
யினிதுறவேவினவுதனல்லுணர்வுடையோர்கடனொருவர்க்கீந்தபின்னர்
மனதுறுதிசெய்யாமற்சஞ்சலித்தன்மன்னவர்க்குவழக்கமாமோ
புனிதமுனிநீசென்றுபோர்வலனைத்தெருட்டியெனப்போக்கினனே. (க0க)

அத்தன்மைபாஞ்சாலநாட்டரசன்றனக்குரைப்பவறிதுமென்றே
தத்துவரிவிற்றூணிசாயகங்கள்பலபண்டந்தன்னோடெல்லா
முத்தமருக்களித்தனுப்பவுகந்தைவரிரப்பவருக்குவப்பினல்கிச்
சித்திரவிற்கணைத்தூணிகைக்கொண்டாரதனைலுந்தெளிந்திலானே. (க0உ)

வருணமொருநான்கினுக்கும்வகுத்தமைத்தநெடுந்தேர்கள்வழங்கியந்தப்
ப[illegible]ணிதரைக்கொடுவாவென்றுயர்குமரன்றனையேவப்பாண்டுமைந்த
ரருணவொளிதிகழ்தமதுகுலத்தேரினிடையிருந்தாரவனிமாதுங்
கருணைபொழிதிருமாதுங்கடுப்பவருமோர்தேரிற்கலந்துற்றாரே. (க0ந)

எதிர்த்தவர்கள்புயவலியுமிசையுமணியெனச்சூடுமெழில்சேர்மன்னர்
கதித்தகுழலணங்குடனுந்தாயுடனுமரசவைபோய்க்கலந்தகாலை
மதத்திகழுநறுந்தெரியன்மாலரசனெதிரடைந்துவரைபோன்மிக்க
புதுக்கதிர்செய்மணித்தோள்கள்புளகமெழத்தழுவினனுற்புகழான்மிக்கோன்.

தேரிழிந்துபாண்டவருந்திறலரசன்றனைத்தழுவித்திகழுமேமக்
காரிழிந்துகண்படுமண்டபத்திடையோர்மணித்தவிசிற்காட்சியோடு
மேரிழிந்துபொழிவதனரிருந்தனர்நற்கௌந்தியுமுன்னெறியிற்றோற்றும்
வாரமுந்துமுலைமாதுமன்னவனந்தப்புரம்போய்வைகினாரே. (கட௫)

பார்வேந்தர்புகழ்பஞ்சபாண்டவரேயெனுமுறுதிப்பற்றொன்றல்லாற்
சீர்வேந்தன்மனத்தையங்கழன்றிலையாலுற்றதுரைசெய்யவென்றே
கார்வேந்தகரத்தினரோடுரைத்திடலுமறக்குமரன்கருணைபூத்துத்
தார்வேந்தர்தமக்கெதிரேதனதுதொல்லைத்திருக்கோலந்தயங்கினனே. (க0சு)

மற்றவருந்தமதுருவம்வல்விரைந்துமறைத்துமுன்னர்வடிவமாகக்
கொற்றவனுழலவைப்புறத்தினுள்ளோருங்கண்ணின்மனங்குளிர்ந்தார்முன்ன
ருற்றசரிதங்களெலாமுகந்தறத்தின்மகனுரைப்பவொருவன்கேட்டே
வெற்றிதருவதுகாணினல்வினையலாதுண்டோவிளம்பினென்றான். (க0எ)

மறமிகுந்தவிரகாலுஞ்சூதாலுமன்னன்மகன்மயக்கிற்செய்தா
னறமிகுந்தகாரணத்தானிரவிமுனம்பனியென்னலாயதாம
னிறமிகுந்தவேற்பார்க்குங்கைத்தலத்தீர்நுமைக்காணுநேயத்தாலே
திறமிகுந்தமடமாதுக்கணிமன்றல்புரிந்ததெனத்தெளிவித்தானே. (க0அ)

வேறு.

* கைவருசிலையின்வென்றுகைப்பிடித்தவனுக்கின்றே
மைவருகண்ணினாளைவதுவைசெய்திடுதுமென்ன
நெய்வருமுனைகொள்கூர்வேனிருபனைநோக்கியாங்க
ளைவரும்வேட்டுமென்றானசைவிலாவறத்தின்மைந்தன். (க0௯)

* தருமன்மாமதலைசொல்லாற்றளர்வுறுங்காலைமாலை
நிருபநின்மனத்திலையநீக்குகநீக்குகென்னாத்
துருபதன்முன்னர்வந்துதோன்றினன்சுருதியாவும்
விரைமலர்விதியின்மிஞ்சவிதித்தருள்வியாதனென்பான். (கக0)

* தொழுதுபொற்றவிசிலேற்றிச்சூழ்ந்தனரிருந்துகேட்ப
முழுதுணர்கேள்விஞானமுனிகுலத்தரசுபோல்வான்
பழுதறுகன்னிதன்னைப்பாண்டவரைவருக்கு
மெழுதருமறையின்வேள்வியியற்றுதற்கியற்கைகேண்மோ. (ககக)

வேறு.

* மூளாரழலுற்பவித்தாளிவண்முற்பவத்தி
னாளாயனியென்றுரைசால்பெருநாமமிக்காள்
வாளார்தடங்கணவட்காரணவாணர்க்கென்றுங்
கேளான்மௌற்கல்லியனென்பவன்கேள்வனானான். (ககஉ)

* காதிற்கலந்தகடைக்கண்ணிதன்கற்புமன்புஞ்
சோதித்தலுன்னித்தணியாததுவக்குநோயன்
கோதித்தநெஞ்சன்பெருமூப்பினன்கூர்ந்துநாளும்
வாதித்தலின்றிமகிழாமனைவாழ்வுபூண்டான். (ககங)

* கச்சிற்கடங்காமுலையாளக்கணவனுண்ட
மிச்சிற்புறத்துவிரல்வீழவும்வீழ்தன்மிஞ்சிக்
குச்சித்தலின்றிநுகர்ந்தாள்கொடுங்காமநோய்கொண்
டிச்சித்தவின்பநுகராமலிளைத்தமெய்யாள். (ககச)

* அன்பன்றெறிவைவழிபாடுகண்டார்வமெய்தித்
துன்பம்பயந்தபிணியாலழிதோற்றமாற்றித்
தன்பங்கையீசன்றிறைநல்கமுன்சாபம்வாங்கும்
வன்பன்றனக்குங்கிடையாதவடிவுகொண்டான். (ககரு)

* மின்னேயுனக்குமிருகற்புடையீனுமொவ்வா
ளின்னேவரம்வேண்டுவவேண்டுகவீண்டையென்ன
நின்னேயமென்றும்பிரியாநலனேர்கவென்று
டன்னேரிலாதமனைவாழ்விற்றவத்தின்மிக்காள். (ககசு)

* குன்றுநதியுமரனும்பைங்கொடியுமாகித்
துன்றுந்துணையாய்ப்பலயோனிகடோறுமெய்தி
நின்றுஞ்சரித்துமரும்போகநெடிதுதுய்த்தா
ரென்றும்பிரியாதிருவோருமிதயமொத்தே. (ககஎ)

* இந்தப்பிறப்பினலமெய்தியிறந்தபின்னுஞ்
சித்தித்தவண்ணமிவளிந்திரசேனையாகி
யந்தப்பதியையடைந்தாண்மற்றவனுமஞ்சி
வந்தித்ததொல்லையருமாதவமன்னிநின்றான். (ககஅ)

* அன்னானகலவவன்மேலவளாசைமிஞ்சி
யென்னோபுரிவதினியென்றனுமேந்தல்கூற்றாற்
றன்னோர்வடிவினொருகூறொருதையலாளு
முன்னோனைநோக்கித்தவஞ்செய்தனண்மூரல்வாயாள். (ககக)

* ஐந்தானனத்தோனருள்செய்யவழகின்மிக்கா
ளைந்தானசொல்லாற்கணவற்றருகையவென்று
ளைந்தானசொல்லானளித்தான்மற்றவனுமுன்னு
ளைந்தானபோகமிவளெய்தியவாறறிந்தே. (கஉ0)

* முன்னின்றதேவன்மொழியின்படிகங்கைமூழ்கித்
தன்னந்தனிநின்றழுகின்றவத்தையல்கண்ணீர்
பொன்னங்கமலவனமானபுதுமைநோக்கி
யென்னென்றிவளையிமையோர்பதியெய்தினனே. (கஉக)

* அவளைத்தொடர்பால்வருகென்னவவனுமாங்கட்
சிவனைச்சிறிதுமதியாதெதிர்சென்றகாலை
யிவனுக்கென்மேன்மையெனச்சீறனுமெஞ்சினன்போற்
புவனத்தெவருநகையாடப்புலம்பிவீழ்ந்தான். (கஉஉ)

* வெவ்வாயுதங்களுத்வாமல்விபுதநாத
னிவ்வாறுவீழமழுவாளியிமைப்பின்மீண்டு
மவ்வாசவற்குப்பிலமொன்றில்லடைந்தவச்சிரக்
கைவாசவர்களொருநால்வரைக்காட்டினனே. (கஉ௩)

* வன்பாதலத்தில்வருநால்வரும்வானின்வந்த
புன்பாகசாதனனுந்தன்னடிபோற்றிநிற்ப
வன்பான்மகிழ்நரிவட்கைவருமாதிரென்று
மென்பாவைபங்கன்விதிக்கப்புவிமீதுவந்தார். (௧உ௪)

* தருமன்பவனன்றினாதன்றனேயர்தம்பால்
வருமிந்தநால்வரவர்நால்வருமாலேமார்பா
தெருமந்தவிந்தச்சிலைவீரனித்தேவர்க்கெல்லாம்
பெருமன்பிறப்பிற்கவனேமுன்பிதாவுமானுன். (௧உ௫)

* இம்மாதுதொல்லையருமாதவத்தெல்லேகண்ட
வம்மாதிவள்காதலரைவருமாகவென்று
தெம்மாதர்முற்பூண்கவர்மன்னன்றெளியுமாறு
வெம்மாதவத்தோன்பெருஞானவிழியுமீந்தான். (௧உ௬)

* ஓதாதுணர்ந்துமறைநாலுமுருவுசெய்த
வேதாவுமொவ்வாவியாதன்மொழிவெள்ளநீராற்
கோதானநெஞ்சைக்குளிப்பாட்டினன்கோடிகோடி
தோதானவண்டுதுதைமாலேத்துருபதேயன். (௧உ௭)

* வியப்போடுதொல்லேமுனிசொற்றலேமீதுகொண்டு
பயப்போன்மகண்மேற்புரிகின்றபரிவினுக்கும்
வயப்போர்நிருபர்பெருமைக்கும்வலிக்குமீடா
நயப்போடுமன்றலயர்வித்தனனங்கொர்நாளில். (௧உ௮)

வெற்றித்துவரைநகர்நாயகன்மேவவென்றே
கொற்றக்கரடஞ்சொரியானைக்குழாங்கொள்வேந்தன்
சொற்றுத்தனதுபரிவோலையுந்தூதுமேவ
மற்றைத்தினமேமணிவண்ணன்மகிழ்ந்தடைந்தான். (௧உ௯)

கதிராயிரங்கடிகழ்மாறுகடுத்தசோதிச்
சதிராரணிகண்முடியோடுதயங்கவேந்தி
யதிராமதுகையடலேவருமாரணங்கும்
விதிராதணியும்படிதந்தனன்வியப்பினோடும். (௧௩0)

* பாடுஞ்சுருதிமறைவாணரும்பாரிலுள்ள
சூடுங்கனகமுடிவேந்தருந்தொக்குநிற்ப
நீடுங்கனமாமணித்தூணிரைத்தபத்தி
யாடுங்கொடிமண்டபமெய்தினரண்டர்போல்வார். (௧௩௧)

* குறிக்கும்பணிலமுதலாயிரகோடியாகப்
பிறிக்குங்கருவியிடந்தோறும்பிளிறியார்ப்பச்
செறிக்குங்கழற்காலறன்மைந்தனைச்செம்பொன்வேதி
யெறிக்குங்கிரணமணிப்பீடமதேற்றினரே. (௧௩உ)

* அன்பன்றெறிவைவழிபாடுகொண்டார்வமெய்தித்
துன்பம்பயந்தபிணியாலழிதோற்றமாற்றித்
தன்பங்கையீசன்றிறைநல்கமுன்சாபம்வாங்கும்
வன்பன்றனக்குங்கிடையாதவடிவுகொண்டான். (ககடு)

* மின்னேயுனக்குமிருகற்புடையீனுமொவ்வா
ளின்னேவரம்வேண்டுவவேண்டுகவீண்டையென்ன
நின்னேயமென்றும்பிரியாநலனேர்கவென்று
டன்னேரிலாதமனைவாழ்விற்றவத்தின்மிக்காள். (ககசு)

* குன்றுநதியுமரனும்பைங்கொடியுமாகித்
துன்றுந்துணையாய்ப்பலயோனிகடோறுமெய்தி
நின்றுஞ்சரித்துமரும்போகநெடிதுதுய்த்தா
ரென்றும்பிரியாதிருவோருமிதயமொத்தே. (ககஎ)

* இந்தப்பிறப்பினலமெய்தியிறந்தபின்னுஞ்
சித்தித்தவண்ணமிவளிந்திரசேனையாகி
யந்தப்பதியையடைந்தாண்மற்றவனுமஞ்சி
வந்தித்ததொல்லையருமாதவமன்னிநின்றான். (ககஅ)

* அன்னோனகலவவன்மேலவளாசைமிஞ்சி
யென்னோபுரிவதினியென்றலுமேந்தல்கூற்றுற்
றன்னோர்வடிவினொருகூறொருதையலாளு
முன்னோனைநோக்கித்தவஞ்செய்தனண்மூரல்வாயாள். (கககூ)

* ஐந்தானனத்தோனருள்செய்யவழகின்மிக்கா
ளைந்தானசொல்லாற்கணவற்றருகையவென்று
ளைந்தானசொல்லானளித்தான்மற்றவனுமுன்னு
ளைந்தானபோகமிவளெய்தியவாறறிந்தே. (கஉ0)

* முன்னின்றதேவன்மொழியின்படிகங்கைமூழ்கித்
தன்னந்தனிநின்றழுகின்றவத்தையல்கண்ணீர்
பொன்னங்கமலவனமானபுதுமைநோக்கி
யென்னென்றிவளையிமையோர்பதியெய்தினனே. (கஉக)

* அவளைத்தொடர்பால்வருகென்னவவனுமாங்கட்
சிவனைச்சிறிதுமதியாதெதிர்சென்றகாலை
யிவனுக்கென்மேன்மையெனச்சீறலுமெஞ்சினன்போற்
புவனத்தெவருநகையாடப்புலம்பிவீழ்ந்தான். (கஉஉ)

* வெவ்வாயுதங்களுதவாமல்விபுதநாத
னிவ்வாறுவீழமழுவாளியிமைப்பின்மீண்டு
மவ்வாசவற்குப்பிலமொன்றில்டைந்தவச்சிரக்
கைவாசவர்களொருநால்வரைக்காட்டினனே. (கஉ௩)

* வன்பாதலத்தில்வருநால்வரும்வானின்வந்த
புன்பாகசாதனனுந்தன்னடிபோற்றிநிற்ப
வன்பான்மகிழ்நரிவட்கைவருமாதிரென்று
மென்பாவைபங்கன்விதிக்கப்புவிமீதுவந்தார். (கஉ௪)

* தருமன்பவனன்றினநாதன்றனையர்தம்பால்
வருமிந்தநால்வரவர்நால்வருமாலைமார்பா
தெருமந்தவிந்தச்சிலைவீரனித்தேவர்க்கெல்லாம்
பெருமன்பிறப்பிற்கவனேமுன்பிதாவுமானான். (கஉ௫)

* இம்மாதுதொல்லையருமாதவத்தெல்லைகண்ட
வம்மாதிவள்காதலரைவருமாகவென்று
தெம்மாதர்முற்பூண்கவர்மன்னன்றெளியுமாறு
வெம்மாதவத்தோன்பெருஞானவிழியுமீந்தான். (கஉ௬)

* ஓதாதுணர்ந்துமறைநாலுமுருவுசெய்த
வேதாவுமொவ்வாவியாதன்மொழிவெள்ளநீராற்
கோதானநெஞ்சைக்குளிப்பாட்டினன்கோடிகோடி
தோதானவண்டுதுதைமாலைத்துருபதேயன். (கஉ௭)

* வியப்போடுதொல்லைமுனிசொற்றலைமீதுகொண்டு
பயப்போன்மகண்மேற்புரிகின்றபரிவினுக்கும்
வயப்போர்நிருபர்பெருமைக்கும்வலிக்குமீடா
நயப்போடுமன்றலயர்வித்தனனங்கொர்நாளில். (கஉ௮)

வெற்றித்துவரைநகர்நாயகன்மேவவென்றே
கொற்றக்கரடஞ்சொரியானைக்குழாங்கொள்வேந்தன்
சொற்றுத்தனதுபரிவோலையுந்தூதுமேவ
மற்றைத்தினமேமணிவண்ணன்மகிழ்ந்தடைந்தான். (கஉ௯)

கதிராயிரங்கடிகழ்மாறுகடுத்தசோதிச்
சதிராரணிகண்முடியோடுதயங்கவேந்தி
யதிராமதுகையடலைவருமாரணங்கும்
விதிராதணியும்படிதந்தனன்வியப்பினோடும். (க௩0)

* பாடுஞ்சுருதிமறைவாணரும்பாரிலுள்ள
சூடுங்கனகமுடிவேந்தருந்தொக்குநிற்ப
நீடுங்கனமாமணித்தூணிரைத்தபத்தி
யாடுங்கொடிமண்டபமெய்தினரண்டர்போல்வார். (க௩க)

* குறிக்கும்பணிலமுதலாயிரகோடியாகப்
பிறிக்குங்கருவியிடந்தோறும்பிளிறியார்ப்பச்
செறிக்குங்கழற்காலறன்மைந்தனைச்செம்பொன்வேதி
யெறிக்குங்கிரணமணிப்பீடமதேற்றினாரே. (க௩உ)

* இடத்தோளிவட்கும்வலத்தோளவ்விறைவனுக்குந்
திடத்தோடுரைத்தகுறியின்பயன்சேர்ந்துதோய
விடத்தோடமுதங்கலந்தென்னமிளிரும்வேற்கண்
வடத்தோடுவிம்முமுலையாளைவலத்தில்வைத்தார். (கூ௩)

* கேள்விக்கொருவனெனுந்தவுமியன்கோதவேத
வேள்விக்குவேண்டுவனயாவும்விதியினீட்டி
மூள்வித்தசெந்தீக்கரியாகமுரசுயர்த்த
தாள்வித்தகற்குவரமானசடங்குசெய்தார். (கூ௪)

* பன்மங்கலமுமுடன்வைகியபண்பினாளை
நன்மங்கலப்பூண்டுகிலோடுநயந்துசாத்தித்
தன்மங்கலந்தமனத்தோனையத்தையலோடுந்
தென்மங்கலஞ்செஞ்சுடர்த்தீவலஞ்செய்வித்தாரே. (கூ௫)

* கங்குற்பவளவனமீதுகடற்றரங்கம்
பொங்கித்தரளத்திரள்சிந்திப்பொழியுமாபோ
லங்கிப்புறத்துத்திருக்காப்பணியங்கையேந்திச்
செங்கட்கரியகுழலாள்பொரிசிந்தினாளே. (கூ௬)

* இவ்வாறுமன்றலயர்வித்தபினீன்றகாதல்
வெவ்வாரழலினிறைசான்றெனமீண்டுமீண்டு
மைவாரளகவடமீனிகர்கற்பினாளை
யவ்வாறுமற்றையொருநால்வருமன்றுவேட்டார். (கூ௭)

* மாரன்கரும்புவளரும்படிவார்த்தநீரா
வீரம்புலராக்கரத்தோருக்கியாகசேனன்
றேரும்பரிவுங்களிறுந்திரள்சேனையாவும்
பாருந்தனமுமுமதென்னப்பலவுமீந்தான். (கூ௮)

வேறு.

தாமத்தின்புயன்றன்னகரத்திடை
நாமத்தைவருநாண்முறையாகவே
வாமத்தையன்மகிழ்ந்திடநூல்வழாக்
காமத்தின்பநுகர்ந்துறுகாலையில். (கூ௯)

* ஆண்டுமன்றல்பெற்றங்குரித்தாரிகற்
பாண்டுமைந்தரெனுஞ்சொல்பரம்பலுந்
தாண்டுவெம்பரித்தேர்த்திரிதராட்டிரன்
றாண்டுந்தூதர்கள்சொற்றிடத்தேறினான். (கசo)

* விரோசனக்கதிர்மைந்தனும்வேந்தனுஞ்
சரோசனக்கழற்றம்பியுமாமனும்
புரோசனப்பெயர்புன்மதிதன்னைநொந்
தரோசனத்துடனந்நகர்வைகினார். (கசக)

அனையபான்மையனைற்றுமுணர்ந்துள
கனைகழற்பொலிகாவல்விதுரனும்
புனையுமௌலிபுனைந்துளவம்பிகை
தனையன்யாவுமுணர்ந்திடச்சாற்றினான். (௧௪௨)

கேட்டுமேற்செயலிற்கெழுசிந்தையா
னாட்டமற்றவன்றம்பியைநற்படை
வீட்டினேகவிடுத்தொருசாலையிற்
றேற்றுமன்றலணைமிசைத்துன்னினான். (௧௪௩)

வேறு

அக்காலமுதற்கோமகனடலங்கர்பிரானோ
டிக்காவலனுமுழையெய்தியிறைஞ்சிப்புகல்கின்றான்
மிக்கான்விரகினிலந்தவிதுரன்றருமொழியைத்
தக்கோர்பொருள்செய்யாரவனுறவைத்தவிர்கென்றான். (௧௪௪)

நாகக்கொடியுடையானிவைநவிலப்பலகாலஞ்
சோகக்கொடிபடரச்செறிதூணொத்தபுயத்தோன்
வாகக்கொடுமதியம்புயமலருக்கெளிதெனல்போன்
மோகக்கொடியவர்நீரவன்மொழிதீதெனுமுறையே. (௧௪௫)

அதுநிற்கவுமக்கேற்றுளமாமாறுரைசெய்வோர்
முதிர்நற்குரவர்களாமிதுமுறையென்றெனமொழியிற்
கதுவிக்கொலவருவாரினுமிழிவோரவர்கண்டாய்
மதுவிற்றுளைதாரோயெனமகனுக்குரைசெய்தான். (௧௪௬)

என்றம்பிதவத்தால்வருமிளமைந்தரையமரி
னுன்றம்பியர்நீமற்றுளமொன்றாகியதுணைவர்
வென்றம்புவிபெறுமாறினிவிடுமின்விடலவரை
யுன்றிம்பரகற்றித்துயரடைவித்ததினுண்டோ. (௧௪௭)

விரகிற்செயுமொருகைதவமிடறந்திடுமாகிற்
குரவர்க்கினியறமென்பதுகொள்ளுங்கடனுளவோ
வரவிற்பொலிகொடியாய்நலனன்றிப்புகல்கின்றாய்
திரனிற்றுணைவர்களோடுறுதியினன்புறுமென்றான். (௧௪௮)

தந்தைக்கிவனிவ்வாறுதருக்கிற்புகல்கின்றான்
சிந்தைக்கினியவரைவர்கடிறலிற்பெரியவரென்
றிந்தக்குவலயமீந்தவர்தொழிலாற்றுதலினிதோ
தந்திக்கயர்வுறுமோதனிதவவெள்ளுகிரியே. (௧௪௯)

குடைகொண்டசெழுந்தாரினர்வருபற்றலர்குழுவை
யிடைகொண்டுளதிறனான்கினுமிசைகொள்வதுநெறியே
படைகொண்டவர்தமைவெல்வதுபயனன்றெனிலந்தோ
முடைகொண்டலர்முடியாய்விதிமுறைசெய்துமுடித்தே. (௧௫௦)

எத்தன்மையினேனும்பவனச்சூனுவையிடர்செய்
தொத்தென்னுடனுறுவாரெனிலேனொருடனுறவே
வைத்தம்புவிமுழுதும்புயவலிகொண்டுபுரப்ப
லத்தன்கருணேயிலென்றனனரவக்கொடிநிருபன். (கஙக)

திரௌபதிமாலையிட்டசருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-களஙக.

# தருமபுத்திரர் பட்டாபிஷேகச்சருக்கம்.

வண்டிருந்தொலிக்கும்வாசவலம்புரித்தாரோன்கூறக்
கண்டிருந்தவரிற்கன்னன்கனன்றிதுபுகலலுற்றான்
விண்டிருந்தவரைவெம்போர்விளைத்துவெங்கண்டிலேனே
லுண்டிருந்தென்கொலென்சொலுறுதியைக்காண்மினென்றான். (க)

இரவலர்மிடிகடீர்க்குமிரவிசேயுரைத்தமாற்றங்
குரவனுமரசன்கேட்டுக்கோதறக்கரமமைத்தே
விரவுசாரணரைநோக்கிவீடுமன்கிருபனுசான்
பரவுறுவிதுரனுதிப்பழையரையழைமினென்றான். (உ)

ஓடினர்தூதராங்கணுற்றவர்தம்மைநோக்கித்
தேடினனரசனென்றேசெப்பலும்விரைவிற்போந்து
கூடினரெவருமந்தக்கொற்றவனவரைநோக்கி
நாடினருரையுமென்றேயோர்மொழிநவில்வதானான். (ங)

இறந்தனர்பாண்டுமைந்தரெனுமுறைபழுதேயாகி
மறந்திகழ்யாகசேனன்மகடனக்கலங்கல்சூட்டி
யுறைந்தனராங்கணென்றேயினிதுரையொற்றர்சொற்றார்
திறங்கிளர்குரவர்மேலாய்நிகழுமாறுரைத்திரென்றான். (௪)

மன்னவரரசேநின்றன்மைந்தரைவரவழைத்து
நின்னரசிருகூறாக்கியவர்க்கொருகூறுநேர்ந்து
பன்னருமகிழ்விஞேடுமிருப்பதேபயனுமென்றான்
றன்னிகரிலாததூயசான்றவிதந்தகோவே. (ரு)

அன்னதேகருமமையாவதினலமில்லையென்றே
தன்னிகரிலாதபூர்வசாபவாசிரியன்சொற்றான்
பின்னருமரசன்மைந்தன்பெருஞ்சினமுகத்தைநோக்கி
யென்னுரைகோடியென்றேதுரோணன்மற்றிதனைச்சொன்னான். (சு)

ஆசறுவலியினாரையரும்பகைகொண்டுதேம்பி
மாசுறனன்றன்றோன்றிவாழ்வுறல்புகழதாமா
லீசனையனையான்வாய்மையிருக்கினுமினிதவ்வண்ணங்
காசினிபுரந்துவாழ்திர்கருமம்வேறில்லையென்றான். (௭)

பொருப்பினைநிகர்த்ததோளான்புகன்றநல்லுரையினாலே
யுருத்துள்மழன்றுகன்னனோதுவானுறுதிசெய்வோர்
திருத்துமாற்றலராயாதுஞ்செய்திலார்நண்பரானோர்
கருத்தினையாவர்கண்டோர்கருமமேகாட்டிற்றன்றே. (௮)

மகதநாடளிக்குங்கோமான்மதிவலத்தரசுறுமற்
சுகீதமந்திரிசொற்கேட்டுத்தொல்லரசிழந்தானென்பர்
தகுதியிற்குருகுலத்துத்தராபதியாருங்காண
மிகுதியினுஞ்சொற்கேட்டேமேதினியிழந்தானென்றான். (௯)

எனவவன்மொழிந்தசொல்லாலெதிரிலாமறைவலாளன்
மனமழலென்னப்பொங்கிமலர்விழிசிவந்துசீறித்
தனதருகிருந்தகங்கைதனையனைநோக்கிநக்கான்
புனிதன்முன்புரங்கடந்தபொழுதினினகுமாபோன்றே. (௧௦)

தனையரிலேந்திப்போற்றித்தநுமறைபயிற்றிக்கல்வி
முனைபெறக்கருமங்கூறிமுடிப்பனமுடித்துக்காத்த
நினைவுளேம்பகைஞரேயாநீயொருவனுமேநண்பாம்
புனைவிலாய்வென்றிகொண்டுபுவியிவர்க்களித்தியென்றான். (௧௧)

அவிசொரியழலிற்சீறுமாரியன்றன்னைநோக்கிப்
புவிபுகழ்விதுரனிச்சொற்பொறுத்தியென்றிருகைகூப்பித்
தவிசுறுமரசைநோக்கித்தானொருவாய்மைசொற்றான்
கவசமேயறமாக்கொண்டகாவலர்மகிழ்வுதூங்க. (௧௨)

நம்பிதன்கூறுன்மைந்தர்நூற்றுவர்க்களித்தாயென்னிற்
றம்பயனென்றுகொள்ளார்தரணிபரிகழ்வுண்டாமா
லம்புவியிருகூறாக்கியவரவர்க்கருளிவேறு
வம்புரையணுகாதொன்றிவாழ்வதேதருமமென்றான். (௧௩)

உத்தமனுரைத்தமாற்றமுரணுடைநிருபன்கேட்டுப்
பத்தியினெம்பிசொற்றபரிசினுக்கிடையூறுண்டோ
வத்தகைபுரிவனீபோயவரைக்கொணர்தியென்றான்
சித்திரநெடுந்தேரேறிச்சென்றனன்விதுரனென்போன். (௧௪)

வேதவேதியனும்வெற்றிவீடுமன்றானுமேனைப்
பூதலத்தரசரோடுபூருவக்குருவுமீண்டே
தாதவிழ்தங்கடங்கடனிமனைபுகுந்தார்வேந்தன்
காதலர்தமைவிடுத்துக்காரிகைமனையிற்சார்ந்தான். (௧௫)

கன்னனுமன்னர்மன்னுங்கருதருஞ்சகுநியோடுந்
துன்னியோரிடத்திருந்தேசூழ்ச்சிகள்பலவுசாவி
மன்னினர்விதுரனுங்குமடவனப்பெடைகண்மொய்த்த
நன்னதிதிகழ்பாஞ்சாலநகரியைமேவினனே. (கசு)

ஐவருமரசன்றானும்யாதவர்குலத்துதித்த
மெய்வருதுவரையாளும்வேந்தனுமெதிர்வந்தெய்திக்
கைவருபடையினனைக்கடிநகர்செறித்தபின்னர்
பொய்வராமொழியான்சொற்றான்புரவலன்பணித்தவெல்லாம். (கஎ)

தகவுரையவர்கள்கேட்டுச்சரதமென்றுன்னியந்த
மகிபதிமகனுநீலவண்ணனுமருங்கினெய்தப்
புகலருமங்கநாலும்போற்றிடப்புரம்வந்துற்றார்
நகைமுகவல்லியோடுந்தாயொடுநன்மைமிக்கார். (கஅ)

துணைவருஞ்சுபலன்றந்தசுதனுமச்சுவத்தாமாவு
மிணைவருமரசர்யாருமெதிரடைந்தினிமைகூறப்
பணைவருபுயத்தோரந்தப்பழம்பதிவந்துபுக்கார்
திணைவருவேந்தர்க்கெல்லாஞ்சீற்றவெவ்வரியேறொப்பார். (கக)

தாதையைப்பணிந்துதாதைதாதைதாடலைமேற்சூடி
மாதவமுனிவர்பாதமலர்துதித்திருந்தபின்னர்
கோதறுநகரிதன்னிற்குலவியசனங்களெல்லா
மாதரம்பெருகியின்பமறிந்தனரறிந்திலாரும். (உ0)

வேறு.

வீடுமற்கும்விதுரற்குமேற்கவந்
நாடுமுற்றுநரபதிநல்கவே
யாடுபொற்கொடியங்நகர்வைகினர்
நீடுவற்சரமைந்துநிரம்பவே. (உக)

வேறு.

அத்தினபுரியிலையிருபதின்மரைவரென்றிரண்டறத்தம்மி
லொத்தனர்மருவத்தெவ்வர்மெய்வெருவவுளமகிழ்நாளின்மற்றொருநாண்
மைத்துனன்முதலாந்தமரையுந்தத்தமந்திரத்தவரையுங்கூட்டி
யித்தினமுயர்ந்ததினமெனமகுடஞ்சூட்டுதற்கெண்ணினனிகலோன். (உஉ)

செழுமுரசுயர்த்தவேந்தனுக்கின்றுதிருவபிடேகநாளென்று
முழுமுரசறைந்துநகரிகோடித்துமுடிபுனைகடிகொண்மண்டபத்தி
லெழுமுரசதிரப்பகீரதிமுதலாமெத்துறைப்புனல்களுமியற்றித்
தொழுமுரசுடன்வெள்வலம்புரிமுழங்கச்சுருதிமாமுனிவருந்தொக்கார். (உங)

அத்தியின்பலகைநவமணியழுத்தியாடகத்தமைத்தரிமுகத்தாற்
பத்திகொள்பீடத்தழகுறவிரித்தபசும்பொனின்றசும்புகணிறைந்த
சுத்தநீர்வியாதன்றவுமியன்முதலோர்சொரிந்தனர்சோமன்வந்துதித்துச்
சித்திரகிரியினெடுநிலாவெள்ளஞ்சீருடன்வழியவார்த்தெனவே. (உச)

உதயமால்வரையினுதயராகத்தோடுதித்தகேதருதயனென்றுரைப்பத்
துதையளிததைந்தமாலையான்சென்னிச்சோதிமாமகுடமுஞ்சூட்டிப்
பதயுகமரசர்முடிகளாற்சிவப்பப்பகர்விதிமுடிந்தபின்பலரு
மிதயமொத்தமிர்தமொழியவரடைவேயிருகைநீரர்ஞ்சனமெடுத்தார். (உ௫)

ஒற்றையோடிரட்டைவலம்புரிமிழற்றவொருகுடைமதியெனநிழற்றக்
கொற்றவர்முன்பின்போதரமடவார்குழுப்பொரிசிந்திவாழ்த்தெடுப்ப
விற்றைநாளெவரும்வாழ்ந்தவாவென்னவேழுயரிராசகுஞ்சரமேன்
மற்றைநால்வருந்தற்சூழ்வரத்தருமன்மைந்தன்மாநகர்வலம்வந்தான். (உ௬)

மர்நகர்வலமாய்வந்துதன்குரவர்மலர்ப்பதமுறைமையால்வணங்கிக்
கோநகரிருக்கையிருந்தபினொருநாட்கொற்றவனேவல்கைக்கொண்டு
பேய்நகரெனுமாறியாவரும்வழங்காப்பிறங்குநீள்கானிடையழிந்த
தூநகர்முன்னோரிருந்ததொன்றந்தத்தொன்னகர்வைகுமாதுணிந்தார். (உ௭)

அங்கண்மாஞாலமுழுவதுங்கொடுத்தற்காயர்தம்பதியினங்குரித்த
செங்கண்மான்முதலாங்கிளைஞரும்வயிரத்தேர்முதற்சேனையுந்தாமும் [போய்த்
வெங்கண்மாசுணத்தோ னெண்ணமெத்திசையும் வெளிப்படவேந்தரைவரும்
தங்கண்மாதவத்தாற்காண்டவப்பிரத்தமென்னுமத்தழல்வனமடைந்தார். ()

போயவண்புகுந்தபொழுதுபைங்கடலும்பூவையும்புயலுநேர்வடிவா
மாயவற்கெவ்வாறிவ்வுழியிவ்வூர்வாழ்வதென்றொருநினைவெய்தி
நாயகக்கடவுடன்னைமுன்னுதலுநாகர்நாயகனுடனடுங்கி
மேயகட்புலன்கள்களித்திடத்திருமுன்னின்றனன்விச்சுவகன்மா. (உ௯)

நுண்ணிதினுணர்ந்தோருணர்தருஞ்சிற்பநூலறிபுலவனைநோக்கித்
திண்ணிதினமரர்சேகரன்மொழிந்தான்றேவருமனிதரும்வியப்ப
மண்ணினும்புயங்கர்பாதலமுதலாமற்றுளவுலகினுந்தாம
விண்ணினுமுவமையிலதெனக்கடிதோர்வியநகர்விதித்திநீயெனவே. (௩0)

தேவினுந்தேவர்யோனியிற்பிறந்ததிரளினுஞ்சிறந்தவாயவர்க்கும்
பூவினுமெவ்வெவ்வுலகினுமுன்னம்புந்தியாலியற்றியபுரங்கள்
யாவினுமழகும்பெருமையுந்திருவுமின்பமுமெழுமடங்காக
நாவினும்புகலக்கருத்தினுநினைக்கவரியதோர்நலம்பெறச்சமைத்தான். (௩௧)

மரகதங்கோமேதகந்துகிர்தரளம்வைரம்வைடூரியநீல
மெரிமணிபுட்பராகமென்றிவற்றிற்காதறமிந்தமாநகரென்
றரிமுதலிமையோரனைவரும்புகழ்ந்தாராடகப்பொருப்பினையழித்துத்
தரணியின்கண்ணொன்றமைத்தனவென்றுதபதியர்யாவரும்வியந்தார். (௩௨)

என்பதியழகுகுலைந்ததென்றெண்ணியிந்திரன்வெறுக்கவுமியக்கர்
மன்பதிபொலிவுசிதைந்ததென்றிடவுமற்றுளவானவர்பதிகள்
புன்பதியாகிப்போயினவெனவும்புரையறுபுந்தியாற்புவிமே
னன்பதியிதுவொன்றியற்றினனென்றுநாரணனுதிகடுதித்திடவும். (௩௩)

சந்திரர்பதமுந்தினகரர்பதமுமிருபொழுதினுமெழச்சமைத்த
மந்திராதிகளுமஞ்சமுமதிலுமகரதோரணமணிமறுகுங்
கொந்திராநின்றசோலையுந்தடமுங்கொற்றவன்கோயிலுநோக்கி
யிந்திரர்பதியவ்விந்திரன்பெயராலிந்திரப்பிரத்தமென்றிட்டான். (௩௪)

இமையவர்பதியிலுள்ளனயாவுமிங்குளவிங்குமற்றுள்ள
வமைவறுபொருள்களங்கிலவெனுமாறமைத்தவான்றொல்பதியழகைச்
சமைவுறவீர்த்துப்புகழ்வதற்குன்னிற்சதுர்முகத்தவனுமெய்தளரு
நமர்களானவிலமுடியுமோமுடியாதாயினும்வல்லவாநவில்வாம். (௩௫)

விதிமறைவிதியிற்சாந்திசெய்கடவுள்வேதியரார்வமுமொருசார்
மதிமுறைதவறுவமைச்சர்சொல்விழையுமன்னவரார்வமுமொருசார்
நிதிகெழுசெல்வத்தளகையோர்நெருக்காநிறைந்தபேரார்வமுமொருசார்
பதிதொறுமுழவர்வினைப்பயனெடுக்கும்பறைகறங்கார்வமுமொருசார். (௩௬)

தோரணமஞ்சத்தலந்தொறுநடிக்குந்தோகையர்நாடகமொருசார்
பூரணப்பைம்பொற்கும்பமுமொளிகூர்புரமணித்தீபமுமொருசார்
வாரணமிவுளிதேர்முதனிரைத்தவாகமுஞ்சேனையுமொருசார்
நாரணன்வனசபதயுகம்பிரியாநலம்பெறுமாதவரொருசார். (௩௭)

இற்பவல்லபத்தின்மயன்முதலுள்ளதெய்வவான்றபதியரொருசார்
வெற்பகமருவிவீற்றுவீற்றிருக்கும்விஞ்சையர்கின்னரரொருசா
ரற்புதவடிவினுருப்பசிமுதலாமழகுடைக்கன்னியரொருசார்
பொற்புடையமரர்பதியுமெய்மகிழ்ந்துபொருதருபொன்மலரொருசார். (௩௮)

வரையெலாமகிலுஞ்சந்தனத்தருவுமான்மதநாவியின்குலமுந்
திரையெலாமுத்தும்பவளவெங்கொடியுஞ்செம்மணிகளுமரகதமுங்
கரையெலாம்புன்னைக்கானமுங்கண்டலடவியுங்கைதையங்காடுந்
தரையெலாம்பொன்னும்வெள்ளியும்பழனவேலிசூழ்சாலியுங்கரும்பும். (௩௯)

ஆலையிற்கரும்பின்கண்களிற்றெறித்தவாரமும்வயற்புறத்தடுத்த
சோலையிற்பயிலுங்குயிலையுஞ்சுருதிச்சுரும்பையுநிரைநிரைதுரப்ப
வேலையிற்குதித்தவாளையேறும்பர்வியநதிகலக்கிவெண்டிங்கண்
மாலையிற்பரவும்வானமீன்கொடிபோல்வாவியிற்களிக்குமாமருதம். (௪0)

புரிசையிற்குடுமிதொறுநிரைகொடுத்தபொற்கொடியாடையினிழலைக்
கிரிமிசைபறக்குமன்னமென்றெண்ணிக்கிடங்கில்வாழோதிமக்கொள்ளை
விரிசிறைப்பறையின்கடுமையாலெய்திமீதெழுமஞ்செனக்கலங்கிப்
பரிசயப்படுதண்சததளப்பொகுட்டுப்பார்ப்புறைபள்ளிவிட்டகலா. (௪௧)

கயற்றடஞ்செங்கட்கன்னியர்க்கிந்துகாந்தவர்சிலையினுலுயரச்
செயற்படுபொருப்பின்சாரலிற்கங்குற்றெண்ணிலாவெறிதலுமுருகி
வியப்பொடுகுதித்துந்தாரைகொளருவிவிழைவுடன்படிவனசகோர
நயப்புடையன்னச்சேவல்பேடென்றுநண்ணலாலுளமிகநாணும். (௪௨)

அரிமணிச்சிலையின்சலாகையால்வட்டமாகவேயமைத்தசாலகந்தோ
றெரிமணிக்குழையார்வதனமண்டலத்திலெழி லுடைமிளிருமத்தடங்கண்
விரிமணிக்கதிரோனளிக்கமுன்களித்தவெற்பிடைவீழுமாநதியின்
புரிமணிக்குழியிற்றுணையொடுமுலாவிப்பொருவனகயல்களேபோலும். (சங)

இனத்தினு லுயர்ந்தவிந்திரபுரியுமிந்திரப்பிரத்தமுமிரண்டுந்
தனத்தினு லுவவாற்கேள்வியாலழகாற்றக்கதொன்றியாதெனத்துலைகொண்
மனத்தினுனிறுக்கவுயர்ந்ததொன்றென்றுமண்மிசையிருந்ததுமிகவுங்
கனத்தினலன்றித்தாழுமோயாருங்கண்டதுகேட்டதன்றிதுவே. (சச)

நிறக்கவல்லிரும்பைச்செம்பொன்னும்வண்ணநிகழ்த்தியவிரதமேநிகர்ப்பப்
பிறக்கரும்வனமுமொழித்தவணமைத்தபெரும்பதிக்குவமையும்பெறுமன்
மறக்கடுங்களிற்றுக்குபேரன்வாழளகைவடக்கிருந்ததுநெடுவானிற்
றுறக்கமோமொழிதந்திலங்கையும்வெருவித்தொடுகடற்சுழிபுகுந்ததுவே. ()

வாவியும்புறவுஞ்சோலையுமலர்ந்தமலர்களுமணிகளின்குழாமு
மேவியங்கெங்குமயங்கலிற்றந்தம்வேரியும்வாசமுந்தூதாப்
பூவினஞ்சுரும்பையழைக்கவண்பழனப்புதுவளஞ்சுரக்குநாடனைத்து
மோவியங்குறித்துப்பூமகள்வடிவையொப்பனைசெய்தவாறொக்கும். (சசு)

பரிமளமதுபமுரல்பசுந்தொடையற்பாண்டவரைவருங்கடவு
ளெரிவலம்புரிந்துமுறைமுறைவேட்டலின்னெழிலிளமயிலென்ன
வரிசையினனுகியுரிமையாலவனிமயிலையுமன்றலெய்தினபோற்
புரிவளைதரளஞ்சொரிபுனலகழிப்புரிசைசூழ்புரங்குடிபுகுந்தார். (சஎ)

வேறு.

உரங்குடிபுகுந்ததிண்டோளுதிட்டிரன்முதலியோரப்
புரங்குடிபுகுந்துதங்கள்பொன்னெயிற்கோயிலெய்தித்
திரங்குடிபுகுந்தகல்விச்சிறப்புடைத்தகன்றநெஞ்சாற்
கரங்குடிபுகாமற்செய்தகடிநகர்காட்டலுற்றான். (சஅ)

நாபுரப்பதற்கேயேற்றநவிரனுவாய்மைவேந்தர்
கோபுரத்தும்பர்மஞ்சக்கொடியினினின்றுதங்கண்
மாபுரத்துள்ளவெல்லைவளமனையாவுமாதர்
நூபுரத்தார்வவீதியகலமுநோக்கினரே. (சகூ)

அரவின்வெஞ்சுடிகைகொண்டவவிர்மணிச்சோதிமேன்மேல்
விரவிவந்தெரித்துப்பச்சைமெய்சிவப்பேறிற்றாக
விரவிதன்னிரதம்பூண்டவெழுபரிப்பவனவேகப்
புரவியையயுற்றேறகொல்புரிவலம்புரிவதென்பார். (ரு0)

அருளுடையறத்தின்வாழ்வாமந்நகரில்லமெங்கு
மிருளுடையிந்திரநீலத்தியன்றசாளரங்கணுேக்கி
யருளுடையொற்றைநேமியொருபரித்தேரோன்சிறத்
தெருளுடைத்திமிரம்போன்றசின்னெறிபோலுமென்பார். (ருக)

சமர்முகப்பொறிகண்மிக்கதடமதிற்குடுமிதோறுங்
குமுறுறுபிணித்தபைம்பொற்கொடித்துகிலசைவுநோக்கி
நமர்புரக்கிழத்தியும்பர்நாயகன்புரத்திஞேடு
மமர்பொரப்பல்பல்கையாலழைப்பதுபோலுமென்பார். (௫உ)

தசும்புறுமகிலின்றூபஞ்சாறடுகரும்பின்றூப
மசும்பறுமடையின்றூபமலிபெறுமழலின்றூபம்
விசும்புறுநாலுதிக்குமிசைமிசையெழுதனேக்கிப்
பசும்புயலேழன்றின்னும்பலவுளவாகுமென்பார். (௫௩)

அடுக்குறநிலஞ்செய்மாடத்தணியுறும்பெரும்பதாகை
மிடுக்கினுலனிலனெற்றிவிசையுடனெடுத்துமோத
வுடுக்களுநாளுங்கோளுமுள்ளமுமுடலுஞ்சேர
நடுக்குறுகின்றவிந்தநகர்வழிபோகவென்பார். (௫௪)

துதையளிமுரலும்வாசச்சோலையின்பூங்காதோறும்
விதமுறவெழுந்துகாளமேகங்கள்படிதனேக்கி
கதிர்மணியகழிமாமேகலையுடனமரர்மாதின்
புகைநறுமலர்மென்கூந்தல்போலுமாகாண்மினென்பார். (௫௫)

ஈட்டியமணியும்பொன்னுமெழில்பெறப்பணிகடோறும்
பூட்டியசிகரிசாலப்புரிசைவெண்புரத்தைநோக்கிக்
கோட்டியநகரியென்னுங்குலக்கொடிமன்றலெய்தச்
சூட்டியசூட்டுப்போலுந்துங்குமாகாண்மினென்பார். (௫௬)

பணையினம்பலவுமார்ப்பப்பைங்கொடிநிறைத்தசெல்வத்
துணைமணிமாடமன்னுந்தோரணவீதியாவும்
புணைவனநெருங்கடீடிப்பொழிபுயல்கிழிக்குஞ்சார
லிணைவரைநடுவட்போதும்யாறுபோலிலங்குமென்பார். (௫௭)

கண்ணுறுபொருள்கள்யாவுங்கண்டுகண்டுவகைகூர
வெண்ணுறுகிளைஞரோடும்யாதவகுமரரோடும்
பண்ணுறுவேதவாழ்நர்பலரொடுவைகியாங்கண்
விண்ணுறுதபதிக்கம்மவிடைகொடுத்தருளினனே. (௫௮)

கேசவன்முதலாயுள்ளகிளைஞருங்கேண்மைதப்பா
வாசவன்முதலினேருமன்னுதம்பதிகள்புக்கா
ரோசைவன்றிகிரியோச்சியுதயபானுவுக்குமேலாந்
தேசவன்றனும்வையந்திசைமுறைதிருத்தியாண்டான். (௫௯)

தாய்மொழிதலைமேற்கொண்டுமிளையவர்மொழிகள்கேட்டும்
வேய்மொழிவேய்த்தோள்வல்லிமென்மொழிவிரும்பலுற்றும்
வாய்மொழியறத்தின்சேயுமாநகர்வாழுநாளி
லாய்மொழிப்பாடலோடேரந்தணனுங்கர்வந்தான். (௬0)

இந்தாரதரைப்போற்றியிருபதம்விளக்கிவாசச்
சந்தனகருவின்றூபந்தவழ்மணித்தவிசினேற்றி
வந்தனவிதியிற்சற்றும்வழுவறவழிபாடெய்தி
யந்தநால்வருமவ்வேந்துமாதிவாசவர்களானர். (சுக)

வரமிகுகற்பினளுமாமியும்வணங்கிநிற்பச்
சரிகமபதநிப்பாடற்றண்டுதைவருசெங்கையோ
னிருசெவிப்படைவீடாகவெம்பிரானளிக்கப்பெற்ற
பெருமுனியவர்க்கோர்காதைபெட்புறப்பேசினனே. (சுஉ)

முராரியைமுராரிநாபிமுளரிவாழ்முனியைமுக்கட்
புரரரியைநினைத்துமுன்னுட்புரிந்தவான்றவத்தின்மிக்கோர்
சுராரிகடமிற்சுந்தோபசுந்தரென்றுரைக்குந்தொல்லோர்
நராரிகளாகியண்டநடுங்குறவாழுநாளில். (சுங)

வலித்தடம்புயத்தர்மேருவரைக்கணோர்நகர்செய்வித்துக்
கலித்தவெம்பரித்தேர்காலாள்களிமதயானையென்றே
செலுத்துநால்வகையதானசேனையோடிருந்துதெவ்வர்
சலித்திடநெடுநாள்காறுந்தங்களிலின்பந்துய்த்தார். (சுச)

செருவினிலெவருந்தாமுஞ்செம்மையுமறமுந்திண்மை
யுருவமுமொருவாராறுமுலப்புறுவரமும்வேண்டி
வெருவரவமரரெல்லாம்வேலையோரேழுக்கப்பான்
மருவுபொன்னுலகுந்தங்கள்வயமுறத்திரியுநாளில். (சுரு)

அமரருமகத்தின்வேந்துமவர்புரிதுயரின்வாடிக்
கமலனையணுகியேத்திக்கழலிணைமுடிமேற்சூடிச்
சமரிடையெதிரிலாததருவரான்மெலிந்தோமன்னர்
தமதுடையுயிரைநீக்கிவயந்தரத்தக்கதென்றார். (சுசு)

ஒருவராற்றுயரஞ்சாராவொன்னலர்வார்த்தையோர்ந்து
செருவராதவரைமாய்ப்பான்சிந்தனைசெய்தபோதிற்
பொருவராவனப்புமாண்பும்பூண்களுங்கிரணஞ்செய்ய
மருவராநிதம்பவல்லிதிலோத்தமைவந்துதித்தாள். (சுஎ)

திருவனார்வனப்பினூடுதிலத்தளவெடுத்துச்செய்தோ
ருருவமாயமைத்தலாலேயும்பராங்கவட்குநாமம்
வருதிலோத்தமைதானென்றேவகுத்தனரவளைநோக்கி
யுருகிமெய்ம்மறந்தான்றந்தோனெனில்வனப்புரைக்கற்பாற்றோ. (சுஅ)

வேறு.

கன்னலன்னசெஞ்சொல்விஞ்சுகன்னிமுன்னர்நின்றபோ
தன்னிமன்னுமுன்பனன்பினங்கிதொன்றுகூறுவான்
சொன்னமென்னுமுண்மைகொண்டுசொற்றமேருவுற்றுளோர்
மன்னுதீயரன்னருற்றபாங்கரெய்திவைகியே. (சுகூ)

இருவரந்தநிருதர்நின்னையெய்திநோக்கியங்குள
முருகியெம்மையணையவென்றுரைத்தகாலையொருவனே
மருவவென்னையென்றவர்க்குமயலழுத்திமற்றவர்
செருவினூடுமடிதல்கண்டுவருகவென்றுசெப்பினான். (எ0)

மாதெழுந்துரைத்தவண்ணம்வழுவுறாதுபுரிவனென்
றோதியங்ககன்றுமேருவுற்றதோள்வலத்தினோர்
பாதபங்களிடைமிருந்தபழுவம்வைகுபொழுதுகண்
டேதிலுஞ்சிறந்தவஞ்சியெய்திமுன்னர்தோன்றினாள். (எக)

மின்னலொத்தமேனியாள்விளங்கமுன்னர்தோன்றலும்
நன்னிலத்திருந்துளார்நயந்தெழுந்தெதிர்ந்துநீ
யென்னிலத்திருந்துளாயிசைந்தடைந்ததேதெனக்
கன்னலொத்தசொல்லினாள்களிக்கவொன்றுகூறினாள். (எஉ)

நாடுதோறுமெய்தியெங்குநாடிவல்லவன்றனைத்
தேடியன்னவன்றனாதுதேவியாகிவாழ்வனென்
றோடியெங்குமிங்கடைந்ததுண்டுநும்மிலொருவனே
நீடுமன்பிலென்னைமேவிநேயமீதன்ஞாயமே. (எங)

என்றுகூறநின்றதீயவிருவர்சிந்தைவேறுபட்
டொன்றிடாதெனக்கெனக்குறித்துரைப்பலுஞ்
சென்றுநும்மிலொருவர்வென்றுசேரிலின்றுசேர்வனென்
றன்றிலென்னவோர்புரத்தடைந்துவைகினாளரோ. (எச)

கடவிரண்டினுக்குமுற்றதொன்றதற்குமுயிரென
வடலுயர்ந்ததகுவராருமறையவாண்மைகொண்டுளோர்
கடவிரண்டுநிகர்கணாள்கவற்சிகொண்டுகாதினார்
மிடலில்வென்றுளார்களந்தமின்னையெய்துவிழைவினாற். (எரு)

மாறிலாதுடற்றுபோரின்மற்றவ்வீரரிருவருந்
தேறுறாதிறந்துளார்கள்தேவர்தீமைதீர்ந்ததாற்
கூறுமோசைமங்கைமீண்டுகுரவனூரினெய்தினாளி
வாறுமுன்னிகழ்ந்ததென்றுமற்றுமொன்றுகூறுவான். (எசு)

வேறு.

காண்டலுமவண்மேல்வைத்தகாதலானழிந்துநெஞ்சி
னீண்டியதுயரத்தோடுமிருவரும்நயந்தபோதப்
பூண்டகுபொலிவினாடன்பொருட்டமர்தன்னிற்பூண்டு
மாண்டனரென்னும்வார்த்தைமாநிலமறியுமன்றே. (எஎ)

நீவிரும்விதியின்வேட்டனையமுண்டேனுமன்ற
லோவியமனையாடன்னையோரோராண்டொருவராக
மேவிநீர்புரிமினென்றுமேவுநாளேனையோரிக்
காவியங்கண்ணினாளைக்கருதுதல்கடனன்றென்றும். (எஅ)

என்னுறக்காணிலோராரிருதுவும்வேடமாறிப்
புண்ணியப்புனல்களாடப்போவதேயுறுதியென்றும்
வண்ணவிற்றிறலினர்குவாய்மலர்ந்தருளிமீண்டும்
பண்ணுடைக்கீதனுதபண்டிதன்விசும்பிற்போனன். (எசு)

சொன்னநாடொடங்கியஞ்சுசூரருந்தேவர்நாளுக்
கின்னநாவவதியென்றேயெண்ணியாங்கிரதிகேள்வ
னன்னநாண்மலர்ப்பைந்தாமத்தறன்மகனுதியாக
மின்னனுடன்னைவேட்டமுறைமையின்மேவினூரே. (அ௦)

தருமபுத்திரர் பட்டாபிஷேகச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-கஅகசு.

---

# தீர்த்தயாத்திரைச்சருக்கம்.

துன்பம்பயமிடிநோய்பகைசோரங்கொலையெய்தா
தின்பம்பொருளறன்யாவையுமியல்பாதலினெய்தித்
தன்பைங்குடைநிழன்மன்பதைதரியார்முனைமதியா
வன்பன்றனைநிகர்வாழ்வுறவருநாள்களிலொருநாள். (க)

* அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்துந்
திறையோடிடமறனிற்பதொர்திருவாசன்மருங்கே
யிறையோடெயிருகையுமெடுத்தெண்ணுறமுறையோ
முறையோவெனவொருவைதிகமுனிவந்துபுகுந்தான். (உ)

* கடைகாவலர்குறைகூறலும்விசையன்கடிதிற்றன்
புடைகாவலர்தொழவந்துபுவித்தேவனைமறையின்
றொடைகாவலவிதுவென்னெனவவனுந்தொடுகழலோய்
விடைகாவலர்நிரைகொண்டனர்வில்வேடவரென்றான். (ங)

* அஞ்சாதொழிமுனிநீயுனதானின்கணமின்றே
யெஞ்சாவகைதருவேனெனவேவுக்கொருதிலகன்
வெஞ்சாபமெடுப்பான்வருவிசையன்றருமனுடன்
மஞ்சார்பொழில்விளையாடிடுமயில்சேறடிகண்டான். (ச)

* காணுமெய்நடுங்காவொளிகருகாமனமிகவு
நாணுவிரைவொடுசாயகநாண்வெஞ்சிலைகொள்ளாச்
சேணூர்நெறிசெல்லாதனிசேருவமர்வெல்லா
மாணுநிரைமீளாவொரிமைப்போதினில்வந்தான். (ரு)

* தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்சூரன்
மறுக்கம்படுமறையோன்மனமகிழும்படிநல்கிப்
பொறுக்குந்தவமுனிசொற்படிபுனிதப்புனல்படிவா
னிறுக்குந்துலேநிகர்தம்முனேநிகழ்வோடுபணிந்தான். (சு)

* ஆடம்பரமன்வேடமகற்றித்தொழுதகுசொல்
வேடம்பெறுமறையோருடன்விசையன்புரவிசயன்
சூடந்தருபாகீரதிதோய்காலேயிலவனே
சேடன்றலமடவார்புனலயர்வானெதிர்சென்றார். (எ)

* ஓடுங்கயல்விழியாரினிலூகிப்பெயரவளோ
டாடும்புனலிடைநின்றவனனுராகமிகுந்தே
நாடும்பிலவழியேயவள்பின்சென்றுநலத்தா
னீடுங்கொடிமணமெய்தினன்முகில்போலுநிறத்தான். (அ)

* இம்மென்றளிமுரல்பாயலின்பத்தைவளர்த்தும்
பொம்மென்பரிபுரநாண்மலர்பொற்சென்னியில்வைத்துஞ்
செம்மன்கனியிதழாளொடுசின்னுணலமுற்று
னம்மென்கொடியனையாளுமிராவானேயளித்தாள். (கூ)

* நாகாதிபன்மகண்மைந்தனலங்கண்டுமகிழ்ந்து
நாகாதிபன்மகன்மீளவுநதியின்வழிவந்து
நாகாதிபன்வண்சாரலினன்னீர்கள்படிந்து
நாகாதிபன்விடுமும்மதநாறுந்திசைபுக்கான். (க0)

* நெளிந்தாடரவணேயையநிறம்போலநிறக்கும்
களிந்தாநதிமுதலாகியகடவுண்ணதிபலவு
முளிந்தாரழலெழுகானெறிமுக்கோலினராகித்
தெளிந்தாறியபெரியோரொடுசென்றாடினனன்றே. (கக)

* பத்திக்குவரம்பாகியபார்த்தன்பலதீர்த்த
மத்திக்கினுமெத்திக்கினுமாமென்றவையாடிச்
சித்திக்கொருவிதையாகியதென்னுட்டினேயனுகித்
தத்திச்சொரியருவித்தடவரவக்கிரிசார்ந்தான். (கஉ)

தடிநீழலின்ஒளிர்செஞ்சடைதனிவிந்துமுடித்தோர்
கொடிநீழலினகலாதுறைகோமானனுதினமும்
படிநீழலினமிழுஞ்சினேபலவோங்கியகல்லா
லடிநீழலினுறையுங்கயிலாயக்கிரிகண்டான். (கங)

பணிமீதொளிர்புவியோரிமையவர்முன்வினேபரிவுற்
றணிமீதொளிர்கதியுற்றிடவருள்செய்சரவணன்வாழ்
கணிமீதொளிர்நறையுங்கழுநீர்வாசமுங்கமழ்ந்தே
மணிமீதொளிர்தணிகாசலவரைகண்டுபணிந்தான். (கச)

* இச்சைப்படிதன்பேரறமென்னுன்கும்வளர்க்கும்
பச்சைக்கொடிவிடையாளொருபாகந்திறைகொண்டாள்
செச்சைத்தொடையினியோனுகர்தீம்பான்மனநாறுங்
கச்சைப்பொருமுலையாளுறைகச்சிப்பதிகண்டான். (கரு)

* அயனர்புரிமகசாலையுமணியத்திகிரிக்கே
மயனர்செய்திருக்கோயிலுமானீழலில்லைகெண்
புயனருறைமெய்க்கோலமுமுள்ளன்பொடுபோற்றிப்
பயனர்புனதியேழுமன்னகளுடுபடிந்தான். (கசு)

கழிபட்டுளவடிவம்பிகைகண்மூடலுநதலின்
விழிபட்டுளபெருமானுளம்வியக்கும்படிகனகந்
கொழிபட்டுளசம்பாதியிருவோர்தினங்குடியாய்
வழிபட்டுளசுருதித்தனிவரைகண்டுமகிழ்ந்தான். (கஎ)

* பெற்றுள்சகதண்டங்களனைத்துமவைபெற்று
முற்றுமுகிழ்முலையாளொடுமுக்கண்ணர்விரும்பும்
பற்றுமெனமிக்கோரிகழ்பற்றென்றினுமுண்மைக்
கற்றுர்தொழுமருணசலமுங்கண்டுகைதொழுதான். (கஅ)

* உருகுங்கமழ்நெய்பாலிருபாலுங்கரையொத்துப்
பெருகுந்துறையேழுபிறப்புங்கெடமூழ்கிக்
கருகுங்கருமுகின்மேனியர்கவிஞானியர்கண்ணிற்
பருகுஞ்சுவையமுதானவர்பாதந்தலைவைத்தான். (கக)

* ஐயானகனியல்வாணனையடிமைக்கொளமெய்யே
பொய்யாவணமெழுதும்பதிபொற்போடுவணங்கா
மெய்யாகமவதிகைத்திருவீரட்டமுநேமிக்
கையாளனகீந்திரபுரமுங்கண்டுகைதொழுதான். (உ0)

* இன்னம்பலபலயோனியிலெய்தாநெறிபெறவே
முன்னம்பலரடிதேடவுமுடிதேடவுமெட்டா
வன்னம்பலபயில்வார்புனலணிதில்லையுளாடும்
பொன்னம்பலநாதன்கழல்பொற்போடுபணிந்தான். (உக)

* இலங்காபுரிமுன்செற்றவனிருபோதும்வணங்கத்
துலங்காடரவணைமேலரிதுயில்கொண்டவர்பொற்றுள்
புலங்காவிரியிருபாலும்வரப்பூதலமங்கைக்
கலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடைதொழுதான். (உஉ)

* வளவன்பதிமுதலாகவயங்கும்பதிதோறுந்
துளவங்கமழ்திசீதளதோயங்கள்படிந்தே
யிளவண்டமிழெழுதேடுமுன்னெதிரேறியதுறைசூழ்
தளவங்கமழ்புறவஞ்செறிதண்கூடல்புகுந்தான். (உங)

வேறு.

குன்றிளிவாடைவரும்பொழுதெல்லாமலர்ந்த திருக்கொன்றைநாறத்
தென்றல்வரும்பொழுதெல்லாஞ்செழுஞ்சாந்தின்மணநாறுஞ்செல்வவீதி
நன்றறிவார்வீற்றிருக்குநான்மாடக்கூடல்வளநகரியாளும்
வென்றிபுனைவடிசுடர்வேன்மீனவனைவானவர்கோன்மதலைகண்டான். (உ௪)

* அந்நிலத்தினவரல்லாலந்தணரோடிவனவனுக்காசிகூற
வெந்நிலத்திறைப்பதியீரெத்திசைக்குப்போகின்றீரென்றுபோற்றிச்
சென்னியற்கும்வில்லவற்குமணிமுடியாங்கனைகழற்காற்செழியன்கேட்பக்
கன்னியைக்கண்ணுற்றுடவந்தனமென்றனன்மெய்மைக்கடவுள்போல்வான். ()

* வெய்தின்மகபதிமுடிமேல்வளையெறிந்துநீண்டநாள்விண்ணின்மாதர்
கொய்துமலர்தொலையாதகுளிர்ந்தருக்களொருகோடிகொண்டுபோந்து
மைதவழ்தன்றடங்கோயில்வருதமதனொருமருங்குவைத்தகாவிற்
கைதவர்கோன்மற்றவர்க்குப்போனகஞ்செய்தருந்துமிடங்கற்பித்தானே. ()

* வேதியரோடக்காவிலிளைப்பாறியிருந்தளவின்மின்குழாம்போற்
றாதியருஞ்சேடியருந்தற்சூழச்சிலைமதனன்றனிசேவிக்கச்
சோதியரிச்சிலம்பரற்றத்துணைநெடுங்கண்செவியளப்பத்தொடித்தோள்வீசி
யாதியரவிந்தையெனநிருபன்மகள்விளையாடற்காங்குவந்தாள். (உ௭)

* பச்சென்றதிருநிறமுஞ்சேயிதழும்வெண்ணகையும்பார்வையென்னு
நச்சம்புமமுதூறநவிற்றுகின்றமடமொழியுநாணும்பூணுங்
கச்சின்கணடங்காதகனதனமுநுண்ணிடையுங்கண்டுசோர்ந்து
பிச்சன்போலாயினனப்பெண்கொடிமெய்ந்நலமுழுதும்பெறுவானின்றான். ()

* புத்திரர்வேறில்லாதுபுரிவரியதவம்புரிந்துபூழிவேந்தன்
சித்திரவாகனன்பயந்தசித்திராங்கதையென்னுஞ்செஞ்சொல்வஞ்சி
பத்திரமுநறுமலருமவயவம்போல்விளங்குவனபலவுங்கொய்து
மித்திரமாமகளிருடன்விரவியொருசெய்குன்றின்மேயினளே. (உ௯)

* முன்னுருவந்தனைமாற்றிமுகில்வாகன்றிருமதலைமோகியாகித்
தன்னுருவந்தனைக்கொண்டுசாமனிலுங்காமனிலுந்தயங்குமெய்யோன்
பொன்னுருவமெனமலர்ந்துபொலிந்ததொருசண்பகத்தின்பூந்தண்ணீழன்
மின்னுருவநுண்ணிடையாள்விழிகளிக்கும்படிநின்றான்வீரரேறே. (௩0)

வண்டானந்திரிதடத்துவரிவண்டினம்பாடமயில்களாடத்
தண்டார்மெய்க்கிளிக்கூட்டஞ்சான்றோர்களுரைபயிற்றத்தமிழ்கண்மூன்றுங்
கொண்டாடியிளம்பூவைக்குழாந்தலைசாய்த்துளமுருகுங்குன்றினூங்கட்
கண்டாளக்குமரனைத்தங்கொடிக்கயலைப்புறங்காணுங்கண்ணினாளே. (௩௧)

செந்திருவைபனையாளுந்திருமாலையனையானுஞ்சிந்தையொன்றாய்
வந்திருவர்விலோசனமுந்தடையின்றியுறவாடிமகிழ்ச்சிகூர்ந்து
வெந்துருவமிழந்தமதன்மீளவும்வந்திரதியுடன்மேவுமாபோற்
கந்திருவமுறைமையினற்கடவுளர்க்குங்கிடையாதகாமந்துய்த்தார். (௩உ)

கூடியிருவருமொருவரெனவிதையங்கலந்ததற்பின்குறித்ததூரீ
ராடியவந்ததுந்தன்னையருச்சுனனென்பதுமிளமானறியக்கூறி
நீடியதென்றையுறுவர்நீயினியேகெனவுரைப்பநெடுங்கண்ணாள்போய்ச்
சேடியருக்கஞ்ஞான்றுநிகழ்ந்தவெலாமகிழ்ந்துருகிச்செப்பினாளே. (௩௩)

கவுரியர்கோன்றிருமகளைக்கண்ணனையார்கொண்டுபோய்க்கன்னிமாடத்
தவிருமணிப்பரியங்கத்தையமளியேற்றியபின்னனங்கன்போரா
னவிருடைமாடியவுழந்துநயனங்கள்பொருந்தாமனுணுறும
றவிர்கெனவுந்தவிராமற்றன்விரகங்கரையழிந்துதளர்ந்தாண்மன்னோ. (௩௪)

* தங்கண்மலைச்சந்தனத்தைத்தழற்குழம்போவிதுமென்னுந்தாபந்தோன்றத்
தங்கள்கடற்றண்முறத்தைக்கண்டுமுத்தால்நீருக்குந்தக்கோராய்ந்த
தங்கடமிழ்க்குழலிசையைத்தன்செவிக்குவிடமென்னுந்தபனனேகத்
தங்கள்குலக்கலைம்திியைத்தபனனெனுமென்பட்டாடனிபொருதாள். (௩௫)

* அங்குயிர்போலிருமருங்குமாயமடமகளிரிருந்தாற்றவாற்றக்
கங்குலெனும்பெருங்கடலைக்கரைகண்டாள்கடற்புறத்தேகதிருங்கண்டா
ளிங்கிவள்போய்மலர்க்காவினெழில்விசயற்கிடமிழிந்தவின்னலெல்லாஞ்
சங்கெறியுந்தடம்பொருநைத்துறைவனுக்குச்செவிலியராந்தாயர்சொன்னார். ()

* ஐந்தருவினீழலின்வாழரியுடனேயோரரியாசனத்தில்வைகிப்
புந்தியுறவொருவருமுன்பூணுதமணியாரம்பூண்டகோமா
னந்தவுரைசெவிப்படலுமதிதூரம்விழைவுடன்சென்றுடதீர்த்தம்
வந்ததுநந்தவப்பயனென்றுட்கொண்டான்மகோததியும்வணங்குந்தாளான். ()

வழுதிதிருமகள்கொடுத்தமையலினால்வடிவமுந்தன்மனமும்வேறுப்
பொழுதுவிடிவளவுமதன்பூசலிலேகருத்தழிந்துபூவாம்வாளி
யுழுதகொடும்புண்வழியேயூசினுழைந்தெனத்தென்றலூரவூர
விழிதுயிலாவிசையனுமவ்விபுதருடன்றுயிலுணர்ந்துவிதியுஞ்செய்தான்.(௩௮)

* பஞ்சவரினடுப்பிறந்தோன்பஞ்சவன்பேரவையெய்திப்பஞ்சபாண
வஞ்சகன்செய்வஞ்சனையான்மதிமயங்கியிருந்துழியம்மதுரைவேந்தன்
சஞ்சரிகநறுமலர்த்தார்த்தனஞ்செயனென்றறிந்தெழுந்து தழீஇக்கொண்டாங்
கஞ்சலினியுனக்குரியள்யான்பயந்தகடற்பிறவாவமுதமென்றான். (௩௯)

* கேண்மதியோர்மொழிமுன்னங்கேண்மையினங்குலத்தொருவன்கிரீசன்றன்னைத், தாண்மலரன்புறப்பணிந்துதவம்புரிந்தான்மகப்பொருட்டாற்றரித்தகொன்றை, நாண்மலரோன்வெளிநின்றங்கரபதிக்குநின்குலத்துநரேசர்யார்க்கும், வாண்மருவுங்கரதலத்தோயோரொருமாமகவென்றுவரமுமீந்தான்.()

அன்றுரைத்தவரத்தின்வழியனேகரவனிபருமகவளித்தாரொன்றொன்
றென்றுரைக்கமறுதொழிநீயொருமகவும்பெண்மகவாயுதித்ததென்பா
னன்றுரைக்குமொழியாயென்னவ்விபெறுமகவெனக்கேநல்கவேண்டு
மென்றுரைத்தான்மன்றல்பெறவிருந்தோனுமாமனுரைக்கிசைந்தானன்றே.()

* தெண்டிரைகைதொழுகழலோன்றிருமகட்குவதுவையெனச்சேரசோழ
ரெண்டிசையின்முடிவேந்தரெல்லோருமுனிகணத்தோரெவருமீண்ட
வண்டர்பிரானளித்தசிலையாண்டகையையலங்காரமனைத்துஞ்செய்து
மண்டபமொன்றினிலறுகால்வண்ணமணிப்பலகையின்மேல்வைத்தாரன்றே.

கோமடந்தைகளிகூரப்புகழ்மடந்தைகளிகூரக்கொற்றவிந்தை
மாமடந்தைகளிகூரமணவினையொப்பனைக்குரியமடந்தைமார்கள்
பூமடந்தையனையாளைப்பூட்டியவெண்டரளமணிப்பூண்களாலே
நாமடந்தைநிகராக்கிநாயகன்றன்வலப்பாகநண்ணுவித்தார். (௪௩)

இந்திரனுஞ்சசியுமெனவிறையோனுமுமையுமெனவெம்பிரானுஞ்
செந்திருவுமெனக்காமதேவுமிரதியுமெனவெஞ்சிலைவலோனுஞ்
சந்தணிபூண்முலையாளுஞ்சதுர்மறையோர்சடங்கியற்றத்தழல்சான்றாகத்
துந்துபியின்குலமுழங்கச்சுரிசங்கின்குழாந்தழங்கத்துலங்கவேட்டார். (௪௪)

வேறு.

* நோக்கியகண்ணிமையாமனோக்கிநோக்கி நண்ணியமென்புலவியிலே
நொந்துநொந்து, தேக்கியசெங்கனியிதழாரமுதுண்டுண்டு சேர்த்தியகைநெகி
ழாமற்சேர்ந்துசேர்ந்து, தூக்கியபொற்றுலையினனுராகமேன்மேற்றொடரவரு
ம்பெரும்போகந்துய்த்தார்முன்னைப், பாக்கியம்வந்திருவருக்கும்பலித்ததல்லா
ற்பாயனலத்திப்படியார்பயன்பெற்றாரே. (௪௫)

* பன்னாளினெடும்போகம்பயின்றபின்னர்ப்பப்புருவாகனனென்னும்பை
தற்றிங்க, ளன்னையவள்பயந்தாள்பயந்தபோதே யம்மகவைபுவகையுடனவ
னுமீந்தான், றென்னவென்றளிமுரலவேம்பின்றண்டார்த் தேம்பரிசில்வழங்கு
புயத்தென்னர்கோவு, நின்னாலென்மரபுநிலைபெற்றதென்று நேயமுடன்கவர்ந்
துதுயர்நீங்கினானே. (௪௬)

* பார்த்தனருச்சுனன்கரியோன்விசயன்பாகசாதனிசவ்வியசாசிபற்குன
ன்பா, ரேத்துதனஞ்சயன்கிரீடிசுவேதவாக னெனுநாமம்படைத்தபிரான்யா
ழோரின்பம், வாய்த்தவிதழமுதமொழிப்பேதைதாதை மனையிருக்கத்திருவழு
திவளநாட்டுள்ள, தீர்த்தமுழுவதுமாடியன்பாற்றென்பாற்றிருமலையுங்கைதொ
ழுதுசிந்தித்தானே. (௪௭)

* கன்றியவெங்கரன்முதலோர்களத்தில்வீழக்கவிகுலநாயகனிதயங்கலங்
கிவீழ, வொன்றுபடமரமேழுமுததியேழுமுடுருவச்சரந்தொடுத்தவொருவில்
வீரன், றுன்றியெழுபதுவெள்ளங்குரங்கின்சேனைசூழ்போதவாய்த்ததிருத்து
ணைவனோடுஞ், சென்றவழியின்றளவுந்துளவநாறுஞ்சேதுதரிசனஞ்செய்தான்
றிறல்வல்லோனே. (௪௮)

* வன்றிரைவெங்களிற்றினங்களிரண்டுபாலு மலையாமலிடுங்கணையமா
னேபோலுந், தன்றலைகளமிழாமலெடுப்பான்மேருத்தாழ்கடலினீட்டியதோர்
தடக்கைபோலும், மன்றியிருபூதலமுமிருதட்டாகவகத்தியன்வாழ்
மணிமுக்கோணக், குன்றினையுஞ்சேர்தூக்கிநிறுப்பதாகக் கோகனதனமைத்த
துலைக்கோலும்போலும். (௪௯)

* அண்டர்தமகங்கையினும்வரனுண்டென்றெ றரம்பையோடவனியில் வந்தாடுங்கன்னித், தண்டுறையுந்தண்பொருநைப்பாவநாசத் தடந்துறையும்ப யுந்துநதித்தடமேபோந்து, பண்டுமழுப்படையோனம்மழுவாற்கொண்ட பாக் கியபூமியுஞ்சேரன்பதிகள்யாவுங், கண்டுமனங்களிகூரச்சென்றுமேலைக் கடல் கண்டானுரகதலங்கண்டுமீண்டான். (ருo)

* அந்தநெடுந்திசைப்புனல்களாடுநாளி லேந்துதடத்தரம்பையரோரைவர் சேர, விந்திரன்வெஞ்சாபத்தாலிடங்கராகி யிடருழந்தோர்பழையவடிவெய்த நல்கிச், சிந்துநிரைநதிபலவுஞ்சென்றுதோய்ந்து திங்களுடனரவுறவுசெய்யும் வேணிக், கொந்தவிழுமலரிதழித்தொடையோன்வைகுங் கொடிமதில்சூழ்கோ கன்னங்குறுகினனே. (ருக)

* ஆகன்னமுறச்செம்பொன்வரைவில்வாங்கி யவுணர்புரங்கட்டழிக்தோ னடியில்வீழ்ந்து, கோகன்னவளம்பதியிற்றன்பின்வந்த குலமுனிவர்தமையிரு த்திக்கோட்டுக்கோட்டு, நாகன்னப்பெடையுடனேயாடுங்கஞ்ச நறைவாவிவண் டுவரைநண்ணியாங்கட், பாகன்னமொழிக்கனிவாய்முத்தமூரற் பாவைநலம் பெறமுக்கோற்பகவனானன். (ருஉ)

* வெங்கதிர்போய்க்குடதிசையில்வீழ்ந்தபின்னர் வீழாமன்மாலையின்வா ய்மீண்டுமந்தச், செங்கதிர்வந்தெழுந்ததெனமீதுபோர்த்த செய்யவாடையுந்தா னுந்தீர்த்தவாரிச், சங்கதிருமணிவீதிநகரிசூழ்ந்த தடஞ்சாரலிரைவதகசயில நண்ணிப், பொங்கதிர்பைம்புயலெழுந்துபொழியுங்குற் போயொருநீள்வட தருவின்பொதும்பர்சேர்ந்தான். (ருந)

* இந்திரற்குத்திருமதலைமன்றலெண்ணி யாதவர்கோன்வளம்பதியிலெ ய்தினனென், றந்தரத்தைநீலத்தால்விதானமாக்கி யண்டமுறவிடிமுரசுமார்ப் பவார்ப்ப, வந்திரட்டைவரிசிலையாற்பஞ்சவண்ண மகரதோரணநாட்டிவயங்கு மின்னான், முந்துறத்தீபமுமெடுத்துத்தாரைமுத்தான் முழுப்பொரிசிந்தினகா லமுகில்களம்மா. (ருச)

* யாங்கருதிவருங்கருமமுடிப்பானெண்ணிலிராமன்முதல்யதுகுலத்தோ ரிசையாரென்று, பாங்குடனேதனக்குயிராந்துளபமௌலிப் பரந்தாமன்றனை நினைந்தான்பார்த்தனுகப், பூங்கமலமலரோடையனையான்முனும் பொன்னெடுந் தேர்ப்பாகனுமேயாகப்போந்து, நீங்கரியநண்பினனுய்நெடுநாணீங்கு நேயத் தோனிணைவின்வழிநேர்பட்டானே. (ருரு)

* யதியாகியவணிருந்ததோழன்றன்னை யதுகுலநாயகன்பரிவோடிறைஞ் சவன்பா, லதியானநெடுஞ்சுருதியாசிகூறி யாகமுறத்தழீஇமகிழ்வுற்றுலீழன், மதியார்செஞ்சடைமுடியோனென்னவைகி வந்தவாறுரைப்பமெடுமாலுங்கேட் டுத், துதியாடிக்காலையிலேவருதுமென்று சொற்றிமைப்பின்மீளவும்போய்த்து வரைசேர்ந்தான். (ருசு)

* ஆதவன்வந்துதிப்பதன்முன்மற்றைநாளி லணிநகர்வாழ்சனமனைத்தும ந்தக்குன்றின், மாதவனதேவகிமைந்தன்மழைக்காலத்து வாசவற்குவிழாவயர்வா ன்வந்தகாலை, யாதவரிற்போசரின்மற்றுள்ளவேந்தர் யாவருஞ்சூழ்வரவிருந்தா ரிராமன்வந்தான், சூதடர்பச்சிளங்கொங்கைப்பச்சைமேனிச் சுபத்திரையுந் தோழியர்கள்சூழவந்தாள். (ருஎ)

* முக்கோலுங்கமண்டலமுஞ்செங்கற்றாசு முந்நூலுஞ்சிகையுமாய்முதி ர்ந்துதோன்று, மக்கோலமனைவருங்கைதொழுதுநோக்கி யருணலம்பெற்றக ன்றதற்பினனைத்துலோகத், தெக்கோலயோனிகட்குமுயிராய்த்தோற்ற மீமை ந்தாய்ப்பாற்கடலினிடையேவைகு, மைக்கோலமுகில்வண்ணன்றானுமெய்தி ம னவணக்கம்புரிவோனைவணங்கினனே. (ருஅ)

* தன்னியிருவருமொருப்பட்டிருந்தகாலைச் சுபத்திரையத்தடங்குன்றி ன்சூழலோர்சார், மின்னியபைம்புயலினெழிலிரேகைபோல வெளிப்படலுமெ ய்புளகமேன்மேலேறிக், கன்னியிளந்தனிக்கடம்புமலர்ந்ததென்னக் கண்டவி ழியிமையாதகாட்சிகாண, மன்னியமாதவத்தோனைமந்தமூரன் மாதவன்மைத் துனமையினன்மகிழ்ச்சிகூர்ந்தே. (ருகு)

* அடிக்கடிருவுளத்தெண்ணமெம்மனோர்க ளறியினிசையலர்பலரிங்கறிவு றுமற், கடியயர்வுற்றும்பதிகொண்டடைகவென்றுங் காவலர்க்குக்கடனென்று ங்கசியக்கூறி, கொடியிடைவெங்களபமுலைக்கன்னிமானைக் கூயணங்கேமெய் ம்மையுறக்கொண்டகோலப், படிகமுனிக்கிருபருவம்பணித்தவேவல் பரிவுடனீ புரியென்றுபணித்திட்டானே. (கூ0)

வேறு.

* உள்ளடங்கியகாமவெங்கனல்புறத்தோடிக்
கொள்ளைகொண்டென்மறைத்தெனக்கூறையுந்தானு
மெள்ளவந்துதன்கடிமனைமேவியவேடக்
கள்ளவஞ்சனையறிந்திலள்கற்புடைக்கன்னி. (கூக)

* ஈங்குவந்ததென்றவப்பயனென்றுகொண்டெண்ணி
யாங்குவந்தொருமனையிடையருந்தவன்றுயிலத்
தூங்குகண்ணினள்சுபத்திரைதோழியர்பலரும்
பாங்குவைகமற்றொருமனைபுகுந்துகண்படுத்தாள். (கூ௨)

* புடவியெங்கணும்புதையவான்பொழிதருபுனலா
லடவியாரழலவியவுமவிந்திலதையோ
தடவிவாடைமெய்கொளுத்திடத்தனஞ்சயற்கணங்கின்
விடவிலோசனக்கடைதருவிரகவெங்கனலே. (கூ௩)

* மதனலீலையிற்பழுதறவழிபடும்பாவை
வதனவாண்மதிவந்துமுன்நிற்கவுமருண்டச்
சதனமேவருந்தபோதனன்றனக்குவெம்மோக
விதனவல்லிருள்விடிந்திலதாரிருள்விடிந்தும். (கூச)

* அற்றைநான்முதலநேகநாளகின்மணங்கமழுங்
கற்றைவார்குழற்கன்னிகைவழிபடக்கருத்தா
விற்றைமாமதன்பூசலுக்கென்செய்வோமென்றென்
றெற்றையன்றில்போன்மெய்ம்மெலிந்துள்ளமுமுடைந்தான். (சுரு)

நல்லிலக்கணம்பலவுடையவயவநலத்தால்
வில்லிலக்கணத்தழும்புடைக்கரங்களான்மிகவுந்
தொல்லிலக்கணம்பலவுடைச்சுபத்திரையொருத
னில்லிலக்கணவனேயிவன்யார்கொலென்றயிர்த்தாள். (சுசு)

மங்கையங்கொருநாளவன்மலரடிவணங்கி
யெங்கும்வண்புனலாடுதற்கேகினீரெனினுந்
தங்குமாநகர்யாதெனத்தபோதனன்றூனு
மெங்கண்மாநகரிந்திரப்பிரத்தமென்றிசைத்தான். (சுஎ)

* என்றகாலையிலிந்திரன்மதலையையொழிய
நின்றபேரையநெடுங்கணுள்வினவலுநிருபன்
வென்றிமன்னவர்யாரையும்வினவினைமின்னே
மன்றலந்தொடைவிசயனைமறந்ததென்னென்றான். (சுஅ)

* யாழின்மென்மொழியெங்கணுயகியிவளவனுக்
கூழினன்புடைமன்றலுக்குரியளாதலினால்
வாழிவெஞ்சிலைவிசயனைமறைத்தனளென்னாத்
தோழிநின்றவளொருத்திகைதொழுதனள்சொன்னாள். (சுகூ)

* பங்குனன்பெருந்தீர்த்தநீர்படிவதற்காகப்
பொங்குதெண்டிரைப்புவிவலம்போந்தனனென்றே
யங்குநின்றுவந்தவருரைத்தனரவனிப்போ
தெங்குளானெனத்தெரியுமோவடிகளுக்கென்றாள். (எ0)

* பாங்கிநல்லுரைதன்செவிப்படுதலும்விசயன்
றீங்கிலன்பலதிசைகளுஞ்சென்றுநீராடிக்
கோங்கிளங்கொழுமுகைநிகர்கொங்கையாள்பொருட்டா
லீங்குவந்துநும்மில்லிடையிருந்தனனென்றான். (எக)

* யதியுரைத்தசொற்கேட்டலும்யாதவிநுதல்வாண்
மதிவியர்த்ததுதுடித்ததுகுமுதவாய்மலரும்
புதியகச்சணிகுரும்பைகளரும்பினபுளகம்
பதியிடத்தரிவையர்க்குளமாகுலம்படாதோ. (எஉ)

* உகவைமுத்தமென்பவளமுநீலமுமொளிர
வகவுபச்சிளந்தோகைபோனின்றவவ்வணங்கை
மிகவிருப்பநோய்வளர்தலின்மெலிந்ததோள்விசயன்
றகவுடைத்தனதடக்கையால்வளைக்கரந்தகைந்தான். (எங)

* தகைந்தபோதுயிர்ச்சேடியர் தவிர்கெனச்சிலசொற்
பகர்ந்துபாவையைமாதவிப்பந்தரிற்கொடுபோய்ப்
புகுந்தகாலையிற்பொன்னனுடன்மைவேறுகி
மிகுந்தகாதலாங்கடற்புகுந்தெழில்கெடமெலிந்தாள். (எ௫)

பசந்தமேனியும்பசலையுற்றனவிளமுலையு
மசைந்தகைகளுமருவியவாண்முகவியர்வுங்
கசந்தசொல்லுமாய்க்கவலையுற்றழுங்குதல்கண்டே
யொசிந்தசிற்றிடைக்கொம்பனூர்சேக்கைமீதுய்த்தார். (எ௬)

அன்னகாலையிலனங்கனுமலர்ந்தபூவொன்றைத்
தன்னின்மந்திரித்தெறிபவர்தன்மையைமானப்
பொன்னனந்தண்கமலத்திகற்புங்கவம்விடுத்தான்
பன்னுமஞ்சிறைவண்டுகண்படுஞ்சிலைகுனித்தே. (எ௭)

நிரைபுகுத்ததண்ணூரமுநீறதாய்ச்சிதறும்
வரைநிகர்த்தவன்றனத்தினுண்மிசைபடமாழ்கிக்
கரைபெறற்கருங்காதலாய்க்காய்ந்தவான்பாலிற்
புரையுகுத்ததொத்தாள்புந்திவேறுபட்டனளே. (எஅ)

மாதராயமுமறந்தனடன்னையுமறந்தா
ளாதரம்பெறுமாடையுஞ்சங்குமயர்த்தா
ளேதலென்பதுமோதுவாசகங்களுமிழந்தாள்
காதலொன்றலாற்பிறிதெலாமறந்தனள்கன்னி. (எ௯)

தக்கமாமலர்ச்சேக்கையுந்தழலெனத்தளர்வாள்
பக்கநோக்கினும்பாவையர்தம்மைநோக்கினு
மிக்ககாவிதோய்துகில்புனைவேதியர்வடிவங்
கைக்கொடென்பெருங்கணவனென்றயிர்த்துளங்கரைவாள். (அ௦)

குழையுங்குன்றமுநீத்திவணடைந்தகோமகன்றன்
றழையுநீண்டசெந்தாமரைக்கண்களுமார்பு
மிழையுநற்புயவரைகளுமுரையின்மேம்பாடு
நகையுமென்னுயிர்கரந்துகொண்டதுவெனநவில்வாள். (அக)

நீலமேனியுநீண்மயிரொழுங்குடைநிலையுங்
காலனுமடவார்க்கெனக்கருதியோசிவந்த
சீலமார்துகிற்செறித்துடன்மறைத்தனரன்றி
ஞாலநாயகன்விரும்புமோவஃதெனநவில்வாள். (அஉ)

இனையபான்மையாற்சேக்கைமீதிருந்துடல்வருந்து
மனையமங்கையையாருயிர்த்தோழியர்நோக்கி
வனைபொலன்கொடிகாமவெந்தீயினைமாற்ற
நினைவுகொண்டுநேர்ந்தனர்கேயமேநிரைப்பார். (அ௩)

பொருந்துபாளிதக்கலவையினிமசலம்புகட்டி
வருந்துமங்கைதன்கதிரெறிவடந்திகழ்முலைமேற்
றிருந்தவீசலும்வீசுமுன்கொதித்தனதெறித்த
முருந்துவாணகையாருடற்சுருக்கொளுமுறையால். (அங)

அன்னவாறுகண்டரிவையினுடலெலாங்கொப்பூழ்
துன்னிடத்துயருழன்றனனெருப்பினைச்சொரிந்த
தென்னகாரணத்தாலெனவோர்மொழியிசைத்தாள்
சொன்னசொற்குமுன்னுருயிர்சோர்ந்தனடோகை. (அச)

வஞ்சியாங்கயர்வெய்திடமாதர்கணடுங்கி
மிஞ்சுசாமரைவிரைகமழ்வட்டங்கள்விசிறிக்
கஞ்சமென்றகைத்தலங்களிற்றுங்கியேகவின
வஞ்சலஞ்சலென்றசைத்தனரணங்கனுர்முகத்தில். (அரு)

வேறு.

வெறித்தகாமவியன்றழற்பாளிதந்
தெறித்துமேனிசிவப்புறவேவலா
லெறித்தசெங்கதிரேகித்தரங்கங்கண்
மறித்தமேல்கடலாழ்ந்துமறைந்ததே. (அசு)

கன்னிகாண்டொறுங்காண்டொறுங்காவலன்
மன்னுசெந்துகில்வன்னந்தயங்கல்போற்
றுன்னுசெஞ்சுடர்நீங்கலுந்தோமுற
மின்னுசெக்கர்விளங்கினமேற்றிசை. (அஎ)

வாசவன்றருமைந்தனுடற்புனை
தூசுநீக்கிச்சுடர்செயுமேனிபோ
லாசில்செக்கரடங்கிடநீனிறம்
வீசுமாலைவிளங்கினவெங்குமே. (அஅ)

செய்தநல்வினைதீர்தலிற்றீவினை
யெய்திமூடுமியற்கையைமானவே
வெய்துறக்கதிர்போதலுமேதினி
மைதரப்புதுவல்லிருண்மூடிற்றே. (அகூ)

பாரின்மங்கைசிவந்தபடாந்துலைத்
தாரவேகறுப்பாடைபுனைந்தெனச்
சீரிணுதபந்தீரவல்லிருள்
சேரவெங்குஞ்சிறந்துதிகழ்ந்ததே. (கூ0)

ஏயுமாயற்கிளையவள்காமவெந்
தீயெழுந்துதிசைத்திசைபொங்கலாற்
றூயமேனியிற்றோற்றுகொப்பூழினு
காயமெங்குங்கலந்ததுடுக்களே. (கூக)

தங்கணுதன் றணந்துள தன்மையாற்
பங்கசாதங்குவிந்தனபான்முக
மெங்கணுதனெதிர்ந்திடுமென் றயற்
கொம்பினும்பற்குழாங்கண்மலர்ந்ததே. (கூ௨)

மட்டிற்றார்புனைதன்மருமான்புயங்
கட்டித்தோயுங்கருத்துடைக்கன்னியை
யொட்டிப்பேரெழிலொவ்வுதல்காணவந்
தெட்டிப்பார்ப்பதொத்திந்துவெழுந்ததே. (கூ௩)

கன்னிகாமமுங்காளைதன்சீர்த்தியு
மன்னுமேனையர்சிந்தைமகிழ்ச்சியுந்
துன்னிமிக்குளதோற்றங்கடுப்பவே
நன்னிலாவிரிந்தெங்குநயந்ததே. (கூச)

கருப்புவில்லுங்கடுங்கணைத்தூணியுஞ்
சுருப்புநாணுந்துலங்கிடத்தாங்கியே
விருப்புமாமதிவெண்குடைகீழிரு
ளருப்புவேழத்தனங்கன்வந்தெய்தினான். (கூரு)

ஓடினானுலகெங்கணுந்தன்கணை
நீடினான்பலநேயமுண்டாக்கினான்
றேடினானிந்தச்சேயிழைமெய்யெலா
மூடினான்சரத்தான்முனைமாரனே. (கூசா)

அந்தமாரனலர்க்கணையோடயர்
சந்தமாமதிபெய்தழற்சாரலாற்
கந்தமார்குழற்கன்னிதியங்கியே
சிந்தைவாடித்துணிந்திதுசெப்புவாள். (கூஎ)

பஞ்சவர்க்கிடைதோற்றியபார்த்திப
னெஞ்சவெற்றிகொண்டெய்திடநாணியோ
வஞ்சிவீழ்ந்தயர்வாகியணங்குசூர்
வஞ்சிமேற்படைவந்தனைமாரனே. (கூஅ)

உன்னைவெற்றிகொண்டானெதிருற்றவன்
றன்னைவெற்றிகொண்டாயிலைச்சாபமும்
பின்னைவெற்றிக்கணைகளும்பெற்றதோர்
மின்னைவெற்றிகொளற்குக்கொல்வேனிலாய். (கூகூ)

முன்செய்தீமைமுடிந்தருவாகியும்
பின்செய்போதுமயிர்த்திலைபேதையென்
மன்செய்பெண்பழிவந்துவிட்டாலதற்
கென்செய்வாய்கணையேவியமாரனே. (௪00)

கொடியர்க்கேவல்செயுங்குரவோர்களு
நொடியிற்றீயவராகுதனேக்கினேன்
வடியிற்பாய்ந்தெனதாருயிர்வவ்வுநின்
கடியிற்பூந்தொடைகண்டதிற்காமனே. (கoக)

நீற்றினுனைநீறுபடுத்தநாள்
வீற்றேர்பெண்கொடிமீட்டதறிந்துநீ
யேற்றமங்கையர்க்கின்னல்செய்தாயிது
வாற்றலோநன்றியற்றவெங்காமனே. (கoஉ)

பொன்னிழைத்தபுதுப்பணிகாய்ப்பெழ
நின்னுழைக்கனல்நீட்டினமாரற்கு
முன்னிழைத்தனன்றீமைமுனிந்திட
வென்னிழைத்தனனுன்றனக்கிந்துவே. (கoங)

கட்டழற்குங்கடுஞ்சமனுர்க்குமா
மட்டெரிக்குந்தொழிலென்பராவிவைத்
தொட்டழிக்கமதன்றொடர்ந்தானுடற்
சுட்டெரிக்கவந்தாய்கொனீசோமனே. (கoச)

வேறு.

எரிவாயரவால்விறவாமையுநின்
கரியாயகலுங்கலைமீள்வதுவும்
வரியார்விழிமால்மடவார்மணவர்ப்
பிரிவானவர்செய்பிழைகாணிலவே. (கoரு)

முருகார்கடிமுள்ளரைமாமுளரிக்
கொருவாவுறவென்றெனையுன்னினையோ
சொருகாரழலைச்சொரிவாய்மதியே
வருவாயுயிர்போய்விடினுசிலையோ. (கoசு)

வெருவுந்தனிமெல்லியளென்மிசையே
செருமுன்பயிலுஞ்சிலைவேடனிலு
மொருவன்கணைதங்குடல்கண்டுமெனைப்
பொருமுன்புகழேபுகழாநிலவே. (கoஎ)

தோராமலராசுகனுர்கடவுந்
தேராய்மடவார்திரளுக்கிடராய்ப்
போராயுகிர்வெம்புலிபோலெதிரே
வாராதொழியாய்மலையானிலமே. (கoஅ)

சந்தார்மலையந்தனிலுற்பவமா
யந்தாய்முனிகண்ணருள்கண்டடைவாய்
பந்தார்முலையார்பழியஞ்சிலையான்
மந்தாநிலமேவசையஞ்சிலையே. (கoகூ)

தாவிக்கடியுந்தன்ருயெனின்முன்
மேவிக்கடிவாரெவரேவிழைவார்
கூவிக்கொடுமாமதனைக்கொணரும்
பாவிக்குயில்காள்பறையத்தகுமே. (கக௦)

சொற்கொண்டுனேவென்றதுவேதுணிவா
யெற்கொண்டனையின்றிசையஞ்சுகமே
நெற்கொண்டெறிவார்தமையோர்நெடிதாங்
கற்கொண்டெறிவார்கதையொத்தனையே. (ககக)

வேயும்பகையர்ய்விறலாயமுடன்
ருயும்பகையாய்த்தகுதிண்ணிலவுங்
காயுங்கனலிற்கவல்வேன்மிசையே
நீயும்பகையாயினைநீள்கடலே. (ககஉ)

கரவேயுணருங்கணைமாமதவேள்
விரவேயகலாவிரகோதினனே
குரவேபுனையென்குழலுக்கிணையா
மிரவேநிலையாயிகனீங்கிலையே. (ககங)

வேலைக்குழியிற்றனிவீழ்ந்தனனே
வாலித்தரவங்கயில்வுற்றதுவோ
மாலைப்பொழுதேமறையுஞ்சுடரோன்
கோலத்துதியானிதுவுங்குறையே. (ககச)

வேறு.

என்றிவள்பலவுங்கூறியிருந்துயிர்த்திருகண்டாரை
மன்றல்வாண்முலைமேற்சிந்தமலரணைப்புறத்துமாழ்குந்
துன்றுதார்க்குழலினுளைத்தோழியர்தெருட்டிமாதே
நன்றிதேவிரகம்போற்றிநாண்டொலைத்திடுதலென்ருர். (ககரு)

அன்னசேடியரைநோக்கியாரணங்கனையாளிந்த
நன்னிலவெழுந்தபின்னரகன்றநல்லூழியெல்லா
மின்னதென்றும்மினுடியிசைமினென்னலுமாங்கம்ம
மன்னிராக்கடிகைமூன்றின்மறைந்திடுமஞ்சலென்ருர். (ககசு)

தோழியருரைத்தவாய்மையுண்மையேதுவர்வாய்ச்செஞ்சொற்
பாழியஞ்சிகரியேய்க்கும்பணைமுலையணங்கேவெய்யோ
ஞழிகைமூன்றுநீங்கநண்ணுவனடுங்கலென்றே
கோழிசெஞ்சூட்டுச்சென்னிக்கொட்புறக்கூவிற்றன்றே. (ககஎ)

வருத்துதண்மதியுந்தீயமதனனுமாதுக்கின்னே
மிருத்துவாயடைந்ததீங்குவிலக்குதுமென்றுட்கொண்டே
திருத்தவமிருத்துமுன்னஞ்செயித்தவன்பெயரையாங்குக்
கருத்துறச்செபித்ததேபோற்களித்தகார்க்குருவியீட்டம். (ககஅ)

பூரணமதியாம்வேந்தன்புரந்தவேழ்கடல்சூழ்வையந்
தாரணிகதிரின்செல்வன் றன்வயமானதிப்பாற்
காரணமறிமினென்றுகாசினியோர்கட்கோதித்
தோரணம்வைப்பானென்னச்சுக்கிரனுதயஞ்செய்தான். (கககூ)

வருநமர்குலத்துக்கெல்லாமன்னவன்மன்னன்றங்கை
யுருகிடத்தீமைசெய்தேயுறுவசைகொணர்ந்திரென்னக்
கருதுமாங்குயிலையாதிகாமவேணண்பினோரைப்
பொருவறவைவதேபோற்புள்ளெலாமொலித்ததாலோ. (க௨0)

அன்றரன்விழிசெய்யாண்மையறிந்தவன்விழியினுட்ட
மின்றெதிர்ந்திடுமேலின்னுமெய்துவந்தீமையென்றே
வன்றிறற்களிறுந்தேரும்வாளியுஞ்சிலையுநீக்கி
வென்றிமாமதனனென்போன்வீறழிந்தகன்றான்மாதோ. (க௨க)

தமரவெங்கடலிற்றோற்றுந்தண்மதிநண்பினாலே
சமரினிற்சுபத்திரைப்பேர்த்தையலைவருத்தினோமா
லமருஞ்செங்கதிரோன்றோற்றிலடுவன்றன்குலத்தையென்றோ
திமரவல்லிருளகன்றேகரந்ததுசேமந்தோறும். (க௨௨)

செங்கண்மாறனக்குத்தங்கைதனக்குமச்சிறப்பேயாகு
மிங்கிவட்கிதஞ்செய்யாதேயிருந்திடினடுவனென்றே
வெங்கரப்படைகடாங்கிவிழிசிவந்துதயக்குன்றிற்
பங்கயத்திறைவன்வந்தேயுதித்தனன்பார்விளங்க. (க௨௩)

தன்னதிகாரங்கொண்டதராபதிதனக்காற்றுமன்
முன்னதிகாரஞ்செய்தோன்முகங்கெடுமியற்கையேபோன்
மின்னதிகாரமெல்லாம்விளக்குசெஞ்சுடருக்கஞ்சி
மன்னதிகாரம்பொய்த்தமதியென்போன்புறந்தந்தானே. (க௨௪)

வெய்துருங்கதிரோன்சீற்றவெம்மையைநோக்கறக்கஞ்சி
நெய்தல்வாள்விழிமுகிழ்த்துநிரைந்தலர்வனசமாகுங்
கைதனைக்காட்டியையாகாத்திமாமதியையென்றே
பெய்தடமங்கைவேண்டுமாறுபோற்பிறங்கிற்றெங்கும். (க௨௫)

அத்தகையேல்வைகண்டேயரிவையர்திலதமொப்பாள்
பித்தரிற்சிறந்தாண்மீளப்பெண்மையிற்சிறந்தாளாகிக்
கைத்தலவளையும்பாதசாலமுங்கலிப்பவேகி
முத்தணிபந்தரூடுவைகினள்முராரிதங்கை. (க௨௬)

தாதியரிரவிற்பட்டதன்மையையளித்ததாயர்
மாதுதேவகியார்கேட்பவணங்கிநின்றுரைக்கலாலே
மூதுணர்வுடையமங்கைமூதுக்குறைந்தனளென்றோர்சொன்
மாதவனறியச்சொற்றுள்வான்றவமளப்பிலாதாள். (க௨எ)

வேறு.

சங்கவண்ணனுக்கிவடீனச்சுயோதனன்றனக்கே
யங்கைநீர்தரும்வண்ணமேயமைந்திருந்தனனாற்
றிங்களன்னமாமுகந்திகழ்செல்விக்குமெனக்கும்
பங்குனன்றனக்களிப்பதேபயனெனும்பான்மை. (௧௨அ)

ஆதலாலவனறிந்திடில்வேள்விசெய்தமையா
தேதன்மேவுறுமித்தகையொருவற்குமிசையா
தோதுநீண்மனையிருந்திடிங்குற்றுளோருடனே
சீதமாமதிசூடிவாழ்சினகரமடைந்து. (௧௨௯)

விழைவினோடவண்வைகியவேளைகண்டிங்கு
மழைகளோதியைவாசவன்மகனுடன்கூட்டிக்
கழைகள்சேர்வயலிந்திரப்பிரத்தத்திற்கலப்ப
விழைகொளம்மடீயுய்க்குதியென்றுரைத்தெழுந்தே. (௧௩0)

புரிசைசூழ்தருதுவரைமானகர்க்கொருபுறத்தி
னுரைசெய்நற்பிலமுண்டதில்விமலனுக்கொப்புக்
கரைசெயற்கரிதாகியவாலயங்கண்டே
விரைசெய்யாண்டுதோறியற்றுவார்திருவிழாவிழைவால். (௧௩௧)

அந்தநற்றினமப்பெருங்கடவுளருளால்
வந்ததென்றருமாமறையோரிசைத்திடலு
முந்தமாமுரசறைவித்துநகருளோர்முழுதுந்
தந்தவண்ணனுமுடன்வரச்சார்ந்தனள்சவுரி. (௧௩௨)

கனகமாமயத்தேர்மிசைக்கண்கள்மூன்றுடைய
புனிதநாயகன்மாநகர்வலம்வந்துபொற்பாற்
றனதுகோயிலிற்சார்ந்திடயாதவர்தன்னோ
டினிதுமேவினனிந்திரநீலமேனியனே. (௧௩௩)

அன்றுநற்பகலகன்றிரவடைதலுமரசர்
வென்றிமாமுடியுருஞ்சுதாள்விசயனுமுணர்ந்து
மன்றன்மாலைசேர்மகத்திறைவரும்படிநினைந்தான்
றுன்றுதார்குழல்வேள்விசெய்தேகுவான்றுணிந்தே. (௧௩௪)

பொலன்செய்கற்புடைப்புலோமிசையுடனொருபுழைக்கை
நலஞ்செய்வெள்ளைவாரணத்தின்மேனகர்கோனெதிர்ந்தான்
கலன்செய்பொற்புடைக்கன்னியுமண்ணலைக்கருத
நிலஞ்செய்நற்றவத்துதித்தவன்வந்தெதிர்நின்றான். (௧௩௫)

இந்திராணியோடெய்தியவிந்திரன்றன்னை
யிந்திராபதியெதிர்கொளத்துவரைமாநகரிற்
சந்திராதபமண்டபத்திடுபொலன்றவிசின்
வந்திராவணங்கியதிருமகனுடன்மகிழ்ந்தான். (௧௩௬)

முடியுமாரமுமுளைத்தசெங்கதிரினைவெல்லுங்
கடிகொள்குண்டலக்குழைகளுங்கான்முளைக்கணிந்து
வடிகொள்வேற்கணாள்மகிழ்வுறமாமணியணிகள்
புடைகொண்மெய்பெறப்பூட்டினள்புலோமிசையென்பாள். (௧௩௭)

பொருவரும்புருகூதனும்புலோமகன்னிகையு
மருவரும்படியணிதலினணிகெழுவனப்பாற்
றிருவருங்குமரேசனுந்தேவியுமன்றி
யொருவரும்பிறிதொப்பிலரென்னுமாறுயர்ந்தார். (௧௩௮)

முனிவரெண்ணிலர்வதிட்டனைமுதலிடுங்குரவ
ரினியசாலிஃபமுதலியமாதரோடெய்திப்
புனையுமாயனும்பொன்னுலகிறைவனுமகிழத்
தனியிராவினிற்கடிமணமியற்றுவான்சமைந்தார். (௧௩௯)

காமர்மண்டபநடுவணிற்கதிர்மணிசெறித்த
வாமவேதிகைப்புறத்தினில்வைத்தபொற்பீடத்
ஹேமவல்லியுமிந்திரசூனுவுமிருந்தார்
சோமனற்குலந்துலங்கிடச்சுபம்செய்போதுணர்ந்தே. (௧௪௦)

பாலருந்ததிநறுநெயாய்ப்பாடியிற்கள்ளத்
தாலருந்தியவிரகனதருளினால்விரைவிற்
சாலருந்ததிதலைவனுந்தலைபெறுபலனுண்
ணூலருந்தருமுனிவருமந்திரநுவன்றார். (௧௪௧)

துடங்கினாத்வெம்முரசுடன்சுரிமுகந்தழங்கச்
சடங்கினாலுயராகுதித்தழலவன்சான்றாய்
விடங்கினான்மிகுவிசையனக்கன்னியைவேட்டே
படங்கினாலெரிக்கடவுளைவலம்வந்துபணிந்தான். (௧௪௨)

பூரணாகுதிநேர்ந்தவன்பொரிகளுஞ்சிதறி
யாரணாகமமுறைப்படியருஞ்சிலைமிதித்துக்
காரணாதிகள்கடந்தமாதவரையுங்கவினாற்
சீரணாவருந்ததியையும்பூசனைசெய்தான். (௧௪௩)

உருக்குமர்மணிசத்தியபாமையொப்பின்றித்
தருக்கிராதைசாம்பவவதிநிலையேமுதலாந்
திருத்துழாய்முடிமாதவன்றேவியர்பலரும்
பெருத்தவன்புடைத்தேவகியெனும்பெயராளும். (௧௪௪)

முன்னரோதியவருந்ததிமுதலமங்கையரு
மன்னுபூரணகும்பமுமங்கலட்டகமு
மின்னுமாமணித்தீபமுமேந்திடவிசயன்
பொன்னிகர்த்தபொற்றொடியுடன்றிருமனைபுகுந்தான். (௧௪[illegible])

மட்டின்வார்குழன்மங்கையர்மலர்களான்மணியா
விட்டவாதனத்திளங்கொடியுடனினிதிருப்ப
முட்டில்செல்வனும்வாசவன்முனைதருமகனுக்
கிட்டமானசிராசிகள்புகன்றுவாழ்த்தெடுத்தே. (௧௪௬)

முனிவரோடுநன்முகில்வணன்விடைதரமுதிரா
வனிதையோடுபோய்மானகரடைந்தனரிப்பாற்
கனிகொள்வாயிதழ்க்கன்னியோடேகெனக்கரைத்துத்
தனிகொள்செங்கணன்மீளவும்பிலத்துழிச்சார்ந்தான். (௧௪௭)

அந்தவொல்லையினருச்சுனனணங்கனுளுடனே
வந்துமாமணித்தேர்மிசைபுகுந்துகார்வரைநேர்
முந்துவெஞ்சிலையேந்தியேமுனைக்கணைத்தூணி
வெந்திறற்புறம்வீக்கியேபடர்ந்தனன்விரைவால். (௧௪௮)

சென்றுசேடியர்திறலுடைக்கவுந்திதன்குமரன்
குன்றுபோன்முலைக்கோதையாஞ்சுபத்திரைக்கொடியை
வென்றியோடுகைப்பிடித்தவன்விரைந்தனன்றகைமி
னென்றுகூயினர்யாவருமிரைத்தெழுந்தனரே. (௧௪௯)

புரிசைகாப்பவர்மற்றுளமன்னவர்புகுந்தே
விரைசெய்தாரினுன்றனைத்தொடர்ந்தார்த்தலும்வெருவிக்
கரைசெயற்கருங்கற்பினுள்வாடுதல்கண்டே
வரிசைமன்னவனறிந்திதுவழங்கினன்மாதோ. (௧௫௦)

வேறு.

* அஞ்சேன்வருந்தலவர்தம்மையுமாவிகொள்வேன்
செஞ்சேலனையவிழியாயெனத்தேற்றியந்த
மஞ்சேயனையதடந்தேரவளூரவந்த
வெஞ்சேனைமுற்றும்புறந்தந்திடவென்றுபோனான். (௧௫௧)

* மடைப்பட்டவாளையகிளுறுமருதவேலி
யிடைப்பட்டதங்கள்வளநாடுசென்றெய்தியாங்குத்
தொடைப்பட்டதிண்டோளறன்காளைத்துணைவரோடு
நடைப்பட்டுருகியெதிர்கொள்ளநகரிபுக்கான். (௧௫௨)

ககனத்தரசன்மகனுங்கோர்கருத்தையுன்னி
முகனத்திருவையினிதாய்மனைமுன்னரேவ
வகனிற்சிறந்தவனல்வந்தவடாளில்வீழ்ந்தாள்
மகனைப்பெறுகென்றினிதன்புடன்வாழ்த்தினளே. (௧௫௩)

கணவற்பயந்ததனிமாமிதன்காலில்வீழ்ந்தாள்
புணரிக்கருணையுடையாள்தன்மார்பிடைபுல்கிமின்னே
மணவற்கினியமனையாகிநல்வாழ்விறேடுந்
தணவற்றினியமகப்பெறுவாயெனச்சாற்றினளே. (௧௫௪)

வீறாலுயர்ந்தமகவான்மகன்விளம்பற்கொண்ணாப்
பேறாலுயர்ந்ததனதன்னையைப்பெட்பினோடும்
நூறாய்வணங்கிநவலாசியுமினிதுகொண்டே
ஆறாதகாதவிளமாதுடனும்புகுந்தான். (௧௫௫)

வேறு.

சிங்கவேறெனத்தெழித்தவென்றுபோஞ்செயல்கண்
டங்கண்மானகர்காப்பவர்நொந்துளமழன்று
துங்கணையகரிருந்துழிசெவிகளிற்சாரப்
புங்கமார்முரசறைந்தனர்புயல்கெடவார்த்தார். (௧௫௬)

சலத்தினிங்கிவர்தருமொலிவந்துசார்ந்திடலும்
பிலத்தின்வைகினோரியாவருந்துணுக்கெனப்பெயர்ந்து
நிலத்தினேரலர்யாவரோநேர்ந்தனரென்னக்
குலத்தருஞ்சினங்கதுவிடக்குறுகினர்நகரில். (௧௫௭)

அனையகாலையின்முகில்வண்ணனண்ணலைநோக்கி
மனையில்வைகியயதிபுயல்வண்ணன்மாமகனும்
புனைசுபத்திரைப்பூவையைக்கவர்ந்தனன்போனா
னெனவுரைத்திடக்கேட்டனனென்றனனெதிர்ந்தே. (௧௫௮)

சொற்றகாலையிலிருவிழிசிவந்துதன்றுணைவன்
வெற்றிமாமுகனோக்கியேமேலிதுதகுமோ
மற்றவன்றனைதொடர்ந்துபோய்மணிமுடிதுணிப்ப
னிற்றைவைகல்போயிறுவதன்முன்னரென்றெழுந்தான். (௧௫௯)

ஒலித்தபேரிகையொலித்தவெண்சங்கினமுகனும்
கலித்தவாசிகள்கலித்தகார்வரைநிகர்கரிகள்
புலித்தகைத்தலப்பார்புகழ்மன்னவர்பரித்தேர்
செலுத்திமுன்னறிற்சென்றனர்மானகர்தீர்ந்தே. (௧௬௦)

எய்துசேனையோடேகுவானலாயுதனெழுந்தான்
கைதவஞ்சிறிதறிந்திலன்கார்வணன்றகைந்து
செய்தனன்றுணித்திவ்வகையாரிதுசெய்வார்
மைதடங்கணாள்மாதுலன்மகளெனும்வழக்கால். (௧௬௧)

வெறுத்தியாவருமேவினுநேர்படான்விசயன்
பொறுத்தியையநீயுணர்குதும்புகுந்தவாறென்றான்
சிறுத்தசிற்றிடைக்கோவியரிளமுலைதிளைக்குங்
கறுத்தமால்வரைப்புயமுடைத்தாமரைக்கண்ணன். (௧௬௨)

நன்றுநன்றுநீகுறித்ததுநம்மனைபுகுந்து
வென்றிமாதினைக்கொண்டுபோம்விசயனையெதிரா
தின்றுதாழ்த்திடலிசைவுனக்காமெனிலினிமேற்
சென்றுகாண்பதொன்றுளகொலோசெப்புதிதிறலோய். (௧௬௩)

ஒறுப்படாதுநீயுறுதிசொற்றிடாதவனுற்றென்
மறுப்படாமனைவைகிமாதினைக்கொடுபோமோ
பொறுப்படாநிற்கும்புரந்தரன்மகனெனப்பொங்கிக்
கறுப்படாம்புரைமேனியன்றனைமிகக்கறுத்தான். (கசு௪)

அய்யநின்னுளமப்படியாமெனிலடியேன்
செய்யுமோர்பெருந்தீமைநீயன்றியார்செறுப்பார்
வெய்யமாமுனிவகற்றெனப்பலவகைவிளம்பிச்
செய்யவாயினனண்ணலோடுயர்மனைசேர்ந்தான். (கசுரு)

மீண்டசேனையுமத்தினமகன்றபின்வெள்ளை
நீண்டமேனியனெடுங்கடல்வண்ணனைநோக்கிப்
பாண்டுநந்தனர்பதிசென்றுபாவையைநரனுக்
காண்டுநீருகந்தளித்துமீண்டடைகுதலன்றே. (கசுசு)

என்னவோதினனிசைந்துமாதவனளப்பில்லா
மன்னர்சூழ்வரத்தேர்மிசைவந்தனனந்தன்
முன்னமேகிடமுரசொலிதிசைதிசைபோர்ப்பச்
சொன்னநால்வகைச்சேனையுஞ்சூழ்தரச்சென்றான். (கசுஎ)

வழக்கினுலுயருதிட்டிரன்மற்றிவர்க்கெதிர்வந்
தழைத்துபோய்த்தனதணிநகர்புகுந்தனனதன்பின்
றெழித்தவேதியர்திறன்மிடச்செகதலத்தரசர்
முழுக்கொண்டெய்திடத்தூதுவரேவினர்குழைந்தே. (கசுஅ)

வந்துசூழ்ந்துளமன்னவர்குழாம்புடைமருவ
வந்தணாளர்களாகுதித்தூமம்வானளவச்
சந்தமார்முலைச்சுபத்திரைதனையருச்சுனனுக்
கிந்திராதியர்மகிழ்வுறமன்றல்செய்தீந்தார். (கசுகூ)

அளப்பிறேயமுமரிவையரெண்ணிறந்தவரும்
வளத்தினுலுயரான்களும்பூண்களும்வயஞ்சேர்
களிற்றினேடுதேர்வெம்பரியானங்கள்கருதார்த்
துளைத்தவாளியான்றேகைபார்சீதனமளித்தான். (கஎ0)

வரைவுமுற்றியாங்கவர்விழைவெய்தியமறுநாள்
விரைவினிற்பலசேனையுமேவிடநீலாம்
பரனிசைப்பெரும்பதிபுகுந்திருந்தனன்படந்தா
ழரவமாதனைவரூர்வைகினனன்றே. (கஎக)

வேறு.

உயிருடனுடலுமலரிடைநறையுமுறுமணியதனிடையொளியும்
பயில்வதுபோலப்பாவையுந்தானும்பகலிரவகன்றிலனுகி
மயலெனுஞ்சலதிபுகுந்திதழமுதுமங்கைதன்மொழியெனுந்தேனு
மியல்கொள்வாயதனினுஞ்செவியினும்பருகியிருந்தனன்வீமனுக்கிளையோன். ()

திருவணிபுருவச்சிலைகுனித்தொருதன் றிறல்விழிக்கணைகளைப்பூட்டி
மருவணிகுழலாள்மன்னவர்பெருமான்வரைப்புயமுருவிடத்துரப்பத்
தருவணிகரத்தன்வரிசிலையரசர்சரமழைதடுப்பவனந்த
விரவணிமடந்தைகணைக்குடைந்தவடன்வெம்முலைவரையிடத்தொளித்தான்.

ஊடலிற்கணவன்றனக்குடைந்தினிதாமுளங்களித்திடும்வகையவனைக்
கூடலில்வெற்றிக்கொண்டிவன்குலவக்கோமகனுற்றொருமையலா
லாடலிற்சிறந்தான்சிலதுநாள்கழியவவர்குலமுய்யுமாறுகத்
தோடலர்ச்செழுந்தார்ச்சுபத்திரையென்பாடுனிவறக்கருத்தரித்தனளால். ()

பசும்பணியென்னத்திருவுடற்பசந்துபவளநல்லிதழொளிமாழ்கி
யசும்பிணைமுலைகண்முகிண்முகங்கறுத்தேயையமுற்றிடுஞ்சிறுமருங்கு
லொசிந்துளதென்றேயாவருந்தெளியவுருவமுங்காட்டியாலிலைபோ
லிசைந்தநல்லுதரமேலுறவேறொரெழிலடைந்திருந்தனளன்றே. (௧௭௫)

கற்றவர்புகழுமாதவற்கிளையகாமருகருங்கணுள்கருக்கொண்
டுற்றதுநோக்கியாவருமகிழ்ந்தாரும்பருமலர்மழைபொழிந்தார்
ப்ற்றலர்நடுங்கக்குலந்தழைத்தோங்கப்பாண்டுநந்தனர்புள்கரும்ப
மற்றொருதினத்திலவதரித்தனன்சீர்வளரபிமன்னுவாமகனே. (௧௭௬)

ஐவருமகிழ்வுற்றந்தணர்தங்கட்கான்கள்கோடிகள்பெறவழங்கி
மைவருசிந்தைச்சுயோதனன்முதலோர்மாழ்கிடமாநிதிவரைகள்
கைவரவழங்கிமான்மதஞ்சுண்ணங்கமழ்வுறமறுகுதோறூட்டிச்
செய்வருங்கடன்கள்முறைவழாதியற்றித்தேவரும்வியந்திடவிருந்தார். ()

முனிவர்மங்கையருமரம்பையர்பலருமுதல்வருமதலையையேந்தி
யினியசீராட்டியயினிகள்சுழற்றியிருநிலக்காப்பணிந்தெழில்சேர்
புனிதவானவரைக்காண்மினென்றிசைத்துப்பொற்புறுதொட்டிலிற்செறித்தார்
தனிவருமுதயபானுவென்றயிர்ப்பத்தருக்குடன்வளர்ந்தனன்றனயன். (௧௭௮)

வேறு.

வேதஞ்சிறக்கமனுநீதிவிளங்கவிப்பார்
மாதங்கமாறவருமைவரின்மைந்தரைவர்
பூதங்களைந்திற்குணமைந்தும்பொலிந்தவாபோ
லோதங்கியினன்றுற்பவித்தாள்வயினுற்பவித்தார். (௧௭௯)

* அம்மாதுலனும்பயந்தோருமழகின்மிக்க
விம்மாமகாருக்கியற்றும்விதியேய்ந்தபின்னர்த்
தெம்மாறுவின்மைமுதலானசெயல்கள்யாவுங்
கைம்மாறுகொண்டுநனிகைவருமாறுகண்டார். (௧௮௦)

* அரிதிற்பயந்தவறுவோருளுமாண்மைதன்னு
ளிருந்துக்களின்மேனிளவேனிலிற்றோற்றமேய்ப்ப
மருதுக்கிடைபோமதுசூதன்மருகன்வெம்போர்
விருதுக்கொருவனிவனென்னவிளங்கினானே. (௧௮௧)

* உரனுலழகா லுரையான்மற்றுவமையில்லா
நரநாரணர்க்குநலங்கூர்தருநண்புபோல்வா
னரனுர்விழியாலழிந்தங்கமனங்கமான
மரனு * ருடனம்பியைந்தன்றுவசந்தகாலம். (௧௮௨)

திர்த்தயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-௨௦௦௧.

---

## காண்டவதகனச்சருக்கம்.

* நனியாடலனற்கடவுள்யமனிருதிரண்ணுதிசைநாள்கடோறு
முனியாமனடந்திளைத்துமுன்னையினும்பரிதாபமுதிர்ந்ததென்று
தனியாழித்தனிநெடுந்தேர்த்தனிப்பச்சைநிறப்பரியைச்சயிலராசன் [ன்.
பனியாலவ்விடாய்தணிப்பான்பனிப்பகைவன்பனிசெய்வோன் பக்கஞ்சேர்ந்தா

* கலக்கமுறவிளவேனிற்கலகமெழுந்திடும்பசுந்தண்காவுதோறுஞ்
சிலைக்கணிநாண்முறுக்குவபோற்றென்றலின்பின்சுழலளிகள்சேரவோட
வுலைக்கனலிற்கருங்கொல்லன்சிறுகுறட்டாற்றகடுபுரிந்தொதுக்கிமாரன்
கொலைக்கணைகள்சமைப்பனபோற்குயிலலகாற்பல்லவங்கள்கோதுமாலோ. ()

* செங்காவிசெங்கமலஞ்சேதாம்பநடந்தொறுமுத்தீகளாகப்
பைங்காவினெடுஞ்சினைக்கைமலர்நறுந்தேனாகுதிகள்பலவும்வீழ்க்க
வுங்காரமதுகரங்களோங்காரச்சுருதியெடுத்தோதவேள்வி
வெங்காமனிரதியுடன்புரிந்துதனதென்றலந்தேர்மேற்கொண்டானே. (௩)

* தேவியருந்திருமாலுஞ்செழுமலர்த்தார்த்தனஞ்சயனுந்தேவிமாரு
மேவியனந்தரம்வேனில்விழவயர்வான்முரசறைந்துவீதிதோறு
மோவியமுமுயிர்ப்பெய்தவுபேந்திரனுமிந்திரனுமுவமைசாலப்
பூவினமுஞ்சுரும்புமெனப்புரமுழுதும்புறப்படவண்பொங்கர்சேர்ந்தார். (௪)

* கொண்டலெழமின்னுடங்கக்கொடுஞ்சாபம்வளைவுறச்செங்கோபந்தோன்ற
வண்டளவுநறுங்குமிழும்வண்டணிகார்ந்தளுமலரமலைகடோறுந்
தண்டரளவருவிவிழித்தையலார்வடிவுதொறுஞ்சாயற்றோகை
கண்டுநமக்கிளவேனில்கார்காலமானதெனக்களிக்குமாலோ. (௫)

* பாராமனகையாமற்பாடாமலாடாமற்பாதஞ்செங்கை
சேராமன்முகராகம்வழங்காமலிகழாமற்செவ்வாயூற
னோராமனிழலதனைநிகழ்த்தாமன்மலர்ந்தழகுநிறைந்தநீழ
லாராமந்தொறுந்தங்களவயவம்போல்வனகொய்தாரணங்குபோல்வார். (௬)

---

* மரன் - மன்மதன்.

* மாற்றுதபனிநீரான்மான்மதகுங்குமமலயவாசச்சாந்தின்
சேற்றுலச்சோலையெலாஞ்செங்கழுநீர்த்தடம்போன் றசிந்தைத்தாப
மாற்றுதகாதலருக்கமுதானவிளநீராலடர்ந்தபூகத்
தாற்றுலம்மரகதச்செந்துகிராலப்பொழில்போன் றதடங்களெல்லாம். (எ)

* மெய்கொண்டமொழிவிசயன்மெய்யினெழிலிமையாமன்மேன்மேனுக்கு
மைகொண்டகுழலொருத்திமற்றவன்செங்கையிற்சிவிறிமழைகண்டஞ்சிப்
பொய்கொண்டுவகுத்தனையமருங்கசையத்தனபாரம்புளகமேறக்
கைகொண்டுமுகம்புதைத்துத்தன்விரற்சாளரங்களிலேகண்கள்வைத்தாள். ()

* நங்கையங்கோர்கொடியனையாள்வதனமதிசலமதியாய்நடுங்குமாறு
பங்குனன்றன் றிருச்செங்கைப்பங்கயத்தின்சிவிறியினுற்பரிவுகூரக்
குங்குமங்கொள்புனல்விடவுமிமையாமற்புனல்வழியேகூர்ந்தபார்வை
செங்கலங்கற்புதுப்புனலுக்கெதிரோடிவிளையாடுஞ்சேல்கள்போலும். (௯)

* நறைகமழ்தண்டுழாய்மாலைநாரணற்குநண்பானநரனார்செங்கை
யுறையுமலர்ச்செந்திருவுமொவ்வாதபொற்புடையாளொருபொற்பாவை
நெறிதருபைங்குழலின்மிசைவீசியநீர்பெருக்காற்றினிறைநீர்வற்றி
யறல்படுநுண்கருமணலினரித்தொழுகுஞ்சின்னீரோடமைந்ததம்மா. (௧௦)

* விளிந்துமயில்புரங்கொடுக்குமெல்லியலாளொருத்திநெடுவேயும்பாகுஞ்
சுளிந்துவருங்கடகளிற்றுச்சுவேதவாகனன்கடகத்தோளின்மீது
தெளிந்தநறுங்கத்தூரிச்சேறுபடுசிவிறியினீர்சிந்துந்தோற்றங்
களிந்தகிரிமிசைகடவுட்காளிந்திபரந்ததெனக்கவினுமாதோ. (௧௧)

* பிறையனையதிலகநுதற்பேதையிளம்பிடியொருத்திபிடித்தசெங்கை
நறைகமழும்பொலஞ்சிவிறிநண்ணியசெஞ்சிந்தூரநாரம்வீச
வறைகழல்வெஞ்சிலைத்தடக்கையருச்சுனன்றன் றிருமுகத்திலானபோது
நிறைமதிமேல்வாளிரவிகரங்கணிரைத்தோடுவபோனிறத்தமாதோ. (௧௨)

* பாண்டுமதலையுங்காதற்பாவையருந்துழாயோனும்பாவைமாரு
மீண்டுபெருஞ்சனத்துடனேயிவ்வண்ணமிடங்தோறுமினிதினுடி
யாண்டுவரிசிலைமதனுமவன்படையுஞ்சேவிப்பவழகுகூர
மீண்டுதமமனைதோறுநிரைநிரைவாள்விளக்கேந்தமேவினாரே. (௧௩)

* நெடுவேனில்புகுதரமேலிளவேனிலகன்றதற்பினிகரில்கஞ்சப்
படுவேய்வெள்வளையமுந்தண்பட்டாலவட்டமுஞ்செம்படீரச்சேறு
முடுவேய்நித்தலத்தொடையுமூடுறுமண்டபத்தடமுமொழுகிநீண்ட
வடுவேய்கண்மடந்தையர்க்குமகிழ்நருக்குமமைந்தனவான்மனைகளெல்லாம். ()

* திலகநுதற்குறுவியர்தஞ்செவிப்பூவிலளியினத்தின்சிறகர்கற்றூர்
புலரமதுநுகர்மாதர்புன்முறுவலிதழூறல்புதிதின்மாந்தி
யிலகுபரிமளபுளகவீரமுலைத்தடமூழ்கியிரதிகேள்வன்
கலகமிடும்பரிதாபமகற்றினாரினிமையுடன்கலந்தகேள்வர். (௧௫)

* மாரவசந்தனையகன்றுவயங்குறுவெங்கோடையினுன்மறுகியாற்று
தாரமலிமதுமலரிலாரவடங்களிற்பனிநீராரச்சேற்றி
வீரநெடுங்குழலிசையிலியங்கியசாமரக்காற்றிவிளநிலாவிற்
பேர்ழலும்புகுந்ததெனப்பிணங்கினார்தங்கேள்வர்பிரிந்தமாதர். (௧௬)

* கோடைவெயில்சுடச்சுடமெய் கொளிந்தியிறந்தனபோலக் கொண்டல்கோ
வாடைசிறுதென்றலெனுமாருதங்களெம்மருங்கும்வழக்கமின்றி [டை
யாடையில்வெண்சாமரத்திலாலவட்டத்திலுயிர்ப்பழகார்நெற்றி
யோடைமுகமதகயத்தின்றழைசெவியிற்பல்விறகிலொளித்தமாதோ. (௧௭)

தாழிநறுங்குவளையந்தார்த்தருமன்மகனருட்புனலுந்தரங்கவேலை
யூழிநெடும்பெரும்புனலுமுடலிலுறுவெயர்ப்புனலுமூறியூறிப்
பாழிதொறுமிறைக்கின்றபைம்புனலுமல்லதுவெம்பருவந்தன்னாற்
பூழிபடுகமர்வாயநானிலத்தும்புகலுதற்கோர்புனலுமுண்டோ. (௧௮)

* நீகாரமழைபொழியநித்திலவெண்குடைநிழற்றநீலவாட்கட்
பாகாருமொழிமடவார்மணிக்கவரியிருமருங்கும்பயிலவீசக்
கார்காலம்புகுந்துசெழுங்காளமுகிலிரண்டொருபாற்கலந்ததென்ன
வாகாரமழகெறிப்பவிருவருமாங்குடனிருந்தாராவிபோல்வார். (௧௯)

வேறு.

* இனியபான்முகந்தொழுக்குமாகுதியெனவிலங்குமுப்புரிநூலுந்
தனதுவெஞ்சிகைக்கொழுந்தெனப்புறத்தினிற்றாழ்ந்தசெஞ்சடைக்காடும்
புனிதவெண்புகைமருங்குசுற்றியதெனப்புனைந்தவாடையுமாகி
மணிதவேதியர்வடிவுகொண்டவரெதிர்வன்னிவானவன்வந்தான். (௨௦)

* வந்தவந்தணன்வரவுகண்டிருவரும்வந்தெதிர்வணங்கித்தஞ்
சிந்தையன்பொடுவேதிகையெனத்திகழ்செம்பொனின்றவிசேற்ற
வந்தணுளனுங்குழிந்தபொற்கண்ணினனவிமணங்கமழ்வாய
னுந்துவெம்பசிபெரிதுவல்லேயெனக்கோதனமிடுகென்றான். (௨௧)

* கரியமேனியரிருவருஞ்செய்யபொற்காயமாமுனியுண்டற்
குரியபோனகமிடுதுமிக்கணத்தெனவுவகையோடுரைசெய்தா
ரரியவாயினும்வழங்குதற்கேற்றனவல்லவாயினுந்தம்மிற்
பெரியவாயினுமதிதிகள்கேட்டனமறுப்பரோபெரியோரே. (௨௨)

* அளித்துமென்றசொற்றன்செவிப்படுதலும்பெற்றனன்போலாகி
யொளித்துவந்தனனிருபிறப்பினனலேனுதாசனனெனுநாமங்
களித்துவண்டிமிர்தொடையலீரெனக்குணக்காண்டவமெனுங்கானங்
குளித்தருந்துதற்கிடங்கொடானவ்வனங்கொண்டல்வாகனன்காவல். (௨௩)

* மிடைந்தநால்வகைமகீருகங்களுநெடுவெற்பினங்களுந்துன்றி
யடைந்ததானவராக்கர்பேருரகருக்காலயங்களுமாகிக்
குடைந்துசோரிகொள்வாளுகிரரிமுதற்கொடுவிலங்கினமிக்குக்
கடைந்தகூரெயிற்றாலதக்ககனும்வாழ்கானனமதுகண்டீர். (௨௪)

* புகுந்துயான்முகம்வைக்கினேழ்புயலையுமேவியப்புருகூதன்
றெருந்தாரதலவிறுதிபோனெடும்புனல்சொரிந்தவித்திடுமென்னை
முகுந்தனுனிரைபுரந்தவாறெனவொருமுனைபடவிலக்கிற்பின்
மிகுந்ததாகமுமென்னமுழுமுடிந்திடும்வேண்டுவதிதுவென்றான். (௨௫)

* என்றபோதிலுன்னிச்சையின்படியுனவியைந்தனமிமைப்போழ்திற்
சென்றுகொள்கெனத்தனஞ்சயன்கூறலுஞ்சிந்தைகூர்மகிழ்வெய்தி
மன்றலந்துழாய்மாயவனருளினால்வடிக்கணைமாளாமற்
றுன்றுதூணியுஞ்சாபமுமிரதமுஞ்சுவேதவாசியுமீந்தான். (௨௬)

* ஈந்தவானரப்பதாகைநட்டீரிரண்டிவுளியுமுடன்பூட்டி
யாய்ந்தவன்றொழிற்பாகனுமருணனிலழகுறும்படிதூண்டக்
காய்ந்தசாயகநாழிகைகட்டியக்காண்டிவங்கரத்தேந்தி
வேய்ந்தமாமணிக்கவசமுமருக்கனிலழகுறமேற்கொண்டான். (௨௭)

* நெஞ்சின்மேலிடுமூக்கமோடணிதிகழ்நெடும்புயம்பூரித்துச்
சிஞ்சிலீமுகந்தெறித்தனன்றெறித்தலுந்தெறித்தபேரொலிகானின்
விஞ்சிவாழ்வனசத்துவமடங்கவுள்வெருவுறவுகாந்தத்து
மஞ்சினீடுருமொலியெனப்பரந்ததுவான்முகடுறமன்னோ. (௨௮)

* ஆழிவாயொருவடவையின்முகத்திடையவதரித்தனனென்ன
வூழிவாயுலகனைத்தையுமுருக்குமாறுடன்றெழுந்தனனென்ன
வாழிவாழியென்றருச்சுனன்கரத்தையும்வார்சிலையையும்வாழ்த்திப்
பாழிமேனியைவளர்த்தனன்பாவகன்பவனனும்பாங்கானான். (௨௯)

* மூளமூளவெம்பசியொடுஞ்சினத்தொடுமுடுகிவெய்துறவோடி
வாளமாகவோர்பவளமால்வரைநெடுவாரியைவளைந்தென்னக்
காளமாமுகிலூர்திநந்தனநிகர்காண்டவந்தனையண்ட
கோளமீதெழவளைந்தனன்வரைபடிகொண்டலுங்குடர்தீய. (௩௰)

* ஆனவாகுலந்தன்னொடுதப்புதற்கணிபடப்பறந்தோங்குந்
தூனிறத்தனகபோதமொத்தனவிடையிடையெழுஞ்சுடர்த்தூமங்
கானமேதியுங்கரடியுமேனமுங்கடகரிக்குலந்தாமும்
வானிலேறுவபோன்றனநிரைநிரைவளர்தருகருந்தூமம். (௩௧)

* வரைத்தடந்தொறுங்கதுவியகடுங்கனன்மண்டலினகல்வானி
னிரைத்தெழுந்தசெம்மரகதகனகவாணீலவெண்ணிறத்தூமந்
தரைத்தலத்தினின்றண்டகோளகையுறச்சதமகன்றடஞ்சாப
முரைத்ததன்வளைவறநிமிர்ந்தழகுறவோடுகின்றதுபோலும். (௩௨)

* கருதியாயிரகோடிவெம்புயங்கமிக்கானிடையுளவென்று
பரிதிசூழ்வரவெருவுபல்குவடுடைப்பருப்பதங்களின்சாரற்
சுருதிவேள்விநூறுடையவன்சிறகறத்துணித்தவாய்தோறும்பொங்கிக்
குருதிபாய்வனபோன்றனகொளுந்தியகொழுந்தழற்கொழுந்தம்மா. (௩௩)

* கோத்திரங்களின்கவானிடைக்கதுமெனக்கொளுந்தியுற்றெரிகின்ற
தீத்திறங்கள்செங்காந்தளுமசோகமுஞ்செங்குறிஞ்சியுஞ்சேரப்
பூத்தவொத்தனவன்றியுங்குலிகநீர்பொழியருவியும்போன்ற
பார்த்தகண்கள்விட்டேகலாவகைநிறம்பரந்ததாதுவும்போன்ற. (௩௪)

* தளைத்தபாதபத்தலைதொறும்பற்றினசருகுதிர்த்திளவேனிற்
கிளைத்துமீளவும்பொறியெழவளர்கிசலயங்களும்போன்ற
திளைத்தவேர்முதற்சினையுறவிரிவனதீபசாலமும்போன்ற
வளைத்தகானிடைமெலமெலவுள்புகுவன்னியின்சிகாவர்க்கம். (௩௫)

* தழைத்தபேரொளித்திவாகரன்கரங்கள்போய்த்தடவியவ்வடவிக்கட்
பிழைத்தகாரிருட்பிழம்பினைவளைந்துடன்பிடித்தெரிப்பனபோலு
முழைத்தவான்புழையொருகரத்திருபணைமும்மதப்பெருநால்வாய்
மழைத்தகுஞ்சரமுகந்தொறும்புக்குடன்மயங்கியபொறிமாலை. (௩௬)

* அரியெனும்பெயர்பொருமையிற்போல்விரைந்தழற்கொழுந்துளைபற்றக்
கிரிமுழைஞ்சகடொறும்பதைத்தோடினகேசரிக்குலமெல்லாம்
விரியுரோமவாலதிகளிற்பற்றலின்விளிவுடைச்சவரங்க
ளெரிகொள்சோகவெங்கனலினானின்றுநின்றிறந்தனசலியாமல். (௩௭)

* எப்புறத்தினும்புகுந்துதீச்சூழ்தலினேகுதற்கிடமின்றித்
தப்புதற்கருத்தழிந்துபேரிரலையோடுழையினந்தடுமாற
மெய்ப்புறத்துவெண்புள்ளிசெம்புள்ளியாய்விடும்படிவிரைந்தோடி
யப்புறத்துவீழ்பொறிகளவ்வவற்றினையலங்கரித்தனவன்றே. (௩௮)

* காழுடைப்புறக்கழைகளின்றலைதொறுங்கால்பரந்திசைக்கின்ற
வேழிசைக்குழாமுருகிமெய்புளகெழவிரைகொளுமசுணங்க
டாழழற்சுடர்சுடச்சுடவெடித்தெழுசடுலவோசையின்வாய்ந்த
வூழியிற்புயலுறுமினான்மடிந்திடுமுரகர்தங்குலம்போன்ற. (௩௯)

* அனையபோதிலவ்விபினசாலங்களினுள்தருக்களினீண்ட
சினைகடோறும்வாழ்சிகாவலகலாபமேற்செறிதருதீச்சோதி
பனையினீளுடற்பணிகளையலகினாற்பற்றலிற்படர்பந்திப்
புனையுமாமணிநிழல்பரந்தெழுந்தெனப்பொலிந்திலங்கினமாதோ. (௪0)

* ஆசுகன்றனோடடவியைவளைத்தனனாசுசுக்கணிமென்மேல்
வீசுகின்றனபுலிங்கசாலமும்புகல்வேறெமக்கிலதென்று
பாசிளங்கிளிபூவைகள்வெருவிமெய்பதைத்துளந்தடுமாறிப்
பேசுகின்றசொற்கேட்டலுநடுங்கினபிறபறவைகளெல்லாம். (௪௧)

* நெஞ்சிலீரமுநீதியுங்குடிபுகாநிருதர்சென்னியில்வன்னி
குஞ்சிநீடுறவளர்வபோலசைந்துசெங்கொழுந்துவிட்டனமென்மேல்
வஞ்சிநேரிடையரக்கியர்நகமுழுமதிசிவப்புறத்தீட்டும்
பஞ்சிபோன்றனவவரவர்பதயுகம்பற்றியசிகைவன்னி. (௪௨)

* முப்புரங்களைமுக்கணன்முனிந்தனன்மூவரம்முழுத்தீயிற்
றப்பினருளர்காண்டவவடவிவாழ்தானவர்யாருய்ந்தார்
பைப்புறத்தணிமணியொளிபரந்தெனப்பஃறலைகளிற்பற்றி
வெப்புறுத்தலினுரகருந்தங்கள்வாய்விடங்கள்கொன்றெனவீழ்ந்தார். (சஉ)

* புகைபடப்படக்கரிந்தனபொரியினாற்பொறியெழுந்தனவானின்
மிகைபடைத்தவச்சுரர்பதியாயிரம்விழிகளுங்கனப்போதிற்
றகைவறக்கழைமுதலியதருக்களின்சடுலவாரவமிஞ்சித்
திகையனைத்தினும்பரத்தலிற்செவிகளுஞ்செவிடுபட்டனசேர. (சச)

வேறு.

* விரதமேல்கொண்டுசெம்பொன்மால்வரையைவிரிசுடர்சூழ்வருவதுபோ
விரதமேற்கொண்டவநசனுஞ்சுதனுமிமைப்பினிற்பன்முறைதேர்ந்து
சரதமேற்கொண்டுசரிப்பதுந்தனதுதாவகபாவகம்புகுந்து
பரதமேல்கொண்டுநடிப்பதுங்கருதிப்பார்த்தனன்பாகசாதனனே. (சரு)

* முந்திவார்சிலைக்கைபற்குனன்றொடுத்தமுரனுடைமூரிவெங்கணைக
ளுந்திவாளுரகர்சூடிகாமகுடகோடிகளுடைத்தலினுடைந்து
சிந்திமீதெழுந்தமணிகளுமனலன்சிகைகளிற்றெறித்தெழுபொறியு
மிந்திராலயத்துக்கேற்றியதீபமென்னநின்றிலங்கினவெங்கும். (சசு)

* தானவர்புரங்கணீறெழமுனிந்ததபனியச்சிலைக்கைவெள்ளூர்தி
வானவன்மதுபுரத்தையுஞ்சுடுவானழன்றனன்போலுமென்றஞ்சி
வானவர்நடுங்கவானவர்க்கரசாம்வலாரியுமனனுறத்தளர்ந்து
கானவருடனேதக்ககனென்னுங்கட்செவிகெடுமெனக்கரைந்தான். (சஎ)

பரந்தெழுபுகையாற்றத்தமவடிவம்பண்டையிற்பதின்மடங்காகச்
சுரந்திடும்புயல்களனைத்தையுநெடுநீர்சொரிந்தவித்திடுகெனச்சொல்லி
நிரந்தரமருகுவிடாததன்னிழல்போனின்றவானவரையுமேவிப்
புரந்தரன்றானுமீரிருமருப்புப்பொருப்பின்வெம்பிடர்மிசைப்புகுந்தான். (சஅ)

* ஏவகவிருத்தச்செவ்வியின்றனுவுக்கேற்றநாண்முறுக்கிவிட்டென்னச்
சேவகவிமையோரெண்டிசாமுகத்துஞ்செஞ்சுடர்வாள்விரித்தென்னப்
பாவகன்பகுவாய்நாவிதிர்த்தென்னப்பரந்தவப்பாவகற்குணவாந்
தாவகமுழுதும்வளைந்துகொண்டெழுந்தசலதரசஞ்சலாசாலம். (சகூ)

* ஏறியகளிறுபிளிறுநீடொலியுமெடுத்தவிற்றெறித்தநாணொலியுஞ்
சூறியவிமையோர்பெருநகையொலியுந்துந்துமிக்குழாமதிரொலியுங்
கூறியவனலன்சடுலவல்லொலியுங்குறைபடத்திசைதொறுமிகுந்த
வூறியபுவனபவனவேகத்தோடுருமுடைமுகிலின்வாயொலியே. (ருo)

* தூமமுமெமதுபவனமுமெமதுதோழனத்தோயமுமெமதே
யாமுமிங்கிவற்றொடொன்றுதலொழிதுமீரிருபொருள்களும்பிரிந்தால்
மாமுகிலெனும்பேரெங்குளதடர்த்துவாசவனென்செயுமெம்மை
யாமுறையறிதுமென்றுகொண்டறவுமகங்கரித்தனன்வெகுண்டழலோன். ()

* முண்டவெங்கனலையுருமின்வெங்கனலான்முருக்கியெங்கால்கையானெருக்கி
யாண்டவன்களிற்றின்கரநிகர்தாரையருவியின்கணங்களாலவித்துப்
பாண்டவன்பகழிதொடுக்கினுங்கண்ணன்பருப்பதமெடுக்கினுமெங்கள்
காண்டவம்புரத்துமென்றுகொண்டிழிந்துபொழிந்தனகனம்படுகனங்கள். ()

* காலைவாயருக்கன்பனிநுகர்ந்தென்னக்கட்டழற்காண்டவமென்னும்
பாலைவாயுள்ளசராசரமனைத்துநுகர்தலிற்பைம்புனல்வேட்டான்
வேலையேழையுமுண்டேழுமாமுகிலும்விதம்படப்பொழிந்ததாரைகளாற்
ஞாலுவேழினையுநனைத்தனனைத்துந்தணிந்ததோதன்பெருந்தாகம். (௫௩).

* எக்கடல்களினுமினிப்பசையிலதென்றேழுருபுவனமுநடுங்கத்
தொக்கடலுருமோடெழூமெழுகொண்டற்சோனையஞ்சுருஞ்வயான்முகந்து
மைக்கடல்வெளுக்கக்கறுத்தமெய்ம்மகவான்வழங்கியவாகுதியனைத்து
நெய்க்கடல்சொரிந்ததென்னுமாறருந்திநீடுவான்முகடுறநிமிர்ந்தான். (௫௪)

* தொழுதகுவிசயன்ஞாலுவேழுடையோன்சுடர்முடிநனைந்திடுவதன்மு
னெழுமுகிலினமும்பொழிதருமாரியாவையுமேவினால்விலக்கி
முழுதுலகமுந்தன்னிடயவான்முகடுறமுறைமுறையடுக்கிக்
குழுவுவெங்கணையாலனற்கடவுளுக்குக்கொற்றவான்கவிகையுங்கொடுத்தான்.

* ஆழ்தருபரவையேழும்வற்றிடுமாறழித்தகாருமிழ்ந்திடுநெடுநீர்
தாழ்தருசரத்தான்மேய்ந்ததற்கிடையோர்தனித்திவலையும்பொசியாமல்
வீழ்தருமருவிப்பாவகன்றனக்குவிசையனன்றளித்தபொற்குடைக்குச்
சூழ்தரநிரைத்துத்தூக்கியமுத்தின்சுடர்மணித்தொடையல்போன்றனவே. ()

* மண்டிமீதெழுந்தவன்னியின்சிகைகளிந்திரன்மதலைவாளிகளாற்
கண்டகூடத்திற்கமைத்தசெம்பவளக்காண்டகுதூண்டிரள்காட்ட
வண்டகூடத்திற்கிந்திரன்பளிங்காலமைத்தபல்லாயிரகோடி
சண்டதூணங்கள்போன்றனபரந்துதனித்தனிமுகில்பொழிதாரை. (௫௭)

* தக்ககன்றன்னைக்கூயினர்தேடிச்சாயகமண்டபஞ்சுற்றி
மிக்கவிண்ணவர்கடிரிதரவவன்றன்மெல்லியன்மகவையும்விழுங்கி
யக்கணந்தன்னிலந்தரத்தெழலும்வீழ்த்தினனம்பினாற்றுணித்துச்
செக்கனலுருவச்சென்னியையுரகர்கன்னியைத்திருமணம்செய்தான். (௫௮).

* மருவயிற்சதகோடியினிறையைராவதத்தின்மும்மதத்தினனைத்துக்
கருவயிற்றெழிலித்தாரையால்வருணக்கடவுடன்கணைகளாலவித்துச்
செருவயிற்புரளவொதுக்கியதோழன்சிறுவனைச்சென்றெடுத்தணைத்தா
னொருவயிற்பிறந்தோனுதலின்மகவானுடனுடன்றிலனுதாசனனே. (௫௯).

* அன்னைவாயொடுதன்வாலதிதுணியுண்டலமருமச்சுவசேனன்
றன்னைவாசவன்போய்விடுகண்டுழியத்தனஞ்சயன்றனதுவெங்கணையான்
முன்னைவானவர்முனைமுகந்தன்னின்முதுகிடமுதுகிடமுருக்கிப்
பின்னைவாரிதங்களேழையும்பொருதுபின்னிடப்பின்னிடப்பிளந்தான். (௬௦)

* நீரமால்பொருதுவீடுகண்டதற்பின்செக்கர்மெய்த்தக்ககன்பயந்த
பாரமாசுணமவ்விசயனுக்கியாவர்பகையெனப்பலரையும்வினவிச்
சூரன்மாமதலைசரணமேயரணநமக்கெனத்தொழுதுபோயெய்தி
வீரமாமுனிவெம்பகழியாகியதெம்மேதினியினும்பெருவார்த்தை. (௬௧)

* தோழன்மாமகனைக்கண்டபின்றனதுதோழனையொருவயிற்காணான்
வேழமாமுகத்திற்கைத்தலம்புடைத்தான்விழிகளாயிரங்களுஞ்சிவந்தான்
யாழமாதிரத்தினெதிரொலியெழுமாறெயிற்றிளநிலவெழநகைத்தான்
றாழமாநிலத்தினின்றமர்விளைக்குந்தன்பெருந்தனையனைமுனிந்தான். (௬௨)

* மேகசாலங்களினைத்ததுந்தினைத்துமேவிடுவிண்ணவரணிந்த
பூகசாலங்களுடைந்ததுங்கண்டானுருத்தெழுந்துள்ளமுங்கொதித்தா
னேகசாபமுந்தன்னேகசாயகமுமிமைப்பளவையின்விரைந்தெடுத்தான்
பாகசாதனனுமேனையதிசையின்பாலரும்பகடுமேல்கொண்டார். (௬௩)

* தேவருங்கோடிதேவருக்கொருவர்சிரங்களாய்நின்றமுப்பத்து
மூவருந்தத்தம்வாகமேல்கொண்டுமுந்துறவந்துவந்தணிந்தார்
யாவரும்புவனத்தின்றுகொலுகத்தினிறுதியென்றிரங்கினர்நடுங்க
மேவருமனிதரிருவரோடனேகவிபுதரும்வெகுண்டுபோர்விளைத்தார். (௬௪)

* பச்சைவாசிகளுஞ்செய்யனவாகப்பாகரும்பதங்களேயன்றித்
தச்சவாளிகளாற்கரங்களுமிழந்துதனிப்பெருங்கிரியுந்தகர
வுச்சமாமுகத்திற்பண்டொடிந்தொடியாதொழிந்தனபற்களுமொடிய
வச்சமேதுணையாவருக்கனுமொழிந்தவருக்கர்பன்னிருவருமகன்றார். (௬௫)

மாறுபட்டழியப்பற்குனன்கணையான்மழுக்களுஞ்சூலமுமுடைய
நீறுபட்டடலினீற்றுடன்மடியநெடுங்கொடியூர்தியேறுகளு
மேறுபட்டழியச்சடையில்வார்நதியாலேறிய தூளிவானெறியுஞ்
சேறுபட்டிடமாறேழுனர்மீளப்பதினொருதிறலுருத்திரரும். (௬௬)

* எண்ணியவசுக்களெண்மரிற்கங்கையென்னும்யாய்வயிற்றினுற்பவித்த
புண்ணியனொழிந்தோரெழுவருந்தங்கள்புயவலிமையிற்பொருதிடுவார்
நண்ணியவமரின்விசயன்வெங்கணையானப்புலர்ந்துள்ளமுநடுங்கி
யண்ணியநிலையம்புகுந்தனரென்றுனிற்பரோவாயுள்வேதியரே. (௬௭)

* அருணவெங்கனலோன்கனலொடுகலந்தானசுகனவற்குநண்பானன்
கருணையில்யமனுங்கானிடைமடியுங்கண்த்திலேகவலையுற்றனனால்
வருணனுங்கடல்கள்வறத்தல்கண்டழிந்தான்மதியொடுவைச்சிரவணனு
மிருணிறவரக்கன்றனுமிங்கிவரோடெங்ஙனம்பொருதுமென்றிளைத்தார். ()

* சொன்மழைபொழிந்துநாடொறுந்தனதுதோள்வலிதுதிக்குநாவலர்க்குப்
பொன்மழைபொழியுங்கொங்கர்பூபதிதன்பொற்பதம்பொருந்தலர்போலக்
கன்மழைபொழியுங்காளமாமுகிலுங்கடவுளர்த்துரந்தவன்கரத்தில்
வின்மழைபொழியக்கற்களுந்துகளாய்மேனியும்வெளிறிமீண்டனவே. (௬௯)

* மாயவன்றனக்குநேயமைத்துனனுமைந்தனத்தந்தையைமதியான்
றாயவெங்கணையாலவனிடித்துவசந்துணித்தமர்தொடங்குமவ்வளவிற்
காயமெங்கணுநின்றெரிவியெழப்பரந்துகாயமில்கடவுளக்கடவு
ணயகன்றனக்குப்பரிவுடனவைதீர்நல்லுரைநவின்றதையன்றே. (௭௰)

* தமரினுமினியதக்ககன்முதலேதப்பினன்குருநிலஞ்சார்ந்தான்
குமரனுநும்மாலுய்ந்தனன்றாமக்கொடியெனுங்கொண்டலுக்கவியா
னமர்களிலிருவர்நரனுநாரணனுநமக்குமிங்கிவர்சிறிதிலையா
ரமரினையொழிமினமரினையொழிமினமருமமரர்நாதனுமே. (௭௧)

* என்றுகொண்டுரைத்தமொழிசெவிப்பட்ட வெல்லையினிரவிமுன்னிருள்போ [ற்
றுன்றுதன்சேனைச்சுரர்கணஞ்சூழச்சுரபதிதுறக்கமதடைந்தான்
வென்றுவெங்களங்கண்டருச்சுனன்றனதுவெற்றிகொள்சங்கமுங்குறித்தா
னன்றுசெந்திருமாலருச்சுனன்பொருதவாண்மைகண்டதிசயித்தனனே. (௭௨)

* வடமதுரையினுந்தென்மதுரையினுமதிகுலநிருபர்கன்னியரைக்
கடிமணம்புரிந்தோன்வின்மையின்வன்மைகண்ணுறக்கண்டவானவரும்
புடவியிலொருவரொடுமினிப்பூசல்பொரேமெனனப்போனவாசவனு
முடிசடைமௌலிநாரதன்முதலாமுனிவருமுடிவறப்புகழ்ந்தார். (௭௩)

* மாசுணத்தரசன்மந்திரமமைத்தவனத்திடையிருந்தமாமயனை
யாசுசுக்கணிசென்றடர்த்தலும்வெருவியருச்சுனனுவபயமென்றாற்றத்
தேசுடைத்திகிரிச்செங்கண்மால்கருணைசெய்தனன்றீவினையுறினும்
பேசுதற்கரியபெரியவர்நினைக்கின்யார்கொலோபிழைத்திடாதவரே. (௭௪)

* அழைத்தடல்விசையன்றனைத்துணைசெய்கென்றுறுபத்தியோசனையாகித்
தழைத்தவவ்வனத்தைக்கனத்தைவென்கண்டுதழலவனுகர்ந்திடுகாலைப்
பிழைத்தவர்மயனுந்தக்ககன்மசவுணம்பெருந்தவனொருவன்முன்கருப்ப
மிழைத்தநுண்சிறகர்க்கருநிறக்குரீஇயினினங்களுமன்றிவேறிலரால். (௭௫)

* என்பிறபுகல்வதீரெழுபுவனமெம்பிரானருந்தியதென்னத்
தன்பசிதணியக்காண்டவவனத்திற்சராசரமுள்ளவையனைத்தும்
வன்புடனருந்தியுதரமுங்குளிர்ந்தான்வன்னிதன்வடிவமுங்குளிர்ந்தா
னன்புடையிருவர்க்காசியும்புகன்றனசைந்துபோய்த்துறக்கமுமடைந்தான். ()

* அமரரைமுதுகுகண்டகாவலருமவரவராண்மைகளுரைசெய்
தமரிலன்றெடுத்தபல்பெருங்கொடியாலலங்கரித்தமைத்ததந்தேர்மேற்
றமருடன்றுணைவர்நால்வருநகரச்சனங்களுமகிழ்ந்தெதிர்கொள்ளத்
தமரமும்முரசுமுழங்கவெண்சங்கந்தழங்கவந்தணிநகர்சார்ந்தார். (௭௭)

மழைவிரிகருணைமாதவனரசேமனங்கொளென்றுரைத்திடமகிழ்ந்து
கழைவரிசிலைசேர்கைத்தலநிருபன்கதிர்முடிபன்முறைதுளக்கித்
தழைவிரிசெக்கர்ச்சடைமுடியுடையாய்தவத்தினேன்றருகுரீஇச்சினையின்
குழைவிரிவனத்தினுறுமியவனைத்துங்குறைவறப்புகலெனமொழிவான். (௭௮)

வழுவறுதவமுநீதியுங்கலையுமறைகளுநிறைவுறவுணர்ந்த
பழுதறுமந்தப்பாலனென்றுரைக்கும்பரமமாமுனிதவத்திடையிற்
றழைவிரிகடுக்கைச்சடைமுடிபுனைந்ததவமுனிபராசரனென்போன்
விழைவுடனந்தவிபினம்வந்தடைந்தான்வேதியன்பூசைசெய்துரைப்பான். ()

பிரமகற்பங்களனேகமாய்த்தவத்திற்பெரிதுநாளிருந்துடல்வருந்தித்
திரமதிற்கதியிற்சேர்வதுமுன்னிச்சென்றனன்சேர்வுறுங்கதியைப்
பரமனையனையாய்விழிப்புலன்சேரப்படைத்திலன்பவந்தனையுணரேன்
வரமெனக்கிதனையுணர்ந்துரையெனலுமற்றவனத்தவற்குரைப்பான். (அ0)

கருத்தினிற்பெரியைநீயுணராதகலையிலைகதிபெறுமாறு
விருப்புள்தென்னின்மகப்பெறுர்க்கில்லைவீடெனுமறைமொழிபிழையாத்
திருத்தகுமுனிவமணவினைநடாத்திச்சிறுவரையுயிர்த்திடிக்கதிக்கு
வருத்தமொன்றிலையென்றுரைத்தவன்போனான்மாமுனிசிந்தைவேறானான். ()

வடந்திகழ்முலையார்தமைத்தொடேனென்றுமறுத்தவன்மாமுனிமொழியால்
விடந்திகழ்விழியார்தம்முடன்முயங்கும்விருப்பிலன்விளங்கியமஞ்சை
நடந்திகழ்வனத்திற்சரீரியாம்பறவைநற்பெடையுடன்முனிபுணர்ந்தான்
மடந்திகழ்சிறகார்பெருங்குலப்பறவைவருக்கநற்சேவல்போல்வாய்த்தே. ()

தனிப்பெடையந்தமாமுனிவிந்துதாங்கியேகருப்பமாயந்த
வனத்திலண்டங்களுயிர்த்தசின்னாளின்வான்சினைதோற்றியதாமாற்
கனத்தகான்முன்கையுஞ்சேவலஞ்சூட்டுக்கற்றையுங்கவின்றருசிறையு
மினத்துடனரும்பத்தாயுளங்களிப்பவீரிரண்டிருக்குமென்றேற்ற. (அரு)

மாதவன்மகிழ்ந்துமறைமுறைப்படியான்மைந்தரையளித்தனனென்னக்
காதலிற்றவஞ்செய்திருந்தனனிந்தக்கவினுறுபெடையுந்தன்மகவை
மீதுகாண்டவமால்வனத்திடைவளர்க்கும்விரைவினிற்கனல்படநடுங்கிப்
போதறுமாறுமரியதென்றுள்ளம்புழுங்கலும்யாய்க்கிதுபுகன்ற. (அசு)

அன்னைநீயெமக்காவிருந்துயிர்த்திடுதலற்னலவகன்றுயிர்புரந்தா
லின்னுமெம்போலுந்தனயரைத்தரலாம்வீடிலென்றேபயனென்னச்
சொன்னவான்சினைகடனக்கனைபகருஞ்சொல்லருமைந்தநீரிந்தப்
பன்னருமுழையினெய்துமின்யான்போய்ப்பரித்துயிர்வருவலென்றிடலும். ()

கருஞ்சிறைநிறையாக்குருவியின்சினைகள்கருத்தினாலாய்ந்துமாமுழையிற்
பெருஞ்சினக்கருப்பையுளதெனக்காணிற்பிளந்துதின்றுயிர்தொலைத்திடுமால்
வருஞ்சுடர்க்கடலோன்குலப்பகையன்றால்மாய்க்கினுங்காக்கினுநலனே
யருஞ்சிறையாய்நீயகல்கெனவனலுக்கஞ்சியாயகன்றதம்பரத்தில். (அகூ)

பெற்றதாயகலவஃறிணையுடலம்பெற்றமாமுனிதவச்சிறார்க
ளுற்றபாவகனைக்கண்டுளநடுங்கியோதருமறைகளான்கினையுங்
கற்றவர்தம்மிற்கவின்பெறத்தொடங்கிக்கனலவன்றனைத்துதித்திடலான்
மற்றவன்மகிழ்ந்தவ்வருந்தவனளித்தோர்வாழ்வுறவிட்டுநீங்கினனே. (அஎ)

இருந்தவான்மாவைமைந்தருமுய்ந்தாங்கிருத்தல்கண்டெய்தியவன்னை
பொருந்திடநோக்கிமீண்டதாலுடலம்புளகெழமைந்தரைத்தழுவி
யருந்தவன்றவத்தாலாயதென்றுன்னியவ்வனத்திருந்தனரிப்பாற்
பெருந்தவமுனிவன்காண்டவமெரித்தபெற்றிகேட்டுளம்வேரீ இயயர்ந்தான். ()

அளித்ததன்மகாரவ்வனத்திருந்தவரேதாயினரோவெனவயிர்த்துச்
சுளித்திடும்விரைவிற்சேடரீ துரைப்பார்தொல்லைநாட்செழுங்கனற்றோன்றிக்
களித்துனக்களித்தவரமுளததனாற்காதலர்க்கிறிலையென்னத் [தான்.
துளித்தேன்கடுக்கைச்சடையினான்மகிழ்ந்தான் தோற்றினான்காண்டவம்புகுந்

மைந்தரைநோக்கியரும்பெடையுடனோர்வனத்துறுமாறுசெய்தமைத்துச்
சுந்தரமுனிவனருங்கதியடைந்தான்றூயநீயுணர்தியிவ்வளவும்
புந்திநீளாதிபருவமென்றுரைத்தான்புண்ணியன்புரவலனன்பாற்
சிந்தையுமுருகிவிழிகண்முத்தரும்பச்செங்கரமுகிழ்த்தனனன்றே. (௧௦)

வில்லியின்மறையோன்முனந்தருமெழுநூற்றெண்பதுவிருத்தமுமுதலை
நல்லயகவிதனுவிஞ்ஞமகடானவின்றதாயிரத்துமுந்நூறு
மெல்லையிலிரண்டுமிரண்டுநல்லிரண்டாயிரத்தெண்பத்திரண்டெனவுரைப்பார்
தொல்லையின்முனிசொற்கடற்கடைந்தெடுத்தசுதைத்தமிழாதியம்பருவம். ()

இப்பெரும்பருவமுரைத்தவர்படித்தோரெழுதினோரிதன்பொருள்விரித்தோர்
செப்பருமன்பாற்கேட்டுளோர்தன்பேர்செப்பினோர்தீமையிற்றீர்ந்தே
யெப்பெருஞ்சிறப்புமைந்தரும்வாழ்வுமிசைத்தீர்க்காயுவுமுளரா
யொப்பெருங்கதியுநிலைபெறவிளங்கியும்பரும்புகழவாழ்குவரே. (௧௨)

காண்டவதகனச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-௨௦௪௨.

---

## ஆதிபருவம் முற்றிற்று.

---

## இரண்டாவது,

# சபாபருவம்.

## இராசசூயச்சருக்கம்.

* பாண்டவர்கள்புரிந்ததவப்பயனாகியவதரித்துப்பகைத்துமேன்மேன்
மூண்டவினைமுழுவதுவுமுனைதோறுமுரண்முருக்கிமுகில்புகாமற்
காண்டவமுங்கனல்வயிற்றுக்கனறணியநுகருவித்துக்காக்குமாறே
பூண்டருளெம்பெருமானைப்போற்றுவாரெழுபிறப்புமாற்றுவாரே. (க)

வரதமுனிபுகன்றவெலாமனத்தடக்கிநெடுங்கிரணவைவேன்மன்னன்
சரதமுறவானந்தத்தண்ணமுதந்துய்த்தவனிற்றடக்கைகூப்பிப்
பரதகுலத்தவதரித்தபாண்டவர்மேற்செயலுமினிப்பகர்வாயென்னே
விரதமுனிபதநினைந்துவினைகளறமீட்டுமவன்விளம்பலானான். (உ)

அயனும்பல்சுரகணமுமமரர்குலத்தலைவனுஞ்சென்றகல்வானெய்த
நயனங்கண்முதலாயவைம்புலனுமனமும்போனகரியெய்திப்
பயன்மிஞ்சுதொழிலினராய்ப்பாண்டவருந்திருமாலும்பயிலும்வேலை
மயனென்பான்வாய்புதைத்துவளம்படவந்தொருமாற்றம்விளம்பினானே. (ங)

* உம்மாலின்றருவினையேனுயிர்பிழைத்தேனீர்தந்தவுயிர்க்குவேறோர்
கைம்மாறுவேறில்லைக்குருகுலம்போலெக்குலமுங்காக்குகிற்பீர்
தெம்மாறவுலகாளுஞ்செங்கோன்மைக்குருபதிக்குச்சிற்பம்வல்லோ
ரம்மாவென்றதிசயிப்பவரியமணிமண்டபமொன்றமைக்கின்றேனே. (ச)

* மேனாளிவ்வுலகாண்டவிடபருவனசுரர்குலவேந்தர்வேந்தன்
றானுண்மையுடன்பொருதுதரியலரைத்திறைகொணர்ந்ததாராபந்தி
போனாளுமொளிவீசும்பலமணிகள்விந்துவெனும்பொய்கைதன்னி
லானுமற்கிடப்பனவுண்டவையிதற்கேயுபகரணமாகுமென்றான். (ரு)

* என்பதன்முன்முப்பதின்மேலிரட்டிகொணூறாயிரவரெடுத்தபாரம்
வன்புடனேதிரித்துவரையசைந்தாலுமசையாதவயிரத்தோளா
ரன்புமிகும்விழிக்கருணையறன்புதல்வனேவலினாலசுரத்தச்சன்
றன்பணியீதெனப்பணிப்பவொருநொடியிற்கொடுவந்தார்தள்ர்விலாதார். (சா)

* மீதடுக்கிப்பசும்பொனாற்சுவர்செய்துமரகதத்தூண்வீதிபோக்கி
யோதிடத்திற்சுருங்காமற்செழுந்துகிருத்திரம்பரப்பியுலகோரேழு
மாதிடத்தான்வைகுதற்குவாய்க்குமதோவிதுவென்னவரம்பில்கேள்விச்
சோதிடத்தோர்நாளுரைப்பச்சுதன்மையினுமுதன்மைபெறத்தொடங்கினானே

* மனத்தாலுந்திருத்தகுநூல்வரம்பாலுமுரம்பயிறோள்வலியினாலு
மினத்தாலுந்தெரிந்துதனதெண்ணியவெண்ணினுக்கேற்பவெண்ணில்கோடி
தினத்தாலுஞ்செயற்கரியசெழுமணிமண்டபமீரேழ்திங்கள்செய்தான்
தனத்தான்மிஞ்சியதருமன்றம்பியர்க்குத்தண்டுடன்வெண்சங்குமீந்தான். (௮)

* அத்தபதிதன்குறிப்பாலமைத்தபெருமண்டபத்தினளவுநீளம்
வித்தரமோடுயர்ச்சியெனும்வனப்பனைத்துங்கண்டோர்கள்வியந்துகூற
கொத்தலர்தார்மணிமுரசக்கொடியுயர்த்தோன்கனற்பிறந்தகொடியுந்தானு
மெத்தமருமனமகிழக்குடிபுகுந்தானிறைஞ்சலருக்கிடியேறன்னான். (௯)

* தம்பியர்கணால்வருடன்றண்டுழாய்முடியோனுந்தானுமேனை
யம்புவிமன்னருமுனிவரனைவருஞ்சூழ்தரவிருந்தவமையந்தன்னிற்
றும்புருநாரதனென்னுமிருவரினுநாரதனுந்தோன்றறோன்றப் [ந்தன்.
பைம்பொன்மலர்தூயெதிர்போய்ப்பணிந்திறைஞ்சியென்செய்தான்பாண்டுமை

* ஏற்றினானாசனத்திற்றனித்தனியேயுபசாரம்யாவுந்தந்து
மாற்றினான்வழியிளைப்புமலரயன்போலிருந்தோனைமகிழ்ச்சிகூர்ந்து
போற்றினானீவரயான்புரிதவம்யாதெனப்புகழ்ந்தான்பொதியிற்றென்றற்
காற்றினாலரும்புநறுஞ்சூதம்போற்புளகரும்புங்காயத்தானே. (௧௧)

* யான்புரிந்ததவமுலகில்யார்புரிந்தாரவனிபரிலிசையின்வீணைத்
தேன்புரிந்ததெள்ளமுதாலமுதுண்டோர்செவியிரதந்தெவிட்டுவிப்பாய்
மான்புரிந்ததிருக்கரத்துமதியிருந்தநதிவேணிமங்கைபாகன்
றான்புரிந்ததிருக்கூத்துக்கிசையமகிழ்ந்திசைபாடுந்தத்துவஞானி. (௧௨)

* எனத்தருமன்மகன்கூறவிளையோர்கடனித்தனிநின்றிறைஞ்சநீலக்
கனத்தனையதிருமேனிக்கண்ணனுந்தன்மனங்களிப்பக்கண்ணினோக்கி
மனத்தினழுக்கணுகாதமாதவத்தோனுதிட்டிரற்கிம்மாடகூடத்
தனத்தின்மிகுகுபேரனெழிலளகையினுமிலதென்றுசாற்றினானே. (௧௩)

இஞ்சொலுடைவீணைமுனியிசைத்தமொழிகேட்டளவினெழிலியேபோல்
விஞ்சுமளிக்கொருமுதலாமுதிட்டிரப்பேர்வுளைந்துளவேல்வேந்தர்கோமான்
கஞ்சமுகமலர்ந்தமரர்பேரவையின்சிறப்பனைத்துங்கண்டவண்ண
மஞ்சடையாயானுணரவறையென்றான்றிருமுனிவனறையலானான். (௧௪)

ஓசனையீரைம்பதெனவுளதகலநீட்சியிதற்கொன்றுமூன்றும்
வீசுறுமேலுயர்ச்சியுமைஞ்ஞூறரிவோசனையாய்விளங்காநிற்கும்
பேசரியகதிரனந்தம்பிறழொளிபோற்றிகழ்திடுமிப்பெற்றிதோன்ற
வாசவனுஞ்சசியுடனேவீற்றிருப்பான்மண்டபத்தினடுவெண்மாதோ. (௧௫)

அக்கிரனுஞ்சுரர்குருவுஞ்சொல்லரியமுனிவகருஞ்சுடர்கண்மூன்று
மிக்கவுருத்திரர்கணமுமிமையவருமியக்கர்சித்தர்விஞ்சைவேந்தர்
தக்ககன்மற்றுள்ளவரிச்சந்திரனேமுதலானதரணிபாலர்
தொக்கிமணிமுடிப்பொறிகடிசைத்திசையும்பொன்போலத்தோன்றுமன்றே. ()

ஒருபாலிலரம்பையர்கணடனமிடுஞ்சிலம்பொலிமற்றொருமால்வீணை
யொருபாலாசியினொலிகளொருபாலினேழிசைகளுணர்த்தும்மாட
லொருபாலினகசியங்களொருபாலினெறிமுறைறமையுசாவலோடு
மொருபாலினுதநியெனக்களிறிரைப்பவும்பர்பிரானுறுவனன்றே. (௧௭)

அரதனங்கணிவப்பொளியேசெழும்பகலுமிரவுமவையன்றியுண்டோ
மரகதமேனியினிலங்குமகபதிதன்பேரவையின்வளமையென்றே
பரகதியேபொருளென்றுபயனடைந்தமுனியுரைத்துப்பரிவான்மீண்டும்
விரசிதநல்லியக்கர்வேந்தவையையெடுத்துளவரவிளம்பினனே. (௧௮)

அளவகலமமரர்குலபதிசபைக்கங்கெடுத்துரைத்தவளவேயாகு
மிளகுமுலைமடவாருஞ்சாரணருமியக்கர்குலத்தேவரும்போற்ற
வுளமகிழக்கண்டோர்களிருநிதியுமிருமருங்குமொளிகள்காலக்
கிளைஞருடனளகையிறைவீற்றிருப்பான்பேரவையிற்கிளரமாதோ. (௧௯)

கண்ணிரண்டுபடைத்தவர்கள்காணரியபேரவையிற்கரங்களார
மண்ணிடங்கடனின்மணியும்வான்பொருளுமாதுலர்க்குவழங்கினோர்க
ணண்ணியிருமருங்குமரியாதனத்திடையிருப்பநலனைத்தாங்கி
வண்ணமணியாதனத்தினடுவிருப்பனூர்புகலவல்லோரென்றான். (௨0)

வருணனுடைப்பேரவையுமணிமயமாயளவுயர்ச்சிமாண்டிவ்வாறாய்ப்
பருணிதர்கள்புகழரியபண்புடைத்தாய்த்திகழ்ந்திடும்பபரிசுமன்றி
யருணனிடைப்பேரவையுமகலமுயர்ச்சியும்விரிவுமஞ்ஞூறென்றே
கருணைநிறைகுரவறெலாங்கட்டுரைத்தாரதன்றேசுகருதலாமே. (௨௧)

சுருதியுடனுபனிடதமிதிகாசம்புராணத்தின்றொகுதியாவும்
வருதலைமையொடுமொலிப்பமைந்தரொடுமுனித்தலைவர்வணங்கிவாழ்த்தக்
கருதரியசதகோடிகவின்பருதியொளியேய்க்குங்கனகமாடத்
தொருதனியாசனத்தின்மிசையோதிமமூர்பவன்வாணியுடன்வாழ்வானால். ()

மார்கண்டர்முதலான்மறைமுனிவர்பெருங்குழுவும்வானோராரும்
வேர்கொண்டமறுவாதிவேந்தர்பலருடனும்மொளிவிளங்கவைகுங்
கார்கொண்டலுந்தியம்பொற்கமலமதில்வந்துதித்தகருணைவள்ளற்
பேர்கொண்டபேரவைக்கோரளவுயர்ச்சியாவரினிப்பேசுகிற்பார். (௨௩)

கொடுத்தவரோர்புறநெறிகைக்கொண்டவரோர்புறமறத்தைக்குறித்துக்காதல்
விடுத்தவரோர்புறஞ்சாதம்விடாதவரோர்புறமுயிரைவிருப்பிற்கோறற்
றடுத்தவரோர்புறங்கோவிற்சாலைவனந்தடாகமுற்றறுமமெல்லா
மடுத்தவரோர்புறமிருப்பநடுவிருப்பனடுவனவைதனினின்மன்னோ. (௨௪)

அரவின்மணிகளின்மேய்ந்துமரகதத்தூணிரைநிரையாயமைத்துமீட்டும்
பரவுவயிரங்களினுலுந்தாமுங்கொடுங்கையுடன்பரிவினுற்றி
விரவுபவளப்பலகைவேய்ந்துசுதைதீற்றியொளிர்யொளிர்விறல்சேர்பொற்பிற்
றரளமணிப்பந்தரிற்கீழரித்தவிசில்வீற்றிருப்பன்சமனென்போனே. (உ௫)

கரமொன்றுபெரும்பாசங்கடியகதைமுதலேந்திக்கண்ணினேக்கத்
தரமன்றியஞ்சுவருங்கிங்கரருஞ்சாரணருந்தடக்கைகூப்பி
விரவொன்றுபாதகரைத்தென்றிசைப்பாலொதுக்கியருள்விளங்காநின்ற
குரவொன்றுபாண்டுமுதற்குலவேந்தர்தொழவிருப்பன்கூற்றன்மாதோ. (உ௬)

வேதியனேமுதலாகயமனீருயுரைத்ததிறல்விண்ணோர்தங்கள்
சோதிமணியவையென்னத்துலங்கியதிக்கவையென்றேசொல்வான்றன்னை
யூதியமேயறமென்னுமுதிட்டிரன்கைம்மலர்கூப்பிவுவப்பினுலே
யோதியதண்ணளிப்பார்வையுறநோக்கியிவ்வண்ணமுரைக்கலானுன். (உ௭)

அருமறையோன்மகபதிதன்னுலகின்றித்தந்தையறக்கடவுள்வாழும்
வெருவுலகந்தனிலிருந்தேயரிச்சந்துமனுமுதலவேந்திற்றூழ்ந்தான்
றருமமிவனிலுமவர்செய்தகமையுரைத்திடுதியென்றான்றக்கோனுள்ளங்
கருதுபயனிறைந்ததெனமகிழ்வதனுற்புகல்கின்றான்கமலனன்னான். (உ௮)

பரிமேதம்புரிந்துமனுப்பங்கயத்தோனுலகடைந்தான்பாராள்வேந்தர்
பெரிதாயநீதிவலித்திரிசங்குதந்தவன்றன்பெற்றியாலே
யரிதாயராயசூயம்புரிந்தேயமரர்பதியவையிலானுன்
விரிவாகநீயந்தவேள்விசெயிற்றந்தைபெரும்விண்ணுடென்றான். (உ௯)

* மண்மிசைகால்விரனிற்குமணிமகுடத்தணியரங்கின்மண்ணுளோரும்
விண்மிசைவாணருநெடுங்கவிருயவருமறைச்சடங்கினிருசூயங்
கண்மிசைமாமணிநிகரான்கரன்முளையைப்புரிவியெனக்காலனூரிற்
பண்மிசைவீணையின்கிழவன்பாண்டுமொழிந்தனனெனவும்பகர்வுற்றானே. ()

* தந்தைமொழிதனையருக்குச்சாற்றிமுனியகன்றதற்பின்றம்பியான
விந்திரனுந்தன்மனத்திலெண்ணமுமீண்டாகுமெனவெண்ணிக்கூறு
மந்தநரமேதமகமியற்றுதற்கென்றவனிபறையடையவாரிப்
பந்தமுறுபெருஞ்சிறையிற்படைகெழுவேற்சராசந்தன்படுத்தினானே. (௩௧)

* சதகோடிதனக்கொளித்துத்தடங்கடலிற்புகுங்கிரிபோற்றளர்ச்சிகூர்ந்து
சதகோடிமுடிவேந்தர்தங்களுயிர்கொண்டொளித்தார்சமருக்காற்றார்
சதகோடிசுரும்பரற்றுந்தாராயச்சராசந்தன்தன்னையின்னே
சதகோடியிபமதுகைச்சதாகதிசேய்தனையொழியச்சாதிப்பார்யார். (௩௨)

* ஆரமணங்கமழசலமநேகமுளவானுலுமலையின்கூல
வாரிதியைமதிப்பதற்குவல்லதுமந்தரமன்றிமற்றுமுண்டோ
போர்விசயமவனுடன்முன்பொருதேரில்யார்பெற்றார்போதுமிப்போ
தாரணமாமுனிவராயெனப்புகன்றானறன்மகனுமஃதேயென்றான். (௩௩)

* அரிவிரசுந்துழாய்மகுடத்தரியுமிரண்டரிகளருளாண்மையோரு
மெரிவிரசுநறுங்கானமிருதினத்தில்விரைந்தேகியெண்ணில்காவற்
கிரிவிரசநகரெய்திக்கிரித்தடந்தோண்மகதேசன்கிளருங்கோயிற்
கரிவிரசுங்கோபுரப்பொற்றிருவாயில்புகுந்துரைத்தார்காவலோர்க்கே. (ஙச)

வேறு.

* வந்தனர்முனிவர்மூவரென்றுரைமின்மன்னவற்கெனவவருரைப்பத்
தந்திடுமெனவும்புகுந்துநீடம்பொற்றவிசிருந்தாசியுஞ்சாற்றக்
கந்தடர்குவவுத்தோளில்விற்குறியுங்காட்சியுங்கருத்துறநோக்கி
யந்தணரல்லீர்யாவர்நீரென்றானவ்வுரைக்கமலனுமுரைப்பான். (ஙரு)

* யான்விதுகுலத்திலியாதவனிவரோகுருகுலத்தலைவனுக்கிளையோர்
மான்மதமலர்த்தார்மன்னகேளொருவன்வாயுவின்மதலைமற்றொருவன்
வான்மதிலுடுத்தபொன்னகர்க்கிறைவன்மதலைநின்வளநகர்காண்பான்
கான்மதக்களிற்றாய்முனிவராய்வந்தோங்காவலர்க்கனுகொணாமையினால். ()

* என்றுகொண்டுண்மையாதவனுரைப்பவிருபுயவலியுமெண்டிசையுஞ்
சென்றுகொண்டடர்த்துத்தெவ்வர்தமுயிருந்திறைகளுமுறைமுறைகவர்ந்து
வென்றுகொண்டணிந்தவாகையானறைவான்மீளவுமிக்கதிண்மேருக்
குன்றுகொண்டமைந்ததோள்களெம்முடனீர்குறித்தமர்புரியுமென்றுரையா.

* நீயெனிலாண்டொரொன்பதிற்றிரட்டி நெடுஞ்சிறைக்கலுழன்முன் னெறிக்
ளீயெனவோடிமதுரைவிட்டாழியெயிற்றுவாரகைப்பதிபுகுந்தாய் [கொ
னோயெனவசுரர்க்குடைந்துபொற்காவினுழைதருநூறுமாமகத்தோன்
சேயெனிலிளையன்வீமனைவிசும்பிற்சேர்த்துவனெனவிழிசிவவா. (ஙஅ)

* மந்திரச்சுற்றத்தவர்களையழைத்துமதலையைமகிதலந்தனக்கோ
ரிந்திரனெனவேமணிமுடிபுனைந்தன்றியாவருந்தேவரும்வியப்ப
மந்தரகிரியும்விந்தமுந்தம்மின்மலைவபோன்மல்லமர்மலைவான்
சந்தணிதடந்தோள்கொட்டியார்த்தெழுந்தான்றழலுமிழ்விழிச்சராசந்தன். ()

* யாளிவெம்பதாகைவீமனுமவனும்யாளியும்யாளியுமெனவே
தாளினுஞ்சமரமண்டலங்களினுந்தாழ்விரற்றடக்கைமுட்டியினுந் [கி
தோளினுஞ்சென்னித்தலத்தினுமற்போர் சொன்னபோர்விதமெலாந்தொடங்
நாளினுந்திங்களொன்றினிற்பாதிநள்ளிரவினுஞ்சமர்நடத்தி. (சo)

* பூதலநடுங்கவெழுகிரிநடுங்கப்போதகத்தொடுதிசைநடுங்க
மீதலநடுங்கக்கண்டகண்டவர்தம்மெய்களுமெய்யுறநடுங்கப்
பாதலநடுங்கவிருவர்மாமனமும்பறையறைந்தயர்வுடனடுங்கச்
சாதலங்கொழிந்தவிடரெலாமுழந்துதங்களிற்றனித்தனிதளர்ந்தார். (சக)

* கொல்லவென்றெண்ணுமிருவருமொருவ ரொருவரைக்கொல்லொணாமையி
மல்லமர்வலியுமிருபுயவலியுமிழந்துமாமகிதலத்துறலுங் [னுன்
கல்லடர்செம்பொன்வரையின்முக்குவடுகாலுடன்பறித்தகால்கண்டு
நல்லதன்மைந்தற்குணர்வுமீண்டெய்தநலத்துடனல்கியதன்றே. (சஉ)

* மீளவுமிருகதுவசனுற்றெழுந்துவிதலையின்விழுந்தமேவலனைத்
தாளொடுதாள்கள்வலியுறத்தன்பொற்றடக்கையான்முடக்கறப்பிடித்து
வாளுகிர்வாளாற்கனகனைப்பிளந்தவண்டுழாய்மணங்கமழ்மவுலிக்
கோளரியெனவேபிளந்தெறிந்தண்டகோளமும்பிளக்கநின்றார்த்தான். (சங)

* பிளந்தெறிபிளவுமீளவும்பொருந்திப்பிளிறுமாமதகரிநிகர்ப்பக்
கிளர்ந்துவெஞ்சமரந்தொடங்கலுந்தனதுகேதனக்கேசரியனையான்
வளர்ந்ததிண்புயத்தின்வலியினான்முன்னைமல்லமரெழுமடங்காக
வுளைந்திடமலைந்துவீழுமாறுதைத்தானேரிரண்டானதாவுடலம். (சச)

* சீறியக்குருசில்கீண்டபேருடலைச்சென்னிதாள்செவ்வையினிடாமன்
மாறியிட்டிடுகென்றுருயிர்த்துணையாய்வந்தமாமரகதவடிவோன்
கூறியிட்டிடாமற்குறிப்பினுலுரைப்பக்குறிப்பையக்குறிப்பினாற்குறித்து
வேறிடப்புவியின்மிசையெறிந்தனனல்வீமன்வல்லபத்தையார்வியப்பார். ([illegible])

வேறு.

* சந்தச்சிகரச்சந்தணியுந்தடந்தோளாண்மைச்சராசந்தன்
முந்தப்பொருதமல்லமரின்முரணோடழிந்துமுறிந்ததற்பி
னிந்தப்புதுமைதனைவியவாவேத்தாவிறைஞ்சாயதுகுலமா
மைந்தற்கொருவாசகமுரைப்பான்மணித்தார்ப்புயவாசவன்மைந்தன். (சசு)

* இன்றுரமரினிவன்கையாலிறந்தோனுடலமொன்றியது
மொன்றுதிரண்டுபட்டதும்யாமுணரும்படிநீயுரைத்தருள்வாய்
குன்றாலன்றுமழைதடுத்தகொற்றக்கவிகைக்கோபாலா
வென்றானென்றபொழுதவனுமிறந்தோன்சரிதமினிதுரைப்பான். (சஎ)

* வானோர்பகைவர்களிலொருவன்மகதகுலத்துமாரதப்பே
ரானோன் ¶ வயிற்றிலவதரித்தானவன்காணிந்தவடல்வேந்தன்
மீனோதிசூழ்மேதினியின்வேந்தர்குலத்தைவேரோடுந்
தானோராழிதனிநடத்தித்தடிந்தானணிந்தசமர்தோறும். (சஅ)

* எண்ணிற்கரியமுடிவேந்தரெண்ணாயிரவர்ப்சுவாக
மண்ணித்தனையுந்தன்குடைக்கீழ்வைக்கும்படிமாமகம்புரிவான்
கண்ணிச்சிறையினிடைவைத்தான்கண்ணாயிரத்தோன்முதலாக
விண்ணிற்பயிலுந்தேவர்களுமிவன்பேர்சொல்லவெருவுவரால். (சகூ)

* இவனைப்பயந்தோன்மகவொன்றுமின்றிச்சண்டகவுசிகப்பேர்த்
தவனைப்பணிந்துவரம்வேண்டத்தவனுந்தான்வாழ்தடஞ்சூதத்
தவனிக்கரியதீங்கனியொன்றளித்தானவனுமக்கனியை
நவனித்திலவாணகையிருவரில்வாழ்பவர்க்குநல்கினனால். (ரு0)

* காசித்தலைவன்கன்னியர்தங்கல்போல்வடுமுற்றியகனியை
யாசிற்பிளந்துதங்கொழுனனருளாலமுதொத்தினிதருந்த
மாசற்றிலங்குமகவிருவர்வயினும்பகிர்ந்துவளர்ந்ததற்பின்
பாசத்துடனேயோரொருவர்பயந்தார்வடிவிற்பப்பாதி. (ருக)

---

¶ மாரதப்பேரானோன் - பிருகத்ரதன்.

* ஒருவனிருவருதரத்துமுடனுற்பவித்தவுற்பாதம்
வெருவிமகதகுலவேந்தன்வியன்மானகரின்புறத்தெறியப்
புரிசைவாயிற்கண்டவற்றைப்புசிப்பாளெடுத்துப்பொருத்தினளாற்
றருமமுணராமனத்தியொருதசைவாயரக்கிசரையென்பாள். (௫உ)

* தன்னுலொன்றுபடுதலுமத்தனையன்றன்னைச்சராசந்த
னென்னுவழைத்தியெனமகதத்திறைவற்களித்தங்கேகினளா
லன்னுண்முதலப்பேர்படைத்தானதனுவிவ்வாறுனதெனச்
சொன்னனதுகேட்டுளமகிழ்ந்தார்சுரர்கோமகனுந்துணைவனுமே. (௫௩)

* வினைமுற்றியபின்மூவருநல்வினையேபுரிவோர்மன்னவரை
யினைதற்சிறைவிட்டிகன்மல்லாவிறந்தோன்மகனையெழின்மகுடம்
புனைவித்தந்தநகரீசன்பொற்றூள்வணங்கவவனேறுந்
துனைபொற்றடந்தேரூர்ந்தறத்தின்சுதன்வந்தெதிர்கொண்டிடமீண்டான். ()

* கருதற்கரியநிதியனைத்துங்கவர்ந்தோர்காட்டக்கண்டுவந்த
முரசக்கொடியோன்முன்வேதமொழிந்தோன்முதலாமுனிவரரு
மரசக்குழாமுமீண்டியபேரவையிற்கடவுளரசின்ற
வரிவிற்குமரன்மாதிரங்கள்வெல்வானேகும்வகையுரைத்தான். (௫௫)

* சுருதிப்படியேவரராசசூயப்பெயர்மாமகந்தொடங்கக்
கருதிக்குணபாலெம்முன்னும்வடபால்யானுங்காற்றிசைக்கு
நிருதித்திசைக்குநடுவெம்பியிவனுஞ்சிலைவேணிரைமணித்தேர்
வருதிக்கினிவிவ்வினையோனுமலைவானெழுகவருகவென. (௫௬)

* எண்ணுஞ்சேனையுடன்விரைவினெழுந்தாரிவரீரிருவோரும்
விண்ணுங்கடவுளாலயமுமுதலாயுள்ளமேலுலகு
மண்ணும்புயங்கதலமுதலாமற்றெவ்வுலகுமாதிரமுந்
துண்ணென்றிட்டவைந்துவகைப்பெரும்பேரியத்தின்றுவனியினல். (௫௭)

* நானங்கமழுஞ்செங்கழுநீர்நறுந்தார்வேந்தர்நால்வரையும்
மானம்பெறுதிண்சேனையுடன்வளர்மாதிரத்துவகுத்தேவி
மீனங்கமடமேனநரவரியாய்நரராய்மெய்ஞ்ஞான
வானந்தமுமாகியநாதனன்றேதுவராபதியடைந்தான். (௫அ)

வேறு.

* வான்மருச்சுதனுமீரிரண்டுகடல்வயவருதினியின்வர்க்கமு
நான்மருப்பொருகைமும்மதத்துவயநாகமேவிவளர்திசையின்வாழ்
கோன்மதிக்கநெடுவங்கமுந்திகழ்கலிங்கமுந்தெறுகுலிங்கமுந்
தான்மலைத்துமுனைமுரண்மிகுத்துவருதரியலாரைமுனைதள்ளியே. (௫௯)

* மற்றுமற்றுமவன்மருவுபாடைகளின்மன்குலத்தொடுதடிந்துமே
லுற்றவுற்றவரையானம்யாவையுமொடிந்திடிந்துபொடியுண்ணவே
யிற்றவிற்றபலதலைகளாலலையெறிந்துமோதிவருகுருதியான்
முற்றமுற்றவரையினமும்வார்குருதிநதியுமாயெழமுருக்கியே. (௬0)

* அந்தவந்தவனிபரெலாமடையமடையமென்றடிவணங்கவே
வந்தவந்நிதியாவையுஞ்சிகரவடமதிதரமெனக்குவித்
தெந்தவெந்தநரபாலர்பாரினிகரென்னவென்னவரிறையெனத்
தந்தந்தந்தவிதந்திமீதுகொடுதங்கண்மானகரிசாரவே. (சுக)

* விசையவெம்பகழிவிசயன்வெவ்விசையொடிருநிதிக்கிழவன்மேவிவாழ்
திசையடைந்துகதிரவியென்னும்வகைசீறிமாறுபொருதெவ்வரா
நிசை * யழிந்துவெளியாகநால்வகைநெருங்குசேனையொடுநிலமுநின்
றசையவன்பினுடனேகினனெழுபராகமெண்டிசையடைக்கவே. (சுஉ)

* பாரதப்பெயர்கொள்வருடமாதிபலபாரினுள்ளநரபாலரைப்
பேரறக்குலமும்வேரறப்பொருதுபிஞ்ஞகன்கிரியுமிமையமுஞ்
சேரமொத்தியவனுள்ளகந்தருவர்கின்னரேசர்பலர்திறையிடப்
போரடர்த்துகமுடிந்தகாலையெழுபுணரியென்னநனிபொங்கியே. (சுங)

* விந்தமால்வரையுமேமகூடமுடனிடதநாமநெடுவெற்புமா
மந்தராசலம்விசாலமாலியமணித்தடஞ்சிகரமலையுடன்
கந்தமாதனமுநீலசயிலமுமெனப்புகன்றபலகிரியில்வா
ழுந்தராதிபர்நடுங்கமேருகிரியப்புறத்துநனியணுகியே. (சுச)

* அத்திசைக்கணரசானவுத்தரகுருக்கண்மேன்மையையடக்கிமே
லெத்திசைக்குமிவனன்றிவீரரிலரென்றுதேவருமியம்பவே
மெத்திசப்பனிநிலாவெழச்சமரவிசையகம்பமுநிறுத்தினன்
முத்திசைக்குமதிவெண்குடைக்கடவுண்முதல்வனனவரிபுதல்வனே. (சுரு)

* கரிகள்கோடியிரதங்கள்கோடிபவனத்தினுங்கடுகுகவனவெம்
பரிகள்கோடிநவகோடிமாமணிகள்பலவகைப்படுபசும்பொனின்
கிரிகள்கோடியெனவேகவர்ந்தெழுகிரிப்புறந்தெறுகிரீடிவந்
தரிகள்கோடிகிளர்சோலைசூழ்தமதுசெல்வமாநகரியணுகினன். (சுசா)

* வடாதுசென்றவரிசிலைமகீபனினுமெழுமடங்குமிகுவலியுடன்,
குடாதுசென்றிளையவீரமாநகுலநகுலனென்றுகுலைகுலையவே
யடாதமன்னரையடர்த்தடுத்தவரையஞ்சலென்றமருடற்றினு
ணிடாதவன்றனமெனக்கரந்தனர்களேனைமன்னவர்கள்யாருமே. (சுஎ)

* மாளவத்தினெடுகற்படும்பொரவகுர்த்தெதிர்ந்ததிரிகர்த்தமுந்
தூளவன்புடையிருட்பிழம்பெழவருக்கனிற்பெரிதுசுடரெழத்
தாளவண்கதியுடைத்துரங்கரதகசபதாதியொடுதகுஞ்சின
மூளவந்தமர்மலைந்தமன்னவரைமுதுகுகண்டமர்முருக்கியே. (சுஅ)

* கூற்றிசைக்குமெனவுடன்வருங்கடியகொடியசேனையொடுகுமரனுங்
காற்றிசைக்குமெனவருணனுந்தனிகருக்குலைந்துளம்வெருக்கொளத்
தோற்றிசைக்கும்வகைகொண்டுமற்றவர்கள்சொரிவருந்திறைகள்வாரியம்
மேற்றிசைக்குமொருமேருவுண்டெனவுயர்த்தினனிகரில்வீரனே. (சுகூ)

* திசை - இரா.

அளவிதாததிறையோடுமத்திசையுதித்ததேரிரவியாமெனத்
துளபமாலைகமழ்மவுலிநாதனுறைதுவரையெய்தியுயர்சுருதியின்
கிளவியான்முனிவர்தொழுபதந்தொழுதுகேசரித்துவசவீரனுக்
கிளவன்மீளவுமரிப்பிரத்தநகரெய்திமன்னனையிறைஞ்சினான். (௭௰)

* குன்றிசைத்தகசரததுரங்கமபதாதிசூழவிறைகொள்ளவும்
நின்றிசைத்துவருபலபணைக்குலமிரைக்கவுங்கொடிநிரைக்கவுந்
துன்றிசைப்பனிநிலாவெனக்கவிகைவெண்ணிலாதனதுலங்கவுந்
தென்றிசைப்படர்தன்மேயினனகுலநிருபனுக்கிளையசெம்மலே. (௭௧)

* அத்திகைக்கணிருகடலினுக்குநடுவானமண்டலமனைத்தினு
மத்திகைப்புரவிமண்டலேசரும்வயங்குமாமகுடமகிபரும்
புத்திகைக்கவமர்பொருதழிந்துதிறைபொழியவாரிவளர்புயகிரிப்
பித்திகைத்தொடையனீலனென்னுநரபதிபெரும்பதிபுகுந்தபின். (௭௨)

* அந்தமாநகரிகாவலானசுடரங்கிசீறியெதிர்பொங்கிமேல்
வந்தவீரன்மிகுசேனையாவையுமயங்கவெம்புகையியங்கவே
கந்துசீறுகளியானைமன்னனதுகண்டுவெங்கனலவிப்பதோ
ரிந்துமாமுகசரங்களேழுநெடுநாவினனழியவேவினான். (௭௩)

* அஞ்சியந்தவழலோனுமப்பொழுதோரந்தணாளன்வடிவாகியே
வஞ்சியந்தொடையன்மன்னன்முன்புவரவந்தமாமுனியைமன்னனீ
யெஞ்சிநின்றுசுடுகின்றகாரணமிதென்னையென்னலுமியம்பினான்
மஞ்சிவர்ந்தபுகைவானவன்றனதுவரவுநீலன்வழிபாடுமே. (௭௪)

* நீலனிட்டதிறையானகோலமணிநீலமாதிநவநிதியமுஞ்
சாலமிக்கதபனியமும்வவ்வியுயர்சாரல்விந்தசயிலப்புறத்
தேலநெட்டடவிமுறியமோதிவெளியாகவேழ்கடலையுங்கடைக்
காலமுற்றியெழுகாலெனும்படிகலக்கினனெழுகலிங்கமும். (௭௫)

* சென்னிநாடுகுடகொங்கர்நாடுதிறைகொண்டுதென்னனுறைசெந்தமிழ்க்
கன்னிநாடறவுடன்புகுந்துமணிநித்திலக்குவைகள்கைக்கொளா
மன்னிநாடுகடல்கொண்டகைம்முனிவன்வைகுமாமலையநண்ணினான்
மின்னிநாடறவிளங்கும்வெஞ்சமரவீரவாகைபெறுவேலினான். (௭௬)

* செகத்தியங்குதனியாழியைவரினுமிளையகாளையொடுசேனையந்
நகத்தியைந்தபொழுதவனிபவ்வமுறுநவ்வெனத்தலைநடுங்கவே
மிகத்தியங்கிநெடுமேருவெற்பின்மிசைமேவுவானவர்கண்மீளவு
மகத்தியன்றனைவடக்கிருத்தும்வகையுன்னினார்கள்சமமாகவே. (௭௭)

* கன்னிலங்கொலெனவலியமெய்பெறுகடோற்கசன்றனையழைத்துநீ
தென்னிலங்கைதிறைகொண்டுமீள்கவெனவிளையதாதையுரைசெய்யவே
மின்னிலங்கணியெயிற்றரக்கர்குலவீரனாகியவிபீடணன்
தன்னிலங்கொதிகொளப்புகுந்தொருசழக்கறச்சமருழக்கினான். (௭௮)

* யாரையோவுரைசெய்நீயெனத்திறனிசாசராதிபனியம்பலும்
பாரையேழினையுமுழுதுடைக்குருகுலத்துமேன்மைபெறுபாண்டுவின்
பேரன்யான்விறலிடும்பன்மாமருகனெனவரக்கர்பெருமான்மனத்
தூருமாதரவினோடழைத்தவனையுவகையோடுமிகவுறவுறு. (எக)

* நீயிலங்கையிடைவந்ததென்கொலெனநீதியாலுயருதிட்டிரன்
ராயசூயமெனுநாமமாமகமியற்றுவான்விறலொடெண்ணினா
னேயமானவினையோர்களால்வருநெடுந்திசாமுகமடங்கவென்
றேயமாநிதிதிரட்டலுற்றனர்கள்யானுநின்னகரியெய்தினேன். (அ௦)

* அற்பனைத்துலகுமெண்ணவேயறனளித்தமன்னனழல்வேள்வியின்
கற்பனைக்குதவிதருகெனப்பழையகால்விழுத்தநெடுவேலைவீழ்
வெற்பனைப்புகலவந்தவீடணனளித்தநீடுயர்வியன்றலைப்
பொற்பனைத்தருவொரேழுமேழுமுடனேகவர்ந்துகழல்போற்றியே. (அக)

* மீளவந்தினையதாதைபாதமுடிமீதுவைத்தொளிவிளங்குபொற்
பாளையம்பனைகள்பற்பராகமுதலானபன்மணிபரப்பினா
னாளிரண்டிலிமையோரொடொத்தபெருஞானபண்டிதனுநல்லறன்
காளைபைங்கழல்வணங்கினன்றனதுபதிபுகுந்துநனிகடுகியே. (அஉ)

வேறு.

* ஆல்வரும்புரவித்திண்டேரறன்மகனனுசரான
நால்வருஞ்சென்றுதிக்கோர்நாலிரண்டினுந்தன்செய்ய
கோல்வரும்படியேயாக்கிக்கொணர்ந்தனதிறைகள்கண்டான்
மேல்வருமிராயசூயவேள்விநாம்விளம்பக்கேண்மோ. (அங)

* இரணியனிரணியாக்கனென்றதானவரைவென்றுங்
கரணியவிலங்கைமூதூரரக்கனையநுசனோடு
மரணமுற்றிடமுன்சீறிமாமனைமலைந்துமற்றை
முரணியபகையுந்தீர்ப்பான்மூர்த்தியாய்ப்பிறந்துளோனை. (அச)

* விரைவினிற்கொணர்தியென்றுவீணைநாரதனைப்போக்கித்
தரணிபர்க்கெல்லாமோலைதனித்தனிதூதிற்போக்கி
வரனுடைச்சுருதிநான்கும்வகுத்தவனாதியான
விருபிறப்பாளர்யார்க்குமுலூகனையேவினானே. (அரு)

* தானவர்தச்சன்வந்துசமைத்ததோர்சிற்பந்தன்னை
வானவர்தச்சன்கண்டுமகிழுமண்டபத்தின்வேந்த
ரானவரெவருமீண்டியந்தணரெவருமீண்டி
மான்வரெவருமீண்டிவரம்பெறநெருங்கினாரே. (அசு)

* வர்வரவந்தவந்தமுனிவரைவணங்கியாசி
திறமுறப்பெற்றுவேந்தர்சிறப்பெலாந்திருக்கணோக்கி
நரபதிதானுமற்றைநால்வருநீலமேனி
யிரவியையனையான்றன்னையுவகையோடெதிர்கொண்டாரே. (அஎ)

* கரகதக்களிறுபோலுங்கனிட்டரீரிருவரோடுந்
துரகதத்தடந்தேர்விட்டுத்துழாய்மணங்கமழும்பொற்றோண்
மரகதக்கிரியன்னானைவணங்கினர்தழுவிவெள்ளைத்
திருநிறத்தவன்றன்செம்பொற்றிருப்பதமிறைஞ்சினாரே. (௮௮)

* இருபுடைமருங்குந்திக்கோரெட்டையும்வென்றோர்போத
நிருபதிதேரிற்போதநேமியான்களிற்றிற்போதச்
சுரர்பெருந்தச்சன்செய்ததொன்னகர்வீதிபுக்கார்
வருதிருப்பவனிகேட்டார்வளநகர்மாதரெல்லாம். (௮௯)

* ஈரடிகளிலுஞ்செம்பஞ்செழுதுவாரெழுதுமுன்ன
ரோரடியெழுதிமின்போலொல்கிவந்திறைஞ்சுவாரு
மாரமுதனையகண்ணிலஞ்சனமெழுதுகின்ற
சீரியகோலுங்கையுந்திருத்தகத்தோன்றுவாரும். (௯௦)

* விரிதுகில்வேறுடாமல்விரைகமழ்தூநீராடிச்
சுரிகுழன்மேகமாரிதுளித்திடவெதிர்கொள்வாருங்
கரதலமலரிற்சங்குங்கலாபமுஞ்சிலம்புமார்ப்பத்
தெருவெலாந்தநமேயாகிச்சீறடிசிவப்பிப்பாரும். (௯௧)

* வார்குழைப்பற்பராகமணிவிளக்கேற்றுவாரு
நேரிழைமருங்குல்வாட்டுநிறைகுடம்பூரிப்பாருங்
காரிளங்கமுகும்பச்சைக்கதலியுநிரைத்துத்தோளாந்
தோரணநாட்டுவாருந்தூய்மலர்சிந்துவாரும். (௯௨)

* மாதர்களவர்க்குமுன்போய்வணங்குதற்குன்னிச்சிந்தை
யாதரவுடனேவந்துமாவணமணுகுறுமற்
சூதடர்கொங்கைபொற்றோள்சுரிகுழல்சுமக்கலாற்றாப்
பேதுறுமருங்குலோடும்பித்துறுபிடியன்னாரும். (௯௩)

* இவ்வகைக்குழூக்கொண்டாங்கணெழுவகைப்பருவமாதர்
செவ்வியுமழகுந்தேசுஞ்செய்யபூந்திருவோடொப்பார்
மெய்வழிநின்றபோகமேகமேயனையான்றன்னை
மைவழிகண்ணினோக்கிமனனுறவணங்கினாரே. (௯௪)

வே று.

* மாடம்பயிலுமணித்தோரணவீதி
நீடஞ்சனக்கண்ணெருங்கித்தடுமாற
வாடம்பரக்கொண்டலன்னானையாபாத
சூடங்கருதித்தொழுதார்சிலமாதர். (௯௫)

* கங்கைதருபொற்கழலான்மணிமார்பிற்
கொங்கைமுகுளங்குழையும்படியாகச்
சங்கையறமெய்தழுவுதற்குத்தம்மினுந்தஞ்
செங்கைமலர்பதறச்சென்றார்சில்மாதர். (௯௬)

* வண்டுமலர்க்கரும்பாம்வண்ணப்படையானைக்
கண்டனையகண்ணிறைந்தகாயாமலர்வண்ணன்
செண்டுதரித்தோன்றிருப்பவளத்தாரமுத
முண்டுமனத்திருளுய்ந்தார்சிலமாதர். (௯௭)

* வஞ்சம்பயில்சகடவாளசுரன்மாளவிறற்
கஞ்சன்படவுதைத்தகாலானைக்கண்டுருகி
யஞ்சம்புமெய்புருவவைம்புலனுஞ்சோகமுற
நெஞ்சந்தடுமாறநின்றார்சிலமாதர். (௯௮)

* தங்கள்குலமுன்றிற்றலையாயமும்மதத்து
வெங்கண்மதமாமிசைவருவோன்மெய்ந்நோக்கி
யங்கண்மிளிரவரும்புருவமின்முறியத்
திங்கணுதன்வேர்வோடநின்றார்சிலமாதர். (௯௯)

* காலமுகிலுமலர்க்காயாவுமன்னதிருக்
கோலமுடையோன்குலவுமணிப்பூண்மார்பின்
மாலைநறுந்துளவமன்றலுக்குவாணயன
நீலவரிவண்டாகிநின்றார்சிலமாதர். (௧௦௦)

வேறு.

* மங்கையர்பலருமிங்ஙன்மன்மதபாணநான்கி
னிங்கிதவின்பமெய்தியின்னுயிரோடுநிற்பப்
பங்குறவந்தவந்தப்பாண்டவரைவரோடுங்
கொங்கவிழ்துளபத்தாரான்குந்திவாழ்கோயில்புக்கான். (௧௦௧)

* கொற்றவரைவர்தம்மைக்குருகுலம்விளங்குமாறு
பெற்றவள்பாதம்போற்றிப்பிறப்பிறப்பறுக்கவல்லோன்
மற்றவள்வாழ்த்தவாழ்த்தமனமகிழ்ந்தழலின்வந்த
பொற்றொடிபணிவுமேனைப்பூவையர்பணிவுங்கொண்டான். (௧௦௨)

* அரசவைக்கணிசெய்சிங்கவாசனத்திருத்திவெற்றி
முரசுடைத்துவசவேந்தன்முகமலர்ந்திருந்தகாலை
யிரைசெயப்புரவித்திண்டேர்வீமனைமுதலோரெங்கு
முரைசெலக்கவர்ந்தசெல்வங்காட்டிநின்றுரைசெய்தாரே. (௧௦௩)

* முன்னரமேதஞ்செய்வான்முடிச்சராசந்தனென்னுங்
கின்னரர்பாடுஞ்சீரான்கிளப்பருஞ்சிறையில்வைத்த
வன்னரபதிகளோடுமவன்மகன்மாகதேசன்
என்னரபதிகளுக்குமிரவியேயென்னவந்தான். (௧௦௪)

* அரும்பனைக்கொடியோனுதியரவுயிர்த்தவனீருகும்
பொரும்படைச்சேனைவெள்ளப்பூருவின்குலத்துளோர்கள்
கரும்பனைத்தடக்கைவெங்கட்கரிமுதற்சேனையோடு
மிரும்பினைக்குழைக்குநெஞ்சர்யாவருமீண்டிமொய்த்தார். (௧௦௫)

திருவிருந்தொளிருங்கோலத்திண்புயன்யாகசேன
னருகுறுபுதல்வரோடுமவனிபரனேகரோடும்
பெருகுநாலங்கஞ்சூழப்பெருங்கடலெனவந்துற்றான்
மருகர்வந்தெதிர்கொண்டெல்லாவரிசையுமுதவமன்னோ. (க௦௬)

பற்குனன்றனக்கன்றீந்தபாவையுமற்றுளோருஞ்
சிற்குணமதுறைவேந்துஞ்சேனையோடடைந்துபுக்கார்
நற்குணக்குந்திபோசனவையறுமச்சர்கோமான்
கற்குணத்தெண்ணிறந்தகாவலர்பலருமொய்த்தார். (க௦௭)

குத்திரமுணராவிஞ்சைக்கோபதிமகன்கோடுந்தி
யத்திரம்வியந்துமுன்னரளித்தவான்பரியைஞ்ஞூறுஞ்
சத்திரமுடியோடாரமுதலியகொண்டுசார்ந்தான்
சித்திரவிரதனுங்கந்திருவர்கோனன்பினோடும். (க௦௮)

* இந்திரபுரிக்குமிந்தவிந்திரபுரிக்குந்தேவ
ரந்தரமறிவுறுமலதிசயித்துவகைகூரச்
செந்திருமடந்தைக்குள்ளசெல்வங்களனைத்துஞ்சேர
வந்ததுபோலும்வேள்விமானகர்த்தோற்றமம்மா. (க௦௯)

* தோரணவீதிதோறுந்தூரியமுழக்கந்தன்னி
ளாரணமுழக்கமிஞ்சவந்தணராகியுள்ளோர்
காரணமுணர்ந்தோர்வேள்விக்கனன்முகமாகத்தேவர்
பாரணம்பண்ணவிட்டபைம்பொன்வேதிகையிற்சேர்ந்தார். (கக௦)

* சுடுமனற்கவுழனுகச்சுருதியின்படியேகோட்டி
நடுவுறத்திசைகணுன்குநான்குவெள்ளேறுகோட்டி
வடுவறச்சமைத்தசாலைமண்டபந்தன்னைநோக்கிற்
கடவுளர்க்கமைத்தயாகதலமெனக்கவினிற்றம்மா. (ககக)

வேறு.

* திருந்தமெய்ஞ்ஞானமுந்தெளிந்ததெய்வத
வருந்தவமுனிவர்பேரவையின்மேன்மையாற்
பெருந்தகைகாபியம்பெருமன்வாழ்வுபோன்
றிருந்ததுகுருபதியாகசாலையே. (கக௨)

* யாதவகுலத்திறுக்கிறைவனுகிய
மாதவனிணையடிவணங்கிமற்றுள
பூதலத்தரசெலாம்பொருந்துபொற்பினு
லோதநீர்வண்ணன்வாழுலகுபோன்றதே. (கக௩)

* விதியினுமுயர்ந்ததொல்வியாதன்மேதினி
பதிகளாகியதிறற்பாண்டுமைந்தரை
மதியினிலொருபுடைவருகென்றன்பினுற்
றிதியுறச்சின்மொழிசெவியிற்செப்பினுன். (கக௪)

* இங்கிதத்திந்திரரென்பர்யாவருஞ்
சங்கரன்விதியினூற்றரணிபாலராய்
வெங்கனற்றோன்றியமின்னையைவரு
மங்கலம்புவிமகள்வழக்கினெய்தினீர். (கக௫)

* ஓரொருதலைவராயோரோராண்டுளாங்
கூருவகையினெடுங்கொழுனராயினீ
ராரழற்பிறந்தமானறத்தின்மைந்தற்கு
பேரழல்வளர்த்திடும்பெற்றிபெற்றனள். (ககசு)

* மைந்தர்நீர்நால்வருமகஞ்செய்வேந்தனே
தந்தையுந்தாயுமித்தருமவல்லியே
யிந்தவான்பிறப்பினுக்கிற்றைநாண்முதற்
குந்தியும்பாண்டுவுமென்றுகொண்மினே. (ககஎ)

* கனல்வருமின்னையுங்கணவன்றன்னையு
முனிவரன்மொழிந்திடமுகூர்த்தமானபின்
புனைமுடித்திருக்குழற்புழுகுநானமு
மினிமையிற்சாத்தினரெண்ணின்மாதரே. (ககஅ)

* கதியொடுபிறைதவழ்கடுக்கைக்காட்டுநன்
னதிதருபுனல்கொடுநானமாட்டினார்
விதிமுறையறிந்தவர்வேள்விக்கேற்பன
பதியுடனணிந்தனர்பாவைதன்னையும். (ககக)

வேறு.

மாலைமுன்வணங்கிக்கங்கைமைந்தனைவணங்கியாக
சாலையைநோக்கும்வேந்தன்றம்பியைநோக்கிமுந்நீர்
வேலையின்மணலிற்சாலுமிகுசனமருந்தத்தேவ
ராலயத்தமுதமன்னவடிசினீயளித்தியென்றான். (க௨0)

* நாவியின்மதமுஞ்சாந்துநறும்பனிநீருந்தாரும்
வாவியிற்காவிலுள்ளமலர்களுமற்றும்யாவு
மேவியவரிவில்லாண்மைவிசையனைநல்குகென்றான்
றாவிலைப்பளிதமேனைத்துணைவரைவழங்கச்சொன்னான். (க௨க)

* தானமுந்தியாகந்தானுந்தபனன்மாமதலையான
மானவன்கொடுக்கவென்றான்வரம்பிலாநிதிகள்யாவுங்
கானலங்கடல்சூழ்வையங்காவல்ன்காவலென்று
னேனையோர்பலரும்வேந்தனேவலின்முறைநின்றாரே. (க௨௨)

* தழல்வளரோமகுண்டத்தலத்தினில்வலத்திலாதித்
தழல்வருபாவைவைகத்தருமன்மாமதலையாங்கட்
டழல்புரைவேதவாணர்தாளிணைவணங்கித்தானுந்
தழலெனவிருந்தானெல்லாவினைகளுந்தகனஞ்செய்வான். (க௨௩)

* கடகரியுரிவைபோர்த்தகண்ணுதற்கடவுண்மாறி
யிடம்வலமாகப்பாகத்திறைவியோடிருந்தவாபோ
லுடல்கலையுறுப்புத்தோலினொளித்திடப்போர்த்துவேள்விக்
கடனினுக்குரியவெல்லாங்கவினுறச்சாத்தினனே. (கஉச)

* பொங்குறுமோமச்செந்தீப்புகையினைப்போர்த்ததென்னப்
பைங்கடல்பருகுமேகம்பருதியைமறைத்ததென்ன
வங்குறுப்புடனேவெங்கோட்டரிணத்தொக்கருணமேனி
யெங்கணும்புதைப்பவேள்வித்தொழிலிலேயிதையம்வைத்தான். (கஉரு)

* தருமன்மாமதலையந்தச்சடங்குசொற்படியேதொட்டுப்
புரிவுடைதிசைகணன்கும்புற்களாற்காவல்செய்து
விரிசுடர்த்தீகண்மூன்றும்விண்ணவர்முகங்களாகச்
சுருவைபான்முகந்தநெய்யைச்சுருதியாலோமஞ்செய்தான். (கஉசு)

* முழுதுணர்வரம்பில்கேள்விமுனிவரர்குழாமுமென்று
மழிவிலாமலரோனாதியமரர்தங்குழாமுஞ்சூழ
வெழுசுடர்முத்தீப்பொங்கவெழுபகலோமஞ்செய்தான்
பழுதறுபாண்டுசெய்தமாதவம்பலித்ததொப்பான். (கஉஎ)

வேறு.

* இம்முறையிராசசூயமாமகத்துக்கெழுதொணூனான்மறையுரைத்த
வம்முறையிமையோரானவர்க்கெல்லாமரும்பெறலவியுணவருளி
மும்முறைவலம்வந்திருவருஞ்சுவாகைமுதல்வனைமுடியுறவணங்கித்
தெம்முறையரசரிடுதிறையனைத்துந்தானமுந்தியாகமுஞ்செய்தான். (கஉஅ)

* எழுநாளிவ்வாறிமையவரெவர்க்குமிமகிரிதனிலயன்வேட்ட
வூழிமாமகம்போலியற்றியெண்டிசையினுயர்புனல்யாவையுஞ்சொரிய
வாழிவாய்முகிலுமின்னுமேயென்னவரும்புனலாடியபின்னர்
வாழிபாடினர்களாரதன்முதலோர்மங்கலம்பாடினர்புலவோர். (கஉகூ)

* பெயர்பெறுமுனிவரெவர்க்குமெண்ணிரண்டாம்பேருபசாரமும்வழங்கி
வுயர்வறவுயர்ந்தவேள்வியினுயர்ந்தோனுயர்குலப்பாவையுந்தானும்
மயர்வறுஞானவடிவமாய்நின்றமாயனைமனனுறவணங்கி
யயர்வறுகங்கைமகன்பதம்பணிவுற்றறன்மகன்வினவினனம்மா. (கஙo)

* பரிதியுமதியும்வன்னியுமுதலாம்பல்வகைக்குலத்துமுற்பவித்த
நரபதிகுழாத்தில்யாவரேபெறுவார்நவிலுமுற்பூசைமற்றென்னக்
கருதியவசுக்களெண்மரிலொருவன்கங்கையின்றிருமகன்றெய்வச்
சுருதிமாமகஞ்செய்புனிதனைநோக்கித்தொன்முனிவரரையுநோக்கி. (கஙக)

* ஆர்கொலோவக்ரபூசனைக்குரியாரரசரிலந்தணீருரைமின்
பாரெலாந்தத்தங்குடைநிழற்புரக்கும்பார்த்திவர்யாரையுமுணர்வீர்
தாருலாமார்பீரென்றலும்வியாதன்றருமன்மாமதலையைநோக்கிக்
காரின்மாமேனிக்கரியசெந்திகிரிக்கண்ணனுக்குதவெனக்கதித்தான். (கஙஉ)

* என்றபோதந்தவேத்தவையிருந்தோர்யாவருமிருந்துழியிருந்து
நன்றுநான்மறையோர்சிகாமணியுரைத்தநவிரறுநல்லுரையென்றார்
சென்றபோர்தோறும்வென்றியேபுனையுஞ்சேதிபபதிசிசுபாலன்
கன்றினனிதையங்கருகினன்வதனங்கனலெனச்சிவந்தனன்கண்ணும். (கநஙு)

வேறு.

* பூபாலரவையத்துமுற்பூசைபெறுவார்புறங்கானில்வாழ்
கோபாலரோவென்றுறுத்தங்கதிர்த்துக்கொதித்தோதினன்
காபாலிமுனியாதவெங்காமனிகரானகவினெய்தியேழ்
தீபாலடங்காதபுகழ்வீரகயமன்னசிசுபாலனே. (கநச)

* சூரன்குலத்தோர்குபேரன்குலத்தோர்சுடர்ப்பாவகப்
பேரன்குலத்தோர்கண்முதலோரிருந்தார்கள்பெயர்பெற்றபேர்
வீரங்கொலோவாகுசாரங்கொலோசெல்வமிச்சங்கொலோ
பூரம்புராசிப்புவிக்கென்றுமுதுவோர்கள்பொதுவோர்கொலோ. (கநரு)

வேறு.

* பராசரமுனிவன்மதலையாம்படியேபகர்ந்தனைபழுதிலாமாற்ற
மிராசமண்டலத்தின்மரபினல்வலியாலேற்றமுந்தோற்றமுமுடையோன்
சுராசுரர்வியக்குங்கஞ்சனைமலைவான்சூரன்மாமகன்வயிற்றுதித்தான்
றராதலமிசையேபிறந்திவன்கற்றதெத்தனையிந்திரசாலம். (கநசு)

* சொற்றவாநன்றுசுகன்றிருத்தாதை * சூதிகைத்தோன்றியபொழுதே
பெற்றதாய்தானும்பிதாவுமுன்வணங்கப்பேசலாவுரையெலாம்பேசிக்
கற்றமாயையினாற்கன்னியங்கிருப்பக்காரிருட்காளிந்திரீந்தி
யற்றைநாளண்டரானவர்க்கெல்லாமரசனுக்கருமகவானான். (கநஎ)

* ஈன்றதாய்வடிவங்கொண்டுளமுருகியிணைமுலைத்தடத்தணைத்தமுதம்
போன்றபால்கொடுப்பப்பொழிமுலைப்பாலோபூதனையுயிர்கொலோநுகர்ந்தான்
சான்றபேருரலாலுறிதொறுமெட்டாத்தயிருடனறுநெய்பாலருந்தி
யான்றதாய்கண்டுவடத்தினிற்பிணிப்பவணியுரலுடனிருந்தழுதான். (கநஅ)

* பாடினன்மறுகுபெருநகைவிளைப்பப்பாவையர்மனைதொறும்வெண்ணெய்க்
காடினனவர்கண்முகந்தொறுமெச்சிலாக்கினன்கன்றுமுன்னோடே
வோடினனவின்பேரிளங்கன்றையுயிருடனொருதனிவிளவிற்
சாடினனரவின்முதுகையும்புள்ளின்றாலுவோடலகையும்பிளந்தான். (கநகூ)

* பின்னியகுஞ்சிக்கோவலர்பயந்தபேதையர்பலரையுங்களிந்த
கன்னியின்மருங்கு ‡ மோரையின்மருங்குங்கலையெலாநாணிடக்கவர்ந்தே
முன்னியவின்பச்செருக்கிலேமயக்கிமூரிவிற்காமனுமானா
னன்னியனல்லன்மற்றிவன்பெருமையரசரிலாரறியாதார். (கசO)

* சூதிகை - பிரசவித்த வீடு. ‡ ஓரை - மகளிராடுங்களம்.

வே று.

* அண்டர்க்கெல்லாமரசானவாகண்டலனுக்கண்டரினி
துண்டற்கமைத்தபாலடிசிலுண்டானொருநாளொருதானே
கொண்டற்கன்மாரியைமுன்னங்கோவர்த்தனமேகுடையாகச்
சண்டப்பிரசண்டவேகமுடன்றடுத்தானேறுபடுத்தானே. (௧௪௧)

* பம்பிப்பரந்தபுன்மேயும்பசுவின்கன்றுங்கோபாலர்
தம்புத்திரருமம்புயத்தோன்றன்மாயையினுலொளித்திடுநா
ளம்புத்திரருமெங்கோவினிளங்கன்றினமுமெனத்தெளிய
வம்பிற்புரிந்தமாயையிவனல்லாலியாவர்வல்லாரே. (௧௪௨)

* அதிரப்பொரும்போரஞ்சினனோவஞ்சாமைகொலோதெரியாது
மதுரைப்பதியுந்தன்கிளையும்வாழ்வுந்துறந்துவாரிதிவா
யெதிரொப்பிலாததுவாரகையென்றியற்பேர்படைத்தமாநகரின்
முதிரப்பொரும்போர்த்தம்முனுடனிருந்தான்பன்னுண்முரணறுத்தே.

வே று.

* கஞ்சனெனுமாமனொடுகாளையமர்விளைத்தான்
வஞ்சனையினுலமருமெத்தனைமலைந்தான்
தஞ்சமெனவேமருவுதமரிலொருதானே
மிஞ்சிவிரகாலுரியமேதினிபுரந்தான். (௧௪௪)

வே று.

* அன்னையுந்தாதைதானுமருஞ்சிறையகத்துவைக
முன்னிருமூவர்முன்னோர்தங்களைமுருக்குவித்தான்
பின்னொருதமையன்றன்னைப்பெற்றதாயிருவரென்றென்
றிந்நிலஞ்சொல்லவைத்தானிவனைவேறியாவரொப்பார். (௧௪௫)

* என்றுகொண்டெண்ணிநாவுக்கிசைந்தனவுரைகளெல்லா
மொன்றினொன்றுச்சமாகவுயர்ச்சியுந்தாழ்வுந்தோன்றக்
கன்றியமனத்தினோடுங்கட்டுரைசெய்தான்மன்றற்
றென்றலஞ்சோலைசூழுஞ்சேதிநாடுடையகோவே. (௧௪௬)

வே று.

மூப்பினைக்குறித்தாயெனில்வசுதேவன்முதன்மையிற்கவுரவமுதல்வன்
காப்பினிலரசரெண்ணிலர்குரவர்களிலருஞ்சிலைவலாசிரியன்
ஏப்புறவிருந்தார்கோப்புரந்தளிக்குமிவனையோர்முதல்வனென்றிருகைக் [ன்.
கூப்பிய்வியற்கைப்பயனிதேயென்னக் கொதித்தெழுந்தகன்றனன்கொடியோ

அரசவைபிகந்தநிருபனைத்தொடர்ந்தேயறன்மகனிருகரந்தழுவி
வரிசையிற்குலமுமூப்புநல்லெழிலும்வண்மையும்பெருமையும்பொருளோ
க்ரைசெயற்கரியகல்வியுஞானக்கருத்துமேபொருளெனமறைக
ளுரைசெயவுணர்ந்துமறந்ததென்பெரியோருள்ளமாருணர்ந்தவரென்றான். ()

ஆழ்சூழவனிமுன்புசெய்தவத்தாலரியுமோகுரிசிலாயுதித்தான்
பாழியந்தோளாய்வரன்முறையுணர்ந்தோர்பகர்ந்தனர்பூசனைகுறித்தே
வாழிநீசினத்தைமாற்றுதியெனவுமாற்றருஞ்சீற்றவெங்கரட
வேழமேயனையான்றருமமோருருவாம்வேந்தனைமீளவும்வெகுண்டான். (கசகூ)

விடுவிடுகரத்தையிளமையினெவர்க்குமேல்வருங்காரியந்தெரியா
தடுசினந்தன்னைவென்றவராரென்றறத்தின்மாமகன்றனையுரப்பி
முடுகியபரித்தேர்ச்சேதிபனெழில்கூர்முகந்தனைநோக்கிமுற்பூசை
யிடையனேபெறுவான்மறுக்கவல்லவராரென்றனனிகற்பிதாமகனே. (கரு०)

குழைமுகமசைத்துவிருத்தனைவெகுண்டுகொடுமரங்குனித்துநாண்டெறித்து
மழையெனவுரப்பியெழுந்தனன்சேதிமன்னவன்கங்கைமாமகனும்
விழைவுடைத்தனதுசேனையைக்கூவிவெவ்விடம்பரந்தபோலார்த்தான்
தழன்மகத்திடையேயிருந்தவரெவருஞ்சஞ்சலச்சலதியிற்சார்ந்தார். (கருக)

கடவிரண்டெழுந்துபொருவதொத்திசைந்தகாவலரவர்களினுப்பண்
மடலவிழ்வாசமாலிகைபுனைந்தமன்னவனுதிட்டிரன்புகுந்து
விடலருமகத்திற்சமர்பொரனன்றேமீட்டுமென்பொருட்டினானின்க
ணடலுடைச்சினத்தைமாற்றுதியெனப்போயடிபணிந்தனன்பிதாமகற்கே. ()

மந்தரமனையபுயத்தினான்வணங்கிவழங்கியவாய்மையாலிணங்கி
யந்தரத்தெவரும்புகழ்பெருங்குரவனருஞ்சினந்தணிந்துநின்றனனாற்
றந்தரத்தரசர்மணிமுடியுரிஞ்சுதாளுடைத்தனிச்சிசுபாலன்
கந்தரப்படையும்பூசனும்விடுத்துக்காவலர்ப்பேரவைகலந்தான். (கருங)

இருவிழிசிவந்துநுதல்வெயர்வரும்பவிருந்தமன்னவர்முகநோக்கி
யருவையையவதைத்துப்பிறர்மனைவிழைவுற்றதனுக்கிளவலைவிரும்பிப்
பெருமைமாதுலனைக்கொன்றபாதகனைப்பெரியனென்றுன்னுதற்கவோ
தெரிகிலீரெவருமுனிவருமவன்றன்சித்தினுக்குளரெனத்தெழித்தான். ()

பின்னரும்பகர்வான்வாரிதிமருங்கிற்பேசருமோதியாணடைந்து
மன்னியவிரதம்பிடித்துளேனென்னவைகலுஞ்சலதியுளியங்கு
முன்னுமஞ்சிறைசேர்பறவைகளெல்லாமுறவுகொண்டனுதினமளித்த
பன்னருமண்டநிரையெலாமதன்பாற்படுத்தியேகாவலாக்கியதால். (கருரு)

கைதவமுணராதஞ்சிறைப்பறவைக்கணங்கடன்வயினனிகாவற்
செய்தநல்லண்டத்திரளெலாநுகர்ந்துதீர்த்ததென்றொருகதையுளதான்
மைதிகழ்கடல்சூழவனியைப்புரக்குமன்னராங்குருகுலத்தவர்க்குப்
பொய்தவிர்தெய்வமானதிப்புதல்வன்காப்பதைப்புரிந்திடுமென்றான். (கருசு)

வேறு.

மொழியுங்கனல்நேர்மொழிகேட்டலுமுளமூளப்
பொழியுங்கனல்கண்வழிதோன்றியபுலிங்கசாலங்
கழியும்பகையும்வெயர்வொடுவன்கதையுமேந்தி
யழியுந்தினமாமெனவீமனுமார்த்தெழுந்தான். (கருஎ)

சொல்லாண்மைகாண்மணிவண்ணனைச்சோர்வில்கொற்ற
வில்லாண்மையானைப்பழுதாகவிளம்பினேனைப்
புல்லாண்மைகொண்டகதையாண்மையிற்போக்கியன்னான்
வல்லாண்மைவாயின்வழிவரச்செம்புனல்மாய்ப்பனென்றான். (கரு௮)

முடிபட்டமன்னர்திகைத்தேங்கமின்முகில்களஞ்ச
விடிபட்டசொல்லானுறுத்தோடியெதிர்த்தபோதிற்
புடைபட்டகையான்கிறற்சானவிபுதல்வனாலே
தடைபட்டுநின்றான்மும்மதவாரணந்தன்னையொப்பான். (கருகூ)

கருத்தாலுயர்ந்ததமகோடணனிந்தக்காளைதன்னை
வரித்தாலளித்துளவொருஞான்றவண்வந்தமைந்தன்
கரத்தீரிரண்டும்விழிமூன்றையுங்கண்டுவாட
வுரைத்தாரிவன்பகைமேவிடினீங்குமென்றும்பர்மன்னே. (கசூ0)

அப்போதுசாத்துவிதையென்னுந்தாய்தமக்கத்தையானு
ளிப்போதளித்தசிறுவனைநோக்கவென்றெய்துமூர்வாய்
மைப்போதுவண்ணனுடன்பலராமனும்வந்துநின்றார்
செப்பார்முலையாள்கருமுகிலங்கையிற்சிசுவையீந்தாள். (கசூக)

கண்ணுங்கரமுமதிகங்கரந்துற்றபோதே
யெண்ணஞ்சிறந்திங்கிவனேமகன்பகையென்பதுன்னி
மண்ணன்றளந்தோய்பிழைநூறுமறுக்கவென்றாள்
கண்ணன்கொடுத்தேனெனமீண்டுகதித்ததுண்டால். (கசூஉ)

மாலன்றியாருமவனாருயிர்வாங்கவொண்ணா
தேலுந்திருமாலிவன்பாரதமெண்ணலுற்றான்
மேலுஞ்சிறிதுபொழுதேபொறுத்திவெகுளியென்றான்
காலின்புதல்வன்சினமாறிடக்கங்கைமைந்தன். (கசூங)

மூற்பட்டவீமன்கொதியாறியமூரிநீர்போற்
பிற்பட்டிடுதலதுகண்டுபெருக்கமாழ்கிப்
பொற்பட்டயானையெனவந்துபுகுந்துவேறோர்
சொற்பட்டசேதிபதிவெகுண்டேயிதுசொல்லலுற்றான். (கசூச)

பாலிற்சிறந்தமொழிவிதற்பன்றருபாவைதன்னை
நூலிற்சிந்தகனல்விதியான்மணம்நொய்திசெய்த
மாலிற்கரந்துகொடுபோகியமறவஞ்சநின்போ
லேலிற்சிரந்தநாணிலர்யாவருமில்லையென்றான். (கசூரு)

வேறு.

* திண்ணியநெஞ்சினனசிசுபாலன்றன்னெஞ்சிற்றீங்குதோன்ற
வெண்ணியமன்பேரவையினியம்பியபுன்சொற்களெலாமெண்ணியெண்ணி
புண்ணியர்வந்தினிதிறைஞ்சும்பூங்கழலோன்வேறொன்றும்புகலானாகிப்
பண்ணியதன்புரவிநெடும்பருமணித்தேர்மேற்கொண்டான்பருதிபோல்வான்.

* என்னாட்டிலவனிபருமீண்டியவித்தொல்லவையினியைந்தசேதி
நன்னாட்டுக்கதிபதியாநரபாலநின்மாற்றநன்றுநன்று
கன்னாட்டும்படியாகவிருவோரும்பொருதறிதுங்கடிதேகென்று
தன்னாட்டமிகச்சிவந்தான்கரியவடிவினிற்புனைந்ததண்டுழாயோன். (௧௬௭)

* சேதிகுலநரபதியுஞ்செருப்புரிதற்கஞ்சுவனோதேரிலானான்
மோதிவலம்புரியூதமுகிலினங்கண்முழங்குவபோன்முரசமார்ப்ப
வெதியரோடவையிருந்தவேந்தரெல்லாமதிசயிப்பவிமானந்தோறுஞ்
சோதிமுடியமரர்வரநகர்ப்புறத்திலமர்மலையத்தொடங்கினாரே. (௧௬௮)

* ஆதி ‡ வருகதிப்பரியுமணிவயிரத்திண்டேருமனிலமென்ன
மோதிவருகடகளிறுங்காலாளும்பொருதுரகர்முடிகள்சோர
யாதவனாநரபதியுமிருங்கிளையும்பெருங்கிளையோடெதிரிலாத
சேதிகுலநரபதியுஞ்செய்தவமர்சுராசுரரிற்செய்தாருண்டோ. (௧௬௯)

வேறு.

* யானைமேல்வருநிருபருந்திறல்யானைமேல்வருநிருபருஞ்
சோனைமாமுகிலேழுமேநிகரென்னவம்புதொடுத்தலிற்
றானையாறுநிறைந்துபல்லணியாகிமிஞ்சியசதுர்விதச்
சேனையாவையுமெய்சிவந்தனசிந்தைமாமலர்கருகவே. (௧௭௦)

இரங்கியெங்கணுமோகமிஞ்சியெடுத்துவீசவேயெழுகடற்
றரங்கம்வந்தெதிர்மலைவபோன்றனசண்டவாயுவோடொப்பன
துரங்கமங்களில்வீரர்மேலிடுதும்பிமாமிசைவீரர்மே
லுரங்கொள்வெஞ்சிலைவாளிதோளொடுவுருவவன்பொடுடற்றினார். ()

* ஓரிரண்டுவரூதினிக்குளுமுயர்தடங்கிரியொப்பவே
யீரிரண்டுவிதத்தினாலுமியம்பலுற்றனவெண்ணில்பஃ
றேரிரண்டணியுருளினோடுருள்சென்றுமுட்டினதீயிடிக்
காரிரண்டெதிர்மலையுமாறெனவண்டபித்திகலங்கவே. (௧௭௨)

* சிங்கமொன்றுடனொன்றுசீறுசெருக்கெனும்படிசேனைவாய்
வங்கர்கொங்கணர்துளுவராரியர்மகதரொட்டியர்மாளவர்
கங்கர்கொங்கர்தெலுங்கர்சீனர்கலிங்கர்சிங்களர்கௌசல
ரங்கர்சோனகரானவீரரதிர்ந்துதங்களினமர்செய்தார். (௧௭௩)

* வெருவரும்படிகம்புகொம்புவிதங்கொண்மாமுரசாதியா
விருவர்தம்படைகளினுமூழியெழுந்தகாலெனவதிர்தலான்
மருவியெண்டிசைமுகமுநிற்பனமத்தவாரணகன்னமுந்
திருவிரும்புபுயத்துவானவர்செவிகளுஞ்செவிடானவே. (௧௭௪)

* புடைபடைக்கிளையாகிவந்தெதிர்பூதுரந்தரர்யாவருந்
தொடைபடப்பரிவுறுமனத்தொடுதொந்தயுத்தமுடற்றினார்
குடையெடுத்தனரிருவரும்பெறுகொடியெடுத்தனர்கொற்றவெம்
படையெடுத்தனர்மானமெய்ப்பசுபாலனும்சிசுபாலனும். (௧௭௫)

‡ ஆதி - மண்டலமாயோடல்.

* வேலினல்வடிவாளினல்வரிவில்லினலுரைபெற்றவெங்
கோலினலிருவருமுனைந்திருகுன்றமொத்தனதேரினர்
மாலினல்வருமத்தயானைகண்மலைவதொத்துமதித்தபோர்
நூலினல்வழுவறமலைந்தனர்நுண்மையாவினுநுண்ணியார். (௧௭௬)

வே று.

* வெஞ்சினமுடுகவொருவருக்கொருவர்வெல்லலுந்தோற்றலுமின்றி
வஞ்சினமுரைசெய்துள்ளமுமெய்யும்வாகுபூதரங்களும்பூரித்
தெஞ்சினர்தமைப்போலிளைத்தபின்னினிவானேற்றுதல்கடனெனக்கருதிக்
கஞ்சனைமுனிந்தோனிவன்முடித்தலைமேற்கதிர்மணித்திகிரியேவினனே. ()

* ஏவியதிகிரிவீரரைத்துறக்கமேறவிட்டிடுமிரவியைப்போன்
மேவியபகையாமைத்துனன்முடியைவிளங்குகோளகையுறவீசி
யாவிகளனைத்துநிறைந்தொளிசிறந்தவச்சுதனலைகொள்பாற்கடலிற்
றீவியவமுதமமரருக்களித்தோன்றிருக்கரஞ்சென்றுசேர்ந்ததுவே. (௧௭௮)

* சேதிமன்னவன்றன்முடியினைநெடியோன்றிகிரிசென்றரிந்திடவொருபொற்
சோதிமற்றவன்றனுடலினினெழுந்துசுடரையும்பிளந்துபோய்மீண்டு
மாதிரமனைத்துமொளியுறவிளக்கிமண்ணளந்தருள்பதமடைய
வேதியர்முதலோரியாவரும்வேள்விப்பேரவைவேந்தருங்கண்டார். (௧௭௯)

* ஈதொருபுதுமையிருந்தவாவென்பாரிந்திரசாலமோவென்பார்
மாதொருபாகனல்லதிக்கண்ணன்மதிகுலத்தவனலனென்பார்
கோதொருவடிவாம்புன்மொழிகிளைஞர்கூழினும்பொறுப்பரோவென்பார்
காதொருகுழையோனிளவலைத்தேர்மேற்கண்டுதங்கண்ணிணைகளிப்பார். ()

* அதிசயித்திவ்வாறிருந்துழியிருந்தோரனைவருமாழியான்றன்னைத்
துதிசெயத்தருமன்சுதன்முதலெவருந்தொழுதெதிர்வந்துவந்திறைஞ்ச
விதியெனப்பொருதவெங்களத்திடையவ்வியாதமாமுனியெடுத்துரைப்ப
மதியுடைக்கடவுள்வீடுமன்முதலாமன்னவர்யாவருங்கேட்டார். (௧௮௧)

* ஐவகைவடிவாயெங்குமாய்நின்றவச்சுதனமலனனந்தன்
செய்யொளிதிகழும்பங்கயக்கண்ணன்றிருமகள்கொழுநனைக்காணத்
துய்யசெய்தவத்துத்துருவாசமுனிவன்சேறலுஞ்சுடர்கொள்வைகுண்ட
மெய்யுறுகோயிற்றுவாரபாலகரவ்வேதபண்டிதன்றனைவிலக்க. (௧௮௨)

* விலங்கியவிருவர்தம்மையுமந்தவெஞ்சினமுனிவரன்வெகுண்டு
துலங்கியகோயிற்றுவாரம்விட்டவனிதோன்றுமின்போயெனச்சபித்தா
னலங்கலந்துளவமவுலியானதுகேட்டந்தணன்றனையெதிர்கொண்டு
கலங்கியதுவாரபாலர்நின்சாபங்கடப்பதெக்காலமோவென்றான். (௧௮௩)

* என்றலுமுனிவன்பரிந்திவரெழுகாலின்புருமன்பராய்வருத
லன்றிமும்மடங்குபகைவராய்வருதலல்லதிங்குன்பதமணுகார்
மன்றலந்துளபமாலையாயென்னமலர்மகண்மகிழ்நனுமவரைக்
கன்றியமறையோன்சாபநீர்கடக்குங்கருத்துமக்கியாதுகொலென்றான். (௧௮௪)

* மற்றவரிறைவன்மலரடிவணங்கிவான்பிறப்பேழுறமாட்டே
முற்றுமுப்பவமுமுனக்குவெம்பகையாயுற்பவித்துன்பதமுறுவேம்
வெற்றிகொண்முதிர்போர்நேமியாயென்முர்விமலனுங்கொடியவெஞ்சாப
மற்றிடும்வகையவ்வரமவர்க்களித்தானசுரராயவரும்வந்துதித்தார். (கஅ௭)

* இரணியன்வரிவிலிரணியக்கண்ணனெனும்பெயரிருவருமெய்தி
முரணியகொடுமைபுரிந்துமூவுலகுமொய்ம்புடன்கவர்ந்திடுநாளி
லரணியினழல்போனரவரியுருவாயச்சுதன்றனிலங்குரித்துத்
தரணியிலுகிராற்பிளந்துமுன்னுகத்திற்றன்பகைசெகுத்தனன்பின்னும். ()

* அரக்கர்தங்குலத்துக்கதிபதியாகியாண்டுபோய்மீண்டுமெங்குரித்துத்
தருக்குடனவர்களிருவருமுறையாற்றம்பியுந்தமையனுமானூர்
சிரக்குவையுடனேபுயவரைநிரையுஞ்சிந்தவச்சிந்துவினிடையே
சரக்குவைசொரிந்தானமலனவ்வுகத்துத்தசரதன்றன்வயிற்றுதித்தே. (கஅள)

* இந்தநல்லுகத்திலிறைவனுக்கன்னேனிருவருங்கிளைஞராயெய்தி
வந்தனர்வஞ்சக்கஞ்சமாமனுமிம்மைத்துனன்ருனுமாய்மன்னே
சிந்தையிலுணர்வீரென்றுகொண்டுரைத்தான்சித்தசித்துணர்ந்தருண்முனியு
மந்தமன்னவையிலிருந்துளோரெல்லாமமலனைத்துதித்ததிசயித்தார். (கஅஅ)

* வீடுமன்விதுரன்றுரோணனேமுதலாம்விரகிலாவுணர்வுடைவேந்தர்
நாடினர்மனத்திற்புளகமுற்றுடலநயனநீர்மல்கநாக்குழறிப்
பாடினர்புகழ்ந்துபரவினர்பரவிப்பைந்துழாய்கமழ்மலர்ப்பாதஞ்
சூடினர்சுருதிக்கெட்டொணுதொளிருஞ்சுடர்மணித்துய்யசோதியையே. ()

* அப்பொழுதமலனருஞ்சினமொழிந்தாங் கருளுடையறத்தின்மைந்தனைப்பார்த்
திப்பொழுதரசரானவர்க்கெல்லாமிருஞ்சிறப்புதவுகென்றிசைப்ப
முப்பொழுதுணருமுனிவரன்பணியான்முறைமுறைபூசனைபுரிந்தான்
மைப்பொழுதொளிகூர்வெண்ணிலவுமிழுமதிக்குலத்துதித்தருண்மன்னன். ()

* அருமறைமுறையாலரசனைமுனிவரனைவருமாசிசொற்றருளித்
தருநிரைபயிலுந்தத்தமவிபினஞ்சார்ந்தனர்தகவுடன்மீளக்
கருமுகிலனையமேனியங்கருணைக்கண்ணனுங்கிளையுடன்றுவரைத்
திருநகரடைந்தான்சென்றுவன்றிறல்கூர்சேதிபப்பெரும்பகைசெகுத்தே. ()

* அராவவெங்கொடியோனுதியாவுள்ளவரசருந்தந்நகரடைந்தார்
விராடனும்யாகசேனனுமுதலாம்வேந்தருந்தம்பதிபுகுந்தார்
சராசனத்தடக்கைச்சல்லியன்முதலோர்கிளையுடன்றம்புரஞ்சார்ந்தார்
பராவருமுதன்மைப்பாண்டவர்கடற்பார்பண்புறத்திருத்தியாண்டிருந்தார். ()

* முன்குலத்தவர்க்குமுனிகுலத்தவர்க்குமும்மதக்கைமுகக்களிற்று
மன்குலத்தவர்க்கும்வான்குலத்தவர்க்கும்வரம்பிலாவகைக்கலைதெரியு
நன்குலத்தவர்க்கும்பொருளெலாநல்கிநாடொறும்புகழ்மிகவளர்வான்
றன்குலக்கதிர்போற்றேய்ந்தொளிசிறந்தான்றண்ணளித்தருமராசனுமே. ()

வேறு.

பலமகமியற்றுமுனிவரர்புடையின்மொய்ப்பமகிபதிகளளவற்றவர்தொழக்
கலனணிமுலைச்சிறுமியர்களிசைபடிப்பமதுகரநிறைபுதுத்தெரியலார்
குலமணிபொறித்தமுடிமிசைகவிகைமுற்றுமதிகுளிர்நிலவெறிக்கவிருபா
லிலகுகவரித்தொகைகளசையமுகில்வர்க்கமெனவிரவலர்துதித்தடரவே. ()

முரசொலியிடித்ததிறலசனிகணிகர்ப்பமனுமுறைநெறிகளிப்பவழகார், வி
ரைசெய்மகரக்குழைகள்திசைதிசைவிளக்கவொளிவிடுமணிவடக்குழுவெலாம்,
வரிசையுரனிற்றிகழமலர்மழைநிறைத்தமரர்மனமகிழ்வுறக்கதைவலோ, னுரை
செய்முதன்மைப்படுதனிளைஞர்புடைநிற்பவொளியுமிழ்படைஞர்வெற்றிதரவே

துடியிடைகறுத்தகுழன்மதிமுகமதர்த்தவிழிதுணைமுலைசிவத்தகனிவாய்
வடிவுடையகற்பின்மடமகள்கனனுதித்தகொடிமருவுமொருபக்கமுறவே
கடிதடபணப்பொறிகொளரவுறழ்சசித்தெரிவைகணவனிலியற்கவினுற
வடனுடைமணிக்குருளையரியணைமிசைத்தருமனவையிடையிருக்குமளவில். ()

ஒருபுடைதனிற்சுபலன்மகனொருபுறத்திரவியுதவியகுடைக்குரிசின்மற்
றொருபுடைதனிக்கிளைஞர்பலரவர்மணிக்குடைகளொளிர்நிழறனிற்கொடியரா
மருவிடுதனிக்குமரன்மயனிடுசவைப்பெருமைமனமுறமதிக்குமவனும்
வெருவிடுமணிச்சுடர்செய்கெழுதகுநவக்குடுமிமிகுபுடையினுற்றனனரோ. ()

பொருவறுமதிற்கதுவுசிகரியுமிதிற்கடிகொள்பொறிகளுமியற்றுதொழிலும்
வெருவரவியப்பினொடுதெரிபவரறத்தொருவன்விறலவையினிற்புகுதர
வொருவயினெழிற்புனலைநிகருறுபளிக்குமடமுறவதுபுனற்சயமெனு
மருவுறுபணித்துவசனரையசைதுகிற்கைகொடுமடமைதெரிவுற்றனர்களே.

மற்றொருபுறத்திடைசலச்சயமிருப்பதுபளிக்குடைவனப்பருளலா
லற்றிதுவெனத்தனதுபொற்பதமுறுத்தியதனிற்றுகினனைத்தலசியே
கொற்றவன்முகிழ்த்தவதனத்துடனெதிர்ப்பவிவர்கொப்புறவழைத்தணைமிசை
யுற்றிடவளித்தவன்மனக்குரையகற்றினனுதிட்டிரனெனப்பெயர்கொள்வோன்

கைக்கடகமிக்கமுடிகட்டழனிகர்த்தமணிகட்டுவடநற்கலைகடேர்
மிக்ககளிறொப்பிலிளைஞர்க்குமொருமித்ததுணைவற்கும்விறலிற்றருமனு
மக்கணமளித்தவரையத்தினபுரத்திடையவற்பினுடனுய்க்கவிடைகொண்
டொக்கலிருபக்கமுறவெற்றியறவக்கொடிமனுற்றணைவிடுத்தணுகினான். ()

ஆடிகள்பதித்தமணிமாடநிரையிற்றிகழுமாடகமமுத்திவழிபொற்
கோடிகள்செலுத்தியிடையோர்வழிவிடுத்திலகுகூடமதிலுற்றரசர்கோன்
பாடிவழியைத்திறல்கனுடியெனவிட்டினியபாறைவழிபுக்குமகுடம்
பூடிகள்படத்தலையைமோதினன்விழிப்புலனில்பூபதியளித்தமகனே. (உ0க)

பொற்புயவரைச்சமிரணக்குமரனற்கனல்புரக்குமிறைபெற்றசுதன்மா
விற்செறிமுகத்தில்விழிமைக்கடல்புரட்டியிணையற்றகளபக்கனதன

வெற்பசைவுறத்தரளவர்க்கமெனவொத்தெயிறுவெற்றிநிலவைத்தணிதரக்
கற்புடைமகட்கனலுதித்தவணகைத்தனள்கரக்கமலமெற்றினளரோ. (உ0உ)

அந்தகனிவன்றனதுதந்தையெனின்மைந்தனுடையம்பகமுறும்புலனுறு
திந்தவகையென்கொலெனமுந்துரைவழங்கினளிருந்தவரசங்கையமையா
வுந்துநகுலன்றனதுதம்பிதனைவென்றியுடனுந்தவவன்முந்தியனுகிச்
சுந்தரமிகுந்தவழிகண்டணுகிடும்பரிசுதுன்பறவழங்கினனரோ. (உ0ங)

வானுதனகைச்சசிகிலாவிலரவத்துவசன்மாமுகவிரைக்கமலமங்
கேனுறமுகிழ்த்துமிகுநாணுடெவளைத்தசிரமேலுறவெடுத்திலனயற்
காணுமணியுப்பரிகைமேடையொளிரத்திபுரிகாவனகரிற்குறுகினன்
மானுறுமறத்தின்மகன்மாதொடெங்கனிட்டரொடுமாமனைதலைறிற்குறுகினன். ()

இராசசூயச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-உஉஅகூ.

---

# சூதுபோர்ச்சருக்கம்.

---

* ஞானமாகியபரம்பரவமுதாய்நவிரறுமயக்காகி
வானமாயுடன்வாயுவாய்த்தேயுவாய்வனமுமாய்மண்ணுகித்
தானமாமறைமுறைமையிற்பலபலசராசரங்களுமாகி
யேனமாயிவையனைத்தையுமருப்பினுலேந்தினனையாண்டோன். (க)

வேறு.

* தாமரையனையசெங்கட்டரணிபனிராயசூய
மாமகமுற்றித்தங்கண்மானகர்புகுந்தபின்னர்
நாமருபனுவன்மாலைநாகவேறுயர்த்தசெல்வக்
கோமகனிளைஞரோடுங்குறித்ததுகூறலுற்றும். (உ)

* கணைவரும்வரிவில்வாழ்க்கைக்கடுங்கனலனையதோற்றத்
துணைவருந்தானுங்கங்காசுதனுமற்றெவருஞ்சூழ
விணைவருமரசரில்லாவிகலரியேறுபோல்வான்
இணைவருமோதைமூதூர்க்கிளர்நெடும்புரிசைபுக்கான். (ங)

* சென்றுழியெவருந்தத்தஞ்செழுமனையெய்திவாசந்
துன்றியவமளிகங்குற்றுயில்புரிந்தெழுந்தபின்னர்
நின்றவெம்பருதிதோற்றந்தொழுதனர்நியமமுற்றி
வன்றிறலரசர்கோயின்மன்னவைவந்துசேர்ந்தார். (ச)

* இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்தெதிர்ந்தவேந்தர்
நிறஞ்செறிகுருதிவேலானினைவினோடிருந்தபோதி
லறஞ்செறிதானம்வண்மையளவிலாதளித்துநாளும்
புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்றான். (ரு)

* தாதவிழ்குவளைமாலைத்தருமன்மாமதலைபெற்ற
மேதகுவேள்விச்செல்வம்வேந்தரில்யாவர்பெற்றா
ரேதளவவன்றன்வாழ்க்கையாரினியெதிருண்டென்று
பாதகநினைவைத்தானும்பகர்ந்தனன்பரிவுகூர. (சு)

* விதரணவினோதன்சொன்னவார்த்தையும்வேந்தர்வேந்த
னிதையமுமொன்றாய்நின்றவியற்கையைச்சகுனிகண்டு
புதைநகமடங்கனூளும்புறஞ்செலாதொடுங்குமாலுல்
மதகரிவிடுமோவென்றான்வசையிசையாகக்கொள்வான். (எ)

* சொல்லிடைநஞ்சுகக்குந்துன்மதியுடையதம்பி
வில்லிடைநின்றுதம்முன்வெம்மனங்களிக்கச்சொன்ன
னல்லிடைநிறைந்ததேனுமமுதவெண்கிரணத்திங்க
ளெல்லிடையிரவிமுன்னரெவ்வுழிநிகர்க்குமென்றே. (அ)

* தமையனுந்தம்பிசொன்னதன்மையையுணர்ந்துநீதி
யமைதருதந்தைகேட்பவவன்பெருந்தாதைகேட்பக்
கமைபெறுவிதுரன்கேட்பக்கார்முகக்கன்னன்கேட்க
விமையவன்துரோணன்கேட்பயாவருங்கேட்பச்சொல்வான். (கூ)

* இந்திரன்முதலாவுள்ளவிமையவர்சிறப்புச்செய்யச்
சுந்தரப்பொற்றோள்வேந்தர்தொழில்புரிந்தேவல்செய்ய
மந்திரமுனிவர்வேள்விமறைநெறிமுறையிற்செய்யத்
தந்திரவெள்ளச்சேனைத்தருமனேதலைவனானான். (க0)

* இனியவன்சின்னாட்செல்லினெம்மனோர்வாழ்வுங்கொள்ளுந்
துணைவரும்புரவித்திண்டேர்த்துணைவருஞ்சூரரானார்
முனைவருகூர்முள்வேலைமுளையிலேகளையினல்லா
னனிவரவயிர்த்தபோதுநவியமுமடியுமன்றே. (கக)

* போதுறவிரைந்துமற்றப்புரவலன்செல்வம்யாவும்
பேதுறக்கவர்ந்திலேனேற்பின்னையார்முடிக்கவல்லார்
மோதுறப்பொருதேயாதல்மொழியொணவஞ்சமொன்று
தீதுறப்புரிந்தேயாதல்கொள்வதேசிந்தையென்றான். (கஉ)

* என்னலுமுரியதம்பியெழுவதேகருமமின்றே
செந்நெலின்வாளைபாயுஞ்செல்வநாடுடையகோமா
னென்னலங்கெய்தவீமனைகைத்ததுநேயமான
கன்னலின்மொழியாண்மூரல்விளைத்ததுங்கண்டிலீரோ. (கங)

வெற்பசைவுறத்தரளவர்க்கமெனவொத்தெயிறுவெற்றிநிலவைத்தணிதரக்
கற்புடைமகட்கனலுதித்தவணகைத்தனள்கரக்கமலமெற்றினளரோ. (உ0உ)

அந்தகனிவன்றனதுதந்தையெனின்மைந்தனுடையம்பகமுறும்புலனுறு
திந்தவகையென்கொலெனமுந்துரைவழங்கினளிருந்தவரசங்கையமையா
வுந்துநகுலன்றனதுதம்பிதனைவென்றியுடனுந்தவவன்முந்தியனுகிச்
சுந்தரமிகுந்தவழிகண்டனுகிடும்பரிசுதுன்பறவழங்கினனரோ. (உ0௩)

வானுதனகைச்சசிநிலாவிலரவத்துவசன்மாமுகவிரைக்கமலமங்
கேனுறமுகிழ்த்துமிகுநாணொடுவளைத்தசிரமேலுறவெடுத்திலனயற்
கானுமணியுப்பரிகைமேடையொளிரத்திபுரிகாவனகரிற்குறுகினான்
மானுறுமறத்தின்மகன்மாதொடுங்கனிட்டரொடுமாமனைதனிற்குறுகினான். ()

இராசசூயச்சருக்க முற்றிற்று.

ஆ. செய்யுள்-உஉஅசு.

---

# சூதுபோர்ச்சருக்கம்.

---

* ஞானமாகியபரம்பரவமுதாய்நவிரறுமயக்காகி
வானமாயுடன்வாயுவாய்த்தேயுவாய்வனமுமாய்மண்ணாகித்
தானமாமறைமுறைறமையிற்பலபலசராசரங்களுமாகி
யேனமாயிவையனைத்தையுமருப்பினாலேந்தினனையாண்டோன். (க)

வேறு.

* தாமரையனையசெங்கட்டரணிபனிராயசூய
மாமகமுற்றித்தங்கண்மானகர்புகுந்தபின்னர்
நாமருபனுவன்மாலைநாகவேறுயர்த்தசெல்வக்
கோமகனினைஞரோடுங்குறித்ததுகூறலுற்றான். (உ)

* கணைவரும்வரிவில்வாழ்க்கைக்கடுங்கனலனையதோற்றத்
துணைவருந்தானுங்கங்காசுதனுமற்றெவருஞ்சூழ
விணைவருமரசரில்லாவிகலரியேறுபோல்வான்
கிணைவருமோதைமூதூர்க்கிளர்நெடும்புரிசைபுக்கான். (௩)

* சென்றுழியெவருந்தத்தஞ்செழுமனையெய்திவாசந்
துன்றியவமளிகங்குற்றுயில்புரிந்தெழுந்தபின்னர்
நின்றவெம்பருதிதோற்றந்தொழுதனர்நியமமுற்றி
வன்றிறலரசர்கோயின்மன்னவைவந்துசேர்ந்தார். (௪)

* இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்தெதிர்ந்தவேந்தர்
நிறஞ்செறிகுருதிவேலானினிவிஞேடிருந்தபோதி
லறஞ்செறிதானம்வண்மையளவிலாதளித்துநாளும்
புறஞ்சுவர்கோலஞ்செய்வான் பூபதிக்குரைக்கலுற்ருன். (ரு)

* தாதவிழ்குவளைமாலைத்தருமன்மாமதலைபெற்ற
மேதகுவேள்விச்செல்வம்வேந்தரில்யாவர்பெற்ரு
ரேதளவவன்றன்வாழ்க்கையாரினியெதிருண்டென்று
பாதகநினைவைத்தானும்பகர்ந்தனன்பரிவுகூர. (சு)

* விதரணவிஞேதன்சொன்னவார்த்தையும்வேந்தர்வேந்த
னிதையமுமொன்ருய்நின்றவியற்கையைச்சகுனிகண்டு
புதைநகமடங்கனுளும்புறஞ்செலாதொடுங்குமாளுல்
மதகரிவிடுமோவென்ருன்வசையிசையாகக்கொள்வான். (எ)

* சொல்லிடைநஞ்சுகக்குந்துன்மதியுடையதம்பி
வில்லிடைநின்றுதம்முன்வெம்மனங்களிக்கச்சொன்ன
னல்லிடைநிறைந்ததேனுமமுதவெண்கிரணத்திங்க
ளெல்லிடையிரவிமுன்னரெவ்வுழிநிகர்க்குமென்றே. (அ)

* தமையனுந்தம்பிசொன்னதன்மையையுணர்ந்துநீதி
யமைதருதந்தைகேட்பவவன்பெருந்தாதைகேட்பக்
கமைபெறுவிதுரன்கேட்பக்கார்முகக்கன்னன்கேட்க
விமையவன்துரோணன்கேட்பயாவருங்கேட்பச்சொல்வான். (கூ)

* இந்திரன்முதலாவுள்ளயிமையவர்சிறப்புச்செய்யச்
சுந்தரப்பொற்றேர்வேந்தர்தொழில்புரிந்தேவல்செய்ய
மந்திரமுனிவர்வேள்விமறைநெறிமுறையிற்செய்யத்
தந்திரவெள்ளச்சேனைத்தருமனேதலைவனனன். (க0)

* இனியவன்சின்னுட்செல்லினெம்மனோர்வாழ்வுங்கொள்ளுந்
துணைவரும்புரவித்திண்டேர்த்துணைவருஞ்சூரரானர்
முனைவருகூர்முள்வேலைமுனையிலேகளையினல்லா
னனிவரவயிர்த்தபோதுநவியமுமடியுமன்றே. (கக)

* போதுறவிரைந்துமற்றப்புரவலன்செல்வம்யாவும்
பேதுறக்கவர்ந்திலேனேற்பின்னையார்முடிக்கவல்லார்
மோதுறப்பொருதேயாதல்மொழியொணுவஞ்சமொன்று
தீதுறப்புரிந்தேயாதல்கொள்வதேசிந்தையென்ருன். (கஉ)

* என்னலுமுரியதம்பியெழுவதேகருமமின்றே
செந்நெலின்வாளைபாயுஞ்செல்வநாடுடையகோமா
னென்னலங்கெய்தவீமனகைத்ததுநேயமான
கன்னலின்மொழியாண்மூரல்விளைத்ததுங்கண்டிலீரோ. (கங)

* எத்தனை தரணிவேந்தர்யாகநல்விழாவில்வந்தா
ரத்தனைபேரில்யாமுமொருவராயடங்கிநின்றேங்
கொத்தனையுகளுநன்னீர்க்குலநிலக்கோமானந்த
முத்தனையன்றிப்பின்னையாரையேமுதன்மைசெய்தான். (கச)

* நந்தகோமகனுக்கெல்லாநல்கியமுதன்மைகண்டு
வந்தகோவெள்ளஞ்சேரவாய்திறவாமனிற்ப
வெந்தகோவிவனுக்கிந்தமுதன்மையென்றெதிர்ந்துமாற்றற்
தந்தகோமடியுமாறுசமரமும்விளைப்பித்திட்டான். (கரு)

* தன்புயவலியுநான்குதம்பியர்வலியுமாயன்
வன்புயவலியுங்கொண்டேமண்ணெலாங்கவரவெண்ணி
யின்புயச்சிகிரிமன்னர்யாரையுந்தன்கீழாக்கி
மின்புயலனையான்மேன்மைவிளைக்கவேவேள்விசெய்தான். (கசு)

* எல்லியல்பருதியன்னயதுகுலமைந்தனுனுஞ்
சல்லிய * மிகுபோர்செய்யச்சல்லியன்றன்மேற்சென்றான்
சொல்லியகருமம்வாய்ப்பச்சூழ்வலைப்படுத்திக்கொண்ட
வல்லியமென்னச்சூழ்ந்துமலைவதேகருமமென்றான். (கஎ)

* வேந்தனுமொருப்பட்டந்தவெண்ணெய்வாய்க்கள்வன்மீளப்
பொந்திவர்தமக்குமின்றுபொருதுணையாகமாட்டான்
சாந்தணிகுவவுத்தோளான்சல்லியன்வலியினிப்போ
தாந்தகவெண்ணில்வல்லேலையைவரையடர்க்கலாமே. (கஅ)

* வஞ்சனைகொண்டேயாதல்வாரணமணித்தேர்வாசி
நஞ்சனையவராலாதனுவையேயழித்தல்வேண்டுங்
கஞ்சனைமலையவெண்ணிக்கரியபேய்முலைப்பாலுண்ட
நெஞ்சினனெய்தாமுன்னநீர்விரைந்தெழுமினென்றான். (கக)

* வெஞ்சிலைகுனித்தோரம்புயான்விடில்வெகுண்டவேந்த
ரெஞ்சிவிண்புகுவரல்லால்யாவரேயெதிர்க்கவல்லார்
வஞ்சனைகொண்டுவெல்லமதிப்பதுவாளால்வெல்ல
வஞ்சினமாயினன்றேவென்றனனங்கர்கோமான். (உ0)

* யாவரும்மொழிந்தவார்த்தையின்புறக்கேட்டுப்பின்னுந்
தாவருபுரவித்திண்டேர்த்தானையான்சகுனிசொல்வான்
மேவருகன்னனன்றிவிண்ணுளோரெதிர்ந்தபோதுங்
கோவருமுன்றிலானைக்கொடுஞ்சமர்வெல்லலாமோ. (உக)

* இடிம்பனைப்பகனைவெவ்வேலிகற்சராசந்தன்றன்னை
நெடும்பணைப்புயத்தால்வென்றநிகரிலாவீமனிற்கக்
கடும்படைப்பெருமையால்வென்காணலாமென்பராகிற்
றொடும்படைத்தடக்கைவீரர்க்குத்தரஞ்சொல்லலாமோ. (உஉ)

---

* சல்லியம் - கலக்கம்.

* துப்புறழமுதச்செவ்வாய்த்திரௌபதிதுணைத்தோள்வேட்டுக்
கைப்படுசிலையினோடுங்காவலர்கலங்கிவீழ
மெய்ப்படுமுனியாய்வந்துவிசையன்வில்லிறுத்தபோது
மிப்பொழுதிருந்தவீரர்யாவருமிருந்திலேமோ. (உ௩)

* இப்பிறப்பொழியவின்னமேழெழுபிறப்பினுலு
மெய்ப்பிறப்பற்றநீதித்தருமனைவெல்லமாட்டோ
மொப்பறப்பணைத்ததோளாயுபாயமெங்கேனுமொன்றுற்
றப்பறச்சூதுகொண்டுசதிப்ப * தேகருமமென்றான். (உ௪)

* தன்பெருமாமன்சொல்லத்தரணிபன்றம்பிதானும்
வன்பெருஞ்சேனைகொண்டுமலைவதற்கவர்களஞ்சா
ரின்பெருநேயமிக்கவிவன்மொழிப்படியேமாயப்
புன்பெருஞ்சூதுகொண்டுபொருவதேபுந்தியென்றான். (உ௫)

* கோமகனெஞ்சுசாவுங்குளிர்ந்துபேருவகைகூர்ந்து
மாமனைத்தவிசின்கண்ணேவருதியென்றிருத்திக்கொண்டு
பாமருபனுவன்மாலைப்பாண்டவர்தம்மைநின்கைக்
காமருசூதால்வெல்லுங்கருத்தெனக்குரைத்தியென்றான். (உ௬)

* மன்னநின்செல்வக்கோயின்மண்டபமொன்றுதேவர்
பொன்னுலகினுக்குமில்லையென்பதோர்பொற்பிற்றாகப்
பன்னுறூற்சிற்பங்குன்றுப்பஃறொழில்வினைஞர்தம்மா
னன்னிலவிரிவுண்டாகநாளையேயியற்றுவிப்பாய். (உ௭)

* மண்டபங்காணவெம்முன்வருகவென்றழைத்துவந்தாற்
கண்டுகண்களித்துமற்றக்காவலரிருந்தபோதிற்
புண்டரவிசாலநெற்றிப்புரவலபொழுதுபோக
வண்டரும்விரும்பும்வன்சூதாடுதும்வருகவென்பேம். (உ௮)

* அதிர்முரசுயர்த்தகோவுமையென்த்துணியும்பின்னை
மதிமருளியற்கைத்தாகுமாயவெஞ்சூதுதன்னால்
விதியெனப்பொருதுவாழ்வுமேதகுமிராசுதங்கள்
பதிமுதற்பலவுந்தோற்கும்படிசெகுத்திடுவலென்றான். (உ௯)

* இன்னதேகருமமென்றென்றிளைஞரும்விழைந்துசொன்னு
ரன்னதேகருமமாகவவர்வழியொழுகுநீரான்
றன்னதேயாகுமிந்தத்தலமெனுங்கருத்தான்மாமன்
சொன்னதேதுணிந்துமார்புந்தோள்களும்பூரித்திட்டான். (௩0)

* வில்லினுலுயர்ந்தவென்றிவிதுரனைநோக்கிக்கொற்ற
மல்லினுலுயர்ந்தபொற்றோள்வலம்புரிமாலைவேந்தன்
வல்லினுலுபாயஞ்செய்யமாதுலனுரைத்ததெல்லாஞ்
சொல்லினனவனுங்கேட்டுச்சொல்லெதிர்சொல்லலுற்றான். (௩க)

* சதித்தல் - அழித்தல்.

* வையமுமரசும்வாழ்வும்வாங்குகைகருத்தேயாகிற்
பொய்யடர்சூதுகொண்டுபுன்மையிற்கவரவேண்டா
மையனின்றந்தையோலையைவருக்கெழுதிவிட்டான்
மெய்யுறமறுத்துச்சொல்லார்வேண்டினதருவரன்றே. (௬௨)

* தந்தைதன்னேவலாலேதருமனுந்தம்பிமாரு
மிந்தமண்ணுடல்கைவிட்டெரிகெழுகானஞ்சேர்வர்
முந்துறநுமதேயாகுமுழுதும்வாழ்வெழுதுஞ்செம்பூம்
பைந்தொடையரசர்கேட்டாற்பாவமும்பழியுமாகா. (௬௩)

* தீதினல்வரித்துநெஞ்சந்தீயவராடுமாயச்
சூதினல்வென்றுகொள்கைதோற்றமும்புகழுமன்று
போதினன்முகனுமாலும்புரிசடையவனுங்கேள்வி
யாதினன்மறையுமுள்ளவளவுமிவ்வசையறுதே. (௬௪)

* என்றவனுரைக்கக்கேட்டேயெரியெழுமனத்தனுகி
யொன்றியகேண்மைத்தந்தைக்கொருபுடைவாரமுண்டோ
வன்றிறன்மைந்தர்வாழ்வும்வாங்கியின்றெமக்குத்தந்தாற்
புன்றொழில்வசையேயன்றிப்புகழ்கொலோபுகல்வதம்மா. (௬௫)

நினக்கிதுதொழிலாலென்றுநேயமுமவர்கண்மேலே
யெனக்குயிர்த்தந்தைநீயென்றியானுனைமகிழ்ந்துகாண்ப
னுனக்குமுன்கிளைக்குநாளுமுண்டியும்வாழ்வுமிங்கே
மனக்கருத்தங்கேயென்றுன்மாசுணத்துவசன்மாதோ. (௬௬)

* மைந்தனங்குரைத்தமாற்றமனத்தினையீரப்பின்னும்
வெந்திறல்விதுரனுற்றுவிளம்புவனென்பமாதோ
புந்தியின்மறுவிலாதோய்புதல்வரிலொருசாரன்பு
தந்தையர்க்கில்லையென்றுயானுமத்தந்தையன்றே. (௬௭)

* நீங்களுமவருநேயநெறிமுறைதவறுதென்றும்
வாங்குநீருததியாடைமண்ணின்மேல்வாழ்தலுற்றாற்
றாங்கலாவரசரெல்லாம்பணிந்துநும்வாயினிற்ப
ரோங்கியபுகழும்வாழ்வுமொருப்படவளருமன்றே. (௬௮)

* உங்களினவருநீருமுளம்பிரிந்தெதிர்த்தீரானாற்
றங்களினெதிர்ந்தாரம்மாகுருகுலத்தலைவரென்னுப்
பொங்களிநிகழுங்கஞ்சப்புரவலனெழிவுகண்ட
திங்களினுயற்சிபோலத்தெவ்வருந்திகழ்வரன்றே. (௬௯)

* ஆதலாலுறுதிசொன்னேனுமுறைதெரிந்துகோடி
யேதிலார்போல்யானுமினியுனக்கியாதுஞ்சொல்லேன்
றீதலாதுணராவஞ்சச்சிந்தையார்பரிந்துகூறுங்
கோதலாதுனக்கிங்கேலாதெனச்சிலகூறினனே. (௭௦)

* நிறுத்தறம்வளர்ப்போனெஞ்சினீதியுங்குரவரேவன்
மறுத்தெதிருரைக்குமென்பால்வடுவுநீவரைந்துகண்டாய்
செறுத்தவராவிகொள்வாயடியனேனென்செய்ததெல்லாம்
பொறுத்தருளென்னக்கையாற்போற்றினன்முறுவல்செய்தான். (சக)

* செழுந்திருவிரும்புமார்பன்செப்பியகொடுமைகேட்டு
விழுந்திரண்மாலைத்திண்டோள்விதுரனும்வெகுண்டுமுன்னித்
தொழுந்தகைமௌலிவேந்தன்சூட்சியிற்கிசைவுறும
லெழுந்துதன்கோயில்புக்கானிகலரியேறுபோல்வான். (சஉ)

* புரிவிலாமொழிவிதுரன்போகலும்புரிவிலொன்றுஞ்
சரிவிலாவஞ்சமாயச்சகுனியுந்தம்பிமாரும்
விரிவிலாமனத்தோடெண்ணும் * விசாரமேவிசாரமாக
வரிவிலான்விரைவினீண்டோர்மண்டபஞ்சமைக்கவென்றான். (ச௩)

* பெருந்தகையேவன்மாற்றம்பிற்படமுற்பட்டோடி
யிருந்ததொல்வேந்தர்தத்தமிருக்கையினியன்றவெல்லா
மருந்திறன்மள்ளராலுமணிமணித்தேரினாலும்
பொருந்தவேகொணர்வித்தாங்கட்பொற்சுவரியற்றினாரே. (சச)

* சங்கையில்சிற்பநண்ணூற்றபதியர்தகவுகூரச்
செங்கையினமைத்தகோலச்சித்திரத்தூணநாட்டி
யங்கையிலருணரத்நத்தணிகொளுத்திரமுமேற்றிக்
கங்கையினுயர்ந்தமுத்தின்கற்றையான்முற்றும்வேய்ந்தார். (ச௫)

* ஓவியஞ்சிறக்கத்தீட்டியொண்கொடிநிரைத்துச்செஞ்சொற்
காவியமாக்கட்கெல்லாங்கருத்துறுகவினிற்றாகி
வாவியபுரவித்திண்டேர்மன்னவனினைவுக்கேற்ப
வேவியவினைஞர்தம்மாலியல்புறச்சமைந்ததன்றே. (சசு)

* மன்னவைக்கானபைம்பொன்மண்டபஞ்சமைந்ததென்று
தன்னவைக்குரியோர்சொல்லச்சகுனியுந்தானுநோக்கிச்
சொன்னவைக்கேற்றதென்றுதொழுதகுதாதைதன்பான்
பின்னவைத்தொளிரும்வேலான்மேவினன்விளம்பலுற்றான். (சஎ)

* அரும்பெறலையகேட்டியடியனேன்கருத்துமுற்றக்
கரும்புயறவழுஞ்சென்னிக்கதிர்மணிக்கூடமொன்று
பெரும்புகழ்நகரினீண்டுச்சமைத்தனன்பெருமைகாண
வரும்படிதூதொன்றேவுன்மைந்தரைவிரைவினென்றான். (சஅ)

* மகன்மொழிநயந்துகேட்டுவாழ்வுறுதந்தைதானு
மிகநயந்துருகிநல்லவிரகினால்வெல்லலுற்றீ
‡ ரகநெடும்போர்செய்தாலுமைவரையடர்க்கொணாது
சகுனியையன்றிவேறார்தரவல்லார்தரணியென்றான். (சகூ)

* விசாரம்-ஆராய்ச்சி. ‡ அகம்-வருத்தம்.

* விழியிலாவென்றிவேந்தன்விதுரனையழைத்துநீபோய்
மொழியிலாருலகின்மற்றுன்மொழியினைமறுக்கவல்லார்
பழியிலாவிசைகொணீதிப்பாண்டவர்வந்துன்மைந்தர்
வழியிலாயொழுகும்வண்ணமருட்டிநீகொணர்தியென்றான். (ருo)

* தம்பியர்விழைவாற்கூடஞ்சமைத்தபேரழகுகாண
விம்பர்வந்தெமையுமெய்தியேகுகவிரைவினென்னப்
பைம்பொனினோலைமீதுபண்புறவெழுதியின்னே
யெம்பியுமேகுகென்றானேவலினவனும்போனான். (ருக)

* காரெனக்களிறுசுற்றக்காற்றெனப்புரவியீண்டத்
தேரினுக்கொருவன்றன்னைச்சிலம்பெனத்தேர்கள்சூழ
வீரரிற்பலரும்போற்றவிதுரனுமிரண்டுநாளாற்
பாரினுக்குயிரேபோலும்பாண்டவர்நகரிசேர்ந்தான். (ருஉ)

வேறு.

* புரியுமொண்கதிர்கவினுறுபொலிவினாற்பொன்னுலகாமென்ன
வரியபைம்பொனின்மணிகளினிறைந்தசீரளகைமாநகரென்னத்
தெரியுமன்புடனறங்குடியிருப்பதோர்தெய்வவான்பதியென்ன
விரியும்வெண்கொடிப்புரிசைசூழ்வளநகர்விழிகளித்திடக்கண்டான். (ருங)

* ஊடெலாநறும்பொய்கைநீள்வாவியினுடம்பெலாமலர்பூவின்
றோடெலாமெழுசுரும்பினமதுகரச்சொல்லெலாஞ்செழுங்கீதம்
பாடெலாமிளஞ்சோலைமென்பொங்கரின்பணையெலாங்குயிலோசை
நாடெலாநெடும்புனல்வயல்கழனியினடுவெலாம்விளைசெந்நெல். (ருச)

* அருகெலாமணிமண்டபமவிரொளியரங்கெலாஞ்சிலம்போசை
குருகெலாம்வளர்பழனமப்புள்ளெலாங்கூடலின்புறவுடன்
முருகெலாங்கமழ்துறையெலாந்தரளம்வெண்முத்தெலாநிலாவெள்ளம்
பருகெலாம்புனனதியெலாநீரெலாம்பங்கயப்பசுங்கானம். (ருரு)

* ஆனகம்பலமுழங்கவந்தெதிர்பணிந்தாதுலர்க்கமுதென்னப்
போனகம்பரிந்திடுநெடுஞ்சாலையேபுகுந்தமாமறுகெல்லாம்
வானகந்தனையமையுமென்றும்பருமண்ணின்மேல்வரவெண்ணு
ஞானகஞ்சுகனகரியையெங்ஙனேநாம்வியப்பதுமன்றே. (ருசு)

* வந்தனன்சிலைவிதுரனென்றோடிமுன்வந்தவருரையாமுன்
றந்தைதன்றனிவரவறிந்திளைஞருந்தருமனுமெதிர்கொண்டார்
சிந்தையன்புடன்றொழத்தொழமைந்தரைச்செங்கையாற்றழீஇக்கொண்டே
யந்தணம்புலிகண்டபைங்கடலெனவவனுமெய்குளிர்ந்திட்டான். (ருஎ)

* கொண்டுதந்தையைத்தாமும்வண்கொடிமதிற்கோபுரநெடுவீதி
யண்டராலயமெனத்தகுகோயில்சென்றடைந்தபினடல்வேந்தர்
வண்டுதாமரைமலரெனச்சூழவுமாமலரடிபணிந்தேத்தக்
கண்டுவாழ்வுடனவர்க்கருள்புரிந்துதன்கருத்தினால்விடையீந்தான். (ருஅ)

* தானுமைந்தரோரைவருமொருபுடைதனித்திருந்துழிவண்டு
தேனுகர்ந்திசைமுரல்பசுந்தொடையலான்றிருத்தகமொழிகின்றான்
கோனுவன்றுதன்றிருமுகமெழுதிநீகொணர்கமைந்தரையென்ன
யானும்வந்தனனேவலாலழைத்ததற்கேதுவுமுளதன்றே. (௫௯)

* நீபுரிந்தநல்வேள்வியின்கடன்கழித்தியாவருநெடுமாடக்
கோபுரந்திகழ்மூதெயில்வளநகர்க்கோயில்புக்கனமாக
நூபுரந்திகழிணையடியரம்பையர்நோக்கருங்கவின்கொண்ட
மாபுரந்தரனிவனெனவிருந்தனன்வலம்புரிமலர்த்தாரான். (௬௦)

* தம்பிமாரொடுந்தகையிலாத்துன்மதிச்சகுனிதன்னொடுமெண்ணிக்
கும்பமாமணிநெடுமுடிநிரைத்தவண்கூடமொன்றமைக்கென்ன
வம்புராசிசூழ்மண்டலத்தரசெலாமடங்குபேரவைத்தாக
வும்பராலயநிகரெனச்சமைத்தனரொட்பநூலுணர்வுற்றோர். (௬௧)

* பெற்றதந்தையோடுள்ளூறுமுணர்வெலாம்பேசிமண்டபந்தன்னிற்
கொற்றவன்குடிபுகும்பொழுதுன்னையுங்கூட்டிமன்னவைமுன்னர்
மற்றமாதுலனெஞ்சமோவஞ்சமோமாயமோவகுத்தாங்குக்
கற்றசூதுநின்னுடன்பொருநினைவினன்கருத்தினித்தெரியாதே. (௬௨)

* திரிதராட்டிரன்றிருமுகமிதுவெனச்சென்றிறைஞ்சினன்வாங்கி
விரதமார்க்கமென்றறிந்தறம்பேணுவான்வினைஞர்கைக்கொடுத்திட்டா
னிரதமாற்றமங்கெழுதியபடியினுலியம்பலுமதுகேட்டு
வரதனூற்பணிப்புறுதொழில்யாவர்நாமறுக்கவென்றுரைசெய்தான். (௬௩)

* மூத்ததாதைதன்னோலையுமிளையவன்மொழியுமொத்தமைநோக்கி
வார்த்தைவேறுமற்றொன்றையுமுரைத்திலன்மனுநெறிவழுவாதோன்
சேத்தநாகவெங்கொடியவன்கொடியவன்சிந்தையினிலேதோன்றக்
கோத்தகோவைநன்றாயினுந்தகுவதோகுருகுலந்தனக்கென்றான். (௬௪)

* அடியுமாண்மையும்வலிமையுஞ்சேனையுமழகும்வென்றியுந்தத்தங்
குடியுமானமுஞ்செல்வமும்பெருமையுங்குலமுமின்பமுந்தேசும்
படியுமாமறையொழுக்கமும்புகழுமுன்பயின்றகல்வியுஞ்சேர
மடியுமான்மதியுணர்ந்தவர்சூதின்மேல்வைப்பரோமனம்வையார். (௬௫)

* குழகராயிளமடந்தையர்க்குருகுவோர்குறிப்பிலாமையினாலும்
பழகுவார்மிகச்சிந்தைநோய்தாங்களேபடுக்குமாறுணராம
லழகுபேறிவாகவேகொண்டவரறத்தொழில்புரியாமற்
கழகமாடவும்பெறுவரோவிதனினுங்கள்ளுணவினிதன்றே. (௬௬)

* மேதகத்தெரிஞானநூற்புலவரும்வேத்துநூலறிந்தோரும்
பாதகத்திலொன்றென்னவேமுன்னமேபலபடப்பழித்திட்டார்
தீதகப்படுபுன்றொழிலிளைஞரிற்சிந்தனைசிறிதின்றித்
தோதகத்துடனென்னையோசகுனிதன்சூதினுக்கெதிரென்றான். (௬௭)

* தன்கருத்தினினிகழ்ந்தவாறிம்முறைதருமன்மைந்தனுங்கூறி
யென்கருத்தினாற்பெறுவதென்விதியினையாவரேயெதிர்வெல்வார்
மன்கருத்தையுமவன்றிருவுளநிகர்மகன்கருத்தையுநோக்கி
நின்கருத்தைநீயுரையெனவிதுரனுநிகழ்ந்தனவுரைக்கின்றான். (சுஅ)

* இங்குநீயெனக்கியம்பியயாவையும்யானுமன்னவர்கேட்ப
வங்குநீர்மையின்மொழிந்தனனென்மொழியார்கொலோமதிக்கிற்பார்
பொங்குநீருடைப்பூதலத்தலைவகேள்புனைந்தநின்னிதையத்திற்
றங்குநீர்மையிற்புரிதெனப்புதல்வனைத்தந்தையுந்தகச்சொன்னான். (சுகூ)

* அன்றுதாழ்புனற்றுறையினிற்கழுநிரைத்தரியவஞ்சனைசெய்தான்
குன்றுபோலுயர்வாழ்மனைக்கொடுந்தழல்கொளுத்திவன்கொலைசூழ்ந்தான்
வென்றுசூதினில்யாவையுங்கவரவேவிரகினாலழைத்திட்டா
னென்றுதானமக்கன்புடைத்துணைவனாயிருந்ததெவ்விகலோனே. (எ0)

* முளையிலேயுயிர்கொல்வதோர்கடுவிடமுற்றிவன்காழேறி
விளையிலேதுசெய்யாதுமற்றவருடன்விழையுநண்பினிவேண்டாம்
வளையிலேதமேபுரிந்துமேன்மலைந்திடும்வன்படைகொடுமோதிக்
களையிலேநமக்கிருப்புளதென்றனன்காற்றருள்கூற்றன்னான். (எக)

* தேறலார்தமைத்தேறலுந்தேறினர்த்தேறலாமையுமென்று
மாறலாருடன்மலைதலுமாறுடன்மருவிவாழ்தலுமுன்னே
யாறலாதனவரசருக்கென்றுகொண்டரசநீதியிற்சொன்னார்
கூறலாதனசொல்வதென்செல்வதென்கொடியவனருகென்றான். (எஉ)

* விசையனிவ்வகைமொழிந்ததுமுந்துறுவீமன்மாற்றமுங்கேட்டே
யிசைபெறும்பெயர்நகுலனுந்தம்பியுமேகுதறகாதென்றார்
வசையறும்புகழ்த்துணைவரின்றுரைத்ததேவார்த்தையாயினும்பெற்ற
வசைவிலன்புடைத்தந்தைசொன்மறுப்பதோவென்றனனறஞ்செய்வான். ()

* ஆவியார்நிலைபெறுபவர்நீதிகூரரியவான்புகழன்றிப்
பாவி ‡ யானதங்கணுகுருதொழியினும்பலித்திடுநினைவின்றி
மேவியாளுடையையன்வந்திருக்கவும்வேரிவண்டெழுமன்றற்
காவியார்தொடைக்காவலனேவனுமறுப்பதுகடனன்றே. (எச)

* நாளையேகுதுமெந்தைவாழத்தினுநகர்க்கெனத்தருமன்றன்
காளையேவலின்முரசறைந்தெங்கணுங்காவலர்குழூஉக்கொண்டார்
வேளையேறியவரும்படைத்தலைவருமேல்வருபுனலூடு
வாளையேறுதண்பழனநாட்டெறிபடைமன்னரும்வந்துற்றார். (எரு)

* மாதுரங்கமமணிநெடுந்தேர்மதவாரணம்வயவீரர்
சாதுரங்கமுந்தந்திரத்தலைவருந்தரணிமன்னருஞ்சூழ
பீதுரங்கவின்கெழுபெருஞ்சேனைசூழ்வேந்தன்மாநகருற்ற
போதுரங்கமுநெளிந்தனபஃறலைபொருமையினிருநான்கும். (எசு)

‡ பாவி - வரற்பாலது.

* ஐந்துபூதமேஙிகரெனப்புலன்களோரைந்துமேயெதிரென்ன
வைந்துகாவுமேபொருவெனப்பணிமுடியைந்துமேநேரென்ன
வைந்துவாளியேயுறழ்வனவேள்வியோரைந்துமேயொப்பென்ன
வைந்துவாசமேதரமெனவைவருமைந்துதேர்மேற்கொண்டார். (எஎ)
* விழியினெஞ்சின்வாயினெருப்பினீடுததியின்விதிபடைப்பினிற்றோன்றிப்
பொழியும்வெண்கதி * ரைவகைமதியுமப்பொழுதுதித்தனவென்ன
மொழியுமைந்துபொற்றனிக்குடைநிழற்றினமுழுமதிவடிவின்க
ணிழியும்வெண்சுடர்க்கற்றையிற்சாமரமிரட்டினவிருபாலும். (எஅ)
* மைத்திரத்தினின்றதிர்வனமுதிர்வனவரைத்திறத்தினுமோங்கு
மெய்த்திரத்தனவெழுதிறத்தினுமிகவிடுவனமததாரை
எத்திரத்தினும்பொருதொழில்புரிவனவேழுறுப்புறத்தாழ்ந்த
முத்திரத்தனவெண்ணலப்பிறப்பினமூரிவெங்களியானை. (எகூ)
* வன்றபோதனரினுமிகுபொறையனவலனுயர்வனவெண்கோ
வென்றபோதகத்தானையின்பெருமையையெங்ஙனம்புகல்கிற்பா
நின்றபோதுடன்முகிலிடைமறைந்ததுநிரைநிரைநெறிப்பட்டுச்
சென்றபோதுவெம்படைக்கடற்செய்ததோர்சேதுபந்தனம்போலும். (அ०)
* சுற்றுநீளமுமுயரமுமிகர்ப்பனசுழியின்மிக்கனதீமை
யற்றுமேதகுநிறத்தனகவினுடையவையவத்தனவாகி
யெற்றுமாமணிமுரசமுஞ்சங்கமுமெனுங்குரன்மிகுத்திப்பார்
முற்றுமாதிரத்தளவுமைங்கதியினுன்முடிப்பனவிமைப்போதில். (அக)
* ஆளிநெஞ்சமும்வார்த்தையுஞ்செங்கையுமாசனத்தொடுதாளுங்
கோளிலின்புறக்குறிப்பனவெவற்றினுங்குறைகளற்றனவாகி
யாளிகுஞ்சரம்வானரமுதலியவியக்கினுல்விசும்பெங்குந்
தூளிகொண்டிடமிடைந்துவந்தனநெடுந்துரகதம்பலகோடி. (அஉ)
* வடிவுடைச்சிலகுரகதமரகதவண்ணமிக்கனவாகிப்
படியினிற்சிறிதமைவுறமிதித்திலபவனவெங்கதிபோல
முடிவிலிப்படிமிசைவரக்கருதியேமுனிவரனுயிர்க்கெல்லா
மடிபடைத்ததுபடைத்ததிங்கிவற்றினுக்கவையவங்குறையாமல். (அங)
* நீடுமால்வரையடங்கலுநிலைபெறநிற்குமால்வரைமண்மே
லோடுமால்வரையிவையெனத்தனித்தனியூர்ந்ததேர்பலகோடி
நாடுமால்வரைகடல்வனமெனுநிலநாலுமேயொன்றாகக்
கூடுமால்வரையில்லெனப்பரந்தனர்கொடியவெம்படைவீரர். (அச)
* அதிர்முழக்கினகருமுகிலேழுடையண்டர்கோனகல்வானுக்
கெதிர்முழக்கெனமுழங்கினதனித்தனியினியமிடந்தோறும்
முதிர்முழக்கிபமவற்றினுமும்மடிமுழங்கினவவைதாமும்
பிதிர்முழக்கெனமுழங்கினவலம்புரியுரகரிற்பிழைத்தோர்யார். (அரு)

* அத்திரிமுனிவருடையகண்ணினும், விஷ்ணுவினுடைய இருதயத்தினும், அக்கினிதேவனுடைய முகத்தினும், திருப்பாற்கடலினும், பிரமசிருட்டியினும், சந்திரோற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது.

* எடுத்தநீள்கொடியாடைவானகல்வெளியெங்கணுநெருங்கிக்கீழ்
படுத்தவானமேவானமாய்மறைந்ததுமீதுறப்பகிரண்ட
மடுத்தபூநதிவானதிக்கிலதெனவன்புடனுபகாரங்
கொடுத்தமீனெனக்கால்பொரப்பரந்துபோய்க்குளித்தனகுளிர்தோயம். (அசு)

* அழுந்தமேவிடுசேனையான்மிகவுநொந்தமரருக்குரைசெய்யச்
செழுந்தராதலமடந்தைபொன்னுலகிடைச்செல்லுகின்றதுபோன்மே
லெழுந்ததூளிகளிடைவிடாதெங்கணுமெழுந்தெழுந்தெதிரோடி
விழுந்ததூளியுந்தடுத்தனநிலனுறவிசும்புறும்படிநின்றே. (அஎ)

* முன்னர்மாருதமதலையுஞ்சேனையுமுடுகிவன்பொடுபோதப்
பின்னர்வாசவன்மதலையுந்தானையும்பெருந்தகவுடன்போத
வன்னராதிபரிருவருமிருபுறத்தரும்படையுடன்செல்ல
மன்னராதிபன்றூரகாகணத்திடைமதியெனப்புறப்பட்டான். (அஅ)

* அங்கண்மானிலத்தரசர்தம்மகளிர்பேரரும்பிடிமிசைபோதச்
செங்கண்மாமயில்யாகபத்தினியும்வண்சிவிகையின்மிசைபோத
வெங்கண்மாமணிமுரசுயர்த்தருளியமெய்தவாமொழிவேந்தன்
றங்கண்மானகர்கடந்துவண்சாயையுந்தபனனுமெனச்சென்றான். (அகு)

வேறு.

* ஏவினபல்லியுமிடத்திலேவரத்
தாவினகுக்கிலுந்தருமன்றன்னெதிர்
வாவினநெடுங்கலைவரதனூல்வலோ
ரோவினருரைக்கவுமுணர்கலாமையால். (கூ0)

* மடந்தையரளகமுமாந்தர்மாலையு
முடைந்துகுகடகரிமதமுமுன்னியே
தடந்தொறுமுரலளிதமரினண்புறத்
தொடர்ந்துடன்வரவரச்சோலையெய்தினார். (கூக)

* சம்பகம்பாடலந்தமாலநான்மலர்
வம்பெழமிலைச்சுவார்வாவியாடுவார்
செம்பலவாமிரங்கதலித்தீங்கனி
யும்பரினமிழ்தெனவுடனருந்துவார். (கூஉ)

* பச்சிளங்கமுகின்மென்பாளைசூடுவா
ரச்செழுங்காய்கனிகவர்ந்தருந்துவார்
கொச்சையங்கடைசியர்குழுமிவாழ்த்தவே
வச்சிரம்போல்பவர்மருதநீங்கினார். (கூங)

* தடாநிறைவெண்ணெயுந்தயிருங்கொண்டெதி
ரடாமுடைநாறுதோளாயர்கைதொழப்
படாமுதன்முல்லையின்பரிமளங்கொளாக்
கடாமலைவயவர்தண்கானமெய்தினார். (கூச)

* தேனினஞ்செறிதருதெரியல்வேலினுன்
றுனிரங்கருண்மிகுதருமனுதலாற்
கானிலங்குறைதருகலைகளோடிள
மானினம்பேர்கலாமருங்குவைகுமால். (௯௫)

* செருவிளங்காளையர்சேனையின்றிறம்
வெருவிளம்பொதுவியர்விழைந்துகாண்ப்போன்
மருவிளங்கிதழிநீள்வனமுமாமலர்க்
கருவிளங்கண்கொடுகலந்துகண்டவே. (௯௬)

* புழைநெடுந்தடக்கைவெம்போதகங்களை
மழைமுகிலெனக்களிமயில்களாடின
தழலெழுகானகந்தண்ணெனும்படி
செழுமதவருவியின்றிவலைவீசவே. (௯௭)

* வனநெறிகடந்துபோய்மன்னவர்க்கெலாந்
தினகரனெனத்தகுசெய்யகோலின
னினமுகிறவழ்தலினிரங்குபேரிசைத்
‡ தனிதவண்கிரிநெடுஞ்சாரலெய்தினுன். (௯௮)

* குன்றுறைகடகரிக்குழாங்கள்சேனையி
னென்றியகளிறுகண்டுட்கியோடின
துன்றியபுறவிபச்சுவடுகண்டுடன்
சென்றிலவெகுண்டிவன்சேனையானையே. (௯௯)

* வாளியின்வரும்பரிமாவின்வண்குரத்
தூளிகள்விசும்புறத்துன்றியோங்கலா
லாளிகள்சிகரமென்றதிர்ந்துபாய்வன
மீளியர்வேலின்வாய்வீழ்ந்துமாய்ந்தவே. (௧௦௦)

* கார்தவழ்கொடுமுடிக்கானமால்வரை
வார்தவழ்முலையரமாதரார்செவி
தார்தவழ்தடம்புயத்தரணிமன்னவர்
தேர்தவழோதையிற்செவிடுபட்டவால். (௧௦௧)

* வரைநிலங்கழிந்தெறிமகரவாரிதித்
திரைநிலம்புகுந்தனன்சேனைசூழ்வரப்
புரைநிலங்கடந்தறம்புரியுநீர்மையா
னுரைநிலங்கடந்தசீருரைகொள்பேரினுன். (௧௦௨)

* ஒளிநலந்திகழ்வளையுறுங்குருகன்னிழற்
களிநறுஞ்சுரும்பிமிர்கண்டல்வேலிசூழ்
புளினமுங்கானலும்பொற்பநோக்கினு
னளினமும்புறந்தருநயனவேந்தனே. (௧௦௩)

‡ தனிதம் - ஒலி.

* பெருங் ‡ கடமலைக்குலம்பெயர்த்தும்வர்தன
மருங்கடர்பேரணைவகுக்கவேயென
விருங்கடகளிறுதேரெண்ணில்சேனைகண்
டருங்கடல்வாய்திறந்தலறியார்த்ததே. (க0ச)

நன்னெடுந்துறையெலாநாளிகேரமோ
டின்னெடும்பனங்கனியெடுத்தருந்தினர்
புன்னையின்புதுமலர்புனைந்துகைதையின்
மென்னிழல்வைகினர்விலாசவீரரே. (க0ரு)

* நாநலம்புனல்கெழுநாடுங்கானமு
மேனலம்புனக்கிரியிடமுநெய்தலங்
கானலுமிவ்வகைகடந்துகாவலன்
றானலந்திகழ்பதிதோன்றவெய்தினர். (க0சு)

* அத்தினபுரிதனக்கருகுவால்வளை
முத்தினநிலவெழமுகைக்குந்தாமரை
தொத்தினபொய்கையுஞ்சுரும்பருமலர்
கொத்தினசோலையுங்குறுகிவைகினர். (க0எ)

* மொட்டினம்பருமணிமுடிகொடேர்ப்பரி
வெட்டினபரிகளும்வெம்மையாறின
மட்டினபரிமளமரங்கள்யாவையுங்
கட்டினகளைபொருகவளயானையே. (க0அ)

* தரித்தனர்வீரருந்தத்தமாதருஞ்
சரித்தனர்சும்மைகடங்குபண்டியும்
பரித்தனநன்னிலப்படங்குவீடுகள்
விரித்தனரிடந்தொறும்வேந்தரெய்தினர். (க0கூ)

* கைவருதண்டுடைக்காளைவெஞ்சிலை
தைவருசெங்கையான் $ றுரைவெம்பரி
மெய்வருகுமரன்வேல்விடலைவேந்தனோ
டைவருமமர்ந்தனராண்மையேறனர். (கக0)

* மறத்திருந்தானையான்வஞ்சமெண்ணினு
னறத்திருந்திலனெனுவஞ்சியந்தவூர்
புறத்திருந்ததுவெனப்புனிதன்பாசறை
நிறத்திருந்ததுபிறநிகர்ப்பவில்லையே. (ககக)

* மீண்டவர்வரிசிலைவிதுரனேவலாற்
பூண்டவர்வரவுமுன்பணிந்துகூறவே
மாண்டவர்குறிப்புறுமாயவஞ்சகம்
பூண்டவர்களித்துமெய்ப்புளகமேறினர். (ககஉ)

‡ கடம் - மலைப்பக்கம். $ தாரை - கேரோடல்.

* தேசறையிடங்களுந்தேங்கொள்கானமு
மூசறைமதுகரமொய்த்தசோலையும்
வீசறல்வனநதிவிதமுமேல்கொளப்
பாசறையிருந்தவாபகரலாகுமோ. (௧௧௩)

* விருந்துறுசேனைவெவ்வீரரின்னமு
தருந்தினர்மெய்குளிர்ந்தசைவுதீர்தலும்
வருந்தினரிவர்துயில்வதியவேண்டுமென்
றிருந்தபனனுமிவர்க்கிரவுநல்கினன். (௧௧௪)

* மண்வளர்பெரும்புகழ்மன்னரைவரும்
பண்வளர்நல்லிசைப்பலமகீபருங்
கண்வளர்பாயைங்காணவெண்ணியே
விண்வளர்குபேரனும்விழைந்துதோன்றினன். (௧௧௫)

மருண்மிகுசுரும்பினமணந்தசோலையி
னிருள்களினிடையிடையெறித்தவெண்ணிலா
வருளுடைமைந்தர்தோளணைந்தமங்கையர்
புரிகுழனெகிழ்ந்தவெண்போதுபோலுமே. (௧௧௬)

கானிடைசிலசிலகடிகொடேனுமிழ்
தூநிறமுல்லைகண்மலர்ந்துதோன்றுமால்
வானிடைமுறைமுறைவளருமாமதி
மேனியினமிழ்துமிழ்விந்துவென்னவே. (௧௧௭)

* பொருவில்வெண்டுகில்கொடுபொதிந்ததென்னவே
பரிநெடுந்தேர்மிசைப்பானிலாவெழக்
கிரணவெண்படைக்கெதிர்கெடாமனின்றபே
ரிருளெனவிளங்கினயானைவெள்ளமே. (௧௧௮)

* பரியனகந்துகம்பரிந்துமாமதக்
கரிசிலபாகையுங்கைகடந்தென
வரிவையர்பலர்துயிலனந்தலோடுதஞ்
சுரிகுழன்மேகலைசோரவோடினர். (௧௧௯)

* நீடுறுதருக்களினிரைத்தமாவதன்
கோடிறவெறிந்துகைக்கொள்ளுமோதையான்
மாடுறுபொங்கர்வாய்வதிந்தபுள்வெரீஇப்
பேடொடுசேவன்மெய்பிரிந்துநோமால். (௧௨௦)

* ஊதையின்மரனசைவுறப்பொருவட
மோதுறுமுளையுடன்முடுகுவேட்டமாய்த்
தீதறுபரிசிலச்செல்வன்பாசறை
மாதிரமுறப்பலவாளிபோலுமால். (௧௨௧)

ஆடுவர்சிலர்சிலரைவர்வான்புகழ்
பாடுவர்சிலர்சிலர்பாயலின்புறக்
கூடுவர்சிலர்சிலர்கோதைமாதரோ
டூடுவர்சிலர்சிலரோதைவீரரே. (க௨௨)

* பஞ்சவர்வாழ்வுறுபதம்பொறுமையின்
வஞ்சகமியற்றுவான்மனங்கொலென்னவே
மிஞ்சியகுளிர்மதிமேற்பொருதிகற்
செஞ்சுடரவன்குணதிசையிற்றோன்றினன். (க௨௩)

வேறு.

* துயிலுணர்ந்துபைந்தொடையன்மார்பினன்
வெயிலெழுந்துதன்விரதமுற்றபின்
பயில்பெருஞ்சனம்பாசறைப்படுத்
தெயில்வளைந்தமாநகரியெய்தினன். (க௨௪)

* இரும்மருங்கினுமிளைஞர்நால்வருந்
தருமவல்லியுந்தானுமாகவே
யருமடங்கலேறனையவாண்மையான்
குரவனின்புறுங்கோயினண்ணினன். (க௨௫)

* சிந்தையன்புறச்செல்வவாயிலோர்
வந்தமைந்தர்தம்வரவுகூறவே
முந்தையேவலான்மொழியவுள்புகுந்
நந்தமீளிசேவடிவணங்கினர். (க௨௬)

* தம்பிமைந்தரைத்தழுவிநும்மையின்
றெம்பிகாணநல்வினையியன்றிலா
னும்பிமாரொடுமொத்துவாழ்கநீர்
நம்பியென்றுதன்னயம்விளம்பினன். (க௨௭)

* பாவைதன்செழும்பணிவுகூறலு
மேவிவாழ்கெனுமெய்களிக்கவே
தேவிதன்னுழைச்செல்கவென்றுகொண்
டேவிமைந்தரோடிவைவிளம்பினன். (க௨௮)

* கருமநீதிசேர்கல்விமந்திரம்
பெருமையாண்மைதாள்பீடுநீடுபேர்
தருமம்யாவுநின்றன்மையாதலா
லருமையின்றியேயரசுசெல்லுமே. (க௨௯)

* இகலெறிந்துநீராசசூயமா
மகமுழந்ததும்வண்மைசெய்ததுந்
திகையடங்கலுந்திறைகொணர்ந்ததுந்
தொகுதிகொண்டநின்றுணைவர்கூறினர். (க௩0)

* எண்டிசாமுகத்தெல்லையெங்கணுங்
கொண்டதாகுமுன்குருகுலத்துளோர்
துண்டியாமனுந்துணைவர்தம்மொடும்
பண்டுபோலமண்பரவவைகுவீர். (௧௩௧)

* சேணிருந்துநஞ்சீர்செவிப்படுத்
தியாணரன்புகூரினிமையின்றியே
பூணலம்பெறும்பொற்பொடுங்களைக்
காணுமாறுசெங்கண்படைத்திலேன். (௧௩௨)

* நேயமுண்டுபோனெஞ்சொடின்னசொற்
றாயமைந்தரைச்சொல்லிநீவிர்போ
யாயையும்பணிந்தெந்தைதாண்மலர்ச்
சேயபங்கயஞ்சேர்மினென்னவே. (௧௩௩)

* இருந்தமைந்தருமேவலோடுசென்
றருந்ததிக்குநேரன்னைதன்னையும்
பரிந்திறைஞ்சினார்பயிலவாழ்த்தினா
டிருந்துபூணினாள்சிறுவர்தம்மையே. (௧௩௪)

* முந்தவந்துதாண்முளரிகைதொழு
மந்தண்வல்லியுமைவர்மைந்தரும்
வந்துநிற்றலுமகிழ்வொடுன்னினாள்
குந்திசெய்தவங்கூறுமென்னவே. (௧௩௫)

* வேயைவென்றதோண்மின்னையங்குவைத்
தியாயையும்பணிந்தெழில்கொடோளினார்
போயகண்டமும்போற்றுகங்கையாள்
சேயையன்புடன்சென்றிறைஞ்சினார். (௧௩௬)

* வேந்தழைத்ததும்விதுரனேவலிற்
போந்தழைத்ததும்புகலவந்ததுந்
தாந்தழைக்கவேதந்தைதந்தைமுன்
றேந்தழைத்ததார்ச்செல்வர்கூறினார். (௧௩௭)

* புள்ளலங்கலார்புரிவுரைத்திடக்
கொள்ளவன்றிறற்குருகுலேசனுங்
கள்ளவஞ்சர்வெங்கருவிசெய்யினு
முள்ளதுண்டெனாவுண்மைகூறினான். (௧௩௮)

* தாதைதாதையைத்தாமகன்றபின்
கோதைவெஞ்சிலைக்குருவைமைந்தனைக்
கீதநான்மறைக்கிருபனைச்செழும்
* பாதகஞ்செய்தார்பரிவொடேகியே. (௧௩௯)

* பாதகம் - வணக்கம்.

* சதுரமாமறைத்தலைவர்தங்களா
லெதிர்மொழிந்தபோரசியெய்தியே
மதுரமன்றனுண்மாலைமன்னரும்
விதுரன்மந்திரமீளமன்னினர். (கசo)

* தமதின்மெய்யுறத்தம்மதாகவே
யமிழ்தருந்தியங்கவரிருந்தபின்
றிமிரநாசனன்செய்யமேனியன்
கமலநாயகன்கடலின்மூழ்கினன். (கசக)

* தினகரன்கரந்திகழ்கமண்டலம்
பனிகொள்செக்கர்தம்படமதாகவே
யினியவந்தனைக்கெறியும்வேலைசேர்
புனிதரொத்ததப்புன்கண்மாலையே. (கசஉ)

* காய்ந்தமெய்ச்செழுங்கதிரவன்கர
மேய்ந்தவப்பதத்தெழிலெறித்தலா
லாய்ந்துபத்திகொண்டடர்பசும்பொனல்
வேய்ந்ததொக்குமால்வேந்தன்மாடமே. (கசங)

* மன்குலத்துளோர்வஞ்சகஞ்செயா
ரென்குலத்துளோரென்கொலீதெனத்
தன்குலத்துளோர்தமைவிலக்கவோ
நன்குலத்துளோனுதயநண்ணினன். (கசச)

* குருகுலாதிபன்கொடியநெஞ்சமே
யிருணிரைந்ததென்றியாம்வெறுக்கவோ
மரபிலாதியாமதியுமெண்ணினுட்
கரியனென்னுமாகாண்ணலானதே. (கசரு)

* உண்ணிலாவுபேரொளிமழுங்கிநீள்
வெண்ணிலாவினல்வெளுத்தவெங்கணுங்
கண்ணிலான்மகன்கடுமையஞ்சியிம்
மண்ணிலார்வெளாவடிவமெய்தினர். (கசசு)

* விந்தைவாழ்வுகூர்விறன்மிகுத்ததோண்
முந்தையோதைமாமுரசுயர்த்தவன்
சிந்தைகாமுறத்தெரிவைவந்திளந்
தந்தைகோயிலிற்றுனும்நண்ணினள். (கசஎ)

* மங்குல்சுற்றுமாமண்டபத்திடைக்
கங்குலிற்றடங்கண்டுயின்றபின்
பொங்குலைப்படும்பொற்றசும்பெனச்
செங்குலக்கதிர்த்திகிரிதோன்றவே. (கசஅ)

* பாயன்மன்னுகண்படையுணர்ந்துளந்
தூயவன்பொலஞ்சுடர்பணிந்தபின்
சாயையன்னதன்றம்பிமாரொடுஞ்
சீயமென்னவேதிகழவைகினன். (௧௪௯)

* முனிவரர்க்கெலாமுதன்மையாகவே
தனதனிற்பெருந்தானமுய்த்திடும்
பனுவல்வித்தகப்பாவலர்க்கெலாங்
கனமெனத்தருங்கனகமாரியே. (௧௫0)

* கண்டுகண்டுதங்கழல்வணங்குமா
மண்டலேசருமாலைமன்னருங்
கொண்டுவாழ்வுறக்குரகதங்குடை
தண்டுசாமரந்தந்திரல்குமே. (௧௫௧)

* பூந்தண்மாமலர்ப்பூவைகொங்கைதோ
யேய்ந்துதோளினனிவணிருந்துழிப்
பாந்தளங்கொடிப்பார்மகீபனைச்
சேர்ந்தமன்னர்தஞ்செயல்விளம்புவாம். (௧௫௨)

வேறு.

விழுதுபோலனேகநூல்விதங்களிக்கவேதமா
மெழுதொணாததொன்மரத்தையாவருக்குநிகழ்செய்வான்
வழுதிநாடன்வேறுசெய்தமறைகளாயிரத்தையுந்
தொழுதுபாடுமுனிவர்வாய்மைதுளவவாசநாறுமே. (௧௫௩)

* தானுமாமனுங்குறித்ததம்பிமாருமங்கர்தங்
கோனுமாசிறந்தைதந்தைகொடுமரக்கைவிதுரனும்
வானுலாவுபுகழ்ப்படைத்தமைந்தனுந்துரோணனு
மேனையோரும்வந்துகூடியினிதிருந்தவெல்லையே. (௧௫௪)

* மண்டபத்தினழகுகாணமன்னரைவர்தம்மைநீ
கொண்டிமைப்பின்வருகவென்றுகொற்றவன்பணிக்கவே
வண்டுசுற்றுமாலைமார்பன்வண்பிராதிகாமிவா
னண்டர்கற்பமெனவிருந்தவரசர்தம்மையணுகினன். (௧௫௫)

* சென்றியாகபதிகழற்றிருப்பதம்பணிந்துகீழ்
நின்றுவாய்புதைத்தறங்கணிலைபெறுஞ்சொனீதியாய்
வென்றிவீரன்மண்டபத்தின்விரிவுகாணவேண்டுநீ
யென்றுகூறியேவிளின்றிங்கென்னையென்றியம்பினன். (௧௫௬)

* ராயசூயபன்னிதன்னையெந்தையில்லில்யாயொடும்
போயிருந்துவருகவென்றுபுரையிலாமனத்தினன்
சீயமன்னதுணைவரோடுசென்றுபுக்குநன்றியில்
பேயிருந்ததெனவிருந்தபீடிலானையெய்தினன். (௧௫௭)

* மன்னிருந்தபேரவைக்கண்வந்துமுந்தைவரிசையான்
முன்னிருந்ததாதைவமிசமுதல்வன்ஞானவிதுரனென்
றின்னிருந்ததலைவர்தாளிறைஞ்சிமுன்னரிட்டதோர்
மின்னிருந்தவாசனத்தின்மீதிருந்துவினவினன். (கரு௮)

* இந்தமண்டபஞ்சமைந்தவினிமைதன்னையென்சொல்வேன்
முந்தைமண்டபங்களுக்குமுதன்மையானதேவரு
ரந்தமண்டபத்துமில்லையதனையன்றிமண்ணின்மே
லெந்தமண்டபத்துமில்லையிதனினுள்ளவெழிலரோ. (கருகூ)

* எனவியந்துதருமராசனினிதியம்பயாளிவெஞ்
சினவிலங்கலென்னுமாறுசேரவந்தவிளைஞரு
மனுவிளங்குமுறைமையான்வணங்கிமன்னர்மன்னன்முன்
றனதனங்கிருப்பதென்னதவிசின்மீதுவைகினர். (கசுO)

* புரைகொள்பாவமேநிறைந்துபுண்ணியங்குறைந்துநீ
ணரகினூழிகாலம்வாழ்திநாகர்வாழ்வினுள்ளதுந்
தரணிமீதுபெறுகவென்றுதந்ததொக்கும்வானுளோ
ரரவவேறுயர்த்தவீரனன்றிருந்தபெருமையே. (கசுக)

* மாயமொன்றுமெண்ணலாமனத்தின்மிக்கமாமனு
நீயுமின்றுசூதுகொண்டுநிகழ்விலாசமயர்விரோ
வாயவென்றியையனில்லிலமுதமன்னபோனகம்
போயருந்துமளவுமிங்கிருந்துபோதுபோகவே. (கசுஉ)

* பீடெடுத்தவஞ்சராகிவெகுளிசெய்தல்பிறர்பெருங்
கோடெடுத்துரைத்தனண்புகொண்டயிர்த்தல்கொடியவெஞ்
சூதெடுத்துவிழைதலுற்றசூள்பிழைத்தலின்னவே
தீதெடுத்தநூலின்முன்புதீயவென்றுசெப்பினர். (கசுங)

* வாதுகொண்டுகாதல்கூருமாமனோடுவஞ்சனைச்
சூதுகொண்டுபொருதழிந்துதோல்வியெய்தவேண்டுமோ
தா துகொண்டுதேனிரங்குதாமமார்பநெஞ்சினீ
ரேதுகொண்டததுநமக்களிப்பனிம்பரென்னவே. (கசுச)

* ஒப்பிலாதவேள்விமன்னனுரையுணர்ந்துசகுனியுந்
தப்பிலாதகவறுருண்டதாயமெங்குமொக்குமால்
வைப்பிலாண்மையன்றிவேறுவஞ்சமில்லையுண்டெனச்
செப்பிலார்கொலிவனையாடவருகவென்றுசெப்புவார். (கசுரு)

* வேணுமாகில்வேணுமன்றிவிரகெனக்கழன்றுதா
ணுணுமாகில்விடுதியேநடக்கவென்றுநவிலுவீர்
பூணுமாகிலினிமையோடுபொருதுமற்றிருந்தநீர்
காணுமாறுநானுமின்றுகற்றவாறியற்றலாம். (கசுசு)

* நீடுகின் றதரும்நீ திநிருபகேள்விழைந்துநா
மாடுகின் றசூதில்வெற்றியழிவுநம்மிலொக்குமால்
வாடுகின் றமிடியர்போலவஞ்சமென் றுரைத்துநீ
யோடுகின் றதொட்டுகின் றவொண்பொருட்குலோபியோ. (௧௬௭)

* யானெறிந்தகவறுவெல்லினிசைவெனக்களித்திநீ
தானெறிந்தகவறுவெல்லினதினிரட்டிதருகுவேன்
றேனெறிந்துதேனுகர்ந்துதேனெடுக்குமாலையோ
யானெறிந்தகோலினர்போலவஞ்சல்வருதியாடவே. (௧௬௮)

* என்றுமாமனுற்றுரைப்பவிவைதமக்கவ்வவையில்வே
றொன்றுமாறுரைத்திடாதுதிட்டிரன்னிருக்கவும்
வென்றுமாறடர்க்கும்வாகைவிசையனும்வெகுண்டுளங்
கன்றுமாறுரைத்தனன்கொல்கன்னனென்னுமன்னனே. (௧௬௯)

* போதுபோகுமாறிருந்துபொருதும்வருதியென்னவுஞ்
சூதுபோருமஞ்சியேதொலைந்துமாந்துளங்குவாய்
மோதுபோரிலென்னனுய்தியினைஞரோடுமூடுகுதேர்
மீதுபோயுன்னகரிதன்னில்விரைவினெய்துகென்னவே. (௧௭௦)

* இல்லெடுத்துவிரகினோடுமெமையழைத்துமாயைசூர்
வல்லெடுத்துவருதலான்மறுத்தனன்மகீபனுஞ்
சொல்லெடுத்துவைதவாய்துணிப்பனென்றுகன்னன்மேல்
வில்லெடுத்தனன்பொருமல்வீரவாளிவிசையனே. (௧௭௧)

* ஏதிலாரினெம்பிநீயிருக்கவென்றிருத்திமுன்
காதிலாரென்னுடன்முனைந்துகண்விழிக்கவல்லபே
ரோதிலாண்மைகுன்றுமென்றுருத்தெழுந்துமாயநின்
சூதிலாடல்புரிதுமென்றுதருமனுந்தொடங்கினன். (௧௭௨)

* நின்னைவெல்லினொட்டம்யாவுநீகொடுக்கநீயிவன்
றன்னைவெல்லின்யான்விரைந்துதருவனென்றுதருமனைப்
பின்னைவெல்லொணாதெனப்பிணிப்புடன்மருட்டினன்
மின்னைவெல்லும்வெய்யசோதிவேலிராசராசனே. (௧௭௩)

* அவிர்பசும்பொன்மீளியாளியாசனத்திழிந்துபூந்
தவிசிலொன்றிடப்புகுந்துதருமன்வைகமாமனு
நவிரறுந்திசைப்புறத்துநன்னிலங்குறித்துநீள்
புவிபெறுங்கருத்தினோடிருந்தனன்பொருந்தவே. (௧௭௪)

* கவளமானபணையில்யாளிகால்வகுத்தபலகையிற்
பவளமானநீலமானகருவிமுன்பரப்பினர்
தவளமானகவறுகைதரித்துமெய்தரித்ததார்
துவளமானநிருபர்தம்மிலாடவேதொடங்கினர். (௧௭௫)

* ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்முத்
தாரம்வைத்துநீயுமாறழைக்கவென்னமாமன்மேல்
வாரம்வைத்தநெஞ்சினனும்வருகவென்றுமாமணிச்
சாரம் * வைத்தவலையமொன்றுதானுமுன்னர்வைக்கவே. (கஎசு)

* இருவருங்கவற்றினலெறிந்தபோதெறிந்தவா
ரொருவருங்குறிக்கலாவுபாயமாயிருத்தலான்
மருவரும்புயத்தலங்கன்மாமன்வெல்லமன்னருள்
வெருவருங்களிற்றினனுமேல்விருப்பமிஞ்சினன். (கஎஎ)

* வைத்தவாரமவனெடுக்கமாயவன்கொடுத்தனன்
மெய்த்தவாததேர்குறித்துமீளவும்பரப்பினன்
மொய்த்தவாசமாலைமார்பின்முடிமகீபன்மகிழ்தரப்
பொய்த்தவாடல்வல்லமீளிபொருதுவென்றிபுனையவே. (கஎஅ)

* தேர்கொடுத்தபின்னுமாறுசெப்பியுள்ளதேர்மதக்
கார்கொடுத்துமெண்ணிலாதகவனமாக்கொடுத்தும்
பார்கொடுத்துமரசுகூர்பதங்கொடுத்துமுரியதம்
மூர்கொடுத்துமதனினுள்ளமொழிவுராமலோடவே. (கஎகூ)

* வெங்கிராதவனமெரித்தவிசையனுக்குவிஞ்சைய
னங்கிராமகிழ்ந்தளித்தவாடன்மாவுமளகநீள்
பொங்கிராமணஞ்சிறந்தபோகமாதர்பலருமன்
றிங்கிராநரேசனுற்றவிசைவினலளிக்கவே. (கஅ௦)

* யாவையுங்கொடுத்திருப்பவிளைஞரோடுமெய்த்தவக்
கோவையுங்குறிக்கவென்றுகுருகுலேசன்மொழியவே
யீவையுங்குறித்துவெற்றியெய்தவெய்தவிவர்கடம்
வீவையுங்குறித்துவென்றிமேன்மையான்விளம்புவான். (கஅக)

* உன்னையுங்குறித்துவன்புரைத்ததம்பிமாரினந்
தன்னையுங்குறித்திசைந்துதருகவந்துபொருகெனப்
பின்னையுங்குறிப்புறுதுபொருதுகைபிழைக்கமே
லென்னையுங்குறிப்பெனமுன்கிரகினலியம்பினன். (கஅஉ)

* மெய்வருந்திறத்தினும்மைவெல்லுமாறுவேறலா
லைவருந்திருந்தவெங்களடிமையின்னராயினீர்
மைவருந்தடங்கண்வேள்விமாதுதன்னையொட்டிநீ
கைவருங்கவற்றினின்னமெறிகவென்றுகழறினன். (கஅந)

* அன்னபோதிலருள்விதுரனந்தனைப்புகன்றெழா
நின்னபோதமன்றிவேறுநிருபர்தாநினைப்பரோ
வின்னபோதுமோநமக்கியற்கையன்றிதென்றுநீ
சொன்னபோதுநேயமைந்தர்சொன்னசொன்மறுப்பரோ. (கஅச)

* சாரம்-திரவியம்.

* திருகுநெஞ்சின்வஞ்சராகியிளைஞர்தீமைசெய்தகா
லுருகுகின்றதாதைநீயுடன்படுத்திருப்பதோ
மிருகமன்றுபறவையன்றிரக்கமின்றிமேவுநின்
னருகுவந்தணைந்தகெதங்களறிவிலாமையாகுமே. (கஅரு)
* பின்பிறந்ததம்பிமைந்தர்பீடழிந்திரங்கவே
முன்பிறந்ததமையன்மைந்தர்மொய்ம்பினலடர்ப்பரோ
வன்பிறந்ததேனுநீதியழியநீநடத்தினு
லென்பிறந்துமுடியுமண்ணிலெண்ணில்காலமின்னுமே. (கஅசு)
* மரும ‡ மிஞ்சவிவனைவென்றவஞ்சமன்றிமற்றிவன்
றருமவஞ்சிநனையிசைந்துபொருதுமென்கைதருமமோ
கருமமன்றுனக்குநாசகாலம்வந்ததாகவிற்
பெருமதஞ்சமின்றிநெஞ்சுபேருமென்றுபேசினன். (கஅஎ)
* விதுரனேந்துநீதிகூறவிழியிலாமையன்றியே
வெதிரெனுங்கொலென்னுமாறுவிழியிலானும்வைகினன்
சதுர்புரிந்தசகுனிசொல்லையெதிர்புரிந்துதருமனு
மதிரவஞ்சமுதிரவந்தவருளிலானொடாடினன். (கஅஅ)
* காயமுற்றும்வஞ்சமேகலந்ததன்னகள்வன்மே
னேயமுற்றுநின்றதானுநிகர்பிடித்ததென்னவே
மாயமுற்றகவறுமந்தமாமன்வல்லபத்திலே
தாயமுற்றிடங்கொடாதுதருமனைச்சதித்ததே. (கஅகூ)
* இன்னதாயம்வேண்டுமென்றெறிந்தபோதுமற்றவன்
சொன்னதாயமேபுரண்டுசோர்விலாமல்வருதலிற்
றன்னதாயவரசுவாழ்வுதரணிமன்னனல்கினு
னன்னதாயபோதுநெஞ்சசைந்திலானசஞ்சலன். (ககூ0)

வேறு.

* முரசினையுயர்த்தகோமான்மொழிந்தனமுழுதுந்தோற்றுப்
பரசுவதொன்றுமில்லாப்பான்மையோடிருந்தகாலை
விரைசெறியலங்கல்சோரமெய்குலைந்துள்ளம்வெம்பி
யரசவையிருந்தோர்தம்மிலருளினலழிந்துநொந்தார். (ககூக)
* குருமரபுடையவேந்தன்கொடியனேகொடியனென்பார்
மருமகனுயிருக்கிந்தமாமனேமறலியென்பார்
தருமனித்தனைநாட்செய்ததருமமும்பொய்யோவென்பா
ருருமினுங்கொடியவீமனுருத்தினியெழுமோவென்பார். (ககூஉ)
* பாந்தளேறுயர்த்தவேந்தன்பார்த்திலனுறவுமென்பார்
மாய்ந்தவேயறமுந்தேசுமனுநெறிவழக்குமென்பார்
பூந்தழற்பிறந்தபாவைபுண்ணியம்பொய்யாதென்பார்
சேர்ந்தனனிருகண்பாரீர்தேவர்கோன்மதலையென்பார். (ககூஙு)

‡ மருமம் - இரகசியம்.

* ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்முத்
தாரம்வைத்துநீயுமாறழைக்கவென்னமாமன்மேல்
வாரம்வைத்தநெஞ்சினனும்வருகவென்றுமாமணிச்
சாரம் * வைத்தவிலையமொன்றுதானுமுன்னர்வைக்கவே. (கஎசு)

* இருவருங்கவற்றினலெறிந்தபோதெறிந்தவா
ஞெருவருங்குறிக்கலாவுபாயமாயிருத்தலான்
மருவரும்புயத்தலங்கன்மாமன்வெல்லமன்னருள்
வெருவருங்களிற்றினனுமேல்விருப்பமிஞ்சினன். (கஎஎ)

* வைத்தவாரமவனெடுக்கமாயவன்கொடுத்தனன்
மெய்த்தவாததேர்குறித்துமீளவும்பரப்பினன்
மொய்த்தவாசமாலைமார்பின்முடிமகீபன்மகிழ்தரப்
பொய்த்தவாடல்வல்லமீளிபொருதுவென்றிபுனையவே. (கஎஅ)

* தேர்கொடுத்தபின்னுமாறுசெப்பியுள்ளதேர்மதக்
கார்கொடுத்துமெண்ணிலாதகவனமாக்கொடுத்துமப்
பார்கொடுத்துமரசுகூர்பதங்கொடுத்துமுரியதம்
மூர்கொடுத்துமதனினுள்ளமொழிவுராமலோடவே. (கஎகூ)

* வெங்கிராதவனமெரித்தவிசையனுக்குவிஞ்சைய
னங்கிராமகிழ்ந்தளித்தவாடன்மாவுமளகநீள்
பொங்கிராமணஞ்சிறந்தபோகமாதர்பலருமன்
றிங்கிராநரேசனுற்றவிசைவினலளிக்கவே. (கஅ0)

* யாவையுங்கொடுத்திருப்பவிளைஞரோடுமெய்த்தவக்
கோவையுங்குறிக்கவென்றுகுருகுலேசன்மொழியவே
யீவையுங்குறித்துவெற்றியெய்தவெய்தவிவர்கடம்
வீவையுங்குறித்துவென்றிமேன்மையான்விளம்புவான். (கஅக)

* உன்னையுங்குறித்துவன்புரைத்ததம்பிமாரினந்
தன்னையுங்குறித்திசைந்துதருகவந்துபொருகெனப்
பின்னையுங்குறிப்புறுதுபொருதுகைபிழைக்கமே
லென்னையுங்குறிப்பெனமுன்விரகினுலியம்பினன். (கஅஉ)

* மெய்வருந்திறத்தினும்மைவெல்லுமாறுவேறலா
லைவருந்திருந்தவெங்களடிமையின்னராயினீர்
மைவருந்தடங்கண்வேள்விமாதுதன்னையொட்டிநீ
கைவருங்கவற்றினின்னமெறிகவென்றுகழறினன். (கஅங)

* அன்னபோதிலருள்விதுரனந்தனைப்புகன்றெழா
நின்னபோதமன்றிவேறுநிருபர்தாநினைப்பரோ
வின்னபோதுமோநமக்கியற்கையன்றிதென்றுநீ
சொன்னபோதுநேயமைந்தர்சொன்னசொன்மறுப்பரோ. (கஅச)

* சாரம்-திரவியம்.

* திருகுநெஞ்சின்வஞ்சராகியிளைஞர்தீமைசெய்தகா
லுருகுகின்றதாதைநீயுடன்படுத்திருப்பதோ
மிருகமன்றுபறவையன்றிரக்கமின்றிமேவுநின்
னருகுவந்தணைந்ததெங்களறிவிலாமையாகுமே. (க௲ரு)

* பின்பிறந்ததம்பிமைந்தர்பீடழிந்திரங்கவே
முன்பிறந்ததமையன்மைந்தர்மொய்ம்பினலடர்ப்பரோ
வன்பிறந்ததேனுநீதியழியநீநடத்தினு
லென்பிறந்துமுடியுமண்ணிலெண்ணில்காலமின்னுமே. (க௲சு)

* மருமம ‡ மிஞ்சவிவனைவென்றவஞ்சமன்றிமற்றிவன்
றருமவஞ்சிநனையிசைந்துபொருதுமென்கைதருமமோ
கருமமன்றுனக்குநாசகாலம்வந்ததாகலிற்
பெருமதஞ்சமின்றிநெஞ்சுபேருமென்றுபேசினன். (க௲எ)

* விதுரனேந்துநீதிகூறவிழியிலாமையன்றியே
வெதிரெனுங்கொலென்னுமாறுவிழியிலானும்வைகினன்
சதுர்புரிந்தசகுனிசொல்லையெதிர்புரிந்துதருமனு
மதிரவஞ்சமுதிரவந்தவருளிலானொடாடினன். (க௲அ)

* காயமுற்றும்வஞ்சமேகலந்ததன்னகள்வன்மே
னேயமுற்றுநின்றுதானுநிகர்பிடித்ததென்னவே
மாயமுற்றகவறுமந்தமாமன்வல்லபத்திலே
தாயமுற்றிடங்கொடாதுதருமனைச்சதித்ததே. (க௲௯)

* இன்னதாயம்வேண்டுமென்றெறிந்தபோதுமற்றவன்
சொன்னதாயமேபுரண்டுசோர்விலாமல்வருதலிற்
றன்னதாயவரசுவாழ்வுதரணிமன்னனல்கினு
னன்னதாயபோதுநெஞ்சசைந்திலானசஞ்சலன். (க௲௰)

வேறு.

* முரசினையுயர்த்தகோமான்மொழிந்தனமுழுதுந்தோற்றுப்
பரசுவதொன்றுமில்லாப்பான்மையோடிருந்தகாலை
விரைசெறியலங்கல்சோரமெய்குலைந்துள்ளம்வெம்பி
யரசவையிருந்தோர்தம்மிலருளினலழிந்துநொந்தார். (க௲௰க)

* குருமரபுடையவேந்தன்கொடியனேகொடியனென்பார்
மருமகனுயிருக்கிந்தமாமனேமறலியென்பார்
தருமனித்தனைநாட்செய்ததருமமும்பொய்யோவென்பா
ருருமினுங்கொடியவீமனுருத்தினியெழுமோவென்பார். (க௲௰உ)

* பாந்தளேறுயர்த்தவேந்தன்பார்த்திலனுறவுமென்பார்
மாய்ந்தவேயறமுந்தேசுமனுநெறிவழக்குமென்பார்
பூந்தழற்பிறந்தபாவைபுண்ணியம்பொய்யாதென்பார்
சேந்தனனிருகண்பாரீர்தேவர்கோன்மதலையென்பார். (க௲௰௩)

‡ மருமம் - இரகசியம்.

* பழியுடைத்தந்தையொன்றும்பகர்கலாதிருக்குமென்பார்
விழியுடையவரையன்றேமேன்மையோர்வெறுப்பதென்பார்
ரழியுமேயிவனுன்மைந்தரரும்பெருஞ்செல்வமென்பார்
வழிவழியாகநிற்கும்வசையிவன்புரிந்ததென்பார். (௧௯௪)

* இன்னனதரணிவேந்தரிருந்துழியிருந்துகூற
மன்னனுந்தம்பிதானுமாமனுமாருவன்மைக்
கன்னனுந்தம்பினெண்ணிக்கங்கைமாமகனைநோக்கிப்
பன்னகதுவசன்கேட்டோர்பலருமெய்பனிக்கச்சொன்னான். (௧௯௫)

* தண்ணியதருமன்செய்தபாவமோசகுனிசெய்த
புண்ணியநெறியோவந்தப்பொதுமகள்யாகசாலை
நண்ணியதவறேமற்றைநால்வருந்தகைமைகூர
வெண்ணியமதியோவெண்ணினிங்ஙனம்விளைந்ததென்றான். (௧௯௬)

* தகாமொழிதலைவன்கூறத்தவத்தினுயர்ந்தகோவு
நகாமரபியற்கையன்றுநம்மினும்புன்மைகூறன்
மிகாதினிநிகழ்ந்தசெற்றம்விடுகெனசெவியிற்சற்றும்
புகாதுளம்வெகுளிகூரப்புரிந்தனன்போதமில்லான். (௧௯௭)

* இரங்கிநின்றுருகுநெஞ்சினிளையதன்பிதாவைநோக்கி
யரங்கடிசமரவேலானழல்பொழியுருமிற்சொல்வா
னுரங்குடியிருந்ததோளானுரிமையினெமக்குத்தோற்ற
துரங்கமுங்களிறுந்தேருந்துறைதுறைகவரச்சொற்றி. (௧௯௮)

* தொல்லைமாநகருநாடுந்தோரணநாட்டச்சொற்றி
யெல்லையினிதிகளெல்லாமிம்பரேயெடுக்கச்சொற்றி
நல்லெழின்மடவார்தம்மைநம்பதியெய்தச்சொற்றி
சொல்லியவினைஞர்தாமுந்தொண்டினராகச்சொற்றி. (௧௯௯)

* இவர்தமக்குரியளாகியாகபத்தினியுமான
துவரிதழ்த்தவளமூரற்சுரிகுழறன்னையின்னே
யுவறலைப்புணரியாடையுலகுடைவேந்தர்காணக்
கவர்தரப்புகறியென்றான்கண்ணருள்சிறிதுமில்லான். (௨00)

* அறந்தருமைந்தன்றன்னையறனலாதியற்றிநம்பி
திறந்தருசெல்வம்யாவுந்தீமையிற்கவர்தலுற்றாய்
மறந்தருவலியுமன்றுமணந்தருவாழ்வுமன்று
நிறந்தருபுகழுமன்றுநெறிதருமதியுமன்று. (௨0௧)

* திருத்தகமொழிந்தவெல்லாஞ்செய்தனையெனினுஞ்செவ்வி
மருத்தகுதெரியன்மாலைமாசிலாமன்னர்முன்ன
ருருத்தகுகற்பினளையுரையலாதுரைக்குமாற்றங்
கருத்தினினினையல்கண்டாய்கடவுளர்கற்பம்வாழ்வாய். (௨0௨)

* விண்ணிலங்கருகித்தோன்றுமேதகுவடமீனன்றி
மண்ணிலங்குவமைசொல்லமடந்தையர்யாருமில்லாப்
பண்ணலங்கடந்தமென்சொற்பாவையைப்பழிக்கநீயின்
றெண்ணின்முன்கேட்டவார்த்தைக்கேற்றதுன்னெண்ணமென்றான். ()

* கேட்டசொல்வினவுநாககேதனன்கேட்பமீண்டும்
வாட்டமிலன்பினோடுமெனங்கனிந்துருகிவீழ
நாட்டமுநன்னீர்மல்கநாவமிழ்தூறப்பின்னுங்
கோட்டமில்சிந்தையானுங்குரிசிலுக்குரைக்கலுற்றான். (உ0ச)

* தானவராகியும்மைத்தனித்தனியிறந்தோர்யாரு
மானவராகியிம்மைவந்தனரிம்பரென்றே
தானவர்பொறைபொறுமற்றராதலமென்னுஞ்செங்கண்
மானவராகவேதமலர்முனிதனக்குச்சொன்னாள். (உ0ரு)

* நான்முகன்றானுமேனைநாகருநாகர்கோனும்
பான்முகந்தெரியம்வேலைப்பாம்பணைப்பள்ளிகொள்ளுந்
தேன்முகங்களிக்கும்பச்சைச்செவ்விவண்டுளபமாலை
மான்முகங்கண்டுகூறவந்தவாமாலுங்கேட்டான். (உ0சு)

* மின்னிடைவிளங்குமேகமேனியானவனிமானை
நின்னிடைவந்துதோன்றுதிருபரானவரையெல்லா
முன்னிடைகடையொன்றின்றிமுற்றும்வெம்முரண்கொள்காலன்
றன்னிடைவிடுதுமென்றுசாற்றியேதளர்வுதீர்த்தான். (உ0எ)

* அந்தவன்றிகிரியானுநம்பிலோரரசனாகி
வந்தவதரித்தானென்றுமண்ணெலாம்வார்த்தையான
தெந்தவல்வினையாலெவ்வாறெய்துமென்றிதற்கேசால
நொந்துகண்டுயில்பெறாதேனோதகப்புரிந்தேன்மன்னோ. (உ0அ)

* ஒருதிறத்தவனிமுற்றுமொருமையாற்புரக்குநீவி
ரிருதிறத்தவறுநும்மிலிகலுறுமனத்திரானால்
வருதிறத்தானைவேந்தர்வகைபடக்குழூஉக்கொண்டோடிப்
பொருதிறப்பதற்கேசற்றும்புரிவிலீர்புரிகின்றீரே. (உ0கூ)

* என்றவனுரைப்பத்தானுமெறிந்துகைகைகொண்டாடி
யன்றவனிதயம்வெம்பவவமதிபலவுங்கூறி
நின்றவனொருவன்றன்னைநீநனிவிரைவினோடிச்
சென்றவணிருந்தகோலத்தெரிவையைக்கொணர்தியென்றான். (உகo)

* பெருந்தகையேவலோடும்பிராதிகாமியுமங்கேகி
வருந்தியமனத்தனாகிமாசறுமரபின்வல்லி
யிருந்துழியெய்துறுமலிடைவழிநின்றுமீள
விரைந்தனனோடிவந்துவேந்தனுக்கேற்பச்சொன்னான். (உகக)

## வேறு.

* என்னைத்தோற்றுமனுநெறிகூரிசையோன்றன்னைத்தோற்றனனோ
தன்னைத்தோற்றுத்தனதுமனத்தளர்வாலென்னைத்தோற்றனனோ
முன்னைத்தோற்றுத்தோற்றபொருள்முற்றுங்கவருமுறையன்றிப்
பின்னைத்தோற்றபொருள்கவரப்பெறுமோநினைக்கப்பெருதென்றாள். (உகஉ)

* செல்வப்பாவைதிருவுள்ளமிதுவென்றந்தத்தேர்ப்பாகன்
சொல்லப்பாவிதரியாமற்றுச்சாதனனைமுகநோக்கி
யல்லற்பான்மைபெற்றழிந்தவைவற்கொருத்தியாகியவம்
மல்லற்பானல்விழியாளைமன்பேரவையினழையென்றான். (உகங)

* நோன்றார்வெங்கட்கடகளிற்றுநுழைவேலரசனுவறலுமே
யான்றார்கேழ்க்கிற்செவிபுதைக்குமழல்கால்வெஞ்சொல்லறனில்லான்
றோன்றாநயனத்துணைவனைப்போற்றுணைக்கண்டுகிலிற்சூழ்ந்திருந்த
வீன்றாளில்லத்திருந்தாளையிகலோடெய்தியிவைசொல்வான். (உகச)

* தானேசூதுபொருதழிந்துதலைவன்றனக்குன்பதியான
கோனேசொல்லியாவையுமுன்கொடுத்தான்கொடுத்தபின்னிசைவு
யானேயென்றும்வீமன்முதலினையோரென்றுமென்வேள்வி
மானேயென்றுங்குறித்திழந்தான்வழக்கால்வென்றேம்வருவாயே. (உகரு)

* பொன்னைச்சிரிக்கும்பூங்கோயிற்புனல்வாவியிலன்றெங்கள்குல
மன்னைச்சிரித்தசெங்கனிவாய்மாறுதிரங்கியழுதரற்ற
மின்னைச்சிரிக்குநுண்ணிடையாய்வேந்தற்கெதிருன்மெய்க்கணவன்
றன்னைச்சிரிக்கவிருக்கின்ற * சளநீகாணத்தரியாயே. (உகசு)

* தலத்துக்கியையாதைவரையுந்தழுவித்தழுவித்தனித்தனியே
நலத்துப்பொய்யேமெய்போலநடிக்குஞ்செவ்விநலனுடையாய்
குலத்துப்பிறந்தாயாமாகிற்கூசாதென்பின்போதுகெனப்
பெலத்திற்செங்கைமலர்தீண்டிப்பிடித்தான்சூழ்ச்சிமுடித்தானே. (உகஎ)

* சிலைவாயங்கையவன்றீண்டச்செல்லாளாகியல்லலுழந்
துலைவாயழல்போனெடிதுயிராவுள்ளந்தளராவுளநடுங்காக்
கொலைவாயெயினர்கொல்லுநிலங்குறித்துச்செறித்தகொடியநெடு
வலைவாயொருதானகப்பட்டமான்போன்மாமிமருங்குற்றாள். (உகஅ)

* பூவார்குழலிதளர்வொடுதன்புறஞ்சேர்பொழுதுஞ்சிறிதிரங்கா
ணீவாவென்றேயருகிருத்திநெடுங்கண்பொழியுநீர்துடையாண்
மேவாரல்லர்தமரழைத்தான்மேலுன்கருத்துவிளம்பிவரப்
பாவாயஞ்சாதேகென்றாள்பலபாதகரைப்பயந்தாளே. (உககூ)

* தண்டார்விடலைதாயுரைப்பத்தாய்முன்னனுகித்தாமரைக்கைச்
செண்டாலவள்பைங்குழல்பற்றித்தீண்டாணுகிச்செல்கின்றான்
வண்டார்குழலுமுடன்குலையமானங்குலையமனங்குலையக்
கொண்டாரிருப்பரென்றுநெறிக்கொண்டாளந்தோகொடியாளே. (உஉ௦)

* சளப் - கடுக்கம்.

சூழுங்கனல்வாயுருமன்றித்துளிவாய்முகிலுமகிதலத்து
வீழுங்கொல்லோவுற்பாதம்விரைவிற்றென்றேவெரூஉக்கொள்ளத்
தாழும்பெரியகரியகுழறுரோடலையத்தழீஇக்கொண்டு
வாழுஞ்சுரும்புசுழன்றரற்றமண்மேலிழுத்துவருகின்றான். (உஉக)

தழலோவென்னுங்கற்புடையதனிநாயகிதன்றமைநறுங்
குழலோவுரகக்கொடிவேந்தன்குலமோகுலைந்ததிவணென்பார்
நிழலோபுவிக்குநெருப்பன்றேநெறியொன்றில்லாநீடுபொலங்
கழலோன்மதிவெண்குடையென்பார்கையாற்கண்டகண்புடைப்பார். (உஉஉ)

காட்டுந்திறல்வெஞ்சிலைவிசையன்கையால்வகிர்ந்துகடிகொண்மலர்
சூட்டும்பனிச்சைவண்புழுதித்துகளேறியதென்றழுதுநைவார்
மீட்டுந்தடாமலேகென்றுவிட்டாண்மைந்தரிட்டவினை
கேட்டுங்கொடியள்காந்தாரிகிளையோடின்றேகெடுமென்பார். (உஉ௩)

*;இரும்போநெஞ்சிம்மாமனிதற்கிசைந்தானுக்கவிருந்தென்பார்
பெரும்பேரரசர்பெண்ணுடனேபிறந்துஞ்சிறப்பெறாரென்பார்
பொரும்போர்வீமன்பொறுத்தாலும்பொற்றேர்விசயன்பொறானென்பா
ரரும்போரரசர்தகாதென்றால்வருமோவிந்தவழியென்பார். • (உஉ௪)

* என்னேகுடியிற்பிறந்தாருக்கிருப்பன்றிவ்வூரினியென்பார்
முன்னேயோடிமுறையிட்டான்முனியுங்கொல்லோவெமையென்பார்
பின்னேயிரங்கியழுதழுதுபேதுற்றின்னல்பெரிதுழப்பா
ரன்னேதுன்பங்களோர்ந்தின்பமாவாயென்றேயருள்புரிவார். (உஉ௫)

* பறைவன்களிற்றுப்பலபுரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்க்
கிறைவன்பாவையாங்காணவிவையோபடுவதென்றுறைப்பார்
பொறைவண்சிந்தைத்தருமனுக்குப்பொய்ச்சூதறிந்தும்பொரவென்ன
குறைவந்ததுதன்விதிவலியாற்குறைந்தான்யாவுங்கொடுத்தென்பார். (உஉ௬)

* நெடுமாநகரிற்சனமனைத்துநேயம்பெறக்கண்டிவைகூற
வடுமாமரபிற்குறத்தேடுமன்பேரவையின்முன்புக்காள்
கொடுமாமலர்க்கண்புனல்சோரக்குலைந்தேகிடந்தகுழல்சோரத்
தடுமாறுள்ளந்தனிசோரத்தலைநாளளித்ததழல்போல்வாள். (உஉ௭)

* நாணேமுதலாநாற்குணனுநண்ணுங்கற்புநயந்தணிந்த
பூணேயனையாளழுதரற்றிப்புன்பேரவையிற்புகுஞ்சோகங்
காணேமென்றுநிலனோக்கிக்கதிர்வேனிருபரிருந்திரங்கக்
கோணேர்பாடாயிருந்தான்குருடென்றுரைக்குங்கொடியோனே. (உஉ௮)

* மேகங்குருதிபொழிந்தகல்வான்மீனும்பகலேமிகவிளங்கிப்
பூகம்பமுமுற்றுற்பாதம்போதியாவும்புரிந்தனவா
னுகம்புனைபொற்றுவசனுடனவிலாநின்றநால்வருமே
சோகம்பிறவாதிருந்தார்மற்றெல்லாரிந்தார்யாருஞ்சோகித்தார். (உஉ௯)

* வீமன்கதைமேற்கைவைக்கவிசையன்சிலைமேல்விழிவைக்கத்
தாமம்புனைதோளிளையோருந்தத்தங்கருத்திற்சினமூட்டத்
தூமம்படுசெந்தழலவியச்சோனைமேகஞ்சொரிவதுபோ
னாமந்தருமன்னனத்தக்கோனிளையோராறநவிலுற்றான். (௨௬௦)

* தேம்போதனைத்துமெய்சாயுஞ்சிலபோதலருஞ்சிலபோது
வேம்போதங்குவாழ்வவெல்லாம்வெங்கானுடனேவேவாவோ
வாம்போதாகுமதுவன்றியாயபொருள்களம்முறையே
போம்போதனைத்தும்போமுன்னம்பொறுத்தீரின்னம்பொறுமென்றான். ( )

வாருங்கண்ணீர்வளர்கொங்கைவரைமேலருவியெனவீழத்
தாருங்குழலுமின்னுடனேதலஞ்சேர்கொண்டலெனவீழக்
கூருந்துயரினுடன்வீழ்ந்துகோகோவென்றுகோச்சபையிற்
சோருங்கொடியைமுகநோக்கித்துச்சாதனன்மெய்சுடச்சொன்னான். (௨௬௨)

* மன்வந்திருந்தசங்கத்துன்மாமனிருந்தானைவருமுன்
முன்வந்திருந்தார்முன்கொண்டமுறையான்முயங்குமுடிவேந்தர்
மின்வந்தனையநுண்ணிடையாய்விழிநீர்சொரிந்துமெலியவுனக்
கென்வந்ததுகொல்பொதுமகளிர்க்கரிதோவிழிநீரெளிதென்றான். (௨௬௩)

* பொல்லாவசையேபுகழ்பூணப்புல்லன்புகலவிதற்கொன்றுஞ்
சொல்லாதிருந்தபேரவையைத்தொழுதாளழுதாள்சோர்வுற்றாண்
மல்லார்திண்டோண்மாமாவேமந்தாகினியாண்மதலாயோ
வெல்லாநெறியுமுணர்ந்தவருக்கிதுவோமண்ணிலியல்பென்றாள். (௨௬௪)

* இன்னற்படுஞ்சொற்பாஞ்சாலியிரக்கந்தனைக்கண்டிரக்கமுறா
மன்னற்கிளையோய்தவறுரைத்தல்வழக்கோவடமீனனையாளை
யென்னக்கழறிநீயுரைத்தவெல்லாமரசற்கியம்பென்றான்
முன்னர்ப்புகலுங்குருகுலத்தோர்முதலாம்வாய்மைமொழியோனே. (௨௬௫)

* மன்றோற்றனன்வெஞ்சூதாகில்வழக்காற்கொண்மின்மன்னவையின்
முன்றோற்றனனோவென்னையுந்தான்முன்னேயிசைந்துதனைத்தோற்ற
பின்றோற்றனனோகரியாகப்பெரியோருண்மைபேசுகென
மின்றொற்றனையநுண்ணிடையாள்விழிநீர்வெள்ளமிசைவீழ்ந்தாள். (௨௬௬)

* மையோடரிக்கண்மழைபொழியவாடுங்கொடியின்மெழிக்காகார்
வெய்யோனெண்ணந்தனக்கரகார்விறல்வேல்வேந்தர்வெரூஉக்கொண்டு
பொய்யோவன்றுமெய்யாகப்புனையோவியம்போலிருந்தாரை
யையோவந்தக்கொடுமையையாமுறைக்கும்பொழுதைக்கதிபாவம். (௨௬௭)

* அல்லார்கூந்தல்விரித்தமயிலனையாளரற்றவதற்கொன்றுஞ்
சொல்லாதூமர்கணம்போலத்தொல்போர்வேந்தர்சூழ்ந்திருப்ப
மல்லார்தடந்தோள்விகருணனும்வாய்மைக்கடவுள்வாள்வேந்தீர்
பொல்லாநெறியிலனைவீரும்போகாவண்ணம்புகல்வீரே. (௨௬௮)

* முறையோவென்றென்றவனிதலமுழுதுமுடையான்முடித்தேவி
நிறையோடழிந்துவினவவுநீர்நிறைவுற்றிருந்தீர்நினைவற்றோ
விறையோன்முனியுமெனநினைந்தோவிருந்தாலுறுதியெடுத்தியம்பல்
குறையோகண்கண்டதுநாளுங்குலத்துப்பிறந்தோர்கூறுறோ. (௨௩௯)

* தன்னெறியில்லாநெறித்தருமன்றனவென்றுரைக்கத்தக்கவெல்லா
முன்னேதோற்றுத்தங்களையுமுறையேதோற்றுமுடிவுற்றான்
சொன்னேருரைக்கிற்றான்பிறர்க்குத்தொண்டாய்விட்டுச்சுரிகுழலைப்
பின்னேதோற்கவுரிமையினாற்பெறுமோவென்றுபேசீரோ. (௨௪௦)

* என்னுமன்னர்முகநோக்கியெல்லாரிதயங்களுமகிழச்
சொன்னாளெவருந்தக்கோனென்றவனுக்கொருபேர்சூட்டியபி
னன்னுமனத்தோடழன்மூளநயனஞ்சிவக்கநஞ்சின்வடி
வன்னாளிளவன்முகநோக்கியருக்கன்குமரனறைகின்றான். (௨௪௧)

வேறு.

* இருக்கின்றதரணிபரினின்னறிவாலுயர்ந்தனையோவிராசநீதி, குருக்கொண்டுமுதிர்ந்தனையோ நினையொழிந்தால்வழக்கொருவர் குறிப்பாரற்றோ, மருக்கொண்டதொடைமுடியாய் மொழிகெனநின்னுடன்கேட்க வந்தாருண்டோ, வுரைக்கும்போதெவருடனுமுணர்ந்தன்றோவுரைப்பதெனவுருத்தான் மன்னோ. (௨௪௨)

* தான்படைத்தபொருளனைத்துந் தம்பியர்களுடன்றோற்றுத்தனையுந்தோற்றா
மீன்படைத்தமதிமுகத்தாளிவன்படைத்ததனமன்றிவேறேகொல்லோ [ன்
வான்படைத்தநெடும்புரிசைமாநகருந்தனதில்லும்வழங்குமாயின்
யான்படைத்தமொழியன்றேயெங்கணுமில்லெனப்பட்டாளில்லாளன்றோ. ()

* மைக்கோதில்கலையுடையன்மதியுடையன்பொறையுடையன்வரிசையாகத்
தக்கோனென்றரசரெலாமுரைத்தபெயரிவன்றனக்கேதக்கதம்மா
மிக்கோர்மற்றுங்களைப்போல்வேறுண்டோமகிதலத்துவேந்தராகித்
தொக்கோர்யானுவன்றமொழிக்கெதிர்மொழியுண்டாமாகிற்சொல்லுவீரே. ()

* என்னவெகுண்டிடுகின்றவெல்லைதனிலெழுவுறழ்தோளிராசராசன்
றன்னனையகொடுங்கோபத்தம்பியையின்றும்பிதனைத்தக்கோனென்ற
மன்னவையினெதிரேயிம்மானமிலாவைவரையும்வழக்குவார்த்தை
சொன்னகிளிமொழியினையுந்துகிலுரிதியெனவுருமிற்சொன்னான்மன்னோ. ()

அவ்வளவில்விதுரன்மனமழலேறவிழிசிவந்தாங்கலங்கன்மோலிச்
செவ்வியொளிவாண்முகஞ்சேர்தினகரன்மைந்தனையேறத் தெழித்துநோக்கித்
திவ்வியநூல்களையுணர்ந்துமரசவையினழிவழக்குச்செப்பாநின்றாய்
கைவருநன்னெறிபிழைத்தோர்தாமேகொல்குரவரெனக்கடவரம்மா. (௨௪௬)

பொய்க்கரிசொற்றவருமவையிடத்தொருவர்சார்பாகப்புகல்கின்றாரு
மைக்கடலினிறையானவருணபாசப்பிணியான்மாழ்கிமாழ்கி
யெக்காலுந்துயருறமானரகினிடைப்புகுவரெனவியம்பாநிற்குந்
தக்கமனுநெறிபிழைத்தாய்விகர்ணனுரைத்திடுசரதந்தனையுநீத்தாய். (௨௪௭)

முன்னாளினிரணியன்கான்முளையளித்தவிரோசனனோர்முனிவன்மைந்தன்
றன்னோடுநண்பாகியிருவருமோர்தேசிகன்பாற்சார்ந்துகேள்வி
துன்னுயகலைகளெலாஞ்சோர்வறவேயுணர்ந்திருக்குந்தொன்மைதன்னிற்
பின்னுகவோர்நகரிற்பெண்கொடியைக்கண்டுமணம்பேசினாரே. (உ௪அ)

தனித்தனியேயிவரிருவர் தத்தமக்கென் றக்கொடிதோட்சார்வான்பேச
மனத்தினவளோர்ந்தும்மில றிவுயர்ந்தோர் தனைவரைந்துமருவவென்றாள்
புனக்கிளிபோன் றவளாசைப்புணரிகடந்திலராகிப்புந்திதாங்கி
நனித்தமதுகலையறிவினானீயென் றிவர்விதண்டைநவிலலானார். (உ௪௯)

தேக்கியநல்லறிவனைத்துஞ்சேர்ந்துடலாயவதரித்தபிரகலாதன்
மீக்குயர்கேள்வியனவனேயிருவருக்குமுள்ளபடிவிளம்புவானென்
றாக்கமுடைமுனிமகனும்விரோசனனுமொருப்பட்டேயுவன்பாலெய்தி
வாக்கதனால்வந்தபடியுணர்வித்தேதகற்றவெலாம்வயங்கச்சொற்றார். (உ௫0)

தனதுதிருமகனென்றும்பிறமுனிவனளித்தமகன்றானேயென்று
மனதுதனிலிரண்டறியானிவர்கல்விதெளிந்துரைக்கமாட்டானாகிப்
புனிதமுனிக்காசிபன்றன்பொன்னடிபோய்த்தொழுதிந்தப்புதல்வர்தம்மில்[ன்.
வனிதையெவற்குரைத்தியென மனமறுகிச்சுருதியெலாம் வல்லோன்சொல்வா

அறமுணராதுரைப்பினுமற்றறிந்துமொருவருக்காகவறைந்தபோதும்
பிறிவருமாயிரவருடம்பெரும்பாசப்பிணியினுடல்பெரிதுமாழ்கி
முறுகுநரகமிழ்வரெனமுறையிடுமான்மறைகளிதுமொழியலாற்றன்
பிறரொருவரிடத்துணர்திபோயென்றானிவர்மீண்டுபெயர்ந்தூர்புக்கார். ()

மறையானுங்கலையானுமறிவானுமிருவரையும்வடித்துத்தூக்கி
முறையாகச்சுதனுமெனுமுனிமகனேயறிவினுக்குமுதல்வனென்றான் [னே
பொறையான்மிக்கவனந்தப் பொற்கொடியைக்கைப்பிடித்துப் புணர்ந்தான்வா
ரிறையாதியமரரெலாமிரணியன்றன்மகன்போல்வாரில்லையென்றார். (உ௫௩)

அண்டர்முனிவரர்முதலோரஞ்சினருண்மையையென்றுமறியலாற்றார்
கண்டிருந்துமனதறிந்துங்கரவுரைத்தாய்நீயென்றுக்கன்னன்றன்னை
விண்டவுரைபுகன்றெறுக்கும்விதுரனையாற்றவும்வெகுண்டுவேந்தர்வேந்தன்
மண்டுகனலெனச்சீறியிளவலிவர்துகிலனைத்தும்வாங்குகென்றான். (உ௫௪)

* இத்தகவின்மொழிசெவியினெரிவாளியெனமூழ்கவிருந்தவேந்தர்
தத்தமனமடிந்துருகத்தருமன்முகமதிநோக்கித்தம்பிநோக்கி
வித்தகவெங்கதைநோக்கவிறல்வீமன்விசையனுந்தன்வில்லைநோக்க
வொத்தமனனுடையிளையோருருப்பமடக்கினனுண்மைக்குறுதிபோல்வான். ()

* தருகதுகிலெனவெழுந்துதங்களைவன்பொடுதுச்சாதனன்சொலாமுன்
வருகவெனவரைமார்பின்வாங்காதவுத்தரியம்வாங்கியீந்தா
ரருகணுகிமடவரலையஞ்சாமற்றுகிலுரிவானடர்ந்தபோதி
ருகைநறுமலர்குவியவெம்பெருமானிணையடிக்கேயிதையம்வைத்தாள். ()

* ஆறுமியிருதடங்கணஞ்சனவெம்புனல்சோரவளகஞ்சோர
வேறனதுகிறகைந்தகைசோரமெய்சோரவேறோர்சொல்லுங்
கூறுமற்கோவிந்தாகோவிந்தாவெனவரற்றிக்குளிர்ந்துநாவி
லூறுதவவிழ்துறவுடல்புளகித்துள்ளமெலாமுருகினளே. (உ௫௭)

* அருமறைசொல்லியநாமமாயிரமுமுரைத்தழைக்கவமரர்போற்றுந்
திருமலர்ச்செஞ்சேவடியோன் றிருச்செவியிலிவண்மொழிசென்றிசைத்தகாலை
மருமலர்மென்குழன்மானின்மனநடுங்காவகைமனத்தேவந்துதோன்றிக்
கரியமுகிலனையானும்பிறரெவர்க்குந்தெரியாமற்கருணைசெய்தான். (உ௫௮)

* உடுத்ததுகிலுணர்வில்லானுரிந்திடவுமாளாமலொன்றுக்கொன்றாங்
கடுத்தநிறம்பற்பலபெற்றுயிரமாயிரங்கோடியாடையாகக்
கொடுத்தருளவுரிந்தனபட்டிருந்தபெருந்தனிக்கூடங்கொள்ளாதோடி
யெடுத்தனர்பற்பலவீரருரிந்தோனுஞ்சலித்திருகையினைத்துநின்றான். (உ௫௯)

* கங்கைமகன்முதலானகாவலர்மெய்யுளநடுங்கிக்கண்ணீர்சோரச்
செங்கைமலர்குவித்திவளேகற்பினுக்குமரபினுக்குந்தெய்வமென்று
ரங்கணகல்வானேருமானகமும்வலம்புரியுமதிரத்தங்கள்
பைங்கனகதருவின்மலர்மழைபொழிந்துகருணையினற்பரிவுகூர்ந்தார். (உ௬௦)

* அழுதழுதுகொடும்புலிவாயகப்பட்டமான்பிணைபோலரற்றுநின்ற
வெழுதரியமடப்பாவைதங்கண்முகங்களைநோக்கியிரங்கிவீழ்ந்த
பொழுதுமனம்புகைமூளப்பூந்தடங்கண்கனன்மூளப்போரின்மூளப்
பழுதுபடாவடலாண்மைப்பவனகுமரன்றடக்கைபடைமேல்வைத்தான். ()

* அருளாருந்தருமபதியாகாதென்றெமைப்பலகாலடக்கயாமு
மிருளால்வெம்பருதிவடிவொளிப்பதுபோலமர்புரியாதிருக்கின்றேமான்
மருளான்மெய்ம்மயங்கியொருவலியுடையோர்தமைப்போலமதத்தரீங்கள்
பொருளாகவிருந்தனமோநூற்றுவரும்வருகவெதிர்பொருகவென்றான். ()

* கொந்தளகமலர்சரியக்கூப்பிடுவாள்கொடுங்கற்புங்கூறைமாளா
மந்திரமுமடல்வீமன்மானமிலாதுரைக்கின்றவலியுங்காணத்
தந்தைவிழியிருள்போலத்தகுமனத்தோனுந்துச்சாதனனைநோக்கிப் [டானே.
பைந்தொடியைக்கொணர்ந்தினியென் மடியின்மிசையிருத்துகெனப்பணித்திட்

* என்றபொழுதருந்ததிக்குமெய்தாதகற்புடையாளிடியேறுண்ட
வன்றலைவெம்பணிபோலநடுநடுங்கிமாயனையுமறவாளாகிப்
புன்றொழிலோன்யானிருக்கக்காட்டியதன்றொடைவழியேபுள்வாய்குத்தச்
சென்றிடுகவாருயிரென்றெவரும்வெருவுறச்சபித்தாள்தெய்வம்போல்வாள். ()

* அரசவையிலெனையேற்றியஞ்சாமற்றுகிறீண்டியளகந்தீண்டி
விரைசெயவளியினம்படிதார்வேந்தரெதிர்தகாதனவேவிளம்புவோரைப்
பொருசமரின்முடிதுணித்துப்புலாலுறுவெங்குருதிபொழியவெற்றி
முரசறையும்பொழுதல்லால்விரித்தகுழலினியெடுத்துமுடியேனென்றாள். ()

பாஞ்சாலிக்கரசவையிற்பழுதுரைத்தோனுடலெனதுபடையாமேழி
போஞ்சாலினிணஞ்சொரியத்துணைவரொடுகுலமாளப்பொருவேன்யானே
தீஞ்சாலிவிளைபழனத்திருநாட்டீர்கேண்மினெனச்செந்தீமூள
வேஞ்சாலினநுநெய்போல்வெஞ்சினத்தால்வஞ்சினமும்விளம்புவானே. ()

* வண்டாருங்குழல்பிடித்துத்துகிலுரிந்தோனுடற்குருதிவாரியள்ளி
யுண்டாகங்குளிர்வதன்முனிக்கரத்தாற்புனலுண்ணேனொருகாலென்கைத்
தண்டால்வெம்புனலெற்றிமீதெழுந்துவிழுந்திவலைதண்ணீராகக்
கொண்டாவிபுரந்திடுவனிதுவிரதமெனக்கெனவுங்கூறினனே. (உ௬எ)

* பக்லவன்றன்மதலையுயிர்பகைப்புலத்துக்கவர்வனெனப்பார்த்தன்சொன்
னகுலனுமற்றென்கரத்தாற்சௌபலநாயகனுயிர்க்குநாசமென்றான்
சகுனிதனையிமைப்பொழுதிற்சாதேவன்றுணித்திடுவேன்சமரிலென்றா
னிகனிருபரிவர்மொழிகேட்டெளிதோவிக்கொடும்பழியென்றேங்கினரே. ()

* மேகங்கள்வழங்காமல்விண்ணதிர்ந்திட்டேர்கோளும்வெயிலைச்சூழ்ந்து
பூகம்பம்பிறந்துடுவுமரும்பகலேவிழுந்துடனேபொய்கைவாடி
யாகஞ்செய்நெடுஞ்சாலையின்பாலுஞ்செந்நீராயிருந்தவேந்த
ராகங்களொளிமழுங்கிற்றவிதாவென்றணங்கனையாளழுதபோதே. (உ௬௯)

* உற்பாதம்பெரிதெனநெஞ்சுருகுவாருமெண்ணுமிவ்வூரென்றஞ்சி
நிற்பாரும்போம்வழிமேனினைப்பாரும்பலராகிநிகழ்ந்தகாலைக்
கற்பான்மிக்குயர்வேள்விக்கடன்சுமந்தமடமயிலைக்கண்ணிலாதோன்
பொற்பாதம்பணிந்தேத்தியபாரதம்புரிந்தவெல்லாம்பொறுத்தியென்றான். ()

* உத்தமமாங்குலமயிலேயென்சிறுவரறியாமலுனக்குநேரே
மைத்துனராமுறையாலிவ்வழக்கலாதனசெய்தார்மதியிலாம
லெத்தனைதாழ்விவர்புரிந்தாரென்றாலுமவையொன்றுமெண்ணுகின்னே
பித்தர்மொழியெனக்கருதிமறந்தருளென்றொருகோடிபிதற்றினனே. (உ௭க)

புத்தமுதமனையமொழிப்பூந்திருவேவேண்டுவதென்புகலிலீவன்
தத்துபரிமன்னவர்முன்றவறேன்வாக்கெனப்பலகால்சாற்றலாலே
கொத்த்விழுங்கருங்குழலாள்கரங்குவித்துச்சினமடக்கிக்குறிக்கொண்டுதை
வித்தகன்றன்றொண்டகலவிடுத்தியெனத்தந்தினனும்வேண்டுகென்றான். ()

குரவனருண்மொழிகேட்டுப்படையுடனேநால்வரையுங்குறித்ததொண்டின்
விரவிதளித்தருளென்றாளிதுதந்தேனினியொன்றுவேண்டுகென்றான்
வரமதுவேதியரரசர்வணிகர்சூத்திரர்தங்கண்மடவார்கேட்ப
தொருசதமோரிரண்டொன்றுமூன்றலாதிலையென்றாளுமையேபோல்வாள். ()

* மைவரையுந்தடங்கண்ணுண்மனச்சோகம்பலமுகத்தான்மாற்றிமைந்த
ரைவரையுந்தனித்தனியேமுகங்கொண்டுகொடுங்கோபமகற்றிநீங்கண்
மெய்வரையும்பொருபுயத்தீர்வற்போரிலிழந்தவியனிலமுந்தேருங்
கைவரையும்பரிமாவுஞ்செல்வமும்யாவையுமீண்டுங்கைக்கொள்வீரே. (கஎச)

* கோமன்றினருந்ததியைக்கொண்டினிநீர்நில்லாமற்குறுகவூரே
போமென்றுவரவழைத்துத்தழீஇக்கொண்டென்கண்மலரேபோல்வானெம்பி
யாமென்றுமவனென்றுமிரண்டில்லேவிளேயாட்டென்றிருந்தேனிவ்வா
ருமென்பதெனக்கொருவருரைத்திலரால்யானுமுதலறிந்திலேனே. (உஎ௫)

* என்மைந்தரிவர்நீங்களவன்மைந்தரெனநினையேனிவரேயெம்பி
தன்மைந்தருங்களேயேயென்மைந்தரெனவளர்த்தேன்சம்புநாட்டு
மன்மைந்தருங்களேப்போல்வேறுபடாதித்தனைநாள்வளர்ந்தாருண்டோ
வின்மைந்தர்நடக்கவெனவிடைகொடுத்தான்விரகினுக்கோர்வீடுபோல்வான்.

* படைகொடுத்தானிவனிழந்தபார்கொடுத்தானரசாளப்பண்டுபோல்வெண்
குடைகொடுத்தான்குருகுலத்தேகுலங்கொடுத்தானவருக்குங்குலத்தேகொ
தடைகொடுத்தானகப்பட்டுந்தலேயழிக்கநினையாமற்றுனேயம்ம [ண்ட
விடைகொடுத்தானினிவிடுமோவயப்புலியைவாலுருவிவிடுகின்றீரே. (உஎஎ)

வேறு.

* யாதொருகருமமேனுமெண்ணியே துணிகவென்றுங்
காதலிற்றுணிந்துசெய்தாலெண்ணுதல்கடனன்றென்று
மோதுநூற்புலவர்சொன்னருமக்குளவுணர்வற்றன்றே
பேதுறவடர்த்துப்பின்னையுருகிநீர்பிழைசெய்தீரே. (உஎஅ)

* தீயினுற்சுட்டசெம்புண்ணாறுமத்தீயிற்றீய
வாயினுற்சுட்டமாற்றமாறுமோவடுவேயன்றே
பேயினுற்புடையுண்டாரோமறப்பரோபெரியோரென்றுன்
வீயினுற்றெடுத்ததண்டார்வேந்தர்க்குவேந்தன்மாமன். (உஎ௯)

* சகுனிசொன்மருகன்கேட்டுத்தம்பியுமங்கர்கோவு
முகமுகநோக்கியெண்ணியெம்பிநீமொழிகவென்றான்
றுகிலினையுரிந்தவன்கைச்சூரனுந்தருமராசன்
மகனுடன்வெகுளிதோன்றவழக்குறுமொழிதலுற்றான். (உஅ0)

* சரதமென்றுண்மையாகச்சபையினீயிசைந்துதோற்ற
விரதமுங்களிறுமாவும்யாவையுமீண்டுதாரோஞ்
சுரதமென்கொடியுநீருந்தொண்டொழிந்துரியீராமின்
விரதமுன்னறத்துக்கென்றும்பொய்கொலோமெய்யேயன்றே. (உஅக)

* தந்தைதன்னருளாற்பெற்றீருரிமையுந்தம்பிமாரும்
பைந்தொடிதானுநீயும்பதிபெயர்ந்துயர்ந்துவேயின்
வெந்தழலனையகானின்வெளிப்படாதுறைமினென்றே
யிந்தமாதரணிகைவிட்டேகுமினெழுமினென்றான். (உஅஉ)

* என்றலுந்தந்தைமைந்தனியம்பியவாய்மைகேட்டு
நின்றவாநில்லாவஞ்சநெஞ்சினனுகிமீண்டும்
வென்றிகொளரசனேடும்வெஞ்சிலேவிதுரனேடு
மொன்றியவமைச்சரோடுமுறுவன்வுசாவலுற்றான். (உஅ௩)

* மேல்வருகருமமென்னாவெகுளியான்மிக்கவீரர்
நால்வருமெம்மனோர்கணவின்றனசிறிதுங்கேளார்
சேல்வரும்பழனநாடசெயலறிந்தெண்ணிவேந்து
நூல்வருமுறைறசொல்லென்றானோன்சிலைநூலின்மிக்கான். (௨௮௪)

* வின்மகனுரைக்கவேனையமைச்சரும்விதுரன்றானு
மன்முறைதவறினின்றேவசையும்வந்திசையுமென்றார்
கன்மனநெடுங்குன்றன்னான்கருதியக்கணத்தேமீளத்
தன்மனையாவர்நெஞ்சுஞ்சருகெனத்தழைக்கச்சொன்னான். (௨௮௫)

* உன்னுணர்வுனக்கேயுள்ளதுன்பெருந்துணைவரான
கொன்னுனைவேலோர்வென்றுகொண்டனகொடுத்தலொல்லார்
பின்னுறவுரிமையாவும்பெறுதிநின்பெருமைக்கேற்ப
முன்னுளோர்பலருஞ்செய்தமுறைமையேமுன்னுகென்றான். (௨௮௬)

* அரசன்மற்றுரைத்தமாற்றமந்தணனுணர்ந்துசெல்வ
முரசதிரயோத்திமூதூர்முன்னவன்கதையுங்கூறி
யுரைசெய்தபடியேயுங்களுலகினையிழந்துசின்னாள்
வரைசெறிகானில்வைகிவருவதேதவழக்குமென்றான். (௨௮௭)

* அரிவையோடகன்றுநீவிரைவருமடவியெய்திச்
சுரர்தினமீராறங்கட்டுன்னுதிர்மன்னுநாட்டி
னொருவருமறியாவண்ணமொருதினமுறைறதிருங்கள்
பெருவிறலரசும்வாழ்வும்பின்னுறப்பெறுதிரென்றான். (௨௮௮)

* மறைந்துறைநாளினும்மைமற்றுளோரீண்டுளாரென்
றறிந்திடின்மீண்டுமிவ்வாறாரணியமடைதிரென்றான்
பிறந்தவிம்மாற்றங்கேட்டுப்பிதாமகன்முதலாயுள்ளோர்
சிறந்ததொன்றிதனினில்லையிசைந்ததேசெய்மினென்றார். (௨௮௯)

* சுரிகுழலலையநின்றதிரௌபதிசுருதிமுந்நூல்
வரபதிமொழிந்தமாற்றங்கேட்டலும்வணங்கியைவ
ரர்சருமெனதுமைந்தரைவரும்யானுமீண்டு
முரிமையின்றெய்தவெஞ்சூதாடுதலுறுதியென்றாள். (௨௯௦)

* தையலங்குரைத்தமாற்றந்தருமனுங்கேட்டுநாங்கள்
கையறுதொண்டராகிக்கான்புகல்வழக்குமன்றா
லையுறாதொருகாலின்னமாடுதுமருஞ்சூதென்றான்
மெய்யுறவிருந்தவேந்தர்மீளவுங்காணலுற்றார். (௨௯௧)

* சத்தியவிரதன்றானுந்தன்பெருந்தேவிசொல்லப்
பத்தியால்வணங்கிமாயன்பன்னிருநாமமேத்தி
யொத்தவெண்கவறுவாங்கச்சகுனியாதொட்டமென்றான்
புத்தியாலவனும்யான்செய்புண்ணியமனைத்துமென்றான். (௨௯௨)

* உருட்டியகவறுநேமியுடையவனருளினாலே
மருட்டியசகுனியெண்ணின்வழிப்படாதுருண்டகாலை
யிருட்டியவிழியான்மைந்தனிதயமுமிருண்டுசோரத்
தெருட்டியவுணர்வின்மிக்கோன்செப்பியயாவும்வென்றான். (உகஙு)

* வென்றுதனிளைஞரோடுமேதகுபுதல்வரோடு
மன்றலங்தெரிவையோடுமேற்றுளோர்தங்களோடு
மன்றுதன்குரவர்பொற்றாளன்புடன்வணங்கிக்கானஞ்
சென்றனனென்பமன்னேசெழுநிலமுடையகோமான். (உகஙச)

* ஒழிவுசெய்கருணைநால்வருள்ளமுமொழியவேனை
வழுவறுமன்னருள்ளமம்மரோடயர்ந்துவிம்மக்
குழவிபானுகர்தலின்றிக்கொற்றமாநகரிமாக்க
டழலெனவுயிர்த்துமாழ்கித்தனித்தனிபுலம்பலுற்றார். (உகஙரு)

* நாட்டிடையெல்லைபொற்றாணறுமலர்சிவக்கவேகிக்
காட்டிடைபுகுந்தபோதுங்கலக்கமற்றுவகைகூர்ந்தான்
கூட்டிடையின்பத்துன்பக்கொழும்பயன்றுய்த்துமாறி
வீட்டிடைபுகுந்தபோதுமெய்ம்மகிழ்விபுதர்போல்வான். (உகஙசு)

மன்னுசீர்வில்லிபுத்தூர்மறையவன்வகுத்தசெய்யுண்
முன்னுநானூற்றுநாற்பத்தைந்துடன்முதலையூரன்
றன்னிலைநாவில்வாணிதருதமிழைம்பதென்பார்
சொன்னவிச்சபாபருவத்தொகைபடுவிருத்தமன்னே. (உகஙஎ)

சூதுபோர்ச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-உருஅரு.

---

## சபாபருவம் முற்றிற்று.

---

உ

மூன்றாவது,

# ஆரணியபருவம்.

## வனம்புகுந்தசருக்கம்.

இரணியன்மகனுமுன்னரிழிபுரைக்கேதங்கண்ட
தரணிபன்மகனுமத்தயானையுஞ்சரணென்றேத்தி
முரணியசிறியோர்வெஃகமுதன்மைகொண்மாதுங்கண்ட
பிரணவப்பொருளையிம்மைப்பேணுவார்காணுவாரே. (க)

மன்னவர்மன்னனேயிவ்வாறுமுன்னிகழ்ந்ததென்று
சொன்னமாமுனிக்கிறைஞ்சிமேற்செயற்சொற்றியென்னப்
பன்னுவன்கேண்மினென்றுதொடங்கினான்பரிதிவெங்கை
துன்னுவதனையசெம்மைசூழ்சடைமுடியினானே. (உ)

தனைவிடாதணுகிச்சூழுஞ்சனங்களுக்கினிமைகூறி
நனியுயர்நாட்டிற்போக்கிநால்வகைச்சேனைமன்னன்
தனையர்பாங்குறவென்றேவித்தக்கவர்தன்னைச்சூழ
வனத்திடையிருந்தான்வேந்தன்வரமுனியொருவன்வந்தான். (ங)

சவுனகனவன்பேரன்னோன்றனக்கெதிரடைந்துதாழ்ந்து
குவலயமன்னனிற்பக்குரிசினீமறையோரோடும்
மிவணுடந்தனையால்யார்க்குமிரும்பசிதணிப்பதாக
நவமுறுசுடரைப்போற்றினல்குமென்றருளிப்போனான். (ச)

அருமறைமுனிவன்சொல்லாலாதபன்றன்னைப்போற்றத்
தருமகிழிரவிதோன்றித்தக்கபாத்திரமொன்றீந்தான்
வருபவரெண்ணிலோர்க்கும்வரிசையாலமுதமன்ன
திருமிகுமுண்டிநல்கச்சிந்தைநோய்தீர்த்தானன்றே. (ரு)

அத்தினமகன்றபின்னரந்தணரோடுமன்னன்
குத்திரவடவிசென்றான்குடதிசையிரவிசென்றான்
வித்தகனிரவிற்செல்லும்வேலையின்வெகுண்டபார்வை
மொய்த்தநற்கரியமேனிதகுவர்கோன்முனிந்தெதிர்ந்தான். (சு)

வேறு.

கட்டழற்கதுவுநீலகிரிபாரின்மிசைகாலினொடுநே
ரிட்டதொத்தவுருவத்தினன்முகிற்குலமிடிப்பதெனவாய்
விட்டழைத்ததிருரப்பினன்மணிப்புயமிடுக்கிலுயர்வோன்
துட்டநற்பிறையெனத்துணையெயிற்றினிலதுக்குமிதழான். (௭)

வெற்றிகொண்டமரரைத்தனிதுறந்தவர்விமானநிரையைச்
சுற்றிவெவ்வரவினிற்குழைவிளங்கவணிதோட்செவியினான்
முற்றுவெம்புலியுரித்துரிதனைப்பலமுடைக்கடிதடத்
தெற்றியுற்றுறவிசித்துடையுடுத்துருமெனக்குதிகொள்வான். (௮)

வெம்புநெஞ்சனலின்சிகையெனுங்கொடியவெம்பகனுடைத்
தம்பிகிம்மிரனெனும்பெயரினன்வெகுளிதன்னொடணுகா
வம்புதங்குகுழன்மங்கைகனறந்தவனைவன்பொடுகவர்ந்
தம்பரந்தனிலகன்றனனொர்மின்முகிலதிர்த்தகறல்போல். (௯)

ஓடிவீமனவனொண்புயமொடித்தரமுதைத்தெதிர்தலும்
வாடிமீளமடமாதினைவிடுத்தொருவரைக்குலமெடுத்
தாடிவீமன்மிசையிட்டனனனுக்களினகன்றிடுமுறை
கோடிகோடிதுணிசெய்தவனுரத்தின்மிசைகுத்தினனரோ. (௧௦)

அட்டதிக்குமதிரச்சமர்விளைத்தவனடிக்கவிவனுங்
கட்டிமற்சமர்விளைத்தவனைமொத்தியொருகைப்படுகிரா
லொட்டியச்சிரமுருட்டினனுயிர்ப்புதவுதூயன்விரைவே
வட்டமுற்றவிழிமாதினொடுதம்முனடிவந்துதொழுதான். (௧௧)

அன்னவன்றனைமணிப்புயமுறத்தழுவியங்கவரொடும்
சொன்னதைத்தவனமென்னுமொருகானினவர்துன்னினர்களால்
மன்னுகங்குலின்முசிப்பறவிவர்க்குவருணக்கடவுளோர்
துன்னுதீபமிடுவித்ததெனவெம்பருதிதோன்றினனரோ. (௧௨)

வேறு.

காலையிலெழுந்துவேதங்கண்ணியநியமமுற்றி
ஞாலநாயகமாஞ்சூரனுண்மலர்ப்பதத்திற்றாழ்ந்து
சீலமாதவரைப்போற்றித்திறலுடைத்தம்பிமாரோ
டாலமாமென்னவீசுமனற்பிழம்படவிசார்ந்தான். (௧௩)

* பெருமிதவலியும்பாரும்பேணலார்கவரவின்சொற்
றருமனுந்தம்பிமாருந்தழலெழுதையலாளு
மருமகமுனிவர்முந்நான்காயிரர்சூழ்ந்துபோதக்
கருமுகில்படியுஞ்சாரற்காமியவனம்புக்காரே. (௧௪)

* ஆரமுமகிலுநாறுமருவியுஞ்சுனையுமத்த
[illegible]
மீரமுநிழலுங்காயுங்கனிகளும்யாவுமீண்டிக்
காரினம்பொழியுமந்தக்கானகத்தழகுகண்டார். (௧௫)

* அங்கிவர்புகுந்தபின்னரங்கியின்புகையுமாறி
பொங்கியவோமத்தீயின்புகையினன்முகிலுண்டாகச்
சிங்கமுந்துதிக்கைமாவுஞ்சேர்ந்துடன்றிரியச்சூழ
லெங்கணுமழகுபெற்றதிமகிரிச்சாரல்போன்றே. (௧௬)

வேறு.

* துருபனுந்திட்டத்துய்மனுஞ்சோமக
நிருபரானவர்யாவருநேர்ந்துடன்
விரவுதானைவிராடனுஞ்சுற்றமு
மருவினரவ்வனத்திருந்தோரையே. (௧௭)

* மற்றுமற்றுமகீபரிலன்பினு
லுற்றவுற்றவுறவுடையோர்களுங்
கற்றகற்றகலைவிதமாக்களுஞ்
சுற்றுமொய்த்தனர்தோமறுகேண்மையார். (௧௮)

* மாதவத்தின்பயனெனமாதவன்
யாதவக்குலத்தேறிமையோர்பதி
யாதபத்துக்கருணிழல்போலருள்
வேதவித்தகவீரனுமேவினுன். (௧௯)

* பாரிழந்தவிப்பாதகச்சூதுகேட்
டீருநெஞ்சினரேமுறுநோக்கினர்
பேரறன்றருபிள்ளையைப்பார்த்தருள்
கூரவன்பொடிவைவிவைகூறுவார். (௨0)

* மரபின்வல்லியைமன்னவையேற்றிய
குருகுலேசனைக்கொற்றவெஞ்சேனையோ
டிரியவேற்றுதுமிப்பொழுதேயென
வுரமுஞ்சீற்றமுந்தோற்றவுரைசெய்வார். (௨௧)

* தம்பிமாரைத்தனித்தனியேயுயிர்
வெம்பிவீழவிரைந்துவில்வாங்கியின்
றும்பர்காணவுயிரழிப்போமெனத்
தும்பைசூடக்கருதினர்சொல்லுவார். (௨௨)

* வஞ்சகச்சுபலன்றருமைந்தனை
வெஞ்சமத்தினில்வீழக்கணத்திடைச்
செஞ்சரத்தின்வழியுயிர்செல்லவே
யெஞ்சுவிக்கவெழுமென்றியம்புவார். (௨௩)

* சீதவெண்குடைவேந்தர்தந்தேர்விடுஞ்
சூதன்மைந்தன்சுயோதனன்றோழனை
மாதிரங்களில்வானவர்காணவிப்
போதுடற்றுவமென்னப்புகலுவார். (௨௪)

* உந்தவுந்தவொருவர்க்கொருவர்வாய்
முந்தமுந்தமுடுகுசினத்தரா
யந்தவந்தவவனிபர்யாவரு
மிந்தவிந்தவுரைகளியம்பவே. (௨௫)

* கேட்டிருந்தருள்கேசவன்வாசவன்
காட்டிருந்தனனென்னக்கவின்பெறுந்
தோட்டிருந்தளிதேனுகர்சோலையின்
மாட்டிருந்தமகீபர்க்குரைசெய்வான். (௨௬)

* விடுகவிந்தவெகுளியைப்பின்புற
வடுகணுந்திறலாண்மைகடோன்றவே
வடுமனங்கொடுவஞ்சகஞ்செய்பவர்
கெடுவரென்பதுகேட்டறியீர்கொலோ. (௨௭)

* இயைந்துரைத்தவியைபின்படியினி
வியந்திருக்குவிபினந்தொறுமிருந்
துயர்ந்தபிற்செய்வினையையின்றுன்னுத
லயர்ந்துரைத்தலலாதிலையாவதே. (௨௮)

வேறு.

* கேட்டிநீமுரசகேதுகிளைஞர்தமிருக்கைதோறு
மீட்டியபுதல்வருள்ளோர்யாரையுமிருத்தல்செய்து
காட்டிடைநீரும்வைகிக்கடவநாள்கழித்துமீண்டு
நாட்டிடைவந்தாற்காண்டிநலனுளோர்நலங்களெல்லாம். (௨௯)

* அன்னையைச்சுபலன்பாவையருகுறவிருத்தியுங்க
‡ டன்னையர்தம்மையாகசேனனூர்தன்னில்வைத்துப்
பின்னையும்வேண்டுவோரைப்பிரிவுறநெறியிற்போக்கி
கன்னயத்தொடுநீர்கானம்வைகுதனன்மையென்றான். (௩0)

* அச்சுதனுரைத்தமாற்றமறன்சுதன்மகிழ்ந்துகேட்டு
மெய்ச்சுதர்முதலாமற்றும்விளம்பியகிளையையெல்லா
மிச்சையின்படியேயாங்காங்கெய்துவித்தீராறுண்டு
மச்சுறுகானில்வைகுமார்வமேயார்வமானான். (௩௧)

* சோனைமாமுகிலின்மேனித்தோன்றலுந்துவரைபுக்கா
னேனையோர்தாமுந்தத்தமெயில்வளைநகரிபுக்கார்
ஞானயோகிகளுமொவ்வாநரேசனுந்தம்பிமாருங்
கானமேதாங்களாளுங்காசினியாகக்கொண்டார். (௩௨)

வேறு.

இத்தன்மையினிவர்வைகலுமிருகட்புலனில்லாச்
சித்தங்கரவினிலாவுறுதிண்டோள்வலியரசன்
மத்தந்தருகுமரனகர்ப்புரம்வைகியவாறும்
முத்தின்குடைநிழலிற்புவிமுழுதாண்டதுமறைவாம். (௩௩)

‡ தன்னையர் - தன்னையரென விரித்தது.

வேறு.

படையெடுத்ததிறலிவர்வனமடைந்தபரிசதனுற்பரிதியேகத்
தடைவிடுத்தமதிதிகழுந்தன்மையெனவெவ்வுலகுக்தானேயாகிக்
குடையெடுத்துமணிமகுடகோடிகடன்னடியுரிஞ்சக்கொடியவாழ்வி
னிடைமிகுத்துப்புவிபுரந்தானிளைஞருடன்றுணைவருடனிராசராசன். (௩௪)

மகபதிதன்பெயர்நகரைமறையுணருஞ்சிலைக்குருவின்வயமதாக்கி
யிகலுறுவெம்பரிகரியுமிரதமுமாங்கவர்படையுமியைபிற்கொண்டே
தகவுணராதிவணிருந்துதனியரசாட்சியிற்சிறக்கத்தந்தையானோன்
குகனையபெருங்கல்விவிதுரனுடன்றனியிருந்தேகுறிக்கலுற்றான். (௩௫)

கடலாடைப்பேரவனிகைவிட்டுமெய்வருந்தக்கானஞ்சென்றோர்
மிடலால்வந்தெய்துவரோமீளாரோயிங்கிவர்மேல்வெகுளியுண்டோ
வடலாண்மையினர்விதியின்செய்கையெனத்தெளிந்துசினமகன்றுற்றாரோ
விடலாய்நீயோர்ந்துள்ளபடியுரைத்தியெனப்புகன்றான்வேந்தர்கோமான். ()

வாய்திறவானெதிர்மாற்றம்வகுத்துரையானிருந்தவறன்மைந்தனென்னிற்
றாய்திலமதைப்பொழியிற்பொரிந்தகலுமிளைஞர்சினஞ்சொல்லற்பாற்றோ
காய்வுரினுமவர்துணைவன்மொழிகடவார்முதல்வனறக்கடைமைநீங்கான்
வேயுறழுங்கடுங்கானஞ்சென்றனராலவதியறமீள்வரென்றான். (௩௭)

விதுரனுரைத்தவைகேட்டுநாநடுங்கியவர்மீளில்விளைவேதென்றான்
சதுரரவர்வஞ்சினமுந்தழற்பிறந்தாள்மொழிக்கனலுந்தவறுறாதா
லெதிர்பொருதுநூற்றுவரைப்படநூறியவனியெலாமிரவிற்றோற்றுங்
கதிரனையதண்குடைநீழலிற்புரப்பன்றருமனெனக்கருதிச்சொன்னான். (௩௮)

தன்றம்பிமொழிந்தகன்றசலாகைசெவியுறவேங்கித்தளர்ந்துசோர்ந்து
முன்றம்பிமொழிந்தபடிகொள்ளாமற்சலங்கருதிமுறைநீத்தார்த
மன்றம்பிபெருங்கதையான்மடிவரொனுஞ்சொல்லுலகின்வழங்கலாமோ
வென்றம்பியென்செய்வேனென்செய்வேனெனவயர்ந்தானெழிவிபோல்வான். ()

தாரடுத்ததோளானைத்தழீஇயெடுத்தாங்கயர்வகற்றித்தரணிவேந்தே
தாரடுத்தவனனுமறையுங்காவலரைமீட்டழைத்துக்கசிந்துபோற்றிப்
பாரடுத்தமுறைப்படியேபகிர்ந்தளித்துவாழ்வுறுதல்பயனுமன்றிப்
போரடுத்தாலரிதுய்தலெனவுமொருமொழிபுகன்றான்புதனின்மிக்கோன். ()

பொறுத்தவர்க்குப்புவியினல்புகழாமென்றவையிடையான்புகன்றவாய்மை
மறுத்தவருக்கினியுரைத்தாற்பயனேதென்றரசிடையமதியான்மிக்கோன்
குறித்தசகந்தனிலொருவன்குறைந்ததனற்றாழ்விலைமுற்குமரன்றன்னை
யொறுத்துவிடுத்தைவருடனொன்றுகுறைநூற்றுவரோடுரைதியென்றான். ()

நம்பியுறுதியினுரைத்தநன்மொழியைப்புன்மொழியாய்த்தனதுசிந்தை
வெம்பிநெடுமூச்செறிந்துவெகுண்டுமகவினைச்செறுத்தவேந்தருண்டோ
வம்புவியின்முறையிகந்தமொழிபுகன்றாய்பாவியிவணகல்வாயென்றா
னம்பியும்யானுரைத்தமொழியெதிர்காலத்துணர்தியெனநவின்றுபோனான். ()

தாரேறுமணிமார்பன்றனைமுனிந்தான்றனைமுனிந்துதளர்ந்துநீங்கித்
தேரேறித்தனதுபெரும்படையுடனேயைவருழைச்சென்றுசேர்ந்தான்
போரேறுதனைப்போல்வார்புண்ணியனைத்தொழுதடைவார்பூசைமுற்றி
யேரேறுமாசனத்தினிடையுய்த்தாரிருந்தாசியியம்பிச்சொல்வான். (௪௩)

வடுவில்லாமரபினுக்கோர்வடுவளித்தானவனுடனேமருவிவாழ்த
லிடரென்றுபுகன்றதற்குப்பரிந்துரைத்தானவன்றந்தையிதனைநீங்கிக்
கடுவனயவனனடைந்துநமைக்காணும்விழைவினனுய்க்கலந்ததென்று
னடுமன்னன்மொழிகேட்டாங்கைவருளமகிழ்ந்தவனோடாங்கணுற்றார். (௪௪)

புண்ணுழைந்தவேலனையவிதுரனுரையுளம்போழ்ப்பப்புகழ்தீர்மன்னன்
கண்ணிழந்ததெனவருந்திக்காவல்விதுரனைக்கொணர்மின்கடிதினென்ன
பண்ணமைந்தசஞ்சயனைப்பணித்திட்டானவனடைந்துபரிவுகூரத்
தண்ணுழைந்தமதிக்குடையார்தனைவினவிவிதுரனுடனகரிற்சார்ந்தான். (௪௫)

அடிபணிந்தவிளையோனைத்தழுவியெடுத்தணைத்துருகியன்புகூர்ந்து, முடி
புனைந்தோயான்வெகுண்டுமொழிந்தாலுமுள்ளபடிமொழிதருனே, படிமிசையி
னறிவுடையோர்கடனுகுமாங்கதனுற்பகர்ந்தாய்முன்னனங், கடியவுரையென்றிக
ழ்ந்தேன்பொறையுடையாய்பொறுத்தியென்றான்கண்ணிலாதோன். (௪௬)

மற்றிவனுநிலத்தமனமற்றவனோடின்னுரைகள்வழங்கியாங்க
ணுற்றனனிங்கிவன்பகைஞருறுமிடத்திற்போய்வரலானுரககேது
புற்றரவமெனச்சீறிப்புரவலரோடவையிருந்தபோதினெல்லாங்
கற்றமயித்திரியமுனியன்னவன்வந்தரசவையிற்கலந்தான்மன்னே. (௪௭)

எதிரேறித்தொழுதுகடன்முறையியற்றித்தவிசீந்தானிருந்தபின்னர்
மதிமரபிற்போரேறேவனத்தொருசார்பாண்டவரைமருவக்கண்டேன்
முதுமறையோருடன்பகைஞர்குலமாளத்தழல்வளர்த்தேமுயலுகின்றார்
கதிர்முடியார்பெருவலியோரவருடனேபகைநேரக்கடவதேயோ. (௪௮)

வேறு.

அவர்வானவர்வழிவந்தவரசுரேசர்குலத்தோர்
தவவெவ்வலியவர்நீவிர்கடமைவேறலுமெளிதே
நவமாமியலடலைவரைநயமோடிவணழைத்தே
கவ்ரும்புவிகொடுத்தேயவருடன்வாழுதல்கடனே. (௪௯)

எனவோதியமுனிவாய்மையினிவன்வெஞ்சினமுகனுய்
நனிவேறலும்புறமீதலுமுணர்வீரெனநவின்றாய்
நினையைவருமிவனேவினர்நீவாழ்வருள்வாயென்
றினிநின்னுரைதனில்யான்வசமெய்தேனகலென்றான். (௫௦)

ஞாலத்திறமகனோதியநவைவன்சொலுணர்ந்தே
சீலத்திறமுனிவெங்கனல்சிந்துந்துணைவிழியா
[illegible]
னிலத்தொடைபிளந்தாருயிர்நீங்கென்றுசபித்தான். (௫௧)

காபாலியைநிகர்மாமுனிகடைநாளெனவெருளா
வாபாதகனவைநீங்கியருஞ்சூழலடைந்தான்
பூபாலர்முகந்தோறுமிவன்கட்கனல்பொழியா
மாபாதகநினைவாலிவைவகுத்தானரவுயர்த்தான். (௫௨)

என்னைத்திறலிலனென்றவரிவ்வேதனையேவி
முன்னைப்புவிபெறமுன்னினர்தமைவெஞ்சமர்முனைந்து
பின்னைத்திறல்கொண்டெய்துவனன்றேலுயிர்பிழையேன்
தன்னைத்தடைசெய்யற்கவெனக்கூறியெழுந்தான். (௫௩)

விரையைக்கடலொலியிற்கடிமிகுமாமுரசத்தித்
திரையொத்தனபுரவித்திரடிகழம்புதசால
நிரையொத்தனமதயானைகணெடுந்தேர்நிரைபலவாம்
வரையொத்தனகடலொத்தனமறவாகினியிருபால். (௫௪)

இவ்வாறிவனெழுபோதிவனெதிர்வேதவியாதன்
அவ்வேலையில்வந்தேகுதலறனன்றெனமறுத்தான்
மைவ்வேலையெனப்புன்மைமனங்கொண்டவன்மீண்டான்
செவ்வேலினருறைகானிடைசென்றான்மறைமுனிவன். (௫௫)

வனம்புகுந்தசருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-உ௬௪0.

---

# அருச்சுனன்றவநிலைச்சருக்கம்.

---

* அவ்வனந்தன்னில்வந்தவரசெலாமகன்றபின்னர்
வெவ்வனம்விடாதுமேவித்தவம்புரிவியாதனென்னுஞ்
செவ்வனமுனைவன்வந்தசேயவன்சேய்களான
விவ்வனசரிதர்தம்மையினைவுடனெய்தினனே. (௧)

* கண்டெதிர்சென்றுபோற்றிக்கண்ணினுஞ்சென்னிமீதுங்
கொண்டனரவன்றன்பாதங்குளிர்ந்தனருயிருமெய்யும்
புண்டரனுதலினானைப்பூசனைசெய்தபின்னர்
வண்டணிதாரான்செய்தவஞ்சனையனைத்துஞ்சொன்னார். (௨)

* செறிந்தவர்க்கூற்றங்கோலாஞ்செய்தவமுனியுமுன்னே
குறிந்தனநிகழ்ந்தவெல்லாங்கூறுதல்கொடிதுபாவம்
பிறிந்தனதாயந்தன்னிற்பெரும்பகையினிதென்றன்றோ
வறிந்தவருரைத்தாரையாவவாவினுக்கவதியுண்டோ. (௩)

* துன்றினரின்னலெய்தத்துன்னலராகித்தம்மி
லொன்றினர்செறினுமுள்ளதுண்டெனவுணரத்தேற்றிக்
கன்றினர்கவலைதீர்த்தான்கண்ணுடைக்கருணைமூர்த்தி
குன்றினதுயர்ச்சியந்தக்குன்றினுக்கறியவுண்டோ. (௪)

* நீவிரேயல்லிர்முன்னுணிலமுழுதாண்டநேமி
நாவிரிகீர்த்தியாளனளனெனுநாமவேந்தன்
காவிரியென்னத்தப்பாக்கருணையான்சூதிற்றோற்றுத்
தீவிரிகான்ஞ்சென்றகாதைநுஞ்செவிப்படாதோ. (௫)

* தோத்திரமானதெய்வச்சுருதிகள்யாவுநான்காக்
கோத்தவன்பின்னுஞ்சொல்வான்குன்றவில்லவன்பாலின்று
பார்த்தனேசென்றுபாசுபதக்கணைவாங்கினல்லா
லார்த்தபைங்கழலாயெய்தாதரும்பகைமுடித்தலென்றான். (௬)

* பரிவுடன்முனிவன்மாற்றம்பணிந்துதன்றலைமேற்கொண்டு
வரிசிலைக்குலகமென்னுமகபதிமகனைநோக்கிக்
கிரிசனையுன்னிவெள்ளிக்கிரிப்புறமெய்தியார்க்கு
மரியநற்றவஞ்செய்தேனுமவனருள்பெறுதியையா. (௭)

* எனவிடைகொடுப்பமண்ணிலிணையிலாவியாதன்பாத
மனனுறவிறைஞ்சியாங்கோர்மந்திரமுறையிற்பெற்று
நனிமிகுதிதியுநாளுநல்லதோர்முகூர்த்தந்தன்னிற்
தனிவதியியக்கர்காட்டத்தனஞ்சயன்சேறலுற்றான். (௮)

வெஞ்சலமனத்தராணோர்விரகினுற்கூட்டங்கூட்டி
நஞ்சலதுவமையில்லாநவைபுரிந்தனர்களேனுஞ்
சஞ்சலமும்மைப்போலுந்தரணிபருறுதல்செய்யா
ரஞ்சலிரென்றுமீளவாரணமுனியும்போனான். (௯)

* மரவுரியுடையன்சென்னிவகுத்தசெஞ்சடையன்றாணிச்
சரமுடனங்கியீந்ததனுவினன்றவத்தின்மேலே
புரிதருமனத்தனெல்லாப்புண்ணியங்களுக்குந்தானே
யுரைபெறுதசரதன்றன்மகனலாதுவமையில்லான். (௧0)

* நெறியிருபுறத்துமூசிநுழையொணுநெருக்கமிக்க
செறிதருவனமுஞ்சிங்கஞ்சிந்துரஞ்செருச்செய்சாரற்
பொறைகளும்வெம்பிசாசபூதமோடியக்கர்யாரு
முறைதருகுவடுநீங்கியுத்தரமுடிவுகண்டான். (௧௧)

* அத்திசையிமயமென்னுமரசவெற்படைந்துமிக்க
பத்தியோடம்மைதன்னைப்பயந்தகுன்றென்றுபோற்றிச்
சத்தியவிரதன்றம்பிதபோவனந்தோறுந்தங்கண்
முத்தழல்வள்ர்ப்போர்பாதமுளரிகண்முடிமேற்கொண்டான். (௧௨)

* சாரணரியக்கர்விச்சாதரர்முதற்பலருஞ்செஞ்சொ
லாரணப்படியேசூழ்ந்தவடவிகடோறும்வைகி
நாரணன்மலரோனும்பர்நாயகன்பதங்கணைச்சிக்
காரணத்தவஞ்செய்வோரைக்கண்டுகண்டுவகைகூர்ந்தான். (௧௩)

* அரியும்வெங்கரியுந்தம்மிலமர்புரிமுழக்கங்கேட்டுங்
கிரியினின்முழக்கங்கேட்டுங்கிராதர்போர்முழக்கங்கேட்டு
மெரிகிளர்முழக்கங்கேட்டுமெம்பிரானிமவான்றந்த
புரிகுழலோடும்வைகும்புண்ணியப்பொருப்பைச்சேர்ந்தான். (௧௪)

* கைமலையுரிவையோடுகட்செவிக்கச்சுஞ்சாத்துஞ்
செம்மலைவிழியிற்காணுன்சிந்தையாற்கண்டுபோற்றி
அம்மலைச்சாரலூறுமருந்தவம்புரினர்கூற
விம்மலைநீங்கியாங்கண்மெய்த்தவவிரதனானான். (௧௫)

* எயிலொருமூன்றுஞ்செற்றோனேந்திழையுடனேவைகுங்
கயிலையின்பெருமைதன்னைக்கட்டுரைசெய்வதெங்ஙன்
வெயிலவன்முதலோர்நாளுமேம்படவலஞ்செய்வார்க
ளயிலுநல்லமுதோர்சூழ்வந்தன்புடன்போற்றுவாரே. (௧௬)

* உருகியவெள்ளிபோலவுயர்முழைதோறும்வீழ
மருவிநீர்புனிதன்வேணியமருமாநதியிற்றோன்ற
வுருகியபனிவான்குன்றிலொண்பனிக்கடவுள்வந்து
மருவியதென்னத்தோன்றும்வருணமால்வரையின்றென்பால். (௧௭)

வேறு.

* ஆசினன்மறைப்படியுமெண்ணில்கோடி யாகமத்தின்படியுமெழுத்தைத் துங்கூறிப், பூசினன்வடிவமெலாம்விபூதியாலப் பூதியினைப்புரிந்தசடைப்புறத்தேசேர்த்தான், றேசினலப்பொருப்பின்சிகரமேவுஞ் சிவனிவனேபோலுமெனத்தேவரெல்லாம், பேசினார்வரிசிலைக்கைவிசையன்பூண்ட பெருந்தவத்தினிலைசிலர்க்குப்பேசலாமோ. (௧௮)

* ஒருதாளின்மிசைநின்றுநின்றதாளி னூருவின்மேலொருதாளையூன்றியொன்றுங், கருதாமன்மனமடக்கிவிசும்பினூடுங்கதிரவனைக்கவர்வான்போற் கரங்கணீட்டி, யிருதாரைநெடுந்தடங்கண்ணிமையாதோரா யிரங்கதிருந்தாமரைப்போதென்னநோக்கி, நிருதாதியரின்மனுவாய்த்தவஞ்செய்வாரி னிகரிவனுக்கார்கொலெனநிலைபெற்றானே. (௧௯)

* தோற்றியதெம்மிடத்தேயித்தோன்றன்மாலைசூட்டியபொற்றொடியென்றேதுரகம்பொற்றேர், கூற்றியல்வெஞ்சிலைபாணந்தூணிநாணிருரக்குநெடுங்கொடிமுன்னங்கொடுத்தேமென்றே, காற்றினுடன்விரைவுறச்சென்றருந்துமாறுகாண்டவனம்பசிக்களித்தகாலையென்றே, நாற்றிசையும் வளர்த்தழற்கடவுளந்தரனுடலங்குளிர்விக்குநாரம்போன்றான். (௨௦)

* வலப்பாகஞ்செழும்பவளச் சோதியென்னவாணீலச் சோதியென்னமற்றப்பாகம், கலப்பானதிருமேனியணிந்தநீற்றுற் கதிர்முத்தின்சோதியெனமேனையீன்ற, குலப்பாவையுடன்கயிலைக்குன்றில்வாழ்விற் குன்றுடையோன்றிருக்கோலங்குறிப்பாலுன்னி, புலப்பாடுபுறம்பொசியமார்புந்தோளும் பூரித்தானுடல்புளகம்பாரித்தானே. (உக)

* கருந்தருகல்லெனக்கருதிப்பிடியுங்கன்றுங்களிற்றினமுமுடனுறிஞ்சக்கரையானேரிப், பொருந்துமுழைப்புற்றெனப்புயங்கமூர பூங்கொடிகண்மரனென்றுபாங்கேசுற்றப், பரிந்துவெயிலுண்மழைநாள்பனிநாளொன்று பாராமனெடுங்காலம்பயின்றுன்மண்ணி, லருந்தவமுன்புரிந்தோரிவனைப்போன்மற்றூர்புரிந்தார்சிவசிவவென்றறியவாறே. (உஉ)

* பகீரதனேமுதலானவெண்ணில்கோடிபார்த்திபருந்தவம்புரிந்தார்பைம்பொன்மேனி, யிகலவுணர்முதலானககனவான ரெத்தனைபேர்தவம்புரிந்தாரிமையோரேத்து, மகபதிதன்மதலையிவனெழுதொணாதவனப்பினுக்குவரிசிலைக்கைமதவேளொவ்வான், சகலகலைகளுக்குமிவன்றானேயிங்ஙன் தவம்புரியநினைப்பதேசார்ந்தபாவம். (உ௩)

வேறு.

* பண்ணுக்குவாம்பரித்தேராதபனும்பணிந்துபசுபதியைநோக்கி
மண்ணுக்குத்தவம்புரியுந்தனஞ்சயர்க்குக்கோடையினுமதியம்போன்று
னெண்ணுக்குவரும்புவனம்யாவினுக்குங்கண்ணுவானிவனேயன்றோ
தண்ணுக்குப்புனைமணிப்பூண்கண்ணேட்டமென்பதெல்லாங்கருணையன்றோ.

வேறு.

* அங்கியாலங்கியைவெதுப்பிவெம்மையைப்
பொங்கியவாயுவாற்போக்கிமெய்ச்சிரந்
தங்கியவமுதினுற்றண்ணெனும்படி
யிங்கிதத்தொடுக்கினன்யிதையந்தன்னையே. (உ௫)

* ஈண்டிதன்கருத்திலேயடியைந்தமாதவம்
பூண்டிளமதிமுடிப்புண்ணியன்றனை
வேண்டியவாறெலாம்விருப்பொடுன்னினன்
பாண்டியனுயர்குலப்பாவைகேள்வனே. (உ௬)

* நிரந்தரமனேகநாணினைவுவேறற
வுரந்தருபுலன்களையொடுக்கியாயுத
மிரந்தனன்வரையிடையியற்றுநற்றவம்
புரந்தரனிந்துமெய்ப்புளகமேறவே. (உ௭)

* குருவுடன்விரகுறக்கூறியீசனை
மருவுறுகொன்ஞற்றநாண்மாலைமௌலியைக்
கருமயில்பாகனைக்காண்டல்வேண்டிய
திருமகன்றவநிலைதெரியவுன்னினன். (உ௮)

* சாரணரியக்கர்விச்சாதரர்முதற்பலருஞ்செஞ்சொ
லாரணப்படியேசூழ்ந்தவடவிகடோறும்வைகி
நாரணன்மலரோனும்பர்நாயகன்பதங்கணச்சிக்
காரணத்தவஞ்செய்வோரைக்கண்டுகண்டுவகைகூர்ந்தான். (௧௩)

* அரியும்வெங்கரியுந்தம்மிலமர்புரிமுழக்கங்கேட்டுங்
கிரியினின்முழக்கங்கேட்டுங்கிராதர்போர்முழக்கங்கேட்டு
மெரிகிளர்முழக்கங்கேட்டுமெம்பிரானிமவான்றந்த
புரிகுழலோடும்வைகும்புண்ணியப்பொருப்பைச்சேர்ந்தான். (௧௪)

* கைமலையுரிவையோடுகட்செவிக்கச்சுஞ்சாத்துஞ்
செம்மலைவிழியிற்காணுஞ்சிந்தையாற்கண்டுபோற்றி
அம்மலைச்சாரலேறுமருந்தவம்புரினர்கூற
விம்மலைநீங்கியாங்கண்மெய்த்தவவிரதனானான். (௧௫)

* எயிலொருமூன்றுஞ்செற்றோனேந்திழையுடனேவைகுங்
கயிலையின்பெருமைதன்னைக்கட்டுரைசெய்வதெங்ஙன்
வெயிலவன்முதலோர்நாளுமேம்படவலஞ்செய்வார்க
ளயிலுநல்லமுதோர்சூழ்வந்தன்புடன்போற்றுவாரே. (௧௬)

* உருகியவெள்ளிபோலவுயர்முழைதோறும்வீழு
மருவிநீர்புனிதன்வேணியமருமாநதியிற்றோன்ற
வுருகியபனிவான்குன்றிலொண்பனிக்கடவுள்வந்து
மருவியதென்னத்தோன்றும்வருணமால்வரையின்றென்பால். (௧௭)

வேறு.

* ஆசினான்மறைப்படியுமெண்ணில்கோடி யாகமத்தின்படியுமெழுத்தைந் துங்கூறிப், பூசினான்வடிவமெலாம்விபூதியாலப்பூதியினைப்புரிந்தசடைப்புறத் தேசேர்த்தான், தேசினாலப்பொருப்பின்சிகரமேவுஞ் சிவனிவனேபோலுமெ னத்தேவரெல்லாம், பேசினார்வரிசிலைக்கைவிசையன்பூண்டபெருந்தவத்தினிலை சிலர்க்குப்பேசலாமோ. (௧௮)

* ஒருதாளின்மிசைநின்றுநின்றதாளி னூருவின்மேலொருதாளையூன்றி யொன்றுங், கருதாமன்மனமடக்கிவிசும்பினோடுங்கதிரவனைக்கவர்வான்போற் கரங்கணீட்டி, யிருதாரைநெடுந்தடங்கண்ணிமையாதோரா யிரங்கதிருந்தாம ரைப்போதென்னநோக்கி, நிருதாதியரின்மனுவாய்த்தவஞ்செய்வாரி னிகரிவ னுக்கார்கொலெனநிலைபெற்றானே. (௧௯)

* தோற்றியதெம்மிடத்தேயித்தோன்றன்மாலைசூட்டியபொற்றொடியென் றோதுரகம்பொற்றோர், கூற்றியல்வெஞ்சிலைபார்ணந்தூணிநாணிஞுரக்குநெடுங் கொடிமுன்னங்கொடுத்தேமென்றோ, காற்றினுடன்விரைவுறச்சென்றருந்து மாறுகாண்டவனம்பசிக்களித்தகாலேயென்றோ, நாற்றிசையும் வளர்த்தழற் கடவுளந்தநரனுடலங்குளிர்விக்குநாரம்போன்றான். (௨௦)

* வலப்பாகஞ்செழும்பவளச் சோதியென்னவாணீலச் சோதியென்னமற் றப்பாகம், கலப்பானதிருமேனியணிந்தநீற்றுற் கதிர்முத்தின்சோதியெனமே னையின்ற, குலப்பாவையுடன்கயிலைக்குன்றில்வாழ்விற் குன்றுடையோன்றிரு க்கோலங்குறிப்பாலுன்னி, புலப்பாடுபுறம்பொசியமார்புந்தோளும் பூரித்தா னுடல்புளகம்பாரித்தானே. (உக)

* கருந்துருகல்லெனக்கருதிப்பிடியுங்கன்றுங்களிற்றினமுமுடனுறிஞ்சக் கரையானேரிப், பொருந்துமுழைப்புற்றெனப்புயங்கமூர பூங்கொடிகண்மர னென்றுபாங்கேசுற்றப், பரிந்துவெயினுண்மழைநாள்பனிநாளொன்று பாராம னெடுங்காலம்பயின்றான்மண்ணி, லருந்தவமுன்புரிந்தோரிலிவனைப்போன்மற் றூர்புரிந்தார்சிவசிவவென்றரியவாறே. (உஉ)

* பகீரதனேமுதலானவெண்ணில்கோடிபார்த்திபருந்தவம்புரிந்தார்பைம் பொன்மேனி, யிகலவுணர்முதலானககனவான ரெத்தனைபேர்தவம்புரிந்தாரி மையோரேத்து, மகபதிதன்மதலையிவனெழுதொணுதவனப்பினுக்குவரிசிலைக் கைமதவேளொவ்வான், சகலகலைகளுக்குமிவன்றானேயிந்நன் தவம்புரியநினை ப்பதேசார்ந்தபாவம். (உ௩)

வேறு.

* பண்ணுக்குவாம்பரித்தேராதபனும்பணிந்துபசுபதியைநோக்கி
மண்ணுக்குத்தவம்புரியுந்தனஞ்சயர்க்குக்கோடையினுமதியம்போன்று
னெண்ணுக்குவரும்புவனம்யாவினுக்குங்கண்ணுவானிவனேயன்றோ
தன்னுக்குப்புனைமணிப்பூண்கண்ணேட்டமென்பதெல்லாங்கருணையன்றோ.

வேறு.

* அங்கியாலங்கியைவெதுப்பிவெம்மையைப்
பொங்கியவாயுவாற்போக்கிமெய்ச்சிரந்
தங்கியவமுதினுற்றண்ணெனும்படி
யிங்கிதத்தொடுக்கினன்யிதையந்தன்னையே. (உ௫)

* ஈண்டிதன்கருத்திணுடியைந்தமாதவம்
பூண்டுளமதிமுடிப்புண்ணியன்றனை
வேண்டியவாறெலாம்விருப்பொடுன்னினன்
பாண்டியனுயர்குலப்பாவைகேள்வனே. (உ௬)

* நிரந்தரமனேகநாணிணைவுவேறற
வுரந்தருபுலன்களையொடுக்கியாயுத
மிரந்தனன்வரையிடையியற்றுநற்றவம்
புரந்தரனறிந்துமெய்ப்புளகமேறவே. (உ௭)

* குருவுடன்விரகுறக்கூறியீசனை
மருவுறுகொன்றைநாண்மாலைமௌலியைக்
கருமயில்பாகனைக்காண்டல்வேண்டிய
திருமகன்றவநிலைதெரியவுன்னினன். (உ௮)

* அரும்பகைவலிமையாலவுணரூர்சுடும்
பெரும்பிறையணிமுடிப்பிஞ்ஞகன்றன
திரும்பகழிகள்பெறவெண்ணியேகொலாம்
விரும்பியதித்தவம்வில்வலானரோ. (உகூ)

* நற்றவத்துறுதியுநரன்கருத்துநா
முற்றறிகுவமெனமுன்னுஞ்சிந்தையான்
கற்றையஞ்சடையவன்கயிலையங்கிரி
வுற்றறிவுறுவதற்குபாயமெண்ணினான். (௩0)

* தூநகையுருப்பசியரம்பைதொண்டைவாய்
மேனகைதிலோத்தமையென்றுவேலையின்
மானெனமயிலெனவந்தமாதரீ
ரானவாறறிதிர்போயவன்றனெண்ணமே. (௩௧)

* என்றுகொண்டிந்திரனியம்பமற்றவன்
றன்றியபேரவைத்தோற்றமிக்கவர்
குன்றிரண்டெடுப்பதோர்கொடிமருங்குலார்
சென்றனரவ்வுழிச்செய்யவாயினர். (௩௨)

* காமனைநினைத்தனர்காமராசனும்
மாமலர்வாளியுமதுரசாபமுந்
தேமருமலர்க்கையிற்சேர்த்துச்சேனையோ
டாமுறைபுகுந்தனனரனையஞ்சுவான். (௩௩)

* செந்தமிழ்வரைதருதேரன்செக்கர்வா
னந்தியானையன்மதியாதபத்திரன்
சிந்துவெம்முரசினன்செவ்விகூரவே
வந்தனன்காலமும்வசந்தமாக்கியே. (௩௪)

வேறு.

* கந்தனையளித்தகன்னியோர்பாகங்கலந்தமெய்க்கண்ணுதற்கெதிராய்
செந்தமிழுரைத்தகுருமுனியிருந்ததெய்வமால்வரையிடைத்தோன்றி
யிந்துவுமரவுமுறவுசெய்முடிமேலிருந்தமந்தாகினியருவி
வந்திழிபுனலுஞ்சந்தனங்கமழவந்துமந்தமாருதமே. (௩௫)

* வம்பருமதுரப்பல்லவங்கோதிமாமகரந்தமாகந்தக்
கொம்பெலாமிருந்துகுயிலினங்கூவக்கொற்றவெஞ்சிலையினுன்முன்னஞ்
சம்பராசுரனைவென்றவீரனைப்பைந்தாமமாமணிமுடிசூட்டி
யெம்பிரான்முனிவுக்கஞ்சலென்பதுபோலியைந்ததுவசந்தகாலமுமே. (௩௬)

* பூதமைந்தினையும்புலத்துடனடுக்கிப்புரிசடையுடன்புருகூதன்
காதலம்புதல்வனருந்தவம்புரிதல்கண்டுபாவிப்பனபோல
மாதிரந்தொறுஞ்செம்பல்லவச்செந்தீவளர்த்துவான்மணியிணைநோக்கி
பாதமொன்றினினின்றுயர்ந்தனவொளிகூர்பணையுடைப்பாதபங்களுமே. ()

* உள்ளுறக்கலக்கமறத்தெளிந்தசலத்துயர்தலைமுழைபினின்றருவி
வெள்ளமொத்தமுதங்கரையறப்பொழியவெம்மையற்றளியுடல்குளிர்ந்து [ய்
புள்ளுடைக்கொடியோரிருவருங்காணுப் புண்ணியன்பொருப்பிடைத்தவஞ்செ
வள்ளலொத்தனவச்சாரலைச்சூழ்ந்துவயங்குநீள்வாவியுஞ்சுனையும். (௩௮)

* நீறுபட்டிலங்குமெய்ந்நிலவொளியானெஞ்சினிலிருளினையகற்றி
மாறுபட்டிடுமைம்புலன்களுமொடுக்குமாதவன்வளர்த்தசெந்தழலாற்
கூறுபட்டுமையோடொருவடிவானோன்குன்றுசூழறைபொறையனைத்து
மாறுபட்டுருகிப்பெருகியோடினவாலம்மலைவெள்ளியாதலினால். (௩௯)

* அலைந்தடங்கடலிலமுதொடுற்பவித்தாங்கமரர்வாழ்பதிகுடிபுகுந்தோர்
குலைத்துமென்றெண்ணியொருவருக்கொருவர்கொடியிடைநுடங்கவந்தந்த
மலைத்தடநெருங்கப்புகுந்தனர்குயிலுமயூரமுமானுமேயனையார்
நிலைத்தவம்புரிவோனவகைநெருப்பினடுவுறநின்றவாகண்டார். (௪0)

மழைமதவருவிக்கிரிதருஞ்செங்கைக்கொங்கர்கோன்வாகைவேந்தனைப்போ
லெழுபொழிலிடமுஞ்சூதமுந்தழைப்பவினியபேரிசையுடன்றேன்றி
யழகுடன்மடவார்கண்ணெனப்புகலவாடவர்தலைக்கொளுநறும்பு
வுழுகொழுவளங்கொள்பயனெலாம்விருந்தோடுண்டனவண்டினமொருபுறல். ()

* அந்தரத்தமரர்துந்துபிமுழங்கவனங்கதுந்துபியெதிர்முழங்க
வந்துபொற்சிலம்புமேகலைவிதமுமலர்க்கைவெள்வளைகளுமுழங்கப்
பந்தடித்திடுவாரம்மனையெறிவார்பயில்கழங்காடுவார்நெற்றிச்
சிந்துரத்திலகந்தீட்டுவாராகித்தனித்தனிதிசைதொறுஞ்சூழ்ந்தார். (௪௨)

* குயிலொடுகூவிக்கிஞ்சுகமலர்ந்துகொஞ்சுபைங்கிளிகளையழைப்பார்
மயிலினநடிக்கத்தாமும்வண்கலாபமணியணியொளியெழநடிப்பார்
வெயில்விடுபரிதிமதியுடன்வலஞ்செய்விடரகமுழுவதுமொலிப்பக்
கயிலையங்கிரியின்சாரலோவெம்மூர்க்கடவுளாலயமெனக்களிப்பார். (௪௩)

* கூந்தன்மாமுகிலைக்குலைத்துடன்முடிப்பார்குங்குமங்கொங்கைமேலணிவா
ரேந்துபேரல்குற்கலைநெகிழ்த்துடுப்பாரிட்டவுத்தரியமாற்றிடுவார்
பூந்துகிலனையநறுஞ்சுனைபடிவார்புழுகுசந்தனநறும்பனிநீர்
காந்திகொடெறிவார்காமவேதத்தைக்கருங்கடைக்கண்களான்மொழிவார். ()

* பண்ணுடையெழாலினின்னிசைவழியேபாடுவார்பைங்குழல்குறிப்பார்
பெண்ணுடைமடநாணகன்றபேரமளிப்பேச்செலாம்பேசிவந்தடுப்பார்
விண்ணுடையமிர்தம்பருகுவாருகிரான்மென்மலர்கொய்துமேலெறிவா
ரெண்ணுடைமடவார்புரிந்தனவிவ்வாறிங்கிதமெத்தனைகோடி. (௪௫)

* காவும்வண்புரவுங்கயங்களுமரும்பக்கவர்ந்தவெங்கணைகளாமைந்து
பூவும்வந்துள்ளமுறவுறப்பட்டுப்புதையவும்புலன்வழியின்றி
மேவுதன்கருத்தின்வழியிலேநின்றவிசயனையங்கிபால்வில்லு
மேவுமுன்பெற்றவிறைவனையெய்தெய்தினைத்தனனிரதிகேள்வனுமே. (௪௬)

* கூற்றினையுதைத்தபாதமுமுடுத்தகுஞ்சரத்துரிவையுமணிந்த
நீற்றொளிபரந்துநிலவெழுவடிவுநிலாவெயிலனலுமிழ்விழியு
மாற்றறல்பரந்தகொன்றைவார்சடையுமல்லதையாவையுங்கருதான்
மாற்றமொன்றின்றிநின்றனன்வரைபோல்வச்சிராயுதன்றிருமகனும். (௪௭)

* அன்றறனிருந்தயோகினையகற்றியறிவிலாதநங்கனாவெந்த
குன்றிதுதடங்கணாயிரமுடையோன்கூறியகூற்றினைத்தேறி
யின்றிவன்மதலைபுரிதவங்குலைத்தாலென்விளைந்திடுமெனவஞ்சி
நின்றிலன்மதனனிற்குமோநெற்றிநெருப்பினானீறுபட்டுள்ளோன். (௪௮)

* வானவர்பெருமானேவலால்வந்தவானவர்மகளிருந்தம்மா
லானவக்கிரீடையாவையும்புரிந்துமொருபயன்பெற்றிலரகன்றார்
கானகமுழுதும்பரிமளம்பரப்பிக்கானவண்டிமிர்தரப்புகுந்த
வேனிலுமகன்றதருக்கனுங்குடபால்வெண்டிரைவேலைவாய்வீழ்ந்தான். (௪௯)

வேறு.

* இந்திரன்சுதன்றன்னெண்ணம்யாவதென்றினிதினெண்ணி
இந்திரசாலமாகவேவினாரெவருமெய்தி
யிந்திரநீலந்தன்னிலிறைவனுக்குரைத்தாரந்த
யிந்திரன்றானுமைந்தன்றவம்புரியிருக்கைசேர்ந்தான். (௫௰)

* விருத்தமாமுனிவனாகிவிசயனைநோக்கியாது
கருத்துநீதவஞ்செய்கின்றகாரணமென்னையென்னத்
திருத்தகுசிந்தையோடுஞ்செந்தழலிடைநின்றோனு
மருத்துவானுருவமாறிவந்தவாறுணர்கிலாதான். (௫௧)

* மாசறுமதியமன்னவாண்முகமங்கைபாகத்
தீசன்வந்தெய்துகாறுமித்தவம்புரிவேனென்ன
வாசருகடவுளோர்க்குமருமறைதனக்குமெட்டாத்
தேசவன்வருமோவென்றுசிரித்தனன்றேவர்கோமான். (௫௨)

* சிரித்ததென்னென்னமீண்டுந்திருமகன்றன்னைநோக்கி
வருந்தமேயன்றியிந்தமாதவம்பயனின்றென்றா
னுருத்திவனவனைநோக்கியுயிரிறுமளவுமிந்தக்
கருத்துநான்விடேனென்றான்கடுங்கனலூடுநின்றான். (௫௩)

* மைந்தனிம்மாற்றங்கூறமனனுறமகிழ்ந்துதெய்வத்
தந்தையும்விருத்தவேடந்தனையொருகணத்தின்மாற்றி
யிந்திரனாகிமுன்னின்றிப்பெருந்தவத்தால்வந்து
பைந்தொடிபாகன்பாசுபதமுனக்குதவுமென்றான். (௫௪)

* என்றுரைத்தமரர்கோமானேகியபின்னர்வெள்ளிக்
குன்றுடைப்புனிதன்பாதங்குறிப்புறுமனத்தனாகி
நின்றுநற்றவஞ்செய்கின்றநெடுந்தகைநீர்மையெல்லாஞ்
சென்றுமைக்குரியரானசேடியர்செப்பினாரே. (௫௫)

* மேனைமுன்பெற்றகிள்ளைவேலையுஞ்சேலிஞேடு
மானையும்பொருதசெங்கண்மரகதவல்லிகேட்டுத்
தானையுங்கரியபேருந்தரியமுமாகச்சாத்த
வானையன்றுரித்தநக்கற்கடிபணிந்தருளிச்செய்தாள். (௫௪)

வேறு.

* ஆலமுண்டமுதம்பொழிதருநெடுங்கணம்பிகையருண்மொழிகேட்டு
நீலமுண்டிருண்டகண்டனுமிரங்கிநிரைவளைச்செங்கையாய்நெடிது
காலமுண்டருள்கூரறத்தின்மைந்தனுக்குங்காற்றின்மைந்தனுக்குநேரிலையான்
ஞாலமுண்டவனுக்குயிரெனச்சிறந்தோனரனெனுநாமமும்படைத்தோன். ()
* ஆடியன்னனன்றன்மதலையர்விரகாலாடிபகுதினுக்கழிந்து
காடுதாமுறையுங்கடனினரவரிற்கடவுளுயகன்றருகானை
நீடுபேரமரிற்பகைவரைச்செகுக்குநினைவினனெருப்பிடைநம்மை
நாடியேயரிதிற்றவம்புரிகின்றனுமிதுமுன்னமேயறிவோம். (௫௮)
* பருகுநீர்துறந்துகாற்றும்வெவ்வெயிலும்பாதபங்களின்சினையுதிர்ந்த
சருகுமேயொழியக்காய்கனிகிழங்குந்தானினிதருந்துதறவிர்ந்தா
னுருகுமாமனத்தைநாமுவந்திருத்தற்குறைபதியாக்கிநம்மிடத்தே
செருகினனுணர்வையாவரேயிவன்போற்செய்தவஞ்சிறந்தவரென்றான். (௫௯)
* போகமாய்விரிந்தும்போகியாய்ப்பரந்தும்புலன்களின்வழிமனஞ்செலுத்தா
யோகியாயிருந்தும்யோகிகண்முதலாமுரைப்பரும்பலபொருளாயு
மேகமாய்நின்றுந்தத்துவமறைக்குமெட்டுதற்கரியதன்வடிவிற்
பாகமாய்விளங்கும்பைந்தொடியுடனேபரிவுடன்சின்மொழிபகர்வான். (௬௦)
* கேட்டிநீசெவ்வாய்க்கிளிநிகர்மொழியாய்கிரீடியைத்துணைவர்களுடனே
காட்டிலேயொதுக்கியிளைஞருந்தானுங்கடியவஞ்சனையினாற்கவர்ந்த
நாட்டிலேவாழ்வோனேவலான்மூகநாமதானவனிவன்றன்னைக்
கோட்டிலேகொலைசெயேனமாய்வந்திக்குன்றிடையின்றுபுக்கனனால். (௬௧)
* மற்றவன்விரைவினுடனமர்மலைந்துவாசவன்மதலையைவதைத்து
நற்றவமகற்றுமுன்னமேவிரைந்துநாமுயிர்கவருதல்வேண்டுங்
கொற்றவன்மதலைகேட்டனவரங்கள்கொடுத்தலும்வேண்டுமென்றெழுந்தான்
கற்றவர்வளைத்துத்திரிபுரமெரித்தோன்கற்றவர்கருத்தினாற்காண்போன். (௬௨)
* நனைமலர்சிதறித்தொழுதுமுன்னின்றநந்திமேனயனம்வைத்தருளி
வினைபடுகேழல்வேட்டைநாமின்றேவேடராயாடுதல்வேண்டு
நினைவுறவெமதுகணத்தொடிக்கணத்தேநீயுமவ்வுருக்கொளுகென்று
மனைவியுந்தானுங்கிராதர்தங்குலத்துமகிழ்நனும்வனிதையுமானார். (௬௩)

வேறு.

* என்றபொழுதினினந்திமுந்திமுதற்கூற்றுதைத்தவிருதாள்போற்றி
வென்றிபுனைகணநாதர்க்குரைசெய்தானவர்களுமவ்வேடங்கொண்டார்
கொன்றைநகமழ்முடியோனும்பிஞ்ஞகத்தைப்பின்னல்படுங்குஞ்சியாக்கி
துன்றுமயிற்பீலிநெடுங்கண்ணிதிருநெற்றியினுஞ்சுற்றினனே. (௬௪)

* நீலமணித்திருக்கண்டநிலவெழவேபலகறைப்பூணிறையக்கட்டிக்
கோலமணிக்குழைகளினுங்குழையாகப்பிணையன்மலர்கொண்டுசாத்திச்
சேலையெனப்புலியதளுந்திருமருங்கினுறச்சேர்த்திச்செய்யபைம்பொற்
காலிணையிற்செருப்பணிந்துசெய்யதிருவடிவுமிகக்கரியனானான். (௬௫)

* இடக்கைமலர்வரிசிலையும்வலக்கைமலர்பாணமும்வெந்நிடையேபாண
மடக்கியவெங்கொடுவரித்தோலாவநாழிகையுமிகவழகுகூரக்
கடக்களிறன்றுரித்தபிரான்கண்டவர்கள்வெருவரமுன்கொண்டகோலந்
தொடக்கியுரைசெயநினைக்கிலாயிரநாவுடையோர்க்குஞ்சொல்லலாமோ. (௬௬)

வேறு.

* குறைந்தசந்திரகிரணமும்பீலியுங்கொன்றையுந்திருந்தாரும்
புறந்தயங்கிடவிழுந்தசெந்தனிச்சடைப்பொலிவைபார்புகல்கிற்பார்
சிறந்தபைம்பொலங்கிரிமுடியடியுறத்தேவர்கோன்றிருச்செங்கை
நிறந்தருஞ்சிலைவளைவறவழகுறநிமிர்ந்துநின்றதுபோலும். (௬௭)

வேறு.

* வரையரசன்றிருமடந்தைவனமுலைமேன்மணிக்குன்றிவடமுஞ்செங்கை
நிறைவளையும்புலிப்பல்லாணிறந்திகழ்மங்கலப்பூணுநீலமேனி
விரையகிலினறுஞ்சாந்தும்விரித்ததழைப்பூந்துகிலும்வேடமாதர்
நிரைநிரையேதனைச்சூழநின்றவடிவழகினுக்குநிகர்வேறுண்டோ. (௬௮)

* ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்த
போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்புனங்களெல்லாஞ்
சீரேனல்விளைகிரிக்குத்தேவதையாங்குழவியையுஞ்செங்கையேந்திப்
பாரேனையுலகனைத்தும்பணிவுடனேபுகழ்ந்திடத்தன்பதிபின்வந்தாள். (௬௯)

* அனந்தவேதமுமிறைவனேவலினான்ஞானிகளாயருகுசூழ
வனந்தகோடியிற்கோடிகணநாதர்வேட்டுவராயருகுபோத
வனந்தனாலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வனந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கினானடவியெல்லாம். (௭0)

* மூகதானவனிவன்மேன்முந்தியுயிர்கவருமெனுஞ்சிந்தையானப்
பாகசாதனிதவஞ்செய்பாக்கியபூமியைநோக்கிப்பரிவினோடு
மேகசாபமும்வணக்கியேகினானேகுதலுமிலங்குவெண்ணீற்
றாகனானோக்கப்பட்டானாகியதாலருந்தவன்மேலந்தவேனம். (௭௧)

* அதிர்ந்துவருகேழலைக்கண்டருந்தவத்தையழிக்குமெனவஞ்சினானு
முதிர்ந்தசருகுணவொழியவுணவிலான்விரவினிற்றன்னொருவில்வாங்கி
முதிர்ந்தசினத்துடன்னெய்தான்முகம்புதையவக்கணைக்குமுன்னேயண்டம்
பிதிர்ந்திடவின்னாணெறிந்துவேடனதன்பராங்கம்பிளக்கவெய்தான். (௭௨)

* இருவருமேவியவாளியுடனேபட்டுடலுருவியேனம்வீழ
வெருவருமாறடவியெலாந்தடவிவரும்வெஞ்சிலைக்கைவேடன்சேனை
யொருவன்முதலெய்திருக்கவவ்விலக்கைநீயெய்ததறனோவென்று
பொருவருமாதவம்புரியும்புருகூதன்மதலையுடன்பூசலிட்டார். (௭௩)

வேறு.

* புராதனுகமவேதகீதபுராணரூபமொழித்துவெங்
கிராதனுகியவடிவுகொண்டகிரீசனேடுரைசெய்குவான்
விராதனுதிநிசாசரேசரைவென்றுமுச்சிகரத்தின்மே
லிராதவாறடலமர்புரிந்தவிராமனேநிகரேவினுன். (எச)

* முன்புவிட்டவென்வாளிகேழன்முகம்பிளந்துபினுருவநீ
பின்புவிட்டசரஞ்சிரத்திடையுருவுமாறுபிளந்ததால்
வன்பொடிப்படிபுகலுகின்றதுவன்மையோதிறல்வின்மையோ
வென்பெயர்ப்பொறியேவுபாரிதனுடலினீவிடுமேவுபார். (எரு)

* எனக்கருந்தவமுயறலாலுதிர்சருகலாலுணவில்லையா
லுனக்குமுன்படைவேடருக்குநல்லுண்டியாமிதுகொண்டுபோ
வனக்குறும்பொறைநாடவுன்படைவலிமைகொண்டுவழக்கறச்
சினக்கில்வெங்கணைவிடுவன்யானுயர்திசைதொறுந்தலைசிந்தவே. (எசு)

வேறு.

* என்றமொழிசெவிப்படலுமெயினர்க்கெல்லா மிறைவனுகியவெயினனி வணேநோக்கிப், புன்றிபெருமோகரத்தோடின்றுன்னுவி பருகியிடுமெனமிகவும் பயப்பட்டாயோ, நின்றுபெருந்தவமுயல்வோர்தாங்கள்கொண்ட நிலைவொழி யப்புறத்தொன்றுநினைவரோசொல், பொன்றிடினுநீயறியப்பசுத்தோல்போர் த்துப்புலிப்பாய்ச்சல்பாய்வரோபுரிவிலாதாய். (எஎ)

* மறையவனேவொருகுடைக்கீழ்வையங்காக்குமன்னவனேவைசியனே வடிவமாறிப், பொறையுடனேதவம்புரியுமவுணர்மாக்கள்புத்தேளிர்நிருதரிலோ ர்புறத்துளானே, நிறைவுடன்மெய்ப்பிறைபோலவடிவந்தேய்ந்துநெருப்பிடை நீநிற்கின்றுய்நெடுநாளுண்டு, குறையுனக்கியாதுரையென்றுனென்றபோதக்கு ருகுலநாதனுந்தன்னைக்கூறினுனே. (எஅ)

கூறியசொற்கொண்டறிந்துவேடன்மீண்டுங் குருகுலத்தோரைவருளுங் குனிவிற்கற்றுச், சீறிவருதுருபதனைத்தேரிற்கட்டிச்சென்றுகுருதக்கிணைசெ ய்சிறுவனீயோ, வீறியலெங்குலத்திலொருவேடன்றன்னைவின்மைபொறுதவ ன்றடக்கைவிரலுங்கொண்டாய், பேறறவன்ருெருமுனிவன்வார்த்தைகேட்டு ப்பிளந்தனைபல்வேடுவரைப்பிறைவரயம்பால். (எகூ)

* கன்றிவருதன்றக்கடவுள்கையிற்றேருங்காண்டவக்கார்முகமுங்கணையும் வாங்கி, யொன்றுபடக்காண்டவக்கானெரித்தநாளிலோருயிர்போற்பலயோனி யுயிருமாட்டிக், குன்றுதொறுங்குன்றுதொறுமிருந்தவேடக்குழாமனைத்துநீறு படக்கொன்றுயென்ப, ரின்றுமெனைமுகநோக்கிவன்மைவின்மையிரண்டுக்கும ன்னவநீயிகழ்ந்திட்டாயே. (அ௦)

* மல்லுக்கும்புயவலிக்குங்கலக்குறுதமனவலிக்குமறையுடன்போர்வாளி யேவும், வில்லுக்குமுனின்மிகுத்தார்மண்மேலுண்டோவிசயனெனும்பெயர்க் குரியவிசயத்தாலே, சொல்லுக்குவிடேனின்றுநீயுநானுந்தோள்வலியுஞ்சிலைவ லியுங்காண்டல்வேண்டும், கல்லுக்குநிகர்மனத்தாயென்றுனந்தக்காளையும்வில் வளைத்தொருவெங்கணைமேல்விட்டான். (அக)

* விட்டகொடுங்கணையையொருகணையால்வேடன் விலக்கிவரிசிலைக்குரிய வீரன்றன்மேற், றொட்டனனோரிரண்டுகணையவைபோய்மார்புந் தோளுமுடன்றுளைத்தனவாற்றுளைத்தபோது, கட்டழலினிடைநின்றகாலைமீளக்கடுங்கணைகளொருமூன்றுகடிதின்வாங்கி, வட்டநெடும்பீலியணிமுடியுமார்பும்வாகுவுமேயிலக்காகவலியொடெய்தான். (அ௨)

* எய்தகணை திருமேனியெய்துமுன்ன ரிறகுதுணிந்தொன்றிரண்டாயிலைக்குறுமல், வெய்தின்வலியுடனெய்தான்மூன்றுவாளி விண்ணவர்கோன்மகன்மேலும்வேறொன்றெய்தா, னைதினிவன்வினோதமுறத்தொடுத்தானென்பதறியாமலெயினன்முடியணிந்தபீலி, கொய்துநதியறல்சிதறப்பிறையுமானுங்குலையவொருகணைகுரக்குக்கொடியோனெய்தான். (அ௩)

* அற்போலச்சூழ்கின்றகிராதரெல்லா மவன்முடிமேலிவனெய்ததறிந்துதீயி, னிற்போன்மேலெழுதலுமங்கவரையெல்லாநில்லுமெனக்கையமர்த்திநீயின்றெய்த, விற்போர்கண்டனமடடாவிற்பிடிக்கும்விரகறியோமுன்னிடத்தேவேதவிற்போர், கற்போமென்றொருகணைமற்றவன்மேல்விட்டான்கனகமலைச்சிலைவளைத்தகையினானே. (அ௪)

வேறு

* பீலிமுடியோன்விடுபிறைக்கணையைவேறொருபிறைக்கணையினால்விலகிவிற்
கோலிவடிவாளிமழைசிந்தினன்மழைக்கரியகொண்டலெனநின்றகுமரன்
மூலிவடிவாமெயினன்மேலவைபடாமன்முனைமண்மிசைகுளிக்கமுரணோர்
வேலியிடுமாறெனவிழுந்தனவிழுந்ததனைவிசயனனிகண்டுவெகுளா. (அ௫)

* வேணிமுடிவேடன்மிசைவேறுமொருசாயகம் விடுத்தனன்விடுத்தகணையின்
ஞாணியொடுமுன்பினொடுபின்புதொடுகின்றகணைநடுவணறவெட்டுதலுமே
கோணியவிளம்பிறைமுடித்தவன்வெகுண்டுபலகோல்கள்விடவிந்திரகுமரன்
பாணியுடனேதொடைநடுங்கியயனின்றதொருபாதபமருங்கணுகினான். (அ௬)

* கொண்டதவமேதனமெனப்புரியும்வில்லிமெய்குலைந்தயருகின்றநிலையைக்
கண்டருகுநின்றவிமவான்மகளுரைக்கமிகுகருணையொடிரங்கியவனைப்
பண்டுதவமேபுரியிளைப்பறமனத்தின்மிகுபரிவுடையனாகிவெகுளா
வெண்டிசையும்வென்றனலளித்தசிலைநாணியறவெயினர்பதியெய்தனனரோ. ()

உழுந்துருளுமெல்லைதனில்வில்லினெடுநாணறவுரத்தொடெதிரோடிவரிவிற்
கழுந்துகொடுமாமுடியின்மோதுமுனிழந்ததுயர்கண்ணிபடுபீலிமதியின்
கொழுந்தமுதுசோரவிடநாகர்சுடிகைத்தலைகுலைந்துமணிசிந்தநதியா
ளெழுந்துதடுமாறியகல்வானிலுறவேட்டுமிளைத்தவசமுற்றனனரோ. (அ௮)

* விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கண்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகீபன்முதலோ
ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ. (அ௯)

* வேதமடியுண்டனவிரிந்தபலவாகமவிதங்களடியுண்டனவொரைம்
பூதமடியுண்டனவிநாழிகைமுதப்புகல்செய்பொழுதொடெலிப்பில்பொருளின்
பேதமடியுண்டனபிறப்பிலியிறப்பிலிபிறங்கலரசன்றன்மகளார்
நாதனமலன்சமரவேடவடிவங்கொடுநரன்கையடியுண்டபொழுதே. (கூ௦)

* என்பொடுகொழுந்தசைநிணங்குருதியென்றுமவையீரிரண்டானும்வயிரா
வன்பொடுவளர்ந்தமிருகாதிபதிகாரியெனும்வடிவழகுபெற்றமறவோ
னன்பினெடுபேரறம்வளர்த்தருளெயிற்றிமிகவஞ்சவபிராமவெயினன்
பொன்புரையுமேனியிலடித்தமைபொறுதுமற்போர்புரியுமாறுகருதா. (கூக)

* உள்ளடிவிரற்றலைகள்புறவடிபரட்டினுடனுயர்கணைக்கான்முழந்தா, டள்ளரியவூருவுயர்தாள்வரைகளொத்தகடி தடமுதரமார்புதிணிதோ, டுள்ளிவருசெங்கையொடுமுன்கைபிடர்நெற்றியொடுசூடமெனவெண்ணுபடையால், வள்ளலெனையாளுடையமாதவனுமாதவனுமல்லமர்தொடங்கியுறவே. (கூஉ)

* மல்லமர்தொடங்கியிவரிருவரும்வெகுண்டுபொரமாதிரமுமானிலமுமே
லெல்லையுமதிர்ந்துசுழல்கின்றபொழுதத்திமயவின்பமயில்கேள்வன்வெகுளா
நல்லிசைபுனைந்தமணிநூபுரவிசாலவொளிநண்ணுபதநான்மலரினால்
வில்லியரிலெண்ணுதிறல்வில்லுடையகாளைதனைவிண்ணுலகில்வீசினனரோ. ()

* விண்ணவர்தம்மூர்புகுத விண்ணவர்பிரான்மதலை விசையுடனெழுந்துமுகில்போன், மண்ணினிடைவீழ்தருமுன் மார்பகலமல்லதை வயங்குபுறமென்றுதெரியா, னெண்ணரியஞானவொளியாகிவெளியாகிவருமெயினர்பதியானகருணைப், புண்ணியன்மகிழ்ந்துருக நின்றுெலியுடன்பழைய பூசல்பொரவெண்ணியெதிர்வான். (கூச)

* வெய்யகணநாதர்கணதேவர்விபுதாதியர்விரிஞ்சிசிவயோகியருஞ்
செய்யசுடரோனளகையாதிபதிகின்னரர்கள்சித்தர்பலசாரணர்மணிப்
பையரவினுடிபுருகூதனிவர்சூழ்தரப்பச்சைமயில்பாதியுடனே
துய்யவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்ததுதொழுந்தகையதாகுமளவோ. ()

* கைவிலுடனேயெயினர்கோடிபலர்சூழ்வரக்கன்னிமயில்பின்னர்வரவே
தெய்வமறைஞானிகொடார்ந்துவரவந்துபொருசெய்யசிவவேடன்முடிமேற்
சைவமுறைறையேயிறைவர்தண்மலரினோடுருகுசாத்தியொளிர்நான்மலமரலா
மெய்வடிவுகொண்டனையகரியதவவேடனிணைவிழிமலர்பரப்பிமகிழா. (கூசு)

* தும்பைவகைமாலைசெறிவில்வமொடுகொன்றைமலர்சூதமறுகேகமழ்தருஞ்
செம்பவளவேணிமிசைதிங்கணதிசூடியருள்செம்பொன்வடமேருவனையா
னும்பர்மணியாழினெடுதும்புருவுநாரதனுமுருகியிசைபாடவருள்கூ
ரம்பையுடனேவிடையின்மீதொளிர்கின்றதனையஞ்சலிசெய்தன்பொடுதொழா.

வேறு.

* ஆடினன்களித்தனனயர்ந்துநின்றன
னோடினன்குதித்தனனுருகிமாழ்கினன்
பாடினன்பதைத்தனன்பவளமேனியை
நாடினன்நடுங்கினனயந்தசிந்தையான். (கூஅ)

* விழுந்தருவினையினின்மெலிந்துநாயினு
மழுந்தியபிறவியினயருவேன்முனஞ்
செழுஞ்சுடர்மணிப்பணித்திங்கள்மௌலியா
யெழுந்தருளியவிஃதென்னமாயமோ. (௯௯)

* ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர்
சோதியேகொன்றையந்தொங்கன்மௌலியாய்
வாதியேமரகதவல்லியாளொரு
பாதியேபவளமாம்பரமரூபியே. (௧00)

* பையராவணிமணிப்பவளமேனியாய்
செய்யவாய்மரகதச்செல்விபாகனே
யையனேசேவடியடைந்தவர்க்கெலா
மெய்யனேயெங்குமாய்விளங்குஞ்சோதியே. (௧0௧)

* முக்கணுநிலவெழமுகிழ்த்தமூரலுஞ்
சக்கரவதனமுந்தயங்குவேணியு
மைக்கயன்மரகதவல்லிவாழ்வுறு
செக்கர்மெய்வடிவமுஞ்சிறந்துவாழியே. (௧0௨)

* அன்புறுதருமனுக்கநுசனாயினே
னன்பரம்பொருளுக்குநண்புமாயினேன்
பொன்புரைமேனியாய்போற்றினேனுனை
யென்பெருந்தவப்பயன்யார்பெற்றார்களே. (௧0௩)

* என்றுகொண்டிம்முறைபிவனியம்பவே
மன்றலங்கொன்றையம்மாலைமவுலியா
ஞென்றியதவம்புரியும்பர்தம்பிரான்
றன்றிருமதலையைத்தழுவினானரோ. (௧0௪)

* தழுவினன்பெருந்துயரகற்றித்தண்ணளி
பொழிதருகண்ணினன்புரக்குஞ்சிந்தைய
னழிவறவொழிவறவமர்ந்தசோதியன்
பழுதறுமொழிசிலபகர்ந்துதேற்றினான். (௧0௫)

* சூதினில்யாவையுந்தோற்றுக்கானிடை
யேதிலர்போலநீரிளைத்துவாடிநீர்
வாதுசெய்புலன்களையடக்கிமண்ணின்மே
னீதவம்புரிந்தமைநினையலாகுமோ. (௧0௬)

* மூகனென்றுரைக்குமம்மூகதானவன்
வேகமோடேனமாய்விரைவில்வந்தன
னாகவெங்கொடியவனவின்றவாய்மையால்
யோகுசெய்யுனதுயிருண்ணவெண்ணியே. (௧0௭)

* வந்தவன்முந்துமுன்மங்கைதன்னுட
னிந்தவெற்புறைதருமெயினவேடமாய்ச்
சுந்தரமரகதச்சோதிவீரனே
யந்தவல்லசுரனையம்பின்வீழ்த்தினேன். (௧0௯)

* நின்னுடனமர்செய்துநின்வின்னாணறுத்
தந்நெடுவில்லினுலடியுமுண்டன
னுன்னருமல்லினுலுதையுமுண்டன
னென்னினியுன்கருத்தென்றுகூறினான். (௧௧0)

ஆண்டகையுரைத்தல்கேட்டரியமாதவம்
பூண்டவனேதுவான்பொருவினான்மறை
காண்டருநின்செயலுணர்தல்காதல்சே
ரீண்டெமைப்போல்பவர்க்கெளிமைப்பாலதே. (௧௧௧)

நின்பதங்கண்களானிறையநோக்கியு
மன்பதவாழ்க்கையின்மருவலாகுமோ
முன்பொருசெயல்குறித்துனதுமுன்னரிற்
பின்பொருசெய்கைகள்பேசிற்றீமையாம். (௧௧௨)

* அந்தவான்முறையினாலறைகுவனென்கருத்
தெந்தைபாரதவமர்க்கிசைந்தவீரர்மெய்
சிந்தநின்பெயர்பெறுதெய்வவாளியைத்
தந்தருளென்றனன்றவத்தின்மேனின்றான். (௧௧௩)

* அய்யனுமும்மையோடருள்புரிந்துபின்
வெய்யபொற்றூணியும்வில்லுமந்த்ரமுந்
துய்யபாசுபதமெய்த்தொடையுமுட்டியு
மொய்யெனநிலையுடனுதவினானரோ. (௧௧௪)

* பெற்றனன்விசயனும்பேயும்பூதமுஞ்
சுற்றியகணங்களுஞ்சுருதியோசையும்
வெற்றிகொள்பெற்றமும்விறழுந்தூழவே
கற்றையஞ்சடையவன்கயிலையேகினான். (௧௧௫)

* ஏகியபின்னராயிரங்கணுதனு
மோகரதுந்துபிமுழங்கத்தேரின்மே
னாகருமுனிவருநண்ணிவாழ்த்தவே
வாகைகொள்விசயனைவந்துபுல்லியே. (௧௧௬)

* நீபுரிதவப்பயனீடுவாழியே
சாபமுந்தூணியுஞ்சரமும்வாழியே
தீபமெய்யொளியுடன்சேர்ந்துபோர்செயு
மாபெருநிலமெய்வாழிவாழியே. (௧௧௭)

* என்றுகொண்டிணையடியிறைஞ்சுமைந்தனைத்
தன்றிருத்தேரின்மேற்றழீந்தகைகளா
லொன்றியவுவகையோடேற்றியும்பர்கோன்
சென்றனன்றன்பெருந்தெய்வவானமே. (ககஅ)

* ஒருபெருமாதலியூருந்தேரின்மே
லிருமரகதகிரியிருந்ததென்னவே
மருவருகற்பகமாலைமௌலியும்
விரிபுகழ்மைந்தனும்விளங்கினரரோ. (ககக)

* ஆயிரம்பொலங்கிரியழித்துவானின்மேன்
மாயிருமொருபுரம்வகுத்ததென்னவே
பாயிரமறைபுகழ்பரமன்றேசெனச்
சேயிரும்பொன்னகர்திகழ்ந்துதோன்றுமால். (கஉ0)

* விண்ணவர்முனிவருள்விளங்கிவாழ்தலா
னண்ணியமுடிப்பெயர்நாகம்பூணலா
லெண்ணருமகபதியிருந்தமாநகர்
புண்ணியன்வடிவெனப்பொலிந்திலங்குமால். (கஉக)

* மாவலிசிறைப்படவைத்ததாண்மலர்
தாவியவிண்ணிடைத்தயங்குபொன்னகர்
தேவருந்தொழுகழற்றேவனுந்தியம்
பூவிரிந்ததுவெனப்பொலிந்துதோன்றுமால். (கஉஉ)

* பொலிவுறுமந்நகர்புகுந்துதாதையுந்
திலகணைபெறுதிறற்றெய்வமைந்தனு
மெலிவுறுநுண்ணிடைநுடங்கமீனினும்
பலரரமாதராற்பரிவுகூரவே. (கஉஙு)

* பருமணிவெயிலெழப்பணிலமாநிரை
தருமணிநிலவெழத்தமனியப்பெருங்
குருமணிச்சிலம்பொலிகூருமண்டபத்
தொருமணியாசனத்தோங்கிவைகினர். (கஉச)

* முருகவிழ்பரிமளமொய்த்ததண்டுழாய்
மரகதக்கிரிதிருமைத்துனன்றனைப்
பெருமிதவபிமனைப்பெற்றகாளையை
யருள்பெறுமுவகையோடன்னையெய்தினள். (கஉரு)

* அன்னையைமின்னிடையரியபாவையைக்
கன்னலையமுதொடுகலந்தசொல்லியை
யுன்னருந்தவப்பயனுற்றமைந்தனுஞ்
சென்னியையவள்பதஞ்சேர்த்துநின்றனன். (கஉசு)

* நின்றவக்குமரனைத்தழுவிநேயமோ
டொன்றியவுவகையளுரைவழுத்தினள்
வென்றிகொளையரீவிபுதர்தம்பிரான்
றன்றிருச்செல்வமுந்தாங்குவாயென. (௧௨௭)

* ஆயிரம்பதின்மடங்காகவன்னையு
மாயிரும்புதல்வனைவாழ்த்திவாழ்த்தியே
தூயசெம்பருமணிசுடருமாளிகை
யேயினளிந்திரனிதயம்போன்றுளாள். (௧௨௮)

* அந்தரதுந்துபியதிரும்பேரொலி
முந்தியமறையொலிமுழங்குஞ்சங்கொலி
சிந்துரமதகரிசீறுநீடொலி
சுந்தரமுகிலொலிதூங்கத்தூங்குமால். (௧௨௯)

* பத்திகொணவமணிபயின்றுசெந்துகிர்க்
கொத்தொளிர்தளிருடன்குலவுகற்பகஞ்
சித்திரவிசயவில்விசயன்சென்னிமேல்
வைத்ததுமுருகவிழ்வாசமாலையே. (௧௩௦)

* கிளரிசைத்தும்புருகிளருங்கற்பகத்
தளையவிழ்நாண்மலர்சாத்துநாரத
னளிபயிலமுதமுண்டகமகிழ்ந்துளக்
களியொடுகின்னரர்கானம்பாடவே. (௧௩௧)

* சிகையனனிகரகத்தியன்புலத்தியன்
வகைபெறுவசிட்டனேழ்வசுக்களாதிய
ரகமகிழ்ந்துவகைகொளன்பினுற்றிரு
முகமலர்ந்தருமறைமுனிவர்வாழ்த்தவே. (௧௩௨)

* செம்மணிவெயில்விரிசிலம்புகொஞ்சவே
கைம்மணிவரிவளைகலந்துபொங்கவே
பெய்ம்மணிமேகலைபிறங்கியார்க்கவே
துய்ம்மணியொளியரமாதர்சூழவே. (௧௩௩)

வேறு.

* இவ்வாறிவரிருவோர்களுமிணைமாமுகிலெனவே
செவ்வாளரிகிளர்கின்றதொர்செம்பொற்றவிசிடையே
மைவானகமுழுதுஞ்செழுமறையோசைவிளைக்கு
மவ்வானவர்புடைசூழ்தரவழகெய்தியிருந்தார். (௧௩௪)

* இருந்தாரிவர்குளிர்சாமரையிருபாலுமிரட்டப்
பெருந்தாரகைமதியொத்தொளிபெறுகின்றகுடைக்கீழ்
முருந்தார்நகையரமாதரின்முதன்மைப்பெயர்புனையுஞ்
செருந்தார்குழலுடையாளரிதிருவூருவின்வந்தாள். (௧௩௫)

* மானேதருவிழியாடிருமாதேநிகரெழிலா
டேனேதிகழ்மொழியாள்பொருசிலையேதருநுதலா
டானேதனைநிகர்வான்பெயர்தருநாடகமெல்லாங்
கானேசெறிதொடையானிருகண்கண்டுகளித்தான். (௧௩௬)

* இந்நாடகவிதம்யாவையும்யாரேதனிபுரிவார்
மின்னாரிடைமின்னேரிழைமென்கொம்பையலாதா
ரென்னாவிழிகளியாமனமுருகாவிசையெழுதும்
பொன்னாடுடையவன்மைந்தன்வியப்போடுபுகழ்ந்தான். (௧௩௭)

* திகழ்கின்றனவுரைதந்தைசெவிப்போதுருமுன்னே
யிகல்கொண்டுயர்தோளாய்புதிதிந்நாடகமென்னா
மகவான்பெருமிதவாழ்வுரைவானோர்முதல்யாரு
மிகுகுங்குமமுலையாருடன்விடைகொண்டிடவிட்டான். (௧௩௮)

* வகைகொண்டுயர்தோளாரவர்மந்தாகினியாடிச்
சிகரம்பயில்வரைபோலுயர்திருமண்டபமிசையே
யகிறுன்றியகுழலார்பலரரமாதரளிக்கு
நிகரம்பயில்முதுண்டவர்நின்றவெய்தியிருந்தார். (௧௩௯)

* தருக்குங்களியமுதுண்டவர்தனிவாழ்வுறுமெல்லைச்
சுருக்குங்கணமணிநீள்வெயில்சுடர்மாளிகைவேறொன்
றிருக்கும்படிவிசயன்பெறவீந்தான்விடையதுகண்
டுருக்கன்குடகடன்மாளிகையணிதேரொடடைந்தான். (௧௪0)

* மேலைத்திசைகாலைச்சுடர்வீழ்தந்திடுமுன்ன
மாலைச்சுடர்காலைத்திசைவாழ்வுற்றிடவந்தான்
சோலைத்தருவருள்வாரிதிசூழ்வான்முகடேறிப்
பாலைப்பொழிவதுபோனிலவொளிகொண்டுபரப்பா. (௧௪௧)

* அந்தச்சிலைமகவான்மகனம்மாளிகையிடையே
முந்தூற்றதொர்தவிசிற்கருமுகில்போலவிருந்தான்
கந்தர்ப்பன்வெகுண்டேவியகணைபட்டுளமுருகா
நொந்துற்றுமுனடனம்புரிநுண்ணேரிழையங்கண். (௧௪௨)

* அக்கங்குலினிடையேமலரரிசந்தனவாச
மைக்கங்குனிகர்க்குஞ்செறிமலர்நீலமணிந்தா
ளுய்க்கும்பருமணிநீவிதவுடையாடையுடுத்தாள்
மெய்க்குந்தவவயவாளிகொள்விசயன்னுழைவந்தாள். (௧௪௩)

* ஓராயிரமகல்வான்மணியொக்குந்தவிசிடையே
யீராயிரதீபங்களெரிக்குஞ்சுடரெழவே
வாராயிரமுகமாறுகர்மஞ்சேனிகர்செங்கட்
பேராயிரமுடையான்மகனெதிர்கொண்டிவைபேசும். (௧௪௪)

* எந்தைப்பெயர்புனையாயுவெனும்பேர்முடியிறைவன்
றந்தைக்குயிர்நிகராகியதவளத்திருநகையாய்
கொந்துற்றெழுகுழலாய்குழனிகராகியமொழியாய்
வந்துற்றதெனெனவன்னைமலர்த்தாள்களில்வீழ்ந்தான். (௧௪௫)

* இவ்வாறிவனவடாள்களிறைஞ்சிப்புறநின்றான்
மெய்வாய்மையினுயருந்தவவிபுதாதியர்மகளுஞ்
செவ்வாயிதழ்மடியாவிழிசிவவாமதிகருகா
வெவ்வாளரவுமிழுங்கடுவிடநேர்மொழிபகர்வாள். (௧௪௬)

* இந்தத்தனியிரவின்கணின்னிருதோடமுவுறவே
வந்துற்றவெவ்வினைத்தாயர்தம்வகையிற்புகல்செய்யா
நிந்தித்தனைநீசெய்தவநெறியின்பயனெல்லாம்
வெந்துற்றருநீறாயெழவிடுவேனெனவெகுளா. (௧௪௭)

* நின்போலமர்புரிவாரிருநிலமன்னரினுண்டோ
வன்போடழல்வருபாவையையடைவுன்னியளித்தாய்
பொன்போலிரவிடையாடவர்புகலாமொழிபுகல்வாய்
வன்போவருணலமோபெருமிதமோவளர்புகழோ. (௧௪௮)

* எனமன்னனைநீயேடியரியல்பாகெனவிதியா
னனைமென்குழன்மலர்மங்கையுநாணுந்நலமுடையா
டனிகங்குலினிடைசென்றுயர்தன்கோயில்புகுந்தா
ளனலன்றருசிலைவீரனுமஃதெய்தினனன்றே. (௧௪௯)

* ஆடித்திருமுகமன்னவனநசன்றருவிசையன்
பேடிப்பெயர்நாமோபெறுவோமென்றெழில்வடிவம்
வாடிப்பெரிதுளநொந்தணிமாசற்றதொர்தூசான்
மூடித்துயில்கொண்டான்மணிமுடிமன்னவர்திலகன். (௧௫௦)

* அக்காலையில்விசயன்றனதிடராரிருளகலச்
செக்காவியுமரவிந்தமும்வரிவண்டொடுதிகழ
மைக்காரிருள்வெள்ளம்பிலவள்ளத்திடைவடியத்
தொக்காவுயர்குணதிக்கினிலகிலந்தொழுசூரன். (௧௫௧)

வேறு.

* கதிருதித்தவக்காலையின்மாமறை
முதல்வர்முப்பத்துமூவருஞ்சூழ்வரப்
புதல்வனுற்றதுணரான்புரந்தரன்
விதமணிப்பணிமண்டபமேவினான். (௧௫௨)

* கண்பரப்பியோர்கந்தருவன்றனை
விண்புரக்குமவ்வேந்தனிருந்தபின்
மண்புரக்கும்வரிசிலைவீரனை
யெண்பெறக்கொணர்வாயெனவேவினான். (௧௫௩)

* மற்றவன் றிருத்தாண்மலர்போற்றியக்
கொற்றவன் றிருமுன்னர்க்குருகியாங்
குற்றயாவுமுணர்ந்தனன்மீண்டுபோய்ச்
சொற்றனன்சுரர்கோன்முன்ருெழுதரோ. (கடுச)

* சொன்னவாசகங்கேட்டசுரபதி
கன்னம்வெந்துகலாுயிரமும்புண
றுன்னவானவர்சூழ்வரத்தானும்போ
யந்நராதிபன் றன்னையணுகினன். (கடுடு)

* அணுகிமைந்தனைபன்பொடுறத்தழீஇக்
கணிகையிட்டகடுங்கொடுஞ்சாபநீ
தணிதியஞ்சலென்ருெருதையலாற்
பிணியுழந்துமுன்பேர்பெறும்பெற்றியான். (கடுசு)

* அன்னமென்னடையாயிழைதன்னுழைத்
துன்னினன்சுரரோடுஞ்சுரேசன்போய்
மின்னினுண்ணிடையாளும்வெருவுரு
மன்னவன்பதம்வந்துவணங்கினள். (கடுஎ)

* வணங்குமுன்னமடநடையோாதிமக்
கணங்கொலென்னக்கவின்பெறுகோதையைச்
சுணங்கருமுலைத்தோகையைவார்குழ
லணங்கையண்டரனைவரும்போற்றியே. (கடுஅ)

* அன்னைநீயெவர்க்காயினுமாசையி
னின்னறீர்ப்பதெவர்க்குமியல்பரோ
மன்னனயினும்வான்பிழைசெய்தன
னென்னநாகரவட்கிதங்கூறியே. (கடுகூ)

* காமமிக்கவுன்கட்டுரைச்சாபநோய்
பூமிபொய்ப்பினும்பொய்ப்பதன்ருலரோ
வேய்மலர்த்தொடையானெஞ்சில்வேண்டுநா
ளாமதற்கிவ்வுருவருள்செய்திநீ. (கசுo)

* என்றுவானவர்யாவருமேத்தவே
யன்றவர்க்கவ்வரங்கொடுத்தாளவள்
வென்றிவார்சிலைமீளியுந்தன்பெறுந்
துன்றுகோலஞ்சிறந்திடத்தோன்றினன். (கசுக)

அருச்சுனன் றவநிலைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-உஅoக.

---

உ

# நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கம்.

* அவ்வரந்தனக்குநல்குமன்னை தாள்வணங்கும்வென்றிக்
கைவருசிலையினானைக்கடவுளர்க்கிறைவன்கொண்டு
மொய்வருசுரர்கள்சூழமுதன்மைசேர்சுதன்மையெய்தி
வெவ்வரிமுகத்தபீடம்விளங்கவீற்றிருந்தகாலை. (க)

* தூண்டரு தோளின்மொய்ம்பானம்வலிதொலைத்துமேன்மேன்
மூண்டெழுமவுணர்தம்மையிவனன்றிமுடிப்பார்யாரென்
றாண்டகையமரர்க்கெல்லாமவன்செயலடைவேசொல்லிக்
காண்டவமெரித்தவீரனிவனெனக்காட்டினானே. (உ)

* அவ்வுரைகேட்டதேவரகமகிழ்ந்தவனுக்கன்பாற்
றிவ்வியமறையின்மிக்கதெக்கிணைபலவுஞ்செய்தார்
செவ்வியதாதைதானுஞ்சேணதித்தூய்நீராட்டி
விவ்விரவாதவாசத்தாமமும்விழைந்துசூட்டி. (ந)

* ஆயிரங்கதிருந்திங்களனந்தமுமடங்கமென்மேற்
காய்கதிர்விரிவதியார்க்குங்கருத்துறக்காணவொண்ணச்
சேயொளிதவழ்வதாகித்திசைமுகன்றனக்குநல்கு
மாயிரங்கிரணரத்நமவுலியுங்கவித்தானன்றே. (ச)

* ஆடையுங்கலனுமந்த்ரத்துடனடற்படையுநல்கி
யேடவிழலங்கலானோராசனத்திருத்தியென்றுந்
தேடுதற்கரியதூயவமுதுசெம்பொற்கலத்திற்
கூடவுண்டமரர்க்கெல்லாங்குரிசிலாஞ்சிறப்புஞ்செய்தான். (ரு)

* அன்னதுநிகழ்ந்தகாலையவன்றிருத்தேவிகண்டு
துன்னியகோபச்செந்தீவிழியுகச்சிலசொற்சொன்னாண்
மன்னியபுவியில்வைகுமானுடமன்னன்வந்துன்
றன்னுடனொக்கவுண்ணத்தக்கதோவுரைத்தியென்றே. (சு)

* என்றலுங்கடவுள்வேந்தனிருபுயந்துளங்கநக்கு
மன்றலந்துளபமாயோன்மைத்துனனெனக்குமைந்தன்
கொன்றையஞ்சடையானோடுமமர்புரிகுரிசிறன்னை
நன்றியின்மனிதனென்றிங்கிகழ்வதோநங்கையென்றான். (எ)

* ஆங்கதுகேட்டதேவரடிபணிந்தமரர்வேந்தே
பூங்கொடிதருவோடன்றுபுவியினிற்கவர்ந்தவீரற்
கோங்குமைத்துனனேயாகிலிதனின்மற்றுறுதியுண்டோ
வீங்கிவன்புகுந்தசூழ்ச்சிக்கேதுவுண்டாகுமென்றார். (அ)

* தேவர்தம்முரையுந்தேவிசெப்பியவுரையுங்கேட்டுத்
தாவரும்புரவித்திண்டேர்த்தனஞ்சயன்றொழுதுசொன்னான்
யாவரும்பரவுமுன்றனுடனொராசனத்திருந்து
மேவருமுடியுஞ்சூடப்பொறுக்குமோவிமலவென்றே. (௯)

* அவனுரைமகிழ்ந்துகேட்டாங்கமரருக்கதிபன்சொல்வான்
புவனமூன்றினுக்குமுன்னைப்போலொருவீரனுண்டோ
சிவனருள்படையும்பெற்றாய்செந்தழலளித்ததெய்வக்
கவனவாம்பரியுந்தேருங்கணையுங்கார்முகமும்பெற்றாய். (௧0)

* பிரமனேமுதலாவெண்ணும்பேர்பெறுந்தேவரீந்த
வரமிகுமறையுங்கொற்றவான்பெரும்படையும்பெற்று
யருமறைமுறையேபார்க்கினமரர்மற்றுன்னினுண்டோ
திருவரும்வின்மைவீரசெப்புவதொன்றுகேளாய். (௧௧)

* கற்றவர்கலைகள்யாவுங்கசடறக்கற்பித்தோர்கள்
பெற்றிடக்கொடுக்குஞ்செல்வமுண்டென்றுபெரியோர்சொல்வர்
கொற்றவவுனக்குநானுங்கூறுநற்குருவேயாகு
முற்றவாறெனக்குநீயுமொருவரந்தருகவென்றான். (௧௨)

* தந்தைசொன்மகிழ்ந்துகேட்டுத்தனுவினுக்கொருவனான
மைந்தனுந்தேவர்க்கையமானுடர்செய்வதுண்டோ
சிந்தையினிகழ்ந்ததொன்றுசெப்புகென்றவனுஞ்செப்ப
விந்திரன்றானுமீண்டுமின்னனபகரலுற்றான். (௧௩)

* ஆழிநீரழுவத்தொன்றுமுறைபவராழியானு
மூழியினுதன்றானுமுருப்பினுமுலப்பிலாதோ
ரேழிருபுவனத்துள்ளோர்யாரையுமுதுகுகாண்போர்
கோழியான்றனக்குந்தோலாவவுணர்முக்கோடியுண்டால். (௧௪)

* தவாதபோர்வலியின்மிக்கதவத்தினர்சாபம்வல்லோர்
சுவாதமேவீசியெல்லாவுலகையுந்துளக்குகிற்போர்
விவாதமேவிளைக்குஞ்சொல்லர்வெகுளியேவிளையுநெஞ்சர்
நிவாதகவசத்தரென்னும்பெயருடைக்கொடியநீசர். (௧௫)

* மற்றவரெனக்குநாளும்வழிப்பகையாகிநிற்போர்
கற்றவர்வணக்கினூற்குங்கடக்கரும்வலியின்மிக்கோர்
செற்றிடநின்னையன்றிச்செகத்தினிற்சிலர்வேறுண்டோ
வெற்றிவெஞ்சிலைகொள்வீரவிவ்வரம்வேண்டிற்றென்றான். (௧௬)

* செருவென்றமாற்றங்கேட்டுச்சிந்தையினுவகைபொங்க
மருவொன்றுமலங்கன்மார்பும்வாகுபூதரமும்பூரித்
துருவொன்றுமதனையொப்பானொருப்பட்டானுரைப்பதென்னே
திருவொன்றும்வண்மைவீரன்மறுக்குமோதேவர்கேட்டால். (௧௭)

* காற்றெனக்கடியவேகக்கனலெனக்கொடியவென்று
மேற்றிசையெல்லையெல்லாம்வீதிபோயொல்லைமீள்வ
கூற்றமுமுகிலுமுட்கக்குமுறும்வெங்குரலுமேன்மேற்
சீற்றமுந்திறலுமிக்கதீக்கதிசெலாததுய. (௧௮)

* ஆயிரப்பத்துவெம்போரடற்பரிபூண்டதேரு
மாயிரங்கலையின்மிக்கமாதலிதனையுநல்கிக்
காயிருங்கிரணச்செம்பொற்கவசமுங்கொடுத்துப்பின்னர்
வேயிருந்தெரியலார்க்குச்சுரபதிவிடையுமீந்தான். (௧௯)

* விடையெனத்தொழுதுபோந்துவெஞ்சிலைவிஜயவீரன்
சுடுசரத்தூணிகொற்றப்புயத்தினிற்றுதையத்தூக்கி
யிடுமணிக்கவசமெய்யிலெழிலுறப்புனைந்துதன்னைத்
திடமுடைச்சிங்கமன்னுன்செருத்தொழிற்கோலஞ்செய்தான். (௨௦)

* மோதுபோர்தனக்குவேண்டுமுரட்படைபலவுங்கொள்ளாக்
கோதைவிற்றடைக்கைவீரன்கொடிமணித்தேர்மேற்கொண்டு
மாதலிப்பெயரராயந்தவஞ்சரெத்திசைக்கேயென்றுன்
சூதனுமவனுக்கன்னேரியல்பெலாந்தோன்றச்சொன்னுன். (௨௧)

* தோயமாபுரமென்றுண்டுதொடுகடலழுவத்தொன்று
மாயமாபுரமேயொக்குமப்புரமதனில்வாழ்வோர்
தீயவரென்றுஞ்செப்பிச்சித்திரசேனன்றன்னைத்
தூயனன்னெறிகாட்டென்றுசூதன்றேர்தூண்டுமெல்லை. (௨௨)

* மொய்திறற்கடவுளோர்முப்பத்துமுக்கோடியாலுஞ்
செய்தமர்தொலைக்கவொண்ணுத்தயித்தியர்சேனைதன்னை
யெய்தொருமனிதன்வெல்வதேதழமைத்தென்றுநக்கார்
மைதவழ்கருங்கட்செவ்வாய்வானவர்மகளிரெல்லாம். (௨௩)

* மங்கையர்வாய்மைகேட்டுமணிக்குறுமுறுவல்செய்து
கங்கையம்பழனநாடன்கடிமதில்வாயில்செல்ல
வங்கவன்றன்னைக்கண்டவணிகழலமரரெல்லா
மங்குல்வாகனனென்றெண்ணிக்கதுமெனவந்துதொக்கார். (௨௪)

* கார்க்கோலமேனியானைக்கண்டபினையநீங்கிப்
போர்க்கோலமிவனுக்கெவ்வாறிசைந்ததுபுகறியென்று
நேர்க்கோலஞ்செய்வான்றன்னைச்செப்பினரவனும்போற்றி
வார்க்கோலபுரத்துவைகுமவுணரைவதைத்தற்கென்றுன். (௨௫)

* என்றவனுரைத்தமாற்றமின்புறக்கேட்டுநெஞ்சிற்
றுன்றியவுவகைதூண்டச்சுருதியாலாசிசொல்லி
வென்றுமீள்கென்றுவாழ்த்திவிரைவினில்வீரன்றன்னைச்
சென்றிடுகென்றுதேவர்தத்தமிற்சிறப்புமீந்தார். (௨௬)

சம்புவன்சம்புமாலியெனும்பெயர்த்தனுசர்தம்மை
யும்பர்கோன்வதைத்தவன்ஞானூர்ந்ததெவ்வுலகுமேத்துந்
தும்பையஞ்சடையான்வெற்பைத்துளக்கியசூரன்மாள
விம்பவார்சிலையிராமன்வென்றநாளூர்ந்ததித்தேர். (உஎ)

* ஆதலாலித்தேர்மேல்கொண்டடல்புனையவுணருக்குப்
பேதியாக்கவசம்பெற்றுப்பிறங்குபொன்முடியும்பெற்றாய்
கோதிலாயெங்கணெஞ்சிற்குறையெலாந்தீர்த்தியென்றார்
போதில்வாழயனுமொவ்வாவாய்மொழிப்புலவரெல்லாம். (உஅ)

* வீரனுமுவகைதூண்டவிண்ணவர்மலர்த்தாள்போற்றிச்
சாரதிதடந்தேர்தூண்டத்தபனனில்விசும்பிற்சென்றான்.
கார்நிறக்குன்றமொன்றைக்கனகவான்குன்றொன்றேந்திச்
சீருறப்பறந்துவானிற்றிசையுறச்செல்வதொத்தே. (உகூ)

வேறு.

* திரைகொழித்திடுஞ்சிந்துவின்சூழலிற்
குரகதத்தடந்தேர்போய்க்குறுகலு
மரகதக்கொண்டன்மாதலிக்கன்பினல்
விரகுறச்சிலமாற்றம்விளம்பினன். (௩௦)

இப்புரத்திலவுணரியல்பெலாஞ்
செப்பெனக்குத்தெரிதரவென்றலு
மப்புரத்தவருண்மையுந்தோற்றமுஞ்
செப்பலுற்றனன்றிண்டிறற்றேர்வலான். (௩க)

* தெழித்தசொல்லினர்சீற்றவெந்தீயுக
விழித்தகண்ணினர்விண்முகிலைக்கவி
னழித்தமேனியராழ்வெம்பிலத்தையும்
பழித்தகன்றபெரும்பகுவாயினர். (௩உ)

* மண்ணுநீருமனலுமருத்துடன்
விண்ணும்வேண்டின்விரைவின்முருக்குவ
ரெண்ணையூட்டியிருட்குழம்பாலெழில்
பண்ணியாக்கைவகுத்தன்னபான்மையார். (௩௩)

* மற்புயாசலத்தின்வலியாலிகற்
சற்பராசன்றலைச்சுமைமாற்றுவா
ரற்பவாழ்வுடையம்போருகத்தர்தங்
கற்பகோடிகடையுறக்காண்குவார். (௩ச)

* பாழியாடகவெற்பிற்படச்சிரங்
கீழதாகக்கிளர்முச்சடக்கினின்
றாழிநாளுந்தவமுயன்றோங்குவா
ராழிநீருமளவிடுந்தாளினர். (௩௫)

* ஏதிசூலமெழுமழுவீட்டியின்
சாதிசக்கரந்தாங்குந்தடக்கையார்
மோதுபோரெனின்மொய்ம்புடன்முந்துவோ
ரோதமேழுமுடனுண்டுமிழுவோர். (௩௬)

* கூருநல்லுரைகூறினுங்கூற்றுடன்
கார்தொறும்மிடிசேர்ந்தன்னகாட்சியார்
தேர்தொறுஞ்சினஞ்செய்யுமத்தேவரைப்
போர்தொறும்புறங்கண்டன்றிப்போகலார். (௩௭)

* மூன்றுகோடியசுரர்முகிலெனத்
தோன்றுமேனியர்தோமறுமாற்றல
ரேன்றுபோர்பொரினெவ்வெவ்வுலகையுங்
கீன்றுசேரக்கிழிக்குமெயிற்றினர். (௩௮)

* செப்புரத்தினிற்செஞ்சடைவானவன்
முப்புரத்தைமுனிந்தவன்றுளினுந்
தப்புரத்தர்சதமகன்றன்னைவென்
றிப்புரத்தையிவர்கவர்ந்தாரெனு. (௩௯)

* தீதிலாத்திறற்சித்திரசேனனைக்
கோதிலாதகுனிசிலைவீரற்கு
மோதுபோர்தரமொய்ம்புடைவஞ்சர்பாற்
றூதுபோகெனப்போக்கித்தொலைவிலான். (௪௦)

* விண்ணின்மீதுவிரைவுறுந்தேரினை
மண்ணின்மீதுநடத்தினன்மாதலி
யண்ணலுந்தனருஞ்சிலைநாணியின்
றுண்ணெனோதைதொடரத்துரத்தினன். (௪௧)

* தேரினார்ப்பொலியுஞ்சிறுநாணொலுங்
காரினார்ப்பொலியுங்கலந்தெங்கணும்
பாருமேற்றிசையும்பகிரண்டமுஞ்
சேருநாற்றிசையுஞ்செவிடாக்கவே. (௪௨)

* அந்தவோசையவுணர்செவிப்புக
முந்தவோடிமுடுகிமுறுவலித்
திந்திரன்பொரவந்தனனென்றுதஞ்
சிந்தைகன்றிவிழியுஞ்சிவந்திட்டார். (௪௩)

* போயதூதனுஞ்செம்பொற்புரிசைசூழ்
தோயமாபுரந்தன்னிற்றுதைந்தவம்
மாயவஞ்சர்மறுகவெம்புண்ணின்மேற்
றீயையொப்பனசில்லுரைசொல்லுவான். (௪௪)

* ஒருகுலத்தினில்வேந்துமொவ்வாதுயர்
குருகுலத்திற்குனிசிலைவீரற்குத்
தருகயுத்தந்திறலுடைத்தானவர்
வருகமற்றும்வருதினிதன்னெடும். (சரு)

* என்றுதூதனிசைத்தது கேட்டவு
நன்றெனக்கைபுடைத்துநகைத்திடாக்
கன்றுநெஞ்சினர்கண்கள்செந்தீயுகத்
துன்றுகோபத்துடனவர்சொல்லுவார். (சசு)

* பூசையொன்றுபுலியின்குழாத்துட
னூசைகொண்டுபொரவந்தழைப்பதே
வாசவன்பெருவாழ்வுக்கெலாமொரு
நாசம்வந்துபுகுந்தநெனுநகா. (சஎ)

* வரையுளானுமலரினுளானும்வெண்
டிரையுளானுஞ்செகுப்பருநம்முடன்
றரையுளான்வந்துபோர்பொரத்தக்கதோ
வுரையுளாறென்றுரையீருணரவே. (சஅ)

* தனுசர்தானைதனைமதியாதொரு
மனுசன்வந்துமலையமதிப்பதோ
வனுசருங்கொலையாடலவுணருங்
குனிசெயுஞ்சிலையென்றுகொதித்திட்டார். (சகூ)

* செங்கணைக்கொடியவன்செல்வமுந்
தங்கணுடங்கவரத்தரிப்பறப்
பொங்குகானிற்புகுஞ்சிலைவீரனே
வெங்களோடுமெதிர்க்கவந்தெய்தினன். (ருo)

என்றுகூறியிகலசுராதிபர்
துன்றுசேனைக்குழாம்புடைசூழ்வரச்
சென்றுகாந்தத்திரைக்கடலார்ப்பபோ
லொன்றயாருமொருங்குசென்றுற்றனர். (ருக)

* ஆனைதேர்பரியாளெனுநால்வகைத்
தானையோடுமெழுந்தனர்தானவர்
வானுமண்ணுந்திசையுமற்றென்பெறு
மேனலோகமுமெங்குநடுங்கவே. (ருஉ)

* சங்கும்பேரியுந்தாரையுஞ்சின்னமுந்
துங்கமாமுழவுந்துடியீட்டமு
மங்கண்மாமுரசும்முகவந்தத்திற்
பொங்குவேலையொலியிற்புலம்பவே. (ருங)

* சூலநேமியெழுமழுத்தோமரங்
கோலும்வார்சிலைகுந்தங்கொடுங்கணை
நாலுதானைநடுவுஞ்சுடரயில்
வேலும்வாளின்விதமுமிடையவே. (௫௪)

* முந்துகோபவசுரர்முடுகுதே
ருந்துவீரனொருதனித்தேரினை
வந்துசூழவளைத்தார்மதுமலர்க்
கொந்துசூழ்வரிவண்டின்குழாத்தினே. (௫௫)

* நீலமால்வரையொன்றுநெருக்கிவீழ்
காலமீமுகிலென்னக்கடியவர்
கோலும்வார்சிலைக்கொண்டலன்னான்மிசைச்
சூலநேமிசுடுசரந்தூண்டினார். (௫௬)

வேறு.

* அக்கார்முகவீரனுமங்கவர்தம்
மைக்கார்முகிலென்னவழங்கியதிண்
மெய்க்காய்கணைசாபம்விசித்துவிடா
நக்கானிவைநின்றுநவின்றனனே. (௫௭)

* திக்கோடியநுந்திறலும்புகழுந்
தொக்கோடியுடற்றுபடைத்தொகையுங்
கைக்கோடியவெஞ்சிலையின்கணையான்
முக்கோடியுமின்றுமுருக்குவனால். (௫௮)

* முன்போர்தொறும்வந்துமுனைந்துவெரீஇ
வென்போகியவிண்ணுறைவீரரலேன்
பொன்போலுநும்மேனிபொடிச்செய்திடாப்
பின்போகுவனென்றிவைபேசலுமே. (௫௯)

* தழல்வந்தருள்பார்வைதடந்துகிலும்
குழலுங்கவர்தந்தடல்கூருமுமக்
கழறுன்றியகானமளித்தவரைக்
கழல்வெஞ்சிலைவீரகடிந்திலையே. (௬௦)

* என்னவசுரேசரிசைத்தலுமே
மன்னுகவவீரனும்வார்சிலைநாண்
டன்னுகமுறத்தழுவத்தழல்வாய்
மின்னார்கணைதூவிவெகுண்டனனே. (௬௧)

* பொய்த்தானவர்போரரியன்னவன்மேன்
மொய்த்தார்முகில்செங்கதிர்மூடுவபோல்
வைத்தாரைவடிக்கணைவாண்மழுவே
லுய்த்தார்வரைமேலுருமேறெனவே. (௬௨)

* என்முன்னவனென்முனெனுவெவரு
முன்முன்வரமுந்தமுருக்கினனுற்
றன்முன்னெருவீரர்தராதலமேல்
வின்முன்னினிலாவிறல்வில்விசயன். (௬௩)

* ஒருதேர்கொடுவீரனுடன்றவர்தங்
கரிதேர்பரியாளணிகையறமுன்
னிருதேசரைவென்றவனேரெனமேல்
வருதேரணிதோறுமலைந்திடவே. (௬௪)

* வீரன்சரம்வஞ்சகர்மெய்ம்முழுதுங்
கூரும்படிசென்றுகுளித்திடலா
லாரும்பொரவஞ்சினரப்பொழுதிற்
றேருந்தினரெண்ணிறமயித்தியரே. (௬௫)

* என்னேயொருமானுடனுக்கெவருங்
கொன்னேயடலாண்மைகொடுக்குமதோ
வின்னேயிவனுவியழித்திமையோர்
முன்னேவயவாகையுமுற்றுவமால். (௬௬)

* காளப்புயலென்னநிறங்கரியார்
மீளப்படைகொண்டுவிரைந்துவெகுண்
டாளித்திறன்மொய்ம்பனையங்கடலால்
வாளக்கிரியென்னவளைந்தெவரும். (௬௭)

* ஆர்த்தாரகல்வானமுமாழ்கடலுந்
தூர்த்தார்சுடர்வெம்படைகொண்டெவருந்
தேர்த்தானவர்வானுறைதேவருமெய்
வேர்த்தாரினிமேல்விளைவேதெனவே. (௬௮)

* கூற்றெப்பனபல்படைகொண்டவன்மேற்
சீற்றத்தொடெறிந்தனர்தீயவரு
மாற்றற்சிலைவீரனுமவ்வவ்வெலா
மாற்றிச்சரமாரிவழங்கினனல். (௬௯)

* அவன்விட்டசரங்களறுத்தணிதேர்
கவனப்பரிபாகுகலக்கமுற
பவனத்துடனங்கிபரந்ததுபோற்
றுவனித்தவர்வெம்படைதூவுதலும். (௭0)

* கட்டார்முதுகார்முகவீரனுமுன்
கிட்டாவுலகோர்புகழ்கேழ்கிளர்சீர்
முட்டாமறைமேன்முனிவன்படையைத்
தொட்டானசுரேசர்தொலைந்துகவே. (௭௧)

* காற்றாய்மிகமண்டுகடுங்கனலாய்க்
கூற்றாயவராவிகுடித்ததுசெஞ்
சேற்றாலொருபாதிசிவந்ததுபா
ரேற்றானொருபங்கெனவெங்கணுமே. (௭௨)

* நூறாயிரதேரணிநூறியுமே
லாராதசினத்துடனக்கணைபோய்
மாராயவர்மார்பமும்வாண்முகமுஞ்
சீராவெதிர்சென்றுசெறிந்ததுவே. (௭௩)

* குருகோடியையுங்குருதிக்கடல்வா
யொருகோடிதயித்தியராருயிருண்
டருகோடியவாளியடற்பதுகண்
டிருகோடியுமுற்றனமற்றிவன்மேல். (௭௪)

வேறு.

* இருண்டதுமண்ணும்விண்ணுமெல்லையெண்டிசையுமெங்கும்
புரண்டதுகுருதிவெள்ளமூழிவெங்கடலிற்பொங்கி
முரண்டகுதேரோன்றன்னைமொய்த்தவெம்பனிபோன்மூடித்
திரண்டதுதிருகிமீண்டுந்திறலுடைத்தகுவர்சேனை. (௭௫)

* எங்கெங்கேயெங்கேவல்வின்மனிதனென்றெதிர்ந்தோர்யார்க்கு
மங்கங்கேயங்கேயாகியவரொடுமடுபோர்செய்தான்
சங்கங்கேய்செங்கைகல்லார்விடுத்தனசுரும்பின்சாலங்
கொங்கெங்கேயெங்கேயென்றுதனித்தனிகுடையுந்தாரான். (௭௬)

* கார்முகக்கொண்டலன்னான்மிசைக்கடுங்கணைகளேவித்
தேர்முகத்தியக்கமாற்றித்திமைந்தர்வெம்போர்செய்யப்
போர்முகத்தொருவரொவ்வாப்புரிசிலைவீரன்றானுங்
கூர்முகப்பகுவாய்மாயோன்கொடுங்கடும்பகழிகோத்தான். (௭௭)

* விண்ணிடத்தசனிநாகர்மேல்வெகுண்டிடுவதென்ன
வெண்ணுடைச்சேனைவெள்ளமெங்கணுந்தானேயாகி
வண்ணவிற்படையிராமன்வாரிதிவெள்ளம்வீத்த
பண்ணெனப்படுத்ததந்தப்பைந்துழாய்ப்பரமன்வாளி. (௭௮)

* தசையும்வெம்பிணமுந்துன்றித்தனித்தனிபெருகியெல்லாத்
திசைதொறுங்குருதிநீத்தந்திரைக்கடற்சென்றுமண்ட
வசைவிலாவவுணர்மீண்டுமந்தரத்தொளித்துநின்று
விசையவில்விசயன்றன்மேல்வெகுண்டுவெம்படைகள்விட்டார். (௭௯)

* விட்டவெம்படைகளெல்லாம்விண்ணிடைச்சுண்ணமாகக்
கட்டழகுடையவீரன்மகேந்திரக்கணையால்வீக்க
வெட்டுணைப்பொழுதில்வஞ்சரெழிலியின்படைமேல்வீச
வட்டவார்சிலையினானுமண்டழற்படையான்மாற்ற. (௮௦)

* மண்டிமேலெழுந்திங்கெல்லாவுலகையுமடிக்குமாயச்
சண்டவாயுவின்பேர்வாளிதானவரவன்மேலேவ
வண்டமுந்துளங்கவோங்குமருவரைப்பகழிவிட்டா
னெண்டிசைமுழுதுந்தன்பேரெழுதுபோர்விசயனென்பான். (௬௧)

* காற்றும்வெங்கனலுங்காருமிடியுங்கன்மழையுமெங்குந்
தோற்றியவிருளுமின்னுந்திசைதொறுஞ்சூழ்ந்துபொங்கக்
கூற்றும்வாய்குழறியஞ்சக்கொடியமாமாயவாளி
யாற்றல்சாலரியன்ஞான்மேலெறிந்தடலவுணரார்த்தார். (௬௨)

* கன்மழைசொரிந்துவேகக்கனன்மழைவீசியெங்கு
மின்மழைசிந்திமிக்கவசனியின்மழைகள்வீழ்த்திச்
சென்மழைசிதறியெல்லாத்திசைதொறும்பரந்துகொற்ற
வின்மழைபொழிவோன்றன்னைவளைந்ததுவெய்யமாயை. (௬௩)

* கோதிலாவிரதம்பூண்டகுரகதக்குழாமுமுட்கிச்
சூதனுந்தடந்தேரூருந்தொழில்மறந்துயங்கிவீழத்
தாதவிழலங்கலானுமற்றவன்றன்னைத்தேற்றித்
தீதிலாவமோகபாணஞ்சிந்தையாற்றெழுதுவிட்டான். (௬௪)

* மாயவல்விருளையெல்லாம்வான்கதிர்ச்செல்வனென்னச்
சேயவப்பகுவாய்வாளிதிசைதொறுங்கடிந்தவெல்லை
யாயவெம்முறைமைதப்பாவறன்பொருளின்பமூற்றுந்
தூயவரிதையமென்னத்தொலைந்ததுசூழ்ந்தமாயை. (௬௫)

* வஞ்சவாளவுணர்வெம்போர்மறந்துமெய்ம்மயங்கிமீண்டு
நெஞ்சினிலறிவுதூண்டநிரைநிரைதடந்தேர்தூண்டிச்
செஞ்சரஞ்சூலம்விட்டேறெழுமழுத்திகிரிவாள
மஞ்சனக்குன்றன்னான்மேலெறிந்துடனார்த்தகாலை. (௬௬)

* கடுஞ்சிலைவிரைவும்வீரன்கைத்தொழில்விரைவுமேன்மேல்
விடுங்கணைவிரைவுமெண்ணில்விபுதர்க்குங்காணொணாத்
கொடுந்தொழிலசுரர்மெய்யிற்குளித்தசெஞ்சரமுமன்னோர்
படும்படுந்துயருமெங்குங்காணலாம்பாருளோர்க்கும். (௬௭)

* ஆய்ந்தநூலறிஞர்க்கீந்தவரும்பொருளென்னமேன்மேல்
வேந்தர்கோன்பகழியொன்றுகோடியாய்விளைந்ததெங்கு
மாந்தர்கைக்கொடாதபுல்லர்வனப்பிலாச்செல்வம்போலத்
தேய்ந்ததுவஞ்சநெஞ்சத்திறலுடைத்தனுசர்சேனை. (௬௮)

* படாதொழியவுணர்மீண்டும்பரிபவப்படுத்தாயெம்மை
யடாவினியுன்னையின்னேயாருயிர்குடித்துமென்னாக்
கடாமலைவயவன்மீதுகடும்படைபலவும்விட்டார்
தொடாநெடும்பகழிதன்னாற்சூரனுந்துணித்திவீழ்த்தி. (௬௯)

* உரங்களுந்தோளுங்கண்ணுமுதரமுமதரத்தோடு
சிரங்களுந்தாளுநாளுஞ்செய்தவமுயன்றுபெற்ற
வரங்களுமறையுமேன்மேல்வான்படைக்கலங்கள்வீசுங்
கரங்களுஞ்சரங்கள்கொண்டுகணத்திடைக்கண்டங்கண்டான். (௬௦)

* அற்றனகுறைகளெல்லாமவையவத்தோடுமீண்டு
முற்றனமூன்றுகோடிசேனையுமுருத்தெழுந்த
வெற்றிவேற்குமரனன்னவிசயனுங்கைசலித்து
மற்றிதற்கென்செய்வேனென்றினைவுடன்மதிக்குமேல்வை. (௬௧)

* வென்றிகொள்வீரவாகைவீரவில்விசயகேளாய்த்
தென்றிசைமறலிபாலித்தீயவஞ்சகர்முன்பெற்ற
வன்றிறற்படையுமிக்கவரமுமெய்வலியுமுண்டா
லென்றசரீரிபின்னுமின்னவையுரைத்ததம்மா. (௬௨)

* வெய்யவெம்படைகட்கெல்லாம்விளிகிலர்மெய்ந்நூறுகக்
கொய்யினுமுருவமீண்டுங்கூடுவர்குறிப்பினின்று
கையினுவுடன்வாய்சென்றுகலந்திடுங்கணத்தினம்பா
லெய்திடுகென்றுவீரற்குறுதியுமிசைத்ததன்றே. (௬௩)

* வானிடத்தருபிசொன்னவாசகமனத்திற்கொள்ளாத்
தேனுடைத்தெரியல்வீரன்றேரினைத்திரியவோட்டிக்
கானிடைக்கடவுள்வேடன்றருங்கணைகரத்திற்கொண்டு
தானுடைத்தனுவிற்பூட்டியநுப்படச்சமைந்ததோரார். (௬௪)

* தானவர்சமுகத்தோடுசமர்புரிந்தாற்றுதஞ்சி
மானவன்முதுகுதந்தானென்றுவாளசுரரெல்லாம்
வேனில்வேளனையான்றன்மேல்வெகுண்டுவெங்கடலிற்பொங்கி
யானதங்கவாய்சேர்த்தியாவலங்கொட்டியார்த்தார். (௬௫)

* உரம்பட்டவஞ்சர்சேனையொருப்பட்டவுருதிநோக்கித்
திரம்பட்டசிலைக்கைவீரன்சிலீமுகந்தெறித்தபோதச்
சரம்பட்டதனுசரங்கஞ்சங்கரன்செங்கையம்பாற்
புரம்பட்டபரிசுபட்டுப்பொடிந்தனபொடியாய்மன்னோ. (௬௬)

* உருத்ததுமிகவுமண்டமுடைந்திடவுடன்றுபொங்கிச்
சிரித்ததுதனுசர்மெய்புஞ்சிந்தையுஞ்சேரப்பத்தி
யெரித்ததுதூரீராடியிவனிடந்தன்னில்வந்து
தரித்ததுமீண்டுமந்தச்சங்கரன்செங்கைவாளி. (௬௭)

வேறு.

துவசத்தொடுதேர்களம்வீழச்சுடர்நிவாத
கவசத்தொடுமெய்கடல்வீழக்கடுகியற்றைத்
திவசத்திவறுவரமங்கையர்வீழச்சென்று
ரவசத்துடனந்தகனூரிலசுரரெல்லாம். (௬௮)

* ஆர்த்தாரணிகூரலர்மாமழையால்விசும்பைத்
தூர்த்தார்துதித்தார்மதித்தார்நனிதுள்ளுகின்றார்
போர்த்தானவர்தஞ்செருக்காற்படுபுன்மையெல்லாந்
தீர்த்தானிவனென்றகல்வானுறைதேவரெல்லாம். (௯௯)

* கூரும்படையுங்கொடையுங்கொடியுங்கொழித்துத்
தேருங்கரியும்பரியுந்திசைதோறுமுந்தி
யூருங்குருதிக்கடல்பொங்கியுவர்க்கடன்மேற்
போரும்பொரப்போயணியோடுபுகுவபோலும். (௧௦௦)

* தத்திக்குருதிக்கடல்பொங்கத்தனித்தனிநின்
றெத்திக்கினும்வெம்பிணக்குன்றமெழிலொடோங்கப்
பத்திப்படமேற்பருந்தின்குலம்பந்தர்செய்யக்
கொத்துற்றதண்டார்த்திறற்சோதண்டவீரனின்றான். (௧௦௧)

* மின்போனுடங்கவிடைவேல்விழிநீர்த்ததும்பப்
பொன்போலுருவங்கருகும்படிபூழிபோர்ப்ப
வன்போடவுணர்மடமாதாரற்றுமோதை
யென்போலுமென்னினிடிபோல்வந்திசைத்ததெங்கும். (௧௦௨)

* இவ்வாறவுணர்மடமாதரிரங்கியேங்க
மைவாள்விழியின்வழியஞ்சனவாரிபாயத்
தெவ்வாறியபின்னருந்தீர்ந்திலதீர்ந்தவன்றே
கைவார்சிலையான்கடுங்கோபமுங்கண்சிவப்பும். (௧௦௩)

* அன்னார்நகரத்தழகுந்தொல்லரணுநோக்கி
மின்னாரும்வேலான்விறன்மாதலிதன்னைமீண்டு
நன்னாகரூரிற்றடந்தேரைநடாத்துகென்னச்
சொன்னானவனுந்துணைதேர்நனிதூண்டுமெல்லை. (௧௦௪)

* செம்பொற்புரிசைதிகழ்கோபுரச்செம்பொன்மாடத்
தம்பொற்கொடிசேர்நகரந்தரத்தொன்றுகாணு
வம்பிற்பொலிதார்த்தடந்தேர்விடுமாட்சியானை
விம்பத்திறல்வார்சிலைவீரன்வினவவன்னான். (௧௦௫)

* மன்னுந்தனுசகுலமாதரில்வஞ்சநெஞ்சக்
கன்னங்கரியகுழற்காலகைகாமர்சோதிப்
பொன்னங்கொடிபோலெழில்கூர்நுண்ணிடைப்புலோமை
யென்னும்பெயராரிருவோருளரென்றுமுள்ளார். (௧௦௬)

* அம்மாதர்தந்தைதனைநோக்கியனந்தகாலஞ்
செம்மால்வரையிற்றவஞ்செய்தனர்செய்தநாளின்
மைம்மான்விழியார்தமக்கந்தவனசவாண
னெம்மாலிசைத்தற்கிசையாதவரங்களீந்தான். (௧௦௭)

* தம்மக்களாயவசுரேசரதிதிதந்த
வம்மக்கடம்மாலழியாமையுமாடகத்தான்
மும்மைப்புரம்போல்விசும்பூர்தருமொய்ம்பினிந்தச்
செம்மைப்புரமுங்கொடுத்தானத்திசைமுகத்தோன். (௧௦௭)

* பொன்காலுமெய்யர்பொறிகால்பொலங்குண்டலத்தர்
முன்காலனையுஞ்சமர்மோதிமுருக்குமொய்ம்பர்
மின்கால்படையர்விடங்காலும்விழியர்வெம்போர்
வன்காலகேயரெனும்பேர்திசைவைத்தவீரர். (௧௦௯)

* வருமுப்பொழுதுமறையந்தணரங்கைவாரி
யுருமுப்பியல்போற்கவர்வோர்முன்னுகாந்தநாதன்
பொருமுப்புரத்திலுறைதானவர்போலும்வீர
ரிருமுப்பதினுயிரம்வஞ்சகரிங்குமுண்டால். (௧௧௦)

* தன்றேர்வலவன்மொழிகேட்டுத்தயங்குநீலக்
குன்றேயனையான்கொடும்போர்வஞ்சினங்கள்கூறி
யின்றேயிவராவியுந்தென்புலத்தேற்றிப்பின்ன
ரன்றேயினிநானமராவதிசெல்வதென்றான். (௧௧௧)

* இந்தப்புரத்தின்மிசைத்தேரினையேவுகென்னக்
கந்தற்குவமைதகுதிண்டிறற்காளைகூறச்
சிந்தைக்குமுந்துந்தடந்தேரைத்தனுசர்வைகு
மந்தப்புரத்தில்விடுத்தான்மற்றவனுமாதோ. (௧௧௨)

* தேராரவாரத்துடனேதிண்சிலைவலான்றன்
பேராரவாரச்சிலைநாணொலிமீதுபோக
வாராரவாரத்திடிகேட்டவரவமொத்தார்
காராரவாரமெனப்பொங்குமக்காலகேயர். (௧௧௩)

வேறு.

* இந்தவோதையெழிலியேழுமுழிநாளிடித்தெழு
மந்தவோதையோவதன்றியாழிபொங்குமோதையோ
கந்தன்வானின்மீதுதேர்கடாவுகின்றவோதையோ
வெந்தவோதையென்றயிர்த்துயிர்த்துவஞ்சர்யாவரும். (௧௧௪)

* தெழித்துரப்பியெயிறுதின்றுவைதுசெய்யகண்கடீ
விழித்துமீசைநுனிமுறுக்கிவெய்யவீரவாளுறை
கழித்தெழுந்துபொங்குகின்றகாளகூடமென்னவே
கொழித்தழன்றுமண்ணும்விண்ணுமின்றுகோறுநாமெனா. (௧௧௫)

* ஓடுவாருமந்தவோதையெதிருடன்றுறுக்கியே
நாடுவாருநமர்களாண்மைநன்றுநன்றெனுநகைத்
தாடுவாருமமரர்வாழ்வுபாழ்படுத்துமாயுதந்
தேடுவாருமெண்ணிறந்ததேர்களேறுவாருமே. (௧௧௬)

* கூளிகோடியுய்ப்பகுஞ்சரங்கள்கோடியுய்ப்பபே
ராளிகோடியுய்ப்பவாயுகதிகொடந்தரத்தின்மேல்
வாளிபோதும்வாசிகோடிகோடியுய்ப்பவாவுதே
ரோளியாகவானினெல்லமறையவுந்திமுந்தினர். (கக௭)

* அந்தகன்பொரற்குநம்மைவல்லனல்லனபயமுன்
றந்தவிந்திரன்றனக்குமொக்குமன்னதன்மைநான்
கந்தனென்னிலாறிரண்டுகண்கள்கைகளில்லமே
லெந்தவீரனம்மொடின்றெதிர்க்குமிந்தவீரனே. (கக௮)

* எண்டயங்குமெயிறுவெண்ணிலாவெறிப்பவெயின்மணிக்
குண்டலங்களழகெறிப்பமகுடகொடிகுலவிமேன்
மண்டியெங்கும்வெயிலெறிப்பவஞ்சர்தம்வனப்பெலாங்
கண்டுகண்டருச்சுனன்கருத்துநொந்துகூறுவான். (கக௯)

* கன்னல்வேளைவென்றவிக்கவின்படைத்தகாட்சியு
மின்னுபூண்விளங்குமார்பும்விபுதருக்குமில்லையா
லென்னபாவமிவரையாவியீடழிப்பதென்றுபோர்
மன்னர்மன்னன்முன்னுரைத்தவாய்மையுங்குறிப்புறா. (க௨0)

* வில்வளைத்துநின்றநீலவெற்பரொன்றைவிண்ணிடைச்
செல்வளைத்ததென்னவந்துதீயவஞ்சர்யாவரு
மல்வளைத்தசிகரவாகுகிரியின்மீதுமார்பினுங்
கொல்வளைத்தபகழிதூவியின்னநின்றுகூறுவார். (க௨க)

* உழுவைகண்டவுழைகள்போலவோடியோடிமேருவின்
முழைதொறும்புகுந்ததேவரேவல்கொண்டுமொய்ம்புட
னிழிவில்சந்தனங்கடாவியிங்குவந்ததென்னடா
புழுவிலொன்றுமொன்றுபூதலத்துளாரொருத்தனீ. (க௨௨)

* என்றுகாலகேயர்நின்றிசைத்தசொற்செவிக்கொளா
தன்றுகாலகேயர்சொன்னவாய்மையென்றெறனகைத்
தொன்றுகாலம்வந்ததிங்குருத்துநானுடன்றுமைக்
கொன்றுகாலனூரிலுங்களாவியுங்கொடுக்கவே. (க௨௩)

* காலகேயர்விசயனின்றுகட்டுறைத்தவுறுதிகேட்
டாலகாலமெனவுருத்தழன்றுபொங்கியயின்முனைச்
சூலநேமிபாலம்வெய்யசுடுசரந்துரத்தினர்
நீலமேனிசெம்புணீரினனிறஞ்சிவக்கவே. (க௨௪)

* விண்சுழன்றுதிசைசுழன்றுவேலையுஞ்சுழன்றுசூழ்
மண்சுழன்றுவரைசுழன்றுவானினின்றவானுளோர்
கண்சுழன்றுயாதினுங்கலங்குறாதகலைவலோ
ரெண்சுழன்றுமற்றுமுள்ளயாவையுஞ்சுழன்றவே. (க௨௫)

* அவர்விடுத்தபடைகள்யாவுமழியவானிடைக்கணைக்
கவர்தொடுத்துவிலகிமீளவவர்கள்காயமெங்கணுந்
துவர்நிறத்தகுருதிசோர்தரச்சரந்துரத்தினன்
றவரினுக்கிராகவன்கொலெனவருந்தனஞ்சயன். (௧௨௪)

* பார்த்தனெய்தவாளிமெய்படப்படப்பதைத்துமீ
தார்த்தெழுந்துநகரினோடுமந்தரத்தினெல்லைபோய்
வார்த்தரங்கவேலையூடுமண்ணினூடுமறையவத்
தூர்த்தர்செய்தவஞ்சமாயைசொல்லலாகுமளவதோ. (௧௨௭)

* அண்ணறேரின்முன்னதாகுமளவிறந்ததேரொடும்
விண்ணின்மீதுதிசையளக்கும்வெற்பின்மீதுபொலியுமெக்
கண்ணுமாகுமக்கணத்தின்மீளவுங்கரந்திடு
மெண்ணலாவதன்றதன்றியற்றுமிந்திரசாலமே. (௧௨௮)

* அந்தவஞ்சர்புரியுமாயைவகையறிந்தருச்சுனன்
சிந்தைகன்றிவிழிசிவந்துதெய்வவாகைவில்லையு
மைந்துடன்குனித்துவாளிவாயுவேகமுடன்விடுத்
தெந்தவெந்தவுலகுமப்புமாரியாலியற்றினன். (௧௨௯)

* தனிதமேகமன்னதேருமொன்றுதாவில்குன்றுபோற்
குனிதருங்கடுப்பின்மிக்ககொடியவில்லுமொன்றுமேற்
கனிவுறுஞ்சரக்குழாம்விசும்பினெல்லைகண்டுபோர்
மனிதன்வின்மைநன்றுநன்றெனமதித்துவஞ்சரே. (௧௩௦)

வேறு.

புருவவில்வளைவுறவிழிகனல்பொதுளக்
கருமுகிலனையவர்கடுகினமுடுகிச்
சரமழையிடிமழைதழன்மழைசொரியாப்
பெருமழையெனநனிபிளிறினரெவரும். (௧௩௧)

* இவருயிர்கவர்தரவிடமிதுவெனவே
நவையறுதிறலுடைநகுசரமுதையா
வவரவரகலமுமணிகிளர்கரமுந்
தவருடன்விழவிழவொருதனிபொருதான். (௧௩௨)

* அவன்விடுமடுகணையடையவுநொடியிற்
பவனனதெதிர்சருகெனநனிபறியக்
கவனமொடெழுபரிரதகதிகுலையத்
துவனியொடெறிபடையெதிரெதிர்தொடவே. (௧௨௩)

* வரிசிலைவிறலுடைமகபதிமகனு
மெரிவிழியவுணருமுறைமுறையிகலிப்
பொருதனர்ரகுபதிபுதல்வனுமடுபோர்
நிருதருமெதிர்பொருமமர்நிகரெனவே. (௧௩௪)

* இப்படைகளினுயிரழிகிலரிவரென்
றப்படைகளையொழிதரவடலுடையார்
மெய்ப்புகும்விறலதுவிடையவனருளுங்
கைப்பகழியையமனனுறநனிகருதா. (௩௩௫)

* முச்சிரமுடையதுமுனிருதிரடோ
ளச்சிரமுடனெதிரழல்பொழிதறுக
ணச்சரவனையதுநகமிறுமுனைவாய்
வச்சிரமனையதுவருதலுமகிழா. (௩௩௬)

* பசுபதியருளியபகழிமுன்வரலும்
விசயனும்நறைவிரிமலர்கொடுபரவித்
திசைதொறுமமர்புரிதிறலுடைவடிவே
லசுரர்தம்முடலுகவடலுடன்விடவே. (௩௩௭)

* அக்கணைவிசையுடனகல்வெளிமிசைபோய்
நக்கதுபிறையெயிறிளநிலவெழவே
முக்கணுமழலுகமுரணொடுமுடுகிப்
புக்கதுதனுசர்தமுடல்பொடிபடவே. (௩௩௮)

* மாருதம்விசையுடன்வடவனல்கொளுவிக்
கார்தொறுநிரைநிரைகடிகுவததுபோற்
றேர்தொறுமமர்புரியவுணர்கடேகத்
தோரொருகணையொருநொடியினிலுறவே. (௩௩௯)

* மகபதியரிசிறைவரைநிகரெனவே
திகைதொறுமவுணர்கள்சிரநனிசிதறிப்
புகையொடுதெறுகனலகல்வெளிபொதுளக்
ககபடலமுமுறைகளுலினகளமே. (௩௪௦)

* ஆடினவறுகுறையலகைகளுடனின்
றோடினதிசைதொறுமுகுகுருதியினீர்
நீடினபிணமலைநிரைநிரைநெறிபோய்த்
தேடினகதிர்களுமிசைவழிசெலவே. (௩௪௧)

* மாதவமிகுதிறலசுரரைமறலிக்
கோதன்மிடுமவனொருசிலைவலிகண்
டாதபனருணனிலணிகினருயர்தேர்ச்
சூதனும்விசயனதிணையடிதொழுதான். (௩௪௨)

* தள்ளினர்தமதுயர்சலமினியிலதென்
றுள்ளினர்விசயனதுறுதியுமுரனு
மள்ளினரமுதெனவகநனிமகிழாத்
துள்ளினரிமையவர்சுரபதிமுதலோர். (௩௪௩)

வேறு.

* தேனமர்கமலத்தோன்குந்திசைமுகன்வரத்தினாலோ
மானவன்விசயனுய்த்தவடிநெடுஞ்சரத்தினாலோ
தானவர்தானையெல்லாமடிந்தவத்தளர்வினாலோ
போனதுகரந்துவஞ்சரிரணியபுரமுமன்றே. (௧௪௪)

* வானகைதளவம்வாங்குமவுணர்தம்மகளிர்தெய்வப்
பூனொடுகுழைகள்வாங்கப்புனைவயவாகைவாங்கு
நானுயர்தனுவின்வாங்கியந்தினைப்பாறிநின்றான்
றானொடுபறம்புவாங்குஞ்சுடர்மணிகடகத்தோளான். (௧௪௫)

* பார்கொண்டவசுரர்மெய்யிற்பரந்தசெங்குருதிவெள்ளங்
கார்கொண்டவிசும்புகொண்டதவர்பிணக்காயம்வானோ
ரூர்கொண்டதுரிமையோடுமவருயிர்மீண்டுமென்றாற்
றூர்கொண்டவமரர்க்கெவ்வாறிவன்பகைதடிந்ததம்மா. (௧௪௬)

* இவ்வகையசுரர்சேனையாவையுமிரியநூறிக்
கொய்வரும்வரிவில்வீரன்குரகதத்தேர்மேற்கொண்டான்
வைவருமுனைவேற்சித்திரசேனன்வாசவனுக்கோடி
நைவருதுயரநீங்கநவின்றனன்புரிந்தவெல்லாம். (௧௪௭)

* சித்திரசேனன்மாற்றஞ்செவிக்கமுதாகக்கேட்டுப்
பத்திகொள்விமானச்சோதிப்பைம்பொன்மாநகரிகோடித்
தெத்திசையெவருமேனையிமையவர்குழாமுஞ்சூழ
வித்தகவிசயன்றன்னைவிபுதர்கோனெதிர்கொண்டானே. (௧௪௮)

* கின்னரமிதுனவின்சொற்கீதங்களினிதுபாடத்
துன்னியெங்கெங்குஞ்சேரத்துந்துபிக்குழாநின்றார்ப்ப
பன்னருமறைகடெய்வமுனிவரார்பகர்ந்துவாழ்த்த
மன்னவர்மன்னன்றன்னைவாசவன்றழுவிக்கொள்ளா. (௧௪௯)

* கையுடைக்கயிலையன்னகடகரிப்பிடரின்வைத்து
மையுடைக்கொண்டல்வாகனகர்வலஞ்செய்தபோதின்
மெய்யுடைக்கலைகள்வல்லான்விஞ்சையனொருவன்கண்டு
பொய்யுடைத்தலத்தோர்க்கின்னபொறுக்குமோபுனிதவென்றான். (௧௫௦)

* விஞ்சையனுரைத்தமாற்றம்விபுதர்கோன்செவியிற்சென்று
நஞ்செனப்புகுதலோடுநயனங்கள்செந்தீக்கால
நெஞ்சினிலறிவிலாதாய்நீயிதுகேட்டியென்னா
மஞ்செனக்கரியமெய்யான்மனங்கனன்றினையசொல்வான். (௧௫௧)

* ஆதிநாயகன்மாமாயனமரர்தந்துயருமேனைப்
பூதலமடந்தைக்குற்றபுன்மையுந்தீர்ப்பானெண்ணிச்
சீதைதன்கொழுநனன்றிண்டிறலிராமன்போல
வேதநீரூலகின்மீண்டுமருச்சுனனுருவங்கொண்டான். (௧௫௨)

* ஆதலான்மனிதனென்றிவ்வருச்சுனன்றன்னையின்னே
நீதியாலமரர்யாருனெஞ்சினிலிகழலென்று
மாதர்கள்வீதிதோறுமலர்மழைசொரிந்துவாழ்த்தக்
கோதிலாவமரர்கோமான்கொண்டுதன்கோயில்சேர்ந்தான். (கடுரு)

* அரிமுகக்கனகபீடத்தண்ணலையிருத்தியண்ட
ரிருபுடைமருங்குநிற்பவிந்திரனிருந்தபின்னர்
மருவுபொற்றடந்தேரூருமாதலிதன்னைநோக்கிப்
புரிசிலைவிசயற்குற்றபோர்த்தொழில்புகனீயென்றான். (கடுச)

* மற்றவன்றொழுதுபோற்றிவானவர்குழுவுக்கெல்லாங்
கொற்றவவென்னுலின்றுகூறலாந்தகைமைத்தன்று
வுற்றெதிர்மூன்றுகோடியசுரருமுடனேசேர
விற்றதுகண்டேன்பின்னர்வில்லிறுணிடியுங்கேட்டேன். (கடுரு)

* ஆயதுநிகழ்ந்தபின்னரயனருள்வரத்தினாலே
யேயவாள்வலியின்மிக்கவிரணியபுரத்துளோரைத்
தீயவெம்பகழியொன்றாற்செற்றனனிமைப்பின்முற்று
மாயமோமனிதன்வில்லின்வன்மையோதெரிந்ததில்லை. (கடுசு)

* என்றுகொண்டுயர்தேர்ப்பாகனிசைத்தனயாவுங்கேட்டு
வன்றிறலமரர்கோமான்மனமகிழ்ந்திருந்தபோதிற்
றுன்னியவமரர்யாருந்தனித்தனிசுருதியோடும்
வென்றிடுபடையுமற்றும்வேண்டுவபலவுமீந்தார். (கடுஎ)

* தேவர்பால்வரமுமெல்லாச்சிறப்புமின்னருளும்பெற்ற
காவலன்கடவுள்வேந்தன்கழலிணைபணிந்துபோற்றித்
தாவரும்புரவித்தானைத்தருமன்மாமதலைபொற்றாண்
மேவரவேண்டுமின்னேவிடையெனக்கருளுகென்றான். (கடுஅ)

மைந்தனங்குரைத்தமாற்றமனனுறமகிழ்ந்துகேட்டுத்
தந்தையுவின்னஞ்சின்னாட்டங்குகவிங்கென்றேத்திச்
செந்திருவனையதோற்றத்தெய்வமென்போகமாத
ரைந்தொடாயிரரும்வேறோரம்பொன்மாளிகையுமீந்தான். (கடுகூ)

* வரோதயமானதெய்வவான்படைமறைகள்பின்னும்
புரோசனப்பகைவற்கீந்துபுரந்தரனிருந்தபின்னர்ச்
சரோருகரண்டம்விண்டாலொருமயிர்சலிக்குஞ்செங்கை
யுரோமசமுனியைநோக்கியுரைத்தனனுற்றவெல்லாம். (கசுo)

* வரிசிலைவிசயன்வந்துவான்றவம்புரிந்தவாறு
மரிவையோர்பாகனன்பாலவற்கருள்பூரிந்தவாறு
மிரியவென்பகையையெல்லாமிவன்றனிதடிந்தவாறுந்
தருமனுக்குரைத்தியென்னத்தபோதனமுனியும்போனான். (கசுக)

நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-உகசுo.

உ

# நளன் கதையுரைத்த சருக்கம்.

* மற்கொண்டுவகுத்தனையசிகரத்திண்டோள்வாளரக்கன்குலத்தோடுமடி
யமுன்னம், விற்கொண்டுசரந்தொடுத்துப்புரையில்கேள்விவிண்ணவர்தந்துயர்
தீர்த்தவீரராமன், கற்கொண்டவகலியைதன்னுருவமீளக்கவின்கொள்ளக்கொ
டுத்ததிருக்கமலபாதஞ், சொற்கொண்டுதுதித்தெழுந்துதுள்ளிநாளுந்தொழும
வரேயெழுபிறவித்துவக்கற்றாரே. (௧)

* இப்பால்வெஞ்சிலைவிசயன்றுறக்கமீதிலிந்திரன்றனருகிருப்பவிமையோ
ரூரி, லப்பானற்றவம்புரிந்துதழல்கூர்வேள்வியந்தணர்தங்குழாஞ்சூழவழகார்ம
ண்ணி, லொப்பாருமிலாதமடமயிலிணோடுமுயர்வனத்தினிடைநாளுமொருநா
ள்போலத், தப்பாமலறம்வளர்க்குநீதிவேர்துந்தம்பியரும்புரிந்ததினிச்சாற்று
கிற்பாம். (௨)

குன்றுதசிலைவலிக்குநிகரிலாதகுரிசிலகன்றுளபின்னர்குருகுலேசன், செ
ன்றுனோகடுவனங்களிகந்துவெள்ளிச் சிலப்பருகிற்சார்ந்துதிருவடிகட்கேற்ப,
நின்றுனோவருந்தவத்தினொருவன்கோல நினைந்தானேசுவையொளியூறுசை
நாற்றம், வென்றுனோவவணிகழ்ந்ததென்னோவென்று விரைந்துதினந்தினமு
மிவர்வருந்துநாளில். (௩)

மான்றோலும்புரிநூலுமார்பிற்றூங்க வளர்ந்தசடைமுடிதுளங்கவலியவே
ங்கை, யூன்றோலினுடைவிளங்கமறைகளெல்லா மொருங்குணர்ந்ததிருநாவினு
சியோங்க, வீன்றோனிற்பெருங்கருணையாவர்மேலு மிருந்தமுனிதண்டுகமண்
டலங்கடாங்கிச், சான்றோர்கள்பிருகுதச்சுவதனென்றேத்தத்தருமனுறையிட
ஞ்சார்ந்தான்றவத்தான்மிக்கோன். (௪)

றுணங்கியநுண்ணிடையோடுமிளைஞரோடு நூன்முறையாலெழுந்துமுகம
லர்ந்துபோந்து, வணங்கியருக்கியமுதலாங்கடனீந்தேத்தி மணித்தவிசினிருத்
தியபினிருந்துகூறுங், கணங்கொணருங்கியசிமையச்சாரலூடு கண்ணருள்செய்
தடைந்திடயான்றவமென்செய்தே, னிணங்கியவெங்குலக்குரவர்தவமேயென்
றுனிருந்தமுனியாசிபுகன்றியம்பலானுன். (௫)

அரும்பியவாணைகைத்துவர்வாயனல்வந்தாளோ டைவருமிங்கடைந்ததுவு
மரன்பாலம்பு, விரும்பியருச்சுனனகன்றவாறுமுங்கண் மெலிவுமுணர்ந்தேய
டைந்தோம்வீரவாகைச், சுரும்பிமிருஞ்செழுந்தாரோய்வருந்தேலீசன் றுணை
யாகிற்பெறற்கரிதாந்தோற்றமுண்டோ, கரும்பொருபங்குடையோனுன்னிளை
ஞன்மீதுகருணைபுரிதருமினிமேற்காண்டியென்றான். (௬)

அடுத்தாருக்கருள்புரியாதிகழ்ந்ததீமைக் காளாகும்பணிக்கொடியோனுளை
க்கானங், கொடுத்தானென்றுளங்குறியேற்றுணைவரோடு கொடியசமனரும்ப
தியிற்குடியாய்வைகித், தடுத்தநரகினிற்றுனைவான்றுணிந்தானென்றே தணிதி
யினிச்சின்னாளிற்றரணியெல்லாந், தொடுத்தாருங்குடைநிழலிற்புரப்பைநீயே
செற்றமுறைக்கினித்தவறுசொல்வாயென்றான். (௭)

அஞ்சலித்தகரதலனு யறன்றன்கானை வையநினதுரைவேதமல்லாதுண்டோ, வஞ்சகனம்புவிசூதாற்கவர்ந்தானென்னும் வசையாற்றிப்புவிபுரக்கமன்னன்மைந்தன், சஞ்சலித்ததிலெமதுதீமையல்லாற்ருெருவர்தமைவெறுக்குந்தகைநன்ருமோ, கஞ்சனுக்குநிகர்தவத்தோயெம்மைப்போன்முன்னங் காசினிசூதாலிழந்தோர்கருதிலுண்டோ. (௮)

யாவரேயுளரெனினுமவர்தங்காதையிசைத்திடுகவெனக்கேட்குமிறைவற்காங்குத், தேவரெலாமுடிதுளக்குமுனிவன்சொல்வான் றிகழ்நிடதநாட்டிறைவன்செகங்கைவிட்டு, மேவருங்கானகம்புகுந்தான்சூதாலென்னும் வியன்சரிதமிவ்வுலகில்விளம்பாருண்டோ, காவலனேயானுமதைப்புகல்வன்கேண்மோ கடக்குவைநுந்துயரமெனக்கழறலானன். (௯)

வே று.

விடதரற்கும்விளங்கியவாயிரம்
படதரற்கும்பரியாவளனது
குடதரற்குங்குணிக்கருநன்னிலை
நிடதவெற்பெனுநீள்வரையுண்டரோ. (௧௦)

மேவிந்துக்கதிர்சூழ்ந்தணிவேய்ந்திசை
தாவிந்தத்தலத்தொப்பெதுசாற்றுகேன்
கோவிந்தற்கிசைகூறரிதென்பரான்
மாவிந்தப்பெயர்மாநகரங்கணே. (௧௧)

வார்முகத்தனமாதரில்வேனிலான்
போர்முகத்திற்புராரிமுராரியே
சீர்முகத்திற்செழுஞ்சுடர்வேளன்
பேர்முகத்திற்பெருகுங்கருணையான். (௧௨)

மன்னர்சென்னிமணிமுடிமேற்புனை
துன்னுசெய்யத்துணைப்பதத்தான்முனம்
பன்னிநாடுபரிந்துபுரந்துளான்
நன்னிலாமதிநற்குலத்தோன்றலே. (௧௩)

அணங்கனுர்களநேகம்டந்தையர்
கணங்களோடுபடர்ந்திடக்காவின்வாய்
மணங்கமழ்ந்தபுனற்கரைமன்னினு
னிணங்கமழ்ந்தநெடுஞ்சுடர்வேலினுன். (௧௪)

தனத்தையாருயிரைப்பொருடானெனச்
சினத்தபோரினுமீவினுஞ்சிந்தியா
மனத்தினனந்தவாவியிற்பொன்சிதை
யனத்தைக்கண்டனனங்கைப்படுத்தினுன். (௧௫)

பொய்கைவாண்மலர்போலுங்கரத்திருந்
துய்கைநோக்கியுயிர்த்தனமன்னவன்
செய்கைநோக்கிச்சிறப்படைந்தோர்மொழி
வைகைவேன்முடிமன்னனுக்கோதுமால். (௧௬)

வேறு.

வீட்டுறுவேற்கைவேந்தேவிதர்ப்பர்கோன்வீமன்றந்த
கோட்டிளமுலையலங்கற்குழற்றமையந்திவின்னோர்
நாட்டினு நகராப்பெண்மைநலத்தினுள்வனப்பைமுன்னங்
கேட்டிலேபோலுநீயென்றஞ்சிறையனங்கிளத்தும். (௧௭)

பழித்தசொற்செவ்விபொருநுபங்கயன்மாதந்தோறு
மழித்தழித்தியற்றித்திங்கள்வனமுகத்தழகுவாயா
திழித்தகவடைந்தகாந்தளிவள்கையினிணையாப்பூப்ப
தொழிந்திலநாணிநாணியுருத்திடுமிதழ்களெல்லாம். (௧௮)

பஞ்சிதோய்டிகட்கியாதுபகர்பொருளுவமைசீதக்
கஞ்சமுமனிச்சப்போதுங்காமப்புத்தகமுநேரா
தஞ்சிறைத்தும்பிக்காற்றுதலைந்தலைந்தாற்றுதொல்கும்
வஞ்சிநுண்ணிடைக்கோமின்னும்வல்லியுநிகர்க்குமன்றே. (௧௯)

திண்மையும்வனப்பும்வெப்புஞ்செறிவுமென்சுணங்குஞ்சீதத்
தண்மையும்விளங்கும்வெற்போரிரண்டுண்டேற்றனத்துக்கொப்பாம்
வண்மையுந்தடமுஞ்செய்யவரிகளும்விடமுநீல
முண்மையும்வனப்புங்கொண்டவேலுண்டேல்விழிக்கொப்பாமே. (௨௦)

பவளத்தைவெளிறுசெய்யுமதரங்கள்பாங்காவைகுந்
தவளத்தைநீலங்காட்டுந்தண்மலரளகம்விண்ணிற்
குவளைக்கணரம்பைமாதர்குலக்கொருபீடமென்றாற்
கவளத்துக்களிற்றுவேந்தேகருதலாஞ்செயலுமுண்டோ. (௨௧)

அன்னைபைந்தொடியைநீபோயலங்கல்சூட்டுதியேல்வேறு
நன்னலமிதன்வேறுண்டோநம்பிநின்றனக்குமிந்தப்
பொன்னனையாட்குஞ்செவ்விபொருந்தமேயென்றுகூற
மின்னும்வேலரசர்கோமான்வெயின்மெழுகாகினானே. (௨௨)

பொலன்சிறையனமேயந்தப்பொற்கொடிபாங்கரேகி
நலம்பெறுமாறுகூறிநண்பினையுறுத்திமீண்டாற்
குலனுடைக்குரவர்க்கெல்லாங்கூறரும்புகழாமிந்த
நிலனுளவளவுநின்றனெடும்பெயர்தவிர்ந்திடாதே. (௨௩)

என்றரசுரைத்தலோடுமேந்தலேயவனைநின்றன்
குன்றுறழ்புயத்திற்சேரக்கூட்டுவன்காண்டியென்று
வென்றிவேலரசைநீங்கிவிண்ணிடைவாவியோடி
மன்றலங்குழலாள்வைகுமாநகரடைந்ததன்றே. (௨௪)

பாசிழைப்பருமவல்குற்பைந்தொடிமார்களுப்பண்
மூசுவண்டரற்றுமோதிமொய்குழலிருந்தல்பாரா
வோசைசெய்சிறைகுவித்தாங்குயர்வறத்தரையினெய்திக்
கூசுதலின்றிநிற்பக்கோற்றொடிதொடர்ந்துசென்றாள். (௨௫)

மருமலர்க்குழலார்நிற்பமங்கையாங்கொருத்தியந்தத்
திருமலரனத்தின்பின்போய்ச்செங்கையிற்பற்றுநின்ற
கருமமுமிடமுங்கண்டுகன்னிநீயாவர்கோதை
வெருவுறத்தொடர்ந்தாயென்றேமொழிந்ததுமின்னுஞ்சொல்வாள். (௨௬)

விதர்ப்பர்கோனளித்தபாவைவிறற்றமயந்தியென்பேர்
முதற்படுமனமேநின்மேலாடுவான்முயலுகின்றே
னிதற்கினியையமின்றலெய்துநிகரத்திலென்றாண்
மதர்த்திருகுழையைத்தாவிமறிந்தெழுதடங்கண்மங்கை. (௨௭)

மறையவன்கரத்துமிந்தமண்ணுலகாளுநீதி
யிறைநளன்கரத்துமன்றியிருக்கிலேனென்றுரைத்த
முறைநெறியனத்தைநோக்கிமுலைபுளகரும்பச்சொற்ற
கறையயில்வேலினானைக்கண்டுளாய்போலுமென்றாள். (௨௮)

தேவர்பேரவையினெங்கடிசைமுகனவையில்விண்ணோர்
காவலனவையில்யாரேகளிப்புறாவன்பேர்கூறின்
மேவரிதென்னைப்போல்வார்வேந்தனற்கருணையாலே
போய்வரலுளதுமேனாட்டவத்தினாற்புதுமைத்தன்றே. (௨௯)

வாகையந்தெரியல்வேய்ந்தமௌலிவாளுழவரந்தப்
போகியுநிகராவேந்தன்புறங்கடையுறங்குகின்று
ராகியதிரைகொணர்ந்துமளந்திடுமமையங்கிட்டா
பாகையுமமரர்சேதாப்பாலையும்பழிக்குஞ்சொல்லாய். (௩௦)

முடங்குவிற்காமன்றன்னைமுகுந்தனைச்சயந்தன்றன்னை
விடம்படுகண்டனன்பார்வேந்தளித்தவனைக்கண்டேன்
படஞ்செறியல்குற்செங்கைப்பவளவாய்முத்தமூரற்
குடம்படுகொங்கைநல்லாய்கோமகற்புரைவாரின்றே. (௩௧)

வனப்பையுநிடதர்கோமான்வண்மையுமுண்மைவல்விற்
குனிப்பையுமொழியுமின்சொற்குணத்தையுமெதிர்ந்தமாதர்
நினைப்பினுந்திசைகடோறுநெடுகணோக்களவுமன்றூர்
மனத்தினுநீங்கானென்பார்வானினும்பெரிதிவ்வார்த்தை. (௩௨)

அறந்தலையெடுக்குமாழியரசர்கட்கரசனான
மறந்தலையெடுக்கும்வேலான்மந்தரப்புயத்தைநாடிச்
சிறந்தலையெரியும்வீரைத்திண்புவியிடத்தின்மாதர்
திறந்தலைதவத்தினிற்போர்க்கெவர்தொகைசெப்பற்பாலார். (௩௩)

ஆயினுமந்தவேந்தற்கரசியற்கமைந்தவல்லி
நீயெனத்தேற்றுமென்றனெஞ்சகத்துனதுதந்தை
தாயினைமுதலோராருந்தருங்கருத்திசைந்துளாரோ
வேயெனவுரைத்தலாலென்பயனெனவிசைத்ததன்னம். (௩௪)

மடப்பெடைநடையாளந்தவாசகங்கேட்டலோடுந்
திடப்படுமனமுந்தேசுஞ்சிந்தையும்வேறுவேறு
யிடர்ப்படுமாறுநோக்கியிளங்கொடியுனதுநெஞ்சிற்
கடைப்பிடியுரைத்தியாதுகருமமேயெனினுநேர்வன். (௩௫)

என்றனளெகினங்கூறவிளமுலைப்பரம்பொருது
நின்றொருமருங்கிற்செவ்வாய்நேரிழைபுகல்வாளந்தோ
வென்றியாருயிரன்னானைவேண்டினேன்றருதியென்று
மன்றலங்குழலார்கூறவல்லரோநாண்குலைந்து. (௩௬)

கூறினுந்தனிநீசென்றுகொற்றவற்கறியுமாறு
தேற்றிடப்புகன்றுகூட்டுஞ்செய்கைக்குக்கருணைநின்பா
லாறுமேற்புகல்வனென்றாளுரைத்திநின்கருத்தையின்னே
வீறுறச்செய்வனென்னமெல்லியல்விளம்பலுற்றாள். (௩௭)

பாட்டளிதுதைந்தபைந்தார்ப்பார்த்திபனிடதர்கோமான்
சூட்டுவனலங்கலென்றுதுணிந்துயிர்சுமந்திருந்தேன்
வாட்டமென்னேயமென்பால்வழங்கிலனென்றபோதே
வீட்டியென்னுயிரைமாய்க்கும்விதமலாதுய்கையுண்டோ. (௩௮)

செஞ்சுடரனையதெய்வத்திருமுடியரசன்காதை
வஞ்சியர்புகலக்கேட்டென்மனத்துடனுணர்வுந்தேசுஞ்
சஞ்சலமறவவர்க்கேதந்தனனினிமேலுண்டோ
வஞ்சிறையனமேயென்னேயறைகுவதுரைத்தியானே. (௩௯)

தந்தைதாயொருவர்க்கீயுந்தகைமையின்றெனதுசிந்தை
முந்தியகருத்துக்கேற்றமுறையலாற்பிறிதுநேரார்
கந்தனையனையகூர்வேற்காவலனருள்செய்திங்கு
வந்தெனையலங்கல்சூட்டும்வகையைநீபுரிகவென்றாள். (௪௦)

பிறைநுதல்வனிதையெண்ணமறிந்தபின்பெயருமந்தண்
சிறையனமிதனைக்கூறுந்தேமொழிநிடதர்கோமான்
முறைதருநின்பேர்கேட்டுமூழ்கினன்மையல்வாரி
யறையலாந்தரமுமன்றலாங்கவன்காமநோயே. (௪௧)

சேருமோகுடங்கைமங்கைத்திண்முலைத்தடத்தின்மார்பிற்
சாருமோசிந்தையொன்றாய்த்தயங்குமோதன்மேலன்பு
கூருமோவுள்ளமென்னோவென்றுளங்குறித்துவேந்தன்
சோருமோகத்தையாரேசொல்லுவார்புவிமேலம்மா. (௪௨)

ஆதலாலுனதுசிந்தைத்துணிவினையறியுமுன்னம்
போதுதற்கையமுண்டாற்புரவலன்றன்பானின்றன்
காதலைத்தணிப்பனெய்திக்கடிதினென்றுரைத்துத்தூவி
யோதிமமகன்றுசெம்மலூர்புகுந்தெதிர்ந்துகூறும். (௪௩)

மின்னையுமுகாந்தகாலவெயிலையுநகும்வேல்வேந்தே
பொன்னையுநகுமெய்க்கோலப்பொற்றொடிபுகழான்மிக்க
நின்னையுநினதுகாதனிறைவையும்விரும்பிமீளத்
தன்னையுமறந்தாளென்றுற்றாழ்க்கலாந்தரமுமுண்டோ. (௪௪)

வேறு.

வாளினுக்கெதிரிலாமன்னர்மன்னனே
தோளினுக்கிசைந்தவடியரங்காணினும்
வேளினுக்குயர்சிலைவெற்றியீவரோ
நாளினிக்கழிப்பதேநடத்திநாளையே. (௪௫)

சுரும்பிமிர்தொடையலாயலங்கல்சூட்டுமக்
கரும்புறழ்சொல்லியென்றுரைத்துக்காவல
னரும்புவாணகைமுகத்தருள்கொண்டேகிற்றால்
விரும்புசெம்பவளவாய்விளங்குமோதிமம். (௪௬)

கேகயச்சாயலாள்கிளத்தும்வாணகைத்
தோகைநல்விதர்ப்பர்கோனளித்தபொற்றொடி
மோகமுநெஞ்சமுந்துயருமுந்துற
வாகநொந்தரிவையராயமண்மினாள். (௪௭)

வந்தபொற்பாவையைக்கொண்டுமங்கைமார்
சந்திரன்றொடுமணித்தலத்தினேகினார்
முந்துதேரிரவிடிங்கடலின்மூழ்கின
னிந்துவுங்கங்குலுமெழுந்ததாங்கணே. (௪௮)

மாரவேள்பகழியுமதியின்வெம்மையு
மாரமாமுலைக்கொடிக்கணங்குசெய்தவாற்
பாரநாளகன்றலரமளிப்பாங்கரிற்
காரலர்குழலினாள்கழறன்மேயினாள். (௪௯)

இதக்கநீயென்வயினேதுறந்தனை
மதிக்கனலேயெனப்புகல்வள்வஞ்சமன்
மதக்கொடுபாவியென்னுயிரைமாய்த்தபின்
கொதித்தெழுவெஞ்சினங்குறையுமோவென்பாள். (௫0)

இத்தகையாகுலமெய்தியோரிர
வெத்தனையூழியோவென்றுசோர்தரு
முத்தவெண்முருவலாண்முகத்துக்கொப்பனை
யொத்ததாமரைக்கிறையுதையமாயினன். (௫௧)

வேறு.

துடிக்குநேரிடைமம்மராங்கொருவணந்துறந்து
கடிக்கொள்சோலையினிருந்தனள்கன்னிமாருரைப்பத்
தடிக்குமென்முலைத்தாயுணர்ந்தரசனோடுரைத்தாண்
முடிக்குங்கூந்தன்மான்முதுக்குறைந்தனளெனுமுறையே. (௫௨)

திருவைநேர்பவடனக்கனிவதுவைசெய்திடுவான்
பொருவிலாதனற்சுயம்வரமண்டபம்புதுக்கிக்
கருதியோரெழுதினமினிக்காவலரெவரும்
வருதிரென்றுதூதேவினன்விதர்ப்பனுமன்னன். (௫௩)

உரைத்ததூதர்சொற்செவிப்படுமுன்னரேயோதை
திரைப்பெருங்கடலவனிபரியாவருஞ்சேர்ந்தார்
கரைத்தடந்தனிற்காலையினலர்ந்தபூவொன்றை
நிரைச்சுரும்பினமொய்த்திடமேவுதனிகர்ப்ப. (௫௪)

சூரதப்படைவாசவனெமன்கனற்றேன்றன்
மாருதத்தினேன்முதலவானவர்களும்வந்தார்
சாரதைக்கிணைச்சேயிழைதனைமணமுடிப்பான்
நாரதப்பெயர்கன்முனிநவின்றிடப்புவிமேல். (௫௫)

காதரந்தண்கடற்புத்தமுதுண்டவர்கன்னி
யாதரந்தங்கமுதயிலுவாரடைந்தனரென்று
லீதறஞ்சொல்வதேனேழையர்க்காடவருலகின்
மாதர்வெங்கட்கிடைந்தேமடலூர்வதும்வழக்கே. (௫௬)

போயதூதர்மாவிந்தமாபுரத்தினிற்புகுந்து
தூயவேந்தனுக்குணர்த்தினர்சுயம்வரமுடித்த
லாயகாலையினுதரத்தடைந்தனனன்கு
மேயசேனையுமுழையருமரசரும்விரவ. (௫௭)

விதர்ப்பதேயவேந்தணிநகர்மருங்கினிவ்வேந்த
னதிர்த்தமாமுரசொலியுடனடைந்தவணிறுத்தான்
முதற்பகர்ந்தவானவர்களுந்துந்துபிமுழங்க
வெதிர்ப்பெரும்பொழிலிடத்தடைந்திறுத்தனர்மாதோ. (௫௮)

கடவுளோரெலாந்திரண்டதுகண்டுளமகிழ்ந்து
நிடதர்கோமகன்காண்குவானவருழைநேர்போ
யடஃலுலாவுகைகுவித்தனனுசிகள்வழங்கி
யுடனுறும்படிதவிசளித்தும்பர்கோனுரைப்பான். (௫௯)

உடுக்கணுப்பணின்மதியெனும்வேந்தனுக்கொருவ
மடக்கருங்கணுடமயந்திவனப்பினைக்கேட்டு
முடுக்குமாசையாற்றிருமணமுற்றுவான்வந்தே
மடுக்குமுன்றனக்கெம்முளக்கருத்தைதமுற்றுக்கல். (௬௦)

ஆதலாற்றமயந்திபாலடைந்தெமையறிவித்
தேதுபண்பினுமிசைந்திடச்செய்தியென்றனக்குப்
போதுசெங்தொடைபுனைகலாண்மறுத்தனளென்றுன்
மீதிம்மூவரிலொருவருக்கிசைந்திடவிளம்பி. (௬௧)

மீண்டுவாவெனப்பலமொழிவேந்தனுக்குரைத்தே
யாண்டிருந்தவரறிவுறுதஞ்சனந்தீட்டி
வேண்டியேவலும்வேந்தனுமவர்மொழிகடவான்
காண்டுமன்னவள்கருத்தெனவிசைந்தவைகடந்தான். (௬௨)

வேறு.

சூராடுஞ்சோலைகளும்பருவமாதர் துளைந்தாடும்வாவிகளுந் துணிந்திடங்கர்
போராடுமகழிகளுங்ககனவாணர்புரத்தாடுங்கொடிமதிலும்புறங்கொண்டேகிச்
சீராடுந்தோரணங்கேதனங்கடீபந்திகழாப்பைந்தருக்களினுற்செறிந்தவீதி
தாராடுமணிப்புயத்தான்கண்டுவந்துதராபதிவாழ்ப்புரத்திற்சார்ந்தானன்றே.

அஞ்சுகங்கணஎன்வந்தான் வந்தானென்ன வணிகொடீமயந்தியெனுமண ங்குநீயே, விஞ்சுநிடதப்பெருமான்யானேயின்று வேள்விமுடித்திடுதுமெனப் பூவைபேசக், கஞ்சமலரனையமுகமடவார்வீமன் கன்னியையுநளனையுமோர்பட த்திற்றீட்டி, யின்சொல்பலவிதம்பேசிமகிழாநின்ற விளமுலையாடனிமாடத்தெ ய்தினனே. (௬௪)

தொடுத்தமலர்நறுஞ்சாந்துமுதலகொண்டு தோன்றலெனுநளன்றனதுதி ணைவனுக, வடுத்தமலைமகள்வழிபாடாற்றுநிற்கு மரிவையினுடமையந்தியாமெ ன்றன்ன, மெடுத்துரைத்தவனப்பியல்பானுணர்ந்தேயாரு மிலாவமையநோக் கிமதனெழிலினுக்கோர், வடுத்தகையகருங்கழலானுருவந்தோற்ற வானவர் தீட்டஞ்சனத்தைமாற்றிநின்றான். (௬௫)

வேறு.

மதிகுலவிறைவன்பூரணமதிமுன்வந்ததுபோலநின்றிடலு
மெதிர்விழித்தரிவையற்புதமடைந்தாங்கிளமுலைபுளகெழமாழ்கி
விதியினைமுனிந்தகுமரனேமதனேவேந்தர்கள்வேந்தனேவென்ன
மதரிருநீலக்கட்கடைபுரட்டிவடிவினைப்பருகிமெய்தளர்ந்தாள். (௬௬)

வாகைவேலரசன்பொற்றொடிதனதுவடிவிருவிழிகளுக்கடங்கா
தாகையாலுயிர்த்தாணிவடனையுமறமவன்றன்னையுந்தடுக்கத்
தோகையேர்தறியினுடலெலாமறைத்துத்துணைவிழிவெள்ளமீதோட்டிப்
பாகைநேர்மொழியாளார்கொனீகாவற்பழிபடமேவினையென்றாள். (௬௭)

மங்கலமுழவுவாய்மருவிதர்ப்பமன்னவன்பயந்தவேற்கண்ணாய்
பங்கயங்களையுமருதநல்வேலிப்பலர்புகழ்நிடதநாடளிக்குந்
துங்கவேனளன்யான்கடவுளரேவல்சுமந்துனக்கொருமொழிபகர
விங்கடைந்தனனுங்கவர்தருதிலதமெனதுடன்மறைத்தலானென்றான். (௬௮)

வாட்டடங்கண்ணியமுதினையெதிர்ந்தவாறெனத்தனதுளமகிழ்ந்து
கேட்டவான்செவியுந்தண்ணெனக்குளிர்ந்துகேழ்கிளர்சிறுநகைவிளைத்துப்
பாட்டளிதுதைபுமலங்கலார்க்கென்னேபகர்வதுகடவுளர்நம்பாற்
காட்டியமொழிக்குவிடையமேயென்னக்கன்னியுமுன்னிமீண்டுரைப்பாள். ()

மின்புரைவேலோய்கடவுளரென்பால்விடுத்ததெனுரைத்திடவென்றாள்
பொன்புரையணங்கேநின்வனப்புணர்ந்துபுரந்தரன்விரும்பிவந்தடைந்தான்
றன்புரைகடவுள்பிறரிலாவுரவோன்சயிலவான்சிறகினையரிந்த
கொன்புரிவயிரப்படையினுனெம்மாற்குறிக்கலாந்தரத்தினனன்றால். (எ0)

கற்பகத்தருவினீழலுந்தெய்வக்களிறுமாநிதிகளுமானும்
பொற்புறுதலமுமிமையவர்வணங்கும்புனைமணியிருக்கையுமுடையோன்
பற்பலவரம்பைமாதரைச்சசியைப்பரிந்தனைவிரும்பினனென்றால்
வெற்புறழ்முலையாய்நினைப்புரைமடவார்விண்ணினுமண்ணினுமிலையே. (எக)

வெண்குடையரசர்தமைவிழைந்தணைதல்மேதினிவாழ்க்கைசின்னாளே
தண்குடையமரரிறைவனைச்சேரிற்றக்கவான்போகமும்புகழு
மெண்கருதருநாள்வாழ்க்கையுமுளவாமேழைநீவேறுளங்குறியேல்
விண்குடைநீழல்புரப்பவன்றனக்கேவிரைத்தொடைபுனைதிநீயென்றான். (எஉ)

பொருதிறலரசன்கட்டுரைகேட்டுப்பொற்றொடிதிருவுளமாழ்கிக்
குருதிவேற்கரத்தோய்மாநிலத்தவரைக்குறிப்பதுகுரவர்கட்கியல்போ
கருதினுமொருவன்வரனெனமனத்திற்கன்னியர்கருதிமீட்டவனை
யொருவிவேறொருவர்க்குடன்படுவாரோவும்பருமுணர்வுறுதுளரோ. (எங)

போகமும்புகழுமாயுவுந்திருவும்புருமெனிலறநெறிவிடுத்து
மாகநன்மடவார்கற்பினையிகத்தல்வண்மையாமென்பதுமுண்டோ
நாகர்கோனுலகினுள்ளவரெவர்க்குநல்கியபிதாவலாற்பிறிதோ
வேகிநீயுரைத்தியென்றனளதன்பினிறைமகனிதனையோதினனே. (எச)

அறப்பெருங்கடவுள்செழுந்தழலுலவையரும்பெயர்வானவர்மூவர்
திறத்துடனடைந்தார்காதலாலவரிற்றிருவுளந்தனக்கிசைந்தவர்பாற்
றுறைப்படுமல்கற்சூட்டுதியென்றான்றோகையும்பலமொழியென்னே
யிறப்பதெய்திடினுங்கருதினேர்க்கன்றியிசைகிலேனெனமொழிந்தாள். ()

மங்கைதனுள்ளக்கருத்தெல்லாமுணர்ந்தமன்னவனஞ்சனம்புதுக்கி
வெங்கதிர்மேனிமறைத்தொருநொடியின்மீண்டுவந்தமரரைவணங்கி
யங்குளமாற்றமனைத்தையும்புகன்றானளியுருக்கொண்டவரனுகிப்
பங்கயமுகத்தானருகிருந்தெல்லாம்பாங்குறக்கண்டறிந்தனரால். (எசு)

அன்னபண்பதனுலரசன்றன்மாற்றமாமெனத்திருவுளமகிழ்ந்து
பன்னருமகவான்மறையுடன்படைகள்பலபலபார்த்திபற்களித்தான்
சொன்னதென்றிசையோன்றண்டமொன்றீந்தான்சூழ்கனலவனளபாக
நன்னிலையளித்தான்மாருதன்வாயுவேகமாம்நல்வரமளித்தான். (எஎ)

வரம்பலவளித்துமன்னனைத்தழுவிவானவருய்த்திடமீண்டு
திரம்பெறுதனதுவாகினியடைந்துசிறந்துவீற்றிருந்தனன்வெம்மைக்
கரம்பலவுடையோன்மேற்றிசைமறைந்துகாட்டியவிஞ்சைபோற்கீழ்பால்
நிரம்புநீராழியக்டுகிண்டெழுந்தானிலமெலாம்பரவிவாழ்த்தெடுப்ப. (எஅ)

இத்தினம்வதுவைமுடித்திடுதினமென்றெழின்மணிமுரசறைந்திடலுஞ்
சித்திரவரிவின்மன்னர்கள்பலருஞ்சென்றணிமண்டபம்புகுந்தார்
வித்தகனிடதர்கோமகன்வேதம்விளம்பியநியமமுற்றியபின்
சத்திரநிழற்கீழ்ச்சென்றுவீற்றிருந்தான்றரணிபனெதிர்கொளத்தவிசில். (௭௧)

அமரருமாசைநீத்திடாதனுகியழகியநளனுருவமைந்து
விமலமாய்த்தவிசில்வீற்றிருந்துளபின்வேந்தர்கோன்பயந்தபொற்பாவை
நிமலவம்பரவையஞ்சுகம்பூவைநேரிழைமார்களெண்ணிறந்தோர்
கமலவொண்கரங்கொண்டிருபுடைசூழக்காவலர்பேரவைபுகுந்தாள். (௮௦)

சாரதையவட்குச்செவிலியாயடைந்துசமரவேன்மன்னவர்குழுவைப்
பேருடனுடுமுறைப்படுத்துரைத்துப்பேசும்வானவரையுந்தெரித்தாள்.
வாரெதிர்முலையாள்கடவுளர்க்கிறைஞ்சிமகிழ்ந்திடநல்லுரைபுகன்று
சீரருளதனைனிடதபூபதிக்குச்செவ்வியஞ்செழுந்தொடைபுனைந்தாள். (௮௧)

சிலைமதனருகிலிரதிசேர்ந்தென்னத்தெவ்வடுமன்னவனருகி
லலையெறிகடல்போற்கண்ணிணுணிற்பதறிந்துளம்பொருதமருடற்றி
மலிபுனலவனிமன்னவர்நளன்கைவடிக்கணைக்காற்றலராகி
நிலைதளர்ந்தகன்றார்ககனவாணரும்போய்நெடுமதிற்பெரும்பதியடைந்தார். ()

மன்னவன்சிலநாள்விதர்ப்பன்றனகரின்மாதுடனின்பமுற்றியபின்
தன்னனிகத்தோடிரதமேற்கொண்டுதார்குழலுடனகர்சார்ந்தான்
முன்னரினமரர்செலும்பொழுதெதிர்ந்துமொய்குழனளன்றனைவிழைந்தா
ளுன்னருந்துயரங்காண்குவனவளையுணர்கநீரெனக்கலியுரைத்தான். (௮௩)

அறத்திறங்கடவாநற்குணத்தவருக்கருந்துயர்விளைத்தனன்றுமோ
மறுத்திநீயென்றுவானவர்புகழவஞ்சினமொழிகலானுகிச்
சிறுத்தநுலிடையாள்கொழுநனேடிருந்ததெய்வமாநகரியினடைந்து
புறத்தினேதிரிந்தானகம்புகானறத்தாற்போயதங்கநேகநாண்மாதோ. (௮௪)

நீர்விளையாடிவனங்களிலுலாவிநெடியவம்மனைகழங்கெறிந்து
பார்விளையாடிமாடமேற்பளிங்கின்பருமணிச்சாளரந்திறந்து
போர்விளையாடுமகிழ்நனைப்பிரியாள்பொற்புறப்புணர்ந்துவாழ்ந்திடுநாள்
சீர்விளையாடுமகனையீன்றெடுத்தோர்தேசுடைமகளையுமீன்றாள். (௮௫)

மைந்தனுமகளுமின்னலங்கொடிபோல்வயங்கிடநிடதநாட்டரசன்
கந்தடுபனைக்கைக்கிம்புரிக்கோட்டுக்கழைசுளியானையான்விண்ணி
னிந்திரற்கிவ்வாறுளதுகொலென்னுவியலுடையின்பத்தினிருந்தான்
சுந்தரவேலாய்கலியினுலவர்க்குச்சூழ்ந்ததும்விளம்புதுங்கேண்மோ. (௮௬)

வேறு.

எடுத்தவிற்குரிசிலோர்நாளிரவிபோயொளித்தபின்ன
ரடுத்தனன்னியமமுற்றுமளவைபிற்புறங்காற்சந்திற்
றொடுத்தநீர்தோய்ந்திடாதாசூசமென்றறிந்துட்புக்கான்
கடுத்தவான்றூன்றிநீங்கிக்கலியனென்றுரைக்கும்பேரோன். (௮௭)

மாற்றலனொருவன்சூதில்வல்லவன்யானேயென்று
போற்றியகொடியவானுெங்கப்புகுந்தனனரசன்கேட்டு
மாற்றுவன்றுவசமென்றேயவனுடன்மலைந்துசூது
தோற்றனனுலகுஞ்சீருந்தொலைவில்பூண்டுகிலோடெல்லாம். (அஅ)

புட்கரனென்னுந்தீயோன்புவிக்குநாயகனுய்வைகப்
பெட்புறுசிறுருந்தானும்பேதையுநகரைநீங்கி
முட்படுகானினேகிமுடிமன்னர்வணங்குந்தாளான்
விட்படுமிடையாண்மேனிவெதும்பல்கண்டுயிர்த்தான்மன்னே. (அகூ)

மைந்தரோடென்னைநீங்கிமறையவனெறிசென்றுய்ப்பத்
தந்தையூர்புகுவையாகிற்றனக்குபகாரமென்றே
சந்தணிமார்பன்கூறத்தாழ்குழல்கணப்போதேனுஞ்
சுந்தரத்தோளாய்நின்னைப்பிரிந்துயிர்சுமக்கிலேனே. (கூ0)

என்றசொலரசன்கேட்டேயிருந்தவேதியனைநோக்கி
நன்றுநீசிறுவர்தம்மைநரபதிவீமனூரிற்
சென்றுறப்புரிவாயென்றுகூட்டினனவருஞ்சேர்ந்து
துன்றியவிதர்ப்பமன்னன்சோதிமாநகர்போய்ச்சார்ந்தார். (கூக)

சேமத்தேரல்குலாளோடிறைசெலுநெறியிற்செய்ய
வேமத்திண்மேனிப்பைம்புளிருத்தலுங்கவர்வாயென்று
டாமத்தாரிலங்குசெங்கோற்றசரதராமன்றன்னை
நேமத்தாலுழைபின்னேவுநேரிழையனையநீராள். (கூ௨)

மறுத்திலனரிவைமாற்றம்வான்றுகிலிரண்டிலொன்றைப்
பொறுத்தனரிருவர்மற்றோர்புனைதுகிற்கொண்டுவீசச்
சிறுத்தபுள்ளாடையோடுஞ்சேணிடைப்புயர்ந்துநின்று
கறுத்துமன்னவனேயானுங்கலியெனப்போயிற்றன்றே. (கூ௩)

ஆடையொன்றிருவர்தாங்கியடவிகடுருவிச்செல்ல
நீடுசெங்கதிர்மறைந்தேநேர்ந்ததுகங்குலெங்கும்
வாடியேதளர்ந்துவேறுவழிபெறுதயர்ந்திராவிற்
காடெலாந்திரிந்துபாழ்போய்க்கடிகொண்மண்டபங்கண்டுற்றார். (கூச)

இருவருந்துயிலும்போதிலிகற்கலிவலியினாலே
நரபதியெழுந்துசீரைநடுவிருகூறுசெய்தே
யரிவையைநீங்கிவெங்கானடைந்துபேரரவினாலே
யுருவமும்வேறுபட்டாங்கொண்டிருவயோத்திசார்ந்தான். (கூ௫)

அன்னகர்மன்னன்பக்கலடைந்துண்டியடுவோனாகி
மன்னுளமகிழ்வித்தன்னேன்வழுத்திடமடையர்சீரிற்
செந்நெலங்கதிர்கள்வானிற்றிகழ்மணிக்கோவையேய்க்கு
நன்னிலநிடதர்கோமான்னாள்பலகழித்தானன்றே. (கூசு)

மங்கையும்விழித்துநோக்கிமன்னனைக்காணுளேங்கி
யெங்கடைந்தனனோவென்னவிருந்துயிர்த்தனடன்றுடை
செங்கையாற்கிழித்துநீக்கிச்சென்றமைதெளிந்துவாடிக்
கொங்கைமேற்புடைத்துக்கண்கள்கொடுந்துளியிறங்கச்சோர்ந்தாள். (௯௭)

உணர்ந்தபின்புலம்பிவேந்தனுபிரனையாளுமோடித்
தணந்தவன்றன்னைக்காண்பான்றமியளாயிரவிற்செல்லப்
பணங்கொள்வெம்பணியொன்றந்தப்பாவையைவிழுங்கத்தன்னை
மணந்தநாயகனைக்கூவிவாய்திறந்தரற்றினளே. (௯௮)

வெஞ்சிலைவேடனிந்தமெல்லியகுரல்கேட்டெய்தி
யஞ்சலென்றுரகச்சென்னியரிந்திவடன்னைமீட்டான்
வஞ்சியுமகிழ்ந்தாளந்தவனசரன்மயக்கமென்னு
நஞ்சினையருந்தியிந்தநங்கையாற்சாம்பரானான். (௯௯)

இரவெலாநெறிகாணுதாளிரவியைக்கண்டபின்னர்
பரவலாந்தகையமன்னன்பதச்செழுஞ்சுவடுகண்டே
அரவெலாமஞ்சுமல்குலருஞ்சுரங்கடந்தாளாங்கோர்
புரவலர்நகரங்காட்டப்பூவையாங்கதனிற்சார்ந்தாள். (௧௦௦)

வழித்துணைவணிகராலேவானுதனகரியுட்போய்
விழித்தொருவரையும்பாராள்விம்முதலொழியலாற்றுள்
சுழிப்படும்பணைபோனிற்பத்தோகையாங்கொருத்திமுத்தோள்
யழித்தவேற்கண்ணினளைப்பரிபவமாற்றினளே. (௧௦௧)

வாட்டடங்கண்ணுயெவ்வூர்வந்ததெனுரைத்தியென்ன
நாட்டையுந்தனதுகாந்தன்பெயரையுநவிலகில்லாள்
கோட்டியசிலையான்காந்தன்குறுகிலனவனைநேடிக்
காட்டினையொருவியவ்வூர்கண்டிடவடைந்தேனென்றுள். (௧௦௨)

பொன்னனைகூறக்கேட்டபொற்றொடிவானிற்றேற்று
மின்னினையுலகங்காக்கும்வேந்துடைத்தலைவியாமென்
றந்நகர்புறக்குமன்னனணிமனைசுனந்தையென்பா
டன்னுடன்புகன்றுளந்தத்தையறன்னகத்திற்சேர்த்தாள். (௧௦௩)

சேதிபதேயவேந்தன்றிறங்கொள்வேற்சுவாகுவென்போன்
காதலிதன்னையீன்றகாரிகைக்கிளையதங்கை
யாதலிற்கற்பிற்பொற்பில்யாவருநிகரிலாதாள்
நீதறவுணர்ந்தவர்க்குத்தெரித்திலண்மனைபுகுந்தாள். (௧௦௪)

சுனந்தையென்றுரைக்கும்பேராள்சுதையெனவறிகலாற்று
ளினந்தருநின்பேர்நன்றுடையம்புதியென்றுகேட்ப
வனந்தவில்விட்டுநீங்குமகிழ்நன்றனியற்கைகூறு
மனைந்தழுதிரங்கலன்றிவேறொன்றுமிகழ்த்திடாளே. (௧௦௫)

துகிலுடன்பூணும்பூணுந்தோகைதந்திதுகொளென்று
வகலிடம்புரப்போனில்லாள்வேண்டினுமதனைத்தீண்டான்
புகலருமாற்றலாவிபுரப்பதற்குதகமாந்திப்
பகலிரவுறக்கமின்றிப்பலபகல்கழித்தான்மாதோ. (க0சு)

வேறு.

தேர்புரிநிதம்பவதிசேதிபனகர்க்க
ணோர்புரிசுனந்தையருகுற்றபினரிப்பாற்
போர்புரிவிதர்ப்பனல்புரத்திறைசிறுரைச்
சீர்பெறவேவைத்திவர்கள்செய்கைதெரிவாளாய். (க0எ)

நெஞ்சிலிட்டகுறித்தொருநியாயமறையோனை
யஞ்சலிசெய்தேவினனவன்பதிகடோறும்
வஞ்சியர்கள்கைக்குறிவகுத்துணருவானு
யஞ்சனவிலோதியுறுமந்தநகர்கண்டான். (க0அ)

அந்தநகர்மன்னனையெதிர்ந்தவனழைப்பக்
கந்தடுமனைக்கிடைகலந்துமடவார்கட்
குந்துகையிலக்கணவிரேகைகளுரைத்தான்
பைந்தொடியுணர்ந்துணர்வில்பாவையெனநின்றாள். (க0கூ)

மல்கைமலரங்கைவரைமாண்புமுதறோர்ந்தோன்
செங்கைதொடுமுன்னர்தெருமந்துதுணிவெய்தி
யெங்கடமயந்தியிவளென்றவனிவீழ்ந்தா
னங்கவனடிக்கணமுதாயிழையும்வீழ்ந்தாள். (கக0)

தொங்கலளகஞ்செறிசுனந்தையுயிர்சோர்ந்தா
ளங்கணுலகம்புகழ்சுவாகுவுமயர்ந்தா
னிங்கிவர்படுந்துயரமென்னெனவிசைப்பே
மங்கரசுதேறியிவராகுலமகற்றி. (ககக)

தங்குலமடந்தையெனநானறிதறேற்றே
னிங்கிவள்கொலம்மவிவணித்துயர்பொறுப்பாள்
பங்கயன்விதித்தமுறையென்றுபலபேசி
மங்கையைவிதர்ப்பநகர்மன்னனுழையுய்த்தான். (ககஉ)

தந்தையொடுதாயுமெதிர்கொண்டுதழுவித்தங்
கந்தடுமனைக்கடைகலந்தபினர்வேந்தன்
முந்திரவினீத்தமுறைமுற்றுமுறைசெய்தே
பைந்தொடிபுலம்பினளயர்ந்துடல்பதைப்ப. (ககங)

அன்னநடைநின்றுயரகற்றுவனணித்தா
யின்னலறவைகெனவிசைத்திணையில்வேலான்
மின்னுமொளிவேதியனைமீளவும்விடுத்தான்
மன்னவனையுங்கொணர்தியென்றடிவணங்கி. (கக௪)

அன்னபடிசெய்வனெனவந்தணனகன்றான்
பொன்னனையிருந்தனள்புலம்பலொழிகில்லாள்
சொன்னவுதகந்தவிரவொன்றுதொடுகில்லாள்
பின்னைமடவார்களொடுபேசுதலுமின்றி. (௧௧௫)

மைந்தனொடுதன்புதல்விவாண்முகமுநோக்கா
டந்தையொடுதாய்புகல்வதுந்தகுதிசெய்யாள்
முந்தவகிர்செய்தகரியாடையொடுமொய்க்கும்
பைந்தொடைமறந்தகுழல்பற்பகல்கழித்தாள். (௧௧௬)

வேறு.

காதலியைக்காரிருளிற்கானகத்தில்விட்டகலும்
பூதலமாள்மன்னருளரோபுகலவென
வேதமறுமெவ்விடத்துமீதுரைப்பான்வேறொன்று
மோதவரியான்போன்றுலகனைத்துநேடியே. (௧௧௭)

செங்கதிரோன்செம்மணியின்றேர்தடுக்கும்பேரெயில்சூழ்
துங்கவயோத்தியெனுஞ்சோதிநகர்போய்ச்சார்ந்தே
யெங்கும்பலநாளிதுவேமொழிந்திருந்தான்
புங்கவுலகோடும்புகழுஞ்சதுர்மறையோன். (௧௧௮)

மற்றொருநாளந்நகர்மன்னவன்றன்பேரவையிற்
கற்றநிடதக்கோமான்கல்வியெலாமாய்ந்தவனை
யுற்றவன்றன்முன்னருரைத்தானிசைத்தமொழி
புற்றரவின்முன்னசனிப்பொம்மலெனவேதன். (௧௧௯)

கேட்டானரசன்கிலேசத்தயர்ந்தணிமுட்
டாட்டாமரைவிழியிற்றண்டுளிகள்சிந்திடவே
மீட்டேதுரைத்தான்விதிவலிதேயாமாகி
ணுட்டோர்பலரேபுரிவோரெனநவின்றான். (௧௨௦)

சொல்லற்கரியபிரான்சொற்றமொழிகேட்டிவனே
வெல்லற்கரியவிறல்வேனளனெனவே
யல்லிக்கமலத்தலங்கலான்றனறிந்து
வல்லிக்கிடர்தவிருமாறொன்றுளங்கொண்டான். (௧௨௧)

வெற்றிமுரசோதைவிதர்ப்பதேயத்திறைவன்
கொற்றமுறுமோலையொன்றுகொண்டெய்தியநகரிற்
சொற்றநரபதிமுன்றோன்றியிதுகூறினனு
லுற்றகுரவருறுதிமொழிநாணிடவே. (௧௨௨)

பேரார்நளனகலப்பின்னர்தமயந்திதவஞ்
சீராயியற்றிச்சிவனருளிற்கன்னிகையாய்
பாராளரசர்பலருக்குமோலையிட்டாள்
வாராயினிநாளைமன்றலெனவேகுறித்தான். (௧௨௩)

சொன்னமொழியுஞ்சுருளோலைவாசகமு
மன்னனுடன்பேரவையினுள்ளோர்மதித்துணர்ந்தே
பொன்னேயனையாள்புதியமணங்காண்பதற்கிங்
கென்னேநெடுந்தூரத்தெல்லைகடந்தேகுதலே. (௧௨௪)

நாளைமணமாதலினானம்மாற்செலற்கரிதாம்
பாளைநறையுகுக்கும்பார்வேந்தனூரிலெனக்
காளையிடைந்ததனைக்கண்டிருந்தங்கொன்றுரைத்தான்
வேளைநிகர்வேடமறைந்திருந்தவேல்வேந்தன். (௧௨௫)

பாழித்தேர்மீதிற்படர்வையேலிக்கதிரோ
னாழித்தேர்மீதுகுணக்காழ்கடலிற்றோன்றுதன்முன்
சூழிக்களியானைத்தோன்றனகர்தோற்றிவிப்ப
னூழிக்கதிர்வேலுரவோயெழுகென்றான். (௧௨௬)

முன்னமிவனுண்மைநிலைமுற்றுணர்ந்தபேரிருது
பன்னனெனும்வேந்துமறையோனுடனோர்பாற்புகுந்தான்
சொன்னவிறலரசுதொல்லுலவைதந்தமறை
யுன்னித்தொழுதிரதமூர்ந்தானொப்பில்லாதான். (௧௨௭)

வேறு.

எதிர்பட்டுவெவ்வசுரர்நிலைகெட்டதுங்கமலமெழில்பெற்றதும்புவிதனிற்
சதிர்பட்டபல்லுயிர்கடுயிலற்றதுமிரவுதலைகெட்டதுந்தவிரவே
முதிர்பட்டமன்னொளியுமயவர்க்கவெங்கதியுமுறைதப்பியிங்கனொருசெங்
கதிர்பட்டதென்றமரர்மருளத்திகழ்ந்தனர்கள்ககனத்துயர்ந்தடைகுவோர். ()

மதியுட்கவெண்முகில்கள்குகைபுக்கொளிப்பவலிவயினப்பெயர்க்கடுமையோன்
கதியுட்கவஞ்சிமனகதியுட்கவெஞ்சலதிகதறக்கிரவுஞ்சமெறிவேற்
பதியுட்கலந்தபிணிமுகமுட்கவெம்பரிதிபரியுட்கவந்திவர்தேர்
விதியுட்கும்வென்றிவிதுகுலமுக்யனன்றுபருவிறலுற்றவண்சுருதியால். ()

மாகத்தடைந்திரதமேகச்சிவந்துகுணவாரிக்கணின்றெளிர்தரும்
வேகப்பதங்கனொருநாழிக்கெனும்பொழுதில்வீமப்பெரும்பெயருளோன்
சோகத்தெழுந்திமிரராசிக்கிலங்குசுடர்தோன்றிற்றெறுவவனகர்ப்
பாகப்பெரும்புரிசைநேரிற்றிகழ்ந்ததிவர்பாரிற்பொருந்தினர்களே. (௧௩௦)

வேறு.

மன்னவனெதிர்வந்தயோத்திநாயகனைமார்புறத்தழுவிமாநகரிற்
றுன்னியபின்னர்வந்தகாரணமென்சொற்றிடவேண்டுமென்றுரைப்பக்
கன்னலஞ்சிலையானின்றனைநோக்குங்கருத்தினாலடைந்தனனென்று
தன்னைநொந்தரசன்விடுதியிற்சார்ந்தான்சாரதிதன்னொடுமம்மா. (௧௩௧)

வேள்விவேதியனுமரசனையடைந்துமெல்லியலுடனிருந்துசாவி
வாழ்வுடையரசன்வலவனாயெதிர்ந்தோன்மாவிந்தம்புரக்குமாண்டகையே
யூழ்வலியதனாலுருக்கரந்திருந்தானோரிரவினிலிவணடைந்த
தாழ்வில்வல்லபமார்க்குண்டெனமீண்டுந்தகுமொழிபலமொழிந்தனனே. ()

கேட்டபைந்தொடியெம்மரசனேயாகிற்கிளத்துவனியொருவாய்மை
தோட்டலரலங்கற்கனலவன்வரத்தாற்றுயப்படுங்கருமமுளதால்
வாட்டமேன்யாதும்வழங்கியிந்தனமும்வன்னியுந்தவிர்த்திடிலவனேற்
காட்டுமோர்கணத்திலமுதெனப்பாகங்கைதொடினெய்துமென்றுரைத்தாள். ()

அருந்ததியுரைத்ததுறுதியாமெனக்கொண்டரசனவ்வண்ணமேயாவும்
விருந்துவந்தவர்தம்விடுதியிற்பெய்துவிலக்கினனிரண்டுமவ்வளவில்
வருந்திடாதுடலம்வெயர்த்திடாதுயிர்ப்புவளம்பெறுதிந்தனமனலிற்
பொருந்திடாதடிசிற்செய்தனனிடதபூபதிமாத்திரைப்பொழுதில். (௧௩௪)

சமைத்தநல்லடிசிலயோத்தியர்பெருமான்றனக்களித்தரசனுந்துய்த்தே
யிமைத்திடாதவர்புத்தமுதுதுய்த்ததுபோலிருந்தனரோரிடமதனி
லமைத்தசாரணர்போய்விதர்ப்பர்தங்குரிசிற்கறையலுமவனுளமகிழ்ந்தே
கமைத்தடந்தோளாடிருமகட்குரைப்பக்காரிகையரசனுமென்றாள். (௧௩௫)

மீளவுந்தனதுபுதல்வியோடுயர்தன்விடலையைப்பலவகைப்பணியாற்
கோளறுகுணத்திற்கதிரெனத்தயங்கக்குறிப்பினாலியற்றியேவிடுத்தாள்
வேளினைநகுமக்குமரனுஞ்சிறியமென்றொடிமருங்குலுமெய்தி
யாளுமவ்வயோத்திமன்னிடத்தடைந்தாராங்கவனினைத்துயிர்த்திருந்தான். ()

கண்டனனிடதபூபதிதனதுசிறார்தமைக்காதன்மீதூர
முண்டகக்கரங்கொண்டேந்திமார்பணைத்துமுளரிதேனுகுப்பதுபோல
வெண்டிசைக்கடங்காப்புகழினான்விழிநீரருவிதோய்ந்திடவிம்மிப்
பண்டையிற்பிரமன்பொறித்ததென்றுடலம்பதைத்துயிர்த்தனன்பலகாலும்.

அவ்வணங்கீமற்குறைத்தனரதற்பினந்தணனொருவனையேவித்
தெவ்வடுவேலானியற்கையேதென்னத்தெரிதியென்றுய்த்தலுமவன்வந்
தவ்வியமகன்றபெருமநீயாரேயறைகுதியென்னலுமரசன்
செவ்விகொள்சிந்தைமயக்கறவென்றான்செம்மலுந்தனைமறைத்துரைத்தான். ()

ஆங்கவனயோத்திமன்னனோடிவன்றன்வரவினையறிதியென்றகலத்
தாங்கியசிலையாயயிர்த்திவனிடதராபதியாமெனவுன்னிப்
பாங்குடனுள்ளவாறெனக்குரைத்தியெனப்பலபுகன்றபின்பந்தத்
தேங்கமழ்தொடையான்பகர்ந்தனன்றானேசெகம்புகழ்நளனெனுந்திறத்தை.

அத்திறமுணர்வுற்றிருதுபன்னனும்யானறிந்திலன்பெருமநின்கரத்தாற்
பத்தியிற்றொழில்கள்செய்திடப்பணித்தபாவியாமெனமனந்தளரச்
சுத்தநீயென்னைக்காத்திவண்காறுந்துயரறவைத்திருந்தனைநின்
னொத்தநண்புடையோர்யாவரேயென்னவுபசரித்தவன்றுயர்தவிர்த்தான். ()

இருவருமுளமொன்றாகியாங்கொருசாரிருந்தவாமலக்கீழலிற்போ
யுருவுடைமதனைநேர்பவரிருப்பவுயர்தவத்தருவினிலிலைகாய்
பொருவறவெண்ணுறுதெண்படுத்துரைத்தானயோத்தியர்பூபதியதனாற்
றிருவருநிடதகோமகன்மகிழ்ந்தேசெப்புதியெனக்கிஃதென்றான். (௧௪௧)

இரதமோரிரவினித்துணைத்தூரமெய்திடுமாறுசெய்தகமை
விரதவில்வேந்தேயெனக்களித்தனையேல்விளம்புவனீதுனக்கென்னச்
சரதமாமறையையாங்கவர்க்களித்துத்தக்கவன்றருமறைகவர்ந்தான்
கரதலவண்மைநிடதநாட்டிறைவன்கலியுமாங்கடியில்வீழ்ந்ததுவே. (௧௪௨)

அப்பொழுதிவனைச்சூழ்ந்தவெங்கலியோனடிதொழுதரசரிலொருவ
ரொப்பிலாப்பெரியோய்நின்னையிவ்வண்ணமுழற்றினேனடியனேன்புரிந்த
தப்பினைமறத்தியென்னலுமரசன்றவறிழைத்திலனுனக்கென்னை
யிப்படித்தருமாறியைவதேசபிப்பனினியுனையென்றரசெழுந்தான். (௧௪௩)

அடுத்துநின்சரிதமுரைத்தவர்கேட்டோர்அவருடனன்புகொண்டவர்பா
லெடுத்தவப்பிறப்பிற்சார்கிலன்சரதமீதலாற்றேற்றபேரவனி
யெடுத்தசூதாடிப்புட்கரன்றோற்கவேந்தனீவிறல்பெறச்செய்வன் [ன்;
விடுத்தியென்றனையென்றேற்றலுமரசன் மீண்டுதன்னிருக்கைபோயடைந்தா

சொற்றவாசகங்கள்பலவுமாங்கிருந்ததூதர்போய்ப்பாவையோடுரைப்பக்
கற்றைவார்குழலாள்காணுவானடைந்துகண்டுளிசொரிந்திடநின்றா
ளற்றைநாள்வகிர்ந்தவாடையுமாசும்யாவுமாகுலமுநோக்கிடலும்
குற்றமொன்றில்லானிருவிழியாலிகுதித்திடச்சிந்தைநோய்குளித்தான். ()

ஆண்டகைநீயேவனத்திடையெனைவிட்டகல்வதுகருமமோவென்னுந்
தீண்டருங்கற்புக்கொருத்தியைநோக்கிச்செய்வினைவலிதெனிலந்தோ
மாண்டகுமொழியாய்கடக்குமாறுளதோமற்றுநான்கலிவயனாகி
மீண்டுனைப்பிரிந்தேன்வருந்தனீயென்றானிளங்கொடியிதனைமீண்டுரைத்தாள்.

வெற்றிவாளுழவநீதியமுமரசும்வீரமுமுணர்வுநீங்கிடினுஞ்
சொற்றநின்படிவமறந்ததென்றோடோகையேவடிவுடனிருந்தாற்
பற்றலர்தம்மாற்பழிப்புளதாகுமாதலிற்பணியெனக்கிந்தக் [தான்
குற்றுடல்கொடுப்பவிருந்தனனினைத்தாற்கொடுக்குமுன்வடிவையென்றுரைத்

வஞ்சிமீண்டரசேநினதுபேரெழிலார்வடிவம்யான்காணுமாறுக
வெஞ்சுதனீக்கிவிளங்குவையென்றாளிறைவனுமரவினைநினைப்பக்
கஞ்சநேர்முகமுநீண்டகைத்தலமுங்கருதருவிசாலமார்பகமுஞ்
செஞ்சுடர்த்தேசுமெய்தியதவனைத்தெரிவையுந்திருவடிதொழுதாள். (௧௪௮)

இருகரநீட்டியரிவையையேந்தியிணைமுலைபுளகெழப்புல்கி
யொருவருந்துயரந்தவிர்த்தனன்வீமனோடிவந்தன்பினால்விளங்கு
மருகனைத்தழுவியாதனத்திருத்திவரிசைசெய்தனன்சிலநன்னா
ளுருகிமாதுடன்வாழ்ந்தன்னகரிருந்தானுயரும்வேனிடநாட்டொருவன், ()

கணவனும்வடமீனிகர்வராமுதன்மைக்கற்புடைத்தையலுஞ்சிறாரு
மிணையறுவிதற்பநன்னகரிருந்தாரெழிலுடையரசனுமீண்டு
தணவறுமயோத்திநன்னகர்சார்ந்தான்றார்குழறன்றுயர்துறந்து
கணிதமிலின்பமெய்தினடவத்தாற்கைப்புகாதிலையெனுங்கணக்கால். (௧௫௦)

சிவனருள்வரத்தாற்கன்னிகையாகித்திருந்திழைமீளவும்வேள்விக்
கவனிபர்தம்மைவரவழைத்தனனென்றந்தணனுரைத்ததுநம்மைத்
தவனெனத்தெளிந்துதெளிவுமேம்படுத்துந்தகுதியாமென்றுளத்துன்னிக்
கவினுடைவேந்தன்சஞ்சலமொழிந்துகாதலிதன்னுடன்வாழ்ந்தான். (கருக)

விருப்புறுவீமன்படையெலாஞ்சூழமின்னுடன்சிறுவியமகனு
மொருப்படமணித்தேர்புகுந்துதன்னணிநாடுற்றனன்புட்கரனென்போன்
செருப்பயில்சூதிற்றனியரசிழந்துசென்றபினரியணைமீதிற்
றிருப்பயில்குடைக்கீழுலகெலாம்புரந்தான்செல்வமார்நிடதநாட்டிறைவன். ()

ஆதலாலிந்தப்புண்ணியன்சரிதமார்வுறக்கேட்டுளோர்தமக்குந்
தீதறப்புகன்றோர்தமக்குமெவ்வரமுஞ்சித்தியாங்கலிதொடாதென்றே
போதனேயிவனென்றுரைத்திடுமுனிவன்புகன்றணியாசிகளியம்பி
மீதவனகன்றான்பாண்டவரிருந்தார்வீணைமாமுனியவணடைந்தான். (கருங)

நளன்கதையுரைத்தசருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௩௧௧௩.

# தீர்த்தமகிமையுரைத்தசருக்கம்.

வாரொழுகுதனத்தாளுமிளைஞருநான்மறையோருமருங்கிற்சூழ
வேரொழுகுமுகக்குரிசிலறனளித்தோனெழுந்தெதிர்ந்தேயிறைஞ்சியேத்திப்
பாரொழுகுமறைமுறையாலருக்கியபாத்தியமுதலாப்பகர்ந்தபூசைச்
சீரொழுகுகரமாரச்செய்தணியாசனத்திருத்திச்செப்பலானான். (க)

ஆற்றுதயருழக்குமருங்குழவிக்கீன்றவண்முன்னடுத்தவாபோற்
பேற்றானும்பெருமையினுநிகரற்றோய்வந்தணைந்தாய்பேசலென்னே
மாற்றுவைம்புலனடக்கிமறையனைத்துந்தேர்ந்தவனீமனத்திலெற்குச்
சாற்றுதவொருதருமசந்தேகமுண்டுரைப்பன்றயைசெயென்றான். (உ)

உலகமெலாம்புகுந்துள்ளதீர்த்தங்கடிளைத்திடுவார்க்குள்ளபேறு
பலபலவாய்மொழிகின்றுரையமறவெனக்குரைத்திபரமஞான
மிலகுமுனிவரனேயென்றிறைஞ்சியதன்மொழிகேட்டாங்கேற்நோக்கிச்
சலசமுகமலர்ந்திதனைச்சாற்றினன்மொழிக்கடங்காத்தவத்தினனே. (௩)

தன்போலுமரசரிலாவீடுமனுநின்குலமுதாதைதாதைக்
கன்போடுபலநெறியாலருங்கடன்கள்பலமுடிப்பானன்னையார்பால்
நின்போலவிருந்துலகிற்றூயநீர்தருமியற்கைநெறியிற்கேட்பப்
பொன்போலுமிதழியந்தார்புனைவேணிப்புலத்தியன்முன்புகன்றதுண்டால். ()

அவ்வண்ணநினக்குரைப்பனறிதியெனத்தவமுனியனையாதியான
செவ்வண்ணத்திருமேனிக்குரவரெலாமுடனிருந்துசெவியான்மாந்தப்
பைவண்ணமணிச்சுடிகைப்பாந்தள்பொறையாற்றிடவிப்பாரேழ்காக்கு
முய்வண்ணவுதிட்டிரனுக்குநதியமுதளிப்பானினுரைக்கலானான். (௫)

புலன்வழியாய்த்தமதறிவுபோகாமலகந்தையினிற்பொருந்திடாம
னிலனிலுயர்வாழ்வுடையார்தமைநோக்கிமுசியாமனிகழ்வேதேனும்
நலனெனவேயமைவெய்திமுனிவொழிந்துசரதநெறிநடாத்தில்வேள்விப்
பலனனைத்துமவர்க்குளவாமவர்போலுந்தூயபொருட்பாரிலின்றே. (௬)

சொற்றபுனிதாசாரத்தூயருநகங்களெலாந்தோய்ந்தோர்மான
மற்றெவருமிடங்கனகஞ்சுரபிமுதற்பலவழங்கிவருத்தத்தாலே
முற்றியுபவாசங்களவனிதனிலுளதீர்த்தமுறையாலாடிக்
குற்றமகற்றுதவிலரேற்கொடியபிணிவறுமையெலாங்குடிவைத்தாரே. (௭)

உடல்வருந்திப்பொருள்பலநேர்ந்துள்ளபலமகங்களெலாமுரனிற்செய்த
மிடலுடையோர்பெறும்பேறுமேதினியிற்புனற்குடைந்தமேலோர்க்குண்டா
லடலுடையவடிவேலோயறைந்தமகம்புரிவதுபோலரிதுநன்னீ
ரிடரகலத்துளைவதுபோலெளிதுமிலையிதிற்றூய்மைவிசைப்பதென்னே. (௮)

எடுத்துரைக்கும்பலதருமத்திதனிலொருதருமமுளதென்னலாற்றே
னடுத்தபுயவரையரசேயினிக்கேண்மோபுட்கரமென்றரும்பேர்கொண்ட
வடுத்தவிர்க்குஞ்செழும்புனிதமல்குமொருதீர்த்தமிந்தமண்மீதுண்டால்
விடுத்தகலார்வானவருமாதவனும்பவமதன்பேர்விளம்பிற்போமே. (௯)

கோடிபதினாயிரம்பேர்கொண்டபலதீர்த்தமதிற்குடியாய்வைகும்
தேடியவணடைந்தெவருஞ்செய்குவரால்வேள்வியொடுதருமம்யாவு
மாடியந்நீர்துளைந்தோர்களயமேதமையிரண்டாமரியவேள்வி
நீடியதூய்மையிற்புரியும்பேறடைவரின்னுமதைநிகழ்த்தக்கேண்மோ. (௧௦)

கருதுமொருவற்சரநற்கனலோம்பிவழிபடுவோர்காணும்பேறிங்
கொருதிவசங்கார்த்திகைமாதத்திலதைத்தொழுதவருக்குளதாமஃதே
பொருதிறல்சேரரமகளிர்புண்டரிகநயனமெனப்புவியிலுள்ள
பருதியொளிர்தீர்த்தமதிற்புட்கரமேபயனெனவேபகர்வர்மன்னோ. (௧௧)

அத்தகையதீர்த்தமதிலையிரண்டாண்டகன்றளவுமாடினாரே
லெத்தகையமகப்பேறுமெய்திமறையவனுலகமிருப்பராமாற்
பத்தியகத்தியவடமுஞ்சம்புநெறியினுந்தோய்ந்தோர்பரிமேதத்தி
னித்தியமாம்பலனடைவரவர்தூய்மையாவர்களேநிகழ்த்தவல்லார். (௧௨)

கண்ணுவர்தமாச்சிரமநற்றருமாரணியமதிற்கவினுந்தீர்த்தம்
பண்ணியனுமயாதிபதமெனப்புகலுமிடந்தாடிற்பவங்கடீரும்
விண்ணவர்தோய்மகாகாளங்கோபியொடுமுருத்திரதடம்விரும்பியாடி
யுண்ணலரனடிப்பூசித்தரியகணாதிபரானோர்க்கலகுமுண்டோ. (௧௩)

நருமதைதெக்கணசிந்துசாருமணவதிப்பெயர்சேர்நதியிற்றோய்ந்தோர்
திருமிகுமக்கினிட்டோமமகப்பேறுற்றடைகுவர்வாசிட்டமென்னு
மொருபுனலிற்றோய்ந்தவர்கணீணிதிக்குமாயிரமாமுயர்ந்தோர்க்கீந்த
பெருமுறைமைநல்வினைக்குமுரியவரேபிங்கலமப்பேறுமன்றே. (௧௪)

பிரபாதையெனுமுதகமகமொன்றுபுரிந்தவர்தம்பேறுண்டாக்குந்
துருவாதமுனித்தடமாயிரம்பசுத்தானம்புரிந்ததூய்மைநல்கு
மொருதுவரைநகர்மருங்கில்விந்தராகப்பெயரானுபர்ந்தநன்னீர்
தருசூலசக்கரம்பொற்றாமரைநன்மலர்காட்டுந்தடமாமன்றே. (௧௫)

அன்னதடந்தோய்ந்தரனைப்பூசித்தோர்பவங்களெலாமகன்றுநீங்கு
மன்னியநற்சிந்துநதிவாரிதியிற்கலக்குமிடம்வணங்கில்வானோர்
பொன்னுலகிற்குடிபுகுவர்சம்புகன்னேச்சுரத்தீசன்பூசைசெய்தோர்க்
குன்னரியபரிமேதமொருபத்தின்பெறும்பேற்றையுதவுமன்றே. (௧௬)

வசுத்தானமெனுமுதகந்தோய்ந்தவர்கள்வசுக்கணகர்மன்னுவாராற்
றிசைக்குயருத்தரசிந்துநதிதோய்ந்தோர்செம்பொனருள்பயனைச்சேர்ந்தே
புசிப்பர்பிதாமகனுலகிலின்பமெலாம்புரந்தரன்றனுலகஞ்சார்வ
ரிசைத்தசக்ரகுமாரிகையாமெனுமுதகம்விழிகளிப்பவெதிர்ந்தோர்மாதோ. ()

குலமுடையாருயிரங்கள்கொடுப்பதினுமயமகமாயிரத்துக்கேனு
மலகறமாநீரினழல்வானவர்க்குநிவேதனங்கணன்று
மிலகியதேவிகைத்தடத்தினீசனெண்ணிலமரரொடுமிருப்பன்காணிற்
பலனுரைப்போரெவர்தருமகரமாற்றத்தனதுமுத்திப்பயனுண்டாமே. (௧௮)

ஐந்துயோசனையளவாயகல்மரையோசனையாயமைந்ததந்த
முந்தியதேவிகைநதியாமதன்றூய்மையுரைக்கவல்லார்முதல்வராமாற்
றந்தவேதியன்றீர்க்கசத்திரயாகத்தல்முந்தகைமைமேவு
மிந்திரன்மாமகத்தலுமீசனருச்சனைப்பலனுமெல்லாநல்கும். (௧௯)

நசிரமெனுமொருதீர்த்தமதிலந்தரவாகினிநாமகள்சென்றுங்குப்
பசியகனகாசலத்திற்புகுவதுவுந்தரிசனமாம்படிந்தோர்பாவம்
நிசியகல்வதெனநீங்கிநாகருலகதிற்பொருந்துவிமலமான
சுசிலாசமானத்தைத்தொடுவதுமானதத்தாலுந்தொகுத்தலொன்றே. (௨௦)

வேறு.

முனிவர்கோடியர்முந்துநான்முந்துநானென்றே
புனிதன்றன்னடிவழிபடப்புராரியுமகிழ்ந்தே
யினியுருத்திரசொரூபமோர்கோடியோடெதிர்ந்தா
னனையதீர்த்தமேயுருத்திரகோடிப்பேரறைவார். (௨௧)

அனையதூயநீராடினோரருவுருவமைந்த
கனைபொலன்கழலுருத்திரருயர்பதிகாண்பார்
முனமொழிந்தபுட்கரங்களோர்மூன்றினுந்தூய்தா
மினையநற்றிருக்கேத்திரத்தெல்லையென்றுணர்வாய். (௨௨)

விளங்குநற்சரச்சுவதியின்றெக்கணமீண்டுங்
களங்கறுந்துருடத்துவதிக்குத்தரங்கண்டாய்
வளங்கொளுங்குருக்கேத்திரமற்றதிலீச
னுளங்கொளுஞ்சம்பிராமனற்சமப்பெயருந்தகம். (௨௩)

நான்கினுக்கிடைநான்முகனுத்தரவேதி
வான்கிளர்ந்தவத்தலந்தொழின்மற்றதைத்தொழவென்
றான்கிளர்ந்திதயந்தனிலுன்னிடிற்சொல்லிற்
றுன்பொருந்துபாதகமெலாமக்கணந்தவிர்க்கும். (௨௪)

தைவதம்மெனுமோர்தடந்தலையுறவணங்கி
மைவனற்கரும்பூசனைசெய்துமாநகர்சேர்ந்
துய்வர்வாரிதிப்பிலவத்திலுடலினைத்தோய்த்தாற்
கைவருமுதன்மகப்பயன்கழறுவன்கேண்மோ. (௨௫)

அருள்கொளாங்கணிற்பிரதூதகையாடிமாலரனுக்
கிருளறும்வழிபாடுசெய்திடிற்பயனென்னோ
பிருதுவிப்பெயர்நிரதசசதங்களான்பெரியோர்க்
குரியதாக்கினோர்க்குள்ளபேறுறுக்குமென்றுணர்வாய். (௨௬)

அருமையாம்பரிமேதமோர்பத்தினிலதிகந்
திருவுலாவுசாலோகியாந்தீர்த்தத்திற்றிளைத்தற்
குருநிலந்தனைவலம்வரிற்பவங்குறைந்தோடுங்
கருதுங்காலதைநீங்கிலான்கண்ணுதலெங்கோன். (௨௭)

வான்புகழ்ந்தநற்பரசிராமன்முனிவதனாற்
றேன்பொருந்துதார்நிருபர்தங்குலமெலாஞ்செறுத்தே
யூன்புரண்டசெந்நீர்மடுவைந்தினுமுகப்பாற்
றனருந்திறற்றருப்பணங்குரவர்க்குத்தந்தான். (௨௮)

தென்புலத்தவர்மகிழ்ந்துதஞ்சிறுவனுக்கெதிர்வந்
தன்பினுக்கிணைநிகர்பவரகிலமீதிலையா
லின்பமுற்றதெனீகுதுமென்றவருரைப்ப
முன்பனப்பொழுதுரைத்தனன்முகமலர்ந்தம்மா. (௨௯)

எண்ணிலாதவர்தமையடுமிழிபுதீர்ந்தெனக்குப்
பண்ணலாதநற்கதிவரப்பாரிலிம்மடுக்கள்
புண்ணியந்தருதீர்த்தமாய்ப்பொலிகவென்றிரந்தான்
விண்ணினூடவர்மறைந்தனர்வேண்டுமாறளித்தே. (௩௰)

அனையதீர்த்தமேசிமந்தபஞ்சகமெனவறைவர்
வினைகடீர்த்தயமேதவேள்விப்பயனளிக்கும்
பினையங்கோர்தடங்காயசாதப்பெயர்பெறுமான்
முனைவர்மற்றுளோர்காயசித்திகண்முறைவழங்கும். (௩௧)

நிலமளந்தவனெடியநாளிருந்ததின்மூழ்கி
யுலகமுற்றுமுத்தரிந்தலானும்பர்மற்றெவரு
மிலகுத்தாரகமெனப்பெயர்புகல்வரந்நீரிற்
குலமனைத்துமுத்தரிப்பர்தோய்ந்தவர்குவலயத்தில். (௩௨)

வேறு.

சீர்ப்பெயருதகம்வாழ்வுசேர்த்திடுங்கபிலைதீர்த்தங்
கார்ப்பசுப்பத்துநூறுகொடுத்தநற்பலனைக்காட்டுந்
தார்ப்புயப்பருதிதீர்த்தந்தபனன்றனுலகைநல்கும்
பேர்க்கொள்சங்கினிநீராடிற்பெருமகப்பேறுநல்கும். (௩௩)

மாத்துருதீர்த்தம்வேதன்மனச்சரோருகங்கண்டோர்க்கு
நீத்திடாவியாதிநீங்குநீடுலோமாவனத்திற்
காத்தபன்ஞென்றுநன்னீர்கலந்திடுமதனுளாடிற்
சாத்திரமூதல்வனுவன்சாற்றுவனின்னுங்கேண்மோ. (௩௪)

வேடனுங்கொருவனெய்யவிழுமியகலையொன்றோடி
வாடிநீர்துளைந்தவாற்றுன்மானுடவடிவமாய
தேடவிழ்தாராயநீர்க்கெய்துமானுடமென்றியாவர்
தேடியேநோக்கிற்பாவஞ்சிந்துதற்கையமுண்டோ. (௩௫)

அதற்குநேர்கிழக்கிற்றூரத்தாடுநர்பகையென்றுண்டாற்
பிதிர்க்களைநினைந்தோர்வேதப்பிரான்றனக்குண்டிசெய்தான்
முதற்படுமறையோர்கோடிமுனிவரர்துய்த்ததொக்குந்
துதிக்குங்கேதாரங்கண்டோர்துன்னுவர்பிரமலோகம். (௩௬)

புனிதமாங்கபிலையாக்கம்பொலியுங்கேதாரங்கண்டோர்
தனியுடலொருவர்காணூர்தரமுலகெல்லாங்காண்ப
ரினியநீர்சுரகந்தன்னிலிசைசதுர்த்தசியிலீசன்
றனதடிதொழுவோர்தாமேசற்கதிபெற்றமேலோர். (௩௭)

தந்துளமூன்றுகோடிதகுதியாங்கூபந்தோறு
மிந்திரீசந்தனத்தையெதிர்ந்திடில்வாசபேய
முந்துறப்புரிந்ததொக்குமுதன்மைசால்செபங்களொன்றே
யந்தமிலிலக்கமாகுமரியநீர்ச்சாப்பியத்தில். (௩௮)

காரதப்பெயர்கோடீர்த்தநாடிநல்லுயிர்நீத்தோர்கள்
சீருடையுலகமூன்றும்பெறுகுவர்செம்மைமிக்க
பார்தகுலத்தோரேறேபகரும்வைதரணியாடி
நீரதிற்சடையான்பூசைநிரப்பிடிற்பிறவிநீங்கும். (௩௯)

வானவரனேகங்காலமாசிலாத்தவமிழைத்த
ஞானமார்பிலவமாடிநற்பலன்பெறுவர்மீள
மோனமார்வியாதராலேமுடிந்ததீர்த்தங்களாடிற்
றுன்மார்தடங்களெல்லாந்தோய்ந்ததிற்றக்கதாமே. (௪௦)

கவுசகியாடிற்றாய்மைகாண்குவரவர்மனத்திற்
பெய்சிகைவாமன்பொற்றாள்பூசித்துப்பிறவிதீர்வர்
செய்சதிவினையையெல்லாந்தீர்த்திடுமீசகுண்டம்
பொய்சொலாவரசேயின்னுமோர்கதைபுகல்வன்கேணீ. (௪௧)

தவத்தினான்மிகுந்ததூயோன்சவுனகனென்னும்பேரா
னவப்பெருந்தருப்பைதன்கைநனியுயர்விரலிற்றுங்கி
நிவப்புறச்சாகசாரநிறைவுறப்பெறுதல்கண்டே
பவத்தொழில்புரியான்றுள்ளிப்பாடினனாடினானே. (௪௨)

வேறு.

ஆடலொழியாதிவனியங்குதலறிந்தே
பீடமரியக்கரொடுவானவர்பிரானோ
டேடவிழ்வசுக்களிமையோர்பலருமெய்தி
நாடரியசெஞ்சடையினானடிவணங்கி. (௪௩)

வைகல்பலவாகமறைவல்லவனடித்தா
ளுய்கவருள்செய்வதினியுன்பரமவர்க்கென்
றெய்கணைமலைச்சிலையெடுத்தவனையெற்றச்
செய்குதுமுரைத்தபடியென்றிறைவர்சென்றார். (௪௪)

வானவர்களோடுசிவன்மாதவனையெய்தி
ஞானமுனியேநடநடாத்தன்மொழிகென்றான்
மோனமுனிபோலெதிருமுன்பனைமகிழ்ந்தே
தானடநவிற்றுதிறல்தன்னையுரைசெய்தான். (௪௫)

அற்புதமிதென்னையெனவங்குலிநொடித்தே
பொற்புறுவிபூதிவருவித்தபொழுதிற்கண்
டெற்குளமிருந்தபரமேசனிவனேயென்
றுற்பவமகற்றுமுனியுள்ளுருகியோதும். (௪௬)

மால்பிரமர்காணரியமாதவர்பிரானீ
யாலமமுதாகவுணுமாதியினிநீயே
ஞாலமிசைநின்னையெதிர்கண்டுநவையற்றேன்
மேலெனதுநற்றவவிருத்தியருளென்றான். (௪௭)

காமனையெரித்தசுடர்கண்ணருள்புரிந்தே
கோமுனிதனக்கருள்கொடுத்தவன்மனைக்கண்
வாமமுறவெப்பொழுதும்வைகினனவன்றன்
சேமமுறுநற்றவவிருத்திகொடிறத்தால். (௪௮)

அப்புனிதனங்கைவழியன்றுசொரிசார
மிப்புவியிடத்திலுயர்சத்தசரசென்றே
முத்திதருமாங்கணுயர்மூவிருமுகத்தோன்
சத்திதருதீர்த்தமுதவாததிலைதவத்தோய். (௪௯)

தேவர்பிரமாதியர்கள்சென்றெமதுசேனைக்
காவலுனதாகவெமைக்காத்தருள்கவென்றே
யாவருமகிழ்ந்துபுனலாடியிறையோர்கண்
மூவருமிருந்துமுடிசூட்டினர்கண்முன்னாள். (௫௦)

அத்தினமுகுத்தபுனலவுசரமெனச்சென்
றெத்திசையுமுற்றவரிடுக்கணையகற்றுந்
தத்தியதரங்கமெறியுங்குருதடத்தோ
டுத்தமசுவர்க்கநெறியென்றுதகமுண்டால். (௫க)

அன்னதிருநீர்களிவியாவர்படிகுற்றார்
மன்னுவர்துறக்கமெனமாமறைகள்கூறு
முன்னரியதுருபதையின்முன்பனொடுமாலுக்
குன்னிவழிபாடுசெயினுற்பவமகற்றும். (௫உ)

கங்கையருகிற்புலவர்கண்டதொறுகூபந்
தங்குபுனலாடினுயர்தாரணியினுள்ள
பொங்குபுனலாடினவர்போலுமவனிச்சீர்
தங்குமிரவேகமெனுமோர்தடமதுண்டால். (௫௩)

வேறு.

பாசமறத்துளைந்தாடிப்பகலிரவுமுபவாச
மாசகலநடத்துவரேன்மாமறையோனுலகடைவர்
தேசுடையபதரிகையிற்றீர்த்தங்கடிளைத்தாடி
லேசறுநற்பவங்களெலாமிக்கணமேதொலைந்திடுமால். (௫௪)

வேறு.

ததிசியாசிரமத்தோடுதைவதவனங்கடம்மின்
மதுமலர்நீர்குடைந்தோர்வானவர்பதத்தில்வாழ்வார்
முதியவம்புயனையாதிமுதல்வர்கடிங்கடோறு
மதிகரித்தாடுந்தீர்த்தஞ்சனனிதமென்பதாமே. (௫௫)

இரவிலையநாகங்கொள்ளுமிடையதிற்றிளைந்தமேலோர்
பரவுமோர்சதமென்றோதும்பரிமேதமகத்தின்பேறு
விரைவினிலடைவர்பாவவிமுத்தர்சௌகந்திகண்டோர்
குரவராகுவர்கள்தேவிச்சிரவையிற்குளித்தமேலோர். (௫௬)

நாமகள்பெயரான்மேவுநதியிதயத்திலோர்சார்
வாமவன்மீகத்தூடுவரும்புனன்மூழ்குவாரே
லேமநற்பரிமேதப்பேறெய்துவரிமையவல்லி
தோமறவனேகங்காலமருந்தவந்தொடங்கினின்றாள். (௫௭)

சாகமேநுகர்ந்துபன்னூட்டவம்புரிந்திடுதலாலே
வாகுயர்தோயஞ்சாகாம்பரியெனவழங்குநற்பே
ரேகியாங்கொருநாள்வைகியயற்சருகசனராகு
லாகுமீராறுண்டெல்லையவ்வியல்புரிதன்மானும். (௫அ)

வே று.

சுத்தமுயர்சொன்னதடந்தோய்ந்தரனைப்பூசிக்கிற்
பத்திதருமுலகளந்தபரந்தாமனுலகடைவர்
வித்தகமாந்துமவிதிவிளக்குவிக்குங்குலஞ்சதரா
லத்திரிதீர்த்தங்குடைந்தாலந்தணராய்ப்பொலிகுவாரே. (ரு௬)

நிமிடமெனுந்தடங்கண்டோர்நிமிடத்திற்பவந்தொலையுந்
தமிபெறவாங்கதுதன்னிற்றுவாதசியிற்றுளைந்தோர்க
டிமிரமறுமோர்மகத்தின்செம்மைதனைப்பெற்றுய்வார்
கமலநிறைநியதிகளிற்கண்டோர்களண்டர்களே. (௬௦)

இரவிகுலத்தயரதன்றனினியசுதனிராமன்முதற்
புரவிமகம்பலவியற்றிப்புகுந்துபினற்கதியேற்றுஞ்
சரையுவொடுகோமதியிற்றூந்துளைந்தோர்தம்பெருமை
யுரைசெயலாந்தரமன்றூலுயர்ந்தமகப்பேறென்பார். (௬௧)

வந்தியரும்பலராயமகப்பேறுகுறிப்பதெவர்
முந்துகையைதனக்கொருகான்முன்னிப்போதுவனென்றே
யுந்தியவனீராடியுய்ந்திடவேதருப்பணங்க
டந்தவனேசுதனறிகதராதலத்தென்புகல்வதுவே. (௬௨)

பங்குனிமாநதியாடிற்பரசித்தியுளவாகுந்
தங்குமணிமையினூடிற்றவிருமறையோர்கள்வதை
புங்கமணிநாகதடம்புயங்கவிடம்பொருந்தாவாங்
துங்கவகலிகைத்தடமோர்துங்கமகப்பேறளிக்கும். (௬௩)

சனகனெனுங்கோமுனியாற்றருங்கூபமரிபதவி
யினிதளிக்குங்கம்பையுநற்பவுண்டரிகத்தியனல்கு
மனதேவப்புட்கரமுமகேசுரதாரையுந்துளைந்தோர்
புனிதமுறுமயமகப்பேறொருநாளிற்புணர்ந்திடுமே. (௬௪)

கச்சபமாமோரசுரன்கவர்ந்தபலதீர்த்தமெலாம்
பச்சைவணன்மீட்டொருசார்பதித்தமகேசுரர்பதமுங்
கிச்சரநெடுஞ்சாளக்கிராமமெனுமாநதியு
மச்சமறத்தொளைந்தாடிலரிபதஞ்சென்றடைவாரே. (௬௫)

பரதர்புனிதாசிரமம்பகர்சம்பகாசிரமம்
விரதமுடனிவணெய்திவிமலனரிச்சனைபுரியிற்
பெரிதுடைமித்திரவருணப்பெயருலகம்புகுவர்களா
லரிவைபெயர்த்தடங்கன்னியாதானஞ்செயற்பேறும். (௬௬)

திகழ்தேவகூடமதுதிசைமுகன்றனூரளிக்கும்
புகழ்விசுவாமித்திரனூர்பொலிவுபெறுங்கௌசிகைபி
னிகழ்குமராசிரமத்தினீர்படிந்தோர்மாதந்தா
னிகழ்வறநின்றியங்குவரேலிவுளிமகப்பேறடைவார். (௬௭)

அக்கினியின்றுரையருட்குமரதாரையெனு
மிக்கதடமாடின்மறைவேதியர்வெங்கொலைநீங்கு
முக்கணுயர்கௌரிதலமுன்றிரவுகாயத்திரி
புக்கிருந்துசெபித்தவரேபுனர்செனனமவிந்தவரே. (௬௮)

பெண்ணையெனுநதிதோய்ந்தோர்பிணிமுகமோதிமமான
வெண்ணுமவரூர்திகளாயிறைமைபெறுபேறடைவர்
நண்ணியகோதாவேரிநயந்தாடிக்கோமேதம்
பண்ணுமயமேதத்தின்பலனடைவர்பவநீங்கி. (௬௯)

வளந்திகழுமயோத்தியொடுவருதண்டகாரணியங்
களங்கமறுசரபங்கர்கவிமுதலோராச்சிரமங்
குளந்திகழ்நீரேழ்வகையாங்கோதாவேரியைமுதலாத்
துளைந்தாடிச்சுவர்க்கநகர்துன்னினரையென்னுரைப்பேம். (௭0)

துங்கமுயராரணியந்துளைந்தோருங்காலரதந்
தங்கியதெய்வதையிதையந்தனிற்றுளைந்ததலைவர்களு
மங்கிரிகாத்தியாயெனராச்சிரமத்திலறுமுகஞ்சேர்
கங்கைசுதன்வழிபாடுகருதினருமுய்குவரே. (௭௧)

வேறு.

பாட்டளிமாலையாய்முனைபார்மிசை
கேட்டிலாதவரிலைகிட்டிமூழ்கினோர்
நீட்டியமகமெலாநிரப்பினோர்களே
மீட்டுமோர்கங்கையின்விழுப்பங்கேட்டியால். (௭௨)

தொலைவிலூழ்வினையிருடொலைக்கும்பாவைவாய்க்
கலைபுகல்பிறப்பலைகடக்குந்தோணியாய்
நிலைதருமருங்கதிக்கேணிநேருமா
லலையெறிநித்திலமவிர்பகிரதி. (௭௩)

வேறு.

கங்கையின்றுவாரமென்றுங்கதிக்கொருதுவாரமென்று
மங்கொருதலமுண்டாங்கணரும்பகீரதியிற்றோய்ந்தோர்
புங்கவராவரிப்பாற்புனிதநாமகள்பேராறு
சங்கொலியுடன்கலக்குந்தலங்கண்டோர்நலங்கொண்டோரே. (௭௪)

வேறு.

களித்தகன்னிகையெனுநதிகங்கையிற்கலக்கு
மொளிப்பெருந்தலமுன்னினும்பாதகமுலையு
மளிப்பிரயாகையாமோர்தலத்தந்நதிதோய்ந்தோர்
குளித்திடாரினிப்பிறவியிற்குளித்ததுநேரும். (௭௫)

வாரணாசியாங்காசியில்வடாதுவாகினியா
யாரவெய்துமக்கங்கையாறத்தலநிகராப்
பாரிலோதுவார்தெளிவிலார்பரமனங்ககலான்
சீரினுங்கதிற்றோய்ந்தவரிறைவனிற்சிறந்தோர். (௭௬)

சாகரந்தனிற்சகத்திரந்தனிமுகிறாகி
யேகுசானவியெதிர்ந்திடுமிடந்தனிற்றோய்ந்தால்
வாகுலாவய்மகங்களுமானிலமீதிற்
சோகநீங்கநீர்திளைத்தலும்வேண்டுமோசொல்லாய். (எஎ)

அனையமாநதித்தூய்மையாரறைந்திடவல்லார்
புனையுமௌலியாயுரைத்தகோதாவரிபொருந்தி
நினையுமாவிமையக்கிரியளவையேநினக்கு
வினையகன்றிடவிளம்பியதூயநீர்விரிவு. (எஅ)

உரைத்தூதன்றிமற்றுள்ளவெண்ணிறந்தனவுண்டாற்
கரைப்பதென்னதிற்றோய்ந்திடிற்கருதியதுதவும்
விரித்ததீர்த்தங்கண்மகிமைகேட்டோர்விளம்பினர்கள்
தரைக்குணீரெலாந்தோய்ந்தவர்பெறுங்கதிசார்வார். (எகூ)

யென்றுகூறியேமீளவுமுரோமசனென்போன்
மன்றன்மாலையாயெய்துவனவன்றிருவாக்காற்
றுன்றுநின்குறைதொலைந்திடுந்தூயனோடுதகஞ்
சென்றுதோய்குதியெனப்புகன்றகன்றனன்சிறந்தே. (அ0)

வேறு.

வீணைமுனியேகுதலும்வேதியர்களோடு
மாணுலவுகோர்முனியிருந்தனன்வனத்திற்
றூணுவெனவஞ்சடைதயங்கிடவெவர்க்குங்
கானருமுரோமசனடைந்தனன்களிப்பால். (அக)

வந்தமுனிபொன்னடிவணங்கியெதிர்கொண்டே
தந்துபலபூசனைதனித்தவிசளித்தா
ரந்தணனிருந்துமறையாசிகள்புகன்றே
யிந்திரனுரைத்தமுறையாவையுமிசைத்தான். (அஉ)

தீர்த்தமகிமையுரைத்தச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௩0கூஎ.

---

# தீர்த்தயாத்திரைச்சருக்கம்.

---

வெற்றிசேர்கிரீடிவெள்ளிவெற்பினூடருந்தவம்
பற்றிலாதிழைத்ததும்பரம்பொருட்செய்கருணையும்
பெற்றபேறுமசுரரைப்பிளந்துதந்தைபாங்கரி
னுற்றவாறுமோதினனுயர்ந்தசீருரோமசன். (க)

அண்டர்நாதன்மீளவொன்றறைந்ததுண்டுகேட்டியாற்
பண்டைநீர்கடோறுநீர்பரிந்துபுக்கியாடியே
விண்டலத்தர்புகழமீள்மீடுகந்தமாதனங்
கண்டிருப்பதானபின்னர்சவ்யசாசிகாண்குவான். (உ)

அன்னவைகல்காறுமென்னையுங்களுக்கருந்தவந்
துன்னுமாறுவைகவென்றுசொற்றதுண்டுசோதிவேன்
மன்னர்மன்னனேவிரைந்துவருதிநீர்திளைக்கவென்
றின்னதன்மைகூறினானிருந்ததெய்வமாமுனி. (௩)

சொற்றவாய்மைசெவிகடோறுமெய்திவுந்துவந்தமோ
கற்றநீர்மையோவெலாந்தங்கண்ணிநெஞ்சினுன்னினாள்
சுற்றிராசர்சூழநின்றுதொல்லைநாளியம்புசூள்
குற்றமின்றிமுடியுமென்றுகுலவுகொங்கைதழையவே. (௪)

முன்னையூழ்வினைக்குலத்தைமுற்றும்வென்றிகொண்டவன்
சொன்னவாசகங்கவுந்திசுதனுயர்ந்தபொறைவலான்
கன்னமெய்தவீசன்வைத்தகருணையோதுபெற்றியாற்
றன்னையேமறந்துபின்னரிந்தவாய்மைசாற்றினான். (௫)

வேறு.

அளித்ததந்தைதாய்தவத்தரேயானுமேலவனே
தெளித்தமாமறைவியாதனுந்தேவர்தேவுருவே
யொளித்தநற்பரஞ்சுடரிவன்றவத்தினுக்குருகிக்
களித்தபண்பினாலம்மவோவெனவுளங்களித்தான். (௬)

ஆயபண்பினாலுரோமசனடிமுடிசூடித்
தூயநீரெலாங்குடைந்திடத்துணிகவென்றிரப்பத்
தேயமெங்கணுஞ்சென்றுசென்றுடுவான்வாவென்
றேயுமாதவனெழுந்தனனிறைவனுநடந்தான். (௭)

கருந்தடங்கணுள்கடுங்கனற்பிறந்தகன்னிகையு
மிருந்தம்பியர்மூவருமுனிவரரெவரும்
வருந்திடாகரபதியிருமருங்கினுமெய்தத்
திருந்துரோமசமுனிசெலச்சென்றனன்மாதோ. (௮)

நீடுங்கோமுனிசென்றருணிலத்திறுக்கெதிரா
நாடும்பாசிலைச்சூழல்கண்டேதெனநவிலத்
தேடுமாதவத்தொருவனுமகத்தியன்சிலநாள்
மீடுயர்ந்திடவைகியசூழலாம்பெரியோய். (௯)

என்றுகூறலுமிணையறுபொறையுளானேத்தி
வென்றிமாதவத்தொருவனேயந்தவேதியன்றன்
றன்றுநற்புகழ்செவிபுகச்சொற்றிடவெனலு
நன்றுகேட்டணையுரைக்குவன்கேளெனநவில்வான். (௧௦)

வேறு.

குறுமுனியெனப்பேர்கொண்டமாதவத்தோன் கொடுங்கனல்வனமடைந்திருந்
மறுவறுபிரமசரியமேநடாத்திவான் றவம்புரிந்தொருபகலிற் [து
சிறைபடுவவ்வாற்றூங்குதொன்மரத்தின்சினையருகெய்தினானவன்றன்
பெறுகுலக்குரவரதோமுகத்தாழ்ந்தார்பேசுமத்திருமுனிகண்டான். (கக)

தவங்கொலோவிரதமுளகொலோவுரையீர்தலையதோமுகத்திருந்தறிதல்.
நவங்கொலோவென்றுமறிஞரென்றிசைப்பநவின்றனர்வசையிலெங்குலத்திற்
பவங்கெடவுதித்தகுறுமுனியொருவன்பாலனைத்தருகுவான்மாதர்
நிவந்தசெங்காந்தட்கரந்தொடாமுடிபானேர்ந்ததிக்கதியெனமொழிந்தார். (கஉ)

கேட்டவம்மொழியாற்றுணுக்கமுற்றேங்கிக்கிளத்துமக்கொடியவன்யானே
நாட்டுமித்தகைமைமறந்தருந்தவத்தானாரியர்தமைத்தொடாதிருந்தேன்
வேட்டினியுமக்குமேற்கதிபெறுவான்விளங்கியபுதல்வனைத்தருவன்
வாட்டமேயென்றுதொழுதவர்விடுப்பமாமுனிமீண்டனன்மன்னோ. (கங)

விதர்ப்பநற்றேயவேந்தனோர்கொடியைவேள்வியினளித்தனனிறைந்த
மதிக்கெழிலழிக்குமுகத்தினாள்வடமீன்வணங்குகற்புடையவளெவரு
முதற்கருதுலோபாமுத்திரையெனும்பேர்மொய்குழறனைமணம்புணர்ந்தே
கதித்தபாதபஞ்சூழ்சூழல்போயடைந்தான்காதலிபணிந்திவைபுகல்வாள். (கச)

நவமணிப்பூணும்பலவகைநிதியுநறியகந்தமுமலர்த்தொடையுந்
தவமுறப்பூவைமார்தமக்கினிமைதருவதுதவத்தினரரசே
கவலையற்றொழுகுமாசிலாமனத்திற்கருதினையெனிலுறாதுளவோ
குவலயமுடுத்தவுவரிநீர்க்குடங்கைக்கொண்டுளாய்தந்தருளென்றாள். (கரு)

சைவலக்குழலாளுரைத்தசொற்கேட்டுத்தவமுனிசிந்தையினேடி
மெய்வனப்புடையாயிரும்பொருடனக்காவிழுத்தவஞ்சிதைவுறமாட்டேன்
செய்வராலுகளுங்குவலையத்தரசர்திறங்களிற்சென்றிரந்துனக்குக்
கைவரத்தருவல்வேண்டுமாறென்றேகழறியாங்ககன்றனன்கடிதில். (கசு)

ஆழிசூழுலகம்புரந்திடுங்கிருதபவனெனுமரசனையணுகி
யூழியெண்ணிறந்ததலையினுமலையாவொருவன்முன்னிற்றலுமுருகி
வாழுநாளடைந்ததெனவெதிர்கொண்டுவழிபடுதகைமையும்புரிந்து
சூழியந்துதிக்கைக்கடகளிறுடையான்றொழுதுநின்றிவையெடுத்துரைத்தான்.

வழிபடுகடவுளெதிர்வருமவர்போல்வந்தனைவறியனானுய்ந்தேன்
பொழிதருகருணைப்புயலினையனையாய்புரிந்திடுமாறருள்கென்ன
வழலுமிழ்வேலோயில்லவணினைவுக்கடுத்தமாநிதிதருமாறாய்த்
தழியிவணடைந்தேன்வேண்டுமேலுளதேற்றந்திடுகனகமென்றிசைத்தான். ()

மன்னவனந்தமுனிதனக்குரைப்பான்மாநிதிவருவதுங்கிருத
பன்னுவேற்றானைக்கிடுவதுமீவும்பலரனுபவித்தலுந்தொகுத்துச்
சொன்னசொற்றெரிந்துபொருளவற்கமையத்துணிபுகண்டவணடைந்தெழுந்து
மின்னும்வேல்வதுவாதிபனெனுமரசன்விறனகர்குறுகினான்விமலன். (ககூ)

ஆங்கவனெதிர்வந்தடிதொழுதேத்தியன்பினால்வழிபடக்கருணைத்
தூங்குகண்ணமலன்வந்தவாறுரைத்தான்றோன்றலுமுள்ளவாறுரைப்ப
நீங்கியுன்றனக்குவமைவுறாதீண்டுநிரப்புவன்வம்மினென்றுடன்கொண்
டோங்கியதிராவபூபதிநகர்போயுற்றனன்பற்றிலாவுளத்தோன். (௨௦)

விரவியசெழுந்தாரரசெதிரடைந்துவிழுந்துபன்முறைதொழுதேத்திக்
குரவனீயடியேன்செய்தொழிலென்னோகுறிக்கவென்றுரைக்கலுமுரைத்தான்
வரைபசுந்தோகைமன்னுடைக்கருத்துமவன்பொருளமைதிமேலுளதேற்
கரமுறத்தருதிரெனமுதலுரைத்தகருமமுந்தெரிவுறக்காட்டி. (௨௧)

கேட்டவக்கணத்திற்சாலவுநாணங்கிளர்ந்திடத்தன்னிலையனைத்தும்
பூட்டியவில்லானுரைத்தலுங்கருணைபொழிமுனிபோதுறாதுணர்ந்து
மீட்டவன்றனையுமுடன்வரப்பணித்துவில்வலன்றன்னுழைகனகம்
கூட்டிவைத்துள்ளபடியுணர்ந்தடைந்தான்குறுமுனியெனுந்தவக்குரவன்.(௨௨)

மறைபயின்முனிவராரியன்மூன்றுமன்னரோடடைதல்கண்டெதிர்ந்து
சிறுபிறையெயிறுமேனியுந்தனதுதீமையுமறைத்தொருமுனியாய்த்
துறைபடுகேள்வியுணர்வினோடடைந்துதொழுதருங்கடன்முறையியற்றி
விறலுறுதனதாச்சிரமமுய்த்தனனவ்வில்வலனென்றபொய்வேடன். (௨௩)

வருமறைமுனியைத்தவிசிடையிருத்திவாய்புதைத்தெம்பெருமானே
கருவறுமாறுகருதியென்குலத்தைக்காக்குமாறெய்தினையடியேன்
திருமனையிடத்திலமுதுகொண்டருளச்செய்குதிகருணையென்றிரந்தான்
பெருமையினுயர்ந்தகும்பசம்பவனும்பேரருள்கூர்ந்ததற்கிசைந்தான். (௨௪)

மற்றவனகன்றபின்னைபங்குடனேவந்தவாளரசர்மாமுனிவர்
நற்றவர்சரணஞ்சென்னிமேற்சூடிநவிலுவாரிவன்முனிவரனே
குற்றமேபுரியுமரக்கன்முன்வேதன்கொடுத்தருள்வரத்தினாற்குரவர்
பற்றறுமுளத்தோர்தமக்கிவன்பணிந்தேபயன்பெறுமுண்டிசெய்தீவான்.(௨௫)

தம்பிமற்றொருவனிவனிலுங்கொடியோன்றாழ்வில்வாதாபியென்பவனை
யிம்பரிற்றகராய்ப்பொருத்தியாங்கொழித்தேயிசைவுறுமேதையும்பதமும்
வெம்பழற்கண்ணன்வேதியர்க்கருத்திமீளவுமிளவலையழைப்பா
னம்பனையனையாய்கடுகியீண்டடைவானவையினான்முனியுயிர்மாய்வான். (௨௬)

மாண்டவனுடலந்தனக்குணவாகமறையவரெண்ணிலோர்தம்மை
நீண்டசீரருளாற்றினந்தினந்தோறும்வதைத்துநின்றவன்முனியாகித்
தூண்டுமானுரிதோயுழுவைபோலடைந்ததுட்டவில்வலனவன்சூழ
லாண்டகையுண்டிநுகர்வதோமறுத்தலறனெனவேந்தர்கூறினரால். (௨௭)

கேட்டருண்முனியுஞ்சடைமுடிதுளக்கிக்கிளத்துவானீவிரிங்கெவரு
மீட்டிவனகத்திலுண்கலீர்யானேவிரும்பமுதொழிகலனுகவான்
பூட்டியவரமுங்கரவுமாங்கவர்தம்புயவலிக்கடுமையுங்காண்பன்
சூட்டியமௌலித்தோன்றல்காளென்றான்றொழுதவர்வாய்புதைத்திருந்தார். ()

ஒருதனியிளவல்வருடையாய்நிற்பவுயிர்செகுத்தானுடனுண்டி
பொருதிறலரக்கருருமறைத்திருந்தபுல்லறிவாளனங்கமைத்தே
திருமுனிதன்னைப்பாவிவந்தருள்வாய்திருந்தமுதருந்துதற்கென்னக்
கருதுதல்புரியான்கடன்முறைமுற்றிக்களித்திருந்தருந்தினன்மாதோ. (௨௯)

வேறு

இயங்குபல்லுயிரெவையுமார்த்திட
வயங்குமாமுனிமகிழ்விற்றுய்த்தபின்
கயஞ்செய்நீரில்வாய்கரங்கள்பூசியே
தயங்கவைகினன்றவிசின்மாமுனி. (௩௦)

கரவுதங்கியகாமரூபினன்
வருவையெம்பிவாதாபிவாவென
விரவுவேதியன்விறலகட்டினி
லுருவுகொண்டவனுலவலாயினன். (௩௧)

தெரிந்தமாமுனிசிறியமூரலாற்
புரிந்தசெங்கைகொண்டுதரம்போர்த்தலும்
கரிந்துநீறதாய்கழிந்துபோயினன்
சொரிந்துபூமழையமரர்துள்ளினர். (௩௨)

கண்டவில்வலன்கருத்துமெண்ணமும்
விண்டுகைதவம்வெளிப்படாவகைப்
புண்டரீகனைப்புரையும்வேதனை
யண்டிநின்றிறையறையலாயினன். (௩௩)

தவத்தினாற்றலாற்றகைவிற்றண்சடைச்
சிவத்தையன்றிநேர்செப்பல்கூடுமோ
நவத்தினோங்கினேய்நாயினேனுழி
வுவப்பினெய்துமாறுரைத்தியென்னவே. (௩௪)

மன்னர்மூவருமியானுமாதவப்
பொன்னைவேண்டிநின்னுழைபுகுந்தனஞ்
சொன்னநீணிதிசொரியவல்லையோ
வென்னவோதினனெவர்க்குந்தூய்மையான். (௩௫)

செய்தநல்வினைச்செயலினென்மனைக்
கெய்தினையிதற்குதவலீழமோ
பொய்தவிர்ந்துநீபுகலும்வண்ணமே
பெய்தனுப்புவன்பேசவென்றனன். (௩௬)

முப்பதாயிரமுனிவிலான்களுஞ்
செப்புமத்தொகையனுகுசெம்பொனு
மிப்புவிக்கெலாமிறைவற்கீந்தெமக்
கொப்பிலாததேரொன்றுநல்கியே. (௩௭)

அளித்தசெம்பொனுமானுமன்னவா
றெளித்தினம்முறையிரட்டிநல்கெனத்
தளித்ததூய்முனிசாற்றவில்வலன்
களித்துநல்கியேகடிதிற்போக்கினன். (ருஅ)

கொடுத்தமாநிதிக்குப்பைசாதக
மெடுத்துவந்துதன்சூழலிட்டதால்
விடுத்துமன்னரைநகரில்மேலவ
னடுத்தசூழல்வந்தணுகினனரோ. (ருகூ)

கற்பின்முற்றுயிர்த்துணைவிகாதநீர்த்
தற்பிலின்பமாமளக்கர்நீந்தினன்
வெற்பிரண்டுதாழ்வெம்முலைத்தடப்
பொற்பின்விஞ்சினள்புருடற்கோதுவாள். (சo)

தென்புலத்தவற்குதவிசெய்துமேற்
பொன்புலத்தவற்கவிகள்பூவென
நன்புலத்தவற்குண்டிநல்கிடத்
தன்புலத்தெழுந்தனையன்வேண்டுமால். (சக)

வாழ்வுமின்பமுமனையின்மாண்புடை
வேள்விமாதுமாதவமுமேன்மையுஞ்
சூழ்வதாயினுஞ்சுதனைநல்கிலான்
றாழ்வினுக்கவன்றலைவனகுமால். (சஉ)

அந்தவாய்மையாலையநீக்கியென்
சிந்தைமாமகிழ்சிறக்கநல்குவாய்
மைந்தனையெனவல்லிகூறலும்
கொந்தளாவுசெஞ்சடையன்கூறுவான். (சங)

தருவதோர்வதிற்சதசகத்திரம்
பெருகமைந்தரைப்பெறுதல்வேண்டுமோ
கருதுமின்னவாவலிகணக்குற
வொருவன்வேண்டுமோவுரைசெயென்றனன். (சச)

காந்தனேந்தலுங்கனிவினுக்கெலா
மாய்ந்தமங்கைவிண்ணளவுமினிது
மேய்ந்தமாமதியேற்றமாதலால்
வாய்ந்தவோர்சுதன்வழங்கவென்றனள். (சரு)

அகமகிழ்ந்தவட்கரியமாமகன்
றகவினெய்திடக்கருணைதந்தனன்
ககனவாணர்கள்களிப்பநல்கினன்
மகனடத்திரிதசியமைந்தனை. (சசு)

அனையமைந்தனுமருந்தவத்தனுய்த்
தனையனல்கினுன்சன்னுதன்னையே
வினைவிலங்கியக்குரவர்மேம்பட
மனையின்மாண்பினில்வைகினுன்முனி. (௪௭)

என்றுரோமசனெடுத்துக்கூறலும்
வென்றியிற்பொறைக்கொருவன்மீளவு
நன்றுமாமுனிகாதைநற்செவிக்
கொன்றைமீளவுமுரைக்கவேண்டுமே. (௪௮)

புனிதமாதவாவென்றுபோற்றலு
மினிதிலம்முனியிறைவனின்புற
வனிதைபங்கினன்பதமறப்பிலான்
றனதுவண்புகழ்சாற்றலாயினுன். (௪௯)

வே று.

செய்யமாமணியாயிரஞ்சுடிகையிற்சிறந்த
பையராமிசைக்கிடந்தபார்முழுவதும்பரிக்கும்
வெய்யகோலுடைவிருத்திரனெனும்பெயரசுரன்
றுய்யவானவருடனமர்புரிகுவான்சூழ்ந்தான். (௫௦)

இரதம்வாசிகளிபம்பதாதிகளொடுமெய்திச்
சுரர்களுயகன்மானகர்சூழலுமுணர்ந்து
மரகதம்புரைமேனிவாசவனும்வானவரும்
விரைவினெய்தியேவிருத்திரனுடனமர்விளைத்தார். (௫௧)

இடியிடித்தனமுரசொலியெண்டிசைபோர்ப்பக்
கொடியவிற்குனித்தாசுகம்பரப்பியோர்குன்றம்
படியினுற்றதென்றுரைத்திடவிருத்திரன்பாய்ந்தே
முடிகவித்தவானவரெலாமுதுகிடமுனைந்தான். (௫௨)

ஓடிவிண்ணவர்வெந்திடவெந்திடவுடற்றி
நாடியேவிறற்பன்முறைகொண்டவனடந்தான்
கூடிவாசவனுதியரோதிமக்கொடியோன்
வாடியேகினுர்பேரவைமண்டபமருங்கில். (௫௩)

குரவனைத்தொழுதசுரனுன்மெலிவெலாங்குறித்துப்
பரவிநின்றவப்போதினிற்பங்கயன்பகர்வான்
புரைவிலாவரம்பெற்றவனவனுடன்பொருதோர்
விரைவில்வெற்றிகொண்டவர்சிலருண்டுகொல்விண்ணோர். (௫௪)

ஆயபோதினுமவன்றனைமுடிப்பதற்குபாய
நேயமொன்றுளதுரைப்பினீணிலத்திருந்திழைக்குந்
தூயநற்றவத்ததீசிவெந்நெனுன்வினைத்துணிபா
லீயவல்லனேற்குலிசமாமிவனுயிரிறுக்கும். (௫௫)

அனையபண்புசெய்தவனுயிர்போக்குமென்றுரைப்ப
வினையமோடவணீங்கியேவிண்ணவரெய்திப்
புனையுமாசியோடொருமுனிததீசிபாற்புகுந்தே
நினைவின்வண்மையைக்கூறினரவனதுநேர்ந்தான். (௫௬)

கொடுத்தவாண்முதுகெலும்பினாற்குலிசமொன்றமைத்துத்
தடுத்தவாசவன்றனக்களித்தவனுடன்சார்ந்தே
மடுத்தவெம்புலான்மணங்கமழ்வேலவயநிருத
னடுத்தவேல்வயினருஞ்சமர்புரிந்தனரம்மா. (௫எ)

நீறுநீறதாயிரதமும்வாசியுங்களிறுங்
கூறுகூறதாய்க்கொடியவெம்பதாதியுங்குறைய
வேறுவேறமர்புரிந்தனர்விருத்திரனடுங்கிக்
கோறுகோறெனக்குரைகடற்புகுந்தவண்மறைந்தான். (௫அ)

கண்டுவானவரினியிவன்றனைவிடிற்கரந்தோன்
பண்டுபோல்வலிபடைத்துவந்தெய்துமிப்பொழுதே
கண்டகன்றனைமுடிக்குதுமெனவுளங்கருதி
விண்டுவைகியசூழல்போய்ப்பணிந்தனர்விரைவில். (௫௯)

வேறு.

வானமாதியைம்பூதமாகிமூவகையதத்துவத்தொகையுமாகியே
ஞானமாகிநல்வினையும்வீடுமாய்நாளுமெம்மைவந்தாளுமன்புளாய்
மீனமாளரியாமைவாமனம்விறலிராமரோடிவுளிவெண்மருப்
பேனமானதெம்மிடர்தவிர்க்குமாறின்றியொன்றிலைக்குன்றுதாங்கினோய். ()

காத்தகாவலின்றிகழவெவ்வழற்கதவுகண்விருத்திரனருஞ்சமர்
கோத்தகாலைநின்னடிநினைந்தவன்கொடுமையஞ்சிடாதெதிரடுத்தலான்
வாய்த்தவாகுதேர்வயவரெண்ணிலோர்மங்கல்கண்டவன்வங்கவாரியிற்
சூத்திரத்தினன்மறைந்துளானினித்தொலைக்குமாறெமக்களிக்கவேண்டுமே. ()

என்றுகேசவர்க்கிவரியம்பலுமிமையவர்க்கவனருள்விளக்கியே
யொன்றுகூறினனவனைவெல்லுமாறுண்மையாகிவாழ்கும்பசம்பவ
னின்றுவந்துவர்க்கடலினீரெலாமேற்றுநுங்குமேலாற்றல்வல்லவன்
பொன்றுநீங்குமாமுனியிடத்தினீர்போமினென்றனன்தேவர்போயினர். (௬௨)

தேவராரும்வாசவனுமேகியேதெய்வமாமுனிவைகுசூழல்வாய்
மேவியேதுதித்துள்ளவாறெலாம்விண்ணுளோர்சொலிப்பின்னர்கூறினர்
தாவிவிந்தமம்பரமளாவுநாள்தகைபுரிந்ததைப்போலவித்தினம்
பாவகாரிசேர்வேலைநீரறப்பருகிவாழ்வுதந்தருளவேண்டுமால். (௬௩)

என்றுவேண்டலுமிணையிலாமுனியெய்திவாரிதியிருந்தநீரெலா
மொன்றவோர்கையிற்கொண்டுநுங்கினனுற்றபல்லுயிர்க்குலமெலாமவன்
குன்றுபோல்குவிந்துடல்பதைப்புறக்குப்பைமாநிதிக்கற்றையோங்கிட
வென்றியும்பர்களாசியோடுகைமேலெடுத்துகந்தாடிவாழ்த்தவே. (௬௪)

அன்னநீரிடைகரந்துவைகினேனச்சுநீங்கவேயிச்சைமீதெழுப்
பன்னும்வெய்யவாள்பற்றிவீசியேபன்னவர்க்கெதிர்நண்ணியார்த்தனன்
முன்னர்பெற்றவான்குலிசமோச்சியேமுடிதுணித்துயிர்மறலிகைப்படத்
தன்னதாற்றலால்வென்றியெய்தினன்ருழ்வில்வானவர்தலைவனென்பவே. ( )

வெய்யவன்விழத்துய்யவானவர்வீங்குதோளராயேம்பலோடுவந்
தையனுனவங்குட்டமேனியானருகுசார்ந்துநின்னருளினெங்குறை
யுய்யுமாறகன்றேமுடிமாய்ந்ததிவ்வுததிநீர்முனமிருந்தபண்புபோற்
செய்யவேண்டுமென்றும்பர்கூறலுந்தெய்வமாமுனிசொல்வதாயினன். (௬௬)

உதரவெங்கனலுததிநீரெலாமுண்டதெவ்வணம்பண்டுபோலவே
கதரருங்கடனிரப்புமாறெனக்கழறவானவர்வெருவிமீளவு
முதிரருந்தவன்றனைவிடுத்துமான்முளரியுந்திகீண்டுதையமானவன்
பதமலர்த்துணைசென்னிசூடியிப்பரிசெலாமவற்குரைசெய்தாரரோ. (௬எ)

கருணைமிக்குளாயுவரிமுன்புபோற்காட்டிவானவர்வாட்டநீக்கென
முரணகன்றவாசவனையாதியோர்முன்னர்தங்கல்கண்டன்னமூர்பவன்
றரணிமுற்றுமோர்கவிகைநீழலிற்றங்கவாழ்வுறுஞ்சகரனென்பவன்
மரபிலோர்சுதன்பகீரதன்புவிவந்தகாலைவந்தம்புசேருமே. (௬அ)

ஆதலாலினியமரர்நும்மிடத்தணுகவென்னலுமவனையெற்றியே
மீதலத்தில்வந்தினிதுவைகினூர்வேலையன்றுநீர்மாரியெங்கணும்
பாதலம்புகுங்காறுவேங்கமர்படலமுடைவைகியதுபின்னர்நால்
வேதவேதியன்வாசகப்படிமீட்டுமேவுதல்காட்டுவாமரோ. (௬௯)

வேறு

பாட்டளிதுதைந்துமுப்போதும்பண்பினுற்
கூட்டுணுநறியதார்குலவுமார்பினன்
வாட்டிநற்கதிர்மரபுதித்தமன்னவன்
காட்டியசகரனுங்கயோத்திகாக்குநாள். (எ0)

நெய்யிலாவேள்வியுநிமலவன்பொடு
மெய்யிலாத்தவங்களுமருதவேலிநீர்ந்
செய்யிலாவனப்புமாயரசன்செல்வமு
மையலாயுழன்றனன்மகவிலாமலே. (எக)

கற்புடைமங்கையரிருவர்கைவர
மற்புயமன்னவன்மானிலத்தைவிட்
டற்படுகானகத்தணுகியீசனைச்
சொற்பெறநினைந்தருந்தவந்தொடங்கினன். (எஉ)

செய்தவான்றவத்தினுற்றேறவர்தேவனு
மெய்தினனேறுகைத்திறைஞ்சியேத்தியே
பெய்தகட்கருணையெம்பெருமவின்றெமக்
குப்தருசந்ததியுதவவேண்டுமே. (எ௩)

என்றவனிரத்தனுமீசனோர்மகன்
வன்றிறலுடன்வருமாறுதந்தனன்
வென்றிவேலரசனுமீட்டுமோர்கொடிக்
கொன்றுதந்தனையிவட்குதவவேண்டுமால். (எச)

அண்ணலேயெனவவனடியிற்றாழ்தலுந்
தண்ணிலாமுடியினனைகைத்துச்சாற்றினன்
விண்ணுளார்க்கிதவிலராகிமின்பயி
னண்ணுவாரறுபதாயிரவர்நாளொன்றில். (எரு)

அன்னவர்முனிவரரழற்கண்பார்வையாற்
பன்னுசில்பகலினிற்பலருமாய்வரான்
முன்னருண்மதலைதன்மதலைமூரிநீர்
துன்னுலகளிப்பனென்றுறுதிகூறினர். (எசு)

மறைந்தனனீசனுவானுளோரொடு
நிறைந்தபேரறிவுடைநிருபன்மீண்டுபோய்க்
குறைந்திடாவாழ்நகர்குறுகினவகினன்
பிறந்தனன்மகன்முதன்மனைக்குப்பெற்றியோன். (எள)

இளையவளண்டமொத்திருந்தமேதையை
வளமுடனல்கினளதனில்வந்தனர்
துளையெயிற்றரவெனத்தோற்றுமைந்தர்கள்
புளகெழவறுபதாயிரவர்புன்மையோர். (எஅ)

அரசனுமின்பமுந்துன்புமாங்கெழ
வரிசையான்மைந்தரைவளர்த்திருந்தபின்
கரைசெயற்கரியபேராற்றல்காட்டியே
யுரைசெயுமமரருக்குறுகணுக்கினர். (எகூ)

யாதுதானவருடனிசைந்துநாடொறு
மீதலத்தவருடன்பொருதுவெற்றிகொண்
டோதுதற்கரியதீமைகளுஞற்றியே
போதுறப்பலபகல்போக்கினனரோ. (அ0)

முதன்மைசாலொருமகன்முளரிவாண்முக
மதனுடனிரதிநேர்மாதினைத்தழீஇப்
புதனினுமிகுத்தநற்கேள்விபோற்றிய
சுதனொருவனைப்புவிதுதிக்கநல்கினன். (அக)

பங்கயத்திறைமரபுதித்தபார்த்திபன்
றங்கவேன்மைந்தர்தன்றேற்றங்கண்டிலா
னங்கொருபரிமகமுடிப்பதாயினன்
றிங்களிற்றிகழ்முகத்தேவிமாரொடும். (அஉ)

கதியினுநிறத்தினுங்குரலிற்காட்சியின்
மதியினுங்குலத்தினும்வழுவிலாப்பரி
துதிதரவிடுத்தனன்றேன்றன்மைந்தன்முன்
புதவுமோர்காளையையுடன்பொருத்தியே. (அ௩)

வாசியுந்தேர்களுமாலியானையுந்
தேசுடையெண்ணறுசேனைவெள்ளமு
மோசைசேருததிபோலொலிப்பமேவியே
காசினிவலம்வருங்காலையோதுவாம். (அ௪)

வேறு.

பரவியிமையவர்க்ண்மகபதியருகினிவர்கொடுமைபகரவவனிவர்முடியுமா
றரியதிறலொடுகருதியவையொருவிவிரவுபுவியணுகியொருவநமறிகொணு
விரகுதனிலுரியபரிகொடுகபிலர்தலமுறுவவிபினமதனிடைநிறுவியே
சுரருலகுதனிலணுகியமர்வுடன்வருநிருபர்தரகமெவணெனவினவினர். (அ௫)

உவருததிவளையவனிமுழுதுமவர்பரிகடவியுலவியர்சுடனுரைசெயக்
கவலைபடுமிதையமுளசகரன்விறலுறுபுதல்வர்ககனவரைபுரைபுயமுளார்
செவியினிதுபுகலவவர்சினமுடையர்படிமுழுதுதிறல்பரிகொள்வதுகருதியே
பவனமெனவுலவியிலைபதலமினியுணர்துமெனப்பரவையுறுமிடையணுகினர்.

குருமுனிவனுணவறளுமுததியிடையினியவடகுடதிசையிலிவர்குறுகியே
முறுகுமகிதலமுகிரினிருபிளவுபடமுடுகுமுனிவிலவைபருகியதலம்
கறுவுசினமுடையமகிபதிபுதல்வரணுகினர்கள்கபிலரயலயமுறுதலாற் [வே.
றறுகணினர்முனிவரனைவசைமொழிசொலினர்நயன சலதிவடவனல்கொளுவ

பகரரியவிரவிகுலபதிமுயலுமகமுமகபதிவிரகுமிவுளிவரவுஞ், சகரரிழி
புரையுமொருதிலமளவுமுணர்வின்முனிதவநிலைமைதவறுறுதல்கண், டுகமுடி
விலொருவனுதல்விழியினெழுபொறியைநிகருவமைதருவெகுளியுடனே, நிகரி
ல்விழிமலரலருமுனமுடல்கள்கொளுவியமனெடியநகரிடைகுறுகினர். (அஅ)

சகரனருள்குமரர்பொடிபடவிமலமுனிவெகுளிதணியமுதனிலைமருவினன்
மகபதியுமமரர்களுமகிழ்வினொடுதமதுலகின்மருவினர்களிவைதெரிதரும்
புகலரியவரசனிருவிழிகளுழிசொரியமுயல்புரவிமகமொழிதல்குறியா
னிகலதலவுலகணுகிமுனிவனடிதொழுதுதன திசைவிரதமுரைசெய்பொழுதே

வேறு.

திருமலரலர்ந்துதேனைத்தேன்வையினுகுப்பதென்ன
மருமலரலங்கன்மார்பற்குள்ளவாறுரைவழங்கி
நிருபநீகோடியென்றுநெடும்பரியளித்தானுரும்
பெருமனென்றுகந்துபோற்றும்பெருந்தவக்கபிலனென்போன். (௯௦)

வந்தனன்சகரன்மீண்டுமாமகப்புரவியோடு
வந்தணர்குழாங்கள்சூழவமரர்வாழ்த்தெடுப்பயார்க்குந்
தந்தனனவிகள்வாசித்தனிமகமுற்றினுறு
லிந்திரன்முதலோர்நெஞ்சந்துணுக்கெனவிசையிறேனுடும். (௯௧)

மகஃமுடித்தவர்கட்கெல்லாமாநிதிக்குவைகணல்கிப்
புகலுமாசிரமத்துய்த்தேபுரவலனகர்வந்தெய்தி
யிகலறுமகன்மகற்கேபிரும்புவிவழங்கியேகி
மிகலறுந்தவத்தையாற்றிவிண்ணவர்பதங்கைக்கொண்டான். (௬௨)

வங்கிடமந்தனென்னுமகன்மகன்புவிபுரக்கப்
பங்கயனனையகேள்விவசிட்டனும்பரமவேத
னங்கவற்கிதனைச்சொற்றூனறுபதாயிரவர்வீய்ந்தோர்
தங்களுக்கில்லைவீடின்றவத்தினாற்பெறுவரென்றே. (௬௩)

கேட்டவக்குமரன்றன்னாற்கிடைப்பரிதென்றுவைகி
வாட்டிறற்றிலீபனென்னுமகன்றனையீன்றபின்னர்
மீட்டுமிக்கருமமெல்லாம்விரைந்தவன்றனக்குக்கூறி
நாட்டினையவன்பானல்கிநற்கதிசார்ந்தானன்றே. (௬௪)

திறலுடைவிசையத்தோளான்றிலீபனென்றுரைக்கும்பேரோ
னறம்வழுவாதுசெங்கோற்செலுத்துநாளரசன்சொற்ற
பெறலருங்குரவர்வாய்மைபிடித்தநெஞ்சினனுய்க்காணிற்
குறுகுவானுன்னியுன்னிக்கோபதிநகர்கண்டானே. (௬௫)

வாகையந்தெரியல்வேலான்வாகுடைத்திலீபன்றந்த
சேகுயர்மைந்தன்மைந்தன்செம்மைகொள்பகீரதப்பே
ரோகையாலெவருங்கூறுமுத்தமனுலகுகாத்தான்
மோகமோடுலோபமாதிமூவிரண்டகற்றிமன்னே. (௬௬)

அரசினையமைச்சர்தம்பாலளித்துமுன்னருந்தவத்தோன்
புரைசெயும்வெகுளித்தீயாற்பொன்றினோர்கதியைமேவி
யுரைசெயுமினிதால்வைகுமுளங்கொண்டுகானிற்சென்றூன்
வரிசைமாமறைகடேர்ந்தவசிட்டன்றன்னருளான்மாதோ. (௬௭)

நான்மறைவிதியினாலேநான்முகற்கொருவன்றன்னை
தானுகஃத்திருத்திமேலாந்தவம்புரிந்தியலுநாளிற்
பானிறத்தோதிமத்தோன்படர்ந்தவன்முன்னர்நின்றூன்
வான்கிளரயுதகாலம்வான்றவம்புரிதல்கண்டு. (௬அ)

வணங்கிவாழ்த்தெடுத்துமுன்னர்மாய்ந்தவர்கதியிற்சேர
விணங்கிநீயருளவேண்டுமென்றரசுரைத்தலோடுந்
தணந்திடாவாணிகேள்வன்சாற்றுவான்வானிற்கங்கை
நிணங்கமழ்புலவுவேலோய்நெடுநிலம்புகுமேலுண்டாம். (௬௯)

அம்பரமுலாவுகங்கையணைந்திடிலுலகமெல்லா
மிம்பரிற்சிந்துமன்றியிசைவுறுததனைமாற்ற
நம்பனையன்றியாரேநல்கலாந்தகையர்மேலாய்
வம்பணிசடையினானைவணங்கவென்றிசைத்துப்போனான். (௭௦)

பங்கயச்சகாயன்வண்மைமரபினைப்பரிக்கவந்தத்
துங்கவேனிருபர்கோமான்சோமசேகரனையேத்தி
யங்கருந்தவத்தனுயோரயுதமாண்டிருக்குங்காலம்
புங்கவர்புகழநின்றான்புனிதன்வந்தெதிர்நின்றானே. (௧0௧)

ஆடினான்பாடினான்வீழ்ந்தடியிணைதனதுசென்னி
சூடினான்றுதித்தானுலிசொரிந்திடமகிழ்ந்துநின்றான்
றேடினான்மறையுந்தூயோரிருவருந்தெரிகோணாத
பீடினான்முன்னரெய்தினுருகிடாரெவரோபேசில். (௧0௨)

அண்ணலுமவனைநோக்கியருந்தவத்தரசரேறே
யெண்ணமேதுரைத்தியென்னவிறைவனுங்குரவர்வீய்ந்தோர்
நண்ணுதற்கதிதீர்ந்திங்குநற்கதிசேருமாறு
தண்ணளிபுரிவாயென்றான்றற்பரனிதுபகர்ந்தான். (௧0௩)

வானிடையிருந்தகங்கைவந்தவரென்பிற்றோய்ந்தாற்
றூனினிதுறக்கஞ்சேர்வர்தவத்தினோன்முனிவான்மாய்ந்தோ
ரூனுடைப்புலவுநாறுமொளிவடிவேலோயந்த
மானதிதன்னையன்பால்வணங்குதியென்றுபோனான். (௧0௪)

புலனைந்தும்புறஞ்செலாதபுண்ணியன்கங்கைதன்னை
நலன்பெறநினைந்துபன்னாணற்றவமிழைத்தநாளிற்
கலனென்றுமாதுபோலக்காவலன்முன்வந்தெய்தி
நிலமங்கைதரிக்கலாற்றுணேர்படிலென்றுபோனாள். (௧0௫)

பையராப்பணிகள்பூண்டபரம்பொருடனைநினைந்தே
செய்யகோலரசன்மீளச்செழுந்தவமாற்றலானான்
துய்யநீர்கந்தமூலமூலவையுந்துய்த்தனீக்கி
வெய்யவைங்கனலினுப்பண்வேறரையயுதகாலம். (௧0௬)

அண்டர்நாயகனுமாலுமயனுமேயாதியான
பண்டைவானவர்கள்சூழப்பசுபதிமுன்னர்த்தோன்றித்
தொண்டர்மீதன்புமிக்கோன்றுலங்குவானதியைக்கூவி
வண்டுளரிதழிசூடுமலர்ச்சடையகத்தினேற்றான். (௧0௭)

கொண்டவான்கங்கைதன்னைக்குளிர்பனிவரைமுகட்டி
லெண்டிசைமகிழவுய்த்தேயிறைவனைநோக்கியிந்தத்
தெண்டிரைநதிநீர்மாய்ந்தோர்செறியென்பிற்றோயிற்றீரும்
பண்டைவெங்கதியிற்சேறீபார்மிசைமுன்னரென்றான். (௧0௮)

அரசன்முன்செல்லுமாறேயாறதாயந்தமானீ
ருரைசெயும்புவியினெய்தியென்றுரைத்திவனையேவி
விரைசெய்விண்ணோர்கள்பெய்யும்விரைமலர்ப்பந்தர்நீழன்
முரசொலிகரங்கவேகிமுதல்வன்வெண்கயிலைசார்ந்தான். (௧0௯)

உளமகிழ்சிறக்கமன்னனுயர்நதிகொண்டுசென்றே
வளமிகுந்திருந்தகோலவாரிதிவடகீழ்பாலிற்
புளகமுசகரர்தொட்டபொற்பறுகிடங்கினுய்ப்ப
வளவறுகதிகைக்கொண்டாரந்தணன்முனிவின்மாய்ந்தோர். (௧௧௦)

மானதியொருநாட்போலவளங்குறையாமனூரு
மானநீர்பெருகுந்தன்மையாலுவருதலியாங்கு
மேனிமிர்ந்துரைத்துமுன்போல்விளங்கியதமரர்யாரும்
ஞானவேதியர்குழாமுஞாலமுமகிழ்ந்ததன்றே. (௧௧௧)

அத்தகையருந்தவத்தோனகத்தியனென்றுவேத
வித்தகனுரைப்பவேந்தர்வித்தகனுரைப்பதானுன்
முத்தமிழ்முனியைத்தேவர்முதற்செய்தகருணையின்னும்
வைத்திடவேண்டுமென்றேவழுத்தினுரெனச்சொற்றுயால். (௧௧௨)

முன்னரிலமரர்க்காகமுனிசெய்தகருணைதன்னை
யின்னமுமுரைத்தியென்றேயிருகரங்குவித்தபோதிற்
றன்னிகரொருவரில்லாத்தவத்துரோமசன்மகிழ்ந்து
பன்னினனுங்கோர்காதைபாரினுக்கமுதமன்னுன். (௧௧௩)

வேறு.

வழங்குமகதியாழ்முனிவன்வரவையுணர்ந்தவிந்தமெனு
முழங்குமருவிப்பெருஞ்சிகரிமுறையாற்பூசித்திடும்போதிற்
புழுங்குஞ்சிந்தையுடையார்போற்பொன்னங்கிரிநின்றனையிகழ்ந்து
தழங்குந்தனையேபுகழ்ந்ததென்றுசாற்றிமுனிவனகன்றனே. (௧௧௪)

வீணைமுனிவனகன்றதற்பின்விந்தஞ்சீரிவடமேரு
மாணிலிகழுந்தரமுண்டோவசையைச்சுமத்தல்பொருளோவென்
றுணிப்பசும்பொற்செழுந்தேரோனகல்வானடைவதுணர்ந்தேகிக்
காணவருமாடகவரைக்குக்களிப்பேதுரைத்தியெனப்பகர்வான். (௧௧௫)

கோளொன்பதுந்தாரகைகளுமுங்குறிக்கொண்டதனைச்சூழ்வதினு
மாளும்பரமன்புரமழித்தற்கதனைச்சிலையாயெடுத்ததினுந்
தாளந்தண்டாமரையிடத்தான்றனதுமருங்கிற்பயில்வதினு
மீளவுலகமொருமூன்றுந்தானேவிளக்கும்விழைவதினும். (௧௧௬)

பண்பாலோங்கிவளர்ந்துயர்ந்தபரிசிறைலுமொருநாளு
மெண்பான்மலைபோலழியாதவியற்கையாலுமெழிலாலு
நண்பாலமரர்நீங்காதுறைளுமிருக்குஞ்செயலாலுங்
கண்சாரேமமேனியினுங்களியெய்துவதக்குவடென்றுன். (௧௧௭)

என்னமொழியுஞ்செங்கதிருக்கெடுத்துமொழியுமெழிலோங்கற்
பின்னுமிதனுற்களித்துளதேற்பகரும்புகழுக்களவுண்டோ
சொன்னமேருமலைசிறிதாய்ச்சொல்லவளர்வான்காண்மினெனத்
தன்னிலுயரும்விசும்பளவுந்தருக்காலுயர்ந்ததெழில்விந்தம். (௧௧௮)

முடிக்குங்கலினப்பசும்புரவிமுனைதேரிரவிமுதலோரு
முடுக்கண்முதலாவுலகுவலமொடுங்கக்ககனத்துயர்நெறியைத்
தடுக்குந்தகையாற்பலவுயிருந்தவறுற்றமரர்மனம்வெருவி
யெடுக்குங்கரத்தோடாசியொடுமெதிர்ந்தார்குறுமாமுனியிடத்தில். (௧௧௯)

வானத்தமரர்வரும்படியான்மாசற்றிருந்தமாதுடன்வாழ்
ஞானத்தொருவனெதிர்ந்திரங்கிநவில்வீர்புரியுங்கருமமெனத்
தானத்தகன்றுவிந்தமெனுஞ்சயிலந்தடுத்தமிகையாலே
கூனற்பிறைசெங்கதிர்முதலாங்கோள்வண்கதியைக்கடக்கரிதால். (௧௨௦)

எம்மாலந்தவரைச்செருக்கைநீக்கியுலகுக்கிடர்தவிர்க்க
வம்மாண்பின்றிநினையடைந்தோமருள்செய்தெமைக்காத்தளித்தியென்று
செம்மாண்புடையவானவர்கள்செங்கைகுவிப்பச்செழுந்தவத்தின்
பெம்மானடைந்தானவரோடும்பிறைவாணுதல்சேர்பேதையொடும். (௧௨௧)

வந்தான்கலசசம்பவனென்றுணர்ந்துவளர்ந்தவரைவிந்த
மெந்தாய்வருகவருகவெனவெதிர்ந்துபூசைக்கடனியற்றி
முந்தாதரவாற்றொழுதேத்திமுகுழ்த்தகரத்தோடிருந்ததுகண்
டெந்தோபொதியமடையவழியருள்வாயென்றான்பெருமானே. (௧௨௨)

உயரவளர்ந்தவரைகுறைவுற்றுவப்பானிலத்தினிடையழுந்திச்
செயலினுனதுதிருவடியென்சிரத்திற்றாங்கநடக்கவென
முயலின்களங்கமொழித்தமதிமுகத்தாளுடனக்குவடொருவி
யயலின்புடைநின்றிதுவகுத்தானமரர்க்கிதமாயருண்முனிவன். (௧௨௩)

தென்சார்மலையமெனுமருவித்திரள்சார்பிறங்கலிடையேகி
நின்சார்பிடையினுறுமளவுநீடித்தினம்போனிலத்தழுந்தி
வன்சார்புடனிங்கிவ்வண்ணமருவக்கடவையெனவுரைப்ப
மின்சார்முகில்கண்படுமந்தவிந்தஞ்சிரமேற்கொண்டதுவே. (௧௨௪)

ஆங்கணகன்றகுறுமுனிவரமரர்தமக்குவிடையளித்துத்
தூங்குஞ்சோதிக்குழைகிழிக்குந்துணைவாள்விழியாளுடனேகி
யோங்குபராரையாரதரையுலகம்போக்குமலையத்திற்
றூங்குந்தவஞ்செய்தினிதிருந்தான்றரணியெல்லாந்தழைத்தோங்க. (௧௨௫)

வானநெறிபெற்றிலராகிமயங்குகோள்களியங்கியதான்
ஞானமுனிவரிமையோர்கண்மகிழ்விற்சிறந்தார்ஞாலமெலாந்
தானந்தவங்கடழைந்துயிர்கடருக்குற்றனவாலதையெடுத்து
சோணைமுகிலூர்தியைமுதலோர்துதித்தாரென்றேறவகுத்தானே. (௧௨௬)

பொறையாலுயர்ந்தபுரவலனேபுகலும்கலசசம்பவன்முன்
னுறையுஞ்சூழலிவையிவையாமுயர்ந்தோன்றளையுமுதகமென
மறையோர்வடிவாமுரோமசனேவகுப்பமகிழ்ந்தப்புனலாடி
நிறைமாதவனைநினைந்துருகிநீங்கினடந்தானெறிகடவான். (௧௨௭)

வேறு.

தனதுதம்பியர்வனிதையுமுடன்வரத்தமிழ்முனியிடனீங்கிப்
புனிதமாகியநதிகவுசிகையிடைபுகுந்தவனொருசூழ
லினிதுதங்கியவாறுகண்டிப்பொழிலெவற்குரித்தோவென்ன
வனகமாமுனியவைகலைக்கோட்டரதாமெனவறைகின்றான். (௧௨அ)

பரவுகாசிபன்றருசுதன்விபாண்டகன்பயிலருந்தவமாற்றி
விரவுபூவலம்வந்தனன்புனல்விளையாட்டினில்விழைவாகிப்
பிரசரோருகமலர்ந்தவோர்பொய்கையிற்பெருந்தவன்புகுந்தாட
வரிவையோரரமங்கையாங்கடைந்தனளவடனைக்கண்ணுற்றான். (௧௨௯)

உற்பலம்புரைநீள்விழிக்கடைகளுமொளிநுதலொடுமூரற்
பொற்புமாரமுஞ்சந்தனத்தேய்வைபும்பொருந்திரண்டிள்மேரு
வெற்புமொல்கியமருங்குலுங்காண்டலும்வேதியன்மயலாகி
யற்புதம்பெறவிடுத்தனன்விந்துவையப்புனலிடைமாதோ. (௧௩௦)

தூயதண்புனலருந்திமோரடலுழைத்துய்த்ததுகருவாகி
மாயமாமெனவோர்புதல்வனைத்தனிவயிறுளைந்துதவிற்று
லாயுமாமறையோசையுந்தேசுமொரடற்சிருங்கமுமன்பு
மேயநற்கலைவதன்முமருந்தவவிரதமுந்திகழ்வானை. (௧௩௧)

ஈன்றமென்பிணைநீங்கலுந்தந்தைகண்டிருபுயம்புளகோங்க
வான்றமைந்தனோடொருதனிச்சூழல்வந்தருந்தவம்பயினுளி
லூன்றுதண்டமுங்கரகமுஞ்சருகுடனுதகமாந்தலுமன்றி
தோன்றுமிப்பிரபஞ்சமொன்றுணர்ந்திலன்சுதனெனுங்கலைக்கோட்டான். ()

அன்னபான்மையாலருந்தவமனேகநாளாற்றியகாலத்திற்
பன்னுமங்கர்நாடளித்திடுபுரவலன்பகர்விறலுடைவேலான்
மன்னுரோமபாதப்பெயர்புனைந்தவன்மறையவன்கொடுஞ்சாபந்
துன்னியன்னவனுடெலாமழைத்துளிசொரிதரத்தொலைந்ததன்றே. (௧௩௩)

வற்சரங்களீராறுமாமழைவளன்வறழ்ந்திடமுகிலென்றே
பொற்பின்மாமழைபொழிவதென்றயர்வுறுபொழுதொருமுனிசொன்னான்
கற்பமோர்பொழுதாமெனத்தவம்புரிகருத்துடைக்கலைக்கோட்டன்
மற்புயத்தினுய்நின்புவிக்கெய்துமேல்வான்வழங்குறுமென்றே. (௧௩௪)

தெரிந்துமன்னவனம்முனியெவ்வணஞ்சேர்வதென்றிடைவானைப்
பரிந்தசிந்தையாலரிவையர்கொணர்துமப்பண்ணவன்றனையென்றே
வருந்திடாதெமைவிடுத்தியென்றிசைத்தலான்மகிழ்ந்தவர்தமையுய்த்தான்
புரிந்தநாடகக்கணிகையர்நால்வரப்புனிதன்வாழிடம்புக்கார். (௧௩௫)

தூயநற்றவன்சூழலுக்கோர்புரந்துன்னியாங்கொருசார்பின்
மேயசாலையொன்றெடுத்ததிலிருந்தனர்விழுத்தவமுயல்வார்போற்
றுயெனத்தகுமருந்தவனடவிவாய்சருகுணவரக்கண்டே
மாயமுற்றுணர்மடந்தையரெதிர்ந்தனர்வந்தனைக்கரத்தோடும். (௧௩௬)

கோடிரண்டுடையருந்தவரிவரெனக்குறித்தவருடனன்பாற்
காடிரண்டகன்முவர்தனைச்சூழலிற்கலந்தனனறுந்தேனும்
வாடிரண்டசெங்கனிகளுமருத்தினர்மதுரமென்றறிந்தாங்கண்
மாடிரண்டினுமிருந்தவர்தமக்கிதுவகுத்தனன்மறுவில்லான். (௩௩௭)

தந்தவிக்கனியெங்குளதருந்தவர்சாற்றுவீரெனமீள
வந்தமங்கையர்வம்மினெம்முடனெனமாதவன்றனைக்கொண்டு
சந்தனடவிகமழ்தருதம்புவிசார்தலுங்குறைநீங்கி
முந்துவான்வழங்கியதுயிர்த்தொகையெலாமுசிப்பகன்றனவம்மா. (௩௩௮)

வெற்றிமன்னவனெய்தினனருந்தவன்மெய்யெனத்துணிந்தன்பாற்
கற்றமாதவருடனொருயோசனைகடந்தெதிர்புகுந்தேத்திப்
பெற்றியோடுபல்காற்றொழுதருங்கடன்பிறங்கிடுமுறைசெய்தெ
யுற்றகைதவமியற்றியபடியெலாமுரைத்தனனுயர்வேலான். (௩௩௯)

எண்ணிறந்தபல்லுயிர்க்குலந்துயரறுமியற்கையாலிவர்செய்த
பண்ணமைந்தகைதவத்தினைப்பொருள்செயற்பாலவன்றெனவுன்னிப்
புண்ணியந்திகழ்பொருப்பெனத்தேர்மிசைபுகுந்தவனகர்சார்ந்தா
னண்ணறன்மகள்சாந்தையைநீரளித்தாசிபெற்றனன்மன்னோ. (௩௪௦)

மாதரென்றொருபொருளெனவுணர்கலாமாதவர்பெருமானக்
காதன்மங்கையோடளப்பிலாவின்பமாங்கடல்திளைத்தனனென்று
லோதவென்னினிமனைவியோடாங்கணேயுற்றனன்வனத்தென்று
கோதிலாமுனிபுகன்றிடமகிழ்ந்தனன்குந்திதந்தருள்கோமான். (௩௪௧)

அனையகாலையிலம்முனியாணையாலருட்கவுசிகையாடிக்
கனைபொலன்கழலிளைருமகத்துறுங்கனலிலுற்பவித்தாளும்
புனையுமாமறைவேதியரீட்டமும்புடைவரநடந்தேகி
வினைகள்வென்றநற்பரசுராமன்றனிவிபினமெய்தினன்மன்னோ. (௩௪௨)

வேறு.

மருவும்வேதவித்தகர்க்கெலாம்வணங்கிநின்றேத்திக்
கருதுநற்பரசாளிபொற்கழறொழுமாறு
தருதிரென்னலுமின்றுபோய்நாளையத்தவத்தோன்
வருவன்வைகுமினென்னலும்வைகினரன்றே. (௩௪௩)

இரவிமேல்கடற்புகுந்தபினிரவிடைமுனிவர்ப்
பரவிநன்மழுவாளிதன்பரிசெலாம்வினவ
வரியமாதவருரைத்தனரறந்தருபுதல்வன்
கரசரோருகமுகிழ்த்திருவிழிகலுழ்ந்திடவே. (௩௪௪)

பிருகுவென்றுயர்பெயருடைமாமுனியரசன்
றருகுலத்திருவனைதனைவிதிமுறைசார்ந்தே
யொருவனத்தினின்மாதவமாற்றுநாளுரியா
ளருகினிற்றலும்பிரிவறவுபசரித்தமர்ந்தாள். (௩௪௫)

செய்தமாதவமுடிந்தபின்றேவியைநோக்கி
மைத்தடங்கணாய்நினக்கெதுவிருப்பமோவழங்கி
னெய்துமென்னலுமிறைஞ்சியென்றனக்குமெற்கிளையாண்
மெய்செய்காதியில்லவட்குநற்சுதர்வரவேண்டும். (௧௪௬)

என்றிரந்தனளருந்தவனிரங்கிநின்னிளையாள்
வென்றிசேர்தருமுருக்குநீயரசையும்விருப்பாற்
சென்றுகைகளாற்றழுவுமின்றிங்களினென்னக்
குன்றிரண்டெனுந்தனத்தினாள்குறித்திருந்தனளே. (௧௪௭)

இளையதங்கையுந்தானுமாயிந்துவாரத்திற்
றெளியுநீர்படிந்தெய்தியேசொற்றசொன்மறந்து
விளைவுணர்ந்திலாமாறுபாடாகவேவிருப்பாற்
கிளைசெய்பாதபந்தழுவினர்கேண்மையாலம்மா. (௧௪௮)

மன்னர்வந்தருந்தவனடிதொழுதிடப்பெரியோன்
மின்னனார்களைநோக்கியேமிகப்பிழைபுரிந்தீர்
சொன்னதொன்றுநீர்செயுமுறைறையொன்றதாய்த்தொலைந்தா
லென்னசெய்பயனேழைகாளென்றனனிருடி. (௧௪௯)

காதியில்லவளரசினைக்கரந்தொடுங்கணக்கான்
மாதவந்தருமதலையைப்பயந்திடுமாதே
நீதியாமுருக்கதனைநீதொட்டநீர்மையினாற்
பூதலந்தருபுதல்வனைத்தருவையென்றிசைத்தான். (௧௫௦)

சொற்றமாமுனிசொற்செவிசேர்தலாற்றோகை
நற்றவன்றனைவணங்கியேநாட்டினைப்புரக்குங்
கொற்றமைந்தனையான்றருமாறுளங்குறியேன்
மற்றியான்றருமகன்றரவழங்கெனவிரந்தாள். (௧௫௧)

அன்னதாகவென்றறைந்தனனரசுடையில்லாள்
மன்னுகௌசிகப்பெயர்புனைமகன்றனையளித்தாள்
முன்னரோதியமுறைப்படிமாதவமுயன்று
பன்னுமாதவர்க்கொருவனாய்ப்படர்ந்தனனன்றே. (௧௫௨)

அருந்தவத்தினோனில்லவளந்தணன்வரத்தாற்
பெருந்தவச்சமதக்கினிப்பெயரினோன்றன்னை
வருந்திநல்கினாண்மாமுனிமன்னவன்றந்த
திருந்திரேணுகையெனுங்கொடிதனைமணஞ்செய்தான். (௧௫௩)

அந்தப்பூங்கொடிதன்னுவனனுவிச்சுவாசு
மிந்தக்கோதறுமிராமனோடினிதினீரிருவர்
முந்தக்கூறியபுதல்வரைமுறைமையாற்பயந்தாள்
கந்தப்பூங்குழன்மைந்தரிலிராமனேகதித்தான். (௧௫௪)

மறையுமாகமக்கடல்களுமற்றுளகலையு
முறைமையாகவேயுணர்ந்துமேம்பட்டுமுற்செயலா
லறையுநற்றனுவேதமாய்ந்தாயுதகரனு
யிறைவர்தங்குலத்தியற்கைபூண்டிருத்தனனிராமன். (௧௫௫)

புகலருந்திறலிரேணுகைபொய்கையுட்புகுந்தே
யிகலரும்புனறிளைத்தனள்விண்ணிலோர்புருடன்
பகருங்கந்திருவர்க்கெலாம்பார்த்திபன்படர்ந்தா
னகலும்பொய்கையுட்சாயைகண்டழகினைவியந்தாள். (௧௫௬)

இப்பிறப்பில்வந்தொருவனுக்கில்லினளானுண்
முற்பவத்துறுமுடிவினுன்மொய்குழலயலோன்
பொற்பினைத்தனதுளத்திடைமதித்திடிற்புனிதக்
கற்புநிற்குமோநீங்கியதப்பெருங்கணத்தில். (௧௫௭)

தூயநீர்திரண்டோர்புனற்குடமெனத்தோன்ற
நேயமோடுகொண்டெய்துவணிரந்தரமற்றைக்
கேயதண்டிரளாதுகண்டேந்திழைநடுங்கி
நாயகன்கடையெய்தியேநாணொடுநின்றாள். (௧௫௮)

புனிதவேதியன்புகுந்தவாறனைத்துமுட்பொருந்தி
வனிதைமாமுகநோக்கிலன்மைந்தரைநோக்கித்
தனையரின்னவடனைத்துணித்தெறியுமினென்ன
முனைவன்மூவருமறுத்தனர்முனியுளங்கறுத்தான். (௧௫௯)

காட்டில்வைகுறும்புளினராய்க்கற்றவைமறந்து
பூட்டுவிற்பொருஞ்சரத்திறைற்பல்லுயிர்போக்கி
வாட்டமெய்துமினென்றவர்க்கரியசூள்வழங்கி
மீட்டுமோர்மகனிராமனைக்கோறெனவிடுத்தான். (௧௬௦)

தந்தைசொற்றலைமீதுகொண்டுரைக்கருந்தவத்தோன்
றுந்துவாளினாலன்னைதன்னுயிரினைநீக்கி
வந்துதாதையைவணங்கினன்மைந்தனைவியந்து
வெந்தைவேண்டியதுதவுவனிசைத்தருளென்றான். (௧௬௧)

அன்னைகற்புமீண்டாருயிர்பெற்றிடத்துணைவர்
சொன்னசாபமுந்தொலைந்தருந்தவத்தரிற்றிகழ
மின்னையான்கொலைசெய்ததீவினையொழிந்திறவா
மன்னுநல்லுடலாகவீந்தருள்கெனவகுத்தான். (௧௬௨)

வேறு.

புத்திரனுரைத்தவாறேபுனிதனுமளித்துப்பின்ன
ரத்னிச்சூழல்வைகுமளவையினரசர்கோமான்
வித்தகர்க்கிடும்பையன்னவிறற்கார்த்தவீரியப்பேர்க்
குத்திரன்வேட்டம்வந்தான்குரைகடற்றானையோடும். (௧௬௩)

மழுவணிகரத்தனுங்கோர்வனத்திடைசென்றபோதிற்
பழுதெனவுணர்விலாதபார்த்திபனிவரிருந்த
நிழலருப்பொழிலைநீறுநீறதாப்படுத்திவைகு
மழனிகர்முனிவர்க்கெல்லாவிடுக்கணுமறிவித்தானே. (௧௬௪)

அக்கணந்தவத்தரோடியருட்பரசாளிக்கோத
முக்கணன்கற்பகாலமுனிவெனச்சீறிமீண்டு
மிக்கவாயிரம்புயத்துமேருவைசிரந்துணித்தா
னொக்கலுந்தானையாவுமுலைந்திடப்பொருதழித்தே. (௧௬௫)

மாருதவிசையிற்பூளையாமெனமற்றுளோர்க
ணோருறநில்லாரோடிநீணகரடைந்தபின்னர்
சீருறுகார்த்தவீரன்சிறுவனையரசனாக்கிப்
பேருடையவனிகாத்தார்பின்னரினிருந்தமன்னர். (௧௬௬)

நாட்சிலகழிந்தபின்னர்ஞாலமுற்றளிக்குஞ்செம்மல்
வேட்கையாலிராமனில்லாவேளைபார்த்தனிகத்தோடுஞ்
சேட்செலும்புகழான்சூழற்செழுந்தலம்வளைந்துதந்தை
பூட்சியுஞ்சிரமும்வேறுப்புவிவிழத்துணித்துமீண்டார். (௧௬௭)

கேட்டனனிராமன்மீண்டுகிலேசமெள்ளளவுமின்றிப்
பூட்டியதந்தைக்குள்ளகடன்முறைபுரிந்துநீக்கி
நாட்டினிலரசர்மூலங்களைகுவானண்ணிநின்றான்
காட்டியவடவையாலகாலமும்வெருவிற்றம்மா. (௧௬௮)

மாதிரநடுங்கிவிண்ணும்வையமுங்கம்பித்தெட்டுப்
போதகந்துணுக்குற்றேங்கிப்புயல்களுமொளித்ததந்தோ
கோதறுவரைத்தோள்கொட்டிக்கொடுமரங்குனித்துநின்று
வேதியனணிநாணைசைவிறலுடனெடுத்தபோதில். (௧௬௯)

அந்தரத்தவர்களஞ்சுமாயிரம்புயத்தோன்மைந்தர்
தந்திரத்துடனேசூழ்ந்துசமர்புரிந்திட்டகாலை
மந்திரக்கணையொன்றேவிமடித்தனன்மடங்கற்சீறிச்
சிந்துரக்குழுவைவாட்டுஞ்செயலெனக்கணத்தின்முன்னர். (௧௭௰)

சீர்முகத்தரசரென்றேசெப்பியதேயவேந்தர்
போர்முகத்தெவருமுட்கப்புங்கவந்துரத்திநீக்கிப்
பார்முகத்தோடுஞ்சோரிப்பரவையின்மூழ்கிமூழ்கி
நீர்முகத்தென்னத்தந்தைக்கருக்கியநிரப்பினனே. (௧௭௧)

பார்புரந்தருளுங்கொற்றப்பார்த்திபர்தம்மையெல்லாம்
நேர்பெறமுடித்துநீக்கிநிலமறையவர்பானல்கி
யேர்பெறவானுளோருமிருடியர்குழாமுமேத்தச்
சீர்பெறுமேதியொன்றுந்தொடுகிலான்றுறந்துசென்று. (௧௭௨)

தொடுத்தவானளவுயர்ந்தமகேந்திரவரைச்சார்தொல்லை
யெடுத்தவேதியர்களோடுமிருந்தருந்தவஞ்செய்துற்று
னடுத்தவான்புகழாய்நாளைச்சதுர்த்தசிக்கருணீராட
வடுத்தவிர்முனியிராமன்வருவனென்றுரைத்தான்மாதோ. (௧௭௩)

மாதவருரைத்ததூயவாய்மையாற்புளகமோங்கிக்
கோதறுசூழல்வைகியிருந்தனன்குருகுலேசன்
பூதலமுணர்வுமல்கப்புரவியேழ்பூண்டதேர்மே
லாதபனுதையஞ்செய்தானருந்தவர்புளகமோங்க. (௧௭௪)

வெற்றியபரசுராமன்வேதியர்சூழாத்திரளோடு
மற்றைநாளடைந்தானங்கணறன்மகனிளைஞரோடுங்
குற்றமொன்றிலாதசெவ்விக்குளிர்மதிமுகத்தாளோடு
முற்றடிதொழுதுதன்னையறிவித்தானுவமையில்லான். (௧௭௫)

ஆதரவதனுலந்தவறன்மகன்முகத்தைநோக்கிப்
பூதலமளிக்கும்வேந்தேபுல்லறிவாளர்செய்த
தீதுனைச்செய்வதென்னேமெய்மையேசெம்மையென்று
நீதியிலாசிகூறிநெடுந்தவனகன்றுபோனான். (௧௭௬)

பொருவிலாவரசர்கோமான்புண்ணியமுனிவர்பொற்று
டிருமலர்சிரமேற்சூடியினிமையாற்றெய்வநன்னீர்
வருபலதரங்கந்தோறுமாமணிகொழிக்குமோசை
வெருவருநதியாங்கோதாவரியினைவந்துகண்டான். (௧௭௭)

அப்பெரும்புனலினுடியறன்மகன்சிலநாளாங்கோர்
தப்பருவேள்விச்சாலைதனிலருந்தவஞ்செய்துற்றான்
மைப்புயலனையமேனிவள்ளலுந்துணைவனோடு
மொப்பறுதேர்மேற்கொண்டேதுவரைநீர்த்தொடக்கில்வந்தான். (௧௭௮)

வந்தமாதவனைக்கண்டேமாதவம்விடுத்துமன்ன
னந்தமில்மகிழ்ச்சியோடுமவருடன்சிலசொற்கூறி
முந்துமானகரிற்போக்கிமுனிவரரனைவரோடுஞ்
சிந்தையினழுக்கிலாதானருமதையாறுசேர்ந்தான். (௧௭௯)

நருமதையென்னுந்தூயநிமலமானதியிற்புக்குந்
தருமனுங்குழுவினோடுந்தண்குடைந்ததனைநீங்கி
மருவுசையாதியாகம்வளர்த்தபூஞ்சோலைகண்டு
திருமுனியிதுவேதென்னவுரோமசன்செப்பலானான். (௧௮௦)

தவத்தினுக்கொருவனனசவுனகனென்னுங்கோமான்
பவத்தினையொறுப்பதுன்னிப்பலபகறவம்செய்துற்றான்
கவித்துமேலணிவன்மீகங்கலந்துயர்ந்துடலைமூடச்
செவித்தவனிருந்தானூழிசென்றதித்துணையென்றுண்டோ. (௧௮௧)

அடுத்தபார்புரக்குநீதியரசன்சையாதியென்போன்
வடுத்தனைப்பழித்தகண்ணார்மடந்தையரனேகரோடுங்
கடுக்குநாற்சேனையோடுங்கானடைந்திலங்குதூய்நீர்
மடுத்தனிற்றளைந்தான்சூழவாகினிகாவலாக்கி. (௧௮௨)

அன்னவனளித்தபாவையலர்மகளனையநீராண்
மின்னனேரிடையாரோடுமேவியவ்வனத்தைச்சார்ந்தா
டன்னிகரில்லான்கண்கடனிமைவன்மிகத்திற்றோற்றத்
துன்னுசுகன்னியென்பாடொட்டனளதனையம்மா. (௧௮௩)

வேறு.

அம்முனிவிழிபுதைத்தளவினவ்விடை
செம்மனத்தரசுடைச்சேனையாவதுங்
கைம்மலைகளுமிருகண்டெரிந்திடா
வெம்மையெய்தலுமதைவேந்தனோக்கினன். (௧௮௪)

அற்புதமடைந்தவன்வினவவாங்கவன்
பொற்புறுதிருமகள்போற்றியங்கணோர்
வெற்பிடையிருந்தவன்மிகத்திற்கண்மலர்
பொற்புறக்கண்டவைபுகன்றகாலையில். (௧௮௫)

தெரிதருமியலொடுசிறுவிபின்னர்போய்
வரிகொள்வன்மிகந்தனின்மலர்க்கணோக்கினன்
புரியுமாதவரிவணிருக்கும்புற்றெனக்
கிரிபுரைதோளினான்கிளர்த்தினனரோ. (௧௮௬)

புற்றினைப்பயப்பயவிடந்துபுன்மைதீர்
நற்றவன்றனையெதிர்ந்துளநடுங்கியே
கொற்றவன்பணிந்தனன்கொடுப்பன்மாதினை
மற்றுமென்பிழையெலாமன்னியென்னவே. (௧௮௭)

விருத்தமாமுனியருள்விளங்கநோக்கியே
திருத்தகுசேனைகண்டெரியச்செய்தனன்
பெருத்தமால்வரைமுலைப்பேதைதன்னையாங்
கருத்தியோடளித்தனனரசனேகினான். (௧௮௮)

மணிவடமுலையிடைவருத்தங்காண்டொறு
மணிபடவார்த்துறுமரிச்சிலம்பினு
டணிபடைமாமதன்வணங்குந்தார்குழற்
பணிவிடைபுரிந்தனள்பதிக்கனேகனாள். (௧௮௯)

மருத்துவரவ்வழிவந்துமாதவன்
விருப்புறவழிபடுமின்னைநோக்கியே
பெருத்தசுந்தரமுடைப்பேதையாவரை
வரித்தனையென்றனர்மங்கைகூறுவாள். (௧௯௦)

அவனிகாத்தளித்தசையாதிமாமக
டுவரிதழ்நாமமுஞ்சுகன்னியென்பராற்
சவனரைவரித்தவடானெனன்றேதிரு
ணவமெனத்தளவமார்நகைமுகத்தினாள். (௧௧௧)

விருத்தரில்விருத்தனும்வேதியன்றனே
வரித்தனையுகுத்தனைவனப்பைமாதுநீ
திருத்தகுமாடவர்வரைவுசிந்தையுட்
பொருத்தினையெனினலனெனப்புகன்றனர். (௧௧௨)

அவ்வுரைதன்செவிக்கானதன்றெனை
மவ்வலங்குழலினாண்மவுனமாகவே
செவ்வியின்மிகுந்தவர்மருங்கிற்றீர்ந்தகன்
றெவ்வுருவோதிமமொதுங்கவேகினாள். (௧௧௩)

அருந்தவத்தொருவனையணுகியன்னவர்
தருந்திறற்கொடுமொழியனைத்துஞ்சாற்றினாள்
கருங்கொடிப்புருவநீள்கண்ணிகற்பினுக்
கருந்ததிநிகர்கொலென்றமலனுன்னினான். (௧௧௪)

மீண்டுநீபோந்தவாவிளம்புமாறுளம்
பூண்டனனெனவுரைபுகலென்றேவினான்
நீண்டருங்கற்பினாள்சென்றுகூறினாண்
மாண்டகுமாடவர்க்கிசையும்வாய்மையே. (௧௧௫)

ஆயுறுவேதியரிருவரானதா
லேயெனவொருவருக்கிசைவிலாமலே
தூயனைவரித்தசொற்றுணிபுகாடியே
போயினர்சவுனகர்புடையிற்கூறினார். (௧௧௬)

நின்னையும்வரித்தனளென்னுநீர்மையாற்
பன்னருமெம்முடன்படரவேண்டுமென்
றன்னவரழைத்தலுமவர்பின்னேகினான்
மன்னுமூவருமொருமடுவின்மூழ்கினார். (௧௧௭)

மதனனுஞ்சயந்தனுமாகதன்றரு
சுதனும்வெஃகிடவிவர்சுருவமெய்தியே
வதனமாமதிபுரைமாதுமுன்னர்போய்க்
கதமிலாவொருவரைக்கைக்கொளென்றனர். (௧௧௮)

தான்முனம்வரித்தமாதவனைமீளவு
நூன்முறைவரித்தனனுவன்மருத்துவர்
மான்முகநோக்கியேவழுத்திக்கற்பினி
ளுன்முகன்கிழத்திநீயெனநவின்றனர். (௧௧௯)

மருத்துவரம்புயவதனநோக்கியே
தருக்குறுசவனகரிளமைதந்துளீர்
பரித்ததீமகத்தவிர்ப்பாகமுங்களுக்
கருத்துவன்போமினென்றவரையேவியே. (உ00)

பொற்கொடியின்புறப்போகம்பற்பக
லற்பநுண்ணிடையொடுமனுபவித்தலிற்
சொற்படுமாதுலன்றோன்றிநோக்கியே
யற்புதமெய்தினனடிவணங்கியே. (உ0க)

மன்னனுக்காசியும்வழங்கிவேந்தனே
சொன்னநல்வேள்வியொன்றியற்றிற்றூய்மையான்
மன்னுவேனென்னனும்வேண்டுமாறெலா
மன்னிலையளித்தனனன்புவிஞ்சவே. (உ0உ)

பொருவலியரசனைவியந்துபூபதி
யிருபுயம்புளகெழவிருக்கில்வாழ்த்தியே
தருவணிகாதலன்றன்னைமுன்கொடு
திருமுனியோர்மகஞ்செய்வித்தானரோ. (உ0ங)

சவனகன்முன்னரிற்றரும்வரத்தினு
லவனியின்மருத்துவர்க்கவியருத்தின
ன்வமிதுதகாதெனநாகர்நாயகன்
தவிர்க்கவென்றுரைக்கவுந்தாழ்வெய்தாமலே. (உ0ச)

மறுத்தனனுரையெனவாசவன்வரை
தறித்தவச்சிரத்தினூற்றடிவனென்றுகை
மறித்தனன்கைத்தலம்வானினின்றதா
லொறுத்தகையசைவுமொல்குதலுநீங்கியே. (உ0ரு)

மீளவுமவியனலிடைவிடுத்தலாற்
கோளரியோர்சதகோடியொத்ததோர்
நீளெரிகுஞ்சியுநீண்டபல்லுமாய்
வேள்வியினெழுந்ததோர்வெறித்தபூதமே. (உ0சு)

மகபதிதன்னையும்வானுளோரையும்
பகையறவிழுங்குவான்படருங்காலையி
விகலொழிந்தையநீயிசைக்குஞ்சொற்படி
தகைதருமகந்தொறுந்தருவன்காத்தியால். (உ0எ)

எனப்பலமகபதியினிமைகூறலாற்
றனக்கிணையிலாதமாதவனுமோரகைகொண்
டுனற்கருங்குறளையுமொழித்துவாசவன்
றனிக்கரத்தம்பமுந்தவிர்த்துளானரோ. (உ0அ)

அன்னனும்முதன்மருத்துவர்தமக்கவி
பொன்னினுட்டவரெலாம்போற்றியீந்தனர்
மன்னவன்வேள்வியைமகிழ்வின்முற்றியே
கன்னியோடருந்தவன்காட்டில்வைகினன். (உ௦௯)

அவனுடைச்சூழலென்றறைந்தபோதினிற்
றவமுறப்பணிந்துபோய்த்தருமன்மாமகன்
கவலைதீர்யமுனையாங்களித்தகன்னிகை
நவமுறுமாநதிக்கரையைநண்ணினன். (உ௧௦)

அப்பெரும்புனறிளைத்தன்புமீச்செலச்
செப்பருந்தகைவடதிசையைநண்ணினன்
மைப்புயல்கண்படுவனங்கண்டேதென
வொப்பிலாவுரோமசனுரைக்கலாயினன். (உ௧௧)

திருவளர்புவியெலாந்திங்கள்வெண்குடைத்
தருநிழற்கீழிடுஞ்சதுரன்மாற்றலா
வெருவுவனுசுவனென்னும்வேந்தன்மற்
றொருகதிர்வேலினனென்னுமுண்மையான். (உ௧௨)

வேறு.

பரிமகமோர்சதமுடித்துமற்றுள்ளவேள்விபலபலவுமாற்றிப்
புரிதருசெங்களமுறையாற்புவிபுரந்தானெடுங்காலம்புகழ்வேரோடக்
கரியகுழற்செங்கனிவாய்க்கற்புடையதுணைவியொடுங்கலந்துமேலைக்
குரியமகவுதியாதகுறையொன்றேயலதுகுறையுரைத்தற்குண்டோ. (உ௧௩)

ஞாலமெலாந்தனதமைச்சார்நல்கவெனப்புகன்றகன்றுநனிவெங்கானிற்
கோலமுறுபுரவலன்போய்க்குறுகியருந்தவப்பிருகுகுரவன்மேவு
மாலினுறுமாசிரமந்தனிற்குறுகிமாதவனைவணங்கிநின்றான்
காலமொடுகணக்கிறந்தகாரணனுமவற்கிதனைக்கழறினனே. (உ௧௪)

புவிமுழுதுமணியாழிசெலுத்துமருட்புரவலனேபுகுந்தவாறு
நவமாகத்தோற்றியதாலெய்தியநற்பரிசுரைத்திநல்குமென்றான்
கவினுமொளித்திறல்வாளான்கைகுவித்துப்புதல்வனிலாக்கவலையாலே
தவரரசேநின்னையுனிச்சரணடைந்தேன்பெறுமாறுதகைசெய்யென்றான். ()

வீறுரும்புயவலியான்விளம்புமுரைதிருச்செவிக்கண்மேவலோடு
மாறுருஞ்செஞ்சடையோனருணினைந்துகருணையொடுமரசைநோக்கிப்
பேறுருமோர்வேள்விமுடித்தியுனக்கொருபுதல்வன்பெருமைக்கேற்ப
நீறுருமேனியினோன்றனையனெனவருவனென்றேநிகழ்த்தினனே. (உ௧௬)

புலப்பட்டமொழியதனுற்புளகரும்பவரசதற்குப்பொருண்மற்றியாவுஞ்
சொலப்பட்டமுறைப்படியேதந்திடமாதவன்வேள்விதொடங்கியேநா
ணிலப்பட்டமன்னனைமுன்னிலையாக்கிமறைநெறியாலவிகணேர்ந்தான்
தலைப்பட்டமூவருமற்றும்பருமாமுனிவருந்தருக்கான்மாந்த. (உ௧௭)

வேள்விமறைநெறியாகமுயுந்தருளுமேல்வையினில்வெய்யதீயுட்
டாழ்வறவேபல்கலசந்தனிலுதகமெய்திடலுந்தவத்தனேந்தி
யேழ்வரிசைபுகலமைத்துதருப்பைபுனேந்தன்றிரவினெவருமாங்குச்
சூழ்வரவேதுயின்றனரால்விரதமுடன்மகம்புரிந்ததோன்றலோடும். (உகஅ)
வையமெலாம்புரந்தளிக்குநரபாலனவ்விரவின்மானீர்வேட்கை
செய்யுமுதற்பவவினையாற்செறிந்தெழுந்தான்புனலகன்றுதேடலாற்றான்
மெய்யுலவுவேள்விதனில்வந்தவிதைப்புனலருந்திவிட்டபின்னர்
துய்யசெழுந்தவனுணர்ந்துமனம்புழுங்கிமுனிவனிதுசொற்றான்மன்னே. ()
புத்திரனைத்தரும்வேள்விப்புதுப்புனலைநீர்நசையாற்புகழ்தீர்த்துண்ட
வித்தகனேயுனதுதரத்தோராணுகும்மங்காண்மெலிவினாலே
வைத்தகருவினைச்சுமக்கவந்ததிங்ந்தனைவெனவேவகுத்துப்பின்னு
முத்தமன்வந்துதித்திடுநாளுனதுயிர்க்குமிறுதியெனவுளநொந்தானே. (உஉ௦)

வே று.

வேதமாமுனிவிளம்பியசொற்கேட்
டேதமின்றியுலகேழையுமாளும்
நீதிமன்னன்மகிழ்நெஞ்சினனாகி
யோதுவன்கருணையுள்ளவனுக்கே. (உஉக)
நற்றவத்திறல்கொணன்மகவென்சார்
புற்றிடிற்பலருமோகையிலாழ்வார்
பெற்றதேயமையுமிவ்வுடல்பேணே
னிற்றபோதினுமெனக்கிணையாரே. (உஉஉ)
என்றுகூறியவனின்சொலினுய்ப்ப
வென்றியோடுமிறைமேதினிசாய்ந்தா
னன்றுகொண்டுதரமேலுறவண்ணை
லொன்றிவைகினனொரேசதகாலம். (உஉ௩)
தந்தையுங்கலையினென்புதயுந்தே
வந்துதித்தமகன்வாண்முகநோக்கிச்
சிந்தையிற்களிசிறந்திடவன்றே
யந்தமுற்றனனருந்திறன்மன்னன். (உஉச)
மீதலத்துமடவார்விழைவோடுங்
காதலுற்றமுதனைக்கொடுவந்தே
சாதமுற்றுதனையற்கினிதூட்டி
யாதரத்தினில்வளர்த்தனரன்றே. (உஉ௫)

வே று.

பூந்தாதார்முடிபுங்கவராரு
நீந்தாதாழ்கடனேர்புவியோருஞ்
சேந்தாதாழ்வறுசெம்மறனக்கே
மாந்தாதாவெனவைத்தனர்நாமம். (உஉசு)

பொன்னுமால்வரையைப்புரைதோள்கண்
முன்னூன்குள்ளமுதற்பொருளேபோ
லென்னேவிஞ்சைகளியாவுமுணர்ந்தே
மன்னுனுலகுக்கிளமைந்தன். (௨௨௭)

தேசின்மிகுத்தசிறப்புடைமைந்த
னேசின்மழைத்துளியின்றிநிலத்தோர்
கூசுதல்கண்டுகொடுஞ்சமர்செய்தே
வாசவனுன்மழைமல்குதல்பெற்றான். (௨௨௮)

அந்தநெடுந்தகையாளனியற்று
முந்துமகப்புவியென்றமொழிந்தான்
சுந்திரபாண்டுதவத்தினுதித்தோன்
வந்தேநாமகண்மாநதிகண்டான். (௨௨௯)

பண்பாலோர்பழுவந்திகழக்கண்
டொண்பாருளுமுதிட்டிரனுமன்
கண்பார்சுழலவருங்கதையென்ன
விண்பாலாமுனியோதினன்மீள. (௨௩௦)

வேறு.

மானிலம்புரக்குஞ்சோமமகிபதிதனக்குச்செவ்வாய்
மீனுறழ்நெடுங்கண்மாதர்நூற்றுவர்விருப்பிற்றோய்ந்து
தானொருமகனைத்தந்தேதரணிகாத்திருக்குநாளிற்
றேனமரலங்கன்மார்பன்முனிவனைச்சேர்ந்துசொல்வான். (௨௩௧)

மாதர்நூற்றுவர்க்குமின்சொன்மைந்தர்வந்துதியாராகி
கோதிலாளொருத்திமாட்டோர்குட்டன்வந்துதித்தானன்றே
வேதியரரசேநின்றனருளினன்மின்னனுர்கள்
காதலாற்பெறுதற்கென்னேகாரியமியம்புகென்றான். (௨௩௨)

மன்னவன்மரபுக்கெல்லாமாமகம்புரிவித்தென்றுந்
தன்னுனல்லரசினுட்சிக்கொருதுணையானதூயோன்
பன்னுநல்வேந்தின்வாய்மைபழுதுறுவண்ணந்தூர
முன்னியோர்கருமமாங்கணுரைத்தனனிருக்குவல்லோன். (௨௩௩)

பெற்றவோர்மகவைவாளாற்பிளந்தவிநல்கிவேள்வி
முற்றுவையென்னிலார்க்குமுறைப்படிகுமரருண்டாஞ்
சுற்றமும்பிறருமீன்றதோகையுமனங்கொளாரென்
றுற்றதுபுகன்றுனீதிக்கொருவனும்புரினுன்மார்பன். (௨௩௪)

வேதியனுரைத்தமாற்றம்வேந்தனுக்கிசைவாய்த்தோன்றி
கோதறுகலப்பையாவுங்கொடுத்தனனந்தவேதன்
றீதிலோர்மகனையாவிசெறுத்தவியமரர்க்கீந்து
மாதவர்பலருமேத்தமாமகமுடிப்பித்தானே. (௨௩௫)

முற்றியமகத்தினூடுமுரணறுமேமவள்ளத்
துற்றதுபுனிதவெண்சோறுயர்குலமுனிவனேந்தி
வெற்றியான்மடவார்க்கெல்லாம்பகிர்ந்தனன்வேந்தனிந்தக்
குற்றமாமகஞ்செய்தானென்றிரங்கினர்குவலயத்தோர். (உ௩௬)

கருப்பமாய்மடவாராண்டுகடக்குமுன்சதமென்றேதும்
விருப்புளசுதரையீன்றார்வேந்துளங்களித்துவாழ்ந்தான்
றிருப்பையின்முனியும்வேந்துந்தமதுடறீர்த்தபின்னர்
தருக்கிறைதுறக்கஞ்சார்ந்தான்றவமுனிநரகில்வீழ்ந்தான். (உ௩௭)

துறக்கநாடெய்தும்வேந்தன்றூதரோடியமனூர்போய்
முறைப்படிநரகசொர்க்கமுழுதுங்கண்டருளும்போதிற்
சிறப்புடைமுனியையாங்கோர்தீநரகதனிற்கண்டே
யறத்தினைவழுவாநீதியரசர்கோன்வினவினானே. (உ௩௮)

புரவலன்வினவவந்தப்புனிதமாமுனிவன்சொன்னான்
விரைவினினினக்குவெய்யவேள்விசெய்வித்தபாவம்
நரகினையளித்ததுன்மாட்டெய்துநற்கதிவேறின்றாற்
பரவருமரசேநின்னாற்பவந்தொலைந்திடச்செய்கென்றே. (உ௩௯)

சொன்னசொற்கேட்டபோதேயரசனுங்கூற்றின்சூழன்
மன்னியான்செய்தபெற்றிவளங்கொணல்வினையினாலே
பன்னுமாதவன்செய்தீயபாவத்தைவிலக்கவென்று
னன்னதேயாகவென்றானனற்பெருங்கடவுடானே. (உ௪௦)

அந்தணனரகம்நீங்கியரசனோடமரரூரில்
வந்தமர்ந்திருந்தானந்தமகிபதிமகஞ்செய்சாலை
யிந்தநற்சூழலாமென்றெடுத்துரைத்தயன்முன்னாளிற்
செந்தழல்வளர்ந்ததிந்தச்செழுந்திறற்சூழலென்றான். (உ௪௧)

பரதனென்றொருபூபாலன்பரிந்திந்தப்புனலின்மூழ்கி
விரதமே லுலகமேழும்விழியுறக்கண்டதுண்டா
லரதனஞ்சிதறுமோசையரும்புனறிளைத்தியென்றே
முரசுயற்கொடியினாற்குமொழிந்தனன்முனிவர்கோமான். (உ௪௨)

மாதவத்தொருவன்சொற்றவாசகப்படியேயந்தண்
பூதலத்தரசுமாதுமினிளரும்புனிதராரும்
காதலிற்களிசிறப்பக்கடும்புனற்புகுந்துமூழ்கி
மீதலத்துள்ளவண்மையாவையும்விழியாற்கண்டார். (உ௪௩)

துறக்கநாடதற்குமேலோர்தூயநன்னாட்டின்முன்ன
ரிறக்கும்பாண்டுவையும்வேறூரிந்திரனிருக்குமூரிற்
சிறக்கும்பார்த்தனையுங்கண்டேசிந்தைகண்களித்துமீண்டே
மறப்பெருங்கரையைச்சார்ந்தார்தருமனுமற்றுளோரும். (உ௪௪)

வே று.

காணொணாதனகண்டெடற்களித்துயர்கடவுட்
பேணொணாதனபேணியேவாணிதன்பெயராற்
பூணுமாநதிபலதுறைபுகுந்தனராடி
மாணுலாவியகடன்முறைபலவகைவழங்கி. (௨௪௫)

செய்யபங்கயமுகையவிழ்தேனுவட்டெடுக்கு
மையின்மாநதிநீங்கியேவடதிசைபுகுந்தா
னையனுமருந்தவத்தினோனவன்முகநோக்கிச்
செய்யசிந்தையிற்கோடியென்றிவையெலாந்தெரித்தான். (௨௪௬)

தக்கன்முன்னரின்மகம்புரிசாலையீங்கிதுவே
மிக்கநின்குலகுடன்செய்வேள்வியப்பொழிலே
தொக்கநற்குருக்கேத்திரமிவையதேதொல்லை
முக்குறும்பெறியயாதிநன்மகமந்தமுன்னையே. (௨௪௭)

முன்னர்நாணரநாரணர்தவமுயல்சூழ
லன்னதேயதேநான்முகனருமகவேதி
யின்னநீரினுட்டமதுடல்விடுத்தவரிமையா
மன்னுவாள்விழியோர்களாய்மல்குவர்காண்மின். (௨௪௮)

சிந்துமாநதியிவையிதிற்றிறலுடையிராமன்
முந்துநற்றவமாற்றியேமுக்கணனருளாற்
சந்தமாமழுப்பெற்றனன்றனிப்பெருந்தவத்தா
லந்தமால்வனம்வசிட்டன்வைகியதெனவறிவாய். (௨௪௯)

வேறுதோற்றியகாவணம்வேந்தர்கள்வேந்தன்
கூறரும்புகட்சிபியெனுங்கொற்றவன்றவஞ்செய்
தீறில்காலமங்கிருந்திடமென்னலுமிறைஞ்சிக்
கூறுவாயவன்கதையெனக்குருபதிமொழிந்தான். (௨௫௦)

மாதவற்கெலாமாரியனிவ்வுரைவகுப்பான்
பேதமற்றவன்சிபியெனும்பெயருடையரசன்
தீதறத்தவம்புரியுநாடேவர்நாயகனு
மோதுசெந்தழற்கடவுளுமுளந்தெரிவாராய். (௨௫௧)

வெங்கபோதநல்லுருக்கொடுவிளங்கழற்படாத
தங்குவெஞ்சிலைவேடனாய்மகபதிசார்ந்தான்
செங்கதிர்க்குலநாயகன்செழுந்தவமியற்றும்
புங்கவான்பொழிற்புகுந்ததுபுண்படுகபோதம். (௨௫௨)

நடுங்கியகாசரணெனவடைதலுஞ்ஞால
மடங்கவும்புரந்தளிப்பவனகங்கையாலேந்தித்
தொடங்கிநின்னையார்தொடரினுமுயிர்தொலைந்திடினு
மிடஞ்செலாவகைகாப்பனீயஞ்சலென்றிசைத்தான். (௨௫௩)

அணிந்தபீலியும்பசுந்தழையாடையுமம்பாற்
றிணிந்ததூணியுஞ்செஞ்சிலைவளைந்தசெங்கரமு
மிளைந்தவெங்கொடும்பார்வையும்விளங்கவந்தெதிர்ந்தான்
றணிந்தவெஞ்சினவேடனாய்விண்ணவர்தலைவன். (௨௫௪)

இல்லின்மக்களுமனைவியும்பிரும்பசியதனாற்
சொல்லுதற்கருந்துயருழன்றிருந்தனர்துரந்த
வில்லினிற்கணைபட்டுனதிடைவருவிகங்க
மொல்லெனக்கடிதுதவுகென்றரசனுக்குரைத்தான். (௨௫௫)

உயிரைநல்கினுமனைவியைநல்கினுமொருவர்
வயினடைந்தவர்தமைவிடுத்திடுவரோவாரா
யியலினும்பசிதவிருமாறிசைத்ததேதேனு
மயிலின்மென்றசையுதவுவன்கோடியென்றறைந்தான். (௨௫௬)

எடுத்துரைத்தமேதைகளெலாந்தருகினுமிதைப்போ
லடுத்தநாவினுக்கருஞ்சுவைதருவதின்றுமாற்
கொடுக்கவல்லையேலதனிடைநினதுடற்கொய்து
தடுத்தளிக்குதிதசையெனத்தராபதிமகிழ்ந்தான். (௨௫௭)

அரிந்துரந்தனிற்றசையெலாந்தராசுசெய்தமைத்தே
திருந்துவண்கபோதத்தையோர்தட்டினிற்செறித்தான்
சொரிந்தசோரியன்றூக்கினன்றுலைநிகரின்றிப்
பரிந்தமென்றசைத்தட்டுமேற்செல்வதுபார்த்தான். (௨௫௮)

துலைபுகுந்துதான்வேடனைத்தூக்குதியெனலு
நிலைகொள்வேடனுந்தூக்கினனிகருறல்நோக்கிச்
சிலைவலாயெனைக்கொண்டுசென்றுன்பசிதீரென்
றிலைகுலாவுவேனரபதிமொழிந்திடவிசைந்தான். (௨௫௯)

கருணைகண்டவன்றரிக்கலன்கடவுளுயகனு
மருண்டுவெங்கனற்செல்வனுமாகிமுன்னடைந்தே
பொருணன்மாமகிழ்பொருந்திடப்புயமுறத்தழுவித்
தெருணநல்லறிவிறைவனேதிறலுனக்கென்றான். (௨௬௦)

வேந்தனன்னவர்தாள்விழவிழிப்புனலாட்டி
யாய்ந்தபேறெலாமளித்துமீண்டனரெனவறைந்தே
போந்துவேறொருசூழலைக்காட்டியேபுகன்றான்
சேந்தகண்ணுடைத்தருமனுக்கருந்தவஞ்சிறந்தோன். (௨௬௧)

இந்தவான்பொழிலட்டகோணத்திறேனிருந்து
சுந்தரஞ்செறிசுவேதகேதுவினுடன்றென்றண்
முந்தவான்றவமுயன்றபாங்காமெனமொழிய
வெந்தைகூறுதியவன்பெருஞ்சரிதமென்றிசைத்தான். (௨௬௨)

வேறு.

பார்விளங்குதவத்தனேகபதத்தனென்னுமியற்கையோன்
றூர்விளங்குசுசாதையென்பவடன்னைவேள்விமுடித்தபின்
சீர்விளங்குதவம்புரிந்துசிறந்தநாளிடையில்லவ
ளேர்புரிந்தகருப்பமாகினளீன்றிலாணெடுநாள்வரை. (௨௬௩)

தந்தைசீடர்தமக்குமாமறைசாற்றுமேல்வைதனிற்கருங்
கந்தவார்குழலாளகட்டுறுகாளையீதுவகுத்ததா
லெந்தவேலையுமோதிவிக்கிலிருந்தசீடர்களொன்செய்வார்
சந்தைகண்டயிலான்மயங்கியதென்றுரைத்ததுதாழ்வற. (௨௬௪)

மாமறைப்பொருள்கற்பதற்கிடையூறுவாய்மைவழங்கிய
தீமையற்றிடநாலிரட்டிசிறப்பில்கொண்டவுடற்கொடே
பூமிசைக்கணுதித்தியென்றுபொறுக்கிலாதுசபித்தனன்
பாமரத்தையுணர்ந்திடாவழிபடுமனேகபதத்தனே. (௨௬௫)

அற்றைநீங்கியபின்னர்தன்னுயிரன்னகாதலியாளனுக்
குற்றதொன்றுவகுத்துரைத்தனளூறுதிமைந்தர்பிறக்குநாள்
கற்றமர்தவர்வேண்டுநல்லுபகரணமில்லிடையுய்ப்பரான்
வெற்றியாயினியேனுமவ்வகைவேண்டினேனுதவென்னவே. (௨௬௬)

ஏதுவேண்டுமுரைத்தியவ்வகையிற்கொணர்ந்துசெறிப்பனென்
றுதிமாதவனேதமாதுமதற்குவேண்டியபொருளெலாங்
கோதிலாதுபுகன்றுளாளதுகொணர்துமென்றவனேகினுன்
மீதுணர்ந்ததவத்தனில்லவள்வீறுசூழலில்வைகவே. (௨௬௭)

மிதிலைமாநகர்மேவிமூதுணர்வேந்தன்வேள்விபுகுந்தவண்
முதிரருங்கலைவந்தியென்றொருமுனிவனோடுதருக்கமா
யெதிரிடைந்துகடற்புகுந்தனனெய்திறனிலையிற்கணிற்
சதிரில்மைந்தனையின்னியவோரைதனிற்பயந்தனளாயரோ. (௨௬௮)

தந்தைசாபமளித்தவண்மைதயங்கவக்கிரமேனியாய்
வந்துதோன்றியமைந்தனைத்தவமாதுமாதரவாற்பெரு
மந்தண்மாமுலையமுதளித்தனளன்பினுளும்வளர்த்தன
ளுந்துவல்லவனெய்திடாதந்தையுன்னிவாடினளென்பவே. (௨௬௯)

முன்னர்வந்தவடன்னையோர்தவமுனிவியப்பில்மணந்தவண்
மன்னுசூழலினுற்றனன்பெயர்மல்குதானரெனச்சொல்வோ
னன்னமாமுனிசூழலெய்தியமர்ந்திருந்தனனச்சுதன்
றன்னைநல்குபிதாவெனக்கொடுதக்கமாமறையோதினுன். (௨௭௦)

அந்தமாமுனிதந்தமைந்தனருஞ்சுகேதுவுமிக்காற்
சந்தமாமுலையாள்சுசாதைதவத்தளித்தகுமாரனு
முந்துநண்பினராகிவிஞ்சைகள்கற்றுணர்ந்தபின்மூதுணர்
தந்தைபக்கலிலன்பினுடிவர்தானிருந்துதருக்கினுர். (௨௭௧)

வேறிலாமலிருந்துளார்விதியின்விலக்குவெளிப்பட
மாறுகொண்டுதருஞ்சொலாலிவன்வந்துதாயைவணங்கியே
கூறுவானெனையீன்றதந்தையிருந்ததெப்புவிகொம்பனாய்
வீறினுலுரைசெய்கவென்றுவினவல்செய்தனன்மைந்தனே. (௨௭௨)

தொல்லராவைமுனிந்தவல்குலிருந்ததன்சுதனுக்கெலாம்
வல்லவாறுபுகன்றினன்மகன்வந்துமாமிதுலைப்புதி
யொல்லையெய்திவிராங்குகாவலனுற்றபேரவைமேவியே
நல்லவந்தியைவாதில்வென்றனனுடெலாந்துதிசெய்யவே. (௨௭௩)

பின்னர்வந்துபெருங்கடற்புகுதன்பிதாவிடமன்னியே
முன்னர்வென்றகலைக்கொருந்தனைமுற்றும்வென்றதாகூறலுங்
கன்னமூடமுதங்கலந்துளகாட்சிபோன்மகனைத்தழீஇப்
பன்னிவைகியசூழல்வந்துபரிந்தமைந்தனொடெய்தினான். (௨௭௪)

கற்பினுக்கொருமாதெனப்பகர்காதலிக்கிடர்நீக்கியே
முற்பயின்றுளசூழலெய்திமுராரிபோலவண்வைகினு
னற்புடைத்தனிமைந்தன்முன்வருமன்னைமைந்தனுடன்றவ
முற்பயின்றுளசூழலிங்கிதுவென்றுகூறினன்முனிவனே. (௨௭௫)

அன்னமேதாவெனமன்னனின்படிமைடந்துபின்னருமங்கிறந்
துன்னுமுன்னரிமேனகிநெொருசூழலங்குளதோர்ந்தபின்
மன்னகேண்மோபரத்துவாசனளித்தமைந்தன்மயக்கினு
லின்னசூழலினுவிநீங்கினனென்றுபின்னுமியம்புவான். (௨௭௬)

வேறு.

பகாருங்குணத்தான்வேதபாரகன்பரத்துவாசன்
றகைமையினிரப்பியப்பேர்த்தவமுனியுடனண்பாகி
புகலருந்தவஞ்செய்துற்றபோதில்வக்கிரனென்றோது
மகனவன்றனக்குதித்தான்மற்றிவனிருவர்த்தந்தான். (௨௭௭)

இரப்பியனளித்தமைந்தரிருவருஞ்சுருதியோடும்
பரப்புறுநூல்களெல்லாம்பயின்றனரிருந்தநாளிற்
றிரத்தில்வக்கிரனுநோக்கித்தனக்கொன்றுந்தெரியாவாற்றால்
வரத்தினால்விஞ்சையெய்துமாறுன்னித்தவம்புரிந்தான். (௨௭௮)

காட்டினிற்றவஞ்செய்போதாகண்டலன்வந்துதோன்றி
நீட்டியசடையாயாதுநினைவுனக்குரைத்தியென்ன
வேட்டெனவிஞ்சையாதும்விராங்கிடவருட்செய்யென்னக்
கேட்டுதேசிகன்பாலென்றுவாசவன்மறைந்துபோனான். (௨௭௯)

அன்னவன்மறைந்தபின்னருந்தவங்கைவிடானாய்
மன்னனின்மகவான்மீளவந்தொருமறையோனாகி
தன்னிகரிலாகழுப்பிற்றளர்ந்தருங்கங்கையாற்றை
முன்னுறச்சேதுசெய்யமுறைதகமுனிநகைத்தான். (௨௮௦)

முடிக்கருங்கருமநீயோர்முடிக்குவைமறையோயென்றே
கடித்தவன்சொல்லநெஞ்சிற்கருதியவ்வண்ணலீயிப்
படிக்குண்முற்றுவையேயிந்தக்கருமமும்பலிக்குமென்றே
வடித்தவேதியனாய்வந்தவாசவன்கூறினானே. (௨௮௧)

அமரர்தம்மிறைவனீயேயாமெனத்தவத்தன்கூறச்
சமர்புரிவயிரவாளான்றன்னுருக்காட்டித்தக்கோய்
விமலமார்குருவினாலேவிஞ்சைகற்றுணர்தியென்னக்
குமரனுமறுத்தான்கேட்டகளித்தனன்குலிசநாதன். (௨௮௨)

வரத்தினால்விஞ்சையெய்திவக்கிரன்றந்தையான
பரத்துவாசற்குவந்துபணித்தவைதெரித்தபோதிற்
கரத்திலனகந்தையென்றுகான்முளைதேறுமாறு
திரத்துறுகீதமெல்லாந்தெரித்தனன்றவத்தின்மேலான். (௨௮௩)

கேள்வியானறிவெய்தாமற்கிளக்கருந்தவத்தனான்
தாழ்வறுமிரப்பியப்பேர்த்தனிமுனிசூழலெய்தி
வாழ்வுறுமவன்றன்மைந்தன்பார்வசுமனையாளான்
சூழ்வளைக்கரத்தினாளைநோக்கினான்றுணுக்குற்றானே. (௨௮௪)

முருந்துவாணகையுஞ்செய்யமுருக்கலரிதழுநீல்
மிருந்தவாள்விழியுந்திங்களிழிபடுமுகமுமேரு
பொருந்திருமுலையுமியாரும்பொய்யெனுமிடையுநோக்கி
வருந்தினான்மதன்றன்பால்வளருடலுருகினானே. (௨௮௫)

ஒருதினமவளோர்பொய்கையுறுபுனறிளைப்பான்செல்லத்
திருமுனியளித்தமைந்தன்சென்றெதிர்தன்கைந்துகாமன்
பொருமுனைப்பகழிக்காற்றேன்பொற்கொடிபுணர்வாயென்றே
கருவளைக்கரத்தைத்தன்செங்கரங்களாற்றொடவந்தானே. (௨௮௬)

தோற்றியதீயன்வாய்மைதோகைகன்னத்திற்சேரக்
காற்றினிலொல்காநிற்குங்கற்பகவல்லிபோல்வாள்
வேற்றொருவாய்மைகூறின்விலக்கெய்துங்கற்புக்கென்றே
யேற்றசொல்வழங்கினாளைக்கெய்துவனென்றுமீண்டாள். (௨௮௭)

கோபத்தான்மறுக்கிலிந்தக்கொடுமுனியழன்றுதன்னைச்
சாபத்தாலிடருண்டாக்குமென்றிவடைகையாற்றாழ்ந்தே
தூபத்தாற்கமழுங்கூந்தற்றாய்மாதலைநண்ணி
தாபத்தாலுரைத்தாண்மாதுதழலொத்தான்றழல்செய்மாமன். (௨௮௮)

அந்திமர்த்தழலினூட்டேயருமறையொன்றுகூறித்
தந்தவாகுதியினாலேதண்பிறையெயிற்றினோடும்
வந்தனனரக்கனோடோரரக்கியும்வருமுனேவ
முந்துமிச்சிறியோனைவிமுடித்துடன்மீண்டாரன்றே. (௨௮௯)

சந்ததியிறந்தவாறுந்தகாப்பழியுரையுநோக்கி
யந்தநற்பரத்துவாசனுவியும்விடுத்தானன்றே
யிந்தநற்சூழலின்சாரிரப்பியனென்னும்வேதன்
மைந்தரோடிருந்தான்பண்ணுண்மகிபதியொருவன்வந்தான். (உகூO)

இணையிலாப்பிருகுத்துய்மனென்பவன்வேள்விமுற்றத்
துணைதருமுனிவன்மைந்தரிருவருந்தூயராமென்
றணுகிநுந்தமைவரித்தேனணிமகமுடித்தற்கென்னப்
புணைதருதோளான்பின்னர்படர்ந்தனர்தந்தையேவ. (உகூக)

போனவராண்டொன்றேகுமளவெலாம்புனிதவேள்வி
தானவணியற்றியுற்றார்தந்தையுமகாரைக்காண
ஞானபூரணரனேகர்நாடொறுமிருந்துமுற்றும்
வானணிவேள்விச்சாலைக்கேகுவான்வனத்தில்வந்தான். (உகூஉ)

மன்னவன்மகஞ்செய்விக்குமதலையரிருவர்தம்மின்
முன்னவன்றருப்பைதேடிமுனிவரும்வனம்புகுந்தான்
பன்னருமுழுவையென்றுதந்தையைப்பாராதஞ்சித்
தன்னிலோர்தருப்பையேவித்தன்பிதாவுயிருண்டானே. (உகூங)

மனத்துறுங்கடவுட்பேர்வாயுறவழுத்திவீழ்ந்த
தனிப்பெருந்தாதைதன்னைச்சார்ந்துணர்ந்தறிவுசோர்ந்தே
நினைப்பறநின்றுநின்றநெடுந்தகைதன்னைவாளா
வுனற்கரும்பிரமகத்திசூழ்ந்ததாலொருகணத்தில். (உகூச)

வேறு.

செழுந்தவத்தினோன்றெளிந்துசிந்தைதனோ
யழுந்திவேள்விவாயணுகுவானினைந்
தெழுந்தகாலையினிடைதடுத்ததாற்
புழுங்குமால்வரைப்புரைந்தபாவமே. (உகூரு)

கண்டுமாதவன்கண்கண்மூடியே
பண்டுகானகப்பாங்கர்வைகினான்
மண்டுவான்பனைமாருதத்தினால்
விண்டுசென்னிபோய்விளங்குமுண்மையில். (உகூகூ)

அண்ணலுக்கவணடுத்தபாங்கெலாம்
பண்ணிழைத்தவற்கிளையபண்பினு
னண்ணிநோக்கியேநடுங்கினனரோ
விண்ணுளோர்களுமிரங்கிவீழவே. (உகூஎ)

மறைவன்முன்னவன்வாய்மைகேட்டபின்
னறையுமிப்பவமகலுங்காறும்யான்
முறைசெலுத்துவன்முற்றிநீமகங்
குறைதவிர்த்தியென்றனுசன்கூறினான். (உகூஅ)

தம்பிவெம்பவந்தாங்கமுன்னவு
னிம்பர்மாமகத்தெல்லையெய்தினு
னம்புவித்தலமடங்கவோடியே
வெம்பவத்திவன்மெலியுநாளிலே. (௨௯௯)

பன்மைபட்டநாள்பாரெலாமுழன்
றன்பினப்பவமடங்கநீக்கியே
நன்மைகைக்கொடுநடத்தும்வேள்விவாய்
தன்முன்வைகிடந்தம்பியெய்தினன். (௩௦௦)

இடரைநீக்கியவ்விளைஞன்மேவலு
மடலில்வேள்விசெய்யரசைநோக்கியே
படரும்வெம்பவம்பரித்தபண்பினன்
கொடிதுமேவுதலென்றுகூறினன். (௩௦௧)

முன்பிறந்தவன்மொழிந்தவாய்மையாற்
பின்பிறந்தவன்பெரிதுமாழ்கியே
யன்பிறந்திவனறையலாவதோ
வன்பிறந்துளீர்மன்னகேளெனு. (௩௦௨)

புரிந்ததீவினைச்செயல்பொறுத்தியான்
றிரிந்துநீக்கினேன்செய்திலேனிது
விரிந்தகேள்வியானிவன்விருப்பினற்
றெரிந்திடாதுமுன்செய்ததாகுமால். (௩௦௩)

நடந்ததிவ்வணம்நான்வரப்பொரு
துடந்தைநீங்கிநின்றுரைத்ததொக்குமோ
கடந்தவேலினுயென்னக்காவல
னடங்கியாங்கவனறம்வியந்தனன். (௩௦௪)

நிலம்புரக்குமன்னிருபன்வேள்விசெய்
தலம்பரித்தவானவர்களுக்கவி
நலம்பெறத்திறலோடுநல்கியே
வலம்பெறப்பலவரங்கடாங்கினன். (௩௦௫)

அனையகாலையிலந்தவானவர்
முனிவர்மக்களைமுறையினேக்கியே
புனையுமுங்களுக்கேதுபொற்புட
னினிதில்வேண்டுமோவுரைத்திரென்னவே. (௩௦௬)

தந்தைமீண்டுயிர்தான்வந்தெய்தவு
முந்தவுக்கிரமுனியுந்தந்தையும்
வுந்துதோற்றவுங்கருணைவைத்திது
சிந்தையிற்களிசிறக்கநல்குவீர். (௩௦௭)

என்றுகூறினரிசைகொள்வானவர்
நன்றுநன்றெனநல்கவக்கணங்
கொன்றைமைந்தனுங்குறித்ததந்தையும்
வென்றிசேரிரப்பியனுமேவினர். (ரு0அ)

வானவர்க்கவர்வண்மைவீறவே
தானிசைத்துபசாரமீந்தபின்
ஞானவக்கிரன்மனதினுடியே
மோனம்விட்டதுமொழியன்மேயினன். (ரு0சு)

தவத்தில்விஞ்சைகடானுணர்ந்துளே
னவத்திரப்பியனொருவனல்கவே
புவிக்கண்விஞ்சைகள்பொருந்தினனெனை
யவத்தில்மாய்த்திடும்வலிமையாதினே. (ருக0)

ஐயமுற்றனனறைகுவீரெனத்
துய்யவக்கிரன்சொல்லவானவர்
மெய்யொருத்தனுலுணரும்விஞ்சையே
செய்வலத்ததென்றுண்மைசெப்பினர். (ருகக)

பொருந்துவானவர்போனபின்னரிற்
றிருந்துவேலினன்சிறப்பிலுய்த்திட
விருந்தசூழல்வந்தெய்திவான்றவம்
புரிந்துவைகினர்புனிதம்விஞ்சவே. (ருக௨)

அன்னமாதவர்ரியனுளெலாந்
துன்னுமாதவஞ்செய்தசூழலென்
றுன்னியோதினனுயர்தவத்தினன்
மன்னர்கோமகன்மகிழ்கொண்டானரோ. (ருகரு)

அங்குவைகியபுனலெலாமளைந்
தெங்குமாதவரிருக்கினுசிகள்
தங்கிடஞ்சிரந்தாங்கியேகியே
கங்கைமாநதிக்கரையைமன்னினர். (ருகச)

வடந்திகழ்ந்தவார்முலையின்மாதுடன்
தொடர்ந்துமேவுறுந்துணைவரோடெதிர்
படிந்தருங்கடன்பலவுமாற்றியே
கடந்துபோயினர்கங்கைதன்னையே. (ருகரு)

வேறு.

சுருதியோருவடிவாகித்திரண்டதென்றே சுரர்புகழுந்திருமேனித் தூய வேதன், கருதியுரைத்திடுபரிசானன்னீராடிக் கடன்முறைகள் பலமுடித்துக் களிப்பினுடே, பொருதிரைகளொளிவிளக்குநதிகடோறும்புனலாடிக்கடந்தே யும்புவனந்தேர் துந், தருநிலவுபொழிமதியந்தவழுஞ்சந்திர சயிலத்தின்சுனை செழுந்தண்சாரல்சார்ந்தான். (ருகசு)

அக்கிரியின்புதுமையெலாமடைவேநோக்கி யங்குள்ளவருவிரும்புனலு மாடித், தக்கபுகழ்விசையனருந்தவம்புரிந்த சாரலிதுவென்றுதவமுனிவன்சாற்ற, மிக்ககனியுவகைதிகழ்நெஞ்சனாகி விசையனைக்கண்டனர்போலவிரும்பிக்கண்டு, தொக்கமுனிகணத்தொடும்போய்த்தசாங்கனென்னுந் தொல்லைமுனிதபோவனத்தின்சூழல்சார்ந்தார். (௩௧௭)

அங்குள்ளதபோதனர்தம்பாதம்போற்றி யவருரைக்குமாசியும்பெற்றப்பாலேகி, எங்குள்ளமுனிவரையுந்தொழுதுகூறு மெய்புனலுந்தப்பாமலினிதிழுடி, வங்கமறிகடற்கடைந்துவானோர்க்கெல்லா மருந்துவிருந்தருளியமந்தரமுங்காட்டிக், கங்கைநதிகுதிபாயுஞ்சிகரசாலக் காந்தற்பமெனும்வரையுங்காட்டினானே. (௩௧௮)

அந்தவுயர்கிரியினெடுஞ்சாரலூறு மருந்தவஞ்செய்முனிவரரையடைவேகாட்டி, யிந்தவனந்தனக்கெமையாளுடையான்குன்ற மீரைம்பதோசனையென்றெடுத்துக்காட்டிக், கந்தனெனவெக்கலையும்வல்லஞானக் கடவுண்முனிவிசாலயுஞ்லையமுங்காட்டி, யுந்துநெறிசெங்கோலாயிதனிலோராண் டிருத்தியெனவுரோமசனுமுரைத்திட்டானே. (௩௧௯)

அம்முனிவன்மொழிப்படியேயுவரம்பில்கேள்வி யறன்மகனுந்தம்பியருமரிவையோடு, மெம்முகமுந்தம்முகமாயிலையுங்காயு மினியகனியுடனருந்தியிருந்தநாளின், மைம்முகின்வாகனன்கனகமுடிமேலம்பொன் வனசமலரொன்றுகுழமயின்முன்வீழச், செம்மலரைச்செங்கண்மலரதனானோக்கிச் செய்யமலர்க்கரத்தேந்திச்சிந்தித்தாளே. (௩௨0)

இந்தமலருலகனைத்துமீன்றகோல வெழின்மலரோவிரவிதிருக்கரத்தில்வைகு, மந்தமலரோவமுதிற்பிறந்தபாவை யமர்ந்துறையுமணிமலரோவவனிதன்னி, லெந்தமலருங்கருகக்கமழாநின்ற தெங்கெங்குமிதன்மணமேயென்றுபோற்றிக், கந்தவகன்மைந்தனுக்குக்கனலோனல்குங் கனங்குழைசென்றுவகையுடன்காட்டிச்சொன்னாள். (௩௨௧)

இம்மலருக்கொருமலருமவனிதனி லெதிரில்லையென்றிதழாயிரத்தின்மிக்க, வம்மலரைக்கைம்மலரிற்கொடுத்திதொக்கு மணிமலர்நீயெனக்கருளவேண்டுமென்னச், செம்மலையிற்றிகழ்சிகரத்திண்டோள்வீமன் றெய்வமுனிபுங்கவன்றன்றிருத்தாள்போற்றி, மெய்ம்மலரைத்திருமுன்புவைத்துநின்றுவினவினானவனுமெதிர்விளம்பினானே. (௩௨௨)

என்பலவுமியாமுரைப்பதிந்தப்பூவி னியல்பினையும்பெருமையையுமியக்கர்தங்கண், மன்பதியிலுளதன்றிவரம்பிலாத வானுலகிலுளதென்னின்மற்றுமுண்டோ, வுன்பிறருக்கிதுகோடற்கெளிதோமாய னும்பர்பதிபுகுந்தொருபைந்தோகைக்கீந்த, பின்பதனைக்கண்டறிவாரில்லையென்று பேசினானியாவரொடும்பேச்சிலாதான். (௩௨௩)

இயக்கர்பதிதனிலுளதென்றிசைத்தமாற்ற மின்புறக்கேட்டொருக்காலு மீறிலாத, வயக்கொடுவெஞ்சரர்சனமும்வன்போர்வாகை மறத்தண்டுங்கரத் தேந்திமடங்கைநெஞ்சிற், றுயக்கமறவிக்கணத்திற்றெய்வப்போகச் சுரபிமலரளித்திடுவேனென்றுசொல்லிச், சயக்கரடமுதுதறுகட்சயிலமன்னச் சதாகதிமைந்தனுமிமைப்பிற்றனிச்சென்றனே. (௯௨௪)

தீர்த்தயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௯௫௧௧.

---

# வீமராசன்மந்தாரமலர்கொணர்ந்தசருக்கம்.

---

கைக்காற்றுந்துடைக்காற்றுமூச்சுகாற்றுங் கனகமணிவரைபோல்க்கவின்கொள்சோதி, மெய்க்காற்றும்பரந்தெழுந்துவனத்திலுள்ள வெற்புநெடுந்தருவுடன்வேர்பறிந்துவீழ, வெக்காற்றுமுடன்றெழுந்தவுகாந்தகால மெனச்சென்றனினவனைகளெண்ணில்கோடி, செய்க்காற்றுஞ்செழுந்தாளநீலவுசீசச்சேதாம்பலகமலருஞ்செல்வனுடன். (க)

இலங்கைநகர்தன்னில்விறலிராமன்றாத னிகலரக்கர்சேனையெலாமிரித்தவாபோ, னிலங்குலுங்கவரைகுலுங்கவனத்திலுள்ள நெடுந்தருக்களியாவையும்வேருடனேராக்கி, விலங்கினெடுபுள்ளினமுமடையத்தாக்கி மெய்நடுங்கித்திடுமாறிவெம்பியுள்ளங், கலங்கிவிழக்கனமதிர்வபோலவார்த்துக் காஞ்சனப்பேரெழில்வனமுங்கடந்திட்டானே. (உ)

அவ்வனத்தையிகந்தனந்தகாதமேகி யங்கிடைவிட்டுத்தரத்தினப்பாலேகி, மெய்வனப்புமடல்வலியுமிகுத்தவாகை வீமனெனும்பெயர்திசையின்விளக்கும்வீரன், மைவனப்பினுடன்படியுஞ்சினைக்கைவாச மலர்ப்பொழிலின்றிருமருங்கேமத்தமாவின், கைவனப்புந்தழைசெவியுமருப்புஞ்சேரக் கவினழிக்குங்குலைக்கதலிக்காடுகண்டான். (௩)

அக்கதலிவனந்தனக்குக்காவலாகு மடலரக்கரனேகருடனடுபோர்செய்து, மிக்கதலங்குருதியினால்வெள்ளமாக்கி வெகுண்டவர்தம்மாவியையும்விண்ணிலேற்றித், திக்கதலமுதலாமெவ்வுலகுமேங்கச் சிங்கனுதமுசெய்தான்செய்நகாலை, யுக்கதலைமணிபுரகராசற்கென்று மும்பர்படுந்துயரமெய்ம்மாலுமைக்கலாமோ. (௪)

* வரைகலங்கவனங்கலங்சக்கலங்குருத மண்கலங்கவிண்கலங்கமகரமூந்நீர்த், திரைகலங்கத்திசைகலங்கவீ றிலாத செகங்கலங்கவுகங்கலங்கச்சிந்தை துரயோ, ருரைகலங்கவுளங்கலங்கத்துளங்கிமெய்யி லூன்கலங்கவிலங்கொடுபுள்ளினங்கள்யாவு, நிரைகலங்கவுலகினுயிர்படைத்ததம்பி னிலேகலங்காதனவுண்டோநிகழ்த்தினம்மா. (௫)

வே று.

* அந்தவோதையப்பொழிலிடைத்தவம்புரிந்தருளு
மந்தராசலமனையதோண்மாருதிகேட்டு
விந்தமன்னதிண்புயாசலவீமனுக்கெதிர்போய்
முந்தமற்றவன்வருநெறியதனிடைமுன்னி. (௬)

* வெற்பிரண்டினில்வேலைமுன்கடந்ததாணீட்டி
பொற்புயாசலமிரண்டையுமிருவரைபோக்கி
யற்பவாழ்வுடையரக்கன்மாநகரழலூட்டுஞ்
சிற்பவாலதிதிசையெலாஞ்சென்றுநின்றோங்க. (௭)

* எம்பிரான்றனக்கொழியவேறியாவர்க்குந்தெரியாச்
செம்பொன்மாமணிக்குண்டலமிருபுறந்திகழ
விம்பமால்வரைமீதொருமேருவேயொக்கு
மம்பொன்மால்வரையிருந்தெனவிருந்தனனனுமான். (௮)

* குகைத்தடங்கிரியனையதோள்கொட்டியார்த்துரப்பி
நகைத்துநாகமுநடுங்கிடநடந்தனனடந்து
மிகைத்தவாளரிபோல்வரும்வீமன்முன்கண்டு
திகைத்துநின்றனன்மறமையுந்திறமையுமுடையான். (௯)

* அண்டர்தானவரரக்கருமனுகுருவனத்தி
லெண்டிசாமுகமெங்கனுமிரிந்திடவார்த்து
மண்டிமேல்வருமானுடனாரடாவென்றான்
சண்டவாயுவின்றனையனைமற்றவன்றமையன். (௰)

* தம்முனாகியவானரஞ்சாற்றியவுரைகேட்
டெம்முனாகிவந்திருந்தநீயார்கொலென்றிசைத்தான்
றெம்முனையினுஞ்செவ்விமென்போகமாமகளிர்
தம்முனையினுநாத்தவறுவட்டில்வீமன். (௧௧)

* துன்னும்வெஞ்சிலைவலிகொலோதோளிணைவலியோ
வென்னைநீபுகலாரடாவென்பதிங்கெவனோ
வுன்னைநீயறியாநெறியுணர்விலாமனிதா
மன்னும்வாறனைக்கடந்துபோவல்லையேயென்றான். (௧௨)

* உரங்கொள்வீமனம்மாருதியுரைத்தசொற்கேளா
வரங்கொள்வார்சிலையிராகவன்மாப்பெருந்தூதன்
றரங்கவாரிதிதாவுமென்றம்முன்வாலன்றிக்
குரங்கின்வாலிதுகடப்பதிங்கரியதோகூறாய். (௧௩)

இயக்கர்பதிதனிலுளதென்றிசைத்தமாற்ற மின்புறக்கேட்டொருக்காலு மீறிலாத, வயக்கொடுவெஞ்சரர்சனமும்வன்போர்வாகை மறத்தண்டுங்காத் தேந்திமடந்தைநெஞ்சிற், றுயக்கமறவிக்கணத்திற்றெய்வப்போகச் சுரபிமலரளித்திடுவேனென்றுசொல்லிச், சயக்கரடமுதுகறுகட்சயிலமன்னச் சதாகதிமைந்தனுமிமைப்பிற்றனிச்சென்றானே. (௩௨௪)

தீர்த்தயாத்திரைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௩௫௧௧.

# வீமராசன்மந்தாரமலர்கொணர்ந்தசருக்கம்.

கைக்காற்றுந்துடைக்காற்றுமூச்சுகாற்றுங் கனகமணிவரைபோல்க்கவின்கொள்சோதி, மெய்க்காற்றும்பரந்தெழுந்துவனத்திலுள்ள வெற்புநெடுந்தருவுடன்வேர்பறிந்துவீழ, வெக்காற்றுமுடன்றெழுந்தவுகாந்தகால மெனச்சென்றானினவனைகளெண்ணில்கோடி, செய்க்காற்றுஞ்செழுந்தராளநீலவுவீசச்சேதாம்பலகமலருஞ்செல்வனுடன். (௧)

இலங்கைநகர்தன்னில்விறலிராமன்றாத னிகலரக்கர்சேனையெலாமிரித்தவாபோ, னிலங்குலுங்கவரைகுலுங்கவனத்திலுள்ள நெடுந்தருக்களியாவையும்வேருடனேராக்கி, விலங்கினொடுபுள்ளினமுமடையத்தாக்கி மெய்ந்டுங்கித்தடுமாறிவெம்பியுள்ளங், கலங்கிவிழக்கனமதிர்வபோலவார்த்துக் காஞ்சனப்பேரெழில்வனமுங்கடந்திட்டானே. (௨)

அவ்வனத்தையிகந்தனந்தகாதமேகி யங்கிடைவிட்டுத்தரத்தினப்பாலேகி, மெய்வன்புமடல்வலியுமிகுத்தவாகை வீமனெனும்பெயர்திசையின்விளக்கும்வீரன், மைவனப்பினுடன்படியுஞ்சினைக்கைவாச மலர்ப்பொழிலினொருமருங்கேமத்தமாவின், கைவனப்புந்தழைசெவியுமருப்புஞ்சேரக் கவின்பூக்குங்குலைக்கதலிக்காடுகண்டான். (௩)

அக்கதலிவனந்தனக்குக்காவலாகு மடலரக்கரனேகருடனடுபோர்செய்து, மிக்கதலங்குருதியினால்வெள்ளமாக்கி வெகுண்டவர்தம்மாவியையும்விண்ணிலேற்றித், திக்கதலமுதலாமெவ்வுலகுமேங்கச் சிங்கனாதமுசெய்தான்செய்நகாலை, யுக்கதலைமணிபுரகராசற்கென்று மும்பர்படுந்துயரமெய்மாலுரைக்கலாமோ. (௪)

* வரைகலங்கவனங்கலங்சக்கலங்குருத மண்கலங்கவிண்கலங்கமகராழுந் நீர்த், திரைகலங்கத்திசைகலங்கவீ றிலாத செகங்கலங்கவுகங்கலங்கச்சிந்தை துயோ, ருரைகலங்கவுளங்கலங்கத்துளங்கிமெய்யி லூன்கலங்கவிலங்கொடுபு ள்ளினங்கள்யாவு, நிரைகலங்கவுலகினுயிர்படைத்ததம்பி னிலேகலங்காதனவு ண்டோநிகழ்த்தினம்மா. (ரு)

ே வ று.

* அந்தவேோதையப்பொழிலிடைத்தவம்புரிந்தருளு
மந்தராசலமனையதோண்மாருதிகேட்டு
விந்தமன்னதிண்புயாசலவீமனுக்கெதிர்போய்
முந்தமற்றவன்வருநெறியதனிடைமுன்னி. (௬)

* வெற்பிரண்டினில்வேலைமுன்கடந்ததாணீட்டி
பொற்புயாசலமிரண்டையுமிருவரைபோக்கி
யற்பவாழ்வுடையரக்கன்மாநகரழனூட்டுஞ்
சிற்பவாலதிதிசையெலாஞ்சென்றுநின்றோங்க. (எ)

* எம்பிரான்றனக்கொழியவேறியாவர்க்குந்தெரியாச்
செம்பொன்மாமணிக்குண்டலமிருபுறந்திகழ
விம்பமால்வரைமீதொருமேருவேயொக்கு
மம்பொன்மால்வரையிருந்தெனவிருந்தனனுமான். (அ)

* குகைத்தடங்கிரியனையதோள்கொட்டியார்த்துரப்பி
நகைத்துநாகமுநடுங்கிடநடந்தனனடந்து
மிகைத்தவாளரிபோல்வரும்வீமன்முன்கண்டு
திகைத்துநின்றனன்மறமையுந்திறமையுமுடையான். (௯)

* அண்டர்தானவரரக்கருமனுகுருவனத்தி
லெண்டிசாமுகமெங்கணுமிரிந்திடவார்த்து
மண்டிமேல்வருமானுடனாரடாவென்றுன்
சண்டவாயுவின்றனயனைமற்றவன்றமையன். (௧0)

* தம்முனாகியவானரஞ்சாற்றியவுரைகேட்
டெம்முனாகிவந்திருந்தநீயார்கொலென்றிசைத்தான்
றெம்முனையினுஞ்செவ்வியமென்போகமாமகளிர்
தம்முனையினுநாத்தவறுவட்டல்வீமன். (௧௧)

* துன்னும்வெஞ்சிலேவலிகொலோதோளிணைவலியோ
வென்னைநீபுகலாரடாவென்பதிங்கெவனோ
வுன்னைநீயறியாநெறியுணர்விலாமனிதா
மன்னும்வாறனைக்கடந்துபோவல்லையேயென்றுன். (௧௨)

* உரங்கொள்வீமனம்மாருதியுரைத்தசொற்கேளா
வரங்கொள்வார்சிலேயிராகவன்மாப்பெருந்தூதன்
றரங்கவாரிதிதாவுமென்றம்முன்வாலன்றிக்
குரங்கின்வாலிதுகடப்பதிங்கரியதோகூறுப். (௧௩)

* என்றுதன்றிருத்துணைவனின்றிசைத்ததுகேட்டு
நன்றுநன்றுநீநவின்றதுநன்றெனநகையாத்
துன்றுவார்சிலைமனிதனைச்சுமந்துதோள்வருந்தும்
புன்றொழிற்சிறுகுரங்கையோவென்னொடும்புகல்வாய். (கரு)

* குரக்குநாயகனவ்வுரைகூறலுங்கேட்டுத்
தரைக்குநாயகன்றடம்புயங்குலுங்கிடநகையா
வரக்கர்நாயகனூரழலூட்டியிவ்வகிலம்
புரக்குநாயகன்றன்னையோவிழித்துநீபுகல்வாய். (கசு)

* பின்னும்வார்சிலையிராகவன்பெருமையுமனுமான்
மன்னுதோளிணைவலிமையுமாருதிசாற்ற
வன்னபோழ்தினிலகமகிழ்ந்தருளுடனோக்கி
யென்னகாரியம்வந்ததிங்கியார்கொனீயென்றான். (கசு)

* தாமமாருதியுரைத்தசொற்றம்பியுங்கேட்டு
நேமிமாநிலம்புரக்குநன்னீதிவேற்றரும
நாமநாயகற்கிளையவனரனுக்குமூத்தோன்
வீமன்வாயுவின்புதல்வன்யானென்றனன்விறலோன். (கஎ)

* அன்னவாசகமவனுரைத்தலுமிகலனுமான்
கன்னபாகமுஞ்சிந்தையுமுந்துறக்களித்து
மின்னுவார்சிலையிராகவன்மெய்ப்பெருஞ்சீர்த்தி
சொன்னவாறுநன்றுனக்கிதார்சொற்றவரென்றான். (கஅ)

* வரத்தினாலருமறையினால்வார்சிலைபயிற்றும்
பரத்துவாசன்முன்பகர்தரக்கேட்டனன்பலகாற்
றிரத்தினாலுயரிராகவன்சிலைவலியென்று
னுரத்தினாலொருவீரருமொப்பிலாவுரவோன். (கசு)

* குந்திகான்முளைகூறியவாசகங்கேட்டுப்
புந்தியாலுயரஞ்சனைபுதல்வனும்புகல்வான்
சிந்துசீகரச்சிந்துமுன்கடந்துசெந்தீயா
லுந்துவாள்வலிநிருதரூரொருங்குசுட்டவனும். (உO)

* அந்தவார்சிலையிராமனுக்கடிமையாயென்றுஞ்
சிந்தையாலவன்றிருப்பதஞ்சிந்தைசெய்பவனு
முந்தையாகியவாயுவுக்குற்பவித்தவனு
மிந்தவாழ்வுடையனுமனேயென்றனனிகலோன். (உக)

* என்றவாசகமிருசெவிக்கமுதெனக்கேட்டுத்
துன்றுநெஞ்சினிலுவகையன்றுதித்தனன்றுள்ளி
யென்றும்யாமுயறவப்பயனிருந்தவாவென்னாச்
சென்றிறைஞ்சினன்றிரைக்கடல்கடந்தசேவடிமேல். (உஉ)

* தம்பியைத்துணைத்தாழ்நடக்கைகளாலெடுத்து
வம்புசேர்மணிமால்வரைமார்புறவணைத்துப்
பம்புசெந்தழற்கானிடைப்பதம்மலர்சிவப்ப
வெம்பிநீதனிநடந்தவாறென்கொலென்றிசைத்தான். (௨௩)

* தாயத்தாரும்வெவ்வஞ்சனைச்சகுனியுங்கூடி
மாயத்தாலொருகவறுகொண்டெங்கண்மண்கொண்டு
நேயத்தானெடுங்கானகநேர்ந்தனரென்றான்
சீயத்தாலரசிழந்திடுஞ்சிம்புளேறனையான். (௨௪)

* திகந்தமெட்டினுந்தன்மணமொல்லெனச்செல்லச்
சுகந்தபுட்பமொன்றியாமுறைவனத்தினிற்றோன்றத்
தகைந்தவப்புதுமலர்தனைத்தழன்மகள்காணு
வகைந்தவித்துணைமலரெனக்கருளுதியென்றாள். (௨௫)

* ஆதலாலிவண்யானுமின்றணுகினனென்று
நீதியாலுயர்தம்முனைநெடுந்தகைபோற்றக்
கோதிலாதவக்குரிசிலுங்குமரனைநோக்கித்
தீதிலாயிதுகேட்கெனச்செப்புவன்மாதோ. (௨௬)

* அருநிதிக்கிழவன்றனதளகைமாநகரின்
மருமிகுத்தநீண்மஞ்சனவாவியின்கரையிற்
றருமலர்ப்பெருஞ்சோலையிற்றங்குமம்மலர்சென்
றுரிமையுற்றதுகோடன்மற்றும்பர்க்குமரிதால். (௨௭)

* ஈறிலாவிகலரக்கரோடியக்கர்தங்காவல்
கூறும்வாசகம்பொய்ப்பவர்கூர்தவமுயலும்
பேறிலாதவர்பேரருளிலாதவர்பிறிது
மாறிலாதவர்தமக்குமங்கணுகுதலரிதால். (௨௮)

* அறிவும்வாய்மையுந்தூய்மையுமன்புமின்னருளும்
பொறையுஞானமுங்கல்வியும்புரிபெருந்தவமு
நெறியுமானமும்வீரமுநின்னவாதலினால்
பெறவுனக்கரிதாயதேதென்றனன்பெரியோன். (௨௯)

* முன்னவன்புகலுறுதிகூர்மொழியெலாங்கேட்டுப்
பின்னவன்றொழுதிவையிவைபேசினன்பின்னு
மன்னர்மன்னவனறமுண்டுமறமுண்டுவழக்கே
யுன்னிலுன்னருளுண்டுதிண்டோளுரமுண்டால். (௩௰)

* தேவர்காக்கினுந்தயித்தியர்காக்கினுஞ்சிறந்த
மூவர்காக்கினுமுறைமுறைமொழிந்தமூவுலகில்
யாவர்காக்கினுமிக்கணத்தியக்கரூரெய்திக்
காவின்மேற்பயில்கடிமலர்கவருவேனென்றான். (௩௧)

* ஆண்டவன்புகலுறுதியுமாண்மையுங்கேட்டு
நீண்டதோள்வயமாருதிநெடிதுவந்தருளி
பாண்டவன்றனைப்பண்புறப்பரிவினானோக்கி
வேண்டுநல்வரம்வேண்டுகவீண்டைநீயென்றான். (௩௨)

* நெடியகானகநீங்கியானெறியினேரலரைக்
கடியவெஞ்செருப்புரிபெருங்குருதிவெங்களத்தி
லடிகளாங்கெழுந்தருளிவந்தருச்சுனன்றடந்தேர்க்
கொடியின்மீதுநின்றுவந்துகூத்தாடுதிரென்றான். (௩௩)

* நீட்டுமவ்வரமவனுக்குநேர்ந்தனனனுமான்
மீட்டுநல்வரமொன்றுமுன்வேண்டினன்வீம
னீட்டுமாநிதியிலங்கைதீயிட்டநாளிசைந்த
மோட்டுருத்தனைக்காட்டுகென்றிறைஞ்சினன்முதல்வன். (௩௪)

வேறு.

என்றடல்வீமனிசைத்திடுமுன்ன
மொன்றியிவ்வேழுலகங்களுமொன்று
வன்றுளதாள்புனைவாமனனைப்போ
னின்றுநிமிர்ந்தனனித்தமுமுள்ளான். (௩௫)

* படியினதெல்லைபதத்தினதெல்லை
மடியினதெல்லையவ்வானினதெல்லை
யடியினதெல்லையளப்பரிதென்றான்
முடியினதெல்லைமொழிந்திடலாமோ. (௩௬)

* அந்தரமெங்குமடக்கியமெய்யிற்
சுந்தரவாலதிசுற்றியதோற்ற
முந்தியநீளுடல்வாசுகிமுன்னாண்
மந்தரவெற்பைவளைத்ததுமானும். (௩௭)

* நீளகல்வானநெருங்கமருங்கே
தோள்புறம்வாலதிசூழ்தரநிற்போ
னாளொடுதாரகைஞாயிறுமுதலாங்
கோளணிசூழ்வருகுன்றமுமொத்தான். (௩௮)

* இவ்வகைமுன்னமிலங்கையெரித்தான்
பைவருநாகர்பணஞ்சுழியத்திண்
மெய்வகைகொண்டதுகண்டுவியந்தார்
மைவகைசேரகல்வானவரெல்லாம். (௩௯)

* மேலளவாதுவிளங்கியசொன்மெய்ந்
நூலளவாகியநுண்ணறிவோர்போன்
மாலளவன்றிவணங்குதலில்லான்
காலளவல்லதுகண்டிலன்வீமன். (௪௦)

* அருக்கனின்மும்மடியாரொளிவீசு
முருக்கிளர்மேனியையூடறநோக்கா
வெருக்கொடுதாண்மிசைவீழ்ந்தனன்மீண்டுஞ்
சுருக்குகவென்றுதுதித்தனன்வீமன். (சுக)

அந்தமுமாதியுமற்றவருக்கஞ்
செந்தமிழ்செய்துதிரட்டினரைப்போ
லந்தரவானுமகண்டமுமொன்று
யுந்தியமேனியொடுக்கினனம்மா. (சுஉ)

* இந்திரசாலமியற்றினரைப்போன்
மைந்தொடுதொல்லையில்வடிவுகொள்பொழுதத்
தந்தமிலாயடியேன்பிழையெல்லாம்
புந்தியுறுதுபொறுத்தருளென்றான். (சுங)

* திருவடிதன்னிருசேவடியிற்போய்
மருவடிதார்புனைமாருதிதொழவே
யருவடிவாகியகண்டமுமெங்கு
மொருவடிவானவனுற்றுரைசெய்வான். (சுச)

* உன்னருகேபயிலும்பியரோடு
மின்னருகேபயில்வேந்தொடும்வாழ்வுற்
றென்னருகேவருகென்றனனென்றுந்
தன்னருகேதமுறுததவத்தோன். (சுரு)

* அங்கவனம்மொழிகூறலுமையா
வெங்கணுநின்னுயரின்னருளுண்டே
பங்கயமாநிதிவாழ்பதியெய்தச்
சங்கையினன்னெறிசாற்றுகவென்றான். (சுசு)

* என்றலுமிந்தவனத்தினதெல்லை
யொன்றியயோசனையோரிருநூறு
சென்றபின்யோசனைசிற்சிலசென்றால்
மன்றன்மலர்ப்பொழில்வாவியின்மன்னும். (சுஎ)

* அப்பொழில்காவலரக்கரநேக
ரெப்பொழிலுந்திறைகொள்ளுமெயிற்றார்
துப்புடனேயவராவிதொலைத்தாற்
செப்பியமாமலர்சென்றுறலாகும். (சுஅ)

* அல்லதுநீடளகாபதிதானு
மெல்லியலும்பொழின்மேவியபோது
நல்லுறவாகிநயத்தொடுசென்றால்
மல்லன்மலர்த்தருவோடுவழங்கும். (சுகூ)

* உறுதியுமொன்னலருக்கமுமேகு
நெறியினதெல்லையினீர்மையுநெறியிற்
குறிகளுமியாவையுமன்பொடுகூறி
யறிவுடையான்விடையன்பொடளித்தான். (௫௦)

* மொய்ம்புடைமாருதிதாளிணைமுன்று
வெம்பியகானிடைமேவியபயனிங்
கெம்பெருமானுனையெய்தினனென்று
நம்பியுநாழிகையொன்றினடந்தான். (௫௧)

* அக்கணமாசுவிறுசுகன்மைந்தன்
மிக்குயர்விஞ்சையர்நாட்டிடைவிட்டுத்
திக்குறைநாகர்திரண்டுதுதிக்குஞ்
சக்கரநாகமதன்புடைசார்ந்தான். (௫௨)

* தவாமறைவாணர்தவம்புரியுந்தண்
கவானுடைநீள்குகரத்துயர்கலைசே
ருவாமதிசூழ்வருமோங்கலொடொக்குந்
திவாகரமால்வரைசேர்ந்திடுமெல்லை. (௫௩)

* அஞ்சனமேகமொடாலமளாவி
வஞ்சனைகொண்டுவகுத்தனமெய்யான்
குஞ்சிகள்வானினிடைக்கொடியோடிச்
செஞ்சுடர்காறருகின்றசிரத்தான். (௫௪)

* குளிர்வரையொன்றியுநீள்குகரம்போ
லளவில்பெரும்பகுவாயதின்மதியின்
பிளவெனலாவளையும்பிறழுந்தண்
ணிளநிலவென்னவிலங்குமெயிற்றுன். (௫௫)

* ஆறிருகாதமகன்றுயர்தோளா
னூற்றிருகாதநொடிக்குணடப்பா
னேறுடையான்முதலானவரேனு
மாறெறுடுகாதிமலைந்திடவல்லான். (௫௬)

* எண்டிசையுந்திறைகொண்டிகலோடும்
புண்டரிகப்பெயர்நாடுபொறித்தோன்
றிண்டிறன்மாருதிசேய்வருவானைக்
கண்டனனங்கழல்கான்றிடுகண்ணுன். (௫௭)

* உருத்துமுகிற்குலமுருமுடன்மட்கச்
சிரித்திதழ்கவ்வியெயிற்றிணைதின்றுங்
கரித்துவசன்றனைநோக்கியரக்கன்
கருத்துடனின்றிவைகட்டுரைசெய்வான். (௫௮)

* யானுறைகானகமென்றிமையோருந்
தானவர்தாமுமிதற்கிடைசாரார்
மானுடனீயிவண்வந்ததுசுவையா
மூனிடவோவிஃதுரைத்திடுகென்றான். (ருகூ)

* வென்றியரக்கன்விளம்புதல்கேளாக்
குன்றனதோள்கள்குலுங்கநகைத்தாங்
குன்றனதாவியுமுண்டிடவந்தே
னென்றனன்முன்னமிடிம்பனைவென்றோன். (சுo)

* மற்றதுகூறமறத்தொடரக்க
னுற்றெதிரோடியுறுக்கியபோதக்
கொற்றவனுங்கதைகொண்டுடன்மண்டிப்
பற்றினன்வந்தவனுவிபறிப்பான். (சுக)

* குன்றொடுகுன்றமர்கூடுவதேபோ
னின்றுநெடும்பொழுதாகமலைந்தும்
வன்றிறலுந்தமவாகுவின்வலியு
மொன்றுமிளைத்திலரொத்தவுரத்தார். (சுஉ)

* எல்லையிலாவமரிங்கிவரிவ்வா
றெல்லையின்மோதியுடன்றிடுபோழ்திற்
றெல்லையிலோர்முனிசொல்லியசாபம்
மல்லலருபிவழங்கியதன்றே. (சுரு)

* ஒன்றினுமாவியுனக்கிவனொல்கான்
றுன்றிடுதோண்மிசைதோமரமேவிக்
கொன்றிடுவாயினிவாயுகுமாரா
வென்றதுவானினிடத்தசரீரி. (சுச)

* அங்கசரீரியரற்றியசாபஞ்
சங்கையுறுதசமீரணிகேட்டுப்
பங்கயநாமநிசாசரபதிதன்
றுங்கவயப்புயமேற்கதைதொட்டான். (சுரு)

* தொட்டகொடுங்கதைதோளுறுமுன்னர்ப்
பட்டுளநொந்துபதைத்தடல்வஞ்சன்
வட்டநெடுங்கடலூடுமருத்தன்
றிட்டபெருங்கிரியென்னவிழுந்தான். (சுசு)

வேறு.

* ஏற்றத்தோடிகலியிவ்வாறிடைவழியதனில்வந்து
சீற்றத்தோடெதிர்ந்தவெம்போர்த்திண்டிறலரக்கன்றன்னைப்
பாற்றுக்கும்பகுவாய்ப்பேய்க்கும்பருந்துக்கும்வருந்துகின்ற
கூற்றுக்கும்விருந்துசெய்தக்கொற்றவேற்குறிசில்போனான். (சுஎ)

* எண்டிசையமரர்போற்றுமிந்துமால்வரைசென்றெய்திப்
புண்டரீகன்றனுடும்பொருக்கெனநெருக்கியப்பாற்
றெண்டிரையளித்ததெய்வச்செல்வமாநிதிகளோங்கு
மண்டர்மாநகருமொவ்வாவளகைமாநகரங்கண்டான். (சுஅ)

* அந்தமாநகரின்றென்பாலகல்விசும்புறநின்றோங்கும்
விந்தமாமென்னநின்றுவிளங்குதோள்வீமசேனன்
முந்தமாருதிநண்போடுமொழிவழியெய்தியந்தக்
கந்தவான்பொழிலுநன்னீர்க்கடிமலர்த்தடமுங்கண்டான். (சுகூ)

* ஆயிடைக்குறுகுமெல்லையப்பொழிலுறப்பிற்காப்போர்
சேயிடைப்பரந்தமார்பர்சேணிடைக்கடந்ததோளர்
வாயிடைப்பிறைகளென்னவளைந்தவாளெயிற்றர்வஞ்சத்
தீயிடைச்சோரிதோய்ந்துதிரண்டெனச்சுழல்செங்கண்ணர். (எ0)

* சூழிருட்பிழம்புநஞ்சுதோய்ந்தன்னதுவக்கருன்னி
ஞாழிகையொன்றினெல்லாவுலகையுநலியுமீட்டார்
வாழிமந்தரமத்தாகவாசுகிக்கயிறுன்மாயோ
ஞாழிநீர்கடைந்தநாளுமமுதெழக்கடைந்தவீரர். (எக)

* மறத்தொடுவஞ்சமானநண்பெனவளர்த்துநாளு
மறத்தொடுபகைக்குநெஞ்சர்பிலத்தினுமகன்றவாயர்
புறத்தினின்முகத்தர்மார்பிற்புழைமுழைமூக்கரின்ன
திறத்தினர்குஞ்சிச்செந்தீச்சிரத்தினர்வரத்தின்மிக்கோர். (எஉ)

* கரங்களாயிரத்தர்நண்ணுங்கால்களாயிரத்தர்குஞ்சிச்
சிரங்களாயிரத்தர்பூழைச்செவிகளாயிரத்தர்வென்றி
யுரங்களாயிரத்தருழிதவமுயன்றுரிமைபெற்ற
வரங்களாயிரத்தர்மிக்கமறைகளாயிரத்தர்மன்னோ. (எ௩)

* வைத்தாரைவாளம்வில்வேன்மழுவெழுத்திகிரிசூலங்
கைத்தாரைபடக்கொண்டென்றுங்கண்ணிமையாதுகாப்போர்
மைத்தாரைமாரியொப்பார்மானுடனாற்றங்கேட்டு
மொய்த்தாரக்கடவுள்வாசமொய்ம்மலர்ச்சோலையெல்லாம். (எச)

* மண்டியெங்கெங்குமேன்மேன்மறிகடன்முகக்குநீலக்
கொண்டலிற்குமுறியார்த்துக்குறுகியகொடியநீசர்
சண்டவேகத்தினெய்துஞ்சதாகதிதனயன்றன்னைக்
கண்டனர்சூலபாசகாலனைக்கண்டதன்னார். (எரு)

* எற்றவென்பாருஞ்சூலத்தெறியவென்பாருமெய்திப்
பற்றவென்பாருமாவிபறிக்கவென்பாருமியாக்கை
சுற்றவென்பாருஞ்சென்னிதுணிக்கவென்பாருமாகி
யுற்றனரரக்கர்நூறுயிரருத்துரைக்கலுற்றார். (எசு)

* இந்திரன்முதலாவுள்ளவிமையவர்தாமுமிந்தக்
கந்தவான்சோலைகண்ணேநோக்கவுங்கருதினைவார்
வந்ததென்மதியிலாதமானுடாவுன்றனுவி
சிந்துமுன்செப்புகென்றுத்தெழித்தனர்தீயோரெல்லாம். (எஎ)

* அருளிலாவரக்கரிவ்வாறகங்கரித்தரற்றுமிந்தப்
பொருளிலாவுரைகட்கெல்லாமுத்தரம்புகலானாகி
யிருளிலாமுத்தமன்னவெயிற்றரும்பிலங்கநக்கான்
றெருளிலாமதனைமுன்னமெரித்திடுஞ்சிவனைப்போல்வான். (எஅ)

* தனிதமேகம்போலார்க்குநுமதுயிர்சரத்திற்சாய்த்திப்
புனிதவான்பொழிலில்வாசப்புதுமலர்கொய்யவந்தேன்
குனிதவர்கொண்டுமுன்னுங்குலங்கரிசறுத்தவீரன்
மனிதனோவானுளானோமறந்திரோவஞ்சரென்றான். (எகூ)

* மாவிந்தமனையபொற்றேண்மாருதிவாய்மைகேட்டுப்
பூவிந்தவனத்தினீயோபறித்தியென்றழன்றுபொங்கி
நாவிந்தவுரைதந்தின்னுமிருப்பதோநரனுக்கென்றுக்
கோவிந்தனெடுத்தகுன்றிற்கொண்டலின்குழாத்திற்சூழ்ந்தார். (அ0)

* வானகமறையவீசிவான்படைக்கலன்கள்வால
சேனனேமுதலாவுள்ளசேனையின்றலைவரார்த்தார்
கானுடைத்தொடையலானுங்காலனுக்காவியன்ன
தானுடைத்தலைமேந்திப்புகுந்தனன்சலிப்பிலாதான். (அக)

* தண்டினுலவர்கள்விட்டபடையெலாந்தகர்த்துமீள
மண்டினூழுழைகண்டவாளுகிர்மடங்கலொப்பான்
மிண்டினுருடலமியாவுமெய்தலைதம்மினொன்றக்
கிண்டினன்மூளைச்சேற்றிற்கிடத்தினன்படுத்திமன்னே. (அஉ)

* தாக்கினன்சிலரைத்தண்டாற்றடக்கையாற்சிலரைவானிற்
றாக்கினன்கறங்கிநின்றுசுழற்றினன்சிலரையெற்றி
நூக்கினன்சிலரைத்தாளானெறுக்கினன்சிலரைவாளால்
வீக்கினன்சிலரையாவிவேறிட்டான்சிலரைவீமன். (அங)

* பிடித்தனன்சிலரையள்ளிப்பிசைந்தனன்சிலரைமண்ணி
லடித்தனன்சிலரையங்கமகற்றினன்சிலரையெண்ண
முடித்தனன்சிலரைப்போகமுகிழ்த்தனன்சிலரைக்கண்ட
மொடித்தனன்சிலரையஞ்சவுறுக்கினன்சிலரைமன்னே. (அச)

* கரக்கழுந்ததனினானுங்கனவரைத்தோளினானும்
வரக்கொடுங்கதையினானுமராமரப்பணையினானு
முரக்கடுங்காலினானுமொருக்கினனுரைப்பதென்னே
வரக்கரையென்றாற்பின்னைவிடுங்கொலோவனுமன்பின்னோன். (அரு)

* இப்படியெதிர்ந்தசேனையாவையுமிமைக்குமுன்னந்
துப்புடன்றொலைத்துவாயுசுதனின்றவுறுதிநோக்கி
மைப்படிவரைகள்போல்வார்வாளெயிற்றரக்கர்பின்னுங்
கைப்படைகொண்டுநூறுயிரரொருகணத்திற்சூழ்ந்தார். (அசு)

* அவர்வெகுண்டழன்றுமேன்மேலலைகடல்போலவார்த்துப்
பவர்கொண்டபனகமென்னச்சூழ்வரும்பரிசுபாராக்
கவர்கொண்டதொடையலானுங்கதையொழிந்திலங்குசெங்கைத்
தவர்கொண்டுநெடுநாணண்டந்தகர்தரத்தழங்கவார்த்தான். (அஎ)

* அன்னநாணொதையெங்குமண்டமும்பொதுளத்தாக்க
மன்னுநாகங்களெட்டுமதம்புலர்ந்துயங்கிவீழத்
துன்னும்வாய்நஞ்சுகக்கிச்சுழன்றுமண்சுமக்குங்கொற்றப்
பன்னகாதிபனுமுள்ளம்பதைத்துவெம்படங்கள்சோர்ந்தான். (அஅ)

* உரம்படச்சரங்கண்மேன்மேலுறுக்கிவேல்வீமனுந்தச்
சிரங்களிற்றோளின்மார்பிற்கண்களிற்செருகச்சென்று
கரன்படைக்குழாத்துமுன்னங்காகுத்தன்கதிர்கொள்கூர்வாய்ச்
சரம்படத்தளர்ந்ததென்னத்தளர்ந்ததத்தளர்வில்சேனை. (அகூ)

* சக்கரஞ்சூலம்பாசந்தண்டம்வேல்கப்பணம்வாண்
முற்கரங்கணையம்விட்டேறெழுக்கொழுமுசுண்டிகுந்த
மெக்கரங்களினுமேந்தியாவருமிவன்மேலேவி
யக்கணந்தன்னின்மீண்டுமகங்கரித்தார்த்தகாலை. (கூ௦)

* அப்படைத்தொகைகளெல்லாமறுத்தறுத்தவர்கடத்த
மெய்ப்படச்சரங்கள்சிந்திச்சிரங்கள்வெவ்வேறதாக்கி
யிப்படிக்கரக்கர்சேனையாவையுந்துணித்துமீண்டுஞ்
செப்படிப்பவரினின்றுசிரித்தனன்சிங்கம்போல்வான். (கூக)

வேறு.

* அந்தவயப்படையவ்வாறுதல்கண்டு
கந்தமலர்ப்பொழில்காக்குங்காவலாளர்
புந்திமயக்குறநொந்துபுகுந்தவெல்லா
முந்தியியக்கர்பிரானுக்கோதிமொழிந்தார். (கூ௨)

எம்பெருமானிதுகேட்டியென்றிறைஞ்சி
வம்பவிழ்சோலையிடத்தோர்மனிதன்வந்து
பம்பியசேனையிடத்தேழ்மசமும்பாயு
மும்பலின்வர்விபுகுந்துழக்குகின்றான். (கூ௩)

* என்றவர்வாய்மைபுதைத்திசைத்தல்கேட்டுக்
குன்றுடனொன்றுபுயங்குலுங்கநக்குக்
கன்றியசிந்தையனங்கிகால்செங்கண்ணு
னொன்றியமங்குலினீடுருத்துரைத்தான். (கூ௪)

* தன்றுணைநின்றசங்கோடணனைநோக்கி
வன்றியல்கூரடல்வேகமனிதன்றன்னைச்
சென்றவனுவிசெருத்தல்செய்யாதின்னே
துன்றுபுயங்கடுவக்கியெய்தச்சொன்னான். (௯௫)

* அந்தவியக்கர்பிரானுமக்கணத்தில்
வந்துநிதிக்கிழவன்றன்பாதமன்னித்
துந்துபிகொட்டவளப்பில்சேனைசூழ
வுந்தியிமைப்பின்மலர்த்தண்சோலையுற்றான். (௯௬)

* மன்னுகுருக்கள்குலத்துமன்னர்மன்னன்
றன்னையியக்கர்குலத்திலெண்ணுந்தலைவர்
துன்னுபடைக்கடலோடும்பொங்கிச்சூழ்ந்தார்
மின்னிமுழக்கியிடிக்குமேகம்போல்வார். (௯௭)

* மானவரக்கர்குலத்தைவானிலேற்றி
யூனுடைரத்தமுருக்குஞ்சோலையூடே
தானைவளைத்திடநின்றசாபவீரன்
யானையினங்கள்வளைக்கும்யாளிபோன்றான். (௯௮)

* விண்ணிலியக்கர்படைக்கலன்கள்வீசி
எண்ணிலர்சுற்றும்வளைத்தெதிர்ந்தபோதில்
வண்ணவரிச்சிலைகோலிவாயுமைந்தன்
றுண்ணெனவுட்கவடிச்சரங்கடொட்டான். (௯௯)

* தொட்டசரங்கடுளைத்துமார்புந்தோளு
முட்டவிசும்பினதெல்லையெங்குமூடப்
பட்டதொழிந்துபடாதசேனையெல்லாங்
கெட்டனபட்டதுரைக்கவுண்டோகேட்கின். (௧௦௦)

* மன்னளகாபதிசேனாநாதன்மார்பிற்
றன்னடையாளமுறத்தண்டாலேதாக்க
மின்னிடைநாகம்வெருக்கொண்டென்னமீண்டான்
றன்னெதிர்வீரரிலாதசங்கோடணன்றான். (௧௦௧)

* கருத்தொடுசென்றளகேசன்பாதகமலஞ்
சிரத்தினில்வைத்திவைநின்றுசெப்பலுற்று
னுருத்திரன்மானுடவுருவங்கொண்டதன்றேல்
வரத்திவன்மானுடனல்லன்மன்னவென்றே. (௧௦௨)

* பண்புடனிக்கணம்வேண்டுநிதிகள்பலவு
நண்பொடவர்க்கெதிர்சென்றுநல்காயென்னின்
விண்புகுமிப்புரம்வேந்தவென்றான்மெய்யிற்
புண்புகவுட்கியுளைக்கும்வேழம்போல்வான். (௧௦௩)

* கோதிலியக்கனியாவுங்கூறக்கேட்டுத்
தாதையுருத்திரசேனன் றன்னைநோக்கி
மாதர்மலர்ப்பொழிலூடுவந்தமனித்த
னேதிலருத்தியனென்னக்கேட்டியென்றான். (க0ச)

* தந்தையுரைத்தருள்வாய்மைதலைமேற்கொள்ளா
மைந்தனுமப்பொழிலூடுசென்றுமன்னிச்
சிந்தியரக்கர்சிரங்கள்குன்றஞ்செய்து
கந்தனினிற்குமறத்தினனைக்கண்டான். (க0ரு)

* கண்டுமருத்தருள்காளைதன்னைநோக்கி
வண்டுமிடைப்பயிலாதகாவில்வந்து
மிண்டுமரக்கர்குலத்தைவீணேயாவி
கொண்டுபடுத்தனையார்நீகூறுகென்றான். (க0சு)

* நின்னளகாபதிமைந்தர்சாபநீக்க
முன்மருதூடுதவழ்ந்தவாகைமொய்ம்பற்
கின்னருண்மைத்துனன்மண்ணில்யாரும்போற்று
மன்னவன்வீமன்மருத்தின்மைந்தனென்றான். (க0எ)

* மாயவனற்புதனுதன்கண்ணன்வையந்
தாயவன்மைத்துனனுகினையதனிநீ
யேயவனத்தினில்வந்ததென்கொலென்றான்
றாயவனுற்றனயாவுந்தோன்றச்சொன்னான். (க0அ)

* மற்றவனவ்வுரைகூறமகிழ்வோடந்தண்
பொற்றருநண்பின்வழங்கிப்போகென்றருளி
வெற்றியுருத்திரசேனன்மீண்டுவந்தாங்
குற்றதுதாதைதனக்குரைத்திருந்தான். (க0கூ)

வேறு.

* அண்ணாற்றருப்பெற்றபின்னந்தவயமீளியக்காவினிற்
றண்ணித்திலப்பொய்கைபடிவுற்றின்னமுதன்னதண்ணீர்குடித்
தெண்ணற்றகமுதாடலதுகண்டிருந்தங்கிளைப்பாறினன்
மண்ணுக்கும்விண்ணுக்குமறலிக்குமுறவானவடிவாளினன். (கக0)

* இவ்வாறிவன்செய்கையிவன்வந்ததறியாமலெழில்கூர்வனத்
தவ்வாறுபயில்கின்றவருள்வாரிதானுற்றவதுகூறுவாங்
கைவார்கதைக்காளையைக்கண்ணுறச்சூழல்காணுதுமுன்
செவ்வாய்மடப்பாவைநின்றாளைநீகூறெனச்செப்பினான். (கக௧)

* வானின்றுமலரொன்றுதன்முன்புமின்போலவந்துற்றதுந்
தானின்றிம்மலர்போலமலர்தேடிநீயின்றுதருகென்றதுந்
தேனின்றதொடையானுமளகேசனகர்மீதுதனிசென்றதுங்
கானின்றகுழலாளுமன்னற்குமுன்கட்டுரைத்தாளரோ. (ககஉ)

* கருமத்தின்வடிவானமடமங்கையிவ்வாறுகழறுதமு
னுருமுத்துவசன்மைந்தன்முன்போகவன்போடுமுளனொந்துளான்
மருமத்துவேலைறத்தபுண்மீதுகனலுற்றதெனமாழ்கினன்
றருமத்தினுருவாகியெழுபாருநிலையிட்டதனியாண்மையான். (௧௧௩)

* வாளிப்பரித்தேர்மனிவ்வாறுதுயரெய்திமனனஞ்செயக்
கூளிக்குழாம்வானின்மிசையுய்த்ததெனனற்கொடித்தேரின்மேற்
காளக்கருங்கொண்டல்போல்வந்துவீமன்றருங்காலைமுன்
னளிப்பெருங்கொற்றவெற்றித்திருத்தாதையடிமன்னினன். (௧௧௪)

* மின்றுரைபடவெண்ணிலாவீசுமேகங்கொலெனவந்தமு
னின்றானைமுகநோக்கிநீதிக்கொர்வடிவாமன்னிவைகூறுவா
னுன்றுதைதமியேனுடையவாமலொருவாசமலர்கொண்டிடச்
சென்றனெனச்சிந்தைநொந்தன்புடன்பின்னுமிவைசெப்புவான். (௧௧௫)

* எம்பிக்கொரிடையூறுவந்தெய்துமுன்யாமியக்கேசனூர்
வம்புற்றமலர்வாவிசென்றெய்திவிரைவோடுவருவோமெனு
வெம்புற்றபைங்கானினிடைமின்னுமிளையோருமுடன்மேவவே
கம்பிக்குநெஞ்சோடவன்றேரின்மீதக்கணத்தேறினன். (௧௧௬)

* கரக்கும்பகம்பக்கடாயானைமன்னன்கருத்தோடுசென்
றரக்கன்றடந்தேரிலவனோடுநீடந்தரத்தேகினன்
பரக்கும்பெரும்புண்ணியமும்பாவமுந்தாவில்பகிரண்டமும்
புரக்கும்பரஞ்சோதியும்பொங்குமாமாயையும்போலவே. (௧௧௭)

* கானெல்லைசெல்லாதுகதிரோனெடுந்தேரெனக்கங்கைசேர்
வானெல்லையுறவோடியொருநாலுகடிகைக்குள்வயமன்னுதே
ரூனெல்லையில்லாதுபுகமண்டமிகமண்டுமுதிரத்துடன்
றேனெல்லையில்லாதுகுக்கும்பெருஞ்சூழல்சென்றுற்றதே. (௧௧௮)

* ஆனைக்குழாஞாறுமரியேறெனப்பொங்கியளகேசன்வெஞ்
சேனைக்குழாநூறியதனூடுபயில்வாயுசிறுவன்றனைத்
தானைப்பெருங்கொற்றமன்கண்டுதானுற்றதளர்வாறினு
னேனைத்திருத்தாதையைக்கண்டுதேர்நின்றிழிந்தின்புறா. (௧௧௯)

* மைக்காளமுகிலன்னமகனுந்தன்னடிமன்னவயவீமனுங்
கைக்கானினறைவாசமலர்கொண்டறன்காலைகழனல்கியே
முக்காலும்வலம்வந்துமுறையோடுதொழுவானைமுகநோக்கிநின்
றெக்காலுநாவந்ததிசையாதவிசையோனுமிவைகூறுவான். (௧௨௦)

* என்னேவலாலன்றியிமையோருமெய்தாதவிக்காவினீ
யின்னேவலால்வந்துவிரகாகவினைசெய்தவிதுமேன்மையோ
வுன்னேவல்புரிவாருமுளரும்பிமாரென்றுருத்தானரோ
தன்னேவலாலிந்தவுலகேழும்வலம்வந்ததனியாழியான். (௧௨௧)

* என்றிந்தவுரைகூறிமுனிவாறியிறையோனுமிகலோனுடன்
சென்றந்தண்மலர்வாவிபடிவுற்றுவாசத்திருத்தார்புனைந்
தன்றந்தவிடம்விட்டிமைப்போதிலத்தேரின்மிசையேறியே
மின்றந்தவிடையாளுமிளையோருமுறைகானினிடைமேவினான். (கஉஉ)

* மேவிப்பெருந்தெய்வமுனிபாதமலர்சென்னிமிசைவைத்துமென்
காவிக்கயற்கண்ணிணைச்சேயிதிழ்ப்பாவைகளிகூரவே
வாவிச்செழுந்தாமமலர்நல்கியொல்காதுவலிகூருநல்
லாவிக்கின்னமுதானநிருதற்குவிடையன்றளித்தானரோ. (கஉக)

வேறு.

* மின்புரைமருங்குன்மின்னும்வேந்தருமந்தக்கானி
லன்புடைமுனிவன்கூறவவன்மலர்ப்பாதம்போற்றித்
துன்பமுந்துனியுமாறிநாடொறுந்தோகைபாகன்
றன்பெருங்கதையுங்கேட்டுத்தங்கினரென்பமன்னோ. (கஉச)

வீமராசன்மந்தாரமலர்கொணர்ந்தசருக்கமுற்றிற்று.

ஆகசெய்யுள்-கசுசக.

---

## சடாசுரன்வதைச்சருக்கம்.

---

* அழுதும்வாண்முறுவலரும்பியுங்களித்துமாடியும்பாடியுமகிழ்ந்துந்
தொழுதுமாதரித்தும்விழுந்துமேலெழுந்துந்துதித்திடத்தன்பதந்தான்
முழுதுமாயெங்குமுச்சுடராகிமூலமாய்ஞாலமாய்விண்ணா
யெழுதொணுமறைக்குமெட்டொணுவடிவத்தெம்பிரானும்பர்நாயகனே. (க)

* இந்தநீள்வனத்தின்மன்னவரிவ்வாறின்பமுற்றிருந்தவந்நாளி
லந்தமாவனத்தின்சூழலிற்பயிலுமருந்தவமுனிவரர்பலருந்
தந்திபேருழுவையாளியெண்கிவற்றாற்றுமிடருழந்துமெய்தளர்ந்து
வந்துமாமகிபர்க்கபயமென்றவர்வாழ்வனத்திடைப்புகுந்துமன்னினரால். (உ)

* அருந்தவமுனிவரெனைப்பலரிவ்வாறபயமென்றழுங்குசொற்கேட்டுப்
பெருந்திறலரசனவர்பதம்வணங்கிப்பேசுகநுங்குறையென்னப்
பொருந்தியகொடியவிலங்கினுற்றமக்குப்புகுந்துளயாவையும்புகன்றே
வருந்தியதுயரந்தவிர்த்திநீயென்றார்மன்னனுமக்குறைநேர்ந்தான். (க)

* மறத்துடன்றொழுதுவணங்கிமுன்னின்றவாயுவின்மதலையைநோக்கித்
திறத்தகுமுனிவரிடுக்கணீயையசென்றுதீர்த்திடுகவென்றேவி
பறத்தினதருவாயகண்டமும்புரக்குமரசனுங்கிருந்துழிவந்து
புறத்தொருநிருதன்புகுந்தவஞ்சனையும்புரிந்ததும்புகலலாமளவோ. (ச)

* தோளிரண்டினுநாடொறுமிரண்டந்தண்சுரும்பினைவிரும்பினன்சுமந்து
தாளிரண்டுடையதொருகருங்குன்றஞ்சரிப்பபோலகண்டமுஞ்சரிப்பான்
கோளிரண்டஞ்சிப்பிறையிரண்டகல்வான்குகையிடைப்புகுவதேபோல
வாளிரண்டன்னவெயிறிரண்டொளிகூர்வாணிலாவழங்கியவாயான். (௫)

* முருக்கினுண்மலருங்கறுத்திடச்சிவக்குமொய்யழல்பெய்செழுங்கண்ண
னரக்கினுலுருக்கிக்கம்பிசெய்தென்னவவிர்பொலங்குஞ்சியன்வஞ்சத்
திருக்கினுலறங்கள்யாவையுஞ்செகுக்குந்தீயவன்றீமையேபுரிந்து
தருக்கினுலமரர்யாரையுஞ்செகுக்குஞ்சடாசுரனெனும்பெயர்ச்சழக்கன். (௬)

* அந்தணர்வடிவங்கொண்டிலங்கையில்வாழாதிவாளரக்கனைப்போலச்
செந்தழலலித்தம்டமயிலிருந்தசிறப்பவண்சாலையினெய்திக்
கொந்தவிழலங்கற்கொற்றவரறியாவகையொருகோண்மறைபிதற்றிப்
பைந்தொடிதனைக்கொண்டந்தரந்தன்னிற்பறந்தனன்பழியுணராதான். (௭)

* அபயமென்றவளந்தரத்தின்மீதரற்றுமவ்வுரைகேட்டுமாத்திரிதன்
னுபயமைந்தரும்வார்சிலைகரத்தேந்தியுருத்தெழுந்துருமெனவோடி
யிபநடுங்கிடமுன்வளைத்திடுங்கொற்றத்தியாளிபோலிருபுறஞ்சூழ்ந்து
நபமுகிலென்னமின்னெனும்பெயர்வான்றனக்கெதிர்நின்றிவைநவில்வார். (௮)

* மறையவர்வடிவங்கொண்டுவந்தருளில்வஞ்சநீவஞ்சனையாகப்
பிறர்பெருந்தாரம்வெளவியந்தரத்திற்பெயர்வதுபெருமையோபித்தா
நெறியலாநெறிசெய்துன்குலத்தொருபோர்நிருதன்முன்பட்டதுநினையாய்
முறையலாதியன்றுன்னுயிரினைமுடிக்குமுரனுடைத்தறுகண்மாமூர்க்கா. (௯)

* என்றிவ்வாறுரைத்துச்சரத்தின்மாமாரியிருவரும்விரைவுடனேவக்
கன்றிவாளரக்கன்கனமெனவதிர்ந்துகண்சிவந்துருத்தெழுமெல்லை [ளும்
யொன்றிவாழ்மறையோரருந்துயரொழித்தாங் கொருநொடிப்போழ்தினின்மீ
வென்றிவாள்வீமனுற்றதுநிருதன்வெகுள்வதும்விசும்பிடைக்கண்டான். (௧௦)

* கண்டனனிரண்டுகண்களுங்கருத்துங்கனன்றுசெந்தீச்சுடர்காலக் [ள்ள
கொண்டவெஞ்சினத்தீக்கதுவியெண்டிசையுங் குலேகுலேந்துடன்வெரூஉக்கொ
வண்டமுங்குலுங்கநகைத்தெதிர்ந்துரப்பியார்த்தழன்றுழன்றுதோள்கொட்டி
மண்டிமேனடந்தானுகாந்தகாலத்துமருத்தெனமருத்தின்மாமைந்தன். (௧௧)

* பகன்விறலிடிம்பன்பண்பில்புண்டரீகனிவருயிர்பறித்தளகேச
னகரிடையரக்கர்யாரையுஞ்சேரநல்லுயிரொல்லேயிற்செகுத்து
வகைபடமறலியுடனுறவாக்கிவானுலகளித்தனனின்ற
சிகையுனதுயிருமிக்கணத்தளிப்பன்றெேன்புலக்கிழவுனுக்கென்று. (௧௨)

* நெடும்பணைப்பொருவின்மராமரமொன்றுநெறியிடைநேர்ந்ததங்கதனைப்
பிடுங்கினன்விசும்பிலெறிந்தவன்றன்னைப்பிளந்தனன்பிளந்தவப்பொழுதி
லடும்படைத்தடக்கையரக்கனுந்திருகியணங்கைவிட்டக்கணத்தழன்று
படும்பணைக்குன்றமொன்றுவேரோடும்பறித்தவன்மேற்படவெறிந்தான். ()

* விட்டகுன்றினைத்தன்மேற்படாவண்ணம்விண்ணிடைப்பொடிபடக்கதையாற்
றெட்டனன்பின்னும்விசும்பினின்றவன்றன்றேருளிணையொசிதரத்தாவிக்

கட்டினன்குறங்கைக்குறங்கினல்வீசிக்கம்பமுற்றகிலமுங்கலங்கக்
கிட்டினன்றலத்தின்மிசையடலரக்கன்கீழ்ப்படமேற்படவீழ்ந்தான். (கச)

* முன்னம்வாளெயிற்ருேரரக்கனைவெள்ளிமால்வரைமுனிந்ததென்றதற்குப்
பொன்னின்மால்வரையோரரக்கனைத்தானும்புவிப்படுத்தரைப்பதேபோல
கன்னம்வாய்நெரியக்கரங்களான்மயக்கிக்கழுத்தையும்புறத்தினிற்றிருப்பி
துன்னுதோளிணையுந்தாளும்வன்னெஞ்சுஞ்சுளிதரத்தாளினுற்றுகைத்தான்.

* விழுந்தவாளரக்கன்றருக்குநெஞ்சொடிந்துவெருண்டிவன்றனைத்தள்ளிமீண்டு
மெழுந்துதோள்கொட்டியார்த்தழன்றுருமேறெனக்கொதித்திடதலும்வீம
னழுந்தவெவ்விரலாற்பிடித்தவனகலத்தடிகொடுமிதித்துவெண்பிறையின்
கொழுந்துபோலெயிற்ருேரிரண்டையுங்கஞ்சன்குஞ்சரமெனப்பிடுங்கினனுல். ()

* புலவுகால்வயிரவாளெயிறிரண்டுமுதலொடும்போனவாணிருத
னிலவிலானிசியுமின்னிலாவிடிகொணீலமாமுகிலையுநிகர்த்தான்
குலவுதோள்வாயுகுமரன்மேன்மீளக்கொதித்தெழுந்திருகரங்கொண்டு
மலையின்மேலுருமுற்றென்னமற்றவன்றன்மார்பகஞ்சுழிதரப்புடைத்தான். ()

* முட்டியால்வஞ்சமூர்க்கனுஞ்சமரமொய்ம்பனுமுறைமுறையாக
மட்டியேமுதலாவுள்ளமற்ருெழிலின்வல்லனவல்லனபுரிந்து
கட்டியேகுறங்குகுறங்குடன்பகைப்பக்கரங்கரத்தொடுநனிபிணங்க
வொட்டியேமுடுகியொருவருக்கொருவருரத்துடன்மோதினுருரவோர். (கஅ)

* முருக்கிவெஞ்சமரமிவ்வகைவெம்போர்மொய்ம்பனீடியர்முழந்தாளா
லரக்கனையகலத்தமுக்கியிட்டவன்றனைவையவம்யாவையுமொன்ருச்
சுருக்கியந்தரத்திற்சுழற்றினனெறிந்தான்ருெடுகழலிராகவன்தம்பி
குரக்குநாயகன்முன்விரலினுற்றெறித்தகுன்றெனச்சிந்திவீழ்ந்திடவே. (ககூ)

* எறிந்தவாளரக்கன்விசும்பினதெல்லையெவ்வளவவ்வளவும்போய்
மறிந்தமால்வரைபோன்மீளவும்புவிமேன்மாசுணநடுங்குறவீழ்ந்து
செறிந்தபேருடலுமாவியுஞ்சிந்தத்தென்புலத்திமைப்பினிற்சென்ருு
னறந்துறந்தென்றுமடாதனசெய்தாலார்கொலோபடாதனபடாதார். (உ0)

வேறு.

* வாளரவமுண்டுமிழும்வாண்மதியும்வஞ்சக்
கோளுமுழைவிகொள்ளவிடர்கொண்டுகுலைகுலையா
நாள்வலியினுய்ந்தமடநவ்வியுநிகர்த்தாள்
காளவிடமுண்டமுதடக்குமிருகண்ணாள். (உக)

* அடாதுசெய்சடாசுரனதாவியையுமம்பொற்
படாமுலைகடாமுடையபைந்தொடியையும்போய்த்
தடாவமர்விடாதுடையதம்பியரையுங்கொண்
டிடாவிறல்கொண்மாருதியிருக்கும்வனமுற்ருன். (உஉ)

சடாசுரன்வதைச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-௩கூகூ.

# மணிமாலன்வதைச்சருக்கம்.

உற்றபடிதம்முனிருதாடொழுதுரைத்தான்
மற்றவனுமங்குறையுமாமுனிவரோடுங்
கொற்றமிகுந்தம்பியரொடுங்குழுமியன்றே
நற்றபதிநாரணனதாச்சிரமநண்ணி. (க)

* அங்கவன்மலர்ப்பதம்வணங்கியருள்பெற்றுக்
கங்கைவளநாடர்கலைதேர்முனிவரோடுந்
தங்கினர்கள்சிற்சில்பகறங்கியபினப்பாற்
சிங்கமெனவெண்ணில்வரைசேர்நெறிகள்சென்றார். (உ)

* ஏணில்வரைமார்பரிமையோர்புகழுமெட்டுக்
கோணுடையமாமுனியிடங்குறுகியன்னான்
மாணுடைமலர்ப்பதம்வணங்கினர்துதித்தார்
தாணுவனையானுமிவர்தம்மையெதிர்கொண்டான். (ங)

* அன்பொடொருநாளெனவனந்தநெடுநாளங்
கின்பமொடிருந்தனர்களெக்கதையுங்கேட்டாண்
டொன்பதுகழித்தனர்களிவ்வகையொருங்கே
பின்பவணிகழ்ந்ததொருபெற்றியுரைசெய்வாம். (ச)

* அங்கிவரமர்ந்துறையுநாளிலணியோடும்
பொங்கியொருமாநதிபுதுப்புனல்வரப்போய்
மங்கைமுனிமங்கையர்கடங்களொடுமீரப்
பங்கயநெடுந்துறைவிரும்பினள்படிந்தாள். (ரு)

* அப்புனலிலார்தருமணங்கமழவந்தண்
மெய்ப்புதுமைநாண்மலர்மிதந்துவரமீதே
மைப்பதுமவாள்விழிமடந்தையதுகாணுக்
கைப்பதுமநாண்மலருறக்கடிதெடுத்தாள். (சு)

எடுத்தமலர்கைக்கொடொரிமைப்பின்மயிலன்னா
ளடுத்துவயமாருதியையம்மலரவன்கைக்
கொடுத்திம்மலரெங்குளதுகூறுகென்வமரிற்
றொடுத்தவயவாகைபுனைதோன்றலிவைசொல்வான். (எ)

* முன்புமுன்மலர்க்குழறனக்கிம்மலர்மொய்ம்பா
லன்புடனியக்கர்பதிநின்றுமருள்செய்தே
னின்புறவிமைப்பொழுதினின்றுமிதளிப்பேன்
றுன்புறழற்கடவுடந்ததொருதோகாய். (அ)

* அந்தமலரிந்திரபுரத்தெனினுமின்றுன்
னந்தமில்கருங்குழறனக்கருள்கிலேனேன்
முந்தரவுயர்த்தவன்முதற்பகைமுடிக்கு
மைந்துடையவன்றெனதுவாருகிரியென்றுன். (௯)

* என்றினையவாசகமுரைத்திகலினென்றும்
வென்றிதருதண்டுசிலைகொண்டுவிறலோடுந்
தன்றுணைவரொன்றுமுணராதபடிதானே
சென்றனனிடும்பனையடுந்திறலின்மிக்கான். (௧௦)

* குன்றமொரிரண்டிவையெனக்குலவுதோளான்
மன்றன்மலர்கொண்டுவருமாநதியின்வழியே
சென்றுபலயோசனைகடுங்களொடுநாளு
மென்றும்வலம்வந்தருளிரத்நகிரியெய்தி. (௧௧)

* மரகதவணிப்பணிசெய்மாளிகைகளொருசா
ரரிமணியழுத்தியனவாலையமதொருசா
ரெரிமணியழுத்தியனவில்லின்விதமொருசார்
தருணமணிமுத்தினிய லுஞ்சதனமொருசார். (௧௨)

* கின்னரர்பயிற்றுமெழுகீதமுறுமொருசார்
மின்னனையபாவையரும்விஞ்சையருமொருசா
ரன்னநடைமங்கையருமாரணமுமொருசார்
மன்னுமலியக்கருமடந்தையருமொருசார். (௧௩)

* சூலுடையமந்தியசைவுற்றதுயர்தீரக்
காலுண்டநெடுங்கடுவன்வார்கழைநறைத்தேன்
மாலைவரிவண்டிரியமோதிவழையிலையிற்
கோலியதன்வாயிடைகொடுத்திடுவதொருசார். (௧௪)

* கடக்கலுழிபாய்மதககதக்களிறுமந்தண்
மடப்பிடிகளுந்தமின்மணந்திடுவதொருசா
ரடர்த்தறுகுமாளியுமதிர்ந்துமுழைதோறும்
புடைத்தெதிர்மலைந்துமிகுபோர்புரிவதொருசார். (௧௫)

* தண்டரளமாதிநவரத்நவொளிதானே
யெண்டிசைவிளக்கும்வரையின்புதுமையெல்லாங்
கண்டுவகைகொண்டுநனிகண்ணிணைகளித்தான்
புண்டரிகவாணிருதனைப்பொருதழித்தான். (௧௬)

* அக்கிரியினின்றுமிழிவுற்றளவில்செல்வ
மிக்கவளகேசனகர்வெய்தின்விரைவெய்தித்
தொக்கமணிவாசலொருநாலுமொருதானே
புக்குவடமேற்றிசையினின்றிதுபுரிந்தான். (௧௭)

வேறு.

* சீர்த்தாரைகளுதிரத்திசைமருவுங்கரிசிதறக்
கார்த்தாரைகள்கற்றாரைகளுருமேறொடுகக்க
வார்த்தாழ்கடலுலையக்கதிர்மணிவெள்வளைவாய்வைத்
தார்த்தானுகவந்தத்தெழுமடமாருதமனையான். (௧௮)

* அந்தத்தமரஞ்சென்றுயரளகாபுரியுறைவோர்
சிந்தைத்துயருறமற்றவர்செவியிற்செறிவுறலு
மிந்தத்தொனிபுரிவானிவனெவனோவெனவெவரு
முந்திக்கரிபரிதேரிவைகொண்டேயுடன்மொய்த்தார். (௧௯)

அவ்வேலையிலொருவிஞ்சையனஞ்சாவலிநெஞ்சன்
வெவ்வேலையின்மிகவேவாதைசெய்மீளிக்கெதிர்செல்லாக்
கைவேலவனிவனாமெனக்கண்டான்வெருக்கொண்டான்
வைவேனிருதரில்வஞ்சமுமாமாயையும்வல்லான். (௨௦)

* இம்மானவனெழில்கூரதிபதியைப்பொருமெரிகட்
கைம்மானவனருளுங்களிமயிலோனலன்முதனா
ளெம்மான்விழிமொழியப்பொழில்வந்தோனெனக்கருதா
விம்மானவர்க்குரையாடுதுமெனவெய்தினின்மீண்டான். (௨௧)

* மேனாளொருமலர்காரணம்விறல்வாணிருதரைமேல்
வானாடர்தம்முலகத்தடன்மறவிக்கிடுமறவோ
னானாமுனிவினன்மீளவுமணுகுற்றனனென்னாச்
சேனாபதிமணிமாலனுடன்வந்துரைசெய்தான். (௨௨)

அவன்வந்திதுபகராதமுனதிவேகமொடழலாச்
சிவனண்பனதுயிர்நண்பனும்விழிசெந்தழல்பொழியப்
பவனன்றருசிறுமானுடனவனோபடிமுதலாம்
புவனந்தொழுபெருமானகரிடைவந்திவைபுரிவான். (௨௩)

* தும்பிக்குலமிரதத்தொகைதுரகத்திரள்காலாள்
பம்பிப்பணைவிதமோவிடபணியோவிடநடவா
நம்பிக்கினியுரையாடலநாமேயவனுடலங்
கம்பித்திடப்பொருதாவியுங்கவர்வோமெனக்கழறா. (௨௪)

* பண்ணார்படைநஞ்சேனையின்பறவைக்கதிபதியா
மெண்ணாயிரமியக்கேசருமிவன்மேலெழுகென்னத்
தண்ணார்மதிகவிகைத்திறற்சாலேந்திரன்முதலோர்
விண்ணாடரும்வெருவச்செருபுரிவான்விரைவுற்றார். (௨௫)

* தாமப்புரிசையின்வாயிலெழுந்தானையின்வெள்ள
நேமிக்கிரிநெரியப்புரிநெடுவெள்ளநிகர்ப்பத்
தூமக்கனல்சொரிகண்ணினரெண்ணாயிரர்தொலையாச்
சேமக்கவசியர்வீமனைத்திரையாழியிற்சூழ்ந்தார். (௨௬)

* உதிக்குஞ்சுடரோராயிரமுருக்கொண்டனவொளிகூர்
விதிக்குஞ்சமர்தொலையாவிறல்விச்சாதரர்வெள்ளங்
கொதிக்குங்கடலிடைநின்றருள்குமரன்குரைகடன்முன்
மதிக்கும்படிநெடுமாலிடுமாமந்தரமொத்தான். (௨௭)

* ஊழ்வந்துதன்னெதிருந்தலுமுயர்வானுலகுறுவான்
சூழ்வந்தபெருஞ்சேனையைத்தொலையாவமர்பொருவான்
காழ்வந்தகதாபாணியுங்காணார்முனைக்கென்றும்
வீழ்வந்தகொடுஞ்சாயகம்வின்னாணில்விசித்தான். (௨அ)

* அக்காலையில்விறலோனிலையறிவானுயரறிவாற்
றக்கார்புகழ்சாலேந்திரன்றன்சேனையைத்தகையாக்
கைக்கார்முகவயமாருதிதிருமுன்கடிதோடிப்
புக்கானொருதேர்மேனனியிவைநின்றுபுகன்றான். (௨௯)

* சிவனோதிசைமுகனோவதிர்திரையாழியிற்றுயில்கூர்
பவனோபருவரைமார்புறப்பகிருஞ்சுடர்வடிவே
லவனோதிறனரவாகனனளகாபுரிவருவோ
னெவனோவுனதுயிர்சிந்துமுன்யார்நீயுரையென்றான். (௩௦)

* என்னாவவனுரையாடலுமிவனின்புறநகையா
முன்னாளொருமலர்காரணமுனைவோருயிரெல்லாம்
பொன்னாடர்தம்முலகிற்புகப்பொருதோனிகலடுபோர்
மன்னாகவமதியாவிறல்வயமாருதியென்றான். (௩௧)

* மருவீசுபொலந்தாமரைமலரின்னமுமொருகாற்
றருவீரெனிலுமதாருயிர்யானுந்தருகுவனாற்
பொருவீரெனில்யமனூர்பதிபுகுவீரினியென்றா
னொருவீரருமுவமைக்கெதிரில்லாவிறலுரவோன். (௩௨)

வேறு.

* என்றுவயமாருதியிசைத்தமொழிகேளா
வென்றிதிகழ்வாகைபுனைவிஞ்சையர்பிரானுங்
குன்றனையதோளிணைகுலுங்கநகைசெய்யாக்
கன்றினன்வெகுண்டுகனல்காலுமிருகண்ணான். (௩௩)

* தேனிடறுவாசமிகுதெய்வமலரென்னே
மானுடர்கள்சூடவருவார்கண்மதியற்றோய்
கானுடையவாழ்க்கைபுரிநின்னுயிர்கணத்தென்
னூனிடறும்வாளிகடமக்குணவளிப்பேன். (௩௪)

* மற்றிவன்வெகுண்டிவையுரைத்துவருசேனைக்
கொற்றவரைநின்றுநனிகூவியெதிரேவிச்
சுற்றுமிகல்வெம்படைகடூவியிகலோனைப்
பற்றுமின்விரைந்தினியெனப்பகரலுற்றான். (௩௫)

* பற்றுமெனவந்தபடைவீரருயிரெல்லாங்
கொற்றமிகுவெங்கணைகுளிக்கும்வகைகொட்டே
செற்றமுடனின்றெதிர்சிரித்தனனுருத்தான்
பற்றலர்புரம்பொடிபடுத்தவனையன்னோன். (௩௬)

* இவ்வகைபொழிந்தவடிவாளியினியக்கர்
மெய்வழிசெழுங்குருதிவேலையிடைவீழ்ந்தா
ரவ்வளவில்விஞ்சையரநேகரதுகாணுக்
கைவரிவில்கொண்டவன்மிசைக்கணைதொடுத்தார். (௩௭)

* தொடுத்தசரவார்சிலைதுணிந்துநனிமேன்மேல்
விடுத்தபடையும்பொரவெகுண்டுமுனைவாய்வந்
தடுத்தவர்களோடுமணிமார்புமிருதாளு
நடுத்தறியவெங்கணையுகைத்தனனகைத்தான். (௩௮)

* மண்டுதிறல்விஞ்சையர்மடிந்தசெயல்யாவுங்
கண்டுசிலசாரணர்கறங்கனையதேர்மேற்
கொண்டுகிட்டலென்னவுருமென்னநனிகொதியாத்
தண்டுகொடெதிர்ந்தனர்கடண்டதரனோடும். (௩௯)

* வார்சிலையொழிந்துவிறன்மன்னுவயவாகைப்
போர்செய்கதைகொண்டெதிர்புகுந்துபொரலுற்றான்
பார்செய்பயனன்னநிருபற்கிளவல்பார்மேற்
கார்செயுருமேறுருமுடன்கனல்வதேபோல். (௪0)

* தண்டினொடுதண்டெதிர்தகர்ப்பவெழுபொறியு
மண்டுமுடியோடுமுடிமன்னவெழுபொறியுந்
திண்டிறல்வயப்பொருநர்செங்கணுமிழ்பொறியு
மண்டமுழுதும்பொதுளிமீதுபுகுமப்பால். (௪௧)

* மட்டவிழலங்கன்மறவோனுடன்வயப்போர்
தட்டமர்புரிந்துதனுவுஞ்சிரமும்வேறாப்
பட்டவரெனைப்பலர்படாதவர்விடாதன்
றிட்டனர்புறந்திறலியக்கர்குலமெல்லாம். (௪௨)

* தொடிக்கரமிழந்திருதுணைப்புயமிழந்தாங்
கடிப்பதமிழந்தவயவங்களடைவேபோ
யிடிக்குரலின்விஞ்சையரெதிர்ந்தயரவாங்கே
கொடிக்குடரிழந்தனர்மருத்துதவுகூற்றால். (௪௩)

* அன்னநிலைகண்டடலரக்கரொடியக்கர்
பின்னருமெனைப்பலர்பிறங்கலைநிகர்க்குங்
கன்னமதமாவிரதகற்கியிகல்காலாண்
மன்னுதிறன்மானுடமடங்கலைவளைத்தார். (௪௪)

* வளைத்துவயவெம்படைகள்வீசிமறிகடல்போ
லுளைத்தொருவர்போலெவருமுருமெனவுருத்துப்
புளைத்தரதமாபுரவிபோதகமிசைப்போய்
விளைத்தனர்பெருஞ்சமரம்விஞ்சையர்களெல்லாம். (சரு)

* தேரணியும்வெம்பொறியெனச்செறிபுகர்க்கைக்
காரணியும்வாயுநிகர்கற்கியணியும்போர்
பேரணிகலன்றனிபிறங்குமணிமார்பன்
றூரணியெனத்தனதுதண்டுகொடுடைத்தான். (சசு)

* நெறிந்தனரதந்துணையுநேமியுடன்வேழஞ்
சரிந்தனநெடுங்குடரரிந்துதலைதாள்போய்
முரிந்தனபெரும்புரவிவெள்ளமுனைதோறும்
விரிந்தனருரங்கடவுள்விஞ்சையர்கண்மன்னே. (சஎ)

* மீளியொருதண்டுகொடுவிண்டெதிர்வெகுண்டோர்
மூளைநிணம்வாயுகமுருக்குதலுமொய்ம்பிற்
றூளுடைமருத்தெதிர்சரிக்கும்வகையெய்தும்
பூளைவனமொத்தனர்பொரும்பொருநரெல்லாம். (சஅ)

* சிந்துரமணிக்கொடிகொடேர்புரவிகாலா
ளந்தகபுரத்தணுகலுற்றவொழியப்போய்த்
தந்தமபுரத்தணுகலுற்றனசயப்போர்
மந்தரவரைப்புயனுநின்றனன்மறத்தால். (சகூ)

* இருவரொருநீணெறியியங்கலர்தியங்கா
வரியுழுவைகண்டுடையுமானினமதேபோல்
வெருவியுளநொந்துதிறல்விஞ்சையர்களெல்லாம்
பொருவிலளகாபுரிபுகுந்தனர்விரைந்தே. (ரு0)

* இஞ்சிமதில்வாயரணம்யாவுமிகல்புரிவா
னஞ்சினர்கள்விஞ்சையரடைந்தனர்களழகார்
மஞ்சனையமேனிமணிமாலன்றனையெய்தாத்
துஞ்சினரொழிந்தவரவற்குரைழுதுசொன்னார். (ருக)

* அன்னிலையுணர்ந்துமணிமாலனவிர்சோதி
பொன்னசலமொத்துயர்புயத்துணைதுடிப்ப
மன்னுபுருவச்சிலைவளைத்துமழைமுகில்போன்
மின்னிலகநக்குருமெனத்தனிவெகுண்டான். (ருஉ)

வேறு.

* வானிலவுணரைமோதிமுனைதொறும்வாகைபுனைமணிமாலுமச்
சேனைமுதல்வரைவேகமுறநனிசீறியுரைபலகூறினு
ஞானிலனதுடல்வீழவமரிடையாவிகவர்தரவஞ்சினந்
தானையரியெதிரேகுகரியினமாகிவெருவொடுசாய்வதே. (ருங)

* என்றுதனதெதிர்நின்றவரையிகழ்வுற்றுமொழிபலசொற்றுமற்
குன்றமெனவமர்வென்றிதருவதொர்கும்பமதகரிமேல்கொளா
வொன்றுபடவுலகின்றுபொடிபடவுந்துகிரதமுந்தெனச்
சென்றுபுடைவருகின்றபடையொடுதண்டதரனெதிர்மண்டினான். (ருச)

* மண்டியெதிர்வருகின்றபொருனரைவன்புபெறுபுயமுன்பனுங்
கண்டுமுகிழ்நகைகொண்டுதனதிருகண்கள்கனலுகநின்றபி
னெண்டிசையும்வளைகின்றவிமையவரென்றினவிரொளிகுன்றிநீர்
மொண்டுமுகிலெனவொன்றுபடமிசைமூசியெறிபடைவீசவே. (ருரு)

* வீசுபடையொருகோடிவிசைபடவோடிமிசைவரவீமனும்
பாசதரனெதிர்நீலமயிலொருபாகனிகரெனவேகியா
வாசைதொறுமுகில்போலவளைபவராகமிருபிளவாயுளங்
கூசியலம்வருமாறுதருவளர்கோடுகொடுநனிசாடினான். (ருசு)

* ஆயபொழுதளகாதிபதிவுயிராயவணிமணிமான்விறற்
சீயமெனவவன்மீதுபலபனடசிந்தியமர்செய்துமுந்தினான்
வாயுகுமரனும்வேகமுடனவன்மார்புகிழிதரமோதினான்
தாயபெலமொடுதாயமுறவொருகாயமிருகடகக்கையால். (ருஎ)

* முன்புபெறுபுயமொய்ம்பனவன்மருமத்தின்விசைபடமொத்தலு
மென்புதசைநிணமிந்திரியம்வலியென்பவிவைநிலைசிந்தியே
துன்பமுறமனனொந்துதளர்வொடுதுத்திமணியுரகத்தின்மேல்
வன்பினுடனுருமுற்றதெனவொளிமட்கிவெருவுடனுட்கினான். (ருஅ)

வேறு.

* வஞ்சனைபுரியுமாமாயப்போர்க்கலாற்
றுஞ்சலனிவனெனத்துணிந்துசூட்சியா
னஞ்செனவெகுண்டுதன்னயனந்தீயுக
விஞ்சையன்கதுமெனவிசும்பிலேறினான். (ருகூ)

* புகையொடுபரந்துகால்பொங்கமங்குல்கள்
வகைபடவெழுந்துமாமாரிசிந்திடச்
சிகையனல்விண்ணெலாஞ்செகுக்கமண்ணெலாந்
துகள்படத்திசையெலாஞ்சூழ்ந்துதோன்றினான். (சூ0)

* அப்பொழுதினிலிகலரிப்பதாகனு
முப்புரஞ்சுடுமுகினிறத்துவாளிமுன்
னெப்பறவருளுடனுதவுஞ்சோரிவா
யிப்பெரும்பகழியொன்றேவிமாற்றினான். (சூக)

* அசைமணிக்கொடிகொடேரருக்கன்றன்னெதிர்
நிசியெனப்பரந்ததுநீலமேனியான்
வசையறக்குரிசிலுக்கருளும்வாளியாற்
றிசையுறப்பறந்தமர்செய்தமாயையே. (சூஉ)

* விறல்புனைவீமனும்விஞ்சைவேந்தனு
நிறைபுவிவிசும்பின்மேனின்றுபோர்செய்தா
ரெறுழ்வலியிராகவற்கிளையவார்சிலைச்
சிறுவனுமிந்திரசித்துமென்னவே. (சுங)

* அந்தவஞ்சனையெலாமகன்றுபோனபின்
விந்தமொத்துயர்ந்ததோள்வீமசேனன்மேற்
சந்திரன்மிசைவருதழலராவெனச்
சுந்தரன்வெகுண்டொருசூலம்வீசினான்.  (சுச)

* சூலமுந்தனதுமேற்சூலமேவினேன்
கோலமும்பொடிபடக்கொதித்துமீளியு
மூலபங்கயமறைமுனிவன்வாளியை
யாலமுங்குளிர்வுறவழலவீசினான்.  (சுரு)

* பிரமன்வெஞ்சரம்வலிபெற்றவிஞ்சையன்
மருமமெங்கணுஞ்செறிந்துருவமாழ்கியே
யுருமின்வெங்குரலுடனொடுங்கிமண்மிசைக்
கருமுகில்வீழ்ந்தெனக்கலங்கிவீழவே.  (சுசு)

* அந்தரந்தாம்புகவனந்தரப்படைத்
தந்திரத்தலைவருந்தளர்ந்துசாய்ந்தன
ருந்தினர்கரிபரியிரதமூர்புக
முந்தினதமதுயிர்கொண்டுமுந்தினர்.  (சுஎ)

* விரிதிரையுவரிநீரென்னவெஞ்சினக்
கரிபரியாளெலாங்கலந்துகுத்தமெய்ச்
சுரிபெருங்குருதியின்சுழலியாற்றினின்
றரிமகனடலரிநாதஞ்செய்யவே.  (சுஅ)

வேறு.

* இத்தலைவயவீமனிகல்பொருதிவணின்று
னத்தலையுயிர்போலுமனுசனையெதிர்காணான்
மொய்த்தலைதொறுமேறுமுழுமணிமுரல்சங்கஞ்
செய்த்தலைதுயினுடன்றேவியைவினவுற்றான்.  (சுகூ)

* மன்னவன்மொழிகேளாமான்மதர்விழிமானு
நன்னதிதனிலின்றோர்நறைமலரதுகாணு
வின்னமுமொருகானீயிம்மலர்கொணர்கென்றே
னன்னவன்விசைசென்றானளகைநன்னகரென்றாள்.  (எ௦)

* மன்றலில்குழலாடன்வாசகமெனுநஞ்சாற்
பொன்றினனெனமன்னன்புலம்பியபொழுதன்பா
லொன்றியமுனிரோமனுரையெனுமமுதாலே
துன்றியதுனிதீராச்சோகமொடுரைசெய்வான்.  (எக)

* கூற்றுவனிகர்நாகக்கொடியவன்முதலானோர்
நூற்றுவரையும்யானே நூறிவினுலகின்மே
லேற்றுமவ்வளவும்யானின்பய நகரேனென்
ருற்றுதியுயிரையாவம்மொழிபழுதாமோ. (எஉ)

* துணைவருகடலாடைசூழ்வருமெழுபூவோ
நணைகெழுமொருபூவோநன்றெனநகைசெய்யா
வுணையொருவனையும்யானுளனெனிலொருவேனுக்
கணைவருமுளர்யானுமாருயிருளனம்மா. (எங)

* முன்செய்வெவ்வினையாலோமுடிவினல்வினையாலோ
மின்செய்தகழலானவ்விசையனுமகல்வுற்றான்
பொன்செய்தமுடியானும்போயினனினிநானிங்
கென்செய்வதெனமன்னன்முனியடியிணைவீழ்ந்தான். (எச)

* அஞ்சலையுரவோனுமாருயிரழிவில்லான்
விஞ்சையரொடும்வெம்போர்விளைத்ததுமொருகோடி
வஞ்சனைமணிமாலன்மாருதிவிடும்பாற்
றுஞ்சினனவன்மேலுந்துனிவருமினிமாதோ. (எரு)

* இவன்மிசையிடையூறென்றெய்துறுவதன்முன்யாம்
நவநிதிகளினுந்தனன்னகருறவேண்டுங்
கவரெயிறுளபேழ்வாய்க்கடோற்கசன்வருமாறிங்
கவனிபனினையென்றானரசனுநினைவுற்றான். (எசு)

* புந்திசெய்தவன்முன்னம்புதல்வனுமொருதேர்மேல்
வந்தனன்விரைவோடும்வணங்கினனிருதாண்மே
லெந்தைசொலடிநாயேன்பணிவிடையெதுவென்றான்
றந்தையுநிருதன்றன்றாதைதன்னிலைசொன்னான். (எஎ)

* அக்கணமதுகேளாவவரனைவரையுங்கொண்
டிக்கணமிடையூறுமெழுமெழுமெழுமென்று
முக்கணனுயிர்நண்பன்வாழ்தருமூதூர்வாய்த்
திக்குறநெடுவானிற்சென்றனரொருதேர்மேல். (எஅ)

* சென்றொருநொடிவேலைச்சிறுவனுமறவீம
னின்றமர்புரிவெம்போர்நிலமணுகுறுமுன்னம்
வென்றிகொளுரவோனும்வேந்தனையெதிர்கொள்ளா
மன்றலர்மலர்தூவிவணங்கினனிருதாண்மேல். (எகூ)

* சதித்தனைசதிசெய்தாய்தம்பியுமலைவாளா
வதைத்தனைமணிமான்றன்மன்னுயிர்தனைமன்னோ
நிதித்தலைவனுநீடுஞ்சேனையுமினிநின்மேற்
கொதித்தெழுமுதனுளிற்கோபமுமுளனென்றான். (அ0)

* பொற்றொடிமொழியாலிப்போதொருபொருளாக்கிச்
செற்றனைசிவனன்பன்சேனையைநீயென்னக்
கொற்றவனிளையான்மேற்கொதித்தனமொழிபோதங்
குற்றதையுரைசெய்வானேடினனொருதூதன். (அக)

* அழுதரல்குதிபாயுங்கண்ணினனயிலம்பா
லுழுதுடன்முழுதெல்லாமுடனுகுசெம்புண்ணீர்
வழிதரமனமெல்லாமறுகுறவிறைபொற்று
டொழுதனனியல்பெல்லாந்துணிவுறும்வகைசொன்னான். (அஉ)

வேறு.

* அழுங்கினான்மன்னனல்லறிவுமாவியு
மழுங்கினான்வடிவமுமுடியும்வல்விடம்
விழுங்கினானெனநனிவெகுண்டுநெஞ்சுறப்
புழுங்கினானிவையிவைபுகறன்மேயினான். (அந)

* ஒருவனுமானுடனேதைமாநகர்
வருவனும்விறன்மணிமானெடுஞ்சமர்
பொருவனுமவனுயிர்பொன்றவென்றிடர்
தருவனுமென்பெயர்தனதனுகுமாம். (அச)

* அடுப்பனுமளகையயறிவின்மானுடன்
றொடுப்பனும்பொருசரஞ்சூழ்ந்தசேனையைப்
படுப்பனுமதுகொடுபதுமந்தன்னைவந்
தெடுப்பனுமென்பெயரிராசராசனும். (அரு)

* இந்திரனல்லனுமீசனல்லனுஞ்
சந்திரனல்லனுந்தபனனல்லனும்
வந்தொருவலியிலாமானுடன்கொலாங்
கந்தருவரையெலாங்களத்தினூறுவான். (அசு)

* வென்றகோச்சித்தரும்விஞ்சைவேந்தரு
நின்றகின்னரரும்வாணிருதரும்புடை
துன்றுசாரணர்களுஞ்சூழ்மின்மொய்ம்பனை
யென்றுசொண்டெழுந்தனனியக்கர்தம்பிரான். (அஎ)

* உருத்திரசேனனப்பொழுதுணர்ந்துதன்
கருத்தொடுதாதைபொற்கழல்வணங்கியே
மருத்தருள்பவன்வரலாறும்பற்றவன்
றிருத்தகுதுணைவர்தஞ்செயலுங்கூறுவான். (அஅ)

* எந்தைகேளிவனைமானுடனென்றெண்ணலை
முந்தைமுப்புரம்பொடிபடுத்தமூர்த்திதன்
சிந்தையாலைவரிந்திரரைச்சென்மென
வந்தனர்நிலமகள்வருத்தமாற்றுவான். (அகூ)

* தருமனென்றவனிபன்றம்பியும்மிவன்
வரிசிலைவிசயனென்றொருவன்மற்றவன்
புரிதிறலசுரரைப்பொருதங்கிந்திரன்
றிருவமருலகெலாந்திருத்திவைகினான். (கூ௦)

* வேடமோமானுடம்வெருண்டபோதலா
லாடவர்பெருமையையறியலாகுமோ
நாடியசிறுகுறளொன்றுநம்பகே
ணீடியமுகடுறநிமிர்ந்ததில்லையோ. (கூக)

* மீற்றுளவரையெலாநடுங்கவார்பிறைக்
கற்றையஞ்சடையவன்கயிலைமாக்கிரி
யுற்றுடனெடுத்தவனுமிரும்வாட்கையுஞ்
செற்றவன்மனிதனோதேவனோவையா. (கூஉ)

* மட்டவிழ்தொடைமணிமானையோர்முனி
யொட்டியவரிசிலைமனிதனாலுயிர்
பட்டழிகுவையெனப்பகர்ந்துசாபமன்
றிட்டதுமுணர்ந்தவர்க்கிரங்கலெந்தைநீ. (கூ௩)

* அருத்தியேதென்றவற்கருளியைய்விங்
கிருத்தியேல்வாழ்வுமின்னுயிருமெய்தலாந்
திருத்தியசேனையுநீயுஞ்சென்றுமே
லுருத்தியேலுறுபயனொன்றுமில்லையால். (கூ௪)

* என்றிவைதிருமகனியம்பியேத்தவும்
நின்றிலனென துயிர்நேயநண்பனைக்
கொன்றவன்றன்னுயிர்கொள்வன்யானெனாச்
சென்றனன்புட்பகத்தேரின்மீதரோ. (கூ௫)

* மண்ணெலாமிரதமுங்களிறும்வாசியும்
விண்ணெலாம்விமானமும்விபுதரீட்டமும்
பண்ணெலாமுரல்வனபணையின்குப்பையு
மெண்ணலாமாவகோயியக்கர்சேனையே. (கூ௬)

* விண்டலமுநெடுவேலைவேலைசூழ்
மண்டலமுறவெழுமகரவாரிபோ
லெண்டிசையுறப்பரந்தெழுந்தசேனையைக்
கண்டனன்கண்ணுறக்கருணைக்கண்ணனே. (கூ௭)

* உணங்கினானுடலமுமுணர்வுமாவியும்
பிணங்கினானிளைஞனைப்பேதைபங்கனோ
டிணங்கினான்புகழெலாமேத்திநெஞ்சுற
வணங்கினான்மணிமுடிமன்னர்மன்னனே. (கூ௮)

* அனகனேயமலனேயளகைவேந்தனே
தனதனேசங்கரன்றன்சகாயனே
புனிதனேகுபேரனேபுலத்தியன்குலச்
செனகனேசெல்வனேதேவதேவனே. (௯௯)

* வெறுப்பதோவிளைந்ததுமிகையதாயினு
மறுப்பதோவெனமொழிமாறுகொண்டெதிர்
செறுப்பதோவிளையவர்செய்ததீமைகள்
பொறுப்பதேபெரும்புகழ்புனிதமூர்த்தியே. (௧௦௦)

* எனவிவனிவைபகர்ந்திசையவேத்தலு
முனிவொடுவயிரமுமுறணுமாறியே
மனனுறமகிழ்ந்தெதிர்கொண்டுமார்புறத்
தனதனுந்தருமனைத்தழீஇக்கொண்டானரோ. (௧௦௧)

* நிலத்தியறண்ணளிநிருபர்மதி
குலத்தியலுடன்வருகுமரனுதலாற்
சலத்தியறருமுரண்டணிந்தென்யானெனப்
புலத்தியன்மகன்மகன்புகன்றுபோற்றினன். (௧௦௨)

* என்னகர்நின்னகரென்றும்வேறிலை
நின்னகரிதுமுதனீங்கள்வாழ்வுறுந்
தொன்னகரெனவெனத்துணைவர்தம்மொடு
மன்னனைத்தன்னகர்கொண்டுமன்னினன். (௧௦௩)

* திருத்தகுநகரியுஞ்சிறப்புஞ்செல்வமு
மருத்தகுகற்பகவனமுவாவியுங்
குருத்தகுமணிகளின்குழாமுங்கோயிலுங்
கருத்துறமகிழ்ந்துகண்களிப்பக்காணவே. (௧௦௪)

* காட்டினன்றன்மனக்கருணைவெள்ளநீ
ராட்டினனமராரமுதமன்புட
னூட்டினனுகந்துபசரித்துச்செங்கையா
னீட்டினனுடையநிதிகள்யாவுமே. (௧௦௫)

* அத்தினபுரிக்கதிபநீவர
வித்தினமென்றவப்பயனிருந்தவா
நித்தனையெனதுயிர்நேயநண்பினு
லொத்தனையெனவிவையுரைசெய்தானரோ. (௧௦௬)

வேறு.

* நெருநலிந்திரபுரத்திலிந்திரனும்யாமுநீடவையிருந்தபின்
புருநலந்திகழும்விசயனென்னவவனொருவனெய்துதலுமவனையித்
திருநலம்புதியசெம்மல்யாவனெனமற்றவன்செயலும்வெற்றியுங்
குருகுலம்பெருகுலேசனென்பதுவுநின்றவானவர்கள்கூறினர். (௧௦௭)

* அந்தவிண் ணுலகினின் றுநின் றுணை வனமரர்சூழ்வரநாளையே
யிந்தமண் ணுலகுசீயும்வாழ்வுபெறவிந்திரன் றனுடனெய்துமா
லெந்தமண் ணுலகுநின்னதாகுமிடருற்றிரங்கலெனமகிழ்வினிற்
கந்தவண்ணமலருங்கொடுத்துவிடைநல்கினனளகைகாவலன். (கoஅ)

* ஐயநின்னையறியாமனின்னகரிலணுகினன்சிறுவனுதவிற்
செய்ததீமைகள்பொறுத்தியென்றுநனிதிருவுளத்திடைகொளேலெனு
மொய்கொடாமமுடியுறவணங்கிமுடிமன்னர்மன்னனிவையோரொடு
மைதவழ்ந்துலவுமாடநீள்புரிசைஞாயில்வாயிறனிலெய்தினன். (கoகூ)

* மாசிலாதமுடிமன்னர்மன்னனுடன்வந்தமாமுனிவரர்க்கெலா
மேசிலாவகையினெண்ணிரெண்டுவகையாயபூசைகளியற்றியே
காசுலாமணியுமாடையுங்கலனுநல்கமல்கிவளர்செல்வனுக்
காசிகூறியுடனேதபோவனமடங்கினரவரடங்கவே. (கக0)

* குந்திமைந்தரொருநால்வரும்புதியகொடிமருங்குன்மடவல்லியுஞ்
சிந்தையன்புடையமுனியும்வாணிருதசேகரன்றனதுதேரின்மேற்
பந்திபந்திபதினாயிரம்பதின்மடங்குகூளிகள்பரிக்கவா
னுந்திமுன்பயிலுநந்திசேனன்வனமொருநொடிப்பொழுதிலெய்தினர். (ககக)

* எய்தியந்தமுனிசெய்யதாண்மலர்மனஞ்செய்தன்புடனிறைஞ்சியே
செய்தியாவுமவனுக்குநண்பொடுரைசெய்துசூழ்வரவிருந்தபின்
வெய்தின்வந்தடலரக்கர்நாயகன்விபத்தினுக்குதவியானதுங்
கொய்திலங்குவடிவாளினன்விறலும்யாவுமேன்மையொடுகூறினன். (ககஉ)

* வெங்கராவின்முழைவாய்புகுந்தலறிவேழமூலமெனவிரைவினிற்
பொங்கராவணைதுறந்துவந்தெதிர்புரந்தபுண்ணியனையொக்கவே
தங்கராபதநெருங்குதொங்கலணிதாமவேலடலரக்கநீ
யங்கராகமணியாரமார்பநினதையனுருயிரளித்தியே. (ககங)

* தொடைகொடுத்தளகைநாதனன்றுதவுதுகில்கொடுத்துமதிமுத்தவெண்
குடைகொடுத்துநவமணிகொடுத்தமரிலென்றும்வென்றிதருகொற்றவெம்
படைகொடுத்தடலரக்கனுக்குப்பர்பதங்கொடுத்துமிகுபரிவுடன்
விடைகொடுத்தனனனந்தரஞ்சமரவீரவாகைபுனைவேலினன். (ககச)

* வணங்கியன்புடன்மகிழ்ந்துமன்னரைவலம்புரிந்துமனனஞ்செயா
நிணங்கமழ்ந்தொழுகிவழியவாளொயிறுநிலவெழும்புகைகொள்வாயினன்
றுணங்கைகொண்டலகைகோடிவானின்மிசைதுள்ளியூருமிரதத்தின்மே
லிணங்கிமீளவும்விரைந்தநிகப்பொழுதினில்லிடிம்பவனமெய்தினன். (ககரு)

மணிமாலன்வதைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௩எஅ0.

# அருச்சுனன்பூலோகத்துக்குவந்தசருக்கம்.

தடந்தனிவிடங்கரினிடைந்தொருதடங்கரிதளர்ந்தலறுனாள்
வடஞ்செறிதடந்துயிலொழிந்துயர்பதந்தரவருந்திகிரியான்
றொடர்ந்திடுபெரும்படரருஞ்சிறைநெடுந்தொடர்துரந்துகனவெம்
படஞ்சுளிவரும்படிநடம்புரிதரும்பதயுகம்பணிகுவாம். (௧)

அருந்தவமுயன்றிவரருந்தவகலஞ்செறிதருந்தகையரா
யிருந்தனர்வனந்தனிலெனுங்கதையடங்கலுமியம்பினனிப்
புரந்தரனெடும்பகைகடந்தவன்வளம்பதிபுரந்தமுதெலாம்
விருந்திடநுகர்ந்திடுதனஞ்சயன்வருஞ்செயல்விரைந்துரைசெய்வாம். (௨)

புரந்தரனுடன்பகைபயின்றவனுகர்ந்தருள்பொரும்படைதர
நிரந்தரமவன்பகைகெடும்படிதுரந்துயர்நெடுந்திசையெலாஞ்
சொரிந்திடுமதங்கயமுகந்தொறுமெதிர்ந்தவைசுளிந்தொசிதலா
லிருந்திரன்மிகுந்துயர்தனஞ்சயனெனும்பெயரிசைந்தெழுதினான். (௩)

இவன்பெயர்நெடுந்திசையடங்கலும்வளர்ந்திசைபரப்பியிருநா
ளவன்புரிதருஞ்செயலுணர்ந்துளமகிழ்ந்தவனையங்கணுகினார்
சிவன்பதியிலுந்திசைமுகன்பதியிலுஞ்செகமலர்ந்ததிருமா
லவன்பதியிலும்பிறவளம்பதியினும்புகலரம்பையரெலாம். (௪)

தளர்ந்திடையொசிந்திடர்படும்படிதயங்கியதடங்கிரிகள்போல்
வளர்ந்திடுதனங்களிலணிந்தொளிவிடுஞ்சுடர்வடங்களலையா
வுளைந்தறிஞருந்தவமொழிந்தறிவழிந்திடநடந்துகவையால்
வளைந்தனர்மனந்தனின்மடந்தையரடங்கலுமடங்கலையரோ. (௫)

நினைந்தவர்பெருந்துயர்துரந்திடுபதந்தருநெடுஞ்சடையினான்
முனைந்தெதிர்வருந்திறலனங்கனைவெகுண்டுமுன்முனிந்தருளினா
னினைந்தவணிறந்தபினவன்றன்மெய்விடங்கிவனிடந்தனிலெனப்
புனைந்திடுகெனுஞ்செயலிரந்தொளிர்வுடன்புகல்புகுந்ததுகொலாம். (௬)

நிலந்தவமுயன்றதுநெடும்பகலதன்றியுநெடுந்தகைபெருங்
குலந்தவமுயன்றதுமுயன்றதுதவம்பலகுலங்களுமணிச்
சிலம்பெனவளர்ந்தணிசிறந்தொளிமிகுந்தழகுடன்றிகழ்பவ
னலம்பெறுபுயம்பெறமுயன்றவர்தவந்தவநலம்பெரிதரோ. (௭)

மன்றல்கமழ்கொன்றைமலர்துன்றுசடையண்ணலெதிர்வந்துமையுடன்
பன்றியிடைகொண்டுசமரஞ்செய்தினமென்றுமுளபைங்கொடிவியந்
தன்றுபகைகொண்டெதிர்வருந்தகையர்துஞ்சும்வகையங்குதவினாள்
வென்றியினியெங்ஙனுரைதிங்ஙனலமென்றிதுவிளம்பினர்களே. (௮)

புற்றரவுயர்த்தவனிசைத்தகடமைப்புதர்வனத்தினிடையூ
றற்றொருபதிற்றொருடுகளத்தொகையுரைத்தவருடத்தையகல்வித்
துற்றொருநகர்க்கணொருவற்சரமறைத்துருவொழித்தமரினும்
வெற்றிநிலையிட்டவனிகைக்கொளுமெனச்சிலவிதித்தனர்மினூர். (௯)

அந்தமிலரம்பையரகன்றனர்தனஞ்சயனருந்திறலொடுந்
தந்தையைவணங்கியுடன்வந்தவர்பெருந்துயர்தணந்திடவினி
யெந்தையருள்கொண்டுவிடைதந்திடுகவென்றனனிசைந்துமகவான்
சுந்தரியுடன்படர்தல்சிந்தைகொடெழுந்தனன்மிகுந்தகையினால். (௧௦)

மாதலிகடாவிரதமீதுமகன்மேவவணிவானவர்பிரா
னோதுகளியானைமிசைவாவியிமையோர்களொடுமோகைபெறவே
காதறிகழ்நீதிபுனைகாவலனுலாவுமொருகானனுகியோர்
வேதமுனியாசிரமமுடுபயில்வாரருகின்மேவுமிடையில். (௧௧)

அந்தரதலந்தனின்மறைந்தொருதனஞ்சயனைமுந்தனுகென
விந்திரன்மொழிந்திரதமுந்தெனவிசைந்துவலவன்கடவுதேர்
வந்ததுநெடும்பரிதிமண்டலமகன்புவியிழிந்ததெனவே
சுந்தரன்வரும்பரிசுணர்ந்தனரருந்துணைவர்துன்றினர்களே. (௧௨)

தம்பிதொழலுந்தனதுதிண்புயம்வளர்ந்துவிழிதண்பொழியவே
வம்பவிழலங்கலகலந்தனின்மயங்கியறன்மைந்தன்மகிழா
நம்பியுமிகும்பவனன்மைந்தனைவணங்கினனலந்திகழவே
யிம்பரவனுந்தழுவினன்றனதுசந்தனமிழிந்தினிமையால். (௧௩)

மற்றிருவருற்றதுணைவர்க்கடிதொழத்தொழமகிட்சியதனு
லுற்றவர்தமைத்தழுவிநற்கனலுதித்தவளுவப்பவொருசொற்
பெற்றியினிசைத்தணிதவத்தினர்தமைத்தொழுதுபெற்றனனரோ
பற்றலரறத்தரணிகைக்கொளுநற்சொலொடுபற்பலவெலாம். (௧௪)

அக்கணமதிற்கரடகைக்கரிமிசைக்கொளமரர்க்கிறைவனுந்
தக்கவிருவர்க்கெதிர்புகப்பெரிதுவப்பொடுதருக்கியெதிர்போய்
நெக்குருகிநற்றலையுறத்தொழுதருத்தியொடுநிற்பவவர்பான்
மிக்கருள்விழிக்கடைபுரட்டியிதுரைத்தனன்வெறுப்பகலவே. (௧௫)

வேறு.

விரைசெய்நறுந்தார்தரும்பிரசம்விருந்துண்டளிகளிசைவிளக்கு
முரசமுயர்த்தமணிமார்பாமுனியுந்துத்திப்பணப்பாந்த
ளரசையுயர்த்தோன்கைதவஞ்செய்தழலார்வனத்தையளித்ததனற்
கரைசெய்துரைத்தற்கரியதுயர்கண்டாயென்றுங்காணுதோய். (௧௬)

மற்றூரெனினும்வசைதனக்குவருமாறுணராதிகல்செயுமா
றுற்றாரெனினும்பலபுன்சொலுரைத்தாரெனினும்பொறையாற்றல்
கற்றாயதனாலுனக்கிடுக்கண்கண்டோர்நரகக்கதிகாணப்
பெற்றார்நாடுபுரந்துமினிப்பிறவாநெறிநீபெற்றாயே. (௧௭)

வர்சக்கமலமலரோனுமாலுந்தேடியுணராதோ
னேசத்தெதிர்ந்துனிளவலெதிர்நிலமுள்ளளவும்பெரும்புகழாப்
பேசற்கரியவிளையாடற்பெருக்கிப்பாசுபதமளித்தான்
பூசற்கெவரெய்தினும்வெற்றிப்புனைவாருண்டோபூபாலா. (கள)

காலமனந்தங்கடந்திறவாவரமுங்கைக்கொண்டெமைப்போல்வார்க்
காலமதிலுங்கொடியவராமரக்கர்குலத்தையரைக்கணத்தின்
மூலங்களைந்தநெடும்பகழிமுனையான்விசயன்றனக்கிந்த
ஞாலந்தனிலொன்னலராகநவிலுந்திறத்தோருளராமோ. (கஅ)

சொன்னபருவமினிச்சிறிதுந்தொலைத்தோர்வருடங்கழித்தபின்ர்
மன்னர்பெருமானுடன்வந்தோர்மற்றுமவர்பானண்பானோர்
முன்னமிவர்களுரைத்தபடித்தகர்ந்துவீழமுற்றியபின்
கொன்னேடினதுகுடைநிழலிற்புரப்பாய்முழுதுங்குவலயமே. (உO)

என்றுபலவுமொழிந்திடலுமிருகைகுவித்துனருளுண்டே
லொன்றுமெமக்குத்தாழ்விலையென்றுரைக்குந்தருமன்றனைவாழ்த்தி
நின்றவிமையோர்குருவுடனுநெறிசேர்தீர்த்தயாத்திரைக்கா
வன்றுவருமாமுனியுடனுமகல்வானடைந்தானமரேசன். (உக)

கறுத்தகருமாமுகிலூர்திக்ககனத்தடையக்கடுஞ்சினம்பற்
றறுத்தமுனிவருடனிருந்தவறத்தின்கடவுடருகுமரன்
சிறுத்தமருங்குற்கொடிபங்கன்செந்தாமரைப்பொன்னடிநோவ
மறத்தினிகழ்த்துமுறையனைத்தும்வழுவாதுரைத்தியெனக்கேட்டான். (உஉ)

பாத்தன்மொழிந்தான்யானடைந்தோர்பழுவத்திருந்துதவமியற்றக்
கூத்தன்கிராதருருவெடுத்துக்குளிர்கட்பச்சைக்கொடிகாணப்
பூத்தமுறுவன்முகத்தோடும்பொருதான்வராகம்பொருளாயன்
ருத்திபுனைவோன்விளையாடலனைத்தும்புளகமரும்பிடவே. (உந)

நீலக்களமுஞ்செஞ்சடையுநிமலவதனங்களுநீறுஞ்
சூலக்கரமுமலரிதழித்தொடையுமுழுவைத்தோலுடையுஞ்
சாலப்பரந்தவிழிமூன்றுஞ்சரணத்துணையுந்திகழ்ந்திடவிக்
கோலத்துடன்வெள்விடைமீதுகொண்டுபடர்ந்தான்குறைதீர. (உச)

கண்டேன்மிகவுமுளங்களித்துக்கசிந்தேனிடப்பாலிடங்கொடிபோல்
வண்டோவிடுமென்கருங்குழலாண்மருவுஞ்செயலுமுணர்ந்தருகி
லண்டேன்ருெழுதேனெழுந்துநடமாடாநின்றேனவனருளா
லெண்டோடுளங்கச்சிறுநகைசெய்தெனைவாழ்வித்தானிணையில்லான். (உரு)

கொடுத்தான்பாசுபதக்கணையைக்கொடுக்குமுனமேமாலாதி
யடுத்தவிமையோர்தமதுகணையாருமளித்தார்விடையளித்து
விடுத்துமறைந்தான்மகத்திறைவன்விண்ணிற்கொடுபோய்வைத்திருப்பத்
தொடுத்தார்மௌலித்தனியரசேகழித்தேன்பலநாணிர்தென்றான். (உசு)

இனியதுணைவன்மொழிசெவிகட்கிசைக்குமமுதினலங்காட்ட
முனிவர்மகிழத்தான்மகிழ்ந்துமுதன்முப்புரநீறெழச்சிரித்த
தனிவெண்ணகையான்றனைநினைந்துசாலவுருகித்தனிவிண்ணிற்
றுனிவிலசுரர்தமைச்செற்றதோண்மையனைத்தும்வினவினனால். (௨௭)

பொறையாலுயர்ந்தோன்றனக்கசுரர்பொருபோர்வலியுமொருகோடி
மறையாலுணராதவனளித்தவயங்காசுகத்தினருந்திறலு
நிறையாவுணரவெடுத்துரைத்தானிமிர்ந்துபுயங்கள்வானோங்கிக்
குறையாவதுநீங்கினரன்றேகுந்தியளித்தகுருநாடர். (௨௮)

இவ்வாறிவர்களிக்கானிலிளைத்தமருங்குற்கொடியோடு
மொவ்வாத்தவஞ்சேர்முனிவரொடுமுறையுநாளிலொருநாளிற்
கைவாரணங்கள்பிடிகளொடுங்கலந்துதுளையுநீர்வாவிக்
கவ்வாயுவின்மாத்தனிக்குமரனகன்றான்றுணைவனயனீங்கி. (௨௯)

வேறு.

மந்தரநெடுந்தோண்மாருதியந்தவனத்திடைசெல்வதுகாணா
விந்தமானிலமோர்சுடிகையிற்பொறுத்தவெழின்மணியொளிர்முடியரவிற்
சிந்தனைகலங்கித்தேவரும்வெருவச்சீறிவெவ்விழிப்பொறிதூற்றி
யுந்துதன்னுடல்கொண்டிவனுடல்பிணித்ததொருபெருமாசுணமன்றே. (௩௦)

மாசுணவேந்தன்மேருவைவளைத்தவாறுபோன்மந்தரகிரியை
வாசுகியமுதமதிக்குநாட்பிணித்தவாறுபோற்பிணித்திடமாழ்கித்
தேசுநல்லறிவுமுற்றமுநீங்கித்தேவரும்பரவுதோள்வலியோன்
பேசுமிவ்வுரகப்பிணிப்பினையகற்றிப்பெயர்கிலனடங்கிநின்றனனே. (௩௧)

வாரணமயுதந்தனக்குளவலிசேர்மாருதிமாசுணம்பிணித்த
காரணமுணர்ந்துமனத்தினற்புதமாங்கருமமீதாமெனக்கருதித்
தாரணிசென்னிதுளக்கியவ்வரவின்றனிவலிக்கிடைந்துமெய்தளர்ந்து
பூரணமதியமிராகுவாலடைதல்போன்றொருவாசகம்புகல்வான். (௩௨)

அரக்கனோமாயவசுரனோவியக்கரதிபனோவார்கொனீயன்றி
யிரக்கநீங்கியவெம்பணிக்கிறைதானோவென்னையேன்பிணித்தனைவிடுவாய்
வரத்துயர்வாயுதந்தவனிந்துமரபுடையுதிட்டிரற்கிளைய
கரக்கதயானையயுதமெய்வலிசேர்கதாயுதவீமன்யானென்றான். (௩௩)

எவ்வலியுடையோர்க்காயினுமிளையேனிளைத்தனனுன்வலிதனக்கென்
மெய்வலியெங்ஙனொளித்ததோவுணரேன்விதிவழியிதுவெனத்தெளிந்தேன்
பொய்வலிதானோவிஞ்சையோவரமோபுகலுதியுள்ளவாறென்றான்
கொய்வலியிரட்டைநாவசைத்தார்த்துக்கொடும்பணிநகைத்திதுகூறும். (௩௪)

கரியுழையேனஞ்சரபசார்த்தூலங்கருதுகண்டீரவமுதலா
விரிபலவிருகமெவற்றையுமெதிர்ந்தால்விடுத்திலன்விழுங்குவன்யாதும்
புரிகருமேருவென்னினுமென்சார்பொருந்திடிற்புயவலியென்பா
லுரிமையினெய்தும்வரமுளேனதனாலுன்புயவலியழிவுணர்வாய். (௩௫)

முந்தைநல் லுகத்திலெங்குலத்தந்தைமொய்ம்பணியாற்றல்கண்டுனது
தந்தைவெஞ்சமரம்பயிற்றினானென்பர்தகுதியிலெனக்குநீபகையாம்
வெந்திறலரசர்க்கரசனாமுரவோன்வியந்தெனமையுயர்த்தனன்கொடியி
லந்தநீர்மையினும்பகைவனீயானாயன்றியுமின்னமுங்கேண்மோ. (௩௬)

காண்டவத்தழலினெங்குலத்தவர்கள்கணக்கிறந்தோரெலாமாவி
மாண்டவத்தழியப்படுத்தவில்விசயன்மற்றுனக்கிளவலாமன்றே
பூண்டவிக்குலத்துக்குரியவனம்பாற்பொருந்தியதுயருணர்ந்திலையோ
நீண்டகைத்தலத்தாய்நின்னையான்விழுங்கிநெடும்பகையொழிப்பனென்றதுவே

விந்தநேர்புயத்தோனெரிகெழுதடங்கண்வியாளமோதியகொடுமொழியாற்
சிந்தனைபுரியானென்னையாளுடையான்றிருவடியடையுநாளிதுவென்
றுந்துமைம்புலன்கள்புரஞ்செலாதடக்கியுரகவெங்கடலிடையமிழ்ந்த
மந்தரவரைபோலசைவறஞானம்வயங்கெழுசமாதியுற்றிருந்தான். (௩௮)

அறத்தினுக்கொருவனானபூபதியுமந்தநற்றம்பியைநேடிப்
புறத்துறுபுறவந்தொறுந்திரிந்தனேகம்புனிதவேதியருடனிந்தத்
திறத்தினையுணரானடைந்தனனிளவலிருந்ததுநிகழ்ந்ததுந்தெரிந்தான்
பொறுத்திலனுள்ளம்புழுங்கினானேகிப்புயங்கநாதனைப்புகழ்ந்துரைத்தான். ()

அருந்தவமியற்றிப்பெற்றபாலகனையரும்பசிக்காயருந்துவரோ
விருந்தவித்தலத்தில்வேண்டியவிலங்கூனிக்கணந்தனில்விருந்திடுவன்
வருந்துமிங்கிவனைவிடுத்தியென்றிரப்பமாசுணமாசில்வாய்விண்டு
பொருந்துநல்வாய்மைப்பயனுறவுரைத்தபுனிதநீயார்கொலென்றதுவே. (௪௦)

சந்திரன்மரபிற்பாண்டுவினரியதனையரேமியானுதிட்டிரனே
யிந்தநற்காளைவீமன்மற்றின்னுமெழில்வனத்திருந்தனர்மூவர்
தந்திரமிகுத்தநாகவெங்கொடியோன்றன்பெருங்கொடுமைகண்டஞ்சி
வந்திவணுறைந்தோமென்றனன்றருமன்மாசுணம்விழிகலுழ்ந்துரைக்கும். ()

மன்னவற்கரசேநின்குலக்குரவன்மணிமுடிபுனைவிறலாயு
தன்னுடைப்புதல்வனகுடனென்றெவருஞ்சாற்றியபெயரினேன்யானே
பன்னுதற்கரியகலையெலாம்பயின்றுபாரெலாங்குடைநிழற்பரப்பி
மின்னும்வேலுழவர்திறையிடத்தருமம்விளங்கிடவளம்புவிபுரந்தேன். (௪௨)

வேள்வியென்றிருக்கிலுரைத்துளதனைத்தும்விண்ணவர்வியப்புறப்புரிந்து
தாழ்வறுமயமேதஞ்சதமுடித்தந்தரவுலகிறைவனுமானே
னூழ்வினைவலியாலுயர்குறுமுனியன்றுரைத்தசாபத்தினாலிந்த
வாழ்வினையடைந்தேனென்செயலிருந்தவாறிதுபிறங்கடைவந்தோய். (௪௩)

மாயவெவ்வுரையாங்கொன்றினாற்கணத்தில்வந்திடையூறுநொந்திந்தத்
தீயவெம்பணியாய்வீழ்ந்தனன்வெகுண்டதிருமுனிகருணைவந்துரைத்தான்
ஏமயவெவ்விருகமெதிரினுமெடுத்துவிழுங்கியாருயிர்பரிப்பதுவுங்
காயமுன்வந்தோர்வலிகவர்வதுவுங்கழிக்குநாளளவிலாக்கணக்கும். (௪௪)

அன்னமாமுனிவன்பொன்னடிவணங்கியடியனேன்கொடுமையைமறந்து
துன்னுமிச்சாபமகலுநாள்புகலத்துணிகவென்றிரந்திடமுனிவன்
பன்னினனுலகிலொருவரைவினவும்பயனுடைவினாவினுக்கவர்தாஞ்
சொன்னசொல்விடையஞ்சாரமாகியநாடொறுமுன்றனக்கென்றே. (௪௫)

ஆரணமுனிவன்மொழிப்படிநெடுநாளகற்றினேனையநீயடைந்தென்
காரணமனைத்துமுணர்ந்தனைவினவுங்கருமமொன்றுண்டதற்குள்ள
பூரணவிடையம்பயன்பெறவுரைக்கிற்புகழுடையிளவலைவிடுவன்
தாரணிவேலோய்பரிப்வநீங்கச்சாற்றெனச்சாற்றினன்றருமன். (௪௬)

கரையறுசுருதிநிலையெலாமுணர்ந்தகடவுண்மாமறையவற்கன்றி
நிரைதருகேள்விமுழுதுணர்நீதிநெறிவலாய்நீவினவியசொற்
புரையறவிடையமிகுதலேயெம்மைப்போல்பவர்க்கெளியதோவென்மாட்
டுரைதெரியளவுமியம்புவனுரைத்தியென்னவாளுரகமோதுறுமால். (௪௭)

நிலந்தனிலென்னகுணமுளோன்மறையோ னிலைத்தவன்கைக்கொளும்
பொருளே, துலந்தருதோளாயுரைத்திநீயென்ன வுதிட்டிரன்சரதநல்லொழுக்
கம், வலந்தருபொறுமைதவம்வழாக்குணத்தோன் மறையவனின்பதுன்பங்க,
ணலம்பெறுமோகவுலோபநீத்திருந்தனற்பொருளவன்றனக்கென்றான். ()

சொன்னநல்லொழுக்கமனைத்துமில்லாதோன்சூத்திரனெனவெடுத்து
மன்னவனுரைப்பமாசுணமீண்டும்வகுத்தநல்லொழுக்கமுமியலுந்
துன்னுசூத்திரன்பாலுளதெனின்மறையோனுவ்வேனுசொற்றிடுகென்னத்
தன்னிகரில்லாவறனுடைக்கடவுடருஞ்சுதன்மீட்டிதுபகர்வான். (௪௯)

வருணசங்கரமாய்ச்சராசரமனைத்துமயங்கியவிடைதனில்விளங்கு
மருணநன்மரபின்மனுவெனும்வேந்தனுதித்துநல்லருமறைவழியே
பொருணனிதெரித்தமனுநெறியதனிற்புகன்றுளதொழுக்கநற்சரதங்
கருணைநற்றருமஞ்சூத்திரனிடத்திற்காணில்சற்சூத்திரனென்றே. (௫௦)

மறையவர்குலத்திலருமறைநெறியைவழுவினோன்சூத்திரனன்றிப்
பொறைமுதலொழுக்கமுள்ளசூத்திரனைப்புகல்வரோமறையவனென்றே
யறைதருகாலத்தந்தணராதிமரபெனுமருண்முறைதவறிக்
குறையுறுஞ்சற்சூத்திரனெனவெவருங் குறிப்பரென்றுரைத்தனன்கோமான்.

வைதிகநடத்துங்குருகுலக்குமரன்வாய்மொழிகேட்டுவாளரவ
முய்திறமடைந்ததினமிதென்றுன்னியோருரைமீளவும்பகருஞ்
செய்தவந்தருமமொழுக்கநல்லறிவுசேர்ந்தசூத்திரனருங்கதியி
னெய்துமோமறையோர்குலத்துதித்தன்றியில்லையோபுகறியென்றதுவே. ()

வாட்டிறற்குருசின்மீளவும்புகல்வான்வானவர்மனிதர்மற்றெவருங்
காட்டுபல்லுயிர்களென்றுமுக்குலத்திற்கருதருமனிதனல்வினையை
யீட்டிவானவனுயர்கதிபுகுவனிழிவினைபுரிந்தவன்பலவாய்
நீட்டியவுயிரிற்பிறந்திறந்தலுத்துநொந்துதுற்கதிபுகுவானே. (௫௩)

ஆதலாலிந்தமுறைமையிற்பின்னோனருங்கதிபுகுமெனவியம்பும்
பூதலமன்னன்வாய்மொழிகேட்டுப்புளகெழவிமனைப்பிணித்த
நோதலாம்பிணிப்பைநீக்கியவ்வுரகநொடிக்குமுன்வானவருருவாய்
கோதிலான்றன்னைவியந்துநின்றிடலுங்குருகுலக்கோமகன்மகிழ்ந்தான். ()

தம்பியைத்தழுவியாகுலமகற்றித்தன்குலத்தந்தைபாலடைந்து
வம்பவிழ்மலர்கொண்டிணையடிசூட்டிவரன்முறைதொழுதிடவவனு
மிம்பரினெடுத்துமார்புறப்புல்கியிணையறுமாசிகளியம்பி
நம்பிநின்னருளாற்றொலைந்ததென்சாபநானினிக்கதியடைகுவனல். (௫௫)

குலத்தினிவில்லாவசையினைப்புகழாக்கொண்டவன்மாள்வனுந்திணிதோள்
வலத்தினாலவனிபுரந்துநற்கதிக்கேவம்மினென்றுண்மையால்வாழ்த்தி
நிலத்தில்யானுணராக்கலையிலையுனதுநினவிலையங்களேதுளவேற்
புலப்படப்புகல்வாயிக்கணத்திருதோட்புளகெழப்புகலுவனென்றான். (௫௬)

தனதுளமதனிலையமாம்பொருள்கடனையெலாமறன்மகன்வினவ
வினிதுறவுரைத்துவிண்ணிடைக்கரந்தானிளைஞனுந்தவத்தருமெய்தப்
புனிதனாச்சிரமம்புகுந்தருந்துணைவர்க்குரைத்தனன்புகுந்தவாறவரும்
வனிதையுமிரங்கிமீளவுமகிழ்ந்தவ்வனத்திடைமருவினார்மாதோ. (௫௭)

அருச்சுனன்பூலோகத்துக்குவந்தசருக்கமுற்றிற்று.

ஆகசெய்யுள்-௩௮௭.

## மார்க்கண்டர்கதையுரைத்த சருக்கம்.

மின்னலுமுழக்கலும்விண்ணெலாமுகி
றுன்னலுமாலிகள்சொரிந்திடித்தலு
நன்னிலவாதபந்தவிர்த்துநாடொறும்
பன்னருமாரிருட்படலமூடலும். (க)

மயிலினமகவலும்வனசவாவியிற்
பயிலனந்தெழித்தலும்பழுவந்தோறுமாங்
குயிலினங்கூக்குரலின்றிவைகலும்
புயலினந்தருபுதுப்புனலினீட்டமும். (உ)

செருந்திமாமலர்திகழ்சிறப்புஞ்செவ்வணந்
தருந்திறலிந்திரகோபஞ்சார்தலும்
பெருந்திறற்கைக்கரிபிளிறவஞ்சியே
யருந்திறன்முழைதொறுமரிகளார்த்தலும். (௩)

காந்தளைக்கனலெனக்கருதிவானரம்
பூந்தருச்சினைவிடாதுறங்கும்பொற்பதும்
பாந்தளைப்புரட்டிமாமுறித்துப்பஃறிசை
யேந்துயரருவிநின்றிழியுமோதையும். (௪)

சீரெனுமிவ்வகைச்செயல்களியாவையுங்
காரெனும்பருவத்திற்கண்டுவேந்தனு
மேரெனுந்துணைவரோடேகிவைகினான்
பாரெனுந்திசரச்சுவதிப்பாங்கரில். (௫)

ஆழ்யுமந்தரீரருந்தவத்தர்பாற்
கூடியுங்கடவுளர்கோலமியாவதும்
நாடியுஞ்சுருதிகணவிலுநன்னெறி
நேடியுங்கழித்தனர்நெடிதுநாளரோ. (௬)

அவ்வயினகன்றுமுன்னிருந்தவாரழற்
பெய்வனங்காமிகப்பெயரையுள்ளதிண்
மைவனக்குழலொடுமறைவலாரொடு
மெவ்வறவணுகினானிளைஞரோடுமே. (௭)

காலைமுன்றருமுரட்காலையக்கணஞ்
சாலைசெய்தமைத்திடத்தங்கிவைகிய
வேலையினெய்தினான்கண்ணன்மென்மொழிப்
பாலைநேர்சத்தியபாமையோடுமே. (௮)

மின்னுடனியங்கியமேகமாமென
பொன்னணிதேரின்மேற்புகுந்தமாயனை
மன்னவரைவருங்கண்டுவந்துவந்
தன்னிலைபூசனையாற்றிப்போற்றியே. (௯)

பொற்புறுபீடமேற்பொலிவினுய்த்திவ
ரற்புதனருகுறவமர்ந்துவைகினார்
வெற்பெனுமிளமுலைமின்னனாளுயர்
கற்புடையவள்வயினிருப்பக்காட்டியே. (௧௦)

பைவருகோளராப்பகைப்பவாடினோ
னைவருக்குற்றவாறனைத்துந்தேர்ந்தபின்
பொய்வருமொழியினான்புணர்ப்பெலாமவன்
மெய்வரவோதினான்வேந்தர்க்கென்பவே. (௧௧)

இவ்வணமிவரிருந்தியங்குமாயிடை
மைவணமறலியைமாய்த்தசேவடி
மெய்வணமனத்தினும்விழியினுந்திகழ்
செய்வணமுனிவர்கடிலதன்றோன்றினான். (௧௨)

தண்டமுங்கரகமுங்குசையுந்தாங்கியே
துண்டவெண்பிறைச்சடைதுளங்கவெண்பொடிப்
புண்டரநுதலினரனேகர்போற்றமார்க்
கண்டர்முன்மேவலுங்களித்துநோக்கினூர். (கங)

தந்தையர்தமைநிகர்தனயரைவரு
மந்தரவிருபுயவனசநாபனு
மிந்துவார்சடைமுனிக்கெதிரடைந்தடி
முந்துறத்தொழுதியற்பூசைமுற்றினூர். (கச)

மற்றவனுசிகள்வழங்கியாங்கவர்
நற்றவிசளித்திடவிருந்துநாமவேற்
கொற்றவர்தம்மையுங்குருமணிச்சுடர்
பெற்றவாதனத்தின்மேலிருத்திப்பேசுவான். (கரு)

நீண்டநாளாப்பதிநீங்கியைவரும்
பூண்டமாதவத்தரிற்புறவந்தோறுழன்
றீண்டுமிவ்வனமுறுமியற்கைகேட்டுமைக்
காண்டகுவேட்கையாற்கருதியெய்தினேம். (கசு)

குற்றமொன்றிலாதபைங்கொண்டல்வண்ணனே
யுற்றவனுயுமக்குறுதிகூறலாற்
பற்றலர்பொருளதோபாரெலாமினிப்
பெற்றநீரென்பதுபேசவேண்டுமோ. (கஎ)

தவத்தினையாற்றியதன்மையால்வருஞ்
சிவத்தினைத்தன்பெருஞ்சிலையிற்சாடிய
சுவத்திரைக்கேள்வனுந்துணைவனுமெனிற்
பவப்பெருஞ்சலதியாற்பயமுண்டாகுமோ. (கஅ)

ஊழ்வினைச்செயலிருந்தூட்டும்பெற்றியாற்
காழ்வனமடைந்துளீர்காட்சியெய்துவீர்
வாழ்வினைப்பொருள்செய்வோரியற்றும்வஞ்சனைத்
தாழ்வினைப்பொருள்செயார்தெளிந்ததன்மையோர். (கசு)

என்றிவன்பலமொழியெடுத்துக்கூறலும்
வென்றிவேலுழவன்மற்றிதுவிளம்பினுன்
கன்றினூல்விளைவெறிகருணையங்கட
லென்றுமெம்பாலருளிசைவதுண்மையே. (உ0)

அன்றியுமந்தகனஞ்சவஞ்சனூல்
வென்றிகொண்டுலகெலாம்வீயுநாளினு
மின்றுபோலிருந்திடுமியற்கைபெற்றுளாய்
நன்றுநின்கண்ணருணல்கப்பெற்றுளேம். (உக)

ஆதலாலெமைநிகாருந்தவத்தினர்
பூதலமிசையிலைப்புவியொன்றேவினிச்
சாதலும்பிறத்தலுந்தவிர்ந்துளோமெனக்
கோதிலானுரைத்தனன்முனிவர்கூறுவார். (உஉ)

பெருமகீபிரளையபேதமியாவையுந்
திருமனத்துட்கொடுவிளங்குந்தேற்றத்தாற்
றருமனின்பாற்சிறிதுணருந்தன்மையான்
கருமமேலவர்க்கறங்கட்டுரைப்பதே. (உங)

ஆதலாலெம்மனோர்க்கையந்தீர்தர
மாதவத்தொருவநீவழங்கவேண்டுமென்
றோதினர்தவுமியமுனிவனுதியோர்
மூதுணர்நாரதமுனியுந்தோன்றினன். (உச)

செய்திடுகடன்முறைசெலுத்திமன்னவன்
கைதருபூசனைகவர்ந்துயாவரு
முய்தருமாறுளத்துன்னியோர்மொழி
வைதிகமாமுனிமகிழக்கூறுவான். (உரு)

வேறு.

தேடியயனுந்திருமாலுந்தியங்குஞ்செந்தாமரையடிக
ளுடியகத்தும்புறத்தனந்தநயனங்களினுங்கண்டுவந்து
வீடியிமையோரெண்ணிறந்தவேதமுனிவரிறந்தாலு
நீடிவிளங்குமருட்காயநிலைபெற்றுயர்ந்ததவத்தோனே. (உசு)

திங்களிரவைவிளக்கினுஞ்செங்கதிரோன்வரவுசிந்திக்கு
மங்கணுலகமெனக்குரவரறைந்தமொழிகணிறைந்தேனு
மிங்குன்மொழிப்புத்தமுதுநுகர்ந்திருவல்வினையானிடர்நீங்கித்
தங்கும்வகையேநினைந்திருப்பன்றருமநிலைமைதவறாதோன். (உஎ)

தருமன்றவமுமிங்கிருந்ததவத்தோர்தவமுந்தவஞ்செய்த
பெருமன்றவமும்பலிப்பெய்தப்பெருமானிவண்வந்தடைந்தனையாற்
றெருமந்துழல்சிற்றறிவனைத்துந்தீரக்கருணைசெய்கவெனக்
கருமம்புகன்றுவிடைபெற்றுக்ககனத்துயர்ந்தான்கலைவல்லான். (உஅ)

உளருமகதியாழ்முனிவனுருவமறைத்தவக்கணத்திற்
குளிருமதிமாமரபுதித்தகுலவேந்தருண்மாமுகநோக்கி
வளருந்தவத்தோன்கறைவேலோய்மனத்தினையம்பகர்வாயேற்
கிளருமறிவுக்கிசைந்தவளவுரைப்பேனென்றுகிளத்தினனே. (உகூ)

வேறு.

கருதருமுனிவன்கூறக்கரங்குவித்துவகைமீக்கொண்
டிருபுறமிளைஞர்சூழவெழிலியையநிகர்த்தவண்ணன்
றிருமனமிளகியன்புதிகழ்ந்துடனிருந்துகேட்ப
வொருவருநிகரிலாதானுத்தரம்புகல்வதானான். (௩௦)

தருமமுமறையோர்தங்கடவப்பெரும்பயனுந்தேறுங்
கருமமேபெரிதாயுள்ளங்கருதுமிக்கடமையன்றி
மருவலர்பவங்கள்செய்தேவாழ்வதுமியாங்கணீதி
யொருவழிநடந்துந்துன்பமுறுவதுமுரைத்தல்வேண்டும். (௩க)

என்றிவன்புகலவங்கணிருந்தமார்க்கண்டரென்னு
மன்றலஞ்சடையோர்சொல்வார்மகிபநீகேண்மோயாக்கை
பொன்றுவதன்றிச்செய்தவிருவினைபோவதுண்டோ!
நின்றுசென்மங்கடோறுமின்பதுன்பங்கணேரும். (௩உ)

இன்னுமிவ்வுலகிற்றோற்றுமியற்கையோர்நான்குகூறுப்
பன்னுநற்றருமநூல்கள்பகர்ந்திடிற்றனங்கைக்கொண்டு
நன்னலந்துய்த்தியார்க்கும்நல்கலாதவர்களன்றோ
துன்னுமிவ்வுலகினின்பந்துய்த்துமேற்கதிகைவிட்டோர். (௩௩)

விரதநற்றானஞ்சீலமுபவாசம்வேதாத்தியானஞ்
சரதநற்கலைகளோதறவமுதலறம்பூண்டாற்ற
லரிதுடலருமைபாராதவரன்றேமறுமைதன்னிற்
கருதருமின்பமெல்லாங்காண்பவர்கருதொணுதோய். (௩ச)

இம்மையிற்செல்வராகியிருநிதியிரப்போர்க்கீந்து
மும்மையாங்கனல்சான்றாகமுறைவழாவேள்வியாற்றிக்
கைம்மலைதுரகமூர்ந்துகளித்தவரிங்குமங்குஞ்
செம்மையாமின்பந்துய்த்தேசீர்பெறுமவரேயன்றோ. (௩ரு)

செய்தவஞ்சிறிதுமின்றித்தீவினைவயத்தராகிக்
கைதவமீனவிர்த்திக்கரவுபொய்யொழுக்கராகி
மெய்தடுமாறித்துன்பம்விளைந்திடப்பயில்வோரன்றோ
வெய்திருதிறத்துமின்பமிழந்தவரென்பர்மன்னே. (௩சா)

ஆதலாற்பவஞ்செய்தீயோரனுபவித்திடுஞ்சுகங்கண்
மீதொருபொருளென்றன்னோர்வீழ்வதுநரகமாமாற்
சாதராய்நீவிரிந்தத்தலத்தரும்பரந்தவிர்க்க
நீதியோடடைந்தமேலோர்நெறிதபமுயலலாமோ. (௩எ)

தேவகாரியத்தாலிங்குச்சனித்துளீர்சிலதுநாளிற்
பாவகாரியத்துளோரைப்படுத்திவெஞ்சமரில்வென்றே
பூவைகாரியத்தைநீக்கிப்புவிபுரந்திருபாலின்ப
மேவுகாரியத்தராவீர்வேந்தரியாரிணையுமக்கே. (௩அ).

அரசர்களரசனனவறப்பெருந்தன்மைகுன்றா
முரசுயர்கொடியோய்முன்னர்மொழிந்தநல்லறத்தின்றன்மை
யுரைசெயவுணர்ந்தாய்மேலிங்கோதுவன்மறையோர்தன்மை
வரிசையாக்கோடியென்றேமாமுனிபுகறலானுன். (௩க)

திருவளருலகுகாக்குந்திறலுடையயனென்றோது
நிருபனுக்கொருவன்மைந்தனிகரறுதுந்துவென்போன்
பெருமிதவரசர்சூழப்பெருங்கடற்றானையோடுங்
கருமுகில்வண்ணனேபோற்காட்டினில்வேட்டம்போந்தான். (சo)

பிணையினம்வெருளவோட்டிப்பேருகிருழுவைவீழக்
கணைபலதுரந்துபன்றியினங்கெடக்கருவிநீட்டித்
துணையுரலடிக்கைமாவின்றொகுதிகடுஞ்சவெங்கும்
பணையொளிர்வயின்கடோறும்படுகுழிபாச்சினானே. (சக)

சுணங்கனுல்வலையால்வாராற்றொடுத்திடுகணையானீண்ட
கணம்படுபுளினர்தம்மாற்கவின்செய்வல்லூறுதன்னு
லிணைந்ததீவகத்தாற்பல்வேறியற்கையால்வனங்களெல்லாந்
துணிந்துநீறுகவேட்டமாடினான்றுந்துவென்போன். (சஉ)

பல்லுயிர்படுத்துமேவுமிடையொருபராரைமாவி
னல்லணிநிழலினோர்சார்நான்மறையனைத்துந்தேறி
வல்லமாதவத்தோன்புள்ளிமானுரிப்போர்வையோடுங்
* குல்லைகொண்டிருந்தான்மானென்றொருகணைகுறித்துவிட்டான். (சங)

பட்டவப்பகழிதன்னாற்பகரருந்தவத்தோனுவி
விட்டனனரசனெய்திவேதியன்வடிவங்கண்டே
தொட்டவெஞ்சிலையுமம்புந்துறந்துயிர்சோர்ந்துமண்மேற்
கெட்டமாமரம்போல்வீழ்ந்துகிடந்துபின்றெளிந்தெழுந்தான். (சச)

மானுரிப்போர்வையாலேமயங்கிமாதவத்தினோனை
யூனறக்கணையான்மாய்த்திங்கிடரினுக்கொருவனானே
னேனினித்தாழ்த்தறந்தைக்கியம்புவனிதனையென்னத்
தானனிகத்திற்சேரான்றமியன்போய்நகரங்கண்டான். (சரு)

துறந்தமாமுனிவனுவிதொலைந்துளசெயலைமைந்தன்
மறந்தருபிதாவுக்கோதமற்றவன்வெருவிச்சோர்ந்தே
யறந்தருமைந்தனோடுமடவிகடுருவியோடி
யிறந்தவனுக்கைகண்டேயிருவருமிரங்கலானார். (சசா)

பின்னருந்தந்தைதேறிப்பெண்ணொருபாகனுன
முன்னவனருணினைந்துமுகந்தனக்கெதிர்ந்தவண்ணம்
பன்னியசிறுவனோடும்படர்ந்தனன்பாங்கர்க்கண்டான்
மன்னியதாக்கனென்னுமாமுனிச்சூழன்மாதோ. (சஎ)

முக்குறும்பகற்றியார்க்குமுதன்மையாயிருந்துநோற்குந்
தக்கவன்றிருத்தாள்வீழ்ந்துதருங்கடன்முறையாற்பூசை
யக்கணமளித்தபின்னரம்முனியரசைநோக்கிப்
புக்குனிதிருத்திநின்னைப்பூசித்தல்வேண்டுமென்றான். (சஅ)

* குல்லைகொண்டிருத்தல் - அசைவற்றிருத்தல்.

மறையவனுரைப்பக்கேட்டமன்னவன்வெருவிச்சொல்வான்
குறைபலபுரிந்தபாவியடியனேன்மறையோற்கொன்று
நிறைபுரிபவத்தைத்தாங்கிநின்னுழையடைந்தேனும்மாட்
டிறைதருபூசைகோடற்கேற்குமோமுனிவவென்றான். (சகூ)

என்றசொற்குரவன்கேட்டேயிறைவனேயஞ்சலெந்த
வென்றிவேதியனைக்கொன்றவாறென்கொல்விளம்புகென்ன
நின்றவிக்குமரன்சாலநெறிவழாமுறைகற்றுள்ளோன்
துன்றியசேனையோடுந்தொடர்ந்தணிவேட்டம்போந்தான். (ரு௦)

புள்ளிசெய்மான்றோல்போர்த்தபுனிதனைவிலங்காவுன்னி
யள்ளிலைக்கணையான்மாய்த்தானுதலானடைந்ததெந்தாய்
கொள்ளுமெங்குலத்தினில்லாக்கொடும்பழிசுமக்கலாற்றேன்
வள்ளலேதயைசெய்கென்றுமலரடிவணங்கினானே. (ருக)

என்னலும்மீளவேதனிறைவனேயிறந்ததெந்த
முன்னரும்வனத்தினென்றான்முதல்வனுந்தவத்தரேறே
பன்னுமிவ்வனத்தினோர்சார்பகருமாநிழற்கீழென்றான்
றன்னருஞ்சுதனைநோக்கித்தக்கமாதவனுரைப்பான். (ருஉ)

மைந்தநீயிவர்தன்பின்போய்மாய்ந்தவேதியன்மாட்டெய்தி
யந்தநல்லுயிரைமீட்டேயரசனுக்குதவிசெய்கென்
றுந்தினன்றந்தைவாய்மைக்கொருப்பட்டுமறுவிலாத
கந்தனையனையகாளைகாவலனுடன்சென்றானே. (ருங)

தாதைசொற்றலைமேற்றாங்கித்தனையன்வந்திறந்தவேதன்
பூதலத்தணைமேல்வைகும்பொற்புணர்ந்தக்கணத்திற்
சோதிநற்சுருதியொன்றாலவனுயிர்மீட்டுத்தொல்லை
மாதவத்திருத்திமன்னன்மகிழ்ந்திடச்சூழல்புக்கான். (ருச)

பெருத்தமாரிதிசூழ்வையம்புரந்தருள்பெருமான்சிந்தை
வருத்தமுந்துயருநீங்கிவானிதிபெற்றுளாரிற்
கருத்துயர்ந்தவனுடன்போய்க்கலைமுனிதாக்கனென்னு
மொருத்தனைவணங்கிப்போற்றியுளமகிழ்ந்துரைப்பதானான். (ருரு)

நீங்கியவுயிரைமீட்டுநிரையத்தெய்தாமற்காத்த
பூங்குலமுனிவர்கோவேபுனிதமாதவத்தர்தம்மாற்
றுங்கொணக்கருமமிந்தத்தன்மைநீவருத்தமின்றி
யாங்குநின்மகனையேவிமுடித்ததற்புதமாமன்றே. (ருகூ)

பெருமிதநின்மாட்டின்றுகண்டனன்பெரியோயிவ்வா
றரிதரவியற்றுந்தன்மையாதிதேவறைவாயென்றே
நிருபன்றன்வேட்கையோடுநெடுங்கரங்குவித்துக்கேட்பச்
சுருதிகண்முழுதுந்தேர்ந்ததூயவன்பகரலானான். (ருஎ)

அருளுடன்சரதம்போற்றியருமறைநெறிவழாது
யொருவழிநடந்துநித்தகருமங்களுயர்த்தியின்சொன்
மருவியகற்புமிக்கமடந்தையோடிருந்துளோற்குப்
பொருளலவெதுவுமென்றுபுகன்றதான்மறைகளெல்லாம். (௫௮)

அன்னவையன்றிமுன்னுளமருமிச்சூழலெல்லை
தன்னில்வாழுயிர்கட்கெல்லாந்தபுதனோய்பசிமூப்பின்றி
மன்னுதலாகமாளின்மந்திரத்தெழுப்புமாறு
நன்னதிபுனைந்தசென்னிநாயகனளித்ததுண்டால். (௫௯)

ஆதலாற்பொன்றிநீங்குமருந்தவனுய்ந்தானென்று
கோதிலானுரைத்துமன்னன்மகிழ்வுறப்பலவுங்கூறிப்
போதிநீநகரத்தென்றுபோக்கினான்மைந்தனோடுஞ்
சோதிவேற்றானையோடுந்தோன்றலும்புரம்புகுந்தான். (௬0)

சொல்லரும்புகழ்சேர்வேந்தே தூயவேதியர்கள்தன்மை
யெல்லைகண்டுரைக்கவல்லோரியாவரேயிதுவுமன்றி
வல்லமன்னவர்கள்தன்மைவகுப்பனோரிதியாசந்தான்
மல்லலம்புயத்தோய்கேட்டியென்றிதுவகுப்பதானான். (௬௧)

வேறு.

மறைமுழுதுணர்ந்தருந்தவத்தில்வைகிய
திறலுடையத்திரியென்னுந்தேசிக
னறைகமழ்குழலியைநயந்துவேட்டருண்
முறைநெறியவளுடன்முயலுநாடனில். (௬௨)

மைந்தர்கள்பலரையீன்றெடுத்துமாதவன்
றந்தநற்பணிவிடைதவறெய்தாமலே
யந்தியும்பகலுநின்றாற்றிவைகினாள்
பைந்தொடியருந்ததிநிகர்க்கும்பான்மையாள். (௬௩)

நாட்சிலகழிந்தபினங்கையோடுறு
வாட்கையையிகழ்ந்தொருவனத்தைநண்ணுவான்
றாட்கலமினியெனத்தனியிருந்துமின்
னாட்கிதுகூறினானறிவுநாட்டியே. (௬௪)

பொற்றொடிதவத்தினோர்போகமாதிகள்
பற்றெனத்திருமனம்பற்றுவாரலர்
நற்றவமேபொருளானநண்பினா
லுற்றவாறின்றுனக்குணரக்கூறினேன். (௬௫)

பைந்தொடியான்மகப்பயந்தபின்னர்நின்
சந்தணிமுலைதொடேன்றவத்திற்சாருவேன்
மைந்தர்பாலிருத்தியோவருதியோவெனாச்
சிந்தையீண்டுளபடிசெப்புவாயென்றான். (௬௬)

தருமமோர்படிவமாச்சமைந்தமாதவப்
பெருமநின் றிருவடிபரவும்பெற்றியே
கருமமுமின்பமுஞ்சுதருங்காட்சியும்
பெருமையும்வேறிலையெனக்குப்பேசினே. (சுஎ)

கருவமைந்துளதினங்தொட்டுக்காதலற்
றருவளவியாவரோசார்ந்துபோற்றிஞெ
ருருவினரானவர்க்கொருவனுண்டியான்
வருவனின்னுடன் றவவனத்தின்மாசிலாய். (சுஅ)

காப்பவனொருவனுண்டெனினுங்கற்றவர்
வாய்ப்படவொருமொழிவழக்கமாகுமா
லேர்ப்படவில்லறத்திருத்திமைந்தரை
நீப்பதுபெரிதெனவோதுநீர்மையே. (சுகூ)

அரும்பொருள்கைப்படாதனையவில்லறம்
விரும்பிடமுடிப்பதுவருத்தமெய்ம்மையே
தரும்படிநினைந்திடிற்றயிரியப்பெயர்
பொருந்துவேந்தோர்மகமுடிக்கும்பொற்பினன். (எ0)

அந்தமாமகத்தினிலடைந்துமாநிதி
தந்ததுகொணர்வையேற்றனையர்க்கீந்துநா
முந்துயர்தவமெலாமுடிப்பதேயெனப்
பைந்தொடிகூறலும்பதிவியந்தனன். (எக)

நிறம்வழாமுகின்முலைநிரைத்தவாய்மையி
னறம்வழாமுறைதனக்கருந்தவத்திஞேன்
புறம்வழாவிருபுயம்புளகரும்பியே
மறம்வழாமன்னவன்மகத்திசேகினேன். (எஉ)

புலவுவேன்மன்னவன்புரவிமாமகம்
பலமுனிவரரொடும்பயிலுஞ்சாலையிற்
குலமுனிமேவலுங்கோவணங்கியே
நிலவுபூசனையெலாநிரப்பினனரோ. (எங)

கடன்முலைபுரிந்தவக்காவலன்றனை
மிடலுறுதவத்திஞேன்வியந்துபல்வகை
யடலுறுமாசிகளளித்துவைகியே
யிடரகல்வேந்தனுக்கிதனைக்கூறினன். (எச)

சதமகன்றுமரைத்தவிசின்மேவினேன்
றுதிமிகுநறைகமழ்துளவந்தாங்கினேன்
விதமிகுசெஞ்சடைவிமலனுதியா
மிதமிகுகடவுளர்யாருநீயரோ. (எரு)

சுருதிநூன்முறைப்படிதுணிந்துசிந்தையிற்
கருதினீயன்றியோர்கடவுளில்லையென்
றருமறைவல்லவனறையக்கேட்டனர்
பருதியிற்றூய்மைசேர்தவஞ்செய்பண்பினோர். (எசு)

மறைதிறந்தொழுகுதேனலங்கன்மன்னனை
விடையுகைபரன்சுடரெனவிளம்பலுங்
கடையுகமுடிவெனக்கனன்றுகௌதமன்
சடைமுடிதுளக்கியேசாற்றலாயினன். (எஎ)

பொருள்விழைவானவர்புன்மைநன்மையென்
றிருளறநோக்கிலரென்பதுண்மையே
கருதருங்கடவுளைக்காசினிக்குள்வா
ழொருமடமனிதனென்றுரைத்தறக்கதே. (எஅ)

வையகம்புரந்தவேன்மன்னனுமெலா
முய்யநாடொறுந்தொழுமொருவனுமெனி
லையமற்றினியவர்க்காசிகூறலுஞ்
செய்யவர்வணங்கலுஞ்சிறப்பின்பாலதே. (எகூ)

என்றருட்கௌதமனியம்பவத்திரி
நன்றியான்கடவுளேஞாலநாயக
னென்றசொற்றவறலவிருக்கினேதுமா
லின்றிதற்கையநீயெய்தனன்மையோ. (அ௦)

மன்னனையன்றியக்கடவுண்மற்றிலைப்
பின்னொருமுனிவர்பாற்பேசுவம்மென
வுன்னியகௌதமனுடன்பட்டேகினன்
சொன்னவத்திரியொடுதொடர்ந்தன்றென்பவே. (அக)

முனிவரரிவர்நிலைதேர்தழுண்டதென்
றினிதுறவவருடனேகினர்பலர்
புனிதனைநீழலிற்புகலத்தேறிய
தனிசனற்குமரர்பாற்சார்ந்துளார்களால். (அஉ)

போற்றியேகடன்முறைப்பூசைநேர்ந்தபின்
சாற்றினரிருவருந்தருக்கம்மாமுனி
யேற்றதன்னுளந்தனிற்கருதியீங்கொரு
மாற்றமோதினனிவர்மையல்தீரவே. (அங)

மண்ணுலகதனிடைவாழுமாந்தர்கள்
கண்ணுமாங்கவருளக்கருத்துங்காவலு
மெண்ணுமாருயிருநற்கதியுமின்பமு
மண்ணலாமவனிலாதவனியுய்யுமே. (அச)

தவத்தினர்வின்னவர்தருமவேதிய
ரெவற்குமிங்கரசனுலின்பமெய்துமேற்
புவித்தலத்தாருயிர்பொலிவெலாமவன்
கவித்தவெண்குடைநிழலென்றுகாண்மினே. (அச)

நீதியுமறைபுகனெறியும்வேள்வியு
மாதவமடந்தையர்கற்புமாரியுங்
கோதறுமன்னனாற்குறைபடாதவன்
போதநீங்கிடினிதுபொய்க்குமென்பரால். (அசு)

கதியினையுதவியகடவுள்போலவே
மதிபெறுமுயிர்க்கெலாம்பவங்கண்மாற்றலாற்
பதியினைக்கடவுளாப்பகரவேண்டிய
விதியுளதென்றனன்வணங்கிமீண்டனர். (அஎ)

அன்னவர்தயிரியனருகடைந்திவன்
சொன்னதுபகறலுந்தோன்றலின்புரு
முன்னவனத்திரிமுயன்றுவேண்டிய
பொன்னெலாமுதவினன்புனிதன்போயினான். (அஅ)

மாதவன்மாதுழைவந்துமாநிதி
காதலற்குதவியேகற்புளாளொடு
போதுறத்தவத்திடைபுகுந்துளான்சுதர்
கோதறவில்லறத்திருப்பக்கூட்டியே. (அகூ)

வேறு.

ஓராழிதனையுருட்டியுலகங்காக்கு முத்தமனேவிறல்வேந்தர்க்குள்ளவண்மை, சீராகவுனக்குணரப்புகன்றேன்மன்னன் றெய்வதமாமிப்புவிக்கென்றுணர்வைமுன்னு, ணோராருமுரைக்கரியதர்க்கனென்னு நிமலமுனிதவத்தடைந்து வாணிகூறப், பேராருமுனிதெளிந்தவிசிட்டமார்க்கம் பேசுவனீகேட்டியெனப் பெரியோன்சொல்வான். (கூ0)

முன்னாளிற்றர்க்கமுனிதவத்தையாற்றமுளரிமலரருங்கோவின்முகிழ்மென்கொங்கை, மின்னுருமிடையுடையவாணியெய்திவேதியனைவியந்துனக்குவேண்டுமாறு, சொன்னாலிக்கணத்தளிப்பனுரைத்தியென்றே சாற்றமொழிக்கவன்மகிழ்ந்துதொழுதுபோற்றித், தன்னேநிலாவறங்களாராய்ந்தெற்குச்சாற்றுவதேவிருப்பமெனச்சாற்றலுற்றாள். (கூக)

வடித்தசதுமறையுணரவல்லோரந்தவானவர்பொன்னுலகத்தினெண்ணில் காலங், தடித்துயர்ந்துபுளகரும்புதனத்தாளோடு தனிப்போகனுகர்ந்திருப்பச் சாதுவாகி, மடித்தகமைமிகுந்தொழுகுமதுரத்தீம்பால் வழங்குகவைமருப்பாவுமறைகள்வல்ல, திடத்தெழுவந்தணர்க்குதவினுரோமமொன்றுக்காயிரமாண்டனுபவிப்பர்தேவரூரில். (கூஉ)

வருத்தமறப்பரம்பொறுக்குந்தகையாய்மேனி வண்மைதிகழ்தன்மையு டைமறுவிலாத, வெருத்தமறையவர்க்களித்தோர்சுரபியோர்பத் திசைந்தளித் தபேறடைவரெழிலார்வங்க, மருத்தியுடனளித்தவர்தண்மதியூர்சேர்வா ரருங் கனகம்விழைந்தளித்தோரமரர்வைகு, திருத்தருகற்பகக்காவுங்கனகநாடுந்தெ ய்வநிதிகளுமுடையசிரியோரே. (கூஙு)

பெற்றவெழிற்கொடியையருங்கனல்சான்ருகப் பெயர்ந்தொருவன்றனக் கொன்றுபெருமற்றுனங், கற்றவர்சொற்படியேழாமாண்டிற்றந்தோன் கதிசே ர்வன்பிதுர்க்களுடன்கலைகளெல்லாஞ், சொற்றுளவக்கனன்முகத்தினமரரார்க் குந்துய்மையொடுபலபண்டஞ்சொரிந்துநாளும், பற்றறவேயவிநோர்வோன்கு லத்தாரோடும் பகரரியகோவுலகம்பயில்வன்மன்னே. (கூச)

பசித்தவற்குமுசிப்பகலவன்னமீந்தோர் பலகாலஞ்சுரருலகினிருப்பர்வ ண்மை, யிசைவித்தபூதானமளித்தோர்பொல்லா விடர்நீங்கிநலம்புணவரிதனி னன்றுஞ், சுசித்தமொடுபலபொருளுங்கனவிற்பெய்து சுருதிமுறைமாமகங்க ள்பயில்வோர்தம்மை, வசித்தகலாக்கடவுளராங்கவரையெல்லா வளமிலருகதி களெல்லாம்பயில்விப்பாரால். (கூரு)

தூய்மைபெறமகமொன்றுகருதியாற்றிற் றுய்த்திடுவனிதைத்தபடிதுவந் தமின்றி, வாய்மைமனமொருமித்துக்கடவுடன்பால் வழங்கினவற்குளதுபரப தமிவ்வண்ண, மோய்வில்சதமகமியற்றியெண்ணிலோர்க ளுய்ந்தவர்வைவச்சு தனைமுதலோரென்றே, வேய்படுதோளெழில்வாணிபுகன்றுளென்று விரித்து ரைத்தான்மிருகண்டவிமலன்மைந்தன். (கூசா)

பாரதிதன்கிளைதையெனவிதற்குநாமம் பகர்வரெனமொழிவானைப்பணிந்து வாசத், தாரசையுமணிமார்பன்புகல்வான்வைவச்சுதமனுவின்றன்மையெலாந் தமியேன்றேறக், காரணயவருண்முனியேபுகல்வாயென்ன களித்துரைத்தா னொருவருக்குங்கடக்கொணுத, போரெமனையொருநொடியில்வென்றுவென்றி புனைந்தவனியுய்வித்தபுனிதமூர்த்தி. (கூஎ)

கதிரவன்றன்பெரும்புதல்வனுகத்தோற்றிக் காவலனுமோரயுதபருவகா லம், விதிமுறையாற்றவம்புரிந்துபுனிதனுகி மீண்டுமருந்தவத்திடையேமேவு நாளிற், புதியபுனல்வருந்திதண்டுளைவான்சென்றுபுனற்படிந்துகரைமருங்கிற் பயிலும்போதி, லெதிரெழுந்துமறிந்தொருமீன்புனலைநீங்கி யிறைவனுவந்திட வொருசொலியம்பிற்றன்றே. (கூஅ)

கருதரியதவமியற்றிவிளங்காநிற்குங்காவலனேயிப்புனலில்கணக்கிலாத, வெருவருபல்லுயிர்கெருங்குமெனையிங்கியாதுவிழுங்கிவிடுமோவென்றேமெவரு வுநின்றே, னருகினெருபுனற்றடத்தினுறுவிப்பாயே லச்சமகன்றுய்வனுனக் கென்னுலான, பொருவறுகைம்மாறுளதாமென்றுமீனம்புகலுதலுமுடன்பட் டான்புனிதவேந்தன். (கூகூ)

சிற்றுருவிற்றிகழ்மீனந்தன்னையேந்திச் சென்றொருகூபகத்தினிடைசிறப் பினுய்த்தே, கொற்றவனிற்றலுமெய்திவினவவந்தக் கூபமளவும்வளர்ந்துமே விவாவி, பற்றுறுதெனைக்கொடுபோய்வெறொர்நீரிற் பணித்தியெனப்புகலுதலு ம்பரிவினேந்தி, மற்றொருநன்னீர்த்தரவில்விடுத்துப்போனன் வளர்ந்ததுவும் பற்றுமல்வாடிற்றன்றே. (கல00)

தவங்கவசத்திருமேனிமனுவென்றேதுந் தக்கோனைக்கண்டுரைப்பத்தர ணிக்கெல்லாம், பவந்தவிற்குங்கங்கையினோர்மடுவினூடு பயில்வித்தான்சிலவை கலிறந்தபின்னர், நவந்திகழும்புகழரசனடைந்துநோக்க நன்னதியும்பற்றுத வாறுகண்டே, யவந்தவிருமுவற்கடலினிட்டானந்த வரியசலசரமரசுக்கறையு மம்மா. (கல0க)

உருகியுலகோரேழுங்கடல்களேழு மொன்றுகிவுயிரனைத்துமிறக்குங்கா லம், பருகுதினிச்சின்னாளின்முன்னாய்நீயோர் மரத்தோடமுற்றுவித்துவயங் குமுண்டி, தருகுறைவில்பலபண்டநிரைத்துமிக்க தவமுனிவரெழுவருடன்சா ர்ந்தாலும்மைத், திருகறயான்காப்பனெனவுரைத்துநீங்கிச் சென்றதுவர்க்கட ல்புகுந்ததெய்வமீனம். (கல0உ)

அவ்வுரைகேட்டகமகிழ்ந்துமனுவுமீண்டாங் கரியபெருந்திறலோடமமை த்துவேண்டுங், கைவருபல்பண்டமெலாநிறைத்துஞானங் கதித்தசத்தவிருடிக ளோடணுகிவேந்தன், பவ்வமருகுறவிருந்துநினைத்தான்மீனம் பரவையிலெ றிகரைவாய்ப்பட்டோடத்தின், மைவருந்திண்டிறற்கயிறுகோட்டிற்பூட்டி வலி த்துநெடுவாரிதியின்மன்னிற்றன்றே. (கல0ங)

பேரோதையூதையுடன்சத்தமேகம்பிளிறுமதகரித்துதிக்கைப்பிரமாணத் தா, னீரோதந்தரச்சொரியக்கடலோரேழுநிமிர்ந்தொன்றுவடவரையைச்சூழ் ந்தோர்நீராற், பாரோதுகுலகிரிகண்மறைந்துமேலாப்பகலவனுமதியமிறந்திரு ள்சூழ்ந்தெங்கும், காரோதந்தனிற்றுளங்காதிருத்திற்றந்த காவலன்றன்றோ ணிதனைக்கடற்கண்மீனம். (கல0ச)

இத்தகைபல்லாயிரமாண்டிருந்தபின்னரிருணீங்கிவாரிதிகளேழதாகி, மு த்தலமுங்கிரியேழுந்தெரிந்துகப்பமுடிவானபின்னரொருவரையின்சாரற், சத் தவிருடிகளுடனேயரசன்வைகுந்தனியோடமோட்டியதிற்கயிறுமாட்டி, மத்த கவன்றலையெடுத்தேயிவரைநோக்கி மகிழ்ந்துசலசரமொருசொல் வழங்கிற்ற ம்மா. (கல0ரு)

வந்தவிம்மன்வந்தரத்துக்கும்மைக்காப்பான் வளர்மீனமாகியுமக்குதவிசெ ய்தோ, மிந்தவைவச்சுதமனுவேதவஞ்செய்தென்பாலெழுவகைத்தோற்றமுமு லகினெய்துவிப்பன், முந்துதருமூவுலகுக்கிவனேசெங்கோன்முறைநடத்துமி கிறவனிதையுணர்மின்வாசக், கந்தமலரிடத்திருந்தேயகிலநல்கும் கடவுளியா னெனப்பகர்ந்துகரந்ததன்றே. (கல0சு)

பெருவேடத்தனிமீனங்கரந்தபின்னர் பெருந்தவத்தரெழுவருடனொருவனை, திருவேடப்புரவலனுமவரோடோடந்தீர்ந்துலகிற்பெருங்காலந்தவத்தையாற்றிக், கருவேடமெய்தாதபரமஞானக் கடன்மூழ்கிவன்புவியைக்கருத்தினேக்கி, யொருவேடவாருயிருமின்றிவைகுமுலகினிய வுரைத்தான்போயொருமூவர்க்கும். (௧0எ)

மற்றவர்கள்பல் லுயிருமுளவாய்மல் கவருவியெனவிளம்புதலான்வரங்கொண்டெய்தி, வெற்றிபுனைசராசரங்கண்முதனுட்போலவிளக்கியுலகனைத்துமறைநெறிக்கணீட்டி, கொற்றவனுயிருந்துலகம்புரந்தானிந்தக்குலவரசன்பெருங்காதைகுறித்தோர்கேட்டோர், சுற்றமுடனளப்பரியவின்பந்துய்த்துத் தோற்றருநற்கதியினிடைதுன்னுவோரே. (௧0அ)

வேறு.

என்னமுன்னர்மிருகண்டர்தந்தவனியம்பவென்றிபுனைகின்றவேன்
மன்னர்மன்னனறன்மைந்தனின்புறமகிழ்ந்துபின்னிதுமொழிந்தனன்
பன்னுகின்சொன்மறையன்றியுன்னுமொருபண்புவேறுமுளதோவென
வின்னுமொன்றெனதுசிந்தைதங்குமிதையின்றுவந்தருள்வழங்குவாய். (௧0௯)

ஈசனைப்பரவிவந்தவஞ்சநமனெஞ்சவென்றுலகடங்கலும்
நாசமுற்றிடினுமுற்றுணர்ந்துயிர்நலிந்திடாவரமியங்குவோய்
நேசமுற்றனன்மடங்கல்கற்பமதுநெருங்குகின்றபொழுதெவ்வணங்
காசினிப்பலுயிர்மாளுமிங்ஙனிதுகட்டுரைத்தியெனவோதுவான். (௧௧0)

நாலுகங்களுமொருங்குகூடினதுநாமமெய்துறுமகாயுக
மேலுமவ்வுகமுமாயிரங்களொரிரண்டயன்றினமிதென்பரான்
மேலுறும்பகலில்வானவர்க்கரசர்மேவுமீரெழுவர்தீர்வரான்
மூலமென்னுமலர்வேதனுக்கிரவுமூடுமாயிரமுகத்தினே. (௧௧௧)

பல்லுயிர்த்தொகைபரப்பினீங்கியொருபங்கயத்தனிமலர்க்குளே
யல்லினிற்றுயில்பொருந்துமூவுலகழிந்துவானவர்வரம்புதீர்ந்
தொல்லெனக்கடலொலித்துமேருவையுறச்சிரத்தளவிறுக்கிமே
லெல்லைமுற்றுமுறமூடிருட்புனலின்யாவொருத்தனுமிருந்துளேன். (௧௧௨)

அண்டபித்திகையினளவுநீரலதறிந்துகூறவொருபொருளிலை
கண்டுபுத்திமிகநொந்திளைப்பினிருகண்கவற்சியுறுபோதினிற்
கொண்டலொத்ததிருமேனியோடொருகுருந்துபச்சையிலைமீதுவந்
தண்டிநிற்கவதுகண்டெனக்குமனமாதரத்தின்மகிழ்வானதே. (௧௧௩)

மாதவத்தினுருவானநீயுடல்வருத்தமாறிடவிருத்தியென்
காதலற்றவுதரத்தினென்றுகளிவாப்திறக்கவதினெய்தினேன்
பூதலத்தினுடனேகஞாலமவர்புந்தியோடுறவிருத்தல்கண்
டாதரத்தினுடுசிந்தைசெய்தவனகட்டிலெண்ணில்பகல்வைகினேன். (௧௧௪)

மீளவாய்வழிதிறக்கவந்துபுனல்வேலையிற்குதிகொள்காலையிற்
றுளதாமரைமலர்ச்செவ்வாயுடைத்தனிக்குருந்தின்முகநோக்கியே
யாளுமெந்தையெனவந்திளைத்தபொழுதாதரித்துதவியாயினுய்
காளமேனியுடையாயுன்னுறுபுகலென்றுகாதலில்வினவினேன். (கக௫)

கருணையங்குழவிநகைபுரிந்துலகுகாக்குநீலமணிவண்ணன்யா
னிருணெருங்குபுமடங்கலம்புனலிசைந்துனைத்துயர்விளைக்குமென்
றருகணைந்துனதிளைப்பகற்றினனயற்சியின்றியினியென்றுமிவ்
வருணவாரிதைதொடராதெனச்சொலிவரங்கொடுத்திதுவிளம்பினுன். (கக௬)

காலமேற்சிலகழித்தபின்னரெழுகடலுமாதிரமுமேருவும்
ஞாலமுற்றுமுளதாகிநான்முகனலங்கொள்கண்டுயில்துறக்குமிக்
கோலமுற்றபுனல்வற்றுமஞ்சலெனவக்குருந்தினுருவானவன்
சாலவெற்கருள்புரிந்திசைக்குமொழிதன்னிலென்றுயர்தவிர்ந்ததே. (கக௭)

வேறு.

நிரைபடுகருணைசேர்நீலமேனியென்
றுரைபடுகுழவியையுகந்துநோக்கியே
மரைபடுநின்னுதரத்தின்மாயைபோற்
கரைபடவரியனகண்டுளேனியான். (கக௮)

ஏழ்கடலேழ்முகிலேழுமாதவ
ரேழ்கிரியேழ்தலமேழுமாதர்க
ளேழ்நதியேழுலகேழுமாமருத்
தேழ்வகையாருயிர்யாவுங்கண்டுளேன். (கக௯)

பாதலமாயிரம்பணுமுடித்தலை
யோதுயிர்மாசுணமுயர்தவத்தினோர்
காதல்விண்மீனுடன்கனகமேருவு
மாதவநின்றிருவயிற்றிற்கண்டுளேன். (க௨௰)

சுருதியினோசையுந்தொகையின்மந்திர
வொருதனியோசையுமுரைக்குமாகமந்
தருதிறலோசையுந்தாழ்விலேனூற்
பெருமிதவோசையும்பிறழ்தல்கேட்டுளேன். (க௨க)

கண்டவிப்பரிசினைக்கருத்திற்றேர்ந்திலன்
கொண்டனனையமென்குறைகடீரவே
யண்டமுன்னுட்படுமாயவாறெலா
முண்டகவாயினுன்மொழியவேண்டுமால். (க௨௨)

என்றியான்வினவவாலிலையின்மீதுறு
மன்றலம்பைந்துழாய்மாலைவானவ
னன்றுனக்குளதெலாநவில்வன்கேட்டியென்
றென்றியகருணையாலுரைத்தன்மேயினுன். (க௨௩)

பூரணாரத்திற்பொருந்துமாற்றலா
ரூரணனெனப்பெயர்கொள்வனுடொறும்
ஆரணனுயுலகாக்கிமூன்றுகட்
காரணனாகியேகழிப்பன்காண்மினோ. (௧௨௪)

மண்டலம்பாதமாவானமேனியர்
முண்டகன்முதலினோர்மொழியுறப்பதா
பண்டநல்வதனமாம்பரிதிமாமதி
விண்டிருவிழிகளாவிளங்குவேனியான். (௧௨௫)

வன்றிறன்மருப்பினால்வயங்கரும்பெரும்
பன்றியாயிப்பெரும்பரவைசூழ்புவி
நின்றிடந்ததலபாதலங்கணீங்கிமீண்
டன்றுவந்தெய்தியவமலனனரோ. (௧௨௬)

உடுக்கணுள்கோள்கடேனூறலங்கலா
வடுத்தமாருதங்களேசுவாசமாகவே
கடுத்திகழனந்தன்மேற்கடலினுப்பணிற்
படுத்தறிதுயிலமர்பரமன்யானரோ. (௧௨௭)

அகிலமுமேருவுங்கடல்களானவு
மிகலறுவரைகளுமேந்தியோர்பெரும்
புகலறும்பாந்தளாய்ப்பொற்பினுயிர
மிகவொளிர்சிரத்தொடும்விளங்குவேனரோ. (௧௨௮)

பண்டொருமந்தரம்படுத்துவாரிதித்
தண்டயிர்மதித்தெதிர்தானவக்குலம்
விண்டிடநீக்கிவிண்ணவற்குவெண்சுதை
யுண்டிதந்துதவியவொருவனனரோ. (௧௨௯)

இயங்குமிப்பெரும்புனலிரவுதீர்ந்துழி
தயங்கன லுருவமாய்க்கவர்ந்துதாரண
முயங்குமேழுலகுறுமுடிவினீக்குவன்
வயங்குமிவ்வுலகினைவைப்பன்மீளவும். (௧௩௦)

முகத்தினும்புயத்தினுமுதற்கவான்பத
யுகத்தினுமீளவுமுய்யநல்குவன்
மிகுத்தநல்வேதியராதியெய்தரும்
மகத்துவமுடையநால்வருணத்தோரையே. (௧௩௧)

அகந்தையுங்காமமுமருங்குரோதமு
மிகுந்தமாச்சரியமும்விடுத்தமேலவ
ரிகம்பரமிரண்டினுமெனதுதாள்களே
சுகந்தருமென்றெமைத்தொழுதுபோற்றுவார். (௧௩௨)

என்னைவிட்டொருபிரபஞ்சமில்லையிங்
கன்னநற்பிரபஞ்சமன்றியானிரே
னுன்னுமென்னகத்தினும்புறத்துமுண்டரோ
சொன்னமண்ணந்தரசுவற்கமாதிகள். (கங)

அறந்தலைகுலையினுமமரர்தம்முறை
பறந்தலைகுலையினுமறுவிலாருயிர்
சிறந்தலைபடுகினுந்தோற்றித்தீர்க்குவன்
பறந்தலையெதிர்ந்தசூர்பாழ்படுத்தியே. (கச)

முந்துநாலுகங்களின்மொழிந்தசீரறம்
பந்தநீங்காவகைபரிக்கும்பான்மையா
லிந்துவெண்மையுஞ்சிவப்பிசைந்தநீலமும்
விந்தைசேர்பீதமுமேனிகொள்வனல். (கரு)

இந்தநல்லிரணியகருப்பனென்னுடை
யுந்தியினுதித்தவனுறங்குகங்குல்வாய்
சந்ததமிவ்வணந்திகிரிதாங்கியே
பைந்திறனுதகத்திற்பயில்வன்பண்புளாய். (கசு)

ஞானமாமுனிவரும்பிறருநம்பெரு
கானமாய்கையைக்கரைகாணவல்லரோ
மோனசிற்சுருபநன்முனிவநின்வயி
ஞானநற்கருணையாலறியவோதினேம். (கஎ)

போதினிதாமரைப்போதில்வைகுவோன்
மாதுயிநீக்கிமற்றவனுணர்ந்தபின்
பூதலமுதித்திடுமிருத்திபோயென
மாதவனுரைத்தெனக்கருள்வழங்கினான். (கஅ)

வேறு.

அன்னவன்றனைவணங்கிமீண்டவனலர்ந்ததாமரையின்மீதிலே
பொன்னைநேருடல்விளங்கவைகியபுராதனன்றனையெதிர்ந்துளே
னின்னமுந்துயிலகன்றிலானெனவிருந்துபல்பகல்கழித்தனன்
மன்னுவேதியனுணர்ந்தனன்சலதிவெற்றிவெள்ளம்வடிவாயதே. (ககூ)

முந்துமும்பர்கலையிந்துவெஞ்சுடர்முனிக்கணங்கடொகைவிரிவெலாம்
வந்துவேதனில்விரிந்ததம்புவிவளஞ்சிறந்தனநலந்தனு
விந்தவண்ணமுனிறந்தவூழிகளுமெண்ணிலாதனவெதிர்ந்துளே
னந்தவூழியினிமேலுமெண்ணிலவடக்குமெம்பரமனுடலே. (கச0)

அன்னபெற்றிவடபத்திரத்தனெதிரானசோதியைவிநோதியை
மன்னுசக்கரமெடுத்தசெங்கைசெறிவாமனைப்பதுமனுபனைப்
புன்னுமைத்துனனெனப்படைத்துணைபடைத்தவெற்றிமகிபாலனை
யுன்னையிப்புவியினெப்புளாரிலையுரைக்கவென்றுமுனிகூறினான். (கசக)

வேறு.

பற்றிலாதமுனியிவ்வணமோதப்பச்சைவண்ணன்முகமண்டலநோக்கி
வெற்றிமன்னன்முகமன்பலகூறிமீளவேதியனைநோக்கியுரைப்பான்
சொற்றவெங்கலியுகந்தனிலெல்லாத்தூயநல்லறமுநீங்கிடுமென்றே
கற்றுணர்ந்தவருரைத்தனர்முன்னங்கண்டநீயுரைசெய்யென்னவுரைப்பான். ()

நான்குமூன்றிரண்டொன்றும்நாலுகத்தருமமாகியபாதம்
வான்கிளர்ந்தமொழியாற்கலியொன்றுமல்குதாளுடையறம்வலியின்றித்
தான்கலந்தசரதந்தடுமாறத்தகுதிமாந்தர்தமதாயுகுறைந்தே
மான்கலந்தவிழிமாதர்மயக்கால்வாஞ்சைதீர்வர்கலைமாண்பினிலாரும். (கசா௩)

கற்றநூல்கள்சிறிதாதலின்மோகங்காணுமக்கணமுலோபமுதிக்கு
முற்றகாமமொடுகுரோதம்விளங்கியோங்குறும்வயிரமவ்வயிரத்தாற்
சுற்றமேயெனினுமற்றுளரெனினுந்தோற்றிடுங்கலகமாற்றுதல்கூடா
பெற்றநல்லறிவுபேதமதாகிப்பெயர்தலால்வருணசங்கரமாமே. (கசாச)

வேதமோதனியமஞ்செபமோமம்வேதவித்தகர்விடுப்பவர்பின்னோர்
காதலாயிவைசெலுத்துவர்மன்னர்கவினுந்தேசுமொழுக்கங்களுமற்றே
யேதிலாரெனவியங்குவர்நன்னீரின்பநல்குபலபண்டமனைத்தும்
போதநல்லுரிசைபொய்க்குமரங்கள்பூத்தல்காய்த்தல்சிறிதேபுலனுமே. ()

தக்கநல்வயன்முளைத்துளகூழ்செஞ்சாலியேமுதற்றுனியமெங்கு
மிக்கவல்விளைவுகுன்றுமியற்பான்மேதியோடுபசுவாதிகணல்கா
தொக்கநல்கினுமினிச்சிறிதென்பாரேய்விலாவரசனீதிவிடுத்தே
கைக்கொள்வாரொருவர்மாநிதியாருங்கவலையன்றிமகிழ்வாயொழுகாரே. ()

மேற்குலத்தர்தொழில்வாணிபமாதிவெய்யதன்மைபலசெய்குவர்பின்னு
மேற்குநன்மரபிகழ்ந்துவிடுத்தேயேதிலாச்சமையவாதிகளாவார்
காப்பர்தம்முடலைவல்விரதங்கள்கருதறங்களில்வரும்பயனெல்லா
மாற்கமன்றியதுபொய்யெனநீக்கிமனதிலொன்றுரைகளொன்றெனவாழ்வார்.

காலமாரிபொழியாதலகெல்லாங்கபடமோடுசினம்வஞ்சினமேலாய்
கோலமானகுணமுள்ளவராயுக்குறையவெம்பிணிகளான்மெலிவாராற்
சாலவேபவமியற்றியதீயோர்தாழ்விலாதவலிசேருடலத்தோ
டேலுநல்வளனுமாயுவுமுண்டாயெவருமஞ்சமிகவாழ்குவர்மன்னே. (கசாஅ)

நல்லவாழ்வுடையராகினுமொன்றுநல்கலார்கிளைஞர்நல்குறவுற்று
மெல்லைதீர்மறைமுகந்தனைநாளுமிகழ்வர்வேதியரிருந்திறன்மன்னர்
வல்லவல்லபடிவரையறையின்றிமாணிலங்கவர்வரவ்வகையாலே
சொல்வதென்னவுலகுள்ளுறுமாந்தர்துயரலாதொருசுகம்பெறலுண்டோ. ()

பழித்தமேதைமதுபானம்விரும்பிப்பஞ்சபாதகவயத்தினராவர்
விழித்தகண்கள்பொறிபொங்கியவேடர்வேந்தராவர்குலவேந்தரவற்கே
யிழுக்கில்சேவகரெனப்படர்வார்பண்டீன்றதந்தையையிகழ்ந்திடுமைந்தன்
வழிக்கொடன்புருடனிந்தனைசெய்வார்மாதர்நாளுமிவையோதுதலென்னே. ()

றென்புலத்தவர்கடேவரெவற்குந்தேறுநற்கருமமோர்படநேரா
தன்புடைச்சுருதிநல்வழிபொய்யாயற்பதெய்வமுதலாகுமிதன்றி
யின்புறக்ககனநற்கதியெங்குமிகழ்ந்துபாழ்படுமினிச்சிலநாளில்
வன்புறப்பெருகுமாநரகன்றேவாழ்பொருந்துவதுமன்னர்களேறே. (கருக)

கலியுகாந்தமதிலோர்பதினாறுங்கருதுமாயுவருடந்திகழ்மாந்தர்க்
கிலகுமாதரினியேழ்வயதிற்றுனீன்றெடுப்பர்சுதரியாவருமெய்சேர்
வலிசிறுத்துரியவாழ்வுகுறைந்தேவறுமைவிஞ்சியெவருங்கனகங்க
ணலிவுறக்கரவுசெய்குவர்நல்லோர்நல்லசிந்தையுமயக்குளதாமே. (கருஉ)

உண்டிவிற்பர்மறையோர்மறைவிற்பரோதுகற்புடைமைநீதிவிடுத்தே
கொண்டலொத்தகுழன்மங்கையர்வேறோர் கொழுநனுக்குமுலைவிற்பர்குலஞ்
தெண்டிரைக்கதிபராகியமன்னர்தேயமெங்குமுழல்வார்நிலைகெட்டே [சேர்
மிண்டுரைத்தகுலவீனர்கள்போரில்வெற்றிகொண்டுவிசயம்புனைவாரே. ()

சுருதிமார்க்கநிலைசூத்திரர்சொல்லத்தூயவேதியர்கள்கேட்பவராவார்
வருதரித்திரர்மிகுந்தவர்தம்பால்வந்திரந்துலவுசேவகராகி
பெரிதுதுன்பமதனாலுயிர்வாழ்வார்பிரமதாயமொடுதெய்வததாயங்
கருதுநற்றவர்முதற்படவேபாழ்காணுநற்குருவையெள்ளுவர்சீடர். (கருச)

குருவும்வஞ்சனைமிகுந்தவனாகிக்கொடியசீடர்நிலைதேர்கிலனவன்
வருவியாதிகண்மிகுந்துயரங்கண்மாறியேசிறியமேனியராகித்
திருவிகந்துபலதுன்பமியங்கத்தேசழிந்துதடுமாறியநாளிற்
பொருவிலாததிருமான்மறையோரிற்போயுதித்துலகனுயகனுவான். (கருரு)

அறந்தணந்தகுணவீனரைவாட்டியகிலம்வேதியர்பெறும்படிகாட்டி
யிறந்தநூற்சுருதியாவுநிறுத்தியேகபாதமுநிரப்பிவிளங்கத்
திறமிகுந்துலகளிப்பனதற்பின்தீருமிக்கலிசெழுந்திறலோடும்
பிறந்திடுந்தலையுகம்புவியெங்கும்பெய்யுமும்மழையுமுய்வர்சனங்கள். (கருசு)

பாதநான்கினுடனேதருமந்தான்பல்கும்வேதியர்வழார்நெறியெல்லாங்
காதலின்றியடல்வேந்தர்கள்வையங்காப்பரேனையர்குலத்தொழினீங்கார்
போதமெய்துவினைவோங்குமெவற்கும்பொய்முதற்குணமறந்தழகாக்
கோதிலாநெறிகடந்துயராயுக்குறைவிலாதுகதிகூடுவரன்றே. (கருஎ)

வேறு.

மதிதருந்திறன்மன்னகேண்மறைவல்வேதியர்கள்
விதிதரும்பலவேள்வியுஞ்சுருதியும்விளக்கிற்
பதிதரும்புவிபுரந்திடுபார்த்திபர்தமக்குக்
கதிதருஞ்செயலெளிதெனக்காண்டிநீகருத்தில். (கருஅ)

கமலம்வைகியகடவுளுங்கமலலோசனனு
மமலையோர்புறங்காணிகொண்டமர்ந்தநன்மேனி
விமலனும்முதல்விளம்பியகடவுளர்தம்மி
லமலவேதியர்பெரியரென்றிருக்கெலாமறையும். (கருகூ)

இதனைநல்லுபதேசமென்றிதையத்தினிறுத்தின்
முதன்மைநின்வயமாமிதுமுடிவெனவுரைத்தான்
மதனைவென்றவனருடாரவந்துதித்திரவி
சுதனைவென்றருந்தவத்தினுக்கொருவனுந்தொல்லோன். (கசுo)

அய்யநின்மொழியருமறைப்பொருளெனவகத்தி
னுய்யுநல்வழியருளுபதேசமாக்கொண்டென்
மெய்யினந்தணர்சரிதமேவிழைந்தனனின்னுஞ்
செய்யமாதவர்திலதனேசெப்புதியன்றே. (கசுக)

வையமேழுடையறன்மகனுரைத்திடமன்ன
னுய்யமீண்டுமோர்காதையையெடுத்தனனுரைத்தான்
மையனீக்கியமாதவர்பலருமாயவனு
மெய்யுரைக்கொருதருமனுந்துணைவரும்வியப்ப. (கசுஉ)

தொலைவிலாதபல்வகையறத்தொகுதியேநடாத்தி
யலைவிலாதுயரின்புறவவங்களைந்தொழுகுங்
கலைவலான்பரிச்சித்தெனுங்காவலனயோத்தி
நிலைவன்மானகர்புரக்குநாளந்தவின்னிருபன். (கசு௩)

வேட்டமேகுவான்விருப்பமாய்வெங்கொலைஞாளிப்
பூட்டுவார்க்கரப்புளினருமிருபுறம்போர்ப்ப
நீட்டும்வார்களும்வலைகளுஞ்சகடமேனிறைத்துக்
கூட்டுவாகினிசூழ்வரக்காட்டகங்குறுகி. (கசுச)

பல்லையங்களாற்கணைகளாற்சக்கரப்படையாற்
சொல்லருங்கவண்கற்களாற்சுழற்றியதடியா
லெல்லைதீர்வுறவேவுவெஞ்சுணங்கனுவிறைவன்
கல்வியங்குகான்விலங்கெலாம்வதைத்திடுங்காலை. (கசுரு)

பச்சைவாசியம்பாழியந்தேருடைப்பரிதி
யுச்சனுகலுமுருப்பனின்றுற்றலனுகி
முச்செகம்புகழ்முதல்வனுந்தமியனுய்முறையா
லிச்சைதீரநீர்தினைகுவான்புகுந்தனனிசைவால். (கசுசு)

கோடுகண்டகந்தரமுநற்குளிர்மதிமுகமு
மேடுகண்டவான்கூந்தலுமிணையிளமுலையு
மீடுகண்டசிற்றிடையுமாம்பெண்கொடியிருந்தாள்
வீடுகண்டவராமெனவேந்தனுமகிழ்ந்தான். (கசுஎ)

மின்னையொத்தநன்மேனியோடியங்கியமின்னுள்
பொன்னையொத்திருவிழிக்கடையெறிபொதுநோக்காற்
றன்னையொத்ததோள்வலியுடையாரிலாத்தகையோன்
பின்னையொத்ததன்றேருழனைக்கருதியேபேசும். (கசுஅ)

அண்டர்செல்வமோவமுதினி லுதித்தவாரணங்கோ
பண்டைமாசுணமடந்தையோவியக்கர்பைந்தொடியோ
தெண்டிரைக்கணிலெவர்வைத்ததீபமோதெரியேன்
கண்டெனமாமய லுரைத்திடென்றேவினன்கடிதில். (கசுகூ)

பருமவல்குலாண்மயிலிடத்தொருதமியேகிக்
கருமமுள்ள துகழறியக்காரிகைநெஞ்சி
லருமையா லுளவாறுதேர்ந்தண்ண லுக்குறைத்தா
ளிருமையுந்தருதன துயிர்த்தோழனுமினியோன். (கஎ0)

வந்துமன்னவனணங்கெழின்மாமுகநோக்கி
யுந்தையாருன துயர்பெயரே துரையென்னச்
சந்தமாமுலைபுளகெழநாணமுந்தயங்க
முந்துவேற்படைமுதல்வனைநோக்கியேமொழிவாள். (கஎக)

அறஞ்செயாயுவாமண்ண றந்தவளியானென்பேர்
நிறஞ்செய்சோபனையென்பரானீடுலகுள்ளோர்
மறஞ்செய்தோளினுய்வாழ்வனின்னேடினியோர்சொற்
புறஞ்செய்தோ துவன்கோடியென்றக்கொடிபுகல்வாள். (கஎஉ)

திடத்தின்மாண்புடைத்தண்டுறைத்திரையெறிநன்னீர்த்
தடத்தினென்னைநீபுகும்படிதராதநாளெல்லா
மிடத்தில்வைகுவன்புகுந்திடிற்பிரிகுவனென்று
ணடத்துமாநெறிப்புரவலனிசைந்தனனண்பில். (கஎங)

தென்றல்வீசியகாவினிற்சேயிழைதனைக்கொண்
டொன்றுவேந்தர்கோன்சென்றவளுடன்புணர்ந்தொல்கி
வென்றியோடுமீண்டயோத்தியின்மேவியபின்னர்
குன்றுதாங்கியுந்திருவுமென்றுரைபெறக்குழைந்தார். (கஎச)

வேறு.

இந்திராதிபர்கள்நாணுறவின்பமெய்திவாழுமிடையேந்திழையோடு
சந்தனுடவிநிழற்குளிர்காவிற்சார்ந்துளானரசனேர்தினமாங்கோர்
கந்தமாமலர்சிறந்திடுபொய்கைக்கறையின்மாதைநிறுவிப்புனலாடிச்
சிந்தைவெப்பகலவின்பம்விளங்கித்தேவிதன்னைவருவித்துரைசெய்தான். ()

தாபநீங்கியுடறண்மைபொருந்தித்தகைசிறந்ததுதடப்புனலாலே
கோபவாயிதழினுயினிநீயுங்குற்றமற்றபுனரேய்குவையென்றுன்
சோபனுமதிமுகம்பெறுமாதுந்துய்யநீரினிடைமூழ்கிமறைந்தாள்
காயியம்புயனைநேர்பவனந்தநங்கையைத்தடவிநின்றுதிகைத்தான். (கஎசு)

சிந்தறும்புனலைமாளவகற்றிச்சேறுசெய்ததனிற்றேடினர்காணு
ரந்தநற்றடமதிற்சிலமண்டூகங்களன்றியிலையம்மடமானை
விந்தமண்டுகம்விழுங்கியதென்றேயேவியைபடைஞர்கோடியர்தம்மை
யுந்தியவ்விடையிருந்தனவெல்லாமொன்றறக்கொலைபுரிந்தனன்மன்னே. ()

பின்னருந்தன துவாகினிவெள்ளம்பேசுமெண்ணிலரையாசறவேவி
யுன்னுமுன்னருலகின்கணினெங்குமோடியிவ்வுயிருருவகைநீக்கி
மன்னுமிவ்விடையினெய்திடினன்றேவருவன்மானகரினென்றிறைகூறச் [டார்
சொன்னசொன்னிறுவமுன்னுலகெங்குஞ் சூழ்ந்துதேரைகளையாருயிர்கொண்

அந்தவண்ணமுணர்மண்டுகநாதனந்தணாளர்வடிவங்கொடுமேவி
யுந்தும்வேலிறைவன்முன்னரினெய்தியோதினனிதனைநீதியின்மிக்கோய்
வந்தநின்படைகள்தேரைகளெல்லாமாயவேகொலைபுரிந்தனர்நன்றோ
தந்தவேளையனையாயெனவந்தக்காவலன்முனிவனோடுரைசெய்தான். (கஎகூ)

வேறு.

உயிரினையனையமாதிங்குறுபுனலடைந்தபோது
தயிரியமுளராய்க்கோதைதனையிவர்கரத்தலாலே
செயிரறுகுலத்தையெல்லாந்தீர்த்தறமுடித்தாலன்றி
வயிராறுதெனக்கின்றென்னமறையவன்விளம்பலானன். (கஅ0)

மாதினைக்கரக்குமாறுவல்லமையுளதாவென்று
கோதிலாயுணர்கிலாயோகுவலயத்திருந்தவெல்லா
மோதியபடிநீயாவியொழிப்பினுமொளித்தநீலப்
போதினைவென்றகண்ணாள்புகுவளோபுகல்வாய்மீண்டும். (கஅக)

அப்பெருங்கோதைநல்லாளிவ்வண்ணமறைதற்கெட்டா
வொப்பிலாவரசர்தம்மையருந்துயருழைக்குமாறு
வெப்பினைவிளைத்தாளுந்தமின்னனைமையல்மூழ்கித்
தப்பறவொழுகுநீதிதவிர்ந்துயிர்க்கொலைபூண்டாயே. (கஅஉ)

மாண்டவிப்புனலிற்றங்குமண்டூகமெனும்பேர்க்கெல்லா
மாண்டகையானேயென்பேராயுவென்றறைவோர்நல்லோர்
நீண்டவேல்விழியாளாகிநினைமையற்கடலுணீத்த
பூண்டொடாமுலையாளீண்டென்புதல்வியாமுணர்வைமன்னே. (கஅங)

என்றிவனுரைப்பவைவேலிறைமகன்முடிதுளக்கி
நன்றுநின்சிறுவிதன்னைநானிவண்காணுமாறு
வென்றியோயழைத்தியென்னவேதியன்முறுவல்முத்து
மன்றலங்குழலாடன்னைவருவித்தான்மனதிலுன்னி. (கஅச)

முன்னரினுருவினோடுமொய்குழலனுகித்தந்தை
பொன்னடிவணங்கிவேட்டபுரவலனருகினின்றாள்
மன்னனுமகிழ்ந்தேயந்தமாதினைத்தழுவித்துன்பந்
தன்னைநீத்திருந்தான்பெற்றதாதைமற்றிதனைச்சொன்னான். (கஅரு)

மறுப்படாமரபினுற்றமன்னவற்கிடுக்கண்செய்த
திறத்தினாற்றீமைபூண்டசிறுவரையளித்தியென்றே
குறித்தநாட்சபித்துமீளக்கொற்றவன்கரத்தினல்கி
யிறுக்குமண்டூகமெல்லாங்காத்துமீண்டேகினானே. (கஅசு)

வாமத்தேரல்குற்செவ்வாய்வாள்விழிமின்னைநோக்கிக்
காமத்தேரேறிநின்றகாவலன்பகர்வானின்றுற்
றூமத்தேர்குழலாய்நின்றுற்பிழையிலைத்துயர்நீங்கென்றே
சேமத்தேரேறியந்தத்தேவியோடேர்புகுந்தான். (கஅஎ)

மானகரத்தைச்சார்ந்தேமாதுடனின்பந்துய்த்துத்
தேனதைப்பருகுந்தெய்வத்தேனெனவியலுனளிற்;
கானறைக்குழலிமூவர்காதலர்தம்மையீன்றாள்
தானவர்க்கிணையாந்தீயசலனலன்வலனெனன்போரை. (கஅஅ)

அன்னவேலரசனந்தவரிவைதன்மையனீங்கி
முன்னவற்கரசுநல்கிமுடிபுனைந்திருத்தியேகி
மன்னினன்றவத்தினிந்தமைந்தனுமுலகமுற்றுந்
தன்னுடையாணைநீட்டித்தராபதியாயினனே. (கஅகூ)

மற்றவன்னொருநாள்வேட்டமாடுவான்மனத்தினுன்னிப்
பொற்றடந்தேரிலேறிப்புரவியாளிபங்கள்சூழ
வெற்றியினடவிபுக்குவிலங்கினமுறுக்கும்போதிற்
சுற்றுமோர்கலையாங்கோடத்தொடர்ந்தனன்விரைந்துமன்னன். (ககூ0)

மனமெனவகலாநின்றவல்விலங்கதனைவாட்டத்
தனதகம்விழைவினோங்கிச்சாரதிமுகத்தைநோக்கி
வனம்கன்றோடிநீங்காவண்ணமென்வாளான்மாய்ப்பத்
தனியணியிரதமின்னேவிடுத்திபோய்ச்சார்தற்கென்றான். (ககூக)

வையகம்புரக்குமன்னன்வாய்மைகேட்டுணர்வான்மிக்கச்
செய்யவேலவன்சொல்வான்செகபதியிளைத்தபண்பாற்
பொய்யுறுபுரவிவேகப்பொலிவிழந்துளதாலுந்தன்
மையலெவ்வணந்தீருமாறினியுரைப்பன்கேண்மோ. (ககூஉ)

வாமதேவப்பேர்பூண்டமாதவன்சூழலந்தண்
காமருசோலைமுன்னங்கட்புலனுணர்வதேயாம்
பூமனையனையாயந்தப்புனிதன்பாலிவுளிபெற்றா
லாமுனிவ்விலங்கைவீட்டியடையலாமினிமையென்றான். (ககூங)

அவனுழைவிடுத்திதேரென்றறைந்தனனரசர்கோமான்
கவினுறுவலவன்பொற்றேர்கடாவலுமவனையெய்தி
நலமுறத்தொழுதுபோற்றிநற்பரியளித்தியாங்கோர்
துவளுறுவிலங்கைவீட்டித்துரகமீண்டளிப்பனென்றான். (ககூச)

வேந்தன்வந்துரைத்தவாற்றால்வேதியன்மனத்திலுன்னிப்;
பூந்தராதலத்தைக்காக்கும்புரவலர்தமக்கொன்றீந்தா
லாய்ந்தவரளித்தலன்றியெளியவர்பெறுதலாற்றார்
வாய்ந்தவிப்புரவிநல்கின்மன்னநீதரமாட்டாயால். (ககூரு)

மீண்டுநீதருவையாகில்வெம்பரிதருதுமென்ன
வாண்டகையந்தணாளரயமெனக்காவதுண்டோ
தூண்டுமித்தினத்தினின்பாற்றுரகந்தந்திடுவெனென்று
காண்டரும்படிறுகூறிக்கவர்ந்தனன்கனவட்டங்கள். (௧௯௬)

முன்னுறுபரிகணீக்கிமுனிதருமயங்கள்பூட்டிப்
பொன்னுருளாழித்தேரைக்கடவினன்புனைதேர்ப்பாகன்
றுன்னியகணத்தின்முன்புதொடர்ந்திடவிலங்கைவீட்டி
மன்னன்மீண்டடைந்தான்றன்னூர்வாம்பரியளித்திலானே. (௧௯௭)

நாட்சிலகழிந்தபின்னர்நான்மறையுணர்ந்ததுாயோன்
வேட்கையிற்புரவிநல்காவேந்தன்பாலொருதூதேவித்
தாட்கலைதவத்தோன்முன்னந்தந்தவான்பரியையின்றே
வாட்படைவயவநல்காயென்றுரைவழங்குவித்தான். (௧௯௮)

மாதவமளப்பிலாதவாமதேவர்க்குமுன்னங்
கோதறப்புகன்றவாய்மைகுறைந்திடவயநல்காமல்
மேதினிபுரந்தானீதியிதுகொலோவெந்தையென்னப்
போதினியானுமீவன்புனிதனும்பெறுவனென்றான். (௧௯௯)

அந்தணன்மீண்டுவந்தேயரசனேயனுக்குக்கூறச்
சிந்தனைகறுத்தான்வாமதேவன்றன்கண்சிவந்தா
னந்தலிலயோத்தியெய்திரபதிசலனைநோக்கித்
தந்திடென்பரிகளென்னத்தராபதிவெகுண்டுசொல்வான். (௨௦௦)

என்பரியிரண்டுமீவனின்னமும்வேண்டுவாயேற்
பின்புளபரிகடம்மில்பெறுவன்வெல்லாமீவ
னின்பரியுதவேனுசைநீங்கிமீண்டேகவென்ன
முன்பனுஞ்சீறிச்சாலமுனிவினோடினைச்சொன்னான். (௨0௧)

அடைக்கலப்பொருளுந்தூயவந்தணர்பொருளுங்கொள்வோன்
விடத்தினுங்கொடியகும்பிநரகினில்வீழ்வனென்றே
சடைத்தபோநிதிகள்சொல்வார்தரணிபவதுவுமன்றிக்
கடைப்பிடியெனதயங்கள்கைப்புகலரியதாமால். (௨0௨)

கூறியவாய்மைதப்பிக்கொடும்பரிவரக்காட்டாமற்
சீறியவேந்தேநின்பாற்றீமைவந்தெய்தாமுன்னம்
வீறியபுரவிநல்கல்மேன்மையின்மேன்மையென்றே
வாறியமுனிவன்கூறவரசர்கோன்வெகுளியானான். (௨0௩)

சூலவான்படையோடங்கோர்துன்னலனிருப்பநோக்கிக்
கோலமார்மறையோன்றன்னைக்கோறியென்றேவிவிட்டான்
பாலலோசனமிலாதபரமனையனையதூயோ
னீலமால்வரைபோலெண்ணினிருதரைமனத்திற்றந்தான். (௨0௪)

எடுத்தசூலங்களோடுமெண்ணிலோரரசைவீட்டி
யடுத்தமாதவனைக்கோறற்கமைந்தவன் றனையுநீக்கி
விடுத்துமாநிருதாரங்குமீளவுமறைந்துபோனார்
தொடுத்தமாதவனுமீண்டுசூழலையடைந்தானன்றே. (உ௦௫)

வேந்தனுங்கிறந்தபின்னர்மீண்டவற்கிளையோனான
வேந்துவேனலனென்றோதுமிவன்புவிபுரக்குநாளிற்
போந்தமாமுனிவனெய்திப்புரவலன் றன்னைநோக்கிச்
சாந்தநீயெமதுவாமச்சடிலங்கடருதியென்றான். (உ௦௬)

வேறு.

புழுங்கியசிந்தையன்புற்றராவெனக்
கொழுகனனுயிர்ப்பினன்கொடியவேதனை
யழுங்கிடமுடிப்பனென்றம்புஞ்சாபமும்
வழங்குமினென்றனன்வலவன்சொல்லினான். (உ௦௭)

சாரதிகணைகளுஞ்சாபமுந்தரப்
பாரதுபுரப்பவன்பவமிலான்மிசை
வாரிதிநெடுங்கணையெடுப்பநின்மகன்
பேரதமாகவேதொடுத்திபெற்றியோய். (உ௦அ)

என்றனனக்கணமிறைவன்றன்றுணை
யொன்றியகரங்களினியக்கமொன்றிலன்
வன்றிறற்றம்பமாய்த்திகைக்குமவ்வயின்
சென்றுதீர்ந்தனனொருமகனுஞ்சீருயிர். (உ௦௯)

துன்முகனெனுமகன்றுஞ்சினானெனப்
பன்முறைமடந்தையர்படர்ந்தரற்றினார்
தன்முகம்வாடியேசலித்துமாதரும்
வின்முகம்வேந்தும்வேண்டினர்வேதனை. (உ௧௦)

வாங்கியவாம்பரிமாதவன்பெற
வோங்கியபெயரினானுதவியான்புரி
தீங்கெலாம்பொறுத்தியென்றிரப்பச்சீர்முனி
தாங்குவில்லுறுகரத்தம்பநீக்கினான். (உ௧௧)

கரமுதற்பான்மையிற்படைத்தகாவலன்
றிரமுறமாதவனடிகள்சென்னிகொண்
டுரவுறுதவத்தினானுயிர்வந்தெய்திடப்
பரவிமைந்தனுக்கருள்பண்ணுவாயென்றான். (உ௧௨)

மீளவுந்துன்முகனுய்ந்துமேதினி
யாளுவனென்றனனவனுமுய்ந்தனன்
வேளைவென்றவனெனமீண்டுமாதவன்
வாளுறுசூழல்போய்வைகினனரோ. (உ௧௩)

முனிவரர்தஞ்செயல்மொழியற்பாலதோ
மனுவனையாயெனமறைவலோன்சொல
வினியுனைநீக்கருமூப்பின்றியாவரோ
புனிதனேயுலகினிற்புகலவேண்டுமால். (௨கச)

என்றறந்தந்தவனிசைப்பமாமுனி
நன்றெனவொருகதைநடத்தலாயினன்
மன்றலந்துளவணிவனசநாபனும்
வென்றிகொள்வேந்தரும்வியந்துகேட்கவே. (௨கரு)

வேறு.

மந்தரமன்னதிண்புயன்வைவேன்மதிமன்ன
னிந்திரதுய்மனென்பவனுலகேரேழுந்தன்
சிந்தையினுஞ்சந்தம்பெறவேசெங்கோலோச்சிக்
கந்தரவாகனன்றன்புவிகண்டான்கடைநாளில். (௨கசு)

பூதலமெல்லாநீதிவிளங்கப்புகழ்கொண்ட
வாதிபனென்றேவானவர்நாதனருகாகச்
சோதிவிளங்குமாமணிசூழாதனமிட்டே
கோதறவுய்த்தாரெண்ணறுகாலங்குடியானன். (௨கஎ)

இவ்வணம்வைகுங்காலமிறந்திந்திரர்வேறே
யுய்வணமெய்திவந்தவரெண்ணாருரைசெய்வோர்
வந்துளமன்வந்திரங்களினுந்தான்மறுவின்றி
யிந்திரதுய்மன்வைகினன்வானோரெழிலூரில். (௨கஅ)

ஆண்டொருகாலத்தமரர்கள்நின்பேரவனிக்கு
மாண்டதுநீயிங்கென்னுறன்மண்மேல்வாழ்கென்னத்
தூண்டலுமண்ணறன்மனநொந்துதுணையாரென்
றீண்டினரென்பாற்சிந்தையுமன்புமிடர்செய்ய. (௨கக)

எய்தியமன்னன்பூசைபுரிந்தென்னியனுமம்
வைதிகம்வீறுமிந்திரதுய்மன்மகிமீதிற்
செய்தொழிலொன்றுங்காண்கிலனென்பர்தெளிவோரா
மெய்தருவானோரென்னையிகழ்ந்தேமீள்வித்தார். (௨௨0)

மாதவவல்லோர்தம்மிலுயர்ந்தவாணாளோய்
நீதிவிளங்குமூப்பினையாரேநீயன்றி
யாதரவாலென்பேருணர்வாயேல்ருள்கென்ன
வோதினனந்தோதீவினையென்பதுணராதோன். (௨௨க)

சொற்றுளவேந்தன்றன்பெயர்நெஞ்சிற்றேறற்றுவாற்
பெற்றியினுன்னையாருணர்கில்லேன்பெரியோனே
மற்றொருகூகையென்னிதுமூப்பின்வலியுண்டா
லுற்றிடமோதிச்சென்றுணர்கென்றேயுரைசெய்தேன். (௨௨௨)

அன்னவனன்பிலென்னையுடன்வந்தருள்கென்று
சொன்னதுகொண்டேயானுமவற்குத்துணையானேன்
மன்னவனங்கோர்வெண்பரியாகிவயினேயாங்
கென்னையெடுத்தேபோந்தனனிமையத்திடையம்மா. (உஉரு)

தாவிவளர்ந்தவோர்தருவின்பாற்றகையோடு
மேவியகூகைதன்னையடைந்திவ்விதமாக
வாவலின்மன்னன்பேர்கள்வினவவறிகில்லேன்
வேவியவேந்தேயென்றித்துபின்னும்விரைந்தோதும். (உஉச)

வாட்டிறலுள்ளோயென்னிலுமூப்பின்வலியுள்ள
நீட்டுகுரண்டமுண்டதையெய்திநெறியானின்
மாட்டுறுநாமங்கேட்டுளதுண்டேல்வரையாது
நாட்டுறுமென்னநல்லுரைகூறநரநாதன். (உஉ௫)

அன்னதையுந்தன்றேண்மிசைகொண்டேயதுகூறும்
பொன்னணியாரஞ்சிந்துதடத்திற்புகலாலே
மன்னவன்வந்ததுன்னியுணர்ந்தம்மடுவூடே
நன்னிலைசெல்லுந்தூயகுரண்டம்நண்ணிற்றே. (உஉசா)

வந்ததைநோக்கிமன்னவனுள்ளவாறெல்லா
முந்தவுரைத்தேயென்பெயர்முன்னர்தெளிவாயேற்
றந்தருள்செய்வாயென்னலுநிமிடந்தனியுன்னிச்
செந்தழலன்னாய்நின்பெயர்யானுந்தெளியேனால். (உஉஎ)

மாற்றலர்போற்றுமிக்கிரியின்சார்மடுவூடே
மூத்துளதென்னிற்கூருமமுண்டம்முறையானீ
காத்திரநோவச்சென்றுவினவிற்பல்காலம்
பாத்துளதெல்லாமோதுமதன்பாற்படர்வீரே. (உஉஅ)

சொற்படுவாகைத்தும்பைமிலைந்ததுணைவேலோய்
கற்பனைசெய்வோன்வீயினும்வீயாக்கமடந்தா
னுற்பவமாரோதேர்ந்தவரென்றுங்குரைகூற
மற்படுதோளான்றன்னுடனெய்தும்வகையாக்கி. (உஉகூ)

அச்சமறத்தன்சென்னிமிசைக்கொண்டதனோடுங்
கச்சபமேவுமாழ்மடுநீரைக்கண்ணுற்றே
யிச்சைவிளங்கக்கூவினன்வந்தங்கெதிராய
துச்சிவளஞ்சேர்நற்கமடம்வேந்துரைசெய்வான். (உ௩0)

வேறு.

இந்திரத்துய்மனென்னுமிருநிலக்கிழவனென்பேர்
முந்துநீயுணர்ந்ததுண்டோமொழிகநற்கமடமென்னக்
கந்தரம்பொழிவதென்னக்கலுழிகள்விழியிற்போக்கிச்
சிந்தையினுயிர்ப்புவீங்கிச்சேமவாய்திறந்துகூறும். (உ௩க)

வடியுடைக்கிரணவேலோய்வாழியநினதுபெற்றி
முடிபெறநினங்கொண்டெல்லாச்சரிதமுமொழியவல்லேன்
கொடியவென்றன்னைத்தீரமறப்பினுங்குணத்தான்மிக்கோய்
துடியுடையளவுநின்பேர்மனந்தனிற்றுறந்திடாவே. (உ௩உ)

தனக்குமற்றொருவராலேதவறுவந்தடுத்தநாளின்
மனத்துனைநினைந்தேநீயும்வந்துகாத்தளித்தாயென்புன்
சினத்துடனீங்கினுஞ்செய்ந்நன்றிமறப்பதுண்டோ
வுனக்குலகதனினேராமுராணுடையரசருண்டோ. (உ௩௩)

கூடஃந்தடைந்ததுாயீருணர்கிலீர்குறித்தபைந்தே
னேடவிழ்மாலைமார்பனிரும்புவிபுரக்குநாளிற்
பீடமைமறைவலோற்குப்பெரிதுறச்சுரபிநல்குங்
கோடலம்புனலேயிந்தக்குண்டுநீர்மடுவென்றோர்வீர். (உ௩௪)

ஆவினைப்பொருளைமண்ணையாடையையயத்தையங்கை
மாவினைமணியைத்தேரைமாடத்தைவனத்தைமூரிச்
சேவினைநீரையுண்டித்திறத்தினையெவர்க்குமீந்தான்
றீவினையொன்றேயன்றிச்செய்வினைக்கவதியுண்டோ. (உ௩௫)

ஆதலாலிவனைமானுமரசரில்லென்றுபோதக்
கோதறுகமடமோதிக்குழைந்தெமைநண்புகொண்டு
காதலாற்சிலதுவாய்மைகட்டுரைத்திடவுமுன்ன
மீதலவமரர்வந்தார்விமானங்கொண்டரசன்பக்கல். (உ௩௬)

இகழ்வுறவுன்னைநீத்ததிடுக்கணென்றுணரேலீட்டும்
புகழினைப்புதியதாக்கும்புணர்ப்பெனத்தெளிநீமீண்டு
முகிழ்முலைமடவார்போற்றுமுன்னரிற்கதிவந்தெய்தி
மகிழ்வுடனிருத்தியெண்ணிலுளெலாமகிபவென்றார். (உ௩௭)

மூப்புடைக்குரவர்தம்மைமுறையுறவுடலிற்றுங்கிக்
காப்புறவடைந்திங்குய்த்தேன்கருதிமீண்டவர்முன்புள்ள
நீப்பருந்தலங்கடோறுநிறுவியான்படர்வனின்றே
மாப்பெருங்கருணையுள்ளீர்வைகுவீரளவுமென்றான். (உ௩௮)

நன்றெனவிசைந்துவானோரிருந்தனர்நாமவேலோன்
குன்றெனவுயர்ந்தமூப்பின்கூருமமுய்ப்பநீங்கி
யன்றெமைத்தோளிற்சென்னியதன்மிசைதாங்கியேங்கி
வென்றியான்முன்னம்வைகுமிடந்தொறும்விடுத்துப்பின்னர். (உ௩௯)

வந்தெனைப்பரவிச்சாலமாண்புடையாசிகொண்டே
யந்தரத்தமரர்பாற்போயருண்மணிவிமானமேறி
முந்துதன்கதியிற்சார்ந்தேமுதன்மையோடிருந்தானென்னி
லிந்திரனிறந்துமீண்டுமெய்துறுமளவுமிப்பால். (உ௪௦)

கணக்கிலாவினைசெய்தோருங்காசினித்தலத்திற்றன்பே
ரிணக்கறமாளிற்பெற்றகதிதனக்கிடருண்டென்று
குணிக்குவைமனதிலென்னிற்குரவரையுணர்த்தினேமாற்
பணப்பொறியரவமேந்தும்பார்புகழ்வேந்தேயென்றான். (௨சக)

மாமுனியுரைத்தசொல்லான்மாசுடன்மறுவொன்றில்லாக்
கோமுனிமகிழ்வுகொண்டுமீண்டொன்றுகுறிக்கலுற்றான்
மாமுனிவின்றிச்செங்கோல்நடாத்திக்குவாகுமன்னன்
வாமநன்மரபிற்றுந்துமாரப்பேர்புகல்வதென்னே. (௨ச௨)

அவனுடையியற்கையெல்லாமையநீபுகறியென்னத்
தவமுனிபுகல்வான்முன்னந்தாழ்வறுமுதங்கனென்போ
னவமுறுதிருமாறன்னைநாடியேநெடியகாலம்
பவமறத்தவஞ்செய்தானப்பண்ணவனெதிர்வந்துற்றான். (௨ச௩)

படலையின்றுழாயின்வாசம்பற்பலகாதமேவ
வடலுறுகுழைகளெண்ணிலாதபர்தம்மைமான
மிடலுறுமகுடந்தாங்கிவிகங்கனுயகன்மேல்வந்தான்
கடலைநேர்பசியமேனியைம்படைக்கரதலத்தோன். (௨சச)

அஞ்சனமேனியோனையஞ்சடைமுனிவன்காணு
வஞ்சரும்புலனுமொன்றாயஞ்சலித்தடிமேற்சூடி
யஞ்சலர்தனிப்போரேறேயஞ்சினேன்பிறவிக்காற்று
தஞ்சருந்தருவைநேருமங்கையோயருள்செய்கென்றான். (௨ச௫)

வரதனுமகிழ்ந்துசாலமாதவற்கரசேநின்றன்
சரதநல்லறிவில்வேண்டுந்தகைமைநீபுகலிலீவோம்
விரதநீபுகல்வாயென்னவேதனுமையநின்னை
யரிதறமறவாப்பெற்றியளித்தலேவேண்டுமென்றான். (௨சசு)

கொடுத்தனனுரைத்தவண்ணங்குவலயமுழுதுமுய்ய
வெடுத்தகாரியமொன்றுன்னுலிசையுமென்றிசைத்துப்போனான்
வடுத்தவிர்முனியுமந்தவாரணக்கரனையேத்தி
விடுத்தருந்தவத்தைமுன்னிவிபினம்போய்வைகினனே. (௨சஎ)

இரவிதன்குலத்துவேந்தனிக்குவாகென்பானிந்தப்
பரவைசூழ்ஞாலங்காத்துப்பண்ணவருலகம்புக்கான்
கரவறுயதுவென்றோதுங்காளைமற்றவன்றன்மைந்தன்
விரவியபுவனங்காவல்விரும்பியோர்மகவைத்தந்தான். (௨சஅ)

அன்னவன்பெயர்காகுத்தனவன்பிரசேனன்றன்னை
நன்னிலமதனிற்றந்தானுழநற்பிருதுவென்னு
மன்னனையவன்பயந்தான்மற்றவன்புத்தரீக
னென்னுமோர்புதல்வற்பெற்றானிவன்மறதிகனையீந்தான். (௨சகூ)

அருளுவஞசுவப்பேரண்ணலையவன்பயந்தான்
மருளில்சாபத்திரனென்னுமைந்தனையிவனுமீன்றான்
தெருளுறுபிருகுதச்சுவப்பெயர்ச்செம்மறன்னை
யுருள்கொடேரிரவிபோன்முன்னுரைத்தவேந்துதவினனே. (உ௫0)

மற்றிந்தக்குமரனுங்கோர்வாகுறுவலியின்மிக்க
பெற்றிசேர்குவலையாச்சுவனனெனும்பெயரோற்றந்தான்
குற்றமொன்றிலாதமூவேழாயிரங்குமரர்தம்மை.
நற்றவம்விளங்கவின்றானுமமுன்புரைத்தகாலை. (உ௫௧)

பிருகுதச்சுவனென்றேதும்பெயரினோன்மகுடஞ்சூடி
யுருகியிப்புவனங்காத்தேயொழிந்துலகியற்கைநீங்கி
முருகுறுமலங்கலொள்வாள்முடிகுடையனைத்துந்தன்சேய்
திருகறுகுவலையாச்சுவனெனும்பெயர்செம்மற்கீந்தே. (உ௫உ)

மைந்தனீயறம்வழாதுமானிலம்புரத்தியென்று
கொந்தலர்மகுடஞ்சூட்டிக்குருமணித்தவிசினுய்த்தே
முந்துபுசிலையுமம்பின்புட்டிலுமுனிவர்காணச்
சிந்தையும்வாக்குமொன்றாத்துறந்தனன்றீண்டானுகி. (உ௫௩)

உழையர்வெம்படைகாப்பாளருயர்ந்தநல்லறிவின்மிக்கோர்
பழையசன்மானமெல்லாம்பழுதறக்கைக்கொண்டிருந்தத்
தழையருண்மைந்தன்பாங்காத்தவிர்ந்திடாதிருப்பநல்கி
யிழையொடுநிதிக * வீழமிரவலர்க்குதவினனே. (உ௫௪)

நாட்டினிலிதவுநீங்கிநரபதிதுறவுபூண்டு
காட்டினிற்றவஞ்செய்வானுய்க்கருதியிவ்வண்ணமாசை
வீட்டியேயகலுமந்தவேலையிலுதங்கனென்னு
நீட்டியசடையானந்தநிருபன்பால்வந்தடைந்தான். (உ௫௫)

வந்தமாமுனியைமன்னன்வழிபட்டுவணங்கியேத்திச்
சுந்தரத்தவிசினுய்த்தேதுறவுபூண்டுள்ளதெல்லா
மந்தணனறியக்கூறவவன்சிரந்துளக்கிவேந்தே
புந்திகொண்டருள்கவென்றோர்வாசகம்புகல்வதானான். (உ௫௬)

நீக்கருந்துறவுபூண்டுநெடிதுநாட்டவஞ்செய்தோர்க்கு
நோக்கருங்கதிகைகூடுநவலருமுலகிற்செங்கோ
லாக்கியாருயிர்களெல்லாமருங்கதியெய்தச்செய்தான்
மீக்குயர்கதியினன்றிமேவுறுமிடம்வேறுண்டோ. (உ௫௭)

ஒருவனேதுய்த்தனன்றேவுலகுளோராருந்துய்க்க
மருவுறவுதவித்தானுமாந்துதனன்றேசொல்லாய்
திருவுடையரசேசெங்கோலழித்துளநீயற்கன்றே
கருவருமெனுமாறச்சங்கருதுதலுனக்கென்கூறாய். (உ௫௮)

* ஈழம் - பொன்.

ஆதலிற்றுறவுபூணுமருநெறிதனிலுநன்று
பூதலநெறிவாழாமற்புரந்திடலன்றிநெஞ்சின்
மாதவமியற்றுமாறுவிருப்பமுண்டென்னின்மன்னு
வோதுவனின்னுங்கோடியோருரையுளத்துக்கேற்ப. (உருக)

வேறு.

கற்றாரின்புறுகட்கமலத்தோ
னுற்றானற்றுயிலிவ்வுலகெல்லாஞ்
சுற்றாநின்றுளதோயமதிற்பேர்
பெற்றானாரணனென்றுளபெயரே. (உசுo)

மன்றறருந்துளவம்புனைமாயோ
னன்றலர்தாமரையம்பொனிதழ்க்கண்
வென்றிதரத்துயின்மேவுறுகாலத்
தொன்றுமுயிற்பினுதித்தவரம்மா. (உசுக)

நயிடிகமின்றியநன்மதுவோடே
கயிடவனென்றுளகாதலரக்கர்
மயிடனுமஞ்சும்வலத்தினரம்பு
வியிடமறைத்தகல்வேலையைவென்றார். (உசுஉ)

எண்டிசையெங்குமுலாவியெதிர்ப்பார்
கண்டிலர்மீண்டெதிர்கண்ணனையெய்திக்
கொண்டதுயிற்கிடையூறுகுறித்தார்
விண்டுவுணர்ந்திவர்மீதுவெகுண்டான். (உசுங)

சீர்புரிமார்புளதேவுமெதிர்ந்தே
போர்புரிகாலையரக்கர்புகுந்தே
யோர்புரிவெங்கணையாவுமிறுத்தே
தார்புரிதோள்கொடுதாக்கிமலைந்தார். (உசுச)

காற்றனுமாற்றருங்காரழலோனுங்
கூற்றனுமஞ்சுகொடுந்தொழில்வல்லோ
ரேற்றமுகந்தனிலீடிலனாகித்
தோற்றனனத்துளவம்புனைதூயோன். (உசுரு)

வல்லவர்நீருமைமானும்வலத்தே
னல்லனுமக்கிதவாகியதெல்லாஞ்
சொல்லுமினீல்குதுமென்றரிசொற்றா
னல்லனையார்கையறைந்துநகைத்தார். (உசுசு)

ஆற்றலினாலமாரடியினைத்துத்
தோற்றவனேவரமீவதுசொல்லா
யேற்றவுனக்கிதமோதினியாமே
போற்றியளிக்குதுமென்றுபுகன்றார். (உசுஎ)

தீயவரோதியசெய்கைதெரிந்தே
மாயவனோர்சொல்வழங்கினனீவிர்
தூயவராய்மொழிசொற்றவரீரேல்
வீயுமினென்கையினென்றனன்மேலோன். (உ௬௮)

பொய்யுரையாதவர்சிந்தைபுழுங்கி
மையெனுமேனியன்மாமுகநோக்கி
யையவினிப்புனலற்றவிடத்திற்
பையமுடிக்குதியென்றுபகர்ந்தார். (உ௬௯)

மல்லார்தோளினரோதியவண்ண
மெல்லாம்வல்லவனூருவிரண்டிற்
செல்லாவோங்கியசிந்துமறைத்தே
பொல்லார்தம்முயிர்போக்கினனன்றே. (உ௭௰)

அன்னவர்முன்னமளித்தருள்மைந்தன்
கொன்னவில்துந்துவெனும்பெயர்கொண்டா
னுன்னருமாற்றலுடைக்கருமெய்யன்
றன்னிகரற்றவரம்பெறுதக்கோன். (உ௭௧)

காதகன்மாதவர்கண்டகன்வெய்ய
பாதகன்வெம்பழிபாவமுமென்றுஞ்
சாதகன்வஞ்சனைபொய்தவறெல்லாஞ்
சோதகன்மீதலர்தோற்கவடர்த்தோன். (உ௭௨)

வேறு.

தரங்கமதேறியுவாச்சலதியின்கரை
மருங்கினினீலமால்வரையைமானவே
யுரங்கிளர்பெருந்துயி லுறுகின்றனயன்
வரந்தனிலாண்டொருசுவாதம்வாங்கியே. (உ௭௩)

வரைகளுந்தருக்களுமண்ணும்விண்ணுமேழ்
திரைகளுமெழுமுகிற்றிரளுஞ்சிந்தியே
கரைசெயற்கருந்துயர்காண்பதவ்வயி
னுரைசெயித்தீயவனுயிர்ப்பினாலரோ. (உ௭௪)

மற்றவன்றுயி லுமவ்விடத்தின்மாமருங்
குற்றதெஞ்சூழலங்குள்ளநல்வன
னிற்றவனுயிர்ப்பினாலிடரிலாழ்ந்துளோங்
கொற்றவர்தொழுகழற்குவவுத்தோளினாய். (உ௭௫)

மாயவல்லரக்கனைவாட்டவல்லவர்க்
கேயநல்வலிதிறல்யாவுமீகுவன்
றூயமாதவர்க்கொருதுன்பமெய்திடி
னீயலாரரதைநீக்கற்பாலரோ. (உ௭௬)

ஆதலாலண்ணனீயரக்கர்க்காய்ந்துயர்
மீதலத்தவர்க்கெலாம்விழவுண்டாக்கியே
கோதிலாவருந்தவங்குறித்துச்சேறியென்
ருேதினுேதினுன்மறையுமோதினுன். (உஎஎ)

கேட்டனன்கிரணவேற்கிருபைவன்மன்னர்கோன்
மீட்டொருவாய்மையைவிளம்பலாயினு
ஞட்டினைநீங்கியேநான்பயிற்றிய
வாட்டிறலுளசிலைமுதலமாற்றினேன். (உஎஅ)

எடுத்தவிவ்வுடலினுலினியொருத்தரைக்
கெடுத்திடேனுருயிர்கெடுதிபார்க்கிலேன்
வடுத்தவிர்மாதவர்வகுத்தவாறலா
லடுத்தொருகருமமுமறிவிற்கொள்கலேன். (உஎகூ)

என்றுநன்முனிவர்முன்னெடுத்துகூறியே
துன்றுபல்படைகளுந்துறந்துவைகினே
னென்றுகொலினிச்சிலையெடுத்தல்ஞானமெய்க்
குன்றமேயோர்மொழிகுறிப்பன்கோடியால். (உஅ0)

வல்லவன்சிலைமறைவடித்தெடுத்தவன்
வில்லினில்நேரிலாவெற்றிமிக்கவன்
சொல்லருநற்குணமுடையதோன்றலிங்
கெல்லைநாயகனியானீன்றமைந்தனே. (உஅக)

படிக்குளுன்பெருந்தவப்பான்மைகொண்டது
முடிக்குவனிவனெனமுன்னர்க்காட்டியே
வடிச்சுடர்வேலுடைமகனுக்கிவ்வண
மடிப்படவோதினுனரசனென்பவே. (உஅஉ)

சந்தையுமொழுக்கமுநெறியுந்தாழ்வறு
பந்தமும்பெருமையும்பயனுமிங்கொரே
யந்தணனுயுனக்கடுத்ததென்றறி
மைந்தனேயெனவுரைத்தன்புமாட்டினுன். (உஅங)

புரவலன்வாய்மையும்புகுந்துகோமகன்
கரவரிசிலையையுங்கண்டுகண்களித்
துரவுறுதவத்தினுனுவகைமூடினுன்
பரவருமரசனும்பணிந்துபோயினுன். (உஅச)

தந்தைபோயகன்றபின்மகனுந்தான்றரு
மைந்தரெண்ணிறந்தவர்மருங்குசூழ்தர
முந்துநாற்படையுமிவ்வுலகைமொய்த்திட
வந்தன்னசுரன்மேன்மறலிமானவே. (உஅரு)

பாழியம்பொருப்புறழ்பணைப்புயத்தினன்
வாழியம்பெரும்படையெழுந்தமாண்பினாற்
பூழியிற்றிசைக்கரிபொழிமதங்கள்போ
யாழியுந்திடர்கள்பட்டிடரிணயதால். (உ௮௬)

பொழிந்தனர்பூமழையமரர்பொற்புறு
கொழுந்தெழுசடையினர்குடங்கையாசிக
ளெழுந்தனவிடந்தொறுமிறைவன்மாமகன்
றெழுந்தகுவலப்புறந்துடித்தெழும்பவே. (உ௮௭)

வந்தனன்வாரிதிமருங்கின்வாகுயர்
வெந்தழற்றனவன்வீழ்ந்துகண்டுயி
லுந்திடர்ப்பாங்கரினுற்றுடன்வரு
மைந்தரையேவினனுறக்கமாற்றவே. (உ௮௮)

மழுவினாற்கொந்துவார்வாளில்வீசுவா
ரெழுவினாற்சாடுவார்முசலத்தெற்றுவார்
கொழுவினாற்குத்துவார்குணினறுக்குவார்
தழையிருசெவிதொறுமுரசுதட்டுவார். (உ௮௯)

இவ்வணமனேகர்சூழ்ந்தெழுப்பவாங்கவன்
மைவணமாமலைமானுமேனியி
னெவ்வணமோசிறுதுறுத்தலாலெழுந்
துய்வணமற்றவனுயிற்புரீட்டினன். (உ௯0)

சேனையுந்துரகதத்திரளுந்தேர்களு
மானையுமிரிந்தரசனிகமெண்டிசை
மோனையுமெதுகையுமுறிந்தசெய்யுள்போ
லேனையமுறையழிந்தயர்ந்ததென்பவே. (உ௯௧)

கண்கள்செந்தீயுகக்கனன்றுகையெறிந்
தெண்கடந்தெயிறுகொண்டிதழதுக்கியே
பண்கொளுங்கடுநிலம்பரந்தபொன்முடி
விண்கடந்தெர்ளிரவவ்விபுதன்மேயினன். (உ௯௨)

சூலமுந்தண்டமுந்துணைக்கைப்பற்றியே
காலனென்றயிர்ப்புறக்கடிதின்மேவலுஞ்
சாலவேதெழித்தெதிர்தகைந்துதஞ்சிலை
கோலினரயோத்தியர்கோச்சிறார்களே. (உ௯௩)

பொழிந்தனர்கோடிவெம்புயங்கவாளிக
ளழுந்துதானவன்மிசையனுகிமீண்டதா
லெழுந்துகானூன்றிவிண்ணெறிந்தநுண்டுளி
பழுங்கருங்குவடுறப்பட்டுமீடல்போல். (உ௯௪)

அன்னவஃரிரிதரவார்த்துமாமுடி
மன்னனையெய்திநீவலியுளாயெனிற்
பன்னருமிப்பெரும்படையினுய்கென
வுன்னிவெஞ்சூலமொன்றுரப்பிவீசினான். (௨௯௫)

புக்கியமுத்தலையெஃஃம்பொள்ளென
மைக்கடலுலகெலாந்திகைப்பவந்ததான்
முக்கணன்மூலமந்திரத்தின்முன்பனு
மக்கொடும்படையைநீறாக்கினானரோ. (௨௯௬)

எறிந்தசூலம்பழுதெய்தவாசுர
னறிந்தொருதண்டுகொண்டார்த்துமேவலுஞ்
செறிந்தவேற்கைத்தலன்றிசைமுகன்றரு
மறம்புனைவான்படைவழங்கினானரோ. (௨௯௭)

ஒப்பிலான்படைக்கலமுருமிற்பூளைபோ
லப்பெருங்கொடியனைத்துணித்ததாருயிர்ச்
செப்பருமறலியுந்தேறிச்சேர்ந்துதன்
கைப்படத்தன்புரங்கலந்துளானரோ. (௨௯௮)

ஆடினர்விண்ணவரலர்சொரிந்தனர்
பாடினரரசன்முன்படர்ந்துபண்பெலா
நாடினர்துந்துவைநலியலாவிசை
சூடினர்புகழ்வலதுந்துமாரநாமமே. (௨௯௯)

பின்னருமையநீவேண்டும்பெற்றிக
ளுன்னுமுன்னளிக்குதுமுரைத்தியென்னலு
மன்னவன்வணங்கிவாய்புதைத்துக்கேட்டனன்
பன்னுதேவந்தணர்பத்தியொன்றுமே. (௩00)

சாலவுமகிழ்ந்தவர்தந்துபோயினர்
சீலவேதியனுந்தன்சூழல்சேர்ந்துளான்
மேலிவன்றந்திரமீண்டுசூழ்ந்ததால்
ஞாலநாயகனுந்தன்னகரிமேவினான். (௩0௧)

அன்றடைந்துளதுதுந்துமாரனும்பெயர்
மன்றலந்தொடைபுனைமன்னனுக்கெனத்
துன்றுசெஞ்சடையினனுரைப்பசூழ்புலன்
வென்றசீருதிட்டிரன்மீண்டுங்கூறுவான். (௩0௨)

மார்க்கண்டர்கதையுரைத்தசருக்க முற்றிற்று.

ஆகசெய்யுள்-௪௭௯.

உ

# கௌசிகச்சருக்கம்.

துருபதனளித்தவண்மணந்ததுதொடுத்துன்
னிருபதமடைந்ததினமிவ்வளவுகாறு
மொருபதனுறத்தனதுளம்பிரிவிலாதே
நிருபரிவரேற்கும்வழிபாடுனுதகைத்தாள். (க)

கற்புண்டமையிற்கலையையொத்துளகருங்கட்
பொற்புடையவட்கிணைபுவிக்குளிலையென்றே
முற்படவெனக்குளமிருப்பதுமுதிர்ந்தோய்
சொற்பெறுமிவட்கிணைசெய்தோகையருமுண்டோ. (உ)

தந்தைதமரன்னையர்தமக்குதவியின்றி
வந்தமணவர்க்கிவர்வழிப்படுவதென்னு
கந்தமலர்மங்கையர்கள்கற்பினிலையெல்லா
மந்தணர்களாரியவறைந்திடுதியின்னும். (௩)

தாயினொடுதந்தைமகனைத்தருவருத்த
மாயினவருக்கவரளித்தபுதல்வன்செய்
நேயமுறுநல்லுதவியேதுநிலமீதிற்
றீயர்குலவீணர்கதிசேர்வதெதனலே. (ச)

இன்னபரிசின்னதெனவின்னுரைசெய்யென்ன
மன்னன்மகிழ்வெய்தமறைமன்னனுரைசெய்வான்
மின்னனைதனக்கிடையில்வேட்டவனையன்றிப்
பின்னையொருதெய்வமிலையென்றுமறைபேசும். (ரு)

மாதநவமங்கருவயத்திடைசுமந்தே
வாதனைமிகுந்துமகனைத்தருவளன்னை
நீதிவிரதந்தரும்மாதவநிரப்பி
தாதைதருவன்புதல்வனைத்தவறிலாதே. (சு)

ஆதலினணங்கிருவருக்குமுளவாற்றூற்
றாதையுடனன்னைசமமென்றுணர்திதக்கோய்
காதலனெறிப்படிவழாதொழுகல்கண்டா
லாதரவிலீன்றவர்தமக்குதவியன்றே. (எ)

ஈனகுலமுற்றவனிருக்குரைசெய்நீதி
போனவழியிற்புகினருங்கதிபொருத்து
மானவவுணர்ந்திடுதியோர்கதைவகுப்பன்
றானதனிலையமறுமென்றுமுனிசாற்றும். (அ)

வேறு.

விசிட்டமாநகர்தனிலொருவேதியன்மாயக்
கசட்டினம்புலனடக்கியகௌசிகனும
னசட்டரும்பகையாறையுமடக்குவானுங்கோர்
வசிட்டன்பொற்றருநீழலின்மறைகுணித்திருந்தான். (கூ)

குரண்டமொன்றுமெற்கவட்டிருந்தெச்சநீக்குதலுந்
திரண்டதோளிணைமேல்விழவேதியன்சீறி
முரண்டகண்கொடுநோக்கினன்முனிவெனுங்கனலாற்
சுருண்டுசாம்பராய்நீங்கலுந்துணிந்தனன்றுணிவை. (க0)

ஆண்டுநீங்கியேகாலங்கண்டன்னகர்மறையோர்
மாண்டமாளிகைதொறுந்தொறுமாதவன்கரங்க
ளீண்டுபோதிஞேர்வேதியனில்லிடையெய்திப்
பூண்டவோதனமிரந்தசொற்பொற்கொடியுணர்ந்தாள். (கக)

பலியளித்திடத்தானெழுந்தேகலும்பாவை
வலியளித்ததன்கணவன்வெப்புடன்வரக்கண்டாள்
மலிவளித்தநற்கூந்தலாண்மகிணனைப்போற்றிச்
சலமளித்தவன்பணிவிடையுளவெலாந்தந்தாள். (கஉ)

பொசித்துநித்திரைபொருந்தளவவன்றொழில்புரிந்து
பசித்துமாதவன்பலிக்கிடைந்திடுதிறநினைந்தே
யொசித்தசிற்றிடைதட்டதிலோதனமேந்தி
முசித்திருந்தமாமுனியருகடைந்திதுமொழிவாள். (கங)

கணவனீர்நசைகொண்டெழுந்தருளினன்காணு
மணவனின்புறுதொழிலினுன்மறந்தனனின்னைக்
கொணருமோதனங்கோடிநீமுனிவுறேலென்றாள்
பணவராவினுஞ்சீறியேமறைவலோன்பகர்வான். (கச)

வந்திரந்தவர்க்குண்டிலையென்பதுவழங்கா
திந்தவேளைகாறிருத்தினையதிதியின்மிக்கோன்
கந்தமார்குழலாயுனைக்கைப்பிடித்தவனோ
வந்தணாளர்தம்மியற்கைநீயறிகலாய்போலும். (கரு)

சுறவுகண்டெழுமாழ்கடனீரெலாந்துய்த்துக்
குறைவிலாதவாதாபியையகட்டுயிர்குடித்துக்
கெறுவமோங்கியவிந்தமாங்கிரிவிழப்புடைத்த
மறைவலான்றனையுணர்கிலாய்மாதுநீமற்றும். (கசு)

தடவையம்பிலஞ்சொற்கமுந்தழன்மலிந்தொறுப்பத்
திடவைவெம்பண்டைமூவருநன்மொழிசெப்பப்
புடவைதுய்ப்பதும்போக்கியேதவம்புரிந்தனலை
வடவையங்கனலாக்கினேன்மறையவனன்றோ. (கஎ)

நிருதர்தங்குலமடங்கலுமுடித்திடநினைந்து
வருவதந்தரவானவர்வேண்டியநாளி
லொருவியேதவத்தனறவாக்கினியெனவோத
விருதுறப்புவியுறுத்தினேன்வேதியனன்றே. (கஅ)

புவியினுள்ளகாவலரெலாம்போரிடைமடிய
வவியினூற்பலதவங்களாலரன்றனைமகிழ்வித்
துவியுந்தந்தைதன்பழிதவிர்த்துலகெலாம்பெறவோர்
நவியமேந்தினேனென்மறைவேதியனலவோ. (கக)

விறலினூலுயிர்க்குலமெலாம்வீடுறப்புரியும்
மறலிமாண்டிந்தமானிலந்தழைத்திடமுன்னந்
திறலினல்வரங்கொண்டுடற்றிரம்பெறுமொருவ
னறல்செய்கூந்தலாயந்தணனன்றுகொலுரையாய். (உ0)

மாண்பினீயவமதித்தெமையிதுபொழுதளவு
மூண்பகர்ந்திடாதிருத்தனன்றுகுமோவும்பர்
காண்பனென்றிருகண்சிவந்துயிர்த்துளங்கறுத்தான்
பூண்பொதிந்தவண்முலையினுணைகைத்திதுபுகல்வாள். (உக)

பொறுத்தியென்பிழையென்றியான்போற்றவும்பொறாமன்
மறுத்துமீளவுமுனிவதென்மாத்துயர்பகத்தைச்
செறுத்தவாற்றலுண்டெனமனங்கொண்டெனைச்சீறேல்
குறித்தமங்கையர்கற்புநீயுணர்கிலைகுணத்தோய். (உஉ)

கடவுள்போற்றிடாள்கணவனைப்போற்றுவாள்கற்பி
னடல்வலாளென்ச்சுருதிகளிசைத்ததையறியா
யிடறிலாமறைவழுவறவோதினையின்னம்
படருஞ்சுக்குமந்தெளிந்திலைபரப்பினிற்றிரிந்தாய். (உஙு)

வேதமோதினுமதன்பயனுணர்ந்திலார்விளம்புங்
கோதினல்லறந்தெளிகலார்குரவரென்றுருபே
ரோதவைகுதனன்மையோவுனக்கியான்புகலென்
மாதரானவர்க்கணிகலமடமையேயன்றே. (உச)

கற்றதன்மையிற்பெரிதறங்கண்டொழுகுதலே
மற்றுநீயுணர்வாயெனின்மிதுலைமாநகரி
னுற்றநல்லறவியாதனென்றொருபெருங்கிராதன்
முற்றுமோதுவன்போதிநீயென்றிவண்மொழிந்தாள். (உரு)

வேறு.

கற்புடையமங்கைசெவிகட்கமுதமான
சொற்பலவழங்கலுமுணர்ந்தவொருதூயோ
னற்புதமடைந்துனையறிந்திலனிகழ்ந்தேன்
பொற்புடையையென்பிழைபொறுத்தருள்வைமாதோ. (உசு)

சூக்குமமுணர்ந்திலையெனுஞ்சொற்றவறன்றென்
பாக்கியமிருந்தபடியாலிதுபகர்ந்தாய்
வாக்கருண்முறைப்படியென்மாசுபொடிசெய்வான்
றேக்கியவருட்குரவன்வைகுநகர்செல்வன். (உஎ)

வாழியினிதூழியெனமாமறையிருக்கால்
வேழவிருதோளுடையமென்கொடியைவாழ்த்தி
நாழிகைதரித்திலனயந்தவளருட்கொண்
டாழியைநிகர்த்தமிதுலாபுரமடைந்தான். (உஅ)

தொய்யிலிடைசெங்கழனிதோற்றுமுறையேபோன்
மையறுகிராதகுலம்வாழவருவோனை
மெய்யடலைதுன்றுகனலொத்தவிறலோனைத்
தையலுரைகொண்டுவருசந்தைமுனிகண்டான். (உகூ)

சேமமுறமேதைவிலைசெய்துமறுகின்கண்
வாமமுறைவைகுசெயல்கண்டுமறைவல்லோ
னுமமிதுசெய்கையிதுநம்பனருளென்னென்
றுமடைகிலன்றனியிருக்குமதுகண்டான். (௩௦)

நான்மறையவன்வரவுநல்லறவியாதன்
றூன்மனதிலுன்னியிருதாள்கரம்விளக்கி
வான்முறைபணிந்துமடவல்லிமொழிகொண்டே
மேன்மைபெறவந்தனைகொல்வேதியர்பிரானே. (௩க)

எழுந்தருண்மனைக்கணெனவின்சொல்பலகூறித்
தொழுந்தகையனைக்கொடுமனைக்கிடைதுலங்கு
மழுந்துமொருபீடமிசையுய்த்தருகிருந்தான்
கொழுந்துவிடுஞானபரிபூரணகுணத்தோன். (௩௨)

இறப்பெயிர்நிகழ்ச்சியுணரேந்தலையிரண்டு
பிறப்புடையவன்குரவரிற்பெரியனுமென்
றுறத்திருவுளத்துறுதிகொண்டிதையுரைத்தா
னறக்கடவுடன்னைநிகரன்னறனைநோக்கி. (௩௩)

நீதிநெறியாதும்வலநீபலவிலங்கின்
மேதைவிலையிட்டமர்தன்மேன்மையெனலாமோ
வோதுகொலைதன்னிலுயர்பாதகமுமுண்டோ
வேதினில்விழைந்ததுரையித்தொழிலையென்றான். (௩௪)

இத்தகைவினவவவனுக்கிவனிசைப்பான்
வித்தகமறைக்குலரொழுக்கமிகுவேந்தர்
புத்திதருதண்டனைபுவிக்குள்வசியர்க்கே
வைத்ததொழிலானபொருள்வழக்குமுதலாமே. (௩௫)

பின்னவர்தமக்கினியபெற்றியிவர்மூவர்
தன்னிசைவினைவவெனவைத்ததகவேபோ
லுன்னுமெமதின்மரபினுற்றவர்தமக்குச்
சொன்னதொழின்மேதைவிலைசெய்தினிதுதுய்த்தல். (௩௬)

அன்றிநகராள்பவனருஞ்சனகனும
வென்றிதருமண்ணல்குலமேன்மைதவறுற்று
லொன்றுசுதராயினுமொறுக்குமுறைதப்பா
னென்றமொழியிவ்வுலகிலாரறிகிலாதார். (௩௭)

ஆதலினெனக்கிதனையன்றிநலமெய்தா
வாதனைதனைக்கருதிமற்றுமுயிரெம்மாற்
காதுவதொழித்தொருவர்கையினிதுகொண்டே
யூதியமுறத்தினமுமூன்விலைபடுத்தி. (௩௮)

வந்தபொருளந்தணரருங்குரவர்மற்று
முந்திவருவம்பலர்மொழிந்தகடவுட்பா
றந்தினியகேளடியர்தம்முடனருந்தித்
தந்தையொடுதாயிருசரண்கண்முடிசூடி. (௩௯)

சத்தியமுடன்சவுசமுந்தவறுறுமற்
புத்திபொறைசாந்தமருள்பூண்டொருவர்தாரம்
வைத்தபொருளென்பவைமனத்துநினையாமற்
குத்திரமறிந்தவர்கள்கூட்டுறவிலாமல். (௪௦)

ஈசனெடுமாலுமுதலானவிமையோர்பா
னேசமுடனேகடவுணிந்தைபகராமற்
பேசுபலவண்மைவிரதம்பெயர்தலின்றி
யாசைமடவார்பலரையன்புறமணந்து. (௪௧)

சித்தமொருமித்தவர்தமக்கினிதுதேற்றி
யெத்தகையருக்குமகிழின்னுரைவழங்கிச்
சுத்தனெனவர்னவர்துதிப்பவிவணுற்றே
னித்தகவெனக்கருளிசைந்தசெயலாமால். (௪௨)

ஈனகுலசாதனெனவெய்தியுமெவற்கும்
ஞானமுனியென்றுபுகலத்தகுநலத்தே
னுன்வழியாவுமறியும்படியுரைத்தேன்
யானொருவரோடுபுகலுஞ்செயலிதன்றால். (௪௩)

பொற்புடையறந்தெரிகுறுஞ்செயல்பொருட்டாக்
கற்புடையமங்கையிருகண்ணருட்டலைக்கொண்
டற்புதமடைந்தனையதற்கிதுதெரித்தேன்
சொற்படுமறங்கணிலைசொல்வனினிகேண்மோ. (௪௪)

தன்குலவியற்கைதவருதொழுகருனே
முன்புரைசெய்நல்லறமெனப்புகல்வர்முன்னோர்
மன்பலவுயிர்த்தொகைகண்மீதருண்மனத்தோ
ரின்பமடைகுற்றனரிகத்தொடுபரத்தும். (சரு)

உத்தமமனத்தினுடைகம்புறமொருப்பட்
டத்தகையெவர்க்குமிதவாயவைநிகழ்த்திச்
சத்தியமிசைத்தசவுசம்பெரிதுதாங்கி
மெத்துவிடவாஞ்சைகளைவிட்டொழுகல்வேண்டும். (சசு)

வெகுளிவயனுயொருவர்வேதனையுழக்கும்
பகுதிபயில்வானிலைவுபற்றுதன்மறுத்தே
மிகுதிபெறுநல்லறிவின்மேலவர்வழிப்பட்
டிகழ்மதிகலங்கினுமறம்வழுவிலாராய். (சஎ)

மற்றொருவர்செய்பிழையுணர்ந்துமனநாணச்
செற்றமறநன்மையதுசெய்தொழுகின்முன்செய்
குற்றமவனைத்துரிசறுப்பதுகுறித்தே
னிற்றலினியாரையிகழ்வாருறவுநீத்தல். (சஅ)

மாறுபடுதுன்னெறிவழிப்படுமுலுத்தர்
கூறுமுறைதன்செவிகொளாமுறைதிருத்தல்
வேறுமுளநான்முறைவிளக்குதலனைத்தும்
பேறுதருஞ்சீரியரறிந்தொழுகுபெற்றி. (சகூ)

வேறு.

மதியிலார்பாவமொன்றியற்றிமற்றுணர்ந்
திதுகொலோபெறுவதென்றிரங்கினுரெனின்
விதிமுறைநீங்கியோர்பாகமீமிசை
சதிரெனவியந்தவர்தம்மைச்சாருமால். (ரு௦)

காமமுங்குரோதமுமுலோபமுங்கடிந்
தேமுறுதிருப்பவனிசைக்குநல்லற
மாமொருகடவுளேயறைந்தபண்பெலாந்
தோமிலாச்சிட்டராசாரத்தூய்மையே. (ருக)

மகந்தவமுறுதிபொய்மறுத்தன்மாமறை
யிகந்திடாதோதுதலிருந்தவாச்சிரம
முகந்தநன்னெறிவழாதுஞற்றிநல்லவர்
சுகந்தருநண்பினிற்றுளைதலாதிகள். (ருஉ)

நல்வழியிவையிவையன்றிஞாலமேற்
பல்வழிதீமையைப்பயக்குங்கூடமுட்
புல்வழிமேய்ந்தனபோலத்தோன்றலாற்
சொல்வழியறிவுளோர்துறப்பர்தீதென்றே. (ருங)

எடுத்தவிவ்வறங்களினிசைந்தியற்றுவோர்க்
கடுத்தவந்தக்கரணங்கள்சுத்தியாம்
விடுத்தகன்றிடுமறியாமைமேவிடு
மடுத்தபேரறிவுசீர்ஞானம்வாய்க்குமே. (ருச)

ஆதலிற்றுணையிவையாகக்கொண்டுநீ
காதலைத்தணிந்துநாற்கரணசுத்தனா
யோதலிற்போதனாயுயர்ந்தமுத்தியா
மேதமிலருங்கனிக்கருக்கனென்னவே. (ருரு)

விடயமாம்புலனுடன்வெய்யகாமமா
மிடையெறிசுறவுடனிசைக்குங்குரோதமா
மடைதருதொய்யலோடவிர்பவக்கடன்
மிடைநெறிப்புணையினாற்கடந்துமேவியே. (ருசு)

நிலைப்படுமிருங்கரைநேயங்கண்டுளந்
துலைப்படுசமனெனத்தூய்மையாவையேற்
சொலப்படாநலனெலாந்துய்ப்பலாகுமென்
றுலைப்படாமெழுகெனவுருகக்கூறினான். (ருஎ)

தெய்வதஞ்சாத்திரஞ்சிட்டர்பாங்கென
மொய்தருநன்னெறிமும்மைப்பாலவாங்
கைதருநெல்லியங்கனியிற்காட்டுமா
லுய்தருமுத்திவீடென்பரோர்ந்துளோர். (ருஅ)

நிரந்தரமறைபயின்றுரைத்தநீணெறி
விரிந்தமூவகையினோர்வகையைமெய்க்கொளாப்
புரிந்தவிச்செய்கையிற்பொருந்தினானெனப்
பிரிந்திடாப்பிறவியாம்பெருக்கநீங்கியே. (ருகூ)

உலகெலாமொருவிமேலுலகையெய்தியே
பலவுயிர்துன்புறுபரிசுகண்டெயி
றிலகிடநகுவனென்றிசைப்பராரிய
ரலகுறவின்னுமொன்றறைவன்கேட்டியால். (சூo)

என்குலத்தொழிலுயிர்க்கொலையென்றேமுதன்
முன்குலப்பெருமநீமொழிந்துளாயதற்
கின்புறத்தகுமொழியிசைத்துளேனிதை
மன்பகுத்துணர்ந்திடாரெவருமண்மிசை. (சூக)

வேறு.

வாராய்முனியேகொலையென்னும்வாய்மைதனக்குவருமாசு
தீராதென்றேதெளியாதார்செப்பாநிற்பர்றக்கடமை
பாராதுரைத்தலவையரசர்பலவல்விலங்குவதையாரோ
போராமகத்திற்பசுவதைத்துப்பெறுதபேறுபெற்றிலரோ. (சூ௨)

முன்ஞோரரசன்பசுவிரண்டாயிரமோர்தினத்தின்முறைவதைத்துப்
பன்ஞுண்மகங்கள்பயின்றிலஞோபாரினடக்கப்பலுயிர்க
டன்று லுயிர்தீர்ந்திறந்திலவோதரணியலங்கொண்டுழும்போதிற்
சின்றுபின்னமாயுடலஞ்சிதையுமுயிர்கள்கணக்குண்டோ. (௬௩)

வருந்தியுயிர்க்கோரிடையூறுவருமென்றடவிதனிலெய்திப்
பொருந்துந்தவத்தோருயிர்க்கொலைகள்புரியார்கொல்லோகாயிலைகள்
விரும்புமூலங்களைந்துணவுமிசைதலிடையூறன்றோபோ
ரிங்கெண்ணிலரைவென்றுகதியொருவன்புகுதலறியாயோ. (௬௪)

கொல்லாநெறியோமென்றொருபேர்கொண்டுசிலர்கள்புவிதோறுஞ்
செல்லாநிற்பருடல்கொண்டுதெளிவோமயக்கோதேறுவையாற்
பொல்லாவுடலம்பொருத்தவுயிர்க்கொலைசெய்பொருட்டேயக்கொலைக
ளில்லாரில்லைமானிலத்தினென்னத்தெளிதியிருக்குணர்ந்தோய். (௬௫)

ஆயுவெவர்க்குமெவ்வுயிர்க்குமறையுங்கணக்குண்டதற்கதிக
மேயதாழ்த்தியோருயிர்ப்புவேலையெனினும்பிசகாதான்
மாயமொருவர்நிமித்தமிதைவதைத்தாரென்பதன்றியொரு
தீயமசகந்தனையெனினுஞ்செறுக்கத்தனதுசெயலின்றே. (௬௬)

குலத்துக்கெடுத்தநல்லறத்தினொழுக்கங்கொண்டுகுறித்தவுயிர்
நிலத்திற்கொலைசெய்திடல்கொல்லாநெறியிற்பெரிதென்றுணருதியா
னலத்திற்குரவர்கடைப்பிடிகளுட்டிற்சிலருக்குமதருமஞ்
செலுத்துமுறையும்புகன்றிடுவன்றெளிதிசாலத்தெளிவுள்ளோய். (௬௭)

பலநல்லுயிர்கட்கிதமெய்தப்பகரும்படிறுமெய்யுரைத்த
நலனிலதிகந்தரும்பலவோர்நடுங்கப்புகலுமெய்ம்மொழியு
மிலகும்படிறுபுகன்றவருக்கிசையுந்தீமைதருமென்பர்
புலமையுணருந்தவத்துயர்ந்தபுனிதமுனிவர்பல்லோரும். (௬௮)

பரவையாடைமேதினியிற்பலருமிகழுந்தரமேனும்
விரவுமெவர்க்குமிதமேனும்விதியாங்குலத்துக்கடுத்ததொழி
லுரவோர்புரிதலெனமனுநூலுறைக்குந்தனதுகுலவியற்கை
பொருவிநலஞ்செய்தொழிலேனுமுளுற்றிற்றீமையுண்டாமால். (௬௯)

செய்தவினையோரிரண்டினையுந்திரட்டியுருவஞ்செய்ததனு
லெய்துமின்பதுன்பங்களிடையிலடுக்குந்தரமுண்டோ
வெய்திவிதனைப்பிரார்த்தவினையென்றேயுளத்திற்றோமற்
றெய்வமிவைசெய்தனவென்றுதெளியாதவர்கள்வெறுப்பாரால். (௭௦)

இன்பமடையுமாயிடையினெம்மாலடுத்ததெனவியந்து
துன்பமடைந்தாற்கடவுடருந்துணிபென்றுரைத்தறகவாமோ
வன்பிற்சுகந்தன்செயலாலேயனுகிற்றுக்கம்வாராது
வன்பில்வில்க்கிலொழியாவோமறையின்றூயமாதவத்தோய். (௭௧)

எல்லாநெறியும்வழாதவறுமியற்றுங்கருமந்தனக்கொருசார்
பொல்லாவிடையூறெய்திடும்புல்லறிவிற்றிகழ்ந்தவிழிமாக்கட்
கல்லாக்கவறுமனங்கொண்டகருமங்கவலையறவொருசார்
நல்லாய்நிறையுமிவ்வியற்கைஞாலத்தெவரோநாடாதார். (௭௨)

கருமமனதிற்சிலரொன்றுங்கருதாதிருப்பமுற்றுடைத்தாங்
கருமங்கருதிச்சிலருழன்றுகாமுற்றுழுமாகாவா
மொருவன்வேண்டாதிளஞ்சுதரையொருங்கேயுயிர்க்குந்தவந்தான
மொருவனியற்றியணங்குழந்துமுதவலாற்றுதுணராயோ. (௭௩)

இவ்வாறியற்கைபற்பலவாயிருத்தறன்னுவியலான்மா
வெவ்வார்கருமவயனுகிவிழிப்பதன்றியக்கரும
மிவ்வான்மாவின்வயமாமேவின்பதுன்பம்பிணியிறத்தல்
செவ்வேதனக்குத்தவமமையத்தெரியாதிருந்துதிகைக்கும்மோ. (௭௪)

வினையாலுருவமெடுத்ததுவும்வினையேமீளப்புரிவதுவும்
புனையாவினைபோய்த்தொலைந்திடத்தேபொய்யாமுடலம்வீழ்வதுவு
முனையாரான்மாநீங்குவதுமுறையாந்தனக்கன்றியுமந்த
வினையாங்கதற்குக்கரியாமென்றுணர்ந்தார்பிறவிமேவாதார். (௭௫)

என்றுதருமவியாதனிவையெடுத்துக்கூறத்தலைதுளக்கி
நன்றுபெருமானுரைத்தவெலாநழுவாதுளத்திற்குடிவைத்தேன்
றுன்றுமான்மாவுடைநிலைமைசொற்றுயவனெவ்வுருவுடையன்
வென்றிவினையாலுடலெங்ஙன்மேவுமென்றான்வேதியனே. (௭௬)

பின்னுமுரைப்பான்கிராதகுலப்பெருமானான்மாதனக்குருவ
மென்னேயுரைப்பதகளங்கனனகனஞ்தியெஞ்ஞான்றுந்
துன்னுவொளிருந்தூலவுடற்றுறந்துபயிலான்சூக்குமமென்
றுன்னுமுடல்கொண்டோருடல்விட்டுறுமாதனையருடற்புகுவன். (௭௭)

அங்கதனைத்தானபிமானித்ததுவேதானென்றறைதலினுற்
றங்குமியமவாதனையுந்தக்கசுகதுக்கங்களெலா
மங்கணான்மாவனுபவிக்குமதற்பின்புலகில்வினைக்கீடா
மங்குந்தூலவுடலெடுக்குமின்னுங்கேட்டிமறைவல்லோய். (௭௮)

புகலுந்தூயவினைவலிதேற்புத்தேளாக்கைதனைப்பொருந்து
மிகவும்வினைகளிரண்டுமெனின்மேவுந்திறன்மானுடனாக்கை
பகருந்தீயவினைபெரிதேற்பலதாபரசங்கமவுயிர்கட்
கிகலுமுடலம்பெறுமெனவேயியம்பாநிற்பராரியரே. (௭௯)

இன்னபரிசாலுடருங்கியிறந்துபிறந்துகடற்றரங்க
மென்னத்தொலைவற்றுழிகடோறியலுங்கரைகாண்பரிதாமான்
மன்னுஞ்சகடவுருளேயிவ்வாழ்க்கையுதகப்புற்புதமே
தன்னதாக்கையெனவெறுத்துத்தனைத்தேர்ந்திருந்தல்சதிராமே. (௮௦)

தேறுதிழைக்குமிந்திரியச்செருக்கைப்பெருக்காதொருவழியிற்
பேறுநடக்கும்படிவென்றோன்பிறவிக்கடலைக்கடந்தருள்வீ
டேறுநின்றதனிமுத்தனென்னவுணர்தியெனமறையோன்
வீறுப்புலனுமப்புலன்கள்வெல்லுமாறும்வினவினனால். (அக)

கேட்டமறையோன்றெளிவெய்தக்கிராதர்பெருமான்புகல்கின்றான்
வாட்டமறுமண்புனலேயுவளியம்பரமென்றரும்பெயர்கள்
காட்டும்பூதமைந்தெனவேகருதாய்கலைவல்கருத்தோனே
யீட்டுமெய்வாய்கண்மூக்குச்செவியோடைந்தாமிந்திரியம். (அஉ)

சத்தபரிசரூபரசகந்தந்தன்னோடைந்தென்ப
ரெத்திக்குறைஞானேந்திரியத்தியலும்விடையமீதன்றி
தத்தும்வசனகமனமொடுதானம்விசர்க்கானந்தமென
வைத்தகன்மேந்திரியத்தின்விடையமைந்தாய்வகுத்தனரே. (அங)

திருவார்மனமேபுத்தியொடுசித்தமகங்காரமுங்கூட
மருவுமந்தக்கரணங்களென்காமிவைமற்றுரவாற்றுற்
பொருவார்நான்காறுங்கருவிப்புணர்ப்பாந்தூலவுடலென்பார்
கருவார்நெறியிற்புகாதவழிகண்டகுரவர்கருத்தோர்ந்தே. (அச)

சீவனிதனைத்தானென்றுதெளிவற்றுழலுமவ்வளவு
மேவும்பிறவியன்னியமென்றுணரிலுபாதிவிடுத்தகலுந்
தாவுபழுதைதனையரவந்தானென்றிடரிற்றளர்ந்தோர்கட்
கேவமுண்மைதெரியவிடுத்தேகுங்கலகத்தியல்போல. (அரு)

குணமூன்றனுமைம்புலன்கள்குறிக்கும்விடையங்களினனும்
பணிசெய்நன்மைதீமையெனப்பாராதியற்றிப்பலகோடி
யிணைதீருழிசொர்க்கநரகியலுமுலகிற்றடுமாறித்
தணவாப்பிறவிப்பிணியுழந்துதன்னையுணராதாகுமால். (அசு)

புலன்போம்வழிமற்றறிவேகிற்புலன்கைவயமாமறிவுநெறி
நிலையாம்வழிநின்றிடிற்புலன்கணிலைசெய்தன்கைவயமாகும்
பலரும்தவங்கண்மகமோமம்பாரிற்புரியிற்பலிப்பெய்து
நவிவைம்புலன்கைவயமின்றிநடாத்துநெறிகணிலையாவே. (அஎ)

எல்லாந்தானுய்த்தானெங்குமிருப்பதானுலினியுலகி
னல்லார்பொல்லாருறவுபகைநானீயென்றுமிகலுண்டோ
சொல்லாயிதனுக்கிடையூறுத்தோற்றல்பூதவிகாரமென
வல்லாரறிந்துசமாதிநிலைவழுவாதிருப்பர்மாசற்றே. (அஅ)

வேறு.

என்றுஞானநூலெடுத்துக்கூறலு
மன்றலம்புயமாலைமார்பினே
னென்றுகூறுவானுரைத்தமுக்குண
மின்றுதேறுமாறியம்புவாயென. (அகூ)

கிராதர்தங்குலக்கிழவன்மீளவும்
புராதனுதிபர்புகலுமாறுனக்
கராகமாகனுனறைவன்கேளெனுப்
பராவுமிவ்வணம்பகரலாயினன். (௬௦)

வயிரநித்திரைவெகுளிமாமனம்
பயில்குரூரதமாமையல்பற்றெலா
மியல்செய்தாமதமென்றுதேறுவாய்
நயனுலாவுநான்மறைவனன்மையோய். (௬௧)

ஞானமாதரவின்பநற்புகழ்
தானம்வண்மைநல்வாய்மைதாழ்விலா
மானங்கல்வியேமற்றுமாண்பெலாம்
வானிராசதமென்பர்மாசிலார். (௬௨)

சொல்லொணுதசாத்துவிதமாவன
வல்லலொன்றிலாதகண்டபூரணத்
தெல்லையெய்தியொன்றுயிருப்பதே
நல்லசிந்தையிற்கோடிநாடொறும். (௬௩)

முக்குணந்தருமுடிபிதாமெனத்
தக்கவன்சொலத்தவஞ்செய்வேதியன்
மிக்கவாயுவெங்கனல்விளங்குறத்
தொக்கில்வைகுமாசொற்றிடாயென. (௬௪)

மீளக்கூறுவான்வேடர்கோமகன்
காளத்தீயவன்கமலனுபிவாய்
நாளச்சேயிதழ்நடுவண்வைகுவான்
மேளத்தாலிராவிளக்கைமானவே. (௬௫)

ஆங்கணிற்பிராணனுமபானனும்
பாங்கிலக்கநற்பயிலுவிப்பவர்
தாங்குமூலமுமிதையமுந்தனிப்
பாங்கில்வைகிடுமென்பர்பண்ணவர். (௬௬)

இலஞ்சியர்தலத்துதானனென்பவன்
கலந்திருப்பனிக்களேபரத்தெலா
மலிந்துவைகுவன்வியானன்வண்களத்
திங்குவைகுவனிருஞ்சமானனே. (௬௭)

அனையபெற்றியென்றறியக்கூறலு
முனிவில்வேதியன்முற்றுந்தேறியே
தனைமறந்தனன்றுங்குமேம்பலாற்
புனைசெய்கண்கணீர்பொழியவைகினுன். (௬௮)

நிறைந்தவேதியனிலைமைகண்டவண்
சிறந்தபேரருட்சிந்தையண்ணலுந்
திறங்கொடன்னுடைக்குரவர்சீர்பெற
வுறைந்தபாங்கவனோடுமேகியே. (கூகூ)

ஆதனத்தின்மேலமர்ந்திலங்கிய
பேதமற்றதாய்பிதாவினைப்பதங்
காதலிற்றொழுதெழுதல்கண்டவர்
மாதவத்தினைவாழ்த்தினாரரோ. (க00)

ஆசிபெற்றவனவரைநோக்கியே
மாசில்சிந்தையீர்வழிபடுந்திறங்
கூசிடாவகைக்குறிக்கிலிங்ஙனம்
பேசுமுன்னரிற்செய்வல்பேதையேன். (க0க)

கட்டுரைப்பதேகருமமென்னலு
முட்டில்வண்மையோர்முகமலர்ந்தவன்
கிட்டமேவிடக்கிடைத்தபின்னரி
னிட்டம்விஞ்சவொன்றெடுத்துக்கூறினான். (க0உ)

அத்தனீசுதனைப்பெற்றுளோர்
பத்தியாய்வழிபடுதற்கையமோ
உத்தவோர்குறையின்றுசொல்வதேன்
வித்தகக்குணம்விளங்கும்வண்மையோய். (க0ங)

எண்ணிறந்தநாளிருந்துநல்லறம்
பண்ணுமுண்மையேபயனெமக்கெனத்
தண்ணளித்துணைப்பார்வைதந்தன
ரண்ணன்மீளவொன்றறைவதாயினான். (க0ச)

வேதியன்றனைக்காட்டிமேதகு
கோதிலீர்நுமைக்காண்குறிப்பினா
லேதந்தீரவிங்கெய்தினானென
வோதினானவருவகைகூரவே. (க0ரு)

கதியினைத்தருங்கடவுண்மைந்தனை
விதியினிற்றருவிருத்தரன்புடன்
றுதியினைத்தரத்தொழுகுலத்தவன்
மதியிலற்புதமன்னினானரோ. (க0சு)

மீண்டுநல்லறவியாதனக்கண
மாண்டவேதியனோடும்வந்தவ
னீண்டுமுன்றில்வாயிருந்துபின்னரும்
பூண்டநல்லறம்புகல்வதாயினான். (க0எ)

## வேறு.

உலகெலாஞ்சூழன்றுபலநதியாடியுரைத்தநற்றலம்பலதொழுது
பலமகமாற்றிப்பிரமசாரியத்திற்பற்பகறவம்புரிந்தலசி
நிலைமையிற்றூனமளித்தணிவிரதநிறைத்துநற்கதிபெறுமாறு
சிலர்கிடந்துழல்வர்சூக்குமநெறியைத்தெளிந்திலர்கேட்டிநீதிறலோய். (க௦அ)

சத்தியமிஞ்சிபொறையதற்ககழிசாந்தம்வாகினிதவமெய்தி
யுத்தமற்குநவுந்தானமேயெயிலுக்குறுபலபண்டமெம்பெருமான்
பத்தியேயமைச்சரின்னுரைகவசம்பரித்தவர்க்குள்ளறுபகையாஞ்
சத்துருவொழித்துஞானநாடளித்துத்தற்பரமாய்விளங்குவரே. (க௦கூ)

தன்மனையன்றிபிறர்மனைவிழையான்றவம்பயில்பிரமசாரியனே
துன்மைசெய்தொருவர்பொருடனைவிரும்பான்சோடசதானமீந்தவனே
வண்மைசேர்வாய்மைகாப்பவனெண்ணின்மகமெலாம்புரிந்தவனுகும்
நன்மைதீமைகளையொன்றதாக்காண்போன்ஞானவாதீதனுமன்றே. (கக௦)

அறமிரண்டதனுட்டுறவறத்திருந்தோரனுவளவாயினும்வழுவிற்
பெறலரிதாகுங்கதிமறையெடுத்துட்பேசுமில்லறந்தனைநடாத்தி
நெறியறிந்தறியாவாற்றினல்வழுவினிகழ்த்தியநல்வினைத்துணையான்
மறுமையேபயக்குமாதலாற்பெரிதில்வாழ்க்கையென்றுணருதிமறையோய். ()

துறவறந்தன்னிலிருக்குமாரியற்குந்துகளறுவானவர்தமக்கும்
புறனறுமியற்றென்புலத்தவர்தமக்கும்பொங்குநல்லாற்றினிற்றுணையா
முறவிவனென்னிலில்லறந்தனக்கோரொப்பிலைகாண்மடமச்ச
நெறிதருபயிற்புமுதலியகற்பினிலைவழாத்துணைவிநேர்ந்தவர்க்கே. (ககஉ)

அற்றதாபதர்களதிதியர்வானோரந்தணராரினுமடவார்க்
குற்றதன்கேள்வனுயர்ந்தவனவனுக்குயர்ந்ததெய்வதம்பிறிதிலையாற்
சொற்றவக்கேள்வன்றனக்கினியெடுத்துச்சொல்லியகடவுளாரென்னிற்
பெற்றதாய்தந்தையிருவரேயிதன்மேற்பேசலாங்கடவுள்வேறிலையே. (ககங)

ஆதலானீயுன்றந்தைதாயருளாலன்றியித்துணைபுவிதிரிந்து
வேதமோதியுமாதவங்களிற்சிறந்தும்விரதமாற்றியுமிவணிருந்தாய்
காதல்கொண்டுன்னைக்காண்கிலாமையினாற்கடுங்கனலுதரத்துட்கலப்ப
வேதனையுழன்றூர்குரவர்நீயேகிவிரைந்தவர்சோகமாற்றுதியால். (ககச)

கற்புடைமங்கையருளினாலடைந்தகாரணத்திவையெலாமுனக்குப்
பொற்புறவுணர்த்தியளித்தவர்க்காற்றும்போதமும்புலப்படத்தெரித்தே
னற்புதவினினீயில்லொழுக்கமர்ந்தேயறைந்தவாறகம்புறமொன்று
நிற்பதேநிலையென்றருண்முறையுரைத்தானெடுந்தகைகௌசிகனுரைப்பான்.

மன்னியமறையின்றெளிவுமற்றுள்ளவான்கலைநிலைமையுந்தூயோர்
பன்னருநெறியின்பகுதியும்பகுத்துப்பாலுநீர்பிரித்தெடுத்தருந்து
மன்னமுநாணப்புகட்டினையுய்ந்தேனையநீபணித்தவத்துறையே
துன்னுவநின்சொற்சுருதியுங்கதியுந்தூய்மையுமாமெனத்துணிந்தேன். (ககசா)

அறப்பெருங்கடவுணீகொலோவன் றியனந்தனேவம்புயத்திறையோ
முறைப்படியுலகினிவ்வுடலெடுத்தமுயங்கினரென்றெனதுள்ளங்
குறைப்படுமையந்தெளிதரமேனாட்குறித்தகாரணத்தையும்புகல்வாய்
சிறப்புடைமூன்றுகாலமுந்தெரிந்தசெவ்வியோயெனவவன்செப்பும். (௧௧௭)

முன்னையபவத்திற்கலையெலாமுணர்ந்தமுதுமறைவேதியன்யானோர்
மன்னவனிடத்தினன்புகொண்டவனால்வண்சிலைமறையுணர்ந்தொருநா
டுன்னியவனத்தில்வேட்டைபோய்மீண்டுதுணைவனோடெய்துறுமிடையோர்
பன்னரும்புதரினருகுறக்கலைத்தோல்பரித்தவேதியனிருந்திடலும். (௧௧௮)

தீவினைமுன்செல்திறத்தினாலுணரேன்சிறப்புடைக்கலையெனவுன்னி
யேவினைவாங்கியோர்கணைவிடுத்தேனிருந்தவன்மார்புறவுருவத்
தேவதேவேயென்றறற்றிவீழ்ந்திடலுந்தியங்கியானோடியாங்கடைந்தேன்
மேவருதவத்தோனெனவுணர்ந்தவனிவீழ்ந்துளம்வெருவிமீண்டெழுந்தே. ()

கிட்டியாங்கவனைமெல்லெனவேந்திக்கேழ்கிளர்நீழலிற்கொடுபோ
யிட்டபின்றெளிந்தானிணையடிதொழுதேயெந்தைநின்றனையுணராமற்
றொட்டனன்கணையைக்கலையெனவுரைத்துத்துளங்குதல்கண்டவன்வெகுண்டு
மட்டறுநோயால்வருந்தியபெருமான்மற்றிதுபுகன்றனன்மன்னோ. (௧௨௦)

வேதியனாகித்தன்செயறுறந்துவேந்துடையியற்கைசெய்ததனாற்
போதுமேற்பவத்திற்கிராதனாயாக்கைபொருந்தவென்றுரைத்தலுந்துதித்து
நீதிசேர்முனியேயென்பிழைபொறுத்திச்சாபமுந்நீக்கவென்றிரப்ப
மாதவன்மீளக்கருணைவந்துரைத்தான்மறுப்படாவாசகம்வயங்க. (௧௨௧)

எடுத்தொருபவம்நீகிராதனாய்ஞானவியல்வழாதிருந்துமீண்டாக்கை
விடுத்துவேதியனாய்மீளவுமுன்போல்விளங்குவையென்றருள்செய்தா
ணடுத்தசாயகத்தைமெல்லெனநீக்கியந்தணன்றனையவண்கொடுபோய்
மடத்திலுய்த்ததற்பின்மருந்தினாலுடலம்வகிர்ந்தபுண்மாற்றியபின்னர். ()

முன்னவன்மகிழ்ந்துவிடைதரமீண்டுமுன்பயில்சார்பினிலடைந்தே
பின்னருஞ்சிலநாளிருந்துடல்விடுத்திப்பெற்றிசேராக்கைபெற்றுதித்தேன்
றன்னுடலந்தத்தந்தணனாகத்தகுவனென்றுரைத்திடக்கேட்டு
நன்னெறிமறையோனற்புதனாகிஞானமன்னவற்கிதுமொழிவான். (௧௨௩)

நீதியுநெறியும்வாய்மையுமுலகினிறுத்தினோன்வேதியனன்றி
வேதியனேனுமிழுக்குறினவனைவிளங்குசூத்திரனெனவேத
மாதவர்புகன்றாராதலாலுடலமாய்ந்தபின்பாவதோர்பொருளோ
கோதிலாயிந்தப்பிறவியில்வேதக்குரவனீயல்லையோகுறியாய். (௧௨௪)

என்னுடைக்குரவர்முன்செய்மாதவத்தாலின்றுனைக்காணுமாறிசைந்த
தின்னுரையமுதஞ்செவிவழிபுகுந்தென்னுயிர்க்கிடையூறிலாதொழித்து
நன்னலமெல்லாமளித்ததின்றினிநீநவின்றவாசகப்படிவழுவேன்
பன்னுவதென்னைமறந்திடேல்கருணைபாரிலென்மீதிலென்றிசைத்தே. (௧௨௫)

அவனருடலைக்கொண்டுளத்தினாலிறைஞ்சியாண்டுமும்முறைவலம்புரிந்து
கவலையொன்றேனுந்தெரிதராப்பெருமைக்கருணையான்விடைதரமீண்டு
தவமுயர்கற்பினருந்ததிநிகராத்தையலையெதிர்ந்தறமகிழ்ந்து
துவரிதழ்நின்னாலறமெலாமுணர்ந்தேன்றேற்றனன்பவமெலாமென்றான். ()

பொன்னனைசாலநல்லுரைபுகன்றுபோதிநின்குரவர்பாலென்ன
முன்னவன்விடைகொண்டேகியாங்கவன்றன்முதிர்நகரெய்தியேமுசிப்பாற்
றுன்னருந்துயரத்துழலிருகுரவருவந்திடத்தொழுதருடலைக்கொண்
டுன்னறுங்கற்புக்கொருத்தியைவேட்டேபுரைத்தவில்லறத்தனாயமர்ந்தான். ()

தந்தைதாயியல்புமகன்றருமுறையுந்தவளவெண்ணகைமடமாதர்
புந்திசெய்கேள்வர்க்குடன்படுமாறும்புகலுமிவ்வழிகுலத்துதித்தோர்
முந்துவான்கதியிற்புகுவதுமுதலாமுரசுடைக்கொடியினேய்கேட்ட
வந்தவாறிதனாற்றெளிகுதியென்றானந்தகற்கந்தகனானோன். (கஉஅ)

கௌசிகச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-சஙOஎ.

---

# குமாரசம்பவச்சருக்கம்.

---

இன்னதென்றவனுரைப்பமன்னவனிசைப்பிலற்புதமனத்தனாய்ச்
சொன்னநன்னெறியுணர்ந்துமையல்கடந்தனன்புவியினெங்குமாய்
மன்னுமங்கிபலவகையெனுந்திறனும்வந்துசண்முகனுதித்ததும்
பன்னுகென்றவரிரப்பவோதரியபண்பினானிதுபகர்ந்தனன். (க)

தழலெனுங்கடவுண்முன்னமும்பரொடுதர்க்கமாகமுனிவாகியே
யழலிலாவகைகரந்துசென்றுதவமாற்றிநின்றனனயன்றெளிந்
தெழில்கொளங்கிரனைநல்கிநீகனலின்வண்மைசெய்கெனவிசைந்துயிர்ப்
பழுதிலாவகைநடாத்தினன்றவமுயன்றபாவகன்மடங்கியே. (உ)

எங்குமல்கியழலின்றெனுவக்கையியங்குமங்கிரனைநோக்கலும்
பங்கமெய்தியவன்மீடல்கண்டெதிர்ப்பட்டார்ந்திரைஞ்சியருளங்கிர
னிங்குநின்பதமிருந்துநீபுரிகயானுனக்குரியபுதல்வனாய்த்
தங்குவேனெனவிதங்கிமீண்டனனுதாசனப்பெயர்கொடன்மையோன். (ங)

தன்னையொத்ததழன்மேனிமல்குமொருதனையனங்கிரனுடன்பரிந்
துன்னுதற்குரியவன்புடன்கனலுகந்துமுச்செகமுலாவுநாண்
மின்னையொத்தவெழிற்சிவையெனுங்கொடியைவேட்டுமைந்தரையளித்தனன்
புன்னுமோரெழுவர்தந்தையிற்புகழ்படைத்தபாலரைவியப்பவே. (ச)

அன்னமைந்தர்பலரைப்பயந்தனரவர்க்குமெண்ணிலருதித்தனர்
தன்னிலெண்ணரியபேதமாகியுயர்நலமும்வானுமிடையுலகமு
மன்னிநின்றதவைபலவெனும்படியும்வன்னியொன்றெனவகுப்பதே
மன்னுபேதமிலையின்னுமோர்மொழிபகுத்துரைப்பனிதுகேண்மினோ. (௫)

அவிசுமந்தலசிவெங்கனற்கிறைவனரியதற்பனெனுமொருவனைப்
புவிவிளங்கமுறைவைத்தகன்றலைபுகுந்துநீரிடைமறைந்தனன்
கவலைகொண்டமரர்நேடிநேடியொருகடலின்மாடுறுதல்கண்டதிற்
றிவளுகின்றசலசரமுறைத்ததிவர்தேடுவானொளிவிருப்பதே. (௬)

வந்துவானவர்புகழ்ந்திடக்கனன்மனந்தியங்கிவெளிவந்தபின்
முந்துதன்செயல்வெளிப்படுத்தமுதிர்மீனமுற்றுமுலகோர்கையிற்
சிந்தவென்றருமுபோலுரைத்தமரர்செப்பும்வண்ணமிசையாதுபோ
யந்தனல்லுடல்விடுத்துமேவிமறைவாயினனவனியின்கணே. (௭)

காலமிவ்வளவெனுமுறைப்படிகடுந்தவம்பலபயின்றபின்
சீலவானவர்வியப்பவந்தவிசிறப்பினல்கிநலமன்னினன்
கோலவன்னிகதையீதெனச்சிலகுறித்துமீளவிதுகூறினா
னாலமுண்டசிவனருள்குமாரனெனையாளுடைக்கடவுடோற்றமே. (௮)

வேறு.

புதியவெண்பிறையுங்கங்கையுமறுகும்புனைந்தசெஞ்சடிலவானவன்மற்
றதிர்கழலொலிப்பப்பரிபுரமலர்த்தாளம்பிகையுடன்மகிழ்ந்தளாவி
மதிதவழ்சிகரக்கயிலையங்குவட்டின்மாமணிமண்டபத்திருப்பத்
துதிதருமுறையோடடைந்தனன்மகவான்றொகையறுவானவரோடும். (௯)

வந்தவர்வணங்கிநிருதரான்மெலிந்துன்வார்கழனீழலிலடைந்தோந்
சுந்தரநீயோர்மகவளித்தெமதுதுயர்தவிர்த்தாள்கெனவிரப்பச்
சந்திரமௌலியிளநகைகாட்டித்தனதுவீரியமெனுந்தழலைச்
செந்தழற்பெருமான்பருகிடவுதவிச்சிறுவனும்போதிரென்றிசைத்தான். (௧௦)

வானவர்மீண்டுதம்பதிபுகுந்தார்மாத்தழல்வானவனந்த
ஞானபூரணமாம்விந்துவைநுகர்ந்துநாட்பலவாயுடன்மெலிந்தே
தானதைப்பரிக்குமாற்றலின்றுகித்தளருநாடனிலெழுமுனிவர்
கானிலம்புகழவேள்வியொன்றியற்றிநலம்பெறநாடினர்மாதோ. (௧௧)

அங்கிவானவனையழைத்துவந்திருத்திபமரருமுனிவருஞ்சூழப்
பங்கயமுகத்தாளருந்ததிமுதலாம்பாவையரெழுவருந்தாமுந்
துங்கநல்விரதம்பூண்டுமாமறைநூற்றுறைமுறைசமிதையுமிழுது
மங்கவருகுத்துக்கடவுளர்க்கெல்லாமவியினையருத்தினரம்மா. (௧௨)

படைபொருவிழியாரழகினைச்சுமந்தபாவைமாருடனிருந்தியற்று
மிடைசெறிகனல்வாய்சிகைதருங்கனலோனிவரிளமுலைதொடநினைத்தே
யிடைதிறந்தொழுகுகறவுடைச்செழுந்தார்மகபதிமுதலவானவர்தந்
தடைபடுமாவிணுயிர்சுமந்திருந்தான்றவம்பலிப்பெய்துநாள்காறும். (௧௩)

முற்றியவேள்விவந்தவானவருமுனிவருந்தமதுலகடைந்தார்
கற்றவான்கலைவல்லெழுவரும்விடுப்பக்கனலவன்மீண்டொருபொழில்வா
யுற்றனனிருப்பக்காமமிக்குயர்ந்தேயுடலெலாம்வேண்மலர்க்கணைகள்
புற்றினிலொளிக்குமரவெனமூழ்கப்பூவைமார்தமைநினைந்திசைப்பான். (கச)

வேறு.

பாலுலாமொழியினஞ்செவிப்படுங்கொலோவடங்கா
மாலுலாமுலைமார்புறத்தினைக்குமோமறையோ
ரேலவார்குழன்மடந்தையர்சிவந்தவேழிதழூந்
தாலுவேழினும்பருகிமாறணிவனோவென்பான். (கரு)

உடுத்தகூறையும்பூண்களுமுத்தரீகமுமுன்
படுத்தவற்றொடுச்செய்ததெத்தவங்கொலென்றறைவான்
றடுத்தகன்னங்களன்றெனிலவர்விழிச்சரங்கள்
வடுச்செய்தென்னுயிரக்கணம்வாங்குமேயென்பான். (கசா)

இளைத்தசிற்றிடைக்குதவிசெய்திலரிடருழப்ப
முளைத்தபூரணமுலைகளிற்கந்தமுமலருங்
கிளைத்தபூண்களும்பெரும்பரமெடுத்தனர்கிருபை
விளைத்ததின்றுகொல்வேதியன்மின்னனார்க்கென்பான். (கஎ)

இன்னபண்பினாற்றுயருழந்தெண்ணெலாங்கருதி
மின்னனார்பெருங்கற்பினைவியந்தவண்மேவான்
றன்னதாருயிர்முடிப்பதேதகுதியென்றொருசார்
துன்னிநின்றனனுணர்ந்தனடுணைவியாஞ்சுவாகை. (கஅ)

அங்கிராவருங்கற்புடைபனைவிதானாகித்
துங்கமாமவள்செய்கையும்வனப்பையுஞ்சுமந்து
தங்குபூண்முலைதுளங்கிடத்தழற்கெதிரெய்தி
மங்கைகூறுவாளுண்மைபோன்மலர்முடிவளைத்தே. (ககூ)

எழுவரென்னுமாமுனிவரிலீற்றினிலுரைக்கு
மழுவலானிகர்மறைவலங்கிராவுடைமனையாள்
குழையுமாறுநின்மேன்மயற்கொண்டிவண்புகுந்தேன்
றழுவவேண்டுமென்றிரந்தனள்சமத்தறிதலைவி. (உ0)

கேட்டவாசகமமுதெனமெய்யுயிர்கிளைப்ப
வாட்டடங்கணுளிளமுலைமார்புறப்புல்கித்
தேட்டமாம்பொருடந்ததுதெய்வதமென்றே
காட்டிரண்டுடற்கோருயிராமெனக்கலந்தான். (உக)

அன்னகாலையிலின்பமுற்றியவமையத்திற்
கன்னலம்மொழிமீளவுங்கட்டுரைக்கின்றாள்
மன்னுமேனையராறுவரும்வருவரிவ்விருக்கை
துன்னிநீங்கலென்றுரைத்தனண்மீண்டனடோகை. (உஉ)

தாங்குவீரியந்தபித்தலாற்றுங்கலளாகி
யாங்குவேறொருபுனற்சரத்தாம்பல்வாய்வழியே
பாங்கிலுய்த்துமீண்டறுவரிலொருத்திபோற்படிவந்
தீங்கறச்சமைந்தெய்தினள்செழுந்தழற்கெதிரில். (உங)

காய்ந்தவெவ்வழற்கடவுளுங்களிப்பினாலவண்மெய்
தோய்ந்தபின்னருமவ்வகைதோயத்தில்விடுத்து
நேய்ந்தநூலிடைநீங்கியேனையருமாய்நேர்ந்து
வாய்ந்தவாறுகாற்புணர்ந்தனள்வந்துவந்தரிவை. (உச)

அருந்ததிப்பெயர்மாதுபோலாகுவாண்மிகவும்
வருந்திநோக்கினளமைகிலாவாறுகண்டேகித்
திருந்துமுன்னுருத்திருவனையாகிவந்தெதிர்ந்தே
கருந்தடங்கணுள்கற்புநீக்கிலளெனக்கரைந்தாள். (உரு)

அறுவரின்பமாமளக்கரிற்றோய்ந்தவனந்த
மறுவிலாடனிமையவிற்பைய்தலெய்தாமற்
குறுகுமங்கையைமுகமனேடிற்புகக்குறித்து
வறியமாறணிந்தெய்தினான்றன்பெருமனையில். (உசு)

பிறிந்தவில்லவடன்னுடைப்பேரெழிற்றுங்கி
புறைந்தவ்வில்லகத்துரியவற்கெதிரெய்தியுவப்பாற்
சிறந்தவாய்மையாற்செறித்தனளுறையுளிலிப்பா
லறைந்தமேலவன்வரும்பரிசறைகுதுங்கேண்மோ. (உஎ)

ஆறுமாமுறையுகுத்தனள்விந்துவையந்தண்
மாறிலாததாட்டாமரைச்செழுந்தடவைப்புட்
கூறும்பைங்கொடியவைதிரண்டெழுங்கொழுங்கனலாய்
வீறினுயர்விண்ணளவுயர்ந்ததால்விளங்கி. (உஅ)

சுக்கிலந்தருபக்கத்தின்முதற்றிதிதொட்டு
மிக்கபஞ்சமியளவைவின்மெய்யவையவங்கள்
தக்கதாகியேசட்டியிற்சண்முகத்தோடுந்
தொக்கதோள்கள்பன்னிரண்டொடுஞ்சுதனுதித்தனனே. (உக)

ஐந்துமாமுகக்கடவுளாங்கம்பிகையோடும்
வந்திருந்ததுமானுநற்றுரகமறையா
றுந்தெழுந்துவோருருவமாயுதித்ததும்புரையுங்
கந்தன்வாண்முகமாறுடன்காட்டியபடிவம். (ஙo)

விரைசரோருகமென்மலர்புரையிருபதமும்
வரைதிரண்டனமார்புமுந்நூலுநன்மருங்கிற்
புரைசெயாடையும்பூண்களுங்கருணையும்பொலியக்
கரைசெய்தேத்தொணுப்பெரும்புகழ்க்கடவுள்வந்துதித்தான். (ஙக)

உதித்தகாலையிலேனிரண்டாறுதோளொருவன்
விதித்தமுப்புரஞ்செற்றநாளேந்தியவிறல்விற்
கதித்திருந்ததுகண்டொருகரந்தனிலேந்திப்
பதித்தவாசுகிநாணொலியெடுத்தனன்பைய. (௩௨)

விண்டதண்டமுமேகராசிகள்குகையொளித்த
தண்டரண்டமாமுகட்டினுக்கப்புறத்தளவு
மெண்டிசாமுகத்தெங்கணுமேழ்பிலப்பரப்புங்
கொண்டசூரருமமரருமுயிர்த்தனர்குழுமி. (௩௩)

வேறு.

கார்முகத்தோர்பெருங்கணைதொடுத்தெதிர்
பார்முகத்துயர்ந்தெழுபண்டையோங்கலாம்
போர்முகக்கிரவுஞ்சம்பொருந்தல்கண்டதி
னேர்முகங்கிழிதரவேவினனரோ. (௩௪)

மட்டறுபெருங்கிரிவரதன்சாயகம்
பட்டனளரம்பைவான்பழத்திற்குசிபோற்
பொட்டெழவுருவியோர்பூழைசெய்ததா
லெட்டெனும்வரைக்குலந்துணுக்குற்றேறங்கவே. (௩௫)

விடுத்தனன்மீட்டுமோர்விசிகம்வெற்பினுக்
கடுத்துளசுவேதமால்வரையினுசுறு
மடுத்தநற்சிகரிகண்முறிந்துவீழ்ந்தவா
லுடுக்களுங்கோள்களுமொளித்துவாடவே. (௩௬)

இவ்வணமாடல்கண்டிருக்குமேல்வையிற்
பொய்வணமுணர்கிலாப்புலவரியாவரு
மைவணமனத்தராய்மறுகியாமினிச்
செய்வணமேதெனத்தியங்குமாயிடை. (௩௭)

இருந்தவமுனிவரரெழுவரில்லினோ
ரருந்ததிதவிரமற்றறுவருந்தழற்
பெருந்திறற்கடவுளைச்சேர்ந்தபெற்றியாற்
றருந்தனிமதலையித்தன்மைசெய்ததே. (௩௮)

என்றதிற்சிற்சிலரெடுத்துக்கூறலாற்
கன்றியமனத்தராய்க்கருத்தருந்தவர்
சென்றுதம்மனைவியர்தம்மைச்சீறியே
யன்றறுவரையுநீத்தகற்றுங்காலையில். (௩௯)

செந்தழற்றுணைவியாஞ்சுவாகைசேர்ந்தவர்
நந்தலிலாசிரமத்தைநண்ணியே
வந்தவாறனைத்துமாதவர்கட்கோதியே
தொந்தநீத்தகற்றுதறாய்மையோவென. (௪0)

தருப்பைநீங்காதகைத்தலத்துவேதிய
ரொப்படுவசைமொழிக்குடன்படாதவர்
விருப்பொழிந்தகற்றினர்மின்னனுர்களப்
பொருப்பினுக்கோர்திசையிருந்தபோதிலே. (சக)

வானவரனைவருமகத்துநாயகன்
ருனுரைமானகர்சார்ந்துசெந்தழற்
கோனுடைச்சிறுவனுங்குதித்தகொள்கையான்
ஞானமாமுகங்களாருகினுலமேல். (சஉ)

முப்புரந்தெறுசிலைமுளரிப்போதெனக்
கைப்பிடித்தருகுறுவரைகள்கண்டமாய்ச்
செப்பருந்துகளுறக்கணைசெலுத்தினன்
வைப்பவர்க்கொருவரைமதித்தல்கூடுமோ. (சஙு)

அரசுநீபுரிவதுமகிலம்வாழ்வதும்
வரிசையாய்வேண்டினீவருதிவாளம
ருரைசெயிக்கணத்திலங்குதித்தமைந்தனை
துரிசறவடுதுமென்றமரர்சொற்றனர். (சச)

கேட்டனன்மகபதிகிம்புரிச்செழுங்
கோட்டுவாரணமிசைக்கொட்புற்றவ்வயின்
பூட்டுவிற்சாயகம்பொருவில்பல்படை
நாட்டமாயிரஞ்சிவந்தேந்தினனரோ. (சரு)

வானவர்முனிவரர்வசுக்கண்மற்றுள
தானவரியக்கர்கந்தருவர்தந்தொகை
மீனுறுவேலைபோன்மிடையத்தோன்றியே
தேனணியலங்கலான்செல்லுமொல்லையில். (சசு)

ஆரணமுதல்வனன்றமரருய்ந்திடு
காரணத்துதவியகாளையென்பதை
வாரணவூர்தியான்மறந்துதாயரா
மேரணிமாதர்மற்றெழுவர்க்கோதினன். (சஎ)

இளஞ்சிறுமதலைமீதேற்குமாறெனக்
குளஞ்சிறிதமைவிலதுடற்றிவெற்றிகொண்
டளந்தறியாதபேராற்றலீரிவண்
வளந்தனின்மேவுமென்றுரைவழங்கினன். (சஅ)

அத்தகைபுரிதுமென்றமைந்தங்கண்ணன்முன்
சத்தமாதர்களென்றுரைக்குந்தன்மையோர்
வித்தகப்படையொடுமேவிநோக்கியே
கத்தனேயிவனெனக்கருதிப்போற்றினர். (சகூ)

மயக்கினுனின்றனைவயங்கொளும்பொருட்
டியக்கரோடிமையவர்க்கிறைவனெய்துவான்
முயற்சியாலங்கவனேவன்முற்றுறத்
தியக்கடைந்தெய்தினேனுந்தெளிவுசிந்தியே. (௫௦)

எம்பெரும்பிழைபொறுத்தெம்மைக்காத்தியென்
றம்புயப்பதத்துணையண்ணற்கோதலு
நம்பனையனையவனகைமுகத்தனாய்
பம்பியபேரருட்பார்வைசெய்தனன். (௫௧)

மற்றவர்மீளவுமகவெமக்கெனுஞ்
சொற்றலநிறுத்துதறாயனேயெமக்
குற்றநல்வரமெனவுவந்துநல்கினுன்
சுற்றமாய்மீண்டனர்தோகைமார்களே. (௫௨)

அன்னையரிடைந்தனரானசொற்களாற்
பின்னருமகபதிபெரிதுமாழ்கியே
பொன்னகர்ச்சனரொடும்புவனத்தெய்தினுன்
மின்னுறழ்குலிசமும்வில்லுந்தாங்கியே. (௫௩)

சூழ்ந்தனரிமையவர்தோன்றறன்னையாங்
காழ்ந்தவேற்பலவெறிந்தார்த்தனேக்கியே
போழ்ந்திடச்சிறுநகைபுரிந்துநோக்கலும்
வீழ்ந்ததுமெய்தொறும்விசாகன்கட்பொறி. (௫௪)

வடவையந்தீச்சிகைமானமேலவ
ருடலெறுறுங்கொளுந்தலாலெறுதுங்கியஞ்சியே
கடல்புரைகருணையான்கழலில்வீழ்ந்தன
ரடல்புனைசரணமேயரணெமக்கென. (௫௫)

ஐயநின்பரிசனராகிநாடொறும்
பொய்யறவேவலேபுரிதுமிவ்விடை
யுய்யுமாறருள்கவென்றும்பர்தாழ்ந்துழி
செய்யதாமரைக்கணுன்செங்கைகாட்டினுன். (௫௬)

வந்தவானவரெலாமிமையமால்வரை
தந்தவடிருமகன்றனக்குத்தானையாப்
பந்தமாய்ப்பாதுகாத்திருக்கும்பான்மைகண்
டிந்திரன்வெகுண்டுவந்தெதிர்ந்துளானரோ. (௫௭)

மட்டறுவெம்முனைவயிரவான்படை
விட்டவன்மீதினிலெறிந்தவேலையிற்
பட்டதுவலப்புயப்பரப்பின்மீண்டதா
லெட்டுணையளவுமூறியற்றிற்றில்லையே. (௫௮)

சதமகன்குலிசமேற்றுங்குமவ்விடை
கதமிகுசெங்கணுங்கனகமேனியும்
விதமிகுமகுடமும்வேலுந்தாங்கியே
துதிமிகுவிசாகனும்வீரன்ருேன்றினுன். (ருகூ)

மற்றுமெண்ணிறந்தவர்வாள்களாதியாங்
கொற்றவெம்படையொடுகுழுமியோர்கணத்
துற்றனர்குமரராமுரவுத்தோளினுர்
பற்றியகுலிசவேற்பட்டபாங்கரில். (சு0)

எற்றுமின்குத்துமின்னெறிமினிக்கணம்
பற்றுமினெனச்சினம்பகர்ந்துபாங்கிற்
சுற்றினர்குமரர்கடோற்றனேக்கியே
வெற்றிவானவர்க்கிறைவெருவினுனரோ. (சுக)

கண்ணனேகமலனேகருதுமந்தினேர்
வண்ணனேயார்கொலோமற்றிம்மூவருந்
திண்ணமாயோருருவாய்த்திகழ்ந்ததோ
வெண்ணமென்செந்தழற்கிவன்கொல்மைந்தனே. (சுஉ)

நாட்டமூன்றுடையவன்முன்னர்நல்கிய
வாட்டமின்மொழிப்படிவந்தகாளையோ
கேட்டுணர்குதுமெனக்கிட்டிவைகினுன்
ருட்டுணையாளெனச்சரண்புக்கானரோ. (சுந)

அஞ்சலென்றவனேயுமருட்கணேக்களித்
திஞ்சொலாற்றன்னருகிருப்பநல்கினுன்
கஞ்சவாவியிற்கதிர்கலந்தகாட்சிபோல்
விஞ்சியாங்கவரிடைவிளங்குஞ்சண்முகன். (சுச)

போற்றிவானவரெலாம்புகழப்பொய்கையிற்
ருேற்றியகுமரனுஞ்சோதிமேனியோ
டாற்றல்சால்பன்னிரண்டசலத்தோளொடு
வீற்றிருந்தனனுடுவிதுவைமானவே. (சுரு)

நவமணிக்குண்டலநாற்றிசைக்கணுந்
தவமுறப்பேரொளிதயங்கவாடைபூண்
குவவுநன்முடிமுதற்குறித்தபண்பெலா
மவனவையவங்கடோறழகுசெய்யவே. (சுசு)

வேறு.

ஆடவர்திலகனுகியாதனத்தின்மேற்சாலப்
பீடமர்ந்திருந்தகோமான்பேரருட்கண்டுதொன்மை
நாடியதவத்துயர்ந்தஞானமாமுனிவர்முற்று
மாடமர்மதுவைமொய்க்குமீயெனவந்தடைந்தார். (சுஎ)

வழிபட்டுவணங்கிவாழ்த்திமைந்தனைச்சூழ்ந்துநின்று
பழிபட்டவமரராரும்பயனெய்தியுய்யவீசன்
விழிபட்டகனலாய்வந்துவெளிப்பட்டமுதலேபந்தக்
குழிபட்டுக்கெடாதுனன்புகொடுத்தியென்றெடுத்துரைத்தார். (சுஅ)

மாதவர்வாய்மைகேட்டமகபதியையநீங்கிச்
சோதிநீயாரையென்றுதுணிவிலாதடுபோர்செய்த
பாதகங்கெடுத்துநீண்டபண்ணவர்குழுவுக்கெல்லாம்
நாதனீயாகித்தீயோர்நடுக்கந்தீர்த்தருள்செய்வாயால். (சுகூ)

நின்னுவரைதலைமேற்சூடிநிரந்தரம்வழிபட்டுன்பான்
மன்னுவனென்னக்கூறவானவர்பலருஞானந்
துன்னியமுனிவராருந்தோன்றலவ்வண்ணமெங்கட்
கின்னிலையருள்கவென்றேயிரந்தனர்வரந்தான்மாதோ. (எ0)

பூரணஞானவாய்மைப்புனிதனுநகைத்துவெள்ளை
வாரணவூர்திநீயேவானவர்க்கிறைவன்றீயோர்
காரணமதனிற்சேனுபதியெனுங்கருமந்தாங்கிப்
போரணிவென்றவாகைபுனைவிப்பேனஞ்சலென்றான். (எக)

அவ்வுரைக்கிசைந்துவானோராரணமுனிவராரு
மைவணமேனியானும்வள்ளலைப்பூசித்தேத்திப்
பைவருகடவுட்சேனுபதியெனநாமஞ்செய்தார்
செவ்வியசத்திதாங்குஞ்சிறுவனுக்கன்புசேர. (எஉ)

பின்னருமகவானன்புபெருகிடக்கூறுகின்றான்
பன்னருஞ்சண்முகத்துப்பரமனைத்துதித்துநின்றே
முன்னமென்றவத்துதித்தமொய்குழற்றெய்வயானை
தன்னைநீகனல்சான்றாகத்தகுமணமுடித்தல்வேண்டும். (எங)

இவ்வரமருளவேண்டுமென்றவனுரைப்பச்செவ்வேற்
கைவலான்சிறிதுபோழ்துகருதியேதந்தேனென்றான்
மைவணமேனியானும்வானவர்பலருஞால
முய்வரும்தியங்கண்டவ்வுவரியிறைவித்தார்மாதோ. (எச)

அக்கணம்பிரமனூரிலருந்தவம்பயிலாநின்ற
மைக்கருங்கண்ணினாளைவரவழைத்தும்பர்கோமான்
புக்குயர்தெய்வத்தச்சன்புதுக்கியநகரிலுற்றே
திக்கெலாமுணரச்சேய்க்குத்திருமணமுடிப்பதானான். (எரு)

இவ்வுணநிகழுங்காலத்தீசனுமுமையுமாங்கு
மைவ்வணமாலும்வேதமறையுவன்முதலோரோடுஞ்
செவ்வியபுவியில்வுந்தேசிறுவனைநோக்கிநின்று
கவ்வியையெதிர்ந்துநின்றனந்தனனிவனென்றானே. (எசு)

அறுமுகத்தொருவன்சாலவாதரவதனு லுற்ற
மறுவறுதவிசுநீங்கிவந்துதன் றந்தைதாய்க்கு
நெறிமுறைபூசையாற்றிநிலனுறப்பணிந்தானீசன்
பிறைமுடிதுளங்கநக்குப்பிள்ளையைத்தழுவினானே. (எஎ)

பன்முறைமார்பிற்புல்கிப்பாவையுந்தானுமிந்த
நன்மகன்றனக்கோர்தெய்வநாண்மலரலங்கனல்கி
மின்முனைநெடுவேலாதிவெம்படைக்கலங்களீந்து
தன்முதற்றலைமையெல்லாந்தந்தனன்றனையற்கம்மா. (எஅ)

பூண்டபேரருளான்ஞாலம்பூத்தவளுருகிமைந்தற்
கீண்டுறுதிருவுந்தேசுமீந்துளமகிழ்ந்தாளிப்பான்
மாண்டகுதெய்வயானைவதுவையாற்றிடுதனுமுங்
காண்டுமென்றெல்லோருங்கடவுணாயகன்பாற்புக்கார். (எகூ)

மூவருமெண்ணிலாதமுனிவருமுவமையில்லாத்
தேவருமெவரும்வந்துசெறிந்தபின்றேவர்கோமான்
பூவருமாதுநேராப்பொற்புடைச்சிறுவிதன்னை
யாவருமகிழக்கோலமியற்றியேயருளான்மீண்டும். (அ0)

நவமணிக்கற்றையாயும்நலந்திகழ்மண்டபத்திற்
கவினுறுமாசனத்திற்கந்தனையிருத்தியந்தத்
துவரிதழ்வாயினாளைச்சோபனவாசியோடுந்
தவமுறையருகிலுய்த்தேதனிமணமியற்றினானே. (அக)

கடுந்தழலவன்சான்றாகக்காட்டியமறையின்வண்ண
மிடும்பலசடங்குமாற்றியிவளுனக்குரியாளாகத்
தொடுங்கரமுறையேதந்தேன்றேன்றனீகொள்கவென்றே
மடுங்கரத்துதகநல்கிமகபதிமகிழ்வுற்றானே. (அஉ)

மற்றுளவேள்விமுற்றிமைந்தனுமயிலுமந்தக்
கொற்றமாநகரில்வைகக்குழுவினராகிவானோர்
சுற்றநின்றேவலாற்றநிகழ்ந்தபின்சோமன்வைகுங்
கற்றையஞ்சடையான்மீண்டுகயிலைபோயடைந்தானன்றே. (அங)

வேறு.

முருகலர்சொருகுகருங்குழற்செவ்வாய்முளரிவாண்முகமயிற்சாயற்
பருகுநல்லமுதிற்றாய்மொழிவேய்த்தோட்பணைமுலைநுண்ணிடைவனப்புக்
கொருவருநிகராத்தேவசேனையைத்தன்னுயிரெனப்பிரிவிலனாகி
யருளொடுமாடற்சிறக்கவீற்றிருந்தானமரர்நாயகன்பெருந்தவத்தால். (அச)

செங்கனலடைந்தென்மைந்தனீயானுன்றிருமுனம்பாதுகாத்திருப்ப
விங்குநல்குதியென்றுரைக்கவவ்வண்ணமிசைந்தவற்கவ்வரங்கொடுத்தான்
திங்களோர்முகத்தாள்சுவாகைவந்தடைந்தேதசெம்மனீதன்மகவென்னப்
பயந்தயநிகர்கண்முகமலர்ந்தருட்கண்பார்வைசெய்திருத்தியென்றளித்தான். ()

தடத்தினுற்பவித்தாயாதலாலெனக்குத்தனையனீயாமெனக்கங்கை
திடத்துரைவழங்கமெய்ம்மையாமென்றேசிறந்தகாங்கேயனென்றொருபேர்
படைத்தவடனக்குமுளமகிழ்செய்தான்பார்மிசைப்பாவையராறுவர்
விடத்தினைவிழியார்வெய்துயிர்த்தடைந்தேவிசாகனைநோக்கியேபுகல்வார். ()

மேலவருண்மைபொய்மையீதென்றுவினைவுணர்ந்துள்ளசொற்புகலிற்
சீலமுஞ்சிறப்புங்குறைபடுமென்றேசிறியரேஞ்செய்பவமதனால்
வேலைசூழ்புவியும்வானுமிவ்வாய்மைவிளைந்ததோவையநின்றன்னை
மாலுழந்தனலுக்கீன்றனமெனுஞ்சொல்வானவர்மெய்ம்மைபோற்புகன்றார். ()

ஆரணமுனிவர்வ்வுரைகேட்டிங்கறுவராமெமைமறுத்தகற்ற
தாரணிமீதிற்றுயருழந்தெமக்குச்சார்விடம்பிறிதிலையதனாற்
காரணமுதலேநின்னைவந்தடைந்தேங்கண்ணருள்செய்தெமைக்காத்தோர்
பூரணகதியிற்பொருத்துதல்கடனும்புதல்வனீயெனுமொழிப்பொருட்டால். ()

என்றிவருரைப்பக்கருணைவந்திவர்பாலிணங்கிநற்றுதிபழியிரண்டும்
வென்றிகூர்விழியீருள்ளவாவருமோமேல்வினைச்செய்கையென்றுணர்வீ
ரின்றெனக்களித்ததாயரேநீவிரியானுமுஞ்சுதனெனவியல்பே
மன்றலங்குழலீரஞ்சன்மினென்றேமகபதிதன்னைநோக்கினனே. (அகூ)

அமரநாயகனுஞ்சண்முகத்திறைவனருட்செயலுணர்ந்திதுபகர்வான்
குமரநாயகனேயிருபதோடேழாக்குறிக்குநாள்களிலபிசித்து
விமலமார்தவத்திலேகினுனிந்தமின்னனாராறுவரையவன்ற
னிமலமார்பதத்திற்கிருத்திகையெனப்பேர்த்திகழ்ந்திடநிறுவலாமென்றான். ()

அத்தகையவருக்குதவினனவருமறுவருங்கிருத்திகையென்ன
வித்தகப்பெயரானற்கதிபுகுந்தார்வேற்படையண்ணலாங்கவர்க்கு
புத்திரனெனுஞ்சொல்பொய்வராமுறையாற்கார்த்திகப்பெயரதுபுனைந்தே
வைத்தனனவிருமந்தநாடன்னில்வழிபடுவோர்க்கருள்வழங்கி. (கூக)

உற்பவமாகியமரரைவென்றேயுயரியதிருவினிற்சிறந்த
வற்புதத்திதியுங்கற்பினியுயர்ந்தவணங்கனுடெய்வயானையைத்தன்
சிற்சுடர்க்கரத்தாற்றொட்டவத்திதியுஞ்சிறப்புடைச்சட்டியாதலினுற்
பொற்புறவமரர்முனிவர்மற்றேனோர்போற்றினர்விரதமத்தினத்தில். (கூஉ)

சத்தமாதாக்களெழுவருமடைந்துதனையனீயெமக்கொருவரமிங்
கித்தகையருளவேண்டுமென்றுரைப்பவிசைந்தபின்பெடுத்துரைக்கின்றார்
புத்திகளுணராச்சிறியருக்கியற்றும்புகலரும்வாதைநோய்முழுதுஞ்
சுத்தனேயெமதுமுன்னிலைதொலைப்பத்தோற்றமீந்தருள்கெனச்சொற்றார். ()

சண்முகனுரைப்பான்சிறியர்பாலிடையூறுற்றிடுந்தகைமைநீர்கேட்டீர்
வண்மையீதன்றாலாயினுமிசைந்தவாற்றினுலுதவினுமுலகிற்
பண்முறையீரெட்டாண்டுகாறளவும்பாலருக்கியற்றுகதீமை
யுண்மையாலும்மைப்பராவினர்தொழுதோர்க்கோரிடையூறுமின்றுமால். ()

எனவரமளித்துப்பின்னருங்கருடனீன்றதாய்சுரபிகத்துருவை
யனனடையதிதிதிதிமுதலெழுவரணங்கனுர்க்கோர்வரமளித்தா
னினியவிவ்வுலகிற்கருமுதலீரெட்டாண்டுகாறளவுமாருயிர்கள்
தனிவருமிடையூறகற்றுகசிறியோர்தமக்கெனத்தண்ணளிக்கொருவன். (கூரு)

அன்னவர்பெற்றுமீண்டனரிப்பாலறுமுகன்கோவில்வாயிருப்ப
வின்னதன்மைகளையாசுரர்க்கொற்றரிறைவனுமயிடனுக்குரைப்ப
வன்னவன்வெகுளிகண்வழியெழுந்ததாமெனவனற்பொறிகதுவ
மின்னும்வாளெயிற்றுற்புழையிதழதுக்கிமிகுந்தனுற்படையொடுமெழுந்தான்.

வந்தனரரக்கரிமையவர்பெருமான்வயங்கியபெரும்பதிவளைந்தா
ரிந்திரன்முதலோரஞ்சியவாறுமிமையவர்புகுந்தமருடற்றித்
தந்திரமுடைந்ததன்மையுங்கண்டுசெண்முகனஞ்சலென்றமைத்தே
யுந்தினனிரதம்வானவர்சூழவுமைமகனசுரர்மீதம்மா. (கூள)

ஆனையெத்தனைதேரெத்தனைபரிமாவளவையெத்தனையணியணியாந்
தானையெத்தனைமாமணிமுடிச்சிலைக்கைத்தலைவரெத்தனைதரைப்பட்டார்
கானையொத்தகார்வடவையொத்திளையோன்கடுங்கணைபோக்கலாற்கண்ட
மானையொத்துளகணரமடந்தையர்தமனமகிழார்கொலோவகுப்பார். (கூஅ)

உரமலைபிளந்துமிருபுயமொடிந்துமுடற்சுமைநீறுநீறுயுங்
கரமலர்தரிந்துமணிக்குடரிழந்துங்காலொடுங்கழலுகடுணிந்துஞ்
சிரமலைகுவிந்துநிணப்பெருஞ்சேறுய்த்திகந்தமவ்வளவையுங்குருதி
திரமலிகடற்போற்சிவந்தலையெறியுந்திறமுணர்ந்தெழுந்தனன்மயிடன். (கூகூ)

வரைகளிற்பயிலுங்குமரனைக்குருகுவண்பெயர்மால்வரைதொளைத்த
விரைமலர்க்கதம்பவிசாலமார்பகனைவெந்தொழிற்றுனவனேக்கிக்
கரைசெயற்கரியான்வனப்பினைப்பருகிக்கடக்குவனினைச்சமரென்றே
கரகதக்களிறுமடங்கன்மேற்செலுங்காட்சிபோற்கலந்துவில்வளைத்தான்.. ()

பிறைமுகக்கணைசுணுறவலித்தேபிரான்மிசைவிடுத்தலிற்குறைத்து
மறைமுதற்குமரனன்னவன்சிலையுமடங்கலந்தேரையுமழித்துத்
துறைபடநிலத்தினிறுவினன்சிலையிற்றுரந்தவான்கணைகளாலந்தண்
முறையிலாக்குடையான்வாளுரீஇவந்தான்மூவிருமுகத்தன்மேலம்மா. (௧0௧)

பின்னருமொன்றேசாயகஞ்செலுத்திப்பெற்றிகொடானவன்றன்னை
யன்னிலையதனிற்சிரந்துணித்தவன்றனுருயிர்மறலிபாலளித்தே
கன்னலொன்றகலாமுன்னமக்களத்திற்காலையிற்பனிதொலைத்திலங்கு
மன்னுவெம்பருதியாமெனத்திகழ்ந்தான்வானவர்பூமழைபொழிந்தார். (௧0௨)

அட்டபாலகருமவசுக்களுமேனையமாருமுனிவருமடுத்து
வட்டவான்கடல்போல்வளைதரநடுவண்வைகியநந்தனர்க்கெதிரே
யிட்டவண்கணங்கள்புடைவரவாமத்திமாசலையொளிர்வுறவந்தான்
மட்டவிழ்கொன்றைமலர்நறையுகுக்குமதிநதியிலகுசெஞ்சடையான். (௧0௩)

கண்டுளங்களித்துத்தொழுதெழுமழலைக்கட்டுரைமதலையைக்கரங்கள்
கொண்டெடுத்தணைத்தேயுச்சிமோந்தரக்கர்குலங்களைந்தமரரைக்காத்த
திண்டிறற்புகழ்ந்துபேரருளளித்துத்தேவரைநோக்கிநம்மடிமேற்
கொண்டவன்பதுவேயிவனடிக்கன்புகுறிப்பதென்றுரைத்தனன்மறைந்தான்.

அத்தன்மீண்டதற்பினிமையவரேத்தவருளுறுதேவசேனையுந்தன்
வித்தகப்புயத்திலுதித்தமேலவரும்வேதமாமுனிவரும்போற்றச்
சத்தியம்படையும்வாரணக்கொடியுந்தந்தியூர்தியுந்தனைப்புகழ
முத்தலத்தவர்கள்வினைகெடக்கந்தனிருந்தனன்முகங்களாறுடனே. (௧௦௫)

இவனியற்சரிதமொழிந்தவர்கேட்டோரிதனைநன்றெனமகிழ்ந்தோர்
கவினிலாச்செனனமரணவான்கடலைக்கடந்துபேரருட்கடல்கண்டே
சிவகதிக்குரியராவர்மற்றிகத்துஞ்சிறப்பினிற்சிறந்தவரவரென்
றவனிபர்க்குரைப்பமகிழ்ந்துகைம்முகிழ்த்தேயவளவளாயிருந்தனரன்றே. ( )

குமாரசம்பவச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-௪௪௩.

---

# சத்தியபாமைச்சருக்கம்.

---

உத்தமரிவ்வணமுசாவவோர்புடை
சத்தியபாமையாந்தையல்வாள்விழி
முத்தணியிளமுலைமுல்லைமூரல்பூங்
கொத்தணிகுழற்றிரௌபதிக்குக்கூறுவாள். (௧)

பொறுவறுவனப்புடைப்பூவைமார்கடா
மொருவிறற்புருடனுக்குகவுநல்கிலா
ரிருவருமைவர்சொற்றிறம்பலின்றிநின்
னருள்மொழிவயத்தராயிருப்பதற்புதம். (௨)

குழைகிழித்தகன்றகட்குவளைப்போதனாய்
விழைவினிற்பிரிவறவேந்தர்மாண்புறற்
றழைமுகவசியமோதந்திரங்கொலோ
பழையவர்கட்டுரைபாரிற்கேள்வியோ. (௩)

ஐவருமபிமுகராகநின்னுழை
மெய்வருமந்திரமருந்துவேறுண்டோ
மைவிழிபுகல்வையேலந்தவாற்றினாற்
கைவயமாக்குவன்கமலக்கண்ணனை. (௪)

சுரிகுழலிவ்வுரைசொற்றியென்னலு
மரியொலிச்சிலம்படியணங்குநோக்கியே
விரிகடலுலகில்வாழ்வெய்யமாதரிற்
சரியெனக்கருதினுய்த்தகவிறையனீ. (ரு)

காமமேபொருளெனக்கருதிக்கற்பெனுஞ்
சேமவான்பொருளெலாந்திறம்பிக்கூறினுய்
தாமரைக்கண்ணனுக்கிசைந்ததாரநீ
யாமெனக்கருதுவதறவும்பாவமே. (சு)

மந்திரமருந்தொடுவசியமாதியாந்
தந்திரத்தியற்றியதாரந்தாரமோ
சிந்தைவேறுகிக்கைதவமுஞ்சேருமேற்
பைந்தொடிநரகினிற்பயிறறப்புமோ. (எ)

மணவன்மாமனதுந்தன்மனதும்வேறுறின்
றணவறநிரையத்திற்சார்ந்துமங்கைமார்
பணவராவெடுத்தபாரிடத்திற்பற்றினும்
பிணியினுந்துன்பினும்பெரிதுமாழ்குவார். (அ)

ஐவரைக்கடவுளராகவுன்னியான்
மெய்வரவழிபடுவிதத்திலன்புகொண்
டுய்வருபேரருளுதவினுரலாற்
செய்வதுகைதவச்செய்கையேகொலாம். (கூ)

மாதியானவர்பான்மருவும்பெற்றிக
ளோதுவனுணர்திநீயுவந்தொர்மாதுபாற்
காதலாய்ச்சேரினுங்கறுக்கிலேன்மனம்
பேதகமுறுகிலேன்பெரிதுவப்பனல். (க௦)

ஆடையாபரணமைவருக்குநித்தலும்
வேடைகண்டளித்தவர்விரும்புமுண்டிகள்
கோடைநாண்மாரினுள்குறித்துநல்குவன்
மேடைமேற்சயனங்கள்வேறுநல்குவன். (கக)

பல்படைவிளக்குதல்பாடலாடல்க
ளில்வயின்வகுத்தவரிடத்திலேவுவன்
சொல்வதன்முன்னரெத்தொழிலுமாற்றியே
நல்வகைமனமெனநடப்பனுடொறும். (கஉ)

அணிதிகழ்மடந்தையரனேகராங்கவர்
பணிவிடைபுரிபவரெனினும்பல்தொழிற்
றணிவுறவென்கையாற்றருவதன்றியே
வணியுறவொறுத்தொருவரைக்கொண்டாற்றிலேன். (கங)

பசுநிரைகாப்பவர்பரிகள்காப்பவர்
நிசிதருதும்பியினேயவான்கணங்
கசிவுறப்புரப்பவர்காணுவோர்க்கெலா
மிசைவுறவரிசைசெய்தின்சொற்கூறுவேன். (கச)

முரசுகாகளங்கணன்முத்தவெண்குடை
யரசர்களேதிகளணிகண்மாமணீ
விரசியதேர்களிவ்விதத்திலுள்ளன
வரிசைசெய்தணிபெறவைப்பன்வைகலும். (கரு)

பின்னருமடைந்தையர்தமக்கும்பெய்கலன்
மின்னுநல்லாடைகணிதியம்வேண்டுறு
பன்னருமியலெலாம்பரிவினலளித்
தன்னவருடன்மகிழ்ந்தளவளாவுவன். (கசு)

வந்தமன்னவனிவன்வரிசையிங்கிது
தந்திடுமாறெனத்தரித்துப்பேரவைக்
குந்துறநல்குவனொருவர்நல்கிய
நந்தலில்பொருள்களுநாடிநோக்குவன். (கஎ)

வேதியரயுதரும்வேந்தர்வேந்தனு
நீதியாற்றுய்த்திடுநீர்மைப்போதெலாங்
கோதறவவர்மனக்குறிப்பின்வண்ணமே
தீதறப்பகிர்ந்தவரேவற்செய்குவன். (கஅ)

தாதியர்தாசர்கடக்கசேவகர்
ஞாதியர்கேளிர்கணவஞ்செய்தேவியர்
வேதியராதியரெவற்கும்வேண்டுவ
நீதியாய்நீர்மையினீவனித்தலும். (ககூ)

மாமியைப்பேரருண்மல்கநாடொறுந்
தாமரையிருசரண்டலையிற்சூடியே
கோமுறைச்செயலெல்லாங்குறிப்பிலாற்றியங்
காமுறவழிபடுமாதரத்தினேன். (உo)

இன்னவைபலவெலாமிசைவிற்றந்திடு
மன்னகாரணத்தினலவரோர்செயன்
மன்னுளத்துன்னலர்வாழ்வரிச்சையிற்
கன்னலந்தீஞ்சொலாய்காண்டிநானேயே. (உக)

இம்முறைறஐவருமிரக்கமிக்குறுந்
தம்மனத்துகவுறச்சரித்ததன்றியே
மைம்மறைமந்திரமயக்கும்வஞ்சனைக்
கைம்மருந்துணர்கிலன்காணென்றுளரோ. (உஉ)

கற்பினுக்கணிகலங்கருத்தைநோக்கனு
மற்புதமடைந்தியானறிவிலாதிழி
சொற்பகர்பிழையினைத்தொடைத்தியென்றனள்
பற்பலசத்தியபாமைப்பேரினாள். (உக)

அன்னதேயாகவிவ்வண்ணமன்புற
மின்னனுயிரற்றிடில்வேறுளோர்க்கெலாம்
பன்னருமுதன்மையாப்பகர்வர்பாரினோர்
நின்னையென்றுரைத்தனணீண்டகூந்தலாள். (உச)

நின்னுரைப்படிவழிபாடுநேர்ந்தியா
னன்னவர்க்கினியவளாகவல்லனோ
மன்னுயிர்த்தொகையெலாந்திவலைமாந்தினுந்
தன்னகத்திப்பியேதாளமீனுமால். (உரு)

எனப்பலவாற்றினாலெடுத்துக்கூறினாள்
கனக்குழைத்தாமரைக்கண்ணன்றேவியுந்
தனக்கினிநிகரிலாத்தழலில்வந்தவள்
பனிச்சிருநகையொடும்பரிவில்வைகினாள். (உசு)

மைவருமணியராப்பாயனீத்தவன்
மெய்வருவேதியன்விடைகொடுத்தபி
னைவருமுடன்வரவணிறுத்தியே
பொய்தருமிடையொடுந்தேர்புகுந்தனன். (உஎ)

மாசிலான்விடைதரவனத்தைநீங்கியே
தேசுறுதுவரையிற்சென்றுவைகினான்
பூசுரரடிதொழப்புனிதமூர்த்தியு
மாசிறன்சூழல்போயணுகினனரோ. (உஅ)

வடம்படுமிளமுலைசுமந்துமாழ்கியே
நுடங்கியநுண்ணிழைநுசுப்பினாளொடு
மடங்கலந்தனையவர்வனத்தில்வைகினார்
திடங்கொணாடாள்பவன்செய்கைகூறுவாம். (உகூ)

சத்தியபாமைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-சசசஉ.

# சித்திரசேனச்சருக்கம்.

அத்தினபுரத்தில்வாழுமந்தணனொருவனந்த
வித்தகரிருந்தகானின்மேவிமீண்டரசர்கோமான்
சித்திரவரிவிலேந்தாத்திரிதராட்டிரன்பாலெய்திப்
புத்திரரியற்கையெல்லாம்புகன்றனனென்பமன்னோ. (க)

கானலுமிருளுங்காற்றுமாரியும்பனியுங்காமர்
வேனிலுமணங்குசெய்யவெய்துயிர்த்துளதுமைந்தர்
பானலங்கண்ணாளோடும்பருவரலுழன்றிருந்தார்
மேனிவேறியற்கைவேறுவேறதாய்க்கானிலென்றான். (உ)

கேட்டனன்மறையோன்வாய்மைக்கிளரொளியிலாதபொல்லா
நாட்டஞ்சாரிறைவன்றன்மெய்ந்நடுங்கநாவுலர்ந்துசோர்ந்தான்
பாட்டளிதுதைந்தமாலைவிதுரனைப்பரிவானோக்கி
மீட்டிதுபகரலுற்றான்மெல்லனவுணர்வுதேறி. (௩)

தெள்ளமுதனையபாடற்றேனுகர்ந்தமளிமீது
பள்ளிகொள்பவரோதிண்மைப்பாறைமேற்கண்படுப்பார்
தள்ளொணாவிதியையாரேதடுப்பவர்தனதுவாய்மை
யெள்ளியமைந்தரேனோர்க்கிதவிதன்மேலுமுண்டோ. (௪)

நீரதநெறிகணீங்கிநிருமலன்வரைபோய்ச்சார்ந்து
பாரதமுடிப்பானீசன்படைகொண்டுககனம்போந்து
வீரதந்திரத்தினரைவீட்டியவிசயன்செய்கை
நாரதனுரைக்கக்கேட்டுநடுங்குமாலென்றனுள்ளம். (௫)

அனுமனைநண்புகொண்டேயரக்கர்கள்பலரைவீட்டித்
தனிமைகொளியக்கர்கோமான்றன்புரஞ்சாடிவென்று
புனிதனைநண்புகொண்டபுங்கவனுடனண்பாகி
யினியநன்மலருங்கொண்டேயெய்தினன்வீமனென்றான். (௬)

அந்தநல்லுரைகண்மார்பிலசியெனப்போழ்வதையா
விந்திரனிமையோர்மற்றையிருடியரெவருமேத்து
நந்தலில்குணத்தராகிநலமெலாமடைந்தார்மீண்டான்
மைந்தர்நூற்றுவருமோர்புன்வடிக்கணைக்கிலக்காமன்றே. (௭)

எம்பிநீமுன்னஞ்சொற்றவியலெலாஞ்சரதமேயிவ்
வம்புவிபுரக்குமைந்தர்க்கறைந்திடிலுறுதிகொள்ளார்
தும்பையந்தெரியல்வேலாய்நானினிச்சொல்லேனென்ன
வெம்பிவெய்துயிர்த்திருந்தான்வேந்தனும்விழியிலாதோன். (அ)

அத்தனுங்கிருந்தசெய்கையறிந்தவர்கடிதினெய்திப்
புத்திரர்க்குரைப்பத்தேர்ந்தபொறிப்படப்பணிவாழ்கேது
சித்தமெள்ளளவுமையலெய்திடான்றேற்றுமாறு
பித்தரையனையவுள்ளப்பிதாவுடையிருக்கைபுக்கான். (௯)

சகுனியுந்துணைவர்தாமுங்கன்னனுந்தன்னைச்சூழப்
புகுதவனிபனைப்போற்றிப்புந்தியின்மயக்கமென்னே
தகுதியின்மதமாவெண்ணிலாதனசார்ந்தபோது
மிகுதிறன்வயமாவொன்றைறவெல்லுமோவேந்தர்கோவே. (௧0)

சான்னவியளித்தகோவுஞ்சாபவாசிரியன்றானு
மரன்றவன்மகவுமற்றையனிகமுமரசரன்புங்
கான்றநன்மணிநேர்மேனிக்கன்னன்றனருளுமுண்டே
லேன்றெதிரெய்துநீராருண்டுகொலிப்பிறப்பில். (௧௧)

சிதைவுறுதெனதுகாயந்தேவர்தம்வரத்தால்யானோ
கதைகொடுபோர்செய்வேனேற்காப்பவருண்டுகொல்லோ
விதையநீதளரேலையவெதிர்ந்தமாற்றலரைப்போரில்
வதைபுரிவதுவேயன்றிமன்னருக்கினிமையாதோ. (௧௨)

வேள்வலிதொலைத்தவீசன்விண்ணவர்முதலோர்வாளிக்
கோள்வலிகொண்டுவெல்வான்குறித்திருப்பவரைப்போரில்
வாள்வலிகொண்டுநின்றன்வயங்கருட்கொண்டுமென்றிண்
டோள்வலிகொண்டும்வென்றுசூடுவன்வாகைமன்னே. (௧௩)

என்றுநீகருதலென்னவுரைத்தலாற்றளர்வுநீங்கி
வென்றிகொண்டவன்போல்வேந்தன்மைந்தர்க்குவிடைதந்தானு
லன்றவர்பிதாவைநீங்கியனைவருமொருதண்காவிற்
சென்றுவீற்றிருந்தோர்சூட்சிசிந்தித்தார்தீமைமிக்கார். (௧௪)

மொய்கழலொலிக்குந்திண்மைமுனைகொடாள்வலியின்மிக்க
வைவருமருகீற்றெய்வவாரழல்வனம்வந்துற்றார்
மெய்யுரையெனவிதுரன்வேந்தனுக்கவர்தம்வெற்றி
பொய்பலபுகலுகின்றான்புழுங்குமாலெங்கைக்குள்ளம். (௧௫)

மற்றினியிதற்குச்செய்யுமாறென்னோபுகல்வீரென்று
கொற்றவர்பெருமான்கூறக்கூறுவானங்கர்கோமான்
வெற்றிவேலறத்தின்மைந்தன்விறற்புயத்திருந்தபூமா
துற்றனளுனதுபாங்கருனதுநல்வினையாலம்மா. (௧௬)

நாற்றிசையுலகினுள்ளநரபதிக்குழாங்கணின்னைப்
போற்றினர்தொழுதுநின்றார்புகழினுக்கொருவனுய்
நீற்றவர்கானமாளநின்மதிவலியினாலே
மாற்றலர்தமைத்துரந்தாய்வாழ்விதன்மேலுமுண்டோ. (௧௭)

தன்னுடைச்சிறப்பையெல்லாந்தனதுமாநகரிலேற்றி
மன்னவர்திலதமேநின்மனதறிவித்தவாபோ
லுன்னுடைச்சிறப்புந்தேசுமூற்றமுமவர்கள்காண
மின்னருடனுங்கெய்திமீடலேகருமமென்றான். (கஅ)

காதலாலவர்பன்னிக்கனல்வருகொடியுநின்றன்
மாதரார்வளத்தைநோக்கிமாழ்கிடவைவருற்ற
போதராவனத்திலெய்திமீள்வையேறபுழுங்கிச்சிந்தை
நோதலாலகல்வர்வைகார்நந்தமைமாறுகொண்டோர். (கசு)

செய்வதிக்கருமமென்றுதேற்றியகன்னன்றன்னைப்
பைவருபணியுயர்த்தபார்த்திபன்வியந்துசிந்தை
மெய்தரநினைத்தவண்ணம்விளம்பினைவேந்தன்சொற்கொண்
டெய்துதற்குபாயமென்னிங்கிசைவதேதுரைக்கவென்றான். (உ௦)

அன்னதற்கிசையமாமனறைகுவானரசேனானை
மன்னுறுநிரைகாப்பாளனொருவனைமருங்குகொண்டு
துன்னுநம்வேந்தன்பக்கற்சென்றுவான்சுரபிக்கெல்லாங்
கொன்னுனையிடுக்கண்செய்யும்விலங்கெனக்குறிப்பாற்கூறி. (உக)

வெம்மைசெய்விலங்குவீட்டிவிளங்குமாப்புரந்துமீள்வேஞ்
செம்மையோய்பணித்தியென்றுதெருளுறப்புகன்றுவேந்த
னிம்மெனவுய்ப்பவாருமேகலாமென்றுகூறத்
தம்மனத்திதுவேயென்றுதாங்கினரகன்றார்மாதோ. (உஉ)

சுயோதனனகன்றபின்னர்த்துணைவருமனையிற்போனார்
பயோததிதன்னின்மூழ்கிப்பாற்கரன்மறைந்துபோனான்
வயோதனமுடையதீஞ்சொன்மலர்க்குழற்றுவர்வாய்மானார்
குயாசலந்தழுவிநாகக்கொடியினுன்றுயில்கூர்ந்தானே. (உங)

கழிந்ததுகங்குற்போதுகதிரவனுதிக்குமுன்ன
ரிழிந்தபுல்லறிவேயன்றியியற்கைகண்டறியாமன்னன்
செழுந்தனமெவற்குநல்குந்தியாகியுமேனையோரு
மொழிந்தகோவலனுந்தன்னைமொய்த்திடவ்வையிற்புக்கான். (உச)

வேறு.

தந்தையினையடிவணங்கிநிரையினத்தைவிலங்கினங்கள்காதலாலே
வந்துரைத்தானிவனென்னக்கோவலனைமுன்விடுத்துமன்னன்கூறப்
புந்திவிரகுணர்சகுனிபுகலுவான்மதிக்குலபுங்கவனேயாங்குன்
மைந்தர்தமைப்பணித்துவிருகந்தொலைப்பித்தேபுரத்தல்வழக்காமென்றான். ()

ஒருகணப்போதிவ்வாய்மையுளத்துன்னிக்குந்திமகாருறுவராங்குப்
பொருமியற்கையிளங்குமாரர்போதலறநெறியன்றுபுரமூன்றட்டோன்
றருமியற்கைப்படையரித்தோர்வெகுண்டாரேலிவர்க்கேதஞ்சாரும்வேறோர்
குருமணிப்பொற்றேரரசைவிடுத்தின்றேநிரைகாத்துக்கொளலாமென்றான். ()

தோடிருந்தநறுந்தெரியற்றேளாயாங்கவரிருந்தசூழற்சென்று
பாடிருந்தநின்புதல்வர்பயில்வாரோவிவர்சென்றுபயிலுற்றுலுங்
காடிருந்தகரியகுழற்காரிகையோடுறைபவர்தங்கருத்தும்வேந்தர்
நீடிருந்தபேரவையினிகழுரையும்விடுத்தமரினேர்குவாரோ. (உஎ)

துட்டமிருகங்கடனைத்துணியாக்கிநிரைகாக்குந்தூய்மைமன்னர்க்
கிட்டநெறியாதலினுற்பணித்தியெனமைத்துனன்வந்தியம்பலாலே
தொட்டகழற்பாரரசன்விரைந்தேகிமீடிரெனச்சொற்றுன்யாரு
மட்டின்மகிழ்வுடனெழுந்துவிடைபெற்றுக்கடைவாயில்வந்துசார்ந்தார். (உஅ)

முரசதிரப்பலதிசையுமுழவதிரப்பலபணைகண்முழுங்கவெண்ணி
லரசரிருமருங்கினுஞ்சென்றடிவணங்கிப்புடைசூழவங்கானகுங்
கரைசெயற்குமரியபெருங்கடலொலித்ததெனமேவக்கவிகையீட்டம்
வரிசையுறுபெருங்ககனவரைப்பதனைத்தெரியாமன்மறைத்துமூட. (உகூ)

சிவந்தவாய்கரியகுழற்சிறுத்தவிடைபெருத்தமுலைசெய்யகாந்த
ணிவந்தகரம்பசுங்கழைத்தோணீலவிழிதூயநகைநெடுந்தேரல்கு
னவந்திகழ்மெல்லடியமுதநயமொழிகளிளவன்னநடைசேர்மாதர்
பவந்தனைச்சூழந்தெனப்பலர்கள்யானமிசைமதிவலமீன்பரிசுகாட்ட. (ஙo)

ஒருவரையைத்தனிவரைகள்பலசூழுமியற்கையெனவுரககேது
விருபுடையுமிளைஞர்களுமாமனுமற்றிரவிதருமிறையுஞ்சூழக்
கருத்துதையகிரிமீதுகதிருதித்ததெனமகுடங்கவின்செய்தோங்கப்
பொருவிலிருமருங்கினுமெண்ணிறந்தவர்சாமரையிரட்டப்புலவர்போற்ற. ()

தனிக்கவிகைமதியிரவிதனைத்தொடர்ந்ததெனவயங்கச்சர்ப்பகேது
புனித்தமணித்தேரேறிநகர்நீங்கித்தெய்வவனம்புகுந்துமேவி
மனத்தடலாற்பசுநிரைகடனைநோக்கிக்கோவலற்குவரிசைநல்கித்
தினத்திறைபோந்திடவிரவிலாங்கிருந்துகாலையிற்போய்ச்செறிந்தான்மன்னே

வேறு.

கரிவீட்டியரியினுடறுணியநீண்டகணைபோக்கிச்சார்த்தூலங்குழியிற்பாய்ச்சி, மரையோட்டியுழைவீட்டிக்கேழல்சாய்த்து மருவுபலபுள்ளினமுமறியதுறிப், பரிபூட்டுந்தேர்நடத்திவேட்டங்காணும் பரிசேபோற்பாண்டவர்வாழிடம்வந்துற்று, னெரியூட்டுமகம்பயின்றுங்கிருந்தாரைவரித்தகைகண்டுணரார்போன்றிருந்தார்காவில். (ஙக)

மதுகரங்களிசையொலிக்குமொருதண்சோலை மன்னர்பிரான்கண்டணுகிமாதரோடு, மிதையம்விழைவுறநீரிற்றுளைவானுன்னி யிவணுறுவோர்பல்லரையுநீக்கிடுமினென்னக், கதுவுறுகட்கனல்புரைவேத்திரத்தரோடிக்கந்தருவர்சிலரிருப்பக்கண்டுசீறி, மதிகுலபுங்கவனடைந்தானகல்வீரென்றூர்மற்றவர்கேட்டிந்தவுரைவழங்கினரே. (ஙஉ)

தவறுணராக்கந்தருவரிருந்தசூழற் றகையுணராமானிடரோசார்வாரென் னக், குவவிருதோடுளங்கிடநக்குரைத்தலோடுங்கொற்றவன் றன்பெருந்தூதர் கொதித்துமீண்டே, யவனிபனுக்கறிவித்தார்பலரையேவியாங்கவரைத்துரக்க வெனவவர்போயெய்தி, நவமதனனிகர்நாகக்கொடியானிங்குநண் ணுவனேமை யரோடுமகல்வீரென்றார். (௩௫)

ஒருவரொருவரைநோக்கிநகைத்துவந்த வுணர்விலிகாள்கந்தருவர்க்கொரு வனுனென், மருவனையகுழன்மடவாருடனேதூய்நீர் மகிழ்ந்தாடுமிடமிதென வறிகிலீரோ, பொருவறுமத்தூதுவரையேறநோக்கிப் புகலுரைக்குமப்பான் மைபோதுமெங்க, டிருவளர்சித்திரசேனனுணரிற்றுன்பஞ் சேருமுமக்கிவண கன்றுசெல்வீரென்றார். (௩௬)

அவர்மீண்டுவெம்மையரவுயர்த்தானேடிங் கறைந்தமொழிபுகலுதலுமன லிற்சீறித், திவவுயாழ்வல்லவரோபடைவலார்முன் சென்றெதிர்ந்துமொழிவ ரெனத்தெழித்துப்பொங்கித், தவளமதிக்குடைநிழற்கீழிருந்ததுச்சாதனனெ ழிந்ததம்பியரைக்கடைக்கண்காட்டிக், கவலையறுகந்தருவர்வெருவவோட்டிக்கம லநீர்க்கயம்வளைந்துகாமினென்றான். (௩௭)

மகபதியேயவர்க்குதவிவரினுமோர்புன்வடிக்கணையாற்றுரந்திலனேல்வை யங்காக்குஞ், செகபதியோயானென்னத்தெழித்தனேக்கித் திரடோளாரவ்வு ரைதஞ்சிரமேற்சூடிக், ககபதிவீற்றிருக்குமிடத்தஞ்சாவாற்றற் காளிடப்பா ந்தளினமெய்துமாபோ, னகபதிமெய்குலுங்கிடநாணேசைகாட்டி நடந்தனர் கந்தருவரெதிர்நண்ணிச்சொல்வார். (௩௮)

பாராளுங்காவலர்நீரமரராலும்பகராருங்கந்தருவர்மகபதியாமண்ணல், சீ ராருமாதருடனுடுந்தூயதெண்ணீர்வான்றடமிதனிற்சேர்தனன்றே, போரா கிலவர்க்கெதிரார் வெற்றிகொள்வோர் பொருந்திறலோர்முறண்வாளா நிகழ்த் தார்போமின், வாராதுவனத்திலெனமொழிதல்கேளார் வந்தடுத்துக்கணைகளி னுன்மாரிபெய்தார். (௩௯)

வாய்த்தசெயலுணர்ந்துடம்பிற்புண்களோடும் வயங்கியசெம்புனலோடும் வனத்தின்மாக்கள், போய்த்தமதுநாயகனுக்குரைப்பவன்னுன்புற்றரவினுஞ்சீ றிப்புவியாள்வோரை, வீய்த்துழக்கிமீடிரெனவிலக்கானீண்ட விற்கரத்தார்த மைவிடுப்பவிரைவினெய்திச், சாய்த்தகற்பமாருதம்போல்வந்துசூழ்ந்து தனு வளைத்தார்மன்னர்படைத்தலைகள்சிந்த. (௪0)

பரியினங்கடலைப்பிளந்தேயிரதநீருப்பருப்பதங்கணிகர்கரடமதமாச்சிந்தி, யரியினமும்வெருவுபடைவீரரங்க • மாயிரவான்கணைதொளைக்கவல்லமெய்திச், சொரிதருசெம்புனனதியிலலையிற்சேற்றிற் சுழிமடுவினிடைவருந்தித்தொலைந் தாரந்தோ, கரிபுரநாயகனிளைஞர்முன்னர்சென்றுகடுஞ்சமர்செய்திடுந்தறுகட் காளைவீரர். (௪௧)

தூசிமுனைபிளந்தவகையுணர்ந்துசீறிச்சுயோதனனுக்கிளைஞரெதிர்தோன் றியெண்ணில், வாசிகரிதேர்களொடுங்குழுமிநேராமாளவமர்புரிந்தார்த்தார்வந் தார்கோடி, யாசுகங்கள்பொழிந்தவர்களுடலங்கநூறியங்கமெலாம்பாழ்படுத்தி யடர்த்தாராங்குக், கூசியவர்வென்னிட்டுமீண்டேயோடிக் குருகுலநாயகற்கு ரைப்பக்கொதித்தெழுந்தான். (சஉ)

சந்தனஞ்சாரதிமனத்திற்கடவவாசத்தாரிருந்தமணிமார்பன்சாருமுன்ன, ரந்தவிறற்றேரிணைப்பேரணியினுக்கி யாதித்தன்மகன்றாசியதனைச்சார்ந்தான், முந்தினர்துச்சாதனனுமாமன்மூனுமுகிறடவுகொடிஞ்சியந்தேர்ப்புகுந்துமொய் த்தார், கந்தரவான்குழுவென்னக்கடலேயென்னக் கட்டுரைக்கும்வாகினியிற் கைவலோர்கள். (சங)

வேறு.

அரசனடுபடைமுரசினொலியொடுமனுகிவளைதரவமர்வலா
விரைசெய்மலர்முடிவிருதரடலொடுமிகுதிபெறுகணைவிடுதல்கண்
டுரைசெய்கதிர்தருகுமரனகைமுகமொளிரவொருசிலைகுனிவுசெய்
திரைசெய்கணைமழைமுடுகவுலகடுமிறைவன்விழிதருபொறிகள்போல். (சச)

வட்டவரிவிலுதைத்தபகழிகள்மட்டில்விருதர்பிளப்புற
வட்டுவரிவிலொடித்துமுடிகளடற்கவசமுமழித்தலாற்
கிட்டியமரிலடுத்திலர்கள்முனைகெட்டுவெருவியவர்க்குவென்
னிட்டுமறுகிவிடுத்தகன்றனரிக்களத்தையிமைக்குமுன். (சரு)

வெருவுமுளமுடனணிகள்பலபடைவிருதுகொடிமுரசொருவுகந்
தருவரயர்வொடுதமதுகுலபதிதிருமுனனுகினருரைசெய்தார்
புருவவிருசிலைநெரியவனல்விழிபொறிசெய்திடவவனகைசெயா
மருவுதசசதவயுதமணிரதவயவரொடுமிறையனுகினன். (சசா)

வந்தபடைஞர்புயங்கமுறுகொடிமைந்தனணிபடையெங்கணுஞ்
சிந்திவெருவமலைந்துகுறுகினர்திண்சிலையினெழுமம்பினாற்
குந்தமெறியயிறண்டமெழுவெதிர்கொண்டுசிலரனிகங்களை
யந்தகனதுபுரஞ்சென்றுறவருமண்டர்மகிழமலைந்தனர். (சஎ)

தம்பிகன்னன்மிலைந்ததும்பைதயங்குசௌபலன்மன்னர்மன்
னிம்பர்பின்னரிருந்தகாவலரியாரும்வந்தெதிரெய்தியே
வெம்பினெஞ்சுபுழுங்கவெண்ணறுவில்வளைத்தனர்நாணொலி
யம்புதங்கண்மயங்கிவானவராகுலம்பெறவாக்கியே. (சஅ)

நூறுமாமுகமாகவான்கணைநூறுகோடிசெலுத்தல்கண்
டூறிலாவகைகணைகளால்விலகுறமுடித்தொருவற்கொரோர்
மாறுதேரெனநின்றுகந்தருவத்திணோர்சமர்முற்றலாற்
கூறுவஞ்சமிடத்திருந்துளகொற்றவன்படைகெட்டதே. (சகூ)

பட்டவர்த்தனர்வெற்றிமிக்கபடைக்குமன்னவர்கெட்டுவென்
னிட்டபோதுநகைத்துவந்திரதத்தையேவியெதிர்த்தனன்
மட்டிலாவலிபெற்றகன்னன்வயங்கொள்சித்திரசேனனென்
றட்டதிக்குமுரைக்குமண்ணலடுத்தவர்க்கெதிராயினன். (ருo)

சேமவெஞ்சிலைகோட்டிவாளிசெலுத்தினரிவர்திக்கெலா
மேமவெங்கனல்சிந்தியானைகளெட்டுமுட்கியிருந்ததா
ஞமவெங்கணைநூறுகொண்டிளஞாயிறன்பிலளித்தவன்
வாமகந்தருவர்க்கெலாமிறைமன்னுதேரையழித்தனன். (ருக)

காமனஞ்சுவனப்பினனுயர்கனகமால்வரையொப்பதோர்
சேமவெந்திறலிரதவேற்கொடுசென்றுதாக்கலுமங்கர்கோன்
நீமையஞ்சுறுசிந்தையான்மிசைதேவர்வாளிகளேவினன்
கோமடங்கலுமந்தவாளிகுறிப்பிலுய்த்ததைமாற்றினன். (ருஉ)

பின்னருங்கணைமாரிபெய்துபிடித்தவிற்கவசந்தரித்
துன்னுமுன்னரிபங்கள்வாசியுருட்டியாண்மைசெலுத்தினன்
கன்னனுஞ்சிலைவேறுகொண்டுகலந்துவாளிபொழிந்தவன்
மின்னுறுஞ்சுடர்மன்னுநன்னுதல்வீரபட்டமழித்தனன். (ருங)

வாகைநற்சிலையிற்கணக்கில்வலத்தவாளிசெலுத்தியே
பாகினைத்துணிசெய்திசைக்கொடிபாரில்வீழ்த்தினனங்கர்கோன்
மாகனற்கணைவிட்டிவன்றிறன்மல்குதேரையழித்தனன்
சேகரித்தமர்நேரிலாதுயர்சித்திரசேனனெனச்சொல்வோன். (ருச)

தேரழிந்துதியங்கிநின்றுதினத்திறைதனளித்தவன்
போரழிந்துமடங்கியேபுறமிட்டுளானதுபோழ்திலே
காரிழிந்ததெனப்பரந்துகலந்துகந்தருவக்கணம்
நேரிழிந்தவனத்தைமுற்றும்வளைந்துகொண்டமர்நேர்ந்தனர். (ருரு)

வாடிவெம்படைவிட்டுநின்றுளமன்னரன்றியமன்னரை
யோடிவென்றமர்பற்றிமொய்ம்பொடியப்பிணித்தனரோகையால்
நாடியம்புவிகூறுகொண்டுநடுங்கவென்றிவனிம்பரிற்
றேடிமண்டலமன்னனுக்கிளையோரையுஞ்சிறைசெய்தபின். (ருசு)

வேறு.

பட்டமுடைநாககேதுவுடனமர்பயிற்றிப்பற்றி
யடலுறப்பிணித்தேயெய்துமரிவையர்தமையுங்கொண்டு
கடலெனத்தனதுசேனைகலித்திடமீண்டான்வாகைத்
திடமுறுசிலைவலாளன்சித்திரசேனனென்போன். (ருஎ)

மாமறையவர்கள்சூழமகமொன்றுகனிகாய்கொண்டு
கோமுனிபயிற்றுனின்றகுளிர்பசுங்காவின்பாங்கர்
தாமமுமுடியும்பூணுந்துறந்துடனடுங்கச்சார்ந்தார்
காமமேபெரிதாமோதுநம்பிவாகினியின்வேந்தர். (ருஅ)

அறப்பெருங்கடமைகுன்றுவண்ணலையெய்திநின்றன்
சிறப்புடையிளையோர்தம்மைச்சித்திரசேனனென்போன்
மறப்பெரும்பூசலாற்றிமாதரோடிவரைப்பற்றி
யுறப்பிணித்தகன்றனிவ்வாறுணருதிபொறையான்மிக்கோய். (ரு௯)

குற்றமேயுளுற்றுவாரைக்கொல்வதேயவர்க்குவேறோர்
பெற்றியிலுதவிசெய்தலென்பராற்பெருமைமிக்கோய்
மற்றுநின்றுணைவர்க்கிந்தமாசுளதென்னிற்றீர்க்கும்
பெற்றியோர்நின்றனக்குப்பின்வந்தோரன்றியின்றே. (௬௦)

பண்ணவர்புகழுமின்சொற்பார்த்திபரரசேநின்போ
லெண்ணமும்பொறையுஞ்சீருமித்தலத்தெவரேபெற்றார்
மண்ணுளஞான்றுமாயாவண்புகழ்பெறுதியீண்டிவ்
விண்ணவன்சிறைமீட்டென்றார்வேந்தனுமருள்சுரந்தான். (௬௧)

மந்தரமனையதிண்டோண்மாருதிமுகத்தைநோக்கிச்
சிந்தனைசெய்யேலையசென்றுநீதுணைவரோடு
மந்தமன்னவனைமீட்டியரிவையரோடுமென்றான்
கந்தனையனையான்கண்கள்கனற்பொறிகதுவச்சொல்வான். (௬௨)

அடாதுசெய்தெளிமைவன்மையறிகிலாதடற்கும்புல்லோர்
படாதனபடுவரென்னும்பான்மையாற்சிறைபுகுந்தார்
விடாதபோராற்றல்வல்லவிளங்குகந்தருவர்கோமான்
கடாமுமிழ்களிற்றுவேந்தேயாமென்றுகாண்டியென்றான். (௬௩)

வீமனைமீளநோக்கிமிகுமுரசுயர்த்தோன்சொல்வான்
காமனையனையாய்வந்துகருதலர்சரணென்றாலுஞ்
சேமமாக்காப்பதன்றோதீரனதியற்கையென்றே
மாமறையுரைப்பதின்றோவென்னவுமறுத்துச்சொன்னான். (௬௪)

கங்கையிலமிழ்த்தித்தீயகடுவினையூட்டிவீட்டிற்
பொங்கெரிகொளுவிச்சூதிற்புவிகொண்டுபொன்னனாளைத்
துங்கவேந்தவையிலேற்றித்துகிலுரிவித்தார்க்கேதந்
தங்குறுதுதவிக்காக்கச்சாற்றிற்றோமறைகளென்றான். (௬௫)

என்னலுநகைத்துவேந்தனியம்புவானிதுவுநிற்க
முன்னநீயவரைவெற்றிமுற்றுவனென்றுசெங்கோன்
மன்னவரவையிற்கூறியவ்வணமனங்கொண்டிற்றாய்
பின்னர்வேறொருவர்வெற்றிபெறிலுனக்கெளிமையன்றோ. (௬௬)

எனவறனளித்தகாளையின்சொலாலுரைக்குமாற்றந்
தனியரியனையசீற்றத்தனஞ்சயனுணர்ந்துவீமன்
வனசநல்லடியிற்றாழ்ந்தேமறுப்பரோபெருமான்வாய்மை
யினியவர்தமைமீட்டிங்ஙனெய்துதுமிசைவாயென்றான். (௬௭)

தம்பிமேற்பரிவினுலுந்தம்முன்சொன்மருமையாலு
மிம்பரிவிசைந்துமூவரிளையரோடிருந்துவந்த
பைம்பொனின்றேர்மேற்கொண்டுபடைஞரெண்ணிறந்தோர்சூழ
வம்பரநடுங்கச்சென்றுனரிக்கொடித்தலைவனம்மா. (சுஅ)

வந்தனர்பாரின்மன்னர்வாகினியோடுமென்றே
கந்தருவர்க்குண்மிக்கோர்கண்டெதிர்மடங்கியெண்ணில்
சுந்தரக்கணைகளேவித்தொடங்கினரரும்போர்க்குந்தி
மைந்தருஞ்சிலையைக்கோலிவாசகம்புகல்வதானுர். (சுக)

வேறு.

மருமிகுதெய்வமந்தாரமாலைசே
ரிருபுயமன்னர்காளெங்களுயகன்
றருமனென்றுலகெலாமேத்துந்தன்மையோன்
றிருமொழியேவலாற்சேர்ந்துளோமியாம். (எo)

மறுவிலாக்குலத்துறுமன்னர்மன்னனை
நறைகமழோதிசேர்நங்கைமாரொடுஞ்
சிறைகொடுபோதுதல்செம்மையேகொலாம்
நெறியுளீரவர்சிறைநீக்கிச்சென்மினே. (எக)

அவ்வளநிகழ்த்திலீராகில்விக்கணத்
திவ்வணமுமைக்கணைக்கிரைசெய்தண்ணறன்
றிவ்வியமொழிப்படிசிறைக்கொண்டேகுது
மூவ்வணமுறைத்தனமெனவுமோதுவார். (எஉ)

இரும்புகாய்ந்தருந்தியபுனலெங்காயினுந்
திரும்புமேலிவருடைச்சிறையுநீங்குமா
லரும்பியமூறுவலீரறிகிலீர்கொலோ
விரும்புகந்தருவர்கோன்வெற்றியாதுமே. (எங)

என்றவர்மாறுரையியம்பப்பற்குனன்
கன்றியமனத்தனுய்க்கணைகள்போக்கினுன்
வென்றிவில்வீமனுமிளைஞரும்விறற்
றுன்றுசாயகமழைசொரியலாயினர். (எச)

செருமுகமடங்கல்கள்சீறுமாறெனக்
குருதிதோய்கணைகளாற்குறைத்துநாற்றிசை
வருபெரும்படைஞரைவானிலேற்றினர்
வெருவினரேனையோர்விண்டதண்டமே. (எரு)

கரங்களுஞ்சிரங்களுங்காலுந்தோளுநல்
லுரங்களுஞ்சிதைவுறவோச்சும்வார்கணை
மரங்களுமலைகளுமண்ணும்விண்ணுமந்
தரங்களுமுருவலாற்றளர்வுற்றஞ்சினர். (எசு)

இவரினியுடல்கரந்தேகுவாரெனக்
குவவுவான்கணைகளாற்கூடமாக்கினர்
திவவியாழ்வல்லவர்க்கிறைவன்றேங்கிநின்
றவனிபர்செயலெனவறிந்துமீண்டனன். (எஎ)

பார்தருபார்த்தனென்றுணர்வில்பண்பினுற்
போர்தருமாறவன்புகுந்தகாலையிற்
கார்தருமழையுடனுருமுகான்றெனச்
சீர்தருபேரொலிசிறந்ததெங்குமே. (எஅ)

தேரினிலெய்துகந்தருவர்கோமகன்
பாரினிலமர்தரும்பான்மையானர
னேரினிலெய்தலுநேயமிக்கவ
னுரிவனருச்சுனனுமென்றெய்தினன். (எகூ)

அருச்சுனனிருந்துழியண்ணன்மேவலான்
மருச்சுதன்முதலினோர்சினத்தைமாற்றினர்
செருத்தணிந்திருவருந்தேரிழிந்துள
மொருப்படத்தழுவினருடலொன்றுகவே. (அ0)

மையறுதுணைவரோடென்னைமால்வனத்
தெய்துறச்செய்தவனென்றுசீற்றமா
யையனுன்பொருதழித்தவனைப்பற்றினேன்
றுய்யதோநீயெதிர்தோற்றிமீட்பதே. (அக)

இந்தவைகலிற்சிறையிட்டுநீயிவண்
வந்தெனக்குரைத்தியென்றன்பின்வாய்மையா
லுந்தையேயினனவனுரைதடுத்தியோ
மைந்துடைத்திண்புயவாசமாலையாய். (அஉ)

செய்தபுமுரைத்ததுந்தேயவேந்தர்முன்
வைததும்பறித்ததுமறந்தபோதினுங்
கைதருகற்புடைக்கனலுதித்தவள்
மைதருதுன்பமுமறந்துளாய்கொனீ. (அங)

வாட்டிறற்குருசினீவருவதன்றினிப்
பூட்டுவாகினியொடும்போமினென்றசொற்
கேட்டபார்த்தனுநகைகிளர்த்தித்தம்முனோன்
காட்டியபடியெலாங்கழறிப்பின்னரும். (அச)

மறைமுறைதவறினுமெம்முன்வாசக
மிறையளவிகந்துவேறியற்றல்கூடுமோ
சிறைபடுமவருடன்சென்றெம்மண்ணலுக்
கறைகுதும்வம்மினென்றன்பினோதினான். (அரு)

சித்திரசேனனுமிசைந்துசேனையோ
டுத்தமனிருந்துழியுறுதல்கேட்டெதிர்
வித்தகனிருபுயம்வீங்கவெய்தியே
கைத்தலங்கொடுதழீஇக்களிப்புவிஞ்சினான். (அசு)

வரன்முறைபூசனைமகிழ்விலாற்றியே
திரமுறுதவிசின்மேற்சேர்த்துமாமணி
முரசுயர்கொடியினான்முகமன்கூறலாற்
கரையிலாவாண்மையான்கருதிக்கூறுவான். (அஎ)

உன்னைநின்றுணைவரோடுறுகண்மாட்டிய
மன்னைமங்கையரொடும்வவ்விவான்சிறை
யின்னிலைசெய்கவென்றேவினானிகற்
பன்னரும்வச்சிரபாணியாதலால். (அஅ)

வெருவராவாண்மையால்விளங்குமெண்ணில்கந்
தருவரோடெய்தியான்செருவிற்பற்றினேன்
பொருவிலாய்நன்றுகொலிடையிற்போற்றுத
லொருவினையவன்றருமிடுக்கணாறெலாம். (அகூ)

நன்றலவிவ்வகைநவிறன்மேலினிக்
குன்றவான்சிறையடுங்கொற்றவன்மொழி
யின்றுநீபொய்த்திடவியற்றியோவென
வன்றிறலான்சொலமன்னன்கூறுவான். (கூ0)

துதிக்கைநீண்மருப்புடைத்தும்பியூர்திசொல்
விதிப்படிதவறுறுவேதமென்றனக்
கதிற்பெரிதையநீயறையும்வாய்மொழி
மதித்தியான்வேறுரைவழங்கவல்லனோ. (கூக)

ஆயினுமுன்னரிங்கடைந்துகூறிய
தேயமன்னவர்சொலாற்றேம்பியெம்பிமார்
மேயவான்சிறையினைமீட்டலாலினித்
தோயமுந்தொடேனெனச்சூளுரைத்துளேன். (கூஉ)

ஆதலாற்றுணைவர்வந்தமர்செய்தேற்றனர்
மீதினிப்புகன்றவென்விரதங்காக்கினுந்
தீதெனப்பலர்சொலத்திறம்பலாக்கினு
நாதனின்றனக்கலாலார்க்குநண்ணுமோ. (கூங)

அரிவையருடனெனதநுசர்செய்பிழை
கருதிடாதவர்சிறைவிடுத்தியேற்கமழ்
தருமருமாலையாய்தரணியேழுமென்
றெருளுறுகைவயஞ்செய்ததாகுமால். (கூச)

மேகவூர்தியிலொளிர்விமலனன்புநின்
சேகரநல்லருட்டிறமுமுண்டெனிற்
சோகமேனெமக்கிவர்துன்பநீக்குகென்
றோகைநன்மொழிசொலவுவந்துகூறுவான். (௯௫)

அறப்பெருங்கடவுணீயன்றிவேறொரு
திறத்துளபேருனக்குரைத்ததீமையே
மறத்தொடுபுகல்வதெனுன்றன்வாசக
முறைப்படிதுணைவரைவிடுப்பன்மொய்ம்பினேய். (௯௬)

வாழியூழிகளெனவாழ்த்திமற்றவன்
பாழியந்தோளுடைப்பணிசெய்கேதனன்
சூழ்துணையிளைஞரோடெவரையுந்துறந்
தாழிநேக்கிறைவிசும்பணுகினனரோ. (௯௭)

அன்னவரகன்றபின்பரவுயர்த்தபார்
மன்னவன்பிணிப்பினைமாற்றிமற்றவ
ருன்னரும்பந்தமுநீக்கியோதுவான்
மன்னுமூவுலகமுமகிழும்பேரினான். (௯௮)

என்னதுபுரிந்தனையாதுவேண்டினை
நின்னுடையாரறிபுகுத்தனீதியோ
யின்னதுபுரிகின்மற்றின்னதெய்துமென்
றுன்னலையரசியற்குறுதிபோதுமோ. (௯௯)

மேலினியாயினும்விளங்குபண்பினுற்
சாலுறவுணர்ந்துநீதக்கசெய்கவென்
றேலுறவிடுத்தனனேழைமாரொடு
மாலமேபுரைபவனகன்றுபோயினன். (௧௦௦)

வேறு.

மன்னவர்கண்மன்னனிகல்வாகினியுடன்போய்
முன்னொருபொதும்பரிடைநண்ணிமுனைகெட்டே
யின்னமுடல்கொண்டுதிரியேனெனவிரங்கி
யன்னிலையருந்துயரளக்கர்படிவுற்றான். (௧௦௧)

அக்கணமதிற்சமரழிந்துபுறமிட்ட
புக்குயர்வலத்திரவிபுத்திரனடைந்தே
மிக்கதிறன்மன்னவனையெய்திவெருவார்பா
லுக்கசெயலொன்றுமுணரானிவையுரைப்பான். (௧௦௨)

வல்லவமர்செய்திரதமங்கியவிதத்தா
லல்லடுவிகர்னனணியாரிரதமேறி
வெல்லுமுனைசெல்வகைவிடுப்பவதுபோயோர்
புல்லருவியோடுபுனலிற்புதைதலாலே. (௧௦௩)

வாம்பரிகளுங்கனகவண்டிலுமிழந்தே
சாம்பியதுதொய்யிலிடைதானனுகல்கூடா
தேம்பலறவைகினனிருந்தபுனல்வற்றித்
தூம்புருளகன்றபினர்துன்னினனிதென்றே. (கoச)

மாயவலியோர்விதிசெய்வஞ்சனைகடாமே
காயநினைவோகனவுகண்டதிதுவோவென்
னேயமறவிவ்வகையினெஞ்சியதெவர்க்கு
நாயகவெனக்கிவையடுத்தசெயன்ன்றே. (கoரு)

கந்தருவர்வாகினியெனுங்கடலைநீந்தி
வந்தவகையெவ்வகைமதித்துரைசெய்யென்ன
கந்தமலரண்ணறருகாளைபுகலக்கேட்
டுந்துமரவக்கொடியுயர்த்தவனிசைப்பான். (கoசு)

நீயகலவந்தவர்நெருங்குபுபிணித்தே
மாயமெனயாரையும்வளைந்துசிறைகொண்டு
போயினரறன்றருபொலன்கழலினுறுந்
தூயவிளையோருமிடைதுன்னிவிடுவித்தார். (கoஎ)

என்றசொலவன்செவியினெய்துமதன்முன்னே
குன்றமதுகாறவறுகொண்டபடியேபோன்
மன்றன்முடியாய்வசையடைந்ததிவணென்று
வன்றிரவிதந்தவனயர்ந்துளமழன்றான். (கoஅ)

வெற்றிபெறுமாமுனொடுவேந்தரிளையோருங்
குற்றமிதுவென்றுமனநொந்தனர்கொடுங்கோற்
பெற்றிவலமன்னனுமவர்க்குறுதிபேசி
யற்றமுயர்கன்னனுடனொன்றறைவதானேன். (கoகூ)

தோளுறுதியைவர்வசைசொல்லவெளிதேநா
டாளுவதினன்றுயிர்கற்றுமுறையென்றே
கோளறுகருத்தினிடைகொண்டுதுணைவாநீ
மீளுமளவுந்தனியிருந்தனன்விரும்பி. (ககo)

காசினிபுரப்பவெனைக்கிளையகாளை
மாசறநடத்துவதுனக்குரிமைமற்றும்
பேசுமொருதந்தைமுதலோர்பெரிதுவப்ப
நேசமுடனேயொழுகிநிற்கும்வரநல்கி. (ககக)

ஏகுமினியற்புரியிலென்றுசொல்மன்னன்
வாகுயர்சயத்திரவிமைந்தனிதுசொல்வான்
சோகமுறநீயுயிர்துறக்கிலெவரேமீண்
டோகைபெறுமும்புவிபுரப்பவருவப்பால். (ககஉ)

இவரினியுடல்கரந்தேகுவாரெனக்
குவவுவான்கணைகளாற்கூடமாக்கினர்
திவவியாழ்வல்லவர்க்கிறைவன்றேங்கிநின்
றவனிபர்செயலெனவறிந்துமீண்டனன். (எஎ)

பார்தருபார்த்தனென்றுணர்வில்பண்பினுற்
போர்தருமாறவன்புகுந்தகாலையிற்
கார்தருமழையுடனுருமுகான்றெனச்
சீர்தருபேரொலிசிறந்ததெங்குமே. (எஅ)

தேரினிலெய்துகந்தருவர்கோமகன்
பாரினிலமர்தரும்பான்மையானர
னேரினிலெய்தலுநேயமிக்கவ
ஞரிவனருச்சுனனென்றெய்தினன். (எகூ)

அருச்சுனனிருந்துழியண்ணன்மேவலான்
மருச்சுதன்முதலினோர்சினத்தைமாற்றினர்
செருத்தணிந்திருவருந்தேரிழிந்துள
மொருப்படத்தழுவினருடலொன்றுகவே. (அ0)

மையறுதுணைவரோடென்னைமால்வனத்
தெய்துறச்செய்தவனென்றுசீற்றமா
யையனென்பொருதழித்தவனைப்பற்றினேன்
றுய்யதோநீயெதிர்தோற்றிமீட்பதே. (அக)

இந்தவைகலிற்சிறையிட்டுநீயிவண்
வந்தெனக்குரைத்தியென்றன்பின்வாய்மையா
லுந்தையேவினனவனுரைதடுத்தியோ
மைந்துடைத்திண்புயவாசமாலையாய். (அஉ)

செய்தபுமுரைத்ததுந்தேயவேந்தர்முன்
வைததும்பறித்ததுமறந்தபோதினுங்
கைதருகற்புடைக்கனலுதித்தவள்
மைதருதுன்பமுமறந்துளாய்கொனீ. (அஙு)

வாட்டிறற்குருசினீவருவதன்றினிப்
பூட்டுவாகினியொடும்போமினென்றசொற்
கேட்டபார்த்தனுநகைகிளர்த்தித்தம்முனேன்
காட்டியபடியெலாங்கழறிப்பின்னரும். (அச)

மறைமுறைதவறினுமெம்முன்வாசக
மிறையளவிகந்துவேறியற்றல்கூடுமோ
சிறைபடுமவருடன்சென்றெம்மண்ணலுக்
கறைகுதும்வம்மினென்றன்பினேதினன். (அரு)

சித்திரசேனனுமிசைந்துசேனையோ
டுத்தமனிருந்துழியுறுதல்கேட்டெதிர்
வித்தகனிருபுயம்விங்கவெய்தியே
கைத்தலங்கொடுதழீஇக்களிப்புவிஞ்சினன். (அசு)

வரன்முறைபூசனைமகிழ்விலாற்றியே
திரமுறுதவிசின்மேற்சேர்த்துமாமணி
முரசுயர்கொடியினன்முகமன்கூறலாற்
கரையிலாவாண்மையான்கருதிக்கூறுவான். (அஎ)

உன்னைநின்றுணைவரோடுறுகண்மாட்டிய
மன்னைமங்கையரொடும்வவ்விவான்சிறை
யின்னிலைசெய்கவென்றேவினனிகற்
பன்னரும்வச்சிரபாணியாதலால். (அஅ)

வெருவராவாண்மையால்விளங்குமெண்ணில்கந்
தருவரோடெய்தியான்செருவிற்பற்றினேன்
பொருவிலாய்நன்றுகொலிடையிற்போற்றுத
லொருவினுயவன்றருமிடுக்கணுறெலாம். (அகூ)

நன்றலவிவ்வகைநவிறன்மேலினிக்
குன்றவான்சிறையடுங்கொற்றவன்மொழி
யின்றுநீபொய்த்திடவியற்றியோவென
வன்றிறலான்சொலமன்னன்கூறுவான். (கூ0)

துதிக்கைநீண்மருப்புடைத்தும்பியூர்திசொல்
விதிப்படிதவறுறுவேதமென்றனக்
கதிற்பெரிதையநீயறையும்வாய்மொழி
மதித்தியான்வேறுரைவழங்கவல்லனே. (கூக)

ஆயினுமுன்னரிங்கடைந்துகூறிய
தேயமன்னவர்சொலாற்றெம்பியெம்பிமார்
மேயவான்சிறையினைமீட்டலாலினித்
தோயமுந்தொடேனெனச்சூளுரைத்துளேன். (கூஉ)

ஆதலாற்றுணைவர்வந்தமர்செய்தேற்றனர்
மீதினிப்புகன்றவென்விரதங்காக்கினுந்
தீதெனப்பலர்சொலத்திறம்பலாக்கினு
நாதனின்றனக்கலாலார்க்குநண்ணுமோ. (கூங)

அரிவையருடனெனதநுசர்செய்பிழை
கருதிடாதவர்சிறைவிடுத்தியேற்கமழ்
தருமருமாலையாய்தரணியேழுமென்
றெருளுறுகைவயஞ்செய்ததாகுமால். (கூச)

மேகவூர்தியிலொளிர்விமலனன்புநின்
சேகரநல்லருட்டிறமுமுண்டெனிற்
சோகமேனெமக்கிவர்துன்பநீக்குகென்
றேகைநன்மொழிசொலவுவந்துகூறுவான். (௯௫)

அறப்பெருங்கடவுணீயன்றிவேறொரு
திறத்துளபேருனக்குரைத்ததீமையே
மறத்தொடுபுகல்வதெனுன்றன்வாசக
முறைப்படிதுணைவரைவிடுப்பன்மொய்ம்பினோய். (௯௬)

வாழியூழிகளெனவாழ்த்திமற்றவன்
பாழியந்தோளுடைப்பணிசெய்கேதனன்
சூழ்துணையிளைஞரோடெவரையுந்துறந்
தாழினோக்கிறைவிசும்பணுகினனரோ. (௯௭)

அன்னவரகன்றபின்பரவுயர்த்தபார்
மன்னவன்பிணிப்பினைமாற்றிமற்றவ
ருன்னரும்பந்தமுநீக்கியோதுவான்
மன்னுமூவுலகமுமகிழும்பேரினான். (௯௮)

என்னதுபுரிந்தனையாதுவேண்டினை
நின்னுடையாரறிபுகுத்தனீதியோ
யின்னதுபுரிகின்மற்றின்னதெய்துமென்
றன்னலையரசியற்குறுதிபோதுமோ. (௯௯)

மேலினியாயினும்விளங்குபண்பினாற்
சாலுறவுணர்ந்துநீதக்கசெய்கவென்
றேலுறவிடுத்தனனேழைமாரொடு
மாலமேபுரைபவனகன்றுபோயினான். (௧௦௦)

வேறு.

மன்னவர்கண்மன்னனிகல்வாகினியுடன்போய்
முன்னொருபொதும்பரிடைநண்ணிமுனைகெட்டே
யின்னமுடல்கொண்டுதிரியேனெனவிரங்கி
யன்னிலையருந்துயரளக்கர்படிவுற்றான். (௧௦௧)

அக்கணமதிற்சமரழிந்துபுறமிட்ட
புக்குயர்வலத்திரவிபுத்திரனடைந்தே
மிக்கதிறன்மன்னவனையெய்திவெருவார்பா
லுக்கசெயலொன்றுமுணரானிவையுரைப்பான். (௧௦௨)

வல்லவமர்செய்திரதமங்கியவிதத்தா
லல்லடுவிகர்ணனணியாரிரதமேறி
வெல்லுமுனைசெல்வகைவிடுப்பவதுபோயோர்
புல்லருவியோடுபுனலிற்புதைதலாலே. (௧௦௩)

வாம்பரிகளுங்கனகவண்டிலுமிழந்தே
சாம்பியதுதொய்யிலிடைதானனுகல்கூடா
தேம்பலறவைகினனிருந்தபுனல்வற்றித்
தூம்புருளகன்றபினர்துன்னினனிதென்றே. (கoச)

மாயவலியோர்விதிசெய்வஞ்சனைகடாமோ
காயநினைவோகனவுகண்டதிதுவோவென்
னேயமறவிவ்வகையினெஞ்சியதெவர்க்கு
நாயகவெனக்கிவையடுத்தசெயன்றே. (கoரு)

கந்தருவர்வாகினியெனுங்கடலைநீந்தி
வந்தவகையெவ்வகைமதித்துரைசெய்யென்ன
கந்தமலரண்ணறருகாளைபுகலக்கேட்
டுந்துமரவக்கொடியுயர்த்தவனிசைப்பான். (கoசு)

நீயகலவந்தவர்நெருங்குபுபிணித்தே
மாயமெனயாரையும்வளைந்துசிறைகொண்டு
போயினரறன்றருபொலன்கழலினுறுந்
தூயவிளையோருமிடைதுன்னிவிடுவித்தார். (கoஎ)

என்றசொலவன்செவியினெய்துமதன்முன்னே
குன்றமதுகாறவறுகொண்டபடியேபோன்
மன்றன்முடியாய்வசையடைந்ததிவணென்று
வன்றிரவிதந்தவனயர்ந்துளமழன்றான். (கoஅ)

வெற்றிபெறுமாமனொடுவேந்தரிளையோருங்
குற்றமிதுவென்றுமனநொந்தனர்கொடுங்கோற்
பெற்றிவலமன்னனுமவர்க்குறுதிபேசி
யற்றமுயர்கன்னனுடனொன்றறைவதானான். (கoகூ)

தோளுறுதியைவர்வசைசொல்லவெளிதேநா
டாளுவதினன்றுயிர்கற்றுமுறையென்றே
கோளறுகருத்தினிடைகொண்டுதுணைவாநீ
மீளுமளவுந்தனியிருந்தனன்விரும்பி. (ககo)

காசினிபுரப்பவனெனக்கிளையகாளை
மாசறநடத்துவதுனக்குரிமைமற்றும்
பேசுமொருதந்தைமுதலோர்பெரிதுவப்ப
நேசமுடனேயொழுகிநிற்கும்வரநல்கி. (ககக)

ஏகுமினியற்புரியிலென்றுசொல்மன்னன்
வாகுயர்சயத்திரவிமைந்தனிதுசொல்வான்
சோகமுறநீயுயிர்துறக்கிலெவரேமீண்
டோகைபெறுமம்புவிபுரப்பவருவப்பால். (ககஉ)

நீரளவுதாமரையிலங்குமவைநீங்கிற்
பாரளவுதாமரையுநீங்குறுதல்பண்போ
தாருளபுயத்திறைவர்தம்பெருமநின்முன்
பேரளவுயிற்றுறவுபேணுறுமனத்தேன். (௧௧௩)

ஆதலினினைத்ததழகன்றுபடையோடும்
வேதனைசெய்கந்தருவர்வேந்தனகரிற்போய்
மோதிமுனைகொண்டுகணமுற்றுமுனர்மீள்வேன்
சாதகமிதென்றுவிடைதந்திடுதிதக்கோய். (௧௧௪)

என்றுபலபண்புரையிசைக்கவுமிணங்கா
தொன்றுபடுசிந்தையுடனுய்த்துடல்விடுப்பான்
மன்றல்கமழ்மாலைமுடிமன்னனுறுபோதிற்
கன்றிமனம்நொந்தனர்கள்கன்னன்முதலாரும். (௧௧௫)

அப்பொழுதுபாதலமிருந்தவசுரேச
ரிப்பயனுணர்ந்துதுயரெய்திவழிபட்டோர்
செப்பமுளசத்திதுணைசெய்யவெனவேவ
வப்பெரியதெய்வதமடைந்ததவனிக்கண். (௧௧௬)

அன்னவடன்மாயையிலிவன்றனையடுத்தாங்
குன்னுமுனரேந்தியவருற்றதிசைவைப்ப
மின்னும்வடிவாளசுரர்வேந்தனைமகிழ்ந்து
பொன்னசலமானுமணிமார்பினர்புகன்றார். (௧௧௭)

வேறு.

மன்னகேளியாம்வானவநாயகனுடனடுபோர்
துன்னமாண்டனனெம்முடைத்தோன்றலாங்கதனாற்
பின்னருள்ளபேரியாவரும்பெரிதுளமாழ்கி
யன்னைபங்கினனடிதொழுதெங்குறையறைந்தோம். (௧௧௮)

அரசனன்றியெவ்வண்ணமாற்றுவதெமக்கையா
கரைசெய்தற்கரும்போர்வலிக்காவலனுதிப்ப
வுரைசெய்கென்னலுமுப்புரஞ்செகுத்தவனுசாவி
விரைசெய்தாரினுய்வேறொருவாசகம்புகன்றான். (௧௧௯)

குலத்திலேரங்குறுங்கொற்றவனமராற்குறைந்து
நிலத்தினிற்றுரியோதனநிருபனுயெழுந்தான்
சலத்திலேனையதானவர்தரணிமன்னவராய்
நலத்தினனகர்தொறுந்தொறுமுதித்துநண்பானார். (௧௨0)

அமரரெண்ணுறுகலைகளாங்கரசரிலுதித்தே
சமரிலன்னவன்றனைவயங்கொளப்புவிசார்ந்தார்
விமலவானவர்வேந்துடைக்கலையினாலிந்து
குமரர்பாண்டுவின்மைந்தராய்க்குவலயம்புரந்தார். (௧௨௧)

வெற்றிமிக்குளதன்மையீரும்முடைவேந்தன்
சுற்றமோடுநீரம்புவிசேர்கெனச்சொன்னான்
கற்றையஞ்சடைக்கடவுளென்றுரைத்தெமக்கரசன்
கொற்றவாவிநீயெனக்கொண்டனங்குறித்தே. (௧௨௨)

சிந்துநாதனுஞ்சகுனியுங்கன்னனுந்திறல்சே
ரிந்துதத்தனும்பொருபகதத்தனுமிவரே
முந்துமெங்குலபுங்கவர்வீடுமன்முனிவன்
மைந்தன்மூவருமமரராயினுமுனைமறவார். (௧௨௩)

உதவிசெய்குவர்சமரினிலும்பர்வந்துதித்தோர்
கதமிகுந்துளவைவர்பாற்கலப்பவர்கண்டா
யிதனில்வெஞ்சமர்நேர்வதுமினிச்சிலனாளே
விதமுணர்ந்துனக்குதவியாய்மேவுதுமையா. (௧௨௪)

ஐவரைத்தமையடைந்தகாவலரொடுமடர்த்து
மெய்வரத்தனிவெற்றிகொண்டெய்தருமெம்பா
டுய்வரக்கொளலேபயனிடையுனக்கடுத்த
பைவரிப்பணிக்கொடியினாய்பண்புநீகேண்மோ. (௧௨௫)

இந்திரன்பெருமாயைசெய்திரவிசேயிரதங்
கந்தமாவகனளறிடைப்புதைதரக்காட்டி
யந்தபேர்விறலெய்துமாறியற்றினன்றேற்
சிந்துமோர்கணைமுனையினாற்றினகரன்மைந்தன். (௧௨௬)

கன்னனீத்திடாக்கவசகுண்டலமினிமகவான்
சின்னனாடனிற்கொள்குவன்பலபலசெயினு
மன்னநின்னையார்வெல்பவருலகெலாம்வணங்க
நின்னதாக்குதுமரசுடன்புதன்மையும்நிலையும். (௧௨௭)

ஆதனோக்கிலைநீயுயிர்நீக்குவானமைந்தாய்
மீதெமக்கவைதெரிதலான்விரைந்தொருதெய்வ
மாதர்சத்தியைவணங்கியாங்குய்த்திடவந்தாய்
தாதுகூறினேமுண்மையாந்தன்மைகளெல்லாம். (௧௨௮)

மீண்டுசத்திநீயிருந்தவான்பொதும்பர்வாய்விடுப்ப;
ளாண்டமன்னனேயனுசருமனிகமுஞ்சூழத்
தூண்டுநின்னகர்ச்சேறியித்துன்பமுன்பிறப்பின்
மூண்டகாரணமென்றுளங்கொள்கெனமொழிந்தார். (௧௨௯)

அமுதந்துய்த்தவனுமெனவவர்மொழிகேட்டுக்
கமலவாண்முகமலர்ந்திருகரங்கொடுதழுவிக்
குமுறுகார்நிகரணங்களுள்குவலையத்தந்தச்
சமுகவான்பொழிலிடைவைப்பச்சார்ந்தனனிறைவன். (௧௩௦)

ஒருவரோடிதுபுகலொணாதெனவவருரைத்த
கருமமாதலாற்கட்டுரைத்திலனிவர்க்கொன்றும்
பருமவல்குலார்பரவையுமிளைஞரும்பலருந்
தருதியாகியுமுடன்வரத்தனிநகர்ச்சார்ந்தான். (௧௩௧)

மன்னன்றந்தையைவணங்கினன்மறைமுனிமலர்த்தாள்
சென்னிசூடினன்பிதாமகன்றிருவடிதொழுதான்
கன்னல்வேளெனக்கவினுறுதவிசின்மேலமர்ந்தான்
பொன்னகர்க்கணியிந்திரனிவனெனல்புரைய. (௧௩௨)

முன்னர்வைகியவலம்புரிமாலையான்முகங்கொண்
டுன்னரும்பெருங்காங்கயனோதுவான்மைந்தா
வென்னைசெய்தனையெப்பயனெய்தினையெவ்வா
றின்னலந்தரவல்லைநீயிகற்கடனீந்தி. (௧௩௩)

கன்னனாற்றலைநாடொறும்வியந்தனைகண்டாய்
மன்னுமாற்றலர்போர்முகத்துதவிசெய்மாற்ற
நின்னைமீட்டவராண்மையுமுணர்ந்தனைநெறிசொற்
றன்னைநோக்கிமேலென்னினுமொழுகுதிதழைப்பாய். (௧௩௪)

கருமமன்றிநீசெல்லினுங்கடுந்திறன்மிகுகந்
தருவரோடமர்செய்வதார்க்கெளியதேதேரி
னொருவனேயருச்சுனனலாலுள்ளவர்தாமோ
குருவினன்மரபழித்தனைநீயெனக்கொதித்தான். (௧௩௫)

கேட்டபின்னருநாணுறநால்வருங் * கிடைத்த
நாட்டமாகிவாணகைமுகராயிருந்தளவிற்
பாட்டிலங்கியபகீரதிமைந்தனாங்கெழுந்து
வீட்டிலேகினான்வேந்தருநிலைசெலவிடுத்தே. (௧௩௬)

மன்னர்மன்னனுந்துணைவருந்தமதுழைவந்து
பன்னரும்பகற்கழித்தனராங்கொருபகலிற்
கன்னன்வாண்முகநோக்கியேகட்டுரைக்கின்றான்
றன்னினாடியேவாசமார்வலம்புரித்தாரோன். (௧௩௭)

ஐவர்முன்னரினிராயசூயக்கனலாற்றி
மெய்வரும்புகழ்படைத்தனர்வேந்தரைவென்றே
செய்வனம்மகந்திசையெலாம்வெற்றிகொண்டெம்மை
யுய்வுறும்படிதருவையேயென்றனனுவப்பால். (௧௩௮)

அகிலநாயகனவ்வுரைவழங்கலுமங்கர்
மகிபன்வாண்முகமலர்ந்திருபுயங்கண்மேல்வளர
விகலிவெற்றிகொண்டெய்துவன்றிசையெலாமின்றே
புகலிலென்றனன்புயங்கேதனனுளமகிழ. (௧௩௯)

* கிடைத்தநாட்டம் - விரோதபார்வை.

சுபலன்மைந்தனுமன்னதேதுணிபுனக்கென்றான்
விபரிதந்தருதுணைவனுமேன்மையாமென்றான்
றபசிதந்தவன்பெயர்குலந்தழைத்திடவுதித்த
விபுதனோடுளகுரவர்பாலுரைத்தனன்வேந்தன். (கசo)

ஆயதந்தையுமவனுடைத்தந்தையுந்துரோணன்
சேயும்பூருவதேசிகன்விதுரனுஞ்சேர்ந்தே
தூயவேதியர்தம்முடனுசாவியேசொன்னார்
தேயவேந்தருமினிதெனச்சிரமசைத்திடவே. (கசக)

அரச்சூயமாமகத்தினுமதிகமென்றறைந்த
வரிசைமேவியவயிணவமாமகம்புரிந்தே
கரைசெயற்கருநலமெலாங்காணுதியென்றார்
விரைசெய்தாரினான்மறுத்திலன்வியந்துளங்கொண்டான். (கசஉ)

எடுத்தனுடனிலிசைந்தநல்லோரையிலினிதா
யடுத்தசாலைசெய்ததற்குளபொருளெலாமமைத்துத்
தொடுத்தமாலைசேர்மன்னவர்தமக்கெலாந்தூது
விடுத்துளானழல்வேள்விசெய்வேந்தர்கள்வேந்தன். (கசங)

வந்துசார்ந்தனரெண்ணிலோர்கங்கைமாமகவுந்
தந்தையுந்திறற்றுரோணனும்விதுரனுந்தவறில்
முந்துவெஞ்சிலைக்கிருபனுமியற்கைகண்மொழிய
விந்தமைந்தனுந்தீக்கைகொண்டருமகத்திருந்தான். (கசச)

ஐவர்வந்துதன்வேள்விகாண்டிடவெனவாங்கோர்
மெய்வல்வேதனைத்தூதுபோக்கினனுயர்வேந்தன்
தெய்வமன்னவான்சிந்தையானிருந்திடஞ்சேர்ந்தே
பொய்வராதவன்புகன்றவாறுணர்வுறப்புகன்றான். (கசரு)

முரசுயர்த்தவன்வாணைகைகாட்டியமுகனு
யரசர்பேரவைதனிலிரண்டாறரும்பருவ
முரைசெய்தார்வனம்வைகுமாறொழித்தலாலெய்தேன்
விரைசெய்தாரினாற்குரைத்தியென்றறைந்தனன்விளங்க. (கசசு)

ஆண்டுபத்துமூன்றகன்றபின்பாசுடைக்குமர
ரீண்டுநூற்றுவர்தமைக்கதைக்கிரைசெயும்வேள்வி
காண்டற்கெய்துவானிவனெனக்கரைத்துரையென்றான்
றீண்டுதற்கரும்புகனுடனேயத்தவெந்திறலோன். (கசஎ)

அன்னவாறுதேர்ந்தந்தணன்மீண்டுவந்துரைப்ப
மன்னர்மன்னனும்பொருள்செயான்மாமகமியற்றிப்
பொன்னிறைட்டவர்புகழ்ந்திடப்பொருள்பலவழங்கி
மன்னும்வேலுழவர்க்கெலாம்வரிசைகளளித்தான். (கசஅ)

வந்தவேதியர்மன்னவர்மற்றுளோரெவரு
மிந்தவேள்விபோலியற்றினரில்லையென்றியம்பத்
தந்தையோடுளகுரவருமகிழ்ந்திடத்தருக்கி
முந்துமாநகர்க்கேகினனாற்றுவர்முதல்வன். (கசக)

விடமிகுத்துயர்வெம்பணிக்கொடியினேன்வீரு
விடமிகுத்துளபுவிதருமியலெடுத்துரைத்தா
மடன்மிகுத்துளவைவருமணங்குடன்வனத்தி
னுடனியற்றுறுபரிசெலாமேலினியுரைப்பாம். (கருo)

சித்திரசேனச்சருக்க முற்றிற்று.

ஆகூ செய்யுள்-சருகூஉ.

---

# மவுற்கலமுனிகதைச்சருக்கம்.

---

தருமனுமேனையோருந்துவைதமாவனத்தினேகிப்
பொருவறவிருக்குநாளிலோரிராப்பொழுதிலாங்கு
மருமலர்முடியான்கண்டோர்கனவினைமாதினோடும்
பெருமிதத்துணைவரோடும்பேசினன்மாசிலாதான். (க)

காட்டினிற்பயிலும்வெற்றிவிருகங்கள்கணங்கொண்டெய்தி
வேட்டமாயெய்திநீவீர்வீழ்த்தலால்வீந்ததன்றோ
மீட்டினிச்சிறிதேயாவிவீட்டிலாதிருப்பதையா
நாட்டமாச்சிலநாள்வைகில்யாமெலாநலிதறிண்ணம். (உ)

எமக்கிதுவரமாநல்கியினியொருவனத்திற்செல்வ
துமக்கழகென்றுகூறிற்றுதலாலுறுதனன்றோ
விமைத்திலாவிழியார்சாருமியனெடுஞ்சாரன்மாண்பி
னமக்கினியிருத்தலென்றுனரனிதுபகரலானன். (௩)

அவ்வணநிகழ்வேயாமேலையனுமுன்னர்த்தங்கும்
வெவ்வழற்காமிகப்பேர்விறல்வனத்தடைவோமென்னப்
பொய்வணமுணரானவ்வாறியலெனப்புந்திகொண்டு
மைவணக்குழலுந்தானுமினைஞரும்வனத்தைச்சார்ந்தார். (௪)

காமிகவனத்திலெய்திக்காற்றருண்மதலைசெய்த
சேமமார்சாலைவைகித்திறலுறுமறையோரோடு
ேமாமமாகுதிகனல்கியொழுக்கங்களுணர்ந்துபன்னு
டோமுறவிருந்தார்மேனிவாடிடத்துயர்காணுதார். (ரு)

கருதருவெயிலினுலுங்கடுந்திறற்காற்றினுலு
மிருடறுவேனிலாலுமிவர்முகம்புலர்வுதோன்றத்
திருவுருவேறதாகிச்சிந்தைவேறுணர்வுவேருய்
வருடம்பன்னென்றுநீத்தார்மகிதுறந்தவர்களம்மா. (சு)

இடற்படுசிந்தையோடுமிருந்தவர்மெலிவுநோக்கி
யடற்படுசுருதிநான்கென்றமைத்தமாமுனிவன்பாவக்
கடற்கடந்தின்பந்துய்க்குங்கலமெனக்கண்முன்வந்தான்
மடற்புனைவாசமாலைமன்னவர்மிடிகண்மாற. (எ)

கண்டனர்மெலிவுநீங்கிக்களித்துளமுவகையோங்கி
முண்டகன்வரவுகண்டமுறையினுமதிகராகித்
தண்டலிலெதிர்கொண்டேத்தித்தருமுறைபூசையாற்றி
விண்டுறுதவிசினுய்த்தார்வியாதன்மற்றிதனைச்சொல்வான். (அ)

மெலியினுமுன்னஞ்சாலவெதும்பினுமொருவர்தம்மை
நலியினுமுறைமைநீங்கிநன்கலாதுன்ஞர்நல்லோர்
குலமுறைதிருத்தவந்தகொற்றவர்பெருமநீயுஞ்
சலனமெள்ளளவுமின்றித்தவம்புரிந்திருத்திதக்கோய். (கூ)

என்றவனுரைப்பவாங்கொன்றெடுத்துரைத்தனன்கோதில்லா
மன்றலந்தொடையானையாமாநகரிருக்குநாளிற்
றுன்றுமாமறையோர்யாருந்துய்த்தபின்பருந்தாநிற்ப
னின்றிவண்தருமந்தானமியற்றவம்பெறுவதெங்ஙன். (கo)

வனனிடையிருந்துவாடிவளர்கனியிலைகாய்வாங்கி
யினிதெனத்துய்ப்பதன்றியிளைத்தவர்பசியைநோக்கிப்
புனிதநற்றிறத்தாலுண்டிபொருத்துமாறிலையேயெவ்வா
றனகநற்றவம்வந்தெய்துமென்றனனவனுஞ்சொல்வான். (கக)

மன்னவகேண்மோதீமைவான்பொருள்கொண்டுமுற்று
மன்னநற்றருமங்கோடிக்கதிகமொன்றிவணிநல்கல்
முன்னமோர்முனிவன்காதைமொழிகுவனுணர்தியென்றே
தன்னகமகிழ்விளேடுந்தவமுனிசாற்றலுற்றான். (கஉ)

வனத்திடைப்பயிலுங்கேள்விமவுற்கலமுனிவனென்போன்
சினத்தொடுதீமைநீக்கிச்செழுந்தவமுயல்வானுளுந்
தினத்துணவொழிந்துபக்கத்தொருதினமருந்தல்செய்வான்
புனித்தமாமுவாவிலின்னுமவன்செயல்புகலக்கேண்மோ. (கங)

முதற்றிதிதொட்டீரேழ்நாண்முயற்சியில்வயரேருண்ணெ
லிதப்படவெடுத்துச்சேர்வைசெய்தபின்புவாவந்தெய்த
மதித்ததண்டுலஞ்செய்தன்பால்வல்சியிட்டதைநான்காக்கி
விதித்ததென்புலத்தோர்க்கோர்பால்வியப்புறநல்கிமீட்டும். (கச)

கனற்பெருங்கடவுண்மாந்தக்கனவிடையொருபாலோம
மனத்துடனியற்றிவந்தவம்பலர்க்கொருபானல்கித்
தனக்கொருகூறுதுய்த்துத்தவம்பயின்றிருப்பான்மீள
வினப்படுபக்கமேகாதிடையினிற்றுய்த்திலானே. (கரு)

இன்னவாறுவாவினுண்டியியற்றிமுக்கூறுநல்கி
தன்னொருகூறுதுய்ப்பானிருந்திடுமமையந்தன்னிற்
பன்னருந்துருவாதப்பேர்படைத்தவனெய்திக்கேட்ப
பொன்னடிதொழுதுதன்கூறளித்தனன்புந்தியார. (கசு)

அன்னவன்றுய்த்துநீங்கவருண்முனியுதகமாந்தி
மன்னுதன்பசியைநீக்கிமனமகிழ்வுடனிருந்தான்
பின்னுமவ்வண்ணமாறுமுறைறவரப்பெரியோன்சிந்தை
முன்னையின்மகிழ்ந்துநல்கிமுதல்வனைப்பூசித்தானே. (கஎ)

கண்டுளமகிழ்ந்துவேதக்காரணன்றன்னையேத்தி
முண்டகனனையாய்நீயேமுனிவர்கடிலதமென்றே
உண்டுனக்கிதற்குத்தேவயானமாமுலகவாழ்வென்
றண்டர்கண்மதிக்கநல்கியகன்றனனருந்தவத்தோன். (கஅ)

மற்றவணகலத்தெய்வமாமணிவிமானங்கொண்டு
கற்றுணர்வுடையான்பக்கலெப்தினர்கடவுட்டூதர்
பெற்றிசேர்பெரியோய்த்தெய்வயானமாமுலகுபெற்றாய்
சற்றுநீதாழேல்வானஞ்சாருதியெனலுஞ்சாற்றும். (கசு)

அப்பெருமுலகினுள்ளவதிசயம்புகலவேண்டு
மெப்பரிசெனவினவவிவரெடுத்துரைப்பதானூர்
தப்பறுமும்பரூர்மேற்றயங்குமத்தலமெண்ணில்லா
வொப்பறுகதிருதித்ததொக்குநல்லொளியெஞ்ஞான்றும். (உ0)

ஞானத்தாலறிவாலன்பானடக்கையாலடக்கந்தன்னாற்
றூனத்தாற்றவத்தாலின்சொற்றன்மையாலுண்மைதன்னால்
மானத்தாற்புகழால்வீரவாட்கையாற்சிறந்தோர்யாரும்
கானக்கந்தருவராதிக்கடவுளர்பலருமாங்கு. (உக)

வைகலுந்திகழ்வரெண்ணின்மாமுனிவோர்களந்த
மெய்கமழுலகில்வாழ்வார்மேதினிதலத்திற்றானம்
பொய்கடிந்துதவியாங்குப்புகுந்தவர்செய்ததன்மை
மைகடிமனத்தாய்தீர்ந்தால்வருவர்மண்ணகத்தின்மீள. (உஉ)

இருவினையீட்டுவோர்கட்கிடமிதேகருமபூமி
யொருவினைதுய்ப்போர்தங்குமுலகமேதேவயானம்
வருபயனிறந்தநாளின்மண்ணகத்துதிப்பரென்ப
ரிருமையும்பெறுதற்கேற்றூரெனுமுடலெடுத்தறிண்ணம். (உங)

ஆதலாலதனைநேருமருங்கதிபிறவுமுண்டோ
மாதவரரசேயின்னேவருதியெம்முலகினென்னத்
தூதர்கள்புகலத்தூயோன்றன்மனத்துணிபுநாடி
யாதரவதனுவிச்சொலறைந்தனனவர்கட்கம்மா. (உ௪)

சார்ந்துநம்முலகிற்சின்னுடங்கிநல்வினைபோய்மானச்
சோர்ந்திவண்மீண்டுநாளுந்துயர்க்கெலாமுரியதாய
நேர்ந்துடற்கருவிற்பாய்ந்துநெஞ்சயர்ந்தழுங்கல்செய்யேன்
பேர்ந்திடாப்பதமொன்றுண்டேற்பெறுவனீர்போமினென்றான். (உ௫)

அங்கவரகன்றார்பின்னுமம்முனியந்தவண்ணந்
திங்கடோறிருபோதுண்டிசெய்தருந்தவத்தையாற்றி
பங்கயன்முதலோரேத்தப்பரபதத்தடைந்தான்வாமத்
தொங்கலந்தோளாய்நெஞ்சினுறுதியேதூய்மைநல்கும். (உ௬)

கடைப்பிடியொன்றுகொண்டுகலைமுனிதனதுதாபம்
விடப்படுமியற்கையாலேமேவொணுப்பதங்கைக்கொண்டான்
மடைத்தலைசேல்கள்பாயும்வளந்தருகுருநாட்டேறே
மிடைச்செயற்கஞ்சிமாண்புவிடுகிலீர்நெறிகைவிட்டே. (உ௭)

அரசனுந்திருவுஞ்சீருமாண்மையுமவதிசொற்ற
வரிசையாண்டகலவன்றேவருமென்பதுறுதிகொண்டே
முரசுயர்கொடியோய்நெஞ்சின்முசியறவிருத்தியென்றே
கரைசெயற்கருந்தவத்தோன்கட்டுரைத்தகன்றான்மாதோ. (உ௮)

மவுற்கலமுனிகதைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௪௬உ0.

---

# சயிந்தவச்சருக்கம்.

---

சுருதிமுனியகன்றதற்பினிளைஞரோடுந் தூயவனுமவ்வனத்தில்வேட்டம் புக்கான், கருதரியகற்புடைமைக்கனல்வந்தாளுங்கலைதேர்ந்ததவுமியனுமிருந்தார் வெற்றி, பெருகுதனிச்சாலையினவ்வமையந்தன்னிற் பேசரியதேசினெடுமாண் மையோடும், பொருதிறல்சேர்சதுரங்கச்சேனையோடும் பொற்றேரிற்சிந்துபதிபுதல்வன்வந்தான். (௧)

கவுடகுலபதிமகளைவேள்வியாற்றிக் கலவிநலம்பெறுமாறுகருதியைவர், பவுடிகந்தேர் மறவல்லா னணங்கோடுற்ற பழுக்காவின் புறநெறியிற் படரும் போதிற், செவிடுபடுமுரசொலியுஞ்சங்கினார்ப்புந் திசைப்பொதுளுமுழவொலி யுஞ்சிவந்தமென்காற், சுவடுபடுமிடன்பஞ்சிதோயுந்தெய்வத் திரௌபதிதன்னி ருகன்னந்தூர்த்ததம்மா. (உ)

தரளநகையகலல்குற்பசுந்தோண்மங்கை தடங்கொங்கைச்சுமந்தொசியு மருங்குலோடும், புரளுமதுகரமொலிக்கும்பிணையல்வாய்த்த புயலனையவிருகூந்தற்பொலிவினோடும், பிரளயவான்கடல்புரையும்விழிகளோட்டிப் பெரிதுவந்துநோக்குவதாய்ச்சாலைமுன்ன, ரிருளுதவுதருச்சினையொன்றங்கைப்பற்றி யெழுதரியபூங்கொம்பேயென்னநின்றாள். (௩)

அவிருமுழுத்திங்களவணுதித்ததேய்க்கு மம்புயவாண்முகத்தாளாங்கிருத்தல்பாராக், கவினுறுநற்சயத்திரதன்மதனம்பெய்யக் கவலைபடிந்திவள்க்கனத்தமுதோநாட்டி, னவிறறுசெங்கரும்போநல்வரையிற்றேனோ நளினவிழிப்புயலூரத்திற்பயிலுமின்னோ, குவவுபுயப்பெருந்திறலாயுணர்வாயென்று குறித்திடவாங்கொருதூதன்குறுகினனே. (௪)

பாசடைசூழ்மென்கொம்பைப்பற்றிநின்றபைங்கொடியைவெங்கொடியோன்பணித்ததூத, னேசமுடனடைந்துலகிற்பொருவிலாத நேரிழைநீயார்வனிதைநிகழ்த்தாயென்னத், தேசுதருசெழுந்துவர்வாய்க்கமலம்விண்டு தேன்பிலிற்றுமாறதுபோற்செல்லாநின்ற, காசுலவுவேந்தர்பெயருரைத்தியென்றாள் கற்பொன்றேயலதுபொருட்கண்டிலாதாள். (௫)

வந்தவனும்புகல்கின்றானந்தத்தேரோன் வளமுலவுதிரிகர்த்தமகிபனகுமிந்தநெடுமணித்தேரோனயோத்திவேந்தனிவன்காசிபுரந்ததிறலிறைவன்கண்டாய், விந்தையுறநினைநோக்கிநின்றகாளை விறற்கலிங்கதேயத்தான்வேழமீதிற், சிந்துபதிசயத்திரதனிருந்தானன்னோன் றிருமணஞ்செய்திடவிவர்கள்சேறலென்றான். (௬)

பின்னருமாங்கவன்புகல்வான்மாதேநின்றன் பேரெழில்கண்டற்புதங்கள்பெருகாநின்ற, மன்னவரிற்சயத்திரதனென்னையெய்தி மாசறத்தேர்ந்தனுகென்னவந்தேனின்பாற், பன்னருநின்றனிநகருங்குலமும்பேரும் பகர்ந்திடுவாயெனக்கேட்டப்பாவையாங்குத், துன்னியவான்சினைவிடுத்துத்தரித்ததூசுசோராதுதிருத்தியித்சொல்வதானாள். (௭)

தண்கவிகைத்திறலரசர்பணியால்வந்த தார்முடியோயானிங்குத்தமியள்வைக, வெண்கருதாதொருதமிவந்தடைந்தாயானோ வெழிலுலவுதுருபதன்முன்பளித்தபாவை, விண்கருதிநூற்றுவருமிடுக்கண்செய்ய வெவ்வனத்திலடைந்தகுலவேந்தரைவர், மண்கருதுதிறலினருக்குரியளென்பேர் மாசறுகற்புடையதிரௌபதியென்பாரால். (அ)

ஆதலினால்வேறுரைகள்புகல்வதென்னே யத்தவினிச்சேறியெனவவனுக்கோதிக், கோதறுதன்சூழலிற்போயிருந்தாளந்தக் கோமகனுமீண்டுபலகுறித்தவண்ண, மோதிடலுஞ்சயத்திரதன்சிந்தைவேறா யொண்டொடியைக்கவர்ந்திடுவானெண்ணித்துள்ளங், காதலரசரைநிறுவிக்களிறுநீங்கிக் கற்பெயில்கொண்டிருந்தவடன்கண்முன்வந்தான். (௯)

நூற்றுவருக்கிளையவெழிற்சிறுவிக்கன்று நுவலருந்தோண்மாலைபுனைமண வனென்றே, போற்றுறுதன்முன்னவனைக்கண்டாள்போலப்புலரியரவிந்தமுக ம்பொலிவுதோன்ற, வேற்றெதிர்வந்துட்கொடுபோய்த்தவிசுநல்கியிருத்தியினி யிக்கணத்திலெழிற்றேர்வேந்தர், தோற்றுவர்வேட்டம்புகுந்தோரினிதாவுண் டிதுய்த்தவரன்பறிந்தேகத்தூய்மையென்றாள். (கo)

வீறுருங்குழன்மடவாளிதனைக்கூற வேனில்வேள்கணைக்கிலக்காகின்றவீ ரன், றேறுதபுல்லறிவாலிதனைச்சொன்னான் சேயிழைநீவனத்திருந்துதேம்பி னாளு, மாறுததுயருழந்துபருவம்வாளா மங்குதல்செய்தைவருடன்மருவனன் றோ, பேறுலுமவரினிப்பார்பெறுதலாற்றார் பேதைநீபெண்ணறிவாற்பேதுற் றாயே. (கக)

வரிசையமுதனையமொழிமடவாராேனார்வனப்புடைமைக்குரித்தாயமணவற் சேர்ந்தே, கரைசெயற்குமரிதானவின்பந்துய்த்துக்களிப்புறுவர்நினைப்போலக் காடுதோறு, மரசுசெயவெனவுதித்தவெளியோர்தம்மையாதரித்தார்தமையுண ரோமணங்கேயெம்பால், விரைசெய்மலர்மாதரிப்பார்த்திகழ்வதேய்ப்ப விளங் குவையிக்கணத்தேநீமேவுகென்றான். (கஉ)

முறையழியப்பிதற்றியபுன்மொழியாலந்த மொய்குழறன்செவிபுதைத்து முகில்செய்ம்மேனி, மறைமுதறன்றிருனாமமெடுத்துக்கூறிமாபாவியேதுரைத் தாய்மத்தரேபோ, லறையுமொழிதவறுமொழியன்றியிவ்வாறறைவதற்குமன மெழுந்ததந்தோவெங்கள், பிறைநுதல்சேர்சங்கவதிக்குரியோய்நானுன்பிறப் பன்றேவென்கொடுஞ்சொற்பேசலென்றாள். (கங)

குழையடர்ந்தவேல்விழியாண்மாற்றங்கேட்டக்கொடும்பாவிநாணிலனாய்க் கூறுகின்றான், மழையனையதழையோதிமயிலேமன்னர் மகளிரிடைமுறை நோக்கார்மனதுக்கேற்ற, விழைவின்முறைநலந்துய்ப்பரென்னும்வாய்மைமே தினியிலுணர்ந்திலைகொல்வனப்பின்மிக்க, விழைமடவாரேழையருக்குரித்தோ வீரத்தென்போல்வாற்குரித்தன்றியெனவுஞ்சொன்னான். (கச)

வட்டவரிவிற்காளைசொற்றதன்மைமாதுணர்ந்துங்கிவன்கருத்தின்வண்ண ந்தேறு, திட்டமெனவிவனோடுபுகன்றேமின்சொலிவனிலமைதோன்றியதிங் கிருப்பதேயோ, துட்டனெதிரெனவுன்னிக்கடிதுநீங்கித்தூயமுனிதவுமியர்பா ற்றொடர்ந்தாளந்தக், கட்டழகனிடைதகைந்துசெங்கைநீண்டிக்கடிதெடுத்துத் தேர்மிசைவைத்தேகினனே. (கரு)

வேறு.

காரனையவோதியிருகண்கலுழிசெய்ய
வீரர்பெயர்கூறியவண்வெம்மையொடுகூவித்
தேரின்மிசைவீழ்வள்புரள்வாளிதுதெரிந்த
சீருலவுமாமுனியிடைந்திதுதெரிப்பான். (கசு)

வையகமதிற்பலர்மதித்தவிறலாண்மை
செய்யவர்களெவரொருதேவியிவளென்னே
கையுறவெடுத்தகல்வதுங்கருமமாமோ
மையன்மயலான்மதிமயங்குவிறல்வேலோய். (௧௭)

மற்றொருவர்பன்னியரையுன்னினுமனத்துட்
குற்றமெனவேகுரவர்கூறுவர்கடொட்டா
லுற்றதிருவும்புகழுநீங்குமுறுமன்றே
பற்றுபகையோடுபழிபாவமுதலெல்லாம். (௧௮)

அத்தகுமியற்கைகெடவார்வமுளதேனுஞ்
சுத்தவிறல்வீரரவர்தோகையிவடொட்ட
கைத்தலமிருப்பதரிதென்றுகருதாமற்
சித்துணர்வுளீர்கொடுமைசெய்துபகைபெற்றீர். (௧௯)

மன்னரரைநாழிகையில்வந்துறுவர்வந்தாற்
சின்னமுறுமுங்கள்படைசேயிழையைவிட்டுத்
துன்னுவதுநன்றெனவுரைக்கவதுதோன்று
தன்னவர்நடந்தனரணங்கொடுவிரைந்தே. (௨௰)

காதலர்வரத்துணர்கருங்கடல்செய்கண்ணுள்
வேதனையுறச்சிலவிளம்பிமுறையிட்டே
யாதரவினவ்வளவுமாவியொடிருந்தாள்
நீதியறுதீயவனெடுந்தனிரதத்தில். (௨௧)

அவ்வளவிலவருமரும்புறவமெங்கு
மெவ்வமறவேட்டமெனவெய்திநனிமீண்டே
மைவருதடங்கணுறுவாயிலிடைவந்தார்
கைவருபெருந்திறல்கலித்துளபுயத்தார். (௨௨)

பாவையொடுமாதவனிலாதபடிகண்டே
தாவமுறுமைவர்நிலைதாழ்ந்துமனனொந்தார்
காவறசகண்டனிடர்காட்டியதினத்திற்
பூவையையிழந்தரகுபுங்கவர்களேபோல். (௨௩)

மற்றுமவர்சித்தமொருமித்துமடமாதைக்
குற்றநினையாதவகைகொண்டவர்களாரென்
றுற்றடிநடந்தனருயர்ந்துளதனித்தேர்ச்
சுற்றுருள்களிற்சுவடுதோற்றமுணர்வுற்றார். (௨௪)

அவ்வழியினேகியனிகஞ்சென்னெறிகண்டே
தெவ்வரெவரோநெறிசெலத்தகுவரென்றே
செவ்வியமனத்தினர்தெழித்துயர்மருத்து
மொவ்வறநடந்தனரொருப்படவிரைந்தே. (௨௫)

வேறு.

பணியார்செலுமாநெறியேபடர்வான்பலவைக
லணியார்தவமேவலியாயுடையானயர்வோடுந்
துணிவாலணுகுந்தனிமாதவனைத்தோளாண்மை
மணியேயனையார்கண்டார்நிகழ்வுமனங்கொண்டார். (உசு)

ஐயாவினிநீமெய்சோர்வதுவேனருளாலே
கையார்படையார்தமைவென்றிடுதுங்கடிதேபோய்
மெய்யோருருவாம்விமலாவிவணீமேவென்றே
செய்யாரன்பாற்சொன்னார்படைமேற்சென்றாரே. (உஎ)

சாலச்சினமூந்துறவந்தனிகந்தனைமோதி
மாலிற்சிந்துபதியெங்குள்ளான்வலியென்னென்
றாலத்தழலிற்றேடிப்புகல்கண்டணங்கன்னாள்
வாலப்பருதியெதிருஞ்செந்தாமரையொத்தாள். (உஅ)

அந்தக்கொடியோனனல்வந்தவளானனநோக்கிச்
சிந்தைக்கினியார்வலியேபுகழுந்திருவேயோர்
பந்திக்கணையால்விறல்கொண்டிடுவன்பாண்டென்போன்
றந்தப்புதல்வர்தமையானறியச்சாற்றென்றான். (உகூ)

புத்திக்கொருவர்நிகராதவளும்புகல்கின்றாண்
மத்திற்சிறியோய்வாழ்வுந்தேசும்வாணாளுந்
தத்திக்கெடுவாய்சார்ந்திக்கருமந்தலைப்பட்டாய்
பித்திற்புகலும்படியாலென்னோபெரிதம்மா. (௩௦)

ஈசற்கன்றுமகவானுடன்மேவிமையோராற்
பூசித்தேத்தக்கொடியாருடலம்பொடிசெய்த
பேசற்கரியானவனேநரனும்பெயர்கொண்டோன்
றூசற்கெதிர்சென்றவனோடிகனீபொருவாயோ. (௩க)

சேமக்கதைகொண்டெதிரிற்குலவுத்திண்டோளார்
வாமப்பகனோடெளதானவர்நீண்மணிமானின்
றாமப்பெயர்சேர்விறலோர்படுத்ததுணிவுள்ளாய்
வீமப்பெயரோனவனோடெதிரும்விரகுண்டோ. (௩உ)

அறமேயுருவாமரசோடெதிர்வாயெனிலந்தோ
மறமேபுகல்வாயினிநீமானம்வலிதீர்வாய்ப்
புறமேவருவோனவனேபரிமேற்பொருமீளி
விறல்வேலுடையோனிளையோனென்னேவினைசெய்வாய். (௩௩)

பட்டாயுயிர்நீபடுமாறிலவேற்பகர்மானங்
கெட்டாயிதனிற்றுணிபொன்றினிமேற்கிடையாதாற்
பொட்டாமுரையென்புகல்வாயிதுவும்புகலென்றாள்
பட்டாங்குனைமுன்னவனென்றதனாலறிவித்தேன். (௩ச)

என்றுளின்சொற்கிளியேபுரைவாளிவனுகங்
குன்றுநின்றுனவ்வாறுணருங்குலவேந்தர்
சென்றுங்கவனைச்சூழ்ந்தார்சேனைத்திரளோடும்
வென்றுமென்றேயைவர்விடுத்தார்விசிகங்கள். (ஙரு)

வேறு.

சொரிதருசரங்களவரிரதமொடியங்கள்பலதுண்டிபடநெடுந்துரகமோ
டியரிதரவருந்தலைவர்கரமொடுசிரந்திசையினெறிபடவிருங்கவசநீ
டுரமறநெடுங்குடர்கள்சரிவுறவெலும்பினொடுமார்புயநெருங்கவுடலம்
பிரிவுறநெடுங்குருதிநதிபடவெதிர்ந்தவர்பிணம்படவியங்கியதரோ. (ஙசு)

வந்துருமுமஞ்சவனிகங்களையடுங்கணையின்வல்லமைதெரிந்திவர்கணோர்
சிந்துபதியும்பலநிலஞ்செய்முடிமன்னரொடுசென்றமர்தரும்பொழுதின்மீ
தந்தரமயர்ந்துலகமெங்கணுமிரிந்துகுகையம்புதமடைந்துளதரோ
விந்திரனரும்புதல்வன்வெங்கணையனந்தமொரிருஞ்சிலைதருங்கடுமையால். ()

மொய்த்தமர்கொடுத்ததிரிகத்தனயர்வுற்றரசர்முட்டிநிலைகெட்டிரதமுங்
கைத்திறன்மதக்கரிநிரைத்தொகைபடச்சொரிகணைக்கனல்கலித்திடல்செயா
மெய்த்திறலுடைச்சிலைகொள்பற்குனனகைப்பவிறல்மிக்குளசயத்திரதனு
தைத்திடுகணைக்கலசியப்புமழையொத்துளதனிச்சிலைவளைத்தனனரோ. (ஙஅ)

வாகைபுனைசிந்துபதிசீறிவிடுமம்பையொருவார்கணையினலகறல்செய்
தோகையொடுசெங்குருதிபாயவிவனுந்துகணையூறுபலசெய்ம்முறையினுற்
றோகைதனையங்கொருவியோதுவசனந்தவறுதேர்ன்றவிரதங்கடவினுன்
பாகைநிகரென்றமொழிவானரமடந்தையர்கள்பார்வைசெய்நறுந்தெரியலான்.

மேவலனருஞ்சமரினோடலுமறன்குமரன்வீமனரனண்பிளைஞரோ
டேவருமருஞ்சமரமாறியனல்வந்தவளையேதமறவந்தணுகினர் [ள்
காவலரரும்புநகைவாண்முகமெதிர்ந்துகொடிகாமருசொலொன்றுரைசெய்தா
பாவியவனுய்ந்தகலவாருயிர்தருந்தகமைபாவமதிபாவமெனவே. (சo)

அந்தவுரைதந்திடலுமங்கவர்வெகுண்டவனருந்தலைதரும்படிசமைந் [ர்ந்
துர்துறுதனஞ்சயனுமொண்பவனன்மைந்தனுமுடன்றுடர்தருஞ்செயலுண
திந்துமரபென்றுமுயவந்தவறன்மைந்தனினிதென்றுவிடைதந்துபுகல்வான்
சந்தமலர்மங்கைநிகர்தங்கைநமர்சங்கவதிகண்கலுழ்தனன்றலவெனு. (சக)

போனவனைநீவிரவமானமொடென்முன்னிடுதல்போதுமெனவோதியருளி
மானனையுமாமறைவன்மாதவனுமேருலவுவாழிளைஞரோரிருவரு
மேனையருமாகவிருபாலும்வரவேகிமுனிருந்ததலம்வைகினனரோ
தானலதுவேறொருவர்தன்னைநிகராதபொறைசாந்தமுளவேந்தர்பெருமான். ()

வேறு.

இருவரையேவிமீண்டின்சொன்மங்கைதன்
பருவரலொழித்தபின்பன்னசாலையிற்
றிருவுறுமார்புடைச்செல்வனேற்றுளா
னொருதனித்துயரமுமுகவுமின்றியே. (சங)

சென்றனரிருவருஞ்சிந்தும்ன்னனை
வென்றியிலணுகினர்விரைந்தவேகத்தார்
குன்றுயர்தோளினுர்குறுகநோக்கலு
மன்றவனடுங்கியேயறிவுமாழ்கினுன். (சச)

தேரினைவிடுத்தொருதிறல்செயீந்திவிற்
காரிருட்புதரினுட்கரந்துவைகினுன்
போரினிலரியனுர்புகுந்துதேடியங்
கேருறுவிலோதிதொட்டீர்த்துளாரரோ. (சரு)

மடங்கலங்கொடியினுன்வலித்துக்கைகளாற்
றிடங்கொளும்பதங்களாற்றிணிந்துமோதலாற்
கடங்கலுழ்சூழியங்கரியனுனுயி
ரடங்கியதவ்வையினவசமாயினுன். (சசு)

அவசநீத்தவனுயிரணுகுங்காறுநற்
றுவசமேலரிதருந்தோன்றருழ்த்தனன்
கவசமேய்றமெனுங்காவலன்சொலித்
திவசநீகாத்தியென்றிளைஞன்செப்பலால். (சஎ)

அன்னவனுணர்வுவந்தரிதெழுந்தனன்
பின்னருஞ்சமீரணன்பெற்றகாளையுங்
கொன்னவில்கூர்ங்கணைகொண்டுதீயவன்
சென்னியிலன்னிலைசிகையைத்தாக்கினுன். (சஅ)

பிணித்தனனிருபுயம்பின்புங்கூறுவான்
பணித்தனனின்பெயர்ப்பாண்டுதாதனென்
றணித்துறுவேந்தன்முன்பறைகுவாயெனிற்
றுணித்திலனின்சிரந்துணிபுகூறெனு. (சகூ)

அன்னதேயாமெனவண்மைந்தகாலையிற்
பொன்னுருட்டேர்மிசைக்கொண்டுபோயினுர்
கன்னவிறேளுடைத்தருமன்வாழ்கடை
மன்னினர்முந்துறவைத்துக்கூறுவார். (ருo)

ஐயநின்சொற்கடந்தறிகிலோமிவன்
செய்ததீமையிலினித்திறம்பித்தண்மையென்
றுய்வுறுமுயிரொடுங்கொணர்ந்துளோமுவன்
செய்தநாமஞ்சொலத்தெளிதியென்றனர். (ருக)

அளியுறுசெங்கணுற்றன்மிக்கதன்
களியுறுமிளைஞர்சொற்காதினெய்துமுன்
சுளிதருதிருமுகந்தோன்றநோக்கினுன்
றெளிவுறுசிந்துநாட்டிறைவன்செப்புவான். (ருஉ)

பார்க்கெலாமொருவனேபாண்டுதாதனும்
பேர்க்குரித்தாயினேனென்றுபேசினுன்
போர்க்கதிர்வேற்கணுள்புதுநிலாவுமிழ்
தீர்க்கவாணகையொடுந்திகழ்ந்துளாளரோ. (ருங)

கருதருமறன்மகன்களிப்புந்துன்பமு
மிருபுடைதாங்கியாங்கிருந்ததம்பியை
வெருவியபிணிப்பினிவிடுத்திவேறென
மருவுறுகரங்களான்மாற்றினுரரோ. (ருச)

இரதமும்படைகளும்பிறவுமெய்திய
விரதமன்னவன்பெறமீளிநல்கியே
கரதலத்தவன்விழிக்கலுழிமாற்றினுன்
சரதமோர்வடிவெனுந்தருமராசனே. (ருரு)

ஏகுதியெனவிடையுதவவேந்தலும்
வேகமாய்மீண்டுவாகினியின்மேவிலன்
சோகமோடொருமுனிச்சூழல்வைகியே
யாகநொந்தருந்தவமாற்றினனரோ. (ருசு)

வேரியந்தொடையலான்றவம்வியந்தொரு
மூரிமாலேறுகைமுன்பன்றோன்றினுன்
சீருறுபொன்னடிதொழுதுசெப்பினுன்
வீரியமுறுஞ்சயத்திரதன்வெற்றியால். (ருஎ)

கைத்தலவண்மைசேர்கவுந்திமுன்றரு
புத்திரர்தம்மையான்போரில்வெல்லுமா
றத்திரமுதவவென்றறைறயமேலவ
னுத்தரமோதுவானுண்மையாகவே. (ருஅ)

ஐவரும்பாரதவமரில்வெற்றிகொண்
டுய்வுறமுன்னரேயுதவினேவமர்க்
கெய்துவரீதுனக்கேற்றபோரிடை
செய்வதோர்தினத்தமர்செயிக்கவல்லையால். (ருகூ)

அருச்சுனனன்றிமற்றியாவரத்தின
முருத்தெதிர்மேவினுமுனக்குவெற்றியே
செருத்தனிலடையுமென்றுரைத்துத்தேறவும்
மருப்பயிலிதழியான்வரந்தந்தானரோ. (சுo)

அண்ணலுமறைந்தனனரசன்மீண்டுபோய்க்
கண்ணகலன்னகர்க்கலந்துவைகினுன்
பண்ணமர்மொழியொடும்பாண்டுமைந்தர்கள்
நண்ணினர்சூழலினலங்கொண்டென்பவே. (சுக)

சயிந்தவச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௨சசுஅக.

---

# இராமாயண கதை.

## இராமனுற்பவச்சருக்கம்.

தண்டமுங்கரகமுஞ்சடையுங்காவிதோய்
பண்டைநார்ச்சீரையும்பவளமேனியும்
புண்டரநுதலுமாமுறலியைப்புறங்
கண்டமாமுனியவர்கண்முனெய்தினன். (க)

மையறுதருமனுமிளைஞர்வர்க்கமு
மொய்யெனவெழுந்துசென்றுவகைமேலிடச்
செய்யதாடொழுதுபூசனைசெலுத்தியே
மெய்ம்மலர்த்தவிசின்மீதுய்த்தவேலையில். (உ)

அய்யனுமாங்கவர்க்காசிநல்கியே
தையலுக்கின்னுரைதந்தபின்னரின்
செய்யகோற்றருமனுஞ்சிந்துநாயகன்
கையுறவியற்றியகருமமோதினன். (ங)

ஆண்டவன்செய்ததுமதற்குமீளவு
மீண்டிவர்புரிந்ததும்வேந்தனோதலுங்
காண்டகுகருணையான்கழறலாயினன்
பாண்டவர்மனத்துயர்பறியவேண்டியே. (ச)

துட்டருக்கடுத்ததுபுரிதறாய்மையாற்
பட்டவர்க்கிழிபினிப்பகரிலுண்டுகொன்
மட்டறுகோசலைபுரந்தமன்னவ
னிட்டமாமில்லவட்கிழிபுண்டாயதோ. (ரு)

என்னலுந்தருமனுமிளைஞருங்களித்
துன்னியசிந்தையர்தொழுதுகூறுவார்
பன்னியகதையடிதொட்டுப்பாங்குற
வின்னிலையுணருமாறிசைத்தியீறிலாய். (சு)

கருத்தினினின்னுரைக்கசடுநீக்குதற்
குரித்துள்தாதலானுறுதிபேணினேஞ்
செருப்பயிலிராமனுந்தீமையாசுர
னொருத்தனுமிராவணனுதித்தவாறெடும். (எ)

மற்றுள்பண்பெலாந்தெளியுமாறுநீ
நற்றவத்தொருவனேநவில்கென்றோதலுங்
குற்றமொன்றிலாதவன்குறிப்பதாயினன்
வெற்றிசேரிராகவன்சரிதம்வேட்கையால். (அ)

வே று.

வானநாடருந்துளைவுறுபுனிதமாநதியாய்
ஞானமல்குறு தூய்மையாய்நாட்டவர்க்கீன்றுள்
பீனமன்னதாய்ப்பெருவளஞ்சுரந்திடப்பிரமன்
றூனளித்ததாய்விளங்குறுஞ்சரையுமாநதியே. (௯)

அந்தமாநதிதீரநற்கோசலையவனி
யுந்துமன்னவர்நகரியேயயோத்தியென்றுரைப்பார்
முந்துபாற்கரன்வழிவருமரபினோர்முதன்மை
சிந்தைகொண்டுளாய்மேலினிச்செப்புமாறெவனோ. (௧௦)

அனையநன்மரபதனிடையயனெனுமரசன்
றனையனென்னலர்தாள்பணிதயரதனென்போன்
முனைமிகுந்திறலாற்புவிகாக்குநாண்மூவர்
மனைவிமாரொடுநெடிதுநாள்வழுவறவாழ்ந்தே. (௧௧)

மைந்தர்வந்திலரென்றருமாமகம்பயிற்ற
பந்தவேள்வியிலெய்தியவமுதினைநுகர்ந்து
முந்துகோசலைபிராமனைமுன்புறப்பயந்தா
ளிந்தவையமுமறைகளுஞ்சிறப்புறவெழிலால். (௧௨)

பரதனென்றொருமதலையக்கைகயன்பாவை
சரதமோங்குறத்தந்தனள்சுமித்திரையென்பாள்
விரதமிக்கசீரிலக்குமன்விளங்குசத்துருக்க
னிரதமோங்குபேரிருவரைநேயமோடளித்தாள். (௧௩)

காதன்மைந்தர்கணால்வருங்கலைமதிபுரைய
வேதநான்கெனவளர்ந்தியற்கல்வியின்வேலை
தீதறத்தெளிந்தொருதனிச்சிலைமறைதேர்ந்தார்
மாதவம்பெரிதுடையமாவசிட்டனான்மன்னோ. (௧௪)

சாந்தமோடரும்பொறையுநற்றருமமுநெறியு
மாய்ந்தநூலுணர்கேள்வியுமாண்மையுமுலகிற்
போந்தமன்னரினிகரிலாப்புதல்வரைநோக்கி
வேந்தனுங்குயரளக்காமுவகையில்வீழ்ந்தான். (௧௫)

அன்னநாடனிற்கோசிகமுனியடைந்தாண்மை
மன்னிராமனோடிலக்குமனுடன்வரக்கொடுபோய்
துன்னுதாடகைதனைச்செறுத்தகலியாந்தோகை
யுன்னுசாபமுந்தொலைத்தபின்மிதிலையிலுய்த்தான். (௧௬)

விறலுடைத்திருவிதேகனுடொருதனிபுரக்குந்
திறல்கொணற்சனகன்மடத்தெரிவையாஞ்சீதை
யறல்மென்கூந்தலாடனைமணந்தயோத்தியிலடைந்தான்
குறைவிலாப்புகழ்பரசுராமனைவயங்கொண்டே. (௧௭)

எனையோர்களுந்திருமணமுடித்தனரிருந்தார்
கானைநண்ணுவான்றவந்தரக்காவலன்கருதி
தானைமன்னவர்முனிவரர்தம்முடனுசாவி
வானநாடருமகிழ்வுறவிவையுளமதித்தான். (௧௮)

இதையவான்குணத்திராமனுமேந்தல்யானுய்ய
வுதையமானவனுலகெலாம்புரந்திடமகுடந்
துதையும்வேந்தர்முன்சூட்டியான்றுறப்பனென்றுரைத்தான்
றதையுந்தொங்கலம்புயத்தினான்றயரதனென்போன். (௧௯)

ஒக்குமென்றருந்தவத்தருமுழையருமுவப்ப
மிக்கவோரையுமுகூர்த்தமும்வரன்முறைவிரித்துத்
தக்கவேந்தர்கடமக்கெலாந்தூதராற்சாற்றிப்
புக்கனன்றனதாலயம்புரவலர்பெருமான். (௨௦)

அந்தவாசகமந்தரையென்பவளறிந்து
வந்துகேகயன்பாவையைமலரடிவணங்கி
யிந்தமன்னவனிராமனுக்கரசினையீந்தாற்
றந்துநின்மகனென்செய்வான்றனியிருந்தென்றாள்: (௨௧)

பின்னுமோதுவாள்கோசலைதன்பெருங்கருத்தான்
மன்னனுக்கினன்மைந்தனைமடக்கொடிநின்பா
லுன்னுபேரறிவிலாமையாலுன்வயினுதித்தோன்
பன்னுமாங்கவர்க்கேவல்செய்பண்பினனானான். (௨௨)

அன்னதொன்றுகொலரசினுக்கிராமனேயமைந்தாற்
சொன்னகோசலைதனக்குநீதொழும்புசெய்பவளே
மின்னுஞ்சோதிவேலிராமனுக்குன்மகன்மிதிலை
மன்னன்றந்தவட்கிவன்மனைவழித்தொழும்புணர்வாய். (௨௩)

இதுவுநிற்கநுந்தந்தையாங்கேகயனினிமேன்
மதுகைமன்னவன்விதேகநாட்டொருவனைவழுத்திக்
கதுவியாங்கவன்றொழும்பினிலிருப்பதேகண்டாய்
துதிசெயானினிக்கோசலைத்தாதியர்தொழும்பே. (௨௪)

இந்தவாறெலாமுன்வயினடுக்குமிங்கிராமன்
றந்துளான்புவியென்னுமித்தகைமைநீயறிந்துஞ்
சிந்தைவெந்துயரின்றியேவைகினைத்திங்கள்
வந்தராவொருபுடையுணநிலவுமிழ்வதுபோல். (௨௫)

என்றுபல்வகைகூறலாலேந்திழைதுயர்கூர்ந்
தன்றுதன்னுடைத்தாதியையருளொடுநோக்கி
யின்றுசெய்யுமாறேதிதற்கிசைத்திநீயென்னத்
துன்றுமந்தரைசூட்சியொன்றவளுடன்சொல்வாள். (௨௬)

வே று.

முந்தொருகாலமுனைதருவேந்த
னந்தரமெய்தியமர்புரிநாளிற்
* கந்துவிலங்கக்கைதரல்கண்டே
தந்தனனன்றேதானிருவரமே. (உஎ)

அவ்வரமொன்றாலரசுன்மகற்கே
செவ்வியினேரச்செய்தபினென்றால்
வெவ்வழலொண்கான்மேவுதல்செய்வாய்
கைவ்விலிராமனையென்றுகரைத்தாள். (உஅ)

அத்தனிமங்கையடைந்தரசன்பா
லித்தகையோதலுமேந்தனடுங்கி
யுத்தமன்வாய்மைவழான்றுயருற்றே
யித்தகைசெய்கெனவாழியெறிந்தான். (உகூ)

வாணுதலாழிதெரித்துமறைந்தோர்
தூணிலிராகவனுக்கிதுசொற்றாள்
பேணிவணங்கியெழுந்துபிதாவி
ணுணியுரைப்படிகாட்டிலடைந்தான். (௩0)

சுலக்கணமுள்ளசுமித்திரைதந்த
விலக்குமனோடிலக்குமியன்னா
ணிலத்தெழுசீதையுநேயமொடுற்றார்
கலக்கறுகோசலைகாதலனோடும். (௩க)

மூவருமன்னகர்விட்டுமுறைப்பாற்
காவதமூன்றுயர்காட்டினிலேகத்
தேவர்மகிழ்ந்தனர்திண்புவியுள்ளோ
ரியாவராழாதவரியாவர்விழாதார். (௩உ)

போயினன்வெவ்வனமென்றுபுகுந்தோர்
மாயிருமன்னவன்முன்னர்வழங்கச்
சேயினைநீத்துயிர்வாழ்வதுசெய்யா
ஞயினனண்ணலுமாருயிர்நீத்தான். (௩௩)

அம்முறையொன்றுமறிந்திலனாகி
மைம்முகில்வண்ணனும்வந்துசிறப்பாற்
கைம்மலைநீர்துளைகங்கைகடந்தே
அம்மைகொள்சித்திரகூடமடைந்தான். (௩ச)

உய்த்துளகேகயனூரிலிருந்த
வித்தகனும்பரதப்பெயர்மேலோன்
சத்துருக்கனனொடுசார்ந்துறுதந்தை
முத்தியுடைந்தமுறையுணர்குற்றான். (௩ரு)

* கந்து - தேரினுள்ளச்சு.

துன்பமடைந்துதுணிந்துளமஞ்ச,
வன்பின்மிகுங்கருமங்கள்வழாதே
யின்பமடைந்திடயாவருமெண்ணி
லன்பின்டத்தினனத்திறன்மைந்தன். (௩௬)

கருமநிறைந்துளபின்னர்கருத்தாற்
பிரமனையன்னபெருந்தவவேதா
திருமுனிருந்துசிறப்பொடுசொன்னா
னிருநிலனின்பரமென்றுவிளங்க. (௩௭)

அண்ணலகன்றிடவத்தனிறப்ப
மண்ணையளிப்பதெனக்குவழக்கே
பெண்ணறிவிவ்வணமாக்கியபெற்றி
நுண்ணியதென்னநுவன்றுகொதித்தான். (௩௮)

பற்பலரோதல்பரிந்துபவத்தாற்
சொற்பிழைதாயுளசூழலடைந்தே
நற்பயனின்றியதீமைநடாத்தி
யிற்பிழைத்தனையென்றுவெகுண்டான். (௩௯)

தன்முன்னடைந்ததவத்தினிலின்னே
யன்பினடைந்திடுவேனெனவாங்கு
மன்முன்னடைந்தனன்மாநகருள்ளோ
ரின்பிலடைந்தனரீன்றவரோடும். (௪௦)

வேறு.

தாயர்மூவருந்தானைவெள்ளமுந்
தூயமானகர்ச்சூழ்சனங்களு
நேயமாயிவர்நெறியிற்சார்வுறப்
போயினாரரசுதவுபுண்ணியர். (௪௧)

கங்கைமாநதிகடந்துமுன்னவன்
றங்குசித்திரகூடத்திற்சார்ந்தவன்
றுங்கநல்லடிதொழுதரற்றினா
ரிங்குமன்னவனிறந்ததோதியே. (௪௨)

இறந்துளான்கொலென்றேங்கிமீளவுந்
துறந்ததம்பியர்துயருமாங்குறு
சிறந்ததாயர்தந்துயருந்தீர்த்துளா
னறிந்துளார்க்கெலாமமுதுபோலுளான். (௪௩)

தம்பியெண்ணமுஞ்சமைவுநோக்கியே
நம்பிதாமுனநவின்றநாளெலா
மிம்பர்வைகுவன்கானிலெம்பிநீ
யம்புவிக்கெலாமரசனாகியே. (௪௪)

நகரில்வைகெனநவிலுமுன்னரே
புகலுதற்கருந்துயர்பொருந்தியே
நிகரில்கேள்வியனிதுநிகழ்த்தினன்
ககனவாணருங்கவலைகூரவே. (சரு)

மெய்கொண்மானகர்மீளினின்னொடும்
வைகலன்றெனில்வருவதுன்னுடன்
செய்கைவேறிலையென்றுசெப்பினன்
பொய்கையன்னகட்புனல்கள்பாயவே. (சசு)

பரதனோதியபான்மைகேட்டனன்
சரதமேனியன்றழுவியோதுவான்
விரதநீத்தியான்மேவிலையநம்
வரதன்வாய்மைக்கோர்மாசுசூழுமால். (சஎ)

ஏழிரண்டெனும்பருவமீண்டிருந்
தாழிமானகரடைவனையநீ
வாழியென்னுடன்வந்துளாயெனிற்
றாழுநாட்டினிற்றருமநீதியே. (சஅ)

ஆதலானகரடைதிமீண்டென
வோதியன்னையர்க்குகவுகூறியே
பாதுகையளித்துய்த்தபண்பினாற்
காதலோடிவர்களுழ்ந்துமீண்டுபோய். (சகூ)

சடையுமோனமுந்தக்கனாிரு
படையுமாயிருந்துலகுகாத்தனன்
புடைவறிண்புயப்பரதனீங்கிவர்
தடைப்படாதுறுந்துணைவனடியே. (ருo)

தாயர்மூவருந்தக்கசேனையு
மேயமானகர்மேவுநீரருந்
தூயவன்பினர்மீண்டுதொன்னகர்
நேயம்வைகினார்நெறியினென்பவே. (ருக)

வேறு.

சரந்தருசிலையிராமன்றம்பியுஞ்சனகன்றந்த
சுரந்தருள்பொழிமானோக்கின்றோகையுமுடன்வந்தெய்தக்
கரந்தறுகவைவெண்கோட்டுக்கடங்கலுழ்களிநல்லியானை
நிரந்தரம்பயிலுங்கானினெறிக்கொடுபடர்ந்தான்மன்னோ. (ருஉ)

அனல்சொரிவிழியுங்கொண்டன்முழக்குமமரரும்
வனைமணிவிமானந்தீமைமாசுணந்தன்னொற்சுற்றிப்
புனைசெய்குண்டலஞ்சேர்காதும்புழைபுகுவாயுமேலா
வினையுமிழெயிறுந்தோன்றவிராதன்வந்தெதிர்ந்தான்றே. (ருங)

அங்கவன்சனகிதன்னைநோக்கலுமாற்றுணுகிப்
பங்கயமலர்கொண்டோடும்பவனனிற்பாய்ந்தெடுத்துக்
கங்குலைப்புரையுமெய்யன்ககனமீதெழுந்தானந்த
திங்கள்வாண்முகத்தாளஞ்சித்தியங்கினுள்கலங்கினளே. (ருச)

அஞ்சனீயென்னவீரரிருவருமடர்த்துவானிற்
செஞ்சவேயுயர்ந்துபோதுந்தீயனைத்தகைந்துவாளால்
வஞ்சகன்றனைத்துணித்துவானவர்மலர்கடுவேப்
பஞ்சிமெல்லடியைமீட்டுப்பயமொழித்தம்பாற்புக்கார். (ருரு)

விரதங்கண்மகங்கணீதிமெய்த்தவமுறவுகொண்டு
பிரபஞ்சம்பொய்யென்றுசைபெறுகிலாத்தவத்தோர்கோமான்
சரபங்கனிருந்தசூழற்சார்ந்தவன்றனைவணங்கி
விரைப்பங்கேருகஞ்சேர்கோதாவிரியினைவந்துகண்டார். (ருசா)

அந்தமாநதியிற்றூய்நீராடியாங்கருந்தவத்திற்
சந்ததமியங்குந்தூயோர்தாண்மலர்முடியிற்சூடி
யிந்திரையனையாளோடுமிராமனோர்பன்னசாலை
முந்தியவிளையோனல்கமுசிப்பறமேவினுனே. (ருஎ)

காய்கனிகந்தமூலந்தினந்தரக்கனிட்டனுங்கு
தூயவனிருந்துபன்னுடொலைத்தனன்றேவிதன்னை
மாயையாற்கவர்ந்தான்றீயோனிராவணன்மற்றவன்றன்
பாய்தனிச்சாதமெல்லாம்பகருவன்கேண்மினென்றான். (ருஅ)

அருந்தவர்பெருமான்கூறவறன்மகன்சிரந்துளக்கித்
திருந்துமவ்விலங்கைவேந்தன்செனனமாந்தினந்தொட்டுள்ள
பொருந்துறுசரிதமெல்லாம்புகன்றிடவேண்டுமென்ன
மருந்தினையனையதூயமாதவன்புகல்வதானுன். (ருகூ)

இராமனுற்பவச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-சஎசo.

---

# இராவணனுற்பவச்சருக்கம்.

---

குலத்தியனுடையதெய்வப்பிதாமகனளித்தகோமான்
புலத்தியனுதவுமைந்தன்புகழ்பெறுகுபேரனென்போ
னிலத்தருந்தவத்தையாற்றிநீணிதிக்கிழமையோடு
சொலத்தகுசெல்வமெல்லாந்துய்த்துவாழ்ந்திருந்தான்மன்னே. (க)

கட்புலன்கதுவாமுன்னர்க்காசினிவலஞ்செய்யாற்றற்
புட்பகவிமானத்தோடுவடதிசைக்காவல்பூண்டு
நட்புறவீசனோடுநன்மைகொண்டெவரும்போற்றக்
கொட்புறவிலங்கையென்னுநகரில்வாழ்குலவுநாளில். (உ)

தந்தையாங்கதனைநோக்கித்தனயன்மாட்டளிசெய்யாமற்
சிந்தையிற்கொடுமைகூரச்சிறந்ததன்னுடலிற்பாக
முந்துறநோக்கிவேறோர்முனியெனலாகச்செய்தான்
வந்தவம்முனிவன்பேரோவிக்கிரவாகுவென்பார். (ங)

மற்றவன்குபேரன்றன்மேன்மாறுகொண்டொருதண்சூழ
லுற்றனனந்தவண்மையுலகபாலகனுமிந்த
முற்றுணர்குபேரன்கேட்டுமுனிவனையடைந்துபோற்றிக்
கற்றவரரசேயானுன்கான்முளையாவனென்றான். (ச)

அன்னவனுரைத்தமாற்றத்தம்முனிகருணைநல்கித்
தன்னுடைப்புதல்வனென்றுதயாவுடனிருக்குநாளிற்
பன்னருங்குபேரன்மீண்டுபலதினங்கழித்தோர்வைகல்
பின்னரப்பிதாவைக்காண்பான்பெருந்திறலோடுஞ்சென்றான். (ரு)

அலர்மகளனையவாமவாக்கியர்மூவர்தம்மை
நலனொடுகொண்டுசென்றுதந்தைக்குநல்கிநானும்
பலர்புகழ்தவத்தோரேறேபணிவிடைக்குரித்தாமிந்தச்
சிலைநுதன்மடவாரென்றுசெப்பித்தன்னகரஞ்சேர்ந்தான். (சு)

வைச்சிராவணனுமைந்தனல்கியமடவார்தம்பால்
விச்சிரவாகுவென்னுமேலவனருள்செய்தாங்கு
நச்சணிவிழியார்நாளும்வழிப்படநற்றவத்தி
னிச்சையிலிருந்தான்பன்னுளிமையவர்சிரந்துளக்க. (எ)

ஆய்ப்படுதவமுஞ்சித்தியாயபின்பருந்தவத்தோன்
வேய்ப்படுதோளினாரைவியந்துமக்கேதுவேண்டும்
வாய்ப்படுகணத்தின்முன்னர்வருவிப்பனென்னவன்னார்
சேய்ப்படுமாறுதம்மைச்சேர்ந்தருள்செய்வாயென்றார். (அ)

உலப்பருந்தவத்தோர்கோமானுவந்தவருரைத்தவண்ண
நலப்படவவருக்கின்பநலம்பெறுவித்தான்றீயோர்
குலக்கொடிதசக்கிரீவன்கும்பகன்னப்பேர்கொண்ட
சலத்திருதனையற்றந்தாடகும்பொறிநிகராந்தையல். (கூ)

மாலினியெனும்பேர்கொண்டமங்கைநற்றருமமுய்ப்பச்
சூலினைத்தாங்கிவிண்ணோர்துதிதருவீடணப்பேர்
பாலனையளித்தாள்வாகையெனும்பெயர்ப்பாவைதீய
காலனைவெருட்டுமாற்றற்கரன்றனையுதவினாளே. (கய)

மீளவுமந்தவஞ்சிவிருப்பிற்சூர்ப்பனகியென்னுங்
காளவெவ்விடத்தையாண்டோர்கன்னியென்றுதவினளால்
கோளுறுமைந்தர்நால்வர்கொடுந்திறற்சிறுவியோடுந்
தாளிடைதொழுதாரீன்றதந்தையைத்தகுதியாக. (கக)

மாதவனவரைவாழ்த்திமறைமுறைசாதகன்மந்
தீதறநடத்திநாமகரணமுஞ்செய்துமுந்நூற்
காதலாற்பொருத்தியெண்ணென்கலைகளும்புகட்டினுநற்
றாதையைமுதலோர்கண்டேயற்புதஞ்சாரமாதோ. (கஉ)

கலையெலாமுணர்ந்தபின்னர்க்கமலனைமனதுட்கொண்டே
சிலைவலார்தவத்தினின்றேபயின்றனர்சிலனுண்முன்னோ
னலரோன்வந்திலாமைகண்டேயாயிரம்பருவஞ்சென்று
னிலவியசிரமொன்றாகநெருப்பினிலோமஞ்செய்தான். (கங)

ஒன்பதுசிரம்போயொன்றேசிரமினியுளதென்றோது
முன்புளதசக்கிரீவன்மீளவுமுதன்மையாலே
துன்பறப்பருவகாலந்தொலைதலுமையமின்றி
யன்பினுற்சென்னியொன்றுமரிந்தவிதருவதானுன். (கச)

மற்றவனுறுதிகண்டுமலரவன்வெளிவந்தெய்தி
யிற்றநற்சிரங்கண்மீளவெஞ்ஞான்றுமெய்தநல்கி
வெற்றியும்புகழும்விண்ணோரெவரினும்விளிவிலாதுஞ்
சுற்றமுமரசுநல்கித்தோன்றலைத்தழுவினுனே. (கரு)

கும்பகன்னப்பேர்கொண்டகுமரனைப்பரிவினேக்கி
யிம்பரிலுனக்குவேண்டும்வரமென்னேவிசைத்தியென்னச்
செம்பொன்மால்வரைநேர்தோளான்சிந்தையுமுரையும்வேறாய்
நம்பநித்திரைதாவென்னநான்முகன்றந்தேனென்றான். (கசு)

வீடணப்பெயரோன்றன்னைவேதியன்விரைந்துநோக்கி
ஆடவரரசேநின்றனுதரமுரைத்தியென்னத்
தோடவிழ்கமலத்தாரோய்தொடர்வினைபுரியாவாறும்
பாடணிதருமங்குன்றாப்பயனுந்தந்திடுகவென்றான். (கஎ)

அன்னவன்றனைவியந்தேயன்னவாகனமேல்வந்தோன்
முன்னவருரைத்தசால்பின்மொய்ம்பணிவிறல்கொளாமற்
றுன்னருமறந்திறம்பாத்தூய்மையைவினவினுயா
லுன்னுயிரென்றும்வாழ்கவுலப்பிலாதறத்தோடென்றான். (கஅ)

கரன்றனக்காற்றனல்கிக்கலைமகள்கொழுனனுங்கு
வரன்முறையன்னமூர்ந்துவானிடைமறைந்தானிப்பா
லுரனுறுதசக்கிரீவனுவந்தனிகத்தினேடும்
பிரமனைத்தொழுதுமீண்டேயிலங்கையிற்பெரிதுபுக்கான். (ககூ)

வேறு.

ஈசற்குநண்பனிவர்வந்தசெய்கையாதென்றுதூதினறிவுற்
றேசிற்றசிந்தைமகிழ்வாகிமும்மையெயில்சூழிலங்கைதனைவிட்
டாசற்றதானையுரவோருடன்சென்றளகைக்கணெய்தியமரத்
தேசுற்றமைந்தரவ்வூர்புகுந்துதிருவிற்சிறந்ததுளதால். (௨0)

பிலமூடிருந்தவசுரேசரோடுபிறைறவெள்ளெயிற்றினுரவோர்
குலம்வாழவந்தவிறலோனைவந்துகோவென்றுசூழமுறையே
நலமோருவென்றியரியாசனத்தினனிவைகுவானையெழிலாற்
பலராகவிண்ணிலுறைவோர்கள்கண்டுபயமெய்தியெஞ்சினர்களே. (௨௧)

வேறு.

தொடிகைத்தலஞ்சேர்பசியகழைத்தோளாண்மண்டோதரிதனைக்கைப்
பிடித்தேயின்பந்துய்த்தபினர்ப்பின்னோர்தமக்குமணமியற்றி
முடிக்குங்கருமமொருவருக்குமுடியாதென்னப்பலகுமரர்
படித்தேவயரப்பயந்தெடுத்தான்பத்தினிரட்டிப்பணைத்தோளான். (௨௨)

அக்கனுடனேயதிகாயனமருக்கொருவர்நிகரில்லா
மிக்கதிறலிந்திரசித்துமுதலோர்மீட்டுமெண்ணிறந்த
தொக்கமடவார்தமைப்புணர்ந்துசுதரெண்ணிறந்தோர்தமையளித்தான்
றக்கவனுசர்பல்லோரைத்தந்தார்சமனுஞ்சலித்தேங்க. (௨௩)

மைந்தர்வலத்துந்திண்டோள்கள்வலத்துமநுசர்கிளைவலத்தும்
கந்தமலரோன்வரவலத்துங்கடவுட்குழுவைமதித்திலனாய்
சிந்தைத்துயரம்விளைத்ததனாற்றியங்கியளகைக்கிறைவனுடன்
முந்தப்புகன்றாரமரரெலாமுனைசேரசுரன்செயலெல்லாம். (௨௪)

கேட்டங்கவனுந்தனக்கிளையோர்கீழோராரவதழகலவென்
றீட்டுமொருதூதினையேவியினிமையுடைத்தாவாழ்தியெனக்
காட்டிப்புகலப்பணித்திட்டான்கருதற்கரியபெருந்தவத்தோ
னாட்டஞ்சிவந்தானவனெய்திநவிலுமுரைக்குநாணுந்தாரோன். (௨௫)

தூய்மையுடையோன்றானாகியெனக்கோர்புத்திசொலவிடுத்தான்
றீமைபயில்வோரொருவர்மதித்திறத்தாலறங்கள்பயில்வாரோ
சேமவிமையோரவணிருந்துவெருட்டுமாறுசெலுத்தினரோ
போமினெனவேயொற்றரையும்போக்கியிதனைப்புகல்கின்றான். (௨௬)

ஆற்றலுடையநிதிக்கிழவனளகைவளைந்துசெருமுற்றி
யேற்றவியக்கரமரரையுமிசைகொண்டெய்தினல்லாது
தேற்றமணுகாதெனவெவருஞ்சிறப்பாமென்னத்தேரேறி
யூற்றமுடையார்பலரொடும்போயொப்பிலளகைநகர்கண்டான். (௨௭)

வந்தான்றீயோனெனவரக்கர்மன்னனுணர்ந்துவாளமர்க்கு
நந்தாவியக்கருடன்குழுமிநளிவெஞ்சமர்வாய்ப்பயில்போதிற்
செந்தாமரையோனருள்வரத்தாற்செயித்துக்குபேரன்றனைக்கணத்தில்
கொந்தார்செய்யட்புட்பகமுங்கொண்டுமீண்டான்கொடியோனே. (௨௮)

பச்சைக்கொடியோடுடனிருக்கும்பவளப்பொருப்பைவெகுண்டாங்கு
விச்சைக்கயிலைமலையருகினிவர்வந்தடுப்பவவனூரு
முச்சக்கதிர்நேர்புட்பகமாங்குயரத்தடையாய்நின்றிடலும்
நிச்சித்துணராரானென்னேவென்றிருந்துபலவுநினைப்பளவில். (உகூ)

வழங்குங்கருணைத்திருநந்திவரைமேற்றோற்றிவாளாவிங்
குழன்றுகருதல்பொருளாமோவொன்னார்புரங்காழித்தபிரான்
விழைந்தகயிலையெனும்வரையிவ்வேதண்டத்துன்மணிமானஞ்
செழுந்திண்டிறலாய்நடக்குமதோசெல்வாய்மீண்டுன்னகர்க்கென்றான். (ஙo)

பேசற்கரியபெருந்தவத்தோன்பேசும்வாய்மைகேட்டளவின்
மாசிற்றளேவோன்வானரம்போல்வந்தோய்நீயார்புகலென்ன
வீசற்கினியவருள்போல்வானெனையோபுகன்றாயினியிலங்கை
நாசத்தடைதனின்வாயானவில்வானரத்தாலெனச்சபித்தான். (ஙக)

நரைவாண்முகத்தோன்சபித்தளவினாலோடாறுசிரங்கொண்டோன்
றரைமேற்குதித்துவிருபஃதாந்தனித்தோள்புடைத்துச்சார்ந்தோங்க
னிரைசேர்புயத்தின்மடுத்தெடுத்தானேயமுனிவர்விஞ்சையர்கள்
வரைமீதமரரியக்கர்முதலுள்ளோர்நெஞ்சுமறுக்குறவே. (ஙஉ)

ஈசனுணர்ந்தாங்கூன்றியதாளிசைவாற்சற்றேயுறுத்தலான்
மாசில்வரையின்கீழாகிமணிநேருடலநசிவாகித்
தேசுஞ்சிறப்புந்தவவலியுந்திண்டோள்வலியுஞ்சிதைந்தரக்கன்
பேசுந்திறனற்றழுதரற்றிக்கிடந்தானமரர்பெரிதுவப்ப. (ஙங)

பலனாட்கிடந்துவருந்துதலாற்பகரும்வீணைக்கந்தருவ
னலகில்புகழானிவன்றனைக்கண்டறிவொன்றில்லாயண்ணல்புகழ்
நலமார்கானஞ்செய்குவையேலுய்வாயென்றுநவின்றகல
வலனார்சிரமுங்கரமொன்றும்வாங்கிவீணைவடிவாக்கி. (ஙச)

தந்திநாடிகளிற்பொருத்திச்சாமகானம்பொழிந்திடலு
நந்திகளித்துநந்திமிசைஞானமுனிவருடனெதிர்ந்து
சிந்தைக்கினியவரமளித்துத்திறல்வாளுமிராவணனாந்
தொந்தப்பெயருந்தந்தகலத்தொழுதுவிடைகொண்டூர்சார்ந்தான். (ஙரு)

பின்னுஞ்சிலநாள்கழிந்ததற்பின்பிறழ்தண்டகத்திற்கரன்றனையும்
மன்னுமிலங்கைமாநகரின்மைந்தரினேனோரையுநிறுவி
பன்னுவிமானமிசைக்கொண்டுபடர்ந்தேதிசையெட்டையும்வென்று
மன்னுமிலங்கைக்கொருமுதல்வன்வளமாநகரில்வந்துற்றான். (ஙசு)

கும்பகருணன்பெருந்துயிலிற்கிடந்தான்மைந்தர்குலவரைப்பா
னம்பனடித்தாமரைதொழுதுநனிமாமகங்கள்பலபயின்று
செம்பொற்சிலையுமத்திறற்றிண்சிறப்பும்பெறுவான்சென்றனரா
லிம்பரிருந்தான்வீடணனுமிளையோனொருவனிலங்கையினே. (ஙஎ)

அந்தவமையந்தனிலிமையோரடைந்தேயிலங்கைதனைவளைந்து
வந்தங்கெதிர்ந்தவாசுரரைவானிற்போக்கிமாநகரஞ்
சிந்தாகுலமெய்திடச்சிதைத்துச்சிறைகொண்டரக்கர்தெரிவையரை
முந்தேயகன்றாரென்றுரைத்தான்முனேசேரிளைஞனிகழ்வெல்லாம். (௩அ)

கேட்டானெயிறுதின்றெழுந்துகெழுமித்தனதுவாகினிகள்
கூட்டாய்வரவிக்கணத்தென்றுகுறித்துத்தனித்தூதேவுதலுந்
தாட்டாமறையோன்வகுத்தவுயிரனைத்துமொருபாற்சார்ந்ததென
வூட்டாரரக்கிற்சிவப்பேறும்விழியாரொருங்குதிரண்டார்த்தார். (௩௯)

கும்பகருணன்றுயிலுணர்ந்தாங்கெழுந்தான்குலமால்வரைபோலச்
செம்பொற்சிகரமெனுந்திணிதோட்சிறுவனிந்திரசித்தென்பான்
பம்பிக்கானவிடமெழுந்தபரிசாமென்னவந்துதித்தா
னும்பர்க்கொருவன்றனைக்கவர்வானுற்றாரமராருறுமுலகில். (௪௦)

கோவிற்சிறந்தவிராவணன்போய்க்குறுகாமுன்னங்குழக்கொண்டு
தேவர்க்கொருவன்செருச்செய்துதீயோர்பலரைச்சாடுதலு
மேவிற்சிறந்தவிராவணியாங்கெதிர்ந்தாங்கவனைப்பொருதழித்துக்
காவிற்றிணிமாசுணக்கணையாற்பிணித்தான்கண்ணாயிரத்தோனை. (௪௧)

ஊரைச்சிதைத்தேபல்லோரையுருட்டியரமங்கையர்சிலரைத்
தேரிற்சிறைகொண்டிவர்மீண்டுசிறப்பாலிலங்கைநகர்சேர்ந்தார்
பாரைப்படைத்ததனிமுதல்வன்படர்ந்தேமுகமன்பலகூறிக்
காரைப்புரவியெனவூருங்கடவுட்சிறையைவிடுவித்தான். (௪௨)

பங்கேருகத்தோன்போயகலப்பத்துத்தலையான்மூவுலகுந்
தங்காவலிற்செய்தொழின்மதிபோற்றனிவெண்கவிகைத்திருநிழல்வாய்ச்
சிங்காதனத்தின்மிசையிருந்தான்றேவரெவருமவனாணை
யெங்கேபுகினும்வழுவிலராயிசைத்ததொழிற்செய்திருந்தாரே. (௪௩)

அவ்வாறன்பதிலக்கமெனுமாண்டுநீங்குமவ்வளவு
மிவ்வாறிருந்துநற்கருமத்திடையூறெழூக்கங்கொண்டிருப்பக்
கைவ்வாரணங்கணீர்துளையுங்கழுநீர்ச்சுனையாடகக்கிரிவாய்ச்
செவ்வேதவஞ்செய்ம்மாமுனிவர்திரண்டார்பிரமன்றிருமுன்னர். (௪௪)

வந்தபரிசேதெனமலரோன்வினவமுனிவர்வாய்மலர்ந்தார்
சிந்தாகுலஞ்செய்தருமகங்கடெய்வவணக்கமிலவாக்கி
முந்தாரமரர்மாதரையுஞ்சிறைசெய்தறத்தைமுறைகெடுத்தான்
மைந்தார்திண்டோளிருபதுடைவலியோனிலங்கைத்தசக்கிரீவன். (௪௫)

அவனாற்சாலமெலிந்தலசியையாநின்பொற்சரணடைந்தோங்
கவலாதவனதுயிரழித்துக்காப்பாயறத்தையெனமொழியத்
துவராரிதழ்சேர்கலைப்பாவைதோளுக்கிசைந்தமறைக்கிழவ
னவமாயிதனைக்கட்டுரைத்தான்ஞானமுனிவர்நலமெய்த. (௪௬)

முன்னேயிவ்வாறறிந்தொருசாரிவனைமுடிக்குமுறையுன்னிக்
கொன்னேதிருமாலயோத்திதனிற்குலவேந்தளிக்குமிராமனென
வின்னேபெயர்கொண்டுதித்தனன்மற்றிமையோர்நந்திதருஞ்சாபந்
தன்னேருணர்ந்தேவானரங்கடாமாயுதித்துவாழ்கின்றார். (௪௭)

வயங்குந்தனிமந்தரையென்னுமாதைப்பணித்தேனவளுலகிற்
றயங்குங்கூனுமுடனுறங்கித்தகைசேர்திறற்கேகயன்பாவை
முயங்குந்தாதியெனவிருந்தாண்முறைகூறிராமன்கடுங்கானத்
தியங்கும்படிமாதுடன்விடுமாறிறக்குஞ்சின்னாளினிலரக்கன். (௪௮)

வருத்தந்துறந்துவைகவெனமலரோன்றவத்தோர்தமக்குரைப்பக்
கருத்துமனமுங்களிகூர்ந்துகவலைநீங்கிவிடைகொண்டார்
திருத்துமலரோனுரைத்தபடிசெழுந்தார்மௌலித்தசவதன
னுருத்தேசனகிபொருட்டிறந்தானவ்வாறுரைப்பனுளங்கொண்மின். (௪௯)

என்றேயெடுத்தாங்குரைத்திடலுமிகல்வேலரசர்நெடுந்தோள்கள்
குன்றேபுரையவளர்ந்தோங்கக்குறிப்பார்தவத்தோர்க்கொருமுதல்வ
நன்றுமசுரனிவரிருந்தநனிவெங்காட்டினடைந்ததுவு
மென்றாட்சனகிதனைக்கண்டவாறுமெமக்குவிளம்பென்றார். (௫௰)

இராவணனுற்பவச்சருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள்-௪௭௯௰.

---

# இராமன்படையெழுச்சிச்சருக்கம்.

எடுத்துரைப்பனருண்முனிவனிகலரசர்போரேறெயிப்பான்முன்னர்
வடித்தடங்கண்வாகைதருமைந்தனுடன்பிறந்தனளோர்மாயைவல்ல
கொடித்தடங்கைச்சூர்ப்பனகியெனும்பெயராளெனும்றமைகுறித்தோமந்த
முடைக்கொண்மூநிகர்மேனிமுழைவாயாண்மூவுலகும்பயில்வாண்மாதோ. (௧)

அவளொருநாட்கடவுளர்தம்பெருந்தவத்தாற்றண்டகத்தினடைந்தேயிந்தத்
தவளநகைத்திருமாதுமாடவருந்தனியிருக்குந்தன்மைபாரா
நவமிதெனத்தன்மனத்திலவர்வனப்பையற்புதமாநயந்துநோக்கிக்
கவலைமிகுந்தெழிற்காமன்கணைக்கலசியரமகளிர்கவின்கொண்டுற்றாள். (௨)

கருணையெல்லாங்குடியிருந்தகார்மேனியிராமன்மலர்க்கண்முற்றேன்றி
பருணிதரென்றுணராமற்பற்பலவாந்தன்மாயைபயிற்றலாலே
சுருணைமயிர்தழைச்செவியும்புழைமூக்குங்கவைத்துருத்திதுயல்வதேய்க்கு
மிருணிலவுமிருமுலையுங்கொய்தெறிந்தான்சுமித்திரையாளீன்றமைந்தன். (௩)

அந்தவமையந்தனிலிமையோரடைந்தேயிலங்கைதனைவளைந்து
வந்தங்கெதிர்ந்தவாசுரரைவானிற்போக்கிமானகரஞ்
சிந்தாகுலமெய்திடச்சிதைத்துச்சிறைகொண்டரக்கர்தெரிவையரை
முந்தேயகன்றாரென்றுரைத்தான்முனைசேரிளைஞனிகழ்வெல்லாம். (௩௮)

கேட்டானெயிறுதின்றெழுந்துகெழுமித்தனதுவாகினிகள்
கூட்டாய்வரவிக்கணத்தென்றுகுறித்துத்தனித்தூதேவுதலுந்
தாட்டாமறையோன்வகுத்தவுயிரனைத்துமொருபாற்சார்ந்ததென
வூட்டாரரக்கிற்சிவப்பேறும்விழியாரொருங்குதிரண்டார்த்தார். (௩௯)

கும்பகருணன்றுயிலுணர்ந்தாங்கெழுந்தான்குலமால்வரைபோலச்
செம்பொற்சிகரமெனுந்திணிதோட்சிறுவனிந்திரசித்தென்பான்
பம்பிக்கானவிடமெழுந்தபரிசாமென்னவந்துதித்தா
னும்பர்க்கொருவன்றனைக்கவர்வானுற்றாரமராருறுமுலகில். (௪௦)

கோவிற்சிறந்தவிராவணன்போய்க்குறுகாமுன்னங்குழாக்கொண்டு
தேவர்க்கொருவன்செருச்செய்துதீயோர்பலரைச்சாடுதலு
மேவிற்சிறந்தவிராவணியாங்கெதிர்ந்தாங்கவனைப்பொருதழித்துக்
காவிற்றிணிமாசுணக்கணையாற்பிணித்தான்கண்ணுயிரத்தோனை. (௪௧)

ஊரைச்சிதைத்தேபல்லோரையுருட்டியரமங்கையர்சிலரைத்
தேரிற்சிறைகொண்டிவர்மீண்டுசிறப்பாலிலங்கைநகர்சேர்ந்தார்
பாரைப்படைத்ததனிமுதல்வன்படர்ந்தேமுகமன்பலகூறிக்
காரைப்புரவியெனவூருங்கடவுட்சிறையைவிடுவித்தான். (௪௨)

பங்கேருகத்தோன்போயகலப்பதத்துத்தலையான்மூவுலகுந்
தங்காவலிற்செய்தொழின்மதிபோற்றனிவெண்கவிகைத்திருநிழல்வாய்ச்
சிங்காதனத்தின்மிசையிருந்தான்றேவரெவருமவனுணை
யெங்கேபுகினும்வழுவிலராயிசைத்ததொழிற்செய்திருந்தாரே. (௪௩)

அவ்வாறன்பதிலக்கமெனுமாண்டுநீங்குமவ்வளவு
மிவ்வாறிருந்துநற்கருமத்திடையூறெழுக்கங்கொண்டிருப்பக்
கைவ்வாரணங்கணீர்துளையுங்கழுநீர்ச்சுனையாடகக்கிரிவாய்
செவ்வேதவஞ்செய்ம்மாமுனிவர்திரண்டார்பிரமன்றிருமுன்னர். (௪௪)

வந்தபரிசேதெனமலரோன்வினவமுனிவர்வாய்மலர்ந்தார்
சிந்தாகுலஞ்செய்தருமகங்கடெய்வவணக்கமிலவாக்கி
முந்தாரமரர்மாதரையுஞ்சிறைசெய்தறத்தைமுறைகெடுத்தான்
மைந்தார்திண்டோளிருபதுடைவலியோனிலங்கைத்தசக்கிரீவன். (௪௫)

அவனாற்சாலமெலிந்தலசியையாநின்பொற்சரணடைந்தோங்
கவலாதவனாருயிரழித்துக்காப்பாயறத்தையெனமொழியத்
துவராரிதழ்சேர்கலைப்பாவைதோளுக்கிசைந்தமறைக்கிழவ
னுவமாயிதனைக்கட்டுரைத்தான்ஞானமுனிவர்நலமெய்த. (௪௬)

முன்னேயிவ்வா றறிந்தொருசாரிவனைமுடிக்குமுறையுன்னிக்
கொன்னே திருமாலயோத்திதனிற்குலவேந்தளிக்குமிராமனென
வின்னேபெயர்கொண்டுதித்தனன்மற்றிமையோர்நந்திதருஞ்சாபந்
தன்னேருணர்ந்தேவானரங்கடாமாயுதித்துவாழ்கின்றார். (சஎ)

வயங்குந்தனிமந்தரையென்னுமாதைப்பணித்தேனவளுலகிற்
றயங்குங்கூனுமுடனாங்கித்தகைசேர்திறற்கேகயன்பாவை
முயங்குந்தாதியெனவிருந்தாண்முறைகூரிராமன்கடுங்கானத்
தியங்கும்படிமாதுடன்விடுமாறிறக்குஞ்சின்னாளினிலரக்கன். (சஅ)

வருத்தந்துறந்துவைகவெனமலரோன்றவத்தோர்தமக்குரைப்பக்
கருத்துமனமுங்களிகூர்ந்துகவலைநீங்கிவிடைகொண்டார்
திருத்துமலரோனுரைத்தபடிசெழுந்தார்மௌலித்தசவதன
னுருத்தேசனகிபொருட்டிறந்தானவ்வாறுரைப்பனுளங்கொண்மின். (சகூ)

என்றேயெடுத்தாங்குரைத்திடலுமிகல்வேலரசர்நெடுந்தோள்கள்
குன்றேபுரையவளர்ந்தோங்கக்குறிப்பார்தவத்தோர்க்கொருமுதல்வ
னன்றாமசுரனிவரிருந்தநனிவெங்காட்டினடைந்ததுவு
மென்றாட்சனகிதனைக்கண்டவாறுமெமக்குவிளம்பென்றார். (ரு०)

இராவணனுற்பவச்சருக்க முற்றிற்று.

ஆகூ செய்யுள்-சஎகூ०.

---

# இராமன்படையெழுச்சிச்சருக்கம்.

---

எடுத்துரைப்பனருண்முனிவனிகலரசர்போரேறெயிப்பான்முன்னர்
வடித்தடங்கண்வாகைதருமைந்தனுடன்பிறந்தனளோர்மாயைவல்ல
கொடித்தடங்கைச்சூர்ப்பனகியெனும்பெயராளெனுமுறமைகுறித்தோமந்த
முடைக்கொண்மூநிகர்மேனிமுழைவாயாண்மூவுலகும்பயில்வாண்மாதோ. (க)

அவளொருநாட்கடவுளர்தம்பெருந்தவத்தாற்றண்டகத்தினடைந்தேயிந்தத்
தவளநகைத்திருமாதுமாடவருந்தனியிருக்குந்தன்மைபாரா
நவமிதெனத்தன்மனத்திலவர்வனப்பையற்புதமாநயந்துநோக்கிக்
க்வலைமிகுந்தெழிற்காமன்கணைக்கலசியரமகளிர்கவின்கொண்டற்றாள். (உ)

கருணையெல்லாங்குடியிருந்தகார்மேனியிராமன்மலர்க்கண்முற்றேன்றி
பருணிதரென்றுணராமற்பற்பலவாந்தன்மாயைபயிற்றலாலே
சுருணைமயிர்தழைச்செவியும்புழைமூக்குங்கவைத்துருத்திதுயல்வதேய்க்கு
மிருணிலவுமிருமுலையுங்கொய்தெறிந்தான்சுமித்திரையாளீன்றமைந்தன். (ஙூ)

அங்கவர்சென் றருங்கரனுக்கறிவிப்பவவன்சினமூண்டரக்கரோடுஞ்
செங்கணனற்பொறியுகுந்ததியர்பதினுன்கெனுமாயிரந்தேரோரும்
துங்கவலித்திரிசிரத்தோன் றூடணனைமுதலோருஞ்சூழவேகிப்
பங்கயமாதுடனிருந்தபண்ணவனையெண்ணமறப்பாரிற்கண்டான். (௪)

ஆள்வலியுங்கரிவலியுமயவலியுந்தேர்வலியுமமரரஞ்சுந்
தோள்வலியுந்தவவலியுந்தோற்றமுறக்கருதரும்போர்தடுத்தபோதில்
வாள்வலிதோளிராகவனும்வாங்கியவிற்பகழிகளான்மாற்றிவிட்டா
னுள்வலியையுணராதாரொருகணத்திலுயிர்தொலைந்தார்நவில்வதென்னே. (௫)

கரன்முதலாம்போர்நிருதர்களத்தவியவல்லரக்கிகண்டுசீறி
யரனிருந்தவரைதாங்குமாற்றலுடையிராவணன்பாலலறிச்சென்றாள்
வரன்முறையாலவனுக்கியெனைமதியாதுனையிந்தவண்ணஞ்செய்தோர்
புரஞ்செற்றசிவனோவைந்தளவோனேமலரயனோபுகல்வாயென்றான். (௬)

அவ ரன்றுமகபதியேமுதலாயவானவருமன்றயோத்தி
நவமொன்றுதயரதன்றன்சுதரிருவரிராமனிலக்குமநாமத்தோன்
துவரொன்றுமிதழ்ச்சனகிப்பெயர்மல்குதோகையொடுந்துறவோர்கோலத்
தவரொன்றுதண்டகத்திற்சஞ்சரித்தார்யானொருநாட்சார்ந்துநோக்கி. (௭)

அலைமகளுமலைமகளுங்கலைமகளுஞ்சிரந்துளக்குமழகான்மிக்க
நிலமகடன்செயறேர்ந்தேயவனையுன்கைவயமாக்குநேயந்தாங்கி
சிலைமகளின்றருமைநடஞ்செய்தோளார்க்கெதிரடைந்தேன்சீறிவாளான்
முலைகளொருசெவிநாசிகொய்துன்பாற்செலவுய்த்தார்முனிவுமிக்கார். (௮)

அக்கணத்திற்கரனுடன்போயான்மொழியவவனடுத்தேயமர்செய்தாங்கு
மிக்கதிறற்றுணைவரொடும்விண்ணடைந்தானவரிருந்தார்வீரரேறே
புக்கதுனக்கறிவிப்பான்புகுந்தனனிங்குயிரோடும்போந்தேயாங்கு
மைக்குழலைக்கண் ணுற்றூற்றெறியுமெனவெடுத்துரைத்தாண்மாயைவல்லாள்.

பெண்ணரசங்கிருந்ததெனப்பேசுதலுமுனமழலிற்பிறந்தசீற்றந்
தன்னடையப்பெருங்காமத்தழலெழுந்துவீசுதலாற்றரியானுகி
நண்ணியவடமைக்கவர்வானஞ்சலிவணிருத்தியெனநங்கைக்கோதி
மண்ணிலவன்றனிபுகுந்துகோகன்னமானகர்வாய்மன்னினனே. (௰)

உக்கவலிமாரீசனெனுமரக்கனொருவனிராமன்கையம்பாற்
றக்கவலிகுறைந்துமுனந்தாடகையையுயிர்தொலைத்ததலைனுளஞ்சி
மிக்கதவம்பயின்றுற்றவிரகுணர்ந்தாங்கவனுழைபோய்மேவலோடுந்
திக்கயநேர்திண்டோளான்சென்றிறைஞ்சியிவண்வருதற்செப்பாயென்றான். ()

தயரதன்முன்றருமைந்தரிராமனிலக்குமனென்போர்சனகியோடும்
பயனுறத்தண்டகவனத்திற்பயில்கின்றாரெனவுணர்ந்தேன்பகரவொண்ணு
நயமொழிசேர்தோகைதனையான்கவர்வானடைந்தனனீநண்ணிமுன்ன
ரியலறவத்தேர்வேந்தர்பிரியும்வகைதனிமாயையியற்றவென்றான். (௰௧)

வே று.

சொல்லியவாய்மையாங்கவன்கேட்டுத் துணுக்குற்றே
வல்லைகொனீயேவாளமரம்மானிடர்முன்னர்
புல்லியமேனிக்காரணமாகப்புகல்கின்றாய்
நல்லியலன்றாலித்திறம்வெற்றிநலமாமோ. (௧௩)

உன்னைவயங்கொண்டோனைவயங்கொண்டொளிர்கின்றேன்
றன்னைவயங்கொண்டானெனிலாரேசமர்வெல்வோர்
பின்னைவயஞ்செய்தேகினுமாயையில்விண்ணோர்கட்
கன்னையெனுந்திருமாதவணின்வயமாவாளோ. (௧௪)

ஊருமுனக்குளசுற்றமும்வாழ்வுமுயிரோடும்
பேரும்வகைக்கிதுசிந்தைகுறித்தாய்பெரியோய்நீ
யாருமடற்கருமாயவனம்மானிடனையா
வாருமுளத்தினினைக்கலையென்றான்மாரீசன். (௧௫)

தகுதியுரைத்தானென்னுளமுன்னான்றலைபத்து
மிகுதியிரட்டித்தோள்களுமுள்ளோன்விழிசேந்தான்
புகுதியல்வெள்ளிவெற்பையெடுக்கும்புயமிந்தப்
பகுதியின்மண்ணிற்சிறியரைவெல்லும்படியின்றே. (௧௬)

அன்பதிலக்கமாண்டெனதாற்றற்கழிவின்றி
வன்பொடுகாத்தேன்மூவுலகெல்லாமாலாதிப்
பொன்புவிவானோராரெனைவென்றேபுகழ்பெற்றார்
கொன்புனைவேலாய்மானுடர்கொற்றங்கொள்வாரோ. (௧௭)

போரிடைவென்றப்பெண்ணையெடுத்தாற்பொலன்வெண்ணா
னேரிடைமாளுமென்பதுகொண்டேநினையெய்தி
யோரிடைமாயஞ்செய்கெனநின்றேனொருவாளி
பாரிடையுய்க்கிலாங்கவர்வாழும்பரிசுண்டோ. (௧௮)

அங்கினியேகாயென்னினுனைத்தான்யமனூரிற்
றங்குதல்செய்வேனிக்கணமென்றேதழலேபோற்
செங்கணினோக்கிச்சீறுதல்கண்டேதிரடோளான்
மங்குறுகாலமாமெனவுன்னிமனங்கொண்டான். (௧௯)

பின்னுமுரைப்பானுங்கையின்மாளிற்பிழைசூழு
மன்னுமிராமன்வாளியின்மாய்ந்தோர்மகியுய்ந்தோர்
கொன்னுனைவேலாயேகுவனென்றேகுறிக்கொண்டு
பொன்னெழின்மானாய்மாரீசனென்போன்போனானே. (௨௦)

வே று.

வடிவுயர்சனகியோடிருந்துமாதவப்
படியமரிராமன்வாழ்பாங்கரவ்வுழை
யடிபடுமணியுடலாகிமேவலுந்
துடிநிகரிடையினுடுன்னிநோக்கினாள். (௨௧)

பூரணமுலையினுள்பொருமியேந்தனீ
சீரணிநவ்வியைத்திறத்திற்பற்றியே
கூரணிவேலினாய்கொடுத்தியென்றனள்
காரணமுணர்கிலாக்கமலச்செல்வியே. (௨௨)

தம்பியையவளுறைகாப்பிற்றந்துநீ
எம்பொடுசிலையுமோரங்கைத்தாங்கியே
பைம்பொனின்மான்றனைப்பற்றமேவினா
னும்பருமுணர்ந்திடாவுரவுத்தோளினான். (௨௩)

சிக்கியதெனக்கரஞ்சேர்ந்துநீங்கியும்
புக்கியதிராமனைக்கொண்டுபோயதாற்
றிக்கினிலோசனையளவுதிண்சிலை
கைக்கொளும்பகழியாற்காய்ந்துளானரோ. (௨௪)

கலக்கறவிராமனோர்கணையிற்காதலு
மிலக்குமன்றன்பெயரெடுத்துக்கூவியே
நிலத்தின்மூன்றுருவமாய்வீழ்ந்துநீங்கலுஞ்
சொலத்தகாவாற்றலான்றுணுக்குற்றுன்னினான். (௨௫)

மாசிலாள்வேள்வியில்வந்தடுத்தமா
ரீசனேயிங்கிவனியற்றுமாயையா
லாசுளதென்றுணர்ந்தையன்மீண்டனன்
கூசியசனகியுங்கொழுந்தர்க்கோதுவாள். (௨௬)

அரக்கராலமரராலரசரேனையோர்
வரத்தினாலடர்க்கொணாவரதன்றோள்வலி
விரைக்கருங்குழலினாய்தாழ்வுமேவுமே
லுரைத்தவெம்பரிதிவிண்ணுலவுமேகொலாம். (௨௭)

வந்தமான்பின்றொடர்ந்தலசிமாயையென்
றுந்துமோர்கணைவிடுத்துயிரைநீக்கினா
னந்தமான்கூவியதாகுமாண்டகை
முந்தமீண்டடைந்தபின்மொழியக்கேண்மினோ. (௨௮)

தனிவிடுத்துன்னையான்சாரிற்றம்முனோன்
முனியுமிக்கடிகையின்முதல்வனெய்துவ
னனியுனக்கருந்துயரேதுக்கென்னலுங்
கனியதரத்தினாள்கனன்றுகூறுவாள். (௨௯)

பொருளொடுபோனவர்கூறைபூமிசை
யருகவேயிருந்தவர்க்கென்றுமாதரங்
கருதினையினியிரேன்காண்டிகட்டழற்
பருகுமாறென்னுடற்பரிவனிக்கணம். (௩௦)

என்றவள்சேறலுமேந்தலிவ்வுரை
நன்றுநன்றம்மவோநவில்வதேதினி
வென்றவரார்கொலாம்விதியையென்றவன்
கன்றியமனத்தனுய்க்கருதியோதுவான். (௩௧)

சொற்படியேந்தலைத்தொடர்வன்சூழலிற்
கற்புடையாயினியிருத்திகாரணன்
முற்படவகுத்ததேமுடிவென்றோதியே
பிற்படவிளவலும்பிரிந்துபோயினன். (௩௨)

கந்தமார்குழலியுந்தமியள்காட்டினிற்
சிந்தைசெய்திருந்திடுமமையந்தேறியே
முந்துநன்முனிவரர்படிவமுற்றியே
வந்தனனிராவணன்மாதைநோக்கினன். (௩௩)

அருந்தவனிவனெனவன்னையாங்கவ
னிருந்திடத்தவிசுதந்தினிமைகூறலுங்
கருந்தடங்கண்ணிநீகாட்டிற்றன்புழன்
றிருந்ததென்றமியளென்றெடுத்துக்கூறினன். (௩௪)

மாயவல்லரக்கனென்றுணர்வின்மங்கையு
நாயகன்செய்கைகணவிலுமாயிடை
தீயவன்றன்னுருத்தெரியக்காட்டியே
யாயவட்கோர்மொழியறையலாயினன். (௩௫)

வேறு.

முல்லைமுகைவெண்முறுவன்மொய்குழலுனக்கோ
கல்லதர்பயிற்புடையகானெனவிதிப்பான்
சொல்லுமலர்வேதியனுந்தோள்பெறுதவத்தோ
னல்லனிளமானிடனுமாத்திரவுகேண்மோ. (௩௬)

மூவுலகுமென்னுடையமொய்ம்பின்வலிகொண்டே
காவல்புரிமுச்சிகரநாட்டலைவனியானே
தேவர்தொழுமெந்தனுயர்செல்வமுனதேநீ
மேவுதியருட்செய்கெனவேயவனுரைத்தான். (௩௭)

கள்ளவுருவங்கமலைகண்டுதடுமாறி
யுள்ளமுநடுங்கியுரையாமொழியுரைத்தாய்
வள்ளலிவனெய்தினுயிர்மாய்வையதன்முன்னே
பொள்ளெனநடத்தியினியென்றுமனைபுக்காள். (௩௮)

அக்கணமதிற்சிலைவலாசுரன்விரைந்தே
புக்கவடனைத்திறல்புலப்படவெடுத்தே
மிக்கதனிவையமிசைவேகமதிலுய்த்தே
செக்கர்படுவான்வழிசெலுத்தினன்மணித்தேர். (௩௯)

அன்னவள்புரண்டலறுமார்வமுணர்குற்றே
பன்னியசடாயுவெதிர்வந்துபலகூறி
யுன்னுமுனரவ்விரதமொண்பொடியினென்றத்
தன்னிருபெருஞ்சிறகுதான்கொடுபடுத்தான். (சo)

வையமகலப்பரமன்வாள்கொடுவலத்தாற்
செய்யவனிருஞ்சிறைறதுணித்துயர்சினத்தீ
மெய்யடர்வுறப்புயமிசைக்கொடுபடர்ந்தான்
பொய்யுணர்வுடைக்கொடியபூபனலர்மாதை. (சக)

விஞ்சுமிருசெங்கையினும்விட்டணிகள்வீசி
யஞ்சியவளோலமிடுமார்வமுடனேபோய்
மஞ்சுலவுமிஞ்சிதிகழ்மானகர்புகுந்தே
வஞ்சியையசோகநிழல்வைத்துறையுள்புக்கான். (சஉ)

நிற்கவிதுமுன்செலுமிலக்குமனுநேடி
விற்கையொடிராமனெனுமீளியெதிரானன்
சொற்பிழைநிகழ்ந்தபடிசொல்லவவன்மாழ்கி
யற்புதமிதென்னவிரைந்தாசிரமமுற்றார். (சஙு)

வேறு.

தனதுகற்புடையதையலைக்காணன்றளர்ந்துடனெடியமூச்செறிந்து
வனிதையின்றுயராற்பூமிசைச்சாய்ந்தேமாழ்கலுமிலக்குமன்றேற்றிப்
புனிதனீவருந்தேலெவ்வுலகேனும்பொடிபடப்பொருதுமின்கவர்ந்தோ
னினிதுயிர்வீட்டியணங்குனக்களிப்பனிக்கணத்தருடரவென்றான். (சச)

இளையவன்புகலாற்றன்பமுள்ளடங்கியெழுந்ததுசீற்றவெஞ்செந்தீ
முளைபடுமுறுவல்விளக்கிமூவுலகுமுடியுநாள்வருமுருத்திரன்போல்
வளைவுறப்புருவமிருவிழிசேப்பமலர்முகம்வெயர்வெழவானோர்
விளைவெலாமுணர்ந்துமிருந்தனரன்றோவென்றனன்வேந்தர்கள்வேந்தன். ()

அறம்வழாமுறைறகொண்டொழுகலாலிதுவந்தடுத்ததுகணைகளுக்கிரையாய்
மறம்வழாதுலகமூன்றையுமுடித்தென்மனக்குறைதணிவனிக்கணத்தி
னிறம்வழாமேனியெம்பிநீயெனதுநெடுஞ்சிலைதருதியீண்டென்றான்
புறந்தராவாற்றலிலக்குமனொருவன்பொருட்டறங்கெடுப்பதோவென்றான். ()

மீளவும்புகல்வானணங்கினைக்கவர்ந்தவெய்யவன்குலத்தொடுமமரின்
மாளவென்றிடுதல்பொருணமக்கென்றுவரைந்தெடுத்துரைத்திடவிராமன்
முளதாமரையான்விதித்தவையார்க்கேதவறுமென்றுளந்தனிலுன்னி [றார்.
முளும்வெஞ்சினத்தைப்பொறையினன்மறைத்துமொய்குழற்றேடுவான்சென்
உருளுடைக்கொடித்தேர்சென்றவச்சுவட்டினூறுதிகண்டோடியநெறியிற்
றெருளுடைச்சடாயுவெனும்பெயர்த்தந்தைசிறைகளிற்றவனுறல்கண்டே
யருள்பெருவிழியாள்பொருட்டுயிர்துறந்தானுமெனவருகுசென்றெடுத்தார்
மருள்றக்கவர்ந்தோன்பெயர்சொலாமுன்னமற்றவன்வானுலகடைந்தான். ()

அன்னவன் றனக்காங்கிமைநல்விதிசெய்தருங்கடனொருங்குறநடாத்தி
மின்னனை தன்னைத்தென் றிசைநேடிவிறலினர்சார்ந்திடுநெறியிற்
றுன்னலனொருவன்கவந்தனுமத்தோன் றுணைக்கரமோசனைநீட்டி
மன்னுமாருயிர்கள்வாரிவாய்மடுப்பான்வளைத்தகைபுக்கினர்மாதோ. (௪௯)

தலையிலானிருசெங்கட்கடைபுரட்டித்தகுதியாம்பேழைவாய்திறந்து
மலைநிகர்கரங்கடனிற்படுமுயிர்கள்வயிறுதூர்த்திடும்பரிசுணர்ந்தே
நிலைவலாரிரண்டுகரத்தையுந்துணித்தார்நீங்கியாருயிர்விமானத்திற்
கலைகடேர்கடவுளுருவமாயெதிர்ந்தேகார்முகில்வண்ணனுக்குரைப்பான். (௫௦)

முன்னர்நாள்விச்சாதரனியானென்குமுகனுடைக்கடவுள்சூளுரையா
லின்னபுல் லுருவங்கொண்டிவணிருந்தேனென்னையுய்வித்தனைவாழி
மின்னனைதன்னைக்கவர்ந்தவனிலங்கைவேந்தனும்வேலையைநீந்தி
யன்னவன் றன்னைக்காதுதலெளிதன்றுங்கதற்குபாயநீர்கேண்மோ. (௫௧)

தென் றிசைச்சிலதுகாவதங்கடந்தாற்றிகழ்ந்திடும்பம்பையந்தெண்ணீர்
துன் றுமவ்விடத்தினோர்புரங்காணுந்துதிகொள்கிட்கிந்தையென் றுணர்வீர்
வன் றிறலுடையவானரக்குலத்தோர்மன்னனும்வாலியாங்கிருப்பன்
குன் றுயரிருதோட்சுக்கிரீவப்பேர்கொண்டவனுங்கவனிளையோன். (௫௨)

முன்னவன் றனக்குமாறுகொண்டிருடிமூகமென்றொருவரையிடத்தி
னன்னவனிருந்தான்வாயுவைத்தழுவியஞ்சனையுயிர்த்தருள்சிறுவன் [கு
பொன்னணிவரைத்தோண்மாருதியென்போன் புடையிருந்துழையனுய்விளங்
மன்னவரரசேநீயவரிருந்தமால்வரைப்பாங்கரின்மேவில். (௫௩)

அவருனைநண்பாயடைகுவரவர்பாலாரருள்செய்தவர்க்குதவி
கவினுறுவாலிதனைத்தொலைத்தரசுகனிட்டனுக்கீவையேலவனுங்
தவவலியுடையகடலினுமிகுத்தவானரத்தானையுந்தலைப்பட்
டெவரையுமுறுக்கியிலங்கையுமிசைகொண்டெய்துவரெனவுளங்கோடி. (௫௪)

ஆதலாலிதுவேயுறுதிநீவருந்தேலையவென் றிவையெலாமுரைத்து
மீதலம்புகுந்தான்விஞ்சையோனிப்பான்மீண்டிவர்பம்பையங்கரைபோய்ச்
சூதநற் றளிரையாம்பலைக்குமிழைச்சுரும்பினைக்குரும்பையைநோக்கிக்
காதலாற்சனகியவையவநினைந்தேகவலையுற் றிருந்தனன்கண்ணன். (௫௫)

மற் றிவனிருந்ததன்மைவானரர்கண்மாருதிக்குரைப்பவாங்கவன்வந்
துற்றதையுணர்ந்தேநண்புகொண்டிரவியுதவினோன் றன் னுழைக்கொடுபோய்ச்
சுற்றமுந்துணையுந்தோழனுமுயிருஞ்சுக்கிரீவற்குநீர்நுமக்கு
மற் றிவனென்னக்கையடையாக்கிவணங்கினன்வானரருடனே. (௫௬)

இருவரும்பிரியாநண்புகொண்டதற்பினிராமனுமெய்துமாறனைத்தும்
பொருளுறப்புகன்றானங்கதற்கிரவிபுதல்வனும்பற்பலமொழிந்து
வெருவியந்தரத்திலாசுரன்கொண்டுமேவுனாள்வீசியபணிகள்
கருதிமுன்வைத்தான்கண்டுளம்பதைப்பக்கலுழ்ந்தனன்கௌசலைகுமரன். ()

பரிதிதந்தருளுமாற்றலான்பகர்வான்பருவரலொழிதிநீயென்பால்
வெருவருதிண்டோள்வானரத்தானைவெள்ளமோரெழுபதுண்டதனி
லொருதனிக்குரங்கோடெவன்பொருமாற்றலுடையவனேனுங்கெயிலிலங்கை
நிருதனைமுடித்துன்காதலைமீட்டுநேர்குவன்யானெனமொழிந்தான். (௫௮)

ஐயனுமிருதோட்புளகெழவுனக்கிங்கடுத்ததேதுரைத்தியென்றியம்ப
வெய்யவன்குமரன்வாலிசெய்கொடுமைவிளம்பலுமவனுயிர்வீட்டிப்
பொய்யறவுனக்குத்திருமுடிகவிப்பன்போதிநீயவனுடன்பூசற்
செய்யுமாரென்னத்தெளிவிலானுகிச்சிரம்வளைத்தொருமொழிபுகன்றான். ()

வரையெனவானநிரைகெடநின்றமராமரமேழையுமுனது
விரைகணையொன்றாலுருவுமாறேவின்மெய்ப்படுமெனதுளமென்னத்
திரைபடுமுறக்கந்துறந்தவனகைத்துச்செம்மனீசேறியாங்கென்னத்
தரைமிசையுழையர்தம்முடனண்ணறனைக்கொடுசென்றவைதெரித்தான். ()

கண்டுகாகுத்தனோர்கணைதொடுத்துக்காழுயர்மராமரமேழு
மண்டலத்துருவியின்னுமேழேழுவரைகளையுருவுமாறுற்ற
துண்டெனவானேருரைத்திடக்கணத்திலுஞற்றினுனுவந்துசுக்கிரீவன்
விண்டதுந்துமிதன்னெலும்புமாமலைகால்விரலினலெறிந்திடவியந்தான். (௬௧)

ஆண்டகைநீயேவாலிநின்றாற்றற்கடக்கலனெனமதித்து
நீண்டவான்சிலையார்தனைக்கொடுநடந்துநிறீஇயொருசூழலிற்றான்போய்
மாண்டருவாலிதனைச்சமர்புரிவான்வருகெனவாங்கவன்சீறி
மூண்டெழுசினத்தீமுன்னெழுந்திரண்டுமொய்ம்பையுநோக்கியேநின்றான். ()

அப்பெருமமையந்தாரைவந்துரைப்பாளயோத்தியாடசரதன்றந்த
கைப்படுசிலைவலிராமனுமவன்றன்கனிட்டனுஞ்சீதையைப்பிரிந்து
வெப்பொடுநேடிப்பம்பையின்கரைவாய்மேவினரெனுமுரைகேட்டே
னிப்பொழுதிளையோனுன்னுடன்போர்வந்தேற்றதும்விளைவினுக்கிடனே. ()

ஆதலாலின்றுசமரினுக்கேகலறனலவாற்றலேபொருளென்
றோதநந்தீர்வலியோயித்தினமறுத்திங்கிருந்துசாரணர்களாற்றேறிக்
கோதறநாளைப்போதலேநீதியெனப்பலகுறித்திடக்கொதித்து
மாதினுக்குரைத்தானிலங்கையர்வேந்தைவாலுதிமயிருறப்பிணித்தோன். ()

மாற்றலன்றனதுதேவியைக்கவரவளைந்தவன்றனைவயங்கொண்டு
நாற்றிசைபுகழவனிதையைமீட்கநனிதிரடோள்வலியுடையோன்
றேற்றியிங்கிவனைத்துணையெனமகிழ்ந்தென்றனைப்புயவலிகள்கேட்டிருந்து
மேற்றெதிர்மலையவருவனேவரினுமென்புயவலிக்கிவனிலக்கோ. (௬௫)

பிறவியைக்கோறற்பிழையெனநாணிப்பெருஞ்சமர்தரும்பொழுதெல்லாந்
திறலழிந்தளவின்மீள்குவனினியித்தினஞ்சமர்க்கெய்தினனன்றே
யுறவிவன்றனக்காருதவிசெய்திடினுமுயிரினைப்பருகினலன்றி
நறவுயிர்க்கரியகுழலினய்மீளேனண்ணுதியகத்தெனநடந்தான். (௬௬)

பதியுரைகடவாத்தன்மையாண்மீண்டிற்பாற்புகக்கண்களாயிரத்தோன்
மதிதருமொருவனிணைப்புயங்கோட்டிவந்தினையவன்றனைவாரித்
துதிபெறவானிலெறிந்தனனவனுஞ்சுழன்றவனியிற்குதித்தெழுந்துக்
குதுமெனத்தனதுமுன்னவன்மார்பிற்கைகளாற்புடைத்தனன்கனன்று. (சுஎ)

இருவருமிவ்வாறருஞ்சமரியற்றவிராமனுமிளவலைநோக்கிப்
பொருமவரிருவர்வாலியிங்கெவனோபுங்கவம்விடுவதுவழக்கன்
றருளுறத்தேறியிசையெனவுரைத்தேயிருந்தனனுதபன்மதலை
வெருவியாங்கவன்கைப்பிழைத்துவந்திவரைவெறுத்தனன்வீரனுமுரைப்பான் (சுஅ)

தெரிந்திடாமுறையாற்றூழ்த்தனமினிநீசெல்லுதிவிரைந்தெனச்செழுந்தேன்
பரிந்திடவலங்கற்கந்தரத்தமைத்துப்பணித்திடப்பானுவின்குமரன்
விரைந்துபோய்வாலியுடன்சமர்மலையுவேளையிற்சாயகம்விடுத்தான்
றிரிந்தசெங்கதிருந்திசைமதகரியுந்தேவருந்துணுக்குறச்செம்மல். (சுகூ)

வேறு.

பவனவேகந்தலைவளைப்பபகழிவிரைந்துபண்ணவர்கோன்
கவினிலுதவுகான்முளைதன்கனகவரைநேர்திணிமார்பிற்
புவனிநடுங்கப்புகுந்துபுறம்போமாறின்றிநிலைப்படலு
மவசம்பயிலுமால்வரைபோல்வீழ்ந்தான்மண்ணிலணிவாலி. (எ0)

வீழ்ந்தகணத்தின்மறைந்திருந்துவெளியாங்கரியனாயிறெனத்
தாழ்ந்தகரத்தோன்றம்பியொடுஞ்சார்ந்தானருகில்வானரரும்
வாழ்ந்தவ்வுழியங்கதனும்மகன்மற்றுள்ளோர்பற்பலரு
மாழ்ந்ததுயரால்வந்தடைந்தாரடைந்தாடாரையமுதரற்றி. (எக)

பானுமகனுநிறைநீராற்பயன்கொள்கயத்துட்குளிர்ந்துறினுந்
தானங்கதன்மேற்கொதிப்பெய்துந்தன்மைமானக்கலுழ்ந்திருந்தான்
மோனமடைந்துள்ளுயிற்படங்கிக்கிடந்தவீரன்மெய்ம்பசைத்து
வானவறிவுசுரந்தெழுந்துமாலைநோக்கிப்புகல்கின்றான். (எஉ)

என்னேயென்னேயிரவிகுலத்தேந்தலியற்கையிருந்தபடி
பொன்னேயனையாளுடனறிவும்பொறையுமறமும்போயதுவோ
கொன்னேவாளாவெனைக்கணையாற்குலைத்தாய்மனுநூற்பிழைத்தாயாற்
றன்னேரில்லாயானுனக்குத்தருங்கைதவத்தைச்சாற்றுயே. (எங)

அயலாரொருவருனக்கிடுக்கணளித்தாலதற்கோர்குரக்கரசை
வியனுய்க்கோறல்விதியென்றுவேதமுனிவர்புகன்றாரோ
புயலேயனையாய்நின்னிரக்கம்பொய்த்ததெவனோபுகழொழித்து
மியலார்பாவம்பழிவசைகட்கிடனாய்மணிமார்பேற்றாயே. (எச)

எற்றுண்டரற்றிப்புரங்கிடந்தவிரவிசுதனைத்துணைக்கருதி
பற்றாதவனென்றுணராமற்பாழிலுகுத்தாயெனதாண்மை
மற்றுமிலங்கைநகர்வேந்தைவாலின்மயிரிற்பிணித்துலகஞ்
சுற்றிக்கொணர்ந்துமாதருளாற்றுரந்தபடிகேட்டுணராயோ. (எரு)

மாதைக்கவர்ந்தோனுங்கவனேலென்னேடொருசொல்வழங்குவையேன்
மீதிக்கணத்திலவ்விலங்கைவேரோடெடுத்துமற்றவனே
டோதைக்கடலாங்குழிகுப்புற்றுன்முன்னிடுவதொருபொருளோ
சூதைக்கருதிமறவிருந்துதொடுத்ததழகோசொல்லாயே. (எசு)

என்றுபலசொல்வழங்குதலுமிளையபெம்மான்புகல்கின்றா
னின்றுன்முன்னரமர்கருதினிளைவந்தடையுமவராற்ற
லென்றுமறைவிலிருந்துகணையெய்தோமிளையோன்மனைகவர்ந்தோன்
பொன்றத்தொலைத்தோன்றன்குலத்திற்புகழோவசையோபுகலாயே. (எஎ)

என்னப்புகலக்கருணைமுகத்திராமனிளையோன்றனையமைத்துப்
பன்னற்கரியதிறல்வாலிமகிழவொருசொற்பகர்கின்றான்
முன்னைப்பழியோவிதிச்செயலோமுடிந்ததிதுவாமுயர்வலியோ
யுன்னைப்போழ்ந்ததன்றெறன்றனுளத்தைப்போழ்ந்ததுனதுரைகள். (எஅ)

கேளாய்திரலோயக்கணையைமீட்டுன்னுயிருங்கிளர்வெய்த
நாளாலளிப்பனிளவனுடனன்புற்றிருத்தியீண்டென்னத்
தோளார்வலியோன்வடுச்சுமந்துசுழலாரெங்கள்குலத்தென்று
வாளார்கரத்தோன்றனக்குரைத்துமனத்திற்றெளிந்துபுகல்கின்றான். (எகூ)

மூவாமுதனீயாசுரரைமுருக்கவெடுத்தாயிவ்வுருவந்
தேவாநினதுகணையிலுயிர்தீர்தலெவர்க்குஞ்சேர்பான்மை
மேவாதுதித்தோரிறத்தல்கடனெடுநாளிருந்துவியப்பென்னே
நாவாலுரைத்தபுன்மைமொழிபொருத்துன்றிருத்தாணல்காயே. (அ௦)

கருதியிளையோன்றனக்குமுடிகவித்தங்கதனுக்கிளவரசாம்
பெருமைநல்கியிவர்செய்தபிழையும்பொறுத்தாண்டருள்கென்றே
பரிதிமகனையங்கதனைப்பருவிலவன்கையடையாக்கி
யருகிலுயிர்த்தேவிழுந்தரற்றுமணங்கைநோக்கிப்பகர்கின்றான். (அக)

முன்னைப்பிறப்பிற்பயிறவத்தான்முகில்மேனியன்வந்தெனக்குதவித்
தன்னையெனக்குத்தந்தென்னைத்தானுட்கொண்டான்றூர்குழலே
யென்னைப்பிரிவால்வருந்தலெனவிருகண்சொரியும்புனன்மாற்றி
மின்னைச்சிறுவன்கரத்தீந்துவீரன்றனக்குப்புகல்கின்றான். (அஉ)

ஐயாபரமபதத்திடைபோயமரும்படிநின்னருணல்கி
மெய்யார்கணையைவிலக்கவெனவீரைநிறத்தோன்மிகமகிழ்ந்து
கையாற்சரத்தைவாங்குதலுங்கனகநாட்டோர்மலர்வீசப்
பொய்யாருடலம்விடுத்தெவரும்புகுதற்கரியகதிகண்டான். (அங)

பரிதிமகனுமங்கதனும்பயில்வானரரும்பாவையுமா
யுருகியிரங்கிமனந்தேறியுஞற்றியீமவிதிமுடித்துக்
கருதுங்கடன்கண்மறைமுறையேகவின்செலுத்திக்கழித்தபினர்
பெருமானடியில்வந்திறைஞ்சிப்புகல்வர்ன்பேராயிரத்தோனே. (அச)

வாலிபணித்தமொழிப்படியேவருவானரநாயகனுகி
யேலுஞ்சிறுவனிளவரசாயிருத்துகென்றேயிரவிதரும்
பாலன்றனக்குமொழிந்திடவப்பரிசேநகரில்வானரர்கள்
மாலின்மகுடம்புனேந்தடியில்வணங்கவரியாதனத்தமர்ந்தான். (அ௫)

எண்ணற்கரியதோள்வலியோனெய்தியிராமன்றனேத்தொழுது
மண்ணிற்றிரியுங்கவிக்குலங்கள்வருமாறினித்தூதேவுதுமா
னண்ணிற்றினியகார்காலங்கழிந்தாலன்றிநலனெய்தா
தண்ணற்குளத்திலுள்ளபடியறையக்கடவதெனக்கூற. (அ௬)

மழைபோனீலமேனியனுமதுவேபொருளாமனம்வலித்து
விழைவான்மாரிவெளியாமேல்மேவுகென்றுவிடைதந்து
கழையார்சிலேத்தோளிளவலொடுங்கண்ணனெருமாலியவரையி
னிழைசேரிடையாடணேநினேந்தேயிரங்கிக்கழித்தானிருதிரண்டும். (அ௭)

வேறு.

பம்புகாரொலியுமாலிபாற்படுமொலியுந்தூய்நீ
ரம்புவிபுரளநின்றவார்வழுமடங்கிமேனி
வெப்புறப்பரிதிதோற்றியாரிருள்விடிந்தபின்னர்
தம்பியைநோக்கிச்சொல்வான்றயரதன்றவத்தால்வந்தோன். (அஅ)

மாரிநாளகலத்தாமும்வானரக்குழுவும்வந்து
சாருதுமென்னச்சாற்றித்தணந்தசுக்கிரீவனின்னுஞ்
சீருறப்படர்ந்தானல்லன்செம்மனீசேறியென்ன
மாருதமனேயவேகத்தொடுமவனகரில்வந்தான். (அ௯)

ஆங்கவரெதிர்வந்தெய்தியாண்டகைபுகன்றவெல்லாம்
பாங்குடனுணர்ந்துபானுமைந்தனும்பலருமெய்தி
யோங்கெழிலிராமன்பொற்றுடொழுதெழுந்தொருசார்வைகித்
தீங்கில்வானரங்களின்னுஞ்சேர்ந்திலேயெனத்தாழ்ந்துற்றே. (௯௦)

என்றருஞ்சுக்கிரீவனிசைத்திடுமளவிலாங்கோர்
குன்றெனவொளிர்நல்யாக்கைகுரைகழலனுமன்சொல்வான்
வென்றியோய்நமதுசேனேமேவுமுன்மின்னனுளேச்
சென்றுலகெங்குந்தேடித்தெளிவதேகருமமென்றான். (௯௧)

யாவருமதுவேயின்சொலெனவிசைந்தனுமனோடு
மேவுமங்கதனேத்தென்பால்விடுத்தனர்மீட்டுமுள்ளோர்
தாவிமுத்திசையுமோடியெங்கணுந்தையற்றேடி
பூவைமேனியன்பான்மீண்டுபுகன்றனன்காண்கிலாமை. (௯௨)

அனுமனங்கதனுமெண்ணிலரிக்குலத்தலேவரோடு
மினிதுறத்தென்பானேடியேகினரிருளின்மிக்கத்
தனியொருபிலங்கண்டாங்குச்சார்ந்தனர்தடவிக்காலால்
கனியுயர்நகரங்கண்டார்நவமணிமயமாயாங்கு. (௯௩)

விரிந்தசெஞ்சடையுமுண்டிவெறுப்பினுலுலர்ந்தமெய்யும்
பரிந்தநல்லுயிர்ப்புமாகிப்பாவையாங்கொருசார்வைகி
யருந்தவம்பயிலானின்றவன்புகண்டவளோவென்னத்
தெரிந்திடுமொழிராமன்றன்பெயர்செப்பிநின்றார். (கூச)

அங்கவளுயிர்ப்புநீட்டியாருயிர்பெற்றெழுந்தே
யிங்கிவர்வருதல்தேறியிந்திரனிட்டசாபம்
மங்கியதென்னக்கூறிவானவருலகஞ்சேர்ந்தாள்
துங்கநல்லறிவின்மிக்கோர்மீண்டுதன்சூழற்சென்றார். (கூரு)

ஊர்தொறும்பொழில்கடோறுவரைதொறுமோடிநேடிக்
கார்தொடுசிகரியோங்குமலையமுங்கண்டுநீங்கி
ஓர்தருதரங்கந்தோறுநவமணிசிந்தியார்க்கு
மேர்தருதெக்கணத்தினெழிற்கடன்மருங்கில்வந்தார். (கூசு)

மாலியவரைதொட்டிந்தமால்கடலளவுகாறு
மேலவார்குழலேநேடியெய்திஞேங்கண்டதின்று
னீலமேனியன்முன்பெய்திநிற்பதிற்சடாயுவைப்போ
லேலுமிவ்வுயிர்நீத்தாலுமெய்தலாங்கதியினென்றார். (கூஎ)

அவ்வுரையருகிற்றங்குசடாயுவின்முன்னோனை
செவ்வியசம்பாதிக்குச்செவிப்புலன்படலுநோக்கி
கைவ்வலியுடையீர்வந்தகருமமென்யாரைநீவிர்
மெய்வ்வலிசடாயுவெங்கேயிருந்தனன்விளம்பிரென்றான். (கூஅ)

மாருதிபுகல்வான்கேண்மோமன்னவர்திலதனை
சீருறுதயரதன்றன்செம்மல்சீராமனென்போன்
வாருறுகொங்கையோடுவனந்தனிற்பயிலுநாளிற்
சாருமோர்நிருதன்மாயைதனிற்கவர்ந்தனனில்லாளை. (கூகூ)

ஆங்கவர்க்குதவியாகிச்சடாயுவந்தமர்புரிந்து
பாங்குறமீட்கொணுதபண்பினுலுயிரையீந்தான்
வாங்குவிலிராமனெங்கண்மன்னெடுநண்பாயேவத்
தேங்கமழ்குழலேநேடிச்சேர்ந்தனந்தென்பாலென்றார். (க00)

அவ்வுரைகேட்டிரங்கியருந்துயர்க்கடலின்மூழ்கிச்
செவ்வியோனிளையோன்யானேமுன்னவனென்றுதேற்ற
வெவ்வலியநுமனேடங்கதனுமுள்ளுறவியந்து
தெவ்வடுதுயருமாற்றற்றெளிந்தவன்புகல்வதானுன். (க0க)

வந்தநீர்யாவரென்னவாலிசேய்பவனன்முன்னந்
தந்தருளனுமனேடங்கதனெனத்தம்போர்சாற்ற
சிந்தையுமகிழ்ந்துசொல்வான்றேவியைக்கவர்ந்தோன்பத்துக்
கந்தரமுடையோன்றன்னூர்கடல்கடந்தேகவேண்டும். (க0உ)

வல்லவர்வேலைதாண்டிமாநகர்புகுந்துநோக்கி
னல்லருங்குழலாடன்னைக்காணலாமருளாலென்று
நல்லனபுகன்றுபோனனயமுணர்ந்திவர்கடேறி
யொல்லையங்கதனையாதியாரையுமொருசார்வைத்து. (கoரு)

வாயுவின்மதலைதான்போய்வருவனென்றினிமைகூறி
நாயகன்பெயரைச்சிந்தைநழுவிடாதிருத்தியாங்கு
மேயதோர்விலங்கலேறிவேலையைக்குப்புற்றேயா
காயமேற்பரந்திலங்கைப்பெயர்நகர்கணத்திற்கண்டான். (கoச)

மாடமண்டபங்கள்கூடகோபுரமணியான்மேய்ந்த
பீடமாமறுகுசோலைகோபுரம்பிறழுந்தோறுங்
கோடியாதபர்களேபோற்குறிப்பருங்கிரணநல்க
வாடகவெயில்கள்சூழ்ந்தநகர்கண்டற்புதமடைந்தான். (கoரு)

பொய்கையங்கரைகடோறும்புதுமலர்ச்சோலைதோறு
மெய்கிளரரங்குதோறுமேடையினிடங்கடோறும்
நெய்கிளர்வேலான்றுஞ்சுமிடந்தொறுநேடிமாது
வைகியசெயலையந்தண்மால்வனம்வந்துபுக்கான். (கoசு)

இங்கிதுநிகழமுன்னரிராவணனென்போன்கற்பின்
மங்கையைக்கொணர்ந்தேயந்தவனத்திடையிருத்திக்காவ
லங்கிரண்டாயிரம்பேரரக்கியர்தமையும்வேறு
திங்கள்வாண்முகஞ்சேர்தூயதிரிசடைதனையும்வைத்தான். (கoஎ)

நாடொறுமிவர்செய்தீமைநஞ்சினைக்குணத்தான்மிக்க
வீடணன்றந்தபாவைமென்மொழியமுதான்மாற்றி
யாடவர்திலதரெய்தியருஞ்சிறைறதொலைப்பரென்னுங்
கேடிலாதரத்தாலாவிகிளிமொழிகொண்டிருந்தாள். (கoஅ)

துயின்றிலளுதகமேனுந்துய்த்திலள்கனியொன்றேனு
மயின்றிலளிருந்தபாங்காகன்றிலளாடைமுன்ன
மியன்றதேயன்றிவெஃகாளிரும்பசியுணவுங்காற்றுங்
குயின்றருமழையுமஞ்சுங்கோடையும்வீடாக்கொண்டாள். (கoகூ)

வடதிசைநோக்கலன்றிமற்றுளதிசைகணோக்காள்
கடல்புரைவிழிகணல்குங்கலுழியுமுயிர்ப்புமிக்கா
ளுடலுறுமரக்கிமார்கள்பலவிதத்துரப்பினுலு
மிடரிநல்லுரைசொற்றுலுமவர்முகமேறநோக்காள். (ககo)

இவ்வணமிருந்ததணேக்கியிலுடையாஞ்சனேயன்
மைவிழியிவளேசெங்கண்மாலருட்டேவியென்னச்
செவ்வியமனத்திலுன்னிநிலைமைதேர்ந்திடுவதாக
வவ்வனத்தொருபாரைமாமிசையருவத்துற்றான். (கக க)

வேறு.

முந்துநன்னிலவொளிரிராமுதலியாமத்திற்
கந்தவார்குழறன்பெருங்காதல்மெய்வருந்த
வந்துதோன்றினனிராவணன்மாதரெண்ணிறந்தோர்
சிந்தைபோற்பணிவிடைதரச்சீதையைக்கண்டான். (௧௧௨)

தவளவாணகையாயுனையாருயிர்தன்னிற்
கவினிரட்டியாதரத்தொடுங்கருதுவன்கருணை
நவமிதென்கொலோநின்வயின்காண்கிலனன்றோ
கவலையெய்தியான்காமனுன்மெலிவதுகலங்கி. (௧௧௩)

குலத்தில்வேதியன்மகன்மகன்கயிலையங்குவட்டை
வலத்திலேந்துதோள்வலியினனுயிரமறையு
நலத்திலோதியதெளிவினனுகர்வந்திறைஞ்சச்
செலுத்துமூவுலகாட்சியினுயுவிற்சிறந்தோன். (௧௧௪)

கோடிமாதருண்டெனைமுலைக்குவட்டினிற்றோய்வோர்
நேடிநின்னையான்கண்டவக்கணத்தவர்நேய
மோடிநீங்கியதுனக்கவரேவல்செய்துனுற்ற
நாடியென்னுளத்தவ்வகைபணிக்குவனலத்தால். (௧௧௫)

இந்திராணியுமேனையவானகமடவார்
வந்துனைத்தொழப்புரிகுவன்மற்றெனதுயிரு
முந்துசெல்வமுமொய்குழலுனக்குயானின்றே
தந்தனன்றனைக்கண்ணருட்செய்வதேதகுதி. (௧௧௬)

கறுத்தமாநுடன்கலவியேபொருளெனக்கருதி
மறுத்தனன்றலவவனினிவருவனோவாரான்
சிறுத்தமேனியரெய்தினுங்கணத்துயிர்தீர்வர்
நிறுத்தென்னுருயிரெனமுடிநிலனுறப்பணிந்தான். (௧௧௭)

அன்னையிங்கிவனறைந்ததும்பணிந்ததும்பொருள்செய்
துன்னினுளலளோர்சிறுதுரும்பினைநோக்கித்
தன்னதாருயிரொழிப்பதேதனதுளந்தாங்கி
முன்னர்நின்றவம்மூர்க்கனுக்கிவ்வகைமொழிவாள். (௧௧௮)

வலத்தயாயுவைமக்களையொக்கலைநினைந்தே
நிலத்திலாருளரெதிரெனநீதியைப்பிழைத்துக்
குலத்தின்மாசிலாக்கற்புடைக்கோதையானென்னைச்
சலத்திருஞ்சிறைவைத்தனையிற்றதுன்றலைகள். (௧௧௯)

பெற்றவாழ்வெலாமவத்தினேதவத்தினேபேசாய்
மற்றுமாமறையாயிரம்வல்லவனென்றாய்
குற்றமின்றியகற்புடைக்குலமடவாரை
நற்றுகென்றசொல்லுளகொலோநஞ்சினிற்கொடியோய். (௧௨௦)

உறுதிமிக்குளகற்புடையொண்டொடிமாதை
நெறிபிழைத்துநீநினைக்கினுநோவதொன்றுண்டோ
மறுவகற்றியமேலவர்மகத்தினிலுதவு
நறையவிக்குநாய்வேட்டதேயெய்துமோநவிலாய். (கஉக)

வையங்காவல்செய்யிராகவன்வனம்புகுந்திருப்ப
செய்யவேதியர்நின்கொடுந்தீமைகள்புகன்றார்
வெய்யன்றன்னையான்வீட்டுவனென்றருள்செய்தான்
கையனீயுமக்கருமமேமுற்றுமாகண்டாய். (கஉஉ)

உனதுசுற்றமுமிலங்கையுமைந்தருமொருவன்
றனதருங்கணையொன்றினுற்றரைபடுஞ்சரத்தா
னினதுபுன்றலைநிலந்தொறுமுருண்டிடக்கொடிக
ளினியகண்மலர்ப்பிறித்துணுமினிச்சிலநாளில். (கஉங)

மாயைசெய்தெனைக்கவர்ந்தனையாதலான்மன்னர்
தேயமெங்கணுந்தேடுவான்புகுந்தனர்தீர்ந்தார்
தீயபுன்றொழிற்பதகநின்சிரங்களேகொண்டா
காயமீதுணைவம்மனையெறிகுவர்கணையால். (கஉச)

என்றுபற்பலகூறலுமிராவணன்சீறி
வென்றிவாளுரீஇவீட்டுவானெழுந்தனன்மீட்டும்
பொன்றிற்றன்னுயிர்போமெனுமாசையாற்பொறைசெய்
தன்றரக்கியர்க்கம்பகங்காட்டியாண்டகன்றான். (கஉரு)

அரசுநீங்கத்தன்னுலையமெய்தலுமருகி
னிரைசெய்காவலாமரக்கியர்நெருப்பினுங்கனன்றே
யுரைசெய்வாருலகங்களோர்மூன்றினுக்கொருவன்
புரைசெய்துன்னையோர்பொருளெனமனத்திடைக்குறித்தான். (கஉசு)

உனதுநற்றவமோவலாலுன்னையீன்றெடுத்தோன்
றனதருந்தவப்பான்மையோசார்ந்ததென்றுணராய்
மனத்திரும்புபோல்வைத்துநீவைதனையன்றோ
நினதுசிற்றுடலிக்கணமுண்குதும்நெரித்தே. (கஉஎ)

பற்றுமென்றனர்பலர்பலர்பாசத்தின்மயிரை
சுற்றுமென்பவர்சிலர்சிலர்சூலத்தைநீட்டி
யெற்றுமென்பவர்சிலர்சிலரிவ்வகைதெழித்து
மற்றுமொப்பிலாட்டன்னையரக்கியர்வளைந்தார். (கஉஅ)

மாசிலாதவள்வல்லெயிற்றரக்கியர்தமக்குக்
கூசுவாளலள்கொல்லுமின்கொல்லுமினுங்க
ளீசனுணையென்றிருந்தனடுணிபினுலிவரு
மாசில்சீர்த்திரிசடைசொலாலகன்றனராலுத்தே. (கஉகூ)

பிறையெயிற்றணியரக்கியர்பிற்படப்பெண்மை
நிறையுடைத்திரிசடையொன்றுகூறுவாணின்றே
கறைசெய்வேற்கணுயஞ்சனீகாகுத்தன்செய்கை
மறைகுறித்தருளெந்தையாலுணர்ந்தனன்வாழி. (௧௩௦)

தையனின்றனைப்பிரிந்தபின்றம்பியைக்கண்டு
மையலோடுவந்தொருதனிச்சூழல்வாய்வள்ள
லெய்திநீயிலாவியற்கையாலணங்குழந்தெங்குஞ்
செய்யகோலினோர்தேடியேவருமொழித்திறலால். (௧௩௧)

வந்துதாக்கியசடாயுவைக்கண்டருள்வழங்கி
விந்தமன்னதோட்கவந்தனைவீட்டியேமீண்டு
சுந்தரஞ்செறிவாலியாருயிரினைத்தொலைத்து
முந்துபாற்கரன்மைந்தனைமுடிபுனைவித்தே. (௧௩௨)

நண்புகொண்டவன்றன்னொடுமாரிநாளகற்றி
வண்பெருந்திறல்வானரக்குழுவுடன்குழுமி
யெண்பெறுந்தலமெங்கணுந்தூதுவிட்டிருந்தார்
தண்பெறுங்குழனீயிருந்தருளிடந்தடவி. (௧௩௩)

என்றுரைத்தனனெந்தையிங்கிதற்கொருமுடிவு
நின்றதென்வயினவ்வுரைநேரிழைகேட்டி
குன்றமன்னதோட்கொற்றவன்வந்திவணெய்த
வின்றியானொருகனவுகண்டனனென்றுமிசைத்தாள். (௧௩௪)

அந்தவாசகங்கேட்டலுமாரமுதருந்துஞ்
சிந்தையாளரிற்சனகிதன்றிருவுளமுவப்ப
முந்துதாங்கியசலிப்புமாருயிரினைமுடிப்பான்
பந்தமேவருமெண்ணமும்பரிந்தவணிருந்தாள். (௧௩௫)

வேறு.

அனுமனுங்கிருந்திவையனைத்துந்தேறியே
வனிதைதன்கற்பினைவியந்துமற்றுள
புனிதவிஞ்சையிற்றுயிலரக்கர்பூவைய
ரினிதுறவியற்றினனெவருந்துஞ்சினர். (௧௩௬)

தனியொளிர்சானகிதன்முன்னக்கண
மினியவனிராமனுழங்களேத்தியே
அனுமனுந்தோன்றினனணங்குவந்துநீ
புனிதனோவரக்கனோபுகுந்ததேனென்றாள். (௧௩௭)

அண்ணலுமிறைஞ்சியேயரியவேந்தலாம்
யண்ணவன்றூதனியான்பாவைநின்றனை
மண்ணகமுழுவதுநாடிவானர
ரெண்ணறவேவினாரியானிங்கெய்தினேன். (௧௩௮)

என்றசொற்செவிபுகவிருகண்டாரைக
டுன்றிடநெடியமூச்செறிந்துதூதென
வென்றிவேலேந்தலுமிளையவீரனு
மின்றளவலியர்கொலெனவினவினுள். (கநக)

அம்மவோவலியரென்றநுமன்கூறலுஞ்
செம்மைசேர்மனத்தினுள்செயல்வினுவினு
ளிம்மையிலுன்றனைப்பிரிவுற்றேகியே
வெம்மைமான்வீட்டியேமீண்டவெல்லையில். (கச0)

இளையவனெய்திநின்னியற்கைகூறலுங்
களைகணுமிராமனுங்கவலையோடுவந்
துளைவுறுசூழலினுன்னைக்கண்டிலன்
விளைபடுதுயரினைவிளம்பவேண்டுமோ. (கசக)

அக்கணநின்றனைநேடியாங்கவர்
திக்கெலாமோடியஞ்சிறகழிந்துள
தக்கவான்சடாயுவைநோக்கித்தண்ணளி
மிக்கவன்கதிபுகவிடுத்துநீங்கியே. (கசஉ)

கவந்தனையிருங்கரந்தறித்துக்காமுறு
நிவந்தநீர்பம்பையங்கரையினீர்மையாய்
தவந்தருமுனிவரிற்சார்தனேக்கியா
னவந்தரத்திருவுளநண்ணித்தேறினேன். (கசங)

எங்குலநாயகனிரவிதந்தருள்
துங்கமார்தோள்வலிச்சுக்கிரீவனுக்
கிங்கிவர்வரவுரைத்திசைந்தநண்பராய்த்
தங்குவித்தனனெருமலையின்சாரல்வாய். (கசச)

மற்றநாள்வாலியாருயிரைமாற்றியே
கொற்றவனிவனெனக்குவவுத்தோளினுன்
வெற்றிசேர்சுக்கிரீவற்குவீறுற
முற்றுவித்தவ்வயின்முன்பன்மேவினுன். (கசரு)

ஒருவருக்குலகினுள்ளோர்களொப்பிலாப்
பெருவலிவாயினர்பிரளையங்களோ
டிருவருமரசனுமெய்துவாருணக்
கருதியானிருந்திடங்காணமேவினேன். (கசசு)

என்றிவன்கூறலுமிரங்கியானிது
துன்றுநற்றிரிசடைசொல்லக்கேட்டனன்
வென்றியோயென்னுடைமெலிவுந்துன்பமு
மின்றுநீதெரிந்தனையாதுசொல்வதே. (கசஎ)

வேண்டிலனென்றனையெனினும்வின்முனை
தூண்டுறுதோள்வலிதொலைவுறுவகை
மாண்டகைமீட்பதுவழக்கென்றேதுவா
யாண்டகைக்கென்றனளநுமன்கூறுவான். (௧௪௮)

பொய்யலநின்மிசையிராமன்போதுற
மையலான்மெலிவதுவகுத்துத்தீருமோ
வெய்யனைமுடித்துனைமீட்டலேந்தலுக்
கையமோபாரமோகாண்டியன்னைநீ. (௧௪௯)

இவ்விடமிருந்தனையென்றுதேர்கிலா
திவ்வரையளவுகாரிருந்துளாய்சிறை
தெவ்வடநாளையேசிலையிராமனு
மெவ்வழியெய்திடக்காண்டியென்றபின். (௧௫௦)

ஆழியுமிராமனன்றளித்துளானென்ன
வீழிவாயவள்கையில்விரைந்துநல்கலும்
வாழியென்றிருகையால்வாங்கித்தன்னுயிர்
சூழுயர்துயரெலாந்தொலையச்சூடினாள். (௧௫௧)

ஆண்டகைதனக்குநீயளித்தியென்றொரு
மாண்டகுமாமணிதந்துமைந்தனீ
தாண்டினையெவ்வணங்கடலைத்தந்தையார்
பூண்டநின்பெயரெதுபுகலென்றோதினாள். (௧௫௨)

மாருதந்தந்தவன்மாருதிப்பெயர்
சீருறவெய்தினேன்றேவர்நாயகன்
பேருடையிராமனெம்பிரானருட்செய
லாருமிங்கெனக்கெதிரறையவில்லையே. (௧௫௩)

என்றவன்கூறலுமேழைசிந்தையு
மொன்றியமேனியுமுருகிவாழ்த்தியே
வென்றியோயுன்னுயிர்வீட்டுங்காலையும்
பொன்றிடாதெனவருமருந்துபோலநீ. (௧௫௪)

மேவினையின்றுநீமீண்டோர்திங்களிற்
காவலர்தம்மைநீகொணர்திகாண்கிலே
னாவியைக்கற்றுவனையமுன்னலை
தாவுதோளாயெனச்சனகிசாற்றினாள். (௧௫௫)

காண்டிநீயாண்டகைக்கருத்தையென்றவன்
மாண்டகுதேவியைவழுத்தியேவிடை
யாண்டவுடரவெழுந்தனுமனந்தவூர்
நீண்டவாளெரிமடுத்தங்குநீங்கியே. (௧௫௬)

வனத்தொடுநிருதரைமற்றுளோர்களை
யினத்தொடும்வீட்டியேயிகல்கடந்தபின்
கனத்தின்மீண்டுவெரியுங்கடந்துகந்தமா
தனத்தின்மேற்பாய்ந்தனன்றவத்தின்மிக்குளான். (௧௫௭)

அவ்வரையிருந்தவங்கதனையாதியாஞ்
செவ்வியோர்தம்முடன்சேர்ந்துமீண்டுபோய்
கைவ்வருசிலைவலான்களிப்பக்கூறினா
னெவ்வுருச்சனகிகற்புடைமையோகையால். (௧௫௮)

கண்டதுமாழிநற்கரத்திலீந்ததுங்
கொண்டகற்புடைமையுங்குறித்தவாய்மையும்
பண்டையினிராவணன்பரிசுங்கூறியே
வண்டுநேர்குழறருமணியுமீந்தனன். (௧௫௯)

வேறு.

காகுத்தன்சிந்தைகளித்தேயிருதோளும்
வேகத்திறுமாந்துமெய்ப்புளகமாடினனாற்
சோகக்கடலுந்துயருந்தவிர்ந்திளையோன்
வாகைச்சிலையும்வரைத்தோளுநோக்கினனே. (௧௬௦)

ஆடினான்வெம்பருதிதந்தோனனுமனைப்போற்
சூடினாரங்கிருந்தோர்தோன்றலடித்தாமரையை
வீடினான்வெய்யவிறலரக்கனென்றிசைகள்
பாடினார்வானவரும்பைம்பொன்மலர்தூவி. (௧௬௧)

இன்னபலவுநிகழ்மிடையெண்டிசைவாய்
மன்னுதிறல்வானரர்கள்வாகினிவந்தெய்துதலுங்
கொன்னவிர்வேலிராமனுடனேனையருங்கோதகல
நன்னலமதாயிருந்துநாடினாரக்கணத்தில். (௧௬௨)

ஆலவிடமுமருளில்வடவைக்கனலுஞ்
சாலவெருவுந்தவவலிசேர்வானரர்கள்
கோலமுறநூறுகோடியர்கள்சூழ்ந்துவர
நீலனெனும்பெயரானேரடைந்துகைதொழுதான். (௧௬௩)

அமுதங்கடைந்தவரையாமென்னும்பேருடலார்
தமுதன்மையாரிரணசதகோடிவானரர்கள்
சிமுத்தெனச்சூழத்திறலாவந்தெய்தயிவண்
குமுதனெனும்பெயருடையான்கொற்றவர்க்குக்கைதொழுதான். ()

எம்பலுடனேயிலங்கையெங்கேயிராவணனை
நாம்பலர்போயாவிநலிதுமெனவேயுறுப
தாம்பொருவில்கோடியுளியங்களார்த்தெய்த
சாம்பவனும்வந்தடியிற்றாழ்ந்தான்றடைவரைபோல். (௧௬௫)

கவையன்கவையரக்கன்காலனையுமெண்ணாத
நவையின்மயிந்தனனிசேர் துமிந்தனொடு
புவிசேருங்கேசரியேயாதியாம்போர்த்தலைவர்
தவவெண்ணில்சேனையொடுஞ்சார்ந்தடியிற்றாழ்ந்தார்கள். (கசுசு)

மட்டுப்படாவாற்றல்வானரங்களுதர்பதி
னெட்டுப்படைத்தலைவரெய்தியிறைஞ்சுதலுஞ்
சிட்டர்க்கிறைவன்மகிழ்ந்துதிருக்கண்சாத்தி
யிட்டத்தவரோடிருந்தானிகல்கருதி. (கசுஎ)

சேருங்கவிக்குலங்கடென்றிசையிற்செல்கவெனப்
பேரும்படிக்குப்பெருமான்புகன்றிடலாற்
பாருநடுங்கவொருபத்தோசனையகல
நீரேழுநாள்காறுமிரவுபகலெய்தியதால். (கசுஅ)

தாசரதிகண்டுவந்துதன்றோளிணைவீங்கி
மாசகலவெம்பரிதிமைந்தன்முகம்நோக்கி
யோசையுளாய்நின்சேனைக்குண்டோவலகெனலும்
வீசுபுகழான்விளம்புவான்மேற்செயல்கள். (கசுகூ)

அம்புயனேமுன்னமளித்தனனிங்கிதனை
யிம்பரிசைவெள்ளமெழுபதெனக்கூறினான்
றும்பைவரிசிலையாய்தோற்றியபின்வீந்தறியார்
நம்பவிருத்திபலவென்றுநாட்டினான். (கஎ0)

ஆவதேயென்னமனங்கொண்டமர்வெல்வான்
போவதேயென்னவொருமித்துப்போர்த்தலைவர்
மேவவனுமனுடனங்கதனும்வேல்வேந்துங்
காவலருந்தென்றிசையிற்சென்றேகடல்கண்டார். (கஎக)

அரிச்சேனைதுன்னுமணிகத்தைச்சார்ந்துகடற்
றிரிச்சார்புநோக்கியினிச்செல்வகையேதென்றிருப்பப்
புரிக்காவலாளனிராவணன்றன்புன்செய்கை
தரிப்பானலனாகித்தம்பியிவர்பாற்சார்ந்தான். (கஎஉ)

வீடணனும்பேருடையோன்மேவிச்சரண்புகலு
மாடவர்கோனுதரித்தேயாசுரனைவீட்டியுனை
நாடுநிதிநாளும்வகைநல்குவேனென்றளித்தான்
கோடியமரர்குறுகிமலர்தூவிடவே. (கஎங)

ஆங்கவனுஞ்சாம்புவனையாதியருமங்கதனுந்
தீங்கிலனுமனொடுசெங்கதிரோன்றந்தவனும்
பாங்கரிலையோனுஞ்சூழப்பரந்தாமன்
தாங்கிவருணன்றனையேழ்நாள்சிந்தித்தான். (கஎச)

அன்னவனுங்கெய்தியலைகடலைவானரராற்
பன்னற்கருஞ்சேதுபந்தனநீசெய்வாயே
லுன்னிவரையென்னுரத்திற்றரிப்பனெனச்
சொன்னனவ்வாறுகடறார்த்தார்வரைகொணர்ந்தே. (களரு)

பத்தோசனையகலம்பான்மைநூறோசனையாம்
மெத்தேறுநீட்சிவிலங்கலாற்றார்த்தருவி
தத்துபுயவானரர்கள்தண்வரைகள்வேர்பறித்துக்
கைத்தலத்தில்வீசநளன்கார்க்கடலைப்பந்தித்தான். (களசு)

முற்றியதுசேதுவெனமொய்ம்பரசர்தானையொடும்
பற்றலன்வாழ்கின்றபதியணைந்துநாற்றிசையுஞ்
சுற்றிவளைந்துகதிர்சூழெழுபிலைவேர்பறித்து
வெற்றியொடுமார்த்திறுத்தார்மேற்செய்கைகூறுதுமால். (களஎ)

இராமன்படையெழுச்சிச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-சகசுஎ.

---

# இராவணசங்காரச்சருக்கம்.

---

தொலைவின்றியவிறலானுயர்தோளார்சிலைவலியி
னிலைகண்டுளசுகசாரணர்தசகந்தரனோர்போய்
மிலைதும்பையினடன்மாற்றலர்மேலோரவர்தம்மைக்
கொலைசெய்தொழிலரிதென்றனர்கொடியோனிதுபுகல்வான். (க)

நரியானதுதிரள்கூடியென்னகர்வந்துவளைந்தா
லரியோவெருவுறுமென்றவரணியாருயிர்வீட்டிக்
கிரிபோலொளிர்வடதிக்குயர்கெழுகோபுரநிலைமே
லெரிமாமணிமுடிசூடியிருந்தாரையெதிர்ந்தான். (உ)

தொல்லாண்மையினுயர்கௌசலைசுதனும்பலருடனே
வில்லோடுயர்மணிதங்குசுவேலாத்திரிமிசைப்போ
யல்லாருடலசுரேசனையருள்வீடணனுலே
யெல்லாமுணர்குற்றுங்குறுவிடைகண்டுசிறப்பால். (ங)

ஆதித்தனளித்தோனுயராகாயமிசைப்போய்ச்
சோதிச்சிகரியின்மீதுகுதித்தேயிருதோளான்
மோதித்தசவதனன்றனைமுடிமீதுயர்மணிகொண்
டாதிக்கெதிர்வந்தானவனுண்மைக்கெதிரெவரே. (ச)

மணிகுண்டலநிரைசிந்திவளைந்தேதலையசுர
னணிசிந்தையிழந்தேதனதவையின்புடைபுக்கான்
றுணிசிந்தையன்மறநூன்முறைநுதேவவிழைந்தே
திணிதோளுடைபுயவங்கதனுடனிங்கிதுசெப்பும். (ரு)

நீசென்றட்டனிருதேசன்முன்னின்றேமடவரலைத்
தேசொன்றுபுசிறைநீக்கிவணங்கித்திகழுதியோ
வாசென்றமர்செய்வானடைகுதியோவறைகென்றே
மாசின்றியுரைத்தொன்றுரைகொண்டெய்துவைவலியோய். (சு)

என்றானிறையவனக்கணமிருதாடொழுதேத்திச்
சென்றானடலசுரேசனையெய்தித்திசையுட்க
நின்றானிவனீயாரெனநெடியோன்விடுதூதன்
வன்றாள்வலிவாலிக்குயர்மகனங்கதனென்றான். (எ)

தூதாய்வருசெயலென்னெனவிவனின்றிதுசொன்னான்
பேதாயமர்புரிவாயெனில்வருவாயெதிர்பெண்மைக்
காதாரமெனும்பூவையைவிட்டையனடிக்கே
போதாய்சரணமதாச்செய்வலிபோதாதெனிலின்றே. (அ)

இச்சொற்களிரண்டுங்கணிசைத்தேனிதிலேது
னிச்சைத்திறமெனவோதினனிகலாசுரனையா
வச்சத்தினிருந்தோமமர்புரியுஞ்செயலறியோம்
நிச்சித்துரைசெய்தாய்மதிநின்போலினர்யாரே. (கூ)

ஒருவெங்கணைவிடுவேனெனிலுயர்மானிடர்படுவார்
செருவாருடன்மலைவோமெனமனனொன்றுதிகழ்வேன்
வெருவாதெனைவருமாறுனைவிடுத்தாரினிதன்றே
கருதாயமர்புரிகாலையினென்றானிசைகண்டான். (க0)

மறைநீக்கினுமுறைநீக்கினும்வருமானுடமங்கைச்
சிறைநீக்குவதிலையென்றிதுசெப்பாயெனவோதி
பொறைநீக்கியதொழிலானிதுபுகல்வானிவனுறுவாய்
குறைநீக்கியுனக்குந்தைதனரசீகுவனென்றான். (கக)

துணிவாலுயர்விறலோனிருதோள்கொட்டிநகைத்தே
தனிதேயரிகட்கோர்குரைதருணயரசுதவி
வினினீதருமாறுண்டரசெமையொப்பவர்க்கென்றான்
முனிவாயுயிர்கொள்ளும்படிமுனைவீரரையுய்த்தான். (கஉ)

வந்தாரொருசதமாயிரர்வலிமிக்குயர்தோளார்
முந்தாண்மையினவர்தம்மைமுடித்தேபலகூறிச்
சிந்தாகுலமில்லாதொருநொடிசெல்வதுமுன்போ
யெந்தாய்சரணெனவள்ளன்முன்னெய்திப்புகல்கின்றான். (கங)

தன்றுண்மைவலத்தானுயர்சரதந்தனைவிட்டா
னுன்றுண்மைகுறித்தானலனெனவுள்ளனவோத
வின்றென்றெலிகொண்டானுயர்விறன்மிக்குளவிளையோன்
பொன்றுடநினிலையாகியபுலவோர்மகிழ்வுற்றார். (௧௪)

வேறு.

தாபதவடிவங்கொண்டதயரதன்றந்தவள்ளற்
சீபதியாணையாலேவானரத்திரள்கள்சீறி
மாபதிபுகுவான்சென்றுமதிளழித்தகழிவிட்டே
சோபதன்மைகளைத்தோர்த்துட்டரைத்துரந்தகாலை. (௧௫)

மாடங்கண்மனைகண்மேடையுப்பரிமறியநூறி
வேடங்கள்பலவாக்காணும்வானரர்மிதித்துச்செல்லக்
கோடங்குமணிசேர்மௌலிக்குரைகழனிருதர்சீறி
வாடங்குசரத்தோடெய்திவதைத்தனரரியின்மாலை. (௧௬)

பிற்படாவாற்றல்வல்லோர்பெரிதுபோரியற்றலாலே
மற்கடவெள்ளமீண்டுவரதன்பாலடைதலோடுஞ்
சொற்படுசேனைநாதர்சுக்கிரீவப்பேர்கொண்டோ
ரற்புதரிருவரேனோராருமங்கழன்றெழுந்தார். (௧௭)

இத்தகைநிருதரோடியின்றவனுக்குரைப்பச்சீறி
மொய்த்தெழுமணித்தேரேறிமுனைவலியரக்கரோடுஞ்
சித்தெனுமைந்தனோடுஞ்சேனையங்கடலினோடு
மைத்தடங்கிரிபோற்றோன்றியிராவணன்வந்தடுத்தான். (௧௮)

இரதங்கள்கரிகள்வான்றேரிரண்டுநூறென்னும்வெள்ளஞ்
சரதமெய்யுணராத்தீயோர்தம்முடனெதிர்த்தகாலை
விரதங்கொண்டிருந்தவள்ளன்மிகமகிழ்ந்தரியின்சேனை
நிரதமால்கடல்போர்ச்சூழநேர்வந்துநின்றான்மன்னோ. (௧௯)

அடுத்ததுதேருமாவுமரக்கருமயமுமென்றே
விடுத்திலாவெம்போர்செய்தார்வானரர்விலங்கலேந்தி
தொடுத்திடுகணைகளெல்லாந்துகளுறக்கண்டேசோரி
மடுத்திடக்கடலில்வாரியெற்றினர்வானரத்தோர். (௨௦)

இருணிறமேனியோருமெழுமழுத்தண்டநாஞ்சி
லருணசக்கரமுலக்கையங்குசமணிவாள்சூலங்
குருநிறவயிரம்பாசங்கோதண்டமுதலாவுள்ள
தருணவெம்படைகள்கொண்டேதடிந்தார்மற்கடங்கடம்மை. (௨௧)

இருவகைச்சேனையிவ்வாறிருஞ்சமர்புரியும்போதிற்
றிருவிறற்கொருவனனசெம்மலுந்தீயோர்வேந்து
மொருமுகத்தமர்செய்துற்றாரும்பர்கோன்பகைவனோடு
கருதொழிலிளைபகானைகார்முகம்வணக்கினானே. (௨௨)

இரவிதன்சுதனும்விண்ணோர்க்கிடர்தருவிரூபாக்கப்பேர்
தரவருமவனும்வெம்போர்தந்தனரங்கதப்பேர்
விரவியகுமரனோர்சார்வீட்டினனிருநர்தம்மை
முரணில்வீடணனோடேற்றான்முதிர்சினப்பிரகத்தனென்போன். (௨௩)

இவ்வணமடுபோர்செய்யுமமையத்தினிராமனோடு
மெய்வ்வலிநிருதர்கோமான்விளைத்தபோர்பலிப்பெய்தாமற்
றெவ்வடுசிலையும்பாகுந்தேருந்தோள்வலியுஞ்சிந்தி
வெவ்வியனுனினோடுமீண்டுபோய்நகரிற்சார்ந்தான். (௨௪)

இளையவனுடன்போர்செய்தவிந்திரசித்துவென்போன்
வளைசிலைநிமிராவண்ணம்வாளிகளெண்ணில்சிந்தி
முளைபடுவரையும்பாருங்ககனமுமூடிமீண்டு
தளையவிழ்குழலார்மேவுந்தன்பெருங்கோயிற்சார்ந்தான். (௨௫)

வெருவருவலிமிக்குள்ளவீடணன்றன்னோடேற்ற
செருவலிப்பிரகத்தனென்போன்சினஞ்செறிந்தேமகூடப்
பெருவரையனையதண்டமொன்றினைப்பெட்பினுய்த்தான்
மருவுவீடணனோர்கையிற்பற்றினனமரர்வாழ்த்த. (௨௬)

அஞ்சனமேனியண்ணலடிநினைந்ததனைமீளு
நஞ்சினுங்கொடியான்மீதுவீசலுநைந்துசென்னி
துஞ்சினனசுரர்கோமான்றுணிவருமுயிரேபோல்வா
ரஞ்சிவென்கொடுத்துமீண்டாரழல்விழியரக்கராரும். (௨௭)

ஆசுரர்சேனைவாரமழிபுனலென்னவென்னிட்
டேசுறவிரியுங்காலத்திருவிழிசிவந்துசீறி
மாசுணநெளியவெய்திவலியதூமாக்கனென்போன்
வீசுவானரர்கடம்மைவீட்டினனிருகையாலும். (௨௮)

ஆலவெங்கனலேயென்னவந்திறற்காலனென்னச்
சூலவான்படையொன்றேந்தித்துரந்துயிர்பருகலாலே
வாலுயரரியின்றானைமதியிழந்தெஞ்சல்கண்டே
மாலுறுமாஞ்சனேயன்வாள்விழிசிவந்தெதிர்ந்தான். (௨௯)

அஞ்சனைச்சிறுவன்சீறியார்த்தமர்புரிவான்மேவ
வெஞ்சியகவிக்குலங்களிவனுடன்மீண்டுதோன்றி
வஞ்சகர்குலத்தைச்சாடிமால்வரைக்குலங்கள்கொண்டு
விஞ்சினரிருவராங்குவிளைத்தனர்வெருவில்வெம்போர். (௩௦)

மால்வரைக்குலங்களுட்கமற்பொருதவனைப்பற்றிக்
கால்வலிப்புதல்வன்றானோர்கரங்கொடுபுடைத்தான்மார்பின்
மேல்வலிச்செயலுஞ்சிந்திவினையமுமறந்துவீழ்ந்தான்
வால்வலிக்கவிகள்வாயுமதலையைப்பழிச்சிற்றாலோ. (௩௧)

துஞ்சினன்றாமக்கண்ணனென்ன லுங்கொலைவிலாத
வஞ்சகர்வெருவிமீண்டுமாநகர்புகுந்துவேந்தன்
விஞ்சுபேரவையினுள்ளவாறெலாம்விளம்பக்கேட்டே
சஞ்சலச்சலதிமூழ்கியிருகணீர்ததும்பச்சொல்வான். (௩௨)

ஆற்றல்சால்குரக்கின்சேனைவாய்மடுத்தரைக்கணத்தின்
மாற்றிடுமியற்கையுள்ளோன்மறலியையாவிதீர்க்குங்
கூற்றினையனையவெம்பிகும்பகன்னப்பேரோனை
யேற்றுபுன்றுயிலைமாற்றிக்கொணர்குவீர்கணத்திலென்றான். (௩௩)

வம்பவிழலங்கன்மார்பன்பணித்திடவலியின்மிக்கோர்
செம்பொன்மால்வரையையொக்குங்கதைகொடுசென்றுமோதி
கும்பகன்னப்பேர்கொண்டோய்கூற்றுவனழைத்தான்வாளா
விம்பரிற்றுயில்வதென்னேயெழுகெனத்தெழித்தார்மாதோ. (௩௪)

பேரிகையொலியுஞ்சிங்காரதமும்பேசுமார்ப்புந்
தூரியம்பலபல்கோடிதுவைத்தபேரொலியுஞ்சென்றே
வீரியமுடையான்கன்னமேவலுமுடலசைத்தே
தாரியமொன்றுந்தேறான்கண்விழித்தெழுந்தான்மாதோ. (௩௫)

வேறு.

கும்பகன்னனுங்கொடியதானவன்
செம்பினுங்கடுஞ்சேந்தகண்ணனாய்
வெம்பிமுன்னவனவையின்மேவினன்
கம்பமால்வரைகால்வந்தெய்தல்போல். (௩௬)

வணங்கிநின்றனனவனுமார்பிறோ
டிணங்கியேதழீஇயிதனைக்கூறுவான்
கணங்கொண்மானிடர்கவியின்வெள்ளமோ
டுணங்கவெய்தினருயர்விலாண்மையார். (௩௭)

தூமவரக்கனுந்துயல்பிரகத்தனு
நாமமோங்குறுமெண்ணிறையகர்
சேமமின்றியேதீர்ந்துளாருயிர்
நீமலைத்தலால்வாகைநேருமே. (௩௮)

ஐயநீவிரைந்தரியின்சேனையும்
வையமானிடர்தமையுவாய்மடுத்
தெய்துவாயெனவேயமீண்டிவன்
மையில்சூலத்தைவலத்திலேந்தினன். (௩௯)

தன்னையொத்ததோட்டானைசூழ்வர
மின்னுமாலமும்வெருவத்தோன்றினன்
பன்னுமாறெறுபகுதிவானரர்
முன்னர்நின்றிலார்முனைகெட்டோடினர். (௪௦)

நீலனங்கதன்முதலினோர்நெடுங்
காலனேவலாற்கடவுண்மால்வரை
சூலமேந்தியேதோன்றிற்றேவெனச்
சாலவாளமர்தாக்கினீங்கினர். (௪௧)

அஞ்சனேயனுமார்த்தெதிர்ந்தவன்
றுஞ்சுமாறொருவரைசுமந்துவர்
தஞ்சலின்றியேவிசவாகமேற்
பஞ்சுபோற்பொடிபட்டழிந்ததே. (௪௨)

கண்டுமாருதிகனக்கவற்புதங்
கொண்டிராகவன்கொடுமரத்தினல்
விண்டுதன்னுயிர்விளியுமாறலான்
மண்டுமெம்மனோர்வலிக்குத்தாழ்க்குமோ. (௪௩)

என்றுகூறியேமீளவேந்தலாங்
குன்றுநேர்புயக்குமரன்பானுவி
னன்றுசிறிவந்தமர்செய்காலையிற்
சென்றுபன்னினன்செங்கைநீட்டியே. (௪௪)

கும்பகன்னனுங்கொடியன்வாலிதன்
றம்பிதன்னையேபற்றித்தாழ்வறச்
செம்பொனினிஞ்சிசூழ்நகரிசேருவா
னிம்பர்மீண்டுளானெவருமுட்கவே. (௪௫)

பொன்னின்மால்வரைபுரையிலக்கும
னன்னதன்மைகண்டாசுகங்ளாற்
சின்னமாக்கினன்றீயனெற்றியிற்
றுன்னலானடல்தொலைந்தயர்ந்துளான். (௪௬)

அக்கணத்தின்முன்னரிகணாயகன்
றிக்கயத்தைநேர்தீயனைப்புடைத்
துக்கமீண்டனனும்பரியாவரு
மிக்கிராமனுமேம்பன்மேவவே. (௪௭)

நிருதர்நாயகனிளவனின்றுணர்ந்
தொருதண்சூலமோடோங்கிமீளவுங்
கருதிலக்குமன்மீதுகாழ்கிளர்
செருவினைத்தனன்சினமொடொப்பவே. (௪௮)

வேறு.

எற்றினன்சிலர்தமையெறிந்துபாசத்திற்
சுற்றினன்சிலர்தமைதுரந்துகைகளாற்
பற்றினன்சிலர்தமைபாரிற்றேய்த்தமர்
முற்றினன்வானரமுதல்வர்தம்மையே. (௪௯)

கறுத்தமெய்யுடனிவன்களத்தைச்சூழலும்
பொறுத்திடலரிதெனப்புயங்கநாயகன்
வெறுத்தனன்கமலனையிளையவீரனுங்
குறித்திலன்வியந்துயிர்கோறல்செய்வதே. (௫௦)

அண்டருமுனிவருமரியின்றுணையு
மெண்டிசையிறைவருமேங்கிநீங்குதல்
கண்டனன்கவுசலைக்குமரன்கைச்சிலை
கொண்டெதிர்தோன்றினான்குவவுத்தோளினான். (௫௧)

மாற்றலனிளவலும்வலியதன்சிலை
வீற்றொருவரையெனவிரைவினேந்தியே
நாற்றிசைப்பதைப்புறக்கணைகனல்கலு
மாற்றலானவன்சிலையதனைநீக்கினான். (௫௨)

விண்டவான்சிலையினையெறிந்துமீட்டொரு
தண்டினையேவலுந்தடிந்திராகவன்
கொண்டல்போலார்த்தனன்கொடியதானவன்
பண்டையசூலமும்பற்றிவீசினான். (௫௩)

ஆரியன்கணைகளானமர்செய்முத்தலைச்
சீரியசூலமுஞ்சிந்திவீழலும்
வீரியனாங்கொருவெற்பெடுத்துமீண்
டேருறவீசினானமரரஞ்சவே. (௫௪)

அண்ணலுஞ்சரமிரண்டதனைநல்கியே
திண்ணயவரையுடன்செங்கரங்களுங்
கண்ணெனவட்டனன்றுரந்துங்கால்களால்
வண்ணவானரருயிர்மாற்றினானரோ. (௫௫)

பின்னருங்கணைகளாற்பெரியகால்களை
யன்னிலைதுணித்தனனரக்கனக்கண
மன்னியபூமிசைவீழ்ந்துவானரர்
துன்னுபுகரியெனத்தொழிப்பதாயினார். (௫௬)

நாவினாலொருவனைவிளித்துநம்பிமேற்
சார்வுறவேவலுந்தலைதுளக்கியே
தேவகாரியபரன்சிரத்தைவேறுசெய்
தாவியையகற்றினானமரர்வாழ்த்தினார். (௫௭)

மாண்டனனின்னுடையிளவன்மானுடன்
றாண்டியகணைகளாலென்றுதூதர்போ
யாண்டகைக்கோதலுமரக்கனக்கண
மீண்டியதுயரெவரியம்பற்பாலரே. (௫௮)

அத்தகைதேர்ந்தவனனுகியிந்திர
சித்தெனுமுதன்மகன்றெளிதியிக்கணக்
கொத்துடைமனிதரைக்கொற்றங்கொண்டபின்
புத்திரனுனக்கெனப்புகன்றுபோயினன். (ருகூ)

ஆண்டதன்முன்னரேயமர்வெல்வோமென
மாண்டகுமிராவணன்மைந்தரெண்ணிலோர்
தூண்டுதேர்மீதுறத்தோற்றிமாய்ந்தனர்
பூண்டவெங்கனற்புகுபூளைபோலவே. (சுo)

வரனுடைதூடணனனுசர்வஞ்சநெஞ்
சுரனுடைவச்சிரவேகனேதரும்
புரவிதேர்க்கரியொடும்போர்செய்வான்புகுந்
திரவிசேய்படைஞராலெஞ்சித்துஞ்சினர். (சுக)

அப்பெருமியற்கைகளனைத்துங்கேட்டெழுந்
தொப்பிலாவிறலுடையுரவுத்தோளினன்
கைப்படுநால்வகைப்படையுங்கைதொழ
வெப்பொடுகொடுஞ்சமர்க்களத்தின்மேவினன். (சுஉ)

அங்கதனனுமனையாதிவீரர்கள்
மங்குலிற்றிரண்டொருவரையைநேர்தரு
துங்கநற்றேர்மிசைதோற்றுமீளியை
தங்களிலடுத்தனர்சமரமுற்றவே. (சுங)

வேறு.

பொருவிலசுரனுதவுகுமரனிவரைவினவுபொருள்செயா
னிருவர்மனிதரவரிலிளைஞனிகல்செய்வலியனெனிலெதிர்
வருகவெனவுமிளயபெருமன்மகிழ்வுதழையவணுகினன்
வெருவில்கரியையவரவுகருதுவிருகபதிதனியல்புபோல். (சுச)

சுரரும்வெருவுநிருதன்விழிகள்சுழலவழல்கள்பொழிகொடுஞ்
சரமுன்விடவுமிவனுமடல்கொடனுவினுதவுகணைகளான்
விரவுபுவனமுழுதுமறையவிறல்செய்பொழுதினமரரிந்
திரனுமெவருமரியவிருவர்திறல்கள்புகலவமர்செய்தார். (சுரு)

இரதமவனுநிலனிலிவனுமெதிர்கொள்சமரினிசைவிலா
வரிசைகருதியமரரிறைவன்மதலைம்தலையருகடைந்
துரகமனையவலிகொணிருபவுறக்கவெனதுபுயமிசை
நிருதனவனைவிறல்கொள்கருமநிறையுமெனவுமணுகினன். (சுசு)

உதையவரையின்மிசைநின்றுளிருமொருநல்லிரவிபுரையவே
சிதைவிளிளவலுதவுபகழிதிமிரமனையவசுரன்மெய்
புதையவிவனுமலசியரிதன்புதல்வனுதவுமகன்மிசைக்
கதையொன்றெறியவதனையிளவல்கடுகிமுரிவுபுரியவே. (சுஎ)

வெருவவமரரகிலமிரியவிறல்விலதிபரிருவருஞ்
செருவின்முனையினிகலியிகல்செய்திறலையெவர்கொல்புகலுவோர்
பொருவிலரசர்திரள்கள்கரிகள்புரவியிரதமுடனெலாஞ்
சருகுகனலினனையபடியதமிகொடநுசனுணர்வுற. (சுஅ)

தனதுபுரவியிரதமவனிதனிமைநிறுவியொருவனு
யினிதுசிலையுமமர்செய்கணைகளிசைகொள்வனவுமொருகைகொண்
டனகமுனிவரமரரிரவியனையர்வெருவநிருதர்கோன்
மனதுநிகருமகனுமுயரமருவுமுகிலின்மறையவே. (சுகூ)

வேறு.

வாகையஞ்சிலைநிருதன்கோன்மகன்மறைந்திடலுஞ்
சோகமெய்திவீடணனிதுகூறுவான்றூயோர்க்
கேகுமாற்றலனாற்றலனென்செயுமாறே
வாகவந்தணந்தானெனவவனிலையறைந்தான். (எ0)

கேட்டிலக்குவனன்னவாறுமெனிற்கிளர
மீட்டுமங்கவன்றன்னுயிர்வீட்டுவனினியென்
றீட்டுஞ்சாயகமேந்திநின்றெழிலிமண்டலத்தை
வாட்டந்தீர்வுறநோக்கினான்மாற்றலனுணர்ந்தே. (எக)

விரைவிலம்புயன்வான்கணைவிடுத்தனன்கணத்திற்
றரையில்வைகியதாமரைக்கண்ணரோடிருந்து
குரைசெய்வானரர்தமையெலாங்கூர்ங்கணையனந்த
முரையின்முன்னர்போயுருவியதுடன்றுறுமுருத்தே. (எஉ)

அனையபண்பினுலியாவருந்தடைப்படவரக்கன்
றனையன்மீட்டுமோர்மாசுணத்தனிக்கணையேவி
வினையமற்றவர்தமையெலாமெய்யுறப்பிணித்தே
முனையின்மிக்குயர்தந்தைபாலடைந்தனன்முடித்தே. (எங)

கண்டுவீடணன்கரங்குலைத்தனுமனைக்களைதீர்த்
தண்டர்போற்றியவிரவிசேய்சாம்பவனுதி
விண்டிடாவுயிர்த்துணைவரைவிரைந்துடனேடிக்
கொண்டிராகவனிருந்திடங்குறுகினனன்றே. (எச)

சுற்றும்வாசுகிபிணித்தமந்தரமெனத்தோன்ற
லுற்றசெய்கையுமொன்னலன்வான்கணையுருவி
முற்றுமேனிபுண்பட்டதுமுறைமுறைநோக்கி
யற்றிதாமெனுமில்க்குமன்செயலையுமறிந்தார். (எரு)

இரவிதந்தவன்சிறுநகையெய்தியேயிமையோர்
பரவுசல்லியகரணியாற்பட்டபுண்மாற்றி
விரவுகின்றசஞ்சீவினியாலுயிர்மீட்டான்
றிரமுலாவியவிருவருஞ்சிறப்புடனெழுந்தார். (எசு)

மற்றும்வானரர்குழுவெலாமுய்ந்திடமருந்தை
பற்றிநாற்றிசைப்பயில்வுறப்பலருமாங்குயிர்வந்
துற்றுணர்ந்தனருரகபந்தத்தினைநீக்கக்
கற்றிலன்பெருந்தேர்மிசையெழுங்கதிர்க்காளை. (எஎ)

அக்கணத்தினில்வீடணனம்புயன்கணையாற்
றெுக்கநாகபாசத்தையுந்துகளுறச்செய்தான்
மிக்கதண்பனிதொலைத்தெழுவிபாகரனென்னத்
திக்கெலாம்புகழிராமனுஞ்சேனையுந்திகழ்ந்தார். (எஅ)

ஆங்குவானரரார்த்தெழுந்தணிநகர்புகுந்து
பாங்கில்வைகியேநிருதரைப்படுப்பதுதெரிந்தே
வாங்குவில்லினன்மைந்தனும்வரன்முறையுணர்ந்து
நீங்கினனகர்நிகும்பலைவேள்வியைநிரப்ப. (எகூ)

அந்தவாசகங்கேட்டருள்வீடணனறையச்
சுந்தரந்திகழ்சுமித்திரைநந்தனன்சீறி
முந்துதானையோடேகியங்கவன்றனைமுடிப்பான்
வந்துவேள்வியைமாற்றிவெம்போர்மலைந்தனனே. (அ௦)

காளமொப்பவன்வளர்த்திடுங்கடுங்கனலொழித்து
மூளும்வெப்பொடுதேர்மிசைமுன்படர்ந்தார்த்தே
வேளையொப்பவன்றன்மிசைவிரைந்துவில்வளைத்தா
னுளியைத்தொடர்ந்தமர்பொருமதக்கயமனையான். (அக)

உம்பர்செய்திடுபெருந்தவமொத்துளவிராமன்
றம்பிதன்முகனேக்கியேதானிதுபகர்ந்தா
னிம்பர்நின்னுயிர்க்கிறுதிகண்டிராமனையுனக்குத்
தம்பியாக்குவன்காண்டியென்றன்வலமென்றான். (அஉ)

அடுத்தமாற்றலன்றனக்கிவனெதிருரையறைந்தான்
படுத்துன்னுருயிரிராவணன்மைந்தனிற்பயில
மடுத்துமீளவுமவனுயிர்மறலிபாலளித்தே
தொடுத்தவீடணன்கடன்செயத்தருகுவன்றுணிதி. (அங)

என்றுகூறலுமெரியெழுஞ்சினத்தினனாகி
வென்றிமாலையான்மாரிபோற்பல்கணைவிடுப்பக்
குன்றமன்னவங்கதன்மிசைகோவிளங்குமர
னின்றுதன்கணைநேர்ந்தவன்கணையெலாநீக்கி. (அச)

வாகைமிக்குயர்தேரையும்வரிசிலைவரையும்
பாகுமெய்ப்படுகவசமுந்துவசமும்பலவுஞ்
சேகரப்படுகணைகளாற்றுகளுறச்செய்தான்
வேகமிக்குயர்நெடுஞ்சுடர்ப்பிறங்கடைவிபுதன். (அரு)

அனைய தன்மையாலிராவணியாற்றலனாகி
முனையின் விஞ்சினோன் முகிலினிற்போய்க்கரந்திருந்தும்
வினைய முன்னலுமேவலன்செய்கைதேர்ந்ததனாற்
புனையும்வாகையான்போக்கினான்பிறைக்கணைபுணர்ப்பால். (அசு)

ஏவெனுங்கணைத்தேகியாங்கிந்திரன்பகைஞன்
றீயசெங்கையுஞ்சென்னியுந்தறிந்திடச்செம்பொன்
மாயிருங்கிரிவானிருந்தவனிமேல்விழல்போற்
காயமூன்றதாவீழ்ந்தனன்வானவர்களித்தார். (அஎ)

இறந்துநீங்கினானிந்திரசித்தினியிலங்கைத்
துறந்திராவணன்றுஞ்சினனென்றுளந்துணிந்தே
சிறந்தவானவராடினர்பாடினர்சிரித்தார்
நிறங்குலாவியமலர்மழைமண்ணெலாநிறைத்தார். (அஅ)

மீண்டிலக்குமனிராமனைமேவியேதொழுது
மாண்டுளான்றனிமாயைவன்மாண்பிலானென்னப்
பூண்டவன்புடனிளவலைப்புயமுறத்தழுவி
யாண்டுமுள்ளவர்க்கின்னுரையறைந்தவனிருந்தான். (அகூ)

வேறு.

கார்முகவலியான்மிக்கவிராவணன்கழற்கான்மைந்தன்
போர்முகத்திறந்தானென்றுபுகலவுந்தரியானாகிப்
பார்முகத்தயர்ந்துவீழ்ந்துபலபுகன்றரற்றிச்சீறி
வார்முகத்தனத்தாள்வைகுமால்வனமடைந்துசொல்வான். (கூ௦)

இங்கிவள்பொருட்டாலாருமிறந்தனரிவளைவீட்டி
லங்கவராசைதீர்ந்தேமீள்வரென்றறியக்கூறிச்
செங்கையிற்சுடர்வாள்வாங்கிச்சென்றனன்றிறலான்மிக்க
தங்குலக்குரவன்வந்துதகைந்திதுசாற்றலானான். (கூக)

மூவுலகோருமேத்துமுதன்மையுந்திசைகள்வென்று
மேவலரின்றிவைகும்வெற்றியுமுருக்குத்துவாளக்
காவியங்கண்ணினாளைகாய்வையேல்வசையேகண்டாய்
பாவைதன்கொழுனனாவிபடுத்தரும்புகழ்கொளென்றான். (கூ௨)

அக்கணமீண்டுசீற்றத்தரக்கர்கோன்மனையினெய்தி
முக்கணன்றனதுபூசைமுற்றியேதொழுதபின்னர்
கைக்கொளும்படைகளேந்திக்கவினுறுமகுடஞ்சாத்தி
மைக்கிரியனையவெய்யோன்மாமணித்தேர்மேலானான். (கூ௩)

காரெனக்கரிகள்சூழக்கடலெனப்பரிகள்சுற்றப்
போரெனப்புளகமோங்கும்புயவலியசுரர்போர்ப்பச்
சீரெனவரைகள்போலத்தேர்க்குழாமிரண்டுபாலு
நேரெனநெருங்கச்சென்றானிருதர்கணிருபனானோன். (கூ௪)

காடுகடோறுமற்றைக்கனவரையிடங்கடோறு
நாடுகடோறுமெண்ணில்பிலந்தொறுநண்ணிவைகும்
பீடுடைநிருதராரும்பெட்பொடுபடர்ந்துவேந்தன்
மாடுறநெருங்கிவந்தார்மறலியும்வெருவமன்னோ. (கூரு)

எண்டிசையானையுட்கவெழின்மணிமுரசுபேரி
கொண்டலிற்குமுறியார்ப்பவீணையின்கொடிமுன்செல்ல
வண்டரும்வெருவியஞ்சவாரமர்க்களத்தின்வந்தான்
தொண்டையங்கரிகளெட்டுந்துயல்வருமார்பினானே. (கூசு)

பற்றலன்வந்தானென்றுவீடணன்பகரப்பாரிற்
கொற்றவர்திலகனானகோசலதேயவேந்தன்
வெற்றியின்றெய்துமென்றேவில்லொடும்புட்டிலோடுஞ்
சுற்றுவானரங்களோடுந்துணைவன்றன்னோடுநின்றான். (கூஎ)

கண்டனர்வானின்வாழாகண்டலஞ்முதலவானோ
ரெண்டிசைவென்றதீயோனிரதமீதிருப்பவேந்தன்
மண்டலத்திருந்துவெம்போர்புரிவதுமழகோவென்னப்
பண்டைமாமணிப்பொற்றிண்டேர்ப்பாகொடும்புவியினுய்த்தார். (கூஅ)

மாதலியென்னும்பாகன்வள்ளலையெதிர்ந்துவிண்ணோர்
நாதனின்றனக்கிப்பொற்றேர்நல்கினனமர்செய்காறுங்
கோதறுமிதன்மேனின்றுகொடுஞ்சமர்செய்யமாய்ந்த
வேதிலர்க்கலகுசொல்வோரில்லைநீயிசைவிற்கேண்மோ. (கூகூ)

தீயவாளரக்கன்றன்னைச்செறுப்பதுசிறப்பினெய்த
நேயமோடிரதமுற்றார்விண்ணவர்நிருபரேறே
நீயிதினெய்தவென்றுபகரலும்நிமலமான
காயமேநீலம்போல்வான்கருணைசெய்ததன்மேலானான். (க00)

கொடிஞ்சியந்தேர்மேலையன்குறுகினனமரர்கோமான்
விடிந்ததெங்கங்குலென்றேமென்மலர்மாரிதூர்த்தான்
முடிந்திடாநிருதர்தானைமொய்த்திட்டுமுதல்வனம்பாற்
றடிந்தனன்சேனையாவுந்தரைப்படக்கணத்தினம்மா. (க0க)

வேறு.

பூழியொத்தபடைக்கைவீரரடங்கலும்பொடியாதலும்
பாழிமைக்கிரியொத்ததேர்மிசைவந்தடுத்துளபற்றலன்
வேழநற்சிலையைக்குனித்தடல்வில்லினாணொலிகாட்டினான்
பூழைபுக்கியொளித்ததன்றுபுயற்குலங்கணடுங்கியே. (க0உ)

அந்தவாறுதெரிந்திராமனுமக்கணத்தெதிரெய்தியே
முந்துதன்சிலைகோலினாணொலிமுற்றினான்வினைபற்றற
மந்தராசலமொத்ததோளுடைவாளரக்கன்மகிழ்ந்துதன்
சுந்தரங்களசைத்துநின்றுகணக்கிலம்புகளேவினான். (க0ங)

இருவரும்பொழிகணைகளம்பரமெங்கணுங்கனல்சிந்தியே
பொருதழிந்திடல்கண்டுவானவர்புந்திநைந்துமயங்கினார்
வருபதங்களுமஞ்சிநெஞ்சுவருந்தியோடினன்மற்றிவ
ரொருவரும்புறமிட்டுநீங்கிலரொத்தருஞ்சமர்முற்றினார். (க0௪)

காரெனத்தகுமேனிகொண்டதசக்கிரீவன்கலக்குறத்
தேரையுய்த்தொருமாயைவிஞ்சைதிடத்தினுன்னலுமாய்ந்துளோர்
வீரையொத்தநிறத்திறேடுயிர்மேவினாரெனயாவரும்
போரினிற்புடைசுற்றினார்படைகொண்டுபோர்வலிமிக்குளார். (க0௫)

கண்டுமாயையிதாமெனக்கடல்வண்ணன்மாயைகடக்குமா
றெண்டிசாமுகமுட்களானவெழிற்பெருங்கணைவீசினான்
விண்டுவெங்கனலிற்புகுந்துளபஞ்சுபோல்விளிவெய்தினார்
கொண்டலிற்புடைவந்துசூழ்ந்தகொடுங்கண்மாயவரக்கரே. (க0௬)

மாயைநீங்கலுமக்கணத்தில்வலிக்கொருத்தருநேரிலாத்
தீயவன்பிறையெயிறுதின்றொருதிறல்கொள்சூலமெறிந்தனன்
றூயனானதனைத்தடிந்தொருதாமவெங்கணையேவியே
காயமீதொளிர்கின்றவச்சிரகவசநீறுபடுத்தினான். (க0௭)

தண்டமொன்றுவிடுத்தெறிந்துதருக்கிலாசுரநாயகன்
கண்டுநின்றனனிவனருந்துகள்கண்டுநின்றனன்மீளவும்
பண்டுதங்குபுமழுவெழுக்கொழுபாசமாழிகுடாரவே
லண்டர்நாற்படைமுற்றுமள்ளியேவெல்லவீசினனாசுரன். (க0௮)

கொற்றமிக்குயர்வீரகேசரிகோடிவான்கணையேவியே
மற்றவன்படைமுற்றுமற்றுவுஞ்சிறந்திடநிற்றல்கண்
டிற்றதின்றுபுயப்பிரதாபமெனச்சலித்தொருதெய்வவேற்
பற்றிநின்றுகுறித்துவீசினன்வெற்றிமிக்கபராக்கிரமன். (க0௯)

ஆடலஞ்சிலைவல்லபந்தெரியாதவன்குலமைந்தனும்
பீடலங்குசரங்கள்கோடிபிணைத்துவீசவிழுங்கியே
மாடிலங்கியவிண்ணுளோருமயங்கியஞ்சிடவந்ததா
லேடலர்ந்துளதார்துறந்தவனெட்டுயிர்ப்பினிலிற்றதே. (கக0)

மாகர்தங்குலமுற்றும்வென்றவன்மாழ்கிவேறொருவான்கணை
மேகமன்னவன்மீதினுய்த்துவிசைக்கொள்மாருதமாயையா
லோகைதங்கியவானரேசருமுற்றசக்கவிவெள்ளமு
மாகநொந்தலையப்புரிந்தனன்னண்ணல்கண்டிதுகூறுவான். (ககக)

உன்றன்வான்கணைவிட்டதெத்தனையூறிலாவகைமாற்றினே
னின்றன்மீதொருவாளியேவுவனீவிலக்குதியீண்டெனா
மன்றலம்புயவாளியேவினன்மற்றவன்றலைபத்துமோர்
குன்றெனும்படிவிழவரிந்துகுறித்துமீண்டதுகொட்புற. (கக௨)

மீளவேதலைபத்துமங்ஙனமேவவாசுரர்நாயகன்
கோளுலாவிரதத்தினின்றகுறிப்புணர்ந்துபிறைக்கணை
யாளுநாயகனேவினனவனம்பின்மாற்றியடர்த்திடக்
காளமேகநிறத்தினண்ணல்களித்துளத்திதுசிந்தியா. (ககங)

என்னவாளமர்செய்தன்மற்றிவனின்றுதுஞ்சுமிடத்தெனத்
தன்னகந்தனிலுன்னியேபிரமன்றனிச்சரமங்கைகொண்
டுன்னுமுன்னர்செலுத்தினன்சிலையிற்பொருத்தியுகாந்தநாட்
பன்னுகாலவுருத்திரற்கிணைபகரவந்ததுபகழியே. (ககச)

கோடிவான்கணைகொண்டுமாற்றியகொடியவன்றனையக்கணை
யோடிமார்புருவிப்புறந்தனிலுயிரையுங்கொடுபோயதால்
வீடினனுயர்தேரினின்றுவிழுந்துளான்புவிமீதிலே
நாடிவானவராடியாசிநவின்றுசிந்தைகளித்தனர். (ககரு)

வேறு.

இந்திரனுய்ந்தோமென்னவிருடிகள்மலர்கடூவ
வந்தரவுலகினுள்ளோராசிகள்கடல்போலார்ப்ப
முந்துநான்மறையோன்றெய்வமுதற்படைதூரீராடி
வந்தனவிராமன்பக்கல்வலம்புரிந்தமர்ந்தவன்றே. (ககசு)

கனவிலாவிடத்திற்றாமங்கரந்திடுமாறுபோல
வனல்சொரிவிழிகள்பெற்றோருணிறந்திடவவன்செய்மாயை
யினிதுறத்தீர்ந்தேயாருமெய்தியேந்தலைவழுத்தி
மனமகிழ்வுற்றார்வாலிமைந்தனேமுதலாம்வீரர். (ககஎ)

வாரணம்பொருதமார்போன்வீழ்ந்திடவந்துநோக்கி
யேரணிவீடணப்பேரிளவலுந்துன்பமுற்றான்
பூரணஞானவாரியவன்றனைப்பொருமனீக்கி
யாரணமுறையால்வாழ்த்தியணிமுடிசூட்டினனே. (ககஅ)

இராவணசங்காரச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-ருoஅரு.

---

# இராமன்பட்டாபிஷேகச்சருக்கம்.

மாறடுவாயுதந்தமைந்தனும்வாலிசேயுந்
தேறுவீடணனுஞ்சென்றுசீதைதாள்சிரமேற்சூடிப்
பேறுடைபன்னையுன்னைப்பெருந்துயர்கண்டோன்வாழ்வுக்
கீறுவந்தவனுமின்றேயிலந்தனன்வாழியென்றார். (க)

அன்னையுமமுதந்துய்த்தாளாமெனக்களித்தபின்னர்
மன்னவர்திலதன்பக்கல்வரவெனக்கொண்டுசென்றே
தன்னிணையிலாதகொற்றத்தனுவலான்முன்னருய்த்தார்
பொன்னெழின்முகத்தைநோக்கியிவ்வுரைபகரலுற்றான். (உ)

வண்டணிகுழலாயென்பால்வந்ததென்னொருவன்றொட்டுக்
கொண்டுபோனவணீமீளக்குலத்தியன்மாதரேபோ
லெண்டிசையோர்கள்காணவெய்தினோநாணமின்றித்
தெண்டிரைத்தன்னிற்றோற்றுஞ்செய்கையைச்சிறப்பித்தாயே. (ங)

அன்புடைத்தந்தைதன்னையருஞ்சிறகரிந்துமாய்த்த
வன்பழிகழுவவேண்டிவந்திவணுற்றதன்றி
மின்புரையிடையாய்நின்னைவிரும்பியோதினஞ்செய்மேலோன்
றன்பழியிலாக்குலத்துக்கேற்பதோநீசெய்தன்மை. (ச)

சிறப்புடைக்கற்புக்கேதஞ்சேருமெத்திருவையன்னர்
துறப்பர்தம்முயிரையன்றிச்சுமப்பரோபழியைவாளா
விறப்பதற்கஞ்சிமண்மேலிருந்தனைவடுவிலாத
குறிப்பருமரபிற்றீராவசைதருங்கொடியகோதாய். (ரு)

என்றனனிராமனஞ்சியாவருமெதிர்நில்லாது
குன்றுடைப்புயங்கள்வாடிக்கூர்ந்தனர்கேதமாங்கு
நின்றவக்கற்புக்காருநிகரிலாச்சனகியாவி
பொன்றினள்போலநின்றாங்கிவ்வுரைபுகலலுற்றாள். (சு)

ஏந்தனீபிரிந்தகாலத்தெய்தியவரக்கனைக்கண்
டாய்ந்துயிர்விடுவதேயெற்கணியெனலழகிதன்றா
லேய்ந்தவானவர்கள்காணவெனதருங்கற்புநாட்டிப்
பாய்ந்தனன்மூழ்கிநின்முன்னென்றுயிர்பரித்தனன்றே. (எ)

சித்திரத்தலர்ந்தசெந்தாமரைமுகஞ்சிறியேன்கண்ணாற்
பத்தியின்மீளக்காண்பான்பாரிடைதரித்தேனுவி
யத்தலையுனக்குமூர்க்குமீன்றவர்குடிக்குஞ்சீர்த்தி
வைத்தியான்கனலின்மாய்வன்வாழியென்றுரைத்துமீண்டாள். (அ)

அனுமனங்கதன்மற்றுள்ளோர்நாப்பணிலமர்ந்தவெற்றி
யினிமைசார்கொழுந்தன்றன்னையிளங்கொடியேறநோக்கிப்
புனிதனீகனலுண்டாக்கிப்புகழினைப்பெறுதியென்றாண்
மனுமுறைதவறாவீரான்வாளெரிவளர்த்திஞனே. (கூ)

வரங்கிளர்கற்பான்மிக்கவல்லியும்வலம்வந்தந்த
யுரங்கிளர்மணவன்றன்னையுளங்கொடுகணலைப்போற்றித்
திரந்தருமனதால்வாக்காற்காயத்தாற்றீமைபுண்டே
லரந்தையிக்கனலென்னுவியகற்றவென்றறைந்துபாய்ந்தாள். (கo)

தாளதாமரையான்மேய்ந்ததடத்தினுட்செங்காலன்னம்
வாளுறப்பாய்ந்ததேபோன்வல்லியாங்கெரியின்மூழ்க
மூளுறுகனலுமொன்றாய்கற்பினால்வேவாமுன்னர்
பாலேயோதியர்களாடும்பாய்புனலாயிற்றன்றே. (கக)

எழுந்தனனுலகமீன்றாளிந்திரைவடிவோடாங்குத்
தொழுந்தகைநீலமேனித்தோன்றலுமிளையகோவும்
பொழிந்தருட்பாவையோடுமிருந்தனர்புரண்டமண்மேல்
விழுந்தவானரர்களுதர்விண்ணுறவார்த்தொலித்தார். (கஉ)

அக்கணமம்பரத்திலம்புயன்முதலவானோர்
தொக்குநின்றிராமன்முன்னர்தோற்றினர்தொழுதுவாழ்த்தி
மிக்கநன்மகிழ்விளேடும்விளங்கினன்வீதியாமேலோன்
சக்கரந்துறந்தகோவைப்புகழ்ந்திதுசாற்றலுற்றான். (கஙு)

வாழிநீயரக்கரேறேவானவர்துயரந்தீர்த்த
பாழியந்தோள்கள்வாழிபணைத்ததோளரக்கர்காய்ந்த
வேழவெஞ்சிலையும்வாழிவெந்திறலிளையோன்வாழி
யாழிபோலொலிக்குங்கொற்றத்தரிக்குலம்வாழிவாழி. (கச)

கொற்றமுங்குடையும்பண்புங்குலக்களியானையூரும்
வெற்றியுந்துரந்துபன்னாட்பெருந்துயர்மகவானுற்றான்
பற்றலன்றன்னைவென்றுநல்லறம்பரித்தாய்போகிக்
குற்றநல்வளமைநீயின்றுதவியதொக்குமன்றே. (கரு)

வெற்படுதிண்டோள்வெற்றிவெய்யவன்வந்தடுத்தமாற்ற
முற்பவத்தமரர்செய்ததவமெனமுறையிற்கோடி
பற்பலபுகல்வதென்னேபகரருஞ்சனகியாடன்
கற்பினுக்கிணையொன்றேதக்கண்டிலோஞ்சாலியன்றி. (கசு)

பொய்யுடைநிருதன்முன்னர்ச்சாபத்தாற்பொருத்தமற்றத்
தையலைவலிதிற்றேய்ந்தாற்றன்றலைபிளக்குமாற்றான்
மையலிற்றுளைந்துவீந்தான்மாசிலையவள்பால்வள்ள
லையமெனவளானின்றொல்லருங்குலஞ்சிறந்ததாமால். (கஎ)

மீண்டுநீயயோத்தியெய்திமின்னுடனின்பந்துய்த்து
மாண்டகுமரசுசெய்தேமாமகம்பலவுமாற்றி
யீண்டுளயிறைவர்க்கெல்லாமேந்தலாயிருத்திமீள
வேண்டுறுவரமுண்டென்னில்விளம்புதிதருவலென்றான். (கஅ)

வேறு.

அல்லியந்தாமரைக்கோயிலோரணனிவ்வுரைவிளம்பவருளின்செல்வன்
மல்லுயர்தோள்புளகரும்பமனத்திலுளவையமெலாமாற்றியேத்தி
யெல்லையறும்புகழ்சேரெந்தாய்நீயரிக்குலங்களிறந்தோர்மீண்டுஞ்
சொல்லரியவுருவோடிந்தோற்றிநலந்துய்த்திடுமாசொல்வாயென்றான். (ககூ)

அவ்வாறுவரமருளியேனையர்பாற்சானகிபாலருணோக்கீந்து
செவ்வாயுஞ்சீரடியுஞ்சேந்துடலம்பாற்கடல்போற்றிகழ்ந்துகாட்டு
மொவ்வாதநடையன்னமுகத்தயனுமமரரொடுமுலகிற்புக்கான்
வெவ்வாசிமணித்தேர்மேன்மாதலியும்விண்ணுலகின்மேவினானே. (௨௦)

வானவர்கள்போயகலவளமலிகோசலைநாடன்மகிழ்வுதோன்றத்
தானவர்கள்குலமழித்தவைதேகிதனையிறுகத்தழுவியன்பாற்
றேனவிழுமலர்க்குழலாயுனதரியகற்புடைமைதேயத்துள்ள
மானவரிக்கயல்விழியாரறிந்துய்யச்செய்ததிதுமனங்கொளென்றான். (௨௧)

புத்தமுதமனையமொழிப்பொற்றொடியுமின்னுரைகள்புகன்றுபோற்றிச்
சித்தமதிற்றிகழ்துயருமருங்கணவன்பிரிவெனவேதீர்த்துப்போர்வல்
மத்தமதக்களியானைமருங்ககலாப்பிடியேபோன்மகிழ்ந்துநின்றாள்
வித்தகனும்வீடணன்றன்முகநோக்கியோர்வாய்மைவிளம்புகின்றான். (௨௨)

வளநகரையான்றீர்ந்துவனம்புகுந்தபின்னரினிவாழ்கிலோமென்
றளவறுதுன்பத்தினுடனடைந்தரற்றுமெம்பியருக்காண்டீரேழு
முளதகலயான்மீள்வன்றப்பாதென்றவர்க்குறுதியுரைத்தேன்றப்பிற்
றளிரனையகொடுந்தழலிற்றமதுயிர்கடுறப்பதினிச்சரதமென்றார். (௨௩)

அத்தகையநாளவதியின்றுடனீரேழாண்டுமாயதாமாற்
சத்தியமாங்கவர்கனலிற்றுஞ்சுவர்யானித்தினத்திற்சாரேனாகிற்
குத்திரமொன்றுணராதகுரைகழலோயிதற்குறுதிகூறுகென்னக்
கைத்தலமஞ்சலிநிகழக்காகுத்தன்றனக்கவனுங்கழறுகின்றான். (௨௪)

பெட்புடையபோர்வலியான்குபேரனுடன்பெருஞ்சமர்செய்தினத்திற்பெற்ற
புட்பகமிங்குளதனிகமெவ்வளவோவவ்வளவும்புகுந்தக்காலுங்
கொட்புறவோர்திசையிடம்பாழிருக்குமதன்மீதிருந்துகுறித்தபாங்கர்
கட்புலன்போய்க்கதவுமுனங்கடுப்பினிற்சென்றுய்க்குமதைக்காண்டியென்றே

மாநகரிற்சென்றரக்கர்வருந்தியதைச்சுமந்துவரமாண்பின்மீண்டு
தானவர்கள்குலக்குரிசிற்றயரதசூனுவைத்தொழுதுதான்முன்னிட்டான்
வானவராலுய்ந்தெழுந்துவந்ததுவுமிருந்ததுவுமருவிலாத
மீனநெடுங்கடலனையகவிக்குலங்களடங்கவதின்மேவினாரே. (௨௬)

இரவிதருஞ்சிறுவனுடன்மாருதியுமீரொன்பதென்னும்வீரர்
பரவரியவிறலினரும்வீடணனுமிருபாலும்பரிந்துசுற்றத்
திரமுயருமிளைஞனுடன்றேவியுடனிராகவனுஞ்சிறப்பின்மேவி
விரவின்மறைதனைப்புகலவாகாயத்தெழுந்ததந்தவிமானமன்னோ. (௨௭)

மனவேகம்பின்செல்லவடாதுதிசைதனைநோக்கிமணிவிமான
மினிதாயதிருவணையைக்கடந்துபரத்துவாசரிடத்திறுத்தபோதி
னனகமுனியெதிரெய்தியாசிபுகன்றித்தினமிங்கமர்ந்துநாளைத்
தனிநகரம்புகுதியெனச்சாற்றலுமாண்டகையிதனைச்சாற்றினானே. (௨௮)

பரதனுக்குமுன்புகன்றபரிசுவழுவாதின்றபடர்வான்வந்தேஞ்
சரதமிகுமறைமுனியேநின்வாய்மைகடந்தேகத்தகுவதன்றால்
வரதனுயர்மாருதியைமற்றவர்பால்விடுத்தெமதுவரவுகூறிக்
கருதரியபெருந்துயரந்தீர்த்துவரப்புகன்றிருத்தல்கடனுமென்றான். (உகூ)

அப்புனிதனுளங்களித்தானனுமனுமாங்கவன்விடைதந்தருளவானிற்
செப்பமொடுதனிச்சென்றான்றிவாகரன்றன்குலக்குரிசில்சேனையோடு
மொப்புரைத்தற்கரிதானதேவியொடுமிளைஞனொடுமுள்ளமிக்கோன்
றப்பறுசூழலிற்புகுந்துதானையொடும்விருந்தருந்தித்தரித்திருந்தான். (௩௦)

வேறு.

மந்தரநெடுங்கிரிவானிற்சார்தல்போற்
புந்திதோண்மாருதிபொருக்கென்றேகியே
கந்தடுமாடமுமெயிலுங்காட்சிமே
லிந்திரபுரிநிகரயோத்தியெய்தினன். (௩க)

அவன்செயனிற்கவாங்கிருந்ததம்பியர்
புவனநீத்திராகவன்வனம்புகுந்தபின்
தவமுறைசெஞ்சடைதாங்கித்தாபதர்
கவினுடன்காய்கனியருந்திக்காதலால். (௩௨)

தென்றிசைநோக்கிநந்திக்கிராமமாம்
வன்றிறனகரிடைவைகிமாமனத்
தொன்றியதுயரொடுமொழித்துளார்களு
மின்றுதானிராகவனெய்துநாளெனு. (௩௩)

ஆதரம்பெருகிடநோக்கியண்ணலைக்
காதலினெதிர்வரக்கண்டிலாமையாற்
பாதுகைதனைவழிபட்டுப்போற்றியே
மாதவர்தமையடிவணங்கிமைந்தர்கள். (௩௪)

தாயரைத்தொழுதொருதுணிபுதாங்கியே
தூயவெங்கனலிடைதொக்கொழிப்பதாய்
பாயெரிவளர்த்தியேபயிலுமாயிடை
மாயைபோன்மாருதிவந்துதோன்றினன். (௩௫)

ஆண்டகையிராகவனடைந்துளானவன்
பூண்டமாதவனுழையிருந்தபொற்பினுற்
காண்டுமின்சரதமென்றுரைத்துக்கைகளால்
வேண்டியகனலினைவிளக்கநீக்கினன். (௩௬)

வந்ததுமிருந்ததுமற்றுமுற்றுள
சுந்தரனியற்கையுந்தொகுத்துக்கூறலாற்
சந்திரன்வரவுணர்சலதியொத்ததா
னந்தவினகரமும்நாடுமெங்குமே. (௩௭)

நாயருமகிழ்ந்தனர்தம்பிமார்களு
மேயமன்னவர்களுமீட்டுமுள்ளவர்
தூயவான்கூட்டமுந்தொழுதகையராய்
நேயமாரனுமனைப்புகழ்தனீட்டினார். (௩௮)

அக்கணமாருதியவர்க்குநல்லுரை
தக்கதுகூறியேமீண்டுதாமரை
மிக்கநற்கண்ணுடைவீரன்பாற்புகுந்
தொக்கலிற்றங்கினானுள்ளதோதியே. (௩௯)

மையலர்மாரிருண்மங்கிமாமகிழ்
வெய்தியபரதனல்லிதையம்போலவே
மையிருளகன்றிடவந்துதோன்றிய
வெய்யவனாற்புவிவிளக்கமானதே. (௪௰)

மாமுனியுய்ந்திடவுர்தன்புட்பக
மீமிசைநடத்தியேமேவுமாயிடை
காமருமிளைஞருங்காவல்வேந்தரு
மேமனாட்டவர்களுமெதிர்கொண்டாரரோ. (௪௧)

தம்பியர்தொழுதிடத்தழுவியேனையோர்க்
கிம்பரிற்கண்ணருள்விளக்கியிங்குறை
பைம்பொன்மாமலர்கொடுபணிந்துதாயரை
யும்பரும்வாழ்த்தமாநகரிலுற்றபின். (௪௨)

புட்பகமமரர்பாற்போக்கிமேவிய
நட்பினர்தம்மொடுமவையினண்ணியே
கொட்புறத்தாபதவேடங்கொண்டவை
யுட்படமாற்றியேநலஞ்செய்யோரையில். (௪௩)

உலகெலாந்தமதுளமுவப்பத்தம்பியர்
நலனுறுமேவல்செய்திருப்பநன்முடி
பொலனுறச்சூடியேதவிசிற்பொன்னொடு
மிலகுறவிருந்தரசியற்றினனரோ. (௪௪)

மேயவீடணனையும்விஞ்சுவானர
நாயகன்றன்னையுநகரிற்போக்கியே
தாயர்மூவருமருடழைப்பநான்மறைத்
தூயமாமுனிவரர்துதிப்பவைகினான். (௪௫)

திங்கண்மும்மாரியுஞ்சிறப்பமாதவர்
தங்குலப்பெருந்தவந்தழைப்பநல்லற
மெங்கணும்விளங்கவந்திறைஞ்சிவேந்தர்கள்
மங்குலிற்றிறையிடவாழ்ந்துளானரோ. (௪௬)

இப்பெருங்காட்சிசேரிராமன்காதையைச்
செப்பினோரோதினோர்செவியிற்கேட்டுளோர்
மைப்படிசெனனமுமரணமுந்துறந்
தொப்பறுகதியடைந்துறுதிசார்வரே. (சஎ)

என்றருந்தவமுனியிசைத்துதிட்டிரன்
மன்றலம்புயத்துணைவளரக்கூறுவான்
வென்றியோய்வசையிதினுரைமேவிய
தின்றுமவ்வாறலாலுமக்கொன்றில்லையே. (சஅ)

சிந்துநாட்டரசுடைச்செல்வன்கற்புடைச்
செந்திருவனையநந்தேவியைக்கவர்ந்
திந்தமன்னவர்முனமெய்தினன்வகை
பைந்தொடிதனக்கிதிற்பவமொன்றில்லையே. (சகூ)

ஏடலர்தாரினுயென்றுகூறலும்
பீடமர்பாண்டுமுன்பெற்றகாளையர்
நாடருமகிழ்வொடுநன்மையெய்தினு
றீடறுதருமனென்றெடுத்துக்கூறுவான். (௫௦)

கற்புடைமனைவியாற்கவினுமின்பமும்
பற்பலசெல்வமும்பாரும்பெற்றுளோர்
சொற்படவுண்டுகொலென்னத்தூயவன்
முற்படுகதையெடுத்துரைப்பமுன்னினுன். (௫க)

ஆழிநீர்வளைதருமகிலங்காவல்செய்
பாழியந்தோள்வலானொருவன்பார்பெறும்
வாழியகாதையைவகுப்பன்கேட்டியென்
றேழையோடிருப்பவர்க்கெடுத்துக்கூறினுன். (௫உ)

இராமன்பட்டாபிஷேகச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௫கஙஎ.

---

## சாவித்திரிகதையுரைத்தசருக்கம்.

---

அச்சுவப்பதியென்றோதுமரும்பெயரரசர்கோமான்
கச்சணிமுலைதேரல்குன்மாளவிகணவன்செங்கோ
லிச்சையினியற்றிவாழ்ந்தானெழிலுடைப்புதல்வரின்றி
முச்சகம்புகழ்சாவித்திரிமுளரியந்தாள்பூசித்தான். (க)

வந்தவளருள்செய்தேதோவரமுனக்கருத்தியென்னச்
சிந்தனைகளித்துமன்னன் றிருவடிசிரமேற்சூடி
மைந்தரையளித்திங்கென்னைவாழ்வுறவைப்பாயென்ன
பைந்தொடியவனைநோக்கியோர்மொழிபகரலுற்றாள். (௨)

அடலுடையரசரேறேயருங்குறையகலவேண்டித்
தொடர்நடைமழலைமைந்தர்வேண்டினை தூவியன்ன
நடையுடைக்கற்பின்மிக்கபெண்கொடிநல்கினேநீ
மிடலுடன்சேறியென்றாள்வேந்தனுமிதனைச்சொல்வான். (௩)

அரசுகாத்தளிக்கவல்லதனயனையளித்தலின்றி
விரைசெய்பூங்குழலைநல்கில்வெந்துயரறுமோவென்ன
வரைசெயற்கரியசெய்யாளுதித்திடிலவளால்வேந்தே
கரைசெயற்கரியசெல்வங்காண்குவையென்றுபோனாள். (௪)

மன்னவன்றொழுதுமீண்டுவாழுநாண்மனைவிசாவி
யன்னவள்கருவாயாங்கோரரிவையைப்பயந்தபின்னர்
தன்னுளமகிழ்ந்துசாவித்திரியெனநாமஞ்சாத்தி
மன்னவன்வளர்த்தானந்தநங்கையுமங்கையானாள். (௫)

கருங்கொடிப்புருவவில்லுங்கண்ணெனுங்கணையுந்தேய்ந்த
மருங்குலையிடர்செய்மற்றயானையுமல்குற்றேரும்
பொருந்திடக்கொண்டுகாமன்போரினைவெல்வான்வைகும்
கரும்பினைவியந்துநோக்கிக்காவலன்களிகூர்ந்தானே. (௬)

தனையைதன்னெழிலுக்கேற்றகாந்தனைத்தருதலுன்னி
நினைவுவேறுரைவேறாகிநிருபனுந்துயர்கூர்காலை
புனைசடைதுளங்கவீணைபொதுளியகரத்தினோடு
மனையமன்னவனிருந்தவவையினாரதனடைந்தான். (௭)

கண்டவாளரசன்சிந்தைகளித்தரும்பூசையாற்றி
முண்டகத்தவிசினுய்த்தேதமுயற்சியோடினிமைகூறி
மண்டலவேந்தன்பின்னோர்வாய்மையுண்டென்றுநண்பாற்
கொண்டுதன்மனையிற்சார்ந்தேகுலமணித்தவிசினுய்த்தான். (௮)

வந்தநான்மறையும்வல்லமகதியாழ்முனிவன்பாங்கர்
சந்தணிகுவவுத்தோளான்றானும்வீற்றிருக்கும்போழ்திற்
சுந்தரவல்லிநோக்கித்தூய்முனிதனையுமீன்ற
தந்தைதாடனையுமேத்தித்தலையுறவணங்கினாளே. (௯)

மாமுனியரசுகூறவளரிளமுலையாளீன்ற
கோமுனியருகினெய்திநிற்றலுங்குறிசினோக்கிக்
காமருகரங்கொண்டேந்திகன்னியைத்தவிசினேற்றித்
தோமுறவொருநல்வாய்மைதூய்முனிக்குரைப்பதானான். (௧௦)

முன்னர்நாட்டவத்தாலிந்தமொய்குழறன்னையின்றேன்
இன்னபைங்கொடிகுணத்துக்கேற்றநற்கொழுநர்காணேன்
றன்னுளத்ததுவேசாலத்துயரினைத்தருவதென்றான்
மன்னிளமுகத்தைநோக்கிமாமுனிபுகல்வதானான். (௧௧)

மத்திரதேயவேந்தேமகட்கொடைபெற்றநீயுன்
சித்தம்வந்தவறகளித்தல்சிறப்பன்றித்திருவையன்னாள்
புத்தியில்வரித்ததூயபுருடனுக்குதவலாமென்
றுத்தமனுரைப்பமன்னனொண்டொடிக்குரைப்பதானான். (௧௨)

பெய்தருட்சுரந்தநீலப்பிறழ்விழித்துணையாயான்முன்
செய்தவப்பயனால்வந்தாய்சீர்தருநினதுசிந்தைக்
கெய்தியவரனைநீயேவரித்திடலிசைவாமென்றான்
பொய்தருமிடையாளணிமீண்டிதுபுகல்வதானாள். (௧௩)

மழலைமென்மொழியாண்முன்னர்மாதர்கள்புகலக்கேட்ட
தழைவரிசிலையான்செய்கைக்கருத்தினுளிருத்தலாலே
விழைவெனிற்சால்வதேயவேந்துடைத்தவத்தால்வந்த
தழல்செய்சத்தியவானென்போன்றனக்கெனையளித்தியென்றாள். (௧௪)

அன்னவன்செய்கையேதீங்கறிந்தநீபுகல்வாயென்ன
மன்னவன்முனியைநோக்கிமலர்க்கரங்குவித்தபோதிற்
சொன்னவக்குமரன்சாலத்தூயவன்சொல்வழாதோன்
கன்னல்வேளனையானென்றுகலைமுனிபுகழ்ந்துபின்னும். (௧௫)

ஆயவன்றனக்குவேறோர்வடுவுளதரசவென்ன
நேயமோடதனையையநீயுரைத்தருள்கவென்றே
தூயநல்லரசன்கேட்பத்துவக்கறுமுனிவன்சொன்னா
ளையுவின்றுதியோராண்டலதிலையவனுக்கென்றே. (௧௬)

பணைமருப்பியானையூரும்பார்த்திபன்றானுக்குற்றதண்
டுணைமலர்ப்பதத்தினுடன்றூயமாமுகத்தைநோக்கி
யிணையறுபுனிதவேதனியாவதுமுணர்ந்தோன்சொற்ற
வணியுரைதெரிந்தாயின்னொன்றறைகுவனம்மகேண்மோ. (௧௭)

சாலுவதேயமன்னன்றன்விழிப்புலனுநீங்கி
ஞாலமொன்னலர்கைக்கொள்ளநலனுடைநகர்கைவிட்டுப்
பாலனுமனைவிதானும்பருவரல்பொருந்தவேகி
யாலமார்பிழம்புவீசுமடவியில்வைகினானால். (௧௮)

பொற்றொடியதனையானோர்பொருட்செயாதளித்தபோது
மற்றவனாயுவெல்லையுணர்ந்தனைவரித்தனன்றே
கொற்றவர்தம்மில்வேறோர்குரிசிலைவரிப்பாயென்றான்
சிற்றிடைநகைத்துமீளச்செம்மலைநோக்கிச்சொல்வாள். (௧௯)

வேறு.

முன்னஞ்சிலமாதர்மொழிந்திடலா
லென்னெஞ்சிலவன்றனையெண்ணினன்மீண்
டின்னுங்கொழுநன்பிறரெண்ணுவனே
மன்னுந்திருமேவியவண்புயனே. (உ௦)

மனமொத்துநினைந்தணிவாக்கதனாற்
புனிதற்கெதிர்சொற்றதுபொய்த்துளதே
யினிமெய்ப்பரிசப்படுமேமையருந்
தனிதப்புவர்நன்னிறைதாரணிமேல். (உக)

முன்னாகவரித்தமுனைக்குரிசி
றன்னாயுவிறந்திடினுந்தகைநா
டொன்னாள்கொளினுமவனாற்றிடினு
மென்னாயகனேயவனென்றனளால். (உஉ)

வாடித்தவமன்னனுமாதவனை
நாடித்திருமாமுகநோக்கநயந்
தாடற்சிலையாயவள்கற்புடைமை
ப்பாடற்றிருவுக்குளவோபகராய். (உ௩)

அவனுக்குயிரவ்வளவேயெனினு
மிவள்கற்பினிவீணுறுமோவிசைவாற்
றவளத்தனிவாணகைதன்னுரையைச்
சிவணத்தருநூன்முறைதேர்ந்திலனே. (உ௪)

விதியைத்தனிவென்றுமிகுந்திடுதம்
மதியிற்றிறல்வாழ்வுபடைத்தவரார்
சதிரிற்றிகழ்நின்மகண்முன்செய்தவம்
பதியைத்தருமோவிலவோபகராய். (உ௫)

அருள்சேரிறைமைந்தனையண்மியடற்
றெருளார்கொடியைத்திருமன்றல்செய்தே
வெருவாதளியென்றுவிளம்பினனாற்
கருவாய்புகுதாநெறிகண்டவனே. (உ௬)

நீசொற்றமொழிப்படிநேர்வனென
மாசற்றமனத்தன்வழங்கியபின்
வாசித்தருள்வீணைமலர்க்கரனைப்
பூசித்தனனுங்கவன்போயினனே. (உ௭)

வேறு.

நாரதமுனிவன்றனதுலகடைந்தானரபதிமனைவிமாளவியோ
டேருளத்தனதுபுதல்வியோடழகாரிரதமீதணுகியேபடர்ந்து
காருதவுதல்போற்கனகமேபொழியுங்காவலன்புதல்வனேடிருந்த
நீரதநெடுங்கானணுகினனுணர்ந்தேநிருபன்வந்தரசனையெதிர்ந்தான். (உ௮)

ஒருவ்வரையொருவர்மார்புறத்தழுவியுவகையிற்றிளைத்தபின்பரசன்
மருவுறுகுழலென்றிருமகணினதுமைந்தனைவரித்தனளதனற்
றருவெனுங்கரத்தோய்கடிமணமியற்றித்தருவதென்சிந்தையிற்றுணியா
வொருவிநன்னகரிங்குற்றனனென்றுனுத்தரமற்றவனுரைத்தான். (௨௯)

அண்ணலேநீமுன்றவத்தினாலளித்தவருங்கொடியெனதுகான்முளையைப்
பண்ணவர்புகழவரித்தனளெனுஞ்சொற்பயனெலாமுதவியதன்றி
யெண்ணறமன்றற்புரிவதற்கடைந்தேனெனுமொழிக்கிசைகிலேனுலகுங்
கண்ணியநகரும்விடுத்திவண்டமியாயிருந்திடுங்காரணங்கருதில். (௩௦)

என்றவனுரைப்பவச்சுவப்பதியுமியம்புவானிடுக்கணுஞ்செருக்கு
மொன்றலாற்பெரியோர்க்கியம்பவேறுளவோவுறுவதுவிலகுமோவென்னத்
துன்றியநறுந்தார்முதல்வனைத்தெருட்டித்தூய்மொழிபலபுகன்றிடலும்
மன்றல்செய்திடுவான்றன்னுளங்கொண்டான்வளனுடைச்சாலுவமன்னன். ()

பன்னருமியற்கையச்சுவப்பதியும்பாரொருவரசனுமறையோர்
சொன்னநற்றினத்திற்சத்தியவானுந்தொடுகழற்காளையோடரிய
பொன்னனையாளையோர்தவிசிருத்திப்பொருவறுமுனிவரர்மறைகள்
பன்னுநன்முறையேதிருமணமுடிப்பப்பகருங்களிசிறந்தனரால். (௩௨)

அச்சுவபதியுந்தன்றிருமகளையரும்புனலுடனளித்ததற்பி
னிச்சைகூர்நாடும்பசும்பொனுமணியுமெரிகெழுபூண்களுபானுங்
கொச்சைதீர்மாதராயமுமகட்குக்கொடுத்தபின்பவருழைவிடுத்து
நச்சணிவிழியாடன்னொடுமீண்டுநன்னகரெய்திவாழ்ந்திருந்தான். (௩௩)

வனத்திடைமாமிமாதுலன்றனக்குமாசறுதன்மணவனுக்கு
நினைத்ததுநினையாமுன்னரேயியற்றிநேரிழைவழிபடல்குறித்துத்
தனித்தனிபுகழ்ந்துகற்பினுக்கிவளேயருந்ததிதானெனச்சரித்தாண்
முனிப்பெருந்தன்மைநாரதனுரைத்தமுறைப்படிநாளகன்றனவே. (௩௪)

இருந்தநாளுன்கேயன்றியோர்வருடமிறத்தல்கண்டிளங்கொடிமுனிவர்
தருந்திறல்விரதமியற்றுவானமைந்தேதக்கசாவித்திரிகௌரி
திருந்துபவாதநான்முறைவழுவாள்செய்தனடினமொருமூன்று
மருந்திலடுயிலாள்பிறருடன்பேசாளன்பொடுகளித்தனளம்மா. (௩௫)

எண்ணுமுப்பகலுநீங்கினான்கெனுநாளெய்தலுமேந்திழைதனது
பண்ணுடைக்கேள்வன்றனக்கிதுபகர்வாள்பார்தொழுபைங்கழலரசே
கண்ணகல்வனத்திற்செல்வதுகருத்தேற்கானகங்காணுமாறுன்பி
னண்ணுவனருள்செய்துடன்கொடுசேர்தனலமெனக்கணவனுநவில்வான். ()

மன்றலங்குழலாய்திவசமூன்றுகவனமுதற்றுய்த்திடாவிரத
மொன்றியமனதாச்செலுத்தினையிற்றைக்குகந்துநீபாரணமருந்தி
யின்றுடலணங்குநீக்கியிங்கிருத்தியேகியான்மீண்டினிநாளைச்
சென்றுகான்புகுவனுன்னுடனென்றான்றேசுடைச்சாலுவன்சிறுவன். (௩௭)

இயற்றியவிரதமிரவுகண்டன்றியேழி லுற்பாரணமருந்தேன்
பயிற்றியாய்நின்னோடேழல்வனத்தடைந்துபகர்பொழுதகற்றுவானினைந்தே
னயிற்புறேனீயின்றருள்செயக்கடனென்றுதரம்பெருகுமாறுரைத்தாண்
முயற்கறையொழிந்துகலையெலாநிறைந்தமுழுமதிவாணகைமுகத்தாள். (௩௮)

அன்னமேநினதுசிந்தையெண்ணதுவேலவ்வகைவருதிநீயென்று
மன்னவன்குமரன்புகன்றபின்குரவர்மருவியபாங்கரினடைந்து
பொன்னடிதொழுதுவல்லிபோலொல்கிநும்முடைப்புதல்வனோடருங்கான்
றன்னிடைப்புகுந்துமீளுமாறுநீர்தருவதேவரமெனக்கென்றாள். (௩௯)

மாதலனுடனேகாந்தனையளித்தமங்கையுமறுத்திலாமனத்திற்
போதுவல்விருப்பமுளதெனிலேகிப்பொருக்கெனக்காந்தனுநீயுங்
கோதறமீண்டுவருதிரென்றிசைத்தார்குடங்கையினடங்கொளுவிழியாள்
சீதளவனசம்புரைமுகமலர்ந்துதிறலுடைப்பதியுடன்சென்றாள். (௪௦)

அரவுடைமணியுமாரமுமவரன்றியருவிகள்வருவனவொருபால்
விரவியவமையினிறுற்கலைந்தாலிவிண்மழைபோல்வனவொருபாற்
கரமெனக்காந்தட்செம்மலரலர்ந்துகாட்டெரிகடுப்பனவொருபாற்
குரவணிகுழலாரெயிற்றியர்மகிழ்வாற்குரவையாட்டயர்வொலிவொருபால். ()

கரிணிகளனந்தங்களபங்கள்சூழக்கடாமுமிழ்கைக்கரித்தலைவ
னரணியினெரிகண்டார்ப்பனவொருபாற்கொடிச்சியர்கிற்புகைகொடுத்தே
யிருணிறவளகமுடித்திடுமளவினெழுமவிழுகிலெனவுன்னி
வருணவெஞ்சாயற்கண்படுகலாபமஞ்ஞைகளகவுவவொருபால். (௪௨)

தானவெங்களிற்றைப்பேழ்வயிற்றடக்குந்தகையமாசுணக்களைபரத்தோற்
றேனவிழ்முழைவான்பொதும்பரிற்றுயலத்துகிற்கொடிதிகழ்வதாங்கொருபான்
மானெனுங்கண்ணார்சாரலின்மருங்கின்மகிழ்நரம்புளர்வனவொருபா
லேனம்வெண்கோட்டாலுழுமறச்சிறார்களேனல்வித்திடுவதங்கொருபால். ()

அன்றிலோதிமங்கள்சக்கரவாகமுதலியதமரமங்கொருபாற்
குன்றருஞ்சாரற்புறவமுள்ளளவுங்குடமுலைநிரைபயிற்பொருபாற்
றுன்றியவேங்கையரிமஞ்ரயெலுவுந்துழனிசெய்தோடுவதொருபாற்
சென்றெதிர்பெர்துவர்வேய்ங்குழலோதைசெவிகளிற்பொதுளுவதொருபால்.

இத்தகைசிறப்பாற்சிறந்துளபுறவத்திறையுடனேகியெத்திசையும்
பத்தியினுலவிப்பைங்கழுநீருரும்பானலுமலர்ந்தவான்சுனையுந்
தத்தியதரங்கக்குண்டுநீர்மலிந்ததருக்குலநெருங்குகான்யாறும்
வித்தகனுணர்த்தநோக்கினளன்றேவிளம்புகற்பருந்ததியனையாள். (௪௫)

தருப்பைகள்கவர்ந்துஞ்சமிதைகளொடித்துந்தக்ககாய்கனிகளைத்தாவி
விருப்புடன்றருமேமேலேறியுமிழிந்தும்விரைமலர்கொய்துமெங்கணுமாப்
பொருப்புழைபுயத்தோன்பயிற்றுமிடையிற் புனக்கிளிநிழலெனத்தொடர்ந்தா
திருப்பயிலொருபாதபநிழலடைந்துதேவியைநோக்கியீதுரைப்பான். [ள்

கரங்களும்பதமுநடுங்கியவிழிகள்கவினுறச்சுழன்றனவென்னுச்
சிரந்தனைத்தேவிமடிமிசையிருத்தியேயமன்மகனிலஞ்சேர்ந்தான்
உரந்தனில்வாடாமாலைநின்றிலங்கவுயர்வலிப்பாசமுந்தண்டும்
வரங்கொளவேந்திமாதெதிர்நின்றான்மறமுடைத்தென்புலமன்னன். (சஎ)

வந்தவக்கடவுள்வனுயிர்வலித்துவாகுறப்போந்திடுஞ்செயல்கண்
டிந்திரையனையாள்கணவனல்லுடலமிசைவுறப்புவிமிசைப்பொருத்தி
சிந்தனைசெய்யாதொழுதுநீயாரென்னியலுடைவரனுயிர்கொண்டு
முந்துறச்செல்லுங்கருமமேனென்றாண்முன்னவன்முறுவலோடுரைப்பான். ()

கற்பினுக்கணியேதருமன்யானுனதுகணவன்வாணாளகன்றிடலா
னற்பெருங்குணத்தாறுதலால்யானேநண்ணியாங்கவனுயிர்கவர்ந்தே
னுற்பவமுளதேவிறப்பதுண்டெவற்குமுணர்குவையொருவருமுணராச்
சிற்பரவுருவங்கண்டனைநினதுகற்பினைச்செப்புமாறெவனோ. (சகூ)

ஆதலாலென்னையறிந்தனைநன்றேயானினிச்செல்குவனினிநீ
போதிமீண்டென்றுபுகன்றிடக்கனிவாய்பொற்கொடிமீளவும்புகல்வாள்
நீதியேயுரைத்ததண்ணலேநிமிடம்பிரிகிலனிருபனைநினக்கொன்
றோதவுமுணரேன்கருணைசெய்யடியேனுடன்வருமாறெனத்தொழுதாள். ()

ஏந்தலுமந்தக்கற்பினுக்கணிதனெழின்முகம்நோக்கியேயுலகிற்
காந்தனோடுடலோடணைந்தவருண்டோகருதுவதன்றிதுகருத்தின்
மாந்தளிர்மேனிவாணுதல்வேண்டும்வரமுளதென்னிலித்தினத்தி
னுய்ந்திடாதளிப்பனின்னுடையிறைவனுருயிரல்லதென்றறைந்தான். (ருக)

அம்மொழிகேட்டவாணுதலன்போடறப்பெருங்கடவுளையேத்திச்
செம்மையோயருணீசெய்வையேல்வாய்மைத்திறலுடைச்சாலுவத்திறைவன்
மெய்ம்மலர்விழிகள்புலனகன்றிருந்தான்விளங்குறவரந்தருகென்றாண்
மைம்முகிலனையான்றந்தனனெனச்சொல்வழங்கியேபடர்ந்தனன்மாதோ. ()

பின்னரும்விடாதுபின்புறமேவும்பேதையையாதபன்புதல்வன்
கொன்னுறநோக்கியரும்பெருங்கானிற்குறுகுவதறனலத்தவிர்கென்
றுன்னரும்புகழானுரைத்தலுந்துயருழவகையுநீத்தவன்றனக்குக்
கன்னலினிரதஞ்சொரிவதேபுரையக்காவலன்றருங்கொடிகரைப்பாள். (ருங)

காந்தனைத்துறந்தமாந்தருமிறந்தகளேபரத்துடன்சமமென்றே
யாய்ந்தவருரைப்பதுணர்ந்தியானகல்வதறங்கொலோவாண்டகையெய்திச்
சார்ந்தபேருலகிற்சார்வதையன்றித்தரித்திரேன்றலந்தனிலென்றாள்
சேந்தகட்கடையான்மீட்டுநல்விரதஞ்செலுத்தினுடனக்கிதுபுகல்வான். (ருச)

மாதர்களரசேயுலகினுக்கடுத்தவாறலாற்கூறலாந்தகையோ
காதலனுயிரையன்றியேதேனுங்கருதிலிக்கணந்தரவல்லன்
கோதிலாய்விருப்பங்குறித்துமீளென்னக்குலவிருகொங்கையாள்புகன்றாள்
நீதிமாதல்லனுக்கணியரசெய்திநிலைபெறும்படிதருகென்றே. (ருரு)

அவ்வரமளித்தேன்மீண்டுநீபோகென்றறப்பெறுங்கடவுணின்றுரைத்து
மௌவலங்குழலொருவிமுன்படர்ந்தான்வயப்பகல்விளக்கினைமானக்
கொவ்வைவாயணங்கும்பின்புறப்படர்ந்தாள்குணபநாயகனதைநோக்கிச்
செவ்விவாண்முகத்தாய்கேட்டிநீயென்றேதெளிவுறவோர்மொழிபகர்வான். ()

கருப்பயில்பொழுதேகாலமுநிலையுங்கருமமுமாயுவுங்கணக்கிட்
டிருப்பதாமவ்வாறுரித்தலால்விலக்கற்கிமையவர்க்கென்னினுங்கூடா
மருப்பயில்குழலாய்மீதியோதொடர்ந்துவருவதுதருமமோமீண்டுன்
றிருப்பயினகரஞ்சேர்தியென்றுரைத்தான்றேன்மொழியிவ்வுரைபகர்வாள். ()

பழிப்பறுங்கமலன்படைத்திடத்திருமால்பரித்தபல்லுயிர்த்தொகைமுழுது
மொழிப்பவனீமற்றுன்னினுமுயர்ந்தவும்பருமுளர்கொலோவடியேன்
கழிப்படுநினதுபெருமையும்வலியுங்கண்டவர்புகன்றிடக்கவலை
யொழித்தினிதுணர்ந்தேனின்புகழ்நீயிங்குணர்கிலேபோலுமாலென்றாள். ()

கணக்கொடுகருத்துமுறைமையும்பிறவுங்கடவுணீகருணைசெய்தவர்பாற்
பிணிப்புறுதுன்சொற்சுருதியேயன்றேபேசலென்மாசிலாயென்னைத் [லுங்
துணைக்கொளுமுரியோன்றன்னுடன்கொடுபோய்த்தோமறத்தீமைநீக்கென
தணப்பறுங்காலதண்டவெங்கரத்தோன்றண்ணளிபுரிந்திதுபகர்வான். (ருக)

துணைவனையன்றியேதுவேண்டுறினுஞ்சொற்றவாறளிக்குதுந்தூய
கணைபுரைவிழியாய்கேட்டிநீயென்னக்கனங்குழற்கைம்முகிழ்த்துரைப்பா
ளிணையறுமென்னையீன்றவன்மைந்தரின்றிநொந்திருந்தனனவர்க்குத்
திணைபுரந்தளிப்பானூற்றுவர்வலியசிறுவரையுதவுவாயென்றாள். (கூ0)

அன்னவாறளித்தேன்மீண்டுநீசெல்கென்றுயிழைக்குரைத்துருக்கரந்து
பன்னரும்புகழான்போயினன்மீளப்பையரவல்குலாடேர்ந்து
தன்னுளத்துணிபாற்றிசைபுகநடப்பத்தருமனுமிவள்கருத்துணர்ந்தே
முன்னரின்மீளத்தன்னுருக்காட்டிமொய்குழறனக்கிதுமொழிவான். (கூக)

கடாம்பொழிதுதிக்கைக்கிம்புரிக்கோட்டுக்கழைசுளிவேழமும்புலியும்
படாம்பொதியரியின்குழாங்களும்பயிலும்பண்பறுகானகத்திடைநீ
நடாந்துடன்றொடர்தனன்றலவென்றேநலமெலாமுதவியுமீளா
யடாதிதுவென்றேபகரலுமவனுக்காயிழையஞ்சலித்துரைப்பாள். (கூஉ)

தருமநன்மனத்தோர்தம்முடைத்தோற்றஞ்சாற்றருந்துயர்தவிர்த்தினிமை
தருமெனவுரைத்தார்குரவர்மற்றதற்கோர்பிழைபடுந்தகையவோநாயேன்
றருமவான்கடவுளுனையெதிர்ந்தேத்திச்சரணடைந்தேன்குறைசார்தற்
றருமமோவென்றாள்பருப்பதத்திறைவன்றந்தமாதினைநிகர்தவத்தாள். (கூ௩)

வேறு.

உயிரிலாதநல்லுடலினைப்பூண்களாலுடையா
லியலுமாலையாற்சாந்தினாலெழில்பெறச்செயல்போ
லயலினுள்ளபேறளித்தனையாளனையன்றிப்
பயனியாதினிப்பாவையர்க்குளவெனிற்பகராய். (கூச)

ஆதலாலுயிர்க்கேள்வனைநீத்தியானகன்று
போதலாற்றிலேனவனுறுமுலகுடன்புகுவேன்
நீதடுப்பதிங்கறனலவென்றிவணிற்பக்
கோதிலாதவன்கொடுங்கனன்மெழுகெனக்குழைந்தான். (௬௫)

அஞ்சன்மாதுநீவேண்டியதளிக்குவனறைதி
நெஞ்சினுள்ளதுவென்றனன்வணங்கிமுன்னின்றே
வஞ்சிகூறுவாண்மணந்தவனுருயிர்வழங்கத்
தஞ்சநீயெனத்தருமனுந்தந்தனனென்றான். (௬௬)

மீட்டுங்கூறுவானணங்குநீவேந்தனோடிசைந்தே
நாட்டில்வைகியேநலனுறுமைந்தரையீன்று
வாட்டடங்கணாய்வாழுதியென்றருள்வழங்கிச்
சூட்டுமௌலியான்போயினன்றோகையுமீண்டாள். (௬௭)

முந்துவைகியதருநிழலடைந்துதன்முதல்வன்
சுந்தரஞ்செறிகளேபரந்தொடைமிசைபொருத்திக்
கந்தமார்குழலிருந்தனள்கணத்தினுட்காந்த
னுய்ந்தெழுந்தனன்றுயின்றவருணர்வுறும்படிபோல். (௬௮)

போதுபுக்கதுபொலன்றொடியான்றுயில்புரிந்தே
னீதடுத்திலைகனவிடைநிகரில்சுந்தரனோர்
கோதில்கைத்தலம்பிணித்தெனைக்கொண்டுசென்றதற்பின்
மாதொருத்திவந்திரந்திடவிடுத்தனன்வந்தேன். (௬௯)

அனையவரானவனார்கொலோவென்றனனரிவை
வினையமோடவன்றனக்கினிதாயுரைவிளம்பிக்
கனவதன்றதுமெய்ம்மையேகழறுவனுனைப்
புனைவைமாமுடியென்றுசாவித்திரிபுகல்வாள். (௭௰)

இளைத்தமேனியும்வருத்தமுமிரவுநற்காடுங்
களைத்தவேடையுந்தனிமையுமொருப்படக்கண்டோந்
தளைத்தகந்தடுகளிறுடைச்சாலுவர்க்கிறையே
திளைத்திராவிவணிருத்தியோசேறியோவென்றாள். (௭௧)

அற்றைப்போதினுமடுத்தவாறன்றியின்றதிக
மிற்றைப்போதிருந்தோமிதிலெம்முடைக்குரவர்
பற்றித்துன்புழல்வாரினிப்பாவையர்விளக்கே
சற்றிப்போதினிற்சேறுமென்றெழுந்தனன்சார்ந்தார். (௭௨)

இரவுபட்டதுமிவர்வராத்துன்பத்தாலிறைவன்
குரவர்பட்டதுமுறைத்திலங்குவலையந்தணாந்தக்
கரவுபட்டிலாமனனுடைக்காவலன்வரத்தாற்
பரவுகட்புலப்படுதலும்பரவசமானான். (௭௩)

அன்னகாலையின் மைந்தனுமருகியுமடைந்தே
மன்னனொண்பதம்வணங்கலுமாமகிழ்வெய்திப்
பொன்னனாளுடன்போந்தநீபோதுபோயிதுகா
றென்னகாரணத்திருந்ததென் றிறைவினவுதலும். (எச)
போற்றிமன்மகனிகழ்வெலாமருகியேபுகல்வாள்
தோற்றமெய்துமென் றுரைத்திடத்திருவனாள்புகன்றாள்
கூற்றடைந்துதன்கொழுநனாருயிர்பறித்ததுவு
மாற்றலோடுதான்றொடர்ந்ததுமவன்சொலுமுறையும். (எரு)
மறுத்துத்தான்புகல்வாய்மையும்வரங்கண்முன் றளித்துச்
சிறப்பிற்காந்தனையளித்ததுமியல்புரைசெய்தாள்
புறத்திற்சேர்ந்துளமுனிவருமிறைவனும்புகல்சேர்
நிறத்தின்மாமியும்புளகெழநெடுந்தகைவல்லி. (எசு)
அற்புதந்திகழ்ந்தரசனுங்கட்புலனடைந்த
பொற்புங்கூறியேபூங்கொடிதனக்கிதுபகர்ந்தான்
கற்பினுக்கணிகலமெனதில்லிடைபுகுந்தா
லெற்கடாதவாழ்வார்க்குறுமெனப்பலவினிமை. (எஎ)
பின்னர்நம்முழைமேவியேபெரிதுளமுவப்ப
நன்னுதற்றனைப்பாரணமருத்தியேநலனோ
டுன்னுதற்கருங்கானகத்திருந்தனருலகந்
தன்னதாக்கியவொன்னலன்றானுயிர்கழிந்தான். (எஅ)
அனையதேயத்தோராங்கடைந்தரசனைத்தொழுது
புனையும்வேழமேற்கொண்டரும்புரந்தனிலெய்தி
நினையுமுன்னரின்மாமுடிகவித்தனர்நெறிசேர்
தனையனோடிருந்துலகெலாங்காத்தனன் றலைவன். (எகூ)
தந்தைபுத்திரர்சதம்படைத்துளமிகத்தருக்குற்
றிந்திரன்பெறும்போகமும்வாழ்வுமெய்திடலாற்
பைந்தொடிக்குளமகிழ்வுறப்பலமகவுதவிச்
சந்ததத்திருந்துலகெலாம்புகழ்வாழ்வுதழைத்தான். (அ0)
கற்பினுக்கணியென் றருங்காதையைமுனிவன்
பொற்புறப்புகன் றிவ்வுரைமீளவும்புகல்வான்
மற்புயந்திகழ்மன்னர்நீர்கேண்மினோமாசில்
நற்குணம்பெறுதையலானலமெலாந்தருமால். (அக)
கற்புஞ்சுபாஞ்சாலியிங்குமக்குளங்கலந்தா
ளிற்பெரும்பயனெய்துவீரிடரிலையுமக்கென்
றற்புதன்புகழ்ந்தாசிசொற்றிறைவரும்வணங்கித்
தற்புகழ்ந்திடத்தன்பெருஞ்சூழலிற்சார்ந்தான். (அஉ)

சாவித்திரிகதையுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள்-௫௨௩௭.

# துருவாசமுனிச்சருக்கம்.

தன்னையொத்தாண்மையிற்றெவ்வர்தனியூர்தன்னிற்றம்பியொடு
மின்னையனையாளொடுநின்றவிற்சேவகனைக்கவுசலையா
மன்னைப்புரிந்ததவப்பயனையாரேயாகவடிபணிந்தார்
பின்னையுலகினொருநாளும்பிறவார்வினையினிறவாரே. (௧)

* சாபத்தாலுஞ்சாபமொழிதன்னால்வளருந்தவத்தாலுங்
கோபத்தாலும்பேர்படைத்தகொடியமுனிவன்றுருவாசன்
றீபத்தான்மெய்வகுத்தனையான்றிகழ்பன்முனிவர்புடைசூழ
வாபத்தால்வந்தடைந்தவர்போலடைந்தானந்தவடவியின்வாய். (௨)

* அருமாதவப்பேறுனதெமக்கம்மாவென்னச்செம்மாந்து
குருமாமரபோரைவருந்தங்குஞ்சித்தலைமேலடிவைத்தெம்
பெருமானிங்கேயெழுந்தருளப்பெற்றேமென்னப்பெரிதுவந்தங்
கருமாமுனியைப்பூசித்தாரவனும்புகன்றானசியரோ. (௩)

* இட்டதவிசின்மிசையிருத்தியெரிகான்வந்தவிளைப்பாற்றித்
தொட்டகழற்காலுதிட்டிரன்கைதொழுதுதுதிப்பத்துருவாசன்
வட்டமணித்தேரவனுச்சவானத்தடைந்தான்யாமருந்தப்
பட்டவுணவிங்கமுதுசெயப்பருவமிதுவென்றுரைசெய்தான். (௪)

* மூத்தோன்குளித்துவருகவெனமுனிவருடனம்முனிதடத்துப்
போய்த்தோய்வதற்காங்கெழுந்தருளப்புரைசெய்களிற்றுமுரசுயர்த்தோன்
வாய்த்தோன்வரவுக்கென்புரிவேமதியீரெனத்தன்றம்பியர்க்கும்
வேய்த்தோள்வேள்விமடந்தைக்குமுரைத்தாங்கவரைவினவினால். (௫)

* மேவாருரைக்கவிவன்வந்ததல்லாற்பிறிதுவேறில்லை
யாவாவிதற்கின்றென்செய்வேமாமாறுகநாமெழுந்து
கோவானவனும்பலபடையுங்குன்றச்சென்றுபொருதிமைப்பிற்
சாவாநிற்பதுறுதியினியென்றான்வன்றாட்சமீரணியே. (௬)

* சுருதிக்கடவுளனையானைச்சுனைநீர்படிந்துவரச்சொல்லிக்
கருதிப்பிறநாம்புரியுமதுகடனேவென்றான்கழல்விசயன்
மருதிற்கிடைபோமவன்விரைந்துவருமாறறைமினெனமொழிந்தா
னொருதிக்கினும்வெம்பரியேற்றுக்கொத்தோரில்லாவுரவோனே. (௭)

* யாதேயாகவிந்தவிபத்தேகும்பொழுதைக்கிசையளிக
டேதேயென்னும்பசுந்துளபத்திருமாறன்னைச்சிந்திமிப்
போதேவருமிங்கவன்வந்தாற்போமிக்கவலையெனப்புகன்றான்
சாதேவனுமங்கவனிசைத்தசொல்லுக்கிசைந்தான்றருமனுமே. (௮)

* என்னேயென்னேயாதவன்வானிடையுங்கடந்தான்முனிவன்வரு
முன்னேநுகர்ந்தாஞ்சாகபலமூலம்பலபேர்முனிவரொடுங்
கொன்னேமுனியுமுனிக்கினியென்கொல்லோபுரிவதெனநின்ற
மின்னேரிடையாணடுநடுங்கிவிளைவதென்னோவெனப்பயந்தாள். (௯)

* தப்போதாமற்றம்பியர்க்குந்தருமக்கொடிக்குமிதமாக
வப்போதுணரும்படியுணர்ந்தானசோதைமகனையறத்தின்மக
னெப்போதியாவரெவ்விடத்திலெம்மைநினைப்பாரெனநின்ற
வொப்போதரியானுதிட்டிரன்றன்னுளப்போதிடைவந்துதித்தானே. (௧௦)

* திருக்கண்கருணைபொழியவருந்திருமாலிவரைத்தேற்றிமுத
லருக்கனுதவும்பாண்டத்திலன்னமுளதோவெனவினவ
முருக்கினிதழைக்கருக்குவிக்குமுறுவற்செவ்வாய்த்திரௌபதியு
மிருக்குமுறையோரன்னங்கண்டெடுத்தாள்கொடுத்தாளிறைவன்கை. (௧௧)

* அந்தவன்னஞ்சதுமறையுமன்னமாகியருள்செய்தோன்
முந்தவுலகுமுழுதுண்டமுளரியிதழினிடைவைத்தான்
வந்துசுனையில்வந்தனைசெய்மறையோரெவரும்வாரிதிமுன்
றந்தவமுதுண்டவர்போலத்தாபந்தணிந்துதண்ணென்றார். (௧௨)

* உதரங்குளிர்ந்துவடிவுகுளிர்ந்துள்ளங்குளிர்ந்துமறைநாறு
மதரங்குளிர்ந்துகண்கள்குளிர்ந்தருமாமுனிவனதிசயித்து
மதரஞ்சனக்கட்டிருவாழுமார்போன்மாயாவல்லபத்தா
விதரங்கடந்தானுதிட்டிரனென்றிவன்பான்மீண்டுமெய்தினனால். (௧௩)

* உண்டோமுண்டோமும்பருக்குமுதவாவோதக்கடலமுதங்
கண்டோமுன்னாளெவ்வுலகுங்காணுமுகுந்தன்கழலிணைகள்
வண்டோலிடுந்தார்ப்பேரறத்தின்மகனேயுன்னையரசென்று
கொண்டோரல்லாலெதிர்ந்தோரில்யாரேவாழ்வார்குவலயத்தில். (௧௪)

* நென்னற்புயங்ககேதனன்றன்னில்லந்தன்னிற்றீம்பாலுங்
கன்னற்கட்டிமுதற்பலதீங்கனியுங்கருணையுடனருந்தி
பின்னர்ப்பசிதீர்பொழுதத்திலென்பால்வரங்கொள்கெனவினவ
முன்னர்ப்பலவுமுரையாமலொன்றேமொழிந்தான்முடிவேந்தன். (௧௫)

* எம்மிற்றுய்த்தவோதனம்போலெம்மோடிகலிவனம்புகுந்தோர்
தம்மிற்சென்றுநாளைநுகரிதுவேயெனக்குத்தரும்வரமென்
றும்மிற்செல்வமுடையவன்போலுரைத்தானதனாலுயர்ந்தோர்க
டம்மிற்சிறந்தோய்வந்தனம்யாமென்றானந்தத்தவமுனியே. (௧௬)

* பரங்கொண்டுலகமுழுதுமிசைபரப்பிப்புரப்பான்பாண்டுவெனு
முரங்கொண்டுயர்ந்தோனளித்தருளுமுரவோய்நீயிங்குனக்கான
வரங்கொண்டருளுகெனமுனியைவணங்கிப்பகைத்தோர்மாற்றங்க
டிரங்கொண்டொன்றுங்கொள்ளாதியென்றான்வளையாச்செங்கோலான். (௧௭)

* அன்னோன்மொழிகேட்டம்முனியுமடைந்தான் றன்பேரருந்தவக்கான்
முன்னோனமுருந்தனுந்தம்முந்நீர்த்துவரைநகர்புக்கான்
பின்னோர்வணங்கப்பேரழலிற்பிறந்தாண்மகிழப்பேரருட்குத்
தன்னோடொருவர்நிகரில்லானிருந்தானந்தத்தனிவனத்தே. (கஅ)

துருவாசமுனிச்சருக்க முற்றிற்று.

ஆ சருக்கம்-ருஉககூ.

---

# கன்னன் கவசகுண்டலங்கவர்ந்தசருக்கம்.

---

சோகந்தீரத்தீமையெலாந்துரப்பவறிந்துநினைந்தோற்குப்
போகம்வேண்டிற்பொருள்வேண்டிற்புகழைவேண்டிற்பொன்மலர்சேர்
நாகம்வேண்டிற்கதிவேண்டினல்கவறிந்தீண்டினிமீளத்
தேகம்வேண்டிற்றரவரியாத்திருமாலடிகள்சிந்திப்பாம். (க)

சுரத்தொண்கானிற்பாண்டவர்தந்துயரந்தவிர்த்தகருமுகிறன்
புரத்தினிடைபோய்வீற்றிருந்துப்போதப்பலனாளகற்றியபின்
கரத்திலுயர்ந்தவிரவிமகன்கவசங்கனககுண்டலங்கள்
யிரப்பாலகற்றும்படிமனங்கொண்டிமையோர்பதியைச்சிந்தித்தான். (உ)

அந்தக்கணத்தில்வந்திறைஞ்சுமாகண்டலனைத்தழீஇக்கொண்டுக்
கந்தத்துளபமுடியோனுங்கண்ணுங்கருத்துங்களிகூர்ந்து
தந்தத்தழலேறரிசுமந்தத்தவிசினிடையேயுடனிருத்தி
முந்தக்கருதுகின்றதனைமுடிப்பானுபாயமொழிகின்றான். (ங)

கிரியின்சிறகையரிபடையோய்கேண்மோவாண்மோதாமமரில்
வரிவெஞ்சிலைக்கைவிசயனுக்குமாறாமுனிந்துவருகின்றா
னெரியுங்கானில்விடவரவுமிவனுக்குற்றபகையாகி
யுரியின்புதல்வன்றனக்கொருபோரம்பாகியதாரறியாதார். (ச)

கன்னன்விசையன்றனைக்கொல்லிற்கடற்பார்முழுதுங்கண்ணில்லா
மன்னன்புதல்வன்றனதேயாமொழிந்தோர்தாமுமடிந்திடுவார்
முன்னஞ்சூதிலழிந்தபகைமுடியாதிருக்கிலவர்க்கல்ல
நின்னெஞ்சறியயானறியநினக்கேவசையுநிலையாமே. (ரு)

கவசங்கனககுண்டலமென்றிரண்டும்புனையிற்கற்பாந்தத்
திவசம்பொரினுங்கன்னனுயிர்செகுப்பார்மண்ணிற்சிலருண்டோ
வவசங்கிளைஞருறத்துணைவரார்த்தக்கணத்தினடுகுரக்குத்
துவசம்படைத்தோன்படும்பயனைத்துணைவாவின்றேசொன்னேனே. (கூ)

மைந்தற்குறுதிபயில்வையெனில்வல்லேமுனிவர்வடிவாகிச்
சந்தப்பனுவலிசைமாலைத்தானுகரனைவிரைந்தெய்தி
யந்தக்கவசகுண்டலங்களளிப்பாயென்றாலவனென்று
மிந்தப்புவியின்மறுத்தறியானுயிரேயெனினுமீந்திடுவான். (எ)

இரண்டுமவனையீகவரிலிருந்தோரிருந்தபடியரசர்
திரண்டுவரினும்வெஞ்சமரிற்றிண்டோள்விசையனெதிர்நில்லார்
முரண்டுபொரும்விற்கன்னனுந்தன்முன்னேயெய்தமுடிசிதறிப்
புரண்டுமடியுமெனவுரைப்பப்புத்தேளரசுபுகல்கின்றான். (அ)

தாராரிரவிதருங்குமரன்றனைவஞ்சித்துக்கவசமுடன்
சீரார்கனககுண்டலம்யான்பெறுவனவன்பாற்றமியாக
நாராயணனேபாண்டுமகார்நவைதீர்ந்துய்யச்செய்திடுயெனக்
காராளூர்திபுகன்றுவிடைகைக்கொண்டகல்வான்கலந்தானே. (கூ)

வேறு.

மகத்திறைகருத்தினைமதித்துடல்பொருமற்
செகத்தொளிவிளக்குமொருசெஞ்சுடர்விரைந்தே
யகத்தில்விழைவான்முதலளித்தவனையெய்தி
மிகப்பின்மறைவேதியரினுற்றிதுவிளம்பும். (க0)

நந்தனனுயிர்க்குறுதிநாடிமகவானிங்
கந்தணரினெய்தியுனதாகமகலாத
விந்தைவிறல்சேர்கவசகுண்டலமிரண்டுந்
தந்திடவிரந்துகவரும்படிசமைந்தான். (கக)

அன்னதவனங்கைவயமாமெனிலடற்போர்
மன்னனுயிர்நின்றனுயிர்மங்குவதுதிண்ணந்
தன்னுயிர்தனிற்பெரிதுதானமெனலாமோ
வின்னிலையுணர்த்தினனிசைந்தனசெய்யென்றான். (கஉ)

ஆரணமெலாநிலைசெயாதபனுரைப்பக்
காரணமறிந்துரைசெயுங்கடவுடானே
தாரணியில்வேதியர்தவத்துருவுகொல்லோ
பூரணவுரைத்தியெனபுத்திரனுரைத்தான். (கங)

மைந்தனுரைதன்செவிமடுத்துநகையோடு
மிந்தமொழிகூறினனெதிர்ந்தமறையாள
னந்தரதலத்தொளிருமாதபனியானே
வந்துனதுபாங்கரிதுகூறுமகிழ்வுற்றேன். (கச)

நேயமுளதுன்னுழையெனக்கதுநிரப்பே
னுயசிலநாளிலறியப்படுநினக்கே
மாயமறையோனில்வருவானைவியவாமற்
காயமொடுவீரமுயிர்காத்தல்கடனென்றான். (கரு)

பங்கயசகாயனென லும்பதைபதைத்தே
செங்கைநிறைபொன்மலர் திருந்தடிசொரிந்தே
புங்கமுடியாற்றொழுதுபூசைமுறைமுற்றிச்
சிங்கவணைவைகுமகனோர்மொழிதெரித்தான். (கசு)

வேறு.

நிரந்தரமடியேன்சிந்தைநின்னடித்துணைசான்றாக
விரந்தவர்வேண்டுமாறேயீவதினில்லையென்ன
வுரந்தருவிரதங்கொண்டேனுயிரையார்வேண்டினாலும்
விரந்தவர்க்கருள்வானுற்றேன்மேவிநீபுகல்வதென்னே. (கள)

அய்யனீகேண்மோநாயேனருயிரம்பரத்தோர்
வையமீதுள்ளோராரும்வந்திரந்திலரேற்போரி
னுய்யவித்திருவினுய்த்தவுரகவெங்கொடியோர்க்கீந்துன்
செய்யபொற்பதத்தில்வந்துசேர்வதென்சிந்தையெண்ணம். (கஅ)

மட்டறுவாசத்தொங்கன்மௌலியாய்வானனுடன்
கட்டறுக்கவசத்தோடுகுண்டலங்கருதியென்பா
லொட்டிலாதிரந்தானென்னிலுதவுதற்குரைவேறுண்டோ
பட்டுயிரிறந்தபோதும்புகழன்றோபரிப்பதையா. (கசு)

ஆதலானிரந்தோர்க்கொன்றுமளிப்பதற்கையமின்றாற்
சாதலாய்முடிந்தபோதுந்தனதுயிரிருந்தபோது
மீதலாதில்லையென்னவிரவியற்புதத்தனாகிக்
காதலாற்பின்னுமோர்சொற்கழறினன்காளைக்கம்மா. (உ0)

மறுப்பதுகருதாயாகில்வாளமர்க்களத்திலாவி
செறுத்தனரொன்னாரொன்பதுறுதியேதிசைமுகத்தோன்
பொறித்தநாளளவேயன்றிப்புந்திகூர்ந்தெவர்களுய்ந்தோர்
வெறுப்பதெனுன்னைவாளாவிதிவழிவிருப்புண்டாமால். (உக)

ஆயதேயெனினுந்தேவர்க்கரசன்வந்திரந்தபோதிற்
பாயனீமறுமனல்கும்படிமனம்வலித்தாயென்னிற்
றேயுவெஞ்சிகைதாழ்தெய்வச்சத்தியொன்றவன்பாற்சேர
மேயதாலதுகொண்டேனுமீட்டுநீயளித்தியென்றான். (உஉ)

அத்தகைபுரிவனென்னவாதரம்பெருகக்கூறும்
புத்திரன்றனக்கங்காசிபுகன்றுதண்புண்டரீக
மித்திரனகன்றான்கன்னன்விரைமலர்முகமலர்ந்தே
மத்தமால்யானையூர்திவரவுபார்த்திருக்குநாளில். (உங)

வேறு.

வல்லார்வல்லகலைகளுக்குமறைநூலார்க்குங்கடவுளர்க்கு
மில்லாதவர்க்குமுள்ளவர்க்குமிரந்தோர்தமக்குந்துறந்தோர்க்குஞ்
சொல்லாதவர்க்குஞ்சொல்பவர்க்குஞ்சூழுஞ்சமயவாதியர்க்கு
மல்லாதவர்க்குமிவன்றானமளித்தவிடையினரிசார்ந்தான். (உச)

வேறு.

தண்டுதானெனக்குனித்துடலலமரத்தாளிணைதளர்ந்துதள்ளாடிக்
கண்டயாவருங்கைதரக்கவித்தகுடையுடன்கங்கைநீர்நுரையை
மொண்டுமேலுறச்சொரிந்தனவிரிந்தனநரையுடன்மூப்பொருவடிவங்
கொண்டதாமெனவொருமுனியாகியேகொற்றவன்வாசல்சென்றடைந்தான். ()

அடுத்ததானமும்பரிசிலுமிரவலர்க்கருளுடன்முற்பகலளவுங்
கொடுத்துநாயகன்புகுந்தனனுளைநீர்குறுகுகவினியெனக்கோயிற்
றடுத்தவாயிலோர்மீளவுமுரைதரத்தலைவனுந்தருவெனவிரைவின்
விடுத்தநான்மறைமுனியைமுற்காணவேவேந்தனுந்தொழுதடிவீழ்ந்தான். ()

என்னமாதவம்புரிந்தனன்பரிந்துநீயீண்டெழுந்தருளுதற்கென்று
பொன்னிணையாசனத்திருத்திமேலருளுடன்பூசையுமுறைமையிற்புரிய
வன்னவேதியன்றளர்ந்தவென்னடையினாலானதேபிற்பகலென்று
சொன்னவேலையினகைத்தனக்களிப்பனீசொன்னவையாவையுமென்றான். ()

அருத்தியீதல்பொற்சுரர்தருவினுக்குமற்றரிதுநீயளித்தியோவென்று
விருத்தவேதியன்மொழிந்திடநகைத்துமெய்யுயிர்விழைந்திரந்தாலுங்
கருத்தினாலுகந்தளித்திலேனெனிலெதிர்கறுத்தவர்கண்ணிணைசிவப்ப
வுருத்தபோரினிற்புறந்தரும்விபுதர்போயுறும்பதமுறுவலென்றுரைத்தான். ()

வந்தவந்தணன்கவசகுண்டலங்களைவாங்கிநிவழங்கெனக்கென்னத்
தந்தனன்பெறுகெனவழங்கலுமந்தரத்திலோர்தனியசரீரி
யிந்திரன்றனைமாயவன்விரகினாலேவினான்வழங்கனீயெனவுஞ்
சிந்தையின்கணோர்கலக்கமற்றளித்தனன்செஞ்சுடர்த்தினகரன்புதல்வன். ()

அண்டர்யாவருமலர்மழைசொரிந்தனரந்தரதுந்துபியார்ப்பக் [ன்றான்
கொண்டல்வாகனனுங்கொண்டமெய்யொழிந்துதன் கோலமெய்யுடன்வெளிநி
கண்டுமாமனமுருகிமெய்களிக்குங்கன்னனுக்கன்னெடுங்கடவுண்
மண்டுபோரினில்வயந்தருமிதுவெனமற்றொருகொற்றவேலளித்தான். (௩௦)

வெலற்கருந்திரல்விசயன்மேலொழிந்துவெஞ்சினமடங்கல்போனெஞ்சில்
கலக்கமொன்றறப்பொருதடல்புரியுங்கடோற்கசக்காளைதன்னுயிரை
விலக்குவந்தெதிர்மலைந்தபோதுனக்கென்றெண்ணுறுமறையினாலியம்பி [ன்.
சொலற்கரும்புகழ்ச்சுரர்பதிகொடுப்பத்தோன்றலுந் தொழுதுகைக்கொண்டா

நிரந்தரம்புகழ்நிலைபெறுங்கன்னனைநெஞ்சுறமகிழ்ந்தவணிறுவி
புரந்தரன்பசுந்தண்டுழாய்மவுலிப்புயல்வணனிருந்துழிப்போனா
னிரந்துசென்றுதான்மொழிந்ததும்வள்ளலீந்ததுமாங்கவற்கிசைத்தான்
வரந்தருந்திருமாலுமெய்மகிழ்ந்தான்மகபதிமாநகரடைந்தான். (௩௨)

உண்மையாகவெஞ்சமர்முகத்தெதிர்படையொன்றும்வந்துடலுறவொட்டாத்
திண்மையாலுறுகவசகுண்டலங்களைச்சென்றிரந்தவர்க்கிவன்கொடுத்தா
னெண்மையாயினுங்கிளைஞரேயேற்பினுமீந்திடார்புன்சொலுக்குரியார்
வண்மையாளர்தமாருயிராயினுமாற்றலர்கேட்பினுமறாரே. (௩௩)

வாசவன்றனக்குவிடைகொடுத்ததற்பின்வந்தகாரியநனிமுடிப்பான்
கேசவனிருந்தான்றுவரையிற்பாண்டுகேழ்கிளர்மைந்தரீ துணர்ந்து
மாசகன்றெல்லாமெய்தியதென்னவலந்துடித்திடமகிழ்ந்திருந்தார்
தேசவன்றிறலோரிடந்துடித்திடத்தஞ்சிந்தைவேறுகிவாடினரால். (௩௪)

கன்னன்கவசகுண்டலங்கவர்ந்தச்சருக்க முற்றிற்று.

ஆகூ செய்யுள்-௫௨௫௩.

---

# பழம்பொருந்துசருக்கம்.

---

* அங்நெடுவனத்திற்சின்னாளகன்றபினமித்திரப்பே
ரென்னுமாமுனிவற்கென்றேயாவருமருகுசெல்லா
நன்னலமிகுத்தநெல்லிநறுங்கனியொன்றுகண்டாள்
கன்னலும்புளிக்குமின்சொற்கயிரவங்கருகும்வாயாள். (௧)

* இக்கனியெனக்குநீநல்கென்றுவில்லிறுத்துக்கொண்ட
மைக்கனிக்களவுமானும்வடிவுடைவிசயனோடு
மெய்க்கனிவுடைமைதோன்றவிளம்பினுள்வீசுதென்றன்
முக்கனிகமழுஞ்சோலைமுகிறவழ்நாடன்பாவை. (௨)

* சோமகர்க்கரசன்பாவைசொல்லுமுன்வில்லுவாங்கி
மாமுனிக்குணவாய்நின்றமதுரவாமலகந்தன்னை
யேமுறைதொடுத்துவீழ்த்தியீதலுமாங்கட்கண்டோ
ரேமுறக்காணிலிப்போதென்படுமிறுத்தோனென்றூர். (௩)

* கண்டவம்முனிவர்சொல்லக்கடவுளர்கோமான்மைந்தன்
கொண்டவக்கனியைமூத்தக்கொற்றவன்றிருமுன்வைத்து
மண்டழற்பயந்தாள்சொல்லமதியிலாதெய்தேனென்றான்
றிண்டிறற்றேவர்க்காகத்தயித்தியராவிகொண்டான். (௪)

* காடுறைவாழ்க்கையெய்திக்காய்கனிமூலந்தின்று
நீடுறுகாலம்போக்கிநீங்கலாதிருக்குநம்மை
நாடொறுமிடையூறன்றிநன்னுவதில்லையாயி
னேடுறுதாராய்செய்வதென்கொலென்றியம்பினனே. (௫)

* அவ்வுரைவீமன்கேட்டாங்கமித்திரன்வந்தபோதே
யிவ்வுரைகேட்கினம்மையெரியெழச்சபித்தறிண்ணம்
வெவ்வுரையுரையார்முன்னமெய்ம்முனிதன்னைப்போற்றிச்
செவ்வுரைகூறினம்மைச்சீறுமோசீறல்செய்யான். (௬)

* பொறுத்திடுமேலிடாவைம்புலத்தினுறைதலாலே
மறுத்திடானையநின்றன்மாசிலாவாய்மையென்ன
நிறுத்திடுந்துலையோடொப்பானினைவினுக்கிசையத்தெவ்வைச்
செறுத்திடும்விசயன்மீளச்செப்பினன்செப்பமாக. (எ)

* செய்தவனினிதுமாந்தத்தேவர்நாளொன்றுக்கொன்றாங்
கைதவமில்லாநெல்லிக்கனியினைக்கருதுறும
லெய்தவன்றன்னையன்றியாரையுமிடான்வெஞ்சாப
மெய்தவறுதசொல்லாய்வெருவுதலென்கொலென்றான். (அ)

* வேந்தனம்மாற்றங்கேட்டுவில்வலான்றன்னைநோக்கி
யேந்திழைசொல்லவோராதினியவிக்கனியையீர்ந்தாய்
மாந்தரின்மடங்கலொப்பாய்வருத்தநீய்ழக்கயாமோ
பேர்ந்துபோய்ப்பிழைப்போமென்றான்பிதாவினுங்கருணைமிக்கோன். ()

* அம்முனிவந்தபாவத்ததனினுங்கொடிதிக்கானத்
திம்முனியுண்டிகொண்டதெனவெரீஇநகுலன்றானும்
வெம்முனிவகற்றிநாமுமேம்படவேண்டினின்னே
தெம்முனிதிகிரியானைச்சிந்தனைசெய்தியென்றான். (க0)

* விளைதவமுனிவன்கண்டுவெகுளுமுனவன்றாள்போற்றிக்
கிளைபடுநெல்லிவாசக்கேழுறுகனிமுன்வைத்தா
லுளைவுறமுனியானம்மையுறுதிமற்றிதுவேயென்னு
விளையவன்றானுந்தம்முனினைவினுக்கேற்பச்சொன்னான். (கக)

* பெண்மொழிகேளாரென்றும்பெரியவரெனக்கொண்டிந்த
மண்மொழிவார்த்தைபொய்யோவருத்தநீருற்றவெல்லா
மெண்மிகவெண்ணின்முன்னமென்பொருட்டன்றோவென்று
கண்மலராருவிசோரக்கனற்பிறந்தாளுஞ்சொன்னாள். (கஉ)

* தம்பியர்தாமும்வேள்வித்தையலுமுரைத்தமாற்றங்
கிம்புரிநெடுங்கோட்டம்பொற்கிரிவல்லோன்கேட்டபின்னர்
வெம்பரிநகுலன்சொல்லேவிதியெனக்கருதியப்போ
தெம்பெருமானையுன்னயிவனெதிரவனும்வந்தான். (கங)

வேறு.

* கண்டிருகண்ணுமிதயமுங்களிப்பக்கட்செவிப்பேரணைமறந்து
வண்டுவரையின்வாழ்தண்டுழாய்மாலைமாதவன்வருதலுமெதிர்கொண்
டண்டருமிறைஞ்சற்கரியதாளிறைஞ்சியாங்குறுமிடரினையவற்குத்
திண்டிறலறத்தின்றிருமகனுரைப்பத்திருச்செவிசாற்றினன்செப்பும். (கச)

* திண்மையாலுயர்ந்தநீவிரைவருமித்தீயிடைப்பிறந்தசேயிழையு [றும்
முண்மையானெஞ்சினிகழ்ந்தபட்டாங்கீண்டுரைத்திடக்கோட்டின்மீண்டொன்
வண்மையாலுயர்ந்தீரென்றுசெம்பவளவாய்மலர்ந்தருளினன்மாயோன்
றண்மையார்கருணைத்துராபதிமுதலோர்சாற்றுவார்தம்மனத்தியல்பே. (கரு)

* வெல்லுகவறமும்மெய்மையும்பொறையுமேகமேனியனுமல்லாமற்
செல்லு பாவம்பொய்மொழிகோபந்தயித்தியர்குலமெனத்தெளிவுற்
றல்லும்வெம்பகலுமென்மனநிகழுமலகையாமன்னேயைமுன்னங்
கொல்லுதல்புரிந்தோயென்றனன்முரசங்கோட்டியகொற்றவெங்கொடியோன்

* பிறர்மனேயவரைப்பெற்றதாயெனவும்பிறர்பொருளெட்டியேயெனவும்
பிறர்வசையுரைத்தல்பெருமையன்றெனவும்பிறர்துயரென்றுயரெனவு
மிறுதியேவரினுமென்மனக்கிடக்கையெம்பிரானிவையெனவுரைத்தான்
மறுவியுமடியுமாறுமல்லியற்கைவலிமைகூர்வாயுவின்மைந்தன். (கஎ)

* ஊனமேயானவூனிடையிருக்குமுயிரினைத்துறந்துமொண்பூணு
மானமேபுரப்பதவனிமேலெவர்க்கும்வரிசையுந்தோற்றமுமரபுஞ்
ஞானமேயானதிருவடிவுடையாய்நூல்முள்ளளவுநிற்றலினு
மீனமேயுயிருக்கியற்கையாதலினெலென்றனன்வீமனுக்கிளையோன். (கஅ)

* குலமிகவுடையரெழின்மிகவுடையர்குன்றவில்செல்வமுமிகவுடையர்
கலமிகவுடையரென்னினுங்கல்விஞானமற்பமுமிலாதவரை
வலமிகுதிகிரிச்செங்கையாய்முருக்கின்மணமிலாமலரெனமதிப்பேன்
சலமிகுபுவியிலென்றனன்வாகைத்தார்புனைதாரைமாவல்லான். (கக)

* ஒருமொழியன்னேவரம்பிலாஞானமூற்பவகாரணனென்றுந்
தருமமேதுணைவன்கருணையேதாழன்சாந்தமேநலனுறுதார
மரியதிண்பொறையேமைந்தன்மற்றிந்தவறுவருமல்லதாருறவென்
றிருவரிவிளையோன்மொழிந்தனன்றன்பேரிதையமாமலர்க்கிடையெடுத்தே. ()

* ஐம்புலன்களும்போலைவரும்பதிகளாகவுமின்னம்வேறொருவ
னெம்பெருங்கொழுநனுவதற்குருகுமிறைவனேயெனதுபேரிதைய
மம்புவிதனிற்பெண்பிறந்தவரெவர்க்குமாடவரிலாமையினல்லா
னம்புதற்குளதோவென்றனள்வசிட்டனல்லறமனேவியேயனேயாள். (உக)

* அறுவருமிவ்வாருண்மையேயுரைத்தாராதலானிரைநிரைப்படியே
மறுவணிதுளபமார்பனுங்கேட்டான்மாமுனிக்கோதனமான
நிறைசுவைபழத்தெல்லியின்கனியுநின்றகொம்பணைந்ததாலென்றும்
பெறுமுறைபெறுமேயுள்ளவாறுரைத்தாற்பெரியவர்பேசும்வாசகமே. (உஉ)

* மூளைத்தெழுகமலத்தரும்பெனவரும்புமுகிழ்முலைப்பொதுவியர்மலர்க்கை
வளைத்தழும்பகலாமரகதமலைபோல்வடிவழகுடையவெம்மாயோ
னுளைத்தெழுதரங்கப்பாற்கடன்மறவாதுறைபும்வண்டுவரையைநோக்கி
யிளைத்தவரின்னலொழித்துமீண்டகன்முனிவருமீண்டிறைஞ்சியாங்கிருந்தார்.

பழம்பொருந்துச்சருக்க முற்றிற்று.

ஆகசெய்யுள்-ருஉஎகூ.

---

# நச்சுப்பொய்கைச்சருக்கம்.

* சேயபங்கயச்சிறுவிரலங்கையிற்றிரட்டியாறுவெண்ணெ
யாயர்மங்கையரிடவிடவமுதுசெய்தாடியதிருக்கூத்து
நேயமுங்குறுமுறுவலும்புரிந்துபார்த்தருள்செயுநெடுங்கண்ணு
மாயவன்றிருவடிவமுமழகுமென்மனத்தைவிட்டகலாவே. (க)

* வண்டுசிந்தியமதுத்துளிமுகில்பொழிமழைத்துளியொடுஞ்சேர்ந்து
கண்டுசிந்தையுநயனமுமுருகுபைங்கானிடைக்கழிகேள்வி
விண்டுசிந்தனென்றொருமுனியருந்தவவிபினமேவினராகிக்
கொண்டுசிந்தனையறவிருந்தனர்குலக்குந்திமுன்பயந்தோரே. (உ)

* ஆண்டுமற்றவரடைதருகாலையிலரவவெங்கொடியோனு
மூண்டழற்பொறிகன்றியமனத்தினர்மூவருமுடன்முன்னி
மீண்டுமிப்புவிவேண்டுவரிருக்கினும்விரகுடன்முற்கோலிப்
பாண்டுமைந்தரைக்கோறுமென்றருளிலாப்பாவியர்துணிந்தாரே. (ங)

* காளமாமுனிதனைக்கொடுவருகெனக்கலந்தநீற்றொளிகூருந்
தூளமாமுனியொருவனோடறிவிலாச்சுயோதனனுரைசெய்ய
வாளமாநிலமுழுதுடைமன்னனில்வந்தனன்விரைவிற்போய்
மீளமாமாமைற்வேள்விகூர்முனியொடும்விடுத்தமாமுனியம்மா. (ச)

* ஒருமுனிக்குலங்களுக்குமுன்செய்கலாவுயர்வுடையுபசாரம்
பெருமுனிக்களித்திறைஞ்சிநீபுரிதவப்பெருமையால்வளர்கின்ற
திருநிலப்பரப்பெங்குமென்னுணையேயென்னைநீயீடேற்றத்
திருவுளத்தருள்செய்குகவெனவவன்சேவடிகளில்வீழ்ந்தான். (ரு)

* நன்கலாவிதமனைத்தையும்தெரிக்குநன்னாவுடைமுனியென்னை
யென்கொலாமிவணழைத்ததின்றெனவவனிருந்தமாமனைநோக்கத்
தன்கலாமனந்தோன்றவச்சகுனியத்தவமுனிவனைப்போற்றி
மின்குலாவருவேணியாய்நீயிவன்வெம்பகைகளைகென்றான். (சா)

* கொடுத்துமாநிலத்தின்னிசைவளர்க்குமக்கொடியபார்வியுமைவர்
விடுத்தபாரினம்வேண்டுவரிருக்கினவ்வேந்தரைவிண்ணேற்றற்
கடுத்தவோமம்வஞ்சகங்களாலியற்றுதியாமினிவ்வெழுபாருங்
கொடுத்திநீநிலைபெறவரவெழுதியகொடியவன்றனக்கென்றான். (எ)

* கன்னன்வாசகங்கேட்டபோதிரண்டுதன்கன்னமுநெருப்புற்ற
தென்னவேவவைம்புலன்களுநெஞ்சமுமிடியின்வாயரவொத்தான்
பின்னையாதவனுரைப்பதுதவங்களும்பெருந்தகைமையும்பொன்றி
முன்னரேமெழுபிறப்பினல்வினைகளுமுடிந்தவின்றெனமுன்னி. (அ)

* எண்வகைப்பெருந்திசையினுநினதுபேரிசையிலாத்திசையில்லை
மண்ணனைத்துநின்றனிக்குடைநிழலிலேமனுமுறைமையின்வாழுங்
கண்ணிலுற்றதிக்கருமநீயெக்குறைகண்டுவெங்கழற்காலாய்
விண்ணகத்தினிலேற்றுதல்புரியினும்வீவரோவீவில்லார். (௯)

* தொடங்கியான்புரிதீவினையென்னையேசுடுவதல்லதுகொற்ற
மடங்கல்போல்பவர்தங்கண்மேற்செல்லுமோமாயவனிருக்கின்றா
னிடங்கொள்பாரகம்பெறுவதற்கெண்ணுநின்னிச்சையின்படியேகி
விடங்களாலுயிரொழிப்பவர்க்கொத்துநான்வீவதேமெய்யென்றான். (௧௦)

* அசைவிலாமனத்தருந்தவமுனிவனையனைவரும்பணிந்தேத்தி
யிசையுமாறுசெய்தோமவன்பொருள்களுக்கியாவும்வேண்டுவநல்கத்
திசையெலாமுகமுடையவனிகர்தவச்செல்வனுஞ்சென்றான்வெவ்
வசையினான்மிகுகொடியகோலரசனுமகிழ்ந்துதன்மனைபுக்கான். (௧௧)

* போனமாமுனிதன்றபோவனத்தொருபுடையிடைநெடுங்கள்ளிக்
கானமானதுபுகுந்துபாரிடங்களுங்கழுகினங்களுந்துன்றி
யானையோடிடநரிதுரந்திடுநிலத்தெரிவெயிற்கழைமுத்தம்
வானெலாநெடுந்தாரகைபோலெழுமால்வரைப்புறஞ்சேர்ந்தான். (௧௨)

* அண்டர்யாவருமானுடமுனிவருமகலிடந்தனின்மற்றுங்
கண்டகண்டவர்யாவரும்வெருவரக்கடும்பலிபலநல்கி
யுண்டியால்வளர்ந்தாரழல்கோளகையூடுறும்படியோம
குண்டமெவ்வளவவ்வளவிந்தனங்கொடுந்தருக்களிற்சேர்த்தான். (௧௩)

* மிக்கமந்திரமியாமளமுதலியவேதமந்திரந்தம்மிற்
றக்கமந்திரந்தெரிந்துகொண்டாசறுசடங்கமுந்தப்பாமற்
றொக்கமந்திரமொன்றினுக்கோரெழுசுருவையினறுநெய்வார்த்
தொக்கமந்திரமனைத்தினுங்கொடுமைகூரோமமும்புரிந்தானே. (௧௪)

* தன்றனிச்சையினன்றியேழ்கடலுடைத்தராதலந்தனையாளு
மன்றனிச்சையிற்புரியுமவ்வேள்வியில்வந்துறுபெரும்பூதஞ்
சென்றெயிற்றிளநிலவெழத்துணைவிழித்தீயெழவெயில்வாய்கார்க்
குன்றெனப்பொலிந்தெழுந்ததுமுனிவனுங்கூசிமெய்குலைந்திட்டான். (௧௫)

வேறு.

* இப்பாலிவ்வாறோமஞ்செய்திவனிப்பூதமினிதெழுப்ப
வப்பாலிருந்தவனசரிதரைவர்க்கமைந்தவாறுரைப்பா
முப்பாலினுக்குமுதற்பாலாய்மும்மைப்புவனங்களுங்காக்குந்
தப்பாவாய்மையறக்கடவுளறிந்தானெண்ணந்தப்புவிப்பான். (௧௬)

* தன்மைந்தனுமத்தம்பியருஞ்சரியாநின்றதபோவனத்து
நன்மைந்தரிலோர்முனிமைந்தனன்னூலுடன்பூணசினத்தை
வின்மைந்தரையுமதியாமல்விரைந்துட்புகுந்துவிசைத்தகல்வான்
றன்மைந்தனைப்போலோருழைகொண்டோடிற்றென்றாற்சொலவுண்டோ.

* மறைவாய்ச்சிறுவன்கலைத்தோலைமான்கொண்டோடிவானிடையிற்
பொறைவாய்ப்புகுந்ததபயமெனப்புகுந்தாங்கழுதுபுலம்புதலும்
நறைவாய்த்தொடையலறன்மகனுமிளையவீரர்நால்வருந்தந்
துறைவாய்ச்சிலையோடம்பேந்தித்தொடர்ந்தாரதனைச்சூழ்புலிபோல். (௧௮)

* அகப்பட்டதுபோன்முன்னிறகுமருகெய்தலுங்கூராசுகம்போன்
மிகப்பட்டோடுந்தோன்றுமல்வெளிக்கேயொளிக்கும்விழியிணைக்கு
முகப்பட்டிடுமீண்டைவருந்தம்முரண்டோள்வன்மைதளர்வளவுந்
தகைப்பட்டொழிந்தாரதிலாசையொழிந்தாரிந்திரசாலமெனா. (௧௯)

* தடங்கானகமும்வானகமுஞ்சாரற்பொருப்புந்தாழ்வரையு
மடங்காவரும்போஞ்சூழ்போதுமப்போதந்தமான்கன்று
தொடங்காவிவரையிளைப்பித்ததொழிலைச்சொல்லினொருநாவுக்
கடங்காதின்னுமாயிரமுண்டானாலதற்குமடங்காதே. (௨௦)

* கானீதிவர்க்குத்தலைதெரியாக்கானங்கருத்துமிகக்கலங்கிப்
பானீயத்துக்கைவருமெய்பதையாநிற்பரெனவறிந்து
தூநீர்நச்சுச்சுனையாயச்சுனைசூழ்வரவோர்தொன்மரமா
யானீயவனென்றெண்ணுமெல்லாமானானிருந்தானே. (௨௧)

வேறு.

* தருமனுந்தம்பிமாருந்தாலுவும்புலர்ந்துதாகத்
துருகியமனத்தராகியுடல்புலர்ந்தமருமாங்க
ணெரியுறுகானம்போல்வானிளவலைநோக்கியின்னே
மருவரும்புனல்கொண்டோடிவருதிநீவிரைவினென்றான். (௨௨)

* அக்கணந்தனிற்சாதேவனடவிக்டோறுந்தேடி
யெக்கணுங்காணாகியென்றுதோய்குன்றொன்றேறி
மிக்கவண்சீதவாசவிரிசுனையொன்றுகாணாப்
புக்கன்னபருகலுற்றான்பொலிவறப்புலர்ந்தநாவான். (௨௩)

* செழும்புனலுதரந்தன்னிற்சேருமுன்னாவிபொன்றி
விழுந்தமையறிவுறாதுமீளவுநகுலன்றன்னை
யழுங்கினனேவச்சென்றானவனுமப்பரிசின்மாய்ந்தா
னெழும்படைவிசயன்றன்னையேவினனவனும்போனான். (௨௪)

* தம்பியர்கிடந்ததன்மைகண்டுமத்தலைவன்மேன்மேல்
வெம்புறுகொடியதாகமிகுதியால்விரைந்துவாரி
பைம்புனலருந்தியவ்வாறிறந்தனன்பரிதாபத்தோ
டெம்பியரென்செய்தாரென்றிறைவனுமிணைந்துசோர்ந்தான். (௨௫)

* வீமனங்கவனைத்தேற்றிமெலிவுறுசோகத்தோடு
யீமமொத்தெரியுங்கானமெங்கணுந்திரிந்தங்கெய்திச்
சாமுறைத்தம்பிமாரைக்கண்டருந்தடத்துநீரை
யாமெனக்கருதாதாலமாகுமென்றகத்திற்கொண்டான். (௨௬)

* பின்னவர்மூவர்சேரப்பிணங்களாய்க்கிடத்தல்கண்ட
மன்னவன்றனக்குத்தாகமாறுமோவளர்ந்துமேன்மே
லென்னவன்பட்டானென்பதியம்புதற்கெட்டுமோமுன்
சொன்னவன்றானுமிந்தச்சோகமோதொகுக்கமாட்டான். (௨௭)

* குசையுடைப்புரவித்திண்டேர்க்குரக்குவெம்பதாகையானை
யசைவில்பொற்சயிலமென்னவாண்டகைமனத்தினானை
திசையனைத்தினுந்தன்னாமந்தீட்டியசிலையின்வெம்போர்
விசையனைத்தன்கணீரான்மெய்குளிப்பாட்டினானே. (௨௮)

* நற்றுணைச்சிறுவரோடுநகுலனைநோக்கியந்தோ
வெற்றுணையிழந்தேனென்னுமென்செய்வதினிநானென்னு
முற்றுணைவனுமக்கானின்முடிந்திடுமொழியவேறோர்
பிற்றுணைகாண்கலாதேன்யாருடன்பேசுவேனே. (௨௯)

* மணிமுரசுயர்த்தோனீண்டுவருதலுங்கூடும்வந்தா
லணிதருநச்சுத்தோயமருந்தலுங்கூடுமென்னாப்
பணியுடன்செய்வான்போலப்பருமணலேட்டிற்கையாற்
றுணிவுறவெழுதியந்தத்தோயமேதானுந்துய்த்தான். (௩௦)

* பொருப்பினும்வலியகொற்றப்புயமுடைவீமனென்று
லருப்புடையறலினஞ்சமஞ்சுமோவாலமென்னு
முருப்பினையறிந்தும்வாரியுண்டுதன்னுயிரும்வீந்தா
னெருப்பினுஞ்சொல்லினாவேகினைப்பினுநெஞ்சம்வேமால். (௩௧)

* ஆருயிர்பொன்றுங்காலையமுதமும்விடமாமென்று
பாருளோருரைக்குமாற்றம்பழுதறப்பலித்தகாலை
மாருதிமுதலாவுள்ளமன்னவர்நால்வர்தம்மோ
டோருயிரானமற்றையொருவனேயொருவனானான். (௩௨)

* கட்புலனாகவேறோர்யோனியுங்காண்கலாத
வெட்புலந்தன்னிற்சோகமிஞ்சவேதாகம்விஞ்சி
யுட்புலனழிந்துபின்போமுள்ளமோடயங்கிவீழ்ந்தா
னட்புலந்தவரான்முன்னங்கானகநண்ணினானே. (௩௩)

* ஈங்கிவருயங்கிவீழ்ந்தயெல்லையிலெரிசெய்யோமத்
தாங்கவணெழுந்தபூதமம்முனிதன்னைநோக்கிப்
பாங்குடன்புரியுமேவல்பணித்தருளென்னநெஞ்சிற்
றீங்கிலாமுனியும்பூதவரசுடன்செப்புவானே. (௩௪)

* நின்றிடாதிமைப்பிற்குந்திமைந்தராய்நெடியகானிற்
றுன்றிடாவைகும்வேந்துந்துணைவருமிருந்தசூழற்
சென்றிடாவொன்றுயைந்துமிசெயற்கையாமுடலைச்சோக்
கொன்றிடாவருதியென்றுகூறியவுறுதிகேளா. (௩௫)

* ஐம்பெரும்பூதமொக்குமப்பெரும்பூதஞ்சாதிச்
செம்பொனின்ளுெளிருமேனித்தெய்வமாமுனியைநோக்கி
வெம்புகானுறைபவோரின்மென்விழிக்கிலக்கல்லரானு
லெம்பிரானினையேகொல்வனெனத்தொழுதேகிற்றன்றே. (௩௬)

* காட்டுறுகோடைவெப்பங்களைகுவான்கரியமேக
மோட்டுறுக்கொண்டுமின்னுன்முளைத்தெழுமெயிறுதாங்கித்
தோட்டிணைப்புடைகொண்டெங்குஞ்சூறைபோன்மரங்கள்வீழ்த்திக்
காட்டுறைவாழ்க்கையானைக்கண்ணுறக்கண்டதன்றே. (௩௭)

* அந்தணன்சொன்னவேந்தரைவரிலறனல்வந்த
மைந்தன்மற்றிவனேயார்விமாய்ந்ததோர்வடிவனுகிச்
சந்தனத்தருவிற்சார்ந்துசாய்முடித்தலையனுகி
மந்திரமறந்தவிஞ்சைமாக்களின்வடிவுசோர்ந்தான். (௩௮)

* சிறந்தமெய்ந்நிழல்போற்சூழுந்துணைவருஞ்சேரவிட்டுத்
துறந்தனர்போலுமியாண்டுந்துப்பிலாவெப்பந்தன்னு
லிறந்தனனிவனுமற்றிங்கென்செய்வேனென்றென்றெண்ணி
நிறைந்தநீர்ச்சுனையின்மற்றைநிருபர்நால்வரையுங்காணு. (௩௯)

* பச்செனும்புனலான்மிக்கபங்கயச்சுனையுங்கொல்லு
நச்சுவெஞ்சுனையேபோலுநால்வருஞ்சேரமாண்டா
ரிச்சுனையருந்திப்போலுமென்னினைந்தேதுசெய்தார்
நிச்சயங்கொடிதுகேட்டேனிந்தநிட்டூரமென்னுே. (௪௦)

* காவலன்வார்த்தைகேட்டுக்காளமாமுனிவனென்னு
நாவலனுமத்தீயினம்மையுற்பவித்துவிட்டான்
மேவலர்கொல்லுமுன்னேவீந்தன்ரிந்தப்பாவங்
கேவலமல்லவென்றுகிளர்சினமூண்டுமீண்டே. (௪௧)

* காலங்கண்மூன்றுமெண்ணுங்கடவுணீகலக்கமெய்தி
ஞாலங்கொணசையினில்லாநயனிதன்மகன்சொற்கேட்டுச்
சீலங்கொள்வாய்மையாய்செந்தீயெழுகானிற்சின்னீ
ராலங்கொள்பான்மையாரையார்கொல்வான்ருளிச்செய்தாய். (௪௨)

* பூண்டவெள்ளரவத்தோடுபுனைமதிவேணியார்க்குத்
தாண்டவநடனஞ்செய்யத்தக்கதோர்தழல்வெங்கானிற்
பாண்டவர்தம்மைக்கொல்லப்பணித்தனையொருகாலாவி
மாண்டவர்பின்னும்பின்னுமாள்வரோமதியிலாதாய். (௪௩)

* நீயிதற்கிலக்கமாகினின்றனையென்றுகோபத்
தீயெழப்பொடிக்குங்கண்ணுஞ்சிரிப்பெழுமெயிறுமாகி
மூவிலைச்சூலந்தன்னுல்முனிதலைதுணிந்துவீழ
வேவலிற்பழுதில்பூதமிவனையேயெறிந்ததன்றே. (௪௪)

* எறிந்ததுமீண்டுமோமவெரியிடையொளிக்கக்கானிற்
செறிந்தமாமுனிவரெல்லாந்தேவரோடிரங்கியார்ப்ப
வறிந்தவரவனியாளுமரசனைவெறுக்கத்தம்பிற்
பிறிந்தவர்மீண்டுமாவிபெற்றவாபேசக்கேண்மோ. (சடு)

### வேறு.

* மூச்சறப்புலர்ந்துயங்கியமுரசவெங்கொடியோன்
மாச்சினைத்தடஞ்சந்தனமகீருகநிழலில்
வீச்சுறப்பயிறென்றலான்மெய்யுயிரெய்தி
நாச்சுவைப்படுஞானநன்மந்திரநவிலா. (சசு)

* தனைப்பயந்தநற்றருமதேவதைதிருவருளால்
வினைப்பயன்களாலுறுதுயர்யாவையும்வீட்டிச்
சுனைப்பெரும்புனற்றுகமுமடிக்கடிதோன்ற
நினைப்புமெய்தியத்தம்பியர்தம்மையுநினைந்தான். (சஎ)

* ஆனதன்மனவலியுடனுண்டுநின்றெழுந்து
கானகத்திடைநீங்கியவறன்றருகாளை
போனதம்பியர்சேவடிச்சுவட்டினிற்போயத்
தூநிறப்புனலுண்டுவீழ்துணைவரைக்கண்டான். (சஅ)

* ஊறிலாமைகண்டுடற்றினரில்லெனவுணர்ந்து
மாறிலாதவரெங்ஙனமாருயிர்மாய்ந்தார்
சேறிலாதவெஞ்சுரத்திடைச்செழும்புனலுகரும்
பேறிலாமையினிறந்தனர்போலுமிப்பெரியோர். (சகூ)

* அண்டகோளகையனையதோராதபத்திரத்தான்
மண்டலங்களீரொன்பதும்புரந்திடவல்லான்
சண்டமாருதியெழுதியதாழ்மணலெழுத்தைக்
கண்டுநஞ்சமிக்கயத்தறலென்பதுகண்டான். (டுo)

* வெஞ்சமஞ்செயவருவர்கொன்மீண்டுமென்றருளில்
வஞ்சகன்செயும்வஞ்சனையிதுவெனமதித்து
நஞ்சநீர்கொடுதானுந்தன்னுவினைநனைக்கு
நெஞ்சனாகியநிறைபுனற்கயத்திடைநேர்ந்தான். (டுக)

* திருந்துநல்வரைச்செங்கையாலள்ளியநீரை
யருந்துமவ்வயினகல்விசும்பிடையசரீரி
கருந்தடம்புனனஞ்சிதுநுகர்வதுகருதேல்
விருந்தர்நால்வருமென்மொழிகேட்டிலர்வெப்போர். (டுஉ)

* உன்னையான்வினவுரைதனக்குத்தரமுரைத்துப்
பின்னைநீநுகர்பெருதுபெற்றனையவிப்புனலை
யன்னைபோலுயிரனைத்தையும்புரந்திடுமரசே
யென்னையோபெருந்தாகம்விஞ்சிடினுமின்றெனவே. (டுங)

* பெருநலம்பெறுமகனையப்பேரறக்கடவு
ளிருவிசும்பினிலருவமாயியம்பியமாற்றந்
திருவுளந்தனிற்கொண்டுதன்செங்கைநீர்வீழ்த்திப்
பொருவிலாமகன்புகலுவபுகறிநீயென்றான். (௫௪)

* சொல்லுநூல்களிற்பெரியதேதரியமெய்ச்சுருதி
யில்லறத்தினுக்குரியதேதெண்ணுடையில்லாண்
மல்லன்மாலையின்மணமுளதேதுவண்சாதி
நல்லமாதவமேதுதங்குலம்புரிநடையே. (௫௫)

* முனிகுலந்தொழுகடவுள்யார்மொய்துழாய்முகுந்த
னனைமணங்கமழ்குழலினர்க்கியற்கையாதுயர்நாண்
தனமிருந்தவர்க்கேதரண்டகைபெறுதான
மினியதேதிருசெவிக்கிளங்குதலையரின்சொல். (௫௬)

* நிற்பதேதுகொனீடிசையொன்றுமேநிற்குங்
கற்பதேதுகொல்கசடறக்கற்பதேகல்வி
அற்பமாவதேதனைத்தினுமயற்கரத்தேற்றல்
சிற்பமாமிவைசெப்பெனச்செப்பினன்சிறுவன். (௫௭)

* இவ்வகைப்பலவினவலுமியம்பியமகனை
யவ்வயிற்பெரிதுவந்துகண்ணினுக்கிலக்காகிச்
செவ்வையிற்பொலஞ்சிலம்பெனச்சேர்ந்துமெய்தழுவி
வெவ்வயிற்புரிவிரகெலாம்விளம்பினன்மாதோ. (௫௮)

வேறு.

அறப்பெருங்கடவுளென்றறிந்துதாதையைச்
சிறப்புடன்சேவடிசென்னிசேர்த்திய
மறப்பெரும்புதல்வனைமகிழ்ந்துநம்பிய
ரிறப்பினையொழிப்பதற்கேதுவுண்டென. (௫௯)

* நச்சுநீர்குடித்துயிர்நீத்தநால்வரி
லுச்சமாமன்புடையொருவன்றன்னைநீ
யிச்சையானிம்மன்றயியம்பியெண்ணியோ
ரச்சமற்றழையெனவருள்செய்தானரோ. (௬௦)

* தாதைகூறியமறைதனைக்கொண்டேசுத
னேதமுற்றிடர்வகையினையதம்பியை
யூதைவந்துள்புகவுணர்ச்சிநல்கினன்
வேதமுநிகரிலாவிரதவாய்மையான். (௬௧)

* கண்டுநின்றறப்பெருங்கடவுள்வாயுவின்
றிண்டிறன்மாமகன்றேவர்கோமகன்
மண்டழல்விடத்தினுன்மடியமாமருத்
தண்டர்தன்னிளவலையழைத்ததென்னென்றான். (௬௨)

* குத்திரமிலாமொழிக்குந்திக்கியாளொரு
புத்திரனுளனெனப்புரிந்துநல்கிஞய்
மத்திரிக்கொருமகவில்லைவல்லவர்
சித்திரம்வகுத்தெனத்திகழுமேனியாய். (௬௩)

* என்றுதன்றுதையோடியம்பத்தாதையு
மன்றலந்தொடைமுடிமைந்தனுக்கமர்
வென்றிடுமறைகளும்வில்லொடெஃகம்வே
லென்றபல்படைகளுமினிதினல்கினன். (௬௪)

* கருதலனழைத்ததுங்காளமாமுனி
புரிதழல்வளர்த்ததும்பூதம்வந்தது
மருகிவர்நச்சுநீரருந்திமாய்ந்ததும்
விரிசினத்துடனதுமீண்டுபோனதும். (௬௫)

* முனிவனைக்கொன்றதுமுனிவன்வாய்மையிற்
றனிவனத்துழையினைத்தொடர்ந்துபோயதுந்
தனிவனத்திடைவிடத்தடாகஞ்செய்தது
மினிமையிற்புத்திரற்கியாவுங்கூறினன். (௬௬)

* நன்பெருவனஞ்செறிநாளகன்றன
பின்பிறரறிவுறப்பெற்றிபெற்றுநீர்
தன்புறுதிருமெனச்சொல்லியேகினு
னன்பினலருள்புரிந்தரியதாதையே. (௬௭)

* தம்பியரனைவருந்தத்தமாவிபெற்
றும்பரிற்றலைவனைமுரியதந்தையை
வம்பவிழ்மலரடிவணங்கிநெஞ்சுட
னம்பகமலர்ந்துதம்மடவியெய்தினர். (௬௮)

* தீதறக்கானிடைச்செறிந்தவைவரும்
போதுறத்தொடர்ந்தொருபிணைபின்போனது
மேதமுற்றிறந்ததுமிறந்துமீண்டது
மாதுயர்த்திரௌபதிக்கறியக்கூறினர். (௬௯)

வேறு.

ஆரெனக்கெதிரென்றியம்பலுற்றேருங்குமரவுயர்ப்பதாகையன்புணர்ப்பாற்
காரெனக்குமுறும்பூதம்வந்தைவருயிருணவொருசெயற்காள
னீரினைச்சமைத்துக்கடவுள்வந்தளித்தநீர்மையானேர்ந்தவைபிறவும்
பார்மிசைதோயத்துற்றதோர்தயிலமொழிவறப்பரந்தபோற்பரந்த. (௭௦)

கேட்டபோதினைந்துதுணுக்கமுற்றுவக்கைக்கிளைத்தெழக்கேழ்கிளர்திருமன்
ஞேட்டலர்தெரியற்றுரோணன்மாமைந்தன்பகீரதிசுதனுடன்விதுரன்
வேட்டெழுமனத்தேரோடேனையர்பிறரும்விறல்கெழுபாண்டவர்விளங்குங்
காட்டினையணைந்தார்துருபதன்முதலாங்காவலர்பற்பலர்கலந்தார். (௭௧)

மற்றவர்வரலும்பாண்டுவின்மைந்தர்மகிழ்ந்தெதிர்சென்றடிவணங்க
வுற்றுடன்றழுவியுவகைமீதோங்கவுபவனத்தியாரையுங்கொணர்ந்து
சொற்றவைகடன்களியாவையும்பரிந்தோன்றன்மாமதிமுகநோக்கி
வெற்றிவெஞ்சிலேவேள்வென்றியைக்கடந்தவீடுமனிணையனவிளம்பும். (எஉ)

அசைவிலாத்திறலாயாதிபாண்டரங்கனவிர்முடிக்கணிசிலையணிந்து
திசையினுற்புகழ்சேர்தேவர்கோன்பகையாந்தயித்தரைத்திறலொடுந்தடிந்து
விசையவாட்டடக்கைவிசயன்வந்தடைந்தவென்றியும்வன்றிறல்வீம
னசையினல்குபேரனளகையிலடைந்துநறுமலர்கொணர்ந்தவாசகமும். (எக)

கண்ணிலான்மதலைக்கருள்புரிமுனிவன்கடாவிய * திருதிகையடாம
லெண்ணலாங்கடவுள்விடச்செலத்தீட்டியிட்டதும்விட்டதும்யாவு
மண்ணெலாம்பரந்ததாதலால்வினவவந்தடைந்தோமெனவணங்கி
நண்ணலார்புகழ்தோளுதிட்டிரனிருந்தானுன்குமூன்றுண்டுமேகியதே. (எச)

அவனியைத்துறந்துபுகுந்தநாடொடங்கியாறிரண்டமரர்நாளளவுங்
கவினுறவைவர்புரிந்தவாறனைத்துங்கட்டுரைத்தனமுளங்கோடி
சிவனெனச்செறுநர்படநகைத்தழிக்குஞ்செல்வனேயென்றனன்புலனும்
பவனமுமகத்துளொடுக்கியவைசம்பாயனரெனுமுனிவரனே. (எரு)

மருத்திகழ்சோலைவில்லியூரிறைவன்வகுத்தவேழ்சதத்திருமூன்று
விருத்தமுமுழுதலைநல்லையனுவிற்கலைமகள்விளம்பியதிரண்டா
யிரத்துநாற்பஃதுமிருமையுமிரண்டாயிரத்தெழுநூற்றுநாற்பஃது
மருத்திகொண்முனிசொற்றெருகுத்தருந்தமிழாலறைந்தவாரண்ணியபருவம். ()

நச்சுப்பொய்கைச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - ருஉஅஉ.

---

ஆரணியபருவம் முற்றிற்று.

---

* திருதிகை—யாகத்தெழுந்தபூதம்.

நான்காவது,

# விராடபருவம்.

## நாடுகரந்துறைசருக்கம்.

கருவிடையெய்தார்நரகினிற்பயிலார்காலனைக்கனவினுமதியார்
வெருவருவிழிவேன்மடந்தையர்காமவேட்கையாம்வேலையிலழுந்தார்
பொருமொருதிகிரிவலக்கரத்தணிந்தபுண்ணியன்விண்ணவர்பெருமான்
றிருவருமார்பன்றிருவடிக்கடிமைசெயுமடியவர்க்கடியவரே. (க)

பொற்புறுசடிலத்தாபதனுரைத்தபுனிதவான்கதையெனுமமுதங்
கற்புடைவபுட்டைகொழுநனுமிரண்டுகன்னமாம்வாய்வழிபருந்தி
யற்புதமடைந்துமீளவுமைவர்க்கடுத்தவாறுரைத்தியென்றிறைஞ்சி
மற்புயம்புளகமரும்பிடவினவமறைமுனிமகிழ்வொடும்புகல்வான். (உ)

* அரவவெங்கொடியோனேவலின்படியேயைவருமாறிரண்டாண்டு
துருபதனளித்தபாவையுந்தாமுஞ்சுருதிமாமுனிகணம்பலவும்
பரிவுடன்மலரும்பழங்களுங்கிழங்கும்பாசடைகளுமினிதருந்தி
யொருபகல்போலக்கழித்தபின்பொருசாருள்ளிருந்துசாவுதல்செய்தார். (ங)

* தொல்லறக்கடவுளருளுடனளித்ததோன்றறன்றுணைவரைநோக்கிக்
கல்லமர்கிரியுங்கானமுமிடமாக்கழித்தனமொழிந்தனகால
மெல்லையோராண்டுமியாவருமுணராதிருப்பதற்காமிடமியாதோ
சொல்லுமினென்றனென்றலுந்தொழுதுசுரபதிமகனிவைசொன்னான். (ச)

* நீதியும்விளைவுந்தருமமுநிறைந்துநிதிகள்மற்றியாவையும்நெருங்கி
யாதியின்மனுநூல்வழியினிற்புரப்பானவனியைமனுகுலத்தரசன்
மாதிரமுழுதுமவன்பெரும்புகழேவழங்குவதமரும்வேள்வி
வேதியர்பலருமுறைவதுமவனேவிராடர்கோன்மச்சனுடையா. (ரு)

* ஆங்கவனகரியெய்திமற்றின்றேயைவருமணியுருக்கரந்து
தீங்கறவுறைவதல்லதுவேறோர்சேர்விடமிலதெனச்செப்பத்
தேங்கியவருளுக்கிருப்பிடமானசிந்தையான்சிந்தையிற்றுணிந்து
பாங்குறையரசர்யாரையுந்தத்தம்பதிகளேசெல்கெனப்பகர்ந்தான். (சு)

* முனிவராயுள்ளதபோவனத்தவரைமுடியுறத்தனித்தனிவணங்கிக்
கனிவுறுமன்பாலென்றுனனும்மைக்காண்பதென்றவர்மனங்களிப்ப
வினியனவுரைகள்பயிற்றியாவரையுமேகுவித்திற்றைநாளிரவிற்
றினகரனெழுமுன்செல்வமச்செல்வன்றிகழ்தருநகர்க்கெனச்செப்பா. (எ)

* கல்கெழுகுறும்புஞ்சாரலங்கிரியுங்கடிகமழ்முல்லையம்புறவு
மல்குநீர்ப்பண்ணைமருதமுங்கடந்துவன்னியிற்பிறந்தமாமயிலும்
வில்கெழுதடக்கையிளைஞருந்தாமும்விராடர்கோன்றனிக்குடைநிழலிற்
பல்குலமாக்கள்வாழ்வுகூர்வளனுடைடைந்தனன்பாண்டவர்தலைவன். (அ)

* தராதலமுழுதுமுடையகோமகனுந்தம்பியர்நால்வருந்திருவு
மிராவிடைவிரவினுறிடைக்கிடந்தோரெண்ணமுமிருக்கையும்வாய்ப்பக்
கராமுலாவரும்பைந்தடமும்வண்காவுங்கனகவான்புரிசையுஞ்சூழ்ந்த
விராடன்மாநகரியெல்லைபுக்கொருபான்மயானபூமியினிடைவிரவா. (கூ)

திருவருகாலைக்கடன்முறையவனோர்பொய்கையிற்றீர்த்தபின்பராரைத்
தருநிழலிருந்தேயுடலணங்கொழித்துதவுமியருண்முகநோக்கி
யிருகரங்குவியவறனுடைக்கடவுளீன்றவனுன்றகேள்விகளி
லொருவருநிகராயாங்கண்மேற்பயில்வதுரைத்தருளென்னவுமுரைப்பான். ()

பன்னிருவருடங்கழித்ததுங்கானிற்பரிபவமடைந்ததும்பெரிதன்
றென்னினியுரைப்பதிறைநகர்புகுந்தாறிருதுவுங்கழிப்பதேபெரிதாங்
கன்னவில்புயத்தீர்வடிவினுலுரையாற்காரியப்படுதலாற்சிறிதே
யொன்னலருணரின்மீண்டுகான்புகுந்தேயுறுதுயரெய்தலாமுறையால். (கக)

ஆதலாலும்மையொருவருமுணராதடலுருவங்கள்வேறுகித்
தீதிலாநாமம்வேறுகொண்டிந்தச்செழுங்குலமன்னனையெய்தி
யோதலாந்தொழிலொன்றவரவர்க்கியைந்ததொழுகுதலொருப்படப்புரிவ
தீதலாலுறுதிவேறிலையென்றுனிருக்கெலாங்கருத்துறுமிருடி. (கஉ)

மாமுனியுரைத்தவின்சொல்கேட்டந்தமணிமுடிமன்னவர்பெருமா
னுமினிப்புரியும்வண்ணமிங்கிதுவேயமுகெனவனுசர்கடிகைத்துச்
சோமனுமளித்ததாதையுநிகராத்தூயவன்றேயமன்னவர்கள் [யுாய்.
கோமுனியொருவன்பாலடைந்தெமைப்போற்கொடுந்தொழிலியற்றுமோகுறி

பாரெலாந்தனதுபஃறலைபுனைந்தபாந்தளுயகன்பலநாவிற்
காரெலாஞ்சொரிந்தமழையெனச்சொரியுங்கலைமறைப்பொருளெலாங்கடந்து
தாரெலாம்புனைந்தமணிமுடியரசர்தனைத்தொழப்பெருமகமுடித்துச்
சீரெலாம்படைத்தோனெளியர்பாலேவற்செய்வதோவிதியெனத்திகைத்தார்.

தம்பியருள்ளமுணர்ந்துதிட்டிரனுஞ்சாற்றுவான்மாற்றலருணரா
தும்பரிலொருவனுமறக்கடவுளுதவியவரத்தினன்மற்றதேர்
பைம்பொனூர்மேனிவேதியனுகிப்பார்த்திபன்றனதுழைக்குறுகி
யிம்பராங்கவனேகைதொழவாசியிருக்குடனுதவுவன்மன்னே. (கரு)

எவ்விடமிருந்ததேதுகாரணத்தாலிப்பெருநகரடைந்ததுவென்
றவ்விறலரசன்வினவினனென்னிலறன்மகனருகினண்பாவன்
வெவ்வழல்வனத்தினெய்தியனான்றுமவனொடுமேவினன்மீண்டிங்
கிவ்வையினோராண்டிருப்பதுக்கடைந்தேனென்பெயர்சங்கனென்றிசைப்பேன்

சுருதிகண்மிருதியுபனிடஞ்சத்தஞ்சோதிடமாதியாக்குரவர்
கருதியவெண்ணெண்கலைகளுமுணர்வன்கார்முகப்பயிற்சியுந்தெரிவன்
வருதிறற்சூதின்வல்லமையுணர்வேன்மன்னநீயருள்புரிந்திருத்தி
லொருதினம்பிரியாதாண்டுநின்னுழைநின்றுவகையிற்பயிலுவனென்பன். ()

அத்தகையருடன்றெனைப்பரிவோடுமருகுறவிருத்தியபின்ன
ரெத்தினமவனுக்கெவ்வுரையிசைவதினிதுணர்ந்திகலறமொழிவன்
வித்தகவரசின்மாண்பினும்வினோதவிதத்தினும்வேந்துளமகிழ்செய்
துத்தமனிவனென்றவையுளோர்புகழவொழுகுவன்மேன்மையோடென்றான்.

ஒருதனியாழியுருட்டியேழுலகுமோம்பியகுருகுலத்தொருவன்
பெருமிதவாய்மைசெவிப்படவிளைஞர்பெரிதுவந்தேற்பதாமென்றார்
கருதரும்வாயுமதலைவாண்முகமேற்கண்மலர்பரப்பியேகலுழி
பெருகவோர்வாய்மைபேசினன்பொறையிற்பேசருந்தேசுடைப்பெருமான். ()

இடும்பனையாவிகவர்ந்துமாமறையோரிடர்கெடப்பகனுயிர்போக்கித்
தொடுங்கழற்காற்கிம்மீரனைவதைத்துத்தொடர்ந்தருமியக்கரூர்புகுந்து
கடுஞ்சமரியற்றிப்பைம்பொனின்மலருங்காய்மணிமாலனுருயிரு
மடுங்கையாற்பறித்தேசடாசுரனுயிரழித்தெமைக்காத்தநீயன்றோ. (௨௦)

இரக்கமிலரவக்கொடிக்கிறைவிடமிட்டிழிவறுகங்கையிலிடுநான்
றுரக்கடுந்திறலோடுரகரூரடைந்தீண்டுற்றெறமையுய்ந்திடத்தந்தா
யரக்குமாளிகையிலெந்தமையளித்தவண்ணலேநீகொலோவொருவன்
புரத்தினிலமர்ந்துதொழில்புரிந்திருத்தல்பூண்டையென்றுகுலம்பொருந்தி. ()

ஆயதேலொருவற்கிதஞ்சொலவறியாயரசுடைமாட்சிமையுணர்ந்து
நேயமேபெறுதலுணர்ந்திலையியற்றுநெறித்தொழில்கற்றிலையந்தோ
தூயநற்குலத்துவேந்துளமுவப்பச்சூழ்ந்தபேரவையினர்வியப்பத்
தாயவன்கணர்களுணர்வுறுவண்ணந்தரிப்பதெவ்விதத்தெனத்தளர்ந்தான். ()

வேறு.

மாண்படுமுன்னவன்வாய்மைகேட்டுழி
பூண்படுமானமும்புகழுநீங்கலா
வாண்படைமாருதிவழங்கினனரோ
சேண்படுசெவிகளினமுதஞ்சேர்தல்போல். (௨௩)

அறுசுவையுண்டிபட்டமைக்குமோர்தொழின்
மறுவறவென்வயின்வாய்த்ததுண்டதிற்
கறைகெழுவேலினன்களிசிறந்திட
முறைபடவியற்றியான்முதன்மைசார்வனே. (௨௪)

தேவர்நல்லமுதமுஞ்சிறப்பின்றமென
யாவருமின்பமுற்றிருந்தருந்தவே
மேவருமடிசிலோடெவையும்வேண்டிய
தாவெனக்கேட்குமுன்சமைத்துநல்குவன். (௨௫)

இந்தனம்வேண்டுமேலிருந்தபாதவ
மந்தரத்தளவுயர்ந்தாழ்ந்ததாயினு
முந்துறக்கைகளான்முறித்துமாட்டுவன்
சந்ததநவியத்தாற்றறித்தல்வேண்டுமே. (௨௬)

கற்பொருதிண்புயக்கைவன்மல்லரை
மற்பொருதழிப்பவும்வல்லன்மாண்புடை
விற்பொருதோளினுன்விராடனன்புறப்
பற்பலபடிகளாற்பயில்வன்பார்மினோ. (௨௭)

ஆரைநீயெனவரசெனைவினவுமேற்
பேரையோர்பலாயனனென்றுரைப்பன்பின்
பூரையேவினவுமேலுதிட்டிரன்பெருஞ்
சீரையோதருநகரென்றுசெப்புவன். (௨௮)

கொடுமையும்வஞ்சமுமிலாதகோமகன்
படிமிசைநின்குலம்பகரென்றேதுமேன்
மடமையினறப்பெருங்கடவுண்மைந்தனுக்
கடியனென்சூத்திரனவனென்பனே. (௨௯)

என்றிவனுரைத்தலுமேந்தறிண்புயங்
குன்றெனவோங்கிடமகிழ்வுகூர்ந்திதே
யின்றுநின்றனக்குறித்தென்றுகூறினன்
கன்றுமீதானினுங்கருணைபொங்கவே. (௩0)

காற்றின்மாமகனுளக்கருத்துணர்ந்தபின்
பாற்றல்சாலரிமகனருளிலங்கிய
தோற்றமார்வாண்முகந்தோன்றநோக்கியே
சாற்றருந்துயருழந்திதனைச்சாற்றினன். (௩௧)

வேறு.

கடவுளர்தமக்கரியகாண்டவமளித்தே
சுடரெரிதனக்குறுபெரும்பசிதொலைத்தாய்
வடகுலகிரிக்கணுநின்மாசில்புகழ்நீட்டிக்
கொடையரசர்தந்ததிறைகொண்டெளிதின்மீண்டாய். (௩௨)

நாலுமறையும்பிறருநான்முகனுமீறின்
மாலுமறியாததனிவானவரெதிர்ந்தே
சேலுமிழ்தடங்கணுடுசேவின்மிசைநிற்ப
வேலுமிருகண்புனிதமெய்தவெதிர்கண்டாய். (௩௩)

காரணனளித்தபடைகைக்கொள்செயலன்றி
யாரணன்வசுக்கடிசையாதிபர்வனத்தார்
நாரணன்முதற்கொளிமையோர்பலருநல்கச்
சீரணிபெறத்தகையதேவர்படைபெற்றாய். (௩௪)

வானவர்தமக்ககிதமாகியவல்வஞ்சத்
தானவர்குலத்தைநொடியிற்றனிமடித்தாய்
மானவயிராணியமுதூட்டநனிமாந்தி
யீனமறுதந்தைதவிசேறியுடனுய்ந்தாய். (௩௫)

துத்தியுரகக்கொடிகொடோன்றலைவிரைந்தே
கைத்திறலினிற்பிணிசெய்கந்தருவர்கோவை
யித்திறமுரைக்குமுனெனக்கெதிர்கொணர்ந்தே
வைத்தரசுடைக்கவலைமாற்றியவலத்தோய். (௩௬)

இத்தகையபோர்வலியியற்கையுரவோய்நீ
சித்திரவிலாளிநகர்சேர்ந்துளமடங்கி
யெத்தகையவன்றொழிலியற்றுவையெனத்தன்
புத்திமருளக்கலுழிபொங்கவிதுசொன்னான். (௩௭)

அண்ணலுளமுந்தனதகத்தறிவுமோரார்
வண்ணவரிவார்முலைசுமத்திரைமணாள
னெண்ணமுறவுன்னியொருவாசகமிசைப்பேன்
கண்ணருள்செயக்கடவதென்றுகழலுற்றான். (௩௮)

பெண்ணிலிழிபேடியள்பெருந்தகமைதாங்கி
மண்ணின்மிசையோர்வருடம்வைகுமுறையாக
விண்ணிடையுருப்பசிசபித்ததுளமேனு
மெண்ணுமிடையெய்தும்வகையெந்தைபெறச்செய்தான். (௩௯)

வாடியமருங்குலரமங்கையிடுசாப
நாடியநெறிக்குநலனல்கியதுபோலாஞ்
சூடியகரந்தைமுடிசோரிகமழ்வேலா
னீடியபெருஞ்சபையினேயமுறுபோதில். (௪0)

பேடியுருவோடரசுபேரவைபுகுந்தே
நாடியமடந்தையர்நடஞ்செய்வினையெல்லா
நீடவுணர்வேனெனநிகழ்த்தினருள்செய்தே
நாடகவரங்கினிடையுய்ப்பனிதுநன்றே. (௪௧)

பேரினைவினவிலுயர்பிரகந்நளையெனச்சொற்
றேருறவிருப்பன்முதலெங்ஙனமிருந்த
வூரெனிலழற்கணிலுதித்தவடனக்கே
சீரினடத்தொழில்செலுத்தினவளென்பேன். (௪௨)

இத்தகையின்மன்னருளெய்தும்வகையோதிச்
சுத்தமுறவாறிருதுவுந்தொலைதல்செய்தா
லுத்தமமிரண்டுறுதியொன்றுபடுமென்றென்
புத்திநிலைதங்கியதெனப்புகலும்வேலை. (சங)

என்றமொழிதன்செவியினெய்தவிதுசால்பா
மின்றிதுசெயக்கடவதென்றிறைமகிழ்ந்தே
பின்றையவனுக்கிளையபேரறிவுளோனை
வென்றிபெறநோக்கியறன்மாமகன்விளம்பும். (சச)

சொற்றபடிசெய்ததலதோர்தொழிலுநீமுன்
கற்றதிலைமெய்வியர்வுகண்டதிலையன்றே
குற்றமறுகோமகனுளங்குழையவெம்மைப்
பற்றலரடாவகைபயிற்றலெவனென்றான். (சரு)

மானுடையதம்முனுரைவந்துசெவியெய்தத்
தானுமெதிர்நின்றவிசயன்றனதுதம்பி
வாணகைமுகங்கமலமாமலர்கடுப்ப
நீணிலமிருந்துறுதிநேயமொடிசைத்தான். (சசு)

வேறு.

கொய்யுளைப்பரிக்குலனுடன்வருணமுங்குரனு
மெய்யினிறபயில்கதிகளுஞ்சுழிகளின்விரிவு
மையமற்றுணர்ந்திடுவன்மற்றதற்குறும்பிணிகள்
செய்யகோலினுய்சிறுவரைப்பொழுதினிற்றீர்ப்பன். (சஎ)

ஆதலாலியானச்சுவவிலக்கணனாகி
யோதலாமிந்நகரிறையுற்றபேரவையிற்
காதலானடுத்தவனுடனிவ்வணங்கரைத்துப்
பேதியாதவனிருந்தவத்தொழிலினிற்பெயர்வன். (சஅ)

இருந்தவூரினைப்பெயரினைவினவினனென்னி
லருந்திறற்பெருமறன்மகன்பரிபுரந்தளித்தேன்
பெருந்திறற்பெருந்தாமக்கிரந்தியாம்பெயரேன்
பொருந்தவுன்வயினிருக்குமாறெய்தினன்புகழோய். (சகூ)

என்றுகோமகனின்புறவிசைவனவழங்கி
வென்றியோடவன்வெம்பரிக்குலம்பரிந்தளித்தே
மன்றன்மாலிகையாடைபூண்வரிசைகளேந்தி
நன்றுநன்றெனவொழுகுவனென்றனனகுலன். (ருo)

தம்பிவாய்மையாற்றருமனுமாமகிழ்தாங்கி
யிம்பர்நீபுரிதன்மைநல்லியற்கையென்றிசைத்தே
நம்பவேனிலானிவனெனுநால்வருக்கிளையான்
வம்பருமலர்மாமுகநோக்கியேவகுப்பான். (ருக)

தந்தைமார்பினுமின்றவள்சிரத்தினுந்தமியேன்
விந்தநேர்பெருந்தோளினும்பயின்றமெல்லடிகள்
செந்தழற்புறவம்புகுந்துலவியுஞ்செய்த
முந்தவல்வினைதீர்ந்திலதன்றுகொன்மொய்ம்போய். (௫௨)

வம்பிவான்றுளிபிலிற்றியபாரெலாம்புரக்கு
மம்பின்விற்கையான்மைந்தனுயருளிலெம்போல்வார்
தம்பியாகியுந்துன்பநீதாங்கினையன்றே
வெம்பியாங்கதுநிற்கநீயெத்தொழிலுணர்வாய். (௫௩)

மேவலார்தெளியத்தகாவேடமும்பொறுத்துக்
காவலானுழைகலந்தவன்களியினிற்சிறப்ப
வேவலேதுநீயியற்றலென்றிருகணீர்களுழத்
தேவர்போலமுக்காலமுந்தெளிந்தவனிசைப்பான். (௫௪)

ஐயகேட்டியானாவினம்புரந்தளிப்பவனாய்
மெய்யிலங்கவத்தேயநாயகனவைமேவிச்
செய்யவான்றிரட்கடுத்துளதீமைகள்விலக்கக்
கையறிந்தவனெனுமுறைமைதெரிவுறக்கழறி. (௫௫)

அந்தமச்சநாடாள்பவனருளினையெய்தித்
தந்திரஞ்செறிபாலனென்றொருபெயர்தாங்கி
விந்தமன்னதோட்பாண்டவரானிரைமேய்த்த
நந்தகோபனென்றொழுகுவனலமுடனென்றான். (௫௬)

வேந்தனுற்றவும்வியந்திதுமிகுதியுமினிதென்
றேய்ந்தகற்புடையாகசேனியையருளிருந்த
சாந்தினுற்றிலதஞ்செறிவாண்முகநோக்கி
யேந்திழாய்புரிதொழிலெவனென்றுயிர்த்திருந்தான். (௫௭)

மன்னனுங்கருந்திருவுளத்துன்னியமாண்பு
மின்னனாளுணர்ந்தோருரைவிளம்பினளன்றே
பன்னவேறிலைவண்ணமாமகளெனும்படிவந்
துன்னவேகியாங்கரசுடைத்தோகையிற்குறுகி. (௫௮)

அணிதிருத்தவாள்விழிகளுக்கஞ்சனமெழுத
மணிகுயிற்றநன்மாமலர்மாலிகைதொடுப்பப்
பிணைமுலைத்தடத்தொய்யில்களெழுதவெண்பிறைபோற்
றணியும்வாணுதற்றிலகமுந்தீட்டயான்றக்கேன். (௫௯)

கந்தங்கூட்டநற்சுண்ணங்கள்பழுதறக்கலப்பச்
சந்தணிந்திடமென்குழன்முடிப்பவித்தகைய
முந்துறுந்தொழில்வல்லள்யான்கற்புடைமுதல்வி
யுந்தனன்பிலோர்வருடமிங்குறநினைந்தடைந்தேன். (௬௦)

விண்ணிலோங்குகாந்தருவர்களைவரென்மிசையே
பண்ணமைந்துளகாதலாற்காவலாட்பயில்வா
ரெண்ணம்வேறுறவுன்னினுமெவரையுந்தொலைப்பார்
மண்ணில்வானில்மற்றவர்க்கெதிர்மலைபவரிலையால். (௬௧)

வலியுளாருடைவல்லபியாகினுமெனது
குலனிலோங்குநல்லொழுக்கமுங்குறைபடாவண்ணம்
நிலனின்மாண்புடைத்துருபதன்பாவைபானேய
மிலகவிப்பெருந்தொழிலெலாம்பயின்றவணிருந்தேன். (௬௨)

அந்தவார்குழற்காடுறைந்ததற்பினரவளோ
டுந்துகான்றிரிந்துன்னுழைச்சிலதுநாளிருப்பான்
சிந்தைகொண்டிவண்சேர்ந்தனன்சேர்த்தியோவென்ன
நந்தலிக்கனிவாய்மொழிநயம்பெறவணங்கி. (௬௩)

அனையதேவிதன்வாய்மைகொண்டாதரித்திருந்தப்
புனைதல்பூணுதல்பூசுதன்முதலியபொற்பார்
நினைதருந்தொழிலியற்றிமங்கையரெலாநேய
வினையமோதிடவற்சரம்விலக்குவதென்றாள். (௬௪)

கற்பினுக்கொருமங்கைதன்கட்டுரைகேட்டே
யற்பினுக்கொருவருநிகரற்றவன்வியந்து
வெற்பினைப்புரைவெம்முலைமின்னனையிதுவே
நற்பயிற்சியென்றுரைத்துமீட்டொருமொழிநவில்வான். (௬௫)

வேறு.

வேதியரொழுக்கமும்வேந்தர்நீதியு
மாதர்தங்கற்புமும்மாரிநல்கலாற்
பூதலந்தழைப்பவென்றுணர்ந்தபுங்கவ
ரோதநீகேள்விபூண்டொழுகுமாண்பினை. (௬௬)

பற்பலநெறிகளும்பயிலுநூல்களா
னற்பயனடைதலுந்தேசுநாடொறும்
பொற்புடைவெற்றியும்புகழுமின்பமுங்
கற்புடைமனைவியாற்கணவற்கெய்துமே. (௬௭)

கடன்படுநிலையெலாங்கணவற்காக்கவர்
துடன்படுமனைவிவேற்றுள்ளமாகுமேற்
றிடம்படுதவமெலாஞ்சிதைந்துதன்பதிக்
கிடம்படுநிரயமென்றிருக்கிற்கூறுமால். (௬௮)

ஆதலாற்கற்புடையணங்கைச்சார்ந்துளோர்
போதராப்பொருளிலைப்புகழும்வேறிலை
மாதராள்சனகிதன்வண்மைகேட்டுளா
யீதலாதருந்ததியேத்துமாண்புளாய். (௬௯)

தந்தையோடுரியவன் றனையன்சார்பினிற்
கந்தவார்குழலினர்நிறையைக்காப்பர்நீ
புந்திகொள்கடவுடன்சார்பிற்பொன்னனு
யுந்துறுநிறைபரித்துலவவேண்டுமே. (௭௦)

தீயவற்சேரினுமுரைகள்செப்பினு
மாயவற்காண்கினுந்தீதென்றுய்ந்துநீ
தாயமுற்றவருணராததன்மையாய்
நேயமுற்றொழுகெனநிரைத்துக்கூறினான். (௭௧)

அவ்வணம்பயிலுவனையநின்னுரை
செவ்வியமறையெனச்சிரத்திற்றாங்கினாள்
பைவருமைந்தலைப்பாந்தள்போல்பவர்க்
கிவ்வுரைவழங்கினனிருடியென்பவே. (௭௨)

அறுவறுமுறைப்படியரசன்பாற்றொழிற்
பெறுமியல்தெரிந்ததாற்பின்னுமோர்மொழி
மறுவறக்கற்றமாண்பினர்க்குமந்திரத்
துறுதியேவேண்டுமென்றுரைக்குநூலெலாம். (௭௩)

ஆதலினீரறியாதபாங்கில
நீதியுமும்முடைநிலத்ததாயினும்
பூதலத்தரசியற்புகல்வனூன்முறை
காதலிற்கேண்மினென்றெடுத்துக்காட்டினான். (௭௪)

ஒப்பிலாவலியுடையொருவனாயினுந்
தப்பிலாதாண்டகைதனக்கடங்கலே
செப்பிலாரணநெறிதொழிலிற்சேர்ந்தநாள்
வெப்பிலீர்பெருமிதமறத்தல்வேண்டுமே. (௭௫)

முத்தலமளந்தருண்மூலகாரணன்
வித்தகநெறியனுரூயைவேட்கையாற்
புத்திரனாகியபோதகட்டினி
லெத்தகவடங்கினனிருக்குநாளெலாம். (௭௬)

அப்பெருந்தகமையாலையநீவிர்கள்
செப்பருந்தகையினரெனினுஞ்சேர்ந்துள
விப்பெருந்தோன்றலுக்கேவலாளரிற்
றப்பறவொழுகுதறருமமாகுமால். (௭௭)

வேந்துடையேவல்செய்முறையின்மேன்மைகள்
வாய்ந்தவன்கருணைகைவயங்கொள்பான்மைகள்
மாய்ந்திடாப்பெரும்புகழ்மன்னியற்கைக
ளாய்ந்தநூன்முறைப்படியனறவன்கேண்மினோ. (௭௮)

வேறு.

ஊன்படுவேலான்மன்றத்துறுவதன்முன்னமெய்தித்
தான்புரிதொழிலுக்கேற்றசார்பினிலிருந்துவேட
மேன்படத்தாங்கிச்செப்பும்விரகறிந்துரைசெய்தானேல்
வான்படுகுணத்துவேந்தன்வளமெலாம்பெறுவன்மாதோ. (எ௯)

வையகம்புரக்குமிந்தமன்னன்பாலுறுணெட்டு
மெய்யுறவிதுநாள்காறும்வெய்துயிர்த்துழன்றேன்வாளாப்
பொய்யறவிவனுற்கண்டபொருளெதென்றெறுத்துக்கூறும்
வெய்யதந்திருவுந்தேசும்வெறுத்தவரென்றுகாண்மின். (அ0)

அண்ணல்வாழ்கோயிற்கொப்பாவதிகமாவழகுகாட்டும்
விண்ணுயரகமுமந்தவேந்தனிற்சிறப்புவிஞ்சு
நண்ணருநாகரீகவேடமுமவன்செங்கோலுக்
கெண்ணுறுமொழியுமார்க்குமிடுக்கணேபுரிவதம்மா. (அக)

மைந்தரேயெனினுமைந்தர்வழித்தோன்றற்பாலரேனும்
வெந்திறற்றுணைவரேனுமித்திரரெனினும்வேந்தின்
முந்துயராணைமீறிப்பிழைப்பரேன்முனிவுகூர்வர்
சந்தணிகுவவுத்தோளான்மனுநெறிதவறுமென்றே. (அ௨)

மிக்குயரரசன்காதன்மீளியாம்வயவராற்றுந்
தக்கநற்கருமந்தீங்குசார்ந்ததிற்பிழையோர்ந்தாலுந்
தொக்கவக்கருமம்யானேசோர்வறப்புரிவனென்று
திக்கயமனையவாற்றற்குரியரும்பகர்தறீதே. (அ௩)

தனக்கினிதாகவேந்தின்சார்பினிலுரைத்தல்பல்லோர்
மனத்துயர்புரியுமென்னின்மாசெனத்தெரிந்தோர்கூறுர்
நினைத்ததிற்பயனென்றின்றிநெறியறுமாந்தர்தம்மோ
டினத்துறப்பலசொற்கூறியிகழ்படாரெண்ணமிக்கோர். (அ௪)

பிறநெறிபயில்வோரேனுமொருவரோடுருத்துப்பேச
லறநெறியன்றேல்வெற்றியாண்டகைவயினுளோரின்
மறநெறியுன்னிமாறுவழங்கியமாற்றமாற்றத்
துறைநெறியுதவுமென்றுசொல்லலாந்தகையுண்டாமோ. (அ௫)

புரவலனவையினுற்றபோதவனெதிரில்வைகார்
வெரிநுறப்பின்னர்வைகார்வேந்திருபுறத்தும்வைகி
விரவியார்மீதுபார்வைமேவுமோகருமமாரைப்
பரிவுடனியற்றவாயாற்பகருமோவெனவாராய்வார். (அ௬)

அரசுடைக்கோயிறன்னுளடுத்துளநன்மைதீமை
யுரைசெயத்தகுவதன்றுலொருவரோடுறுதிவாய்மை
கரைசெயக்கேட்டதுண்டேற்காவலனறியக்கூறி
வரிசையின்மறத்தலெல்லாவனப்பினும்வனப்பதாமே. (அஎ)

ஐம்புலன்வெறுத்த தூயோர்க்காயினுமரசரில்லின்
வம்பணிமுலையார்நண்புமாசினையுதவுமென்னி
லிம்பரார்பயில்வார்மீட்டுமினிமைநாண்மடமையற்ற
கொம்பனூர்குறள்மெய்யோர்பாற்பயில்வதுங்கொடுமைகூறும். (௮௮)

ஊர்தியாசனமிரண்டுமுகந்தரசுதவானென்னிற்
பார்தொழுதகையரேனுமேற்கொளார்பதிவியந்த
வார்வங்கண்டுடலம்பொங்கிய்வமானமடைந்தபோதி
னேர்தருசிந்தைவாடாதிருந்தவரெல்லாம்வல்லோர். (௮௯)

ஒருவன்மீதரசன்சீறியோங்கவன்செல்வமாற்றக்
கருதியதுணர்ந்தபோதுமவ்வுறைகழறலாகா
வருபெருமிருளிற்பெய்யுமாரியில்வெயிலிலேவிற்
கருமமேகருதலன்றிப்பிறிதொன்றுங்கருதொணாதே. (௯௦)

மன்னுடைக்கருமமுற்றுமளவையின்வருத்தமுண்டி
யுன்னருமுறக்கந்தண்ணீர்மாந்துதன்முதலாவுள்ள
பன்னருமியற்கைநெஞ்சிற்பொருளெனமதியார்பாரிற்
றுன்னலரிரியநூறித்தோன்றலைக்காப்பர்தூயோர். (௯௧)

கொன்றவன்றனதுநண்புகுறைவறவெய்திற்றேனு
மற்றவன்பொருளைவெஃகார்வலிதினிலவனேயீந்தாற்
பெற்றிடலன்றியொன்றுற்பெறுவதுவிடம்போலென்றே
கற்றவருயர்ந்தோர்கல்லாக்கசடரேயசடர்மன்னோ. (௯௨)

தும்முதல்விக்கனெட்டைசோம்புகொட்டாவிபோக்கற்
செம்மல்பேரவையிற்செய்யாரெய்துமேற்றீர்ந்தாண்டோர்சார்
வெம்மையினகற்றிமீளமேவுவர்பகைஞர்தீயோ
ரம்மைதீர்தூதரீனர்நண்புறிலனுகுந்துன்பம். (௯௩)

கொற்றவேலரசன்பாங்கர்ப்பயிலுவோர்கொசுகீபோன்ற
சிற்றறிவினரென்றுலுமவரொடுமாறுசெய்யார்
பெற்றவிச்செல்வமின்பம்பெறும்பொருட்டன்றேவென்று
சுற்றுளோரிகழுமாறுப்பல்வளந்துய்க்கலாற்றூர். (௯௪)

ஆன்றபேரறிவின்மிக்கோராண்டகைவியந்தபோது
சான்றவர்வியக்குமாறுத்தமதுளத்தகந்தையெய்தா
ரீன்றவனுசான்விஞ்சையீந்தவன்கடவுண்மற்றுந்
தோன்றலோடைவரென்றுகாண்குவர்தூயமாந்தர். (௯௫)

ஈதுலகியற்கைநீவிரிறைவனையெய்தினாளுந்
தீதறவேண்டுமுத்திச்சிந்தையிலகந்தையின்றி
மேதகுமின்சொலோடும்விளம்புமோராண்டுநீக்கிற்
சாதகமுமதுபாங்கர்த்தங்கியநினைவுக்கென்றுன். (௯௬)

வேறு.

என்றுவேதியனிசைத்தகாலையிற்
குன்றமன்னதோட்குவவுக்கொற்றவர்
வென்றிகொண்டபோதினும்விருப்பமா
யொன்றுகூறினருளமுவப்பவே. (கூள)

எந்தையின்றுநீயிறைவற்கேவல்செய்
முந்தைமாநெறிமுறையிற்கூறினய்
சந்தைதன்னினுந்தக்கதேயெனச்
சிந்தைகொண்டுளோஞ்சேர்துமின்னகர். (கூஅ)

ஆண்டுநீங்குகாறளவுமையநீ
வேண்டுமாதவர்விபினம்வைகெனப்
பூண்டுசெய்யதாட்போதுபோற்றியே
தூண்டுமெங்கியுந்துணிவினல்கினர். (கூகூ)

ஆசிசொற்றுமாமுனிவனண்டெழா
மாசகற்றுமாதவர்வனம்புகுந்
தோசைபெற்றவ்ருதவுமங்கியோ
டேசறத்தவம்வளர்த்திருந்தபின். (கoo)

மன்னரேவல்செய்மங்கைமார்களை
மின்னைநல்கியவேந்தன்மாநகர்
தன்னில்வைகவென்றேவித்தக்கவர்
பொன்னனுளொடும்போதுங்காலையில். (கoக)

தருமனேதுவானரசன்சார்பினிற்
கருமமுற்றநாட்கரங்கடோள்களே
யொருவரும்பெறுதுறைதுமொன்னலர்க்
கருமைகாண்டலென்றறிவுறுத்தலும். (கoஉ)

அற்றிதாமெனவரியளித்தவன்
கொற்றவெஞ்சிலைகுறைவிற்றூணியோ
டுற்றபல்படையுள்ளநல்கினன்
பெற்றவாவினைப்பிரியுங்கன்றுபோல். (கoஙு)

சேருதற்கருஞ்சிற்றமூல்டெழச்
சோருதற்கெனுந்துன்புதாங்கியே
காருடைத்தவிற்கதையோடியாவ்து
மாருதத்திறேன்மகனுநல்கினன். (கoச)

ஒருவனுமிறையுரைவழாவணங்
கருதுவாளொடுங்கட்கந்தோமரம்
பொருவில்கார்முகம்புட்டினல்கினு
ரிருவராமெனுமிளைஞரென்பவே. (கoரு)

தன துகைப்படைதனையும்வைத்தபின்
புனிதமாகியபொருவில்சிந்தையா
னினிதுறுஞ்சமியிருளுலாந்தரு
மனதுபோலுயர்மாண்புநோக்கினன். (கoசு)

அந்தவன்னியந்தருவினுயிடைப்
பொந்தின்வைத்திதைப்போற்றலார்களால்
வந்துநோக்கொணுமாறுகொண்டுயிர்
சிந்துமானுரிசெறித்துமூடினர். (கoஎ)

வேறு.

அறனுதவுதனிக்குரிசிலத்தனடிநினைந்துதொழுதறைவானிக்த
மறனுதவுபெரும்படைகள்வைத்துளோமித்தருவின்வலாரிதந்தோன்
றிறனுதவென்னுடனிருவர்சேர்ந்தார்கைச்சேர்வன்றியார்சேர்ந்தாலும்
விறலுதவுபெரும்பாந்தளுருவாகித்துரக்கவெனவிளம்பினனே. (கoஅ)

இவ்வகையால்வரம்வேண்டியத்தகமைபரிச்சிப்பானிலையோன்றன்னைக்
கவ்வைசெறிபாதபத்தின்மிசையேற்றியப்படைகள்காண்கவென்ன
வெவ்வழல்கால்விடநாகவுருவாகித்துரக்குமொழிவிளம்பலோடுங்
கைவருவாரணங்களெனக்களிசிறந்தாங்கவரகன்றுகடிதிற்புக்கார். (கoகூ)

பொய்கையகன்கரைமேவிப்புதுப்புனலிற்றோய்ந்தெழுந்துபொருவில்வேதஞ்
செய்கையுச்சிக்கடன்கழித்துத்திருத்தாதைபதத்துணைகள்சிரமேற்றாங்கி
யுய்கைபெறப்புனைவேடமுபகரணத்துடன்பொலியவுதவுகென்ன
மைகலந்தநிறத்தறன்றன்மகன்வினவவேண்டுவனவழங்கினனே. (ககo)

உதிட்டிரனுநான்மறையோனுருவாகிச்செழுங்கதிரோனுதித்தவாபோற்
கதித்தசிகையுபவீதங்கவிகைதண்டகமண்டலமுங்கவின்செய்தோங்க
மதித்தமுனிவரனுனன்மடைவல்லாருருவமைந்தான்மற்போர்வல்லான்
விதித்தவயன்றன்னாலுமுணர்வரியபுதுப்படிவவேடமன்றே. (கக்க)

படிவிரும்பும்பேரழகும்பவளமால்வரைபோன்றபரமன்பச்சைக்
கொடிவிரும்பியருட்பார்வைகுறித்ததவத்திருமேனிப்பொலிவுநீங்கிக்
கடிவிரும்புமலர்க்குழலுங்கைவளையுங்கஞ்சுகமுங்காவிக்கண்ணுந்
துடிவிரும்புசிற்றிடையுந்தோற்றநரன்பேடியரிற்றோன்றினனே. (ககஉ)

மற்றிருவர்தனின்முன்னோன்மத்திகையுங்கஞ்சுகமும்வயங்கப்பாய்மாக்
குற்றமொடுகுணனுணரும்பெருந்திறலோர்வடிவமைந்தான்கயிறுங்கோலும்
பற்றியிருகரந்தனிலான்பலகோடிபுரந்துளகோபாலனேபோ
லுற்றனனுங்கவனிளைஞன்வண்ணமகளுருவமைந்தாளொளிவேற்கண்ணாள். ()

அறுவறுமிங்கிவ்விதத்தாலுரைத்தபடித்திருவேடமமைந்தபின்னர்
மறுவறுநல்லறன்குமரன்மனமகிழ்ந்துபலருட்சிவளனுங்கூறித்
திறனுடையீர்யானடைந்துபுலவுகமழ்வேலான்பாற்சேர்ந்தபின்னர் [ன்.
முறைப்படவேதனித்தனிவந்தெய்தவெனப்புகன்றெழுந்து முன்னோன்போன

வேறு.

* தம்பியர்வணங்கித்தன துதாளிணையிற்றங்கவோர்தாபதவடிவு
மும்பரும்வியப்பக்கங்கனென்றுயர்ந்தவொருதிருநாமமுந்தரித்து
வெம்பரிதியிலுஞ்செம்மைகூர்வடிவம்வெண்புரிநூலொடுவிளங்க
வைம்புலன்மகிழச்சென்றுகண்டிறைவந்தடிதொழுவாசியுமுரைத்தான். (ககடு)

* யாரையாநீவிரெங்குநின்றிவண்மற்றெழுந்தருளியதெனவினவப்
பாரையாளுடையவுதிட்டிரன்பாங்காய்ப்பயின்றனனவன்பெருவனத்திற்
சேருநாளுடன்போய்த்திரிந்தனநின்பாற்சிலபகல்வைகுமாறெண்ணி
வீரவார்கழலாய்வந்தனமென்றான்வேள்வியாற்கேள்வியான்மிக்கோன். (ககசு)

* மன்முனிமொழிந்தவாய்மைகேட்டந்தமனுகுலவரசனுமகிழ்ந்து
தன்மனநிகழ்ந்தமகிட்சியுமுணர்வுந்தகைமையுமுவமையிற்றோன்ற
வென்மனைவயினின்றெய்தியபயன்யானேமெழுபிறப்பினும்புரிந்த
நன்மையின்விளைவேவேண்டுநாளீண்டுநண்ணுதிரெனநனிநவின்றான். (ககஎ)

* தண்டினுக்கொருவன்புயவலிக்கொருவன்றனுவினுக்கொருவனென்றுரைக்கு
திண்டிறற்பவனகுமரனுஞ்சின்றுட்சென்றபின்றெள்ளமுதனைய [ங்
உண்டியைக்குறித்துக்கற்றதன்கல்வியுரிமையைக்குறித்தடுதொழிற்கு
மண்டலத்தரசேயொருவன்யான்வீமன்மடையனென்றரசவைவந்தான். ()

* வந்துதன்றம்முன்மலரடிமுன்னிமலர்க்கையான்முடியின்மேல்வணங்கி
யைந்துபல்வகையிற்கறிகளும்வெவ்வேறறுசுவைமாறுமாறமைப்பேன்
வெந்திறன்மல்லும்புரிதொழிலுடையேன்விருதுடைப்பலாயனனென்பே
ரிந்திரனுலகுதன்னிலுமெண்ணிலென்றெழிற்கெதிரிலதென்றான். (ககக)

* என்றபோதவனைவிராடனுமகிழ்வுற்றிருகையுஞ்சென்னிமேலிருத்திப்
பொன்றிகழ்மணிப்பூண்மென்றுகில்பலவும்புரவிபோதகங்களும்வழங்கி
யின்றுதொட்டெமக்குமெய்ப்பெருஞ்சுற்றத்தொருவனீயெனதடுதொழிற்கு
நின்றவரெவர்க்குந்தலைவனுமுரிமைநிலைபெறவழங்கினன்மாதோ. (கஉ0)

* நீடியசிலைக்கைத்தேவர்கோன்மதலைநிருத்தநல்லரங்கினின்முன்னுள்
வாடியமருங்குற்பணைத்தபூண்கொங்கைவாட்டடங்கண்கள்வார்குழைமே
லோடியவதனத்துருப்பசிபணியாலுறுவதற்கோரியாண்டமைந்த
பேடியின்வடிவந்தரித்தனனாண்மைக்கிமையவரெவரினும்பெரியோன். (கஉக)

* வாயுவின்மதலைசென்றுகண்டதற்பின்மற்றைநாளொற்றைவெண்கவிகைச்
சேயொளிமகுடச்சென்னியானிருந்தபேரவைசிறப்புறச்சென்று
தூயவெண்புரிநூன்முனிதிருக்கழலிலொருபுடைதோய்தரத்தலைசாய்த்
தேயவெஞ்சிலைக்கையருச்சுனன்கோயிலிருப்பதோர்பேடிநானென்றான். ()

* நாதமுமியலுமேதகுநடனூனவிறருமரங்கினுக்குரியேன்
பேதையர்தமக்குநடம்பயிற்றுவிப்பேன்பெயர்பிருகந்நளையென்ப
வாதிபநினதுசெல்வமாநகரிலிருப்பதற்கெண்ணிவந்தடைந்தேன்
வேதமுமுலகுமுள்ளநாளளவும்விளங்குகநின்மரபென்றான். (கஉங)

* வித்தகனெனவெக்கலைகளும்பயின்றவிராடனும்பேடிதன்மொழிகேட்
டித்திறமுடையர்வேலைசூழுலகினில்லையென்றினிதுரைத்தருளி
யத்தகவுடையாண்மகிழ்வுறக்கலனுமாடையும்வேண்டுவவழங்கி
யுத்தரைதனக்குப்பாங்கினீயென்றாங்குரியதன்மகளுழைவிடுத்தான். (கஉச)

* பின்னருஞ்சின்னாளகன்றபினகுலன்பேரழகினுக்குவேளனையான்
மின்னுடைவடிவேல்வேந்தர்கோன்விராடன்வெம்பரியேறுமுன்றிலின்வாய்
மன்னியதொழில்கூர்கம்பியுங்கயிறுமத்திகையுடன்கரத்தேந்தி
யுன்னயமுதலாம்புரவிநூலறிவோனுளநிகழ்தருக்கொடுசென்றான். (கஉரு)

* சென்றவன்றன்மேற்புரவிமேலிருந்தோன்செழுந்தடங்கண்மலர்பரப்பி
வன்றொழிற்புரவிவான்றொழிற்குரியோயெவ்வயினின்றுவந்தனைநீ
யென்றலுமவனுமியம்பினன்விசயற்கிளையவனகுலனென்றெல்லாக்
குன்றினுந்தன்பேரெழுதினோனவன்றன்கொற்றம்யார்கூறுதற்குரியார். ()

* மற்றவன்றனதுவாசி * மந்துரைக்குத்தலைவராய்வாழுமாக்களில்யா
னுற்றவனொருவன்வாம்பரிவடிவுமுறைதருசுழிகளுமொளியும்
பற்றியநிறனுங்கந்தமுங்குரலும்பல்வகைக்கதிகளும்பிறந்த
சொற்றருநிலனுமாயுவுமுணர்வேன்றுயருறுபிணிகளுந்தவிர்ப்பேன். (கஉஎ)

* மண்டலம்வீதிகோணமேமுதலாம்வாசிகளூர்தொழில்வல்லேன்
றிண்டிறற்றடந்தேர்பூண்பதற்குரியசெயலுடைப்பரிகளுந்தெரிவேன்
வண்டிமிரலங்கன்மாலையாய்பாண்டுமைந்தர்போய்வனம்புகுந்ததற்பி
னுண்டியுமிழந்தேனுறுதியுமிழந்தேனுன்புகழ்கேட்டுவந்துற்றேன். (கஉஅ)

* என்னவப்புரவியேற்றுநாயகன்வந்தியம்பியவின்மொழிகேட்டு
மன்னவர்க்கெல்லாமொதுங்குநீணிழலாய்வயங்குமாமதிக்குடைமன்னன்
முன்னவர்க்குள்ளவரிசைகள்யாவுமும்மடங்காகவேவழங்கி
யந்நகர்த்துரங்கமவையனைத்தினுக்குமதிபதியெனும்பதங்கொடுத்தான். (கஉகூ)

* கிளைபடுபுரவிபுரந்திடுந்தாமக்கிரந்தியாம்பெயர்புனைநகுலற்
கிளையவனந்தகோபன்மைந்தனைப்போலிடையர்தங்கோலமதெய்தித்
துளைபடுகுழையிலொருகுழையணிந்துதோளிலோர்தொடித்தடிதழுவி
விளைபுகழ்விராடன்வேத்தவையதனைவேறொருநாளையினடைந்தான். (கங0)

* ஆர்கொனீயென்னவறன்மகனுடனேராசனத்திருந்தபூபதியைச்
சீருறவேறோர்விரகினால்வணங்கிச்செப்பினனன்னசாதேவன்
பார்கொளநினைந்துசுயோதனன்விடுப்பப்படர்வனம்படர்ந்தபாண்டவரிற்
றார்கொள்வேலிளையோன்றனதுகோபாலன்றந்திரபாலன்யானென்றான். ()

* ஆங்கவனிவ்வாறுரைத்தலுமவனையருகுறவருகெனவழைத்துப்
பாங்குறத்தக்கவழக்கமும்வழங்கிப்பலவகைநிரைகளுநீயே
யீங்குமப்படியேபுரத்தியென்றுரைத்தானிவனுமவ்வரசனேவலினாற்
றீங்கறக்கைக்கொண்டவ்வவர்க்கெல்லாந்தகைபெருஞ்செம்மலாயினனே. ()

---

* மந்துரை—குதிரைப்பந்தி.

## வேறு.

* ஓமமகவாரழலினூடுருவுயிர்க்கு
மாமயிறிரௌபதியும்வண்ணமகளாகித்
தேமருவுதார்முடிவிராடனிருதோள்சேர்
கோமகளைநாடியவள்கோயிலிடைபுக்காள். (௧௩௩)

* மதுமலரின்வாழ்திருவும்வந்துதொழவுரியா
ளொதுமலினளாகியொருநுண்ணிடைநடந்தாள்
பதுமவிழியாயெனலும்வாயிலவர்பால்போன்
மதுரமொழியாளழைமின்வாணுதலையென்றாள். (௧௩௪)

* வந்தவளிருந்தவண்மருங்கணையும்வேலை
யந்தணுபசாரமுடனருகுறவிருத்திச்
சந்தொடகில்பூவிலைகடகவுடன்வழங்கி
யெந்தநகர்நீயுரைமின்யாமுணரவென்றாள். (௧௩௫)

* தான்விரதமாயைபுரிசகுனிபொருசூதாற்
கான்விரதமாகவுறைகாவலர்கள்கோயின்
மான்விரதநோக்கியர்மருங்குறவிருந்தேன்
யான்விரதசாரணியெனும்பெயரினேனே. (௧௩௬)

* பூசுவனசுற்றுவனபூண்பனமுடிப்ப
தேசொடுவனப்புநனிதிகழும்வகையணிவேன்
வாசவனொடொத்தமனுகுலவரசன்மனைவி
யேசறவுன்க்கியைவதாக்குவதெனெண்ணம். (௧௩௭)

* எந்தைமனையிற்பயிலிளம்பருவநாளிற்
கந்தருவர்காவல்புரிகற்புடையளானே
னிந்துநுதலாய்மனிதர்யார்முகமுநோக்கேன்
வந்தனனின்மாளிகையின்வைகும்வகையென்றாள். (௧௩௮)

* வண்ணமகள்கூறியவைமகிழ்வினொடுகேட்டுத்
துண்ணெனவெரீஇயினள்சுதேட்டிணைவிரும்பி
விண்ணவர்கள்பாவையரின்மேவுதியெனக்குக்
கண்ணிணையுநீயுனதுகாவலெனதுயிரும். (௧௩௯)

* அன்னையெனுமாறுநெறியானமுறைகூறி
யென்னருகிருத்தியெனவெரியின்வருமின்னு
மின்னனையநுண்ணிடைவிராடபதிதேவிக்
கெந்நலமுநாடொறுமியற்றினளிருந்தாள். (௧௪௦)

* மைவருதடங்கண்மடமானுமதிமரபோ
ரைவருமறைந்தனர்களாயுறையுநாளின்
மெய்வருவழாமொழிவிராடபதிதிருநா
டெய்வருபெருந்திருவொடோங்கியதையன்றே. (௧௪௧)

* குருக்களவனூரினிடைகுருநிலனெடொப்புற்
றிருக்கும்வகைமாமழையுமெவ்விளைவும்விஞ்சித்
தருக்கினுடன்யானைமுதருனைகளும்விஞ்சிச்
செருக்குமுடன்விஞ்சியதுசெப்பவரிதம்மா. (௧௪௨)

நாடுகரந்துறைசருக்க முற்றிற்று.

ஆக செய்யுள் - ௫௪௨௪.

---

# மற்போர்ச்சருக்கம்.

---

* அல்லினுக்கிந்துவென்னவாங்கவருறையுநாளில்
வில்லினுக்கிராமனென்னவேலினுக்கிளையோனென்னச்
சொல்லினுக்குததிதோய்கைத்தொன்முனியென்னவன்போர்
மல்லினுக்கொருவன்யானேவாசவனென்றுவந்தான். (௧)

* அண்டமாமுகடோடொத்தசென்னியனவனிமுற்றுங்
கொண்டமாமேருவொத்தகுங்குமக்கடகத்தோளான்
சண்டமாருதத்தோடொத்தவலியினன்றந்தியெட்டின்
கண்டமார்முகத்தினீண்டகையெனத்திரண்டகாலான். (௨)

* ஆயிரமல்லர்தன்னையணிநிழலென்னச்சூழப்
பாயிரும்புரவித்திண்டேர்மிசைவரும்பரிதிபோல
மாயிருஞாலந்தன்னின்மற்றிவற்கெதிரின்றென்னச்
சேயிருந்தடக்கைவேந்தன்றிருந்தவையதனைச்சேர்ந்தான். (௩)

* மன்னனைவணங்கிநின்றுவலியுடைமல்லின்போருக்
கென்னலதில்லையிந்தவெழுகடல்வட்டத்தென்றுன்
கொன்னவில்வேலினுனுங்கொடுப்பனகொடுத்துமுன்னந்
தன்னுழைவைகுமல்லர்தங்களைநோக்கினனே. (௪)

* அந்தமற்றெழுழிலின்மிக்கோரநேகர்நீடசனியொப்பார்
வந்தமற்றலைவன்றன்னைவருதிநீயெம்மொடென்று
முந்தமற்கலைநூல்சொன்னமுறைமையினரசன்காணச்
சந்தமற்சமரஞ்செய்தார்தனித்தனியொருவராக. (௫)

* தத்தியுந்தோளுந்தோளுந்தாக்கியுஞ்சென்னிகொண்டு
மொத்தியும்பற்பல்சாரிமுடுகியும்வயிரக்கையாற்
குத்தியுங்காலுங்காலுங்கோத்துமற்கூறுதோன்ற
வொத்தியும்பாறையென்னவுரனுடனுரங்கள்சேர்த்தும். (௬)

* ஓரொருமல்லராகவொருதனிமல்லன்றன்னோ
டாரமருடற்றிமல்லரனைவருமழிந்தபின்னர்
வீரரில்வீரனனவென்றிவேல்விராடன்மெச்சித்
தேரின்மேல்வந்தமல்லன்றனக்கெலாச்சிறப்புஞ்செய்தான். (எ)

* அன்றுபோய்மற்றைநாளினரசனோடறத்தின்மைந்தன்
வென்றமாமல்லன்றன்னைவெல்லுதற்குரியமல்ல
னின்றுநின்மடையர்தம்மிற்பலாயனனென்போன்றன்னை
யன்றிவேறில்லையென்றானரசனுமழைமினென்றான். (அ)

* பைம்பொன்மாமேருவெற்பின்பராரையைச்சோதிநேமி
விம்பமாய்வளைந்தெதன்னவிளங்குபொற்கச்சைசேர்த்தித்
தம்பமாமென்னத்தக்கதண்டொடுதரணிவீழா
வும்பராரமுதமுண்டவுரவினன்விரைவின்வந்தான். (௯)

* கதையுடைக்காளைவந்துகடுந்திறன்மல்லன்றன்னோ
டுதையமோடத்தமென்னுமோங்கலோரிரண்டுசேர்ந்து
துதைவுறப்பொருவதேபோற்றோள்புடைத்தருமினார்த்துப்
பதயுகத்தாலுந்தத்தம்பாணிகளாலுஞ்சேர்ந்தார். (௧0)

* உதைத்தனர்வீசிவன்போடுரங்கொடுகரங்கள்பற்றிப்
புதைத்தனர்விரல்கண்மெய்யிற்புருவமுமூக்கும்வாயுஞ்
சிதைத்தனர்புயங்களென்னுஞ்சிலம்புகடாக்கத்தாக்கப்
பதைத்தனரோடியோடிப்பற்றினர்மீளமீள. (௧௧)

* கற்றனகாயமெல்லாங்கண்டுகண்களிக்கக்காட்டி
யுற்றனர்நின்றபோதிலுதையின்புதல்வனூறு
மற்றவன்மருங்குபற்றவன்கரமிடறுபற்றச்
செற்றனனிடிம்பன்றன்னைச்செற்றவெங்கொற்றத்தோளான். (௧௨)

* தேர்மிசைவந்தமல்லன்சிதைந்தபேருறுப்பினோடும்
பார்மிசைகிடக்கநின்றுபணைப்புயங்கொட்டியார்த்தான்
சீர்மிகுமல்லன்றன்னைச்சிறப்புறத்தழுவியெல்லாப்
போர்முகங்களுக்குநின்னைப்போல்பவரில்லையென்றான். (௧௩)

* மன்னவர்களிக்கத்தக்கவரிசைகளனைத்துநல்கி
முன்னவனுகிவைகுமுனிமனங்களிக்குமாறு
தன்னருகணுகவைத்துத்தலத்தெதிரில்லையிந்த
வின்னமுதடுவோற்கென்றானியற்றிறல்விராடன்றானே.. (௧௪)

மற்போர்ச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-ருசரு௮.

உ

# கீசகன்வதைச்சருக்கம்.

---

* அன்னநாளினின்மன்னவன்றேவியாமன்னமென்னடையாரமுதன்ன சொற், சொன்னசாயற்சுதேட்டிணைதன்றிருத்துணைவர் நூற்றொருநால்வரிற் றோற்றமு, மன்னுமாண்மையுந்தேசுஞ்சிறந்துளான்வருதினிக்குத்தலைவன்மு ற்றோன்றிய, கன்னல்வேளனையான்றன்றுணைவியைக்காணவந்தனன்காண்ட குமேனியான். (க)

* தம்பியப்பெருந்தையலைநூபுரத்தாளின்வீழ்ந்துதகவுடன்மீடலு, மம்ப ரத்தவர்கற்பகக்காநிகரந்தவந்தப்புரத்தகன்காவினில், வெம்புகர்க்களிற்றைறவர் தந்தேவியாம்விரதசாரணிமென்மலர்கொய்திளங், கொம்பொடொத்திடைசோ ரப்பணைத்தபொற்கொங்கையாளிவன்முன்னர்க்குறுகினாள். (உ)

* இயற்கையானகவினுடைப்பாவையையிறைவன்றேவிக்கிளையவன்கண் டனன், செயற்கையாநலங்கண்டிலன்யார்கொலித்தெரிவையென்றுதன்சிந்தை யிலோர்க்கினான், மயற்கையாலழிந்தானைம்புலன்களும் வழக்கொழிந்துமதிமரு ண்டானினைக், கயற்கையான்க்கயற்றடங்கண்ணியைக்கண்டகாட்சியிற்காமுக னாகியே. (ங)

* அருகுநின்றமகளிரைமற்றிவளார்கொலென்னவறியான்வினவினான்
வரிநெடுங்கண்மகளிருமாதரார்வண்ணமாமகளென்றனர்மையலா
லுருகுகின்றவக்காளையுநாணமுற்றொருடுங்கிநின்றவுயர்தவப்பாவைத
னிருபதங்களில்வீழ்ந்தெனதாவிநீயென்றுமீளவுமெத்தனைகூறினான். (ச)

* கூறுகின்றமொழிகளுக்குத்தரங்கொடாதுநின்றதொர்கொம்பரின்வாய்மறை
தேறுகின்றபழிகளும்பாவமுமிம்மைதானுமறுமையும்பார்த்திலை [ந்
மாறுகின்றிலைசொல்லத்தகாதபுன்மாற்றமின்னமுமன்னுயிர்யாவும்வந்
தாறுகின்றகுடைநிழல்வேந்தனுக்கழிவுசெய்தியறிவிலிபோலுநீ. (ரு)

* மாரசாயகத்தாலுயிர்மாளினும்வசையிலாதமரபின்வந்தோர்பிறர்
தாரமானவர்தம்முகம்பார்ப்பரோதக்கவர்க்குத்தகவிவையேகொலாஞ்
சோரனாதலிற்சொற்பயினித்தவிர்சுரேசரைவர்தங்காவலென்றுளினை
வீரபோவென்னருகுறிலாவிபோம்விழித்திமைக்குமுன்னென்றுவிளம்பினாள்.

* பேதையிப்படிக்கூறவுங்காதனோய்ப்பெருகுசிந்தையன்பின்னையுமுன்புரு
வாதரத்தெனதாருயிர்போகினுமமையுமென்றவளம்புயச்சீரடி
மீதுநெற்றிபடத்தொழுதான்வடிவேற்கணாளும்வெகுண்டுவிரைவினிற் [ள்.
றூதுளங்கனிவாய்முத்தவாணகைச் சுதேட்டிணைப்பெயராளுழைத்துன்னினா

* நடுங்குமெய்யினள்பேதுறுநெஞ்சினளுணுநீர்மையளுவினுணீரிலா, தொடுங்குமென்மையடன்மையினுற்புனலுகுத்தகண்ணினளோவியம்போன்றுளாள், கடுங்கண்யானையைப்பிடரிருந்திந்நிலங்காக்கும்வெண்குடைக்காவலன்றேவிகே, டொடுங்கழற்கழலானின்றுணைவனெற்சுட்டியாயிரஞ்சொல்லலசொல்லினன்.

* விரதசாரணியென்பதுந்தேவரென்மெய்புரக்கும்விரதமுமிங்குனக்
கிரதமாகவரமனைக்கெய்து முனியம்பினேனெனையாவருமிச்சியார்
சுரதமாடுமகளிரைத்தேடிநின்றுணைவன்வேட்கையுஞ்சோகமுமாற்றிடு
சரதமாகநினையாதொழிநெறிதப்பிலாருயிர்தப்புமென்றோதினாள். (௯)

* கேகயங்களொனுமெழிற்சாயலாள்கிளந்தவாசகங்கேட்டிடியேறுறு
நாகமென்னநடுங்கியப்பூங்கொடிநயனநீர்துடைத்துற்றதுநன்றெனா
வேகமுற்றமனத்தொடுதம்பியைமிகமுனிந்துதன்வீடணுகாவகை
யேகுகென்றனளென்றலுஞ்சோகமோடேகினனறம்பாவமென்றெண்ணலான்

* சென்றுதன்மனைபுக்கபின்மன்மதன்செருவினொந்தழிசிந்தையனாய்மலர்
மன்றன்மெல்லணைவீழ்ம்வெம்பாலையால்வருத்ததோ விம்மலரணைதானெனுந்
தென்றறன்னையுந்தீயெனுந்திங்களைத்தினகரன்கொலென்றேங்குஞ்செயலழிந்
தன்றவன்கருங்கங்குலிற்பட்டபாடவனையல்லதையார்படுவார்களே. (௧௧)

* பாவிதன்மனைச்சேடியரானவர்பலரும்வந்துபடியுடைமன்னவன்
றேவிதன்னைவணங்கியக்காமுகன்சிந்தைநோயுஞ்செயலும்புகன்றெழிற்
காவியங்கண்ணவளைத்தனதுகண்காணினுந்தணியுங்கடுங்காதலு
மாவியும்பெறுமெய்யனுகானினதாணையென்றனராதரமாற்றுவார். (௧௨)

* பாசகாரிகளாமைம்புலன்களும்பரிவுகூரப்பரிந்துயர்ந்தோர்புகல்
வாசகாதிகள்கற்றுந்தெளிந்திலைமதனவேதத்தின்மார்க்கமும்பார்த்திலை
நாசகாலம்வரும்பொழுதாண்மையுஞானமுங்கெடுமோநறுந்தார்முடிக்
கீசகாவென்றழுதனளம்மொழிகேட்டபோதக்கிளிநிகர்மென்சொலாள். (௧௩)

* ஆகுலத்தொடுநெஞ்சந்தளர்ந்துதன்னருகினின்றவருந்ததியேநிகர்
மீகுலக்கொடிதன்னிருதாண்மிசைவீழ்ந்துநின்றன்விழியருளுண்டெனிற்
கோகுலத்திலுயர்ந்தவென்காதலன்கோலுநீதியுங்குன்றுவெனதுரை
நீகுலைக்கிலனைத்துமின்றேகெடுநேரிழாயிதுநெஞ்சுறக்கேட்டியால். (௧௪)

* இளையனுதலினென்னிளையோன்மனத்தெண்ணமின்றியிகன்மதனம்பினு
லிளையுமேனியனாகிநின்மெய்ந்நலமாதரித்தின்றடாதுசெய்நீர்மையால்
விளையுமேகொடுவெம்பழியிப்பழிவிளைவுறாமல்விரகினக்காதனைக்
களையுமாறெண்ணினாங்கவனாவியுங்காத்துநின்பெருங்கற்பையுங்காக்குமால். ()

* எண்ணுகின்றனன்யானென்றுநீமறுதெனதுவாய்மையெதிர்கொண்டிளையவ, னண்ணுமில்லிடைச்சென்றிந்தநாண்மலர் நறைகொண்மாலையைநல்கினைமீளுவாய், கண்ணினின்னுருக்காணினுமற்றவன்கன்னமின்புறக்கட்டுரைகேட்பினும், வண்ணமாமகளேயுயிர்நிற்குநீவாழியேகிவருகெனவாழ்த்தினாள். (௧௬)

* மொழியலாதமொழியைச்சுதேட்டிணைமொழிந்தபோதுமுதுக்குறைவுள்ளவப், பழியிலாமொழிப்பாவைவெம்பாதகம்பகர்தியென்னைவெருதொழிபாவைநீ, யழிவிலாதபெருங்கிளைக்கல்லல்கூரழிவுவந்ததறிந்திலையென்றுதன்,விழிகளாரஞ்சொரியக்கொடுத்தபூவேரிமாலைகொண்டேகினண்மின்னனுள். (கஎ)

* ஆண்டுவந்ததுருபதன்மாமகளடைந்தநாட்டொட்டமரரோரைவரே
தீண்டலன்றியொருவருமென்னைமெய்தீண்டுவாரிலையென்றென்றுசெப்பவு
நீண்டசெங்கைத்தரணிபன்காதலிநினைவிலாமனெறியற்றதம்பிபான்
மீண்டுமெவ்வழியேகென்றுரைப்பதேவிதியையாவர்விலக்கவல்லார்களே. (கஅ)

வே று.

* மாதவள்கீசகன்மனையிலேகவற்
போதகலவுமவன்புலம்பல்போகவும்
பாதமில்வன்றிறற்பாகனூர்ந்ததே
ராதபனுதயவெற்பணுகினனரோ. (கக)

* தருக்கியகாமுகன்றகாதுசொல்லவே
யுருக்கிளர்சாயலோடுளமழிந்துபோய்
முருக்கிதழ்வல்லிதன்முளரிச்செங்கையா
லருக்கனையிறைஞ்சினளழிவில்கற்பினுள். (உ0)

* துரங்கமோரேழுடன்சோதிகூர்மணிக்
கரங்களோராயிரங்கவினத்தோன்றினுய்
வரங்கொள்வேனின்னையான்மரபுபொன்றுமேன்
றிரங்குறுமென்னகத்திடரைநீக்குவாய். (உக)

* என்றுகொண்டென்றினைப்பணிந்துமன்றலாற்
கன்றியகீசகக்காலன்முன்புபோய்
மன்றலந்தொடையலும்வழங்கிமெய்வெரீஇ
நின்றனளானிலைநின்றகற்பினுள். (உஉ)

* காமருகுளிரிபைங்கதலிமெல்லடை
தாமரைவளையம்வண்டாதருமல
ராமுறையணைத்துமெல்லமளிமேல்விரித்
தீமவல்லெரியின்மேலென்னவைகினுன். (உ௩)

* சாந்தொடுதண்பனிநீருந்தாமமு
மேந்தியகரத்தினரேழைமார்பலர்
காந்தியகனன்மிசைகாட்டுநெய்யென
வேந்தனதுடலகம்வெதும்பவீசினர். (உச)

* தாக்கியகாமநோய்தழைக்கவன்புற
நோக்கியதிசையெலாங்காணுநோக்கினன்
பாக்கியநெஞ்சுறப்பலித்ததென்னவே
நீக்கியமடந்தைமுனிற்றல்கண்டுளான். (உ௫)

* வந்தனளென்னுடைமாதவப்பயன்
வந்தனளென்னுடைவழிபடுந்தெய்வம்
வந்தனளென்னுடையாவிவாழ்வுற
வந்தனளென்னுடைவண்ணமங்கையே. (௨௬)

* வருகநீயருகுறமதுரவாசகந்
தருகநீயிருசெவிதழைக்கவுள்ளநின்
றுருகநீதழுவுகவுடலந்தேம்றப்
பருகநீவழங்குகபவளவாயெனு. (௨௭)

* கிடந்தவனெழுந்தொருகேடுவந்துறு
மடந்தையைத்தழுவுவான்வந்துசார்தலும்
விடந்திகழ்விழியினுளோடவேட்கையாற்
றொடர்ந்தனனறிவிலாச்சோரன்றானுமே. (௨௮)

* ஓடியமடக்கொடியுலகுகாவலன்
சூடியமணிமுடிதுலங்குகோயிலின்
வாடியகொடியெனவந்துவீழ்ந்தன
ணீடியவேத்தவைநிருபர்காணவே. (௨௯)

* தொழுந்தகைமனுகுலத்தோன்றல்கண்ணெதிர்
விழுந்தழுந்தெரிவையைவேட்கைநோயினு
லழுந்தியகாமுகனச்சமின்றியே
செழுந்துணைக்கைத்தலந்தீண்டவுன்னினுன். (௩௦)

* உன்னுமவ்வளவையினுருளையொன்றுடைப்
பொன்னெடுந்தேரவன்புகலமற்றொரு
வன்னெடுங்கிங்கரன்சூறைமாருத
மென்னவந்தடுத்தயலெடுத்துவீசினுன். (௩௧)

* கண்டனனிருந்தமன்காவல்வேந்தனு
மெண்டகுநெறிமுறையிடறுகீசகன்
றிண்டிறல்வலிமையுஞ்செயலுஞ்சிந்தையிற்
கொண்டொருவாய்மையுங்கூறவஞ்சினுன். (௩௨)

* அடுதொழிற்பலாயனனழுதமின்னையுங்
கடுமையிற்பின்றொடர்காளைதன்னையும்
படருறக்கண்டுதன்பாங்கர்நின்றதோர்
விடவியைப்பிடுங்குவான்வெகுண்டுநோக்கினுன். (௩௩)

* கனிட்டன்றெண்ணமக்கங்கனுகிய
முனித்தகையுணர்ந்தவன்முகத்தைநோக்கியித்
தனிப்பெருமராமரந்தழல்கொளுந்திடா
துனக்கடுமிந்தனமன்றென்றோதினுன். (௩௪)

* தீண்டுதறகாதெனச்செம்மையொன்றிலான்
வேண்டியசெய்வதுவேத்துநீதியோ
வாண்டகையிதற்குநீயல்லவாமெனு
வீண்டொருமொழிகொடாதிருப்பதென்கொலோ. (௯௫)

* அன்புடைத்தேவிதன்னருகுதோழியாய்
நின்பெருங்கோயிலினீடுவைகினே
னென்பெருவினையினுலின்றுன்மைத்துனன்
றன்புயவலியினுற்றழுவவுன்னினுன். (௯௬)

* பெருந்தகையன்றிதுபேசலன்றிநீ
யிருந்தனையுனக்கரசெங்ஙன்செல்வது
வருந்தினர்வருத்தநீமாற்றலாயெனி
லருந்திறலரசநின்னுணைபொன்றுமே. (௯௭)

* எனவிவள்புலம்பிமெய்யேய்ந்தபூழியுங்
கனதனநனைத்திடுங்கண்ணினீருமாய்
மனமிகமறுகிடமன்னன்றேவிபா
லிணைவுடனெய்திவீழ்ந்தேங்கிவிம்மினுள். (௯௮)

* பூதலமாண்மையாற்புரக்குமன்னவர்
தீதொழில்புரிஞரைத்தெண்டியாரெனி
னீதியுஞ்செல்வமுநிலைபெறுங்கொலோ
வேதிலர்தமரெனவிரண்டுபார்ப்பரோ. (௯௯)

* யாருமில்லொருத்திநின்னில்லில்வைகினு
லார்வமுற்றவள்வயினன்புகூர்வது
வீரமோதருமமோவிருப்பமோவிவை
பூரியரலாதவர்புரிதல்போதுமோ. (௪௦)

* கீசகனுயினுங்கேடுசெய்தன
னுசைநோய்மன்பதையனைத்தினுக்குமுண்
டேசிதுநினக்குமென்றிருந்தவேந்தொடும்
வாசகம்பலசொனுன்மறைவலானுமே. (௪௧)

* முன்னுறமுனிவரன்மொழிந்தவாய்மையு
மின்னலோடழுதவளிசைத்தவாய்மையுங்
கன்னமூடுறச்சுடக்கருத்தழிந்துபோய்
மன்னனுந்தன்றிருமனையிலெய்தினுன். (௪௨)

* கண்ணெருப்பெழவிருகைந்நெருப்பெழ
வுண்ணெருப்பெழத்தனதுடனெருப்பெழ
மண்ணெருப்பெழவருமடையிலெய்தினுன்
றிண்ணெருப்பினுமிகுசினங்கொள்வீமனே. (௪௩)

வே று.

* பன்னிருவரினுநாடொறுங்கனகபருப்பதம்வலம்வருந்தேரோன்
மின்னிகர்மருங்குல்விரதசாரணிபால்விளைவுறுதுயரமதுணர்ந்து
தன்னொருமரபிற்றோன்றலைவெறுத்துத்தனிப்பெருந்தேர்குடபொருப்பின்
சென்னியினுருளவுருட்டியத்திசையுஞ்சிவப்புறத்தானுமெய்சிவந்தான். (சச)

* குந்திதன்புதல்வரைவருஞ்சோகமுதிர்ந்திடவிதயமுங்கொதித்தார்
வெந்திறல்வடிவேல்விராடனுந்தனதுவேத்தியல்பொன்றலின்வெறுத்தான்
செந்திருவனையசுதேட்டிணையென்னுந்தெரிவையுந்தெருமரலுழந்தா
ளந்தமாநகரிலனைவருநைந்தாரார்கொலோவாகுலமுறாதார். (சரு)

* அனைவருந்துயின்றுகங்குலும்பானாளானபினழுதகண்ணீரோ
டினைவருநதையல்கண்கணீர்மல்கவிறைமகன்மடைப்பள்ளியெய்தி
நினைவருசெற்றமுடித்திடவல்லார்நீயலதில்லையிக்கங்குற்
கனைவருகழலாய்புரிவதியாதென்றுள்காளையுங்கனன்றிவைசொல்வான். (சசு)

* பொறையெனப்படுவதாடவர்தமக்குப்பூணெனப்புகலினும்பொருந்தார்
முறையறப்புரிந்தாலக்கணத்தவர்தம்முடித்தலைதுணிப்பலேமுழுப்பூ
ணறைமலர்க்குழலார்தமக்குமெய்யகலாநாணமேநலஞ்செய்பூணெனினு
நிறையுடைப்பெரும்பூணமளிவாய்நாணநிகழ்வுறாநிகழ்ச்சியேயன்றோ. (சஎ)

* அரசவைப்புறத்திற்சௌபலன்சூதிலழிந்தநாளினுமெமையடக்கி
முரசவெங்கொடியோன்றேசழித்தனனுலின்றுமம்முறைமையேமொழிந்தான்
புரசைவெங்களிற்றின்மத்தகம்பிளக்கும்போருகிர்மடங்கல்போலின்னே
துரிசறப்பொருதுகீசகனுடலந்துணிப்பன்யான்றுணைவரோடென்றான். (சஅ)

* மருத்தின்மாமதலைவார்த்தைகேட்டந்தமருச்சகன்மடக்கொடியுரைப்பா
ளுரைத்தநாளெல்லாஞ்சில்பகலொழியவொழிந்தனவொழிவிலாவுரவோ
யருத்தியோடொருவரறிவுறாவண்ணமிருந்தசீரழிவுறுமென்னுங்
கருத்துநின்றம்முற்குண்மையிற்றடுத்தான்காலமுந்தேயமுமுணர்வான். ()

* பாயும்வெஞ்சிறகற்கலுழன்முன்பட்டபாந்தள்போற்கீசகன்பதைப்பக்
காயமதிந்தக்கங்குலிற்கடனன்றொருபகலிருபகல்கழிந்தா
னேயமோடின்றுவந்துகந்தருவர்நேர்படமலைந்தனரென்னுந்
தூயசொல்வினையப்பொருவதேயுறுதியென்னவத்திரௌபதிசொன்னாள். (ருo)

* ஐயெனவிவனுந்தன்னைமுன்பயந்தவாரழலனையகற்புடைய
தையறன்மொழியைத்தானுமுட்கொண்டுதகுசெயல்விரகுடன்சாற்றி
வெய்யதன்சினமுந்தன்புயவலிபோன்மேலுறமேலுறவளர
நெய்யுறுகனலிற்பொங்கியக்கங்குனீந்தினன்வேந்தனுக்கிளையோன். (ருக)

* அற்றைநாளிரவிற்றன்பரிதாபமாறியவறிவுடைக்கொடியு
மற்றைநாளந்தச்சுதேட்டிணைகோயின்மன்னவன்மைத்துனன்வரலுங்
கற்றைவார்குழலிற்பூழியுங்கண்ணீர்கலந்தவான்கொங்கையுஞ்சுமந்தாங்
கொற்றைமென்கொடிபோனின்றனளவனுமுளங்கவரவணிலைகண்டான். ()

வேறு.

* கலைமதிகண்டகாந்தக்கல்லெனவுருகிச்சிந்தை
தலைமகனல்லான்வஞ்சந்தனக்கொருவடிவமானோ
னிலைபெறுகற்பினளைநேருறநோக்கிப்பின்னு
முலைவுறுகாதன்மிஞ்சவுரனழிந்துரைக்கலுற்றான். (௫௩)

* மன்னவன்வாழ்வுமிந்தவளநகர்வாழ்வுமெல்லா
மென்னதுவலிகொண்டென்பதின்றனக்கேற்பக்கண்டா
யுன்னைமெய்காக்குந்தேவருறுதியுமுரனுங்கண்டா
யென்னைகொல்வினியுன்னெண்ணென்றிருகரங்கூப்பினனே. (௫௪)

* கருத்தினிமுடியுமென்றுகடுங்கனன்முகத்திற்றோன்று
திருத்தகுபாவையந்தத்தீயவன்றன்னைநோக்கி
வருத்தநீயுறவுமுன்னர்மறுத்தனன்மரபினாலுஞ்
சரித்திரத்தாலுங்கொண்டதவவிரதத்தினாலும். (௫௫)

* கந்தருவருமற்றென்னைக்காப்பதுமறந்தார்போலு
மிந்திரனெனினுமாதரெளிமையினொருப்பட்டெய்தார்
புந்தியிலொன்றுங்கொள்ளேலாரிருட்பொழுதிலின்று
சந்தணிகுவவுத்தோளாய்தனித்துநீவருதியென்றாள். (௫௬)

* அக்கொடியுரைத்தமாற்றமவன்செவிக்கமுதமாகிப்
புக்குயிர்நிறுத்திமெய்யும்புளகெழவிளகிநெஞ்ச
மிக்கதோர்வேட்கைகூரவிடுத்தலின்வேந்தன்கோயிற்
கொக்கின்மேற்குயில்கள்கூவுங்குளிர்பொழிற்குறியுஞ்சொன்னாள். (௫௭)

* குருட்டியன்மதியினானைக்கோதிலாவறிவின்மிக்காண்
மருட்டினளாகியந்தவளர்தடம்பொழிலினோர்சா
ரிருட்டிடைநிலவுகாட்டுமின்பமண்டபத்தில்வம்மி
னுருட்டடந்தேரோயென்றாளவனுமஃதொருப்பட்டானே. (௫௮)

* குறியவன்றனக்குநேர்ந்தகொடியவெங்கொலைவேற்கண்ணா
டறிபொருகளிற்றினன்னசமீரணன்மகனையெய்திச்
செறிவொடக்காலையோடுசெப்பியயாவுஞ்செப்பிப்
பிறிதொருகருத்துமின்றிப்பெரும்பகல்போக்கினாளே. (௫௯)

* எல்லையெண்டிசையும்போனவிருளெலாமீண்டுதுன்ற
வெல்லையின்றலைவனானவிரவியுங்குடவெற்பெய்த
வெல்லையில்காதலோனுமிடையிருளிடையேயந்த
வெல்லையைநோக்கிச்சென்றான்யமன்றிசையென்னமன்னோ. (௬0)

* வடுவறத்தெவ்வர்போருமன்னவனுணவுங்கையா
லடுதொழிற்குரியசெம்பொன்வரையிரண்டனையதோளா
னுடுமுகத்தின்மைவானமொளியறவிருண்டகங்கு
னடுவுறப்பொழுதிற்செவ்விநவ்வியர்கோலங்கொண்டான். (௬௧)

✱ அங்கியிற்றோன்றுநளாயணியுடனள்ளிக்கொள்ளப்
பொங்கியவிருளின்முன்னம்புகன்றவப்பொங்களூடு
தங்கியகனகமாடந்தன்னிடைப்புகுந்துசான்ற
விங்கிதத்துடனேநோக்கியிருந்தனனிமைப்பிலாதான். (கூஉ)

✱ அணங்கனசாயலாளையப்புறங்கரந்துவைத்து
மணங்கமழலங்கன்மார்பன்மண்டபத்திருந்தகாலைப்
பிணங்கலனணிந்ததன்னபேரெழிற்பெற்றியானெஞ்
சுணங்கநாப்புலரவந்தவ்வுயர்பொழிலூடுசேர்ந்தான். (கூ௩)

வேறு.

✱ சாந்திறைன்மெழுகியதவளமாளிகை
யேய்ந்தபொற்றூணிடையிலங்குமின்னெனச்
சேர்ந்துறைபெண்ணுருக்கண்டுசிந்தையிற்
கூர்ந்தபேரார்வமோடிறைஞ்சிக்கூறுவான். (கூச)

✱ என்பெருந்தவப்பயனென்றறிந்திலேன்
மின்புரைமருங்குலாய்வேட்கைவிஞ்சலாற்
புன்பிழைசெய்தனன்பொறுத்திநீயென
வன்புடன்சிலம்பணியடியில்வீழ்ந்துமேல். (கூ௫)

✱ பைங்குலைக்குரும்பையைப்பழித்தகொங்கையாய்
மங்குலைப்புழுகினைவைத்தகூந்தலாய்
கங்குலிற்கால்வழிகாட்டவந்ததின்
றிங்குலப்புறமெனதாவியீயவோ. (கூகூ)

✱ கிஞ்சுகமலர்ந்துநின்கிள்ளைவாய்மையா
லஞ்சலென்றோருரையளித்தல்காண்கிலே
னஞ்சனவிழிக்கடைநயந்தபார்வைகொண்
டெஞ்சுமென்னுயிரினையெடுப்பதென்றுநீ. (கூஎ)

✱ வழிபடுதெய்வமுமற்றுமுற்றுநீ
யிழிபடுபிறர்முகமென்றுநோக்கலேன்
கழிபடருற்றதென்காமநோயெனு
மொழிபலகூறினன்முகம்புகுந்துளான். (கூஅ)

✱ கீசகனிம்முறைகிளந்தபற்பல
வாசகங்கேட்டலும்வலங்கொணெஞ்சுடைப்
பூசகர்பூசைகொள்ளாதபுன்பவ
நாசகக்கடவுள்போனகைத்துநோக்கியே. (கூகூ)

✱ பெண்ணுடையுருக்கொளும்பெற்றமாமகன்
கண்ணுடைப்பொறியெழுங்கனலின்வந்திட
மண்ணுடைக்காவலன்மைத்துனன்றனை
யெண்ணுடைக்கைகளாலிருகைபற்றினன். (எ௦)

* பற்றினன்பற்றியபாணியாலெழச்
சுற்றினன்கறங்கெனத்தூணமொன்றினே
டெற்றினன்சென்னியையெடுத்ததன்வினை
முற்றினனெடும்பெருமூச்சனுகியே. (எக)

* வீமனைப்பிடித்தகைவிலக்கிமற்றவன்
மாமுகத்திருகையுமாறிமோதினன்
றீமுகத்தவனையச்செம்மன்மீளவுஞ்
சாமுகத்தவனெனத்தள்ளிவீழ்த்தினன். (எஉ)

* ஒரொருகுத்தெரியுருமுவீழ்ந்தென
மேருவொடொத்ததோள்வீமன்குத்தலு
மீரிடத்தினும்விலாவெலும்புநெக்கன
கூருகிர்த்தலைகளாற்குருதிகக்கவே. (எங)

* கேளொடுகெடுதருகீசகன்கழற்
ருளொடுதாளுறத்தாக்கிமற்கெழு
தோளொடுதோளுறத்தோய்ந்துகன்னல்வில்
வேளொடுவருநலம்விஞ்சமேவினன். (எச)

* தாழ்வரைத்தடக்கையாற்றையலாளெதிர்
காழ்வரப்பொருதிறற்காளைதன்னையுஞ்
சூழ்வரச்சூறையிற்சுற்றிப்பார்மிசை
வீழ்வரப்புடைத்தனன்மிடலில்விஞ்சினன். (எரு)

விழுந்தவன்மீளவும்வெய்துயிர்த்தன
னெழுந்துதன்பகைவனதிருண்டகுஞ்சியை
யழுந்தவல்விரல்களாற்சுற்றியாய்மரக்
கழுந்தெனப்புடைத்தனன்கைகள்சேப்பவே. (எசு)

* புடைத்தனனவனிவன்புடைத்தகைகளை
விடைத்தனனகற்றிமெய்ம்மேவுபூதியுந்
துடைத்தனனுகியத்தோன்றல்வாயினை
யுடைத்தனனொருகையாலொருகைபற்றியே. (எஎ)

* வீரமும்வலிமையும்விரகுமொத்தவர்
தீரமுந்தெளிவுநாஞ்செப்பற்பாலவோ
நேரமுஞ்சென்றதுநிசையெனுமிகு
சூரமுஞ்செற்றமுமுடையதோன்றலே. (எஅ)

* மன்னவன்மைத்துனன்மார்பொடிந்திட
சென்னியுந்தாள்களுஞ்சேரவொன்றிடத்
தன்னிருசெங்கையாற்ருக்கிவான்றசை
துன்னியமலையெனச்சுருக்கினனரோ. (எகூ)

* மாற்றினனவன்பெருமையலாவியைக்
கூற்றினார்கைக்கொளக்கொடுத்துதன்சின
மாற்றினனத்திறலார்கொல்வல்லவர்
காற்றினல்வருதிறற்காளையல்லதே. (அ௦)

* பண்ணியவினைகளின்பயனலாதுதா
மெண்ணியகருமமற்றியாவரெய்தினர்
திண்ணியகீசகன்செய்ததீங்கவன்
புண்ணியமானதாற்புகல்வதென்கொலாம். (அக)

* செங்கைகாலுடலொடுசென்னிதுன்றிட
வங்கையாலடக்கினின்றநேகமாயிரம்
வெங்கையானையின்மிடல்வீமன்வெற்பன
கொங்கையாடன்னையுங்கூவினனரோ. (அ௨)

* பூங்கொடியனையவள்புறவடிப்புறத்
தோங்கியகீசகனுடற்பிழம்பினை
நீங்கியவாய்மைகணிகழ்ந்ததென்னவே
பாங்கினில்வைத்தடற்பவனன்மைந்தனே. (அ௩)

* விடுங்குழைமராமரமொன்றுவேருடன்
பிடுங்கினன்கைகளாற்பிசைந்துதீயெழச்
சுடுங்கொலென்றஞ்சிலன்சுவாலைசெய்தன
னெடுங்கணாள்கண்டுதன்றுயரநீங்கவே. (அ௪)

வேறு.

* தோட்டுமென்மலர்ச்சோலையினூடையு
மோட்டுவன்கரமுட்டியினூடையு
மாட்டுவண்சுதைமண்டபத்தோதையுங்
கேட்டுணர்ந்தனர்கீசகன்றம்பிமார். (அ௫)

* தொய்யிலாதிசுதேட்டினைக்கொப்பனை
கையிலாரழகேறக்கவின்செயுந்
தையலாள்பொருட்டாகத்தனக்குறு
மையலான்மிகவாடிவருந்தினன். (அ௬)

* வண்டறூதமலர்க்குழல்வல்லியைக்
கண்டகாவிலிக்கங்குற்பொழுதிடைச்
சண்டவேகக்களிறன்னதன்மையான்
கொண்டமாலிற்குறுகினன்போலுமால். (அ௭)

* தூவிவாசந்துளிமதுச்சோலையி
லேவலாலியற்றுமெழிற்பாவைமெய்
காவலாகியகந்தருவப்பெயர்த்
தேவரால்வெஞ்செருவுளதானதோ. (அ௮)

* அழிந்தகீசகனன்றிமற்றுண்டென
மொழிந்ததம்பியர் நூற்றொருமூவருங்
கழிந்ததீயுமிழ்கண்ணினராயுயி
ரொழிந்துபோதுமென்றுன்னினரோடினார். (அகூ)

* நகரியெங்கும்வெருவரநள்ளிரு
ளுகருமாறுபன்னூறொளித்தீபமோ
டகருநாறுதண்காவிலரும்பக
னிகருமென்னநெருங்கினர்நாடினார். (கூ0)

* சுதைநிலாவொளிசூழ்மண்டபத்திடைச்
சிதையுமெய்யொடுஞ்செம்பொற்சிலம்பெனக்
கதைவலான்வெங்கடுங்கொடுங்கைகளால்
வதைசெய்தம்முன்வடிவுகண்டார்களே. (கூக)

* பழுதுடைப்பெரும்பாதகன்மாண்டமை
தொழுதுரைத்துச்சுதேட்டிணைதன்னொடு
மழுதரற்றியயலறியாவகை
யெழுதழற்கணிடுவதற்கெண்ணினார். (கூ௨)

* எண்ணிலாமனத்தெம்முனையெண்ணுடை
விண்ணுளார்சிலர்வீத்ததற்கேதுவாம்
வண்ணமாமகடன்னையும்வன்னியா
லண்ணலோடுமடுதுமென்றார்களே. (கூ௩)

* சொல்லுமாடவர்சொல்லினராயினுங்
கொல்லுமோகனமுன்பெற்றகோதையை
மல்லன்மாலையினார்வந்துபற்றலு
மல்லல்கூரவரற்றினளாலவள். (கூ௪)

* வெருவருங்கருங்கங்குலில்வெங்கொலை
நிருபரென்னைநெருப்பிடைவீழ்த்துவான்
கருதினார்கண்மெய்காக்குங்கடவுள்காள்
வருதிரென்றுகண்வார்புனல்சோரவே. (கூ௫)

* மடைப்பெரும்பள்ளியெய்தியமாருதி
கிடைப்பதன்றிக்கிளர்பெரும்போரெனத்
தொடைப்பெரும்பவனத்தனல்சோர்தரப்
புடைப்பவோடினன்போர்மதமாவனான். (கூசு)

* அகப்பொழிற்கண்டவம்மரம்யாவையு
மிகப்பிடுங்கினன்வேரொடுங்கோட்டொடு
முகப்புடைத்தனனோடத்தொடங்கினார்
தகச்செயாமதிக்கீசகன்றம்பிமார். (கூஎ)

* போனபோனதிசைதொறும்போய்த்தொடர்ந்
தானவானவனெக்கவக்கோட்டினன்
மானமும்மவராவியும்வாங்கின
னேனையோர்களுந்தம்முனெய்தினர். (கூகூ)

* துவன்றகற்புடைத்தோகையைவிட்டுமுன்
னுவன்றகீசகர்நூற்றொருமூவரு
மவன்றன்வாகுவினலழிவுண்டபின்
கவுன்றதாலக்கடிநகரெங்குமே. (கூகூ)

* கற்கும்யாழுடைக்கந்தருவர்க்கெதிர்
நிற்பரோவுடனேர்பொரமானவர்
கிற்குமைந்துடைக்கீசகர்யாவருந்
தற்கினன்மடிந்தார்தகவொன்றிலார். (க00)

* என்றுமாநகர்யாவுநடுங்கிடத்
துன்றுகங்குலிற்சோரர்தம்மாருயிர்
பொன்றுவித்தபொருநனும்பூவையுஞ்
சென்றுதத்தமசேர்விடநண்ணினர். (க0க)

* கரியகங்குல்கனையிருட்போர்வையோ
டிரியவந்தவிருள்வலிதன்னினும்
புரியினன்றுபுரிந்தவப்போரும்வன்
கிரியின்மன்னுங்கிளர்விளக்கானதே. (க0உ)

புலியினும்பெரும்போரிற்றனித்தனி
வலியராகியமைத்துனர்யாரையும்
பலியிடுங்கந்தருவரைப்பார்க்கவே
மெலிவுழந்தனன்விற்கைவிராடனே. (க0ங)

* காண்டகுந்தமவேடங்கரந்துறை
யாண்டுசென்றதினிச்சிலநாளென
மீண்டுதோன்றுதுமென்றுவிரதராம்
பாண்டுமைந்தரும்பான்மையினண்ணினர். (க0ச)

கீசகன்வதைச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-ருருசஉ.

---

உ

# தெட்சிணநிரைமீட்சிச்சருக்கம்.

---

* தொழுவார்தம்வினைதீரமுற்கோலமாய்வேலைசூழ்பாரெயிற்
றழுவானைநண்ணுமமொன்றாயினுங்கற்றோருருவோதினோர்
வழுவாதசுரராகநரராகபுள்ளாகமாவாகபுன்
புழுவாகவொன்றிற்பிறந்தாலுநரகிற்புகார்காணுமே. (௧)

* மூதாரழற்பாலைவனமுந்தடஞ்சாரன்முதுகுன்றமுஞ்
சூதாடியழிவுற்றடைந்தோர்கள்சரிதங்கள்சொன்னோமினிப்
பாதாரவிந்தத்துமருவார்விழக்கொண்டுபாராளும்வெங்
கோதார்மனத்தோன்விராடன்றனிரைகொண்டகோள்கூறுவாம். (௨)

வேறு.

மன்னுங்கரையினிருமருங்குமல்குந்தரங்கமெடுத்தெறிந்த
பொன்னுங்கிரணமணிக்குழுவும்புரளுங்கங்கைப்புனலுடன்
மின்னுங்கவுந்திசுதரும்வனம்விடுத்தேபுவியிலடுத்தாரின்
றென்னுமுரைகேட்டொற்றர்பலர்க்கின்சொற்கூறிவிடுத்தானே. (௩)

தேடியவர்தமுருவிகற்பந்தெளியவெளிசெய்தவர்க்குடுவிற்
கோடிநிதியுமணிப்பூணுங்கொடையுங்களிறுங்கொடுப்பதென
நாடியரவக்கொடிக்கதிபனவின்றமொழியாலுலகெல்லா
மோடியுலவிப்பலகோடியொற்றர்திரிந்தாருயிர்ப்போங்க. (௪)

விண்டோய்புரிசைமணிநகரும்விரைகாலோடைத்திருநாடும்
வண்டோலிடுபூந்தண்காவும்வான்சார்சிமையமால்வரையும்
கண்டோர்வெருவுமுட்கானுங்கண்டற்கடலின்கரைமருங்கு
முண்டோவிவர்தமடிச்சுவடென்றொற்றர்தேடிமீண்டாரே. (௫)

பச்சைப்புரவித்திண்டேரான்பயந்தகுரிசிற்பகர்சுபல
னிச்சைப்புதல்வனாசிரியனிவுளித்தாமனெழிற்கிருபன்
செச்சைப்புலஞ்செய்நறுந்தெரியற்றிகத்தன்விதுரன்பிதாமகனோ
டுச்சிக்கதிர்போற்சுயோதனன்வைகுறும்பேரவையில்வந்தடைந்தார். (௬)

மதியைப்புடைசூழ்தாரகையின்வனம்போலிளைஞர்பலர்சூழ
துதியைப்பெருக்கிமுடிவேந்தர்தொழுதேத்திடவோர்மணித்தவிசில்
விதியைத்தனக்குக்கெதியாக்கும்வேந்தர்பெருமானினிதிருப்பப்
பதியைப்பணிந்தேயிவ்வுலகிற்காணேன்பாண்டவரையென்றான். (௭)

எறிக்குங்கதிரோன்செழுங்கிரணமியங்குமுயிர்ப்போடியலுயிரை
பறிக்குமறலிநிலவினொளிபாயாவிடத்துமாயாமற்
குறிக்கும்படிசென்றோராய்ந்துகாணாதுள்ளக்குறைவோடும்
வெறிக்குந்தாராய்மீண்டனமாங்கவரீண்டில்லைமெய்ம்மையதாய். (௮)

நாளோவவதிநீங்கியதானுமன்றறிதுமுள்ளபடி
வாளோடரசர்வந்திரைஞ்சுமன்னர்பெருமாற்குரைத்துமென
கேளோடொன்றிவந்ததினிக்கிளத்துமாறுபுரிதுமென
வேளோடுவமைபுகல்வான்மெய்வியர்க்கப்புகன்றார்விறற்றூதர். (௯)

குறிப்பிற்றூதர்புகன்றவெலாங்குருநாட்டரசன்மகன்றெரிந்து
சிறப்பின்மருங்கிற்றிகழ்ந்திருந்ததிறலார்குரவர்முகநோக்கி
மறப்பிலவனிமுழுதோடிவந்தோர்புகன்றவாறெல்லாந்
திறப்பாலுளத்தீருணர்ந்தீர்மேற்செய்வதறிந்துகழறுமினே. (௧௦)

பாண்டுசுதர்களைவரும்பாஞ்சாலன்மகளுமீராறு
மாண்டுவனத்திலிருந்திளைத்தேயாவிவிடுத்தேயகன்றுரோ
தூண்டுமுனிவர்போதனையாற்றுணிந்துதுறவெய்தினர்கொல்லோ
மீண்டுவருமாறுளவேயோவிளம்பீருளத்திலோர்ந்தென்றான். (௧௧)

கடவும்பச்சைவயப்புரவிக்கற்றைச்செழுந்தேர்க்கதிர்மைந்தன்
புடவிமுழுதும்புரந்தளிக்கும்புயங்கக்கொடியோன்மொழிகேளா
வடவிநீங்கியிவ்வுலகினைவருருவங்கரந்துமுகி
றடவுபுரிசைநகர்க்கிறைவர்தம்பாற்றாமோர்தொழிறாங்கி. (௧௨)

நாமம்வேறுகுணம்வேறாநடத்தியிருதாறகற்றியபின்
தாமம்பிறழுமணிமார்பர்தங்தொல்லுருவந்தலைக்கொண்டு
சேமம்பயிலும்படையேந்திச்செருச்செய்திடவந்தெய்துவரால்
வாமம்புரிதார்வலம்புரிகாய்மடவார்மயங்குமணிமார்போய். (௧௩)

என்றுபுகலவருகிருந்தவிளையதுச்சாதனன்வெகுண்டு
குன்றுபுரைதோளிணைநோக்கிக்குரிசிற்குரைப்பானவரன்றே
பொன்றுமுருவராயகன்றாரினிவந்தெய்தப்போற்றூரா
நின்றுமுளரேலிவ்வொற்றர்க்குணரவரியதெவனுண்டோ. (௧௪)

வாடுங்கொடிநேர்நுசுப்புடையமங்கைவொறுப்பாற்றம்பியர்க
ணீடும்வடவைநிகர்வெகுளிநெருப்பாற்பசியாற்கானலினூற்
சாடுமரசர்தருவசையாற்றரித்தாற்றலனுயறன்குமர
னீடுப்படலாற்சலித்துயிர்நீத்திறப்பவிளைஞருடனிறந்தான். (௧௫)

இரும்புண்டகன்றநீர்மீண்டிங்கெய்திற்றேனுமினிப்பாண்டுத்
தரும்பஞ்சவர்மீள்கிலரென்றுதறுகட்டுச்சாதனனுரைப்ப
வரும்புஞ்சிறியவாணகையுமற்புந்தெரியவமரரெலாம்
விரும்புஞ்சிலைவல்லாசிரியன்வேந்தர்வேந்தற்கிதுசொன்னான். (௧௬)

வேறு.

சுருதிநெறிகள்வழிவிலறிவர்சுரர்கள்புகழுமினிமையோர்
கருதவரியபரமனுதவுகனல்செய்பகழிவழியுளோர்
பருதிவொளியரெதிரிலடர்பனகசயனனிவனெனும்
மருதுபொருதபெருமனருளின்வலியுமுடையதிறலினோர். (௧௭)

அசுரருடனுமமரரிடருமகலவிக லுநிலமையோ
ரிசையினுததியனையர்தவறிலினியசரதமொழியுளோர்
வசைகொண்மொழிகளுலகில்வளரவலிதினுயிரைவிடுவரேற்
பசுமைவுரைசெய்தவணைகழிவுபடவிவ்விடம்வந்தடைவரால். (௧௮)
நறைகொள்பிணையலரசர்பெருமவறிதியெனவேநவிலுறு
முறைகொள்கிருபன்மொழிவனவரைமுனிவில்லிறுதியனுகுமோ
வறையுமவதியகலுமளவுமரியவுருவுகரவுசெய்
துறைவரொருவர்நகரினவரையுணரவலருமுளர்கொலோ. (௧௯)
இரவிதிருமுன்னெழில்செய்பதுமமிரவினறையையதவுமோ
விரவுகுமுதமிரவினலதுவிறல்கொள்பகலினலருமோ
கரவிலுருவமறையவுறுநர்கருதுதவணைகரையவே
விரைவில்வரமெய்வெளிசெய்தடைவர்விளைவதுளதென்றருளினான். ()
மதியிலதிகனிதனைமொழியமருவுமவையிலுளபலோர்
சதிரினுரைசெய்தகைமைமுடிவுதனையுமனதிலுணர்வுநீ
முதியவிரகுமுனியுமொருசொல்மொழிவன்னவர்களுறைபெரும்
பதியையறிவதுளதுவிரகுபலருமிதனையுணர்மினே. (௨௧)

வே று.

வரைகளுதவுமதுமாரிவானமுதவும்மாரி
திரைகளுதவுநவமணிகள்செய்யிற்படுமிப்பியின்மணிகள்
கரையில்வளருஞ்செழும்பவளம்காணில்வளருநிரம்பவளம்
நிரைகளுதவும்பெரும்பாலைநெறிகளனைத்துங்கரும்பாலை. (௨௨)
நீடும்விளைவுசெஞ்சாலிநிகர்வர்மடவாரஞ்சாலி
நாடுநகருந்தருமறமேநவிலுந்திறமும்பெருமறமே
பாடுமளியும்விறலிசையேபயில்வதிவருமளியிசையே
யாடுமணியுமசையாதேயறிவுமெவர்க்குமசையாதே. (௨௩)
இன்னபண்பாம்பெருமிதங்களிறைவரைவரிருந்தபுவி
தன்னிலுளவாமிவையன்றிச்சால்புமாண்புதவந்தானம்
பன்னுமகங்களகமோங்கற்பயனேடெல்லாவளமைகளுந்
துன்னுமதனுக்குவமையெனச்சொல்லப்புவியினிலவாமே. (௨௪)
ஆடற்சிலைவல்புயநம்பியடலாரைவர்க்குறையுமிடம்
நாடற்குறுதியிதுவென்றேநவிலக்கிருபனனிமகிழ்ந்து
தேடற்கரியபெருசூட்சிதெரிந்தேயுரைத்தான்மூதாதை
கோடற்கிதுவேபயனென்றுகுறித்துப்பின்னுங்குறிக்கின்றான். (௨௫)

வே று.

அற்புயராடவரவையினெம்மனோர்
சொற்பழுதுருவகைகான்றொடர்ந்திவண்
பொற்புறமீண்டுருப்பொலிவுநீக்கியே
நிற்பரோரிடத்தெனநிகழ்த்தலாயதே. (௨௬)

சொன்னசொற்படியவர்தொலைத்துளாரினி
மன்னநீசொற்றசொல்வழுவின்வைகினு
மென்னனின்னரசியலிந்தமாநில
மன்னவர்புரப்பதற்கையமில்லையே. (உஎ)

சூட்சியும்விரகுநின்றுணைவர்நன்மதி
மாட்சியுமுணர்குவான்மனங்கொண்டுற்றனங்
காட்சியாயவர்நிலைகாணவாற்றலாய்த்
தாட்சிநின்மாட்டலாலாரைச்சாற்றுகேன். (உஅ)

பன்னிருவருடநீத்தைவர்பாரில்வந்
துன்னருவருடமொன்றுறைந்துங்கண்டிலை
யென்னினிப்பன்மொழியியம்பலேகநாட்
பின்னரினுசாவுதல்பேதைப்பாலதே. (உகூ)

ஆயினும்பகீரதியளித்தகோமுனித்
தூயவனுரைப்படிதூய்மைதங்கிய
தேயமிங்கிதுவெனத்தெளிதிரென்னலும்
மேயவச்சாரணர்விளம்பன்மேயினர். (௩0)

திங்கண்மும்மாரியுஞ்சிறப்புமேன்மையுந்
தங்கியான்குலங்களுந்தழைந்துசாலிகண்
மங்குறேய்விளைவுடைத்தேயமச்சனு
டெங்கணுமதற்கிணையிசைப்பவில்லையே. (௩க)

வழுவறவுலகெலாமாய்ந்துவந்துளே
மிழிவறுமச்சனுட்டிய லுஞ்செல்வமும்
பழுதறுபயிர்ச்சியும்மரபும்பார்த்திலோ
மொழிவதென்பிதாமகன்மொழிந்ததுண்மையே. (௩உ)

இன்னுமோர்மொழியவணிசைப்பக்கேட்டுளே
மன்னுடைமைத்துனன்வலியகீசகன்
மின்னுருவண்ணமாமகன்மெய்வேண்டலாற்
பொன்னுலகெய்தினன்பொழுதுமேவுமுன். (௩௩)

வண்ணமாமகளொருமங்கைகாதலால்
விண்ணிடைமேவுகந்தருவர்வேந்தராம்
பண்ணுருமைவர்மற்றவர்படுத்தசொன்
மண்ணெலாம்வழுவறவழங்கக்கேட்டுளேம். (௩௪)

அப்பெருமியற்கைகளறியுங்காலையி
னிப்பெருங்கொற்றவரெனினுமேற்பதா
மொப்பறுமதியுடையொருவவிம்மொழி
தப்பறக்கொள்கெனச்சாற்றினனரோ. (௩௫)

சாரணர்வாய்மையுந்தாறைதாதைதன்
பூரணவாய்மையும்பொருந்தநோக்கியே
காரணகாரியங்கருதிக்கூறுவான்
ஞாரணிபுலவுவேற்சர்ப்பகேதுவே. (௩௬)

மாசறுகீசகன்வீமன்மத்திர
தேசநாயகன்பலதேவனென்றிவ
ராசறுதோள்வலிக்குவமையற்றவர்
வாசவன்முதலினோர்புகழும்வண்மையோர். (௩௭)

இயக்கர்கந்தருவர்கள்சுரரிராக்கதர்
புயப்பெருவலிநிலைபொருந்தினோரெலாம்
வயப்படுகீசகன்வலிமைமாற்றிலர்
வியப்பிதுவீமனுல்விளிந்ததாகுமால். (௩௮)

அளிப்படுகருங்குழலவர்தேவிபாற்
றுளிப்படுதேனலர்த்தொங்கன்மௌலியான்
களிப்படுகாதலாற்கரையவீமனே
வெளிப்படாதியற்றியவிரகிதுண்மையே. (௩௯)

ஆதலாலவரவணிருத்தற்கையமென்
மீதெலாஞ்செய்கையைவிளம்புவீரெனப்
பூதலமுடையவன்புகலப்பாற்கரன்
காதலனோர்மொழிகழறலாயினன். (௪0)

விட்படுதேர்கரியிவுளிவீரர்கள்
பெட்புறவிக்கணம்பெயர்ந்துமச்சர்கோன்
கொட்புறுமானிலமலைந்துகோநிரை
கட்புலன்கதுவுமுன்கைக்கொண்டெய்தினல். (௪௧)

ஆங்கவரவ்வயினிருப்பராமெனிற்
றூங்கியான்மீட்பரத்தகையரின்றெனிற்
றேங்கமழ்மாலையாய்சிந்தைசெய்வதென்
பாங்குடனிரைகள்கைப்படுவதுண்மையே. (௪௨)

ஈதுகொண்டாங்கவரிருத்தறோர்தலே
மீதுகொணிலையெனவிளம்பவேந்தவைக்
காதிபரனைவருமற்றிதாமென
வோதினரரசனுமொருமித்தானரோ. (௪௩)

அவ்வயினங்கிருந்தறிந்தவாற்றல்சால்
செவ்வியந்தொடையலான்றிகத்தர்கோமகன்
வெவ்வழல்வேலொடுமெழுந்துவேந்தவைக்
கிவ்வுரைகூறினனிருகைகூப்பியே. (௪௪)

முன்னொருநாடனின்முனைசெய்கீசகன்
மன்னவர்பலரொடுவயங்கொண்டானென
வொன்னலன்மச்சநாட்டொருவனுமெனக்
கென்னைநீயவன்மிசையேவுவாயெனில். (சரு)

மாற்றலன்செல்வமுநிரையுமன்னநின்
சாற்றரும்பதிபெறத்தருதுமீண்டெனக்
கூற்றுறழ்வேலினன்குறிப்பக்கோமகன்
போற்றினல்லுரைபலபுகன்றுமீளவும். (சகூ)

மைம்மலைதனைப்புரைந்தோடைவாய்த்தெழு
கைம்மலைக்கணங்களுங்கதிர்செய்தேர்களும்
பொம்மலைவாசியும்பொருநரீட்டமுஞ்
செம்மலையுடனுறச்செலுத்திப்போக்கினன். (சஎ)

தேர்மிசைபுகுந்தொருதேவர்நாயகன்
பார்மிசையேகியபரிசுமானவே
சீர்மிசைநீங்கலாத்திரிகத்தன்சென்றபின்
றூர்மிசைபுனைந்தவேலரசன்சாற்றுவான். (சஅ)

வேறு.

சாரணருரையினானுந்தனதுளக்கருத்தினானும்
பூரணஞானசீலப்புண்ணியன்குறிப்பினானும்
தோரணமச்சநாட்டிற்றுன்னலரிருத்தறிண்ணங்
காரணங்கீசகன்றானிறத்தலேகாட்டிற்றன்றே. (சகூ)

எடுத்தபோர்திரிகத்தர்கோமானெய்தியாநிரைகொள்காலத்
தடுத்தவர்விலக்கவல்லோராமென லுண்மையன்றே
விடுத்திலன்முனையழிந்துமீண்டபின்சேறனன்றே
வடுத்தவிர்வலியீர்யாருமேகுதும்வம்மினென்றான். (நூ)

விரதமேபொருளாக்கொண்டவித்தகனோடுவேத
வரதனையாதியானோர்யாவருமனமகிழ்ந்து
சரதமென்றுன்னிவெய்யோன்சாய்ந்தபின்சார்துமென்ன
விரதமாவிபம்பதாதிக்கெழிச்சியென்றறிவித்தானே. (நுக)

துத்தியஞ்சுடிகைநாகமுயர்த்தவன்றுணைவரோடு
மத்திரன்சுபலன்மைந்தனிரவிசேய்மற்றுளோர்கட்
கித்தகைதெரியக்கூறியேகுவானமைந்திருந்தான்
சித்திரத்தேர்மேற்சென்றதிரிகத்தர்கோன்செய்கைசொல்வாம். (நுஉ)

வேறு.

தக்கோர்தகுஞ்சொற்கள்கேளாததுரியோதனன்சொல்லினான்
மிக்கோர்மிலைச்சுஞ்செழுந்தாமவிறல்வெட்சிமிலைதோளினான்
றிக்கோதையெழவிம்முமுரசங்களதிர்கின்றதிரிகத்தர்கோ
னக்குரோணிபடையோடுபோயானடித்தான்வனச்சார்பிலே. (நுங)

ஆவாலையங்காக்கும்வயவீரர்சினமெய்தியடலாண்மைசெங்
கோவாலரொடுவெந்துகுறுகித்தகைந்தார்கள்குருசேனையோ
ரேவானுமதயானைமுனிவானுமுருளானுமிணையற்றபோர்
மாவானுமுனைகெட்டழிந்தோடிமுடிமன்னர்நகர்மன்னினார். (௫௪)

கரைகாணவரிதானகடலொத்தவெஞ்சேனைகைசூழவுந்
தரைகாவல்பெறுதோளினாண்மைப்பெருங்கேளிர்தம்சூழவும்
விரைகாலுமலரோடையெனுமாறிருக்கும்விராடற்குமுன்
னிரைகாவனின்றோர்பணிந்தோதினார்தெவ்வர்நிரைகொண்டதே. (௫௫)

செருமிக்கபடையோடுசதியாகமதியாதுதிரிகத்தர்கோ
னிருமிக்கவொட்டாதவென்பூமிதனில்வந்துநிரைகொள்வதே
பருமிக்கமதயானைதேர்வாசியாளின்னபண்செய்யுமென்
றுருமிக்கமுகில்போலுரைத்தானரக்குரோணியுளதானையான். (௫௬)

அக்காவலன்சொற்றசொல்வந்துசெவியூடுமனுகாமுனங்
கைக்கார்முகங்கொண்டுருத்துப்புலிங்கஞ்செய்கட்கொண்டுபோர்
மிக்கோர்துதிக்கும்புயத்தோர்கணக்கற்றவிறல்வேந்தர்க
டிக்கானதிருநான்குமுரசோதையெழவந்துதேரேறினார். (௫௭)

பூணுங்கதிர்க்கொற்றமுடியும்புவிக்கப்புறத்துஞ்சுடர்
காணுந்தரத்தாகியணிசெய்துமிலைதும்பைநறுமாலையான்
பேணும்பெருஞ்சாபவலியோடுபுலிபோற்பெயர்ந்தோடியே
காணுந்தலத்தோர்கள்புருகூதனெனவந்துகளிறேறினான். (௫௮)

மட்டார்நறுந்தொங்கனங்கோமகன்வந்துமருவார்புலத்
தெட்டாமுனஞ்சென்றுசமர்வென்றுநிரையோடுமெதிர்மீள்வமென்
றொட்டார்நடுங்கக்கடுந்தூணிசிலைவாளுடன்றாங்கியே
பட்டார்பகைத்தோரெனப்பற்பல்வயமன்னர்பரியேறினார். (௫௯)

வேகின்றமனதோடுவிழிதந்தகனலோடுவிறல்வில்லரை
நோகின்றவுரையோடுகழலோடுகதிர்காலுநுதிவேலொடுங்
காய்கின்றமுரணோடுதெரியாமலலைவீறுகடலேழுமொன்
றாகின்றதினமென்னவொலிசெய்தெழுந்தார்களடல்வீரரே. (௬௦)

ஆரம்பனிலைகண்டுமதியாதுபுள்கெய்தியணிதேர்மிசை
வாரம்பணைக்கொங்கைமடவாரைவரைவெய்தவருவோரென
கூரம்பினொடுகார்முகங்கொண்டுசென்றான்குணத்தோரசையால்
வீரம்படக்கொற்றவில்வேந்தின்முதன்மைந்தன்விரைவாகவே. (௬௧)

மன்னால்விளங்கும்பெரும்பாரெனப்புக்குமருவார்புலந்
தன்னால்விளங்கத்தடிந்தெந்தைபெறவெற்றிதருவேனென
வின்னானெறிந்தன்னவன்றம்பியரிகுன்றின்மிசைதாவல்போற்
பொன்னால்விளங்குந்தடந்தேரில்விரைவிற்புகுந்தேறினான். (௬௨)

வசையோடிருந்தின்ப நுகரென்னவடிவாளின்மருவாரெலாந்
திசையூழிரிந்தோடவெல்வேனலாதாவிதீர்வேனென்று
விசையோடுதேரேறியளவற்றமன்மைந்தரொடுமேவினு
னிசையோடுமன்னற்குதித்தோரிலிடைவந்தெழுந்தோன்றலே. (௬௩)

புறமிட்டபொன்றீயெதிரிட்டுளோர்தெவ்வர்புரமாளவே
மறமிட்டுழக்கும்பெருஞ்சாபமுங்கொண்டுவந்தெய்தினு
னிறமிட்டதேர்மீதுபலமன்னர்புடைசூழநிலத்தோர்க்கெலா
மறமிட்டகவசத்தனுன்காவதெனுமைந்தனணிவிஞ்சவே. (௬௪)

தன்மைந்தரொருநால்வரிகனல்வகைச்சேனைதன்னோடுபோய்
தென்மைந்துடற்றிக்கடந்தோரெனக்கண்சிவந்தொன்னலார்
வின்மைந்திணைத்தேறுவானுகியொருதேரின்மிசைதோன்றினன்
மன்மைந்தர்பலரோடுமுடிகொற்றவெயில்வீசமாமச்சர்கோன். (௬௫)

மாறுபடுபோர்வல்லதன்றுணைமுன்செல்லவயமன்னனு
நீறுபடியிவனென்னவெயிலின்புறத்தெல்லைநீங்காமுனம்
பாறுபடுசிலைவல்லநரனல்லதுளபாண்டுசுதர்நால்வரும்
வீறுடல்போல்வேந்தின்முன்னின்றுமுன்னோன்விரித்தோதுவான். (௬௬)

முன்னுகவந்தோறுமடல்செய்தவலியோர்களிவர்மூவரு
மன்னுவுடன்கொண்டுபுகனன்றுயானிங்குவைகேனினிப்
பின்னுகவருவேனடந்தென்னவரசன்புறம்போதலும்
பொன்னுனதேர்பாகுபடைதந்துடன்கொண்டுபோனுனரோ. (௬௭)

ஒண்டேரிவானம்புதைக்கப்பல்லியசாலமுடனேவிடத்
திண்டேசியணியாகநிரைகொண்டவெஞ்சேனைசென்றெய்தினுன்
ஞெண்டேறும்வயரேறும்விளைநித்திலஞ்சிந்திநிலவூரவே
வண்டேரமலருந்தடம்பொய்கைசூழ்மச்சவளநாடனே. (௬௮)

வேறு.

துவசக்காடுநெடுந்தூரியவொலியொடுந்தோலா
ரவசத்தாழ்வுறுமூரிநாணிசையொடுமிடைந்த
திவசப்பாற்கரனிவனெனுமிறைவலிதெரியாக்
கவசத்தாழ்திரிகத்தர்கோன்படைஞருங்களித்தார். (௬௯)

இருவர்தம்பெருஞ்சேனையுமெதிரெதிரணியாய்
வருபெருஞ்சமராற்றுதல்வானவருணர்ந்தே
கருதுமம்பரமிடம்பெறுதினியெனக்கழற
திருவிளங்குமாமணிப்புனைவிமானமேற்செறிந்தார். (௭௦)

அனையகாலையிலிருபெரும்படையுமொய்த்தார்த்து
முனைவிளங்கிடப்பெருஞ்சமர்முனிவொடுமுனைந்தார்
கனையும்வெங்கடலொலிகளுங்கந்தரத்தொலியும்
வனையுமற்றுளவொலிகளும்வாயடங்கியதால். (௭௧)

ஏவுதேரினர்தேரொடுமிருங்கடாமழையிற்
றாவுவெங்கரிகரியொடுந்தூயவெங்கதியால்
வாவுவாம்பரிபரியொடும்பதாதியர்வந்து
மேவுறும்பதாதியரொடுமெதிர்ந்துபோர்விளைத்தார். (௭௨)

காய்ந்துகாலினர்கந்துகத்தினர்சிரங்கழிப்பப்
பாய்ந்துமாவினர்மாதங்கத்திறைவரைப்படுப்பச்
சாய்ந்துமால்கரிமீதுளோரதிகரைச்சாய்ப்பத்
தேய்ந்துயிர்த்தனர்தேர்வலார்புகழ்பெறுச்செயலால். (௭௩)

முட்டில்செல்வமுடமொய்குழலின்பமுமுதலா
மிட்டமுன்னல்லமர்புரிந்திறந்துவான்படர்ந்தார்
மட்டில்வானரமங்கையரின்பமுமமுதந்
தொட்டுறும்பெருஞ்செல்வமும்பெறுவதைத்துணிந்தோர். (௭௪)

போர்முகந்தொறும்புரவலர்மணிமுடிபுரட்டித்
தேர்முகங்களிலமர்புரிசீற்றவெந்திறலோர்
கார்முகங்களிற்பொழிதருகடுங்கணைமாரி
நீர்முகந்தெழுமுகில்பொழிமாரியைநிகர்க்கும். (௭௫)

ஓடும்வெங்கணைநால்வகைத்தானையுமுலையச்
சாடுந்தன்மையவென்னினுஞ்சேந்துநீடழற்கட்
டேடுங்காளமுஞ்சீற்றவெங்காலனுந்திகைப்பச்
சூடும்வாகையுந்திரிதருவிசைதொலைந்திலவே. (௭௬)

வேலினாலொருவெங்கொலையானையையெறிந்த
காலினான்றனைக்காண்டலாற்கருமுகிலகத்துட்
பாலினாழியிற்படுமுழுமதிநுழைந்ததுவே
போலுமாலெனப்புலவரும்புகல்வாரற்புகழ்ந்தே. (௭௭)

பன்னுமாமிசைவருபவன்சோதிவாள்பரித்தாங்
கொன்னலான்மிசைவிதிர்த்தலானவன்சிரமுருட்டித்
துன்னுமாரிருட்புவியுடையிருளையுந்துரந்து
மின்னுநாணுறத்திகந்தமெட்டினும்பிரபைவிளங்கும். (௭௮)

ஆக்கம்விஞ்சுபேராற்றலனசலநேர்கதையா
னோக்கினானெனில்வானமுமீதுறநோக்குந்
தாக்கினானெனின்மாசுணந்தளர்வுறுமென்றூ
னீக்கருந்திறல்வாகினிநிலைமையாருரைப்போர். (௭௯)

சூலந்தோமரஞ்சக்கரமுசுண்டிசூழ்பிண்டி
வாலங்கப்பணங்கலப்பைதீமழுவெழுமறலி
கோலங்கொண்டபாசங்கவண்முதலியகொண்டே
வாலம்போற்சினமுறவிருதிறத்தருமடுத்தார். (௮௰)

வேறு.

வில்லினுற்சிலபடைவீட்டிவெய்யதோண்
மல்லினுற்சிலபடைமாய்த்துவெங்கவட்
கல்லினுற்சிலபடைகாய்ந்துமோய்ந்திலன்
சொல்லினுற்றொலைவில்லோர்சுத்தவீரனே. (அக)

கொலைபடுவாளினுற்கொற்றவாகினி
யலைபடத்துணித்துறுமாற்றலான்றனைத்
தலைப்படப்புவிமிசையொருவன்றாக்கியுந்
தொலைபடுகிலனவன்கரஞ்செய்போர்த்தொழில். (அஉ)

கரிகளைப்பரிகளைக்காதிவேலினு
லெரியுறழ்கண்ணினரெடுத்துவீசலாற்
றரியலர்தமையடுசமரினேரிலா
வரிமகன்மாருதியாமென்றார்சிலர். (அ௩)

பதுமநுண்முனைக்கணைபாயும்வெஞ்சிலை
விதுவெனவளைதரவியர்வுதோன்றமண்
பொதுளுறவார்வமோடிருவர்போர்பொரன்
மதுவொடுமுராரியைமானுமென்பவே. (அச)

கயந்தனையூர்ந்தொருகாளைசந்தனத்
தியங்குவோனுடன்சமரியற்றுமாற்றலாற்
புயந்திகழிரவிமாற்றலனுடன்பொருஞ்
சயந்தனுமிவனெனவமரர்சாற்றினர். (அ௫)

இருவர்தங்கரமுகிழ்த்தெயிறுதின்றுவாய்
வெருவரமடித்துளம்வெகுளமோதுதற்
றருதிறல்வாலியுந்தபனன்மைந்தனும்
பொருதமற்போரினைப்புரையுமென்பவே. (அசு)

தேர்வலானுடனொருசெங்கட்காளைவன்
போர்வலான்புவிமிசைநின்றுபோர்தரா
லார்வலார்மொழிவதற்கரிதிராவணி
சீர்வலானிலக்குமன்செய்கைபோன்றதே. (அஎ)

சராசனமுலகெலாந்தழைப்பத்தேரின்மேற்
சுராசுரர்வியப்பவந்திரண்டுதோன்றல்கள்
பராவுறுபெருஞ்சமர்பயிற்றுமாண்டெலா
மிராமனேடிராவணனேற்றதேய்க்குமே. (அஅ)

வரிசிலைபொழிகணைமாரிமாற்றலன்
குரிசிறன்கடகக்கைக்கொண்டனேகரைப்
பரிவொடுகாத்தன்முன்பயக்குங்கன்மழை
கிரிகொடுகாத்தவிக்கிரமனைமானுமே. (அகூ)

அருகுறுவீரனுமடுத்தவேழமு
மொருகணையொருவனுண்டுருவப்பேர்க்கலான்
முருகவேள்வேலினுன்முடிந்ததாருகன்
குருகுவண்பெயருடைக்குவடுபோன்றதே. (௯0)

இவ்வணமிருதிறத்தவருமேசறக்
கைவணம்புயவணங்காட்டிப்போர்செயச்
செவ்வணமேனியனிரவிற்றிண்கட
லிவ்வணமொலிப்பதென்றெழுந்ததோதையே. (௯௧)

வேறு.

புரிந்துளபெருஞ்சமர்முகந்தொறுமலம்புரிவலம்புரிகளுந்
தெரிந்துளசலஞ்சலமருந்துடிதவண்டைகள்கறங்குசெயலும்
புரிந்திடுபெருந்தலைமறிந்துடல்விழும்பொழுததிர்ந்தவொலியும்
விரிந்திலகொடுஞ்சிலையியங்கியகுணம்படுவிளங்கொலியினுல். (௯௨)

சுரம்படுபசும்பரிசிதைந்தனகொடுங்கரிகுறைந்துகரமும்
நரம்பொடுமெலும்புகளருந்தசைகுழம்பினநலங்கொளிரதஞ்
சரம்படவருங்கனல்கொளுந்தினவெரிந்தனசயங்கொள்விறலோர்
கரம்பதமுரஞ்சிரமுருண்டனதகர்ந்தனகடுந்தசனமே. (௯௩)

சலம்படுபெருந்தகைவலம்புரியிடம்புரிதரும்பெரியதேர்
நிலம்படுநிணங்களினழுந்தினமிதந்தனநெடுஞ்சலதிநேர்
வலம்படுதிறங்களினியங்குலவையின்புடைவருந்துவசநீள்
கலம்படுதிறந்தனைநிகர்ந்தனபெருஞ்சமர்கலந்திடனெலாம். (௯௪)

வெண்குடைகளெண்ணிலதுணிந்தனமுரிந்தனமிகுங்கவரிகா
லெண்படுமதந்தருமிபங்களிரதங்களினியங்குமொலிசேர்
விண்படாருங்கொடிதறிந்துமழைவெண்முகில்விலங்கிவழுவா
மண்படரவந்ததெனவந்துவிழுகின்றனமருங்குதொறுமே. (௯௫)

இந்துமுகவெங்கணைகளொன்றினொடொன்றுறவெழுந்தகனலும்
குந்தமழுவெங்கதைகுறுந்தடியிழைந்திடைகொளுந்துகனலுஞ்
சந்தனமுருண்டசகடந்தருபெருங்கனலுமொண்டறுகணுர்
முந்துவிழிதந்தகனலும்பொறிவழங்கினமுனைந்திடனெலாம். (௯௬)

கம்பிதமெழுந்தனதடங்கிரிகருங்கட்ல்கலங்கினதிசைத்
தும்பிகளயர்ந்துகரடங்கடமறந்தனதுளங்கிவெருவா
வும்பருமதிர்ந்தனர்திரிந்ததுலகெங்கணுமுதிர்ந்ததுடுவு
மம்பரமடந்தைவடனைந்துதரளம்புவியணைந்திடுதல்போல். (௯௭)

கம்பலைதருங்கழுகொடுங்கொடிமகிழ்ந்துககனந்திகழ்தலுஞ்
செம்புனலருந்திநிணமுண்டலகைசெங்கைகடுணங்கைதரலும்
பம்பியகணங்களொடுசண்டிகைபுரிந்துளபெரும்பவுரியும்
வம்புகுடிகொண்டமுலைவிந்தைமதிகண்டுளமகிழ்ந்தனளரோ. (௯௮)

வேறு.

அறைந்தவிச்செயலால்வெம்போரிருதிறத்தவருமாற்றத்
திறம்படுபூழிதன்மேற்செறிந்துளதென்னுமாறே
குறைந்துவீழ்கொடுங்கோல்வேந்தர்குருதிமேற்றெறித்ததென்றே
மறைந்துசெங்கதிரோன்மேலைவாரிதிமூழ்கினானே. (கூகூ)

அம்படாவுதிரந்தோய்ந்தசெம்மைகண்டமர்வாய்ஞாலக்
கொம்படாமுறையாற்செய்யகோசிகம்புனைந்தாளென்றே
வம்படாமுகிழ்மென்கொங்கைவானகமடந்தைதானுஞ்
செம்பூடாம்புனைந்தாளென்னச்சிறந்ததுசெக்கர்வானம். (க00)

ஐவராண்டுளரோவின்றேவெனமனத்தையங்கொண்ட
பைவருபொறியராவெம்பதாகையானுள்ளம்போல
வெய்தருபகற்கொலன்றியிரவுகொலென்றேசிந்தை
மைதரவெவர்க்குநீலமாலைவந்தெழுந்ததன்றே. (க0க)

தடம்பெருங்கிரியைநாட்டித்தானவரமரரோடுந்
திடந்தருகடன்மதிப்பச்செய்தொழிற்பயனெய்தாமுன்
வடம்புனைச்சுடிகையோராயிரவராமறுகினல்கு
விடம்பரந்தெழுந்ததேபோன்மெல்லிருட்பரந்ததன்றே. (க0உ)

கலக்கறுதிரிகத்தர்கோவும்விராடனுங்களித்துப்போர்செய்
நிலத்திலெண்ணிறந்தோராவிநீங்கியதன்மைகண்டே
குலத்துறுமரசர்க்கெல்லாங்குரவனென்றுரைவழாமல்
விலக்குவான்போலவந்தாண்டுதித்தனனுடுவின்வேந்தன். (க0ங)

தங்குலத்தலைவன்வந்துதண்கரஞ்சாய்த்ததனோக்கிப்
பொங்கிவெம்போர்செய்மாந்தர்யாவரும்பொருபோர்நீத்துத்
தங்களிற்சினமுமெல்வாய்ப்பகைத்தலுஞ்சலமுந்தாங்கிக்
கங்குலைவெகுண்டுதத்தங்காவலர்தமைப்போய்ச்சார்ந்தார். (க0ச)

வாகினியிரண்டுபாலாய்மாறடுகளத்தைநீங்கி
யேகிவெள்ளிடையிற்றங்கியிருந்தனரிருக்கைசெய்தே
போகியைமுதலாவுள்ளபுலவரந்தரத்தைநீத்துச்
சேகிருளகன்றபின்னர்ச்சேர்துமென்றூர்புக்காரே. (க0ரு)

ஆரிருட்படலங்கீறியங்குதித்தெழுந்தசோதி
பாரிலாதபத்தைநீட்டும்பகலினுக்கழகுவாய்ப்ப
வாரிசமலர்ந்துகாட்டுமாறுபோலிரவித்திங்கட்
சீரியநிலாவினெங்குஞ்செழுஞ்சுடர்மலிந்ததாலோ. (க0சு)

பரிகளுக்கிரண்டுதேர்கட்கீரைந்துபரூஉத்தடக்கை
கரிகளுக்கைந்துகாலாட்கொன்றெனக்கணிதங்கூற
விரிகதிர்மணியாற்சோதிவிளக்கெடுத்துளூற்றிவீரத்
தரிகளைட்புரைவேல்வேந்தர்பாசறையடைந்திருந்தார். (க0எ)

பாகுலவொற்றையாழிப்பசும்பரிபூண்டதேரோன்
சேகுலவுவரிமூழ்கித்தீமைசெய்தகன்றானன்றிக்
கோகுலமடங்கனானேதுணித்துயிர்குடிப்பனென்று
வாகுலமடைந்துளோருமணியெயிறதுக்குவோரும். (௧௦௮)

கங்குலும்விளிந்துவெய்யோன்காண்டலெக்காலத்தென்றே
செங்கரமுறுக்கிக்கண்கடேயுகமறங்கூர்வாரும்
நங்குலவேந்துக்கேற்றநல்குதுநாளையென்ன
வெங்களத்திறந்தோர்செய்தவீரங்கள்புகல்கின்றாரும். (௧௦௯)

இச்செயல்பலவுங்கூறுந்திறத்தராயெவருஞ்சிந்தை
யச்சமொன்றிலராய்வைகுமமையத்திற்பாண்டுமைந்தர்
நச்சராப்பதாகைவேந்தனவின்றபன்மூன்றாண்டெல்லை
புச்சமற்றகற்றலேபோற்புலரிருளகன்றதம்மா. (௧௧௦)

மாசுணக்கொடியோன்பாண்டுமைந்தரைக்கானிலோட்டிக்
காசினிக்கொருவனாகிக்கவித்தவெண்கவிகைநீழ
லாசுறப்புரந்தோனாழிக்கடுப்பதிவ்வண்ணமென்னத்
தேசுறவெளுத்துத்திங்கடேய்ந்துபோய்மறைந்ததன்றே. (௧௧௧)

சிறுத்துருக்கரந்தபாண்டுச்சிறுவரிச்செருவிலொன்னார்
மறுக்குறத்தாக்கிவாகைமாலிகைபுனைதல்காண்பான்
முறுக்கவிழல்லியந்தண்முள்ளரைமுளரிச்செல்வன்
பொறுத்திலன்விரைவிற்பச்சைப்புரவியந்தேர்மேல்வந்தான். (௧௧௨)

கைவலிக்கிறுதிகாணார்கங்குலுக்கிறுகண்டே
மெய்வலிகிளரவோடிவிதிமுறைகடன்கணீக்கிப்
பொய்வலித்திரிகத்தர்கோவும்விராடனும்புழுங்குநெஞ்சர்
செய்வலித்தடந்தேரேறிச்செருக்களத்தெல்லைசார்ந்தார். (௧௧௩)

எண்டிசைமுழுதும்பேரியொலிபுகவெழுந்தபூழி
மண்டலம்போர்ப்பவெம்போர்மலைந்தனர்நென்னற்போரிற்
கொண்டவெஞ்சீற்றவெந்தீயுயிருணக்கொற்றமோங்க
வண்டருமிடம்பெறாமலர்ந்தரமொய்த்தார்மாதோ. (௧௧௪)

யாரையார்தெழித்தாரென்றுமெவரெவர்க்கலக்கண்செய்தார்
பூரையாமவரோடன்னார்புகுந்தமர்முற்றும்போதிற்
றாரையாவுதிரவாரிதலமெலாங்கடப்பத்தக்கோர்
போரையார்புகல்வோரென்றுபுகழ்ந்திடலாயதன்றே. (௧௧௫)

நீறுபட்டிரதம்வாசிநீண்டகைக்கரிகள்வீரர்
சேறுபட்டரசர்பல்லோர்சென்னிகளுருண்டுசோரி
யாறுபட்டெவருமஞ்சவடர்த்தலாவிரிந்துபோனார்
கூறுபட்டெழுந்தவாற்றற்குருகுலச்சேனையுள்ளார். (௧௧௬)

ஆற்றல்சான்மச்சர்கோமானனிகவில்வீரர்க்கஞ்சி
யேற்றபோர்த்திரிகத்தன்சேனையீடழிந்திரிதல்காணுக்
காற்றெனத்தேர்கடாவிக்காவலன்கனிட்டன்சாலச்
சீற்றமுஞ்சிலையுந்தாங்கிச்செருமுனைத்தலத்தணுனன். (௧௧எ)

வேறு.

செஞ்சுடரஞ்சுபுதேரைநடாத்திச்
சிஞ்சினியோதைசெகஞ்செவிடெய்த
வஞ்சிநெடுங்கணைமாரிசொரிந்தே
நஞ்செனயாருநடுங்கநடந்தான். (௧௧அ)

பட்டதுதேர்கள்பரிக்குலமெல்லாங்
கெட்டதுகைக்கரிகேழ்கிளர்வீரர்
மட்டறமாய்ந்துடன்மங்கினரன்றே
தொட்டழல்வாளிதுரக்கும்வலத்தால். (௧௧௯)

ஆடவருஞ்சிலையாரணமோர்ந்த
கூடவருங்குலமைந்தரும்வென்றி
தேடவரும்பலருந்திசைகெட்டே
யோடவருஞ்சமரொருவன்விளைத்தான். (௧௨௦)

நாடியவம்முனையெய்துநலங்கண்
டோடியலந்தருமுள்ளமுவப்ப
வாடியகூழ்மழைகண்டெனமன்னைக்
கூடியதார்கலியிற்குருசேனை. (௧௨௧)

எண்ணுறுதேரினரேந்தலைமொய்த்து
வண்ணநெடுஞ்சிலைகோலிவலத்தாற்
றுண்ணெனவாளிதுரப்பவிராடன்
கண்ணகல்சேனைகலங்கியதன்றே. (௧௨௨)

ஆகுலமெய்தியழிந்தமரச்சங்
கோகுலமெய்துதல்கண்டுகொதித்தே
மாகுலமச்சர்கண்மன்முதன்மைந்தன்
சேகுலவுஞ்சிலைநாணொலிசெய்தான். (௧௨௩)

மாறிலிபம்பரிமாவயவீரர்
நீறிலியங்கநெடுங்கணைதூண்டி
வீறிவலங்கொளிவ்வேந்தரைவாட்டி
நூறிரதங்களைநூறிநடந்தான். (௧௨௪)

அன்னவனுக்கிளையானெனவோது
மன்னருண்மைந்தன்வயச்சிலைகோட்டி
பொன்னுருள்வேந்தர்சிரங்கள்புரட்டி
யொன்னலரஞ்சவுருத்துமுனைந்தான். (௧௨௫)

மற்றவனுக்கிளையோன்மணிமவுலிக்
கொற்றவராயிரர்தேர்கள்குறைத்தே
வெற்றிகொள்சீயம்வெகுண்டெனவெய்திப்
பொற்றடந்தேரொடுமோர்திசைபுக்கான். (௧௨௬)

ஆங்கவனுக்கிளையோனடலோடுந்
தேங்கமழ்மாலைதிசைத்திசைநாற
வாங்கியவிற்பொழிமாரியிலொன்னார்
வேங்கைமுன்மானில்விலங்கமுனைந்தான். (௧௨௭)

மற்றுலவுங்கடலிற்படவந்தோர்
புத்திரர்நால்வர்புகுந்தமர்முற்றுங்
கைத்திறல்கண்டுகளித்துவிராடன்
சித்திரவெஞ்சிலைநாணொலிசெய்தான். (௧௨௮)

வேறு.

வளையாரம்வயவேறுநிலவீனுந்திரிகத்தமகிபாலனுக்
கிளையான்முனிந்தெய்துமுனைசென்றிரண்டைந்துகணையேவியே
யுளைமாவுறுந்தேரும்வின்னாணுமீறுயுகப்போக்கினான்
விளையாநறுந்தும்பைமிலைமவுலிபுனைமச்சவிறலுடனே. (௧௨௯)

நேருந்தனிக்கொற்றவில்லாளிபலவாளிநிகரற்றவன்
சோரும்படிக்குய்ப்பவுரனோடுதிண்டோடுளைத்தோடலாற்
போருந்தனிகல்வெற்றிமுனையும்விடுத்துப்புறந்தந்தனன்
பேருந்திரிகத்தேசனெனவந்தவரசன்புபெறுதம்பியே. (௧௩௦)

முந்திக்குலைந்தோடுமன்றம்பியிற்போர்முனைந்தோரெலாஞ்
சிந்திப்பெருந்தேர்கள்வயமாவுடன்பாகுசிலைநீள்கரந்
தந்திக்கணத்தோடுபொடியாகவிழவெய்துதனியூழிவா
யந்திச்செவ்வண்ணத்தனிவனுமெனப்போரடர்த்தேகினான். (௧௩௧)

ஆறுடுமுதிரஞ்சிவந்தோடவசலங்களாய்வெம்பிணக்
கூறுடவதன்மீதுகொடியாடவிகல்வெற்றிகொண்டானரோ
மாறுடநிணமுண்டுபேயாடநாயாடவாளுற்றெலாம்
பாறுடநிலமங்கைதுணிகின்றதலைகொண்டுபந்தாடவே. (௧௩௨)

துதிகொண்டவயவீரர்தொலைவெய்தவொருகோடிசுடுவெஞ்சரங்
கதிகொண்டுபொழிவில்விராடன்றனிகல்வெற்றிகாணுமுனங்
கொதிகொண்டமுனிவிற்றிரிகத்தேசனெதிர்சென்றுசிலைகோட்டினான்
மதிகண்டகடலென்னவிரிகின்றதன்சேனைமகிழ்வெய்தவே. (௧௩௩)

கடநாகமிருநான்குமிடரெய்தநாணோசைகாட்டிப்படர்ந்
துடனாகவருவோர்கள்வலிபாடமணியாலுமொளியாலுமோர்
வடநாகமிதுவென்னவுயர்தேரின்மிசைசென்றுமழைபோலவே
விடநாகநிகர்வாளிபெய்தானவன்சேனைவிறல்சிந்தவே. (௧௩௪)

மதயானைநிரைமீதுபெயருந்தனிச்சியமெனமச்சர்கோன்
கதயானைநிரைதேர்கள்பரிவீரர்தமையோர்கணஞ்செல்லுமுன்
சதயாகன்முதலோர்களாமென்னவானிற்றடிந்தெற்றினன்
சுதயாகமுன்செய்தமன்மைந்தனிகரொத்ததோளாண்மையான். (௧௩௫)

* மெய்க்கொண்டபுண்ணுடைவன்சேனைநில்லாமல்வென்னிட்டபின்
கைக்கொண்டநிரையைக்கடத்திப்பொலன்பொற்கழற்காலினன்
செய்க்கொண்டகழுநீரலங்கற்கரந்தைத்திருத்தாமன்மேன்
மைக்கொண்டலெனவில்வளைத்தாறுபத்தம்புமழைசிந்தினன். (௧௩௬)

* மாமச்சவுடல்புன்புலான்மாறவண்காவிமணநாறுமக்
கோமச்சநன்னுடனுங்கொற்றவரிவிற்குனித்தைந்துசெந்
தாமச்சரங்கொண்டுதேர்பாகுகொடிவாசிதனுவுந்துணித்
தாமச்சமுறமற்றவன்கோலமார்பத்துமம்பேவினன். (௧௩௭)

* தனைத்தேரழித்தோனைநிரைகொண்டுபோகின்றதனுவீரனுந்
துனைத்தேரும்வேறொன்றின்மேல்கொண்டுநாலைந்துதொடையேவியே
வினைத்தேரும்வயமாவும்வெம்பாகும்விழவெய்துவின்னுணியான்
முனைத்தேர்முகத்துப்பிணித்தானவன்சேனைமுகமாறவே. (௧௩௮)

வேறு.

* திண்டிறற்சிலைவிராடனைத்தேருடன்பிணித்துக்
கொண்டுபோதலுங்குருகுலக்கோமகமுனிவன்
கண்டுதன்பெருந்தம்பியைக்கடைக்கணித்தருள
மண்டுதீயெனவெழுந்தனன்மடைத்தொழில்வல்லான். (௧௩௯)

* உகத்தினீறுதோறோதையோடுதையாந்தாதை
நகத்தினாலுயர்நகங்களைநருக்குமாபோலத்
திகத்தபூபதிதேரினைவேறொருதேராற்
றகர்த்துழக்குவான்படர்வதுதருமனுங்குணர்ந்தான். (௧௪௦)

இன்னுஞாயிறுவிழுமளவிவரெனவொருவர்
பன்னுதற்கரிதாயுறும்பான்மையேபயனு
நின்னுடைப்பெயர்விளங்குநீவெறுங்கையானேர்ந்தான்
மன்னைமீட்குதிதேரொடுஞ்சிலையொடும்வளைந்தே. (௧௪௧)

என்றுமாருதிக்கறன்மகனுரைத்தலாவிசைந்து
குன்றுபோலுயர்தேரின்மேற்கொடுமரந்தாங்கி
வென்றியோடொருகேசரிவேழமீதடுத்த
தின்றுபோரிலென்றிமையவருரைப்பவந்தெதிர்ந்தான். (௧௪௨)

கதத்திலோங்குறுகாளையரிருவருந்தம்மு
னிதத்திலேவலாலேமநற்றேர்மிசையேகிச்
சதத்தினொன்றெனத்தக்கதேராளிகடலைகள்
பதத்திலானைகண்மிதித்தடப்பகழிகோத்தடர்த்தார். (௧௪௩)

வருமடங்கலில்வாரிதிபெயர்ந்தெழுமாபோ
லொருதடம்பெருந்தேரின்மேலுருத்துவில்வளைத்துத்
தருமனென்றமரேசரும்புகழ்தருந்தகமைக்
குருமடங்கலுமெதிர்ந்தமர்விடுத்தனன்கொதித்தே. (கசச)

இன்னபான்மையான்மூவருமிருபுடையெதிர்த்த
மன்னராவிகள்வாஅறப்போக்குதனோக்கி
முன்னமேகியவீமனுமூரிவில்வளைத்துப்
பன்னருங்கணைபரப்பினனவனுநேர்பட்டான். (கசரு)

ஆடல்வெஞ்சிலைவளைத்தவனுசுகஞ்சொரிந்தான்
கேடில்வெவ்வலிக்கேசரிநேருறக்கிடைத்துச்
சூடலர்ந்தவெண்டும்பையான்றனிச்சிலைதுணித்துப்
பாடலம்புனையிரதமும்பகழியாற்படுத்தான். (கசசு)

தனதுதேரொடுகார்முகந்துணிதரத்தளரான்
மனதுபோலுயர்கிரணவேன்மாருதிமிசையிற்
புனிதவெண்மதிகொளவருமாவினைப்புரைய
வினிதினேவினனோர்கணைவிடுத்ததையிறுத்தான். (கசஎ)

தடித்தவேற்படைசாய்த்தலிற்றனிவரைக்கதைகைப்
பிடித்தெறிந்தனன்மாற்றலன்பெயர்வின்மாருதியு
முடித்தவெங்கணையொருபஃதேவிமொய்க்கதையைப்
பொடித்தபூழியிற்போக்கினன்புலவரும்புகழ்ந்தார். (கசஅ)

வேளைநேர்திரிகத்தனுமின்னொளிபரப்பும்
வாளைவாங்கிவந்தெய்தலுமாருதிநகையாப்
பூளைவாடைவாய்ப்புகுந்தெனவணங்குறவுழக்கிப்
பாளைவெஞ்சிலைமுடியுகுத்தீர்த்தனன்பற்றி. (கசகூ)

கருதுகந்தருவாதிபன்கலந்தபோர்முகத்தில்
வெருவிவெஞ்சிறைபுக்கதன்வேந்தனைப்போலச்
செருவினேரிலாத்திரிகத்தபூபதிவலிதேய்ந்து
குருமடங்கல்கைப்பட்டனன்கொடியகுஞ்சரம்போல். (கரு௦)

* வீரியந்தனக்கொருவனும்விராடனையொருபொற்
றேரிலேறுகென்றேற்றியத்தேர்த்திரிகத்தனையுஞ்
சோரிபாய்தடந்தோள்களைவடத்தினுற்றுவக்கி
மூரியேறெனநின்றனன்முரிந்ததச்சேனை. (கருக)

* சேவலானெனத்தயித்தியனனையவத்திரிகத்தக்
காவலானையக்கான்மகன்பிணித்தமைகண்டு
மாவலான்வயமாப்பதினுயிரம்வெளவக்
கோவலானவன்கொண்டகோமீளவுங்கொண்டான். (கரு௨)

* துன்னலன் றனைத்தோளுறத்துவக்கிமுன் றந்த
பன்னுறான்மடைப்பலாயனைக்கண்கொடுபார்த்தாங்
கன்னகாலையிலருக்கனைத்தேருடன்பிணித்து
மன்னுதன் றிசைவன்சிறைப்படுத்தினான்வருணன். (௧௫௩)

* பொருமுகத்தினிற்பகைவரைப்புயமுறப்பிணித்து
வெருமுகத்தினைவீடுகொள்வீமனைவிராடன்
செருமுகத்தினிலெனக்குநீசெய்தபேருதவிக்
கொருமுகத்தினுமில்லைகைம்மாறெனவுரைத்தான். (௧௫௪)

ஐயநீவிர்களடுத்தெனக்காருயிரளித்தீர்
வையகம்புரமாகிதியனைத்துமும்வயினி
லுய்யநல்கினன்கோடிரென்றுரைத்தசொற்பலவான்
மெய்யனோடுளநால்வருமகிழ்ந்துளம்வியந்தார். (௧௫௫)

* ஆயகாலையிலறன்மகன்சிலமொழியறைந்து
தூயவேந்தனீதருவனன்றுய்த்ததிற்பெரிதித்
தேயவேந்தனைச்சிறப்புடன்செல்கெனச்செலுத்த
னேயமற்றுளதுன்வயினேர்ந்தனமென்றான். (௧௫௬)

* கங்கனென்றுதன்னருகிருந்தருளியகடவுட்
டுங்கமாமுனிசொற்படிதோள்வடநெகிழ்த்துச்
சிங்கமன்னவத்திரிகத்தனைச்செல்கெனவிடுத்தா
னங்கமோடரசணிமணித்தேருமொன்றளித்தே. (௧௫௭)

* பேரணிப்படையோடவன்போனபின்றனது
தேரணிப்பெருஞ்சேனையைமதிகுலதிலகன்
பேரணிப்படவகுத்துமற்றியாரினும்பெரியோ
னீரணிப்படைவருமெனக்கங்குலங்கிருந்தான். (௧௫௮)

தெட்சிணநிரைமீட்சிச்சருக்க முற்றிற்று.

ஆ செய்யுள்-௫௭௫௭.

---

# உத்தரநிரைமீட்சிச்சருக்கம்.

---

உருவமாயருவமாயகம்புறத்தினுமுலாவு
மொருவன்மூவுலகோரடியளந்தசேவடிகள்
வருவதாகியும்போவதாகியுந்தடுமாறுங்
கருவெனும்பெருங்கடற்கரையேறலாங்கலமே. (௧)

சித்திரத்தனித்தேர்மிசைத்திகத்தர்கோமகன்வந்
தத்திரப்பெரும்போரிலான்கைவிடலறைந்தே
மெய்த்துணைப்பெருஞ்சுயோதனன்விராடன்மாநகருக்
குத்தரத்திசைநிரைகொளன்மீட்சியோடுரைப்பாம். (௨)

* கெட்டவெம்படைகெட்டமைசுயோதனன்கேளா
முட்டவெண்டிசாமுகங்களும்பேரிகைமுழங்கத்
தொட்டபைங்கடற்சூரியன்றேன்றுமுன்றேன்றி
வட்டமாகவில்விராடனூர்வடதிசைவளைந்தான். (௩)

* வளையுநாடெலாமன்னவன்வருதினிபரப்பி
விளையுநன்பெருவிளைவெலாம்வெங்கனல்கொளுத்தி
யளையுமாமணியானிரைகவர்தலுமாய
ருளையவோடிவந்தூர்புகுந்துத்தரற்குரைத்தார். (௪)

* குடநிறைப்பனகுவிமுலைக்கோனிரைமீட்பான்
றிடனுடைப்புயமன்னவன்றென்றிசைச்சென்றான்
வட-திசைப்புலமுழுவதுமாசுணக்கொடியோ
னடல்வயப்படையாழியிற்பரந்ததையன்றே. (௫)

* நாட்டிலுள்ளனபலங்களுங்கவர்ந்தனர்நறுந்தண்
காட்டிலுள்ளனசுரபியின்கணங்களுங்கவர்ந்தார்
கூட்டிலுள்ளுறைகலுழனின்குஞ்சுபோலினிநீ
வீட்டிலுள்ளுறைகின்றதென்வேந்தன்மாமதலாய். (௬)

* என்றபோதிலப்புதல்வனைப்பரிவுடனீன்று
ணின்றமங்கையர்தங்களைநிரைநிரைநோக்கிச்
சென்றகாவலன்வருந்துணைச்செங்கையிற்படைகொண்
டொன்றவேகிநம்மெயிற்புறங்காமினென்றுரைத்தாள். (௭)

* உரைத்தவன்னையைக்கதுமெனவுத்தரன்வணங்கி
நரைத்தவோதிநின்றிருமொழிநன்றெனநகையா
வரைத்தவாரமுமாலையுமார்பணிந்தென்னை
வரைத்தடம்புயம்வளர்த்தலுமகளிர்போர்பொரவோ. (௮)

* கனைகடற்படையுடனிரைகவர்ந்தவர்தம்மை
முனைபடப்பொருதிமைப்பினின்முதுகுகண்டுவன்
வினைமுகத்தினையறிந்துதேர்விரகுடன்விடவென்
னினைவொடப்பதோர்சாரதிநேர்ந்திலன்மாதோ. (௯)

அங்கர்பூபதிவீடுமன்விதுரனாசிரியன்
பொங்கராவுயர்துவசனைப்புறமிடப்பொருது
தங்கடொல்குலத்தனஞ்சயனதிசயித்திடயா
னிங்குமீள்குவனிரையுடனென்றியம்பிடலும். (௧௦)

* உத்தரன்புகலுறுதிகேட்டொப்பனைக்குரியாள்
சித்திரைச்சிலைகொண்டரன்சென்னிமேற்புடைத்த
வித்தகத்தவப்பேடிவாழரங்கிடைமேவி
நித்திலத்திருமூரலாணின்றுரைசெய்தாள். (கக)

கோரமிக்கவெம்படையொடுமாசுணக்கொடியோன்
சேரமிக்கமாநிரைகொளுஞ்செய்கையுந்தெளிந்த
வீரமிக்கவுத்தரன்புகலுறுதியும்விரைதே
ரூரமிக்கசாரதியிலாநிலைமையுமுரைத்தாள். (கஉ)

கருத்துமிக்குளபேடியுங்காலமுங்கணக்கும்
வருத்துவானரமங்கைதன்சாபமுமதித்துப்
பெருத்தமாமகிழ்பிறங்கிடப்பேதைநீபுகன்றே
யருத்தியோடியான்றேர்விடற்கமைத்தருளென்றான். (கங)

மல்குதிண்முலைக்குவட்டினாற்சிறியநுண்மருங்கு
லொல்குமுத்தரையுடன்றனித்துரைத்தவளோடும்
வெல்கலன்கழல்வேந்திளங்குமரனையெய்தி
நல்குமின்னுரைவழங்கினளொப்பனைநங்கை. (கச)

ஐயகேட்டிநீயமர்த்தொழிற்கேகிலிங்கருந்தேர்ச்
செய்யசாரதியிலையெனவுசாவுதல்செய்யேன்
மையிலுத்தரைநடம்பயிலரங்கிடைமருவும்
பொய்யில்பேடிநேர்சாரதிபுவிமிசையிலையால். (க௫)

மாண்டகுந்திறன்மாயவன்றங்கையைமணந்தோன்
காண்டவந்தனையெரித்தனான்றவன்பெருங்கடுந்தேர்த்
தூண்டியாவருந்துதித்துறப்பேரமர்தொலைத்து
மீண்டுளாளிவளாதலாற்றெளிதிநீவிறலோய். (கசு)

என்றுகூறலுமிறைமகனிவர்முகநோக்கி
நன்றுகூறினீர்பேடியோடமர்க்களநண்ணி
வென்றியெய்தினும்புகழ்கொலோவேந்தருக்கியல்போ
குன்றுமாண்மைமற்றவண்முகம்பெறிலெனக்குறித்தான். (கஎ)

அந்தவாசகஞ்செவிபுகவாரணங்கனையாள்
மைந்தகேட்டியிங்கிவடனைப்பேடியாய்மதியேன்
முந்துவாளமர்முற்றுறுமுகந்தனிற்றெரிதி
யெந்தன்வாய்மையுமன்னவணிலைமையுமெல்லாம். (கஅ)

பண்டுமிங்கிவள்பரிசுணர்ந்தறிந்துளபடியாற்
கண்டுகூறினனிவளுடன்செருமுனைகலந்தாற்
கொண்டுமீளுவைவாகையுங்கோனிரைக்கணமு
முண்டரும்புகழெனவுடன்பட்டனனுரவோன். (கக)

மீண்டுமங்கையரிருவரும்பேடியாய்விளங்கு
மாண்டகைக்கருகெய்தியேயரசர்கோமகன்றேர்
தூண்டுதற்குனேயழைத்தனனென்ன லுந்தொல்லேப்
பாண்டுவின்றவத்துதித்தவன்விரைவுறப்படர்ந்தான். (உ0)

கைத்தலங்களில்வளேயொலிகலிப்பவந்தெய்தும்
வித்தகன்றனேயுத்தரன்விளங்குறநோக்கித்
தத்துறும்பரித்தேர்விடவல்லேயோசமரிற்
சித்தமோர்ந்துகைவல்லமையாற்சிறந்தென்றான். (உக)

குன்றுபோ லுயர்தோளினுன்குறித்தவைகேளா
நின்றரங்கினிளுடகம்பயிற்றுவேனெடும்போர்
துன்றுமெல்லேயிற்றேர்விடுதொழில்புரிகென்று
னன்றிதாங்கொலோவத்தொழிலெளியவோநவிலாய். (உஉ)

வண்மைதங்கியகரதலமச்சர்கோமகனே
பெண்மைதங்கியபேடியானினதுளம்பெயரு
முண்மைகண்டுதேருர்ந்திடுதகையளோவென்ன
வெண்மைமூரலோடுரைத்தலும்வீரனுமுரைத்தான். (உங)

மனதுதேறியசாரதிமாய்ந்தபின்வலிய
தனதுபோர்த்தொழிற்பொய்த்ததென்றுளந்தனிற்றரித்தே
னுனதுகல்வியுமேன்மையுமுணர்ந்தவருரைப்ப
வினிதுணர்ந்துனேவிரும்பினனிரதமுய்ப்பதற்கே. (உச)

மலேதலோய்வுற லுடன்படன்மடங்குதன்மாய்த்த
ருலேதலாதியாமிடனறிந்திரதமூர்தொழிலான்
மிலேதல்வாகையும்பெரும்புகழ்பெறுத லும்வேந்தர்
நிலேதரும்பெருங்கருமமும்வலவரானிகழும். (உரு)

நிரைப்பதென்னினிநினதுகைவல்லபமுணரிற்
கரைத்தவென்னுடைவளனெலானின்னதேகண்டாய்
விரைக்கருங்குழற்பேடியீண்டொன்னலர்மிசைபோ
யுரைக்குமுன்னரின்மீள்குதும்வம்மினென்றுரைத்தான். (உசு)

மன்னன்மைந்தனேநினதருண்மலர்விழிநோக்கா
லுன்னும்வேந்துடைநீதியா லும்பரும்வியக்க
நன்னலம்பெறுதேரினேநானறிந்தளவுந்
துன்னவுய்க்குவனெய்துதியெனவிவள்சொன்னுள். (உஎ)

நாடகம்பயிலரங்கில்வாழ்பேடியாணவின்ற
பீடகம்புரைவாய்மையாற்பெரிதுளமகிழ்ந்து
வீடகம்புகுந்துத்தரன்விறலினேயுதவு
கோடகந்தருமகுடமுங்குழைகளும்புனேந்தான். (உஅ)

கச்சணிந்துவெஞ்சுரிகையுங்கவசமும்வீக்கி
வச்சிரந்திகழ்வீரப்பட்டத்தொடுமதாணி
யுச்சிதம்பெறப்புனைந்துவிற்ருங்கியோர்மருங்கி
னிச்சைதங்கியகூர்ங்கணைப்புட்டிலுமிறுக்கி. (௨௯)

ஆரமாலையுமார்பின்மூந்நூலொடுமார்த்து
வீரமாகியதும்பையுமீதுறமிலைந்து
சாரவெவ்விரஞெறுறுங்கோதைகடாங்கிப்
போரலங்கிருதமுளவெலாம்புனைந்துவந்தடைந்தான். (௩௦)

வந்துமுன்றில்வாய்நின்றதன்மைந்தனைநோக்கித்
தந்தைபைங்கொடிசிந்தையுங்கண்களுந்தருக்கி
விந்தைதன்னருளால்வருவேந்தரைவென்று
முந்துமானிரையொடுமீண்டெய்தெனமொழிந்தாள். (௩௧)

நித்திலத்தினிராஞ்சனமினிதுறநீக்கி
யுத்தரைப்பெயர்தங்கையீதுரைத்தனளொன்னூர்
குத்திரப்படைவென்றவர்கொடிஞ்சியந்தேரிற்
சித்திரத்துகில்கொணர்தியெம்பாவைமெய்செறிப்ப. (௩௨)

என்றுகூறினளுத்தரன்சிறுநகையெய்தி
நின்றகாலையிற்பேடியுமிவ்வணம்நேர்த
லின்றிவன்றனக்கரியவோவெனவுரைத்தேமக்
குன்றுபோலுயர்தேரின்மேற்புகுந்துமேற்கொண்டார். (௩௩)

* நாடிவாசியிலுயர்ந்தனநான்கவைபூட்டித்
தேடியாயுதம்பலவுநற்சிலைகளுஞ்செறித்துக்
கோடிகோடிபைங்கோதைசேர்குழலியர்வாழ்த்தப்
பேடிதேர்விடச்சென்றனன்சுதேட்டிணைபிள்ளை. (௩௪)

* விலங்கன்மாமதிலும்புறவீதியுங்கடந்தாங்
கிலங்குநேமியொன்றுடையதேரென்னலாந்தேர்மேற்
றுலங்குபேரொளியருக்கனிலுருத்தெழுதோற்றத்
தலங்கலுத்தரனுத்தரதிசையைவந்தடைந்தான். (௩௫)

* விண்கொளாவிறல்மேன்மைகொண்மீனினமென்ன
மண்கொளாவிறன்மன்னுடைவரம்பில்வான்படையை
யெண்கொளாமனத்திராகவன்றிருக்குலத்திளைஞன்
கண்கொளாவகைபுகுந்துதன்கண்ணுறக்கண்டான். (௩௬)

ஆனையெத்தனையெத்தனையாடல்வெம்பரிமாச்
சேனையெத்தனையெத்தனைச்சில்லியந்தடந்தேர்ச்
சோனையெத்தனைசொரிதுளிதுணிந்தலகிடினுந்
தானையித்துணையெனவரிதென்றுளந்தளர்ந்தே. (௩௭)

* கைந்நடுங்கவுங்கானடுங்கவுங்கருத்தழிந்து
மெய்ந்நடுங்கவுநாப்புலர்ந்துயிர்ப்புமேல்விஞ்சிச்
சொன்னடுங்கவுஞ்சுடர்முடிநடுங்கவுஞ்சோர்ந்தான்
மைந்நெடுங்களிற்றுரனுடைவிராடன்மாமகனே. (கூஅ)

போழ்ந்தவேலினாலவசமாம்பொற்பெனத்தேரில்
வீழ்ந்தமைந்தனைவிழாவகைமெல்லிதழ்முளரித்
தாழ்ந்தகைகளாற்றாங்கிமெய்வியர்வினைத்தவிர்த்தே
யாழ்ந்தபேரறிவுயர்ந்தநற்பேடியீதறைவாள். (கூகூ)

* அஞ்சலஞ்சல்வன்பகைவரையாருயிரடுதற்
றுஞ்சலென்றிவையிரண்டலாற்றுணிவுவேறுண்டோ
வெஞ்சமந்தனில்வந்துபுண்படாதுமீண்டால்
வஞ்சநெஞ்சுடைவஞ்சியரென்சொலார்மறவோய். (சு0)

நிரையமீட்டெதிர்நேரலர்தம்மைவானேற்றி
விரையமீள்வனென்றுரைத்தநீமேவலர்கொடும்போர்த்
தரையையெய்துமுன்றளர்ந்துளமடங்கினையென்னு
முரையிருந்தபின்புயிரிருந்தென்பயனுரையாய். (சுக)

பிளந்துநீங்குறுமியலலாற்பெரும்பரந்தாங்கி
வளைந்தகற்றறியுண்டுகொல்வாம்பரித்தடந்தே
ரளந்துகூறுதற்கரிதெனவெய்தினுமரும்போர்
விளைந்தபோதுயிர்விடலலாற்குறைவரோவீரம். (சுஉ)

* நிலையுமுட்டியுநிலைபெறநின்றுநேர்படத்திண்
சிலைவளைத்துவெஞ்சிற்சிலீமுகங்களைத்தொடுத்து
மலையிலக்கெனயாரையுமலைந்திடுமலைந்தா
லலைகடற்புவியரசரிலாரெதிர்நிற்பார். (சுங)

புலவுநாறுவேலுழவரைப்பொற்களத்தவித்து
நிலவுமானிரைகொண்டலானீணகற்கேகிற்
கலவிமங்கையர்திறத்தினுங்காவலர்முகத்துஞ்
சுலபமுண்டலாலுனக்கினித்தோற்றமுண்டாமோ. (சுசு)

வெய்யமாற்றலர்மெலிவுறவெற்றிகொண்டடைந்தால்
வையமாற்றவுமேத்தவாழ்வெய்தலாமாய்ந்தாற்
செய்யவானரமடந்தையரிளமுலைதிளைக்கும்
பொய்யிலைந்தருநிழலுறுவாழ்வுகைப்புகுமே. (சுரு)

என்றுபற்பலசொற்களானேந்தலைத்தேற்றி
நின்றவாள்விழிப்பேடிநட்டுரைநிலைகேளா
மன்றலூறுதேன்மறுகுதோறிழுக்கினையுதவும்
வென்றிமச்சநாட்டிறைமகன்வெகுண்டிதுவிளம்பும். (சுசு)

வேறு

பூதலமுழுவதும்பொலிந்தவாகினி
மீதலமுழுவதுமிடைந்தபூழிக
ளாதலிற்றமியனேனுற்றுமாறெவன்
சாதலேபொருளெனவிளம்பற்றக்கதே. (சஎ)

உலம்பொருதோளிவில்லுண்டைபோக்கிமா
நிலந்திரிசிறியனேனிகரிலங்கர்கோன்
வலந்தருவீடுமன்மறைவலாரியன்
கலந்தபோர்முனையமர்கருதல்போதுமோ. (சஅ)

கோடிதேர்கிம்புரிக்கோட்டுவாரண
நீடியவயங்கள்போர்நிருதராதியாத்
தேடிவான்றுணையொடுசேர்ந்தவேந்தெதிர்
பேடிநீதுணையெனப்பெயர்வதோசொலாய். (சகூ)

தன்வலிபிறவலிதகுதிதேர்ந்திலா
மன்வலியென்வலிமாண்பின்பாலதோ
புன்வலியேனரும்போரின்முந்துற
லென்வலிவேண்டிலாவிசயனேகொல்யான். (ரு௦)

சூடலுந்தும்பையான்மீட்டுத்தொல்புகழ்
கோடலுமெம்பெருங்குரவர்க்கேற்பதே
யாடலஞ்சிலைநிலையிலுமாற்றலே
னீடலர்பொருமுனைக்கெய்திலீனமே. (ருக)

கழியினுநிரைக்கணங்கமழுமச்சநா
டழியினும்பழியெனையடுத்ததென்னினு
மொழியவோர்செயலிலைமுந்துதேரையூர்
வழியுறநடத்தெனவருந்திக்கூறினன். (ருஉ)

தேர்மிசையிருந்தவச்சிறுவன்றன்மொழி
கார்மிசைவருபவன்காளைகேட்டுழி
போர்மிசைச்செல்கிலன்புறந்தந்தோடிமீண்
டூர்மிசையணைபவனுமென்றுன்னியே. (ருங)

மீளவுங்கூறுவான்வேந்தன்மைந்தனே
யாளநீயுலகெலாமாக்கிவந்தவர்
மாளவோரம்பினல்வாட்டிமீள்குது
மீளிநீவெருவலைவிளம்பக்கேண்மினே. (ருச)

சேட்செலும்பெரும்புகழ்தேய்த்துதந்தைதன்
மாட்சிமைகுறையநீமடங்கல்போதுமோ
வாட்செலத்தேர்செலமன்னர்வாண்முகந்
தூட்செலத்துரந்துபோர்தொடங்கலாண்மையே. (ருரு)

அன்னையுந்தங்கையுமடுத்தமாதரு
மொன்னலர்கொளுநிரையுதவவல்லையென்
றின்னிலைமகிழ்ந்தவணிருந்துளாரவர்க்
கென்னைநீமீண்டுபோயியம்பும்வாய்மையே. (ருசு)

பேடியானென்னினும்பெயர்ந்துதேர்விடக்
கூடியமுகந்தொறுங்குழுக்கொண்டெய்தினோர்
வாடியகண்டதுண்டன்றிமாற்றலர்க்
கோடியபோர்முனையுணர்ந்திலேனரோ. (ருஎ)

முறுக்கவிழ்நாண்மலர்மாலைமொய்ம்பினோர்
மறுக்குறத்தேர்விடும்வல்லபத்தினால்
வெறுக்கையினுனிரைமீட்டுமேவுது
மொறுக்கினின்னுயிர்க்கெனதுயிரையீவனால். (ருஅ)

எண்ணலரெத்தனைபெருகியெய்தினு
மண்ணனீமனந்துணிந்தமரினெய்தினால்
விண்ணவராசியும்விந்தைநோக்கமு
மண்ணுயர்புகழுநின்மருங்கினெய்துமே. (ருகூ)

குருகுலநாயகன்குறித்தபோர்முனைக்
கருகுநீவிற்றெறித்தணுகுமுன்னரிற்
சருகுமாருதத்தினாற்சாய்ந்தபோர்படுத்
தொருகணமகனுமுன்னூரிலுய்ப்பனால். (சு0)

வேறு

வருத்தமுனக்கேனஞ்சன்மனவலிகொண்டடைதிவிரைந்தென்னக்
கருத்தினுயர்ந்தபெரும்பேடிகரைப்பவிருப்பங்காணுமற்
செருத்தன்மேதிபொழிதீம்பாற்சென்னல்வளர்க்குந்திருநாட்டுக்
கொருத்தனெனும்வில்விராடன்மகனுரைத்தானிதனையுயிர்ப்போங்க. (சுக)

சொன்னவுணராய்நின்னுளத்திற்றுணிந்துதெளியாய்சூழ்ந்தபடை
யென்னாற்றுரந்துவிறலெய்தற்கிருந்தாயானன்றெனையீன்ற
மன்னாற்சிலைவன்முன்னோரான்மாற்றுந்தரமோமதியிலிநீ
துன்னார்க்குறுதிதனக்குறுதிதொடங்கல்விலங்கறுணிவாயோ. (சுஉ)

பைவந்தொளிருமணியுரகப்பதாகைக்கதிபனுடன்சரத
மெய்வந்தவிருநெடுங்கிரணவிரல்வேற்குரவர்பொருமுனைவாய்
கைவந்தவரும்புகவறியார்காலன்வெருவுங்கணக்கென்னி
லெய்வந்துணராயான்றனிசென்றியற்றுஞ்செருவேதியம்பாயே. (சுங)

தூரம்புடைசென்றவர்தொடுத்ததொடையாற்றனித்தேர்த்தொலைப்புண்டு
வாரம்பெறமெய்ந்நடுநடுங்கமடங்கிக்கால்கள்சிவப்பேறி
யூரம்புனைவீதியிற்சேரல்புகழோவூருந்தேருடனும்
வீரம்பெறார்போலுயிருடனுமீண்டால்வசையோவிளம்பாயே. (சுச)

என்னப்பலவுமெடுத்தியம்பியிருகண்கலுழவுளநடுங்க
மன்னர்க்குதித்தவுத்தரனுமைந்தனுயிர்த்துமலர்க்கரஞ்சேர்
கன்னற்சிலையுங்கடுங்கணையுங்கடிதேயுகுத்துப்புவிமிசைபாய்ந்
துன்னர்க்கரியான்றனிநகரத்துறுவான்விரைவாலோடினனால். (௬௫)

முற்றாவாண்மையுறவிடலைமுனைக்கீடழிந்தோடுதெறியா
வற்றாக்கருணைக்கொருமுதலாமகவானளித்ததிருமைந்தன்
பற்றார்தமைவெல்வதுகருதிப்பரிவாய்ப்புனையப்படுங்கயிறு
பொற்றேரதனுட்செலமடுத்துப்புவிபாய்ந்தவனைத்தொடர்ந்தானே. (௬௬)

துங்கத்திரடோள்வயமீளித்தொடர்ந்துதானைத்துரந்திடுபோ
தங்குற்றிலகும்வலம்புரித்தாரரசன்படைஞரார்கலியிற்
பொங்கித்தம்மிற்கரம்புடைத்துநக்கார்புலப்பாடுணராதார்
செங்கட்குரவர்முதலானோர்சிலரிங்கிதனைத்தெளிந்துரைத்தார். (௬௭)

நீண்டவிழியுந்தாழ்கரமுந்நிகரில்சயிலத்திருமார்பு
மாண்டகமலநிகர்முகமுமகவான்மகனிற்பொலிந்துளவாற்
பூண்டபணியுஞ்செறித்ததுகிற்பொலிவுங்குழலும்பொன்னனைமார்
வேண்டுந்தரத்தால்விளங்குதலாலென்னேதெரிந்துவிளம்புவதே. (௬௮)

தொடுத்ததாள்வெண்கவிகைத்துலங்குவிராடன்மானகரின்
றடுத்ததொருதேரமர்கருதியடைந்தோன்விடலையவ்விரதம்
விடுத்தோனாண்பெண்ணெனவையம்விளங்காநின்றானிவன்வீர
மெடுத்தாருரைப்போரெனக்கலங்கித்தெளிவாலிதைமீண்டியம்புவரால். (௬௯)

திகத்தர்பெருமான்றெக்கணத்திற்சேர்ந்தானிரைகொள்வதற்கென்றே
நகத்தையனையதிரடோளான்காதித்தனிகமுழுதெய்தச்
செகத்திற்புகழுநிரைக்கணமுஞ்செங்கைவயமாம்படிசென்றா
னகத்தினிருந்தவிளங்காளையணியுத்தரனேயிவனாமால். (௭௦)

பாண்டுசிறுவரைவருமிப்பதியினிருந்தாங்கமர்க்கேகு
மாண்டேமகிபனொடுநால்வர்சென்றார்மறைந்தவுருவோடு
மீண்டுமகடூவாடுவெனவியம்புவுருவோடிறைமகன்றேர்த்
தூண்டும்வலவன்மகபதிதன்சுதனாமிதுவேதுணிபாமால். (௭௧)

மன்னர்பெருமானிரைகோடல்வந்தேவொற்றர்மொழிந்திடலால்
கன்னல்மதனையனையவெழிற்காளைகடுங்கண்சிவப்பேறித்
தன்னையெதிரையுணராமற்சிறியோனானதன்மையினாற்
பொன்னந்தனித்தேர்மிசைதமியாய்ப்புகுந்தானிதுவேதுணிபாமால். (௭௨)

தேவரிறைவன்றருகுமரன்றெய்வமேனியொளிமறைத்துக்
கோவிலகத்துப்பேடியர்தங்குறிப்பாலிருந்துதினங்கழித்தான்
மாவலிரதம்விடுந்தொழிற்குமைந்தற்கொருவன்வாயாத
சோர்வைபுணர்ந்தாங்கவனிரதந்தூண்டுவாரிற்றொடர்ந்தனனால். (௭௩)

வந்தகுமரன்கரைகாணுவருவாகினியைநோக்குதலுஞ்
சிந்தைகலங்கிமுன்புரைத்தசெயலுமறந்துதியங்கியகண்
டுந்துவலவனவர்க்குறுதியுரைத்துத்தெருட்டவிரும்பாம
லந்தநெடுந்தேரினுங்குதித்தேயாவிக்குறுதிநினைந்தானால். (எச)

பீடுங்கொடியவரிச்சிலையும்பிறைவாய்க்கணையுநிலமுகுத்து
நீடுங்கொடிமாமதில்கள்புடைசூழநிகரில்நகர்முகமா
வோடுஞ்சிறுவன்றனைநோக்கியுருவிற்பேடிபோன்றிருந்தோன்
கூடுங்கருணைமுகத்தொடும்போய்க்குறுகிக்கொணர்வான்றொடர்ந்தனனால். ()

இதுவேயிவணின்றடுத்தபடியென்னக்குரவர்தமதறிவாற்
பொதுவேயுணர்ந்துபகர்ந்தளவிற்பொறியாடரவக்கொடிவேந்து
மதுவேயொழுகுந்தாராருமறுகிப்பசுமைமாத்தரணி
யதுவேயெனவிங்கிவர்மிசைநோக்கினர்களிவராறறைகுதுமால். (எசு)

வேறு.

தினைத்துணையெனும்பொழுதுதீருமுனரோடி
முனைத்துணையிலானைநரன்முன்கைதொடவஞ்சி
யுனைத்துணைவிழைந்தவெனதுள்ளமுணரிற்றீ
வினைத்துணைவிழைந்தவரிலாமெனவெறுத்தே. (எஎ)

கண்கலுழிபொங்கவிருகானடுநடுங்க
வண்கமலமீதுபணிவண்டுளிகளென்ன
வொண்கிரணமாமுகமலர்வெயர்வரும்ப
வெண்குலையவாய்குழறவோர்மொழியிசைத்தான். (எஅ)

பேடியிதுகேட்டியெனையீன்றருள்பிராட்டி
வாடியெதிர்நோக்கியெயில்வாயில்வழிநின்று
ழுடியவடன்னுயிர்நலிந்தவரிலன்றே
கோடியபெருஞ்சமர்குறித்தவர்களிப்பால். (எகூ)

இம்முறையெனைத்தனியெழிற்புரமுறுத்திற்
செம்மலருணின்மிசைசிறக்குமிதுவன்றிக்
கைம்மலைகடும்பரிகள்காணிரதமூரொன்
றெம்மையாதாரமுனமினிதுதவவல்லேன். (அ0)

நட்புனைவிடாதுபலநாளுமுயிரொன்றாய்
பெட்புறவியந்துனதுபேரைநிலைசெய்வன்
கட்புலனடுக்குமுனர்காமர்நகரெய்தக்
கொட்புறவிடுப்பவருள்கூர்கெனவிசைத்தான். (அக)

கைத்திறல்படைத்தவர்கலக்குறுவலத்தோ
னுத்தரன்மொழிக்கினிதினுத்தரமுரைத்தா
னித்தினமுனக்கரியவாழ்தரவிருந்தேன்
சித்தமருள்விட்டிடென்மொழிதேறுகெனமீட்டும். (அஉ)

ஆடல்புரிவெஞ்சிலைவலாரி லுனையாக்கி
வாடநமதொன்னலரைவாட்டியெதிரேற்றோர்
வீடவமராடிநிரையோடுநகர்மீள்வன்
பேடியெனையாகநினையேலரசுபெற்றாய். (அந)

உன்வரவுகாணுமுனையீன்றவளுவப்ப
மன்வரவுகண்டுருகிமார்புறமுயங்கப்
பொன்வருநகர்ச்சனர்புகழ்ந்தின்றெதிர்கொள்ளக்
கொன்விரைவில்வென்றுதருவன்குறைவில்கொற்றம். (அச)

பாழிவரைமத்திலலைபட்டதெனவொன்னார்
பூழிபடவெற்றியமர்செய்தொழில்பொறுப்பன்
வாழிபடுமச்சர்குலமன்னன்மதலாய்நீ
யாழிபடுதேர்விடுதியச்சமறவென்றான். (அரு)

இடுக்கணறவில்வலியியம்புமொழிகேளா
நடுக்கமுமுயிர்த்தலுநவைச்செயலும்விட்டே
முடுக்கெரிநிகர்த்தருண்முயங்குவிழியானை
யடுக்குறவியந்திரதமூர்தொழிலமைந்தான். (அசு)

மன்னுதவுமைந்தன்வலவன்றொழிலியற்ற
வென்னுதவுவேட்கையறுவில்விசயன்மீண்டே
பொன்னுதவுதேரின்மிசைவில்லொடுபுகுந்தான்
முன்னுதவுநல்வினைமுயங்கியநலத்தால். (அஎ)

உத்தரனியற்சிலையுமொண்கையினிருந்த
வத்திரமுமேந்தியருளாலவனைநோக்கி
மொய்த்தசினைவன்னியருகோட்டுதிமுனைத்தே
ரத்திசையினோர்கருமமாமெனவறைந்தான். (அஅ)

பேடியுரைதன்செவிபுகாமுனுயர்பெற்றி
நீடியபதாகைசெறிநேயமுளபொற்றே
ரோடியுறுவித்தனனுசாவறுவலத்தோ
னாடிவருதுன்னலருணர்ந்திதைநவின்றார். (அகூ)

கோடியிரதங்கண்மிசையோர்சிலைகுனித்தே
நாடிவருமாண்மைநரனல்லருளர்கொல்லோ
பேடியெனவுன்னுவதுபேதமையினீரென்
றோடிமுனைகெட்டுணர்வொடுங்கினர்கலங்கி. (கூ0)

அங்கவர்கலக்கமுமடுத்ததுநிமித்த
மெங்கணுமெழுந்துளவியற்கையுமுணர்ந்தே
யிங்கிதுபகர்ந்தனனெடுத்தசிலையாசான்
வெங்கொலையராவுறுவிலோதனனைநோக்கி. (கூக)

அம்பரமதிர்ந்தனவருந்திசைகடோறுங்
கம்பிதமிகுந்தனகழிந்தபகல்விண்மீன்
செம்புனல்சொரிந்தபுயறேறலுமிழ்மாலை
வெம்பியபுலால்வெறிமிகுந்ததெவர்மாட்டும். (கூஉ)

காய்கரிமிகுந்திறன்மறந்தனகளிப்பிற்
பாய்பரியருந்துளிபடுங்கண்வழிதோறும்
பேய்கொடிமிடைந்துபலபேரொலியெழுந்த
வாய்கதுவுமேதிமுனைவான்புகைமலிந்த. (கூங)

பற்பலவிதம்படுகொடுஞ்செயல்கள்பார்மே
லற்புதமெனும்படியருந்துயர்விளைக்குஞ்
சொற்பழுதெனுமுறைதுணிந்திறுதியென்றே
முற்படமொழிந்தபினவற்கிதுமொழிந்தான். (கூச)

வேறு.

மருவாரெதிரொருதேரொடுவருமாறுதெரிந்தீ
ரொருவாளியில்விறலெய்துரனுடையானலன்வருமோ
பொருவாரெவரெமையென்றுடல்புளகிப்பதுபொருளோ
வெருவார்தவர்வர்வாகினியணிசெய்துறல்விதியே. (கூரு)

மெய்க்கொண்டுறுமுயிரீகினும்வளனீகினுமெலிவோ
கைக்கொண்டுறுநிரையீதல்கருத்துள்ளவர்கடனோ
மைக்கொண்டனிகர்க்குஞ்சிலைவல்லீர்நிலைசெய்மின்
றிக்காடிரிகத்தன்சமர்வியவாததிறத்தீர். (கூகூ)

எனமன்னவர்பலரோடுமிசைத்தொண்கரிபரிதேர்
மனநேர்படையினரோடணிவருவித்தவரிடையிற்
புனிதாவினநிரைவீறுடுபுகுவித்தனனங்கோ
வினியாரிதுகவர்வோரெனமுடிவேந்தரிசைத்தார். (கூஎ)

அக்காலையில்வருவோனரிமகனுமெனவாசான்
முக்காலமுமுணர்கேண்மையினுளங்கொண்டிதுமொழிவான்
றக்கோனெனவிமையோர்புகழ்சரதந்தருவிரத
மிக்கான்முகமலர்தன்மலர்விழியாற்குறிபடவே. (கூஅ)

தாளாண்மைகுறித்தேயொருதமியெய்தினனங்கோ
வாளாண்மைவலத்தோன்குருகுலவாகினிமதியான்
வேளாண்மைதனைப்போலிதுவிரகோவிறல்பெறவே
நாளாண்மையெவர்க்கோவுணர்கிலனென்றுநவின்றான். (கூகூ)

வருவோன்மிசையளிகொண்டவர்மறைவாயுறுசெயல்விட்
டொருவாமுனிவொடுமெய்தினர்கொல்லோவெனவுன்னுத்
திருமாமுனியினிமேற்செயல்சிந்தித்தனனன்றே
பெருமானொடுபகர்வோனெனமறுவாய்மைபிரித்தான். (க00)

வாராய்குருகுலநாயகமணியேமருவலரைப்
போராலடுதினமாமிதுபொறைறசெய்தினமுழுது
நேராலகன்றுளதென்றுநிரைப்பச்சதுர்மறையோ
ஞராவமுதுண்டோரின்மகிழ்ந்தொன்றையறைந்தான். (௧௦௧)

அரியொன்றளவறுநாண்முழையதனுட்பசிவருந்திக்
கரியொன்றியதிரண்மேலெழுகவிஞெத்துளதன்றே
வரிதங்கியசிலையோடிவண்வருவாகினிமிசையிப்
பரிவாவுறுதேரோன்வருபரிசென்றுபகர்ந்தான். (௧௦௨)

பின்னுமிதுபகர்வானுயர்பிறைசூடியங்தே
தன்னெண்கணைதரவேந்தியதாடாளனையெவரே
துன்னுஞ்சிலைதனில்வெல்பவர்சுடர்வந்தெழினுண்டோ
மின்னுஞ்செயனிகரற்றுளமிடன்மின்மினிக்கென்முன். (௧௦௩)

ஆசானுரைசெவியெய்துமுனல்கான்றிருவிழிவாய்த்
தேசானுயர்கதிர்முன்றருசிறுவன்சினமுடுகி
மாசாவதுபகராவிறன்மறையோன்முகனோக்கிப்
பேசாமணிமுடிவேந்தர்கள்பெரிதஞ்சமொழிந்தான். (௧௦௪)

பன்னகமுயர்த்தோனுனையிறைமாண்புபடுத்தி
யுன்னல்விறல்பெறநின்றனனுனதுள்ளமுணர்ந்தாற்
றுன்னரிசைதுதிசெய்தவர்தோளாண்மைவியந்தே
மன்னுண்மைபழிப்பேறமதிக்கொண்டனைபோலாம். (௧௦௫)

சொல்வண்மையரடலைவர்நினக்கன்புதொடுத்தால்
வில்வண்மைவியந்தென்பொருளிதுமேன்மையினுமோ
வெல்வண்மையவர்க்குண்டெனினமர்வாயெவர்வியவார்
கல்வண்மைபொருந்திக்கடிகமழுந்திணிதோளாய். (௧௦௬)

அரிதந்தவன்விறல்கொண்டனுகினனென்னிலடர்த்தோர்
வரிவெஞ்சிலைதனிலங்கவன்வாளைவிடுப்ப
னெரிவெங்கனலிடையோர்சருகெய்தித்திறல்கொளுமேற்
பரிதங்குபொலந்தேர்மிசைபடர்வோனிசைபெறுமே. (௧௦௭)

என்றுனதுமகிநாயகநிருபன்செவிபுகலு
மின்றேனிதுவழுவோதினையிவனோகரனுமேற்
சென்றாரவர்வனமூடுதிரும்பப்பலசுரர்நா
ளன்றேயுயிரிழந்தாரெனவறைற்கென்றுபணித்தான். (௧௦௮)

தேமன்னுநறுந்தார்புனைதிண்டோளரனுடைய
மாமன்னவர்பெருமானிந்தமொழிசெய்திடவனசப்
பூமன்னுபுயத்தோனெடுமுளமேலவர்புகலா
ரோமென்றுடனுற்றார்நிகழ்செயல்காண்குவதன்னி. (௧௦௯)

வேறு.

ஆறிலாதவூருமூரிலறனிலாதமனைகளுந்
தேறிலாததவமுமாண்மைசேர்விலாதவேந்தனு
மூறிலாதவீரன்மெய்யையொக்குமென்றுதேற்றியே
மாறிலாதபேடிவன்னிமரனைவந்துகுறுகினான். (௧௧0)

குறுகிநின்றுவலவனையகுமரனோடுபுகலுவான்
பெறுகவந்துகவையினெய்துபெற்றியைவர்பற்றுறுந்
தறுகணாயுதங்கணீபுகுந்துகண்டுசார்ந்துளோர்
மறுகவங்கொர்சிலையெடுத்துவருதியென்னுமொழிகளே. (௧௧௧)

அந்தமைந்தனதனைநோக்கியாவிரீத்ததோற்கரத்
தெந்தவண்ணமேகலத்தலென்னையேவலீதெனச்
சிந்தையன்புபலமொழிந்துசிறுவனைத்தெருட்டியே
சந்தனத்திருந்துயர்ந்ததருவின்மீதுபோக்கினான். (௧௧௨)

அச்சமற்றடைந்துமைந்தனைவர்வெம்படைக்கலம்
நிச்சயித்திலுன்னிநெஞ்சினேயமோடுசார்தலு
முச்சிதத்தியங்குபாந்தளுருவினிற்றுரந்ததான்
மச்சருக்கொருத்தனீன்றமகவினெஞ்சுமாழ்கவே. (௧௧௩)

உத்தரன்றியங்கல்கண்டவும்பர்நாதன்மைந்தனுங்
கைத்தலம்பணித்துளக்கலக்கமங்ககற்றலாற்
புத்தியிற்றெளிந்துமீண்டுபுக்குவெம்படைக்கலங்
கொத்துறக்கலைத்துணர்ந்துசிந்தைகொண்டுகூறுவன். (௧௧௪)

வரைவிளங்குபாந்தளொன்றுபடைகளோடுமருவலாற்
கரைவிளங்கலாதுசிந்தைகங்குன்மூழ்கிநின்றதால்
விரைவிளங்குதாரியேதிவ்விதம்ம்வெய்யமாசுணந்
திரைவிளங்கவந்தவாறுமுரைசெய்கென்றுசெப்பினான். (௧௧௫)

மைந்தனோதுவாய்மையாங்குமறுவில்பேடிகேட்டுழி
சிந்தையாங்குவந்துதேரின்மீதிருந்துகூறினா
னிந்தவெம்படைக்கலங்களிவரெடுப்பதென்முறை
முந்துரைத்தமாசுணத்தைமூரிவில்லென்றோதினான். (௧௧௬)

பிரமன்முந்திலக்கமாண்டுபின்னரிற்பிரசாபதி
வரியவர்யிரங்காணன்குமாறுகாறிரும்புமாண்
டுரியபோகிபத்துநூறுடுக்கணுதனைந்துநூ
றரியவாண்டுவருணனூடுமைம்பதிற்றிரட்டியே. (௧௧எ)

இந்தவிற்றரித்துளாரிதற்பினுமிருந்தழற்
சுந்தரத்திலாசைகொண்டுவருணனல்குதுணிவினா
லுந்துறத்தரித்துளானுரைக்குநற்றனஞ்சயன்
சிந்தைவெற்றிகண்டளித்தசிலையிதென்றுகருதுவாய். (௧௧அ)

விசையனூறுபத்தோடைந்துவிறல்கொளாண்டிவ்வில்வினாற்
றிசைகள்வென்றுவாகைசூடுமென்றுதேவர்செப்பினா
ரசைவிலாதகாண்டிவப்பேரறையநின்றதிதுவரோ
விசையெலாமிருந்தபாந்தளெனவிளங்குமுருவமே. (௧௧௯)

மண்ணில்விண்ணிலிந்தவில்லைமானவல்லவில்லிலை
எண்ணிலிந்திரநீலமீட்டிழைத்ததென்னவொளிருமால்
வண்ணவைந்துபூதபேதமனிதர்தேவரசுரரா
லண்ணறந்தமைந்தகேட்டியழிவிலாதததுவரோ. (௧௨௦)

சொற்கநாடுமகிழுவென்றதோற்றமுந்தொடர்ந்தது
நிற்கவுத்தரத்திசைக்கணீடுவெற்றிகொண்டது
முற்கையென்னயாழ்வலோரையோட்டிமீட்டதன்மையும்
பற்குனர்க்கிவ்வில்லின்வல்லபத்திலன்றியில்லையால். (௧௨௧)

மற்றுமுன்னர்கடன்மதித்தமத்தையொத்தவான்கதை
குற்றமற்றவீமனெண்கைகொள்வதென்றுகருதுவாய்
சுற்றமுள்ளதேனையோர்கள்படைகளென்றுசொல்லவுங்
கொற்றவன்செய்தெளிவிறந்துபின்னுமீதுகூறுவான். (௧௨௨)

குந்திமைந்தர்கைக்கொளேதிகுறிசெய்வன்னியிடைவிடுத்
தெந்தனுடிருந்துளாரெடுத்துரைத்திநீயென
மந்தகாசவதனனுகிமைந்தனோடுகூறினான்
கந்தமாமலர்ப்பொலிந்தகாட்சியொத்தகண்ணினான். (௧௨௩)

வேறு.

ஆண்டுபன்னிரண்டடவிதுன்னவு
மீண்டுந்தம்முருவெளிப்படாவகை
யீண்டுநாட்டிலாறிருதகற்றவும்
பாண்டுதந்தவருடன்பட்டேகினர். (௧௨௪)

அனையதன்மையாலடவிவைகியே
வினைசெய்நாட்டிலோர்வருடம்வீட்டுவா
னினையதேயம்வந்தெய்தியேகியிப்
புனைகொள்வான்றருப்பொதியினுய்த்தபின். (௧௨௫)

தங்கடொல்லுருவேறதாக்கியே
சங்கையாவருஞ்சாற்றலாற்றலா
தெங்குளார்கொலோவென்றுகூறினான்
றிங்கடொல்குலஞ்சிறக்கத்தோற்றினான். (௧௨௬)

மறுவிலாதசொற்கேட்டுமச்சர்கோன்
சிறுவனுங்குயிர்த்தொன்றுசெப்பினான்
குறுகலார்தருங்கொடுமையாலிவர்
பெறுவதோதுயருண்மைபேர்கலார். (௧௨௭)

கைத்தவத்தினற்றேல்வைகாட்டியே
யுய்திறத்தைவிட்டுலகுவவ்வினோர்
செய்திறத்தினற்றேம்பிவாடவோ
மெய்தவத்தையேவியக்குஞாலமே. (கஉஅ)

அறனிருந்தசொல்லறனின்மைந்தனு
மறனிருந்ததோள்வலிகொள்வீமனுந்
திறனிருந்தவிற்செங்கைகீங்கலா
விறலிருந்தபோர்விசயநாமனும். (கஉகூ)

இருவராகுமற்றிளையமைந்தரு
மருவுறுங்குழன்மடந்தையோடுபோய்ப்
பருவரற்சிறந்திருத்தல்பண்பிதே
பெருமிதத்தினிகரில்பெற்றியோர். (கஙo)

வேள்வியாற்றலும்வெறுக்கைகீடலும்
வாழ்வினாற்றபும்வலியுமாற்றியே
தாழ்வுமேற்படச்சலித்திருத்தலோ
ஆழ்வினைப்பயனெனவுரைத்தனன். (கஙக)

உருகிநெஞ்சொடுமுயிர்ப்புநீட்டியே
யிருகணீர்தரயாண்டையார்கொலோ
முருகுலாவுதார்மொய்ம்பரென்னவாங்
கருகிருந்தகோவவனுக்கோதுவான். (கஙஉ)

கேட்டியையநீகேடில்சிந்தையோர்
மாட்டினீமனம்வருந்தனின்னுடை
நாட்டினின்றனிநகரினும்படை
வீட்டில்வைகினர்விரிப்பன்கேண்மினோ. (கஙங)

வேறு.

வரிசைக்கிவனேயெனவான்முறையா
லரசற்கருகாதன மீதமர்வோ
னிரசித்தசொற்கங்கனெனும்பெயரோன்
முரசக்கொடியோனெனமுன்னுவையால். (கஙச)

முடையிற்சுவையுண்டிமுதன்மைபட
மடையிற்செய்பலாயனவண்பெயரோன்
கடையிற்கனலிற்பொலிகண்ணுடைவெம்
படைஞர்க்கரிவீமனெனப்பகர்வார். (கஙரு)

மாவுக்கொருவன்னகுலப்பெயரோன்
கோவுக்கொருவன்றிறல்கொண்டசகா
தேவப்பெயரோனொருசேயிழையே
பூவிற்கொடியிற்பொலிவண்ணமகள், (கஙசு)

யானேநரனுமிவையின்புறநின்
வானோர்தருசிந்தைமயக்கறவே
கோனேர்தருவேயிதுகூறினனு
லூனேடுயிர்போலுனையுன்னுதலால். (கருஎ)

இழிசெய்வினைகண்டபின்யாழினர்மேற்
பழிசெய்தனநல்கியடைமங்கிளிசொல்
வழிசெய்துயர்கீசகன்மாய்விலுயி
ரழிசெய்தவன்வாயுவளித்தவனே. (கருஅ)

கொடையிற்பொலிகொற்றவர்கோவுணரி
னிடையிற்றவரெய்துமதெய்தியதென்
மிடையிற்புறவம்புகவேண்டுகையாற்
றடையிற்படுபாந்தளிற்றாழ்ந்தனமால். (கருகூ)

மாயக்கொடுவஞ்சகன்மன்னரெதிர்
நேயத்தொடுசொற்றநெடுந்தவனை
போயிற்றதுநென்னலொடும்புகழா
ராயிற்றவருன்றிலையாமினிமேல். (கசo)

என்றேபலவாய்மையியம்புதல்கேட்
டன்றேமகிழெய்தியுமற்புதமீ
தின்றேயுணர்வேமெனவேந்தன்மக
னென்றேதுணிபோதினனேகையொடும். (கசக)

அரனாருள்பெற்றெழிலாண்மைபெறு
நரனுமெனநின்னைநயந்துணரேன்
றிரனுலவனுமமுஞ்சீர்கொள்பெயர்
வரலாறுமுரைக்கின்மயக்கறுமே. (கசஉ)

என்னத்திறலுத்தரனின்சொலொடும்
பன்னப்புளகித்துளபண்பதனுன்
முன்னைப்பெயர்வந்தமுறைப்படியே
தன்னைத்தெளியும்படிசாற்றினனே. (கசங)

வேறு.

பங்குனன்கிரீடிபார்த்தன்றனஞ்சயன்விசயன்பார்மேற்
றங்கறுஞ்சுவேதவாகன்வீபற்சுசவ்வியசாசி
துங்ககிட்டினனேவெற்றியருச்சுனனென்றுதூயோ
ரெங்கணுமெடுத்துரைப்பதீரைந்துநாமமாமே. (கசச)

உத்திரமென்னுநாளினுதித்தலாற்பற்குனப்பேர்
வைத்தனர்மகவான்றந்தமாமணிமகுடந்தாங்கி
யெத்திசைபுகுந்தபோதுமிரவிமீதெழுந்ததேய்க்கு
மத்திறலதனாற்கிரீடியாக்கினரகிலத்துள்ளோர். (கசரு)

பிரதையென்றென்னையீன்றபிராட்டிபேருள்ளவாற்றாற்
சரதமார்பார்த்தனென்றேசாற்றுவார்தருமனைப்போ
லுரைபிசகாதவாற்றாலுதிட்டிரனிளவலென்றே
வருமுறைநவைத்தநாமந்தனஞ்சயனுகுமன்றே. (௧௪௬)

பயிற்றியபடையால்வாகுவலியினாற்பாரிலென்னைச்
செயித்தவரிலாதபண்பால்விசையனென்னாமஞ்செய்தா
ரியற்றுபோர்முனைகடோறுஞ்சுவேதமாவிரதமுய்க்கும்
வயத்தினால்வருஞ்சுவேதவாகனனென்பர்மாதோ. (௧௪௭)

கண்ணினாலென்னைநோக்குங்காவலருள்ளந்தேய்ந்தோ
ரெண்ணமுஞ்செயலுஞ்சிந்துமியற்கையால்வீபற்சாகித்
துண்ணெனவிரியுஞ்சால்பாற்றூய்மையான்வீபற்சென்றே
விண்ணினரெனக்குநாமம்விளம்பினருணர்திமேலோய். (௧௪௮)

அங்கையொன்றதில்வில்லேந்துமாற்றலுள்ளவரிலன்றிச்
செங்கையோரிரண்டினம்புசெலுத்துமென்செய்கைநோக்கி
நங்குலத்தலைவர்சவ்வியசாசியாநாமஞ்செய்தா
ரிங்கிதையுணர்திநன்னாலுணர்வுடையேமத்தோளாய். (௧௪௯)

மட்டிலாவலிபெற்றுள்ளவானவர்முதலோரேனு
மிட்டமற்றுதிட்டிரப்பேரிறைவனையவமானித்தாற்
றொட்டவான்கணையாற்சென்னிதுணிப்பதென்றிருக்குஞ்சொல்லாற்
சிட்டினனென்றுநாமஞ்செய்தனர்தெளிந்தமேலோர். (௧௫௦)

குருச்சுடர்மணிசெய்பச்சைக்கொழுந்துடற்பொலிவுநோக்கி
யருச்சுனனென்பரீதென்னரும்பெயர்வந்தபான்மை
செருச்செயவந்ததேவர்காண்டவஞ்சிதைத்தநாளிற்
பொருத்துகிட்டினனென்றோர்பேர்புனைந்தனர்மீட்டுமன்றே. (௧௫௧)

ஆதலினமம்பன்னொன்றுமெனவறிதிமற்று
மோதியபெயர்கள்வாறோருலகத்தோரகிலத்துள்ளோர்
கோதறவெவருமன்பாற்கொடுத்ததேயன்றியுண்டோ
காதலான்மச்சர்கோமான்கண்களிப்பெய்தவந்தோய். (௧௫௨)

முப்புரநீறுசெய்தமுழுமுதலளித்தவம்பு
மொப்பறுமிருவரேனையும்பர்வான்படையும்பெற்றே
னிப்பெருஞ்சிலையுமாளாத்தூணியுமிமையோரீந்த
தப்பில்வெள்வளையாந்தெய்வதத்தமும்பெற்றுளேனால். (௧௫௩)

உருப்பமார்குணத்தோர்மூன்றுகோடியென்றுரைக்குந்தீயோர்
விருப்பறவியற்றுந்தீமைவிலக்குவான்விண்ணோர்வேந்தன்
பொருப்புறழ்தேர்மேற்சென்றோர்கணத்தினிற்போரின்மாய்த்தே
னொருப்படுபுலவர்சிந்தையுவப்புறமீண்டதோர்வாய். (௧௫௪)

* குருவுமக்குருவைத்தப்பாக்குருகுலக்கோவுந்தங்க
ளருவரைத்தோளிணையியறைதரப்பிறைவில்வாங்கிக்
கருவுயிர்த்தெழுந்தகாலமழைமுகில்கால்கொண்டென்ன
ஒருவருக்கொருவர்வாளியோரொருகோடிபெய்தார். (௩௬௫)

* அதிரதர்தம்மையெண்ணிலணிவிரன்முடக்கவொட்டா
முதிர்சிலைமுனியும்வீரன்முனிவிலாமுகனும்விட்ட
கதிர்முகப்பவனவேகக்கடுங்கொடும்பகழியாவு
மெதிரெதிர்கோத்ததல்லாற்பட்டிலவிருவர்மேலும். (௩௬௬)

பருணிதர்மகவான்செந்தீப்பண்ணவன்பரிதியிந்து
வருணனையாதியாயவானவர்கணைகளெல்லா
மருணவெம்பரித்தேரோனுமரிக்கொடித்தடந்தேரோனு
மிரணியதலத்தோரேத்தவெதிரெதிரேவியார்த்தார். (௩௬௭)

தேரொலிசெய்யநாரிச்சிலையொலிசெய்யமார்பிற்
றாரொலிசெய்யக்காலிற்றருங்கழலொலிகள்செய்யப்
பாரொலிசெய்யுநாமத்திருவர்வெம்படைகளேவப்
பேரொலிபிறந்ததண்டப்பித்திகையளவுகாறும். (௩௬௮)

தேனுறுமலங்கல்சூடுஞ்செஞ்சிலைக்குருவுஞ்செந்தீ
மானுறுநயனத்தோனுமாறுமாறேவுமம்பான்
மீனுறுவேலைநீரும்விரிந்தபாதலத்துநீரும்
வானுறுகங்கைநீரும்வறழ்ந்தனவென்பமன்னோ. (௩௬௯)

துத்தியஞ்சுடிகைநாகந்துளங்கமாதிரங்களெட்டு
முத்தரகிரியுமீரேழுலகமுமுட்கவானிற்
கொத்துறுமுடிக்கள்சிந்தக்கொடுஞ்சமர்புரிந்தாரென்னி
லித்தகையாயபோரென்றூர்கொலோயியம்பவல்லார். (௩௭0)

ஆரணமுனிவன்சேனையார்கலியென்னப்பொங்கி
வாரணவாகன்மைந்தன்வலிகொடேர்ச்சூழ்ந்துசுற்றிக்
காரணமென்னோவென்றுகலங்கவாளமர்செய்காலை
நாரணனனையருந்திறந்தனனகைசெய்தானே. (௩௭௧)

மட்டில்பேரழல்செய்வாளியொன்றின்மேலொன்றுமாட்டி
யெட்டுணைப்பொழுதின்முன்னரெதிர்ந்தநாற்படையுங்காதி
யட்டனன்குருதிவெள்ளம்புரண்டதாலவனிமீதிற்
கிட்டியாசிரியன்கண்டுநின்றனன்கேதமுய்ப்பான். (௩௭௨)

தானைநால்வகையுஞ்சிந்தித்தன்பெருங்கணைகட்கெல்லா
மேனையகணைகள்போக்கியிடையிடைதுணித்தனோக்கி
மானையங்கரத்திற்கொண்டோனிவன்முனைமருவலாற்றூன்
சோனைபோற்சொரியும்வில்லான்றுணிபினையுணரினென்றூன். (௩௭௩)

* வண்டுதான்முரலுங்கஞ்சமாலையான்பயிற்றுவித்துப்
பண்டுதான்கண்டகூற்றிற்பதின்மடங்குயர்ந்தபண்பான்
மிண்டுதானவரைவென்றவிறலுடைவிசயன்வின்மை
கண்டுதானவன்றனோடுகற்பதற்குன்னினானே. (௩எச)

* ஏறுதேர்முரியவேதமெழுதியதுவசம்வீழத்
தாறுபாய்புரவிநான்குஞ்சாரதிதலையுஞ்சிந்தக்
கூறுபோர்நாணியற்றுக்குனிசிலைதுணியப்பின்னோர்
மாறுகோற்றொடுக்கவெள்கிமறையவன்முதுகிட்டானே. (௩எரு)

* தந்தைபோரழிந்துபோனசரபலங்கண்டுவெம்பி
யிந்திரன்மதலையோடுமெதிர்ந்தனனிவுளித்தாமா
தந்தனர்புலிங்கசாலந்தருபெருங்கடவுட்டீமுன்
வந்தெழுமாலகாலத்தீயினைமானுமீரான். (௩எசு)

வாசியின்மீதுநூறுவலவன்மீதிரட்டிமற்றும்
பாசிலைமேனியான்மீதாயிரம்பகழிபோக்கித்
தேசினிற்சிறந்தசீயக்குருவினைபோற்சீறிநின்றான்
வாசவன்முதலவானோரற்புதமலியமாதோ. (௩எஎ)

மேல்வருகணையும்வாசிமீதணிவலவன்மேனிப்
பால்வருகணையுந்தூளிற்கழிந்திடப்படுத்திவெய்ய
கோவிருபஃதுதொட்டேகுமரன்றேர்க்கொடிதுணித்தான்
கால்வருநெடுவிற்றுங்குந்தனஞ்சயனென்பமன்னோ. (௩எஅ)

நெட்டிலைவயிரவாளிநேர்ந்தணிநுதலில்வீர
பட்டமுந்துணித்துநீக்கிப்பங்குனன்கரத்தின்மல்கு
மட்டறுகாண்டிபத்தில்வாய்த்தவான்குதையும்போக்கி
முட்டிநின்றனந்தமம்பான்மூடினன்வீடிலாதோன். (௩எகூ)

தேசிகன்மைந்தன்செய்தசேவகங்கண்டுநக்கு
வாசவன்மகனும்வேறோர்வான்குணஞ்சிலையின்மாட்டிக்
காய்சினங்கதுவக்கோடிகடுங்கணைசெலுத்தலானுன்
பூசுரன்மகனுங்கோடிபுங்கவம்போக்கினானே. (௩அ0)

மாசுணக்கொடியோன்சேனைவாரிதிமதிகண்டென்னத்
தேசுடையாசான்மைந்தன்செருத்தொழில்புகழ்ந்துநின்றார்
வீசுமெண்டிசையும்பாரும்விண்ணுமந்தரமுமெங்கு
மாசறவிருவர்தூவுமம்பினான்மறைந்ததம்மா. (௩அக)

மற்புயவாசான்மைந்தன்மலிகணைப்புட்டிற்றங்கு
மற்புதக்கணைகளியாவுமகல்வாதுலனுய்நின்றான்
முற்பவமுறையாற்செல்வமூர்க்கர்பாலிடையினெய்திப்
பற்பலவகந்தைநல்கிப்பயன்படாதகறலேபோல். (௩அஉ)

அரிதருகுமரன்மாளாத்துணிபெற்றவிரும்வாற்று
லெரிகணைப்பலவுமுன்போனிறைவுறவெய்திநின்றான்
றெரிதமிழ்க்கவிகளுன்குந்தேர்ந்தநற்புலவோர்சிந்தை
விரிவுறச்சுரக்குஞ்செய்யுள்விருத்திபோல்விளங்கமன்னே. (௩௮௩)

மறுப்படாவயவெஞ்சியக்குருவைபோல்வலியதேர்மேற்
சிறப்பொடுநின்றவாசான்மகன்செயறோர்ந்தோவென்றித்
திறப்படுநரனைவென்றுதிறலுறுமாறோசெங்கேழ்
நிறப்பெருங்கிருபன்முந்திநேர்ந்தனனெடும்போரம்மா. (௩௮௪)

வேறு.

வீரைவண்ணனுமுத்தரன்பாலருள்காட்டலுமிகுநேமித்
தேரைவந்தவக்கிருபன்மேற்செலுத்தினன்செஞ்சிலைகளைவாங்கித்
தாரைமாறியுநாணுறவுருமுறழ்த்தக்கவாளிகளேவும்
போரையாவரேபுகலவல்லவர்மதிப்புலவருங்கலக்குற்றார். (௩௮௫)

சண்டமாருதங்கலங்கினவடபெருஞ்சயிலமுமொலிசெய்த
தெண்டிசாமுகஞ்செவிடுபட்டம்பரமெங்கணுங்கனலோங்கி
யண்டகூடமுமகண்டமுநெக்குவிட்டந்தரகதிவீறுங்
கொண்டலேழுமங்கசனிகக்கினவரைக்குகையிடந்தொறுமம்மா. (௩௮௬)

கைத்தலத்திறல்காட்டியிங்கமர்புரிகாலையிற்கனவாகன்
புத்திரன்கொடும்போரத்திரமூடுறப்புகுந்துதேர்க்கொடியாடை
தத்திவீழ்வுறத்தறித்தெரிந்தாரியன்றனதுடற்றலமெல்லாங்
கொத்தியெங்கணுமுருவியசூதனுங்குரகதங்களுமுட்க. (௩௮௭)

அனையகாலையிற்கிருபனுக்கிருபுறத்தணுகியதேர்வேந்தர்
முனைகொள்சந்திரகேதுநற்சுசேடனன்முறைதெரிமணிமந்தன்
வனைபொலன்கழலேமவன்மன்முதல்வாகைவெஞ்சிலைவல்லோர்
புனைதும்வென்றியென்றார்த்தருச்சுனனெதிர்புகுந்துபோர்பொருதாரே. ()

எதிர்த்தமன்னவர்தமையெலாம்பலகணையேவியங்கவர்சென்னிக்
கதித்ததிண்புயமருமநற்குறங்கொடுகரம்பதம்வெவ்வேறு
கொதித்தசிந்தையன்குறைத்தொருகுன்றுபோற்குவித்தனன்குவையாக
மதித்ததேசிகன்சிலையையுந்தேரையுமாற்றினன்விரைவாக. (௩௮௯)

வந்தகொற்றவேன்மன்னருஞ்சிதைந்துதேர்வரிசிலைபடமாழ்கி
யந்தணர்க்கரசவனிமேனின்றுவெவ்வழல்சொரிகதிர்வேலா
லிந்திரற்குந்தையஞ்செறிமைந்தனையெறிந்தனனிவனொன்றே
செந்தழற்கணையாற்பொடிசெய்தனன்சிறுநகைநிலவூர. (௩௯0)

எறிந்தவெய்யவேற்பொடிபடவெஞ்சினமெழுந்துடறெரியானுய்ச்
சிறந்தவாளொடுபரிசையுங்கொண்டவன்றேர்மிசைபாய்போதி
னறிந்துகாண்டவமழித்தவன்மதிமுனையருங்கணையொன்றேவிக்
குறைந்துநீறுகவாளையும்பரிசையுங்குறைத்துவிட்டனனம்மா. (௩௯௧)

முனையின்மிக்குயர்கிருபனும்வேறுபோர்முயல்வதற்கிடனின்றித்
தினையுடைப்பொழுதகமுறச்சிந்தனைசெய்திளநகையோடுங்
கனைகழற்பொலிவெஞ்சிலையாரியன்காதலிற்பெறுவெற்றித்
தனையன்பொற்றடந்தேர்மிசைபுகுந்தனன்முனைகளிரிந்தோட. (நகஉ)

முன்னிட்டோடியகிருபாசரியனுமுனையழிந்திழிவோடும்
பின்னிட்டானெனத்தேறலுமாங்குளபேரணிப்படையோடும்
பொன்னிட்டாற்றியசக்கரத்தேர்மிசைபொற்பொலியெனனின்ற
மின்னிட்டாற்றியசெஞ்சிலைவீடுமன்னாணொலிசெய்தானே. (நகங)

எடுத்தநாணொலியோசைகேட்டிணையிலாவேரிநீரெனநின்ற
மடுத்தசுந்தரச்சகுனிதுச்சாதனன்முதலியமறவேந்த
ரடுத்துமற்றவனுதரத்திருந்தனரதுதெரிநரனம்பு
தொடுத்துநாணொலிகாட்டிவெள்வளையொலிகுறித்தனன்சோர்வெய்த. (நகச)

வேறு.

சோமகுலமுய்யவருதோன்றன்மொழியாலே
வாமவலவன்கடிதுவாம்பரிமுடுக்கிச்
சேமவிரதத்தைநொடிசெல்லுமுன்னடத்தி
காமருகுலக்குரவன்வின்முனைகலந்தான். (நகரு)

வேளைநிகரும்படிவவிண்ணரசன்மைந்தன்
காளமெனவந்துமுனைகாணுமுனமோடி
வாளமர்வலானிடபசேனனடல்வாளி
கோளின்முறைதூர்த்தமர்குறிப்பொடுபுரிந்தான். (நகசு)

புரிந்தவனரும்பரிகள்பூணிரதமம்பாற்
கரிந்துபொடியாக்கியுயர்கைச்சிலைதுணித்தே
விரிந்தநரனெண்கணையின்மேனியையெரித்தா
னிரிந்துமுனைகெட்டுவெரினிட்டனன்வலத்தோன். (நகஎ)

மற்றவனகன்றிடலும்வான்கணைசெலுத்திக்
கொற்றமுறுசிந்துபதிகூறுசுபலன்சேய்
குற்றமுடைமன்னிளைஞருதியர்கொடுங்கை
பற்றுசிலைதேர்கொடிகள்பாகுதுணிசெய்தான். (நகஅ)

மாறுபடுசேனைவயவாசிகரிவான்றேர்
நீறுபடநூறுகணைநொந்துதிசைதோறுஞ்
சேறுபடுசோரிநதிசெல்லவருவோனைப்
பேறுபடுதேர்மிசைபிதாமகனெதிர்ந்தான். (நகசு)

கொண்டனிகருஞ்சிலைகுனித்துவயவாளி
மண்டியழல்காலநிறைமாரிபொழிவித்தார்
தெண்டிரையுமாதிரமுநொந்தசெயல்தேரு
மண்டர்பலயோசனையகன்றுயரநின்றார். (௪00)

வெம்பரிதிவந்தகிரிவீழ்கிரியிரண்டுங்
கம்பிதமெழுந்துகடனீர்கொதிமலிந்தே
தும்பிகளயர்ந்துலகுதுன்பமுளதன்றே
விம்பரிவர்வெங்கணைகளேவுகனலாலே. (சு0க)

செஞ்சுடருமஞ்சவமர்செய்துநதிதந்தோன்
விஞ்சுகணைதேர்வலவன்மீதுறவிடுப்பப்
பஞ்செரியினூடுபடுபான்மைபடுவித்தே
வஞ்சமறியாதவன்வயச்சிலைதுணித்தான். (சு0உ)

அற்றசிலையைப்புறமகற்றிவரைபோலோர்
கொற்றமுளபோர்ச்சிலைகுனித்திணையிலாதோன்
புற்றரவெனத்தகையபுங்கம்விடுவித்தான்
மற்றவனுமக்கணைகண்மாற்றியமர்செய்தான். (சு0௩)

எக்கடலுமெக்கிரியுமெவ்வுலகுமியாரு
முக்கிடவெழுங்கமலனூழியழலென்னத்
தக்கவர்சரங்கடருசெந்தழறயங்கப்
புக்குபுதிரிந்ததிசைபோமளவுகாறும். (சு0ச)

வேறு.

காலின்வேகமெனவேகமென்பதுகடந்திரண்டுதிறல்வீரர்தேர்ச்
சாலிணுகியுமலாதவாசியரிசக்கரஞ்சுழல்வதொத்ததான்
மாலுலாவுசுரராசன்மைந்தனதிமைந்தனங்கையில்வளைத்தவிற்
கோலின்முந்துவிசையிற்சுழன்றனகுலாலனேமிபடுகொள்கைபோல். (சு0௫)

கலித்தவாசிகள்முகிற்குலங்களொலிகாட்டுமாறிருவர்பாகரு
மொலித்துளாரிவர்பதாகைவானமிசையூதையோடுமலைவாயதாற்
செலுத்துதோள்பெயராறுதல்வெயர்க்கவிகல்செய்யவாள்விழிசிவப்பவே
வலித்தவங்குலிசவிப்பகின்றமர்மலைந்துளார்பிறர்கலங்கவே. (சு0௬)

தொட்டபைங்கழலொலிப்பநின்றுமதுசூதனன்றனதுமைத்துனன்
விட்டவெங்கணையினிற்பெரும்பனைவிலோதனன்சிலைதுணிந்ததா
லட்டகாசமொடுவாசவன்புதல்வனுயிரங்கணைசெலுத்திமெய்
முட்டவுந்துளைபடுத்திஞன்பினையுமுரிவில்லுதவுமுன்னரே. (சு0எ)

செய்யமேனிமுழுதுங்கொடுங்கணைசெறிப்பமாழ்கிமதிசிந்தியே
வையமீதுமெய்ம்மறந்துநின்றனன்வயங்கொள்சாரதியுணர்ந்துதேர்
வெய்யவம்முனையகற்றிமற்றொருதிசைக்கணுய்த்தனன்விபாகரன்
பொய்யிறேரகல்விசும்பினுச்சிதருபொழுதினுயதுபொருந்தவே. (சு0அ)

கங்கைதந்தவனிடைந்தகன்றசெயல்காணுமுன்னரவனுதரந்
தங்கினின்றவர்கலைந்துழன்றொருவர்தாங்கவல்லவரிலாமையாற்
பங்கமெய்தினர்விரைந்துமீளவுயர்பாகசாதனனளித்தவன்
புங்கவங்கள்பலகோடிபோக்கிவருதானையைப்பொடிபடுத்திஞன். (சு0௯)

குற்றமற்றகொடிசுற்றுபொற்றுகில்கொளுந்திநேமிகள்கரந்துசீர்
பெற்றவச்சுகள்பிளந்துகால்கள்பலபேதமாகிவிறல்வாசிகா
லற்றுருண்டுசிகரந்துணிந்தணியழிந்தரும்பொடிகுவிந்ததாற்
செற்றமிக்கரவுயர்த்தகோவினியசேனையூடுவருதேரெலாம். (சகO)
மத்தகங்கள்பிளவுண்டுகூரியமருப்பொடிந்துசெவிசிந்தியே
கைத்தலங்களிருகண்டமாகியுயர்காறறிந்துடல்கலங்கியே
வித்தகம்புரிகுலப்பெருங்கிரிகள்வீழ்வதொத்துயிர்துறந்தவாற்
குத்திரம்புனையிராசராசனிகல்கொற்றமிக்ககரிநிரைகளே. (சகக)
சிரந்துணிந்தனதகர்ந்தவாலுளைகடேற்றமிக்ககலினங்களி
னுரந்துணிந்தனபதந்துணிந்தனவொப்பமற்புயமொடிந்தருங்
குரந்துணிந்தனமுகம்பிளந்தெரிகொளுந்துகின்றனசிறந்தவந்
தரம்புகுந்துவருகாலிவாளிமுனைதன்னிலொண்குரகதங்களே. (சகஉ)
உடனெரிந்தனசிரஞ்சிதைந்துகரமுக்கியென்புபொடிபட்டன
குடருமிழ்ந்தனநரம்புசிந்தியுதிரங்குழம்பினகுலாறுதற்
றடம்பிளந்தனவுரம்புயங்கடிதலங்களுங்குவைமலிந்தவாற்
படமுயர்ந்தவிடநாககேதனமுளானணிப்படுபதாதியே. (சகங)
பட்டவெங்கணைகளாலழிந்துகொடிபாகுமாவிரதமின்றிவென்
னிட்டமன்னவரலாதெவன்கொலவனேவுவெங்கணைபிழைத்தவன்
கட்டமுற்கதவுறும்பறந்தலைகலந்திருந்தபலகைக்களி
றெட்டிவெற்றியரிபுக்குணர்ந்தபடியேற்பவாடிமதிமாழ்கினர். (சகச)

வேறு.

வாடிவாடிமனந்தளர்ந்
தேரடியோடியுவந்துளோர்
நாடிநாடிநவின்றிடிற்
கோடிகோடிகுறிப்பதே. (சகரு)
விண்படாவருமேகநற்
றண்படார்சிலர்தங்கினு
மெண்படாநரனேவின்மெய்
புண்படாதவர்பொய்த்ததால். (சகசு)
அஞ்சுபட்டுறுமாங்கெலா
நஞ்சுபட்டனனன்னரன்
செஞ்சுடற்புரைசெம்மனேர்
பஞ்சுபட்டபதாகினி. (சகஎ)
தேசின்மிக்கதிரிபுரத்
தாசுரர்க்கிணையாயினார்
நாசமுற்றவர்நன்னகை
யீசனொத்தனனேந்தலே. (சகஅ)
சேறுபட்டதுஞ்செம்புன
லாறுபட்டதுமன்றியே
நீறுபட்டுநெரிந்ததான்
மாறுபட்டவர்வல்லுடல். (சகக)
அசைவிலாதவனுழ்கணை
யிசையுமாறமரெற்றியோர்
திசையினூடுபுசேர்ந்துதன்
விசையடங்கவிழாதரோ. (சஉO)

வேறு.

விட்டவொண்கணை
யெட்டருங்கரி
பட்டயர்ந்திட
வட்டுமோடுமே. (சஉக)
உரைத்ததேர்கரி
நிரைத்தவாசியா
ளரைத்துச்சோரியிற்
கரைக்குங்காய்கணை. (சஉஉ)
குவிகைகொற்றவர்
கவிகைசாமரை
சிவிகைபேரியம்
புவிகைபோர்த்ததே. (சஉங)
சகரநீர்குடை
மகரமாயினன்
சிகரவேதித
னிகரின்மைந்தனே. (சஉச)

## வே று.

கானெலாம்பரவியகடவுட்டீயென
வூனெலாமருந்தியுமொருவன்வெங்கணை
மீனெலாமுருக்துவிண்ணவருமஞ்சுர
வானெலாங்கனற்பொறிமலியச்செய்ததே. (௪௨௫)

அடலின்மேவலரணிநோக்கிமாற்றவு
மிடலுடைத்தனஞ்சயன்வீசுங்கூர்ங்கணை
யுடவியாடயரதனளித்தபுங்கவன்
கடலின்மேலேவுசெங்கணைகள்போன்றதே. (௪௨௬)

புயங்கநாயகன்படுதுவசன்போர்முனை
யியங்கினோர்மிசையிவனெறிந்தவான்கணை
வயங்கொளாசுரர்பெரும்பதாகிமாய்த்தருஞ்
சயம்பெறுகுமரவேள்சரங்கள்போன்றதே. (௪௨௭)

வந்தவாகினியெலாந்தொலையவல்விரைந்
துந்துருமகபதிக்குதித்தவன்கணை
முந்துசென்றுயிருகமுடிக்குமாற்றலா
லந்தகன்வீசுபாசத்தினையதால். (௪௨௮)

கவித்தவெண்கவிகைசெங்காம்புசிந்தியே
புவித்தலைமேவுதல்பொருவின்மாமதி
சுவத்திரைகொழுநனீங்கியற்றுந்தாய்மகத்
தவிக்குளங்கருதிவந்தடுப்பதேய்க்குமே. (௪௨௯)

சங்கொடுமன்னர்கைச்சலஞ்சலங்களை
வெங்கொடுங்கணைகளால்வீட்டிவீழ்த்துத
லங்கண்மானிலமெலாம்புரக்குமாண்டகை
துங்கவான்சீர்த்திவேர்தொலைத்தன்மானுமே. (௪௩0)

தேரின்மேலானைமேற்சேர்துகிற்கொடி
பாரின்மேல்விழக்கணைபடுத்திவீசுதல்
காரின்மாலைகள்கனவிசும்பிற்கட்டறப்
போரின்வாய்த்தவறிவீழ்புணர்ப்பைமானுமே. (௪௩௧)

மாசறுமுதிட்டிரற்கிளைஞன்வான்கணை
தூசியின்மன்னர்கைச்சிலைதுணித்தலாற்
றேசுறுசனகமானகரிற்செங்கணு
ஞேசையாலுயர்சிலையொடித்ததொக்குமே. (௪௩௨)

காதுறுகழைசுளிகளிநல்லியானையின்
மீதுறுமுரசினைக்கணைகள்வீட்டுத
லோதருங்குன்றின்மீதுயர்ந்தகற்களைத்
தீதரவசனிகள்சிதைத்தனேருமே. (௪௩௩)

மத்தகம்பிளந்திருமருங்குஞ்சோரிக
ளுய்த்திடத்திரிதருமோடையானைகள்
சித்திரப்புயல்பொழியரிவிச்செம்புனற்
றத்தியகாலுடைச்சயிலம்போலுமே. (சஙச)

அகல்வெளிவேள்வியினனல்செய்குண்டமாப்
புகல்கணையங்கியாப்போரினேற்றவ
ரிகலுடற்சமிதையாயிழுதுசோரியாய்ப்
பகன்மகற்குயிரவிபார்த்தனல்கினன். (சஙரு)

பண்ணவர்குரவனுற்பண்ணுமாருயிர்க்
கண்ணெலாம்பயிலுறுகண்ணனென்னவே
யண்ணறோர்ச்சாரிகைசுழலவாண்டுளார்க்
கெண்ணறுதனஞ்சயனெதிர்ந்ததேய்த்ததே. (சஙசு)

வேறு.

பாறொடுகழுகுகள்மீமிசையொலியொடுபறந்தசிறகான்மறைந்ததகல்வான்
ஆறொடுபலமடுவோடியகுருதியினகண்டவுலகுஞ்சிவந்துகவாறித்
தேறொடுமலைகைகள்சாதகமெதிரெதிர்பிணங்குமிருகைத்துணங்கைதருமான்
மாறடுகந்தரமாரிசொரிந்தெனவந்துவிழுமாற்செங்களமெலாம். (சஙஎ)

ஆடரவணியொடுசூலமுமொளிசெயவாளிமிசைசேர்காளிகுழுவுந்
தேடருமணிமுடிசூடியமயிடனைச்சென்னிதுணிசெய்கன்னிபடையும்
வீடியபடைவலிதேறியபலதனிவீரகணமுஞ்சாரதர்களும்
பீடமைகளமுழுதாடியபவுரிகள்பிறங்குமொலியேகறங்கியதரோ. (சஙஅ)

காதியமுடைகமழ்வீரியர்சிரநிரைகடிக்குமரவாற்றொடுத்ததொடைபூண்
டாதரவொடுவருபேய்மகள்குருதியினுழ்ந்துசுழிவாய்வீழ்ந்துசுழலாச்
சாதகம்விரைவுறநீள்கரமுதவுவதம்மிலொருசார்செம்மல்பெயராங்
கோதியுமடல்வலிபாடியும்வெறிபயிலோசையொருசாரேசில்களமே. (சஙகூ)

சோரியினதிபுனலாயதினுடனுறுதும்பிநிரையேதிமிங்கலங்களாய்
வீரியருகுபடையாருயிர்பலவகைவிளங்குவனவாயயங்கடிமியாய்ச்
சீரியநிணமளறுடன்மலிகுவைசிம்புள்வரையாயம்பிரமுமாய்
வாரியினொளிருவதாகியதடசமர்வல்லபெருமான்வென்றகளமே. (சச0)

கோட்டுமதகரிவீழொலியாடவர்கூர்செய்கணையாற்றுழ்வதொருசா
ராடகவுருளுகணேமிகள்சுழல்வதிலாகிவிரைவாற்போவதொருசார்
நாடகவனிதையர்நாணுறவிடையிடைநடஞ்செய்திறல்சேர்கவந்தமொருசா
ரேடவிழலர்முடிசூடியமகபதியீந்தபெருமான்காய்ந்தகளமே. (சசக)

வேறு.

ஆளிக்குமடிகரிக்குமடற்புலிக்குநிகர்வலிகொண்டடுத்தோர்தம்மைக்
கூளிக்குங்கொடிநரிநாய்க்குழுவுக்குங்கழுகுகட்குங்குறைவிறன்கை
வாளிக்குமவ்வூர்வாழ்காளிக்கும்விருந்தாக்கிவானோர்காண
வேளிக்குங்கைக்குமொழிவிந்தைதனைமணம்புணர்ந்தான்விசயனம்மா. (சசஉ)

மட்டார்தொடைமுடிமன்னவன்வளமுள்ளனவெல்லா
நட்டாரொடுதுய்த்தின்பநலம்பெற்றவர்சமர்வா
யொட்டாரைவியந்தங்கவருயர்தோடுதிசெய்தாற்
கிட்டாதுளகொல்லோநெறிகிளரும்பயனிவர்பால். (௨௨௪)

நனிவெந்திறலுளனென்றுபகர்ந்தாலதினயனென்
னினிதுங்கண்மனத்தன்புளதெனிலங்கவனொருவன்
றனிவந்திடல்பொருளன்றவனொடுமேவுறறகையா
மினிதன்றெனினுமர்வாழ்மனையெய்தற்கிணையிலையே. (௨௨௫)

அவனுக்கெதிர்யானேயெனையவனேவிறல்பெறுவான்
சிவனுக்கெதிர்மதனிற்பொடிசெய்வேனொருகணையா
லவனித்தலமுயரம்பரமகலும்பிலமெங்குந்
தவறிற்றுயர்பெறுமென்கணைதனிலென்றுகொதித்தான். (௨௨௬)

நாமத்துயர்கைவண்மையனிதுகூறலுநாப்பண்
சேமத்துறுநிதிபோலொருதேர்மீதுறுகுரவன்
மாமத்தமணிந்தோனெனவருவேந்தனைநோக்கி
நேமித்திதுசொன்னான்றுலைநிகரொத்தவுளத்தான். (௨௨௭)

சிலையாரியனுரைசெய்ததுமமைதிக்குயர்திறனுங்
கலைதேரியபுதல்வன்புகல்கழறுஞ்செயலாமா
னிலைசேர்கிருபன்சொற்றதுமநுநூன்முறைநெறியே
யிலைவேலொளிர்கதிர்மைந்தனிசைக்குந்தரமன்றே. (௨௨௮)

செல்லுந்திசைகாலம்பலசெயலேதுவுநாடி
வெல்லும்பகைவலிதென்றகமுறுமெய்யுணர்வுடையோர்
செல்லுந்திறனெறிபோந்திகல்சோர்வெய்தினும்வசையோ
மல்லுங்குலமலையும்புரைவளருந்திணிதோளாய். (௨௨௯)

ஒட்டார்பிறர்நிலமூடெழுமுச்சிக்கதிர்போல்வந்
தெட்டாமுனமுனைபுக்கமரியற்றுந்திறலோரை
விட்டாங்குவிடுத்தேகவிளம்பற்கிதுதகவோ
முட்டாண்முளரிக்கன்புடைமுதல்வன்றருபுதல்வன். (௨௩௦)

வீரம்பகைநண்பென்றுவிளக்கற்கரிதெவரும்
போரஞ்சுவதிலையாகியபுயமுள்ளவர்தமது
தீரந்துதிசெல்வார்முனைசேர்ந்தாலமர்செய்தே
வாரம்பெறவிகல்வெற்றிவிரிப்பார்மதியுள்ளோர். (௨௩௧)

இதுசெய்வதிலிதுவந்துறுமெனநாடியுணர்ந்தோர்
கதுவுஞ்சமர்பொருகாரியநிலைகூறுதல்கடனா
முதுவேதியரிவர்மூவருமுதன்மூவரிலன்றோ
கதிர்தந்தவனவரோடுரைகழறற்குரியவனே. (௨௩௨)

வெல்லுந்தரமுடையோர்செவிசுடவெஞ்சொல்வழங்கி
மல்லொன்றியபுயவேதியர்மனநோதல்புரிந்தீர்
சொல்லுந்தரமன்றுவிதுவெனவங்கைதுளக்கி
யெல்லொன்றியபுகழானவர்மகிழ்வெய்தவியம்பும். (உ௩௩)

வேறு.

வழிபடத்தொழுதுபோற்றவழங்கநன்னெறியாராய்ந்து
விழிபடுகருணைசென்னிமேற்கொளற்குரியரன்றித்
தெழிபடப்புன்சொற்கூறத்தெழிப்பமற்றவரைவாளாப்
பழிபடப்புகறற்கெல்லாமுரியரோபகராய்வேந்தே. (உ௩௪)

என்றுபற்பலசொற்கூறியிராசராசனைவெறுத்து
நின்றுகைம்முகிழ்த்துநெஞ்சினேயமுமன்புந்தோன்ற
வன்றுநற்கிருபனுசானச்சுவத்தாமனுதி
வென்றியமுதல்வர்தம்மோடிம்மொழிவிளம்பினனே. (உ௩௫)

சொற்றநல்லறிவிலாதசிறியர்புன்சொல்லையெல்லாங்
கற்றறிவுடையோரெண்ணாரதவிற்கருணைநீராற்
குற்றம்வந்தெய்தாவண்ணம்பொறுத்தருள்கூரவேண்டும்
பற்றலரெதிர்ந்தகாலத்திவ்வியொன்றும்பயன்படாவே. (உ௩௬)

ஆதலாற்புகல்வதென்னேயருமறைக்கடலுமார்க்குங்
காதல்சேர்சிலையின்வேதக்கடலுமாங்கிரண்டுபாலு
மேதகுமுளத்திற்றுங்கிவிளங்குந்தேசிகர்நீர்யாரே
யேதந்தீரும்மைநேராமியற்கையோரெண்ணற்குண்டோ. (உ௩௭)

குருகுலநாதன்சேனைக்கோர்பழிகுறுகிற்றுண்டோ
வருகுறுமவரினீரேயாற்றலும்புகழும்வல்ல
திருகறுதலைமைவாய்த்தசெய்கையாதனுனும்பால்
வருமெனவுணர்வீரேனோர்தமையெவர்மதிக்கற்பாலார். (உ௩௮)

தனதுளத்திருந்தசீற்றம்பலவெனிற்சமர்வாயொன்றுந்
துனிவுறக்கருதலாகாதப்பெருந்தோன்றற்கென்று
மினிதுறப்புகழ்வந்தெய்துமியற்கையேகருதலென்று
மனுமுறையுரைக்குந்தொன்னூலுணர்வுளீர்மதியான்மிக்கீர். (உ௩௯)

மறுப்படவுரைத்ததெல்லாமன்னன்மீதருளாலைய
பொறுத்தருள்சுரத்தல்வேண்டும்போர்குறித்தெய்துங்காலை
யெறித்தசெங்கதிரோடொப்பானிமம்படுநமதுசேனை
வெறுப்பென்னைநமதுசீற்றம்வேந்துடைத்தவமாமென்றான். (உ௪0)

கருதருங்கங்கைமைந்தனிவ்வுரைபகரக்காசில்
விருதுடைக்கன்னனோடுவேந்தனுங்குருவைப்போற்றி
வருதகையுணரேஞ்சொற்றவாய்மொழிபொறுத்தியென்றே
கிருபனச்சுவத்தாமற்குங்கேதங்களகற்றினரே. (உ௪௧)

பார்தருமெயிற்றராவெம்பதாகையான்முகமன்கூறச்
சீர்தருதுரோணன்சிற்றந்துறந்தருஞ்சிறப்பினோங்கி
யேர்தரவாசிநல்கியிருந்தவீடுமனையாதி
போர்தருவயவர்க்கிச்சொற்புலப்படமொழிந்தானன்றே. (௨௪௨)

தோடுறுதெரியல்வேந்தன்சொற்றசொல்வெருளியென்னு
மீடறுதுன்பந்தந்ததிமையவரிருகைகூப்பும்
வீடுமனுரையோர்வேலாய்விட்டியததனைமேலாய்
நாடுவதென்னசொன்மினரபதிக்குறுதியெண்ணி. (௨௪௩)

போரிருந்தியற்றும்போதிற்புரவலன்றனித்தபாங்கர்க்
காரிருந்தொலிக்கும்வில்லான்கணையினூறுண்டாமேற்
றேரிருந்தென்னைகோடித்திரளிருந்தென்னைமேலோ
ராரிருந்தென்னையெய்தலரும்பழியல்லாதுண்டோ. (௨௪௪)

நேர்படமேவுமாயோனிச்சயம்பார்த்தனீலத்
தேர்படுமேனிசொற்றதிவனுடன்மலைதலொன்றே
சீர்படுவழக்கிற்கானஞ்செல்கெனலொன்றேநாடிக்
கூர்படவுரைமினென்னவீடுமன்குறிப்பதானான். (௨௪௫)

வழக்கினாலவரைக்கானின்மருவுறச்செய்யவல்லோர்
நிழற்படுபுவியினில்லைநிறைந்தவாண்டொருபான்மூன்று
மெழிற்றருமதிகமாகத்தேறுநாள்கூட்டினென்னற்
கழித்தனரின்றுபோரிற்கலக்குமாறெய்தினாரால். (௨௪௬)

பகர்மொழிபிசகார்நன்றிப்பாசத்திற்பிழையார்வானோர்
புகழ்தருமியலார்வாய்மைபொய்ப்பநாட்செல்லாமுன்ன
மிகலில்வந்தடைவதுண்டோவிழுக்கவரிடத்துண்டாமேற்
புகருறுமவையிலன்றென்பொறைமடுத்திருந்தார்மன்னோ. (௨௪௭)

சென்னலைகன்னல்காட்டச்சேர்ந்தயற்செறுவில்நின்ற
கன்னலைகமுகுகாட்டுங்கங்கைநீர்நாடன்கேண்மோ
வின்னலையுழந்தோர்காலமிந்துவினியக்கந்தன்னா
னென்னலைகழிந்ததென்றுநெஞ்சிலையழுக்கிலாதான். (௨௪௮)

தன்குலக்குரவன்கூறத்தராபதிசிந்தைவாடி
முன்குறித்திடுநாள்சென்றாலின்றுமம்முறைபோய்வைக
நன்குறக்குறிப்பனன்றிநாடவர்க்களிப்பதுண்டோ
மின்கொலைச்சிலைவல்வேந்தர்கேண்மினென்றிதுவிளம்பும். (௨௪௯)

செய்த்தலைவளைகளாரஞ்சிந்திநீர்த்தடைசெய்நன்னா
டுத்தமநகரொன்றேனும்வர்பெறவுதவமாட்டேன்
மித்திரரவரென்ஞான்றுமாகலர்விறற்போர்வென்றே
முத்தலம்பெறினுநன்றாமென்றனன்முதன்மைவேந்தன். (௨௫௦)

வீடுமன்மொழியும்வேந்தர்வேந்துளக்கருத்துந்தேறிச்
சூடும்வெண்டும்பைநாறுந்துரோணனீதெடுத்துரைத்தான்
பீடுடைகிருபரேறேநினதுளம்பிடித்ததீதேற்
கூடுமானிரைகொண்டுன்னேசெல்குதிகுறித்தவண்ணம். (௨௫௧)

தானையையிருகூறுக்கித்தக்கமானிரையுங்கொண்டு
சேனையிலொருகூறேடுஞ்செல்வதேகருமமீண்டுங்
கேனையகூறேடாருமிருந்தமரிழைத்துப்பின்னர்
மாநகரடைதுமென்னமறையவன்போதித்தானே. (௨௫௨)

விரதமாமுனியுஞ்சாலமேன்மையாமென்றுகூறி
யிரதமாகரிபதாதியீரிருகூறதாக்கி
நரபதிக்கொருபானல்கிநன்னிரைக்கொருபால்காவற்
றரவெனவமைத்துவேந்தன்றனைச்செலவிடுத்தான்மன்னே. (௨௫௩)

குரவர்மாமொழியாலந்தக்கோமகனகரிற்சேர்வா
னரவுயர்கொடித்தேரோட்டியகன்றனனனிகஞ்சூழ
விரவுமவ்வேந்தின்முன்னர்விறற்பெரும்படைஞர்பல்லோர்
விரைவினினிரையுங்கொண்டுசென்றனர்மேன்மையோடும். (௨௫௪)

இத்திசைதுரோணன்கங்கையீன்றவனிவுளித்தாம
னுத்தமக்கிருபன்கன்னன்முதலினோருரைத்தகூறுங்
கைத்திறற்றனையோடுங்கலிக்குமார்கலியினின்று
ரெத்திறத்தவருமுன்னரெய்துதற்கெஞ்சிவாடி. (௨௫௫)

உத்தரங்கிருபன்காக்கத்தெக்கணமுயர்விலாசான்
புத்திரன்காக்கத்தூசியிரவிசேய்புகுந்துகாக்கத்
தத்துபின்விகர்னன்காக்கச்சயிந்தவன்சகுனிசோம
தத்தனுதியர்கள்சேனையிடையிடையிருந்துதாங்க. (௨௫௬)

போக்கறும்புகழ்பெற்றுள்ளபுண்ணியசீலனோடு
தேக்கியமகிழ்வினேங்குந்தேசிகனடுவேநின்றுன்
மேக்குயர்கவிகையாலவட்டங்கள்கொடிகள்விண்ணிற்
றுக்குறமுரசினேசைசெவிடுறத்தரணியெல்லாம். (௨௫௭)

இங்கிவர்துணிவுஞ்சேனையிருந்தயூகத்தின்வாய்ப்பு
மங்கரசானினேடுமகன்றபண்பதையுங்காணுத்
துங்கவானவர்கள்வேந்தன்சுதன்வலிதெரிவதாகப்
புங்கவருடன்வந்துற்றுன்வானிடம்போர்ப்பமாதோ. (௨௫௮)

அந்தரதலத்திலாருமடைந்தபின்பரிசொலாலே
வந்தனன்பாண்டுவென்னுமகிபனும்போகியோடு
முந்தருகாசனத்திலிருந்தனன்முன்னர்த்தந்த
மைந்தனல்வரவுகண்டுமாமகிழ்வெய்துந்தோளான். (௨௫௯)

வேறு

வானோரொடுவாசவன்வானிலுற
வேனோரணிசெய்திகலேற்றுளராய்த்
தேனோடுறுதாரினர்சேனொளிரத்
தானோரிரத்தினன்சார்ந்தனனே. (௨௬௦)

உடைபட்டதுவான்முகடும்பரெலா
மிடைபட்டனர்பூழியில்மேதினியப்
படைபட்டதுபட்டதுபார்த்தனிக
னடைபட்டுறுதேருருணல்கொலியால். (௨௬௧)

இவ்வாறிவனேகியிரும்படைநேர்
செவ்வேபுகவந்துகைசேர்ந்திடலு
மவ்வாகினியாற்றநடுங்கியதா
லுய்வேதினியென்னுமுளம்பெறலால். (௨௬௨)

அக்காலையருச்சுனனப்படையிற்
றிக்காலுறுமன்னர்திறந்தெரியா
முக்கோலமுறச்சென்முனைப்படைகண்
டக்கோமகனோடுறைவானறிவால். (௨௬௩)

வாராயரசன்றருமாமதலாய்
நோராவிரகென்சொன்னீணிரைகொண்
டோராதிறையேகினனூர்புகுவான்
போராயெதிர்நின்றவர்புண்ணியரே. (௨௬௪)

இவரோடமரேற்றனமென்னிவிறை
கவினார்நிரையோடுகலக்குநகர்
தவறாகநடந்துதடுத்தவனைப்
புவிமேனிரைமீட்பதுபோர்விரகே. (௨௬௫)

ஆன்மீண்டுபுரத்திலடைந்தபினர்க்
கோன்மீண்டுறுவென்றிகொளற்குரியோ
மேன்மூண்டிவர்மேவில்விலக்குதுமற்
றேன்மூண்டவர்மேலுறலேதமரோ. (௨௬௬)

என்றானவனொக்குமெனக்கருதிக்
குன்றாரிரதங்குரவர்க்கொருசார்
துன்றாவலமாய்வருசூட்சியினாற்
சென்றேகவிடுத்தனன்செய்விரைவால். (௨௬௭)

ஆடுங்கொடிசூழிரதத்தமருந்
தேடும்புகழாளிசிலைக்குருவை
நாடுஞ்சரணந்தருநன்மையென
வோடுங்கணைதானிரண்டெய்த்தனனே. (௨௬௮)

காமாரியருட்பெறுகாலேகணை
வாமாரியனுக்குவலம்புரியா
தீமாரிசெலுத்தறுறந்தவர்போற்
பூமாரிபொழிந்ததுபொன்னடியில். (உ௬௯)
உடனேயிருவான்கணையுய்த்திடவந்
தடனேரிலையாகியவந்தணனெண்
மடனேர்செவிமாட்டின்மடங்கியதா
லிடர்நீங்கியடைந்ததியம்புதல்போல். (உ௭0)
அவ்வாறுகுலக்குரவற்குமளித்
திவ்வான்கிருபற்குமியற்றியபின்
செவ்வானகமூடுறுதேரினனிற்
றெவ்வாரணிபோந்துதிரீயினனால். (உ௭௧)
இப்பான்மறையோனிமையோர்புகழுந்
தப்பாவிரதத்துறுசாந்தனொடு
மிப்பான்மைமொழிந்தனனேவுகணைக்
கொப்பாவிடவல்லவருண்டுகொலோ (உ௭௨)
போதிற்புரளுங்கணைபோர்த்தநரன்
கோதற்றடிபோற்றியகொள்கையவாங்
காதிற்சிலவந்துகலித்ததவன்
றாதிற்சுபமோடுறல்சொல்வதுவே. (உ௭௩)
இணையற்றபெருந்திறலேற்றவனோர்
கணையைத்தடைசெய்குதல்கற்றவரார்
புணைகற்றறிகொட்புறல்போலொருவன்
றுணைபெற்றமர்வேட்டதுதோன்றலரோ. (உ௭௪)
இனியெவ்வணமெய்தியவேந்தல்பெருந்
தனிவார்சிலையின்முனைதன்னிலிவண்
சனிதன்றுணையாருயிர்தப்பலென
முனியோதமொழிந்தனன்வீடுமனே. (உ௭௫)

வேறு

கோடுகொண்டசெம்பவளவாயனுண்டுதந்தபுருகூதனுண்டுயர்ந்தபரியாய், மாடுகொண்டவன்கருணைபோதவுண் டெதிர்ந்திவனையாவர்கொல்வயம்புனைகுவோர், நாடுகொண்டதன்றியபிமான்முந்துறந்தடவிநாடொறுமுயங்கல்புரிவோன், கேடுகொண்டனன்சரத மாவதென்னையின்றுகவி கேதனன்படர்ந்ததுணிபால். (உ௭௬)

தேரில்வந்தெழுந்தபுயல்வாகன்மைந்தனம்மையெதிர்சேரவந்திலன்விலகியேவாலே, பாரின்முந்துசென்றபடிதேரிலெங்குளன்கொனரபாலனென்றுநெடிவாலே, போரிலின்றுகண்டுணர்துமேதுமென்றிருந்தபினர்போகிதந்தவன்கடிதேபோய், நீரிலொண்கலம்பெயர்தல்போல்விரைந்துறுஞ் சுரபிநேரிலங்கெதிர்ந்தனனரோ. (உ௭௭)

ஆயரெண்ணிறந்தவருமாயுதங்கொடந்திரமுமானெடுந்தொடர்ந்துபுகல்கண், டேயெனுந்தனஞ்சயனும்வாய்மலர்ந்துமொய்ம்பிணைகளேகிமன்வளர்ந்துசெலவோர், மாயிரும்பயன்செய்மகிகாதன்மைந்தனங்குணரவாகைவிந்தைதந்தனளெனத், தூயனும்விரைந்திரதமூர்ந்தனன்வளைந்துநிரைசூழ்ந்தனன்றொடுங்கழலினோன். (உஎஅ)

காரொலியுயர்ந்தகிரியூடுறவிழுந்தவுருமேறொளிகலந்ததெனவே
தேரொலிபரம்பவிடையேவருநரன்றுணிவுதேறலுமருங்குரவனும்
பேரொலிதருஞ்சிலைகொளாரியன்மகன்கிருபன்பேசருமினன்சுதன்முதற்
பாரொலிதரும்பெயர்கொள்வார்முகமழுங்கியணிபாழ்படமடங்கினர்களால். ()

ஆயவர்வரும்பரிசுதேறிநரனெண்கணைகளாலுலகொடம்பரமெலாந்
தேயுவெழவெங்கணைகள்கோடிகள்சொரிந்துசிலைநாணொலிசெயுந்திறலினன்
மாயமெனவும்பர்மனம்வாடினர்மயங்கிவருவாகினிகலைந்ததன்மேற்
சேயிதழ்கலந்தொலிசெய்வால்வளைபுயங்கநகர்சீர்கெடவெழுந்ததுடனே. ()

நாணொலிநரன்றனதுவால்வளைகறங்கொலிபணைகமணிதங்குமிரதம்
பூணொலிமருங்கணைகள்சேரொலியுடன்கதுவுபோர்முனையெதிர்ந்திடனெலாங்
காணருமருஞ்சமர்க்கோளரிபுகுந்தவழிகாய்களிறினம்படுவபோற்
சேணலகநின்றவரிலாரெதிர்தகைந்தவர்கள்சேனையிலருந்திறல்வலோர். ()

தேவரும்வியந்தனர்வலாரியும்புகழ்ந்துவமைதேடினன்சிறந்ததிறலார்
மூவருமகிழ்ந்தனர்கரதலந்தியங்கியதுமோதுவெம்பிரசண்டவுலவைக்
காவலன்கொடுங்கனலியாருநெஞ்சயர்ந்தனர்கள்காணுமங்கிருந்ததிறலோ
ரேவரும்படும்பரிசுகூறிலென்கனன்றுநரனேவுறுங்கொடுங்கணைகளால். ()

காவலனிருந்தபடையோடவரசன்றனதுகான்முளைபுகன்றமொழியாற்
கோவலர்செறிந்துநிரையூர்வழிதிரும்பவவர்கோல்கொடுசுலம்பமகிழ்வோ
டாவினமடங்கநனிவாலுயர்வுகொண்டவனியாகுலமடைந்துசிதறி
மாவலிகெடும்படிசெய்தோடியதெழுந்ததுகள்வாள்விழிதொறும்புதையவே. ()

வேறு.

முந்தவன்றொறுமீட்டலுமுற்கவர்பொதுவர்
வெந்தநெய்யெனவார்வமதடங்கினர்மிகவு
மந்தநெய்யினிற்பாற்றுளியுகுத்தெனவார்த்தார்
வந்தமச்சர்கோமகனுடன்வந்தகோவாலர். (உஅச)

பாலெடுத்தபொற்குடநிகர்மடியனபருவச்
சூலெடுத்தநல்வயற்றினமழவிடைதொடர்வக்
கோலெடுத்திளங்கோவலர்கூவினர்துரப்ப
வாலெடுத்தனதுள்ளிமீண்டோடினவனமே. (உஅரு)

கொண்டகோநிரைகோவலர்கொண்டுபின்போத
மண்டுதீயெழுவான்கணைமருங்குறப்போக்கி
யண்டர்நாயகனளித்தவன்முன்பெயர்ந்தடையார்
தண்டந்தீர்வுறநின்றனன்சார்ந்ததான்வனத்தில். (உஅசு)

முக்கணற்குநேர்நின்றவனிரைக்கணமுழுதுந்
தெக்கணத்திசைசேர்ந்தபின்றேரொடுந்திருகி
யக்கணத்துமுன்பவனியாளரசன்வாளரவின்
மிக்கவொண்கொடித்தேரினைநோக்கினான்விரைந்தே. (௨௮௭)

அனையகாலையில்வேந்தர்வேந்தணிநகர்செல்வான்
முனையின்முந்தினோனிடைபுகுமொய்ம்புடையுரவோன்
கனைகடுங்கணைக்கார்முகத்தோசையான்மயங்கி
நினைவுசிந்தியாங்கொருபுடைநின்றனனோக்கி. (௨௮௮)

கண்டுவெல்வலிக்கிணையிலான்கட்கடைசிவந்து
வண்டொலித்ததார்மச்சர்கோமகற்கிதுசொன்னான்
விண்டுநிற்பவன்வேந்தனுங்கவனெதிர்விரைதேர்
கொண்டுபோதியிக்கணத்தெனக்குறித்தனன்குறிப்பால். (௨௮௯)

மானமாமுடிமன்னரைவிலங்கவல்விரைந்து
தேனிமிர்ந்தெழுதொடைபுனைகொடிஞ்சியஞ்செழுந்தே
ரீனமாருதவேகமென்றிகழ்ந்திடவிடுத்தான்
பானல்வாவிசேர்மச்சர்பூபதிதருபாலன். (௨௯௦)

அந்தவேலையிற்றுரோணனையாதியரறிந்து
முந்துவேந்தனைத்தொடர்ந்தனன்முனைவலானென்னச்
சந்தனங்களாங்கிருந்துழிகடாவினர்தக்கோ
ரிந்திரன்சுதனேறுதேர்விரைவிவர்க்குளதோ. (௨௯௧)

வேகம்வற்றியநதியெனவிதநடைப்புரவிப்
பாகவற்றினைத்தலையறமலைந்துபாழ்படுத்தி
மாகவற்றினிற்பொய்த்தசூதாடியவஞ்ச
னாகவற்றியபுன்மொழிநிருபனைநக்கான். (௨௯௨)

உரியதேரினைமீதுகொண்டுத்தரன்செலுத்தக்
கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
புரியவாங்கியசிலையொடுமெதிர்ந்தனன்பொற்றேர்க்
கிரிகளாயிரஞ்சூழநிற்பவனைநேர்கிடைப்ப. (௨௯௩)

உருவினால்வடமேருவைக்கொடுமுடியொடித்து
வெருவவென்பெருந்தாதைநின்றாதையைவென்றான்
பரவநின்னையான்வெல்வனென்றவனிபன்பதாகை
யரவைமற்றவன்பதாகையிலனுமன்வந்தடுத்தான். (௨௯௪)

செருச்செயவான்வருசேனைவெண்டிரையையுங்கடப்பான்
பருச்சிலம்பினின்றுதைதருபானுவைப்போல
வுருச்செழுஞ்சுடரெறிப்பநின்றுலாவினனுண்மைக்
கருச்சுனன்றடந்தேர்க்கொடியாடையிலனுமன். (௨௯௫)

பாகும்வாசியுமமைந்ததோர்தேர்மிசைப்பாய்ந்து
மாகுரூழவுந்தப்பியவரிநிறமாப்போ
லேகுகின்றபேரிராசராசனையெதிர்தகைந்து
கோகுதட்டிடுதனஞ்செயனிவைபிலவகூறும். (உகசு)

வேறு.

* கார்முகங்கைத்தலத்திருப்பக்கைம்மிகு
போர்முகங்கண்டுநீபுறந்தந்தேகினு
லூர்முகக்களிற்றின்மேலுலாவுவீதியின்
வார்முகக்கனதனமாதரென்சொல்வார். (உசுஎ)

* இருபுறஞ்சாமரையிரட்டத்திங்கள்போ
லொருகுடைநிழற்றவிவ்வுலகம்நின்னதாய்
மருவலர்கைதொழவாழுகின்றநீ
பொருமுனைகாண்டலும்போதல்போதுமோ. (உசுஅ)

* உன்பெருந்துணைவரோடுன்னையோர்கணத்
தென்பெருங்கணைகளுக்கிரைகளாக்குவேன்
வன்பெருங்கொடிமிசைமடங்கலேற்றினேன்
றன்பெரும்வஞ்சினந்தப்புமேகொலாம். (உசுகூ)

* எங்களைக்கானில்விட்டிரவியேகவெண்
டிங்களைப்போனெடுந்திகிரியோச்சினீர்
சங்களைப்பயில்வளநாடன்றண்டினு
லுங்களைக்களப்பலியூட்டுநாளையே. (௩௦௦)

* இரவலரினையவரேத்துநாவலர்
விரவியதூதுவர்விருத்தர்வேதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங்
குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே. (௩௦க)

* பற்பலவுரையிவன்பகரும்வேலையிற்
சொற்பயினுன்மறைத்துவசன்வீடுமன்
கற்பகநிகர்கொடைக்கன்னனுதியோர்
மற்புயநிருபனைவந்துகூடினர். (௩௦உ)

தம்பியர்சிலர்முடித்தாயவேந்தர்கள்
நம்பியசகுனிநன்னுமவேலுடைத்
தம்பிநேர்விகர்னன்றுச்சாதனன்முதல்
வம்பவிழலங்கராவந்துதாங்கினர். (௩௦௩)

காரொலியேழ்பெருங்கடலினார்ப்பொலி
பேரொலியுளவெலாம்பெயர்ந்ததென்னவே
தேரொலிகரியொலிசேனைமாவொலி
பேரொலியுறவிருபுறத்துமூடினர். (௩௦௪)

ஆர்த்திருபுறத்தினுமாழியேதெனப்
போர்த்தவாகினிக்கிடைபொருந்துமங்கர்கோன்
வேர்த்தணிதிருநுதல்வெதும்பிச்சீறித்தன்
றேர்த்தனைக்கடவினன்றிசைகளுட்கவே. (௩௦௫)

* மின்னுடன்மின்மினிவெருளுமாறுபோற்
றன்னுடனிகரிலாத்தடக்கைவண்மையான்
மன்னுடனிகழ்வதுவார்த்தையன்றுநீ
யென்னுடன்மலைதிவந்தென்றுகூறினான். (௩௦௬)

* கரக்கமும்மதம்பொழிகாய்களிற்றைவிட்
டுரக்கொடுவரியின்மேலோடுமியாளிபோ
ணிரக்குமந்நிருபனும்நிற்கவந்தபோ
ரிரக்குமக்கன்னன்மேலிரதமேவினான். (௩௦௭)

இருவருமெதிரெதிரேற்குங்காலையிற்
பரிதிதன்மகன்றுணைப்படைஞர்சீறியே
பெருமைசேர்மடங்கன்மேற்பெற்றமெண்ணற
வருவபோலெதிர்ந்தனர்நரனைமாண்புளோர். (௩௦௮)

சித்திராங்கதனொடுவிகர்ணன்றெவ்வடு
சித்திரசேனன்சங்கிராமசித்துவே
சித்திரவீரத்துன்முகனொண்டுர்ச்சயன்
சித்திரநெடுஞ்சிலைகோலிச்சேர்ந்தபின். (௩௦௯)

பாய்வடிக்கணைகளைப்பரப்பிவானெலாங்
காய்கனற்பொலிதரக்கனன்றுநிற்றலாற்
சேய்நிகர்த்தெதிர்த்தவத்தேவர்கோமகன்
மாய்விவர்க்கிவணெனமனத்திற்றுங்கியே. (௩௧௦)

நிறங்கிளர்பெருஞ்சிலைவளைத்துநீண்மதித்
திறந்தருபிறைக்கணைசெலுத்துமுன்னரே
பிடங்குநாணொலியுடைப்பெருக்கங்காட்டலு
மறந்தவிர்ந்தஞ்சிமெய்ம்மயங்கினாரரோ. (௩௧௧)

மீட்டுமங்கவர்தெளிவெய்திவெஞ்சின
மூட்டுதீயெனவிழிசேப்பமுன்புகுந்
தீட்டுவான்கணைமழைசொரியவேந்தறன்
மாட்டினுங்கொடுங்கணைமழையெழுந்ததே. (௩௧௨)

சித்திராங்கதனொருசிலையுந்தேருமோ
ரத்திரமுனையினாலழிந்துமற்றவன்
கொத்தவிழ்சென்னியுங்குறைத்துப்போக்கினான்
கைத்திறற்கொருவனுங்கவுந்திகாளையே. (௩௧௩)

விரகுடைவிகர்ணனைவென் றுநீக்கியே
பரவுருசித்திரசேனன்பாரின்மே
லரவுருமாற்குலைந்தயர் தன்மானவே
சரவொலியாற்றரைசாய்த்துமீளவும். (௩௧௪)

கிளர்சினந்தணிவில்சங்கிராமசித்தவை
வளருடற்பிளந்துதுன்முகனைமாய்த்தெரீஇ
யளவருதுர்ச்சயன்சென்னியந்தரத்
திளவெயிலுமிழ்தரத்துணிசெய்தேற்றினன். (௩௧௫)

ஆடியவாகினிபரிதிமுன்னரி
னீடியபனியெனநீங்கியேங்கியே
யோடியகாலையிலுருத்துக்கன்னனுஞ்
சூடியவாகையன்றேரிற்றோன்றினன். (௩௧௬)

* இரதமுமிரதமுமெதிர்த்தபோதிரு
குரதுரகங்களுங்கூவியார்த்தன
வுரைதருபாகருமுடன்றுகூவினர்
விரைதனுவளைத்தனர்வீரர்தாமுமே. (௩௧௭)

வேறு.

அரியதமனியவரைகளெனவொளிருமிருமகிபரணைசிலைகடருகணைகளா
லுரியகடனிலைதவறியுலகுமொளிமறையவிரவுகமுடிவிலுறவெருவினர்
கரிகடிசைதொறுமுதவுகடகரடமறவரைகள்கதறொலிகள்பெருகியதரோ
தெரியனறைகமழ்சுரருமுலகிறைவர்பலருமதிசெயமிதினிலுள்கொலெனவே.

படகவொலியொடுமிரவிசுதனுதவுவிடமனையபகழிமழைவருவனவெலாந்
தடமகுடமொளிர்விசையனடுபகழிசொரிபொறிகடனிலரியபொடிவிரவின
மிடலுடையகடகரியின்மிசைபெயருமரிகுமரன்விடுபகழிமழையினியசெஞ்
சுடருதவுமொருமகவினரியசிலைபடுகொடியசுடுகணைகள்பொடிசெய்தனவால். ()

இருவரிவரிகன்மலையவிரவிதருசுதனொருபதெரிகணைகள்வலவன்மிசையும்
பொருகணைகளொருபதுடனிருபதவனிரதமிசைபுரவிகளின்மிசையிருபதும்
பெருவலியனுபர்விசயன்மிசைகணைகள்சதமுகொடிபெயருமுனருதவலவனங்
கொருகணையில்வருகணைகள்பலவுமடுவனகருதியுறுமமரர்பரவினர்களால். ()

நானிரவிமகனிரதமிசைபுரவி மிசைவலவனனிசெய் புயமிசைசெலவிடுஞ்
சரமழைகளிவனுமனுவினிலரியபொடிபடல்செய்தகமைவலிசிலர்பரவினர், வி
ரவுமவர்விழிபுதவுகன லுமுருள்களினுதவுமிகுகன லுமவர்கணைகள்வாய், சொ
ரிகன லுமினியதெனவவர்வெகுளியுரையிலெழுசுடர்செய் கனல்முடுகியதரோ.

அதுதெரியுமமரர்பதி மகனுமிவனமர்செய்வலி யதையுணரமுதுசினமெழுந், திதுவரையிலுனதுசமர் நிலைதெரியும்வகைபொறைசெய் திகன்முனையிலுனைநிறுவினேன், கதுவுமினியொருகணையி லுலகறியவபமடைதல் கருதியுணர்கெனமுறைபகர்ந், ததிவிரைவிலிருகணைகள் புகவுதவிபிரவிசுதனரியசிலை தாணிசெய்தனனே. (௩௨௨)

பகருமொருகிரிபிளவு படுதலெனவொளிசெய்சிலை படபடெனமுறியவடலை, புகலுதையனருள்சுதனு நகைபிறழவிருவிழிகள் பொழிபொறிகள்முகில்கொளுவவே, தகர்சிலையையுகவிசிறி வலிகெரிலரியசமர் தருமெதிரிமிசைகனல்செப்லேவற், செகமதிரவெறிதரலு முழுமதியின்மிசைபரவு செறிசெயலினனுகியதரோ. (௩௨௩)

அரவெழுதுமுயர்துவச னுடனரசர்பலர்விசய னடனெறிதுமினியிவனெனு, விரவுநிமைதருகிலர்கள் தமையுமுணர்கிலர்தமது விழிமலர்கள்பொதுளியதரோ, பரவுகவியெழுதுகொடி யிரதன்வரிசிலையிலெழு பகழிமுனைகளிலுறுசெவ்வேற், சுரருமகிழ்பெறவனுவி லரியபொடிசெயவுலவை துகளையிவர்புடையுதவலால். (௩௨௪)

தனதெஃகமழிதரலு முதவுகொடைவிரதனுயர் தனுவுமறுதலைநிறுவியே, மனதின்மிக்வயிரமெழ வெதிரணுகியாகில்சமர் மலையவரிதருகுமரனும், புனிதவிரணியவொளிசெய் சகடிரதம்வயவலவர் புரவிபலபொடியுறல்செய்தே, யினதனையனுடலிலணி கவசமுறுமலிதுகள்செய் திவைசிலசொனரனுரைசெய்தான். (௩௨௫)

நிறையறிவிலரசவையி லமரிலெனைநிகர்வலிகொ ணிருபரிலையெனவுரைசெய்வாய், குறைவில்வலியுடையவரிலமர் பொருவைவெரினுதவுகொடையு முனதிடையுளதுகா, ணிறைமகிழநெறிதவறு மொழிகுளறியவணிதனி லினியநலனுறலழகலாற், பிறைமுனைசெயடுபகழி தருசமரிலிகன்மலைதல் பிழையறவுமழவிடையனாய். (௩௨௬)

கருமநெறிதவறுமெனமுரசெழுதுதுவசன்மொழி தரவரவுதடைபடுதல்போற், கருமமுளமகுடமுடி யரசவைபினழறனையை கவலைபடுமிடைபொறைசெய்தேன், பெருமன்விழிமலரனைய பொழுதுசிறிதசையிலுயர் பெயர்புகலவுயிர்பெறுவையோ, வெருவியரியடிபரவு மடவரலைநகைசெய்தற வெகுளுமிசைகெடுசுமடனே. (௩௨௭)

பருகுபுனலொழியநிரு பனையமரிலிளைஞரொடு பவனன்மகனடுவனெனவே, கருதியுரைசெயுமளவி லுனதுயிரையெனதுகணை களிலடுவனெனவுரைசெய்தேன், செருமலைதனுணர்வையெனி லமர்பொருதுனுயிர்விடுதி சிறிதுபகலுறநினைவதே, லொருகணையிலுனதுசிர மிருபிளவுபடுமுனுன துடல்கொடகல்கெனவுரைசெய்தான். (௩௨௮)

வேறு.

பாதித்தலங்கொளுமையோடுமெர்கைவிடைமீதுவந்துடாரச்
சாதித்தயோகிமொழிவந்திரண்டுசெவியூடுசாருமளவி
லாதித்தன்மைந்தனிருகண்கள்போலவனல்காலுயிர்ப்புமலியச்
சோதித்தடங்கையொலிசெய்துசாலநகைசெய்தகன்றுதுணிபால். (௩௨௯)

வரையொத்தசேமவிரதத்திலேறிமணிமிக்கவேமகவசங்
கரையற்றகன்றமலர்மார்பினூடுகவினத்தரித்துநெடுநாண்
டிரையொத்திலங்குசிலையைத்தடங்கைசெறிவித்தடைந்துசெருவாய்
விரையப்புகுந்துநரனைத்தகைந்துவிறலிற்கொடுஞ்சொன்மொழிவான். (௩௩௦)

பல்லோருமுன்னைநகைசெய்யநாடுபகைஞர்க்களித்துனுயிர்கொண்
டல்லாரவத்தினிடைநாளகற்றவறிவாயலாதுசமர்வாய்
வில்லாளரோடுமெதிர்நின்றுபோரில்விறலெய்துவீரதருமம்
வல்லாய்கொனீயுமறிவாரில்வந்தமகவானளித்தமதலாய். (௩௩௧)

தன்னாடுகொண்டுமனைமாதையீர்த்தசமயத்திலாதமறமிங்
கென்னாலடைந்ததுளவேனுநீகொலெனைவென்றுவாகைபுனைவாய்
மன்னாலுயிர்ப்பின்மகனீயெனம்பில்வசையோடுமாவிகழலப்
பொன்னாடுமேவுநாள்வந்ததென்கொல்புகலுங்கொடுஞ்சொலினிமேல். (௩௩௨)

வெல்லும்புயத்தின்வலியன்றெளித்துவிறல்கெட்டதெந்தன்மிசையாஞ்
சொல்லுங்கணத்திலினியேனும்வென்றுதுணிபாகவாகைபுனைவாய்
வில்லுஞ்செலுத்திரதமுங்கலைத்தவிரகாலுரைத்தபடியோ
கொல்லுங்கயத்தையரிகண்டிடைந்துகுறுகிற்பிளக்தலுணர்வாய். (௩௩௩)

சொல்வண்மையென்னபயனென்றுரத்தொடானியோடதட்டிவெகுளா
வில்வண்மைகாட்டியிரவிக்குதித்தவிறன்மீளிசாலவிசையாற்
பல்வன்மைவாளிபொழியச்சிறந்தபலதேயவேந்தர்முனைபுக்
கல்வண்மைகாட்டுமழல்வாளிகோடியரிமைந்தன்மீதுதையினர். (௩௩௪)

நனிபட்டசேனையுடனெண்ணிலாதநரபாலர்வந்துகதுவத்
தனிபட்டசியமெனநின்றகாளைதனுவிற்சொரிந்தகணையாற்
றுனிபட்டவாழியிடைவந்தெழுந்தசுடர்முன்னர்வந்துநிமிரும்
பனிபட்டசெய்கைபட்டார்களன்றியெவர்புண்படாதுபடர்வோர். (௩௩௫)

வருசேனைசிந்தியிரியத்திகழ்ந்தமார்த்தாண்டன்மைந்தனெதிராக்
குருசேனைமன்னர்பலரன்புகூரவழல்வாளிகோடிகொளுவி
யொருசேனைசையமிசைகாலெறித்ததுவமானமென்னவுதவப்
பொருசெய்தனுதுகணையிற்பிளந்துபொய்யென்னநின்றபொழுதில். (௩௩௬)

வேறு.

கொடையாலேபெயர்விளக்குங்கொற்றவனுமூவுலகுங்குறிக்கும்வெற்றிப்
படையாலேபெயர்விளக்கும்பாண்டவனைமீண்டுமமர்பயிற்றும்போதிற்
றடையாயிங்கிவனுடன்போர்தரிப்பதுளம்விருப்பறவோர்சரத்தினாலே
புடையாருமணிக்கவசம்பொடியுறச்செய்துமுழுதும்புண்செய்தானே. (௩௩௭)

அதுதெரியுமமரர்பதி மகனுமிவனமர்செய்வலி யதையுணரமுதுசினமெ
ழுந், திதுவரையிலுனதுசமர் நிலைதெரியும்வகைபொறைசெய் திகன்முனையிலு
னைநிறுவினேன், கதுவுமினியொருகணையி லுலகறியவயமடைதல் கருதியுண
ர்கெனமுறைபகர்ந், ததிவிரைவிலிருகணைகள் புகவுதவியிரவிசுதனரியசிலை து
ணிசெய்தனனே. (௩௨௨)

பகருமொருகிரிபிளவு படுதலெனவொளிசெய்சிலை படபடெனமுரியவட
லே, புகலுதையனருள்சுதனு நகைபிறழவிருவிழிகள் பொழிபொறிகள்முகில்
கொளுவவே, தகர்சிலையையுகவிசிறி வலிநிகரிலரியசமர் தருமெதிரிமிசைகனல்
செய்வேற், செகமதிரவெறிதரலு முழுமதியின்மிசையரவு செறிசெயலினனு
கியதரோ. (௩௨௩)

அரவெழுதுமுயர்துவச னுடனரசர்பலர்விசய னடனெறிதுமினியிவனை
நு, விரவுநிமைதருகிலர்கள் தமையுமுணர்கிலர்தமது விழிமலர்கள்பொதுளிய
தரோ, பரவுகவியெழுதுகொடி யிரதன்வரிசிலையிலெழு பகழிமுனைகளிலுறுசெ
வ்வேற், சுரருமகிழ்பெறவனுவி லரியபொடிசெயவுலவை துகளையிவர்புடையுத
வலால். (௩௨௪)

தனதெஃகமழிதரலு முதவுகொடைவிரதனுயர் தனுவுமறுதலைநிறுவியே,
மனதின்மிகவயிரமெழ வெதிரனுகியளகில்சமர் மலையவரிதருகுமரனும், புனி
தவிரணியவொளிசெய் சகடிரதம்வயவலவர் புரவிபலபொடியுறல்செய்தே, யி
னதனையனுடலிலணி கவசமுற்றுமலிதுகள்செய் திவைசிலசொனரனுரைசெய்
தான். (௩௨௫)

நிறையறிவிலரசவையி லமரிலெனைநிகர்வலிகொ ணிருபரிலையெனவுரை
செய்வாய், குறைவில்வலியுடையவரிலமர் பொருவைவெரினுதவுகொடையு மு
னதிடையுளதுகா, ணிறைமகிழநெறிதவறு மொழிகுளறியவனிதனி லினியநல
னுறலழகலாற், பிறைமுனைசெயடுபகழி தருசமரிலிகன்மலைதல் பிழையறவும
ழவிடையனுய். (௩௨௬)

தருமநெறிதவறுமென முரசெழுதுதுவசன்மொழி தரவரவுதடைபடுதல்
போற், கருமமுளமகுடமுடி யரசவையினழறனையை கவலைபடுமிடைபொறை
செய்தேன், பெருமன்விழிமலரனைய பொழுதுசிறிதசையிலுயர் பெயர்புகலவு
யிர்பெறுவையோ, வெருவியரியடிபரவு மடவரலைநகைசெய்தற வெகுளுமிசை
கெடுசுமடனே. (௩௨௭)

பருகுபுனலொழியநிரு பனையமரிலிளைஞரொடு பவனன்மகனடுவனென
வே, கருதியுரைசெயுமளவி லுனதுபிரையெனதுகணை களிலடுவனெனவுரை
செய்தேன், செருமலைதனுணர்வையெனி லமர்பொருதனுயிர்விடுதி சிறிதுபக
லுறநினைவதே, லொருகணையிலுனதுசிர மிருபிளவுபடுமுனுன துடல்கொட
கல்கெனவுரைசெய்தான். (௩௨௮)

வேறு.

பாதித்தலங்கொளுமையோடுமெங்கைவிடைமீதுவந்துடரச்
சாதித்தயோகிமொழிவந்திரண்டுசெவியூடுசாருமளவி
லாதித்தன்மைந்தனிருகண்கள்போலவனல்காலுயிர்ப்புமவியச்
சோதித்தடங்கைபொலிசெய்துசாலநகைசெய்தகன்றுதுணிபால். (௩௨௯)

வரையொத்தசேமவிரதத்திலேறிமலிமிக்கமேவமகவசங்
கரையற்றகன்றமலர்மார்பினூடுகவினத்தரித்துநெடுநாண்
டிரையொத்திலங்குசிலையைத்தடங்கைசெறிவித்தடைந்துசெருவாய்
விரையப்புகுந்துநரனைத்தகைந்துவிறலிற்கொடுஞ்சொன்மொழிவான். (௩௩௦)

பல்லோருமுன்னைநகைசெய்யநாடுபகைஞர்க்களித்துனுயிர்கொண்
டல்லாரவத்தினிடைநாளகற்றவறிவாயலாதுசமர்வாய்
வில்லாளரோடுமெதிர்நின்றுபோரில்விறலெய்துவீரதருமம்
வல்லாய்கொனீயுமறிவாரில்வந்தமகவானளித்தமதலாய். (௩௩௧)

தன்னாடுகொண்டுமனைமாதையீர்ந்தசமயத்திலாதமறமிங்
கென்னாலடைந்ததுளவேனுநீகொலெனைவென்றுவாகைபுனைவாய்
மன்னாலுயிர்ப்பின்மகனீயெனம்பில்வசையோடுமாவிகழலப்
பொன்னாடுமேவுநாள்வந்ததென்கொல்புகலுங்கொடுஞ்சொலினிமேல். (௩௩௨)

வெல்லும்புயத்தின்வலியன்றெரித்துவிறல்கெட்டதெந்தன்மிசையாஞ்
சொல்லுங்கணத்திலினியேனும்வென்றுதுணிபாகவாகைபுனைவாய்
வில்லுஞ்செலுத்திரதமுங்கலைத்தவிரகாலுரைத்தபடியோ
கொல்லுங்கயத்தையரிகண்டிடைந்துகுறுகிற்பிளத்தலுணர்வாய். (௩௩௩)

சொல்வண்மையென்னைபயனென்றுரத்ததொனியோடதட்டிவெகுளா
வில்வண்மைகாட்டியிரவிக்குதித்தவிறன்மீளிசாலவிசையாற்
பல்வன்மைவாளிபொழியச்சிறந்தபலதேயவேந்தர்முனைபுக்
கல்வண்மைகாட்டுமழல்வாளிகோடியரிமைந்தன்மீதுதைபினார். (௩௩௪)

நனிபட்டசேனையுடனெண்ணிலாதநரபாலர்வந்துகதுவத்
தனிபட்டசீயமெனநின்றகாளைதனுவிற்சொரிந்தகணையாற்
றனிபட்டவாழியிடைவந்தெழுந்தசுடர்முன்னர்வந்துநிமிரும்
பனிபட்டசெய்கைபட்டார்களன்றியெவர்புண்படாதுபடர்வோர். (௩௩௫)

வருசேனைசிந்தியிரியத்திகழ்ந்தமார்த்தாண்டன்மைந்தனெதிராக்
குருசேனைமன்னர்பலரன்புகூரவழல்வாளிகோடிகொளுவி
யொருசேனைசையமிசைகாலெறித்ததுவமானமென்னவுதவப்
பொருசெய்தனாதுகணையிற்பிளந்துபொய்யென்னநின்றபொழுதில். (௩௩௬)

வேறு.

கொடையாலேபெயர்விளக்குங்கொற்றவனுமூவுலகுங்குறிக்கும்வெற்றிப்
படையாலேபெயர்விளக்கும்பாண்டவனைமீண்டமர்பயிற்றும்போதிற்
றடையாயிங்கிவனுடன்போர்தரிப்பதுளம்விருப்பறவோர்சரத்தினாலே
புடையாருமணிக்கவசம்பொடியுறச்செய்தாரமுழுதும்புண்செய்தானே. (௩௩௭)

மீளவிருகணையாலேகச்சைநெடுங்கொடிதுணித்துவிருதுபேசுங்
காளவனற்கட்கடையான்கதிர்முடியுமதாணிகளுங்கணையானீக்கி
வாளமரிற்றலைப்பட்டோர்குலைந்தோடநெடுஞ்சிலையுந்துணித்துமாற்றி [ன்.
மூளுமழற்கடுஞ்சினத்தான் மொய்ம்பிணைகள்கடுஞ்சரத்தான் மூழ்கச்செய்தா

தன்றுசிலைமுரிந்தகலக்கன்னன்மணியிழந்தரவுதளர்வதேபோன்
மனதுதளர்ந்தக்கணத்தோர்வரிசிலைகொண்டிகலிரவிமதியுமுட்கப்
புனிதமுறுகடவுளரும்பெரிதுவப்பச்சிறுபொழுதுபுரிந்தபின்ன
ரினிதனும்பங்குனன்சரத்தாலெடுத்தசிலைகணத்தினடுவிற்றதாலோ. (௩௩௯)

வட்டவரிச்சிலைமுரியவெழுந்தார்த்தோர்குடைனயவழுவிறண்ட
மட்டதிசைகளுந்துளங்கவரிமகனங்கரிமகன்மேலடர்த்துவீசத்
தொட்டகணையொன்றாலேயோரனந்தந்துணியாகிச்சூழ்ந்தசேனை
பட்டிரியத்திசைதோறும்பாய்ந்ததல்லாற்றேரவன்மேற்பட்டதின்றே. (௩௪௦)

முரிந்துகதைபொடிபடவுமுயிர்ப்போங்கவிருந்தவனைமுறுவல்வாய்ப்பத்
தெரிந்தகணைநாலிரண்டுசெலுத்தியவன்பொறுத்திருந்ததேருமாவும்
பரிந்தவிறற்சாரதியும்படநூறித்தெழித்தளவிற்பாரிற்பாய்ந்து
கரிந்துமுகவெல்லழியக்கைவேல்கொண்டமர்புரிந்தான்கன்னனென்போன். ()

கரமொளிர்செங்கதிர்மைந்தனெதிரெய்தவொருநொடியிற்கணைகள்போக்கி
வரமொளிருந்தனஞ்சயனுமத்தோனுமத்தோன்றன்மார்புந்தோளுந்
திரமொளிருஞ்செழுஞ்சோரிசொரியமயிர்க்காறுஞ்செறிப்பமாழ்கிச்
சரமொளிருங்குலவரைபோற்றரணித்தேர்மீதிருந்தான்சலித்துமன்றே. ()

ஈடுபடுமதயானையெனநின்றகன்னனைக்கண்டிராங்காணுகித்
தோடுபடுநறுந்தெரியற்சுரராசன்மகனழன்றுசொரியும்வாளி
காடுபடுசெந்தழலிற்கன்னனுரனுதல்குளிப்பக்கருதாணுகிப்
பீடுபடுமாற்றலகன்றேடினுனுத்தரன்கைபெயர்த்துநக்கான். (௩௪௩)

அஞ்ஞானவிரகுணருமரசுமவன்றனக்குறுதியறைவோராரு
மெஞ்ஞான்றுமரசுநமக்கெய்தாகொல்லெனத்தராரவிரவிநேரும்
விஞ்ஞானவாசிரியன்வீடுமனுதியர்புயங்கள்விண்மீதோங்கச்
செஞ்ஞாயிறளித்தபிரான்றிறலழிந்துபுறந்தந்தான்செருவினம்மா. (௩௪௪)

ஏமத்தேர்வல்லவரிலெனக்கிணையானவரிலையென்றெடுத்துக்கூறுந்
தாமத்தேர்தனிக்குரிசிற்பூமித்தேர்மிசைவிரைந்ததன்மைகாணு
வாமத்தேர்மிசையிவுளித்தாமப்பேர்புனைந்திருந்தமதுகைமைந்தன்
சேமத்தேரொடுவிரைந்துகன்னனைப்போய்க்குறுகியிவைதெரிப்பதானுன். ()

வந்ததொருதேரென்றும்வரிசிலையோன்றமியென்றும்வலிகள்பேசி
முந்தியனுற்படையுடன்போயடலமரிற்றலைப்பட்டுமுனைந்தாயன்றே
வுந்தனடுசிலையெங்கேமுடியெங்கேவாவுறுகொய்யுளைத்தேரெங்கே
தந்திரவாகினியெங்கேயுனதுபெருமிதமெங்கேசாற்றுவாயால். (௩௪௬)

மாறுகிப்புகுந்தவரைவானாளவிடுத்துவலம்புரித்தாரோனைப்
பேறுயிப்புவிபாக்கும்பெருஞ்செல்வத்தையைப்பனென்பபெரிதுகூறிச்
சேறுயநினைத்தினுஞ்செஞ்சோரிநதிநீச்சினுநீசேறலென்னே
தேறுருக்குவட்புதவிச்செல்வனுக்குத்துயர்கொடுபோஞ்செவ்வியோனே.

வேறு.

சொல்லலாமிருந்துழிசொன்னசொற்படி
வெல்லலாமென்பதுவிதிக்குங்கூடுமோ
மல்லலாளியைப்பலவளைந்துகொள்ளினுங்
கொல்லலாயிருக்குமோகுஞ்சரங்களால். (௩௪௮)

வேறு.

என்றுபலமொழியிவனுமெடுத்தியம்பயாதொன்றுமிசையனாகிக்
குன்றுபடுகளேபரங்கள்குவிந்தபுறத்தொருதமியாக்குறுகிநின்றான்
மன்றல்கமழ்புண்டரிகமால்வரைத்தோண்மைந்தனவன்மருவானாகிச்
சென்றுதனித்தந்தையொடுஞ்சேர்ந்தனனிப்பாலடுத்தசெயல்கள்சொல்வாம்.

ஆடுகொடிக்கொடிஞ்சியந்தேர்மிசையிருந்தவுத்தரனையருளானோக்கிப்
பீடுசெறிதனஞ்சயன்மற்றிவையுரைத்தானிரவிமகன்பின்னிட்டானாற்
காடுபடுபெருஞ்சேனைகலப்பமிடைந்தெதிரேற்றகாவல்வேந்தர்
தோடுபடுமலர்த்தோளாய்நீயுணரும்வகைவிரிப்பன்றுணிவிற்கேண்மோ. ()

தாலநெடுங்கொடித்தேரோன்வெஞ்சமரிலொருவனெனத்தக்கோன்சால
ஞாலமெலாங்கொண்டாடுங்குலக்குரவனீன்றவன்பானலத்தைப்போக்கி
வாலவயதினிலின்பங்கைவிட்டுமெய்விரதவழியினின்றான்
காலனிவன்கருதுதினத்தன்றிவரானெனவுணர்திகருத்தான்மிக்கோய். ()

படியுடையபாஞ்சாலனகமொழித்தோனெக்கலையும்பயனோடாய்ந்தோன்
கடியுடைவானவர்கணைகள்கைக்கொண்டான்சிலைமறைநூல்கற்றகோமான்
முடியுடையதேவர்களுமுனிவருந்தொழும்பதத்தான்முறைசேர்வேதக்
கொடியுடையதேர்மீதிலிருந்தவனாசிரியனெனக்குறிக்கொள்வாயால். ()

தவமதனினிறையறிவிற்சாகதத்தின்மறநூலிற்றனுவேதத்திற்
குவலயமெலாமதிக்குங்குணநிதியாங்கிருபனெனுங்குரவனுமாற்
கவனமுடைமான்றேரிற்கண்ணருளுஞ்சிறுநகையுங்கவினிலோங்க
பவளமலைபோற்கங்கைபயந்தவன்றனருகிருக்கும்பணைசெய்தோளான். ()

காமனெனச்சிலர்கதிர்வேற்கந்தனெனச்சிலர்களங்கில்கலையான்மிக்கச்
சோமனெனச்சிலர்பரசுராமனெனப்புகழ்ந்தேத்துந்தோற்றமுள்ளோன்
சேமனருள்பெறுகாளையுலகொருமூன்றையுங்கணத்திற்செயிக்கும்வாசித்
தாமனவனாசரியன்றரும்புதல்வனெனவுணர்திதவத்தான்மிக்கோய். (௩௫௪)

மற்றிவர்களால்வருமென்மாட்டரியபேரன்புமல்குந்தூயோர்
குற்றமறுசிலைவலியோராயினுமாங்கவரையமர்குறிப்பதென்னே
பற்றலனுமரசனுடன்படர்ந்தவரைப்படநூறிப்பகழியொன்றால்
வெற்றிபெறுவதுநமக்குவிலக்கரியபெருந்திறலாம்விளம்பக்கேண்மோ. ()

தொல்லரசர்பலர்காணச்சூதிழைத்தநாள்வஞ்சந்தொடுத்தபாவி
யல்லவனேகாந்தாரத்தரசுதனிச்சுபலன்மகனறிவாயாங்கு
வில்லினெடுபொருதேரின்மிசையிருந்தோன்விரகுணர்துச்சாதனனென்றே
சொல்லுமரசனுக்கிளைஞனிவனுருமாதுகுழற்றொட்டீர்த்தோனே. (௩௫௬)

நூற்றுவரோடுடன்பிறந்ததுச்சளையைவேட்டகதிர்நனிவேற்காளை
யேற்றுசயத்திரதனிவனென்றுணர்வாயாங்கவன்வேந்திளைஞர்தம்மிற்
போற்றுநெறிமுறைதவருப்புண்ணியனும்விகர்னனெனப்புகல்வரேனோர்
மாற்றரியதாரகையின்மல்கிளைஞர்பலரவராய்மதிக்கொள்வாயால். (௩௫௭)

தத்துபரிதேரிலுறுதனிக்குரிசிலிவன்சோமதத்தனுமாற்
சித்திரவில்வளைப்பவனச்சுவசேனனெனவுணர்திதேயவேந்த
ரித்திசைநின்றவர்பலருமினியிவரைக்குலைந்தோடவிகல்செய்தின்னே
மத்தினலைகடற்போலமறுக்கமுறப்புரிவனினிமனங்கொளென்றான். ()

வேறு.

உத்தரன்றனக்கிவ்வண்ணமுளக்கருத்தறியவோதி
மித்திரர்பகைஞரென்றுமியற்கையும்விரித்தபின்னர்
சுத்தரையொழிந்தோனைத்துரக்குமாறுகத்தோன்றி
யித்தடந்தேரூர்கென்றானுரைக்குமுனிரதமுய்த்தான். (௩௫௯)

தோன்றறன்கருத்தும்பொற்றேர்தொடர்ந்துசெல்கதியுநோக்கி
யான்றகேள்விகளான்மிக்கவருமறைத்துவசம்பெற்றோ
னீன்றவன்மகவைநேருமியற்கையினிடையிற்சென்றே
யேன்றமர்புரிவானுன்னியிரதமீதுந்தினானே. (௩௬0)

*உந்துதேர்முனியையந்தவுதிட்டிரனிளவனோக்கிச்
சிந்தையாலன்புகூரச்சேவடியிறைஞ்சியேத்தி
யந்தணரரசேயுந்தனருளினாலடைவிநீங்கி
வந்தனமென்றுசிற்சில்வாசகமியம்பினானே. (௩௬௧)

*ஏதுமொன்றறியாவென்னையிவனலாதிலையென்றிந்த
மேதினிமதிக்குமாறுவின்முதற்படைகள்யாவுந்
தீதறத்தந்தவுண்மைத்தெய்வநீயென்றாற்பஞ்ச
பாதகந்தன்னிலொன்றுன்பதயுகம்பிழைப்பதையா. (௩௬௨)

* மன்னொடுசூழநின்றமாசுணமுயர்த்தகோவை
மின்னொடுமுருமேமென்னவெகுண்டமர்புரிவதல்லால்
நின்னொடுங்கிருபனோடுநின்மகனோடுமுந்தை
தன்னொடும்பொருதும்வெம்போர்தக்கதேசரதம்பாவம். (௩௬௩)

* அம்முனிதன்னோடிவ்வாறருச்சுனன்புகலவல்விற்
கைம்முனிவனுஞ்செஞ்சோற்றுக்கடன்கழித்திடுதல்வேண்டுந்
தெம்முனைமதியாவீரர்தேவர்தம்பகைநீவென்ற
வெம்முனைகாணுமாறுவில்வளைத்திடுகவென்றான். (௩௬௪)

* குருவுமக்குருவைத்தப்பாக்குருகுலக்கோவுந்தங்க
ளருவரைத்தோளினொலியறைதரப்பிறையில்வாங்கிக்
கருவுயிர்த்தெழுந்தகாலமழைமுகில்கால்கொண்டென்ன
ஒருவருக்கொருவர்வாளியோரொருகோடியெய்தார். (௬௬௫)

* அதிரதர்தம்மையெண்ணிலணிவிரன்முடக்கவொட்டா
முதிர்சிலைமுனியும்வீரன்முனிவிலாமுகனும்விட்ட
கதிர்முகப்பவனவேகக்கடுங்கொடும்பகழியாவு
மெதிரெதிர்கோத்ததல்லாற்பட்டிலவிருவர்மேலும். (௬௬௬)

பருணிதர்மகவான்செந்தீப்பண்ணவன்பரிதியிந்து
வருணனையாதியாயவானவர்கணைகளெல்லா
மருணவெம்பரித்தேரோனுமரிக்கொடித்தடந்தேரோனு
மிரணியதலத்தோரேத்தவெதிரெதிரேவியார்த்தார். (௬௬எ)

தேரொலிசெய்பகாரிச்சிலையொலிசெய்யமார்பிற்
றாரொலிசெய்யக்காலிற்றருங்கழலொலிகள்செய்யப்
பாரொலிசெய்யுநாமத்திருவர்வெம்படைகளேவப்
பேரொலிபிறந்ததண்டப்பித்திகையளவுகாறும். (௬௬அ)

தேனுறுமலங்கல்சூடுஞ்செஞ்சிலைக்குருவுஞ்செந்தீ
மானுறுநயனத்தோனுமாறுமாறேவுமம்பான்
மீனுறுவேலைநீரும்விரிந்தபாதலத்துநீரும்
வானுறுகங்கைநீரும்வறழ்ந்தனவென்பமன்னோ. (௬௬௯)

துத்தியஞ்சுடிகைநாகந்துளங்கமாதிரங்களெட்டு
முத்தரகிரியுமீரேழுலகமுமுட்கவானிற்
கொத்துறுமுடுக்கள்சிந்தக்கொடுஞ்சமர்புரிந்தாரென்னி
லித்தகையாயபோரென்றூர்கொலோயியம்பவல்லார். (௬எ0)

ஆரணமுனிவன்சேனையார்கலியென்னப்பொங்கி
வாரணவாகன்மைந்தன்வலிகொடேர்சூழ்ந்துசுற்றிக்
காரணமென்னோவென்றுகலங்கவாளமர்செய்காலை
நாரணனனையகுந்திநந்தனனகைசெய்தானே. (௬எக)

மட்டில்பேரழல்செய்வாளியொன்றின்மேலொன்றுமாட்டி
யெட்டுணைப்பொழுதின்முன்னரெதிர்ந்தநாற்படையுங்காதி
யட்டனன்குருதிவெள்ளம்புரண்டதாலவனிமீதிற்
கிட்டியாசிரியன்கண்டுநின்றனன்கேதமுய்ப்பான். (௬எ௨)

தானைநால்வகையுஞ்சிந்தித்தன்பெருங்கணைகட்கெல்லா
மேனையகணைகள்போக்கியிடையிடைதுணித்தனோக்கி
மானையங்கரத்திற்கொண்டோனிவன்முனைமருவலாற்றான்
சோனைபோற்சொரியும்வில்லான்றுணிபினையுணரினென்றான். (௬எ௩)

* வண்டுதான்முரலுங்கஞ்சமாலையான்பயிற்றுவித்துப்
பண்டுதான்கண்டகூற்றிற்பதின்மடங்குயர்ந்தபண்பான்
மிண்டுதானவரைவென்றவிறலுடைவிசயன்வின்மை
கண்டுதானவன்றனோடுகற்பதற்குன்னினனே. (கூஎச)

* ஏறுதேர்முரியவேதமெழுதியதுவசம்வீழத்
தாறுபாய்புரவிநான்குஞ்சாரதிதலையுஞ்சிந்தக்
கூறுபோர்நாணியற்றுக்குனிசிலைதுணியப்பின்னோர்
மாறுகோற்றொடுக்கவெள்கிமறையவன்முதுகிட்டானே. (கூஎரு)

* தந்தைபோரழிந்துபோனசரபலங்கண்டுவெம்பி
யிந்திரன்மதலையோடுமெதிர்ந்தனனிவுளித்தாமா
தந்தனர்புலிங்கசாலந்தருபெருங்கடவுட்டீமுன்
வந்தெழுமாலகாலத்தீயினைமானுமீரான். (கூஎசு)

வாசியின்மீதுநூறுவலவன்மீதிரட்டிமற்றும்
பாசிலைமேனியான்மீதாயிரம்பகழிபோக்கித்
தேசினிற்சிறந்தசீயக்குருவைபோற்சீறிநின்றான்
வாசவன்முதலவானோரற்புதமலியமாதோ. (கூஎஎ)

மேல்வருகணையும்வாசிமீதணிவலவன்மேனிப்
பால்வருகணையுந்தூளிற்கழிந்திடப்படுத்திவெய்ய
கோலிருபஃதுதொட்டேகுமரன்றேர்க்கொடிதுணித்தான்
கால்வருநெடுவிற்றுங்குந்தனஞ்சயனென்பமன்னோ. (கூஎஅ)

நெட்டிலைவயிரவாளிநேர்ந்தணிநுதலில்வீர
பட்டமுந்துணித்துநீக்கிப்பங்குனன்கரத்தின்மல்கு
மட்டறுகாண்டிபத்தில்வாய்த்தவான்குதையும்போக்கி
முட்டிநின்றனந்தமம்பான்முடிஞன்வீடிலாதோன். (கூஎகூ)

தேசிகன்மைந்தன்செய்தசேவகங்கண்டுநக்கு
வாசவன்மகனும்வேறோர்வான்குணஞ்சிலையின்மாட்டிக்
காய்சினங்கதுவக்கோடிகடுங்கணைசெலுத்தலானன்
பூசுரன்மகனுங்கோடிபுங்கவம்போக்கினானே. (கூஅ0)

மாசுணக்கொடியோன்சேனைவாரிதிமதிகண்டென்னத்
தேசுடையாசான்மைந்தன்செருத்தொழில்புகழ்ந்துநின்றார்
வீசுமெண்டிசையும்பாரும்விண்ணுமந்தரமுமெங்கு
மாசற்விருவர்தூவுமம்பினான்மறைந்ததம்மா. (கூஅக)

மற்புயவாசான்மைந்தன்மலிகணைப்புட்டிற்றங்கு
மற்புதக்கணைகளியாவுமகலவாதுலனாய்நின்றான்
முற்பவமுறையாற்செல்வமூர்க்கர்பாலிடையினெய்திப்
பற்பல்வகந்தைநல்கிப்பயன்படாதகறலேபோல். (கூஅஉ)

அரிதருகுமரன்மாளாத்துணிபெற்றவிரும்வாற்று
லெரிகணைப்பலவுமுன்போனிறைவுறவெய்திநின்றான்
றெரிதமிழ்க்கவிகளான்குந்தேர்ந்தநற்புலவோர்சிந்தை
விரிவுறச்சுரக்குஞ்செய்யுள்விருத்திபோல்விளங்கமன்னோ. (௧௮௧)

மறுப்படாவயவெஞ்சியக்குருவைபோல்வலியதேர்மேற்
சிறப்பொடுநின்றவாசான்மகன்செயறோர்ந்தோவென்றித்
திறப்படுநரனைவென்றுதிறலுறுமாறேசெங்கேழ்
நிறப்பெருங்கிருபன்முந்திநேர்ந்தனனெடும்போரம்மா. (௧௮௪)

வேறு.

விரைவண்ணனுமுத்தரன்பாலருள்காட்டலுமிகுநேமித்
தேரைவந்தவக்கிருபன்மேற்செலுத்தினன்செஞ்சிலைகளைவாங்கித்
தாரைமாறியுநாணுறவுருமுறழ்த்தக்கவாளிகளேவும்
போரையாவரேபுகலவல்லவர்மதிப்புலவருங்கலக்குற்றார். (௧௮௫)

சண்டமாருதங்கலங்கினவடபெருஞ்சயிலமுமொலிசெய்த
தெண்டிசாமுகஞ்செவிடுபட்டம்பரமெங்கணுங்கனலோங்கி
யண்டகூடமுமகண்டமுநெக்குவிட்டந்தரகதிவீறுங்
கொண்டலேழுமங்கசனிகக்கினவரைக்குகையிடந்தொறுமம்மா. (௧௮௬)

கைத்தலத்திறல்காட்டியிங்கமர்புரிகாலையிற்கனவாகன்
புத்திரன்கொடும்போரத்திரமூடுறப்புகுந்துதேர்க்கொடியாடை
த்திவீழ்வுறத்தறித்தெரிந்தாரியன்றனதுடற்றலமெல்லாங்
கொத்தியெங்கணுமுருவியசூதனுங்குரகதங்களுமுட்க. (௧௮௭)

அனையகாலையிற்கிருபனுக்கிருபுறத்தணுகியதேர்வேந்தர்
முனைகொள்சந்திரகேதுநற்சுசேடனன்முறைதெரிமணிமந்தன்
வனைபொலன்கழலேமவன்மன்முதல்வாகைவெஞ்சிலைவல்லோர்
புனைதும்வென்றியென்றார்த்தருச்சுனனெதிர்புகுந்துபோர்பொருதாரே. ()

எதிர்த்தமன்னவர்தமையெலாம்பலகணையேவியங்கவர்சென்னிக்
கதித்ததிண்புயமருமநற்குறங்கொடுகரம்பதம்வெவ்வேறு
கொதித்தசிந்தையன்குறைத்தொருகுன்றுபோற்குவித்தனன்குவையாக
மதித்ததேசிகன்சிலையையுந்தேரையுமாற்றினன்விரைவாக. (௧௮௯)

வந்தகொற்றவேன்மன்னருஞ்சிதைந்துதேர்வரிசிலைபடமாழ்கி
யந்தணர்க்கரசவனிமேனின்றுவெவ்வழல்சொரிகதிர்வேலா
லிந்திரற்குதையஞ்செறிமைந்தனையெறிந்தனனிவனென்றே
செந்தழற்கணையாற்பொடிசெய்தனன்சிறுநகைநிலவூர. (௧௯0)

எறிந்தவெய்யவேற்பொடிபடவெஞ்சினமெழுந்துடறெரியானாய்ச்
சிறந்தவாளொடுபரிசையுங்கொண்டவன்றேர்மிசைபாய்போதி
னறிந்துகாண்டவமழித்தவன்மதிமுனையருங்கணையொன்றேவிக்
குறைந்துநீறுகவாளையும்பரிசையுங்குறைத்துவிட்டனனம்மா. (௧௯௧)

முனையின்மிக்குயர்கிருபனும்வேறுபோர்முயல்வதற்கிடனின்றித்
தினையுடைப்பொழுதகமுறச்சிந்தனைசெய்திளநகையோடுங்
கனைகழற்பொலிவெஞ்சிலையாரியன்காதலிற்பெறுவெற்றித்
தனையன்பொற்றடந்தேர்மிசைபுகுந்தனன்முனைகளிரிந்தோட. (௩௯௨)

முன்னிட்டோடியகிருபாசரியனுமுனையழிந்திழிவோடும்
பின்னிட்டானெனத்தேறலுமாங்குளபேரணிப்படையோடும்
பொன்னிட்டாற்றியசக்கரத்தேர்மிசைபொற்பொலியெனநின்ற
மின்னிட்டாற்றியசெஞ்சிலைவீடுமன்ஞாணொலிசெய்தானே. (௩௯௩)

எடுத்தநாணொலியோசைகேட்டணையிலாவேலைநீரெனநின்ற
மடுத்தசுந்தரச்சகுனிதுச்சாதனன்முதலியமறவேந்த
ரடுத்துமற்றவனுதரத்திருந்தனரதுதெரிநரனம்பு
தொடுத்துநாணொலிகாட்டிவெள்வளையொலிகுறித்தனன்சோர்வெய்த. (௩௯௪)

வேறு.

சோமகுலமுய்யவருதோன்றன்மொழியாலே
வாமவலவன்கடிதுவாம்பரிமுடுக்கிச்
சேமவிரதத்தைநொடிசெல்லுமுன்னடத்தி
காமருகுலக்குரவன்வின்முனைகலந்தான். (௩௯௫)

வேளைநிகரும்படிவவிண்ணரசன்மைந்தன்
காளமெனவந்துமுனைகாணுமுனரோடி
வாளமர்வலானிடபசேனனடல்வாளி
கோளின்முறைதூர்த்தமர்குறிப்பொடுபுரிந்தான். (௩௯௬)

புரிந்தவனரும்பரிகள்பூணிரதமம்பாற்
கரிந்துபொடியாக்கியுயர்கைச்சிலைதுணித்தே
விரிந்தநரனெண்கணையின்மேனியையெரித்தா
னிரிந்துமுனைகெட்டுவெரினிட்டனன்வலத்தோன். (௩௯௭)

மற்றவனகன்றிடலும்வான்கணைசெலுத்திக்
கொற்றமுறுசிந்துபதிகூறுசுபலன்சேய்
குற்றமுடைமன்னிளைஞருதியர்கொடுங்கை
பற்றுசிலைதேர்கொடிகள்பாகுதுணிசெய்தான். (௩௯௮)

மாறுபடுசேனைவயவாசிகரிவான்றேர்
நீறுபடநூறுகணைநொந்துதிசைதோறுஞ்
சேறுபடுசோரிநதிசெல்லவருவோனைப்
பேறுபடுதேர்மிசைபிதாமகனெதிர்ந்தான். (௩௯௯)

கொண்டனிகருஞ்சிலைகுனித்துவயவாளி
மண்டியழல்காலநிறைமாரிபொழிவித்தார்
தெண்டிரையுமாதிரமுநொந்தசெயல்தேரு
மண்டர்பலயோசனையகன்றுயரநின்றார். (௪௦௦)

வெம்பரிதிவந்தகிரியிழ்கிரியிரண்டுங்
கம்பிதமெழுந்துகடனீர்கொதிமலிந்தே
தும்பிகளயர்ந்துலகுதுன்பமுளதன்றோ
விம்பரியர்வெங்கணைகம்பமுகவலாலே. (௪0௧)

செஞ்சுடருமஞ்சவமர்செய்துநிதிகந்தோன்
விஞ்சுகணைதேர்வலவன்மீதுறவிடுப்பப்
பஞ்செரியினூடுபடுபான்மைபடவிந்தே
வஞ்சமறியாதவன்வயச்சிலைதுணித்தான். (௪0௨)

அற்றசிலையைப்புறமகற்றிவரைபோலோர்
கொற்றமுளபோர்ச்சிலைகுனித்திணையிலாதோன்
புற்றரவெனத்தகையபுங்கம்விடுவித்தான்
மற்றவனுமக்கணைகண்மாற்றியமர்செய்தான். (௪0௩)

எக்கடலுமெக்கிரியுமெவ்வுலகுமியாரு
முக்கிடவெழுங்கமலனூழியழலென்னத்
தக்கவர்சரங்கடருசெந்தழறயங்கப்
புக்குபுதிரிந்ததிசைபோமளவுகாறும். (௪0௪)

வேறு.

காலின்வேகமெனவேகமென்பதுகடந்திரண்டுதிறல்வீரர்தேர்ச்
சாலினாகியுமலாதவாகியரிசக்கரஞ்சுழல்வதொத்ததான்
மாலுலாவுசுரராசன்மைந்தனதிமைந்தனங்கையில்வளைத்தவிற்
கோலின்முந்துவிசையிற்சுழன்றனகுலாலனேமிபடுகொள்கைபோல். (௪0௫)

கலித்தவாசிகள்முகிற்குலங்களொலிகாட்டுமாறிருவர்பாகரு
மொலித்துளாரிவர்பதாகைவானமிசையூதையோடுமலைவாயதாற்
செலுத்துதோள்பெயராதல்வெயர்க்கவிகல்செய்யவாள்விழிசிவப்பவே
வலித்தவங்குலிசலிப்பநின்றமர்மலைந்துளார்பிறர்கலங்கவே. (௪0௬)

தொட்டபைங்கழலொலிப்பநின்றுமதுசூதனன்றனதுமைத்துனன்
விட்டவெங்கணையினிற்பெரும்பனைவிலோதனன்சிலைதுணிந்ததா
லட்டகாசமொடுவாசவன்புதல்வனாயிரங்கணைசெலுத்திமெய்
முட்டவுந்துளைபடுத்தினான்பினையுமூரிவில்லுதவுமுன்னரே. (௪0௭)

செய்யமேனிமுழுதுங்கொடுங்கணைசெறிப்பமாழ்கிமதிசிந்தியே
வையமீதுமெய்ம்மறந்துநின்றனன்வயங்கொள்சாரதியுணர்ந்துதேர்
வெய்யவம்முனையகற்றிமற்றொருதிசைக்கணுய்த்தனன்விபாகரன்
பொய்யிறேரகல்விசும்பினுச்சிதருபொழுதினாயதுபொருந்தவே. (௪0௮)

கங்கைதந்தவனிடைந்தகன்றசெயல்காணுமுன்னரவனாதரந்
தங்கிநின்றவர்கலைந்துழன்றொருவர்தாங்கவல்லவரிலாமையாற்
பங்கமெய்தினர்விரைந்துமீளவுயர்பாகசாதனனளித்தவன்
புங்கவங்கள்பலகோடிபோக்கிவருதானையைப்பொடிபடுத்தினான். (௪0௯)

குற்றமற்றகொடிசுற்றுபொற்றுகில்கொளுந்திநேமிகள்கரந்துசீர்
பெற்றவச்சுகள்பிளந்துகால்கள்பலபேதமாகிவிறல்வாசிகா
லற்றுருண்டுசிகரந்துணிந்தணியழிந்தரும்பொடிகுவிந்ததாற்
செற்றமிக்கரவுயர்த்தகோவினியசேனையூடுவருதேரெலாம். (சகO)

மத்தகங்கள்பிளவுண்டுகூரியமருப்பொடிந்துசெவிசிந்தியே
கைத்தலங்களிருகண்டமாகியுயர்காறறிந்துட்கலங்கியே
வித்தகம்புரிகுலப்பெருங்கிரிகள்வீழ்வதொத்துயிர்துறந்தவாற்
குத்திரம்புனையிராசராசனிகல்கொற்றமிக்ககரிநிரைகளே. (சகக)

சிரந்துணிந்தனதகர்ந்தவாலுளைகடேற்றமிக்ககலினங்களி
னுரந்துணிந்தனபதந்துணிந்தனவொப்பமற்புயமொடிந்தருங்
குரந்துணிந்தனமுகம்பிளந்தெரிகொளுந்துகின்றனசிறந்தவந்
தரம்புகுந்துவருகாலைவாளிமுனைதன்னிலொண்குரகதங்களே. (சகஉ)

உடனெரிந்தனசிரஞ்சிதைந்துகரமுக்கியென்புபொடிபட்டன
குடருமிழ்ந்தனநரம்புசிந்தியுதிரங்குழம்பினகுலாறுதற்
றடம்பிளந்தனவுரம்புயங்கடிதலங்களுங்குவைமலிந்தவாற்
படமுயர்ந்தவிடநாககேதனமுளானணிப்படைபதாதியே. (சகங)

பட்டவெங்கணைகளாலழிந்துகொடிபாகுமாவிரதமின்றிவென்
னிட்டமன்னவரலாதெவன்கொலவனேவுவெங்கணைபிழைத்தவன்
கட்டழற்கதுவுறும்பறந்தலைகலந்திருந்தபலகைக்களி
றெட்டிவெற்றியரிபுக்குணர்ந்த்படியேற்பவாடிமதிமாழ்கினர். (சகச)

வேறு.

வாடிவாடிமனந்தளர்ந்
தோடியோடியுவந்துளோர்
நாடிநாடிநவின்றிடிற்
கோடிகோடிகுறிப்பதே. (சகரு)

விண்படாவருமேகநற்
றண்படார்சிலர்தங்கினு
மெண்படாநரனேவின்மெய்
புண்படாதவர்பொய்த்ததால். (சகசு)

அஞ்சுபட்டுறுமாங்கெலா
நஞ்சுபட்டனனன்னரன்
செஞ்சுடற்புரைசெம்மனேர்
பஞ்சுபட்டபதாகினி. (சகஎ)

தேசின்மிக்கதிரிபுரத்
தாசுரர்க்கிணையாயினார்
நாசமுற்றவர்நன்னகை
யீசனொத்தனனேந்தலே. (சகஅ)

சேறுபட்டதுஞ்செம்புன
லாறுபட்டதுமன்றியே
நீறுபட்டுநெரிந்ததான்
மாறுபட்டவர்வல்லுடல். (சகசு)

அசைவிலாதவனாழ்கணை
யிசையுமாறமரேற்றியோர்
திசையினூடுபுசேர்ந்துதன்
விசையடங்கிவிழாதரோ. (சஉO)

வேறு.

விட்டவொண்கணை
யெட்டருங்கரி
பட்டயர்ந்திட
வட்டுமோடுமே. (சஉக)

உரைத்ததேர்கரி
நிரைத்தவர்சியா
ளரைத்துச்சோரியிற்
கரைக்குங்காய்கணை. (சஉஉ)

குவிகைகொற்றவர்
கவிகைசாமரை
சிவிகைபேரியம்
புவிகைபோர்த்ததே. (சஉங)

சகரநீர்குடை
மகரமாயினான்
சிகரவேதித
னிகரின்மைந்தனே. (சஉச)

வேறு.

கானெலாம்பரவியகடவுட்டூயென
வூனெலாமருந்தியுமொருவன்வெங்கணை
யீனெலாமுகுத்திவண்ணவருமஞ்சர
வானெலாங்கனற்பொறிமலியச்செய்ததே. (சஉரு)

அடலின்மேவலரணிநோக்கிமாற்றவு
மிடனுடைத்தனஞ்சயன்வீசுங்கூர்ங்கணை
புடவியாடயரதனவித்தபுங்கவன்
கடலின்மேலேவுசெங்கணைகள்போன்றதே. (சஉசா)

புயங்கநாயகன்படுதுவசன்போர்முனை
யியங்கினோர்மிசையிவனெறிந்தவான்கணை
வயங்கொளாசுரர்பெரும்பதாதிமாய்த்தருஞ்
சயம்பெறுகுமரவேள்சரங்கள்போன்றதே. (சஉஎ)

வந்தவாகினியெலாந்தொலையவல்விரைந்
துந்துருமகபதிக்குதித்தவன்கணை
முந்துசென்றுயிருகமுடிக்குமாற்றலா
லந்தகன்வீசுபாசத்தினையதால். (சஉஅ)

கவித்தவெண்கவிகைசெங்காம்புசிந்தியே
புவித்தலைமேவுதல்பொருவின்மாமதி
சுவத்திரைகொழுநனீங்கியற்றுந்தாய்மகத்
தவிக்குளங்கருதிவந்தடைப்பதேய்க்குமே. (சஉகூ)

சங்கொடுமன்னர்கைச்சலஞ்சலங்களை
வெங்கொடுங்கணைகளால்வீட்டிவீழ்த்துத
லங்கண்மானிலமெலாம்புரக்குமாண்டகை
துங்கவான்சீர்த்திவேர்தொலைத்தன்மானுமே. (சநூ0)

தேரின்மேலானைமேற்சேர்துகிற்கொடி
பாரின்மேல்விழக்கணைபடுத்திவீசுதல்
காரின்மாலைகள்கனவிசும்பிற்கட்டறப்
போரின்வாய்த்தவறிவீழ்புணர்ப்பைமானுமே. (சநூக)

மாசறுமுதிட்டிரற்கிளைஞன்வான்கணை
தூசியின்மன்னர்கைச்சிலைதுணித்தலாற்
றேசுறுசனகமானகரிற்செங்கணு
னேசையாலுயர்சிலையொடித்ததொக்குமே. (சநூஉ)

காதுறுகழைசுளிகளிறல்லியானையின்
மீதுறுமுரசினைக்கணைகள்வீட்டுத
லோதருங்குன்றின்மீதுயர்ந்தகற்களைத்
தீதரவசனிகள்சிதைத்தனேருமே. (சநூநூ)

மத்தகம்பிளந்திருமருங்குஞ்சோரிக
ளுய்த்திடத்திரிதருமோடையானைகள்
சித்திரப்புயல்பொழியரிவிச்செம்புனற்
றத்தியகாலுடைச்சயிலம்போலுமே. (சரு௪)

அகல்வெளிவேள்வியினனல்செய்குண்டமாப்
புகல்கணையங்கியாப்போரினேற்றவ
ரிகலுடற்சமிதையாயிழுதுசோரியாய்ப்
பகன்மகற்குயிரவிபார்த்தனல்கினன். (சரு௫)

பண்ணவர்குரவனும்பண்ணுமாருயிர்க்
கண்ணெலாம்பயிலுறுகண்ணனென்னவே
யண்ணறேர்ச்சாரிகைசுழலவாண்டுளார்க்
கெண்ணறுதனஞ்சயனெதிர்ந்ததேய்த்ததே. (சரு௬)

வேறு.

யாறெருடுகழுகுகள்மீமிசையொலியொடுபறந்தசிறகான்மறைந்ததகல்வான்
ஆறெருடுபலமடுவோடியகுருதியினகண்டவுலகுஞ்சிவந்துகவாறித்
தேறெருடுமலைகைகள்சாதகமெதிரெதிர்பிணங்குமிருகைத்துணங்கைதருமான்
மாறடுகந்தரமாரிசொரிந்தெனவந்துவிழுமாற்செங்களமெலாம். (சரு௭)

ஆடரவணியொடுசூலமுமொளிசெயவாளிமிசைசேர்காளிகுழுவுந்
தேடருமணிமுடிசூடியமயிடனைச்சென்னிதுணிசெய்கன்னிபடையும்
வீடியபடைவலிதேறியபலதனிவீரகணமுஞ்சாரதர்களும்
பீடைமைகளமுழுதாடியபவுரிகள்பிறங்குமொலியேகறங்கியதரோ. (சரு௮)

காதியமுடைகமழ்வீரியர்சிரநிரைகடிக்குமரவாற்றொடுத்ததொடைபூண்
டாதரவொடுவருபேய்மகள்குருதியினுழ்ந்துசுழிவாய்வீழ்ந்துசுழலாச்
சாதகம்விரைவுறநீள்கரமுதவுவதம்மிலொருசார்செம்மல்பெயராங்
கோதியுமடல்வலிபாடியும்வெறிபயிலோசையொருசாரேசில்களமே. (சரு௯)

சோரியினதிபுனலாயதினுடனுறுதும்பிநிரையேதிமிங்கலங்களாய்
வீரியருகுபடையாருயிர்பலவகைவிளங்குவனவாயயங்கடிமியாய்ச்
சீரியநிணமளறுயுடன்மலிகுவைசிம்புள்வரையாயம்பிரமுமாய்
வாரியினொளிருவதாகியதடுசமர்வல்லபெருமான்வென்றகளமே. (சசо)

கோடறுமதக்ரிவீழொலியாடவர்கூர்செய்கணையாற்றுழ்வதொருசா
ராடகவுருளுகணேமிகள்சுழல்வதிலாகிவிரைவாற்போவதொருசார்
நாடகவனிதையர்நாணுறவிடையிடைநடஞ்செய்திறல்சேர்கவந்தமொருசா
ரேடவிழலர்முடிசூடியமகபதியீந்தபெருமான்காய்ந்தகளமே. (சசக)

வேறு.

ஆளிக்குமடிகரிக்குமடற்புலிக்குநிகர்வலிகொண்டடுத்தோர்தம்மைக்
கூளிக்குங்கொடிநரிநாய்க்குழுவுக்குங்கழுகுகட்குங்குறைவிறன்கை
வாளிக்குமவ்வூர்வாழ்காளிக்கும்விருந்தாக்கிவானோர்காண
வேளிக்குங்கைக்குமொழிவிந்தைதனைமணம்புணர்ந்தான்விசயனம்மா. (சசஉ)

வேறு.

அஞ்சியாவருமடுகணையனற்பிழம்பதனுக்
கெஞ்சியாவருநின்றிலரிங்கொருநொடியிற்
றுஞ்சினாலரோடினர்கோன்றானகைத்து
வெஞ்சினத்தொடுதுரந்தனன்மீட்டுமங்கவரை. (௪௪௩)

புயங்ககேதுதுச்சாதனன்சிந்துபூபதிசேய்
வயங்குசௌபலனிரவிசேய்முதலியவயவர்
தியங்குமாறுபின்குறிபடச்செங்கணைசெலுத்தி
யயங்கொடேர்மிசையிருந்தனனருச்சுனனுங்கு. (௪௪௪)

வெற்றிமிக்கதன்கொடுஞ்சிலைபூண்டநாண்விலக்கிப்
பற்றும்வான்கணைப்புட்டிலுங்கோதையும்பரிந்து
கற்றவிஞ்சையாற்கந்நிருவங்கலைத்தேற்றி
யற்றநோக்கியேயிருந்தனனுடலணங்காற்றி. (௪௪௫)

மச்சர்நாயகன்மதலையுங்கயிறுதேர்மாட்டி
யிச்சைதங்குறமுளுவுகோலிரதமீதிருத்திப்
பச்சைமேனியனொடுசிலமொழிபகர்ந்திருந்தா
னச்சமோடகன்றவர்செயன்மேலினியறைவாம். (௪௪௬)

எறிந்தவான்கணையவரவர்பிடர்த்தலமிறுத்த
தறிந்துமன்னவனழல்விழியரக்கினுஞ்சிவந்து
தறிந்துவீழ்கினுநன்றினிச்சார்கிலனென்றே
யெறிந்துதோள்புடைத்திரதமீட்டனனிகல்கருதி. (௪௪௭)

அனையமன்னவன்றேரினைப்பின்னுறலாக்கி
முனையின்முந்தினன்மொய்ம்புடையிரவிகான்முளையுங்
கனைபொலன்கழலிளைஞருமவருடன்கலந்தார்
நினையுஞ்சீரியர்நால்வருமவரொடுநேர்ந்தார். (௪௪௮)

மேருவெற்பினைநிகரொருவெங்கொலைத்தறுகண்
சாருமத்தினபுரியெனுந்தந்திமீதாகிப்
போருமிக்கணம்பொடிபடுமெனச்சிலர்புகல
காருமுட்கிடவிகர்னனுங்காளைபோய்க்கலந்தான். (௪௪௯)

கூற்றினேர்செலுமாருயிர்க்குலமெனமீண்டு
சீற்றம்விஞ்சுநாற்படைகளுமவருடன்செறிந்த
காற்றுமேனைநாற்பூதமுங்கலக்குறத்துணிவா
லேற்றுளார்தனியிருந்தவின்மடங்கலையிரிந்தோர். (௪௫௦)

பண்டுபட்டவையயருமுன்மீளவும்பலர்விற்
கொண்டுசுற்றியதுணிபினைக்கோமகனுணர்ந்து
கண்டுநிற்பவர்களிப்புறக்கார்முகங்குனித்தான்
றிண்டிறற்கொருவலவனுஞ்செலுத்தினன்றடந்தேர். (௪௫௧)

அந்தவேலையிலணிமுடிமன்னவர்பலருஞ்
சிந்தைதீயெழவளைந்தனர்செம்மலைச்சூழ
மூந்துநாணிடியோசைபோன்முறையொலிகாட்டிப்
பந்தமோடருங்கணைமழைபொழிந்தனர்பலரே. (சருஉ)

சக்கரங்கொடுந்தழன்மழுவெழுவொடுதண்ட
மிக்கசூலமங்குசமணிபாசம்வெவ்வுல்க்கை
தக்கவான்கொழுவாதியபடைக்கலந்தனிசேர்
முக்கணுனிகரொருவன்மேல்வீசினார்முனிவால். (சருங)

கரியினின்றவர்காய்மணித்தேர்மிசைநின்றோர்
பரியினின்றவர்தனித்தனிப்படைகள்கொண்டெறிய
வுரியநுண்பனிபோர்த்தவெங்கதிரினோடொத்தான்
பெரியதேர்மிசைநின்றருள்பாண்டுவின்பிள்ளை. (சருச)

கருதியிங்கிவர்தமையொருபொருள்செயான்கடிதிற்
பரிதிவான்முடிதுளக்கியேபண்ணவர்பெருமான்
றருதழற்கணைகுணக்குறவிடுத்தருஞ்சமன்றன்
குருதிவெங்கணைதென்றிசைப்பாலினிற்கோர்த்தான். (சருரு)

வருணனெண்கணைமேற்றிசைமல்குறவிடுத்துக்
கருணைசேர்நிதிக்கிழவனெண்கணைவடக்குறுத்தி
யுருண்முகந்ததேர்மிசையிவன்சிலையொடுமுவப்பாற்
றருணவாணகைநிலவெழநின்றனன்றருக்கி. (சருகூ)

வந்தவந்தவெம்படையெலாம்வான்படத்திசையிற்
சிந்திநின்றதச்சேவகந்தெரிந்தறநாணி
மந்தராசலபுயத்தினோர்மதிமயக்குற்று
ரந்தரத்தவர்பூமழைபொழிந்தனரவன்மேல். (சருஎ)

மீண்டுமாங்கொருமோகனக்கணையினைவிடுத்துப்
பாண்டுதந்தவனிற்பவப்பலபடைமன்னர்
மாண்டுவீழ்ந்தனராமெனத்தேர்மிசைமறிந்தா
ரீண்டுதம்மையுமிகலையுமறந்தமரேற்றோர். (சருஅ)

அனையகாலையினுத்தரனணிமுகநோக்கி
வனைபொலன்கழலருச்சுனன்மகிழ்நகைபுரிந்தே
நினைவினுண்டுகொலுத்தரைநிகழ்த்தியதென்றே
தனையன்மாமகிழ்வெய்துறமீளவுஞ்சாற்றும். (சருகூ)

அயர்ந்தமன்னவர்தெளியுமுன்பவரிடஞ்சார்ந்து
உயர்ந்தசென்னியிற்புனைதருமொளிசெய்பட்டாடை
நயந்துநீயினிக்கவர்ந்துவந்தனையெனினங்கை
தயங்குபாவைமெய்தரிப்பளென்றுரைத்தனன்றக்கோன். (சகூ௦)

மீண்டிங்கூறுவான்வேந்தர்வேந்துடன்பரித்தாமன்
பூண்டவம்பரங்களும்பமேதாவிரவிதன்புதல்வன்
மாண்டருந்திரவம்பரம்பச்சையாமறையோர்
நீண்டமேகசிகரிருவரும்வெண்படாநிறுத்தல். (௪௬௧)

இவர்ந்தமேதகின்பின்தேசியிங்கிவர்சிரத்தாடை
கவர்ந்துமெய்துகங்கைதந்தவனிடைகருதேற்
றவிர்ந்திருப்பவிக்கணைமயக்கினையெனச்சாற்ற
வுயிர்ந்தமச்சர்கோனளித்தவனம்முறைகொணர்ந்தான். (௪௬௨)

நோக்கிமாமகிழ்வெய்தலுநேர்ந்தறமெலிந்து
நீங்குறும்படைக்கரத்தராய்வீழ்ந்தவாணிருபர்
சாக்கிரந்தனிலறிவுறத்தமையுணர்ந்தெழுந்தார்
போக்கரும்பெருந்துன்பமுநாணமும்பொலிய. (௪௬௩)

ஆருமற்புதமடைந்துளமழன்றவனெதிரிற்
சாருமெய்த்திறலின்றிதாநினைத்திடுந்தகைகண்
டாருமொப்பிலாப்பகிரதியளித்தவனடுத்தே
சேருமற்புயச்சுயோதனன்றனக்கிவைதெரித்தான். (௪௬௪)

ஐயகேட்டியிங்கிவனுடனடுசமர்மலைதற்
குய்யுமும்பருமசுரருஞ்செருவிரகுணரார்
செய்யவான்களத்தினியெதிர்சேர்கிலீர்சேர்ந்தாற்
பொய்யலாவுயிர்பெறுவதிங்கரியதேபுகழோய். (௪௬௫)

மோகனக்கணையாலயர்ந்துளபடிமுன்னிப்
பாகனைக்கணத்தேவிலாருயிர்கொடுபடர்வோர்
சாகரத்தொளிமேனியன்றந்ததாருயிரென்
றேகலுத்தமமென்றனனெண்ணறுவலத்தோன். (௪௬௬)

அரவுலாவியகேதனனவனுரைப்படியே
விரைவின்மீண்டனன்யாவருமவருடன்மீண்டார்
பரவுபூளைமாருதத்திறுற்பறந்தெழும்படிபோ
னரணைவாழ்த்தியேபதாகினிபுகுந்ததானகரம். (௪௬௭)

கதித்தவாகினியுடனிவன்மீண்டதுகாணு
மதித்தவாண்மையான்மதுகைமன்னவன்றனைக்கூவிப்
பதித்தலானவர்செவிபுகப்பல்லுரைகுறித்தான்
விதித்தகார்முகிலசனியென்றராவினமெலிய. (௪௬௮)

வேறு.

சூதாடக்கற்றவஞ்சச்சகுனியுண்டுதுகிலுரியக்கற்றதுச்சாதனனிங்குண்டு
வாதாடத்தேர்ப்பாகன்மைந்தனுண்டுமதியுண்டுசினமுண்டுவாயுண்டன்றே
காதாடக்குழையாடவவையின்மேனாட்கட்டுரையாலெமைவெற்றிகண்டநீயிப்
போதாடற்சிலைவெற்றிகைக்கொளாமற்போவதுவென்சாவததிற்புகழாமன்றே

சாதனமும்வாகனமும்வாளும்வேலுந்தயங்கமுரசொலியுடனேசார்ந்தின்னுட்டிற், கோதனங்கொண்டாயன்றேவிற்றுள்ளாரிற்கொண்டநிரைமருவலர்கைக்கொள்ளநீபோய், மாதனமங்கையர்முன்னர்நாணமின்றிவைகுதியோர்கைதவத்தால்வந்தவிந்தப், பூதனமுநினதுயிரும்வாங்கவாயுபுதல்வனுளனெனநவின்றுபொறைசெய்தேனே. (சஎ0)

எனப்பலசொல்புகன்றிடலுமிராசராசனிசைக்குமொழியொன்றுணராவிணைத்தோள்வாடி, மனத்துயரோடேமரிற்சென்றகலும்வேலைமணிவண்ணனொருகணையாற்கன்னனேறு, முனற்கரியபெருவேழந்தகர்த்துவீழ்த்தியுரகதுவசத்தனணிமுடியைவேறோர், முனைப்பகழிதனின்மாற்றிநகைத்துநின்றான்முகமாறியரவிந்தமுகிழ்ப்பமன்னோ. (சஎக)

தீதாரும்நெஞ்சுடையோரிந்தவண்ணஞ்செருவழிந்துதமதுநகர்செல்லத்தேர்மேன், மாதாருவெனநின்றமகவான்மைந்தன்மச்சர்குலபதிமகன்றன்வதனநோக்கி, யாதாரமிலராகிமருவலார்நொந்தாருயிர்கொண்டேகினரான்மீண்டதன்றோ, மீதாகவாங்கவரைத்தொடர்வதேயோமீண்டுநகர்புகுவதுவோவிளம்புகென்றான். (சஎஉ)

வீரியனுங்கவையுரைப்பவரசன்மைந்தன் வீடினரிலாகவவர்மேவாநின்றார், ஓரியநின்கணையவர்மேலுய்க்கிலையசெய்யபுகழ்மாசடைதறிண்ணமாமாற், காரியமுன்னிருந்ததினிநகர்போய்ச்சேறல் கடனுகுமடல்சுரக்குங்கவிஞேயெனக், கூரியவெங்கணைப்புட்டின்முகிழ்த்துவில்லின்குணநீக்கிவலவன்முகங்குறித்துச்சொல்வான். (சஎஙு)

யான்குறித்தபடிநீயுமிசைத்தாய்நின்னையீன்றவளாகுலமடைந்தாங்கிருப்பளைய, கான்குறித்துச்சென்றநிரைக்கணங்களியாமேகடிநகரிற்சென்றுரைத்துக்காட்டலென்றே, வான்குறித்ததனித்தேவதத்தமாங்கேவாயிதழில்வைத்துலகமயங்கும்வண்ணந், தான்குறித்துத்தேர்வலவனுய்ப்பமீண்டான்றக்கவர்க்குமுடியாரத்தாழ்ந்துமன்னோ. (சஎச)

வேறு.

* அரவினையுயர்த்தகோமானணிமுடிகணையாற்சாயப்
பரவையிலிரவிகண்டபனிமதிபோலமாழ்கி
வரவரவறிதுமென்றுமாபெருஞ்சேனையோடு
மிரவிடையாருந்துஞ்சவெயில்வளநகரிபுக்கான். (சஎரு)

* வேந்தனைமுதுகுகண்டவெந்திறல்வீரன்மீண்டும்
போந்துமுன்னெடுத்தவன்னிப்பொதும்பரிற்சிலையுமம்பும்
வாய்ந்ததன்கொடியுஞ்சங்கும்வைத்தெழில்வடிவமாற்றி
யாந்தகவெண்ணிப்பேடியாயினனென்பமன்னோ. (சஎசு)

* பொன்னவிர்நெடுந்தேர்மீதுபொறித்தவெவ்வரிப்பதாகை
முன்னரிற்செறித்துவேந்தன்மகனொடுமுகமன்கூறி
யன்னவன்றனைமன்னுக்கியம்பொடுசிலையுநல்கி
மின்னுறுபுரசைதாங்கிவிசயன்றேர்செலுத்தினனே. (சஎஎ)

* இவ்வெயிலெறிக்கும்பைம்பூணேந்தலோடினிதுகூறிச்
செவ்வெயிலெறிக்குந்தேரான்பேடியிற்சென்றுமேனி
வெவ்வெயிலாறும்வண்ணம்விரைந்தனிவிராடன்மூது
ரவ்வெயில்சூழ்ந்தகாவினமர்ந்தனனரசரேறே. (சளகூ)

* ஆறியபசுந்தண்காவிலசைவொரீயிருந்தவீர
னேறியகானிற்பல்லாண்டிருந்ததுநடந்தசீரு
மாறியவடிவத்தோடும்மானகர்புகுந்தயாவு
மூறியவமுதச்சொல்லாலுத்தரற்குரைசெய்தானே. (சளகூ)

* பேடிதேர்செலுத்தச்சென்றுபிள்ளையப்பெரும்போர்வென்று
கோடிதேர்முதுகுகண்டுகோனிரைமீட்டானென்றே
யோடிநீருரைமினென்றுதூதரையோடவிட்டா
னீடிநீர்பரக்குங்கங்கைநாடுடைநிருபர்கோமான். (சஅ0)

* இங்கிவனிவ்வாறுய்ப்பமுற்பகலேகியாங்கட்
கங்குலிற்சேனையோடுங்கண்படையின்றிவைகிச்
செங்கதிரெழுந்தபின்னர்த்தென்றிசைப்பூசல்வென்ற
வெங்கழல்விராடன்றானுமீண்டுதன்னகரிசார்ந்தான். (சஅக)

* தடம்பதியடைந்தகாலைத்தன்மனையிருந்தபேடி
திடம்படுதடந்தேரூரத்திருமகன்சென்றசெய்கை
விடம்படுவெகுளிவேற்கட்சுதக்கணைவிளம்பக்கேட்டாங்
குடம்புயிர்போகவீழ்வதென்னுமாறுருகிவீழ்ந்தான். (சஅஉ)

* சந்தனம்வளரும்வாசத்தண்பனிநீரும்வீசி
வெந்திறல்வேந்தன்றன்னைமிகுதுயரிருந்துதேற்றி
மைந்தனிப்பொழுதேவென்றுவருகுவன்பொற்றேரூர்ந்தா
ளந்தநற்பேடியாகிலென்றனனந்தணாளன். (சஅங)

* அறன்மகன்வாய்மைதேறியரசனுங்கிருந்தவெல்லை
மறனுடையுரககேதுவன்சமரழிந்தவாறு
முறமலைந்தொருதன்றேர்கொண்டுத்தரன்மலைந்தவாறுந்
தொறுநிரைமீட்டவாறுந்தூதர்போய்த்தொழுதுசொன்னார். (சஅச)

* சீதளவமுதவாரிசெவிகளிற்சொரிந்ததென்னத்
தூதர்வந்துரைத்தசொல்லாற்சோகமுந்துனிவுமாறித்
தாதையன்றேதுசெய்தான்றனையொழிந்துள்ளசேனை
யாதிபரெவருமேகியண்ணலையெதிர்கொள்கென்றான். (சஅரு)

* சோரர்தங்கருவைத்தங்கள்கருவெனத்தோளிலேந்தி
யார்வமுற்றுருகுநெஞ்சினறிவிலார்தம்மைப்போல
வீரன்வெஞ்சமரம்வெல்லவிராடனுத்தரன்வென்றானப்
போரிலென்றெண்ணிமேனிபுளகெழப்பூரித்தானே. (சஅசு)

* பூழிகளடக்கிச்செம்பொற்பூரணகும்பம்வைத்து
வாழையுங்கமுகுநாட்டிமாமணித்தீபமேற்றிச்
சூழவன்பதாகைநீட்டித்தோரணம்பலவுங்கட்டி
யேழுயர்மாடமூதூரெங்கணுங்கோடித்தாரே. (சஅஎ)

* மகன்வருமளவும்வெஞ்சூதாடுதும்வருகவென்றுங்
ககமகிழவனிவேந்தனந்தணன்றன்னோடாடி
மிகமுனியடுத்துவெல்லவென்றியுத்தரன்முன்மேவா
ரிகலழிந்தென்னவிப்போரழிதிநீயெந்தையென்றான். (சஅஅ)

பெருகணேயென்னுநாமப்பேடியைப்பேடியென்று
கருதனீயவனேமுன்னங்காண்டவமெரித்தகாளைக்
கொருதனித்தடம்பொற்றேரூர்ந்தும்பருக்காகவும்ப
ரரிகளையரிதின்வென்றானென்றனனந்தணாளன். (சஅகூ)

* கோடியின்கோடியானகுருகுலச்சேனைதன்னை
யோடியென்புதல்வன்றனேபோர்தனிபொருதுவென்று
நீடியநிரையுமீட்டுமீண்டனனென்னநீயப்
பேடியைவிறல்கொண்டாடிப்பேசுதிபிரமமூர்த்தி. (சகூ0)

* புன்னவையானமாற்றம்புகன்றனரென்றுகேட்டாங்
கின்னவைநன்றுநன்றென்றிதம்படமொழிவதல்லான்
மன்னவையிருந்துநாளும்வழிபடுமாந்தர்மன்னர்
சொன்னவைமறுத்துமாறுசொல்வரோசுருதிவல்லோய். (சகூக)

* என்னவுமிடங்கொடாமலெதிருறவிருடிமீண்டுங்
கன்னன்விற்றுரோணன்மைந்தன்காங்கயன்முதலினோரை
மன்னவவெல்லநின்சேய்வல்லனோவந்துசொன்னாற்
பின்னைநீயுணர்தியென்றான்பீடுடைப்பேடிதன்னை. (சகூஉ)

* கொடுவிலாண்மையினுவின்னேகுமரன்வென்றிடவுஞ்சற்று
நடுவிலாதவரிற்பல்காலென்கொனீநவில்வதென்னுக்
கடுவிலாடரவிற்பொங்கிக்கவற்றினாலெறிந்துநக்கான்
வடுவிலாமுனியைமன்னன்வடுப்படுமாறுசெய்தான். (சகூங)

* எற்றியகவற்றினெற்றியெதிருறவிருந்தகங்க
னெற்றியிற்சென்றுவாசநிறத்தகுங்குமத்தின்சேற்றாற்
பற்றியதிலகம்போலப்படுத்தலும்பாங்கர்நின்ற
வற்றியவோடையன்னவனப்பினாண்மருண்டுகண்டாள். (சகூச)

* பல்கியகிளையுந்தேசும்பார்த்திபன்வாழ்வுந்தாங்க
ளல்கியுநகருமின்றேயழியுமென்றஞ்சியேகொ
னல்கியநேயமேகொனயனநீர்மல்கமல்க
மல்கியகுருதிதன்னைமாற்றினாள்வண்ணமாதே. (சகூரு)

* கண்ணினீர்மல்கவல்குற்கலையொடுகலையாலந்த
வண்ணமாமுனிவன்சோரிமாற்றியகாலையையுற்
றெண்ணமுஞ்செயலும்வேறாயென்செய்தேமென்செய்தேமென்
றண்ணலுந்தன்னைநொந்தாங்கருஞ்சினம்பாவமென்றான். (௪௯௬)

* ஆயிடையத்தகுன்றாக்காதகனனியனாகச்
சேயிடையெதிர்கொள்கொற்றச்சேனைமன்னவர்கள்சூழ
வீயிடைவரிவண்டார்க்கும்வியன்பெருங்காவுநீங்கிப்
போயிடைநெருங்கிவேந்தன்புதல்வனப்புரத்தைச்சேர்ந்தான். (௪௯௭)

* பரந்துவெம்படைகண்மின்னப்பல்லியம்பணிலமார்ப்பச்
சுரந்தெழுமதங்கள்பாயுந்திக்கைவாரணங்கள்சூழப்
புரந்தரனகரிற்காளப்புயல்வருமாறுபோல
வுரந்தருபேடிதன்றேரூரவூர்வீதியுற்றான். (௪௯௮)

* வென்றுமீள்குமரன்றன்னைவீதிகடோறுமாத
ரன்றெதிர்கொண்டுநன்னீராசிகளொடுத்துவாழ்த்தக்
குன்றெறிந்தவனைக்கண்டகுன்றவில்லியைப்போன்முந்தச்
சென்றுதன்பிதாவுந்தேர்மேற்சிக்கெனத்தழீஇக்கொண்டானே. (௪௯௯)

* தழுவியவரசன்றாளிற்றலையுறவீழ்ந்துவேந்தர்
குழுவிடைக்கொண்டுபோகக்கோவிலிற்புகுந்தபின்னர்ப்
பழுதறுவேதவாய்மைப்பண்டிதன்பாதம்போற்றிச்
செழுமலர்வதனநோக்கித்திருநுதல்வடுவுங்கண்டான். (௫௦௦)

* திகழ்ந்தநின்னுதலினூறுசெய்தவர்யார்கொலென்ன
நிகழ்ந்தமைதந்தைகூறநெஞ்சினுற்றந்தைதன்னை
யிகழ்ந்தமைநுவலும்போதைக்கெல்லையின்றிவனைப்போல
வகழ்ந்தநீராடைஞாலத்தார்கொலோவமைவின்மிக்கார். (௫௦௧)

* செறுப்பதுபெருமையன்றுசிறியவர்செய்ததீமை
பொறுப்பதுபெருமையென்றுபூசுரன்பாதம்போற்றி
வெறுப்பதுவிளைத்ததாதைவீழ்ந்தபின்றானும்வீழ்ந்து
மறுப்பதுபுரியாஞானிமனத்துனிவகற்றினானே. (௫௦௨)

* ஆன்றமைந்தடங்குகேள்வியண்ணலுமவனைப்பெற்ற
தோன்றலும்பின்னர்ச்சென்றுசுதக்கணைகோயிலெய்த
வீன்றவப்பொழுதினாசையெண்மடங்காகவிஞ்சச்
சான்றதன்மகனைக்கண்டுமகிழ்ந்தனடவத்தின்மிக்காள். (௫௦௩)

* ஒடியுத்தரன்றேரூரவொருமுனையாகத்தன்னை
நாடியுத்தரிக்கமாட்டாநராதிபர்பதாகைதூசுங்
கோடியுத்தரியப்பட்டுங்குலமகடனக்குநல்கிப்
பேடியுத்தரைதன்னோடும்பெற்றதாய்பிறகுநின்றாள். (௫௦௪)

* தந்தையுந்தானுமாங்குத்தனித்திருந்தடையலாரை
முந்தியவமரிற்சென்றுமுனைந்துபோர்விளைத்தவாறும்
வந்தவர்சாய்த்தவாறுமணிநிரைமீட்டவாறுஞ்
சுந்தரக்கிரிகள்போலுந்தோளினுன்றேன்றச்சொன்னுன். (ருoரு)

வேறு

* உருப்பசிவெஞ்சாபத்தாற்பேடியான வுருவமொழித்தருச்சுனன்றன்னுருவங்கொண்டு, பொருப்பனையகவித்துவசத்தேர்மேல்வண்ணப் பொருசிலைதன்கரத்தேந்திப்புகுந்தபோது, செருப்புரவியிரவியெதிர்திமிரம்போலத் திறலரியேற்றெதிர்கரியின்றிறங்கள்போல, நெருப்பெதிர்ந்தபதங்கம்போலழிந்தாரைய நிரைநிரைபேரணியாகிநின்றவேந்தர். (ருoசு)

* அருகுவிடாதுனக்குயிர்நண்பாகிநீதி யறமுரைப்போனறத்தின்மகனுதல்வேண்டு, மருமலருமான்மதமுந்துறந்தகூந்தல் வண்ணமகள்பாஞ்சாலன்கன்னிபோலும், வெருவருமற்போர்கடந்தமடையன்றன்னை வீமனெனவயிர்க்கின்றேன்வேந்தேயந்த, விருவரிலுமாவலானகுலன்போலு மின்னிரையின்காவலாணிளையகோவே. (ருoஎ)

* ஆளையேயடுங்களிற்றூர்தம்மையாரு மறியாமலின்னகர்க்கண்டங்கிநின்றூர், காளையேவெளிப்படுவர்தெருனலேத நாளுள்ளகழிந்தனவானயந்துட்கொண்மோ, வேளையேயனையவெழிற்றேகைவாகை வேளையெயனையவிறல்விசயனென்னுங், காளையேயடியனேற்கிளையகாதற் கன்னிக்குவரனென்றுங்கருதுவாயே. (ருoஅ)

* மகனிவைமற்றுரைத்தளவிற்றுதைகேட்டு மனமடங்கியிருடியுடன்மகிட்சிகூர்ந்தான், பகலமரிலேறியமெய்ப்பராகமாறப் பகலோனும்புனல்படிவான்பரவைசேர்ந்தான், றகவுடையபாண்டவரும்வண்ணமாதுந் தனித்தெண்ணிப்பரகாயசரிதர்போலப், புகலரியபழையதமவடிவங்கொண்டார் போனபகலோனுதயப்பொருப்பின்மீண்டான். (ருoகூ)

உத்தரநிரைமீட்சிச்சருக்க முற்றிற்று.

ஆக செய்யுள்-கூஉகூ.

---

# பாண்டவர்வெளிப்பாட்டுச்சருக்கம்.

---

* எக்கடலுமெக்கிரியுமெவ்வுலகுமுலகிற்
றக்கபலயோனிகள்சராசரமனைத்து
மிக்கவிதியால்விதிசெய்விதியினைவிதிக்குஞ்
செக்கமலநாபிமுகில்சேவடிதுதிப்பாம். (க)

* அருந்தவர்தொகைதொழுதனந்தரமருக்க
னுருந்தருகமேபெருவாயுருவறுகெறிப்பத்
திருந்திளர்நலம்பெறுசெழுங்கெரிவையோடுங்
குருக்குலம்விளங்கவருகோமகனிருந்தான். (உ)

* காற்றின்மகனுங்கடவுளாதிதிருமகனு
மாற்றமுதிராயமறைவானவர்மகாரு
மேற்றமுறையாலடியிறைஞ்சியிசையோடுந்
தோற்றமுறுமாதருகுசூழ்வரவிருந்தார். (௩)

* தன்னைநிகர்கிற்பவரிலாததனுவல்லோ
னென்னைத்திருநெற்றியினிகத்தவடுவென்றான்
மின்னையும்வெறுத்தொளிருமேதகுநிறத்தாள்
பின்னையவனுக்குநிகழ்பெற்றியுரைசெய்தாள். (௪)

* உரைத்தபொழுதிப்பொழுதினாரழல்கொளுத்தித்
தரைத்தலைவனைத்தலைதடிந்திடுவனென்று
விரைத்தடவரைப்புயன்வெகுண்டுவிலெடுத்தா
னிரைத்துவருகான்மகனுமிருவிழிசிவந்தான். (௫)

* ஒன்றுதவிசெய்யினுமவ்வுதவிமறவாமற்
பின்றையவர்செய்பிழைபொறுத்திடுவர்பெரியோர்
நன்றிபலவாகவொருநவைபுரிவரேனுங்
கன்றிடுவதன்றிமுதுகயவர்நினையாரே. (௬)

* அனலுமுழுதுகானகமகன்றுநெடுநாளின்
நினைவுவழுவாமலிவணீழலிலிருந்தோஞ்
சினமிகுதலிற்றவறுசெய்தனனெனப்போய்
முனிதல்பழுதாகுமெனமுன்னவன்மொழிந்தான். (௭)

முன்னவன்மொழிந்தமொழியான்முரணகற்றி
வன்னியருகெய்தியவண்வைத்தபடைகைக்கொண்
டுன்னரியவான்றவிசினுற்றனர்கள்வானோர்
மன்னனுருவைந்துகொடுமல்குதல்கடுப்ப. (௮)

* குந்திவயின்வந்துதமகுருகுலம்விளக்கு
மைந்தரசும்வந்துதனகன்கடையிருக்கச்
சிந்தனையொடுந்திறைகொள்செல்வநிதியோடு
மைந்தனெடுமெய்தியவர்மலரடியில்வீழ்ந்தான். (௯)

* விராடனைநறுங்குவளைமாலைவியன்மார்பிற்
றராபதியெழுந்தெதிர்தழீஇயினனிருத்திப்
பராவருபெரும்புகழ்படைத்தவருனைப்போ
லராவின்முடிமேலுலகிலார்கொலுளரென்றான். (௧௦)

* அறைமுரசுயர்த்தவனையவனுநனியையா
பொறையுடையவர்க்கலதுபுகழ்புனைதலுண்டோ
வறிவுமுதனற்குணமடாதவரிடத்திற்
குறைதிருவுளத்தினிடைகொண்டருளலென்றான். (கக)

* இந்நகரிலெய்தியபின்னெத்துயருமெய்தா
தெந்நகரியென்னநெடுநாளினிதிருந்தேஞ்
செந்நெல்வயலூடுமுதுசேலுகளுநாடா
நின்னிலுமுயர்ந்ததமர்நீயறியவுண்டோ. (கஉ)

* நின்புதல்வருந்திறல்வருதினியுநீயு
மென்புயவயச்சமரிலென்னருகுநின்றால்
வன்பினொடுவஞ்சனைசெய்மன்னர்படையாவுந்
தென்புலமடைந்திடமலைப்பனிதுதிண்ணம். (கங)

* எனமுரசுயர்த்தவனியம்புதலுமகிழா
மனமிடரகற்றினன்மச்சவளநாடன்
றனையனுநமக்குறுதிதக்கதெனவெண்ணு
மினிமையொடறத்தின்மகனுக்கிவையிசைப்பான். (கச)

* எத்தரையுநீழல்செய்தனிக்கவிகையெந்தா
யித்தரையுநின்னதுநின்னேவலினர்யாமுய்
பத்தரையொடீரரைகொள்படையுநினதென்று
னுத்தரையும்வில்விசயனுக்குரியளென்றான். (கரு)

வில்விசயனுத்தரன்விளம்புதலும்வீரங்
கல்விசெய்கலைத்திறன்வனப்புடையகாளா
யில்விசயமெய்க்குணநின்மிக்கவிளையாளென்
மல்விசயமொய்ம்பனபிமன்னுரியளென்றான். (கசு)

## வேறு.

* விசயன்பொருதுநவமாகவவ்வீரனெஞ்சிற்
கிசையும்படிசொற்றமையொடுமிருந்தபின்னர்
வசையின்றிவாழுந்தமராகியமன்னர்க்கெல்லாத்
திசையுந்தமதூதரிற்சேதியுஞ்செப்பிவிட்டார். (கஎ)

* வெளிநின்றமாற்றம்வெளியானபின்வேட்கையோடுந்
துளியொன்றுமங்குற்கருமேனியன்றுணைவரோடு
மளிநின்றமாலைபுனைதங்கையொடபிமனோடுந்
தெளிநின்றவேற்கைச்சுபேதனொடுவந்துசேர்ந்தான். (கஅ)

## வேறு.

மேகமேனியனெய்தினனென்னலும்விராடன்
சோகநீங்கியபாண்டுநற்சுதரொடுமெதிர்கொண்
டாகமாகமொன்றுமெனவடலுறத்தழுவி
மாகமோங்குபேரவையிடைக்கொணர்ந்தனர்மகிழ்வால். (ககூ)

இராமன்சாத்தகியாதவர்குமாரரெண்ணிறந்தோ
ரராவணைத்துயரீறுறந்தவனுதியாமவர்க்குப்
பராவருந்தவிசுதவியேபலபலமுகமன்
றராதலந்தருமறன்மகன்சாற்றினன்மாதோ. (உ0)

சுவத்திரைப்பெயர்த்துடியிடைதுரௌபதிதன்பாற்
கவிப்பினெய்திடப்பலித்திளங்காளைபோய்த்தொழுதா
னவத்திலாவண்மைசேர்தந்தையர்க்கவர்மிகவுவந்து
தவத்தரும்பயன்பெற்றபொற்றவிசின்மீதிருத்தி. (உக)

அறமுயர்ந்தமாமனந்தினனருள்விழிநோக்கான்
மறமுயர்ந்ததோள்வலியபிமன்னுவைநோக்கி
திறனுயர்ந்தபல்லுரைபுகன்றுதரஞ்சிறந்தான்
விறனுயர்ந்தவேல்விராடனும்விழிகளித்தனனால். (உஉ)

அனையகாலையிற்சுவேதன்வந்தரிதிருவருளாற்
கனையும்வார்கழல்விராடனைக்காலுறப்பணிந்தான்
றனையன்றன்னையாங்கவனெடுத்தாதரந்தயங்க
முனையின்மிக்கதிண்புயமுறவணைத்திதுமொழிந்தான். (உ௩)

ஐயநீயெவணடைந்தனையரியொடுமடைந்த
துய்யவோதெனவுவகையானறையனுமுவரி
மெய்யனோதுவான்விராடநின்மகன்றவம்வேண்டிச்
செய்யபல்படைபெற்றனன்சிவனருளதனால். (உ௪)

மீண்டுமெம்பெருந்துவரைமாநகர்வழிமேவி
யாண்டெமக்கரும்பகைவரையம்பரம்போக்கி
நீண்டவென்றியானெய்தினனின்னுழையென்ன
மாண்டகுந்திறன்மச்சர்கோமகனகமகிழ்ந்தான். (உ௫)

வேறு.

* தெம்மைந்தரென்னுங்களபங்களைச்சிங்கசாப
வெம்மைந்தின்வேறற்கமைந்தொருவீரரான
தம்மைந்தரைக்கண்டுருகுந்தனித்தந்தைமாருக்
கம்மைந்தரும்வீழ்ந்துடன்வைகினரார்வமிக்கே. (உ௬)

பாஞ்சாலதேயமறவேந்தனும்படைஞரோடு
மாஞ்சாயகேள்வியனல்வந்தவளீந்தமைந்தர்
தாஞ்சாரவைவரொடுமேவினன்றரணிநேரும்
பூஞ்சாயவேந்தரெதிர்கொண்டுபுகழ்ந்துபோற்ற. (உ௭)

* பாஞ்சாலபோசகுலமன்னவர்பாண்டுவேந்தர்
வாஞ்சாமனத்தின்வயமித்திரர்மாகதேயர்
பூஞ்சாபவெற்றிக்கொடிக்கேரளர்பொன்னிநாடர்
தாஞ்சால்புடனப்பதிவந்தனர்தானையோடும். (உ௮)

* வந்தோகையோடுமிருபாதம்வணங்கிவைகுங்
கந்தோடடர்க்கைக்கடுங்கோடக்களிற்றுவேந்த
ரந்தோநெடுநாளகன்கானிலடைந்திரென்று
நொந்தோரையாற்றியிருமென்றனனுநிகொள்வேலான். (௨௯)

* தேனிற்குளிர்ந்தசிறகம்புயச்சேக்கையன்னம்
வானிற்பறந்துபுலர்த்தும்புனன்மச்சநாடன்
வேனிற்சிலைவேள்விராடன்புரமேயவன்றே
கானிற்றிரிந்தபரிதாபங்கழிந்ததென்றான். (௩௦)

* பண்ணுக்குருகிப்பறையால்கப்பட்டமான்போன்
மண்ணுக்கிறைவன்மொழிதேறிமகன்செய்வஞ்ச
வெண்ணக்கழிந்தேனினிச்செய்வதென்யாருநீவீர்
கண்ணுக்கிமைபோலிருந்தீர்களேகண்களாக. (௩௧)

என்றானதனுக்கணிமன்னவரேற்றபண்பாற்
குன்றாதவாய்மைபலகூறினர்கொற்றமெல்லா
மின்றேபுகுதுமெனுங்காலையிகல்விராம
னன்றேயெனவாங்கவர்க்கோர்மொழிநவிலலுற்றான். (௩௨)

வேறு.

தோளைப்பழிச்சித்தலைசாய்க்குந்துகடீர்பொருப்பென்றுவமிக்கும்
வேளைப்பழிக்குமடல்வனப்பார்விசயனிசையிற்பெற்றெடுத்த
காளைக்கெனதுதவத்துதித்தகன்னிதனைநீரளித்தபினர்
வாளைக்களிறுகமுகொசிக்கும்வளநாடடர்த்துவாங்குதுமால். (௩௩)

மாயோன்மருகனெனக்கின்றுமருகனுகவாய்த்ததலாற்
றேயாதிபர்கள்பலரெய்தச்செய்தேன்றவமுஞ்சிறப்புற்றேன்
வேயாதரிக்கும்விறற்புயத்தீர்விரைவேமன்றலியற்றவிடை
சாயாதளித்தல்வேண்டுமெனத்தருமனதுவேநலனென்றான். (௩௪)

அற்புக்கொருவன்புகலுமுன்னரரியோடிருந்தபலவேந்தர்
வெற்புக்கிணைத்தோட்புளகரும்பிவிழாவிற்சிறந்தாரக்கணத்திற்
கற்பித்தவன்போற்பலமுனிவர்கணத்தோடடைந்துதவுமியனும்
பொற்புக்கிவரேயெனப்புகலும்புகழ்சேர்வேந்தரவைபுகுந்தான். (௩௫)

மலரோன்வரவுதனைக்கண்டவாளுளிறைவரிவரென்னக்
குலவேலரசர்பலரோடுங்குருநாட்டரசர்விரைந்தெழுந்து
பலதார்புனைந்துபதந்தொழுதுபகருமாசிபுனைந்தவனோ
டிலகுந்தவிசினிருந்துளவாறெல்லாமுரைத்தாரிசைமிக்கார். (௩௬)

கேட்டுமுனியுமிகமகிழ்ந்துகிளருமபிமனணிமன்றல்
கூட்டுந்தினமுமோரையுடன்சொற்றானதுகாறிருப்பதெழிற்
கூட்டுமுபலாவியத்திலெனக்குறித்துப்பாண்டுசுதர்பலராம்
நாட்டுமகிபரொடுமெய்தியிருந்தார்மச்சனகர்விடுத்தே. (௩௭)

மச்சர்பதியுந்நரைதன்மன்றன் முடிப்பாமானகரி
விச்சைவிளங்கும்பலசனருமுனரயிசைக்கேயெறிதிரைநீர்ப்
பச்சைவருணக்கடலுலகிற்பலருமுனரத்தாமேகவி
நச்சைநிகர்வாள்விழித்திருவைநயப்பந்தும்பாக்கமகிழ்ந்திருந்தான். (௩௮)

வாழைநடுவார்கமுகின்முதிர்மரங்கணடுவார்மறுகுதொறுந்
தாழையிளநீர்க்குலைநிலவுந்தாழைப்பந்தல்சிறப்பிப்பார்
மாழையெழுதுபூந்துகிலால்வயங்குவிதானம்வானுறப்போய்ச்
சூழவெடுப்பார்தோரணங்கடொடுப்பார்நகர்வாழ்தொன்மாக்கள். (௩௯)

சாந்தான்மெழுகிக்கர்ப்பூரந்தன்னாலிரேகைசிறப்பித்துப்
பூந்தார்துயலவெண்டரளம்புனையுமலங்கறுகிர்மாலை
வாய்ந்தார்மன்றன்மண்டபத்திற்றுயலவனப்புமலிவித்துச்
சேர்ந்தானுபலாவியத்தரசன்செல்வீர்வரையித்தினமென்றே. (௪௦)

உரைப்பத்தருமனரித்தமகனுவந்துசிறுவன்றனைவனப்பிற்
றரித்துக்கால்கொண்மேருவெனுங்கந்திப்பிடரின்மிசையிருத்தி
விரித்தவரசர்புடைசூழமின்னாரிருவரொடுமேகித்
தரைக்குளுவமைபெறற்கரியதனிமாநகரிற்சார்ந்தனரே. (௪௧)

ஆனையிழிந்துமான்மருகனரியமணிமண்டபத்தடைந்து
வேனின்மதனுந்தலைவளைப்பவிறலாதனத்திலமர்ந்திருப்ப
மீனையுறழுநெடுங்கண்ணாள்விளங்குத்தரையையிரதியெனு
மானைநாணங்கொளக்கொணர்ந்துவைத்தார்வனப்பார்மடமாதர். (௪௨)

வேதமுனிவர்மறையொலியும்விண்ணோர்பொழியுமலர்மழையுங்
கோதின்மடவார்வாழ்த்தொலியுங்குமுறுமுரசின்பேரொலியு
நீதிதருவெள்வளையொலியுநிலமும்விசும்புந்தலைமயங்கச்
சோதியிரவிகனலிரண்டுசுடர்சான்றாகமணமுடித்தார். (௪௩)

மாலைமாற்றிமாமணிமங்கலமுந்தரித்துமாமுனிவர்
சாலப்பகராசிகள்புனைந்துதழலைவலம்வந்தணிசிலைவேற்
சோலைக்குயிறன்பதமாற்றிப்பொரியுஞ்சிந்தித்துவரிதழ்வாய்ச்
சாலிக்கடியிற்பணிந்தெவர்க்குந்தாழ்ந்துட்புகுந்தார்சால்பாக. (௪௪)

ஆனைகுதிரைதேர்த்திரளோடணிநாடரிவையர்கள்பல்லோர்
சோனையெனப்பால்பொழிநிரைகள்சோதிமயமாமணிப்பணிகள்
வானிலரிதாம்பட்டாடைமுதலாமச்சர்குலமன்னன்
றானையரசர்சிரந்துளக்கத்தந்தானரணந்தன்மகட்கே. (௪௫)

வந்தோர்பலர்க்குங்கரியமுகில்வண்ணன்றனக்குமருட்குந்தி
தந்தோர்தனக்குநகரிலுறுசனங்கடனக்கும்வெவ்வேறாய்
முந்தாவமுதுகந்தமலர்முதன்மையடைக்காய்பணியாடை
நந்தாதளித்துப்பூசித்தானும்விராடனெனுநலத்தோன். (௪௬)

அவியால்வானோர்பெறுங்கடனுமன்பான்மறையோர்பெருங்கணமுங்
கவியார்புலவரீவானுங்காவல்வேந்தர்விழாவானும்
புவியோரமுதினுணவானும்பொன்னலறிஞர்குழுவுமனங்
குவியார்களித்தாருத்தரைதன்குணத்தாற்களித்தார்பாண்டவரே. (௪௭)

மன்றன்முடிந்துத்தரைகொங்கைமார்பிற்றிளைப்பநலநுகர்ந்து
குன்றமெறிந்தோனிவனென்னுங்குமரனிருப்பக்குருநாடன்
வென்றியரசர்பலரோடும்விடைபெற்றகன்றுவிறலோடுஞ்
சென்றங்குபலாவியம்புகுந்தாங்கமர்ந்தான்சிங்காதனத்தம்மா. (௪௮)

வே று.

தண்படுசெஞ்சொல்வில்லிமாநகரோன்றருதமிழிரண்டெனுஞ்சதமும்
பண்படுவயல்சூழ்முதலையூராளிபகர்தமிழ்நாவில்வாழ்வாணி
யெண்படுகவிதையெழுசதத்தெழுபத்திரண்டுமாவிசைந்துளதென்பர்
விண்படுமுனிசொற்றொகுத்தெடுத்துரைத்தவிராடபருவத்தொகைவிளக்கம்.

பாண்டவர்வெளிப்பாட்டுச்சருக்க முற்றிற்று.

ஆகசெய்யுள்-௬௱௩௰௫.

---

விராடபருவம் முற்றிற்று.

---

ஐந்தாவது,

# உத்தியோகபருவம்.

## உலூகமாமுனிதூதுசருக்கம்.

உரந்தந்தவோங்காரத்துள்ளொளியாய்க்கருமமுதற்கொருவனாகித்
திரந்தந்தகளிற்றுமுகத்தேவனுமாய்த்திகையதனிற்சிவனார்க்கன்றாட்
சரந்தந்தமால்கோயிற்றென்வீதியெழுந்தருளித்தமியேற்குய்ய
வரந்தந்தவுதவிவிநாயகன்கமலமலர்ப்பதத்தைவணங்கிவாழ்வாம்.

* மீனமாகியுங்கமடமாகியுமேருவையெடுக்குந்தா
ளேனமாகியுமாளரியாகியுமெண்ணருங்குறளாயுங்
கூனல்வாண்மழுத்தரித்தகோவாகியுமரக்கரைக்கொலைசெய்த
வானநாயகனாகியுநின்றமான்மலரடிமறவேனே. (க)

கடந்தரும்படைக்காவலர்திருவுருக்கரந்ததொட்டிதுகாறு
நடந்தபான்மைநான்காகியபருவமென்றருமுனிநவில்போதிற்
குடங்கையுட்படாநெடுங்கணாள்வபுட்டைதன்கொழுனன்மெய்ப்புளகோங்கித்
தொடர்ந்திசைத்திமேற்செயலெனவினவலுந்தூய்முனிபுகல்கின்றான். (உ)

வேறு.

முன்னிச்சமருக்கொருப்பட்டமுடிமகீபர்
பின்னிற்பலருமுடன்மேவப்பெயர்ந்துபோந்து
வன்னிப்பொதும்பர்வயின்வைத்தவயங்குசோதி
மின்னிற்றிகழ்வெம்படையாவுமீண்டுகொண்டார். (ங)

சேயோன்விழைவும்விழைவோடுசிறந்தபின்னர்
மாயோருமாயக்குருமைந்தருமன்னர்யாரும்
போயோதைவீதியுபலாவியம்புகுந்துதங்க
ளாயோதனத்துக்குறுநீர்மைகளாயலுற்றார். (ச)

வேறு.

* வல்லினாலவன்கொண்டமண்மீளவும்வல்லினாற்கொளலன்றி
வெல்லினாலமர்மலைந்துகொள்ளுதுமெனல்வேந்தர்நீதியிலன்றாற்
சொல்லினாலொருதூதினாலறியலாஞ்சுயோதனனினைவென்று
கல்லினாலருங்கனமுகில்விலக்கியகரியமாமுகில்சொன்னான். (ரு)

* உரியவம்புவிக்கவனையுமுதிட்டிரன்வலிமையும்பலர்காண
வரியவெம்பருஞ்சூதினால்வென்றுபல்லாண்டடிப்படவாண்டான்
றிரியவன்புடன்வாங்குதற்கெண்ணுமத்தீமதிகொடிதென்று
கரியவன்புகல்கட்டுரைகேட்டபின்காமபாலனுஞ்சொன்னான். (௬)

* இளையசாத்தகிதமையனையிக்கருத்திதையமாகினனாகில்
விளையுமாற்றநின்றிருவடியினுமிகவெள்ளையாகியதீதென்
றுளையவார்த்தைகளுரைத்தனனுறைத்தலுமுற்றவரிடுக்கண்கள்
களையுமாப்புயலிருமொழியினுமிலைகட்டுரையினியென்றான். (௭)

செய்யகோலறமாட்சிமைசெலுத்தியுந்தெளிந்துநற்கலையெல்லா
முய்யபேதமொன்றிலாமையால்விளைந்ததிவ்வுரைபல்தேவன்பால்
வெய்யவாய்மொழிபகர்வதென்மறப்பதேவேண்டுதனெறியென்றான்
பையராவுமிழ்மணியிருளடக்கியபாருடைப்பாஞ்சாலன். (௮)

கைதவம்பெறுகாவலன்கொண்டமண்கருதிலேமவையோர்முன்
செய்தவஞ்சினஞ்செலுத்துமாறுன்னினர்தீமதியெனலாமோ
வுய்திறந்தருதுளவினோன்றாதினாலுணர்கெனவிறைநீதி
பொய்தராவகைபுகன்றதிக்கணத்தமர்பொருகினுமரிதன்றே. (௯)

என்றுகூறினன்மச்சர்கோனுங்குறுமெழிலிவண்ணனைநோக்கி
மன்றன்மாளிகைத்துருபதன்நான்மறைவல்லவன்றனைச்சுட்டித்
துன்றுநான்குபாயங்களுந்தெரிந்தவெம்புரோகிதன்மனந்தூய
னின்றுதூதுநீரேவுதற்கிசைவெனிலேற்பதிங்கவர்க்கென்றான். (௧௦)

அவையினுள்ளவர்பலர்மனத்திசைவுமாங்கறன்மகன்முதலாய
குவவுதோளினர்சிந்தையுங்கருமமுங்குறித்திதுபுகல்கின்றான்
புவியிலாண்மைசேர்வேந்தருக்கமர்த்துணைபுகும்படிதூதேவி
நவையிலாழ்ந்தவன்றாதுமுற்படாவணநாட்டுதல்கடனென்றும். (௧௧)

* பேருலூகமும்பிணையுநல்கியபெரும்பிறப்புடைப்பரித்திண்டேர்க்
காருலூகலனிகரடிக்களிருடைக்கண்ணிலாவரசன்பாற்
சீருலூகனைத்தூதுசென்றிவர்மனஞ்செப்பிமீள்கெனப்போக்கென்
றோருலூகலமுடன்றவழ்ந்தவன்றனதூர்புகுந்தனனன்றே. (௧௨)

* இந்தவந்தணனிசைத்தனவாறெலாமியைபுடனினிதாக
வந்தவந்தனோடுரைத்திடினவனினதவனிதந்திலனாகின்
முந்தவந்தண்மாமுரசகேதனதிருமுகம்வரவிடவென்று
வந்தனற்றுருபதனலாமன்னர்தம்மானகரடைந்தாரே. (௧௩)

* அரசர்போனபின்மால்பணிதவறறவாங்குருதவர்க்கெல்லா
முரசகேதனன்படைத்துணைவரத்திருமுகம்பரப்பியபின்னர்
விரைசெய்மச்சநாட்டிறைவனுந்துருபதமீளியுமிளையோராம்
வரிசையாற்றவிசுய்த்திருந்துலூகிதமாமுனிக்குரைசெய்தார். (௧௪)

ஐயகேட்டிமெய்த்தினையாம்புருந்தரசவைதனிலெய்திச்
செய்யவீடுமன்சிலைக்குருவவனுடைச்செய்தவிதுரர்க்கும்
வையமாளுடையெந்தைக்குமெம்முடைவந்தனமுதற்கூறிப்
பொய்யிலாய்பிறர்க்குரியசொல்வழங்கெனப்புகன்றனனறன்மைந்தன். (௧௫)

வேறு.

சாலத்தவஞ்செய்தாற்றிபெறுதரணிக்கதிபன்றுருபதனும்
வாலக்கதிர்போலெதிரிருந்தமறையோன்மலர்வாண்முகநோக்கி
நீலக்களனைநிகராமேனாய்நீசென்றவர்சிறப்பெய்த
ஞாலத்தொருவன்முதலோர்பாலுறும்பயின்றுநன்பாகி. (௧௬)

விரதமுனியுஞ்சிலைமுனியும்விருத்தவரசும்விதுரன்முதல்
வரதர்பலருமிவரன்பின்மல்கப்பயின்றமற்றவர்தஞ்
சரதமொழிகொண்டவையிலுறசர்ப்பகேதுமுதலானோர்
கருதுநினைவுந்தேர்ந்துணர்ந்துகருமந்துணிதிகவலாதோய். (௧௭)

என்னப்பலவுமெடுத்துரைத்தேயிருகைகுவிப்பயிருந்தோர்க்குப்
பன்னிப்புகலாசிபினெழுந்துபடர்ந்துபதிநீத்தொளியிழந்த
மன்னைப்பரவுமத்திநகரடைந்தான்மடவார்கண்ணளிக
டுன்னற்கரிதாகியுமிசைசேர்சுரும்பார்கமலத்துணைத்தாரோன். (௧௮)

பேசற்கரியவுலூகனுமப்பெருமானகரியெய்துறுமுன்
வாசத்தவளவலம்புரியான்மணிமண்டபத்தினிடையிருந்து
பூசற்கன்னன்சகுனிதனக்குரைத்தானவர்பொறித்தேவுந்
தேசிற்சிறந்ததிருமுகத்தின்செயல்களயலார்வயின்றேர்ந்தே. (௧௯)

அவருஞ்சிலையாரியன்முதலாமவைவல்லவராமடுத்துன்னிக்
கவரும்விழியின்புலனற்றகாவல்வேந்தைக்கொணர்வித்துத்
தவரைநகருக்கரவுயர்த்தோன்சூழுமாறுந்தோள்வலியாற்
றவறிலவரைத்துணைவேண்டத்தகுவதெனவுஞ்சமைத்தாரே. (௨௦)

வேறு.

தேயமெங்கெங்குஞ்செங்கோற்செலுத்துமித்திகிரிவேந்த
ராயவர்தம்மைக்கூட்டவவைவினிற்றூதுபோக்கிக்
காயமுமுயிருமாகிப்பொருடொருங்கலந்துநின்ற
மாயவன்றன்னைக்கூட்டமன்னர்கோன்றுவரைசேர்ந்தான். (௨௧)

மாடவிழ்வீதிமூதூர்வயங்குமாமதிலின்றூற்ற
மேடவிழ்துளபமாலிங்கிருந்தனனென்றுகேட்டு
சேடன்வந்தனந்தகோடிசெங்கதிர்மணியின்பத்திச்
சூடிகர்மகுடந்தோறுஞ்சூழ்ந்ததோர்தோற்றம்போலும். (௨௨)

கார்க்கடல்வண்ணன்றன்பாற்கண்டுயிலொழிந்துபோந்து
மேற்கடற்றுவரைமூதூர்மேவரும்விரகுநோக்கி
போர்க்கடற்பொறிகள்யாவும்பொரித்தவெம்புரிசைதன்னுற்
பாற்கடல்வளைந்ததொக்கும்பன்மலரகழியம்மா. (௨௩)

ஈண்டுநீவரினுமெங்களெழி லுடையெழிலிவண்ணன்
பாண்டவர்தங்கட்கல்லாற்படைத்துணையாகமாட்டான்
மீண்டுநீபோகென்றந்தவியன்மதிற்குடுமிதோறுங்
காண்டகுபதாகையாடைகைகளாற்றடுப்பபோன்ற. (உ௪)

அருள்குடியிருக்குங்கண்ணனவதரித்தனனென்றெண்ணித்
தரணியின்மீதுவந்துதன்னுடைச்சோதிவைகும்
பரமமாஞானபோகப்பதிகுடிபுகுந்ததென்னத்
திருநகர்வீதிபுக்கான்சித்தசித்துணர்விலாதான். (உ௫)

கூறியநாகவேகக்கொடியவனடையாமுன்னந்
தேரியதுளவத்தாரோன்சிந்தையிற்றெளிந்துபைந்தே
னூறியதொடையன்மார்பன்றனஞ்சயனுறுகவென்று
மாறிவான்றூதுபோக்கவக்கணத்தவனும்வந்தான். (உ௬)

வந்தமையறிந்துகொற்றவாயிலோர்தம்மைநோக்கி
யந்தகன்மைந்தன்முந்திலறிவியாதழைமினென்று
சந்திரனொடுங்கிநிற்கத்தபனனேசரிக்குமாறு
பந்தனையிலாதோன்போயற்றத்துயில்வரப்பள்ளிகொண்டான். (உ௭)

பொற்புடைப்புனிதன்கோயிற்புறனிலத்தனிகநிற்பச்
சற்பவெம்பதாகைவேந்தன்றடையறத்தனிச்சென்றெய்தி
யுற்பலவண்ணன்பள்ளியுணர்ந்திருதுணையுமிட்ட
சிற்பநற்றவிசினேறித்திருமுடிப்பக்கஞ்சேர்ந்தான். (உ௮)

வந்திலன்விசயனென்றுவான்றுயில்புரியும்வள்ளல்
சிந்தனைசெய்யுமெல்லைசிந்தையிற்கடியதேரோன்
பந்தனையறுக்கும்பாதபங்கயம்பணிந்துநிற்ப
முந்துறவிழித்துநோக்கிமுகமலர்ந்துரைசெய்தானே. (உ௯)

நின்றவனிருந்தவேந்தன்வரவினைநிகழ்த்தநேமி
பொன்றிகல்படையோனந்தப்பொய்த்துயிற்பாயனீங்கி
மன்றலந்தொடையன்மார்பன்வரவெனக்குரைசெய்யாதே
னென்றுரைசெய்துபுல்லியின்சொலானுவகைசெய்தான். (௩0)

இருவரும்வந்தவாறேதியம்புதிரென்றுவாசு
மருவிரிதுளபமாலைமரகதவண்ணன்கேட்கச்
செருவினீயெமக்குவெம்போர்செய்துணையாகவேண்டும்
பொருவிலோயென்றுகொண்டவ்விருவரும்புகன்றகாலை. (௩௧)

உற்றவர்க்குதவிசெய்வானுதிட்டிரன்றனக்குமுன்னே
சொற்றனன்மொழியொன்றுண்டுதுயி லுணர்பொழுதத்தின்று
விற்றவில்விசயன்முந்தவிழிக்கிலக்கானனென்று
பற்றறத்துணிந்துசொன்னான்பாண்டவர்சகாயனானேன். (௩௨)

முடைகமழ் முல்லைமாலைமுடியவனிதனைக்கூறித்
தடையறப்பின்னுமோர்சொற்புகன்றனன்சமரினூடு
படையெடுத்திகல்செய்யேனென்மற்றையெம்பதாதிமைந்த
ரடுபடைத்திறலோராருமொருவர்பால்யானோர்பாலே. (௩௩)

இருமுறையிதுவேயென்றுங்கிருந்தபார்த்தனைத்தானோக்கி
வடுவறக்குறித்தியென்னமாலொருவனுமேயென்று
னெடியமாமுகிலுநேர்ந்துநினக்கினிவிசையாபோரி
லடுபடையின்றிச்செய்யுமாண்மையொன்றறைதியென்றான். (௩௪)

செருமலியாழியங்கைச்செழுஞ்சுடர்நின்றென்றேறிற்
பொருபரிதூண்டிவிந்தப்பூதலத்தரசரொன்றோ
வெருவருமியக்கர்விண்ணோர்விஞ்சையரெனினுமென்கை
வரிசிலைக்குழையவாங்கிமணித்தலைதுணிப்பனென்றான். (௩௫)

அடற்சிலைவிசயனிவ்வாறுரைத்தலுமமலன்வஞ்சப்
படவரவுயர்த்தவென்றிப்பார்த்திபன்றன்னைநோக்கி
நடையுடைப்புரவித்திண்டேர்நானிவர்க்கூர்தலின்றி
மிடைபடையேவினும்மோடமர்செயேன்வேந்தேயென்றான். (௩௬)

எம்மையேயொழியவுள்ளயாதவகுலத்துளோர்க
டம்மையுமெம்முன்னனாலகேதுவையுஞ்சேரச்
செம்மையோடுதவியாகக்கொண்டுநீர்சேருமென்று
மும்மையுமுணர்ந்தநாதன்முன்னுரைத்தின்னுஞ்சொல்வான். (௩௭)

கிருதவன்மாவக்குரோணிகிளர்படையோடுநும்பால்
வருவனென்றுரைத்துவேண்டுமதுரவாசகங்கள்கூறி
விருதராயுயர்ந்தோர்தம்மைவிமலன்விட்டவர்களோடுங்
கருதலான்வினையமொன்றுங்கண்ணன்முன்னோனைக்கண்டான். (௩௮)

கண்ணனங்கருளிச்செய்தகட்டுரைப்படியேசங்க
வண்ணனுக்கிளவல்சொன்னமாற்றமுமருகன்சாற்றி
யெண்ணருந்தொகைகள்சேனையாதவர்குமரரோடு
மண்ணலைவருகென்றோதியத்தினபுரியுட்புக்கான். (௩௯)

புக்கவன்மீண்டுபாண்டுபுத்திரர்க்குதவியாகி
மிக்கமத்திரத்தான்சேறல்சாரணர்விளம்பக்கேட்டே
தொக்கமாநெறியினோர்தண்சோலையின்மறைந்திருந்தே
தக்கவர்பெயராற்றங்குஞ்சல்லியற்கிதஞ்செய்வித்தான். (௪௦)

வாசநீர்பனிதந்தொங்கன்மலியடைக்காய்கண்ணாடி
தேசுறுதவிசுமெத்தைத்தேவரும்பருகற்கெட்டா
மாசிலோதனம்பதார்த்தங்கவரிகால்வழங்கும்பிச்சம்
பூசுதல்முதலவெல்லாவியற்கையும்புணர்ப்பிற்செய்தான். (௪௧)

வேடையாலயர்ந்தமேனிபுளகெழவேந்தர்கோமான்
வாடைசார்மண்டபத்தில்வான்றவிசேறிவைகி
யோடைவெங்களிற்றுமன்னருதவிசெய்தவரிங்கெய்தி
லாடைசேரவனிமுற்றுங்கேட்கினுமளிப்பனென்றான். (௪௨)

நாடியகருமங்கூறுமிடமிதேயென்னநண்ணிச்
சூடியமுடித்தார்வேந்தன்சுயோதனன்றன்பேர்நாட்டி
நீடியவவைபினெய்தனிருபனுமிறுகப்புல்லிப்
பாடியபுகழோயென்னேகுறித்ததுபகராயென்றான். (௪௩)

பாண்டவர்க்குதவியாகிப்படருதன்மறுத்தென்பக்க
லீண்டிநீயுதவியாதலெனக்குபகாரமென்ன
நீண்டவேலுடையாயவ்வாறளித்தனன்சேறிநேயம்
பூண்டபான்மையினுறப்புக்குமீள்வனென்னுரைபொய்யாதே. (௪௪)

என்றுரைத்தளவினன்றென்றிசைந்திவன்மீண்டுதன்னூர்ச்
சென்றனன்மத்திரேசனுபப்பிலாவியத்தைச்சேரக்
குன்றுறழ்த்துணைவரோடுமுதிட்டிரனெதிர்கொண்டாங்கு
வென்றியிற்றழுவியெல்லாவரிசையும்வியப்பச்செய்தான். (௪௫)

அங்கவருடனேவைகிவிழைவொடுமமர்ந்தபோதிற்
றுங்கவேற்சுயோதனன்செய்சூட்சியுமவனுக்கன்று
வெங்கொடும்போரில்வெற்றிப்படைத்துணைநேர்ந்தவாறுந்
திங்கணன்மரபுக்கேற்றசெல்வனுக்குணர்வித்தானே. (௪௬)

பாரெலாம்புகழுநீதிபார்த்திபன்மகிழ்ந்துநோக்கிச்
சீரெலாமெய்திற்றேனுந்தீர்ந்துளதாயிற்றேனு
மாரருளறம்வழாமலளிப்பதேகடனுமன்றே
தேரலாலொருவருண்டிதுய்த்தவரொடுசெயிர்ப்போர். (௪௭)

ஆதலாலுனதுநீதிக்கழகிதேயவர்மாட்டெய்திற்
காதலாலெமக்குமோர்கைம்மாறுநீகருதல்வேண்டுங்
கோதிலாயதுவேதென்னிற்கொடுங்கதிர்மதலைபார்த்தன்
மீதுறுபகையாய்நின்றான்வெற்றிகைக்கொள்வதுன்னி. (௪௮)

வலவர்தந்தொழிலான்மிக்கோர்மாயனும்நீயுமென்றே
யுலகெலாம்புகழாநின்றதாதலாலுவணமூர்தி
யிலகியநரன்றேரூர்தற்கிசைந்தனனிதற்குமாறா
யலரிசேய்க்கிரதந்தூண்டலுன்வயினடுக்கும்போலாம். (௪௯)

அவ்வகையடுத்ததென்னிலாரருட்டிறம்பாதாண்டு
பொய்வலிக்கதிர்தந்தோற்குப்புயவலிதேயுமாறுங்
கைவலிக்கொருவன்வெற்றிகாணுறுமாறுமுன்னிச்
செவ்வியோய்காதல்வேண்டுந்தேவர்கோன்மகவையென்றான். (௫௦)

வேறு.

எண்டிசாமுகத்திபங்கள்பொன்னாடுடைக்கோதொழுதியதிருநாமங்
கொண்டகோமகன்கூறியவாய்மையாற்கன்னமுங்குளிர்ப்பெய்தி
மண்டுபோரில்யானங்கர்கோன்பேர்விடவந்தனையிவ்வாய்மை
தண்டலின்றியான்புகுப்பமென்றுரைத்திதுசாற்றினன்றகையோடும். (ருக)

செய்தவங்களானதியாலாண்மையாற்பழுதிலாச்செயல்வல்லீர்
மெய்தரும்புவிபுரந்தகல்விசும்புமேளார்வழிபவாழுகநின்னங்
கைதவங்களாற்சூதினான்மாட்சிமைகருதுமேவார்கதிரோன்முன்
பெய்தரும்பனியாமெனக்கழிவதற்கையமோபேசீரே. (ருஉ)

மன்னர்மன்னனோடுவிட்டடவிபோய்மாதுடன்றுயரெய்திச்
சொன்னநாள்வரைதொலைத்துளீர்சசியுடன்சுனாசிமுற்பகல்வானிற்
பன்னருந்துயரெய்தினனவ்வணம்பரிபவமுழந்திர்நீ
ரென்னவக்கதைவினவினனுதிட்டிரனவனெடுத்துரைசெய்தான். (ருங)

தொல்லைவானவர்குருவினின்மேம்படுதுவட்டாவெனும்பேரோ
னெல்லைமாமகபதிதனக்கிதமொன்றுன்னிமானதந்தன்னிற்
சொல்லுமுன்னரோர்சுதன்வரநல்கியிச்சுவர்க்கமோம்புதல்வேண்டி
யெல்லைதீர்தவமியற்றெனப்பணித்தனனிழைத்தனன்றவமம்மா. (ருச)

விண்ணையாள்பவனுணர்ந்தரம்பையர்களைவிடுத்தவன்றவமுற்று
வண்ணமாயைகள்பலபலவியற்றினன்மாதவனுணரானாய்ப்
பண்ணலுந்தவம்பாகசாதனன்வெகுண்டொருவருமறியாவா
றெண்ணியாங்கவன்றனையுயிர்தொலைத்தனனிரங்கியதுயிரெல்லாம். (ருரு)

குற்றமின்றியங்கவனுயிர்கோறலிற்கொடும்பவந்தொடர்ந்தெய்தி
மற்றிவன்றனைநோதகபுரிதலும்வயிரவாட்கரத்தண்ண
லுற்றவோர்விரதத்தினாலப்பவமொதுக்கினன்றருமண்ணீர்
சொற்றமங்கையர்பாலுறப்படுத்திவாழ்ந்திருந்தனன்சுரரோடும். (ருசு)

அனையதன்மைதேர்துவட்டாவென்பவனாரழல்விழிசிந்தி
வினையமீளவுமுன்னியோர்மகக்கனலதில்விருத்திரநாமத்
தனையனெய்திடவியற்றினனெய்தினன்றகுவர்கோன்றலமூன்றும்
புனையுமோர்குடைநீழலிற்புரந்திடுபுயவலிக்குறிகாட்டி. (ருஎ)

வந்தமைந்தனையாதரித்தமரரைவாய்மடுத்துலகெல்லாந்
தந்திடென்றுதன்றந்தைகட்டுரைத்தலுந்தகுவனும்வெகுண்டெய்தி
யிந்திரன்கொடுங்களிற்றின்மீதமரரோடெதிரமர்தரமேவச்
சிந்தைசெய்திலன்விழுங்கினனாரையுந்தெய்வவாரணத்தோடும். (ருஅ)

அண்டர்விஞ்சையரியக்கர்கந்தருவரையாதியோரகட்டெய்திப்
பண்டுபோலிருந்துன்னியோர்மாயையாற்பருகினான்கொட்டாவிக்
கொண்டகாலையிற்குப்புறலாயினார்குமரவேள்கணைபாய
விண்டதாருகன்புண்வழிபாரிடர்மீண்டுவந்துளவாபோல். (ருகூ)

தேறிவானவர்நாயகனிவனெதிர்செய்தமர்முடியாவென்
றூறிவெஞ்சினமீண்டனனமரரோடசுரர்கோன்றலமூன்று
மாறிலாவகைபுரந்தனன்சசியொடுமகபதிகதிர்மேரு
வேறிவைகினன்சிந்தையுமூற்றமுமெண்ணமும்பிறிதாகி. (௬௦)

விருத்திராசுரன்றனதுழைமாதவவிருடியர்விரைந்தெய்தி
யருத்தியோடவன்வழிபடவாசிசொற்றரியொடுவெகுளாயேற்
கருத்திலுன்புயவலிநலமாமெனக்கழறலும்விழைவாகி
மருத்துவன்புரத்தெய்திவீற்றிருப்பவோர்வரமளித்தனனன்றே. (௬௧)

எனக்குநீவிர்களோர்வரந்தரவெனவிசைத்தலுமேதென்னத்
தனக்குவானவர்படையினுலீறிலாத்தன்மைதந்திடவென்றுன்
முனிக்கணங்களம்முறையவர்க்குதவியேமுண்டகமலர்நெதன்னக்
கனக்குமாயிரக்கண்ணனைத்தன்பதிக்கண்ணுறுவித்தாரே. (௬௨)

வாழ்வுமேம்படுதன்மையுமாணையும்வலியுமாசுரன்கொள்ளத்
தாழ்வுதன்சிரந்தாங்கினுட்பற்பலதள்ளினன்சதயாகன்
வீழ்தராதமுன்வயிரமுமெதிரியைவெல்வதுங்கருத்தாகி
யூழ்தனுதமுன்னடப்பமால்தன்புரத்துற்றனனுயிர்ப்போடும். (௬௩)

பச்சைமாலடிபணிந்துளவாவெறலாம்பகர்தரச்செவிசாய்த்தே
யச்சநீத்தினிச்சிறிதுநாளிருத்தியாங்கவன்படைகளின்மாயா
னிச்சையோடுவர்க்கடற்கரைமருங்கினிலிரவிவீழ்ந்திரவெய்தாப்
புச்சமாகியசிறுவரைப்போழ்தினிற்புகுந்துளானெனின்மன்னே. (௬௪)

தேர்ந்துநீயொருதிரணமத்தீயவன்றன்மிசைசெறித்தாயேற்
போந்துநானதிற்புகுந்தவன்சென்னியைப்புரட்டிவீழ்த்துவனென்னச்
சார்ந்துமீளவுந்தனதுழைத்தாங்கினன்சிலதுநாடானேக
வேந்தலவ்வணமோர்தினத்தெய்தினனிந்திரனதுகண்டான். (௬௫)

மாலையக்கணஞ்சிந்தனைசெய்தொருதுரும்பினுன்மறையோதி
வேலைவாய்தனிலாசுரன்றன்மிசையோச்சலும்விண்டெய்தி
வேலையாழியைமுத்தலைப்படையினைவெல்லுவதிதுவென்னச்
சோலைவாயவன்சென்னிவீழ்த்தகன்றதச்சுரர்மலர்மழையோடும். (௬௬)

தீயவாசுரன்மாண்டதுநோக்கியதேவருமவர்கோவு
மாயவற்கவண்பூசைசெய்துளமிகமகிழ்தரநகர்புக்கார்
தூயவன்றருமகவினைமகபதிதுணிப்பதேயெனவெம்பி
யாயுமிக்குளவுயிரெலாஞ்சலித்ததாங்கடைந்தாற்பெரும்பாவம். (௬௭)

ஆன்றகேள்வியுந்தேசுமெய்த்தவமுநற்றிருவொடுமகன்றும்பர்
தோன்றலக்கணத்தச்சமுஞ்சிந்தையிற்றுளக்கமுமளப்பின்றித்
தேன்றருங்குளிர்தாரினன்புலோமிசைசெழுந்தனங்கொடனீக்கி
யூன்றுமாநிடதக்கிரியடைந்தவனுறைந்தனன்றுயரோங்க. (௬௮)

ஆண்டநாயகனீங்கலுந்தாய்பிரியபூங்குழக்கன்றேபோன்
மாண்டவும்பருமுனிவருமயிர்ப்பொடுவந்திவன்றனைநோக்கி
மீண்டுநீபுகிலெவ்வணமியாந்தனியிருக்கவென்றெடுத்தோதிப்
பூண்டுதாள்களிற்புலம்பினரலம்புரிபொருவில்சிந்தையினோடும். (௬௯)

மாற்றமொன்றிலாதிருந்தல்கண்டவருளமாழ்கிமீண்டெல்லோருந்
தோற்றமிக்குளநாங்குலத்துடன்முன்றோன்றியாசிகணல்கிப்
போற்றுமெம்மிறையகன்றனன்விண்ணெலாம்புரக்கநீவருகென்னச்
சாற்றிமற்றவற்குதவினர்யாவருந்தவவலித்தேசெல்லாம். (௭0)

பெற்றபெற்றியானகருக்கரசனைப்பெயர்த்திவன்முடிசூடிக்
கொற்றமோங்கவேயிந்திரனிருந்தருள்கோத்தவிசினிலேற்றிச்
சுற்றுவானவரியக்கர்கந்தருவர்தாமொழவரம்பையர்பாட
வெற்றிமேம்படவிருந்தனன்யாவரும்வியந்திடநயந்தம்மா. (௭௧)

வேறு.

ஈறிலாதமதன்கருப்புவில்லிற்றொடுத்தெண்ணிலேயவுகோ
றூறிலாயிரகோடியென்னினுநொய்தெனப்படுமவ்வணை
மாறிலாதவனப்பின்மங்கையர்மாமுலைச்சுவடன்றியோ
ரூறிலாதவுறுப்பினனனுராகபோகமுகக்குநாள். (௭௨)

தாவுகொம்பினைநீங்கிவாடைதனிற்றியங்கியவல்லிபோற்
கோவிகந்துதனித்திருந்தகுணாலையச்சசியோர்தின
மேவுமாதர்களாயமோடெதிர்மேவல்கண்டுமயங்கியே
பாவகாரிகுயாசலந்தொடுபான்மைசிந்தைபடுத்தினான். (௭௩)

தக்கவர்க்குறுகண்டருந்தசகண்டனற்சனகன்றரு
மைக்குழற்குளமாழ்கிநின்றமயக்கினுக்கிணையாகவே
மிக்கமங்கையருடலாடல்வெறுத்திகந்தனன்விண்ணிடைத்
தொக்கமாமதிநிலவுகண்டவர் * சுக்கைகண்டுதுதிப்பரோ. (௭௪)

ஆதனத்திலமர்ந்திருந்தயிராணியைக்கொணர்வீரென
மீதலத்தரையுய்ப்பமாதுவெருண்டுபொன்னுழைமேவியே
சேதனச்செயலற்றவன்றெருமரலியற்றுதல்செப்பினாண்
மாதனச்சுமையால்வருந்தியொசிந்துதேய்ந்தமருங்குலாள். (௭௫)

பொற்பினுக்குவமிக்குமங்கைபுகன்றவாய்மைமனங்கொடே
கற்பினுக்கிடையூறிலாவகைகாப்பனஞ்சலெனக்கரைத்
துற்பவத்தொழிலோனையேநிகரோதுதேசிகனீதிசேர்
சொற்பயப்புறவந்துளாரொடுசொல்லியேவினனென்பவே. (௭௬)

வந்ததூதருரைத்தவாய்மைமனங்கொளான்வெகுளிக்கனற்
சிந்தியென்னுரையைத்தடுப்பதுதேசிகற்கியலோவெனப்
பந்தமோடுகுறித்தரம்பையர்பலரையேவினன்மீளவுங்
கந்தவார்குழலாளுணர்ந்துகருத்திலிவைகூறினாள். (௭௭)

* சுக்கை - நட்சத்திரம்.

தக்கசொல்லுணராவரீதியர்சார்பினேற்பதுதாழ்வதாம்
புக்குநல்லுரைகூறிமீள்வதுபுலமையென்பர்புராதன
ரிக்கணந்தமியேனரம்பையரெண்ணிலாரொடுமெய்தியான்
மிக்கவாய்மைவிளம்பிலென்செயவல்லனுரும்வியப்பரே. (எ௯)

ஏற்பதாமெனநின்கருத்துளவென்னிலேகுவனென்னலுங்
காப்பலுன்னைவருந்தலவ்வணமேகிமீளுவைகடிதென
நாற்பயன்பெறு * சீவனோதநடந்தரம்பையர்பலரொடும்
போர்ப்பெரும்புலிநேரின்மான்பிணைபோதல்போலெதிர்மேவினாள். (எக)

ஆழ்ந்தகாதலினுலயர்ந்துளவாயுதந்தவனவ்விடை
வாழ்ந்துளேனெனதெண்ணமுற்றியதென்றுசிந்தைமருண்டபின்
போழ்ந்தவேலினுமூற்றமிக்கனவெனினும்விண்ணவர்புகழ்வே
தாழ்ந்தவின்னுரைபோலுரைத்தனணகுடனேகைதழைப்பவே. (அ௦)

ஆண்டநாதனிருப்பநீமதியாமலென்னையுழைப்பதே
பூண்டகாதலினீதிநான்முறைபொய்ப்பநிற்பதுபொற்பிதோ
வீண்டுநீககனம்புரப்பதுனிசையினேகொடுவசையினே
மாண்டகுந்திறலோம்புநல்வழிமதிசெலுத்தறகுங்கொலோ. (அக)

குன்றெறலாஞ்சிறைகொய்தவெங்குலிசாயுதன்பகர்கோபதி
வென்றிகொண்டுவிருத்திறன்றலைவீழ்த்துமேவியவெம்பவ
மின்றுநீக்குவதாயகன்றனனெய்துமாறிலதாய்விடி
னென்றநீயலதார்புரப்பவரெம்மையும்பரொடுறுதியாய். (அஉ)

என்றுபற்பலகூறவாங்கவனின்சொலிற்புளகெய்தியே
மன்றலுற்றகருங்கடிக்குழன்மங்கைநின்மனமீதெனிற்
சென்றிருத்தியுரைத்தவன்செயறெளிதிநீயருள்செய்தனு
டுன்றுநின்னுழைமேவுவேனெனவோதினன்மயல்சூழ்கணுன். (அ௩)

ஈண்டுகூறியவாறுபோதுமெனப்புலோமசையுன்னியே
நீண்டகண்குழைபீறியோடியநேரில்மங்கையர்தம்மொடுந்
தீண்டிவந்தரவந்துறந்தகறிங்களென்னவனந்தர
மீண்டுதன்னுழையெய்தினள்குருமேவியின்சொல்விளம்பவே. (அ௪)

வேறு.

பொன்னுருந்தனதகத்திற்புகுந்துதெருமரலுழந்துநினைவுவேறாய்
மன்னுயதன்கொழுநன்வரவெதிர்ந்தாற்றலளாகிவானநீங்கி
மின்னார்கள்பலரொடும்விண்ணரசனுறுமாநிடதவெற்புமேவித்
துன்னார்முன்வரவெள்கித்தனித்திருந்தகணவனெதிர்தோற்றினின்றாள். (அ௫)

வல்லபிதன்மனக்கருத்துமாற்றலன்வான்புரப்பதுந்தன்வலிகணீங்கிச்
சொல்லரியசூழ்வினைகடொடர்ந்தனவுநடந்தனவுந்துணிவிற்றேறிக்
குல்லைமுடிப்பெருமானென்குறைமுடிப்பானலதெவரேகுழைவோரென்று
பல்லுரைசொற்றுரியானைநகர்செலுத்திமகபதிமால்பதியிற்புக்கான். (அ௬)

* சீவன் - தேவகுரு.

சத்திரியவெவ்விடாதந்தப்பட்டைகளாயிரங்களிப்பாவினைமேற்றன்னுங்
கொற்றமணிக்கிங்கிணிரறுன்குரைகழனிச்செருபூசெழுந்துகோவேகாயேன்
பெற்றவரசினைப்பொருதவன்புரங்களிப்பயான்மனிக்குப்பீடுமாண்பு
மற்றவைப்பதிக்கனவியபுரியாய்கொல்யான்படுமாறினைத்துமென்றான். (அஎ)

விண்ணரசோன்றுந்திரளிக்துவட்டாபாமகவெனப்பேர்விளங்கலாலே
யெண்ணரியபெருந்பாவமுனக்கடுக்கவையொழித்தாலெய்துமெல்லாம்
பெண்ணரசாய்மிலாமனைசயோடிமையவரைக்கொடுஞ்சாரற்பிரியாதெய்திக்
தண்ணறமற்றுயவகொண்டோரயமகஞ்செய்திடினேதந்தவிருமென்றான். (அஅ)

கேசவனன்றுரைத்தமொழிகேட்டுமகிழ்ந்தவ்வண்ணங்கிளர்தல்வேண்டி
வாசவனுஞ்சசிதனையுமுடன்கொண்டுபரிமேதமாண்பிறைற்றிப்
பேசரியவானவருநிறைநகரிற்பெயர்ந்துபுக்கான்
மாசகனுற்றனவன்றிவாழ்வுவவிதேசிவன்பால்வந்திலாவே. (அகூ)

புத்தமுதாசனன்மீளப்புழுங்கிமனந்திடனோடுபுரையிலானு
யத்திருவைச்சினகரத்தினிருத்தியொருவருந்தேறுதகல்வானீங்கிக்
கொத்தவிழுஞ்செழுங்கோடனிறம்வெளிரப்பனிதூர்க்குங்குன்றிலெய்தி
யத்தகையோர்செங்கமலநாளமுழைகரந்துதவமாற்றிநின்றான். (கூ0)

இறந்தனனிந்திரனென்போரெண்ணிலரின்பமுமரசுமேசுந்தாழ்வு
மறந்தனனென்பவர்சிலருன்முடையுடலஞ்சுமந்தலசிமாய்வாழ்வைத்
துறந்தனனென்பவர்சிலராய்வானவராதியர்கழறத்தோகைகேட்டே
யறந்தருதன்சிந்தையலம்வரப்பரவைபோலயர்ந்தாளறிவான்மிக்காள். (கூக)

குறுநகையினிளநிலவுங்கொழுநீலக்குழலிருளுங்கொவ்வைச்செவ்வா
யெறிவெயிலுமிவணலவானிடத்துமுளதெனநிறுவுமெழிலின்மிக்கா
ளுறுகணடைந்துயிர்த்திறைவற்குற்றதுணர்பொருட்டாகிவிரதமாற்ற
மறுவறுசீரசரீரிவந்தொருமாதெனநின்றேவகுக்கலுற்றாள். (கூஉ)

கட்புலனுங்கதுவரிதுமனப்புலனுந்தொடரரிதுகமலநாளத்
துட்பிழையினுனதுபிரானனுவிலனுவாயுறைந்தாங்குறுற்றுநின்றான்
பெட்புறுவான்றவமவன்பாற்பெயருதியேலென்னிழல்போற்பின்சாரென்றே
திட்பமுறுமசரீரியெனுமணங்குமவடனக்கேதெளிவித்தாளே. (கூஙு)

மெய்புளகமெழவவளைத்தொழுதெழுந்துபோகவவளிமையமேவிப்
பொய்கைபுகுந்திவடனையோர்புகையுருவாயுடன்கொண்டுநாளத்துட்போய்ச்
செய்தவனைக்கைகாட்டிமெய்ம்மறைந்தாளிவள்கொழுநன்றிருத்தாண்மீதிற்
பெய்தருகட்புனலாட்டிக்கரமலராலரிச்சித்தாள்பிழையொன்றில்லாள். (கூச)

தூயவனுமாயவளைக்கண்டுதுனுக்குற்றணங்கேதவஞ்செய்சூழன்
மேயதுவெனெவ்வண்ணமுணர்ந்தடைந்தாயுரைத்தியெனமெல்லிசொல்வா
ணேயமுடனுனைப்பிரிந்தவணங்காலும்பிறர்புகலுநெறிகளாலு
நாயகனேமனந்தளர்வுற்றசரீரிவரத்தடைந்தேனுளத்தென்றாள். (கூரு)

வாராய்நீபெண்ணரசேமகம்பயிற்றிவிருத்திரனைவதைத்தபாவஞ்
சாராமல்விலக்கியுமென்றவவலியுமெய்த்தேசுந்தயங்கலின்றி
நோராருக்குடன்படல்கண்டுனைத்துறந்திங்கடைந்துதவநிகழ்த்தாநின்றேன்
சீராவதெனையடுத்தாலன்றிவரேன்பொன்னுலகிற்றீமையோரில். (௯௯)

முடிபுரந்துவிண்புரக்குமூர்க்கனுக்கன்றமரரொடுமுனிவர்தந்த
கடியுறுமாதவவலியாலவன்றேசுகுறைவுறுதல்காணுச்சிந்தித்
தடிகடமையாதரித்தேனுயிழைநின்னலவன்மாசடைதல்வேண்டும்
வடிபொருகண்கலுழ்வதுவென்வானடைந்துசினகரத்தினிருத்திமாதோ. (௯எ)

ஆங்கவனுக்குள்ளன்பொன்றுடையாரிலெதிர்ந்துரைக்குமடைவிற்கூறிந்
தேங்கமழ்பொன்னரிமாலைத்திருமார்போய்மாமுனிவர்சிரத்திற்றாங்கும்
பாங்குறுபன்மணியானநினக்கில்லாதிருத்தல்பயனுமோவென்றுற்
றுங்குவனக்கணம்யானமன்றேமற்றவன்றேசுதாழுமன்றே. (௯அ)

காடோறுமவன்றேசுதாழ்வெய்தயான்புரியுநற்றவத்தாற்
பீடேறுமெனக்கினியோர்சின்னளிலுனதுயிர்பிரியுங்கண்டாய்
தோடோறும்வெண்டரளநிலவீனுமாதர்நலந்துய்ப்போனுண்முட்
காடேறித்துயருழத்தல்காண்குவைநீபோதியெனக்கழறினனே. (௯௯)

செங்குமுதத்துவர்வாயாடன்கொழுனனுரைசெவியிற்சேராமுன்னங்
கொங்கைபுளகெழமகிழ்ந்துசங்கையறக்குறித்ததகங்கொண்டுமீண்டாள்
புங்கவர்கள்பெருமானுமுன்போலத்தவத்திருந்தான்புலோமசைப்பேர்
நங்கையவளருந்துறக்கநாடெய்தித்தனதகத்தைநண்ணினாளே. (௧௦௦)

ஈர்க்குமிடைபுகமாட்டாவெழினெருங்குதுணைமுலைநெஞ்சிடையேதங்கித்
தீர்க்குமறிவினையுடையசெம்மலரம்பையர்பலரைச்செலுத்திநேயம்
பூர்க்குமுறையுற்றதுவோதேர்ந்துரையினெனவவர்போய்ப்புகலவல்லி
யேர்க்குமிதுசமையமெனவெய்தினளாங்கவனருகிலிதனைச்சொற்றாள். (௧௦௧)

வேறு.

இனிதுகூறலுமொழுக்கமுநீதியுமிசையும்
புனிதவாய்மையுந்தேசுநின்பொற்புமாண்டுளதோ
மனதுபோதரவுவப்பினுமாதர்நாண்டுறவார்
வனிதைமார்க்கிலக்காகயான்றாழ்ப்பதுமதிப்பாய். (௧௦௨)

விண்ணினாயகனெய்துமேற்சிறுமையாம்விழைவென்
றெண்ணிவைகினனினிச்சிலநாளினிற்றெளிவே
னண்ணிநீமனம்பொறுத்தியென்றவணெடும்பகர்ந்து
பெண்ணிளங்கொடிமீளவும்விரகுடன்பேசும். (௧௦௩)

நீத்தநாயகன்முனிவரர்பொறுத்தநீணிதியந்
தூர்த்தயானமேற்றேறன்றயான்கண்டுளேன்சுரர்தாழ்
மாத்தவத்தினைநீயுமவ்வண்ணமெம்மருங்குஞ்
சேர்த்தியோங்கிடச்செலுத்துதலெனக்கிசைவென்றாள். (௧௦௪)

மங்கைபங்கெடுத்துரைத்தசொன்மாகளாட்டிறைக்குத்
துங்கநல்லமுதத்தினுஞ்சுவையினைத்தரலா
லிங்கினிச்சிலநாவிலவ்வண்ணமெய்துவனீ
தங்குறுங்கலந்தெதன்றெழுந்தகன்றனன்றருக்கால். (௧0௫)

மாண்பின்மிக்கவள்சிறுநகைநிலவெழுமடங்கிக்
காண்டதற்கருங்கோபுரநீண்மனைகலந்தாள்
தூண்டிநிந்தநின்றோளினான்முனிவரர்சுமக்கும்
பூண்டிகித்துளாயானமேற்பொலிவொடும்புகுந்தான். (௧0௬)

சென்றுசென்றுறுதிசையெலாமுனிவரர்செலுத்து
மன்றல்யானமேற்சேர்தலால்வான்றவமழிந்து
குன்றியங்கவன்றேசெலாங்குறைந்ததான்மகவான்
துன்றருந்தவம்பொய்க்குமோசூழ்வினைதொலைந்தால். (௧0௭)

உம்பர்நாடெலாம்புரப்பவனிவ்வணமுறையக்
கும்பயோனியாங்கொருதினத்தடைதரக்குறித்தே
பைம்பொனாசனத்திருத்திவான்கடன்முறைபயிற்றி
யிம்பர்வைகினன்மாமுனிக்கிவ்வுரையிசைத்தான். (௧0௮)

மறைவலாளரிற்சிலரொடுமாற்றருநண்பா
லறையுநீர்மையின்றாகியமந்திரமறிந்தோன்
குறையிலாத்தவத்தொருவனென்றகங்கொளான்குறித்தே
நிறையவிங்கிதன்பொருளுரைத்தருள்கெனவிமலன். (௧0௯)

கறுத்தசிந்தையனாகிநீகழறுதற்கொண்ணாத்
திறத்தையென்முனஞ்செப்புதலறங்கொலோவென்றான்
சிறப்பினூற்றத்தாலாயுதந்தவன்சினந்திருகி
மறுத்துரைத்ததஞ்ஞானமாமொழியெனவகுத்தான். (௧௧0)

குடங்கையுள்ளுறக்குரைகடலடக்கியகோமான்
விடங்கலுழ்ந்தநாகத்தினுமேம்படச்சீறி
யடங்கநீயவமதித்தனைமுனிவரூர்யானந்
தொடங்கியூர்ந்தனையெனப்பதங்கொடுநகைத்துதைத்தான். (௧௧௧)

பின்னுமோதுவானடவியிற்பெரும்பணியாகித்
துன்னுவாயெனச்சபித்தலுந்தோன்றலுநடுங்கிப்
பொன்னின்வார்கழற்புதுமலர்சென்னியிற்புனைந்தே
யென்னருங்குறைதவிருநாளுரைத்தியென்றிரந்தான். (௧௧௨)

மீளக்காய்ந்தநீர்குளிர்புனலாதல்போல்விமலன்
றாளிற்றாழ்ந்தவன்றனக்கிதுவகுத்தனன்விலங்கோ
டாளிப்பேருடைத்தாயினுநினக்கெளிதாகி
மூளச்சேர்தருபசிக்குணவாய்வருமுறையாய். (௧௧௩)

இன்னவாழ்க்கைபூண்டிருத்தலினுங்குலத்துதித்த
மன்னனுமுதிட்டிரனுனையெதிர்ந்தநாள்வந்து
துன்னுசாபநீதொலைத்துவானடைகெனச்சொற்று
னன்னபான்மையிற்பாந்தளாயவனிலத்தடைந்தான். (ககச)

மலையமாமுனிபோந்தனன்றன்னுழைவானோர்
நிலையினின்றவிந்திரனருகெய்தியேயிரப்பி
யுலைவிலாயினிமேவுதியுரிமையினென்றார்
கலைவல்பொன்னனெண்டிசைதனைக்காப்பவர்முதலோர். (ககரு)

ஏற்றகற்புடைப்புலோமசையிந்திரனிருந்து
நோற்றபாங்கரினுய்த்திடநான்முறையதனுற்
போற்றியாவரும்புகுந்திறைபொன்னடிவணங்கி
யூற்றமோடுகொண்டணிமுடிபுனைந்தனரும்பர். (ககசு)

கண்களாயிரங்கொண்டவன்கதிர்த்தவிசேறிப்
பெண்கணுயகம்விழைவுறப்பிரிவிலனுகித்
தண்கலாதரனரியயன்முதலினோர்சாற்ற
விண்கணுதரமுறப்புரந்திருந்தனன்விழைந்தே. (ககஎ)

அந்தவாளரவானவனரும்பெருஞ்சாப
முந்துநின்விழிப்பார்வையான்முடிந்துளதன்றே
சந்திரன்வழிக்குனைநிகர்தக்கவருளரோ
சிந்தைகோடியென்றறன்மகற்குரைத்திதுசெப்பும். (ககஅ)

மாசுணத்துருவானவன்மாசுணக்கொடியோன்
பேசுமிக்கனத்திறைநீயலாற்பிறிதோ
தேசுடைச்சசியாகுமித்துரௌபதிதெளிமின்
வாசகப்படிபுரப்பைநீமானிலமென்றான். (ககக)

என்றுகூறியமத்திரனின்சொலானுருகி
மன்றன்மாலையர்மாதொடுந்தமதுளமகிழ்ந்தா
ரின்றுவைகுதிர்யானவற்குரைத்தசொற்கேற்பத்
துன்றுவேனெனப்பகர்ந்தணியோடவைதுறந்தான். (கஉo)

மன்னர்யாவருமைந்தருமாதுலனுடன்போ
யன்னமீளியைமுகமனேடுய்த்தவண்விடுப்பப்
பின்னர்மீண்டனரன்பவர்மறத்திகொல்பெரும
வென்னயான்மறந்திலனெனவுரைத்தனனிசைவால். (கஉக)

ஆயமத்திரன்சென்றுவாளரவுயர்பதாகைத்
தேயவேந்தர்கள்வேந்தனூர்சேர்ந்தனனிப்பால்
மாயனேடருச்சுனனருந்துவரைமாநகர்விட்
டேயெனும்பதிக்கெய்தினனுதிட்டிரன்மகிழ்ந்தான். (கஉஉ)

ஆண்டுலந்துரியர்சுயோதனன்செய்வகையுமறந்தா
ரீண்டுமந்திரனொப்பதியவியவியவர்புகர்ந்தார்
பாண்டுதங்குமரர்க்குரியதொருபூதரைபாலவ்வூர்
காண்டருந்திறற்றங்கினர்சூட்சிகள்கருதி. (கஉ௩)

வேறு.

போனநான்மறைமாபுரோகிதன்வரவரத்தமதுழைபுகுந்தைவர்
ஞானவாய்மையின்முறைமைப்படியவர்தனக்கீன்றபின்சிலவாய்மை
தானறிந்தளநான்முறைமைபுகன்றவர்தமக்குளமுவப்பெய்தத்
தேனலங்கமழ்மார்பினுமேனோர்தினஞ்செம்மல்பேரவைசார்ந்தான். (கஉச)

வானநாயகனவையிடையியாழ்மாமறைவலோன்வருமாபோல்
ஞானமாமுனிவரவுகண்டெதிர்கொளாநயந்திருபதம்போற்றித்
தேனறுமலர்த்தாரினானுங்கொருசெழுஞ்சுடர்புரைசெம்பொ
னானமாமணியாசனத்திருத்தினானரவவெங்கொடியோனே. (கஉ௫)

விந்தமன்னதோள்வீடுமன்முதலினோர்விழைவுடன்றொழுதேத்தி
வந்தவாறுரைத்தருள்கெனமுனிவனும்வரன்முறைமையடைவாக
வந்தனுகியகந்தடர்கடகளிற்றரசனுமவனீன்ற
மைந்தர்யாவருங்கன்னனுஞ்சகுனியுமனங்கனன்றிடச்சொன்னான். (கஉசு)

ஆண்டுபன்னிரண்டடவியுற்றொருவருமறிவுறுவகைமற்றோ
ராண்டுமன்னியபாண்டுவின்மதலையரைவரும்வெளிப்பட்டா
ராண்டுமன்னர்முன்சூதுபோர்பொருதழிந்தளித்தவினீவிர்கொண்
டாண்டுவந்தபாரம்மொழிப்படியவர்க்களித்திரோவளியீரோ. (கஉஎ)

முன்னமும்பொருதுறுபெருஞ்சூதுபோன்மோதுபோர்கருதாம
லின்னமும்பொரவேணுமேற்பொருதிடுமிலஞ்சியிற்பொலன்செங்கா
லன்னமுங்கரிமயில்களுமுடன்விளையாடுநல்வளநாட்டிற்
பின்னமும்பிறவாதினிப்பண்டுபோற்பீடுறும்பெருவாழ்வும். (கஉஅ)

அன்றியேயவருடன்மலைகுவமெனவழிவினைக்கருதாமல்
வென்றியேநினைந்தெதிர்த்திரேலுங்களால்வெல்வதுமரிதம்மா
கன்றியேயடல்வீமனுமிளைஞருங்களம்புகிலனைவீரும்
பொன்றியேவருகின்றனிர்முனிவர்சொற்பொய்க்குமோபொய்யாதே. (கஉகூ)

என்றுபூசுரனியம்பலுங்குங்குமவெழிலுறுமிணைமேருக்
குன்றுபூசியவனையபொற்றடம்புயக்குருகுலவயவேந்த
னின்றுபூசைபோலிருந்துழியுரைக்குமதிகவினன்றிருவர்க்குந்
துன்றுபூசலிற்காணலாமாண்மையுந்தோள்வலிமையுமென்றான். (க௩0)

கல்விதோயுநெஞ்சிலாதவச்சுயோதனன்கழறியமொழிகேட்டு
வல்விதுரனல்வேதியன்மொழிப்படிமேதினிவழங்காமற்
புல்விதூர்த்தினுமுணர்விலாதவர்கடம்புகலும்வாசகங்கேட்கிற்
செல்விதூரியளாய்விடுஞ்சுற்றமுஞ்சேனையுங்கெடுமென்றான். (க௩க)

திரத்துவாய்மைநீதவறிமற்றவருடன்சேனையுந்திறலுங்கொண்
டெரக்கவாளமருடற்றலோபெரும்பிழையுடன்றனையாமாகிற்
சரத்தின்வாய்தொறுஞ்சோரிகக்கிடவிடுந்தனஞ்சயன்றானென்று
பரத்துவாசனும்பகர்ந்தனனிருபனும்பகர்ந்ததேபகர்ந்திட்டான். (கஙஉ)

காடுமன்னுநின்புதல்வருக்கறுதிசெய்காலமோகழிந்தன்று
நாடுமன்னவகொடாமல்வெஞ்சமர்பொரநாடினையெனினுன்னைக்
கோடுமன்னுவில்லருச்சுனற்கெதிரெவர்குனிக்கவல்லவரென்று
வீடுமன்றிருத்தனையனோடுறுதியின்வெகுண்டுரைத்தனனன்றே. (கஙங)

முன்னமேயுகிரிழந்தவெம்புலியெனமுரணழிமுனிமைந்தன்
றன்னைமற்றவனிடத்தினீகற்றவெஞ்சரத்தில்வென்றமையல்லா
லென்னசேவகங்கொண்டுநீயாரையுமிகழ்ந்துரைப்பதுவென்று
கன்னனுந்திறற்காங்கயன்றன்னுடன்கண்சிவந்துரைசெய்தான். (கஙச)

தூமவெங்கனற்றோன்றியதோகையைத்தொடையல்சூட்டியநாளி
லூமவெஞ்சிலைநாணெடுத்தனையடர்நரனொடுமமர்செய்தாய்
தாமவெண்குடைநிருபனையந்தரச்சரிதர்கொண்டேகாமல்
வீமன்வெஞ்சிறைமீட்டகானினுமதிவிறல்புரிமுனைவென்றாய். (கஙரு)

ஒருநன்மாநெடுந்தேரினையறிவுறுவுத்தரன்விரைந்தூர
நெருநலானிறைகவர்தருமுகத்தினுநின்றனைநெடும்போது
மருகறுவுமிழ்த்துழாயவன்றேர்விடமலையுநாள்வயவாளி
வெருனர்மேல்விடாவிசயனைநீயலால்வெல்லவல்லவருண்டோ. (கஙசு)

கங்கைமாமகனிவையிவைபுகலவுங்கன்னனைக்கசிந்துட்கொண்
டங்கைகொழுடிநக்கிருந்தவந்தணனையுமவமதித்தெமதேபார்
தங்கள்கானகந்தமதெனப்புகன்றனனரவகேதனனுங்குத்
திங்கண்மாமரபினுக்குரித்தாகியதிரிதராட்டிரன்சொல்வான். (கஙஎ)

சீரலாத்துநீசெப்புதலினியவோசீரியர்நடுவென்றே
யாரவோர்மொழிபாண்டுதன்மைந்தனையதட்டியாண்டெதிர்வைகும்
வாரமேதகுமுழுலூகநற்பெயருடைமாமுனிதனைநோக்கி
யீரமேதகவுடைமையோர்தம்மிலிங்கெடுத்திதுபுகன்றானே. (கஙஅ)

ஐயநீபுகலுரையெலாஞ்சரதமெய்யமரினிற்றலைப்பட்டா
லுய்யவல்லவரியாருமின்றவ்வணமுறுவகைச்செயல்வேண்டும்
தெய்யநீயெழுந்தருளுகமுன்னரிற்றேர்ந்துகொண்டறிவுள்ள
மெய்யுரைப்பிறகுய்ப்பனென்மைந்தர்பால்வாழ்வுமேம்படவேண்டி. (கஙகூ)

எகிநீயடலைவர்தஞ்சினங்களுமிசைத்தவெஞ்சினத்தோடு
போகவோதுதிதக்கனவென்றுபைம்பொற்கலைமணிப்பைம்பூண்
மாகநாடருமகிழ்வுறத்தந்தடிவணங்கினனதுவேயென்
றோகைகூறினர்யாவருமீண்டனனுலூகிதனெனுநாமன். (கசo)

வந்தவந்தனானுபப்பிலாவியமெனுமாநகர்கூடிச்சேதி
யுந்துமன்னவர்பாவருமாயனுமுற்றமந்தணமெய்தி
யிந்தவல்லுரையனைத்தையுங்குறித்தனனிவருமேன்முறையெல்லாஞ்
சிந்தைசெய்வதென்னவரவரறிதுமென்றிருந்தனர்திசைநாடி. (கசக)

உலூகமாமுனிதூதுசருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - கசருஎ.

---

## சஞ்சயன் தூதுசருக்கம்.

---

ஒருதலத்திடையவதரித்தணிபொதுவர்சிற்குடிலுறைவதோர்
மரகதப்புயறனையெடுத்தொருமகவெனத்தனதிறுதியா
லரிதுபற்றியவலகைசெற்றிடவணிமுலைப்பயநுகர்வுறு
மருதிடைத்தவழ்பொருவில்வித்தகன்மலரடித்துணைகருதுவாம். (க)

நஞ்சநாகமுயர்த்தவன்பலநாமவேலினர்வீடுமன்
விஞ்சுநற்சிலையாரியன்றவவிதுரன்வெங்கதிர்மைந்தனோ
டஞ்சலிப்பவர்நடுவண்மேவுறுமந்தணுயிடையறிவுநீள்
சஞ்சயன்றனைவரவழைத்திதுசாற்றினான்சமர்நீக்குவான். (உ)

குருகுலத்தரசற்குறுந்தொழில்கூறுமாண்பினையாதலா
லிருகுலத்தினுமுற்பவித்தவரென்றுநின்சொன்மறுத்திடார்
பெருகுலைக்கனலன்னபிள்ளைகள்பேசுகின்றபிணக்கறுத்
தொருகுலத்தவருததிசூழ்புவியாளுமாறினியுட்கொளே. (ங)

எண்கொளாவெகுளிக்கருத்தினரிந்தமைந்தரிசைந்தவர்
மண்கொடாரமருக்கிசைந்துளர்மாண்பிலாண்மையில்வாய்மையிற்
றண்கொளின்சொலினீதிபொய்ப்பறுதன்மையிற்படர்வோர்கடாங்
கண்கொடாகவுமுற்றுமாறுகருத்துறுத்தனயப்பதே. (ச)

அறத்தின்மைந்தனுமிளைஞரும்புவியாசையற்றகலடவியின்
புறத்திருந்துதவஞ்செயும்படிபுரிவுரைத்தருள்போயெனச்
செறுத்திடுந்திரிதராட்டிரன்றனசிந்தையொப்பனசெப்பினான்
மறுத்திலன்பணிசொன்னகொண்டவர்வைகுமாநகரெய்தினான். (ரு)

சென்றவத்தினமாயன்வாழ்மனைசேரமேவினனகர்கோ
னன்றளித்தவனோடிருந்தருளமலனைத்தொழுதேத்தியே
துன்றுசிற்சிலகூறிநாளையுதிட்டிரற்கெதிர்துன்னுத
லென்றுமீண்டுதனதிருக்கையினேகிவைகினனென்பவே. (சா)

வேறு.

இரவிவந்துதயஞ்செயாமுனெழுந்துதன்கடனாற்றியே
விரைவினல்லறன்மைந்தன்மேவியவேந்தவைக்கணிலேகினான்
பரவுறுந்துருபதன்விராடன்முராரிபற்பலர்பார்த்திபர்
கரவிலாவனைவரிருந்தவைகண்டுசிந்தைகளிப்பவே. (எ)

ஊற்றமிக்குளதுணைவர்நால்வருமெரியுளுற்பவமுற்றெழுந்
தேற்றமிக்குளமாதுமாங்குசிறக்கவைகியசெம்மலுன்
போற்றிவந்துவணங்கினனையெழுந்திரென்றுபுகன்றபின்
சாற்றருந்தவிசொன்றுநல்கயிருத்தவைகினன்சஞ்சயன். (அ)

ஐயகேட்டிசரோருகங்களடுத்தநன்னிலவாகினும்
வெய்யவன்சுடர்காணுமாறுவிரும்புமென்பதுமெய்ம்மையே
வையமாளுறுதோன்றலன்புளதெனினுநின்றிருவாண்முக
முய்யநோக்குறுசிந்தையின்படியுற்றதென்றவனோதினான். (கூ)

சேறுசெங்கழுநீர்மணங்கமழ்தெய்வநற்குருநாடனு
மூறுபுன்னகையாலுவப்புறுமாறுரைத்தபினோதினான்
வீறுகொண்டுளவெந்தைவீடுமன்வில்விஞரியர்மைந்துடைப்
பேறுகொண்டசுதன்விதுரனும்வலியரோவெனும்பெற்றியே. (க0)

வந்தசஞ்சயன்வலியரன்னவருமைவாழ்த்தினரென்னலுஞ்
சிந்தையிற்புளகுறவுதிட்டிரன்மீளவிவ்வுரைசெப்பினான்
பைந்தொடிக்கரசவையினூடுபலருமற்புதமாகவே
செந்துடைத்தலமாதனந்தருசெம்மலுஞ்சுகியோசொலாய். (கக)

மாயவெங்கவருடேறியமாதுலன்பரிநாமனோ
டூயமாதுமருங்குலிற்றுகிருட்டகாவைநலத்தனோ
வாயினாலமர்வெல்கொடுங்கதிர்மைந்தனுஞ்சுகமோபல
தேயவேந்தருமேனைமைந்தர்கடிறமுமேன்மையரோசொலாய். (கஉ)

என்றுகூறலும்வந்தசஞ்சயனீதுகூறினனேதமிங்
கொன்றுமற்றவுளத்தினேயவர்நன்மைநீவினவுறுதலா
னின்றுகாறுமிலாததாயினுமிதுமுதற்கொடியவர்க்கெலாந்
துன்றுறும்பரிநாமமென்றுதொகுப்பமன்னிதுகூறினான். (கங)

எங்களைப்பிரிவுற்றுநாள்பலவென்றுநோக்கவடைந்ததே
நங்குலத்திறைவன்மொழிப்படிவந்ததோநவில்வாயெனச்
சங்கினிற்றரளங்கணீர்மடைதூர்க்குநாடனின்றந்தைசொ
லுங்களுக்குணர்விப்பதாயிவணுற்றதாமெனவோதினான். (கச)

மீளவும்புகல்வானிருந்துளவேத்தவைக்கண்விளம்பொணு
நாளநாபனுநீவிரைவருமுற்றுணர்ந்திடினன்றென
வாளுமன்னவரிவர்களேயெமதாவியூற்றமடங்கலு
நீளுமுண்மைவலாயுரைத்தியவைக்கணென்றனனிருபனே. (கரு)

அனையதன்மைமானந்தரிக்கவையோர்களுக்கிருசெங்கரம்
வினையமோடுகுவித்துநிட்டுரனாகியோரருள்மேற்கொடே
புனைதுழாய்முடியோனையுமகிழ்ந்துமருங்குறேய்ந்தபுனக்கிளி
தனையுமாண்பொடுநோக்கியீதுமொழிந்தனன்வருசஞ்சயன். (௧௬)

புடவியாளுதல்விட்டுநன்னெறிபுரியுமாதவர்தம்மினீ
ரடவியாளவும்வல்லராயினிராதலானவமானதே
மடவியார்நிலையற்றசெல்வமகிழ்ந்துவாழ்தினமாறினால்
விடவியாரழலுற்றெனப்பெருநரகிலாழ்வுறவீழ்வரே. (௧௭)

உற்றயோனிகடம்மிலுற்பவியாமன்மானிடருற்பவம்
பெற்றுவாழுதலரிதுமற்றதுபெறினுமாயைசெய்பெருமயக்
கற்றுஞானிகளாய்விளங்குதலரிதுவீடுறுமறிவுபின்
பற்றுமாறரிதிங்குனக்கிவைபண்பினோடுபலித்தவே. (௧௮)

திகந்தவெல்லையுறப்பெரும்புவிசெல்லுநேமிசெலுத்தினு
மகன்றையோடமராடவென்றுவனரவகேதனனுங்களோ
டுகந்துவாழவொருப்படானினியுற்றதாயமுமுரிமையு
மிகந்துமாதவமுயறலேகடனீறிலாவுலகெய்தவே. (௧௯)

பராசரன்குலமாகினும்பெறுபயனிறுத்திலர்பாரிலே
துராசரன்பிலரென்சொலின்றுசுயோதனனுதியர்கைக்கொளார்
சராசரங்களனைத்துமாகியசுகனையேநிகர்தன்மையோய்
நிராசர்நின்னளவிலர்குறித்தவையுறுதியென்றினிகொள்ளுவாய். (௨௦)

பாரிலாசையுநின்னிராசபதத்திலாசையுமன்னுவெம்
போரிலாசையுநேயமங்கையர்போகமன்பொடுபுதிதுணுஞ்
சீரிலாசையும்விட்டுநன்னெறிசேரவுன்னுகநீயெனத்
தூரிலாசைமிகுத்தநந்தையுரைத்ததென்றிதுசொல்லவே. (௨௧)

செம்மையல்லதுவிரகிலாதுதெரிந்தமெய்த்தகுசிந்தையான்
மும்மையுந்தெரிசஞ்சயன்புகன்முன்னியொண்குறுமுறுவல்செய்
திம்மையேவசைநிற்கவீடுறவெண்ணினிற்புகவெண்ணினும்
வெம்மையேழ்நரகுந்தனித்தனிவீழ்வதேநலன்மிகவுமே. (௨௨)

நின்னறத்தனிநீர்மைதன்னைவிளங்குமாறுநிகழ்த்தினு
மன்னறத்தினைவிட்டுநல்லறமன்னரானவர்முயல்வரோ
வென்னிறத்தனிநின்றுதெவ்வரையிருவிசும்பினிலேற்றினாற்
பின்னறத்தினுநினைவுகூருமெனக்கனன்றிவைபேசினான். (௨௩)

அறனளித்தவனுரைசெவிப்படவரசனுய்ப்பவடைந்தவன்
மறநினைத்திகலினைமுடிப்பதுமதிமிகுத்தவர்கடமையோ
திறலுடைத்தமர்புதல்வர்நட்பினர்செகதலத்தவர்பலரையு
மறலிகைப்புகநினைவதிற்றவமுயலுகிற்பதுவசைகொலோ. (௨௪)

நதியளித்தவனுயர்சிலைக்குருவிருவர்நற்சுதனொருவனல்
விதுரனுத்தமனினைவுடைக்குருகுலவிருத்தர்களனைவரும்
பதிவயத்தவனுறுகருத்தினரவர்படப்பொருதலதுபார்
துதிதரக்குடைநிழலடக்குவதரிதுமக்கிது துணிவதோ. (௨௫)

கதுவுகட்கனல்வலிமிகுத்தவர்கருதுதுற்பலரெனவரா
தெதிர்படுத்துளமுனையினிற்றெரிவுறுமிதிப்புகலுளகொலோ
விதுகுலத்தவிருதிறத்தருமெலிதுயர்க்கடல்புகுவதே
பொதுமைபற்றியதிருவுளத்தினர்புகல்வரிக்ஷணமுணர்மினோ. (௨௬)

முனிவருத்தமனிதையுரைத்திடமுரசுயர்த்தவனெதிரினா
னினியுரைப்பதுகடனெனத்துணைவிழிசிவப்பெழவெழிலிபின்
* றனிதமுற்றெனவதிரவெஞ்சினமுளமற்றிவைசாற்றினான்
கனியெனத்தினகரனைவவ்வியகடவுண்மாருதிதுணைவனே. (௨௭)

எமக்குநீபொதுவாகுமெங்களொடேன்றுகொண்டெதிராகுவோர்
தமக்குமொக்குமொருத்தர்பாலருள்சாரவோதுதறக்கதோ
வமர்க்குளென்னவுலூகநாமனொடுறுதியிட்டனரரவினஞ்
சுமக்குமேதினியாளுவோர்வினைவேறுபட்டனசொல்வரோ. (௨௮)

இடக்கணாகவலக்கணாகவிரண்டுமொக்குமெனாமலிப்
பிடர்க்கணேமதியானகண்ணிலிபெற்றியல்லனபேசினான்
கடற்பெரும்படைகூடிநாளையணிந்தவெய்யகளத்தினா
னடற்கடுங்கதையாலடித்திடுமதிசயந்தனையையகேள். (௨௯)

உவந்துநீமொழிதருமருந்தவமல்லவொன்னலருடலுகுஞ்
சிவந்தசோரியின்மூழ்கிமாழ்குசிரங்கள்பேய்நடமாடுமக்
கவந்தகானகமேவியூடுறுதீயவெவ்வினைகளைவதே
தவந்தனிற்றலையானவீடுறுதவமெனக்கிதுசாலுமே. (௩௦)

போரதாகியபூமிசாலையின்வேலைசூழ்தருபூமியின்
பாரமானசுயோதனாதியரென்னுநூறுபசுப்படுத்
தீரமாநதியாமனத்தொடிராயசூயமகஞ்செயும்
வீரமாமுனிதன்னைவெங்களவேள்வியும்புரிவிப்பனே. (௩௧)

வேறு.

என்றுபற்பலமொழியெடுத்துக்கூறலுந்
துன்னியவுதிட்டிரனமைத்துத்தோற்றிய
தொன்றுனக்குரைக்குதுமுளத்திற்கோடியான்
மன்றல்சூழ்முடியரசுய்ப்பவந்துளோய். (௩௨)

வாழ்வதும்வென்றிபூண்டொழுகும்வண்ணமும்
பேழ்வலிதெரித்தலுஞ்சிறப்பும்பேசிலோஞ்
சூழ்வினைச்சூதினாற்சூழ்ந்தவெந்துயர்
தாழ்வினைக்கருதிலித்தனுவும்வேண்டுமோ. (௩௩)

* தனிதம் - முழக்கம்.

அறம்வழாவியற்கைகொண்டன்றுதாழ்த்தன
பறம்வழாதினிமதிமாசுநீக்குவோர்
திறம்வழாநன்மைகொற்றமையேகொலோ
நிறம்வழாமேனியாய்நிருபற்கோதியால். (௩௪)

வாட்டிறற்குரிசிறன்மைக்கரோடறம்
வீட்டியசிலரால்வேதவேதியர்
மீட்டுறுதாதைநல்விதுரனாதியோர்
மாட்டமர்கருத்திலேமாண்புமிக்குளோய். (௩௫)

அரசருக்கடுத்தநல்லறத்தையாற்றலே
யுரைசெயும்பெருந்தவமுணர்வுளாயிவண்
புரைசைமால்களிற்றினான்கருணைபொய்ப்பினும்
பரசியகடவுளம்பாலிற்பொய்க்குமோ. (௩௬)

தேறுதிநீயெனநிருபன்செப்பலு
மாறுவேறிலாதவைந்துளவமார்பனுங்
கூறினனோர்மொழியவையிற்கொற்றவர்
வேறுகொள்சிந்தைகள்வியப்பிலாழவே. (௩௭)

சூதினைப்பொருதிவர்தோற்றுளாரெனி
லாதரித்தவனியைக்கவர்தலன்றியிப்
பேதையைப்பேரவைப்படுத்திபேதைமைக்
காதியாம்புகல்பலவறைதனீதியோ. (௩௮)

தூட்டரிற்றொடர்ந்ததுச்சாதனன்றொடக்
கிட்டியபோதுதன்மாமிகேழ்மருங்
கொட்டினுளவள்சினத்துரப்பிமைந்தன்முன்
விட்டதுவேந்தருக்கடுத்தமேன்மையோ. (௩௯)

வந்தவள்கொழுநராண்டென்னமாசறு
சிந்தையானைவருநகைப்பச்சேயிழாய்
சுந்தரமுடையர்பாற்றொடர்தியென்றரி
தந்தவனுரைத்ததுந்தருமமேகொலோ. (௪௦)

பாங்குறவெனத்தொடைப்பரப்பிற்காட்டியுந்
தீங்குறப்பற்பலதெழித்தன்றியு
மாங்குயிலனையவண்மருங்கிற்பூந்துகில்
வாங்கெனப்பணித்ததுமரசர்மாட்சியோ. (௪௧)

கடவுடன்வரத்தினுங்கற்பின்மாண்பினு
மடவரல்நாணொடுநின்றுமாயிரும்
புடவியைக்கவற்றினால்வென்றபோதிவ
ரடவிபோய்மீண்டுறவனைந்ததேற்றமோ. (௪௨)

இத்தகைநிகழ்வுழியிருந்துநோக்கிய
வித்தகரனைவருமெவந்துமாய்ந்துநின்
புத்தியோவிதுவெனப்புகன்றதுண்டுகொல்
சுத்தரைவரவழைத்துய்த்ததூய்மையோர். (௪௩)

ஒருமையிற்பக்கமற்றுணர்வுவேறிலா
திருமையும்பொதுமையாலெண்ணவல்லவர்க்
கருமையோவொருசொலாலடக்கலாகுமே
நிருபனலன்றுகொனிகழ்ந்ததீங்கெலாம். (௪௪)

குரோதமாம்பெருந்தருக்கொடுஞ்சுயோதனன்
ச்ரோருகநண்பனற்றனையன்கந்தமாம்
விராவுருசினைகளாஞ்சகுனிமேற்கனி
தராததுச்சாதனன்றந்தைமூலமே. (௪௫)

தருமமாநதுந்தருத்தருமன்றந்தவ
னிருவருங்கந்தமீட்டிருவர்வான்சினை
பொருவருகாய்கனிபூவும்யானரோ
மருவுவேதியரொடுமறையுமூலமே. (௪௬)

ஆதலாலாவதுமழிவதுந்தெரிந்
தோதுவாய்நீயெனவுரைத்துப்பின்னரு
மேதமால்வீமனுநரனுமெத்தநாள்
காதலாழ்பவர்வலிகாணலாகுமே. (௪௭)

மாள்பவர்நூற்றுவர்மண்ணடங்கலு
மாள்பவரைவரென்றறிவியந்தகன்
கோள்படுவாய்மைநீகொண்டடைந்ததே
நாள்படமறப்புறுமெதனநவிற்றினன். (௪௮)

வேறு.

அனையவாய்மைகேட்டயர்ந்தசஞ்சயன்
வினையமொன்றையும்விளம்பினனல
னினையசிந்தையீரென்னிலீண்டியான்
புனைசொலாற்பயன்பொருந்தவில்லையே. (௪௯)

பூட்டியோதுறும்வாய்மைபூபதிக்
கூட்டவேண்டுநீரொழிமின்வெஞ்சினந்
தோட்டியானையீரின்றுசொற்றசொ
லீட்டுகுற்றமுண்டெனினுநீக்குமின். (௫௦)

விடையளித்திரென்றிவன்விளம்பலும்
படையளித்தகைப்பாண்டுதந்தவன்
மடையளித்தநீர்வயல்செய்நாடரைத்
தடையளித்திதுசாற்றினனரோ. (௫௧)

முன்னர் நாளினின் முடியுஞ்சூட்டியே
மன்னனுக்கு நல்வாழ்வு தந்துளான்
பன்னு தந்தையின் டனையபான் மைவிட்
டுன்னு தற்கருங்கொடுமையுன்னினான். (ருஉ)

தந்தைசொற்றசொற்றப்பொருளெனெ
முந்துபெற்றியோர்மொழிவர்நன்றிதே
மைந்தரிற்சிலர்வாழமற்றவர்
நொந்துயிர்ப்பவோ கொடியர்தன்மையோர். (ருங)

நாடுமெங்கட்கருக்கும்வேண்டிலோங்
காடுபோந்துமீண்டெய்துகாதலர்க்
கீடுதன்மனத்திசைவுநல்கினுற்
பீடுமாமிதிற்பிழையுமில்லையே. (ருச)

சிறந்ததந்தைசொற்றிறம்பலின்றியே
யறந்தவாதிருந்தாண்டுநீக்குது
மிறந்தநாட்செயல்யாதுமெண்ணிலோ
நிறைந்தவெந்தைபானிகழ்த்துநீதியோய். (ருரு)

தக்கதந்தைதாய்தவப்பிதாமகன்
முக்குறும்பகன்முனிவர்சீரியோர்
பக்கலெய்தியாம்பணிந்ததோதுவாய்
மிக்கவர்க்கெலாம்வினவலோதுவாய். (ருசு)

போதிநீயெனப்புகன்றுநல்லுண
வாதிதந்தபின்னரியபொற்கலைச்
சோதிமாமணிப்பூண்கள்சோர்வற
நீதிவல்லவனீட்டிப்போக்கினான். (ருஎ)

மீண்டுசஞ்சயன்விரைவினிற்பரி
பூண்டதேர்மிசைபுகுந்துமன்னியே
காண்டகுந்திறற்கரிபுரம்புகுந்
தீண்டுவேந்தனையிதனைக்கூறினான். (ருஅ)

வேறு.

புரந்தராதிபர்கள்புகழ்தருகுருமன்புகலருந்துணைவரோடிருந்த
வரந்தைதீருபலாவியம்புகுந்தாங்கவருடைக்கருத்தெலாமுணர்ந்தேன்
பரிந்துநீபுகன்றபான்மைகளனைத்தும்பலவிதத்துறுதியாப்புகன்றேன்
சுரந்தருள்பொழியுமுகத்தினுய்மீண்டேனென்னினிச்சொல்வதிங்கென்றான்.

திருத்தகுமாமன்சுயோதனன்றுச்சாதனனொடுதிவாகரன்மதலைக்
கருத்துறுபகைஞரென்னினுநின்மேற்கிடப்பதாங்கட்டுரையனைத்தும்
விருப்பினிலவர்தம்மேதினிவழங்காதிருந்திடினினிச்சிலபகலின்
மருத்தின்மாமகனுற்பொய்க்குநின்வாழ்வுமைந்தருஞ்சேனையுமையா. (சுo)

ஆங்குறநிகழ்ந்தகாரியம்பலவுண்டவையெலாமிக்கணமுரைத்தால்
வீங்குதோளரசர்பலர்க்குமெய்தாதுவிபாகரனெய்தியபின்னர்
தீங்கறவடைந்துபேரவையுணரச்செப்புவன்மனங்கொளென்றுரைத்தே
யீங்கிவன்விடுப்பவுறையுளிற்புகுந்தானிரவினிற்சஞ்சயனென்போன். (௬௧)

சஞ்சயனகலமகிபதிகருத்துஞ்சஞ்சலத்தாழ்ந்துதள்ளாடி
நஞ்சருந்தினன்போலுயிர்த்துயிர்த்திரங்கிநற்றுயிலற்றபான்மையினல்
விஞ்சுறுகருத்தாழ்விதுரனைக்கொணர்மின்மேவியிக்கணத்தெனத்தூத
ரஞ்சலித்தோடியுரைத்தனரவன்வந்தடிதொழவாதரித்துரைப்பான். (௬௨)

பாண்டவரிருந்தபதிபுகுந்துரைத்துப்பலமொழியகலறிவுடையோன்
மீண்டிவணெய்திச்சிலபுகன்றெல்லாமீதுரைத்திடுவனென்றகன்றான்
மாண்டருகல்விகேள்விநூன்முறைமைவழுவிலாய்விழிதுயிலிலவா
னீண்டவிப்பொழுதுபோக்குறும்படியாநின்னையானழைத்ததிங்கென்றான். ()

வலியுடைநிருபர்தந்திரத்தோடுவளைத்ததோள்வலியிலாதவனு
மலிபொருளிழந்தபேதையுங்கரவால்வஞ்சனைபுரிநினைவினனும்
பலகலையுணரும்வாழ்வுவேண்டினனும்பார்தனிற்காமியானவனு
நிலவுநித்திரையற்றிருப்பரீண்டுனக்குநிகழ்த்துறுமேதுவேதென்றான். (௬௪)

ஆருயிர்த்துணைவகேட்டிபாண்டவராலரவகேதனன்முதன்மைந்தர்
நேருமிச்சமரிலென்கொலோபடுவதெனநினைந்துயிர்த்துநித்திரைதான்
சேருதலின்றித்துயருழந்திருந்தேன்மேற்செயறெளிவுறத்தெருட்டிப்
போருறுவண்ணமுள்ளசூட்சிகளைப்புகறிநீயெனவிவன்புகன்றான். (௬௫)

மிக்குறுதுயருமிகுத்தநல்வாழ்வும்வேந்தருக்கிரண்டுளததுவே
ஒக்கலோடுடன்பட்டிருத்தனல்வாழ்வாமுடன்படாராகிமற்றுளரேற்
புக்குறுந்துயரஞ்சரதமாரதனைப்போக்கவல்லவரயன்பொறித்த
தக்கவான்முறையேதருமநிவென்றான்றவறிலாநிழைக்குநற்றவத்தான். (௬௬)

மீளவுங்கேண்மோபாண்டுவின்றனையர்வேந்தநின்றனைத்தினைத்துணையு
மாளினும்வேறுக்கருதிலர்நீயேவரவழைத்துரிமைகைக்கொண்ட
நாளினுந்தனயர்நவின்றசொற்காயுநளினவாண்முகத்திருவிருண்ட
பாஞ்சாலியைத்தொட்டீர்த்துடைகழித்தபரிசினும்பாசம்விண்டதுவோ. ()

கற்பிளவனையோர்பேதையர்பிளந்தகனகமேயனையர்மத்திமத்தோர்
விற்பிளவுறுநீர்போலியரன்றேமேம்படுசீரியோரியற்கை
பொற்புறுதோளாயாண்மையாலறிவாற்புகழினுனீதியாலுயர்ந்த
நற்புதல்வரைநீவரவழைத்தவர்தம்ஞாலமீட்டளித்தியோநவிலாய். (௬௮)

தொடுகழலிவரோநின்துசொற்பரியார்சொற்றவெஞ்சினமெலாம்போக்கி
வடுவறநினதுமைந்தரோடொன்றிவாழ்வர்நின்மரபுமேம்படுமாற்
கொடுஞ்சமர்புரியக்குறித்தனையென்னிற்குவலயமைவரேகொண்டோர்
படுகளம்படுவோர்நின்துபுத்திரரேபகர்வதற்கையமொன்றிலையே. (௬௯)

சுற்றமுமாண்புங்கூட்டமுநண்பினியற்கையுஞ்சூதினால்வென்ற
தோற்றமுநாடுபுரப்பதுமைந்தர்தொகையுநீபொருளெனக்கருதேற்
சாற்றியதூண்டியுண்டியைவிழுங்குஞ்சலசரந்தனக்கடுப்பதுபோல
யாற்றநின்மைந்தர்க்கடுப்பதென்றுணர்தியன்னவனின்னமென்றறைந்தேன்.

ஆகியநண்பாலிரவிசேய்சகுனியறிவிதுச்சாதனனிவர்சொற்
பாகினுமதுரமரவகேதனற்குப்பிறரெலாமவர்வயப்படுத்தி
யோகியினிருந்தாய்நின்மதமவர்கொண்டுடன்படாருரைப்பதேனுயிர்ப்பே
னாகிளங்கமுகின்பாளைவாய்விண்டுநறவுமிழ்நாடர்நாயகனே. (எக)

வல்லினாலவனிகொள்கினுநன்றேவானவரேத்துமாண்பினரைப்
புல்லியதுரும்பாமதித்தவர்புகன்றபுன்மொழிமறப்பரோபுகலாய்
வில்லினாலுதைந்தகணையுடற்புகுந்தால்விலக்குமக்கணந்தனிலகலுஞ்
சொல்லினாற்பட்டபுண்ணெவர்தொலைப்போர்துறந்தவாரியரையுந்துளைக்கும்.

மேதகவுடையாராதலிற்பொறுத்தார்விண்ணவரென்னினுமிந்தப்
பாதகர்செய்ததீங்கினிலறமாம்பாசமும்வழுவியேபடுப்பார்
நீதகவுணராதவரெனவிருந்தாய்நின்னுழைபொதுக்கருத்துளவேற்
போதகர்வழியிற்புகாமலின்றியைந்ததுதவுதிபுவியவர்க்கென்றான். (எங)

புனிதரிற்சிறந்தவிதுரனுங்குரைத்தபுகலெலாஞ்செவிவழியருந்தி
யினிதெனவுகந்துதினகரனடைந்தாலிவ்வணம்பணிப்பனீங்கிதற்கு
மனிதரேககனவாணரேயெனதுமைந்தரேமறுக்கினும்வழுவேன்
குனிதருசிலையாய்போதிநீயெனலுங்குணநிதிதனதகம்புகுந்தான். (எச)

சிரமெனும்புயலுங்குறைமதியெயிறுந்திகழ்தருமின்னலேசிறந்த
பரவுசெங்குஞ்சிப்பொலிவுமாய்வரைகள்பகர்தருபற்பலபுயமாக்
கரவுறுவாடைபாசமாவிண்மீன்பூண்களாக்காரிருளுடலா
யிரவெனுமறலிநாட்கொள்வானடுத்ததேய்த்ததாலிறைவனுக்கம்மா. (எரு)

அளவறவனேகமூழியாத்தோற்றுமாரிருட்பிழம்புமிவ்வுலகிற்
களவினாலாயவாழ்க்கைபோற்கணத்திற்கழிந்ததுகங்குல்வாயிறைவ
னிளவலுக்குரைத்தமந்திரமவையினென்படுமோவெனத்தெரிவா
னுளையெழுபரித்தேர்மீதுவந்துதித்தானுண்மைசாருளத்தைநேருதையன். ( )

கதிரவன்கரங்கடயிலினையுணர்த்தக்காசினிவாழ்சனமனைத்து
மதிமுகமலர்ந்தார்துயிறுறந்துழந்தமகிபதிகடன்முறைமுடித்துச்
சதிருருமவையிலெய்தினனதுமுன்சானவிதந்தவன்றுரோணன்
றுதிதருகிருபனிவுளியந்தாமன்முதலினோர்சூழ்ந்தனர்துன்னி. (எஎ)

பரிதிதந்தவனுமரவகேதனனுமிளவலுஞ்சௌபலாதியருங்
குருதிவேற்றனையரனைவருந்தத்தங்கோத்தவிசேறிவீற்றிருந்தார்
சுருதிநூல்வல்லவேதியர்கவிஞர்தொக்கனர்மிக்கநல்லறிவாற்
குருகுலம்விளக்குமமைச்சரும்பலநாட்டரசருங்குழுமினரன்றே. (அஎ)

செஞ்சுடரெழுமுன்மஞ்சனந்துளைந்துதிருவடிக்கலர்புனைந்தேதத்திச்
சஞ்சயனென்போனவைப்புறத்தணுகிச்சாற்றுமின்வாயிலோரென்ன
வஞ்சலித்தவர்வந்துரைத்திடவரசனுணையாற்பேரவைபுகுந்து
கஞ்சமார்பருக்குமகிபதிதனக்குங்கைதொழுதருகுறவிருந்தான். (எகூ)

வேறு.

உருப்பமொடுதட்பமுறமுழுத்தமகுணத்தோ
னிருப்பவிருகட்புலனிலாதவனுளங்கொண்
டருத்தியுடனவர்கடையாண்டணுகிமீண்ட
கருத்துமுழுதுங்குரவர்முன்கழறுகென்றான். (அ௦)

மற்றிவனுமக்கணமயக்கறவுரைத்தான்
வெற்றிநகருற்றதுமுதற்கரியமெய்யான்
குற்றமறுமாளிகைபுகுந்தளவுமீளக்
கொற்றவனடந்தபடிகூறலுரையென்றான். (அக)

மட்டறுமுபப்பிலவமானகரடைந்தே
கிட்டினனிருக்கையணுகிக்கிளர்கொடீது
விட்டுணருவித்தபினர்மேவினனகத்துட்
கட்டழகெறிக்குமொருமஞ்சமிசைகண்டேன். (அஉ)

பட்டினிடுமெத்தையொருபாப்பணைகடுப்பச்
சிட்டினனணித்திலிருசேவடிசுமப்ப
வட்டமிருகைக்கொளுமுருக்கும்மணிமாற்றக்
கட்டழலுதித்தவள்கையிற்கவரிவீச. (அஙு)

வேறொருவரின்றியணைமீதுபொலிவானைத்
தேறினருளத்திலெழுதெளிவுபுரைவானைப்
பேறுபெறுவார்களெதிர்பெற்றடிபணிந்தே
னூறியவுவப்பொடுமுகந்தருகழைத்தே. (அச)

வாமமடமாதர்மிசைவாள்விழிபரப்பத்
தாமிருவருங்கடிதுதண்கரமுறத்தோட்
டேமமுறுபீடமருகிட்டினரிராமற்
பூமிசையிருந்துகைபொருத்தினனதன்கண் (அரு)

வீறுபெறுகார்முகில்விளங்குதிருமேனி
கூறுமெழில்கண்களிகூருமுறைநோக்கி
மாறுபடவல்லரிவரோடெவர்மறத்தா
லீறுபடுமூலவுகுமிங்கிவர்முனிந்தால். (அசு)

இவரிருவருந்தனிதனேவல்புரிவாரே
லவனியிலறன்றனயனுண்மையிலியாமோ
புவனமுழுதுங்கருதினுந்தனிபொருந்து
முவமையிலிதூயவுள்ளுதவிஞெழிந்தான். (அஎ)

என்றுபலசிந்தையுணினைந்துறுமிடத்திற்
குன்றினையெடுத்துமழைகாத்தருள்செய்கோமா
னின்றிவணடைந்தபரிசேதெனவினவ
வன்றுசிலவாய்மைகளறைந்தனனியானும். (அஅ)

கேசவனதைத்தனதுகேள்விபுனையாம
லாசறவெடுத்துமொழியொன்றெதிரறைந்தனன்
கூசினர்சமர்க்கெனிவிவர்க்கினிமைகூறி
மாசுறுதுரௌபதிமனத்துயரகற்றி. (அகூ)

நாடுநிதியாவையுநலம்புனையநல்கிச்
சூடுமுடிமன்னரிவர்தந்துணையுளாரைப்
பீடுபெறநன்புகொடுபின்புமிவர்சிந்தை
நீடுவனநல்கிநெறியாலொழுகிநேரும். (கூ0)

இவ்வணமியற்றிமுடியாதெனிலெதிர்ந்தே
கைவருதிறத்தமர்கடந்துகருதாரை
யெவ்வமறவாழுதலியற்கையிதிரண்டுஞ்
செவ்வியமிலாதவருணர்ந்திலர்திரிந்தார். (கூக)

காடடையநுங்கவருகட்டழல்கலந்தால்
வாடையெதிருய்த்ததனைமாற்றுதல்கடுக்கும்
பீடடைபெருந்தகையினேரையமர்விட்டு
வீடடையநின்றுதவமாற்றுதல்விளம்பல். (கூஉ)

இச்சைபடுவாய்மைகளியம்புதலையன்றி
நிச்சயமுணர்ந்துரைநிகழ்த்திலர்சிறுத்த
கொச்சைமதியோரறிவுகொண்டுபுகலீதாம்
புச்சமறுதூய்கலைவல்புண்ணியர்சொலன்றால். (கூ௩)

ஈத்திறல்குறித்திதையிசைத்தனனளித்தோ
னுத்தமனவைக்கணிலுரைத்துணர்தியென்றே
முத்தனுரைசெய்தனனெனாமுன்மகிபாலன்
கைத்திறல்வல்காளைகழறிற்றிலைகொலென்றான். (கூச)

மாயனுரைகேட்டமகவானருள்குமாரன்
தேயுவெனவாள்விழிசிவந்தெனைமுகங்கொண்
டேயவொருவாசகமியம்பினனியாருந்
தூயருமிருந்துழிசொலத்தகுவையென்றே. (கூ௫)

வேறு.

பவம்புரிதனதுமைந்தர்பாலருட்டிறம்பலின்றி
யவம்புரிசிறியர்வாய்மையாதரித்தடாதவாற்று
னவம்புரிநாட்டிலொன்றுநல்கலேன்றுறந்துநண்ணித்
தவம்புரிந்துய்ம்மினென்றேதந்தையின்றுரைத்ததன்மை. (கூசா)

அவ்வுரைகொண்டோம்நன்றேயாங்கள்முன்பவையிற்சொற்ற
வெவ்விறற்சரதவாய்மைவிளக்கியபின்னர்மீண்டு
செவ்வியராகித்திங்கண்மரபெலாஞ்சிறப்பினோங்க
மைவருநிறத்தினன்றருள்வழுத்துவோமறுவுந்தீர்வோம். (௯௭)

இப்பொழுதெமக்குத்தீமையியற்றினோர்க்கெழிலார்மேனி
யொப்பறப்பிளந்துசென்னீரொழுகவாய்வழியேமூளை
வெப்பினிற்பெருகத்தெய்வவில்லினில்விசிகங்கோத்த
வப்பொழுதன்றிமீளோமாங்கவர்க்குரைத்திநீபோய். (௯௮)

ஆய்தொறுமுரமுந்தோளுமங்கமுமடுத்தவொன்னார்க்
கேயெனுங்கணத்தின்முன்னரெண்ணரும்புழையாக்கிக்
காய்கதிர்க்கரங்கள்சாலக்களந்தொறுங்காணத்தங்கள்
வாய்தொறுங்குருதிகக்கமடுத்தலால்விடுத்திலேனே. (௯௯)

காற்றெனுங்கடவுட்டந்தோன்கதையினாற்சிதைந்துசிந்தி
நூற்றுவருடலமண்மேனொய்யவான்கழுகுகாக
மேற்றகூளிகள்பசாசநாய்நரிக்கிரையாகாமற்
சீற்றமென்றெழுந்தசெந்தீதணியுமோதெளிவுமிக்கோய். (௧௦௦)

மாமிசைகரடயானைமிசைநவமணியாற்செய்த
தேர்மிசைபுகுமெங்கோனைக்காலினாற்செலுத்திப்பின்னும்
பூமிசைத்துயில்கூர்வித்தபுல்லியருடலமம்பின்
றூமிசைதரித்துமண்ணிற்கிடத்துவன்றெளிதினானை. (௧௦௧)

ஊன்படுமுடலங்கோடிதுணிபடச்சிரமுருட்டி
வான்படுதலத்திலொன்னார்மருவிடப்போக்கினாலந்
தேன்படுநறுந்தார்மெய்ம்மைச்செம்மலுக்குதவநின்றேன்
மீன்படுகண்ணிசாபம்விலங்குமோபொலன்செய்தோளாய். (௧௦௨)

குவலயமுன்புபோலக்கொடுத்திரென்றிரத்தலெல்லா
மவமதியென்றுநல்காராயமர்க்கடுப்பரென்று
தவமதிகொண்டேயாமும்பகர்ந்ததுதந்தைவாய்மை
நவமுறுபுவியுந்தந்தநன்மையினுயர்ந்ததன்றே. (௧௦௩)

இறுத்துளவுவப்பினுக்கொன்றுளதிடையூறென்றுள்ள
மொறுத்திடவிருந்தேனீமீண்டுணர்வுறப்புகல்வன்கேண்மோ
குறித்தமுதாதையாசான்விதுரநற்கிருபன்கூறின்
மறுப்பதன்றமரெய்தாதேல்வஞ்சினம்பிசகுமென்றே. (௧௦௪)

கூறியசர்ப்பகேதுமுதல்வராங்குமரராவி
தேறியகுரவர்கையிற்சேர்ந்துளதென்றுகொண்மின்
வேறிலையென்றுசொற்றான்விசயனிவ்வண்ணமென்றே
வீறுபேரவையினஞ்சான்சஞ்சயன்விளம்பினானே. (௧௦௫)

ஆங்கவனிதனைக்கூறவருகிருந்தனைத்துங்கேட்ட
காங்கயர்மன்னர்மன்னன்கவினுறுமுகத்தைநோக்கித்
தீங்கறவுரைத்தானோர்சொற்பெறவுறக்கேட்டியென்றே
பாங்குறுபெரியோர்யாருமனங்களிப்புற்றவம்மா. (௧௦௬)

சதுமுகனொருநாளம்பொற்றாமரைத்தவிசினேறி
மதுரிதமுனிவர்போற்றவிருந்தனன்மகத்தின்வேந்து
முதுமறைக்குருவுமேனையமரருமொய்த்துத்தாழ்ந்தே
கதுவுறவிருந்தாராண்டுகலந்தனரிருவரம்மா. (௧௦௭)

அல்லியங்கமலக்கோயிலந்தணன்றனைத்தொழாமற்
செல்லுமத்தகைமைநோக்கித்திருமலியமரர்போற்றுஞ்
சொல்லருங்குருவுஞ்சிந்தைக்கற்புதந்தொடரத்தூயோய்
நல்லவரிவர்கள்போலநண்ணிமீண்டவராரென்றான். (௧௦௮)

ஆதியம்பகவனந்தவமரர்தேசிகனைநோக்கிப்
போதரவுணராய்கோனீபுராதனர்சராசரங்கட்
கோதியநரனுநாராயணனுமாயும்பர்தீமை
காதியதொல்லையோரென்றவர்நிலைகழறினானே. (௧௦௯)

எத்திசையமரர்க்கெய்துமிடுக்கணவ்விடுக்கணெல்லா
மத்திசையவரானீங்குமாறிடத்தறமுண்டாமோ
சித்தநற்றூய்மையார்பாற்சேருமோவவர்போர்வெல்லு
மத்திறலுதவவல்லாரறமிலார்க்கிதஞ்செய்வார். (௧௧௦)

என்னுலகெய்திவிண்டுவியனுலகேகியீசன்
றன்னுலகெய்திமீள்வர்தகுதிகொள்கருமமுண்டேற்
பொன்னுலகடைவர்மீளப்புவியகத்தவதரித்து
மன்னறநிறுவிமீள்வர்மாதவனினைப்பில்வந்தோர். (௧௧௧)

என்றவரியற்கைபோதனெடுத்துரைத்திடலுங்கேட்டு
வன்றிறலமரர்மீண்டுவானுலகடைந்தபின்னர்த்
துன்றுறவசுரராலேயமரர்கடுயரமெய்தி
யின்றிவர்தம்மையேத்தவிருவரும்புவியின்வந்தார். (௧௧௨)

நாரணன்கரியமேனிமுகுந்தனாய்ஞாலத்தெய்த
வாரணநரனுமிந்தவருச்சுனனாகநின்றான்
காரணமதனாலன்றேசெஞ்சடைக்கடவுடம்பாற்
சீரணியசுரர்க்காய்ந்துதேவருக்குவப்புச்செய்தான். (௧௧௩)

மற்றிவன்வலியுந்தேசுமாண்மையுமாண்புமாறில்
கொற்றமுமிசையுமுள்ளோரெவர்கொலோகண்கண்மூன்று
பெற்றவனின்றியாரும்பிறிதின்றுகண்டாய்வின்மை
கற்றவன்றனைச்செற்றாரிற்கருதுவதறிவிலாமோ. (௧௧௪)

மித்திரனளித்தமைந்தன்விசயனுக்கெதிர்யானென்று
ருத்திரமதனற்கூறுமொழியைநீசரதங்கொள்ளே
லத்திரவலியான்மிக்கோனவனிவனுரையான்மிக்கோன்
முத்தலத்துணராருண்டோவுணர்திமுறைமைசார்வாய். (௧௧௫)

அறிவிலாச்சகுனிதுச்சாதனனரியளித்தோன்வாய்மை
யுறுதிகொண்டிவ்வாறன்றியெம்மனோருரைகொளாமற்
றெறுசினக்கனலாலெல்லாத்தேயமுந்தொலைக்கநின்று
யிறுதியிலெம்மையாருஞ்சொலப்படுமிவரையெண்ணார். (௧௧௬)

ஆதலாலின்றுதொட்டெம்மறிவுகொண்டுய்வையாகிற்
பூதலமுழுதுநீயேபுரக்குமாறுதவவல்லேந்
தீதிலார்முன்னநாளிற்செய்தவஞ்சினமுமீட்பங்
காதலாவுரைத்தேனிச்சொற்கருதுநீயுளத்திலென்றான். (௧௧௭)

வீடுமன்னுரைத்தமாற்றம்விபாகரன்மதலைகேட்டு
மாடுறுகுரவர்தம்பான்மதிமுகமாகிச்சொல்வா
னேடவிழ்மாலைமார்பரிச்சையினெழுகிற்கு
மீடுடையெம்போல்வார்க்கொன்றிசைத்திடுங்கருமமுண்டோ. (௧௧௮)

பாவித்தார்க்கினியபாதபங்கயம்பட்டமாண்பு
சேவித்தார்க்கிருகண்டோறுஞ்செறிந்ததாக்கொள்ளாராகின்
மேவித்தானுண்டசெஞ்சோற்றருங்கடன்விலங்குமேகொல்
கோவித்தாலழிவதாகக்குரவநீகுறிப்பதென்னோ. (௧௧௯)

ஆவதுமழிவதுங்கண்டறிந்திதுதகுந்தகாதென்
றீவதுபெரியோர்செய்கையெவரையும்பொருள்செயாமை
சேவகர்செய்கையெல்லாந்தெரிந்தநீபுகலுமாறே
சாவதுதுணிந்தோர்க்குண்டோசலதியுள்ளாழுந்தன்மை. (௧௨௦)

கன்னனிவ்வுரைகள்பின்னுங்கட்டுரைத்திடலுந்தூயோன்
மன்னவன்புலன்செய்யாதவாள்விழிமுகத்தைநோக்கித்
துன்னலரெவரென்றாலுந்துணிப்பனோர்கணையாலென்று
தன்னிலைபுகல்வதன்றிச்சமர்நிலைகண்டிலோமே. (௧௨௧)

நிருபர்கள்பலருங்கூடிமொய்த்துநேரிழைமன்றற்குத்
துருபதனகத்திற்சேர்ந்தகாலையிற்றெருக்கவல்விற்
குருபதிக்கேற்றந்தானியக்கர்கோன்கொடுபோம்போது
செருப்பலபுரிந்துமீட்டான்செறுவர்வுயர்த்தகோவை. (௧௨௨)

கைத்திறற்பேடியாயோர்கார்முகம்வணக்கிமான்றே
ருத்தானாரமேவியொருவனெண்ணலுந்தேர்வீழ்த்து
மூத்துணைப்புறமிட்டோடமுடித்திவன்றன்னைச்சாய்த்த
வுத்தினம்வெற்றிகொண்டானுன்கவர்ந்தரசுக்கீந்தான். (௧௨௩)

வேறு.

வெல்வதுமுலகெலாம்வியப்பமீள்வதுஞ்
செல்வதுமியற்கையேசேவகத்திறஞ்
சொல்வரோவல்லவர்சொற்றவக்கணம்
வில்வலிமாசுறுதிருக்குமேகொலாம். (௧௨௪)

அவனுடையூற்றத்தாலாலகாலநேர்
தவளவெண்புரவிசூழ்தேரிற்சார்தரு
கவினுறுவிசயனைக்கடப்பதுன்னியித்
தவறெலாமிழைத்தனன்சர்ப்பகேதுவே. (௧௨௫)

பொய்யறுமுள்ளமும்பொறையுஞ்சாந்தமுந்
துய்யநல்வாய்மையுந்தொடர்ந்தவைவரை
மையுறுமிதையமுமுனிவுமாசுமாழ்
கையரோவெல்பவர்கருதுநூல்வலோய். (௧௨௬)

நின்மனநேர்தருபுவியைநேர்ந்தவர்
தன்மனந்தருக்குறத்தரணியாவையு
முன்மணிக்குடைநிழலுறுத்திவாழுத
லென்மனத்துணிவிதேயென்றுகூறினான். (௧௨௭)

சரதமார்சிந்தையான்சாற்றச்சார்புறு
வரதனுஞ்சிலைக்குருமன்னைநோக்கியே
பரதநன்மரபெனும்பயனிறுத்தினன்
விரதபூடணனிதுமேன்மைமேன்மையே. (௧௨௮)

ஒக்கலுஞ்சுற்றமுமுடன்பட்டொன்றதா
மிக்கநல்வாழ்வுபோல்வேறுகாண்கிலோந்
தக்கதேகருதினான்றழைத்ததுன்குலங்
கைக்கொணீவழிபடுகடவுள்வாய்மைபோல். (௧௨௯)

வீரியங்காட்டுதல்புறத்தில்வீட்டினிற்
காரியங்காட்டுதல்கடமைகாவலர்க்
காரியர்சொற்றதேயறமென்றாய்குதி
சீரியர்புகழவாழ்சிறக்குறுங்குலம். (௧௩௰)

இஞ்சொலாலிவ்வணமெடுத்துக்கூறலு
மஞ்சலித்தவருடனாய்வதின்றியே
நஞ்சமொத்தவர்மொழிநளினவாண்முகஞ்
சஞ்சயற்கெதிர்வுறச்சாய்த்துக்கூறினான். (௧௩௧)

மாற்றருங்குருகுலமன்னர்யாவரு
மேற்றமார்புரிமுகத்தெல்லையின்புடை
யூற்றமோடெதிரடுத்துறுவதற்கவர்க்
காற்றலேதார்வலத்தடுப்பரொன்னவே. (௧௩௨)

அம்முறைகாணுமுனுங்கிருந்துள
மெய்மைகூர்புனிதருமுலகில்வேந்தருஞ்
செம்மறன்னூழ்வினைச்செய்கையீதெனத்
தம்முயிராசைகடவிர்ந்துவைகினர். (௧௩௩)

அம்மவோநமதிறையறிவுகேள்குறை
யிம்முறையியம்பியுமுணர்ந்ததின்றிதோ
செம்மையென்றுயிர்த்தயர்ந்துதேம்பினன்
மும்மையுந்தெரிவுறமொழியுஞ்சஞ்சயன். (௧௩௪)

தந்தையித்துணையறிவுடையதன்மையான்
மைந்தரைப்பழிப்பதுமாண்பன்றுமெனச்
சிந்தையிற்கொண்டிறைக்கிதனைச்செப்பினு
னந்தணத்துள்ளவரதிசயிப்பவே. (௧௩௫)

வேறு.

இடும்பனைப்பகனைப்புயவலிக்கொருவரிணையில்கிம்மீரனையமனி
லடுஞ்சடாசுரனையுலகெலாமேத்துமருஞ்சராசந்தனையியக்கர்
தடுங்குபேராற்றலுறுமணிமானைவையில்கீசகனையும்படுத்த
கடுங்கழற்காளைகதாயுதனிருப்பவேண்டுமோபடைத்துணைகழறாய். (௧௩௬)

மாண்டகுநிருபர்குலமெலாம்வென்றுவடகுருகண்டமுட்படுத்தி
நீண்டமேருவிற்றன்கவிக்கொடிபொறித்துநின்மலன்றன்கணையேந்தி
மீண்டும்வானகத்திலசுரரெண்ணிறந்தோர்வீந்திடக்காய்ந்துலகறியக்
காண்டவமெரித்தகாளைவீற்றிருப்பவாற்றனீகருதுதல்கடனே. (௧௩௭)

கஞ்சனைப்பிளந்துபூதகியுயிரைக்கவர்முலைப்பாலுடன்கவர்ந்து
பஞ்சவர்மகத்திற்கொடுஞ்சிசுபாலன்படப்பொருதாயிரக்கண்ணன்
வஞ்சகமதனாற்சொரிந்தகன்மாரிவரையினாற்றடுத்துயிர்மீட்ட
வஞ்சனவண்ணனிருப்பமற்றவருக்காற்றலராயதீண்டெவனே. (௧௩௮)

சரதமும்பொறையுஞ்சாந்தமும்வழுவாத்தராபதிதருமமேதனக்கு
விரதமாக்கொண்டோன்வெகுண்டுவிற்றூங்கி வேந்தர்மேற்பாய்ந்தனனென்னி
புரதகனனையுநீரிலுற்பவித்தபொங்கெரிதன்னையும்புரைவா [ற்
னரதனமுடையாயிளைஞர்மற்றிருவர்க்காரெதிர்நிற்பவரறிவாய். (௧௩௯)

சந்திரன்மரபிலுதித்தவேந்தரினுந்தந்தைசேவகத்தினுஞ்சகஞ்சேர்
மைந்தனுமபிமன்விசயனீன்றவனுன்வாகினிக்கொருவனென்றுணர்வா
யிந்திரன்மைந்தன்செய்திறலரவானென்பவன்சமர்முகத்தெதிர்ந்தா
லந்தரமுதன்மூன்றுலகினுமிலையாலவனுடனமர்பொருமடலோர். (௧௪௦)

கதித்தமாருதியன்றிடும்பியைப்புணர்ந்தகாலையிலுதித்தவன்கடலை
மதித்தமத்தனையான்கடோர்க்கசனெனப்பேர்மல்குதிண்டோளுடைக்காளை
யுதித்தெழுகதிரைவவ்விஞனவனுக்குவமையென்றுரைக்கினுமொக்குந்
துதித்ததன்றணலில்வந்தவட்கிந்துசுதரளித்தவர்நிகர்தூயோர். (௧௪௧)

இன்னமும்பகர்வன்கேட்டிநீமாயனிளவல்சாத்தகியெனுந்திறலோ
னன்னவர்க்குதவியாயினனவனோடாரமர்பொருதிறலுடையோர்
வன்னியினுதித்ததேசிகன்வயிரிமாற்றலர்க்கேற்றபோர்மறலி
துன்னருந்திட்டத்துய்மனுமவர்க்குத்தோள்வலித்துணையெனவுணர்வாய். ()

மெய்த்துருபதனுஞ்சிகண்டியுஞ்சிலைவல்வேந்தரிலாய்ந்தறிவுடைய
வுத்தமோசாவுமுதாமனுமுதலோருடனிவர்க்குறுதுணையானார்
புத்திரருடனுமச்சபூபதியும்புயவலிக்கொருவனாப்பொருது
கைத்திறல்தெரிப்பானுற்றனன்பற்பல்காவலர்கலந்துளாருணர்மின். (கசங)

சேதிபதேயத்திறைசிசுபாலன்சேய்பெயர்துட்டகேதென்போ
னாதிபர்க்கியல்சேர்படைத்துணையானானருஞ்சராசந்தனற்றனையன்
சாதினிற்றிகழ்சாதேவனுமிவர்பாற்சார்ந்தனன்சோழனுங்கூடக்
கோதிலாவழுதிமுதலியர்துணையாக்குறுகினர்புகழ்கொள்வெண்குடையோய்.

எய்தியகரிதேர்பரிபதாதிகளக்குரோணியேழெனவிலக்குரைப்ப
மெய்திகழ்பாண்டுதனையர்வீற்றிருந்தார்மேற்செயலோர்திநீயென்று
கைதவமுணராச்சஞ்சயனுரைப்பகட்புலனிலாதவன்கேட்டு
வெய்துயிர்த்தாவிபுறஞ்செலாதிருத்திவேந்தவைநோக்கியீதுரைத்தான். ()

வேறு.

ஆய்திறலுள்ளானோதியபல்லோரடலெல்லா
மாய்தருமென்றேகூறினுநன்மாருதியென்போன்
காய்தருகண்ணானீள்கதைகொண்டேகளமெய்தின்
மாய்தருமன்றியாருயிரோடும்வருவாரோ. (கசசு)

மாமலையோவன்றோளிணையென்பார்மகிமன்னர்
தீமலிகண்ணானேந்தியதண்டந்தென்பூமிக்
கோமலிதண்டோவாரவனோடுங்குறுகிற்போர்
பூமலிதோளென்மைந்தரிலக்கோபுகலீரே. (கசஎ)

சீறியெழுந்தகோளரவம்போற்செருவூடு
மாறியடங்கநீறுபடுப்பான்வயவீமன்
கூறுவதென்னேபோயமர்முற்றிற்கொடிதன்றோ
தேறுமின்மைந்தரென்றனனன்பாற்றிறல்வேந்தன். (கசஅ)

தந்தையுரைத்தசொற்செவியூடுசாராமுன்
சிந்தைகவற்சிகொண்டவனாகித்திறலோரின்
முந்துறமட்டுத்தார்புனைமைந்தன்மொழிகின்றான்
வந்தவனுற்றோர்யாவருமுள்ளமறுக்கெய்த. (கசகூ)

அன்னவர்தேசும்வலியுமுணர்ந்தீரவரோநன்
மன்னவரென்றேகூறியதன்றேவலிதேரீர்
துன்னலரூற்றமோர்கணையாலேதுரந்தோட்ட
வென்னருகுள்ளோர்தன்செயல்கேண்மினெனச்சொன்னான். (கரு௦)

வேறு.

நாடும்பிலமுமந்தரமுநவிலுந்தரத்தான்மழுவாளி
யோடும்படிக்குச்சமர்புரிந்தவுரவோன்சிலைகைக்கொண்டுறுத்து
நீடுஞ்சமர்வாய்நின்றானேனிருபரெவர்மற்றவனெதிரே
காடுங்கிரியுந்திரிந்திளைத்தோர்கணைக்கோவொருவரிலக்கன்றே. (கருக)

வாமச்சிலைக்குஞ்சிலைமறைக்கும்வலிக்குமொருவர்மாறில்லா
நாமச்சதுர்வேதியன்முனைவாய்நமனும்வடவைக்கொடுந்தீயு
மீமத்துறையும்பெருமானுமெய்தற்கரியாரெனிலொருத்தி
காமத்துழலுமைவர்வெற்றிகாண்பாரிதனைக்கருதீரே. (கருஉ)

வில்லுக்கிவனேயெனவியக்கர்விண்ணோர்காவல்வேந்தர்பலர்
சொல்லத்திகழ்வோன்பொருமுனைவாயறியேனுந்தொல்லாசிரிய
னல்விற்குளிர்ந்தநிறைமதியுமரியபகலிலிரவியும்போன்
மல்லற்புயத்தொன்னலரிருளைமாய்க்குந்திறலைமதியீரோ. (கருங)

அந்திப்பிறைசூடியபெருமானருளுக்கிவனுய்மறைவாளி
முந்திக்கவர்ந்தோன்சிலைத்திறற்குமுதல்வனசுரர்பொருமுனைவாய்
கந்தர்க்குவமைபுகலுரவோன்கலைவல்சிலையாசிரியன்மகன்
சந்தச்சிலைக்குநிகர்சிலைமுத்தலத்திலுளவோசாற்றீரே. (கருச)

ஞானவுளத்தோனறிவுயர்ந்தோனனிவெஞ்சமரிலெதிரில்லா
மானமறத்தோன்மழுவாளிமருங்கிலுணர்ந்ததனுர்வேதி
யூனினுதித்தகவசமொடுமுயர்குண்டலமுமகபதிக்குத்
தானமளித்தோன்றலைநாளிற்றனுவால்விசையன்றனைவென்றோன். (கருரு)

பன்னும்விசயன்றனக்கிவனேபகையாமென்னவந்திவன்பாற்
றுன்னும்புயங்கக்கணைப்புயத்தோன்றோளாண்மையினுமாறில்லான்
மன்னுஞ்சிலைகொண்டமர்பொருதால்வானும்புவியுமறைக்கணைகள்
கன்னன்றுரப்பானிருப்பவெமக்கென்னோவச்சங்கழறீரே. (கருசு)

சேராருடலமெனும்வயலைச்செங்கைச்சிலையிற்றொடுத்தகணை
பாரார்கொழுவாயுழுதளறுபடுத்துஞ்சிந்துபதியுளனாற்
பேராவுயர்ந்தபகதத்தன்பெயருங்கனகப்பொருப்பனையான்
போரார்முனைந்தாலுலகேழும்பொடியாமவனெம்புறத்துண்டே. (கருஎ)

வாருவலிக்குஞ்சிலைத்தொழிற்குமாற்றார்க்கரியேறெனநின்ற
மாகர்புகழுமத்திரத்தான்வந்தெம்விழிக்குவமையானுன்
போகிநிகருஞ்சோமதத்தன்பூரிச்சிரவன்காந்தாரன்
சோகமுணராக்கிருதவன்மன்முதலோரெம்பாற்சூழ்ந்துளரால். (கருஅ)

வீமன்றனையும்விசயனையும்வில்லாற்புயத்தால்வெல்வனெனத்
தாமம்புனைந்தசிலையேந்தித்தடந்தேர்மீதுதனித்தகுவர்
சேமமென்னமுப்பத்திரெட்டிசெய்யுமாயிரத்தேர்சேர்கின்றார்
வாமம்புனைந்ததடந்தோளார்சஞ்சத்தகராம்வயப்பேரோர். (கருகூ)

மட்டுரைத்தற்கரிதாயவலியோர்திருதர்பற்பலரென்
விட்டத்தலைவானிருக்கின்றாரின்னும்புவியினுளமேலோ
ரொட்டிப்பொருநாள்கேட்டலைவரெவருமெனக்காவுற்றவரென்
பட்டத்துயிருக்குரியரனையாரென்னேவுரைப்பதினிப்பலவே. (௧௬௦)

தேருங்கரியும்வயமாவுந்திரளுங்கணிதக்கிரட்டிலெவ
ரோருங்கருத்தரவையத்தோடொன்றாத்திகழக்குரோணியென
நேரும்படியோர்பெயரிட்டார்நெறிதேர்குரவரிவருடனே
போருந்தரத்தருளரென்னிற்புகலீரகலாரறிவுள்ளீர். (௧௬௧)

பச்சைப்புயலாங்கவர்பாலிற்பட்டான்கொழுவைப்படைதாங்கு
மிச்சைப்பலராமனுமெமக்காவெய்தற்கிருந்தானிவையனைத்து
மச்சத்திருந்துகழிவுறுமென்றறைந்தீரென்னில்யாமென்னோ
கொச்சைப்படிவத்திறலினராய்க்கொண்டோவெருவிக்குழைகின்றீர். (௧௬௨)

கதைகைக்கொண்டுசமர்முனைவாய்க்கலந்தேனென்னிலுலகுறுமன்
பதையோடரசர்முழுதொருங்காய்ப்படர்ந்தெதிர்த்திடினுமொருகணத்தில்
வதைசெய்தடல்வானகத்துய்ப்பன்வயமாருதியோவெனைவெல்வோ
னிதைநீகருதாதவராற்றலென்னோவென்னோவிளம்புவதே. (௧௬௩)

துச்சாதனனற்றுன்முகன்மற்றோளான்விகர்னன்சுமதியொடு
மெச்சாவலிசித்திரசேனன்முதலாமிளைஞர்விறற்கரியோர்
பச்சாலிலையிற்றுயில்வோனேபரித்தேர்விடினும்பற்குனனை
மெச்சாரிவரேவிறல்கொள்வர்யானேவீமற்கெதிர்மேலோய். (௧௬௪)

எய்துமிடியேறினைவிலக்கவெழிலிசொரிகன்மழைகாக்க
வுய்துபெருமாருதம்வீசாதொடுக்கவுதகம்புவியாகச்
செய்துகரிதேர்தன்மிசையிற்செலுத்தப்பாலைநிலத்தினிடை
பெய்தபுனல்கள்வருவித்துப்பெயர்வாகினியினிளைப்பகற்ற. (௧௬௫)

மடங்கற்சரபஞ்சார்த்தூலமாதங்கத்தோடுளவிருக
மடங்கத்தனக்கேயேவல்புரிந்தருட்பாணிற்பவரும்பூதங்
குடங்கைக்கணங்கண்முதலியகைகுவிக்குந்தம்பமுதலாகத்
தடங்கற்புயத்தீர்மாமுனிவர்தரக்கைக்கொண்டதன்மையினேன். (௧௬௬)

எல்லாவிரகும்யான்வல்லேனெனக்காற்றலரைக்காத்தளிக்க
வல்லாரன்றுவானவருமற்றுங்கவருக்கொன்னலரைச்
சொல்லாற்காக்குந்திறலெனக்குண்டதனாலென்னைத்துதியாமற்
பொல்லாவலியோர்தமைப்புகழ்ந்துபொருமிக்கரைதல்புகழாமோ. (௧௬௭)

உரைத்தமாற்றமித்தனையுமுறுதியலவென்றுளங்கொண்டாற்
கரைப்பனின்னுமவைகேண்மோகமலனுடலம்பொறித்தன்றே
நிரைத்தவாயுதனைப்பொறித்துநிகழுங்கருமம்பொறித்தன்றித்
தரைக்குளதனைத்தவிர்ந்திருக்குந்தரத்தாருண்டோசாற்றீரே. (௧௬௮)

அரசர்க்கடுத்தநெறிமுறையினமரைப்புரிந்தாலவனியெலா
முரசக்கொடியோன்றனக்காகவெனக்கேயாகமுயல்வதலாற்
பரசிப்பணிந்துபதம்வருடிப்பாண்டுகுமரர்க்கிதங்கூறித்
தெரிசித்துயிர்வாழ்ந்திருந்திலனல்புகழோவுயிரோதீர்வதுவே. (கசுகூ)

என்னப்பலவுமெடுத்துரைத்தவிராசராசன்றனைநோக்கித்
தன்னிற்றுயருநெட்டுயிர்ப்புந்தாங்கித்தந்தைகட்டுரைத்தான்
பன்னற்கரியபெருந்திறலோன்பாண்டுகுமாரவரோடு
முன்னிச்சமருக்கொருப்படுதன்முடியாக்கருமமெனநினைவாய். (கஎ0)

தெய்வவலியுமகவலியுந்திரடோள்வலியும்படைவலியு
மைவர்க்குளதுநினக்குளதிவ்வரசர்வலியொன்றலதிலையாற்
கைவல்விசயனசுரர்குலங்களைந்துமகவான்பதிகலந்து
மெய்வலமுதுநுகர்ந்தடைந்தோன்வேந்தர்தரமோவிளம்பாயே. (கஎக)

கருதுமொளித்தாரகையனைத்துங்ககனத்தொளிருங்கவினோடும்
பருதியுதிக்கிற்றலைமாறிப்பார்ரோர்க்கெதிரிற்பயிலாதான்
மருதமிடந்தோன்றேருரமகவான்புதல்வன்வெளிவந்தாற்
குருதிமுனைவேற்பலதிருபர்குழுவுமொழியுங்குலைகுலைந்தே. (கஎஉ)

தன்பேராற்றறனக்குதவுந்தனக்காருதவிசெய்திடினும்
வன்போராற்றலிலாதவர்க்குவசையேயன்றிவாராதா
லுன்பேராற்றலவர்க்கெதிரன்றுற்றகுரவருயிரளவே
யென்பேர்வாய்மைதடுப்பதுவெவினிசைப்பன்கேண்மோவிகலறவே. (கஎங)

அவியைப்பருகுமவரோடுமகிலத்தரசர்மகிழ்வெய்தப்
புவியைப்பகுந்திங்கிருகூறுத்தருவனெவரும்புகழ்ந்தேத்தக்
கவினிற்றிகழுநின்கூறுகவிகைநிழலிற்புரந்திருத்தி
குவிகைத்திறலோர்நினையடுத்தகுழுவோடென்றுஞ்சிறந்தென்றுன். (கஎச)

வேறு.

தந்தையுரைவந்துசெவிசாருதலின்முன்னஞ்
சிந்தையலம்வந்துநனிசீறியிதுசொல்வான்
முந்துபொருசூதினிடைபாண்டுதருமொய்ம்போ
ரந்தணர்முன்னுடறவழிந்தடவிபுக்கார். (கஎரு)

புக்கவரைமீளவருவித்துறுதிபூண்பிற்
றெருக்கலெனவேசிலபதாகினியுறுத்திக்
கைக்கொள்புவிமீட்பதுகருத்துறவிருந்தான்
மைக்கருமுகிற்குநிகர்மேனிதிகழ்மாயன். (கஎசு)

அன்னவனினைத்தபடியானவனிநல்கி
லொன்னலர்நகைப்பரெனதூற்றமிலையாமாற்
சொன்னபுவியிற்சிறுதரும்பளவுநல்கேன்
பன்னுமவருக்கெளிமைபட்டுயிர்விரும்பேன். (கஎஎ)

ஈசனலதுள்ளவரிலெம்மைவிறல்கொள்ளப்
பூசலின்முகத்தரிதுபுந்திமதியாமன்
மாசறுகருத்தினர்மருட்டியமயக்காற்
பேசினைவெருக்கொடுகலங்கல்பெரியோய்நீ. (௧௭௮)

மாற்றலரைவெல்வதுகைவந்துளதுன்னச்ச
மாற்றும்வகைதேர்ந்திலனடுத்தமுனைதன்னிற்
கூற்றின்வயமாயினர்கொடும்புயவலத்தா
லேற்றவரெனுஞ்சொல்செவியெய்தில்விடுமையம். (௧௭௯)

அடுத்தபடியாகவமர்செய்வதறனன்றிக்
கொடுப்பதுமறத்திபுவியென்றரசுகூறத்
தடுத்தருகிருந்தபகாந்ததிறல்வல்லோ
னெடுத்திதனையோதினனிருந்தவர்துளங்க. (௧௮௦)

பார்கருதுபாண்டவர்படைத்திறல்வியந்து
சீர்கருதிலாதெமதுவின்மைபிழைசெய்யேற்
போர்கருதிலோர்கணைபுரட்டியுலகேழும்
வேர்களைவனென்னிலுயர்விற்றிறலருண்டோ. (௧௮௧)

தேறுபடைவல்லவர்செருப்புரியவந்தான்
மாறுபலகாவலரும்வாகினியும்வேண்டேன்
கூறுமொருவிற்கொடுதடிந்துகுவைசெய்தே
சேறுபடுவிப்பனுடலுஞ்சிரமுமேலோய். (௧௮௨)

வெப்புவடவைக்கனலும்வெங்கனலுமீசன்
முப்புரமெரித்தநகையிற்கனலுமொய்த்த
தொப்புரமுனைக்கணைசெலுத்தியுறுவென்றி
கைப்புகமுடிந்தொருகணத்திலடவல்லேன். (௧௮௩)

இக்கணமெனக்குவிடைநல்கினுலகெல்லா
மக்கள்குடைநீழலில்வயப்படவுறுத்தி
மிக்கதுயரும்பலர்வெறுப்புமகல்விப்பன்
தக்கதிதுவென்றுபலதன்மையுரைசெய்தான். (௧௮௪)

அங்கர்பதிதன்மொழியடங்கலுமுணர்ந்துஞ்
சங்கையுளனாய்த்திரிதராட்டிரனுரைப்பா
னங்கிதருகாண்டிவமும்புட்டிலழியாதுந்
திங்கள்புனைவோன்றருசெழுங்கணையுமுள்ளோன். (௧௮௫)

புத்தமுதுவானவர்பிரானொடுபொருந்தித்
துய்த்தவனிவாதகவசப்பெயர்கொடொல்லோர்
குத்திரமுணர்ந்தகொடியோர்பலர்குலத்தோ
டுத்தமனளித்தகணையொன்றிலுயிருண்டோன். (௧௮௬)

மாயனெனுமீளிவல்வன்றெழில்செலுத்த
நேயமறவந்துநரனேருமுனேவாயிற்
போயொருவர்நிற்பதெளிதன்றபுகலென்னே
நீயிலைகொலெனன்னனிரைமீட்டவயினென்றான். (கஅஎ)

அற்புதமருச்சுனனைவெல்லவெனனலையா
கற்பமுறுகாலமரனுக்கிணைகடுப்போன்
விற்பொழிகடுங்கணையில்வீயுமுலகெல்லாஞ்
சொற்பழுதுராதுமதிகொண்மினுயர்தூயோர். (கஅஅ)

மைந்தர்பிறர்நண்பர்பரிவாரமுடல்கூறுய்ச்
சிந்திவிழுமாரமர்செகுத்தல்புரிவானேன்
முந்தவவர்தந்தபுவிமுற்றுமுறைநல்கி
யெந்தவுயிருந்தொழவிருந்தரசுசெய்மின். (கஅகூ)

என்றுவிழியின்புலனிலாதவனுரைப்பக்
குன்றமெனவைகுமொருகோமுனியுரைத்தா
னன்றுமுதலின்றளவுமாங்கவனையெள்ளி
வென்றிகொடுவந்தபடியாருணர்வர்மேலோர். (ககூ௦)

இப்பொழுதுநீசமர்முனேந்துநரனீண்டிற்
றப்பிவருவாய்கொலுயிர்தன்னொடுசமைந்தே
செப்புதல்வலார்சமர்தெரிந்திலர்தெரிந்தோ
ரப்பொழுதலாதுநவிலாரறமிதாமால். (ககூக)

ஆதலினுரைக்குமுறையாய்ந்துரைசெய்கென்னப்
பூதலமெலாம்புகழ்புராதனனுரைப்பக்
கோதறுசெழும்பரிதிகான்முனைகொதித்தே
வேதனையுழந்தமகிபற்கிதுவிளம்பும். (ககூஉ)

மேவுவதுமுன்னரமரென்றுவிரகுன்னித்
தேவர்கணையொன்றுமுதவாததிறலாலே
தாவுநரனுருயிர்தரித்தனனினித்தா
னேவுகணையொன்றிலவனீறுறுதறிண்ணம். (ககூ௩)

அன்றதெனவையமுளதாகிலுலகாற்ற
வின்றுதவுமைவர்பெறவென்றபடியென்றே
மன்றமதகன்றுதன்மனங்கனலிறைப்பச்
சென்றுமனைசார்த்தனனிரப்பர்மிடிதீர்ப்போன். (ககூ௪)

வேறு.

புற்றராவைவுயர்த்தகோவையளித்ததாதைபொருட்டுசெயர்
னுற்றபின்னரிருந்தசஞ்சயனேடுசாவினனுண்மையோய்
செற்றம்வல்லவர்யாரையாவர்செயிர்ப்பதென்றுகுறித்துளார்
சொற்றசொன்முறைகூறுகென்னவுரைத்தனன்மொழிசோர்விலான். (ககூ௫)

கங்கைதந்தவனச்சிகண்டிகருத்தினூடுகுறித்துளான்
றுங்கநான்மறையோனைவெஞ்சிலையோடுமேதான்றியதோன்றலே
தங்குநல்லறன்மைந்தனுந்திறற்சல்லியன்றனையுன்னினான்
புங்கமாருதிகிருபனுந்தியபுதல்வர்நூற்றுவர்கருதினான். (கஃகூசு)

கன்னனோடுயர்சிந்துபூபதிகருதுமேதசிகன்மைந்தனைப்
பன்னிவெல்வதுபற்றினானிகல்பற்குனப்பெயர்பெற்றவன்
சொன்னவிச்சவுபலனைமற்றிருமைந்தருந்தொடர்சொல்லினா
ரின்றுன்மைந்தர்சிறார்க்கெலாமெதிரேற்பதாகினனபிமனே. (கஃகூஎ)

சாத்தகிப்பெயர்வல்லகாளைசயந்தருங்கிருதவன்மனை
ஆத்திருடிதடுக்கினுஞ்சமர்வெல்வனென்றுரையாடினான்
கோத்தவெஞ்சிலைமச்சநாடர்குலச்செழுங்கனல்வந்தவன்
சீர்த்திசேரவுடன்றுணைப்படையென்றுமன்னவர்செப்பினார். (கஃகூஅ)

தீயில்வந்தவள்மைந்தரைவர்சிகண்டிபாற்றுணையாயினார்
தேயவேந்தர்சமக்கிசைந்தவரோடுபோர்செயநேறினார்
தூயரானவருக்கெலாமரவானெனுஞ்சுதனுயினான்
மாயைவல்லவருக்கெலாமடல்வல்லமாருதிமைந்தனே. (கஃகூகூ)

இன்னவண்மைபிரிப்பதாகியிருந்துளாரவரீண்டுநீ
மன்னநின்மதிதந்தபான்மையுரைத்தியென்றுவகுத்தனுந்
துன்னுபான்மையர்சிலரறன்றருதோன்றல்சல்லியனுக்கெதி
ரென்னுமாறுநிகர்ப்பதோவெனவேற்றவாறுவிளம்பினார். (௨00)

அனையகாலைதெரிந்தசல்லியனறைகுவானமுனீரினுட்
புனையவந்துபிறக்கின்மாற்றுதலின்றுபோலியபூபதி
வினையமுன்னியெழுந்துளானெனில்வெல்லவல்லவருண்டுகொற்
றனையடுத்தவனுற்றலுந்தகுமொப்பவென்பர்தவத்தினோர். (௨0க)

ஆயதன்மையினறனளித்தவனறைவதாமுறைறயென்னலுந்
தேயவேந்தர்கள்வாயடங்கினர்செகதலத்திறைமீளவு
மாயுமாறுகுறித்துநோக்கினுமமரின்மைந்தர்வயம்பெறார்
வீயுமாறுளகாலமீதெனவோதினான்வெறுப்போடுமே. (௨0௨)

வேறு.

தவளவெண்குடைத்தராபதிதன்றுளங்கருதி
யுவளுநன்மனவிதுரனுமுத்தமனுரைத்தான்
கவளயானையோய்நின்னுளக்கருத்திதுவானாற்
றுவளுமாமதியொருவிநீதுணிதியோகருமம். (௨0௩)

சஞ்சயன்றனைமீளவுந்தனையர்பாலுறத்தி
யிஞ்சொலாலுமையழைத்தனனீன்றவனென்று
லஞ்சலித்தவர்நின்னுழைமேவுவரவர்முன்
வஞ்சினக்கனன்மாற்றிநின்மனந்தரல்செயுமோ. (௨0௪)

என்றுகூறினன்சஞ்சயனெழின்முகங்குறித்து
மன்றன்மாலையான்வருவரோமைந்தரீண்டென்ன
நன்றதாயினுந்தீமையேபெருகினுநாடா
ரின்றுமேவுவர்தந்தைசொல்வழுவுதற்கிசையார். (உ0ரு)

அனையமைந்தரைக்கொணர்குவனருட்டருகென்ன
வினையவாய்மையேயோய்சுயோதனனிருசெவிபுகலும்
புனையருங்கனல்பொங்கியபோற்சினம்பொங்கி
முனையழிந்திடச்சஞ்சயன்றனக்கிதுமொழிந்தான். (உ0சு)

சோரம்வல்லமால்சூட்சியாற்றோற்றபேரவனி
வீரம்வல்லவர்கொள்பவர்வேந்தனேதருவோன்
றாரமுன்னிநீபகர்ந்திலைதோள்வலிபுகழ்கை
வாரம்வல்லைநீசெல்லுதியைவர்பான்மடங்கி. (உ0எ)

தக்கவர்க்கெலாந்தருமொழியீதெனக்கொண்மின்
பக்கபாதமுள்ளவரினிப்பாண்டுவின்புதல்வர்
தொக்கநல்விடஞ்சூழ்தலையிருப்பதிற்றூய்மை
மிக்கபோர்வலியிலாருழைகுறைவுறும்வீரம். (உ0அ)

கன்னன்சௌபலன்றம்பியர்காவலர்பல்லோ
ரின்னுமென்னுழைநண்புடையோர்பலரிருந்தார்
பன்னுவெஞ்சமர்பயின்முறைபற்றுதலொழியே
னுன்னுநங்கருத்துளபடியொழுகுமினென்றான். (உ0கூ)

செம்பிற்செய்யகட்கன்னனவிலொன்றுமேசோரா
வெம்பித்தீய்தரப்பொருதணிவிறலிணையுதவும்
பம்பிக்கற்றனபகர்வதென்பரிவுளீர்நும்மை
நம்பித்தேறியான்ஒழுகுமாறன்றெனநவின்றான். (உக0)

மைந்தனோதியபுன்மொழிமகிபதிகேட்டுச்
சிந்தைதீயெழப்பொங்கிவெஞ்சினத்தையுமொருவிக்
கொந்தருமலர்மார்பினுன்கொடுங்கரநீட்டி
வந்தசஞ்சயன்மறுமொழியெடாவணமறுத்தான். (உகக)

மாண்டுதீரவோவாழவோமலரயன்விதித்த
தீண்டுமவ்வழியெய்துறுமறிவெவர்தடுப்போர்
பாண்டுமைந்தராற்பெறுவதேனிவர்க்கெனப்பணித்தா
னாண்டுநீங்கியேவீடுமனுறையுள்போயடைந்தான். (உகஉ)

தனுவலாரியரிருவரும்புரவியந்தாமா
முனிவுதீர்தருவிதுரனுமுன்னவர்பலரு
மனுவினூன்முறையமைச்சருமற்றவனுருவோ
டினியநீழலினெழுந்தகன்றுறையுள்போயிருத்தார். (உகங)

சிந்துபூபதிமத்திரர்நாயகன் றிணிதோண்
மைந்தரிற்சுயோதனனெழிந்தவரொடுமாமன்
முந்துபற்பலதேயநாயகர்பலமுகத்தா
லந்தணந்துறந்தவரவரிருக்கைபோயடைந்தார். (உகச)

ஆலத்தைப்புரைவடமந்தனுமரியசஞ்சயனு
மூலத்தந்தையுமிருந்தவர்மூவரேயொழிந்தோர்
காலத்தூதர்கைப்புகுவதேகடனெனப்புகுந்தார்
மேலைச்செய்வினைசூட்சிகள்விளைந்தனகுறிப்பாம். (உகரு)

வேறு.

பனிவெண்குடைநிழலிற்பலபாரான்மகிபாலன்
றனிதங்கியமகனோடுயர்தகைசஞ்சயனோடும்
புனிதந்திகழ்கற்பாற்றியபொற்பாவையிருந்த
நனிகொண்டுயர்மனைசென்றனனவிலுந்திறமுன்னி. (உகசா)

பைங்கோதையெதிர்ந்தாண்டகைபாதங்கைவிளக்கிச்
சிங்காசனமிசைகொண்டுசெறித்தாணிகழ்வெல்லாம்
அங்காயிழையுணரும்படிவுரைசெய்தமர்புரிவா
னிங்காதரமுடன்வைகினனிவனென்றுகுறித்தே. (உகஎ)

போதத்திறலுள்ளார்வலிபுகழ்பாண்டுவின்மைந்தர்
சோதித்துளமுறையாலவரொடுபோர்பொரறுணிவன்
றூதித்தனளித்தோனுரையாலுன்சுதனென்சொற்
பேதித்தனவேசிந்தைபிடித்தானிதுதகவே. (உகஅ)

சூதாடியழிந்தீந்துளதொல்லைப்புவிநல்கிற்
பேதாயவர்சினமாறுவர்பெரியோருளமிதுவே
கோதாரறிவினர்வாய்மைகுறித்தாகவமுற்று
லேதாமுடிவாமோதுணிவுன்னிப்புகல்கென்றான். (உகக)

உரியோனுரைகேளாமுனருயர்மைந்தனைநோக்கிப்
பெரியோருரைபொருளன்றெனல்பிழையோபெருமிதமோ
சரியாருமிலாநல்லறிவுடையாயுனதந்தை
பரிவான்மொழிதருபான்மையில்வாழ்கென்றுபணித்தான். (உஉ0)

அன்பாலவன்புகலக்கடுவரவம்புனைகொடியோ
னென்பாலவர்சூதாடியிரிந்தன்றுகொடுத்த
வன்பார்தனிலவராண்மைவலத்தாலருளியதாக்
கொன்பார்தருமகிபாலர்குறிப்பார்வசைகுறுகும். (உஉக)

திசைபத்தினுமென்பேர்செலவுயர்வென்றிசெறித்தேன்
வசைபெற்றினிவாழேனுயிர்வணங்காமுடியுள்ளே
னிசைபெற்றவர்தாள்போற்றியிருந்தின்சொல்விளம்பித்
தசைமிக்குடல்வருடிக்குறைதவிரேனமர்புரிவேன். (உஉஉ)

என்வென்றியுமவரூற்றமுமுலகேழுமியம்ப
மன்வென்றிபடைப்பேனிறைமாண்பிற்புவியாள்வேன்
புன்வன்றிறலினர்பாண்டுசிறார்போர்பொரலாற்றார்
முன்வென்றுவயங்கொண்டுளமுறையின்றுமுயன்றே. (உஉ௩)

உருட்டித்திருவெமதாகவுமுயர்கானகமடைந்தோர்
வெருட்டிக்கொளலாமீட்டெனமீண்டார்பலரவர்தம்
பொருட்டிற்புகல்வோர்பற்பலரிவனுண்டவர்புணர்ப்பாற்
சிருட்டித்தபிதாவென்வலிதெளியாதுரைசெய்தான். (உஉ௪)

வலிதேய்தரவசையூடுறைவருசெய்கையின்மறுத்தேன்
குலிசாயுதன்முதலோரெனதெதிர்துன்னுதல்குறியார்
கலிசேர்படையணிவாகினிகண்டாலடலவர்
நலிவாகுவருயிரென்றுநவின்றான்பலமொழியே. (உஉ௫)

தோற்றம்பெறுசுபலன்றருதுவர்வாய்மகனன்று
சாற்றும்பலவிரகான்மதிதளர்வுற்றுடையவனைத்
தேற்றும்படிபலவாய்மைநிரைப்பத்திறல்வேந்தன்
போற்றுந்தெளிவுறுசஞ்சயனுடனீதுபகன்றான். (உஉ௬)

மதிமிக்குடையாயங்கவர்வலியாவுமுணர்ந்தாய்
துதிமிக்கவரிவர்நூற்றுவர்தோளாண்மைதெளிந்தாய்
சதிரிற்சமர்செய்தாலெவர்தாழ்வோரெவர்வாழ்வோர்
கதியிற்றெரிவுறுமாறுளங்கவலாதுரையெனவே. (உஉ௭)

கேளாயிதுபகருந்தரமன்றாலிசைகெழுவுந்
தாளாளொருமுக்காலமுமுணருந்தவராசன்
மாளானினிப்பிறவாவெனுமறைநல்கியமுனியை
நீளாதிவணுறுமாறுநினைத்தாலிதுநிகழ்த்தும். (உஉ௮)

என்றங்குரைதருமெல்லையினிசைந்தேவிழியில்லா
னன்றேயிதுதகுமென்றுநினைந்தானவின்முறையாற்
பொன்றாழ்சடைமுடியோடுயர்புலித்தோலுடையோடு
மின்றாழ்புயலெனவந்துமுனின்றான்மறைவியாதன். (உஉ௯)

ஓடித்தொழுதார்நால்வருமுய்த்தாரரியணைமீ
தாடிப்பரிவொடுசெய்கடனாற்றித்தெளிவற்றே
னேடிக்கருதியவாய்மைநிரைத்தான்மகிபதியும்
பீடிற்பொலிமுனிகேட்டிதுசொன்னானைகபிறழ. (உ௩௦)

வேறு

பெருமநீயமரில்வெல்வதார்வலிபிழைப்படுத்திமடிவோர்களியார்
கருமமோர்ந்துரைசெயென்றுபேசினைகருத்துமிக்கவர்விளம்பலார்
தருமமெவ்வனுளதங்கணென்றிதவரெங்குமுண்டுதகருங்கடாய்ப்
பொருமுகந்தருமிழுக்குமேதம்வலிபொய்ப்புமாதியபுணர்ப்பெலாம். ()

நல்வினைக்கெவர் துணைச்செய்தாரவரைநண்புகொண்டுபிரியாதமர்
வெல்வினைக்குரிய துணைச்செய்வானலதுமீட்டுமோதியகொடுந்தொழில்
வல்வினைக்கெவர் துணைச்செய்தாரவர்மருங்கிலுண்டுதுயர்மாவசைச்
சொல்வினைக்குரியநரகதுன்பமெம்மபாசமாதிதுணைசூழ்வெலாம். (௨௩௨)

வேலையொத்தபடைகொண்டுன்மைந்தரமர்வெல்லவெய்தினுமிவர்க்குளம்
மாலையொத்தவரிருந்துளாரெனமதிப்பரோககனவாணர்தான்
சேலையொத்தவிழிவிந்தையெந்தையிருதிட்டிதங்குபுயமெய்துவாள்
சோலையொத்தகலுமவாவுளாய்கருதுகென்றுபின்னுமிதுசொற்றனன். (௨௩௩)

மாதவன்கமலமங்கைகேள்வனரிவாசுதேவன்முகில்வண்ணனற்
பாதபங்கயமுளங்கொள்வோர்க்கரிதுபாரிலில்லையதுபற்றிநீர்
நாதனென்றவனைபுன்னியச்சுதனடத்தநன்னெறிநடந்துளார்
கோதிலாததிறலவர்வெற்றியிவர்கொள்வரென்றிவர்குறிப்பரே. (௨௩௪)

வேயருங்குழல்செறித்தசெம்பவளமேதகுங்கமலவாயினுன்
றூயினும்பரிவுள்ளானினைந்தவர்தமக்கெனத்துணிபுகொண்டுநீர்
நேயமோடவனைநெஞ்சிலுன்னியினிநேருமென்றுபலகூறினுன்
றாயமாமுனிகருத்துணர்ந்திதுதொகுத்தனன்றிரிதராட்டிரன். (௨௩௫)

வையமென்னுமொருமாயையைக்கருதிமாய்ந்துதீருநெறிமேவல்கண்
டுய்யவந்தெமையுணர்த்தினுயினியுணர்ந்துளோமுலகயின்றவச்
செய்யதாமரைபுரைந்தகண்ணனிருசேவடிக்கடிமையாவனென்
மையலாழறிவகன்றதென்னவிடமாசுணக்கொடியனோதுவான். (௨௩௬)

உலகையோரடியளந்தமாலெனினுமுண்டுமிழ்ந்தவரியென்னினு
மலகையாருயிர்பறித்துளானெனினுமயனைநல்கினவனென்னினுந்
திலகயாதவனையெட்டுணைப்பொழுதுசிந்தைசெய்துமதிகொள்கலன்
பலகலன்புனைதனஞ்சயற்குரவுபற்றியுள்ளமுறுபான்மையான். (௨௩௭)

என்றுகூறவுமிருந்தமாமுனியையேறநோக்கியிவனென்கொலோ
வின்றுகூறியமொழிக்கெலாமெதிருரைப்பதன்றியிசைவெய்திலன்
பொன்றுகாலமிவர்க்கடுத்ததுகொல்பொய்க்குமோயயன்விதித்தவா
நன்றுநீமதிநினைத்தவண்ணமொழுகென்றுபற்பலநவிற்றினுன். (௨௩௮)

மறுகன்மைந்தனினைவைத்திருத்திநிலைமாண்புறுத்தவரிதிங்கிவன்
குறுகலர்க்கெதிர்முனைந்துமுன்விதிகுறித்தவாறயர்தல்கொள்கையே
யுறுதியென்றுவணமூர்திதாளிணையுளங்கொளிவ்வுடலிருப்பினு
மிறுதியெய்துமிடைமேவினும்பலசொலென்னையென்றுமுனிகூறினுன். ()

தந்தைதன்னுரைகள்கன்னமெய்தவிதுதக்கதேயெனமதிக்கொடை
யிந்தவண்ணமவனைப்பராயெனதிச்சையைப்பெறுவனேனையோர்
பந்தபாசநெறியைத்தொடர்ந்தறிவுபற்றும்வண்ணமுயல்வோரென
முந்துகைமலர்முகிழ்ப்பவேந்தன்மறைமுனியுமக்கணமறைந்தனன். (௨௪௦)

சுருதிசொற்றமுனிபோயபின்னரருகுள்ள தூய்மையறுமைந்தனைக்
கருதியுற்றபடிபுரிதியென்றுபலகட்டுரைத்துவிடைதந்துசெம்
பரிதியொத்ததிருமெய்கொள்சஞ்சயனையேவிமாநினொடுபண்மணி
பொருதிழைத்ததனதாலயத்தினிடைபுக்குவைகினன்மகீபனே. (௨௪௧)

இருளிலாதமனமெய்துசஞ்சயனெதிரிசைத்தபலவாய்மையைத்
தெருளிலாதவருணர்ந்ததற்கெதிர்தெரித்தசெய்கைகள்விளம்பினு
மருளிலாதவடலைவர்தம்முழையில்வந்தசஞ்சயனகன்றபின்
பருளலாதுகவசங்கொளாதவர்நிகழ்த்துறுஞ்செயலுமறைகுவாம். (௨௪௨)

சஞ்சயன்தூதுசருக்க முற்றிற்று.

ஆ செய்யுள் - ௬௬௬.

---

# கிருட்டிணன்றூதுசருக்கம்.

---

* பேர்படைத்தவிசயனொடுமும்மைநெடும்பிறவியினும்பிரியானாகிச்
சீர்படைத்தகேண்மையினாற்றேரூர்தற்கிசைந்தருளுஞ்செங்கண்மாலைப்
பார்படைத்தசுயோதனற்குப்படையெடேனமரிலெனப்பணித்தகோவைக்
கார்படைத்தநிறத்தோனைக்கைதொழுவார்பிறவாழிக்கரைகண்டாரே. (௧)

* ஞானமன்போடினிதுரைத்துஞானமுனியகன்றதற்பின்சாமபேத
தானதண்டமெனநிருபர்தருமமுறையிற்புகலுந்தகுதிநோக்கித்
தூநறுந்தண்டுளவோனைத்தூதுவிடுவதற்குன்னிச்சுனைகடோறு
மேனலந்தண்கிரிப்பெருந்தேனிறைக்குமெழிற்குருநாடனியம்பினனே. (௨)

* செஞ்சொன்முனியுலூகனுக்கிங்கியாமுரைத்தகருமமும்பின்சென்றகாலை
யஞ்சொன்முனிசஞ்சயனுக்கவனுரைத்தகருமமுநீயறிதியன்றே
நஞ்சுதனைமிகவருந்திநன்மருந்துமந்திரமும்விரைந்துநாடா
தெஞ்சினர்தங்களைப்போலவிருக்குமதோயார்மனத்துமிருக்குஞ்சோதி. (௩)

* அருஞ்சமரம்புரியும்வகையவர்துணிந்தாரானாலுமறமென்றுன்னிப்
பெருஞ்சமரம்விளைக்குமதுகடனன்றென்றருள்வெள்ளம்பெருகக்கூறும்
பெருஞ்சமரநெடுமுரசப்பூங்கொடியோன்றனைநோக்கிப்புயல்போல்வண்ண
னிருஞ்சமரந்தொலைத்தபிரானிளைஞரையுமுடனிருத்தியியம்பினனே. (௪)

* செய்வராலினமுகளுந்திருநாடுபெறநினைவோசென்றுமீளப்
பைவராயருங்கானிற்பயின்றுதிரிதரநினைவோபகைத்தபோரி
லுய்வராரெனவிரைவினுருத்தெழுந்துபொரநினைவோவுண்மையாக
வைவராமவனியர்க்குநினைவேதென்றருள்புரிந்தானமரர்கோமான். (௫)

* வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டிவளர்க்கி லுயர்வரைக்காடென்னச்
செயிரமரில்வெகுளிபெறச்சேரவிருந்திறத்தோருஞ்சென்றுமாள்வோங்
கையிரவமுந்தாமரையுங்கமழ்பழனக்குருநாட்டிற்கலந்துவாழ்தற்
குயிரனையாய்சந்துபடவுரைத்தருளென்றானறத்தினுருவம்போல்வான். (௬)

* குரவரையுங்கிளைஞரையுங்குலத்துரியதுணைவரையுங்கொன்றுபோர்வென்
றரவநெடுங்கடலுடையவனியெலாந்தனியாளுமரசுதன்னிற்
கரவுறையுமனத்தாதையெமக்குரைத்தமொழிப்படியேகானந்தோறு
மிரவுபகற்பலமூலசாகநுகர்ந்துயிர்வாழ்தலினிதுநன்றே. (௭)

* நீதூதுநடந்தருளியெமதுநினைப்பவர்க்குரைத்தானினைவின்வண்ணந்
தாதூதியவளிமுரலுந்தண்பதியுந்தாயமுந்தான்றரானாகின்
மீதூதிவளைக்குலமும்பல்லியமுமிகமுழங்கவெய்யகாலன்
மாதூதர்மனங்களிப்பப்பொருதேனும்பெறுவனிதுவசையுமன்றே. (௮)

* முந்தூரும்பணிக்கொடியோன்மூதூரினடந்துழவர்முன்றிற்றேறு
நந்தூரும்புனனாட்டிற்றிறம்வேண்டுநாடொன்றுநல்கானாகி
லைந்தூர்வேண்டஃதின்றேலைந்தில்வேண்டவைமறுத்தாலடுபோர்வேண்டு
சிந்தூரத்திலகநுதற்சிந்துரத்தின்மருப்பொசித்தசெங்கண்மாலே. (௯)

* மூத்தோன்மற்றிவையுரைப்பவிளையோன்வெஞ்சினமனத்தின்மூளமூள
நாத்தோமிலுரைபதறக்கதுமெனவுற்றெழுந்திறைஞ்சினாலமெல்லாம்
பூத்தோனேபூந்தவிசின்பூவைபுணர்மணிமார்பாபுன்மையாவுந்
தீர்த்தோனேயூனமிலான்மானமிலானுரைப்பதற்கென்செய்வதென்றான். (௰)

* விரிகுழற்பைந்தொடிநாணிவேத்தவையின்முறையிடுநாள்வெகுளேலென்று
மரபினுக்குநமக்குமுலகுள்ளளவுந்தீராதவசையேகண்டா
யெரிதழற்கானகமகன்றுமின்னமும்வெம்பகைமுடிக்கவிழையாநின்று
யரவுயர்த்தோன்கொடுமையினுமுரசுயர்த்தோயுனதருளுக்கஞ்சினேனே. ()

* கானாளவுனைவிடுத்தகண்ணிலாவருளிலிதன்காதன்மைந்தர்
தானாளுந்தரணியெலாநீயாளவொருகுடைக்கீழ்த்தருவனின்றே
மேனாளிலுரிமையறக்கவர்ந்தபெருந்துணைவனினைவெறாதவண்ணம்
வானாடும்வானவர்கோன்றன்பதமுமவன்றனக்கேவழங்குவேனே. (௧௨)

* போர்முடித்தானமர்பொருதுபுலம்புறுபொற்பாஞ்சாலிபூந்தண்கூந்தற்
கார்முடித்தானிளையோர்முன்கழறியவெஞ்சினமுடித்தான்கடவுட்கங்கை
நீர்முடித்தானிரவொழித்தநீயறியவசையின்றிநிலைநின்றோங்கும்
பேர்முடித்தானிப்படியேயார்முடித்தானிவனுடனேபிறப்பதேயான். (௧௩)

* அணிந்துவருமமரிலெதிராவுயர்த்தோனுடனரசருடலமெல்லாந்
துணிந்திரண்டுபடப்பொருதுதொல்லையுலகரசாளத்துணிவதல்லாற்
றணிந்தறமுங்கிளையுறவுங்கொண்டாடித்தானின்னந்தனித்தூதேவி
பணிந்திரந்துபுவிபெற்றுண்டிருப்பதற்கேதுணிகின்றான்பட்டபாடே. (௧௪)

* பரிவுடன்மற்றிவைகூறும்பவனகுமாரனைமலர்க்கைபணித்துநோக்கிக்
குருகுலத்தோர்போரேறேகுற்றமதுபார்க்குங்காற்சுற்றமுண்டோ
வொருகுலத்துப்பிறந்தோர்களுடன்வாழும்வாழ்வினைப்போலுறுதியுண்டோ
விருவருக்கும்வசையன்றேவிருநிலங்காரணமாகவெதிர்ப்பதென்றான். (கரு)

* உரிமையுடன்றம்பிநீயுணர்வறியாமற்சபைக்கணுரைத்தமாற்றம்
பரிபவமோகேட்டோர்க்குப்பரிபவமென்பதுபிறராற்பட்டாலன்றே
கருதிலதுமற்றெவர்க்குமொவ்வாதோகண்மலரிற்கைபடாதோ
பொருதொழிலுங்கடைநிலத்திற்கிடந்ததேயெனமொழிந்தான்புகழ்பூண்பா [ன்.

* சூடுகின்றதுழாய்முடியோன்சுரருடனேமுனிவருஞ்சுருதிநான்குந்
தேடுகின்றபதஞ்சிவப்பத்திருநாடுபெறத்தூதுசெல்லவேண்டாம்
வாடுகின்றமடப்பாவைதன்வரமுமென்வரமும்வழுவாவண்ணங்
கோடுகின்றமொழியவன்பாலெனைத்தூதுவிடுகவினிக்கொற்றவேந்தே. (கஎ)

* மலைகண்டதெனவென்கைம்மறத்தண்டின்வலிகண்டுமகவான்மைந்தன்
சிலைகண்டுமிருவர்பெருந்திறல்கண்டுநமக்காகத்திருமானின்ற
நிலைகண்டுமிவள்விரித்தகுழல்கண்டுமிமைப்பளவினேரார்தம்மைக்
கொலைகண்டுமகிழாமலவன்குடைக்கீழுயிர்வாழக்குறிக்கின்றாயே. (கஅ)

* வெம்புயவீமனும்வெகுண்டுமீண்டுமிவையெடுத்துரைப்பமேகமேனிப்
பைம்பொனெடுந்தனித்திகிரிப்பரந்தாமன்கருணையுடன்பரிந்துநோக்கி
யம்புவியின்முன்பிறந்தோரரசுநெறிமுறையுரைத்தாலதுகேளாமற்
றம்பியருமறுப்பரோதலைவவினிக்கடுங்கோபந்தவிர்கவென்றான். (ககூ)

* மைக்காலமுகிலூர்திவானவர்கோன்றிருமதலைவணங்கிநின்று
முக்காலங்களுமுணருமுகுந்தனுக்குந்தருமனுக்குமொழிந்தான்மன்னே
வக்காலம்பொறுத்தவெலாமமையாமலின்னமிருந்தறமேசொன்னா
லெக்காலம்பகைமுடித்துத்துரௌபதியுங்குழன்முடிக்கவிருக்கின்றாளோ. (உ0)

* தேவராயினும்பழையதயித்தியராயினுமற்றுஞ்செப்புகின்றோர்
யாவராயினுமெதிர்ந்தோருயிருண்பனெனவிருப்பவென்கைவாளி
மூவராயவர்களுக்குமுதல்வனாகியமூர்த்திமுகிறோய்ப்பூக
மீவராலுகளும்வயற்குருநாடெனிவனவன்பால்வேண்டுமாறே. (உக)

* தீண்டாதகற்புடையசெழுந்திருவைத்துகிலுரியச்செயலொன்றின்றி
நீண்டானேகரியோனேநிமலாவென்றரற்றினளாய்நின்றுசோர
மாண்டார்போலதுகண்டுமன்னவையுள்யாமிருந்தமாசுதீர
வேண்டாவோவேண்டுமதோமேம்பாடுநின்னறமோவேந்தர்வேந்தே. (உஉ)

* பொன்னுருந்திகிரியினான்போனாலுந்திறல்வேந்தன்புகன்றவெல்லாஞ்
சொன்னாலுமவன்கேளானிதிவலியாற்கெடுமதிகண்டோன்றுதன்மே
யென்னாளுமுவர்நிலத்தினன்முளைவித்திடினும்விளைவெய்திடாது
பன்னாகந்தனக்கமுதங்கொடுத்தாலும்விடமொழியப்பயன்கொடாதே. (உ௩)

* பார்த்தனிவைபுகன்றிறைவன்பணித்தருளயிருந்ததற்பின்பரிவினேடுங்
கீர்த்தனிருபதமிறைஞ்சித்தருமனையுங்கைதொழுதுசினங்கொள்வேலா
னீத்தநெடுங்கடலேழுமடலவர்பெறுவரெனுங்கிழ்ச்சிபொய்யோ
கோத்தருமன்றனியாண்மைகூறுரார்கூறுகநீகொற்றவேந்தே. (உச)

* கேவலந்தீர்வலியபகைகிடக்கமுதற்கிளர்மழைக்குக்கிரியொன்றேந்துங்
கோவலன்போயுரைத்தாலுங்குருநாடுமரசுமவன்கொடுக்கமாட்டா
னூவலம்பூதலத்தரசர்நாடிரந்தோமெனநம்மைநகையாவண்ணங்
காவலன்றன்படைவலியுமெனதுதடம்புயவலியுங்காணலாமே. (உரு)

* அன்னநடைபரம்பையரையவுணர்கவர்ந்திடவிமையோரரசுக்காக
முன்னமவருடன்பொருதுசிறைமீட்டானங்குலத்தோர்முதல்வனன்றே
மன்னவையில்யாங்காணமடவரலைத்துகிலுரிந்தவசையோடன்பா
லின்னமிரந்தவன்குடைக்கீழிருந்தக்கானம்மையுலகென்சொலாதே. (உசு)

* கானெறிபோய்க்கரந்துறைந்துகடவநாட்கழித்ததற்பின்கானநீங்கி
யீனமிலாவகைவந்தார்நந்துணைவரெனச்சிறிதுமிரங்கானுகில்
மானகரும்வளநாடுமுரிமையுந்தன்மொழிப்படியேவழங்கானுகிற்
றூனறியாதவன்பிறர்போய்க்கற்பித்தாலறியுமோதரணிவேந்தே. (உஎ)

* நகுலனிவையுரைத்ததற்பினன்றெனக்கையமைத்தருளிநகுலன்சொல்லு
மிகல்விசயன்றன்மொழியுந்திறல்வீமனியம்பியதும்யாவுங்கேட்டோம்
புகலறியவுணர்வுடையைபுகழுடையைதிறலுடையைபுகனீயென்ன
முகிலனையதிருமேனிமுகுந்தனுக்குமனமுருகமொழிகின்றனே. (உஅ)

* சிந்தித்தபடிநீயுஞ்செய்தாலென்றவிர்ந்தாலென்செறிந்தநூறு
மைந்தர்க்குமுதல்வனிலம்வழங்காமலிருந்தாலென்வழங்கினலென்
கொந்துற்றகுழலிவளுமுடித்தாலென்விரித்தாலென்குறித்தசெய்கை
யந்தத்தின்முடியும்வகையடியேற்குத்தெரியுமோவாதிமூர்த்தி. (உகூ)

* முருகவிழ்க்கும்பசுந்துளபமுடியோனேயன்றலகைமுலைப்பாலுண்டு
மருதிடைச்சென்றுயர்சகடம்விழவுதைத்துப்பொதுவர்மனைவளர்ந்தமாலே
யொருவருக்குந்தெரியாதவுன்மாயையானறிவேனுண்மையாகத்
திருவுளத்துக்கருத்தெதுவோவதுவெனக்குங்கருத்தென்றான்றெய்வமன்னன்

* இவ்வண்ணஞ்சாதேவனியம்புதலுநகைத்தருளியிகலோர்சொல்லு
மவ்வண்ணம்புகலாமல்விரகுரைத்தானிவனென்னவவனோடாங்கோர்
பைவண்ணமணிக்கூடந்தனிலெய்திபாரதப்போர்பயிலாவண்ண [லான்.
மெவ்வண்ணஞ்சொல்லுகநீ யுபாயமெனத்தொழுதுரைத்தானெழில்கொள்வே

வேறு.

* நீபாரதவமரில்யாவரையுநீறுக்கிப்
பூபாரந்தீர்க்கப்புகுந்தாய்புயல்வண்ணு
கோபாலாபோரேறேகோவிந்தாநீயன்றி
மாபாரதமகற்றமற்றூர்கொல்வல்லாரே. (௩௨)

* பாராளக்கன்னனையும்பார்த்தனையுங்கொன்றணங்கின்
காரார்குழல்களைந்துகாலிற்றளைபூட்டி
நேராகக்கைப்பிடித்துநின்னையும்யான்கட்டுவனேல்
வாராமற்காக்கலாமாபாரதமென்றான். (௩௩)

* முன்னநீகூறியவையெல்லாமுடித்தாலு
மென்னைநீகட்டுமாறெவ்வாறெனமாய
னுன்னைநீதானுமுணராதாயுன்வடிவந்
தன்னையேகாட்டிற்றளைந்திடுவன்யானென்றான். (௩௪)

* மாயவனுமன்பன்மனமறிவான்கட்டுகவென்
றாயவடிவுபதினாறாயிரங்கொண்டான்
றூயவனுமூலமாந்தோற்றமுணர்ந்தெவ்வுலகுந்
தாயவடியிணைகடன்கருத்தினாற்பிணித்தான். (௩௫)

* நீதேவனென்றறிந்துநெஞ்சாற்றளைபூட்டுஞ்
சாதேவன்கண்களிக்கத்தானேயாய்முன்னின்றான்
பூதேவருங்கனகப்பூங்காநிழல்வைகு
மாதேவருந்தேடிக்காணாமலரடியோன். (௩௬)

* அன்பாலின்றென்னையறிந்தேபிணித்தமைநன்
றென்பாதந்தன்னையினிவிடுகவென்றுரைப்ப
வன்பாரதப்போரில்வந்தலுடந்தோமைவரையு
நின்பார்வையாற்காக்கவேண்டுநெடுமாலே. (௩௭)

* என்றென்றிறைஞ்சியிருதாமரைத்தாளி
லொன்றுங்கதிர்முடியாற்கோமென்றுரைத்தருளி
யின்றிங்கிருவோருமிப்போதுரைத்தமொழி
யொன்றும்பிறரறியவோதாதொழியென்றான். (௩௮)

* ஆண்டிருந்தவவைநீங்கியறிவுடையோரிருவோரும்
பாண்டவர்கண்முன்னெய்திப்பழுதில்புகழ்பாஞ்சாலி
நீண்டகருங்குழல்சோரநின்றாளைமுகநோக்கி
யீண்டவரிலிளையோனுஞ்சந்துமிகவினிதென்றான். (௩௯)

* தருமனுக்குங்கருத்திதுவேதமருடன்போர்புரியாம
லிருநிலத்திலுடன்வாழ்தலெனக்குநினைவென்றுரைத்தான்
வரிமலர்க்கண்புனல்சோரமலர்மறந்தகுழல்சோர
விரைமலர்ச்செஞ்சேவடிமேல்விழுந்தழுதாண்மின்னனையாள். (௪௦)

* சாலக்கனகன்றனிமைந்தனைமுனிந்த
காலத்தவனறைந்தகற்றூணிடைவந்தாய்
மூலப்பேரிட்டழைத்தகும்மதமால்யானைக்கு
நீலக்கிரிபோன்முனின்றநெடுமாலே. (௪௧)

* கற்றைநறைகுழல்பிடித்துக்கண்ணிலான்பெற்றெடுத்தோன்
பற்றித்துகிலுரியப்பாண்டவரும்பார்த்திருந்தார்
கொற்றக்கனிக்கிரிக்கோவிந்தாவென்றி
யற்றைக்குமென்மானமார்வேறுகாத்தாரே. (சஉ)

* மன்றிலழைத்தெனக்குமாசளித்தமன்னவன்பாற்
சென்றுதமக்கைக்கூர்ந்திறல்வேந்தர்பெற்றிருந்தா
லன்றுபரிபித்தவருங்கூந்தல்வல்வினையே
னென்றுமுடிப்பதினியெம்பெருமானேயென்றாள். (சங)

* தண்டிருந்தவன்கரத்திற்றனுவிருந்ததிவன்கரத்தில்
வண்டிருந்தகருங்குழன்மேன்மாசிருந்ததெனக்குமிது
கண்டிருந்தீரெல்லோருங்கருதலர்பாலூர்வேண்டி
யுண்டிருந்துவாழ்வதற்கேயுரைக்கின்றீருரையீரே. (சச)

* சண்டமுகிலுருமனையசராசந்தன்றனக்கஞ்சி
வண்டுவலாரயராணுகவடமதுரைகைவிட்ட
திண்டிறன்மாதவன்மதியோதிகழ்தருமன்றன்மதியோ
பண்டுமவர்கருத்தறிந்தும்பார்போய்வேண்டுமதென்றான். (ச௫)

* சாத்தகிநின்றிவையுரைப்பச்சடைக்குழலாளழுதாற்றக்
கோத்தருமன்முதலாயகுலவேந்தரைவரையும்
பார்த்தருளியருள்பொழியும்பங்கயக்கணெடுமாலு
மேத்தரியபெருங்கற்பினிளையாளுக்கிவையுரைத்தான். (சசு)

* தொல்லாண்மைப்பாண்டவர்க்குத்தூதுபோய்மீண்டதற்பி
னல்லாய்நின்பைங்கூந்தனானேமுடிக்கின்றே
னெல்லாருங்காணவினிவிரிப்பதெண்ணரிய
புல்லார்தமந்தப்புரமாதர்பூங்குழலே. (சஎ)

* மைக்குழலாய்கேளாய்மருவாருடற்புலத்துப்
புக்குழலாகுங்கொழுவாப்போரபிமன்கைவாளாற்
றொக்குழலும்வெங்கோன்மைத்தொல்வேந்தர்தங்குலமு
மிக்குழலுஞ்சேரமுடியாதிராமெனன்றான். (சஅ)

* பெண்ணீர்மைகுன்றாப்பெருந்திருவின்செங்கமலக்
கண்ணீர்துடைத்தருளிக்கண்ணீர்க்கருணையெனுந்
தெண்ணீர்மையாலிருந்துதேற்றினான்சாற்றுகின்ற
மண்ணீர்நிலமனல்வான்வடிவாமாமாயன். (சகூ)

* துன்றுபிணியோர்துறந்தோராடங்காதோர்
கன்றுஞ்சினமனத்தோர்கல்லாதவரிளையோ
ரொன்றும்முறைமையுணராதவர்மகளி
ரென்றுமிவர்மந்தணத்தினெய்தப்பெறுதாரே. (௫௦)

நன்னுளிரேவதியாமின்னேநடந்திடநின்
றன்னுளுரோகணிக்குத்தாராபலனுளவா
லென்னேபலசொலெனவுரைத்தானேதமறு
பொன்னுமெண்ணும்புகழுந்தரத்தோனே. (ருக)

* என்னக்கழறியிருந்தோருரைதவிர்த்து
நின்னொப்பவரில்லாய்நீயேகெனவுரைப்ப
மன்னர்க்குமன்னவன்பான்மாயோனுந்தூதாகிப்
பொன்னுற்றநேமிப்பொருபரித்தேர்மேற்கொண்டான். (ருஉ)

* சங்குமணிமுரசுந்தாரைகளும்பேரிகையு
மெங்குமுழங்கவெழில்வெண்குடைநிழற்றப்
பொங்குகவரிபுடையிரட்டவெண்ணிலா
வங்கமொருநான்குமவணிபருந்தற்சூழ. (ருஙு)

மச்சர்குலபதியும்பாஞ்சாலர்மன்னவனுஞ்
செச்சைபுனையேனைத்திறல்வேந்தர்தங்குழுவு
மிச்சைபெறுபாண்டவருமிருமருங்குந்துன்னிவரப்
பச்சைமுகின்மேனிப்பரந்தாமன்சென்றனனால். (ருச)

சொல்வான்றருமன்றுளவச்செழுந்தாரோய்
பல்வாய்மையாதும்பகரேன்மேற்பண்ணவர்க்கும்
வெல்வார்கழலரசர்வேதியர்க்குமாமறைக்கு
நல்லாரெனுங்கருமமெல்லாநவின்முறையே. (ருரு)

ஆதலாற்சென்றுபிதாவாதியுளமேலோர்க்குப்
பாதமலர்மீதுபணிந்தேன்பலகாலென்
றோதியொழிந்தோர்கட்குவப்பெய்துமாறுரைத்து
நீதிவிதுரன்வயினின்றனருணேர்ந்து. (ருசா)

வென்றுபுவிகொண்டடவிமேவப்பணித்திட்ட
வன்றுபிரிந்தாளருட்பாண்டுமாதேவி
சென்றுவருத்தமொழித்தெமதுசெய்கையெலா
மின்றுரைத்துன்மைந்தரிறைஞ்சினரென்பாயால். (ருஎ)

ஈன்றபெருந்தாதையிருந்தகுலக்குரவ
ரான்றமறைவேதியர்கண்மந்திரத்தாருதியுள்ளோர்
சான்றுலகுக்காக்கிமுறைதப்பாமொழிவிளம்பித்
தோன்றுதிமீண்டன்னார்துணியுமனங்கொண்டென்றான். (ருஅ)

மூத்தோனுரைப்பமுகில்வாகன்றன்குமரன்
பார்த்தரியேநாடுநகர்பண்பாற்றருதுமென
நாத்துளங்கச்சொல்வானரபதியீண்டென்னபயன்
கோத்தனையன்மாளாமனல்கான்குவலயமே. (ருகூ)

வென்றுத்தரவிரையைமீட்டநாள்வேதியனி
லொன்றியுலகோம்பலூறுகியெனவக்கொடியோ
னின்றுதரும்பளவுமிவ்வுலகிஞெனுதவேன்
றுன்றுமவர்நண்பெமக்குச்சூழாதெனமறுத்தான். (சு௦)

அத்தினத்தேயாங்கவன்றனுள்ளமறவுணர்ந்தே
னித்தினநீசென்றுலிசைக்குமொழியதுவே
யுத்தமர்வேறொன்றையுரைத்தாலுமாவதிலே
நத்தொளிருங்கையுடையாய்நன்மனத்திற்கோடியால். (சுக)

ஏடுபடுக்தெரியலேதமிலார்பேதமற
காடுதருமாறுநவின்றான்மறுப்பதுவென்
பீடுபெறநல்கிற்பிழைத்தீர்பிழைத்தீரேல்
வீடுறுவீரென்றுவிளம்பிவரமீண்டென்றான். (சுஉ)

பார்த்தனுரைத்தபரிசுக்குளமகிழ்ந்து
மூத்தோரிளையோர்முதலரசர்பல்லோரு
மாத்திகிரியோனுமகிழ்ந்தாரவ்வண்ணமெலாந்
தீர்த்துமீள்வனினிநீமீளெனச்சென்றானே. (சுஈ)

தன்னொத்தவீரத்தடஞ்சிலைவல்சாத்தகியு
மின்னொத்ததேரேறிமேவுபடைகாத்தேகப்
பன்னற்கருமிமையோர்கண்களிப்பப்பாரளந்தோன்
சன்னத்தனாகத்தணந்துநகர்சென்றனனால். (சுச)

பாண்டுசுதரைவருநற்பாஞ்சாலபூபதியு
மீண்டுவிராடன்முதலெல்லோருங்கைதொழுது
தூண்டுபுரவித்தடந்தேரிற்றொக்குநகர்
மீண்டுபுகுந்தார்புலவுகமழ்வேற்கையார். (சுரு)

அண்ணலெழுச்சியறிந்தேபெருந்தவத்தோர்
கண்ணுவர்நல்வீணைமுனிகருதுசமதக்கினியு
மெண்ணமுறுமூவர்முதலெண்ணிறந்தோர்வந்தெதிர்ந்தார்
புண்ணியனுந்தேர்நீங்கிப்போற்றிப்பணிந்துரைப்பான். (சுசு)

தொல்லைப்பெருந்தவத்தீர்வந்தபடிசொல்லுகவென்
றொல்லைத்திருமாலுரைப்பவுனைக்காண்பதுவு
மல்லற்றிரடோளான்மாநகர்க்குச்சென்றுரைகள்
சொல்லத்தாரோய்நீகுறிப்பதுவுங்கூறுவதும். (சுஎ)

காணுங்கருத்தாயடைந்தோமெனக்கழற
மாணுந்திருமாலும்வம்மினினிமூவருமென்
றேணுறுமறைசொற்றுனிவரடைதும்பின்னரெனப்
பேணிவிடைநல்கப்பெருமானுந்தேர்புகுந்தான். (சுஅ)

* கல்வரையும்பாலைக்கடுஞ்சுரமுங்கானுறும்
நல்வரையநீர்நாடும்நாளிரண்டிற்சென்றருளித்
தொல்வரையகோபுரமுநீண்மதிலுஞ்சூழ்ந்திலங்கு
மல்வரையதோளான்வளமாநகர்கண்டான். (சுகூ)

வேறு.

* மேவுசெந்துகிற்றிரளுமாமரகதவிதமும்
கோவைவெண்கதிர்த்தரளமுநிரைநிரைகூபிற்றிந்
தாவுவெம்பரித்தேரினுன்றனக்கெதிர்சமைத்த
காவணங்களிற்றேன்றியபச்சிளங்கமுகம். (எ0)

* வம்புலாமகிற்சந்தனம்வருக்கைமாகந்தஞ்
சம்பகந்தமாலம்பலதிசைதொறுந்தயங்க
வும்பர்நாயகன்வரவறிந்துளங்களிகூர்ந்து
தும்பிபாடினதோகைநின்றுடினசோலை. (எக)

* அணிகொளத்திருபுரியெனுமணங்குசெந்திருவின்
கணவனுக்கெதிர்காட்டுநீராஞ்சனங்கடுக்கு
மணமிகுத்தசெந்தாமரைமலருடன்சிறந்த
புணரியிற்பெரும்புனலெலாங்கொள்வனபொய்கை. (எஉ)

* நடந்தநாயகன்கோலமாய்வேலைசூழ்ஞால
மிடந்தநாளிடையதுவழியாகவந்தெழுந்து
படர்ந்தபாதலக்கங்கையைப்படர்மதில்சூழ்ந்து
கிடந்ததாமெனச்சிறந்ததுதாழ்புனற்கிடங்கு. (எங)

* அடிநிலத்திலேபடிவனவிடிமுகிலனைத்து
முடிநிலத்தினுக்குடுபதத்தினுமுடிவில்லை
நெடியசக்கரப்பொருப்பையுநிகரெனவிதற்குப்
படிவகுத்ததாமெனும்படிபரந்ததுபுரிசை. (எச)

* பகலினுங்கடும்பரிதிதன்கதிர்பரப்பாம
லிகலியெங்கணுமெறிந்துகால்பொருதலினெற்றிப்
புகலுகின்றமந்தாகினித்தரங்கமேபோல
வகல்விசும்பிடைபிடைவனநெடுங்கொடியாடை. (எரு)

* புயங்கபூமியோபுரந்தரற்கமைத்தபொன்னுலகோ
தயங்குசெல்வநீடளகையோநிகரெனுந்தரத்தா
லியங்குகார்முகில்வரைதொறுமெழுவனபோல
வயங்குகார்முகினறும்புகையுயிர்ப்பனமாடம். (எசு)

* மன்னர்வேழமுஞ்சேனையுமெதிரெதிர்மயங்கிப்
பின்னுமுன்னுமெம்மருங்கினும்பெயரிடம்பெறுமற்
றுன்னிநின்றவரேகுமினேகுமின்றெடர
வென்னுமோதையேயுள்ளனவீதிகளெல்லாம். (எஎ)

* வரையெலாம்பலவனமெலாங்கடலெலாம்வளைந்த
தரையெலாம்படுபொருளெலாந்தனித்தனிகுவித்து
நிரையெலாமகலாவணநீர்மையைப்புலவோ
ருரையெலாங்கொடுத்துரைப்பினுமுவமைவேறுளதோ. (எஅ)

* விரவுகான்மலரினும்பலவீரரின்விதங்கள்
பரவைவெண்மணலினும்பலபுரவியின்பந்தி
யிரவில்வானமீனினும்பலயானையின்கூட்ட
நிரைகொள்கார்த்துளியினும்பலதேரணிநிலையே. (எகூ)

* ஆசிலாமொழியந்தணராலயமொருபான்
மாசிலாமுடிமன்னவர்மாளிகையொருபாற்
காசிலாமதியமைச்சர்தங்குடிமனையொருபாற்
பேசிலாரெழில்வணிகர்தம்பெயரிடமொருபால். (அ0)

* மங்கலந்திகழ்மனையெலாம்வலம்புரியோதை
திங்கடோய்நெடுந்தலமெலாந்திகழ்சிலம்போதை
யங்கண்மாநகரனைத்துமும்முரசதிரோதை
யெங்கணுங்கடவுளரிடந்தொறுமுழவோதை. (அக)

* முன்றிலின்கணுளிடம்பெறுவரசர்மாமுடிக
ளொன்றொடொன்றறைந்தெற்றிமேலொளிர்பொறிதவழ்ந்து
சென்றுசென்றுறுதிசையெலாந்திகழ்ந்ததுசெம்பொற்
குன்றெனும்படிகுருகுலநாயகன்கோவில். (அஉ)

* என்றிசைக்குநல்லொளிநிமிரெழின்மணிமகுடக்
குன்றிசைக்கும்வண்கோபுரநீணகர்குறுகித்
தென்றிசைக்குளிர்செண்பகமலர்தொறுஞ்சிறுதே
னின்றிசைக்கும்வண்சோலைவாயமர்ந்தனனெடுமால். (அங)

* அன்றுதூதுகொண்டிலங்கைதீவினைத்தவரைவர்க்
கின்றுதூதுவந்தெயிற்புறத்திருந்தனரென்னத்
துன்றுதாதளிமுரல்பசுந்தொடையலானவையிற்
சென்றுதூதுவரியம்பினர்சேவடிவணங்கி. (அச)

படந்துடித்தெழுமராவணைப்பச்சைமால்வரவு
தடந்துடித்தெழுசெவியுறச்சாருமுன்சலத்தால்
விடந்துடித்தெழுவெகுளியங்கனல்சொரிவேந்தர்க்
கிடந்துடித்ததுபுலவுநாறியதொடையெவர்க்கும். (அரு)

பிறவிபேணுவோர்பேணலாப்பெருந்தகைவரவு
துறவினோங்குநல்லுளத்தினோர்க்குவப்புமற்றுளபேர்க்
கறவுமின்னலுமாகியதலரியின்கிரண
முறவுமாறுமாயுலகியலிருந்தவாறுதே. (அசு)

அந்தவெல்லையிற்றிரிதராட்டிரப்பெயரறையுஞ்
சந்தவார்கழற்றராபதிதாதையைநோக்கிச்
சிந்தையூடுறவல்லதுதெரிசனைக்கரியோன்
வந்ததற்புதமற்புதம்செய்தவம்வலிதே. (அஎ)

ஞாலமுண்டவனெம்முறைநண்ணினனென்னிற்
காலமுண்டவாணவமணிப்பூண்முடிக்கவிகை
சாலவுண்டவையனைத்தையுந்தருவன்மற்றெதுவுங்
கோலமுண்டகமுகத்தினன்குறிப்புணர்ந்தளிப்பன். (அஅ)

என்றுகூறலுமாங்குறுவிதுரனிதிசைத்தான்
குன்றினன்மழைதடுத்தவர்க்கிதம்பெறக்கொடுத்து
மன்றன்மாலைசேர்பாண்டவர்மருவுதற்கைந்தூ
ரின்றுவேண்டினுமீகலமென்றுரைப்பதுவோ. (அகூ)

காடுதங்கிமீண்டடைந்துநின்காளையர்க்கிருக்க
நாடுநல்குதற்குளமிலைஞாலமுண்டவனுக்
கீடுநல்கியேமுகமனுமியம்புதறுணிந்தாய்
பீடுநின்வயினல்லதார்வயினுறும்பெரியோய். (கூ0)

விதுரனிவ்வணங்கூறலும்வீடுமனகைத்து
மதுரவாசகம்புகன்றனன்மலர்மகள்கொழுநன்
கதுவரீதருங்கதிர்மணிகவுநுமாறன்றி
யதுகுலத்தவன்வந்ததுவேறிலைபோலாம். (கூக)

பொன்னைநன்னிதிக்குப்பையைப்பொருளெனப்படைத்த
நின்னையன்றயன்படைத்தனனீண்மறையயனை
முன்னையுந்தியிற்படைத்தநன்முகுந்தனுக்குதவ
லென்னைநீயவனுன்வயினேற்பதேதியம்பாய். (கூஉ)

உரைக்கும்வாசகமன்றுநீயொழிகவென்றியம்ப
விரைக்குநான்மறைத்துவசனுங்கெடுத்திதைப்பகர்ந்தான்
விரைக்கொடாரினன்மேவினன்விளம்புவானீதி
தரைக்குளுன்னுளம்வந்தவாறுதவுதறகையே. (கூங)

மைந்தர்தங்களுக்கியைந்தனநாடுநீவழங்கில்
வந்தவாழியானருண்மலர்வாள்விழிநோக்கி
முந்தனக்கிசைந்தூழியோடூழிவாழ்வுறுவீ
ரந்தரத்தருமுவப்பரீதுறுதியாமென்றான். (கூச)

கேட்டிருந்தவச்சுயோதனன்கேழ்கிளர்நயன
மூட்டரக்கெனச்சிவப்பெழநகையொடுமுரைத்தான்
பாட்டளிக்குலந்துதைந்தெழுபசுந்தொடைபுனைந்து
நாட்டினைப்புரந்திடுமவர்நனிவியப்புறவே. (கூரு)

பகர்துழாயவன்பாண்டவர்க்குதவியாயெனது
நகரினெய்தினனெனிற்செயுநன்மைநீர்கேண்மோ
புகரறப்பிடித்தவனிருபுயமுறப்பிணித்து
நிகரறச்சிறையிடுவதேநீதியான்முறைமை. (௯௬)

நாடுநல்குமிப்போதெனவகாய்ந்திருந்தோர்
காடுதுன்னுவர்கலந்தநாட்டரசருங்கலந்தென்
மாடுநண்புறக்கருதுவர்மாத்திரமிதுவே
நீடுமென்வலியவ்வணநிகழ்த்துவனென்றான். (௯௭)

அரவகேதனன்மொழியிருசெவிப்புலனுமுன்
குரவரியாவருங்குறித்தசொன்மறுத்துரைகூறும்
விரவுநின்விதிச்செயன்முறைவிளம்பினையென்றார்
பரவுதாதைதன்மகற்கிதுபதைப்புறப்பகர்ந்தான். (௯௮)

ஏவினோர்மொழிகூறுமாறெய்தியமுகிலைப்
பாவிநீவழிபட்டுளப்பகையொருவாம
லாவிலேனிழிபானசொன்னவிற்றினைநன்றோ
வாவினுன்மறைக்கானவனின்வயமாமோ. (௯௯)

துன்மதிக்கருத்தாலிதுசொற்றனைவிடுதி
நன்மதித்திறலாரியர்மொழிப்படநடத்தி
யுன்மதித்திறமுறுற்றில்வீண்பழியினுலுளைதி
தன்மதித்திறம்புரிதருதராபதியின்றே. (௧௦௦)

நகரடங்கலும்வனப்புறநன்மணித்தீபம்
புகலுந்தோரணம்புதுக்குறப்பணியினற்புணர்ப்பான்
மகரமானவன்விரும்புவான்பொருளெலாம்வாரி
நிகரிலாமனைவிடுதியினிரப்புமினீவிர். (௧௦௧)

கண்ணிரண்டினும்புலனறக்கற்பனைப்படலா
லெண்ணுயர்ந்தவன்றனக்கெதிரேகுதற்கிசையே
னண்ணுபேரவையுள்ளவரியாவருநளின
வண்ணவாள்விழியோற்கெதிர்சென்றுடன்வம்மின். (௧௦௨)

என்றுரைத்திடயாவருமிசைந்தபின்றனைய
னன்றுகூறியமுறைப்படிநாட்டுவன்வெகுளேன்
மன்றன்மாலையாயெனப்பகர்ந்தணிநகர்மாக்கள்
சென்றுவீதிகள்சிறப்புறச்செய்குமினென்றான். (௧௦௩)

* தொல்லைநாயகன்வந்தனனென்றலுஞ்சுரும்பார்
மல்லன்மாலையானேவுமுன்மாநகர்மாக்க
ளொல்லைநீண்மதிள்வட்டமோதியபரப்பெல்லாஞ்
செல்வமாநகர்த்தெருவினையொப்பனைசெய்தார். (௧௦௪)

* மின்னுமாமுகிற்பல்லியவிதங்கண்முன்முழங்க
மன்னர்மன்னவனெழுந்தனன்மர்லெதிர்வருவா
னென்னைநீயவர்க்கெதிர்செல்வதென்றுதன்மருகன்
றன்னையன்பொடுதகைந்தனன்கொடுமைகூர்சகுனி. (க0௫)

* சீர்வலம்புரித்திகிரிசேர்செங்கையான்றனக்குக்
கார்வலம்புரிகோவிலுங்காட்சியுஞ்சமைத்துப்
போர்வலம்புரிநிருபருமிளைஞரும்போற்றத்
தார்வலம்புரித்தோளினனிருந்தனன்றவிசில். (க0௬)

* தொல்பகீரதிமைந்தனுந்துரோணனுஞ்சுதனும்
வில்விதுரனுங்கிருபனுமுதலியவேந்தர்
மல்குமூவிருபத்துநூறுயிரமகிபர்
செல்வநாயகற்கியோசனையிரண்டெதிர்சென்றார். (க0௭)

* வந்துவந்திருமருங்கினுமன்னவர்வணங்கப்
பைந்துழாய்முடிப்பரமனுங்கண்மலர்பரப்பி
யந்தமானகர்புகுந்தபினரசனிற்புகாமற்
புந்திகூரருள்விதுரன்வாழ்பொன்மனைபுகுந்தான். (க0௮)

* வேந்தர்யாரையும்விடைகொடுத்தகன்றபின்விமலன்
வாய்ந்தமாளிகைநடுவணோர்மண்டபங்குறுகி
யாய்ந்துவல்லவர்நவமணியிழைத்தியவரியே
றேந்துமாசனமிடப்பொலிந்ததன்மிசையிருந்தான். (க0௯)

* இருந்துவந்தருளிறைவனையிறைஞ்சினனிறைஞ்சிப்
பெருந்துவந்தனைப்பிறப்பையுமிறப்பையும்பிரித்தான்
மருந்துவந்தனையமரருக்கருளியமாயோன்
விருந்துவந்தனனென்றுநின்றுருகியவிதுரன். (கக0)

* கோடுகொண்டகைக்குரிசிலைமலர்ந்தகோகனகக்
காடுகண்டெனக்கண்டுதன்கண்ணிணைகளியா
வேடுகொண்டதார்விதுரனிப்பிறப்பையும்பிரித்தான்
வீடுகண்டவர்க்கிறப்பினிவேண்டுமோவேண்டா. (ககக)

* உள்ளினுணர்ந்துள்ளமுமுருகினனெழுந்து
துள்ளினன்விழுந்திணையடிசூடினன்றுயரைத்
தள்ளினன்மலர்த்தடக்கையாற்றத்துவவமுதை
யள்ளினனெனக்கண்களாலருந்தினனளியோன். (ககஉ)

* முன்னமேதுயின்றருளியமுதபயோததியோ
பன்னகாசனப்பாயலோபச்சையாலிலையோ
சொன்னநால்வகைச்சுருதியோகருதிநீயெய்த
வென்னமாதவஞ்செய்ததிச்சிறுகுடிலென்றான். (ககங)

* மும்மையாகியபுவனங்கண்முழுதையுமருந்து
மெய்ம்மையாளுடைநாயகன்விருந்தினுக்கிசைந்தா
னம்மவென்றலுமாறுநூறுயிரமடையர்
தம்மைநோக்கினனவர்களும்விரைவுடன்சமைத்தார். (ககச)

* வந்தகொற்றவேல்வரிசிலையவர்க்குமாதவர்க்குங்
கந்தடற்பனைக்கரிக்கும்வெங்கவனவாம்பரிக்கு
மைந்துபத்துநூறுயிரமரசர்க்குமெவர்க்கு
மிந்திரற்குமெய்தாவமுதெனும்படியியற்றி. (ககரு)

* அமைத்தவாசனைநீர்கொடுமஞ்சனமாட்டிச்
சமைத்தபைங்கறியடிசிறம்விருப்பினலருத்தி
யுமைக்குநாயகனிரவொழித்தருளினானுதவ
விமைப்பிலாரமுதருந்தியவியல்பெனவிருந்தார். (கக௬)

* வாசநீரும்வண்சுண்ணமுமுறைமுறைவழங்கிப்
பூசறுத்துழிபூசினார்சூடினார்புனைந்தார்
வீசுசாமரையிரட்டவெண்மதிக்குடைநிழற்றக்
கேசவன்றனிக்கேசரிப்பீடமேற்கிளர்ந்தான். (ககஎ)

* ஞானகஞ்சுகவிதுரன்வாழ்மனையினுபகனும்
போனகம்பரிவுடனுகர்ந்திருந்தவப்பொழுதிற்
றானுமேருவுக்கப்புறத்தவ்வமுதருந்தப்
பானுவும்பெருங்குடதிசைப்பரவையிற்படிந்தான். (கக௮)

* தரங்கவாரிதிப்புறத்தெதிர்மலைந்தவெஞ்சமரி
லுரங்கொள்கூர்நெடும்படைகளாலவுணரன்றுடன்று
துரங்கமேனுடைக்கடவுளைநிரைநிரைதுணித்த
கரங்கள்போன்றனகரைதொறும்வளர்துகிற்காடு. (கக௯)

* கருதியந்தணரியாவருந்தன்கடன்கழிப்பச்
சுருதியென்னும்வெஞ்சாபமேலம்புகைதொடுத்துப்
பரிதிதன்பெரும்பகைவர்மேல்விடுதலிற்பரந்த
குருதியாமெனநிவந்தெழச்சிவந்ததுகுடபால். (க௨0)

* நீதியிற்புகல்பகலெலாம்நீரரமகளிர்
மீதுரத்தெழும்வெவ்வெயிற்படாவகைவிரித்துப்
போதுபுக்கதென்றினம்படச்சுருக்கியபூம்பட்
டாதபத்திரம்போன்றனதாமரையடவி. (க௨க)

* கலந்துமங்கலமுழவுவெண்சங்கொடுகறங்க
மிலைந்தபூங்குழல்வனிதையர்மெய்விளக்கெடுப்ப
வலர்ந்ததாமரைத்தடமெலாங்குவிந்ததுகண்டு
மலர்ந்ததாமரைவாவிபோன்றதுநகர்வட்டம். (க௨௨)

* உரகபுங்கவன்மணிமுடியொப்பனதீப
மிருமருங்கினுமாயிரமாயிரமேந்த
வரிசுமந்தபேராசனத்தழகுடனிருந்த
புரவலன்றனைப்புண்ணியவிதுரனும்போற்றி. (௧௨௩)

* பொங்கராவணைபொலிவுறப்போந்தபின்பொதுவர்
தங்கள்பாடியில்வளர்ந்துமாமருதிடைத்தவழ்ந்த
கங்கைமானதிகால்வழிக்கருணையங்கடலே
யிங்குநீதனிநடந்தவாறுரைத்தருளென்றான். (௧௨௪)

* தோட்டுவந்தசெந்தேனுகர்சுரும்புசூழ்தொடையாய்
காட்டுவந்துபின்றிரிந்துதங்கடவனுட்கழித்து
நாட்டுவந்தபேரைவர்க்குநற்குருநாடு
கேட்டுவந்தனமென்றனன்விதுரனுங்கேட்டான். (௧௨௫)

* முழக்கினூயர்முரசுயர்த்தவன்றனக்குரிமை
வழக்கினாலறிந்தடலரவுயர்த்தகோன்வழங்கான்
றழக்கினூலிருதிசையினுமுரசெழச்சமரி
லுழக்கினல்லதுணர்வரோவென்றுகொண்டுரைத்தான். (௧௨௬)

* விரைந்துபாய்பரிமன்னவரிதம்படமெலிவுற்
றிரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளீயார்
பரந்தபோரினிலெதிர்ந்தசேர்படப்படபகைவற்
றுரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம். (௧௨௭)

* வாளைவாவியிலுகண்டெழவளரிளங்கமுகின்
பாளைவாயளிமுரண்டெழுபழனநாடுடையா
ரூளைவாழ்வவர்க்களித்திலனெனிலெதிர்நடந்து
மூளைவாயுகமுடிப்பர்வெம்போரெனமொழிந்தான். (௧௨௮)

* என்றுபாரினிலியற்கையும்விதுரனுக்கியம்பி
வென்றுபோர்கெழுநேமியான்விடைகொடுத்தருளிக்
குன்றுபோற்புதுக்காவலர்கொடுந்துடிகரங்க
மன்றன்மாமலர்ப்பாயலின்மீதுகண்வளர்ந்தான். (௧௨௯)

* குளிருமாமதிமுகத்தொளிர்குமுதவாய்மலர்த்தித்
தளவவாணகைபரப்பிவெண்சததளமலர்க்கை
யளவிலேகுவித்தளியொடுமகன்றிலாமையினூற்
களிகொள்பூண்முலைக்கணிகையேபோன்றதக்கங்குல். (௧௩௦)

* அளைந்தவாரிருட்கடல்பொருதொருபுடையண்டம்
பிளந்ததாமெனக்கரும்படாம்பீறியதென்ன
வளைந்தவேழ்கடல்வற்றிமேல்வடவையின்முகத்திற்
கிளர்ந்ததாமெனக்கிளர்ந்தனவிரவிதன்கிரணம். (௧௩௧)

* இகலும்வாளரவுயர்த்தவனிருந்தகொல்பதியி
லகிலநாயகனொருதனிநடந்தவாறறிந்து
மகரவாரிதியகன்றுமாமருங்குறவணைந்த
திகிரிபோலவந்தெழுந்தன்னிரவிகீழ்த்திசையில். (௧௫௨

வேறு.

* சோதிவானதியின்மைந்தனும்பழையசுருதியாலுயர்துரோணனு
மாதியாகவுயிரினும்வியப்புறவடுத்தமன்னவரனேகரு
நீதியாறுவகையைந்துபத்தொடாறுபத்தொராயிரவர்கிருபருந்
தீதிலாததிறலக்குரோணிபதினொன்றுபெற்றமிகுசேனையும். (௧௫௩)

* தொக்கவெண்கவரியாலவட்டநிரைசொட்டைவாள்பரிசைதுகிலுடன்
கைக்களாசியிவைகொண்டுலாவிவருகன்னிமங்கையரனேகரு
மிக்கவேதியர்கள்வல்லபல்கலைவிதத்திலுள்ளவர்கள்யாவருந்
தக்கதம்பியரும்வந்தருகுழவுயர்தரணிமேனிருபர்தம்பிரான். (௧௫௪)

* நிரைகதிர்க்கனகநீள்சுவர்ப்பவளவுத்திரத்திடைநிரைத்தவொண்
பருமணிக்கிரணபதுமராகவயிரத்துலாமிசைபரப்பிவெண்
டரளவர்க்கவயிடூரியப்புதியகோமளப்பலகைதைத்துமா
மரகதத்தினெடுகோடிதாணினிரைவைத்தமண்டபமருங்கரோ. (௧௫௫)

* முட்டநித்திலநிரைத்தபந்தரினகைத்தகேசரிமுகத்தகால்
வட்டமெத்தைதொடமைத்தபீடமிசைவாசவன்கொலெனவைகினான்
பட்டவர்த்தனருமகுடவர்த்தனரும்வந்துவந்தடிபணிந்தபி
னிட்டபொற்றவிசின்முறைமையாலினிதிருக்கவென்றவரையேவியே. (௧௫௬)

* காவன்மன்னவர்முகங்கடோறுமிருகண்பரப்பியமர்கருதுவோ
ரேவலின்கண்வருதூதனுமிடையனின்றுநம்மவைபிலெய்தினு
லோவலின்றியெதிர்சென்றுகண்டுதொழுதுறவுகூறின்மிகவுங்களூர்
தீவலஞ்செயவடர்ப்பனென்றுநனிசீறினான்முறைமைமாறினான். ◦ ◦ (௧௫௭)

* இந்தவண்ணமுரைசெய்துமன்னருமிராசராசனுமிருக்கவே
தந்தவண்ணனுடன்வந்தவண்ணலொளிதங்குகண்டுயிலுணர்ந்தபின்
கந்தவண்ணமலர்கொண்டுகைதொழுதுகாலையிற்பலகடன்கழித்
திந்தவண்ணமுரைசெய்தபேரவையினெய்தினானிசைகொள்வேயினான். ()

* துன்னுகங்கைமகனுந்துரோணனொடுசுதனுநீதிபுனைவிதுரனு
மன்னர்மன்னனையொழிந்தமன்னவரும்வந்துசேவடிவணங்கினார்
கன்னனுந்தலைகவிழ்ந்திருந்தனனழன்றுளஞ்சகுனிகருதினான் .
முன்னநின்றவர்களிட்டபீடமிசைமொய்துழாய்முகிலுமெய்தினான். (௧௫௯)

பனிவருங்கவிகைநீழலிற்புவிபரிக்குமாதிபர்களவையினிற்
றனிவருந்துளபமார்பனுந்தனதுதம்பியுந்தவிசினெய்துமுன்
முனிவர்மூவருமடைந்துவிண்வழிமுராரிகண்ணெதிரினிற்றலு
மினியபேரவையுளோரெலாந்தொழுதிருந்தினார்தவிசினன்பமே. (௧௬௦)

அரசனாணையினிருந்தவேதியர்களருகுகும்பவுதகங்கள்கொண்
டிரைசெய்மாமுனிவரர்க்குமெய்துமிருவர்க்குநல்குகடன்முறைமெபலா
முரைசெய்மாமறையின்வண்ணமுற்றினருநித்தடாணுகருமேனியாய்
விரைசெய்பேரணைபொலிந்ததென்னவொளிவீரவமாளிடைவிளங்கினான். ()

* முன்னகங்கொடைகவித்தகாளைமுகின்முன்னிருந்தபின்முகங்கொடா
தென்னகந்தனையொழித்துநென்னலிடையிந்தமானகரிலெய்தியும்
பொன்னகங்கொள்புயவிதுரனில்லிடைபுகுந்ததென்கொலிதுபுகலெனாப்
பன்னகந்தனையுயர்த்தகோவுமுரைபகரமாலுமெதிர்பகருவான். (கச௨)

* என்னினின்னிலொருபேதமில்லையிதுவென்னினின்னிலதுவென்னினு
மின்னின்மின்னிலகுவிறனெடும்படைவிதுரன்வந்தெதிர்விளம்பினா
னுன்னிலின்னமுளதொன்றுபஞ்சவருரைக்கவந்தவொருதூதன்யா
னின்னிலின்னடிசிலுண்டுநின்னுடன்வெறுக்கவெண்ணுவதுநீதியோ. (கசங)

* அரவமல்கியபதாகையாய்மதியமைச்சராயரசழிப்பினுங்
குரவர்நல்லுரைமறுப்பினும்பிறர்புரிந்தநன்றிசிலகொல்லினு
மொருவர்வாழ்மனையிலுண்டுபின்னுமவருடனுடன்றுபொரவுன்னினு
மிரவியுள்ளளவுமதியமுள்ளளவுமிவர்களேநரகிலெய்துவோர். (கசச)

* சீதநாண்மலர்மடந்தைகேள்வனிவைசெப்பலுந்தெரியவொப்பிலா
னாதநாயகன்முகத்தில்வைத்தவருணயனனாகிமுகிணகைசெய்தே
தூதனாகிவருந்தன்மைசொல்லுமுகனமன்னர்மன்னனெதிர்சொன்னபின்
வேதநாறுமலருந்திவண்டுளபவிரைசெய்தாரவனுமுரைசெய்தான். (கசரு)

* சூதினாலரசிழந்துநின்றுணைவர்சொன்னசொல்லும்வழுவாதுபோ
யேதிலார்களெனவந்துதண்ணிழலிழந்துகானினிடையெய்தியுந்
தீதிலாவகைகுறித்தநாள்பலகழித்துவந்தனர்செகத்தினிற்
கோதிலாதகுருகுலமகீபவவருரிமைநண்பொடுகொடுத்தியோ. (கசசு)

* தொல்லராவுரகதுவசநின்னுரியதுணைவர்தங்களையழைத்துநீ
வல்லவாறுசிலநாடளித்தவர்கடம்முடன்கெழுமிவாழ்தியே
னல்லவாய்மைநிலையுடையையென்றரசர்நாடொறும்புகழ்வர்நண்புகொண்
டல்லவாமெனமறுத்தியேலறமுமாண்மையும்புகழுமல்லவே. (கசஎ)

* என்றுகேசவனியம்பவங்கெதிரிராசராசனுமியம்புவா
னன்றுசூதுபொருதுரிமையாவையுமிழந்துபோயினர்களவரு
மின்றுநீவிரகின்மீளவுங்கவரவெண்ணினாலவரிலெளியனோ
சென்றுகானினிடையின்னமுந்திரிவதுறுதியென்றுநனிசீறினான். (கசஅ)

* நீவெறுக்கிலெனிருந்தமன்னவர்திகைக்கிலென்பலநினைக்கிலென்
போயுரைக்கிலெனுரைத்தவுண்மையதுபொய்த்ததென்றமரர்புகலிலென்
வேய்மலர்த்தொடையலைவரென்னெதிர்மிகுத்தவெஞ்சமர்விளைக்கிலே
னீயிருக்குமிடமெனினுமிப்புவியிலியானவர்க்கரசினிக்கொடேன். (கசகூ)

கண்ணிலாதவனளித்தமைந்தனிதுகழறவேயறிறுத்துவான்
மண்ணில்பாதவர்குலத்துதித்தமணிவண்ணனன்றெனமனங்கொளா
வெண்ணிலாதவனுரைத்ததேபலரிருந்தவர்க்குமிசைவோவென
விண்ணிலாமதிகுலத்தராரையும்வினவினான்விழிவிளக்கியே. (கருo)

பேரவைப்புறமிருந்தநற்குரவர்பேசலின்றிவிறலுமரிற்
சேரவும்செயல்கண்டுவெந்தனிருதிட்டியற்றமுகநோக்கியே
பாரினுங்கொருவனீயலாதெவர்பணிப்பரேதுமிதுபாங்கினு
லாரநற்புகழ்படிப்பனேத்திடினுமுனக்கலாதெவணடுப்பதே. (கருக)

வெப்புறாபிர்த்துதவுதந்தையின்புகமெலிந்துகானிலுறுவேலையி
லவரைச்சனனியொடழைத்தரசுமாண்மையுந்தனியளித்தநீ
பைவரிப்பணிபரித்தபாரினரபாலர்காணுவதிப்பகர்மொழி
பொய்வரப்புறவமெய்துமீட்டுமெனப்புகன்றுதூதுவிடல்போதுமோ. (கருஉ)

வேறு.

நஞ்சினையருந்திவீமனைக்கங்காநதியினிலமிழ்த்தினன்கழுவிற்
றுஞ்சுமாறியற்றியரக்குமாளிகையிற்றுணைவரோடருங்கனலளித்தான்
வஞ்சனைபுரிந்துசூதிழைத்தவனிவவ்விமாதினைத்துகிலுரிந்தான்
பஞ்சவர்தம்மைக்கொடியகானேட்டிப்பாரெலாங்குடைநிழற்படுத்தான். ()

கானகமருங்கிற்கடவுண்மாமுனியைக்கடும்பசியுடன்செலத்தூண்டிப்
போனகங்கவரும்படிவரம்பெற்றன்புன்முனிசெய்கொடுவேள்வித்
தீனிகர்க்குஞ்சிகுறியதாமெடும்பற்கிரித்திமருசெறுக்குமாறமைத்தான்
வானகம்புகுவரவரெனநினதுமதலையிவ்வாறெலாம்புரிந்தான். (கருச)

ஆதியில்நீசெய்கருணையாலறத்தாலாருயிர்தொலைந்திலராகி
யோதியவவதியுரைப்படிகழித்திங்குற்றனர்பற்றிலாவுளத்தோர்
பாதியுமெனினுங்குறித்தவாறெனினும்பாண்டவர்தமையழைத்தருளான்
மேதினிவழங்கில்விளங்குநின்குலமும்வாய்மையும்விளம்புவன்கேண்மோ. ()

தொல்லையிற்குரவர்குறித்தசொற்படியேசூழ்புவிநல்கிலராகி
லொல்லையில்வீமன்விசயனென்றுரைக்குமுறனுடைத்திறலினர்முனைந்து
வெல்லுவர்புவியும்வானுமேழ்பிலமும்வெருவுமாற்றலரவர்க்கெதிரார்
சொல்லியவாய்மைதவறியுமரசுந்தோற்றமுமிழப்பலாதுளவோ. (கருசு)

ஆண்மையுமவர்தஞ்சேவகத்திறலுமறிந்தயானுரைத்திடாதிருந்தால்
நீணிலம்புரப்போர்வெறுப்பர்நான்மறையினெறித்துறைபொய்க்குமென்றுன்
நாண்மலர்முடியாயெய்தினேனவின்றேனன்மையுந்தீமையுநாடிக் [னி
காண்வரநீவிருரைத்தசொற்படியுன்கான்முளைமறுக்கலர்கண்டாய். (கருஎ)

மாண்டவித்திறலோர்தமையெலாம்வென்றுமாமகமுற்றிநின்மரபிற்
பாண்டவர்புகழுன்வயினளித்தவராம்பண்பறக்கருணைசற்றின்றி
வேண்டலரெனுமாறுன்னுதல்கடனோவிழியிரண்டுடையவர்தமைப்போ
லீண்டிருவருக்கத்தவரையும்புரத்தலேற்குநின்றனக்கினியேந்தல். (கருஅ)

தம்பிதன்கூறுதனையருக்களித்துத்தங்கடின்கூற்றினைச்சரந்தோர்
நம்பியர்க்குதவியுலகெலாம்புகழவாழ்திநீநலமிநினிலையா
லம்புவிபொருளாயமர்முனைபுகுந்தாலார்வமிதேய்ந்தழிந்திடுறு
மிம்பரினுனக்கேதுன்பம்வந்தடுப்பதவர்க்குநீயின்றமினைனலால். (கருகூ)

மன்னவர்தமக்குவரும்பழியாய்ந்துமறவியுபீடலுமென்று
பன்னுவரவராற்கருமமொன்றெய்தும்படியிலையதையுளம்படுந்தி
நானிலத்தவரிற்பகர்வதிங்கென்னேயினிச்சிலநாளினிற்பெரியுங்
கன்னவில்புயத்தோயான்வரும்போதுன்கானயர்புகன்றதுங்கேண்மோ. (கசு0)

வீடுமன்வேதவேதியருலகாள்வேந்தனோடாதியாங்குரவர்
பீடுறுகழலிற்பணிந்தனமெனுஞ்சொற்பேசினர்முன்னையபடியே
நாடுதவிடினுமியைந்தவாறேதுநல்கினுங்கமதுசொற்பிழையோங்
காடுமீண்டேகற்காற்றலஞ்சமரங்கருதினும்பெரிதெனமகிழ்வோம். (கசுக)

வார்கழற்குரவர்திருமுனங்குறித்துமற்றவர்பணித்தவாறமைந்து
சீர்பெறக்கடிதின்மீள்கெனப்புகன்றாரம்மொழிதேறினீரன்றே
பார்தரற்கேனுமன்றிமுத்தலத்தோர்பருவரலெய்தவாநரகத்தாற்
போர்தரற்கேனுமாய்ந்துணர்ந்துரைமின்போதுதற்கைவரென்றிசைத்தான். ()

செங்கண்மால்குறித்தவுறுதிமாமொழிகள்செவியுறத்திரிதராட்டிரப்பேர்
தங்குபார்த்திபனுமுயிர்த்தருகிருந்ததாமரைநாபனைநோக்கி
யிங்குநீகுறித்ததுண்மையேயாவதிசைப்பதேதெம்வயினுளவோ
வங்கவர்க்களிப்பதெவ்வணமென்சொலாதரங்குறிப்பவராரே. (கசுங)

திங்கண்மாமரபுசிறந்திடநினதுதிருவுளங்குறித்துளதாமேற்
பைங்கொடும்பாந்தட்பதாகையான்றனக்குப்பகர்திநீதெளிவுறவெனவுஞ்
சங்கமுந்திகிரிப்படையையுந்தரித்தோன்றண்ணளிப்பார்வையானோக்கிக்
கொங்கவிழ்புசுந்தார்மார்பனுக்கிதனைக்கூறினான்மாறிலாநெறியே. (கசுச)

கேட்டிநீபெருமவருச்சுனனமரர்கேழ்கிளருலகினிலெய்தி
நாட்டமூன்றுடையோன்றருங்கணையொன்றுனலிந்தசுரேசரைக்கணத்தின்
மீட்டும்வந்தடைந்தானெனுஞ்செயலுணர்ந்தாய்வீமனற்றோள்வலியுணர்வாய்
காட்டினிலவர்போய்த்துன்பமாங்கடலிற்கலப்பநீநலனுறல்கவினே. (கசுரு)

நற்றுணையெனவந்துற்றவர்தம்மினலனிழிபுடையதாய்வரினுஞ்
செற்றமென்றுணராரறப்பெருங்கடமைதிறம்பிநற்செயலலபுரியார்
கொற்றவர்திலகராதலாற்குரவர்குறித்தசொற்படியுளங்கொண்மோ
சுற்றமுநின்னைச்சூழ்ந்தவர்பலருந்துயரறமல்குவரென்றான். (கசுசு)

நீண்டவன்வாய்மைபுலப்படுத்தலுமுனீணிலமுடையவன்றந்தை
யாண்டிதுபகர்ந்தானையுகேளகிலமடிமலர்பொதுளியபெருமா
னீண்டுனையுய்வித்தளிக்குமாறடைந்திங்கிசைத்தனனிம்மொழிமறையிற்
காண்டிநீதுணைவர்க்கியைந்தவாறவனிகவினுறநல்கிமல்குதியால். (கசுஎ)

அறன்றருகுமரனென்னினுநின்மீதளியுளானவனையிகந்து
பிறனுறுமவரைப்பேணுதன்முறையன்றுலகெலாநின்பெயர்விளங்க
மறனுறுதுணைவர்தம்முடன்குழுமிவசையறவாழ்குதிவனச
நிறனுடைவிழியான்வாய்மையுங்குரவர்நினைவுமென்குறிப்பையுநிறுவி. ()

வேறு

கண்ணிலாவெனையரும்பெரும்புவிகளிப்பமாமுடிபுனைந்துதா
னெண்ணிலாவரசர்தம்மைவென்றுபொழிலேழுமென்பெயர்விளக்கினன்
வெண்ணிலாமதிநிறங்கொளம்பியவன்மைந்தர்வேறெனவிளம்பினு
லன்னனங்குலமடங்கமாசுறமடாதபுன்கருமமாமரோ. (கசுகூ)

வாசவன்றனதுமைந்தனின்றெடிருவர்க்கும்வண்டுவரைமல்குமிக்
கேசவன்றனிலுளங்கலந்தவொருகேளிரில்லையிதுநீதியாய்
பூசலென்பதுகுறித்திடாதவனிபூவைவண்ணன்மொழியின்படி
நேசமொன்றியிருவீருமாளவெனநேயமோடரசனோதினன். (கஎ0)

சரதமானமொழிதந்தைகூறவருகுள்ளதக்கவர்கடங்களில்
விரதசீலனுயர்விற்கைவீடுமன்விளம்பினனிதுகளங்கறப்
பரதனன்மரபுநித்தநீசிறிதுபான்மைசிந்தைகொடுபச்சைமெய்
வரதன்வாய்மையுமறுப்பதோவுயிரில்வலியதோபுவியும்வாழ்வுமே. (கஎக)

நீபுரந்தபுவிநினதுருதிலவர்நேர்ந்தநாட்டினினைவின்படி
மாபுரஞ்சிலதளித்தியல்லதரிவாய்மொழிப்படியதாயினுங்
கோபுரஞ்சிலகொடுத்தியிங்கவரைமாறுகோடல்குலமுற்றவும்
நூபுரஞ்செறிபதத்தனுற்றவுடனேர்ந்தவன்புரமியங்கவோ. (கஎஉ)

மன்னர்மன்னவநினக்குளத்திலவமானமொன்றுளதுகொண்டபார்
பின்னுநல்கினனெனச்சொல்வாரரசரென்றுநிந்தனைபிடித்துளா
யன்னபான்மைபிறர்மாட்டிலேதமுனதரியநற்றுணைவராம்வழி
யென்னைசொல்வதறனல்லதோதுதலினில்லையேகொல்வசையேதமே. (கஎங)

வேறு.

பணிகொண்டதாமநனிவெம்பதாகையுடையாயுனதுபதிவாய்
மணிகொண்டவண்ணனருள்கொண்டடைந்துன்மதிதூய்மையெய்தும்வகையே
அணிகொண்டவின்சொல்பகர்வானவைக்கணனுகுந்தரத்தனலகாண்
டணிகொண்டவன்சொன்முறைநிற்றியூழிதொலையாதனுபவெனவே. (கஎச)

முற்றத்துறந்தபெருமானுரைப்பமுதுநான்மறைக்குமுதல்வன்
குற்றத்தமிழ்ந்தவகமுள்ளமன்னர்கோமானைநோக்கியரசே
கொற்றத்தடந்திகிரியான்மழைக்கோர்கோவர்த்தனங்கொள்குடையான்
சுற்றத்துதித்தபடியானுனதுசெயனுடிவந்ததுணிவே. (கஎரு)

தொல்லாண்மைவல்லவிடலைவர்நாடுபெறவந்ததன்றுதுணைவர்
நல்லோரவர்க்குமுயர்நின்கிளைக்குநலமெய்துகாலமிதுகாண்
வில்லாண்மைபெற்றபலதேயவேந்தர்துதிசெய்யவீறுபெறுவீர்
சொல்லாதளித்திதிருநாடுதந்தைசொலுமாறுவப்பினினியே. (கஎசு)

தம்பிதன்கூறுதனையருக்களித்துத்தங்கடன்கூற்றினைச்சதஞ்சேர்
நம்பியர்க்குதவியுலகெலாம்புகழவாழ்ந்திநிலமிதினிலையா
லம்புவிபொருளாயமர்முனைபுகுந்தாலார்வலிதேய்ந்தழிந்திடினு
மிம்பரினுனக்கேதுன்பம்வந்தடுப்பதவர்க்குநீயீன்றவினனலால். (௧௫௯)

மன்னவர்தமக்குவரும்பழியாய்ந்துமறலியுமீடலவென்று
பன்னுவரவராற்கருமமொன்றெய்துப்படியிலையதையுளம்படுத்தி
நானிலத்தவரிற்பகர்வதிங்கென்னேயினிச்சிலநாளினிற்றெரியுங்
கன்னவில்புயத்தோயான்வரும்போதுன்காளையர்புகன்றதுங்கேண்மோ. (௧௬௦)

வீடுமன்வேதவேதியருலகாள்வேந்தனோடாதியாங்குரவர்
பீடுறுகழலிற்பணிந்தனமெனுஞ்சொற்பேசினர்முன்னையபடியே
நாடுதவிடினுமியைந்தவாறேதுநல்கினுந்தமதுசொற்பிழையோங்
காடுமீண்டேகற்காற்றலஞ்சமரங்கருதினும்பெரிதெனமகிழ்வோம். (௧௬௧)

வார்கழற்குரவர்திருமுனங்குறித்துமற்றவர்பணித்தவாறமைந்து
சீர்பெறக்கடிதின்மீள்கெனப்புகன்றாரம்மொழிதேறினீரன்றே
பார்தரற்கேனுமன்றிமுத்தலத்தோர்பருவரலெய்தவாதரத்தாற்
போர்தரற்கேனுமாய்ந்துணர்ந்துரைமின்போதுதற்கைவரென்றிசைத்தான். ()

செங்கண்மால்குறித்தவுறுதிமாமொழிகள்செவியுறத்திரிதராட்டிரப்பேர்
தங்குபார்த்திபனுமுயிர்த்தருகிருந்ததாமரைநாபனைநோக்கி
யிங்குநீகுறித்ததுண்மையேயாவுநிசைப்பதேதெம்வயினுளவோ
வங்கவர்க்களிப்பதெவ்வணமென்சொலாதரங்குறிப்பவராரே. (௧௬௩)

திங்கண்மாமரபுசிறந்திடநினதுதிருவுளங்குறித்துளதாமேற்
பைங்கொடும்பாந்தட்பதாகையான்றனக்குப்பகர்திநீதெளிவுறவெனலுஞ்
சங்குமுந்திகிரிப்படையையுந்தரித்தோன்றண்ணளிப்பார்வையானோக்கிக்
கொங்கவிழ்பசுந்தார்மார்பனுக்கிதனைக்கூறினான்மாறிலாநெறியே. (௧௬௪)

கேட்டிநீபெருமவருச்சுனனமரர்கேழ்கிளருலகினிலெய்தி
நாட்டமூன்றுடையோன்றருங்கணையொன்றுனவிந்தசுரேசரைக்கணத்தின்
மீட்டும்வந்தடைந்தானெனுஞ்செயலுணர்ந்தாய்வீமனற்றோள்வலியுணர்வாய்
காட்டினிலவர்போய்த்துன்பமாங்கடலிற்கலப்பநீநலனுறல்கவினோ. (௧௬௫)

நற்றுணையெனவந்துற்றவர்தம்மினலனிழிபுடையதாய்வரினுஞ்
செற்றமென்றுணராரறப்பெருங்கடமைதிறம்பிநற்செயலலபுரியார்
கொற்றவர்திலகராதலாற்குரவர்குறித்தசொற்படியுளங்கொண்மோ
சுற்றமுநின்னைச்சூழ்ந்தவர்பலருந்துயரறமல்குவரென்றான். (௧௬௬)

நீண்டவன்வாய்மைபுலப்படுத்தலுமுனீணிலமுடையவன்றந்தை
யாண்டிதுபகர்ந்தானையகேளகிலமடிமலர்பொதுளியபெருமா
னீண்டுனையுய்வித்தளிக்குமாறடைந்திங்கிசைத்தனனிம்மொழிமறையிற்
காண்டிநீதுணைவர்க்கியைந்தவாறவனிகவினுறநல்கிமல்குதியால். (௧௬௭)

அறன்றருகுமரனென்னிலுநின்மீதளியுளானவனையீயிகந்து
பிறனுறுமவரைப்பேணுதன்முறையன்றுலகெலாநின்பெயர்விளங்க
மறனுறுதுணைவர்தம்முடன்குழுமிவசையறவாழ்குதிவனச
நிறனுடைவிழியான்வாய்மையுங்குரவர்நினைவுமென்குறிப்பையுந்நிறுவி. ()

வேறு

கண்ணிலாவெனையரும்பெரும்புவிகளிப்பமாமுடிபுனைந்துதா
னெண்ணிலாவரசர்தம்மையென்றுமொழிமேலுமென்பெயர்விளக்கினான்
வெண்ணிலாமதிநிறங்கொளம்பியவன்மைந்தர்வேறெனவிளம்பினு
லன்னனங்குலமடங்கமாசுறமடாதபுன்கருமமாமரோ. (ககூகூ)

வாசவன்றனதுமைந்தனின்னொடிருவர்க்கும்வண்டுவரைமல்குமிக்
கேசவன்றனிலுளங்கலந்தவொருகேளிரில்லையிதுநீதியாய்
பூசலென்பதுகுறித்திடாதவனிபூவைவண்ணன்மொழியின்படி
நேசமொன்றியிருவீருமாளவெனநேயமோடரசனோதினான். (கஎ௦)

சரதமானமொழிதந்தைகூறவருகுள்ளதக்கவர்கடங்களில்
விரதசீலனுயர்விற்கைவீடுமன்விளம்பினானிதுகளங்கறப்
பரதநன்மரபுதித்தநீசிறிதுபான்மைசிந்தைகொடுபச்சைமெய்
வரதன்வாய்மையுமறுப்பதோவுயிரில்வலியதோபுவியும்வாழ்வுமே. (கஎக)

நீபுரந்தபுவிநினதுருதிலவர்நேர்ந்தநாட்டினினிவின்படி
மாபுரஞ்சிலதளித்தியல்லதரிவாய்மொழிப்படியதாயினுங்
கோபுரஞ்சிலகொடுத்தியிங்கவரைமாறுகோடல்குலமுற்றவும்
நூபுரஞ்செறிபதத்தனுற்றவுடனேர்ந்தவன்பரமியங்கவோ. (கஎஉ)

மன்னர்மன்னவநினக்குளத்திலவமானமொன்றுளதுகொண்டபார்
பின்னுநல்கினனெனச்சொல்வாரரசரென்றுநின்தனைபிடித்துளா
யன்னபான்மைபிறர்மாட்டிலேதமுனதரியநற்றுணைவராம்வழி
யென்னைசொல்வதறனல்லவேதோதுநலினில்லையேகொல்வசையேதமே. (கஎ௩)

வேறு.

பணிகொண்டதாமநனிவெம்பதாகையுடையாயுனதுபதிவாய்
மணிகொண்டவண்ணனருள்கொண்டடைந்துன்மதிதூய்மையெய்தும்வகையே
அணிகொண்டவின்சொல்பகர்வானவைக்கணனுகுந்தரத்தனலகாண்
டுணிகொண்டவன்சொன்முறைநிற்றியூழிதொலையாதனுயுவெனவே. (கஎச)

முற்றத்துறந்தபெருமானுரைப்பமுதுநான்மறைக்குமுதல்வன்
குற்றத்தமிழ்ந்தவகமுள்ளமன்னர்கோமானைநோக்கியரசே
கொற்றத்தடந்திகிரியான்மழைக்கோர்கோவர்த்தனங்கொள்குடையான்
சுற்றத்துதித்தபடியாலுனதுசெயனுடிவந்ததுணிவே. (கஎரு)

தொல்லாண்மைவல்லவிடலைவர்நாடுபெறவந்தன்றுதுணைவர்
நல்லோரவர்க்குமுயர்நின்கிளைக்குநலமெய்துகாலமிதுகாண்
வில்லாண்மைபெற்றபலதேயவேந்தர்துதிசெய்யவீறுபெறுவீர்
சொல்லாதளித்திதிருநாடுதந்தைசொலுமாறுவப்பினினியே. (கஎசு)

இத்தன்மைகூறுவதுநின்கருத்தினிசையென்றுகொண்டுதிருமா
லெத்தன்மைகூறுமவ்வாறளித்தியிடரற்றிருத்தினிமே
லொத்தன்பினோடுமுன்னோர்பதத்திலுறநீவணங்கவிளையோர்
வைத்தன்பினோடுனடிதாழயாமுமகிழ்வெய்தவாழ்திரெனவே. (௧௭௭)

ஆசானுரைப்பவரவப்பதாகையரசன்குலுங்கநகையா
மாசானசிந்தையலம்வந்துசீறிமணிவண்ணனோடுபகர்வான்
றேசாலுநின்புன்விரகாலுமோதுதிறலாலுநாடுபெறவோ
பேசாதுநின்மினுனதுள்ளமெங்கள்பெரியோருணர்ந்ததலவே. (௧௭௮)

மன்னனவர்க்குளுயர்வேந்துமாகிவணங்காதசென்னியுடையேன்
பொன்னொடுமெய்துமெனினுங்கவுந்திபுதல்வர்க்கிணைக்கைகுவியே
னன்னொடுநம்பவவர்கொள்வதின்றிநானேபுரப்பதிதுவே
யென்னேகுறிப்பதடுபோர்முகத்திலுணர்வாரிமைப்பில்விழியார். (௧௭௯)

ஆறூடுசென்னியிறைவந்துரைக்குமளவேனுமிந்தவகிலந்
தேறுதவர்க்குமுதவேனுனின்சொறெளியேனிருந்தகுரவர்
மாறாகநீயுமுனிவாகவெங்கும்வசையாகமன்னர்பலரு
நீறாகவந்ததெனினும்புகன்றபடியன்றிவேறொன்றிலையே. (௧௮௦)

மாசற்றசிந்தையரசீதுரைப்பமணிவண்ணனீலவதனந்
தேசிற்றயங்கநகையோடிருந்ததிறல்கண்டுவேதமுனிவன்
மூசற்றவண்டுபயின்மாலைமார்பனுமுகநோக்கியந்தமுணரா
னாசற்றவண்மைசமதக்கினிநாமமுடையானெடுத்திதறைவான். (௧௮௧)

பூமோகமாதர்புணர்மோகமோதுபொருண்மோகமென்பதுணரா
நாமோதுநாமநரநாரணாதியிருவோருநண்ணுதவமாய்
மாமோகனஞ்செய்மணிதுன்னுசாரல்வளர்கந்தமாதனமதி
லோமோதயஞ்செய்நெறிதீமுருக்கவுரையற்றிருக்குமிடையில். (௧௮௨)

இடியேறுமஞ்சுமடலானுயர்ந்தவிமையோர்புகழ்ந்ததிறலான்
வடியேறுவெய்யகணையான்சிவந்தவடவானலங்கொள்விழியான்
படியேறவென்றசிலையான்விரைந்துதம்பொற்பதங்கொள்பெயரான்
முடியேறுவேந்தனிவரோடுபோர்செய்முனைநாடிவந்தணுகினான். (௧௮௩)

அவமுய்யவந்ததனிவேந்தனுள்ளமதுகண்டடங்கியிவருந்
தவமுய்யுமாறுபலகோடியின்சொற்றரவங்கவன்கொள்கிலனாய்
நவமுய்யநின்றுசமர்செய்தபோதுநரனங்கைகொட்டிநகையாப்
புவியுய்யநீடுசிலைகொண்டுவாளிபுயல்போலளித்தபொழுதே. (௧௮௪)

கவசந்துணிந்துசிலைபொன்றிமன்றல்கமழ்தேரின்மீதுகதுவுந்
துவசந்தறித்துபுயமார்புநெஞ்சுகணைமூழ்குசோரிசொரிய
வவசம்பொருந்திவிறல்கெட்டுநாணியழிவானசிந்தைமெலிவாய்த்
திவசஞ்செய்பானுவெனமெய்சிவந்துசென்றானெதிர்ந்ததிறலோன். (௧௮௫)

அத்தன்மையர்வருணராய்கொலங்கனிசைகொண்டவாண்மையவரே
யித்தன்மைமேனியரியோடுபார்க்கவெனவுற்பவித்தவிவர்கா
ணெத்தன்மையேனுமறிவொன்றுமேலோரிசைவாய்மையெள்ளினினீ
கைத்தன்மைநீசமர்வாய்வெருண்டுகலுழ்வெய்தலையமிலையே. (கஅகூ)

குறியாததாதைதநிமைநதனுங்கள்குருவாதியானகுரவ
ரறியாதுரைத்தகலவாண்வத்தையகல்வித்தறத்தின்முறையா
லுறிதோறுமுண்டதயிர்வாய்விஞேதனுரைசெய்தவண்ணமொழுகிற்
செறியாதவாழ்வினலமெய்தியாண்மைதிகழ்வெய்தியுய்வையெனவும். (கஅஎ)

வேறு.

கண்ணுவரெனச்சுருதிகற்றமுனியந்தண்
மண்ணுலகளிக்குமொருமன்னவனைநோக்கி
யண்ணலிதுகேட்டிமதியாமலவமானம்
நண்ணினரனேகரிதிகாசநவில்வேனல். (கஅஅ)

மாதலியெனப்பெயர்கொள்வானவர்பிரான்றேர்ச்
சூதனொருதோகைதனைநல்கியுடன்றேயுங்
காதலனவட்கிசைவுகண்டுரகர்தம்மி
லாதரமுடைத்தமதியாரியனையுன்னி. (கஅகூ)

பெற்றகொடியைத்தருதுமென்றுபலபேச
மற்றவனுயிர்த்துவயினற்கெதிரியாவேன்
குற்றமறுதந்தையுயிர்கொண்டவனெனக்கும்
பற்றலனெனக்கறுவுபான்மையுளனையா. (கக௦)

தோள்வலிமிகுத்தவனுதிர்ந்தருகுதுன்னின்
மாள்வதலனென்னையிதுமாமணமிருப்ப
வாள்விழிமடந்தைநலமாந்துவதுநன்றே
சூள்வருவதன்றுதுதிசொற்றனனிதென்றான். (ககக)

ஆரியனெனப்பெயர்கொளக்குமரனேதச்
சாரதிதளர்ந்தறிவுதாழ்ந்ததுணராமற்
காரியமுரைத்தனனெமக்கிறைசகாயம்
வீரியமளித்துனுயிர்மீட்குமினியஞ்சல். (கக௨)

என்றுபலகூறியவனேடுமிவனேகி
மன்றன்மகவானவையில்வந்துபுகுமுன்னர்
துன்றுமிவர்செய்தவவலத்திலரிதோன்றி
வென்றிமகவானுடன்விளங்குமுறைகண்டார். (ககங)

மலரடியுறத்தொழுதுமாதலிநிகழ்ந்த
பலமுறையியம்பவிமையோர்பதிபகுத்தே
சலசநயனன்செவிதரக்கருணைசெய்தே
நிலவுமிவனுயுநிறைவெய்தும்வகைநேர்ந்தான். (கக௪)

வந்தகருமம்பெறமடங்கியரிசென்று
னந்தவுரகாதிபனரும்புதல்வனிந்தப்
பைங்தொடியைவேட்டினியபண்பிநகர்போந்தா
னிந்திரனுமால்வையினெய்தியுறுபோதில். (கசுரு)

தேயுவெழகண்கள்பொறிசிந்தியெதிர்வந்தே
தாயிருவர்நாமிருவர்தந்தையொருவன்கா
ணீயறிவிலாய்கொலசுரேசர்தமைநீறுப்
போயுகமுடிக்கும்வலியென்னுழைபொருந்தல். (கசுசு)

வேலைவரையாதியுலகோடுறவிழுங்கு
மாலையொருதோள்கொடுசுமக்கும்வலிதேரு
யாலைபடுவேழமெனவாற்றலரைவாட்டி
மேலையவராமெனவிளங்குவதுகாணாய். (கசுஎ)

என்னையிசைநண்புகொடியங்குமுறையன்றிப்
பன்னுமெனதொன்னலர்கள்பாலருள்புரிந்தா
யுன்னையொருவான்சிறகிலூதையிலொடுக்கித்
துன்னுபிலமூடுறமடுத்தெறிதல்சூழ்வன். (கசுஅ)

என்றுகலுழன்பலவியம்பமகவானு
மன்றுபலகூறவரியாதரவுணர்ந்தே
நன்றுவெகுளேலருளைநல்கினவனோனே
யன்றெனவுமாணவமடங்கிலனிசைத்தான். (கசுகூ)

வெற்றியொடுகொற்றமிசைவேறுமுளவெல்லா
மற்றுமெனதாற்றல்வலியாலுறன்மகிழ்ந்தும்
புற்றரவினுக்குறுதிபூணும்வகைசெய்தாய்
நற்றருமமீதெனநவிற்றவரியோடும். (உ00)

ஆணவமடைந்தபடியாமெனநினைந்தே
மாணுலவுமாலுமெனைவைத்திபுயனென்னப்
பூணொளிசெய்தோண்மிசைபொருத்தவலியின்றி
நீணிலமதிற்றளர்வுநீடவுயிர்சார்ந்தான். (உ0க)

அச்சுதனவன்றளர்வகற்றிமுறையாலே
மெச்சுதிறனல்கியருண்மீளவுமளித்தான்
கொச்சையறிவானவரகந்தையதுகொண்டே
யிச்சைபெறலின்றியிழிபெய்தினரனேகர். (உ0உ)

நீயுமரிவாய்மையையிகழ்ந்துநெறிநிற்குந்
தூயவருரைத்தபுகலுந்துணிபிலாயேற்
போயதுனதாற்றலிசைபொற்புமுதலெல்லா
நேயமொடுரைத்ததிதுநீயுணர்தியென்றான். (உ0௩)

யாவிதுபுகன்றகறனன்றெனவிருந்தா
றேனவிழ்குமிர்ந்தவிசைதேவர்செவியூற்றும்
ஞானிதிருநாவிலுணர்கென்னவருணல்கி
மானிமுகநோக்கியிதுகூரதர்வகுப்பார். (உ௦௪)

வேறு.

இல்லவருள்ளோராவருள்ளவரேழையாவர்
வல்லவர்வலியிலாராய்வலியிலார்கையின்மாய்வர்
வெல்பவர்நாமேயென்றுவிரும்புதலகந்தையன்றே
நல்லவருரைகடந்தார்க்குளகொலோநன்மைமன்னே. (உ௦௫)

உலகமோரேழுமேத்துமுத்தமன்கங்கைதந்த
பலகலைவலமுதாதைமுதலினோர்பணித்தயாற்ற
மலகறப்பிழைசெய்தாயேலல்லலிற்றிளைத்தறின்ன
நிலமிசைகாதையொன்றுநிகழ்த்துவனிருபகேண்மோ. (உ௦௬)

காதிதந்தவன்றன்பாங்கர்க்காலவனெனுந்தவத்தோ
னோதிநல்விஞ்சையாவுமுணர்ந்தபின்பவனையேத்தி
நீதிறான்முறையேநாயேன்றக்கணைநிரப்பநின்றேன்
பேதியாதுரைத்தவண்ணநல்குவன்பேசுகென்றான். (உ௦௭)

அம்முனியிவனைநோக்கிநின்மனத்தன்பாலீண்டு
செம்மையிற்றருவதெல்லாந்தந்ததாச்சிந்தைகொண்டே
னிம்முறைசரதஞ்சேறியிருந்தவத்தெல்லைக்கென்ன
வெம்மைசேருளத்தனாகிமீளவும்புகல்வதானான். (உ௦௮)

ஐயநீதந்தவிஞ்சைக்கருகனுயாரியர்க்கு
மெய்கொடக்கணைநல்காதேமீள்கிலன்விளம்புகென்றே
துய்யவனடியிற்றாழ்ந்தானம்முனிமுனிவுதூண்டக்
கொய்யுளைசதமோரெட்டுக்கொணருதிகுறித்தவண்ணம். (உ௦௯)

பாலினுஞ்சிறந்தவெள்ளைமேனியாப்பகர்ந்தகாது
மாலினுஞ்சிறந்தநீலவண்ணமாயுள்ளதாகி
நூலினுநுனித்தற்கெட்டாக்குரல்சுழிசாதிநுண்மைக்
காலினுங்கடுப்புமைந்துகதியினும்வழாதாயென்றான். (உ௧௦)

அருந்தவத்தொருவன்கூறக்காலவனவ்வாறையா
பொருந்துநற்பரிகொணர்ந்தேதருவனென்றகன்றுபோனான்
றிருந்துமிவ்வுலகமுற்றுந்திரிந்துதேர்ந்தானுஞ்சொற்ற
கருந்தடங்காதுவாய்த்தகடும்பரிகண்டிலானே. (உ௧௧)

வாடிமெய்தளர்ந்துசோர்ந்துவருந்திநல்லுண்டியின்றி
நீடியவுயிர்ப்புளோனுயாகுலநோருமெல்லை
நாடியகலுழன்முன்னர்நண்புடைப்பான்மையாலே
கூடியங்கவனையுள்ளதுணர்ந்திதுகூறலுற்றான். (உ௧௨)

மாத்தவமுடையகோமான்வாய்மைமேறுத்தமன்பாற்
ரேுத்திரமுனியேயீயுந்துயருறப்புகன்றநிதாங்
கோத்திரம்வளர்ந்தபாரிற்கூறுகோடகங்கெட்டாதாற்
சாத்திரம்வழாதபாய்மாச்சரதம்வின்னுலகிலுண்டே. (உகங)

ஐயநீயென்னேடெய்திலருஞ்சிறைபீதிற்றுங்கி
யெய்துவன்விண்ணுடென்னவிவனதற்கிசைந்துபோம்றிச்
செய்யவன்சிறகாற்பற்றச்சேனுறப்பறந்தபோதிற்
பொய்யிலானறிவுமாழ்கித்தவறியேபுணரியாழ்ந்தான். (உகச)

பன்னகவயிரிமீண்டுமுனிவனைக்கடற்பாயாமுன்
றன்னிருபதத்தால்வவ்விமகேந்திரசயிலத்துய்த்தா
னன்னவன்விண்ணினேகலரிதெனக்கென்றுகூற
நன்னிலமமைந்துமேலோர்நற்பரிநேடலுற்றூர். (உகரு)

மதிகுலமுய்யநுங்கண்மரபுடையயாதிவாழும்
பதிபிரதிட்டையாகப்பகர்புரம்புகுந்துசொற்றூர்
முதுமறைநெறிவழாதமுதல்வனிவ்வாறுகேட்டே
குதிரையவ்வியல்பிற்றுயதின்றெனக்கூறிவிட்டே. (உகசு)

பெற்றமாதவியென்றூதுபெண்கொடிவனப்பின்மிக்கா
ளுற்றவடன்னைக்கூவியம்முனிக்குதகநல்கிக்
கற்றவரெம்பாலெய்திப்பேறுதொன்றுகழிவதோவென்
றற்றையேவிடையளித்தானரிவையோடகன்றூரன்னூர். (உகஎ)

நாடெலாமனைவியோடுநற்றுணைக்கலுழனேடுந்
தேடலாமியற்கையாவுந்தேடியேதிரியுநாளிற்
பீடெலாம்விளங்கயோத்திநகர்வருபெருமான்பக்க
லாடலார்புரவியுள்ளதறிந்திவராயலுற்றூர். (உகஅ)

இக்குவாகெனுந்தூயோன்பாலிருசதமிவுளியிவ்வா
றெுக்குநல்வருணத்துள்ளதெனிலுயிர்போலவோம்புந்
தக்கவனுதவுமாறுதருதியென்றவனையாம்போய்ப்
புக்குறக்கேட்குமாறும்யாதெனப்பூவைசொல்வாள். (உகக)

மாமுனியொருவனல்குவரத்திறற்பிறரில்வாழ்ந்து
தோமறுசுதரைநல்கிமீளவுந்துணைவன்பக்க
லாமுதற்கன்னியாகியெய்துமாறறிவனீவிர்
கோமுனமேகியுள்ளவாறெலாங்கூறிப்பின்னர். (உஉ0)

மகிபுரந்தளிக்குநீதிமைந்தனையுதவுமாறு
யகில்கமழ்கூந்தன்மங்கையபாதிக்க [illegible]
முகினிகர் [illegible] திரீமீட்டுமுன்னை
[illegible] யென்றுனல்குவன்பரகென்னென்றூள். (உஉக)

செய்தனாங்கிதுமேவியன்னக்கேறியாண்டகைபாலெய்தி
பொய்தீருமுனையுங்காட்டிமொழிவனமொழிந்துநல்கி
மைதீர்செயியும்வெள்ளைவண்ணமும்பொலியும்பாய்மா
வுய்யுமச்சதமிரண்டும்வல்லினருவப்பினோடும். (௨௨௨.)

நிலம்பொறைநகுபுஞ்செவ்வேனிருபனுமகவிலாத
வலக்கணைபகற்றுவானுயர்பெருங்கொடியைச்சார்ந்தே
குலம்பொறைநீதியாற்றல்குறைவினன்மகவைத்தந்தான்
வலத்தூறுசிறுவன்றன்பேர்வசுமனனென்பர்மாதோ. (௨௨௩)

ஆங்கவன்மீட்டுநல்குமரிவையுங்கன்னியாகிப்
பாங்குறமுனிவனோடுபடர்தலுங்கலுழனின்று
ரீங்குறும்புரவிநாடியிம்முறைதகவரவென்றே
நீங்கிவிண்படர்ந்தான்மாதுநிமலனும்புவியினேடி. (௨௨௪)

விரைகொளுங்கந்தமாரமென்மலராதிகொண்டு
பரைகரத்தால்வெய்யோனுக்கருக்கியம்பணித்தவாபோற்
றிரையெறிந்தொலிக்கும்பாகீரதிபுடைசிறந்தகாசி
யுரைகெழுநகரங்கண்டானுயர்மறைக்கிறுதிகண்டான். (௨௨௫)

அந்தமாநகரையாளுமரசன்றிவோதரப்பேர்
தந்தவன்சதமிரண்டுதகும்பரியுடையதாய்ந்தே
பைங்கொடிதனைமுன்போலப்பகரவற்களித்துவேறோர்
மைந்தனையீன்றபின்னர்வேளனுன்வாசியோடும். (௨௨௬)

போசமாபுரத்துநாதன்றன்னுழைபொருந்திப்பின்னர்
தேசினோர்மகவைத்தந்தேயவன்வயிற்சிறக்கநல்கி
வாசியோர்சதமிரண்டுவெளவினர்மாதுமீளப்
பேசியகன்னியாகிப்பெருந்தவமுனிபின்சென்றாள். (௨௨௭)

பெருந்தகைதிவோதரற்குப்பெற்றவன்பிரிந்துவந்தே
யிருந்துபின்புதவுமைந்தன்சிபியெனப்புகல்வர்கண்டா
யருந்தவன்பின்னும்வாசியிருசதமாவதுன்னி
வருந்திநாவலந்தீவாற்றவலம்புரிந்தலசினனே. (௨௨௮)

வேறு.

அருணற்கிளையோனெதிராய்ந்தனுகிக்
கருணைக்கடலாகியகாலவனே
வருணத்தொளிர்வாசிகள்வண்பருதிக்
கிரணப்புவிமீதிலேகேளினிமேல். (௨௨௯)

சதமாறுதலத்தினொர்தன்மையினுன்
முதனாளிலடைந்ததுமுன்றரச
ரிதமாதவமாற்றினரெய்தினரீண்
டுதவாநிதிநீகவர்ந்துற்றனையே. (௨௩௦)

அருமாதவனுக்கறுனூறுமளித்
திருநூறுபரிக்குமிவற்குதவுந்
திருமாதையளித்தொருசேயுதவிற்
பொருவாதவனுசிபுகன்றிடுமே. (உ௩௧)

என்றோதியுடன்படுமிவ்விருடி
நன்றாமெனவவ்வையினற்கலுழன்
சென்றாங்குசெலுத்தியிவன்றனையுந்
துன்றார்குழலாளொடுதோற்றெனவே. (உ௩௨)

பரியாறுசதங்கள்பரிந்துதவி
வரியார்விழியாளையும்வைத்திடலாற்
புரிமாதவனுசிபுகன்றபின
ரரியாளொடுபுல்கினனம்முனியே. (உ௩௩)

சந்தார்முலையாளொருசந்ததியைத்
தந்தாளவன்றன்பெயரட்டகனும்
வந்தாள்கணவன்புடைமாதவியு
மைந்தாதவமாற்றெனவிட்டனனே. (உ௩௪)

முறையாமுனியுந்தவமுற்றினனென்
றிறையாமுனிவோர்களியம்புதலுண்
டறைவார்கழலாய்பெரியோரதனிற்
குறைசாரவிளம்புதல்கூடுமதோ. (உ௩௫)

முன்னாகயயாதிமொழிந்தவகந்
தன்னாற்கதிதப்பிதவுத்திராற்
பொன்னாடுபுகுந்ததுணர்ந்துமினி
மன்னாமதியாதுவழங்குவதோ. (உ௩௬)

வலியாரொடுமற்பொரவாகுவயம்
பலியாதிதுவேபயனென்றுணர்தி
சலியாவுரவோர்மொழிசார்ந்துணரி
னலிவாகிலையென்றனனாரதனே. (உ௩௭)

முனிவோரொருமூவர்மொழிந்தவெலாந்
தனிவைகுதராபதிதந்தசுதன்
கனலாமெனவேசெவிகண்ணுறலு
நனிநண்பனைநோக்கிநகைத்தனனால். (உ௩௮)

வேறு.

குறித்தமாமுனிவர்கேண்மினம்மறிவுகொண்டுமேல்வினையைவென்றவர்
திறத்தறிந்துளவோவெமக்குறுதிதேறவேண்டியுமையீண்டிலோம்
பொறித்தவண்ணமுளதாகுமெய்யறிவுபோமினீவிர்தவம்புரியவே
பரித்துநல்கமழைவண்ணனுண்டுலகுபாண்டவர்க்கெனவிளம்பினான். (உ௩௯)

அனையகாலைகுருகுலவிருத்தமுனியங்கவர்க்கிருகரங்குவித்
தினையகாலமுனிவெய்தலீர்பொறுமினெம்பொருட்டெனவிரங்கினார்
புனைதுழாய்முகிலுமீட்டுமுன்னருறுபுலனிலாதவிழிமன்னவன்
றனையனோடுபலநீதிவாய்மையருந்தவர்வியப்புறவழங்குவான். (௨௪௦)

ஆசறத்தருமநீதியாலொழுகுமண்ணலுக்கெதிரிதோன்றுமேற்
றேசறப்பொருதுவெற்றிகோடலபுகழ்செய்யகோல்வழுவிமெய்யர்தம்
பூசலைக்கருதியறனலாமுறைபுகன்றமர்த்தலைபுகுந்தவ
னாசமெய்துமுறையன்றியும்வசையுநரகவாழ்வுமுளனாவனே. (௨௪௧)

நண்புகொண்டபலவேந்தராசுரர்கள்நாற்பெரும்படையடங்கலும்
விண்புகும்படிநினைப்பதோகுழுமிவீறிவாழுமுறைதேறிலோய்
பண்பிதென்னையுனதுற்றநின்மனதுபற்றியுள்ளபடிபாண்டவர்க்
கெண்படும்புவியளித்தியென்றிருகையேந்தியின்சொல்பெறவோதினான். ()

ஆர்வயிற்றனதுமனதிருந்ததவராற்றுறுங்கருமம்யாவதும்
பார்வயிற்றருமமென்றுரைப்பரலதுண்மையாய்ந்தெவர்பணித்துளோர்
கார்வயிற்கனல்கொழுந்துவெங்கணைகளைத்துரந்துறுதிகாட்டுவெம்
போர்வயிற்றெரியுமறமுமல்லனபுரிந்தவாறுமிதுபோதுமே. (௨௪௩)

கார்வழங்குமுருமேறெனக்கொடியகண்ணிலான்மதலைகழறவும்
பார்வழங்கமனதில்லையேலவனிபாதியாகிலும்வழங்குவாய்
தார்வழங்குதடமார்பவென்னவதுதானுமன்னவன்மறுக்கவைந்
தூர்வழங்குமெனவுற்றிரந்தனனிவ்வுலகெலாமுதவுமுந்தியான். (௨௪௪)

மாடளிக்குலநெருங்குபைந்துளபமாலையாய்மகரவேலைசூழ்
நாடளித்திடவுமைந்துபேருமுறைநகரளித்திடவும்வேண்டுமோ
காடளிக்கவதனிடைதிரிந்துரைகரந்துபோயினர்கள்காணவோர்
வீடளிக்கவும்வெறுப்பரோவிதனைவிடுகவென்றவன்விளம்பினான். (௨௪௫)

தந்தைகாதலுறுதன்மைகண்டிளையதாய்பயந்தவிருதம்பியர்க்
இந்தவாழ்வுமரசுங்கொடுத்தவனுநின்குலத்தொருவனிங்குளான்
முந்தமாநிலமனைத்தினுக்குமுயர்முறைமையாலுரியவரசருக்
கைந்துமாநகருநீகொடாதொழியினென்னதாகுமுனதரசியல். (௨௪௬)

ஒருகுலத்தினிலிரண்டுமன்னவருடன்பிறந்துரிமையெய்தினு
விருகுலத்தவருமொக்கவாழ்வுறுதலெக்குலத்தினுமியற்கையே
பொருகுலக்களிறுவளர்திசைக்கண்மிகுபுகழ்பரப்பியெழுபுவிபெறுங்
குருகுலத்தவரியற்கைநன்றெனமொழிந்தனன்கரியகோவலன். (௨௪௭)

நாரணன்வனசநாபனின்னைநகரைந்திரந்திடவுநல்கலாய்
காரணம்பிறிதுதேர்கலாயொருவர்கழறுமுண்மையுரைகைக்கொளாய்
போருணர்ந்தவரிலோதுவாயுனதுபுந்திகொண்டபடிசெய்கவென்
றாரணன்கிருபன்வீடுமன்விழியிலானையாதியரரற்றினார். (௨௪௮)

கண்ணன்வந்ததுமிருந்தசீரியர்கருத்துநாடிவிருகைபிடித்
தண்ணலுன்னையவனுக்களிக்குநினைவாருமீயிவணிருப்பதிற்
றிண்ணம்வன்றுயரடுத்தசெய்கைபுரிகென்றுசீறியிதுசெப்பினன்
றண்ணிலாநகைதரித்தசெந்துகில்பிடித்துரிந்ததறுகண்ணினன். (உசகூ)

அன்னகாலையவனுதனைத்திலுமிழிந்தனேகர்புடைசூழவே
கன்னனோடவைகழன்றுளான்விளவுகன்றுகொண்டெறிதடங்கணன்
மன்னர்மன்னவனையீன்றதாதைமலர்வாண்முகம்பரிவினோக்கியே
யென்னைநீயிவனொருத்தனாலுலகிறப்பதாயுமகவென்பதே. (உருo)

வஞ்சனைக்குரியனானதன்மகவைமைந்தனென்றறிவுகொள்கிலான்
கஞ்சனைப்பரிவிலீன்றதாதையெனைவரவழைத்துயிர்கழற்றினன்
சஞ்சலக்கழலைமெய்யுதித்தனவெனத்தறித்திடறவிர்ப்பரோ
முஞ்சரிற்பலர்படைத்துநின்னறிவுமாண்பிலன்றெனவழங்கினன். (உருக)

திருக்கிலாதவனுயிர்த்துவாடியொருதூதுசெம்மல்வயினேவியே
பொருக்கெனக்கொணர்மினென்னமீண்டுபுடைபோதுமன்னருடனுண்டுவந்
திருக்குமுன்றவிசினுற்றபின்னரினியென்னைநின்னுளமியாவருந்
தருக்கிவாழ்வதுகுறித்திதேர்கிலாதருஞ்சொல்போக்கிவலிதாழ்விலோய். ()

* பேரராவணைதுறந்தமாயனிவைபேசவன்பினொடுபின்னையும்
சீரராவினையுயர்த்தகோவும்விழிதீயெனும்படிசெயிர்த்துளான்
போரருநிருபன்மணிநெடுஞ்சுடிகையாயிரங்கொடுபொறுத்தபார்
வீரரானவரதல்லவோவுரிமைவேண்டுமோவெனவிளம்பினன். (உருஉ)

* பொய்வளர்ந்தமொழிமன்னன்மற்றிதுபுகன்றபின்புபுயவலியினு
லவர்தங்களரசுங்கொடாமலடலாண்மைகொண்டெதிரடர்த்தியேல்
மெய்விளங்கிவருகுருநிலத்தினிடைவந்துவெஞ்சமர்விளைக்கவே
கைவழங்குகெனநின்றதூணிடையறைந்துரைக்குமிவைகாவலன். (உருச)

* புன்பிறப்புடையபொதுவர்தங்கண்மனைபுரவிலானிரைபுரந்திடு
முன்பிறப்புமுரலோடுகோவியருனைப்பிணித்ததுமறந்துநீ
மன்பிறப்பிலுயர்குருக்குலத்தவர்தம்வாய்மைதானுமொருமாசிலா
வென்பிறப்புமுணராமலோவவையிலிந்தவாசகமியம்பினய். (உருரு)

* ஏவிலங்குசிலையைவர்வந்தனுகிலியானயர்ந்தெளிதிருப்பனோ
கோவிலங்குபொரவஞ்சுமோகரடகுஞ்சரங்கள்பகைகொண்டகான்
மேவிலங்குமுன்மலைத்தல்கையறயவேண்டுமென்றதுநின்மேன்மையோ
நாவிலங்குமெனவெண்ணியோமிகவுநன்றுநன்றரசர்ஞாயமே. (உருசு)

* அளிவருங்குழல்பிடித்துமன்னவையிலவருக்குமுரியாளைநா
னெளிவருந்துகிலுரிந்தபோதருகிருந்துகண்டவர்களில்லையோ
துளிவரும்புனல்புரிந்தருந்திலடுதோறுநின்றுயிர்சுமந்ததோ
வொளிவரும்படியிருந்தபாவியருமின்றுமானநிலையுணர்வரோ. (உருஎ)

* அன்னையானவளொருத்தியாமுதலளித்ததந்தையர்களைவராம்
பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவராமொருபிறப்பிலேசர்
மின்னையாமுடிவிளைவரும்பரியுடன்றனித்தனிவிரும்புவா
ரென்னையாமவரொடொருகுலத்தரசரென்பதாமிவையிதென்கொலாம். ()

* ஞாலமுற்றுமுடையான்மொழிந்திடநகைத்துவண்டுவரைநாதனுஞ்
சாலமுற்றுமவர்நினைவெனப்பெரிதுவந்துபேரவைதணந்துபோய்க்
கோலமுற்றசிலைவிதுரன்வாழ்வுபெறுகோவில்சென்றுதனிகுறுகினான்
சீலமற்றவர்சினத்தபோதுமொருநீதிலாரெதிர்சினப்பரோ. (உ௫௯)

* கரிந்துமாலைசருகாகவும்புதியகமலவான்முகம்வியர்க்கவுந்
திரிந்துகண்ணிணைசிவக்கவுங்கொடியசெய்யவாயிதழ்துடிக்கவு
மிருந்தபேரவையினெடிதுயிர்த்திடுமிராசராசனவனுக்கிவன்
விருந்துசெய்தவுரவென்கொலென்றரசரெதிர்விதுரனைவிளம்பினான். (உ௬௦)

* வன்பினாலவனிவெளவவென்றுகொலென்மனையிலுண்டியைமறுத்தவன்
றன்பதாகினியொடினிதருந்தும்வகைதன்னிலின்னமுதியற்றினா
னென்பிதாவொடுபிறந்துமின்றளவுமென்கையோதனமருந்தியு
மன்புதானுடையனல்லனென்பகைதனக்குமுற்றபகையல்லவோ. (உ௬௧)

* முதல்விழைந்தொருவனுடனியைந்தபொருள்பற்றியின்புறமுயங்கினு
மதிகமென்றுபொருளொருவன்வேறுதரிலவனையேயொழியவறிவரோ
பொதுமடந்தையர்தமக்குமண்ணிலிதுபுதுமையல்லவவர்புதல்வனும்
விதுரனின்றவனொடுறவுசெய்ததொர்வியப்பையென்சொலிவெறுப்பதே. ()

* இன்னவாறவனுரைத்தபோதிவனெழுந்திருந்துவசையென்னைநீ
சொன்னவாய்குருதிசோரவாள்கொடுதுளைத்துநின்முடிதுணிப்பன்யான்
மன்னவாகுருகுலத்திலேயொருவன்மைந்தனுருயிரைவெளவினா
னென்னவானவர்நகைப்பரேயெனையுரைத்தநாவுடனிருத்தியோ. (உ௬௩)

* ஈண்டவர்க்குதவியானதூதுவரிசைப்பவர்க்குலகமெங்கணும்
நீண்டவர்க்குதவியாயினேனெனநினைத்துநீயெனையடர்த்தியோ
மாண்டவர்க்குதவியானபேரறமுமிசையுமாண்மையும்வளர்த்திடும்
பாண்டவர்க்குதவியாகிலென்னைமுடிமன்னரானவர்பழிப்பரோ. (உ௬௪)

* சொல்லிரண்டுபுகலேனினிச்சமரினின்றுவெங்கணைதொடேனெனா
வில்லிரண்டினுமுயர்ந்தவில்லதனைவேறிரண்டுபடவெட்டினான்
மல்லிரண்டினையுமிருவராகிமுன்மலைந்தகாளமுகில்வந்துதன்
னில்லிரண்டுதினம்வைகுதற்குலகிலெண்ணிலாததவமெய்தினான். (உ௬௫)

* அந்தவில்லினைமுறித்தவில்லிதனதாலயம்புகுதவச்சுதன்
சந்தமானவரன்வில்லுமன்னவொருதாமவில்லினைமுறிப்பதே
முந்தும்வில்லியரிலெண்ணும்வில்லுடையவிசயன்வந்தமரின்முடுகினா
லெந்தவில்லியெதிர்நிற்கும்வில்லியெதிரென்றுகாவலரிரங்கினார். (உ௬௬)

* காரணைத்தும்விடுதாரையென்னபலகணைகளேவியமர்கருதும்வில்
வீரனைப்பழுதுரைத்துநீபகையையெங்ஙனேதனிகொல்வெல்லுவாய்
பாரனைத்துமினியைவராளும்வகைபண்ணுவித்தனையழிந்ததுன்
பேரனைத்துமெனவுள்ளழன்றுசிலபேசினனுயர்பிதாமகன். (உசுஎ)

* பிதாமகன்பரிவுடன்முனிந்துசிலபேசநாசமுறுபேரினன்
விதாரமொய்ம்பனும்விதூரனல்லதுவில்வல்லவீரர்பிறரில்லையோ
வுதாரசீலனுயரங்கர்கோன்வரிவிலொன்றுமேயமையுமுற்றெழும்
பதாதியோடமரிலைவரும்படமலைந்திடப்பரணிபாடவே. (உசுஅ)

* நீயிருக்கநெடுவிற்கையாசிரியனவனிருக்கநிகரற்றவன்
சேயிருக்கவிறன்மன்னரிப்படிதிரண்டிருக்கவெதிர்சென்றுநீள்
வேயிருக்குமிதழிடையனுக்குநல்விருந்துசெய்தவன்வெறுக்கிலென்
போயிருக்கிலென்முறிக்கிலென்சிலைவனைத்துநம்மொடெவர்போர்செய்வார். ()

* என்றுகூறவிறலங்கர்பூபதியும்யானிருக்கவிறல்விசையனைச்
சென்றுசீறியுயிர்கொள்ளவல்லவர்களியாவரென்றுநனிசெப்புவீர்
கன்றினல்விளவெறிந்தகோவலவனின்றுதேர்நனிகடாவினு
மன்றுபோரினிடைகாணலாகுமெனதாடல்வெஞ்சிலையினுண்மையே. (உஎ0)

* அம்பரத்தவருடன்றுசீறினுமோரம்பிலேயழிவர்திண்ணம்யான்
வெம்பணிப்பகழியேவிலாவிகொடுமீள்வனுமமரில்விசையனே
விம்பரிற்புகலவிருதளத்தினுமெனக்குநேரொருவரில்லையென்
றும்பர்கற்பகமும்நாணும்வண்மையினுயர்ந்தவீரனிவையுரைசெய்தான். ()

* திசையனைத்தையும்வளைந்ததானவரையிரவிவந்தவொருதிசையின்வாய்
நிசியெனப்பொருதுவானவர்க்கரசளித்துவந்ததிறனீர்மையான்
விசயனுக்குநிகர்நீகொலோகடவுள்வெண்மதிக்குநிகர்வெள்ளியோ
வசைவில்விற்றொழிலும்வல்லையோவெனவொரசைவிலாதவனறைந்தனன். ()

* அவன்மொழிந்தமொழிதன்செவிப்படலுமருகிருந்தமுதருந்திநீ
யிவனுடன்சிலர்பகைக்கின்மற்றவர்தமிசையுமாண்மையுமியம்புவாய்
புவனமொன்றுபடவ்ரினுமென்றனொடுபொருவராகிலெதிர்பொரவிடாய்
சிவனுமென்கணையையஞ்சுமென்றுநனிசீறினனிரவிசிறுவனே. (உஎக)

* இரவிமைந்தனொடுகங்கைமைந்தனெதிர்வாய்மையொன்றையுமிசைத்திலன்
பொரவறிந்திடுநாளையென்றுமுனிபுங்கவற்றொழுதுபோயினு
னரவவெங்கொடியுயர்த்தகோவுமிகலரசருக்குவிடையருளினன்
விரவுபைந்துளபமாலையான்விதுரன்மனையிலுற்றுழிவிளம்புவாம். (உஎச)

வேறு.

நாரதனுதிஞானமுனிவரராங்குநண்ணிப்
பாரதநிகழ்விப்பானுக்கவைநிகழ்பரிசுங்கூறிப்
பேரறமாவான்சீற்றவியற்கையும்பேசிப்பின்னர்
நீரதநெறிகணீங்கித்தத்தமநிலையஞ்சேர்ந்தார். (உஎரு)

* பொருசிலைமுறித்துவந்தோன்கோயிலிற்புகுந்துநேமிக்
குரிசிலைவணங்கியாங்கனிருப்பவிக்குரிசினோக்கி
யிருசிலையுலவென்றிந்தவிருநிலத்தியம்புவில்லி
லொருசிலைதுணித்தசெற்றமென்கொலோவுரைசெயென்றான். (உஎசு)

ஆவதுகருதானாகிலமைச்சர்சொற்கேளானாகில்
வீவதுகுறியானாகில்வினைவதுமுணரானாகில்
காவதுகாவானாகிலவனுக்காநடந்துபோரிற்
சாவதுபழுதன்றன்றேசகத்துளோர்சாற்றுகின்றார். (உஎஎ)

* செல்வம்வந்துற்றகாலைத்தெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வனவறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால்வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவுமோரார்மண்ணின்மேல்வாழுமாந்தர். (உஎஅ)

* நினைக்கவுந்தொழவுமெட்டாநீயெழுந்தருளப்பெற்றுந்
தனக்கிதுதகுதியென்றுதமருடன்வாழவெண்ணான்
மனக்கடுங்கனலினான்றன்மதத்தினாலுரைத்தமாற்ற
மெனக்கிசையாமல்யானுமிருஞ்சிலையிறுத்ததென்றான். (உஎகூ)

* மாயனுமகிழ்ந்துநோக்கிமாசுணமுயர்த்தமன்னன்
போயிருஞ்சேனையோடும்போர்க்களங்குறுகும்போது
நீயவனருகுநில்லாதொழியிலுன்னேயமைந்தர்
தாயமுஞ்செல்வமுற்றுந்தரணியும்பெறுவரென்றான். (உஅ0)

* ஏற்றியநறுநெய்வீசியிந்தனமடுக்கினாலுங்
காற்றுவந்துற்றபோதுகடுங்கனல்கதுவவற்றோ
நீற்றணிநிமலனன்னநின்கையில்விற்றதாகிற்
சீற்றவேலரசர்சேனைதென்புலமடைதறிண்ணம். (உஅக)

* பன்னியவுரைபல்கேள்விப்பயனுகர்மனத்தினானை
மன்னவன்மொழிந்தவெல்லாம்பொறுத்தியென்றருளிமாயோ
னன்னகர்தன்னில்வண்மையருளழகாண்மைபேசுங்
கன்னனைப்பயந்தகொற்றக்கன்னிதன்கோவில்புக்கான். (உஅஉ)

* மண்டலமதியமன்னமாசறுமுகத்தினாளுந்
திண்டிறன்மருகன்றன்னைச்சென்றெதிர்கொண்டுகண்டு
வெண்டிரைமகரவேலைவிரிபுனன்முகந்துதோன்றுங்
கொண்டலைமகிழ்ந்துகாணுங்குளிர்பசுந்தோகைபோன்றாள். (உஅங)

* யானுரையில்லில்வந்ததென்னமாதவமென்றேத்திக்
கானுறைமைந்தர்தம்மைக்கண்டனள்போலவாகித்
தேனுறைதுளவினான்றன்செய்யதாமரைக்கணோக்கி
வானெடும்புரிசைமூதூர்வந்ததென்வழங்கவென்றாள். (உஅச)

காட்டினிற்கடவகாலங்கழித்தொருவருடமீள
நாட்டினிற்கரந்துநீக்கிநற்சுதர்தோற்றஞ்செய்நார்
தாட்டுணைதொழுதோமென்றுமினிச்சிலநாளிற்குறுமா
றீட்டுமுன்படர்வோமென்றும்புகன்றனரிசையான்மிக்கோர். (௨௮௫)

* நின்பெரும்புதல்வர்சொல்லநெடும்புனலுடுவேண்டி
வன்புடையரசர்கோமான்மனக்கருத்தறியவந்தேன்
தென்புலவேந்தன்வெஃகச்செறுத்தொழில்புரிகவென்று
னென்பலசொல்லிநாளையெதிரவேயிசைந்ததென்றான். (௨௮௬)

* தன்மைநானுரைப்பக்கேண்மின்றந்தைதன்மனைபுணியுங்
கன்னியாவிருந்துவாழுங்காலையோர்முனிவர்வந்து
சொன்னமந்திரமோரைந்திலொன்றில்வெஞ்சுடரோன்றன்னை
முன்னினையவனுமாங்குவந்துநின்முன்புநின்றான். (௨௮௭)

* கதிரவனருளினாலோர்கணத்திடைகாதல்கூர
மதலையங்கொருவன்றன்னைப்பெற்றபின்வடுவென்றஞ்சி
மிதவையம்பேழைதன்னிற்பொதிந்துநீவிடவப்போதங்
நதியுமம்மகவைக்கங்கைநதியிடையிட்டதன்றே. (௨௮௮)

* காதலம்புதல்வன்றன்னைக்கண்ணிலாவரசன்பொற்றேர்ச்
சூதன்வந்தெடுத்துக்கொண்டுசுதனெனவளர்த்தகாலை
யாதபன்வனையாருங்கன்னனென்றழைக்கவென்றான்
றாதையும்விசும்பிற்சொன்னநாமமேதக்கதென்றான். (௨௮௯)

பண்புடைக்குமரன்கற்றபடைத்தொழில்பலவுங்கண்டு
நண்புடையுரிமையெல்லாநல்கிமாமுடியுஞ்சூட்டி
வண்பணியுயர்த்தகோமான்வாழ்வவர்க்களித்தான்மற்றைத்
திண்பரித்தேர்வல்லோரிலவனையார்செயிக்கவல்லார். (௨௯௦)

அந்தநின்மைந்தன்றானேயருஞ்சிலைவிசயனோடும்
* அந்தநின்றுறவுமற்றறியமாட்டான்
வந்தெதிர்மலையநின்றுவுறவுமற்றறியமாட்டான்
சிந்தையிலையந்தீரவிதனைநீர்தெளியச்சொல்லிக்
கொந்தவிழ்தெரியலானைக்கூட்டுதிவிரைவினென்றான். (௨௯௧)

* தம்பியரைந்துபேருந்தனித்தனியேவல்செய்ய
வம்புவிழலங்கலோடுமாமணிமகுடஞ்சூட்டி
யம்புவிமுழுதுந்தானேயாளலாம்வருகவென்று
வும்பர்காவனையகையானுனதுரைமறுத்தானாகில். (௨௯௨)

* எரியமுதருந்தக்கானமெரித்தநாளகன்றுபோன
வரவினையங்கர்கோமானுசுகமாகக்கொண்டான்
வரிகழல்விசயன்றன்மேன்மறுகணைதொடாதவண்ண
மொருவரம்வேண்டுகென்றுனுற்றவர்க்குறுதிசூழ்வான். (௨௯௩)

* மன்றலந்தெரியல்வெய்யோன்மகளையென்மைந்தனென்ப
தன்றெனத்துறந்தாயாகிலவருடனனுகவொட்டேன்
சென்றமர்தொடுக்குமாறுசெருவினைவிளைத்துப்பின்னை
யின்றெனத்துறந்தாயையாவென்னினைந்தென்செய்தாயே. (உ௯௪)

* கான்பட்டகவசம்பாய்க்கணையினைவிலக்கவென்னில்
வான்பட்டபுரவித்தேரோன்மகன்படுமகவான்மைந்தன்
றான்பட்டுமுடியுஞ்சென்றுதடாதினியிருந்தேனாகில்
யான்பட்டகொடுமைநன்றென்றென்பட்டாளிரங்கிவீழ்ந்தாள். (உ௯௫)

* தேக்குந்தியகிலுஞ்சந்துஞ்சிந்துநீர்நதிசூழ்செல்வக்
கோக்குந்தியரசன்பாவைகுலைந்தழுங்கொடுமைகண்டு
மீக்குந்திபுரிகடோறும்வெண்ணையுந்தயிருமுண்ட
வாக்குந்திமலரோன்பின்னுமனத்தளர்வகற்றினானே. (உ௯௬)

* பைவருந்தலைகளைந்துபடைத்தபன்னகமேபோல
ஐவருமடிதனன்றோவங்கர்கோன்மடிதனன்றோ
வுய்வருமமரிலாவியொருவர்போயொருவருய்யார்
நைவருந்துயரமாறிடப்பதேநன்மையென்றான். (உ௯௭)

* காளமாமுகிலின்மேனிகரியநாயகனுந்தேற்றி
மீளமாதவத்தின்மிக்கவிதுரன்வாழ்மனையிலெய்த
வாளமால்வரையில்வெய்யோன்குறுகினன்வருணன்றிக்கி
னீளமாலியானைநெற்றிநிறந்தசெந்திலதம்போன்றே. (உ௯௮)

* நாற்றிசையுலகுதன்னினான்மறையுணர்ந்தோர்தாமும்
போற்றிசைமாலையென்னும்பொற்புடையணங்குவைக
மாற்றிசையிலாதசெம்பொன்மண்டபந்தன்னிலாதி
மேற்றிசைக்கடவுளிட்டவெயின்மணிப்பீடம்போன்றான். (உ௯௯)

* கொண்டமென்சிறைவண்டென்னுங்கொழுநருக்கிடங்கொடாமல்
முண்டகக்குலத்துமாதர்முகங்குவித்தூடிநிற்பக்
கண்டெதிர்நின்றகாதற்கயிரவக்கணிகைமாதர்
வண்டுறைநின்றுதங்கள்வாய்மலர்ந்தழைக்கலுற்றார். (௩௦௦)

* கானெலாமலர்ந்தமுல்லைக்ககனமீதெழுந்ததென்ன
வானெலாம்வயங்குதாரைநிரைநிரைமலர்ந்துதோன்ற
வேனிலான்விழவில்வைத்தவெள்ளிவெண்கும்பம்போலத்
தூனிலாமதியம்வந்துகுணதிசைத்தோன்றிற்றம்மா. (௩௦௧)

* தூவியநிலவுதோன்றத்துணைவரைப்பிரிந்தோர்கண்கள்
காவியுங்கமலமும்பைங்கருவிளமலரும்போன்ற
மேவியமகளிர்கண்கண்மீனெறிப்பரவையேழுந்
தாவியவுழையுங்காதற்சகோரமும்போன்றமாதோ. (௩௦௨)

* அரவியலல்குலாருமகிழ்நருமன்புகூர
விரவியவமளியெய்திவீதிமானகரியெய்கும்
பரவையினிமிர்ந்தவோதைதமலிந்தபின்பரிந்தோர்வேந்த
னிரவிடைச்சூழ்ந்தவண்ணமின்னதென்றெடுத்துரைப்பாம். (௯0௩)

* சந்தணிதம்பிமாருங்கன்னனுஞ்சகுனிதானுந்
சிந்தையிற்றெளிந்தகல்விச்செழுமதியமைச்சர்யாரு
முந்தரவுயர்த்தகோமானேவலான்முழுதுமெண்ணி
மந்திரமிருப்பான்வந்தோர்மண்டபங்குறுகினாரே. (௯0௪)

* தீதறுமதிவல்லோரைச்செழுமதிக்குடையானோக்கிப்
பாதகவனத்திற்போனபாண்டவர்தம்மைமீண்டு
மேதகவழைத்துநாடுவேண்டுமினென்றுமூட்டும்
யாதவன்றனித்துவந்தானென்செய்வதியம்புமென்றான். (௯0௫)

* பொரும்படைமுன்னோன்கூறவிளையவன்பொருந்தச்சொல்வா
னிரும்புலிவலையிற்பட்டால்விடுவரோவெயினருள்ளார்
வரம்பில்வெஞ்சேனையோடும்வளைந்தினிமாயன்றன்னைக்
கரும்பொழுதகலுமுன்னேகொல்வதேகருமமென்றான். (௯0௬)

* கண்ணிலான்மதலைமாற்றங்கேட்டுமுன்காவலோரில்
மண்ணிலாரிதற்குமுன்புதூதரைவளைந்துகொன்று
ரெண்ணிலாவிந்தவண்ணமெவ்வுழிக்கற்றதென்று
வெண்ணிலாமுறுவல்பூத்துவிகர்னனும்விளம்பலுற்றான். (௯0௭)

* மூத்தவரிளையோர்வேதமுனிவரர்பிணியின்மிக்கோர்
தோத்திரமொழிவோர்மாதர்தூதரென்றிவரைக்கொல்லிற்
பார்த்திவர்தமக்குவேறுபாவமற்றிதனினில்லைப்
பூத்தெரிதொடையாய்பின்னுநரகினும்புகுவரென்றான். (௯0௮)

* பழியுடைப்பகைஞரேனுந்தன்பெரும்பதியில்வந்தா
லழிவுறக்கோறல்பாவமாண்மையுமல்லவென்பார்
கழிகடற்சேனையோடுங்கங்குலில்வளைந்திட்டாலு
மெழிலுடைக்கொண்டல்வண்ணனகப்படானெவர்க்குமென்றான். (௯0௯)

* வெம்புயவலியான்மாதைவிரிதுகிலுரிந்தவீரன்
றம்பியைமுனிந்துசீறித்தமையனைநோக்கிச்சொன்னான்
வம்பவிழலங்கன்மார்பமந்தணமுரைக்கலுற்று
லிம்பர்மற்றியாதுசொல்லவிளைஞரையழைத்ததென்றான். (௯௧0)

* அதிரதர்முதலாவுள்ளவவனிபர்வளைந்துநிற்ப
வெதிர்முகிறவழுங்கோயிலெரியினையெங்குமூட்டி
விதுரனுமவனுஞ்சேரவெந்திடமலைவதல்லான்
மதியிறிதில்லையின்னேவல்விரைந்தெழுமினென்றான். (௯௧௧)

* செங்கதிரோபூந்தசிறிற்செறிபிருவிற்பதுவுடோ
விங்கிவனிருந்தவில்லிலெதிரிடவேவண்டுமோதான்
வெங்கணைபொன்றினாலேவிளிந்திடவென்றாரிவன்
கங்குலினைப்பூமினென்றுகன்னனுங்கனன்றுசொன்னான். (௩௧௨)

* பதிபெயர்ந்தேக்கிராதன்பாசகைவரைக்கூடுமாகில்
விதிப்பயனென்னநம்மைவெஞ்சமர்வெல்லவொட்டான்
மதிப்பரிதன்மேலுகள்ளமாயனைமனையிற்கோலிற்
சதிப்பதேகருமமென்றுசௌபலன்பின்னுஞ்சொல்வான். (௩௧௩)

* கொல்லுவதியற்கையன்றுகுழிபடுத்தரக்கரோடு
மல்லரையிருத்திமேலோராதனம்வகுத்துநாளை
யெல்லிடையழைத்துவீழ்வித்திகலுடன்விலங்குபூட்டித்
தொல்லருஞ்சிறையில்வைத்தறாகருக்குரிமையென்றான். (௩௧௪)

* மாதுலனுரைத்தமாற்றமருமகனிசைந்துகங்குற்
போதிடையனேகமல்லர்வருகெனப்புகன்றுதானு
நீதியிலிருந்துதாழநிலவறைசமைத்தபின்ன
ராதிநூறாயிரம்பேரரக்கரையதனுள்வைத்தான். (௩௧௫)

* மல்லர்பப்பரவர்தம்மைமற்றதிலிரட்டிவைத்தான்
வில்லுடைவீரர்தம்மைவேறதினிரட்டிவைத்தான்
பல்படைவல்லோர்தம்மைப்பதின்மடங்கதனில்வைத்தா
னல்லிலோர்கடிகைதன்னிலறிவனையழைக்கவென்றே. (௩௧௬)

பெரும்பிலவரையைவேயின்பிளப்பினுனிரைத்தமூடி
யரும்பெறன்மணிகளாலோராசனமதன்மேலாக்கிச்
சுரும்பிமிர்மாலைதூக்கித்தொழிலுடைவிதானமேற்றி
வரம்பிலாவென்றிவேலான்மாறிலாவண்ணஞ்செய்தான். (௩௧௭)

* அடியவர்மனத்திலுள்ளவாரிருட்கங்குறீர்க்கும்
நெடியவனிருக்கவென்றுநிலவறைறவிரகிற்செய்த
கடியவனியற்கையஞ்சிக்கங்குலுங்கடிதிற்போகப்
படியவர்துயிலும்போகப்பரிதியுமுதையஞ்செய்தான். (௩௧௮)

* சிரந்தருசுடிகைநாகத்திரண்மணிபலவுஞ்சிந்தி
நிரந்தரமருவிவீழுநிறந்திகழுதையக்குன்றைப்
பரந்தெழுமருக்கன்சூழ்ந்தபடரிருட்கங்குல்கண்டு
புரந்தரன்கோயிலிட்டபொங்கொளித்தீபம்போன்றான். (௩௧௯)

* தொடர்ந்தொளிருதையராகத்தோடுறநெருங்கிமேன்மே
லடர்ந்தரிபதுந்துகாமறுகமவேதம்பாடித்
த்டங்கயன்மலைந்துலாவுந்தாமரைமுகமுங்காதன்
மடந்தையர்முகமுஞ்சேரமணம்பெறமலர்ந்தமாதோ. (௩௨0)

இருந்துயிலுணர்ந்துவேந்தர்யாவரும்விரைந்துசுற்றும்
வருந்துயிலிலாதகண்ணன்வாழ்பெருங்கோயில்புக்கார்
பெருந்துயிலனந்தபோகப்பேரணைதுறந்தமாலு
மருந்துயிலுணர்ந்தகாலையருங்கடனடைவிற்செய்தான். (௩௨௧)

* மாதவனிருந்தகோயில்வந்தடிவணங்கிமன்னன்
றூதுவராழியங்கைத்தோன்றலேதுளபமாலே
யாதவகுலத்தோரேறேயெழுந்தருள்கென்றானின்றெம்
மேதகுமரசனென்றார்முகுந்தனும்விரைவிற்சென்றான். (௩௨௨)

கந்தடுகளிற்றுவேந்தன்கண்ணிலாவரசுங்கங்கை
மைந்தனுமுதலாவுள்ளமன்னருமதிவல்லோருந்
தந்திரவகையுமேனையிளைஞருந்தன்னைச்சூழ
விந்திரனியற்கையென்னச்சுயோதனனினிதிருந்தான். (௩௨௩)

* நாமவேலரசரோடுநால்வகைச்சேனையோடு
மாமுகில்வண்ணன்வந்தானென்றனர்வரவுகண்டோர்
வீமலர்த்தொடையலானும்வேத்திரத்தவரைநோக்கித்
தாமரைத்தடங்கண்மாயன்றன்னையேவிடுமினென்றான். (௩௨௪)

* தன்பெருந்தம்பியோடுதானையுநிறுத்திமாய
னின்புறநகைத்துவேந்தரிருந்தபேரவையினெய்த
மின்புணர்துவசநாகவிடநிகர்மனத்தினானு
மன்பொடுதிகிரியானையதனிடையிருக்கவென்றான். (௩௨௫)

வேறு.

* இறைவனெழிற்கதிர்மணிகளழுத்தியதவிசினிருத்தலுமே
நெறநெறெனக்கொடுநில்வறையிற்புகநெடியவனப்பொழுதே
மறலியெனத்தகுநிருபனியற்றியவிரகைமனத்துணரா
முறுகுசினத்துடனடிகள்பிலத்துறமுடிககனத்துறவே. (௩௨௬)

* அஞ்சினமஞ்சினமென்றுவிரைந்துயரண்டர்பணிந்திடவுந்
துஞ்சினமின்றெனவண்பணியின்கிளைதுன்பமுழந்திடவும்
வஞ்சமனங்கொடுவஞ்சகனின்றிடுவஞ்சனைநன்றிதெனு
நெஞ்சில்வெகுண்டுலகொன்றுபடும்படிநின்றுநிமிர்ந்தனனே. (௩௨௭)

* மல்லரரக்கர்குலத்தொடுபப்பரர்வாளினர்வேலினர்போர்
வில்லினரிப்படிதுய்த்தநிலத்துறைமேவியவீரரெலாந்
தொல்லையிடிக்கயர்வுற்றுயிரற்றுறுசுடிகையராவெனவே
கல்லெனவுட்கினர்தத்தமுடற்பலகால்கொடுதைத்திடவே. (௩௨௮)

* அற்புதபங்கயனற்பதமுந்தலினக்குழியின்புடையே
சற்பதலந்தொறுமற்றுவிழுந்தனதத்தநெடுந்தலைபோய்
முற்பவனன்பொராழ்க்குவடுந்துணிபட்டுமுடங்கியபொன்
வெற்பெனநின்றனர்வெற்றுடலங்கொடுவிற்படைகொண்டவரே. (௩௨௯)

* மேல்வெளிப்பெறதிர்விசும்பெழிற்கருமேகநிறத்திருமால்
கால்விரைவிரிப்படமோதகலிற்பொருகாமர்புயத்துணைபோய்
நீலநிறக்கவின்வாசவன்வச்சிரநீள்படையிற்சிறகிர்
மால்வரையொத்தனர்வாகைபெறக்கதிர்வாளமெடுத்தவரே. (௩௩௦)

* வெயில்விடுபைத்தலையமளிமிசைத்துயில்விடுதர்களுக்கரியோன்
பயிலவுணைத்தலைவர்களுரத்திடைபதமலர்பட்டுருவா
மயில்கடவிக்கடவுளர்பகையைக்கதிர்மகுடமுருக்கியவே
ளயில்கொடுகுத்தியநெடுவரையொத்தனரயில்களெடுத்தவரே. (௩௩௧)

* மின்சுழுகைப்புயகங்கள்வெருக்கொளும்வெங்கெருடக்கொடியோன்
வன்பதடப்பதகங்கொடெடுத்துயர்வன்ககனத்திடலான்
முன்புவனத்திடைவந்துகவிக்கிறைமொய்ம்புணரப்புகல்போ
தென்புமலைக்குறுபன்னையடுத்தனரெஞ்சியபப்பரரே. (௩௩௨)

* மைந்துபடைத்துயர்பஞ்சவர்சொற்படிவந்தமலர்க்கழலா
னுந்தவுதைத்துடலம்புதையப்பிலமொன்றியொளித்திடலா
லந்தணன்முற்பகல்வந்துபுடைத்திடவஞ்சிநிலத்திடைவீழ்
விந்தமொடொத்தனர்வன்குழியிற்றிகழ்வெங்கணரக்கருமே. (௩௩௩)

* அந்தவிடத்தெரியம்பரமொத்துடலஞ்சுழலச்சிறிதே
குந்தியுறித்தயிருண்டவர்பொற்கழல்கொண்டுசுழற்றுதலான்
முந்தமரர்க்கமுதந்தரமைக்கடன்முன்சுழலச்சுழலு
மந்தரமொத்தனர்குந்தமெடுத்தெதிர்வந்துமலைத்தவரே. (௩௩௪)

* முட்டியதொல்குருதிக்கடன்மல்கலின்முட்டிகொள்பல்விரலா
னெட்டுடலம்வகிர்பட்டதினுள்விழநித்தர்செய்கொல்வினையான்
மட்டறவல்விறலுற்றெதிர்செல்கவிமைக்கடலெல்லையிலே
யிட்டனகல்வரையொத்தனர்வெல்கழலெக்குலமல்லருமே. (௩௩௫)

எப்புவிநிற்பனவெக்கிரிநிற்பனவெக்கடனிற்பனவென்
றிப்புவனத்துயிர்முற்றுமயக்குறவுட்கினரெய்திமையோர்
மைப்புயலொத்தொளிர்பச்சைநிறத்தினன்வர்க்கமலர்க்கழலா
லொப்பறமட்குழியுற்றவரைப்படவொத்திமிதித்தலுமே. (௩௩௬)

* கொண்டன்முழக்கெனவம்புவியைக்கடல்கொண்டெழுதற்கெதிருஞ்
சண்டமுழக்கெனவன்பவனக்கிளைதந்தமுழக்கெனவே
வண்டினமொய்த்தெழுவண்டுளபத்தொடைவண்டுவரைத்திருமா
லண்டமுகட்டுறநின்றுசிரித்தனனங்கணெருப்பெழவே. (௩௩௭)

* ஒன்றுபடக்கடலம்புமுகப்பனவும்பர்குலத்தருவுஞ்
சென்றுமுறிப்பனவெண்டிசையிற்குலசிந்துரமெற்றுவவெண்
குன்றுமுறிப்பனபைம்பொனிறக்கிரிகொண்டுதிரிப்பனவா
லன்றுதனித்தனிநின்றுமலைத்தருளங்கையெனப்பலவே. (௩௩௮)

* துகிரிதழ்வைத்துநல்வளைகண்முழக்கினதொடர்சிலகைத்தலமே
யகிலம்வெருக்கொளவரிமழுவெற்றினவவைசிலகைத்தலமே
புகலும்வடிக்கணையுவணமெடுத்தனபொருசிலகைத்தலமே
திகழ்விசயத்தொடுசிலைகள்குனிப்பனசிலசிலகைத்தலமே. (௩௩௯)

* வெங்கணையத்திரள்குந்தநிரைப்படைவெம்புழலக்கைகள்போர்
பொங்கியவச்சிரமுந்துகலப்பைகள்புன்கொழுவர்க்கமயி
லெங்குமலைத்தெழுசெஞ்சுரிகைத்திரடண்டமிவற்றினொடுந்
தங்கியசக்கரபந்திதரித்தனதண்பலகைத்தலமே. (௩௪௦)

* மேலெழுபூங்கதிர்வாளுறைபோம்படிவீசினவான்புடையே
தோமினமேந்தினநீள்கவணேந்தினசோரிகள்சோர்ந்திடவே
ஞாலமெலாம்பொருதோமரம்வாங்கினநாவொருமூன்றெனவாஞ்
சூலமொடோங்கினபாசமொடோங்கினசூழ்சிலபூங்கரமே. (௩௪௧)

* சிலசிலகைத்தலமடுகழலிற்பலசெறிகழல்கட்டினவே
சிலசிலகைத்தலமிறுகுபுயத்திடைசெறிதொடையிட்டனவே
சிலசிலகைத்தலமணிகொளுரத்திடைபணிகடிருத்தினவே
சிலசிலகைத்தலம்விரல்கொடுசுட்டினசெறுனர்திகைத்திடவே. (௩௪௨)

* மாயிருஞாலமெலாமுயிர்போயுகமாகதர்சோலையுறப்
போயிருபாலும்வளைந்துவளைந்தெதிர்பொருமுனைவெம்படையோ
டாயிரமாயிரமங்கைபுறப்படவண்டருமாதவரும்
பாயிரநான்மறைபாடிவியந்துபணிந்துபுகழ்ந்தனரே. (௩௪௩)

* ஆரணனேயரனேபுவனங்களனைத்தையுமன்றுதருங்
காரணனேகருணாகரனேகமலாசனிகாதலனே
வாரணமேபொதுவேயொருபேரிடவந்துதவும்புயலே
நாரணனேமுனியேன்முனியேலெனநாகர்பணிந்தனரே. (௩௪௪)

* மாதவனேமுனியேலெமையாளுடைவானவனேமுனியேல்
யாதவனேமுனியேலிதயத்திலிருப்பவனேமுனியே
லாதவனேமுனியேன்மதிவெங்கனலானவனேமுனியே
னீதவனேமுனியேன்முனியேலெனநின்றுபணிந்தனரே. (௩௪௫)

* கங்கைமகன்கதிரோன்மகனம்பிகைகாதன்மகன்றனைய
ரங்கவையின்கணிருந்தநராதிபரடையவெழுந்தடைவே
செங்கைகுவித்தசிரத்தினராயினரொன்றியசிந்தையரா
யெங்கள்பிழைப்பினையின்றுபொறுத்தருளென்றுபணிந்தனரே. (௩௪௬)

* கண்ணபொறுத்தருள்வெண்ணெயருந்தியகள்வபொறுத்தருள்கார்
வண்ணபொறுத்தருள்பரமபொறுத்தருள்வரதபொறுத்தருணீ
திண்ணமனத்துணர்வொன்றுமிலாதவர்செய்தபெரும்பிழையென்
றண்ணன்மலர்க்கழல்சென்னியில்வைத்தெதிரன்றுதுதித்தனரே. (௩௪௭)

* தேவரும்வாசவனுங்கவருந்திசைமுகனுநராதிபரும்
யாவருமன்றியொருடாயிரநாமமுமெண்ணியிறைஞ்சுதலான்
மூவருமொன்றெனநின்றருணூதனுமுனிவுதவிர்ந்தருளா
மீவருமண்டமுழுந்திருமேனியடங்கினன்மீளவுமே. (௱௪௮)

* தன்னிலுயர்ந்தவராருமிலாமுகில்சதுர்மறையின்படியே
யென்னிலமுந்திருவடியின்மறைந்திடவிப்படிநின்றிடவும்
பின்னையுமஞ்சியயர்ந்திலனெஞ்சுபெயர்ந்திலனாசனமுஞ்
சென்னியிலுங்கரம்வைத்திலன்வண்புகழ்சிறிதுமொழிந்திலனே. (௱௪௯)

* தொல்லவையின்கணிருந்தநராதிபதன்மதியாலெனைநீ
கொல்லநினைந்ததுநன்றெனவன்றிறல்கூறினனெம்பெருமா
னொல்லையினுன்குலமுற்றுமடிந்திடவுற்றுமலைந்தொர்கணத்
தெல்லையின்வெஞ்சமர்நூறுவன்யாவருமீதுலகேறுவரே. (௱௫௦)

* அஞ்சினநின்னையழித்திடநின்னுடனன்றுபெருஞ்சமர்வாய்
வெஞ்சுடராயுதமொன்றுமெடுக்கிலமென்றுவிளம்பியது
மெஞ்சமலைந்தெதிர்வந்துயிர்கொள்ளுதுமென்றுதனித்தனியே
பஞ்சவர்கூறியவஞ்சினவாசகமும்பழுதாமெனவே. (௱௫௧)

* என்றுரையாடிநெடுங்கடல்வண்ணனெழுந்தருளப்பிறகே
சென்றனரெம்முடிமன்னவரும்பணிசேர்கொடியோனையலார்
நின்றுபசாரமுரைத்தவர்தம்மைநிறுத்தியநந்தரமே
வன்றிறலங்கர்பிரானொடுகூறினன்மற்றொருவாசகமே. (௱௫௨)

வண்மையினாலுயரங்கர்குலாதிபமதிகுலம்வாழ்வுறவந்
துண்மையினாலுயர்மன்னவரைவருமுன்னினுனக்கிளையோர்
பெண்மையினாலுயர்குந்திவயிற்றிடைபெருமையினாலிதயத்
திண்மையினாலுயருன்னையுமன்பொடுதினகரனல்கினனே. (௱௫௩)

* ஏயுநெடுங்கொடிமுரசுடையோனையெழிற்றருமன்றரவே
வாயுவழங்கினன்வீமனைநல்கினன்விசயனைவாசவனு
மாயுநிகழ்ந்திடுவேதமருத்துவரன்பொடளித்தனர்செந்
தேயுவெனுந்திறனகுலனையுஞ்சகதேவனையும்பெரிதே. (௱௫௪)

* அந்தணன்முன்றருமந்திரமைந்தினிலறுவரையுங்கடவுட்
குந்திபயந்தனள்யானினியென்பலகூறுவதுங்களினீ
ரிந்தநிலம்பெறுவீர்தவிர்கிற்பெறயாரினிவேற்றியார்
வந்தினிநும்பியர்தம்மொடுசேர்கெனமாயனுரைத்தனனே. (௱௫௫)

வேறு.

* கன்றால்விளவின்கனியுகுத்துங்கழையானிரையின்கணமழைத்துங்
குன்றான்மழையின்குலந்தடுத்துங்குலவுஞ்செல்வக்கோபாலா
வின்றாலெனதுபிறப்புணர்ந்தேனென்றன்புருகியெம்பியர்பாற்
சென்றாலென்னைநீயறியச்செகத்தோர்யாருஞ்சிரியாரோ. (௱௫௬)

* ஆரென்றறியத்தகாதவனையரசுமாக்கிமுடிசூட்டிச்
சீருந்திறமுந்தனதுபெருந்திருவுமெனக்கேதெரிந்தளித்தான்
பாரின்றறியநூற்றுவர்க்கும்பழிதீர்வென்றிப்பாண்டவர்க்கும்
போரென்றறிந்துஞ்செய்ந்நன்றிபோற்றாதவரிற்போவேனோ. (௩௫௭)

* இரவிக்குரியதிருமதலையிவ்வாறுரைக்கவரிவண்டு
விரவிப்பயிலுந்துழாய்முடியோன்வேறோர்மொழியும்விளம்பாம
லுரவிற்றடந்தோளுரவோனையேகென்றகற்றியொருசார்வெம்
புரவித்தாமாநின்றானைவருகென்றழைத்துப்புகல்கின்றான். (௩௫௮)

* போயேகானம்பலதிரிந்துபுகன்றவிரதம்பொய்யாதோ
ராயேவந்தபாண்டவர்களைந்தூர்வேண்டமறுத்ததற்குச்
சேயேயனையசிலைமுனிவன்சேயேநாளைச்செருக்களத்தி
னீயேகரியென்றெடுத்துரைத்தானெடியோன்றுளபமுடியோனே. (௩௫௯)

* ஆனாவுனதாண்மைக்குநிகரவனிதலத்திற்பிறிதுண்டோ
ஞானாதிபனேபோர்க்களத்திலுக்கொடியோன்பணிந்துன்னைச்
சேனாபதியாகென்றாலுஞ்செலுத்தேனென்றுநீமறுத்தி
யானாலுய்வரைவருமற்றவர்பாலுனக்குமன்புண்டே. (௩௬௦)

* ஆயோதனத்திலடலரியேறனையான்றனக்கிங்கிவ்வாறு
மாயோனுரைத்துத்தன்விரலின்மணியாழியைமண்ணிடைவீழ்த்தான்
சேயோனதனைத்தானெடுத்துச்செங்கைகொடுப்பவாங்காமற்
றாயோயூர்கோள்பருதிதனைச்சூழ்ந்ததகல்வான்மீதென்றான். (௩௬௧)

* வரித்தாமரைக்கட்டிருநெடுமால்வான்வாய்நோக்கவரிவிற்கைப்
பரித்தாமாவுமாழியுடன்பரிதிவடிவந்தனைப்பார்த்தான்
கிரித்தாழ்கவிகைக்கருங்கள்வன்கிளர்றான்முனிவன்புதல்வனையும்
பிரித்தானவனுஞ்சூளுற்றானென்றாரிருந்தபேரவையோர். (௩௬௨)

* தனிவந்தகலுந்தூதனைப்போய்த்தானேயணுகித்தடஞ்சாப
முனிவன்புதல்வன்மோதிரந்தொட்டருஞ்சூண்முன்னர்மொழிகின்றா
னினிவந்துறவாய்நின்றாலுமெங்ஙன்றெளிவதிவனையெனத்
துனிவந்தரசர்முகநோக்கிச்சொன்னானரியேறன்னானே. (௩௬௩)

* துளியார்மதுவின்வலம்புரித்தார்த்துரியோதனன்முன்சொல்லியது
மொளியாரவையில்வாள்வேந்தரொருவர்க்கொருவருரைத்தனவுங்
களியானையினான்செவிப்படலுங்கலங்கிச்சித்தமிவரென்னைத்
தெளியாவண்ணம்பேதித்தான்றிருமாலென்றேசிந்தித்தான். (௩௬௪)

* தண்ணந்துளபமுடியோனுந்தனித்தங்கிருந்துதன்மனத்தி
லெண்ணம்பலித்ததெனவெண்ணியிளையோன்றனக்குவிடைநல்கி
விண்ணின்றமரர்மிகத்துதிக்கவிதுரன்மனையின்மேவியபின்
கண்ணனமுதுண்டினிதமர்ந்துகவுந்திமனைபோய்க்கலந்தானே. (௩௬௫)

வேறு.

* வாசவன்றனக்குநான்முகத்தவற்கும்வணங்கவும்வாழ்த்தவுமெட்டாக்
கேசவன்றனதுதந்தையோடுதித்தகேண்மைகூர்தெரிவையைக்கிட்டித்
தேசவன்றந்தகுரிசில்பால்விரைவிற்செல்கெனப்பயந்தசேயிழையும்
பாசமுன்னுறமாலேவலாற்றனதுபாதபங்கயஞ்சிவப்பித்தாள். (௩௬௬)

* வந்துகுந்திநின்கோயிலெய்தினளெனவாயிலோருரைத்திடமைந்தன்
முந்துமன்புடனெழுந்தெதிர்கொண்டுமுறைமையாலாசனத்திருத்தி
பிந்துவின்கதிர்கண்டுமேன்மேலுற்றிரங்கிவான்கரைகடந்தேறுஞ்
சிந்துவெண்டிரைச்சிந்துவொத்துருகுந்தெரிவையோடுரைபலசெப்பும். (௩௬௭)

* அன்னைநந்தைதன்னருந்தவப்பயனென்றன்பினாலின்புறவணங்கி
யென்னைவந்தவாறென்னமற்றவனுமீன்றதாயானுனக்கென்ன
முன்னைவந்தொருமந்திரந்தவமுனிமொழிந்ததுங்கதிரவனருளாற்
பின்னைவந்ததும்பேழையில்விடுத்ததும்பெற்றவண்மனங்கொளப்பணித்தாள்.

* மாயனார்விரகிதுவெனமனத்தினின்மதித்துமத்தகைவள்ள
லீயனாளெனைப்பயந்தவளென்னினுநின்மொழிநெஞ்சுறத்தேறேன்
பேயனார்சிலர்பேரறிவின்மையிற்பெற்றதாயெனக்கெனவந்து
தூயநாகரினமைத்ததோர்துகிலாற்றுன்பமுற்றென்புருவானார். (௩௬௯)

* அடாதுசெய்தவர்படாதுபட்டனரெனுமங்கர்கோனருண்மொழிகேட்டுத்
தடாதவன்புடைக்கெடாததூமொழிப்பெருந்தையலுமையலிற்றவிர்ந்து
படாமதென்கையிற்றருகெனவருகலும்பயந்திலேனெனிலெனைமுனியென்
றடாவிரித்தலைத்துடற்படப்போர்த்தெதிரீன்றதாயகியேயிருந்தாள். (௩௭௦)

* இருந்ததாயின்றவன்றுபோலுருகியிருதடங்கொங்கைபால்சொரிந்தா
ளருந்துவான்போலவிரவிசேய்விரும்பியாதரத்துடன்புளகானான்
புரிந்ததாயன்போடிறுகுறத்தழுவிப்பொன்முடிமோயினளுயிராப்
பரிந்துநானன்றேயுனைவளர்த்தெடுக்கப்பாக்கியஞ்செய்திலேனென்றாள். ()

* வருகவென்மதலாயினைஞரைவருநின்மலரடிமரபினால்வணங்கி
யுரிமையான்மனமொத்தேவலேபுரியவொருதனிச்செய்யகோலோச்சி
யரசெலாம்வந்துனடியிணைவணங்கவாண்மையுஞ்செல்வமும்விளக்கிக்
குருகுலாதிபர்க்குக்குரிசிலாய்வாழ்வுகூர்வதேகடனெனக்குறித்தாள். (௩௭௨)

* பெற்றநீர்மகவன்பிலாமையோவன்றிப்பெரும்பழிநாணியோவிடுத்தீ
ரற்றைநாட்டொடங்கியென்னையின்றளவுமாருயிர்த்துணையெனக்கருதி
கொற்றமாமகுடம்புனைந்தரசளித்துக்கூடவுண்டுரியதம்பியருஞ்
சுற்றமானவருமென்னடிவணங்கத்தோற்றமுமேற்றமுமளித்தான். (௩௭௩)

* மடந்தைபொற்றிருமேகலைமணியுகவேமாசறத்திகழுமேகாந்த
விடந்தனிற்புரிந்தேநானயர்ந்திருப்பவெடுக்கவோகோக்கவோவென்றான்
றிடம்படுத்திடவேவிராசராசனுக்குச்செருமுனைச்சென்றுசெஞ்சோற்றுக்
கடன்கழிப்பதுவேயெனக்கினிப்புகழுங்கருமமுந்தருமமுமென்றான். (௩௭௪)

* மின்னையும்பறன்மொழிந்தபின்பலவும்பேசியென் பூசலோவிலொந்த
துன்னிரீங்குவந்ததென்கரவா துண்மையா லுள்ளவா றுரைபி
னென்னமைந்தனுமிப்பரிசினு லுரைப்பயீன் றறந்துறந்தவன்னை றாயினு
மன்னைநெஞ்சழிந்தேயிருகணீர்சொரியவலறிவாய்குழறிநொந்தழுதாள். ()

* ஆண்டுமாமகனுமிருகணீ துடைத்தவ்வன்னையைப்பன்முறைறதேற்றி
மூண்டவல்வினையின்பயனலாதியார்க்கு முயற்சியால்வருவதொன்றுண்டோ
வேண்டும்யாவையுமேதருகுவேனீரும்வேண்டுவவேண்டுமினென்றுன்
பாண்டுவின்றிருமாமனைவியுமதற்குப்பண்பினுலின்னனபகர்வாள். (௩-எ௬)

* பார்த்தன்வெஞ்சமரிலுன்னுடன்மலைந்தாற்பகைப்பெரும்பாந்தளம்பகழி [ள்
கோத்தலும்பிழைத்தான்மறுத்துநீவிடுத்துக் கோறலென்றொருவரங்குறித்தா
வாய்த்தநின்னிளைஞர்நால்வரைமுனிவான்மலையலென்றொருவரங்குறித்தாண்
மூத்தவன்காதலிளைஞர்தம்பொருட்டான்மொழிந்தமைகேட்டிமைமொழிவான்

* தெறுகணையொன்றுதொடுக்கவுமனைந்துசெருச்செய்தோன்சென்னியோ
டிருந்தான், மறுகணைதொடுப்பதாண்மையோவலியோமானமோமன்னவர்க்க
மோ, வுறுகணையொன்றேபார்த்தன்மேற்றொடுப்பனெழிந்துளோருய்வரென்
றுரைத்தான், றறுகணர்தமக்குந்தறுகணானவர்க்குந்தண்ணளிநிறைந்தசெங் (௩-எஅ)
கண்ணன்.

* பெருவரமிரண்டும்பெற்றபின்றன்னைப்பெற்றபாவையைக்கரங்குவித்துத்
தருவரமெனக்குமிரண்டுளவுலகிற்சராசரங்களுக்கெலாந்தாயீர்
வெருவருமமரிற்பார்த்தனுலடியேன்வீழ்ந்தபோதவனிபரறிய
மருவருமுலைப்பாலெனக்களித்துந்தமகனெனும்வாய்மையுமுரைப்பீர். (௩-எ௯)

* உய்வருந்திறல்வெம்போர்முடிப்பளவுமுனக்குநான்மகனெனும்வாய்மை
யைவருமறியாவண்ணநீர்காப்பீரல்லதங்கவர்சிறிதறிந்தால்
மைவருங்கடற்பாரனைத்தையுமெனக்கேவழங்குவர்வழங்கினுல்யானென்
கைவருந்துணைவன்றனக்கலால்வழங்கேன்கடைப்பிடிகருமமீதென்றுன். ()

* என்றலுமதுகேட்டவன்றதாயொக்குமென்றுகொண்டவ்வரநேர்ந்து
வன்றுயர்மேன்மேல்வளரயான்றளராவகையுயிருனக்குமுற்பெயர்வ
தென்றினியெனத்தன்கண்கணீர்சொரியவிளைந்துநைந்தழுதழுதேங்கி
யென்றருண்மகனைத்தனித்தழீஇநிறுத்தியாதவனிருந்துழிச்சென்றுள். ()

* கண்ணனுங்குந்திகன்னனேடுரைத்தகருத்தெலாந்திருத்தமாக்கேட்டே
யெண்ணமுமுடிந்ததெனமகிழ்ந்தந்தவணங்கினுக்கிருகரங்குவித்துத்
தண்ணளியுறுநின்மக்கள்பாற்புகுவான்றருதிநீவிடையெனச்சமர்வா
யண்ணனீகாத்தியைவருநின்பாலடைக்கலமளித்தனனென்றுள். (௩-அஉ)

மைந்தருக்கிதனைப்புகறிநீமேகவண்ணமேவலர்புகழ்மருவ
வுந்துறுவஞ்சயாலுயிரையோம்புதலிவ்வுலகுகாப்பவர்நெறியன்றூற்
றந்தவர்தமரேயென்னினுந்திணிதோள்வலியினைப்பிழைசெய்வோர்தமக்கு
ஞ்சதரவீரங்காட்டுதல்கடனுந்தோற்றமுமேற்றமுமதுவே. (௩-அ௩)

என்றுபற்பலசொற்கூறியதுளங்கொண்டில்லிடைநில்லெனவிருத்தித், துன்றுசல்விதுரன்வாழ்மனைபுகுந்துதோன்றனிவிடைதருகெனலும், குன்றுறழ்புயந்தோனிருபதந்தாழ்ந்துகுவித்திருகரமுமொன்றுரைத்தான், சென்றுநீபுதல்வர்க்குரைத்தியித்தியோன்செருக்கடைந்துரைத்தவிச்செயல்கள். (௩௮௪)

கானகமெய்தக்குறித்தபாதகரைக்கைக்கொளும்படைகளாற்றுணித்து
வானகம்புரப்பவிடுவதேதகுமமன்னருக்கென்பதுகொண்டு
தேனகுபசுந்தாருதிட்டிரன்மனதுதெளிவுறப்புகலவென்றுரைத்தான்
மீனருகடலினிறத்தவனெழுந்தான்விளங்குசாத்தகியொடும்விரைந்தே. ()

கெழுதகுதேர்மேற்கேசவன்மீண்டுகேண்மையிற்சேறல்கண்டேசின்
முழுமதித்துரோணன்விடுமன்கிருபன்முதலியகுரவரும்புலனில்
விழியிலான்குமரர்பலருமொய்ம்புறுதோள்விபாகரன்மதலையுமேவிப்
பழுதிலானுடனவ்வூர்செலுமளவும்பரிவினோடெய்தினர்பண்பால். (௩௮௬)

அண்ணலுமவர்பாற்சிலமொழிமுகமனறைந்தவர்தமையெலாநிறுவித்
தண்ணளியுடன்றன்பின்வருபல்லோர்தம்மையுமுறைமுறைநிறுத்தி
நண்ணுதன்சேனைப்பெருங்கடல்சூழநாற்றிசைமுரசொலியதிரப்
பண்ணமர்தடந்தேர்மீதுகொண்டன்றேபாண்டவருறைநகரடைந்தான். ()

யாதவர்திலகனணுகினனெனலுமிருந்தவப்பாண்டுவின்குமரர்
காதலோடெதிர்கொண்டணிநகர்புகுந்துகதிர்மணித்தேரினின்றிழிந்து
தீதறமணியாதனமிசையாருஞ்சிறப்புடனிருந்தபின்றிருமான்
மேதகுமலர்வாய்திறந்துபோய்மீண்டசெயலெலாம்விரித்தெடுத்துரைப்பான்.

தூதுபோயுரகதுவசனோடுறுதிசொன்னதுமறுத்தவன்சொல்லி
மோதுபோர்புரியத்துணிந்ததும்விதுரன்முரிவில்லிறுத்ததுங்கங்குற்
போதுபோய்வஞ்சம்விளைத்ததுங்கதிரோன்புதல்வனையடைந்துநன்னெறிசேர்
மாதுபோய்வரங்கள்பெற்றதையொழியமற்றெலாமைத்துனர்க்குரைத்தான்.

கிருட்டிணன்றூதுசருக்கமுற்றிற்று.

ஆக செய்யுள் - ௭௦௮௮.

---

## படையெழுச்சிச்சருக்கம்

---

* படர்ந்தகானகந்திரிந்துமீண்டன்புடன்பணிந்தபஞ்சவர்க்காகக்
கடந்தஞானியர்கடவுளர்காண்கலாக்கழலிணைசிவப்பேறத்
தொடர்ந்துநான்மறைபின்செலப்பன்னகதுவசன்மாநகர்தூது
நடந்தநாயகன்கருமுகில்வண்ணமென்னயனம்விட்டகலாதே. (௧)

பைந்துழாயவன்மீளவும்புகலுவான்பயனறிகுரவோருந்
தந்தையேமுதலுள்ளவர்யாவருந்தருதிநாடவர்க்கென்று
முந்துநன்னெறிமுறைப்படிகூறவுமுனிவர்மூவரும்வேதந்
தந்தபுரான்மைகள்சாற்றவுமெட்டுணைதரித்திலன்கொடும்பாவி. (௨)

நகரமைந்திணையுதவெனவிரந்துநானன்மொழிபலசொற்றேன்
புகலவேண்டியகருமமுங்காட்டினேன்புயவலிதெரிப்பித்தேன்
சிகரமானகர்புரப்பவன்போரலாற்செலுத்தல்வேறிலையென்றான்
பகர்வதென்னைநற்குருநிலத்தவருடைப்பதாகினிபடிந்தன்றே. (௩)

விதுரனோதினனவன்செருமுனையிடைவீந்தனனெனிலன்றிச்
சதுரர்மாநிலம்பெறுகிலர்மன்னவர்தருமமுமீதாமாற்
கதுவுபல்லுயிரிறுமெனக்கரைந்திடிற்காவலர்செங்கோன்மை
முதுநெறிப்பெருந்தகையருநகைப்பர்நாடுற்றனரிவரென்றே. (௪)

அரசர்நீதியிற்பிழைப்பறவாரமரடர்ப்பதுதிறலென்றே
புரைசெயானையான்கூறினனீன்றவள்புகழ்கெடவுலகேழ்மே
லுரைசெயும்பதமெய்திலும்வேண்டலருரனுடையறிவுள்ளோர்
விரைசெய்தாரினோய்விளம்புதியென்றனளவ்வுரைவிரித்தேனால். (௫)

நாடுவேண்டினுநானிலத்தரசர்முன்னகுமொழிதனைப்போக்கும்
பீடுவேண்டினும்பெருஞ்சமர்மலைவதேபெற்றியங்கதற்கஞ்சி
வீடுவேண்டினுந்துறவினையருந்தவநிழைவுவேண்டினுநீண்முட்
காடுவெண்டுவதுறுதிமற்றுமுளங்கழறுமின்கடிதென்றான். (௬)

* முகுந்தன்வாசகங்கேட்பதன்முன்னமேமுரசுயர்த்தவன்முன்னி
மிகுந்தகோபமோடிக்கணமுடிப்பன்யான்வெம்பகையினிதென்னத்
தகுந்தராதிபர்தன்னுடனியைந்தவர்தமக்குவெஞ்சமர்மூளப்
புகுந்தவாறெலாந்துதரிற்போக்கினேனோலையின்புறத்தம்மா. (௭)

* எட்டுத்திக்கினுமுள்ளமன்னவருடன்யாகசேனனும்வந்தான்
றிட்டத்துய்மனுந்திட்டகேதுவும்விறற்சிகண்டியுமுறைவந்தா
ரொட்டிப்போர்பொருமுத்தமோசாவும்வேலுதாமனுமுடன்வந்தார்
பட்டப்போதகந்தேர்பரியாளனும்படையுடைப்பாஞ்சாலர். (அ)

* விராடபூபனுஞ்சதானிகநிருபனும்விறற்சிவேதனுமாதி
வராகசேதுவுமுத்தரகுமாரனுமச்சநாட்டவர்வந்தார்
பராவுபேருடைச்சேரசெம்பியருடன்பாண்டியன்முதலோருங்
குராநறும்பொழிற்கேகயத்தலைவருங்குந்திபோசரும்வந்தார். (௯)

* அரக்கிதந்தருள்கடோற்கசக்காளையுமபிமனோடரவானும்
விரிக்கும்வெண்குடைவிந்தனுஞ்சோமனும்வீரகீர்த்தியும்போரிற்
செருக்குநெஞ்சுடைப்புண்டலன்செபசனன்செருவிடைத்தெவ்வோடத்
துரக்கும்வெம்பரித்திரௌபதரைவருஞ்சூழ்படையுடன்வந்தார். (க௦)

* பினர்சாவகர்மத்திரர்மாளவர்தெலுங்கர்வெங்கலிங்கேசர்
சோனகாதிபர்கன்னடர்மாகதர்துலுக்கர்குச்சரரொட்ட
ரானவெம்படையாதியாய்நடப்பனவையிரண்டெண்பூமித்
தானைமன்னரும்வந்தனரிந்தமண்டலத்திலார்வாராதார். (௧௧)

* பாங்கினால்வருமகுடவர்த்தனருடன்பட்டவர்த்தனருள்ளார்
வாங்குர்வெஞ்சிலைமன்னவர்குமரரின்மண்டலீகரினுள்ளார்
தாங்குமாமொழிமந்திரிமார்களிற்றந்திரிகளினுள்ளா
ரோங்குசேல்கொடிப்பதாகினிதிரண்டவாறுன்னியாருரைக்கிற்பார். (௧௨)

* ஆனைதேர்பரியாளெனுந்திறத்தினாலிலக்கணத்தெண்பட்ட
சேனையேழமக்குரோணிகடிரண்டனதிரைக்கடலேழென்னச்
சோனைமாமுகிலேழுமொத்ததிர்ந்தனதுந்துபிகலந்தார்ப்பத்
தானைமன்னரைத்தனித்தனிமுறைமையாற்றருமனுமெதிர்கொண்டான். (௧௩)

* தான்வணங்குநர்தன்கழல்வணங்குநர்தங்களைத்தழீஇக்கொண்டு
தேன்வணங்குதார்மன்னவரிருந்தபின்சென்றவர்முகநோக்கி
யான்வணங்கிமாமாயனைத்தூதுவிட்டெனதுபாரெனக்கென்ன
வான்வணங்கினும்வணங்கலாமுடியினான்மறுத்தமர்புரிகென்றான். (௧௪)

* கேண்மையாலெனதரசுநீதருகெனக்கேட்கவுமதியாம
லாண்மையாலவன்மறுத்தமையெனக்குயிரனையநீரறிமின்கள்
வாண்மையால்வரிவின்மையாலெமக்குளவலியுரைக்கிலனுங்க
டோண்மையாலமர்தொலைத்தடல்வாகையுஞ்சூடுவனினியென்றான். (௧௫)

* வெங்கண்மாமுரசுயர்த்தவனிம்மொழிவிளம்பலும்விளக்கஞ்செய்
திங்கள்சூழ்தருதாரையின்கணமெனச்சேர்ந்தமன்னவரெல்லா
மெங்களாவியுமெம்பெருஞ்சேனையும்யாவையுநினதென்றார் (௧௬)
தங்கள்வீரமுமானமுமரபுநல்வாய்மையுந்தவறில்லார்.

* சுற்றுமன்னவர்சொற்றசொற்களிற்பகைதொலைத்தனன்போலாகிச்
செற்றுவார்கழற்சிவேதனைத்தன்பெருஞ்சேனையின்பதியாக்கி
யற்றைநாண்முரசறைந்தமர்குறித்தலுமாங்கமரராவானுங்
கொற்றவெம்படையனைத்துமோரம்பினாற்கொல்வனோர்தினத்தென்றான். ()

* பாண்டுவின்றிருமைந்தர்களைவரும்பார்த்திவருடன்கூடி
யீண்டிருந்தனரிவ்வுழிச்செருக்குறித்தெழிலிமேனியனோடுந்
தூண்டுவெம்பரிச்சுயோதனன்றன்னுழித்தூதுபோய்ப்பரந்தாமன் (௧௮)
மீண்டுவந்தபினவ்வுழிப்புரிந்தனவிளம்புகின்றனமன்னோ.

வேறு.

* முந்தரவுயர்த்தோனோலமுரணுடையரசர்காண்க
வெந்திறலவரோடும்வெஞ்சமர்விளைந்ததாலே
தந்தமர்கிளைஞரோடுஞ்சாதுரங்கத்தினோடும் (௧௯)
வந்தவர்தமக்கேவாழ்வுமுழுதுமென்றுணர்த்திவிட்டான்.

* மித்திரரானமன்னர்விறலுடைத்துணைவரோடும்
புத்திரரோடுந்தத்தம்போர்புரிசேனையோடுஞ்
சத்திரநிழல்விடாததன்மையராகிச்சூழ
மத்திரதேயவேந்தன்வந்திவர்மருங்கினின்றான். (உ௦)

* சல்லியனடைந்ததன்றிச்சகுனியுந்தறுகண்வெம்போர்
வல்லியமனையவென்றிமாகதபதியுங்கொற்ற
வில்லியற்கடகத்திண்டோள்விந்தரன்விந்தனென்னுஞ்
சொல்லியநிருபர்தானையாறுடுங்கடலிற்சூழ்ந்தார். (உக)

திறலலம்புதனுந்தம்பிசிகிமதிசூதன்முன்னும்
விறலுடையரக்கர்பல்லாயிரவர்வேண்டுதலின்வந்தா
ரறைமொழிவருணன்மைந்தன்வந்தனனனீகத்தோடு
மறமுறப்பலரும்வந்தார்பகதத்தமன்னன்வந்தான். (உஉ)

* கலிங்கர்கோன்சோமதத்தன்கௌசிகன்காம்பிலீசன்
றெலுங்கர்கோன்போசராசன்கேகயன்றிகத்தபூபன்
வலங்கொள்வேற்கவுண்டராசன்மாளவன்வளவன்சேரன்
றுலங்குநீரோகனீகனெனும்பலவேந்தர்தொக்கார். (உங)

* பங்களங்குகுரஞ்சீனம்பப்பரங்கொங்கம்வங்கஞ்
சிங்களந்துளுவமங்கமாரியந்திகத்தஞ்சேதி
கொங்கணங்கடாரங்கொங்கங்கூபகமிரட்டமொட்ட
மெங்கணுமுள்ளவேந்தரியாவருமீண்டிமொய்த்தார். (உச)

தொல்லைநாட்பாதலத்திலசுரர்சொன்னவாய்மைக்
கொல்லையிலரக்கன்றானெனுன்றோச்சினனவருங்களா
செல்லுசஞ்சகத்தர்திண்மையறுபதாயிரந்தேராளர்
வல்லபத்தணுகவிட்டான்மாவலியெனும்பேரோனே. (உரு)

* அண்ணலந்துரகத்தாமாவாதியாங்குமரராலு
மெண்ணிருபத்துநூறும்யாதவர்குமரராலும்
வண்ணவேற்பூரிகௌரிமன்முதற்குமரராலு
மெண்ணருஞ்சேனைவெள்ளமெங்கணும்பரந்ததாலோ. (உசா)

* தம்பியரனைவருந்துச்சாதனன்முதலாவுள்ளோர்
வெம்பரித்தடந்தேர்வேழம்வேல்சிலைவடிவாள்வல்லோ
ரம்பரத்தளவுமுந்நீரம்பரமெழுந்ததென்ன
வும்பருமிம்பராருமுரகரும்வெருவவந்தார். (உஎ)

* வீடுமன்கிருபன்கன்னன்விற்கையாசிரியன்வையம்
பாடுசேர்விகத்தசேனன்பகதத்தன்முதலாவுள்ளோ
ராடல்வெம்பரித்தேரியானைவரூஉதினித்தலைவர்செம்பொற்
கோடியர்குன்றஞ்சூழ்ந்தகுலகிரியேழுமொத்தார். (உஅ)

* ந்திப்பகைப்பலமும்வந்துசிந்துவினன்றுமாபோ
லெதிர்நப்பொருதுவெல்லுமிராசமண்டலங்களெல்லாஞ்
சதமகற்குவமைசாலுந்தரணிபன்றன்னைச்சூழ்ந்து
பதினொராந்துரோணிசேனைபார்மிசைப்பரந்தவன்றே. (உகூ)

* பாசுடைப்பிரமன்பாதபங்கயஞ்சென்னியேந்தி
வரிசிலைவேதங்கற்றுமற்றவன்றனையும்வென்ற
குருசிலைக்கங்கைதந்தகுருகுலக்கோமான்றன்னை
யரசர்வெஞ்சேனைக்கெல்லாமதிபதியாக்கினானே. (௩0)

* அளப்பில்சீர்சேனைநாதனடிபணிந்தவனிவேந்தன்
களப்பலிக்குரியார்யாவர்கடவநாள்யாவதென்ன
தளப்பிலாமுகூர்த்தம்வல்லோன்சாதேவனல்லதில்லை
வளப்பொலிவுடையாயின்றேயுற்றவற்கேண்மினென்றான். (௩க)

* ஒன்றநம்படைகளெல்லாமொருபகற்பொழிதிற்கொல்வா
னின்றனனரவானென்பானீயவன்றன்னைவேண்டிற்
கொன்றெனைப்பலியிடென்றுகூறுமக்குமரற்கொன்றால்
வென்றுனக்காகும்வாழ்வுமெய்தலாம்விரைவினென்றான். (௩உ)

* என்றலுமவனுமாங்கோரியந்திரவெகினமூர்ந்து
சென்றனனவனுங்கேட்டுச்சிலையில்வெங்கதிரைத்திங்க
ளொன்றியபகவிராவிற்களப்பலியூட்டினல்லால்
வென்றிடலரிதென்றிட்டான்கிளைஞரைவேறிடாதான். (௩௩)

* ஐவரிவிளையோன்றன்பான்முகூர்த்தங்கேட்டவர்சேயான
பைவருமுடியோன்றன்பாற்சேறலும்பணிந்துதாதை
யுய்வருவரங்கேட்டென்னையூட்டுகபலிநீயென்று
னெய்வருஞ்சிலையினானும்பெற்றனனென்றுமீண்டான். (௩௪)

* கொடுத்தனன்பலிக்குத்தன்னைக்குமரனென்றறிந்துகுன்ற
மெடுத்தவன்றிதிபன்றான்கினிடையுவாவின்றென்று
தொடுத்தநான்முனிவரோடுஞ்சொல்லினன்சுடர்கடம்மி
லடுத்ததிங்கென்னையென்னவன்றதுவாயதன்றே. (௩௫)

* ஆயபின்றருமற்குற்றவாறெலாமியம்பியின்று
நீயவன்றனக்குமுன்னேகளங்கொளநேரினல்லால்
போயவன்றன்னைவேறலரிதெனப்புகன்றுசெங்கண்
மாயவனென்னைவல்லேவன்பலியூட்டுகென்றான். (௩௬)

* தருமனுந்தம்பிமாருஞ்சாற்றியமாற்றங்கேட்டே
யுருமெறிபுயங்கம்போலவுள்ளழிந்துள்ளாய்நின்ற
கருமுகில்வண்ணன்பாதகமலத்தில்வீழ்ந்துவாழ்வும்
பொருமுனைவயமும்வேண்டேம்பொன்றுதலமையுமென்றார். (௩எ)

* அப்பொழுதரவமைந்தனரவுயர்த்தவர்குநேர்ந்தே
னிப்பொழுதுமக்குநேர்ந்தேனெனைப்பலியிடுமினென்ன
மைப்புயல்வண்ணனின்னையல்லதுமண்ணிலென்னை
யொப்பவரில்லைகம்மிலொருவரேவேண்டுமென்றான். (௩அ)

* அடியனேனிருக்கநீயேயரும்பலிக்கிசைவாய்போரின்
மடியநேரலரைக்கொன்றுவாழ்விவர்க்களிக்கநின்றாய்
கடியநேர்பலிதந்தாலுங்காயமர்சிலைநாட்கண்டு
முடியநேரலர்வெம்போரின்முடிவெனக்கருளுகென்றான். (௩௯)

* அவ்வரமவற்குநல்கியத்தினத்தவ்விராவிற்
றெவ்வரையொளித்துத்தங்கள்சென்மதேயத்திற்சென்றார்
மெய்வருகாளிமுன்னர்மெய்யுறுப்பனைத்தும்வீரன்
கொய்வருநிலையிற்கொய்துகொடுத்தனனென்பமன்னே. (௪௦)

* ஆண்டகைகன்னிமுன்னரவையவமனைத்துமீந்து
காண்டகமலர்ந்ததீபமெனமுகங்கவினநின்றான்
பாண்டவர்யாமளத்தின்படிபகடாதியாக
வேண்டியபலிகளீந்துவென்றியும்வேண்டிமீண்டார். (௪௧)

உறுப்பெலாமளித்துத்தன்கணுரமெலாமளித்துநின்ற
விறற்பலியரவானோடுமீண்டனரவருந்தங்க
ளறப்பெருங்கோயினண்ணியுமளியிற்றுயிலவிழ்ந்து
திறப்பகன்மீண்டுமெய்தவுணர்ந்தனர்கடன்கடேர்ந்தார். (௪௨)

ஆயவெஞ்சேனையோடுமதிரதராகிவந்த
தூயநற்றிறலோரோடும்பகிரதிசுதன்விளங்கா
வேயமாமுடியும்பூணுமிருக்கறிபுனிதர்சூட்ட
நேயமோடொருவனூழிநேருநாளென்னநின்றான். (௪௩)

காவலர்பலருமெண்ணிற்கிரிகளாக்கடலோரேழும்
பாவலருவமைகூறும்பதாகினியாகிச்சூழக்
கேவலகிரணவெற்றிமுடிகிரிச்சிகரியாகித்
தேவநல்விரதந்தானேசெம்பொன்மாமேருவொத்தான். (௪௪)

கவசமார்பகமுஞ்சேந்தகண்களும்வானின்மல்கு
துவசமான்றேரும்பாகுந்தோற்றமுமாற்றநீண்ட
நவசராசனமுங்கண்டுநடுங்கியகூற்றுமென்றுந்
திவசஞ்செய்பானுமண்ணுந்திரிந்தனகலங்குற்றம்மா. (௪௫)

பொருபடைவேதம்வல்லபுராதனனிவுளித்தாமன்
கிருபனுமுதலோர்சிந்தையுறுதியைக்கிடைத்துநோக்கில்
வெருவராதொழில்வாருண்டோமித்திரன்புதல்வனுதி
திருபர்சிந்தையினுமிக்குநீடியதிசைகளெல்லாம். (௪௬)

பாரெலாம்பார்கள்காலின்படைப்பெலாங்கரிகள்பம்பல்
வாரெலாம்பரிகள்வெள்ளிநிரையெலாம்வயவர்கூட்டங்
காரெலாமுரசமார்ப்பக்கலக்குறுமயக்கம்வான்மேற்
சீரெலாமொருபுறானுற்றதிறலெனப்பொலிந்ததச்சார். (௪௭)

மற்றினிப்பாண்டுதந்தலைமைந்தருஞ்செங்கண்மாலுங்
கொற்றவர்பலருமீண்டியுபப்பிலாவயத்திற்கூற்றுஞ்
செற்றலர்குழூவுமாலத்தியுமோர்பொருள்செயாதா
ருற்றனருழைநிகழ்ந்தபான்மைமுன்னுரைக்கலுற்றும். (௪௮)

வேறு.

* மற்றைநாள்வசுதேவன்மாமகன்மண்டலீகருமன்னருஞ்
செற்றுநீடவைபுக்கிருந்துசிவேதனோடவைசெப்பினு
னிற்றைநாளதிபிரதமாகதர்சமரதாதியரெவரொடுங்
கெற்றவஞ்சினிலைச்சியேகுககுருநிலத்திடையென்னவே. (௪௯)

* அதிரதாதிபர்தானும்வீமனும்விசயனுந்திறலபிமனுஞ்
சிதைவிலாதசிகண்டிசாத்தகிதிட்டத்துய்மன்விராடர்கோன்
மதுரமாமொழிதருமனோடிவர்மாரதாதியர்சமரதப்
பதிகளானவர்யாகசேனனுதார்மனுத்தமபானுவே. (௫௦)

* நண்ணுமர்த்தரதர்க்குநாயகர்நகுலனுஞ்சகதேவனு
மெண்ணும்வெற்றிபெருங்கடோற்கசனென்னுவீரனுமாகவே
மண்ணகத்தணியணிகளாகமகீபர்தம்மைவகுத்துளான்
விண்ணகத்தணிவிபுதர்சேனையில்வேளொடொத்தனன்வீரனே. (௫௧)

* நெருங்குவெம்படைகண்டுவந்தபினைம்புலன்களுநெஞ்சமு
மொருங்குசென்றெனமன்னரைவருமாலுவெஞ்சமமுன்னவே
கருங்கண்மங்கையர்வாழ்த்தவெண்டிசைமுரசினோதைகலந்தெழ
விருந்தமாநகர்நீங்கிவான்செருவெல்லையெய்தினரென்பவே. (௫௨)

நன்னிமித்தமும்வாய்ப்பவாகினியோடுமோரைநலத்தவா
வுன்னியுற்றிடுமளவிலும்பருமுலகபாலருமுட்கினார்
தன்னிலொப்பவரைவருக்குயிரனையதாதையர்தாமுகந்
தின்னிலத்திவரெய்தவெற்றியெனப்பலாசியியிம்பினார். (௫௩)

* இடிபடப்படவருமுகிற்குலமெனநிரைக்கடலெனநெடுங்
கடிபடப்படவதிர்பணைக்குலமெனவதிர்ப்பனகறைகள்போ
லடிபடப்படவுரகர்பைத்தலையணிமணிக்குலமடையவும்
பொடிபடப்படவுடனடப்பனபுகர்முகக்கரிநிகரமே. (௫௪)

* உருண்முனைத்திகிரியின்முனைப்படியுயர்பொருப்பையுமுரகர்வா
ழிருநிலத்திடைபுதைபடப்படவெதிர்நடப்பனவிவுளியின்
குரதுகட்கொடுகலகமிட்டணிகொடிநிரைத்துகில்கொடுபொலந்
தரு[illegible]லத்தவர்விழிதுடைப்பனசரதமிப்படியிரதமே. (௫௫)

* பலவகைப்படுகவனமெய்க்கதிபவனமொப்பனபரவைசூ
ழுலகனைத்தையும்வெளியினுயத்தலினுரகருக்குமொருதமியா
யிலகுசக்கரசிகரிசுற்றடியெனவளைப்பனவெழூபெயர்க்
குலமுகிற்றலைசிதையவைப்பனகுரவிதத்தனபுரவியே. (௫௬)

* புருவவிற்குனிவெழவுயிர்ப்பொடுபுகையெழத்துகிர்புரையும்வாய்
மருவுமூற்றிளநிலவெழத்தனிமனனெருப்பெழவளர்கடக்
கரதலத்தயில்வெயிலெழப்புனைகலன்வனப்பெழமிளிருநீ
ணிரையிமைப்பதுவிழிசிவப்பெழநிருதரொத்தனர்விருதரே. (௫௭)

* கொடிநெருக்கவுமதியெனத்திகழ்கொடைநெருக்கவுநடைகொடே
ரடிநெருக்கவுமிபநெருக்கவுமயநெருக்கவுமெழுதுகட்
பொடிநெருக்கவும்வளர்புயத்தொடுபுயநெருக்கவுமொளியுரு
முடிநெருக்கவுமுறைநெருக்கினர்முரசமொத்தசொல்லரசரே. (௫௮)

* பகன்மறைத்திருள்வரவிடுத்திரிபவனமெய்க்கதியுடனுலா
யகனிலத்திடைவருநதிப்புனலருவருத்துயர்நதியின்வா
யுகள்வரிக்கயலினமுமொத்தனவுடுகுலத்துடனொளிர்பெருங்
ககனவட்டமுமறையவிட்டனகவசமொத்தனதுவசமே. (௫௯)

* உறவின்மிக்கவர்பகையினெய்த்தவருதவுமப்படைகுடைநிழற்
செறிதலத்தணிவளர்நகர்ப்படைதிரள்வனப்படைபொருவிலைத்
தறுகண்மொய்ப்படையுறுதியிற்பொருதமதகப்படையெனவிரா
வறுவகைப்படைகளும்வகுத்தனவணிகளுட்கினபணிகளே. (௬௦)

* சதியெனைப்பலவெனமுழக்கினசதவிதப்பணைதவளமா
மதியெனைப்பலவெனநிழற்றினமதிபர்பொற்குடைமழைகொள்வா
னதியெனைப்பலவெனநிரைத்தனநவமணிக்கொடிகளினவெம்
பதியெனைப்பலவெனவெறித்தனபலவகைப்படைகுலவவே. (௬௧)

பிடர்வலிக்கடகரிகளிற்செறிபிடிகளிற்புனைமுடிகளிற்
படர்நிழற்கவிகையின்மிசைத்துகள்பரவமொய்த்தெழப்புரவியிற்
சுடர்விதப்படைகளினிரைப்படுதுகிலிடைக்கொடிகளில்விரா
யடர்பொருப்பினமிடையிடைப்பயிலடவியொத்ததுபுடவியே. (௬௨)

* வளைமுழக்கினகிடுகுகொட்டினவயிரொலித்தனமகுடியின்
கிளையிமிழ்த்தனமுழவதிர்த்தனகிணையுரற்றினபலவிதத்
துளையிரைத்தனமுரசிரைத்தனதுடியரற்றினசெவிடுபட்
டுளையவிப்படிபடைபுறப்படவுலகமுற்றதுகலகமே. (௬௩)

செங்கண்மாலுயிர்தருமன்மார்புசிவேதனுனனமிருபுயம்
வெங்கண்வீமனும்விசயனுந்திறல்விண்மருத்துவர்மைந்தரு
மங்கண்மாமுடியரசர்மற்றுளவவையவாதிகளாகவே
தங்குபூமியிலானபோதொருவடிவமானதுதானையே. (௬௪)

எய்கரும்பெருமிஞ்சிகன்மணியிட்டிழைக்கசதுக்கமால்
பெய்கரும்புனலெய்தொறுதுறுபெற்றிமண்டபம்பேரவை
மைகரும்பணிநாடுவானவர்பதியினுண்டகுபாசறை
செய்திருந்தனர்பாண்டுநந்தகிறர்வலிச்செயறிகழவே. (சுரு)

வேறு.

* இங்கிவர்வயப்படைகுறித்தகுருபூமியிடையிவ்வகையெழுந்ததினிமே
லங்கவர்வயப்படையெழுச்சியுரைசெய்குவமரும்பணியுயர்த்தகொடியோன்
கங்கைமகனைத்தொழுதுநால்வகையராகிவருகாவலர்தமைக்கருதிநீ
மங்கலமுறப்படைவகுத்தெழுகவென்றனன்மனத்தசைவிலாதவலியோன். ()

* ஆனதெனவீடுமனுமதிரதரின்மிக்கதிறலாசிரியனும்புதல்வனுந்
தானுமுயர்பூரிசரவாவுமிவர்சோமவரதத்தர்பகதத்தர்கள்வழா
மானமிகுதுன்முருடனற்றலைவர்மாரதரில்வன்கிருதபற்பவரசன்
ஞானகிருபன்சகுனிசல்லியசயித்திரதனன்சமரதத்தலைவரே. (சுஎ)

* அங்கர்பெருமான்விருடசேனனரசற்குரியவநுசரிவரத்தரதரிற்
றுங்கவயவீரரெனவிம்முறைவகுத்தரகதுவசனுடனேயுரைசெய்தான்
மங்குல்பொழியும்படிகடுங்கணைசொரிந்ததிகல்வல்லவனையத்தரதரின்
கங்கைமகனுன்னியசொன்னெஞ்சழியமன்னனுறுகாலநிகழ்வைப்புகலுவாம்.

அக்கொடியசொல்லரசர்பேரவையின்வைகுதிறலங்கர்பெருமானுணர்வுறு
மிக்குயர்கடுங்கனல்புலிங்கமெனவாள்விழிவியர்த்திடவிரண்டுபுருவந்
தொக்கநுதலோடைமதயானையெழுசீரினடல்வாளிறுெடுதோன்றியதிரா
வெக்கடலுமெக்கிரியுமெப்புவியுமென்படுமெனச்சினமனத்தனுகியே. (சுக)

தானதிரதப்பெயர்அரத்தனையருத்தரதர்தங்களிலெடுத்துரைசெய்தோன்
மானமுடியைத்துணிபடுத்துவனெனப்பதரிவல்லபுகலோடுவரலுந்
தேனலர்பசுந்தொடையன்மாலைபுனைவென்றியிருதிண்புயவிலங்கலுடையோன்
வானவர்துணுக்குறவெடுத்தவொளிவாளினுெடுவந்திவணைவாவினனரோ. (எ௦)

மின்னெடுபசும்புயலிரண்டுமலையும்படிவிளங்கவிவர்வந்தனுகலுங்
கன்னனதிமைந்தனிடைவந்தனுகினன்கடிதுகாவலர்கடங்கள்பெருமான்
றன்னலர்நகைப்பரிதுறம்பிவிகலிற்பலசொலித்துனிவிலக்குமிடைசூழ்
மன்னவர்வெறுத்தனர்செழும்பரிதிமைந்தனிடைவள்ளன்மறமுள்ளனெனவே.

காவலர்கருத்துமருமானுளநினைப்பும்வெயில்காலிரவிபெற்றபெருமான்
றுவலதிரைக்குமொழியாவுமுணர்வுற்றரசர்சார்பிலெடுத்துரைசெய்தான்
பேவலர்முனைக்கொள்சமர் வாயிடைசெருப்புரிய மேன்மையினுரைப்பர்பெரி
யோர்பெதனக்குரியநாமமிதுமட்டுமிதுபோதுமெனவச்சமறவே. [யோர்

அங்கவன்மொழிந்தமொழிகன்னனிருகன்னமுறவம்பகமழன்றுசிவவா
வெங்களநிறைந்தபலமன்னர்தமுகங்களில்விழித்துணைபரப்பியமரிற்
றுங்கமுறுகங்கைமகனின்றளவுமொன்னலர்துணைப்புயவடுக்கல்புகல்வோன்
பொங்கமரின்மாளுமளவுங்கணைதொடேனெனமொழிந்தனனிசாரிபுதல்வன்.

இத்தகையபெற்றியுரைசொற்றுமுனைவிட்டகலமற்றிவனுமிச்சைபயிலாக்
குத்திரனெறித்தகைகள்கற்றவரசர்க்கரசுகொட்புறுபடைக்கடலின்வாய்
மித்திரனளித்தசுதனெப்பறுபுயச்சகுனிமெய்த்துணைவனெக்கவிரவப்
புத்தியினமக்குலகினிற்சமர்பயிற்றுதிறல்பொய்ப்படுமெனக்கருதியே. (௭௪)

தந்தையொடுதாயையடிதாழ்ந்துகுருபூமியிடைதன்படையெழுச்சியுணர்வித்
தந்தநகர்நண்மறுகுசெல்லுமுனர்கண்டனரருங்கொடுநிமித்தமடைய
சிந்தனைமருண்டிலர்மடங்கியவைதங்குபுசிந்துபரிகாரமுறையாற்
றந்துநிதியாணினொடுமீளவுநடந்தனர்சமர்க்குறுதலங்கருதியே. (௭௫)

* ஆனைமிசைதேரின்மிசையிவுளிமிசைபோம்வயவராதிசிலைவாளயில்களிற்
றூனைகளெனஏழுமுகிலேழுமெனவண்பணைதயங்குதிசைசூழவரவு
மேனைநரபாலரணிதோறும்வெயில்வாளிரவியென்னவிருபாலும்வரவுஞ்
சேனைமுதனோடுமெய்த்துணைவர்தங்களொடுசென்றனனிராசதிலதன். ( )

* பொழியுமுகில்பற்றியெழுமிளவெயிலெறித்தனையபுகர்முகப்பணைக்கை
கொடுகார், கிழியும்வகைபெற்றிமிசையொளிரநவரத்தினமணிகிரணவுடுவைக்
கவர்வபோல், விழிவழிநெருப்புருகிவழியநுதலிற்றிலதம்வெயில்வழியமுற்று
நிலவே, வழியுமதியத்தின்வகிர்நிகர்பணைமருப்பினிடைமகரிகைதரித்தமததமா.

* யவனசவனத்தினிடைவளர்வககனத்தினொடுமிரவிபுரவிக்குநிகராப், புவன
தலமுற்றுமுடல்வளையவொரிமைப்பொழுதில்வருவனபுறப்புணரியைக், கவன
மொடெழுப்பிவிடுதுகள்கொடுத்துகிர்ப்பவிரைகதிகளின்விதத்தைமொழியிற், ப
வனகதியிற்பெருடர்வபரிமளவுயிர்ப்புடையபலமலர்நிறத்தபரிமா. (௭௮)

* நடுநிலமுரைக்கிலுயரவனிதலமொக்குமிசைநவமணியழுத்தியனவா
னுடுநிகரமொக்குமுருளுருளைகளருக்கருடனுடுபதிகளொக்குமகுடங்
கொடுமுடிகளொக்குமிவுளிகடிசையனைத்துமெறிகுரைபவனமொக்குமடைவே
விடுதுகினிரைத்தகொடிசொரியருவியொக்குமெழுகுலகிரிகளொக்குமடைவே.

* அரவின்விடமொத்தவெரிசினமுநிலைபெற்றுடையவசலநிகரொத்தமனமும்
புரவியுடனொத்தகதிவிரைவுமுருமொத்தவதிர்குரலுமெழுவொத்தபுயமு
முரவனிலமொத்தவலியுரமுமதனொத்தவொளியுருவமுமனைத்துமருவிப்
பரவைமணவெஞ்சதலகிலணிபடவகுத்தபலபடையுடனடக்குநடையார். (௮௦)

* குடைநிலவெறிக்கவிருபுறமுமசைபொற்கவரிகுளிர்நிலவெறிக்கவெறிகைப்
படைவெயிலெறிக்கவணிமுடியுடன்மணிப்பணிகள்பலவெயிலெறிக்கவுடனே
யிடையிடையெடுத்தகொடிநிரையிருளெறிக்கமணிமுடிநிலவெறிக்கவெழு
[illegible] ...க்தனர்களவனிபரெனப்...

* முழவு முதலெற் றுவனகடிபடுபணைக்கருவி முழுமணிமுதற்கருவிபைங்
குழன் முதலமைத்தபலவகைபடு துளைக்கருவி சுரிவளைநிரப்புநிரையா
லுழை முதலெழுப்புவனவிசைபடுமிசைக்கருவியுழையுழையதிர்த்தவுடனே
யெழு படல்கொதித்ததெனவெழுபுவிமறித்ததெனவெழுமுகிலிடித்ததெனவே.

பகல்படுமணித்திகிரியுருள்கொளிரதத்தொகுதிபடுமிடனடுக்கலடையப்,
புகலுமொருதிக்குறுதல்புரையுமுவரிக்கனலைபுலனுறுதலொக்குமொருசார், மி
கலணிவயப்புரவிமினிரொளிசெய்பட்டமொடுவிரவுறுபுகர்க்கரிகள்கார், முகினி
ரையெனப்புரையுமெழுகடலொலித்தெழுதன்முனைவயவர்வர்க்கநிரையே. ( )

* முறைமைதவறற்றகொடிமுரசெழுதுபொற்றுவசமுதல்வனுயர்மைத்து
னமையால், விறலுதவுதற்குவருகரியவன்மணித்துவசமிசைகெருடனிற்குமெ
னவோ; வெறியுமுருமுத்துவசன்மதலைவிதலைச்சமரிலிறுதியைவிளைக்குமென
வோ, வறவரியெதிர்த்துவரவெருவொடுபுறக்கிடுவவரசனுரகத்துவசமே. (௮௪)

* உயர்முறைமதப்புமிவர்குடைநிழலிலிற்றையளவுறுகுறையகற்றியினிநா
னியல்புடைநெறித்தருமனொருகுடைநிழற்றவவனிடையினிதிருக்குவமெனே
வியநதிமுழுப்புனலின்முழுகிவருதற்கவனிமிசையுறநடப்பதெனவே
யியல்படைநடப்பவகன்முகடுறநிரைத்தரியபகலையுமறைத்ததுகளே. (௮௫)

வேறு.

* பொருபடைகொடிப்படையுறப்படுபெரும்படைபுகுந்துகுருபூமியணுகி
வருபடைஞர்மன்னவர்வருதினியடங்கவெயின்மாமணியெறித்தொளிரவே
தருபடைகள்பாசறைசமைத்தவியனூடுகடறங்குவனபோலணுகினார்
நிருபனுமியற்றியவவைப்புறமடைந்துதவிசேறினனெருங்குதுணையான். ( )

இன்னணமிருக்கவிவர்நன்முரசகேதனனிருந்தவவையிற்றனிமையாய்
மின்னனையிரேவதிமணாளனணுகிப்பலவிளம்புமுறைகூறியுலக
நின்னதெனல்பொய்மையலவங்கவரடங்கவுயிர்நீங்குவதுதிண்ணமினியான்
பன்னரவகேதனன்விளிந்திடுதலென்விழிபடாதகல்வனீர்படியவே. (௮௭)

என்றுரைபுகன்றவனகன்றபின்வலம்புரியிலங்கியநறுந்தொடையலா
னன்றுவகைசொன்னகணம்வெஞ்சிலைதடிந்தவிதுரன்றனொடும்பதுளைவான்
மன்றல்கமழ்பங்கயமலர்ந்தநதியேமுதல்வகுத்தபலதீர்த்தமுழுகச்
சென்றனனலாயுதமெடுத்தெதிரடுத்தவர்கள்சிந்தவமர்செயும்வலியுளோன். ( )

* எண்ணறுபரப்பினிடையோசனைகளத்தினிடையிருபடைப்புநிற்பவெவருந்
[illegible]ண்ணெனவெருக்கொளமுன்னின்றருள்பகீரதிசுதன்றனையரவதுவசன்
பே[illegible]ணெதிர்நிரைத்தபடையாவையுமுருக்கியுயிர்கவரவெதுநாள்செலுமெனு
பே[illegible]ணவிநெருக்கொழியமாதரிருகண்ணளிபடாததொடைமீளிபகர்வான். ( )

* ஒருபகலில்யான்மலைவன்முப்பகலிலேமலையுமுபநிடதவிக்கைமுனியும்
வருபகலொரைந்தின்மலையும்பரிதிமைந்தன்முனிமைந்தனொருநாழிகையினில்
பொருபடையடங்கமலையும்புவியும்வானொடுபுரந்தரனிருந்தவுலகும்
வெருவரமுனைந்தொருகணத்தினிடையேமலைவன்வில்விசயனென்றனவரோ.

மாதுலனருங்கதிரின்மைந்தனநுசன்றனொடுமன்னர்பெருமான்கருதியோர்
தூதுவனுலூகனெனவோதுபெயரோனொடுசொலற்கரியசொலையிப்பெதலா
மோதியவர்கூறுவதுணர்ந்தடைதியென்னவவனுற்றனனரித்தகுமரன்
சோதிமணிமண்டபமிருந்தசபையத்தினெதிர்துன்னிமுறையிற்புகலுவான். ()

நாடுதருகிற்பதிலையென்னினுளநண்பரொடுநாமமறநூற்றுவரையும்
வீடுபெறுவித்திடுதுமென்றுபலநாணமறவீரவுரைபேசியவெலா
மேடுபடுதண்டுளபமாயனொடுசஞ்சயனிசைக்கவுணர்வுற்றிகலிலே
பீடுபெறுகங்கைதருமைந்தனரிவான்சிலைபிடித்தெதிரடுத்தனனிதே. (௯௨)

தேசிகனுமைந்தனுமிருந்தனரவர்க்கெதிர்செருப்புரிதிறத்தருளரேற், பே
சியபடிக்கமருடற்றவருமின்களிழிபேடியுருவாகியனைவா, பேசறவிருந்தவனி
சைத்தசபதஞ்சரதமென்னிலிரவிக்குரியசேய், பாசறையில்வைகினன்வயம்பு
னைதலுண்டெளியபான்மையினில்வந்தமர்செய்தே. (௯௩)

மாறுபடுவோர்குடரானமதயானையெதிர்வரவுவயமாவையனையான்
கூறுபடமாதுகுழல்பற்றினவன்மாருதிகுறித்தவுரைகேட்டுமொழிவான்
வீறுபடவைகினன்விராடமடையன்சமரில்வென்றுதிரமுண்டகலுவான்
சீறுகதைகொண்டுவருமென்றுரையிருந்தபலதேயமறவேந்தர்சபையில். (௯௪)

தூதுவரில்வந்துபலமாயைபுரிதண்டுளவுசூடிவிசயின்பரிகொடேர்
மீதுறவடைந்துவிரகாமுறையறிந்தனவுமேதகவியற்றல்பகர்வாய்
மாதுலனிருந்தனனிரட்டையர்தமக்கெளிதுமத்திரனைமாமுரசுறுங்
கேதனன்மலைந்துபெறும்வெற்றிமனதின்படிகிடைத்ததமரென்றுகழறுய். ()

தாருற்குழற்கொடியைநாணழிவியற்றுதறுவாய்தனிலவைக்கணலைசூழ்
பாருடைவயத்தரசராருமுமைமிக்கவலியோரெனமிகப்பரசினர்
வேருறுசுனைப்புனலினூருயிர்வளர்த்தமர்செய்வீரமணுகித்திரிகீர்
போருறுமிடத்துமகிபாலர்கண்மதிப்பவிசைபோதுவிர்புறப்படுமினோ. (௯௫)

என்றிதுகுறித்துவருகென்றரசருக்கரசியம்பியதெனப்புகறலுந்
துன்றுபலதிக்கரசர்சூழவுறுபாண்டுசுதர்துய்யதிருமாலையெதிரா
வின்றிதுகுறித்தியரவங்கொடுவசற்கெனவெடுத்தினிமையாயுரைசெய்தான்
குன்றினையெடுத்துமழைகாத்துலகமுற்றுமடியொன்றுகொடளந்தநெடியோன்.

கந்தருவர்மல்கையருடன்றனைவளைந்துசிறைநகைக்கொடினமிப்புவியிளோ
ரந்தரமுணர்ந்தனரறிந்ததிதந்தவனயர்ந்தினியறிந்திடவரான்
மைந்துடைமையின்றியுயிருய்யும்வகைசிந்தைகொடுமாமறையனைத்துமுரு
மந்தணனையுந்துறவுகொண்டவனையுஞ்சரணடைந்தனனருந்தகைமையே. ()

யாவ னிகாப்பினுமிசைந்தபடிநம்முயிர்யமன்கரமடுத்தல்பிழையா
மேவுகதிரைத்தொழுதநாளையமரிற்புகுதல்வேண்டியகருத்தமைகவென்
றேவியவொருத்தனொடுபோயுரையெனப்புகலவேதமறநீதிவழுவாக்
காவலனருட்பெருகமாமணிகதிர்செய்பணிதூசொடுகதித்துதவியே. (௯௯)

செல்கெனவிடுத்திவரிருந்தசமையத்திகல்செலுத்துறுசெருக்கினுடனே
வெல்கழலுருக்குமிவிதர்ப்பனபுரத்திறைவிசைக்கொடுபடர்ந்துமதியான்
பல்குடைநராதிபர்தமக்கெதிரிருந்தவொருபற்குனன்முகத்தெதிர்நிலைத்
தெல்சிளர்முடித்தலைதுலங்கிடவுரைத்தனனிகற்சிலைமுகிற்பொருவவே. (௧௦௦)

மாறுபடுமன்னர்படைசேறுபடுகென்றுவபவாகைபுனையாண்மையிலையேற்
கூறுதியிமைக்குமுனர்மேவியமர்முற்றியுமர்குறைபெறமுடித்துதவுவே
னீறுறுபுணர்ப்பவனுமேனையவலத்தவருநேர்படினுமிக்கணமெனா
நாறுதுளவத்தவன்முனுணறவுரைத்தனனராதிபர்நகைத்திகலவே. (௧௦௧)

முற்றிருளினுற்றவுதையற்குநிகர்பற்றலர்முருக்கிநிரைகைக்கொள்விசயன்
சொற்றமொழிநற்செவியினுய்க்குமுன்மணிக்குழை துளக்கியரவக்கொடியுளா
வெற்றிபெறநற்றுணைகுறித்துளவனுற்றவர்விருப்புறமுடித்துதவுகென் [ன்
றுற்றவிருகட்கடைசிவப்பெழவுரைத்தனனுருக்குமிபுரத்தணுகினான். (௧௦௨)

பச்சைவருணப்புரவியுய்க்குமிரதப்பருதிபட்டபினமர்க்கெழுதலென்
றச்சமறுகொற்றவர்பலர்க்குமறிவித்தவரலைப்புணரியொத்தொலியொடு
மிச்சையினிருக்கைகடொறுந்தொறுமிருந்தனரெழிற்கலையனைத்துமுணரு
நச்சையிலொருத்தனைநிகர்த்தமுனிபேரவைநராதிபனையுலூகனணுகி. (௧௦௩)

சென்றுமுறைசொற்றதுமிரும்படலையந்துளவுசேர்த்தவனுரைத்தமொழியுங்
குன்றநிகர்தோளுடையறன்குமரனுடைபணிகோசிகமனைத்துமுதவி
துன்றிரவிவந்தபினர்துன்றுதுமருஞ்சமர்சுயோதனன்முனம்புகலெனாத்
தன்றுணைவரோடிசைவுகொண்டுரைசெயும்பரிசுமோதினனருந்தகைமையான்

வலம்புரியணிந்தவனிருந்தவர்முகந்தொறுமனம்பெறவிழித்திரவுதீர்ந்
தலம்புரிகொடுங்கதிரெதிர்ந்துழிபெருஞ்சமரனந்தரமியற்றுதலெனாச்
சலம்புரிதரும்படிபுகன்றுமுரசெண்ணிலசலஞ்சரியலாதகரிமேற்
சிலம்புரிதரும்படிசெலுத்தினனுருத்தவர்செருக்குறநகர்த்தலையெலாம்.(௧௦௫)

இவ்வணமிரண்டனிகமுஞ்செருமலைந்துபயனெய்துதலுவெஃகுறுதியே
வௌவமதிரண்டொலிசெயும்பரிசொலித்தனபடுங்கதிரெழுந்திலவெனா
வெவ்வலிகொடிண்புயர்விரைந்தெழலுணர்ந்தலரிவெஞ்சுடரிலங்கமலைமீ
தவ்வயினுதித்தனனருஞ்சமர்தெரிந்திடவென்றுரணனெடுத்துரைசெய்தான்.

பல்வளனுயர்ந்தநகர்வில்லியருள்செய்யுள்பதினொன்றொடுமூன்றுசதமுந்
செல்வமலிநன்முதலைநல்லகவிநாவின்வளர்தேவியருடாவுதமிழின்
மல்குகவியைந்துசதமீதெழுபதுங்குழுமியாண்டுறவியங்கியதரோ
சொல்வளனுயர்ந்தமுனிதண்ணளிசுரந்தவடசொல்லெனுமுத்தியோகபருவ

படையெழுச்சிச்சருக்க முற்றிற்று.

அ௲ செய்யுள்-அககூரு.

---

## உத்தியோகபருவம் முற்றிற்று.

---